ஸ்ரீ

# பகவத் விஷயம்

## ஒன்பதாம் பத்து

### திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்தினாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழி
நூற்றந்தாதி இவைகளுடன்.

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு

வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யராலும்,
சே. பார்த்தஸாரதி ஐயங்காராலும்,
*பரிசோதிக்கப்பெற்றது.*

திருவல்லிக்கேணி,
நோபில் அச்சுக்கூடம்.

சுக்கில ௵] [1929.

ஸ்ரீ:

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## முதல் திருவாய்மொழி—கொண்டபெண்டிர் - ப்ரவேசங்கள்.

### ஒன்பதினாயிரப்படி.

ஒன்பதாம்பத்தில் முதற்றிருவாய்மொழியில், எம்பெருமான் ஸாமவத மோக்ஷத்வபர்யந்தமான நிரதிசயபுருஷார்த்தமானத்தைக் காட்டிக்கொடுத்த மஹோபகாரத்தை யநுஸந்தித்து, மிகவும்ப்ரீதரான ஆழ்வார், "இப்படி உபகாரகனானவனே ஆத்மாவுக்கு நிருபாதிகபந்துவும், ப்ராப்யப்ராபகங்களெல்லாம்; மற்றொருவருமில்லை" என்று தமக்குப் பிறந்த ப்ரீத்யதிசயத்தாலே "ஸமஸ்தசேதநரையும் குறித்து ஸோபாதிகபந்துக்களான புத்ரமித்ராதிகளை விட்டு, நிருபாதிகபந்துவான எம்பெருமானையே பற்றுங்கோள்" என்கிறார்.

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாம்பத்தில், கீழ் ஏழாம்பத்திலும் எட்டாம்பத்திலும் விரோதிஸ்வரூபத்தையும் தந்நிவ்ருத்தி ப்ரகாரத்தையும் அருளிச்செய்து, மேலிரண்டுபத்தாலும் ப்ராப்திபலவ்யாப்தியை யருளிச் செய்வதாக, இப்பத்திலே பலஸ்வரூபத்தை நிரூபிப்பதாகக்கொண்டு பலஹேதுவான ஈச்வரனுடைய நிருபாதிகதையையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாய நித்ய ப்ரார்த்யத்வத்தையும், நிரதிசயபோக்ய சீலாதிகுணயோகத்தையும், நித்ய அபூர்வபோக்யதையையும், ஸ்மரணமாத்ரத்திலே ஸாந்நித்யஜநகமான போக்யகுணவத்தையையும், ஸ்வப்ருதிஸாந்நித்யமுடையாரை புஜிப்பிக்கையில் உண்டான ப்ரமோதத்யோகவத்தையையும், அத்யர்த்தாதரணீய வடதடரம்யத்வத்தையும், பக்தபரிஜநாதிபூர்த்தியையும், அல்பகால விளம்பத்திலும் அதிக்லேசாவஹத்வத்தையும், ஐகாந்திகமான கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும் அருளிச்செய்து அவனுடைய பலரூபத்வத்தை யருளிச்செய்தருளுகிறார். முதலிரண்டுபத்தாலே நிரூபித்த ப்ராப்ய ஸ்வரூபத்தினுடைய ப்ரயோஜநரூபத்வம் இங்கே நிரூபிக்கப்படுகிறது.

முதற்றிருவாய்மொழியிலே, ததீயமோக்ஷத்வ போக்யதா ப்ரதிபத்தி பிறக்கும்படி ஸ்வஸ்தவிரோதி நிவ்ருத்தி பிறந்தபின்பு, அந்த ததீயமோக்ஷத்வ போக்யதாமூலமான தத்போக்யதையை அநுஸந்தித்து, அவனுடைய ஸர்வப்ரகாரபலத்வத்துக்கு உபபாதகமான ஸர்வவிதபந்துத்வத்துக்கு ப்ரகாசகமான ஆபத்ஸகத்வத்தையும், அவிச்வாஸநிராஸகத்வத்தையும், அநிஷ்ட நிராஸக க்ருபாயோகத்தையும், அவதாரப்ரயுக்த குணைத்தாதையையும், அநிஷ்டபங்கசகத்வம் அடியான அபிகமநீயதையையும், கீர்த்தநீயகுணவத்த்வத்தையும், சிந்தாமாத்ரஸுலபத்வத்தையும், உஜ்ஜீவந

ஹேதுத்வத்தையும், போக்யவிக்ரஹவிசிஷ்டதையையும், ஸௌஹார்த்த நிரபேக்ஷத்வத்தை யும் அநுஸந்தித்து, "ஏவம்பூதனான ஸர்வேச்வரனே நிருபாதிக பந்துவானவன்; அல்லாதார் உபாதிநிபந்தந பந்துக்கள். ஆதலால் அவர்களைவிட்டு, நிருபாதிகபந்துவான இவனையேபற்றி உஜ்ஜீவியுங்கோள்" என்று தாம் அறுதியிட்ட அர்த்தத்தை தம்மைப் பற்றினார்க்குத் தஞ்சமாக உபதேசித்தருளுகிறார்.

## இருபத்துநாலாயிரப்படி.

ஒன்பதாம்பத்தில், முதற்றிருவாய்மொழியில், எம்பெருமான், ஸ்ரீமவத சேஷத்வபர்யந்தமான நிரதிசய புருஷார்த்தத்தைக் காட்டிக்கொடுத்த மஹோபகாரத்தை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதரானவர், இப்படி உபகாரகனான இவனே ஆத்மாவுக்கு நிருபாதிகபந்துவென்றும், அல்லாதாரடங்க ஸோபாதிகபந்துக்களென்றும், அவனே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றும் அநுஸந்தித்து, அத்தால் வந்த ப்ரீத்யதிசயத்தாலே ஸமஸ்தசேதநரையுங் குறித்து "ஸோபாதிகபந்துக்களைவிட்டு நிருபாதிகபந்துவான ஸர்வேச்வரனைப் பற்றுங்கோள்" என்று உபதேசிக்கிறார். "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதா ச மாதவ:" "கச்சத்வமேநம் சரணம் சரண்யம்" என்று இத்தால் நிருபாதிகபந்து அவனேயிறே; மாதாபிதாக்கள் கைவிட்ட ஐயந்தனுக்கு ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்துக்கொடுநிற்கிற தாமேயிறே புகலானார். "ஸவிதா வைரீத்யஜ:"—பிதா எதிரியாக அவனிலும் அண்ணியவுறவாய் உதவினானிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு. "ஸோஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநித:" என்று ஹிதஞ்சொன்ன ஸ்ரீ விபீஷணாழ்வானைத் தள்ளிவிட்டான் ராவணன்; "ந த்யஜேயம்" என்று அவனையொழியச்செல்லாதாயிற்றுப் பெருமாளுக்கு. மஹாராஜர் ஜ்யேஷ்டனாலே நோவுபட நிருபாதிக பந்துவாய்ச் சென்றுஉதவினார். த்ரௌபதியை பர் பரிபவிக்க, பர்த்தாக்கள் தர்மபராதீநராய்க் கவிழ்ந்திருந்து தரையைக்கீற, அவ்வளவிலே உதவினபின்பும் "ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி" என்று புண்பட்டது அவன் திருவுள்ளமிறே. உபாயாந்தரங்களைக் குறித்து சோகித்த அர்ஜுநனைக்குறித்து, "அவற்றைபடங்க விட்டு என்னையே பற்று; உன்னை நான் ரக்ஷிக்கிறேன்; சோகியாதேகொள்" என்றானிறே. இப்படி "நிருபாதிகபந்து அவனே: புறம்புள்ளாரடங்க ஸோபாதிக பந்துக்கள்" என்று அநுஸந்தித்து, அத்தால்வந்த ப்ரீதியாலே "எல்லாரும் ஸோபாதிக பந்துக்களைவிட்டு அவனையே பற்றுங்கோள்" என்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார்.

ஈடு.—ஒன்பதாம்பத்தில் முதல்திருவாய்மொழி. கீழிற்றிருவாய்மொழியிலே, ஸ்ரீமவதசேஷத்வபர்யந்தமாக நிரதிசய புருஷார்த்தத்தை நிகிலவிரோதிநிவ்ருத்திபூர்வகமாக அவன் காட்டிக்கொடுக்க, அதிப்ரீதியோடே அந்த மஹோபகாரத்தை அநுஸந்தித்து "சயமேயடிமைதலைநின்றார்" என்றும், "நீக்கமில்லாவடியார்" என்றும், "கோதிலடியார்" என்றும் ஸ்ரீமவதரை விரும்பினாராய் நின்றார். ஆப்பான்திருவழுந்தூரரையர் ஆஶ்ரயித்ததும், திருவாய்மொழி கேட்டதும், ஆழ்வானோடேயிறே. "'சயமேயடிமை தலைநின்றார்' என்றது, ஸ்ரீபரதாழ்வான்போல்வாரை; 'நீக்கமில்லவடியார்' என்றது,

கொண்டபெண்டிர் ப்ரகேபே; ஸங்கதி கமநார்த்தம் வ்ருத்தத்தை அநுவதிக்கிறார் - கீழ்ற்றிருவாய்மொழியிலே இத்யாதி. கீழிற்றிருவாய்மொழியில் பத்தாம்பாட்டில் சொன்ன

இளையபெருமாள் போல்வாரை; 'கோதிலடியார்' என்றது, ஸ்ரீசத்ருக்நாழ்வான் போல்வாரைக்காணும்'' என்று ஆழ்வான் பணித்தானாகப் பணிப்பர். ''இப்படிப்பட்ட ஸாமவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தில்எல்லையைநமக்குத்தந்த ஸர்வேச்வரனே நிருபாதிக பந்து. அல்லாதாரடங்க ஸோபாதிகபந்துக்கள். அவனே நிருபாதிக ஸுஹ்ருத்து, அல்லாதார்பக்கல் தோற்றுகிற ஸௌஹார்த்தம் ஸோபாதிகம்'' என்று ப்ராப்யாபாஸங்களைத் தவிர்த்து அவனே ப்ராப்யமென்றும் ப்ராபகாபாஸங்களைக் கழித்து அவனேப்ராபகனென்றும் அறுதியிட்டுப் பிறந்த லாபத்தாலுண்டான ஹர்ஷத்தாலே சேதநரைக்குறித்து, ''நீங்கள் ஸோபாதிகபந்துக்களான அல்லாதாரைவிட்டு நிருபாதிகபந்துவான அவனையேபற்றி உஜ்ஜீவிக்கப்பாருங்கோள்'' என்று பரோபதேசே ப்ரவருத்தராகிறார். ''ஸர்வேஷாமேவ லோகாநாம்'' (ஸர்வேஷாமேவ லோகாநாம்) இத்யாதி; ''அவ்யய: பிதா''(அவ்யய பிதா) ;அல்லாதார் தாய் தமப்பனென்று பேராய் நாலுநாளிருந்து மணற்கோட்டகம்போலே கழிந்துபோவர்கள்; அங்ஙனன்றிக்கே, அழியாதே என்று மோக்ஷ ரக்ஷகனும் பிதா அவனேயாயிற்று. தனக்குஹிதஞ்சொன்ன விபீஷணனை 'த்வாம் து திக்'' (த்வ ந்துதிக்) என்று புறப்படவிட்டானிறே ராவணன்; அவன்தம்பியையொழியச் செல்லாதென்றாரிறே பெருமாள். மஹாராஜர் ஜ்யேஷ்டனாலே நோவுபட, தனிமையிலேவந்து உதவினாரிறே பெருமாள். பெற்ற தமப்பன் [illegible]கையாக, அவனிலும் அண்ணியனாய்வந்து உதவினாரிறே, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு. மாதாபிதாக்கள் கைவிட்டஜயந்தனுக்கு, ப்ரஹ்மாஸ்த்ரந்தொடுத்துக் கொடுநிற்கிறவர் தாமேயிறே புகலானார், ''ஸபித்ராச'' (ஸபித்ராச) இத்யாதி. ''ஸ:'' (ஸ:) -நீரிலேபுக்கழுந்துவாரைப்போலே தாரகரானவரே பாதகராய்அம்புதொடுக்கும்படி சூழ்த்துக்கொடுநின்ற அவன். சேஷம் பூர்வவத். த்ரௌபதி,தர்மப்ரதாநரான பர்த்தாக்கள்ஐவரும் வெறுந்தரையைக்கீறியிருக்க அவர்களையொழிய தூரஸ்த்தனான க்ருஷ்ணனையே நினைக்க,''அவள் ஆபந்நையாய் நம்மை நினைக்க, நாம் உதவப்பெற்றிலோம்'' என்று ''க்ருஷ்ணேதி சுக்ரோச யத்கோவிந்தேதி ...'' (க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம்,என்று புண்பட்டானவனிறே. அர்ஜுநன் ''என்னஹிமதம் என்னால் தலைக்கட்டிக்கொள்ளவரிது'' என்று சோகிக்க, ''உன்னைத்தோற்றி வருவதொன்று பேற்றுக்கு உடலாமன்றிறே, உனக்கு சோகிக்கவேண்டுவது ? உன்னுடைய ஸர்வபாரங்களையும் நம்தலையிலேபோகட்டு,நாமே கடவோமென்றிரு; உன்னுடைய விரோதிவர்க்

---

அர்த்தத்தை அநுபவித்ததுக்கு ஆப்தவாக்யமாதும் - ஆப்பான் இத்யாதி. ஸங்கதி - இப்படிப்பட்ட இத்யாதி. சோபகஸம்பந்தி ஹ்ருதயம் யஸ்ய, ஸ: - ஸுஹ்ருத். ஸோபாதிகபந்துக்களென்றத்தால் ஸூசிதம் - ப்ராப்யாபாஸங்களைத்தவிர்த்து என்றது. நிருபாதிகபந்து என்றத்தால்ஸூசிதம் - அவனேப்ராப்யன் என்றது. ஸௌஹார்த்தம் நிருபாதிகமென்றத்தால் ஸூசிதம் - ப்ராபகாபாஸங்களைக்கழித்து என்றது. அவனே நிருபாதிக ஸுஹ்ருத்து என்றத்தால் ஸூசிதம் - அவனே ப்ராபகன் என்றது. அல்லாதாரடங்க ஸோபாதிகபந்துக்கள், அவனே நிருபாதிகபந்துவென்றதுக்கு வசநத்வயமும், அநுஷ்டாநங்களும் காட்டுகிறார் - ஸர்வேஷாம் இத்யாதி அர்ஜுநனென்கிற வாக்யத்தளவும். அவ்யய: பிதா என்றதுக்கர்த்தம் - அல்லாதார் இத்யாதி. 'சேஷம் பூர்வவத்' என்றது - பயிலும் சுடரொளியிலே ''நம்பனை ஞாலம்படைத்தவனை'' என்கிற பாட்டில் வ்யாக்யாதமானாற்போலே யென்றபடி. இதரர் ரக்ஷகரல்ல, அவனே ரக்ஷ[illegible] [illegible]னமில்லை என்கிறார் கீழ்; உபாயாந்தரங்களும் உபாயமன்று, அவனே உபாயமென்கிறார் மேல் [illegible]வாக்யத்வயம். இத்யாதி. உபாயாபாஸங்களைக்கழித்து அவனே உபாயமென்றது[illegible] - இல்லைகண்டீரித்யந்வய:.

த்தை யுடைய நாமே போக்கித்தருகிறோம்'' என்றானிறே. இப்படிகளாலே ''அவனே நிருபாதிகபந்து. அவனையே பற்றப்பாருங்கோள்'' என்று தாம் அறுதியிட்ட அர்த்தத்தைத் தம்மைப்பற்றினார்க்குத் தஞ்சமாக உபதேசித்தருளுவதாகப்பரோபதேசப்ரவ்ருத்தராகிறார்.

---

## முதற்பாட்டு.

---

கொண்டபெண்டிர்மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும்
கண்டதோடுபட்டதல்லால்காதல்மற்றுயாதுமில்லை
எண்டிசையுங்கீழும்மேலும்முற்றவும்உண்டபிரான்
தொண்டரோமாய்உய்யலல்லால்இல்லைகண்டீர்துணையே.

ஆ.—(கொண்டபெண்டிர்.) - இந்தபாகவதகைங்கர்யரூப ஸம்பத்தை பாகவதகைங்கர்யாதிகளாயிருப்பாரோடே புஜிக்கையிலே அபேக்ஷையுடையரான ஆழ்வார், ததாவிதரை இந்ததேசத்திலே காணாமையாலே இந்தலோகத்திலுள்ளாரையே பாகவதஶேஷதைகரதிகளாக்கிக்கொண்டாகிலும்அவர்களோடே இப்போகத்தை புஜிக்கைக்காக, பாகவதஶேஷதைகரதித்வத்துக்கு உபாயமாக, அவர்களைப்பார்த்து உங்களுக்கு ஸோபாதிகஸ்நேஹரான களத்ராதிகளோடுள்ள உறவைவிட்டு, அகாரணஸுஹ்ருத்தாய் ப்ரளயகாலத்திலெல்லாரையும் தன்திருவயிற்றிலேவைத்து பரிஹரித்தருளின மஹோபகாரகனான எம்பெருமானுக்கு அடியோமாயுய்கையொழியவேறு ரக்ஷகரில்லையென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எல்லாருடைய பந்துத்வமும் ஸோபாதிகமாகையால், நிருபாதிகபந்துவான எம்பெருமானையே பற்றி யுஜ்ஜீவிக்கவேணுமென்கிறார்.

[கொண்டபெண்டிரென்று தொடங்கி] - தான் தன்ஹ்ருதயத்திலே மிகவும் பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகள் கையில்அர்த்தங்கண்டபோது ஸ்நேஹித்தாராயிருக்குமித்தனைபோக்கி மெய்யானஸ்நேஹம் ஒன்றுமில்லை. 'கொண்டபெண்டிர்' என்கிறது - அர்த்தாத்யுபாதியாலே ஸம்பாதித்த பார்யை என்றுஞ்சொல்லுவர். [எண்டிசையுமென்று தொடங்கி] - ப்ரளயாபத்தில் தன்னையொருவரும் அர்த்தியாதிருக்கச்செய்தே, எல்லாரையும் தன்திருவயிற்றிலே வைத்து பரிஹரித்தருளின மஹோபகாரகனானவனுக்கு அடியோமாய் உய்கையொழிய வேறு ஆத்மாவுக்கு ரக்ஷகரில்லை.

ப.—முதற்பாட்டில், ஔபாதிகபந்துக்களான தாரபுத்ராதிகளாலொரு ப்ரயோஜநமில்லை: அஶேஷஜகத்தையும் வயிற்றிலேவைத்துநோக்கின ஆபத்ஸகனானவனுக்கு அடியராயதொழிய வேறுதுணையில்லை யென்கிறார்.

கொண்ட - நாம் பந்துக்களாக நெஞ்சிலேகொள்ளப்பட்ட, பெண்டிர் - தாரம், மக்கள் - புத்ராதி, உற்றார் - ஸம்பந்தி, சுற்றத்தவர் - பாந்தவர்களும், பிறரும் - மற்

---

ஈழிற்றிருவாய்மொழிய...மையும்'' என்றது. ''சுற்றத்தவர்'' என்றது - அவனே நிருபாதிகபந்து வென்ற
அநுஷ்டானங்காட்டினவைகளிலே ஆகிஞ்சந்யஅநந்யகதித்வங்களும் அர்த்

றும் மித்ரப்ருத்யப்ரப்ருதிகளும், கண்டதோடு - நம்கையிலே ப்ரயோஜநங்கண்ட போது, பட்டதல்லால் - உடன்படுமதொழிய, மற்று - ப்ரகாராந்தரத்திலே, யாதும் - ஏகதேசமும், காதல்இல்லை-ஸ்நேஹமுடையரல்லர்; (ஆதலால்), எண்திசையும்-ஸமஸ்த திக்குக்களோடுகூடின, கீழும் - பூமியையும் பாதாளங்களையும், மேலும் - ஊர்த்வ லோகங்களையும், முற்றவும் - எல்லாவற்றையும், உண்ட - ப்ரளயங்கொள்ளாதபடி யமுது செய்துநோக்கின, பிரான் - மஹோபகாரகனுக்கு, தொண்டரோமாய் - அடியோமாய், உய்யலல்லால் - உஜ்ஜீவித்தலல்லது, (வேறுபத்துக்கு), இல்லைதுணை - துணையில்லை.

இ.—முதற்பாட்டில், நிருபாதிகபந்துவானவன், ஆபத்ஸகன்; அவனையேபற்றி உஜ்ஜீவியுங்கோள் என்கிறார்.

[கொண்டபெண்டிர் இத்யாதி] - தான் தன்னுடைய பக்கத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் ஸார்வாதிகளென்னுதல், ஸார்வைக்கே விசேஷணமாய் அர்த்தாத்யுபாதி விசேஷத்தாலேகொண்ட ஸ்த்ரீ என்னுதல், ... தாபித்ரு ப்ரப்ருதிகளைக் காத்தலைக் கொண்டு எல்லாருமாக நினைத்திருக்கும் ஸ்த்ரீ என்னுதல். [மக்கள்] - அப்படிப்பட்ட அவளுடைய யௌவநத்தை யழியமாறிப்பெறும் ப்ரஜைகள். [உற்றார்] - தனக்கு ஸத்ருஸ விஷயமென்று ஆதரித்த ஸம்பந்திகள். [சுற்றத்தவர்] - அவர்கள் மதிக்கும்படியான இத்தலையில் ஜ்ஞாதிகள். [பிறரும்] - அங்ஙனும் முன்பு சொன்னவர்களும், இவர்களிற்காட்டில் வாசிபெரிதன்றென்கை. [கண்டதோடு பட்டதல்லால்] - ஸந்நிதியிலே ஸ்நேஹிக்குமதொழிய வென்னுதல், கையிலே த்ரவ்யங்கண்டபோது அத்தைப்பற்ற ஸ்நேஹிக்குமதொழிய வென்னுதல். [காதல்மற்றி யாதுமில்லை] - காணாதபோது மெய்யான ஸ்நேஹமொன்றுமில்லை யென்னுதல். ஸ்நேஹமும் அதற்கெதிர்த்தலையான த்வேஷமுமில்லையென்னுதல், ஸ்நேஹமும் அதுக்கடியான பந்தமும் இல்லையென்னுதல். [எண்திசையும் இத்யாதி] - பத்துத்திக்கிலுமுண்டான ஸகலசேதநரையும் பிரிகதிர்ப்படாமல் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன்: இவற்றின் பக்கலொன்றுமில்லாதஅன்று ரக்ஷிக்குமவன். ப்ரளயாபத்தில் ரக்ஷிக்கைக்குக் கைமுதலுமில்லை; அர்த்தித்வமும் இல்லையிறே; ரக்ஷிக்கைக்குத்தான் அறிந்த ஆபத்தும் ஸம்பந்தமுமிறே வேண்டுவது? அப்போது விலக்குகைக்குப் பரிகரமில்லையே. [பிரான்]-உபகாரசீலனானவன். [தொண்டரோமா யுய்யலல்லால்] - அடியோமாய் உஜ்ஜீவிக்கையொழிய நம்மதாய் அவனுக்குக் கொடுக்க வேண்டுவதொன்றில்லை. சேஷத்வத்தை இசையுமித்தனை. சேஷத்வம் ஸ்வரூபமாகையாலே அத்தையறிகை உஜ்ஜீவநம்; சேஷத்வத்தை இழக்கை யிறே நாசமும். [இல்லைகண்டீர் துணையே] - "வேறே துணையுண்டாயிருக்க இவனைப் பற்றச் சொல்லுகிறேனல்லேன்; இவனைப்பற்றி ஸ்வரூபம்பெறுதல் இல்லையாகில் இல்லையாமித்தனை". அந்வயத்தாலே ஸாதித்து வ்யதிரேகத்தாலே த்ருடீகரிக்கிறார்.

ஈடு.—முதற்பாட்டில். "ஔபாதிகபந்துக்களான தாரபுத்ராதிகளால் ஒரு ப்ரயோஜநமில்லை; நிருபாதிகபந்துவானவனே ஆபத்ஸகன்; அவனையே பற்றியுஜ்ஜீவியுங் கோள்; வேறுதுணையில்லை" என்கிறார்.

முதற்பாட்டு - கொண்டபெண்டிர் இத்யாதி. உத்தரார்த்தத்தைக்கடா ... த்யந்வயம். நிருபாதிகபந்துவான இத்யாதி.

[கோண்டபேண்டிரித்யாதி] - தான் தன் ஹ்ருதயத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் தாராதிகளென்னுதல். [கோண்டபேண்டிர்] - நிருபாதிகமாகவந்த தன்றிக்கே த்ரவ்யாத்யுபாதிகளாலே பரிக்ரஹித்த ஸ்த்ரீகள். அன்றிக்கே, மாதாபிதாக்களைச் செங்கற்சீரை கட்டவிட்டு, தான் ஆர்ஜித்த தநத்தையடையக் கோடுக்கும்படி தஞ்சமாக நேஞ்சிலேகோண்ட பேண்டிரேன்றுமாம். ஆசார்யனும், பரதேவதையும் ஐச்வர்யாதிகளும் எல்லாம் இவளேயாகக் கோண்ட பேண்டிரேன்றுமாம். இவளுண்டாகையிறே எல்லாமென்றிருக்கை அன்றியே, இது ஸர்வவிசேஷணமாய், பந்துக்களாகத் தான் நினைத்திருக்கும் தாராதிகளேன்னுதல். [மக்கள்] - அப்படிப்பட்ட அவளுடைய யௌவநத்தையழிய மாறிப்பேறும் ப்ரஜைகள். [உற்ருர்] - தனக்கும் ஸத்ருமித்ரவிஷயமேன்று ஆதரித்த ஸம்பந்திகள். [சுற்றத்தவர்] - அவர்கள் மதிக்கும்படியான ஜ்ஞாதிகள். [பிறரும்] - அந்யரும்: முன்புசோன்னவர்களும், இவர்களிற்காட்டில் வாசி பேரிதன்றேன்கை. [பிறரும்] - மித்ரப்ருத்யாதிகளேன்றுமாம். [கண்ட தோடேபட்டதல்லால்] - ஸந்நிதியிலே [...] போது உடன்படுமேதோழிய, ப்ரகாராந்தரத்தில் ஏகதேசமும் ஸ்நேஹமுடைய[...]ரல்லரேன்னுதல், காணாதபோது மெய்யானஸ்நேஹ மோன்றுமில்லையேன்னுதல், கண்டதுக்குமற்று - காணாதபோதிறே. [காதல்மற்று] - ஸ்நேஹமும், அதுக்கேதிர்த்தலையான த்வேஷமுமில்லையேன்னுதல், ஸ்நேஹமும் அதுக்கடியான பந்தமுமில்லையேன்னுதல். [எண்திசையுமித்யாதி] - பத்துத்திக்கிலுமுண்டான ஸகல சேதநரையும் பிரிகதிர்ப்படாமே திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன்: இவற்றின்பக்கலோன்று மில்லாதவன்று ரக்ஷிக்குமவன். ப்ரளயாவஸ்த்தையில் ரக்ஷிக்கைக்கு ஸாதநமுமில்லை, அர்த்தித்வமுமில்லையிறே: ரக்ஷிக்கைக்குத் தான்அறிந்தஆபத்தும் ஸம்

'தான் தன்ஹ்ருதயத்திலே' இத்யாதி வாக்யத்வயம் சில ஸ்ரீ கோசங்களிலில்லை. "கொண்ட" என்றதுக்கு மூன்றர்த்தம் - க்ரீதத்வமும், வால்லப்யமும், உத்தேஸ்யதையும். த்ரவ்யாத்யுபாதிகளாலே என்கிறவிடத்தில் ஆதிசப்தத்தாலே, வீர்யசுல்கத்தாலும், பூந்தருபுணர்ச்சியென்று தொடங்கி மூன்று புணர்ச்சியாலும், பரிக்ரஹித்தவர்களைச்சொல்லுகிறது. செங்கற்சீரைகட்டவிட்டேன்றது - பிச்சைபுகுரவிட்டென்றபடி. நெஞ்சிலேகோண்ட என்றது - ப்ரீதிவிஷயமாகக்கொண்டவென்றபடி. தாரையைப்பற்ற புத்ரன் அபிமதனென்னுமிடம், ஸ்த்ரீயையுபேக்ஷித்து அஷ்டம புத்ரனான பீஷ்மனை நோக்கிக்கொண்ட சந்தநுவின்பக்கலிலே கண்டு கொள்வது. கீழ்ச்சொன்னவர்களோடே பிறரையுமொக்க எடுப்பானென்? என்ன - முன்பு சொன்னவர்களும் இத்யாதி. சொன்னவர்களுக்குமென்றபடி. 'கண்டதோடு' - இவனைக் கண்டபோதென்று முந்தினவர்த்தம். 'பட்டதல்லால்', படுகை - நெஞ்சிலேபடுகையாய், ஸ்நேஹிக்குமதொழியவென்றபடி. இது இரண்டாமர்த்தத்துக்குமொக்கும். மற்று - காதல் - யாதுமில்லையென்றந்வயித்தர்த்தம் - காணாதபோது இத்யாதி. மற்றேன்றால் காணாதபோதைச் சொல்லுமோவென்ன - கண்டதுக்கு இத்யாதி. மற்றையர்த்தத்துக்கும், "காதல்மற்று" என்று அடைவேகண்டுகொள்வது. எதிர்த்தலை - ப்ரதிகோடி. த்வேஷமுமென்றது - த்ருஷ்டாந்தார்த்தம். அதுக்கடியான - ஸ்நேஹத்துக்கடியான. மற்று - சம்பந்தமும். மற்றவுமென்றதுக்கர்த்தம் - பிரிகதிர்ப்படாமேயென்றது; தப்பாதபடி யென்றபடி. இத்தால்ஸாவம் - இவற்றின்பக்கல் [...]யாதி. அப்போ[...]தான்றமில்லையோவென்ன - ப்ரளயாவஸ்த்தையில் இத்யாதி. ஸாதநமு[...]மில்லை யென்றபடி. அர்த்தித்வமும் - ப்ரபத்தியும். ஒன்றுமில்லாவிட்டால் [...] - ரக்ஷிக்கைக்கு இத்யாதி. சம்பந்தம் நித்யமாயிருக்க ஸம்ஸாரப்ர

பந்துவுமிறே வேண்டுவது. அப்போது விலக்குகைக்குப் பரிகரமில்லையே. [பிரான்]- உபகாரசீலனானவன். [தொண்டரோமாயுய்யலல்லால்] - அவனுக்கு நம்மதாயிருப்ப தொன்று கொடுக்கவேண்டுவதில்லை, அடியோமாய் உஜ்ஜீவிக்குமதொழிய. ஶேஷத்வம் ஸ்வரூபமானபின்பு அத்தையிழக்கையாவது - விநாஶமிறே. அந்வயத்தாலே அன்றிக்கே வ்யதிரேகத்தாலும் இவ்வர்த்தத்தை த்ருடீகரிக்கிறார். [இல்லைகண்டீர்துணையே] - ஆபத்துக்கு வேறோரபாஶ்ரயமுண்டாயிருக்க, இவனைப்பற்றச்சொல்லுகிறதல்ல இது; அவனைப்பற்றி ஸ்வரூபம்பெறுதல், இல்லையாகில் இல்லையாமித்தனை. (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

துணையுஞ்சார்வுமாகுவார்போல்சுற்றத்தவர்பிறரும்
அணையவந்தவாக்கமுண்டேல்அட்டைகள்போல்சுவைப்பர்
கணையொன்றாலேயேழ்மரமுமெய்த எம்கார்முகிலை
புணையென்றுய்யப்போகலல்லால்இல்லைகண்டீர்பொருளே.

*ஆ.—(துணையும்) - பரப்ரயோஜநபரரைப்போலே வர்த்தியாநின்ற ஸ்வப்ரயோஜநபரராயிருக்கிறவர்களை விட்டு, கேவலம் பரப்ரயோஜநபரனான தசரதாத்மஜனையே ரக்ஷகனாகப் பற்றப்பாருங்கோள்; வேறொருவரைப்பற்றி ஒருப்ரயோஜநமில்லை. யென்கிறார்.*

*ஒ.—இரண்டாம் பாட்டில், பரோபகாரபரரைப்போலே யிருந்து, தந்தாமுடைய ப்ரயோஜநங்களையே தலைக்கட்டப் பார்க்கும் ஹேயரையொழிய, நிர்ஹேதுகமாக பரஸம்ருத்த்யேகப்ரயோஜநனான ஶ்ரீதஶரதாத்மஜனைப் பற்றுங்கோள் என்கிறார்.*

*[துணையென்று தொடங்கி] - ஸாஹாய்யங்களையொக்க அநுஷ்டிப்பாரைப் போலேயும், தங்களை புகலானாரைப்போலேயும் அந்யரோடு பந்துக்களோடு வாசியின்றிக்கே தங்களுக்குக் கைக்கெட்டின ஸம்பத்து உண்டாகில், அவன்பக்கல் உபகாரங்கொண்டாராகக் கொள்ளாதே அவனுக்கு ஹிதம்பண்ணினாராய் உபஜீவிப்பர். [கணையொன்றாலே என்று மேலுக்கு]-தம்மால் சோதிக்கலாவதொன்றில்லாதபடி வெறுவியருமாயிருக்கிற ஶ்ரீஸுக்ரீவ மஹாராஜர், "தான் மிடுக்குடையர்" என்று தேறி வாலியைக் கொல்ல விஶ்வஸிக்கைக்காக உதவிற்றொரு ஶரத்தாலே மராமரங்களேழையும் எய்த என்னுடைய பரமோதாரனை. 'எம்' என்று ஆத்மநி பஹுவசநம். ப்ரீத்யதிஶயம் பேறுகச்*

---

*யத்தில் நின்றும் ரக்ஷியாதிருப்பானென்? என்ன - அப்போது இத்யாதி. அப்ரதிஷேதம் காணாமையாலே ரக்ஷித்திலனென்றபடி. அப்போது-ப்ரளயாவஸ்த்தையிலே. அவன்உபகாரசீலனானால் நாமும் சில பச்சையிடவேணுமோவென்ன - அவனுக்கு இத்யாதி. "தொண்டரோமாயுய்யலல்லால்" என்கிறதென்? ஶேஷத்வஜ்ஞாநமில்லாதபோது உஜ்ஜீவநமில்லையோவென்ன - ஶேஷத்வம் இத்யாதி. வ்யதிரேகத்தாலும் இவ்வர்த்தத்தை த்ருடீகரிக்கையாவது - அவனைத் துணையாகப்பற்றினால் உஜ்ஜீவிக்கலாம், அல்லாதாரைத் துணையாகப்பற்றினால் உஜ்ஜீவநமில்லையென்றபடி. துணையேயென்ற அவதாரணார்த்தம் - வேறோர் இத்யாதிவாக்யத்வயம். இது - ஆத்மவஸ்து, கொண்டபெண்டிர்தொடங்கி, உய்யலல்லால் - துணை - இல்லைகண்டீரித்யந்வயః.*

சொல்லுகிறார். தந்தாமுடைய ஸர்வஸ்வ நிர்வாஹகனைக்கொண்டு உஜ்ஜீவிக்க நினைக்கிலல்லது வேறொருவரைப்பற்றி ஒருப்ரயோஜநமில்லை.

ப.—அநந்தரம், அவிஶ்வஸநீயரான அநுபகாரகரை பந்துபுத்திபண்ணாதே, விஶ்வாஸஜநகனுமாயுபகரிக்குமவனை ஆஶ்ரயித்தாலல்லது ப்ரயோஜநமில்லையென்கிறார்.

(ஸம்ஸாரிகளுக்கு) துணையும் - ஸஹாயபூதருமாய், (ஆபத்துவந்தால்), சார்வும் - அபாஶ்ரயமும், ஆகுவார்போல் - ஆவாரைப்போலே, சுற்றத்தவர் - பந்துக்களும், பிறரும் - மற்றுமுள்ளாரும், அணைய - தங்களுக்குக்கிட்ட, வந்த - வரும், ஆக்கம் - ப்ரயோஜநம், உண்டேல் - உண்டாகில், அட்டைகள்போல் - அட்டைகள் போலே, சுவைப்பர் - இவன்றனக்கு உபகாரமென்று நினைக்கும்படி பசையறச் சுவைத்துவிடுவர்; (அப்படியன்றிவே, ஆபத்திலே அபாஶ்ரயமான தன்பக்கலிலே பந்தாதிசங்கைபண்ணினவனுக்கு விஶ்வாஸம்பிறக்கும்படி), கணையொன்றாலே - ஓரம்பாலே, ஏழ்மரமும் - ஏழுமராமரத்தையும், எய்த - எய்தவுபகாரகனும், எம் - நம்மையும் விஶ்வஸிப்பிக்கும், கார்முகிலை - காளமேகஸ்வபாவனானவனை, புணையென்று - அபாஶ்ரயமென்று நினைத்து, உய்யப்போகலல்லால் - உஜ்ஜீவித்துப்போமதொழிய, பொருள் - ப்ரயோஜநம், இல்லை - இல்லை. புணை - தெப்பமாய், அமிழ்க்காதபடி நோக்கும் அபாஶ்ரயத்தைச் சொல்லுகிறது.

தி —இரண்டாம்பாட்டில், உபகாரகரைப்போலேயிருந்து, ஸ்வப்ரயோஜநங்களையே தலைக்கட்ட நினைக்கும் அவர்களையொழிய, நிர்ஹேதுகமாக ஆபத்ஸகனைப் பற்றுங்கோள் என்கிறார்.

[துணையும் இத்யாதி] - துணையாவது - "[illegible]" என்று ஸங்கேதங்களை யொக்க அநுஸரிக்கை. சார்வாகையாவது - போக்கடியற்ற தஶையில் தாங்களை புகலாகை. பாண்டவர்களுடைய வனவாஸத்தில் தனிமையிலே முகங்காட்டியும், த்ரௌபதியை பிடித்துக்கொண்டு போகிறபோது தங்கின பணிக்கொட்டிலிலே சென்று முகங்காட்டிக் கடக்கநிற்கும் துணையானாற்போலேயும், ஸூதந் தன்னிட்ட ஶக்தியை அர்ஜுனனோக்கனளித் தன்மார்பிலே யேற்ற க்ருஷ்ணனைப்போலேயும் இருக்கை. [ஆகுவார்போல்] - தாங்கள் ஆபத்ஸகரானபடியே கடக்கநிற்பதுஞ் செய்யாதே "ரக்ஷகர்" என்று ப்ரமிக்கும்படி வர்த்திப்பார்கள். [சுற்றத்தவர் பிறரும்] - பந்துக்களோடு வாசியின்றிக்கே. [அணைய வந்த ஆக்கமுண்டேல்] - கைக்கெட்டின ஸம்பத்துண்டாகில்: இவன்பக்கலிலே ஒருப்ரயோஜநம் தங்களுக்குண்டாமென்று தோற்றியிருக்கிலென்னுதல்; தங்கள்பக்கலிலே இவனுக்கொரு ப்ரயோஜநமுண்டென்று தோற்றியிருக்கிலென்னுதல். [அட்டைகள்போல் சுவைப்பர்] - ரக்தஸ்பர்ஶமற வாங்கா நிற்க ஹிதஞ்செய்ததாயிறே யிருப்பது; அதுபோலே உபகாரங் கொண்டாராய்க் கொள்ளாதே, ஹிதஞ்செய்கிறார்களாக உபஜீவிப்பர். "உன்கையிலே கனக்கக்கிடந்தால் அபஹரிப்பர்கள், என்கையிலே புகட்டுவை" என்று ஹிதஞ்செய்கிறார்களாகவிறே உபஜீவிப்பது. [கணையொன்றாலே] - '[illegible]" என்று கைக்கெட்டிற்று ஓரம்பாலே. [ஏழ்மரமும் எய்த] - ஒன்றிரண்டாலே மஹாராஜர் அதிஶங்கை போவதாயிருக்க, ஏழுமராமரத்தையு மெய்த. [எம்கார்முகிலை] - வாலியாலே தாப்புண்டு வெறுவியரான தஶையிலே யுதவப்புக. ரக்ஷணத்திலே அதிஶங்கை பண்ணினவனுக்கு மழுவேந்திக்கொடுத்து, அவன்விரோதியைப் போக்கி, "[illegible]"

*என்று ஆஶ்ரிதரைச் சொல்லுதல், ஆத்மநிவேதநமாய் அவருக்குச் செய்ததும் தமக்குச்செய்ததாக நினைத்திருக்கும்படியாலேயாதல். [புணையென்றுய்யப் போகலல்லால்] - அவன்பக்கல் ந்யஸ்தபரனாய் உஜ்ஜீவித்துப் போமதொழிய; "என்கார்யம் உனக்கேபரமாகவேணும்" என்று ஒருவார்த்தையே அவனுக்குச் செய்யவேண்டுவது. [இல்லைகண்டீர் பொருளே] - புறம்பொருவரைப்பற்றினால் ஒருப்ரயோஜநமில்லை. புறம்பாஶ்ரயிக்கையிலே க்லேஶிக்கச் சிலருண்டு இத்தனை; ப்ரயோஜநரூபமாவதொன்றில்லை.*

ஈடு.—இரண்டாம்பாட்டு. உபகாரகரைப்போலேயிருந்து, ஸ்வப்ரயோஜநங்களைத் தலைக்கட்டநினைக்கும் அவிஶ்வஸநீயரானவர்களையொழிய, நிர்ஹேதுகமாக விஶ்வாஸஜநகனாய், ஆபத்ஸகனானவனைப்பற்றுமதன்றி ப்ரயோஜநமில்லையென்கிறார்.

[துணையித்யாதி]- துணையாகையாவது - "**ஏகம் து:க²ம் ஸுக²ஞ்ச நௌ**" (ஏகம்துக்கம்ஸுகஞ்சநௌ) என்று **ஸுக²து:க²**ங்களையொக்க அநுபவிக்கை. சார்வாகையாவது - போக்கடியற்றதசையில், தாங்களேபுகலாகை பாண்டவர்களுடைய வநவாஸத்தில் தனிமையிலே முகங்காட்டியும், த்ரௌபதியை மீட்டுக்கொண்டுபோகிற போது "**ஜகா³ம தாம் ஸமாதா³ய க்ருஷ்ணாம் க³மாதா³ய**" (ஜகாமதாம்பார்க்கவகர்மஶாலாம்) என்று அவர்கள்தங்கின பணிக்கோட்டிலிலேசென்று முகங்காட்டிக்கூடக்கிடந்து கதறியும் துணையாயும், பகதத்தன்விட்ட ஶக்தியை அர்ஜுநனைத்தள்ளித் தன்மார்பிலேயேற்றுப் புகலாயும் போந்த க்ருஷ்ணனைப்போலேயிருக்கை. [ஆதுவார்போல்]-தாங்கள் அபந்துக்களானபடியே நடக்கிறபதுஞ்செய்யாதே "ரக்ஷகர்" என்று ப்ரமிக்கும்படி வர்த்திப்பர்கள். [சுற்றத்தவர்பிறரும்] - ஜ்ஞாதிகளும், மற்றுமுள்ளாரும். [அணையவித்யாதி] - கைக்கெட்டின ஸம்பத்துண்டாகில். "இவன்பக்கலிலே ப்ரயோஜநம் தங்களுக்கு உண்டாம்" என்று தோற்றியிருக்கிலென்னுதல். "தங்கள்பக்கல் இவனுக்கு ஒரு ப்ரயோஜநமுண்டு" என்று தோற்றியிருக்குமாகில் என்னுதல். [அட்டைகள்போல்சுவைப்பர்]-ரக்த

*இரண்டாம்பாட்டு - துணையும் இத்யாதி. "துணையும்சார்வும்" என்று தொடங்கி, "புணையென்றுய்யப்போகலல்லால்" என்றுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - உபகாரகரை இத்யாதி.*

*துணைக்கும் சார்வுக்கும் பேரும் அருளிச்செய்கிறார் - துணையாகையாவது இத்யாதி. துணை - ஸஹாயம். சார்வு - ரக்ஷகம். துணையும் சார்வுமாகை ஸர்வேஶ்வரனுக்கேயுள்ளதென்று விவக்ஷித்து, அப்படி துணையும் சார்வுமாகக்கண்டவிடமுண்டோ? என்ன - பாண்டவர்களுடைய இத்யாதி.* "**ஸம்வயஸ்யோ விஹாரே ஸஹ ஸ்த்ரீஷு ஏகம் து:க²ம் ஸுக²ஞ்ச நௌ**" *இத்யாதி ஸ்ரீராமாயணே.* "**த்³ரௌபதீ ஸஹிதா வீரா: ஸம்ப்ராப்தா ஸஹ வ்ருஷ்ணிபி: । ஜகா³ம தாம் ஸமாதா³ய க்ருஷ்ணாம் யத்ராஸதே பாண்ட³வா வீரா:**" *இதி ஸபாபர்வணி. பார்க்கவ: - குலால:.* "**ஸமாதா³ய ஸுகா³மாரோஹ்ய ஸம்ஸ்ப்ருஶ்ய மஹாரதா²ஸநே ஸமாக³தா யோ:**" *இதி நிகண்டு:.* "**கர்மஶாலாம்**" *என்றதுக்கர்த்தம் - பணிக்கோட்டிலிலே என்றது. சார்வானதுக்கு உதாஹரணம் - பகதத்தன் இத்யாதி. "போல்" என்றதுக்கு ஸாவகாரம் - தாங்கள் இத்யாதி. அணையவந்த - அணைந்துவந்த - கிட்டவந்த; ஆக்கம் - ஸம்பத்து, ப்ரயோஜநமென்னுதல். யாதானுமவனை யணைந்துவந்த வென்னுதல்; அர்த்திகளான தங்களை வந்தணையும்படி - வந்து கிட்டும்படியான ஆக்கம் யாதானுக்குண்டென்று தோற்றியிருக்குமாகி*

ஸ்பர்ஶமற வாங்காநிற்கச்செய்தே, இவனுக்கு ஹிதஞ்செய்தனவாயிறே இவையிருப்பது; அப்படியே, உபகாரங்கொண்டாராய்க்கொள்ளாதே, ஹிதஞ்செய்கிறார்களாய்க்கொண்டு உபஜீவிப்பர்கள். 'உன்பக்கலிலே புநங் கிடக்கில் வாங்கிக்கொள்வர்கள், அவற்றை என் மேலே ஏறிட்டுவை' என்று அவனுக்கு ஹிதஞ்செய்கிறார்களாயாயிற்று, உபஜீவிப்பது. [கணையித்யாதி] - ''வாலிகைநஶரேணஹஷுணா'' (ஏகேநமஹேஷுணா) என்று கைக்கெட்டிற்றோர் அம்பாலே, மஹாராஜர், தனியருமாய், வெறுவியருமாய், தமையன் பகையுமாய், மநுஷ்யஸஞ்சாரமில்லாத தனிக்காட்டிலேயிருக்க, பெருமாளையும் இளையபெருமாளையுந் தூரத்திலேகண்டு ''வாலிவரவிட்டவர்கள்'' என்றுஅஞ்சியோடித் திருவடியைவரவிட்டு அறிவித்தபின்பு, ''நாம் உம்முடைய கார்யஞ்செய்யவல்லோம்'' என்று மழுவேந்திக்கொடுத்தும் அவர்கார்யஞ்செய்தாரிறே. [ஏழ்மரமுமெய்த] - ஒன்றிரண்டாலே மஹாராஜர் அதிசங்கை தீர்க்கலாயிருக்க, ஏழுமராமரத்தையுமெய்த. [எம்கார்முகிலை] - 'எம்' என்று - ஆஶ்ரிதரைச்சொல்லுதல்; ஆத்மநி பஹுவசநமாய், மஹாராஜர்க்குச் செய்தது தமக்குச் செய்ததாக நினைத்திருந்தபடியாலே யாதல். [கார்முகிலை] - பரமோதாரனானவனை. அவன்படி யிதுவாகில் நாம் அவனுக்குச்செய்யவேண்டுவதென்னேன்னில்? — [புணையித்யாதி] - இடவேண்டுவதொரு பச்சையில்லை, ஒருக்திமாத்ரம் அமையும். ''என்கார்யம் உனக்கே பாரம்'' என்றொருவார்த்தையே அவனுக்கு நேரவேண்டுவது. [இல்லைகண்டீர்பொருளே] - புறம்பொருவரைப்பற்றினால் ஒருப்ரயோஜநமுமில்லை. புறம்பாஶ்ரயிக்கையிலே க்லேசிக்கச் சிலருண்டத்தனை; ப்ரயோஜநரூபமாவதொன்றில்லை. (௨)

---

## மூன்றாம் பாட்டு.

---

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில்போற்றியென்றேற்றெழுவர்
இருள்கொள்துன்பத்தின்மைகாணில்என்னே! என்பாருமில்லை
மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு
அருள்கொளாளாய்உய்யலல்லால்இல்லைகண்டீர்அரணே.

**ஆ.**—(பொருள்கை.) - இப்படி ஸ்வப்ரயோஜநபரராகையாலே ப்ரயோஜநமுள்ளபோது பற்றி, தாரித்ர்யதஶையில் விடும் ஸ்வபாவரான அவர்களைவிட்டு, ஆபத்ஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபைக்கு விஷயமாய் உய்யலல்லால் வேறொருரக்ஷையில்லையென்கிறார்.

லென்னுதல். ''அட்டைகள்போல்'' என்றதுக்கு ஸாவம் - ரக்தஸ்பர்ஶம் இத்யாதி வாக்யத்வயம். ''ஹிதம்செய்கிறார்களாய்க்கொண்டு உபஜீவிப்பர்கள்'' என்றதின் விவரணம் - உன்பக்கலிலே இத்யாதி. ஓர் அம்பாலே யெய்ததுக்கு ப்ரமாணம் - ஏகேந இத்யாதி. ''விஹஸ்ய ஸஹஸாராஜநுஸஹ ஏகேநஹேஷுணா'' இத்யாதி. ''கிளையொன்றாலே எழ்மராமெய்த'' என்றதுக்கு ஸாவம் - மஹாராஜர் இத்யாதி. ''எம்'' என்றதுக்கும், ''மராமும்'' என்ற ஶப்தத்துக்கும் ஸாவம் - ஒன்றிரண்டாலே இத்யாதி. புணை - ப்ரதிபூ: ''என்று'' என்கிறதுக்குஸாவம் - இடவேண்டுவது இத்யாதி. விவரணம் - என்கார்யம் இத்யாதி. பொருள் - ப்ரயோஜநம், விவரணம் - புறம்பு இத்யாதி. க்ரமேணாந்வய:. (௨)

ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமானையொழிய மற்றுள்ளாரெல்லாம் ப்ரயோஜநமுள்ளபோது ஸந்யூக்களாய்க் கொண்டாடி, இவனுக்கு ஆபத்துவந்தால் பார்ப்பாருமில்லை ; ஆனபின்பு நிருபாதிகமாக எல்லார்க்கும் ஆபத்ஸகனாயிருக்கிற க்ருஷ்ணனையே ஹஜியுங்கோளென்கிறார்.

[பொருளென்று தொடங்கி] - ஒருவன் கையிலே அர்த்தம் உண்டாய் பரிமாறக்காணில் பரஸம்ருத்தியேக ப்ரயோஜநர் சொல்லும் பாசுரத்தைச் சொல்லி அவன்றன்னை அஸீமுஸீகரித்து, "கண்ணறமாட்டான்" என்று தோற்றினவாறே இடாயோ போகவென்று கையேற்று நிற்பர்கள் ; இப்படி அர்யித்தவர்களுக்குஇட்டே தாரித்ரனாய் இவனுடைய ஸர்வஸ்வத்தையுங்கொண்டு ஸம்ருத்தரானவர்கள் என்னே என்ற மாத்ரத்திலே இவனுக்கு உஜ்ஜீவிக்கலாகில் அம்மாத்ரம் செய்வாருமில்லை. இருள்கொள் துன்பத்தின்மையாவது - அறிவுகேட்டையும் து:கத்தையும் விளைக்கக்கடவ தாரித்ர்யம். [மருள்கொளென்று தொடங்கி] - சேதநர் கலங்கும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அஸுரர் மங்கும்படி வடமதுரைப் பிறந்தவனுடைய கிருபைக்குப் பாத்ரமான அடியாராய் உஜ்ஜீவிக்கிலல்லது வேறு இவ்வாத்மாவுக்கு ரக்ஷை இல்லை.

ப.—அநந்தரம், அநிஷ்டநிரஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகிலல்லது வேறு முதலில்லையென்கிறார்.

கை - கையிலே, பொருள் - அர்த்தம், உண்டாய் செல்ல -, காணில் - கண்டார்களாகில், போற்றியென்று - மங்களாஸாஸநம்பண்ணி, ஏற்று - (அவன்கொடுத்தத்தைக் கையிலே) ஏற்றுக்கொண்டு, எழுவர் - (யதாபிலஷிதம்) போகாநிற்பர்: இருள்கொள் - அஜ்ஞாநதம:ப்ரசுரமாய், துன்பத்து - து:கோத்தரமான, இன்மை - தாரித்ர்யம், காணில் - கண்டார்களாகில், என்னே - ஐயோ ! என்பாரும் - என்று க்ருபை பண்ணுவாரும், இல்லை -; (ஜகத்துக்கு), மருள்கொள் - நெஞ்சுகலங்கும்படியான, செய்கை - ப்ரவ்ருத்திகளையுடைய, அசுரர்-, மங்க - கலங்கும்படியாக, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தாற்கு - அவதரித்த க்ருஷ்ணனுக்கு, அருள் கொள் - க்ருபாபாத்ரமான, ஆளாய் - ஶேஷபூதராய்க்கொண்டு, உய்யலல்லால் - உஜ்ஜீவிக்கிலல்லது, அரண் - வேறுபுகல், இல்லை- இல்லை.

இ.—மூன்றாம்பாட்டில், அவனையொழிந்தார், ப்ரயோஜநமுள்ளபோது ஸந்யூக்களாய்க் கொண்டாடி, ஆபத்துவந்தால் பார்ப்பாருமில்லை. ஆனபின்பு நிருபாதிகமாக ஆபத்ஸகனான க்ருஷ்ணனை யொழிய ரக்ஷகரில்லை யென்கிறார்.

[பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணில்] - ஒருவன் கையிலே அர்யமுண்டாய்ப்பரிமாறக் காணில். [போற்றியென்று] - பரஸம்ருத்யேக ப்ரயோஜநர் சொல்லும் வார்த்தையைச் சொல்லுவர். இன்னம் அர்யம் அநேகமுண்டாகவேணும் உனக்கென்பர்கள். " நம்ஸம்ருத்தியே தனக்கு ப்ரயோஜநமாயிருப்பானொருவனுண்டாவதே !" என்று குளிரப்பார்த்து, "கண்ணறமாட்டான்" என்றறிந்தவாறே [ஏற்றெழுவர்] - இடலாகாதோ போக என்றெழுந்திருப்பர்கள். [இருள்கொள் துன்பத்தின்மைகாணில்] - அஜ்ஞாநத்தையும் து:கத்தையும் விளைக்கக்கடவதான தாரித்ரியத்தைக் காணில். [என்னே என்பாருமில்லை] - "ஐயோ என்னக்கடவாருமில்லை" என்று சீயர் அருளிச்செய்வர்; பிள்ளைத் திருநறையூரரையர், "அர்யித்தித்தவனுக்குஇட்டே ஊரித்

னாய் இவனுடைய ஸர்வஸ்வத்தையுங்கொண்டு ஸம்ருத்தரானவர்கள், ‘என்?’ என்ற மாத்ரத்திலே ‘இவனுடைய வேந்தே’ என்று ஜீவிக்கலாயிருக்குமாகில், அதிலும் மேலாஹிகளாய் ஓரின்சொல்லுஞ் சொல்லார்'' என்பர். [மருள்கொள் இத்யாதி] - வெறுமையே பற்றாசாக ரக்ஷிப்பானொருவனுளன்; அவனைப்பற்றுங்கோள் ! என்கிறார். [மருள்கொள்செய்கை யசுரர்மங்க] - சேதந ஹ்ருதயங்களிலே அறிவுகேடு குடிகொள்ளும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அஸுரர்கள் மங்கும்படி. பண்ணும் ப்ரவ்ருத்திகளிலே சேதநர் கலங்கும்படியிறே அஸுரப்ரக்ருதிகளுடைய க்ரௌர்யமிருப்பது: [வடமதுரைப் பிறந்தாற்கு] - ஆஸ்ரிதருடைய ஆபத்தைப் போக்குகைக்கு, அகர்மவஸ்யனை தான் கர்மவஸ்யர்நடுவே வந்து தத்ஸஜாதீயனாய் அவதரித்து உதவுமவனுக்கு. [அருள்கொளாளாயுய்யலல்லால்] - அவனுடைய க்ருபைக்குப் பாத்ரமான அடியாராய் உஜ்ஜீவிக்குமதொழிய அவன்க்ருபையை விலக்காதொழியுமதுவே இவனுக்கிடவேண்டும் பச்சை. தன்னருள் கொள்வாரை, ''உதாராஃ'' என்றிறே அவன்சொல்லுவது. [இல்லை கண்டீரரணே] - வேறு ரக்ஷகமாகவல்லது ஒன்றுமில்லை. ''ஆத்ரேணயயா ஸாதியநவஜநயநேதயா । தயாவேசிஸ்வகதபூர்வகோநசேநவேத்யகைஞ்நாக''

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவனை யொழிந்தார், ப்ரயோஜந முள்ளபோது பந்துக்களாய்க் கொண்டாடி, ஆபத்துவந்தால் பார்ப்பாருமில்லை; ஆனபின்பு, நிருபாதிகமாக ஆபத்ஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகையொழிய வேறுரக்ஷகரில்லையென்கிறார்.

[பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணில்] - இவன்தான் சிலவற்றை அவிழ்ப்பது முடிவது செய்பவனாய்ப் போராநிற்குமிறே. பொருளானது கையிலேயுண்டாய்ப் போரக்காணில். [போற்றியென்று] - பரஸம்ருத்த்யேகப்ரயோஜநரைப்போலே வார்த்தைசொல்லுவர். உனக்குஇன்னமும் கீழ்ச்சிறை பெறுகவேணு மென்பர்கள். "நம் ஸம்ருத்தியே தனக்கு ப்ரயோஜநமாயிருப்பாரொருவனுண்டாவதே!" என்று குளிரப் பார்க்குமே! இவன்இனி நமக்குக் கண்ணறமாட்டானென்றறிந்தவாறே, [ஏற்றெழுவர்] - இடலாகாதோபோக வென்று ஏற்றுக்கொண்டெழுந்திருப்பர்கள். [இருள்இத்யாதி] - அஜ்ஞாநமென்றுமாய், துக்கமென்றுமாயிருக்கிற வெறுமையைக் காணில். [என்னேயென்பாருமில்லை] - ஐயோ என்பாருமில்லை. பிள்ளை திருநறையூரரையர், "ஒருவனுக்கிட்டொருவன் வெறுவியனாவது; அவனாலே ஸம்ருத்தனானவன் இவனை ‘என்’ என்னுதல், இவன்க்ருஹத்திலே வந்தொருநாள்கால்கழுவிப்போதல்செய்ய, அவ்வளவாலே ‘இன்றேன்

மூன்றாம்பாட்டு. பொருளனை இத்யாதி. "பொருள்கையுண்டாய்" என்று தொடங்கி, "இல்லைகண்டீரரணே" என்றுமளவும் உடைத்தத்தவதாரிகை - அவனையொழிந்தார் இத்யாதி.

காண்கைக்கு ப்ரஸக்தி யேதென்ன - இவன்தான் இத்யாதி. ஸம்ருத்தம் - பொருளானது இத்யாதி. "போற்றி" என்றதற்கு அர்த்தம் - பரஸம்ருத்தி இத்யாதி. சொல்லும்வார்த்தை தன்னை விசதீகரிக்கிறார் - உனக்கு இன்னமும் இத்யாதி. கீழ்ச்சிறை - சாலிகை. கண்ணறமாட்டான் - நிர்த்தயனாகமாட்டானென்றபடி. என்றறிந்தவாறேயென்னுமளவும், அவதாரிகை. [illegible] - உடைத்தாகையாய், அஜ்ஞாநமென்றபடி. இன்மை - இல்லாமை, தாரித்ர்யம். "என்னே" என்றதற்கு - என் என்பாருமில்லையென் றர்த்தாந்தரம் விவக்ஷித்து, அதற்கு ஸம்வாதம் - பிள்ளைதிருநறையூர் இத்யாதி. அன்றிக்கே, ஏகார்த்தமேயாய், என்னேயென்பாருமில்

இன்னுனுக்கு பந்துவாகாதே!' என்று இவ்வளவுகோண்டு ஜீவிக்கலாயிருந்தால், அவ்வளவுஞ் செய்வாரில்லை'' என்று பணிப்பர். [மருள்இத்யாதி]- பொருள் கையுண்டாய்ச் செல்லக்காணாதவன்றும் ஆஸ்ரிதருடைய ஆபத்தைப் போக்குகைக்காக அகர்மவஸ்யனை தான் வந்துஅவதரித்து உதவுவா னொருவனுண்டேன்கிறதுமேலே. சேதநர்நேஞ்சிலே இருள் குடிபுகுரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய ஆஸுரவர்க்கம் முடியும்படி, ஒருவர்அபேக்ஷியாதிருக்கத்தானேவந்துஅவதரித்து ரக்ஷிக்குமவனுக்கு. அவனுக்கு நாம்செய்ய வேண்டுவதேன் என்னில்? [அருள்கோள்இத்யாதி]-க்ருபாபாத்ரமான மோக்ஷஹேதுராய்க் கோண்டு உஜ்ஜீவிக்கிலல்லது, அவன்பண்ணும் அருளை விலக்கா தொழியுமத்தனையே வேண்டுவது; தன்னருள்கோள்வாரை ''உதாரா:'' (உதாரா:) என்னுமவனிறே யவன். இவன் பக்கல் இதுக்கு மேற்படக் கோள்ளலாவதில்லை; அவனுக்கும் இதுக்குமேல்செய்ய வேண்டுவதில்லை; பூர்ணனுகையாலே. ஸம்பந்தமோ ஸ்வாபாவிகமாயிருந்தது; இவன் புகுரநின்ற வம்ஸமுண்டாகில், தன்பேறாக நினைத்திருக்குமவனு யிருந்தான்; இனி விலக்காமையிறே வேண்டுவது. [இல்லைகண்டீர்அரணே]-ரக்ஷகமாவதுஇதோன்றுமே; அல்லாததெல்லாம் அநர்த்தத்தோடே தலைக்கட்டு மித்தனை. சிறுப்ரஜை ''குன்றிச்சூடு'' என்று நெருப்பிலே கைவைக்குமாபோலே யிருப்பதோன்றிறே, புறம்புஇவன் ரக்ஷகமாக நினைத்திருக்கும் இவை. ''ஆதரேணயதாஸ்தௌதிதநவந்தந்நேச்சயா | ததா சேத்விஸ்வகர்த்தாரம் கோநமுச்யேதபந்தநாத்'' (ஆதரேணயதாஸ்தௌதிதநவந்தந்நேச்சயா- ததாசேத்விஸ்வகர்த்தாரம் கோநமுச்யேதபந்தநாத்)-ஸ்தோத்ரம்பண்ணிப்போந்த வாஸனையாலே உச்சைஸ்ஸாக ஸ்துதியாநிற்கும். இப்படி ஸ்துதிக்கிறது உதாரனையோ வென்னில்? ''தநவந்தம்'' (தநவந்தம்) - ஓர்பற்றைமைய யேன்றபடி; அவன் பக்கல் நேகிழ்ச்சியில்லை. ஆகில் அவனை ப்ரேரித்தார் ஆர்என்னில்?—''தநேச்சயா'' (தநேச்சயா). ஸர்வத்தையுமுடையனாய், இவனளவன்றிக்கேயிருக்கிற அவன்பக்கலிலே இவ் வாநுகூல்யத்தைப் பண்ணப்பேறில், பிறர்கீழேயிருந்து ஸ்துதிக்கவேண்டும்படி இவனை வையான். (ரு)

லாமையின் ஏரமாவதிக்கு ஸம்வாதமாதல். அருளைக்கொள்ளுகிற ஆளாயென்றபடி. அப்படி விலக்கா தொழிந்தால் கனக்க நினைத்திருக்குமோவென்ன - தன்னருள்கோள்வாரை இத்யாதி. விலக்காதமாத்ரத்தாலே ''உதாரா:'' என்னக்கூடுமோவென்ன - இவன்பக்கல் இத்யாதி விலக்காமையிறே வேண்டுவது என்றுமாவும். அவனப்படியிருந்தாலும் அவன் பெருமைக்கீடாக இவன் பச்சையிடவேண்டாமோ? என்ன - அவனுக்கும் இத்யாதி. ஒன்றுமில்லாத இவன் பக்கலிலே, விலக்காமை மாத்ரம் கொண்டு க்ருபைபண்ணுகைக்கு மேறாது அருளிச்செய்கிறார்- ஸம்பந்தமோ இத்யாதிவாக்யத்வயத்தாலே. புகுரநின்றவம்ஸம் - லபிக்குமம்ஸமென்றபடி. ''அல்லாலில்லைகண்டீர்'' என்றத்தால் பலிதம் - ரக்ஷகமாவது இத்யாதி வாக்யத்வயம். இது 'அருள் கொள்ளாளாகை'. இதோன்றுமே, என்கிறதேன்? வேறு ரக்ஷகரில்லையோ? என்ன - சிறுப்ரஜை இத்யாதி. குன்றிச்சூடு - குந்தமணிக்கொண்டை. அநுமதிமாத்ரம் கொண்டு அவன் ரக்ஷிக்குமென்கைக்கு ப்ரமாணம் - ஆதரேண இத்யாதி. ''ஆதரேணயதாஸ்தௌதிதநவந்தந்நேச்சயா | ததாசேத்விஸ்வகர்த்தாரம் கோநமுச்யேதபந்தநாத்'' ஸ்தோத்ரம்அப்ரதிஷேதத்யோதகமென்று கருத்து ''ஆதரேண'' என்றதுக்குபாவம் - ஸ்தோத்ரம்பண்ணி இத்யாதி. ''தநவந்தம்'' என்று - அஸ்திவிவக்ஷாயாம் மதுப்பாய், தநமுண்டானமாத்ரமென்றபடி. உத்தரார்த்தத்துக்கர்த்தம்-ஸர்வத்தையும் இத்யாதி. இவனளவன்றிக்கே யென்றது - விஸ்வகர்த்ருத்வம் தயாகார்யமாகையாலே நெகிழ்ச்சியுடையனு யிருக்குமென்றபடி. க்ரமேணாந்வய:. (ரு)

## நான்காம் பாட்டு.

---

அரணமாவர் அற்றகாலைக்கென்றென்றமைக்கப்பட்டார்
இரணங்கொண்ட தெப்பராவ ரின்றியிட்டாலுமஃதே
வருணித்தென்னே? வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே
சரணென்றுய்யப் போகலல்லாலில்லைகண்டீர் சதிரே.

ஆ.—(அரணமாவர்.) - த்ரவ்யதாநாதிகளாலே ஆபத்துக்கு பந்துக்களை ஸம்பாதித்துவைத்தால், அவர்களுட் ஆபத்துவந்தால் க்ருதக்நராய் அநுபக்ருதரைப் போலே யுதவார்; ஆதலால், அவர்களைவிட்டு, உபகாராபேக்ஷையின்றியே வடமதுரையிலே வந்துபிறந்து ஆபந்நரை ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனுடைய கல்யாணகுணங்களை சரணமாகப்பற்றுங்கோள்; அதுவே சதிர்! என்கிறார்.

ஓ.—நாலாம்பாட்டில், சிலரை "இவர்கள் நமக்கு ஆபத்துக்கு ரக்ஷகராவர்" என்று அர்த்தாதிகளைக்கொடுத்து நெடுநாள் ஆஶ்ரயித்துவைத்தால் ஆபத்து வந்தவாறே கண்ணற்றுஉபேக்ஷிப்பர்; நாம் ஆஶ்ரயியாதிருக்கச்செய்தே தானேவந்து பிறந்தருளி ஆபத்ஸகனான எம்பெருமானே ஆஶ்ரயணீயனென்கிறார்.

[இரணங்கொண்ட தெப்பராவர்] - கடவியதநத்திலே சிறிதிழந்து ஶேஷித்தது கொண்டுபோவாரைப்போலே இவனை உபேக்ஷித்து க்ருதக்நராய்ப் போவர். [இன்றியிட்டாலுமஃதே] - பச்சையிட்டு ஆஶ்ரயியாவிட்டாலும் இத்தப்ரரைக்கிடைக்கும். அவர்கள் தாங்கள் நடுவேமுடிந்து இவர்களுக்குஉதவாதேபோகிலும் போவரென்றுமாம். [வருணித்தென்னே] - வ்யர்த்த கதையை வருணித்து ப்ரயோஜநமென்? வண்புகழ் - கல்யாணகுணங்கள். சரண் - ரக்ஷகம்.

ப.—அநந்தரம், ஆபத்துக்குஉதவுவர்களென்றுக்கிவைத்தவர்களும், அவ்வவஸ்தையில்உதவார்கள்; அபேக்ஷாநிரபேக்ஷமாக அவதரித்து உபகரிக்குமவன்குணங்களே ரக்ஷகமாமதொழிய, வேறுகோளில்லை யென்கிறார்.

அற்றகாலைக்கு - கைம்முதலற்றகாலத்துக்கு, அரணமாவர் - புகலிடமாவர், என்றென்று - என்றுபலகாலும் அநுஸந்தித்து, அமைக்கப்பட்டார் - அர்த்தாதிகளாலே வசீகரிக்கப்பட்டார், இரணம் - கடவது, கொண்ட - கொண்டாரோபாதி, தெப்பராவர் - துச்சராய்ப்போவர்கள்; இன்றியிட்டாலும் - நாம் ஆக்காதொழியிலும், அஃதே - அவருடைய உதவாமையே ஸித்தம்; வருணித்து - க்ருதக்நப்ரகாரம்சொல்லி, என்னே - என்னப்ரயோஜநமுண்டு? வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தவன் - பிறந்தவனுடைய, வண் - நிர்ஹேதுகோபகாரகமான, புகழே - ஶீலஸௌலப்யாதிகுணங்களையே, சரண் - ரக்ஷகம், என்று - என்று நினைத்து, உய்ய - பிழைத்து, போகலல்லால் - போமதொழிய, (வேறு), சதிர் - சதிர்பாடு, இல்லை -. சதிராவது - அநாயாஸேந பலம்பெறலாம் ப்ரவ்ருத்தி. அன்றியிட்டாலும் - அவர்கள் நசித்தாலுமென்றுமாம். தெப்பர் - தப்பராய், துச்சரென்றபடி.

இ.—நாலாம்பாட்டில், சிலரை ஆபத்ஸகரென்று அர்த்தாதிகளாலே நெடுநாளாஶ்ரயித்துவைத்தால், ஆபத்துவந்தவாறே கண்ணற்று உபேக்ஷிப்பர். நிர்ஹேதுகமாக வந்து அவதரித்து ஆபத்ஸகனானவனே ஆஶ்ரயணீயனென்கிறார்.

[அற்றகாலைக்கு - அரணமாவர் - என்றென்றமைக்கப்பட்டார்] - கைம்முதலற்றவன்றைக்கு ரக்ஷகனுவானொருவன் வேணுமென்று இயற்றியுள்ள காலத்திலே பச்சையிட்டு ஆஶ்ரயித்து தனக்குஅபாஶ்ரயமாகச் சமைத்துவைத்தவர்கள். அவர்கள் ஆபத்துக்கு உதவும்படி என்னென்னில்? [இரணங்கொண்ட தெப்பராவர்] - முன்பு பச்சைகொண்டதுவும் கடவிய தாங்கொண்டாராய், ஆபத்து வந்தவாறே உபேக்ஷித்து க்ருதக்நராய்ப்போவர்கள். [தெப்பராவர்] - "நம்மத்தை நாம் கொண்டோம்" என்றிருக்கும் புல்லியராவர். [இன்றியிட்டாலுமஃதே] - பச்சையிட்டு ஆஶ்ரயியாவிட்டாலும் ஆபத்துவந்தால் கைவிடுவாரைக் கிடைக்கும்; ஆபத்துவந்தால் போகட்டுப்போகைக்குப் பச்சையிடவேண்டாவே? அவர்கள் தாங்கள் நடுவே முடிந்து இவர்களுக்கு உதவாதேபோனாலும் பலமதுவேயென்றுமாம். [வருணித்தென்னே] - வ்யர்த்தமையைப் பரக்கச்சொல்லுகிறதுக்கென்ன ப்ரயோஜநமுண்டு? க்ருதக்நரான ஸம்ஸாரிகள் படியை அநுஸந்தித்துஎன்ன பலமுண்டு? [வடமதுரைப் பிறந்தவன்] - நாம் ஆஶ்ரயியாதிருக்க நமக்குஉதவுகையே தன்பேறாக வந்துபிறந்தவன். [வண்புகழே] - கல்யாணகுணங்களே. சரண் - ஶரணம், ரக்ஷகம். அவன் குணங்களையே ரக்ஷகமென்று உஜ்ஜீவிக்குமதொழிய. [இல்லைநன்னெஞ்சமே] - அல்பயத்நத்தாலே மஹாபலம் பெறுமது - சதிர்; மஹாயத்நத்தைப்பண்ணி பலவேளையில் ஒன்றுமின்றிக்கே யொழிகை; இளிப்பு.

ஈடு.—நாலாம்பாட்டு. சிலரை ஆபத்ஸகரென்று அர்த்தாதிகளாலே நெடுநாள் ஆஶ்ரயித்தால், ஆபத்துவந்தவாறே கண்ணற்று உபேக்ஷிப்பர்கள்; நிர்ஹேதுகமாக வந்தவதரித்து ஆபத்ஸகனானவனே யாஶ்ரயணீயனென்கிறார்.

[அற்றகாலைக்கு - அரணமாவர் - என்றென்றமைக்கப்பட்டார்] - கைம் முதலற்றகாலைக்கு ரக்ஷகனுவானொருவன் வேணுமென்று பலகாலும் அநுஸந்தித்து, தனக்கு இயற்றியுள்ளகாலத்திலேபச்சையிட்டுஆஶ்ரயித்து,தனக்குஅபாஶ்ரயமாகச் சமைத்து வைத்தவர்கள். இப்படி அர்த்தாதிகளாலே வசீகரிக்கப்பட்டவர்கள் ஆபத்துக்கு உதவும்படியென்னென்னில்? [இரணங்கொண்ட தெப்பராவர்]- இவனிட்டபச்சையை இவனொன்று செய்தானாக நினைத்திருக்கையன்றிக்கே, தங்களுக்கு ப்ராப்தமானத்தை வாங்கினாராய், இவனுக்குஇயற்றி யின்றிக்கே பச்சையிடாத நாளைக்கும் "நமக்குஇட்டிலன்"என்று வெறுத்து, இப்படி கொடுத்தது வாங்கினாரோபாதி புல்லியராம்படியையுடையராவர். தெப்பர்-தப்ரர்; சப்ரரென்றபடி. [இன்றியிட்டாலுமஃதே] - பச்சையிட்டாஶ்ரயியாவிடிலும் ஆபத்து வந்தால் கைவிடுவோரைக்கிடைக்கும். ஆபத்துவந்தால் கைவிடுவோர்க்குப் பச்சையிட்டு

---

நாலாம்பாட்டு - அரணம் இத்யாதி. "அமைக்கப்பட்டார் - இரணங்கொண்ட" என்று தொடங்கி, "வண்புகழேசரண்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - சிலரை இத்யாதி.

காலைக்கு - காலத்துக்கு. இயற்றி - சாமர்த்யமும், யோக்யதையும், உச்ச்ராயமும். அமைக்கப்பட்டார்-சமைக்கப்பட்டார். இரணம்கொண்டதெப்பராவர் - கடன்கொடுத்துத் திரும்ப வாங்கினாரோபாதி சப்ரராவரென்றபடி. இரணம் - ருணம்; கடனென்றபடி. தெப்பர்- தப்ரர் சப்ரர். இரணம்கொண்ட ப்ரகாரத்தை யுபபாதிக்கிறார் - இவனிட்ட இத்யாதி. "தெப்பராவர்" என்றத்தை யுபபாதிக்கிறார் - இவனுக்கியற்றி இத்யாதி. சப்ரர். இன்றியிட்டாலும் - பச்சையிடாவிட்டாலுமென்னுதல், முடிந்துவிட்டாலுமென்னுதல். "அஃதே" என்றது - "இரணங்கொண்டதெப்பராவர்" என்றவதுவேயென்றபடி. இதுசொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன -

ஆஶ்ரயிக்க வேண்டாவே. அன்றிக்கே, இப்படியே இப்பச்சையிட்டவன் "நமக்கு ரக்ஷகன்" என்றாஶ்ரயியாநிற்கச்செய்தே, நடுவேயவன்முடிவது, அப்போதும் கீழ்ச்சொன்னதுவே பலிதமாமித்தனை. [வருணித்தேன்னே] - உபகரித்தார்திறத்திலே அபகாரம் பண்ணுவார்படியை யநுஸந்தித்துவெறுத்து,'வருணித்தேன்னே' என்கிறார். இளைய பெருமாள் கைகேயியுடையபடிகளை யநுஸந்தித்து, "ஆத்மகாமா ஸதா சண்டீ க்ரோதநா ப்ராஜ்ஞமாநிநீ" (ஆத்மகாமாஸதாசண்டீ க்ரோதநாப்ராஜ்ஞமாநிநீ) என்றாற்போலே சிலவற்றைச்சொல்ல;'வாராய் பிள்ளாய்!நீதான் இவையெல்லாஞ்சொல்லுகிறதுநடுவிலாய்ச்சியையே: "ந தேம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந"(நதேம்பாமத்யமாதாதகர்ஹிதவ்யாகதஞ்சந)-ஒருபடியாலும் நீ அவளை இவ்வார்த்தை சொல்லக்கடவையல்லை. "தாமேவ"(தாமேவ)-வேணுமாகில் கைகண்டமருந்தைச்செய்யப்பாராய்'. "இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய"(இக்ஷ்வாகுநாதஸ்யபரதஸ்ய)-ஐயரோ போகட்டுமுடிந்துபோனார்; நாம் போகட்டுப்போந்த ராஜ்யத்தை இக்குடியில் மர்யாதைகுலையாதபடியாக நோக்கிக்கொண்டு கிடந்தபிள்ளை பரதனன்றோ இக்குடிக்கு நாயன். 'பரதஸ்ய கதாம் குரு' (பரதஸ்யகதாம்குரு)-நா நீர்வரும்படியான வார்த்தை சொல்லப்பாராய். ஆக, உபகரித்தார் விஷயத்திலே அபகாரமாகநினைத்திருப்பார்படி யநுஸந்தித்து, இவ்வர்த்தகதையைக் கிடந்து வர்ணிக்கிற இத்தால் ப்ரயோஜநமென்? பச்சையிட்டமையாதவன்று அபேக்ஷித காலத்திலே வந்து உதவுவானொருவனுண்டு; அவனையாஶ்ரயித்துப் பிழைத்துப்போகப் பாருங்கோள்! [வடமதுரையிக்யாதி] - ஒருவர் அபேக்ஷியாதேயிருக்கச் செய்தே, இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் தானேவந்து ஸ்ரீமதுரையிலேயவதரித்தவனுடைய நிர்ஹேதுக உபகாரகமான ஸௌஶீல்ய ஸௌலப்யாதி கல்யாணகுணங்களே நமக்கு ரக்ஷகமென்று உஜ்ஜீவித்துப்போகையொழிய. [இல்லைகண்டீர்சதிரே] - நேற்றிபெருத்து பல

ஆபத்துவந்தால் இத்யாதி. "அலைதே" என்றதின் விவரணம் - கீழ்ச்சொன்ன இத்யாதி. அதாவது - இரணம்கொண்டதெப்பாகை. "வருணித்தென்னே" என்றது - க்ஷேபோக்தி. இப்படி வெறுத்தபெருண்டோவென்ன -இளையபெருமாள்இத்யாதி."ஆத்மகாமா ஸதா சண்டீ க்ரோதநா ப்ராஜ்ஞமாநிநீ। அரோகா சாபி லோகேஸ்மிந் தாதஸ்ய ... வ்யவஸ்திதா"இத்யயோத்யாகாண்டே (ஸ 71, ஸ்லோ-10) பரத:. "ந தேம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந। தாமேவேக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு"இத்யாரண்யகாண்டே (ஸ-16) ராம:. ஆத்மகாமா-ஸ்வார்த்தபரா. சண்டீ-அத்யந்தகோபவதீ.க்ரோதநா-ஸ்வஸம்ஸர்க்கேண அந்யேஷாமபிகோபஜநநீ. ப்ராஜ்ஞமாநிநீ-பண்டிதாம்மந்யமாநா. என்றாற்போலே யென்று-ஸ்ரீபரதாழ்வான்சொன்னாற்போலே. சிலவற்றை சொல்லவென்றது - "பர்த்ருவிஷயாஸ்யா: ... ஸ்வபாவதோ: । கதஞ்சநாபி லோகேஸ்மிந் ... ப்ராஜ்ஞமாநிநீ" என்று இப்படி சிலவற்றைச்சொல்லவென்றபடி. "கதஞ்சந" என்றதுக்கர்த்தம் - ஒருபடியாலும் இத்யாதி. தேவர் இக்ஷ்வாகுநாதராயிருக்க, பரதனை இக்ஷ்வாகுநாதனென்கிறதென் ? என்ன, அந்வர்த்த ஸம்ஜ்ஞையையுடையவனுகையாலே யவனே இக்ஷ்வாகுநாதனென்கிறார் - ஐயர் இத்யாதி. நா நீர்வரும்படி - நாக்குக்கு நீர்வரும்படி. "வருணித்தென்னே" என்றதுக்குக் கீழ்ச்சொன்ன அர்த்தத்தை யநுவதியா நின்றுகொண்டு, மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் - ஆக இத்யாதியாலும், பச்சையிட்டமையாத இத்யாதியாலும். வண்புகழ் - கல்யாணகுணம். வ்யதிரேகார்த்தகபூர்வகமாக ஸ்வபாவார்த்தம் - நேற்றி பெருத்து இத்யாதிவாக்யத்வயம். நேற்றி - ப்ரயாஸம். பகவத்விஷயத்திலே நெற்றியல்பு

மொன்றுமின்றிக்கே யிருக்குமென்னுமது- இளிம்பிறே; நெற்றி யல்பமாய் ஃபலம் கனக்கப் பெறுமதிறே-சதிராவது. 'நமோ'வென்னலிறே-நெற்றி; 'சமன்கொள் வீடு' இறே- ஃபலம். (ச)

---

# ஐந்தாம் பாட்டு.

---

சதுரமென்றுதம்மைத்தாமேசம்மதித்துஇன்மொழியார்
மதுரபோகம்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர்
அதிர்கோள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு
எதிர்கோளாளாயுய்யலல்லால் இல்லைகண்டீரின்பமே.

*ஆ.—(சதுரமென்று.) - சதிராகவாழாநின்றோமென்று தங்களைத்தாங்களே யிசைந்து, இனியபேச்சுக்களையுடைய ஸ்த்ரீகளுடைய மதுரமான போகங்களை புஜித்தவர்களே, புஜிக்கைக்கீடான யோக்யதை குன்றினவாறே அவர்களாலே மிகவும் பரிபவிக்கப்படுவர்; லோகமெல்லாம் அதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அசுரர் மங்கும்படியாக வடமதுரைப்பிறந்தாற்கு ஸ்வாகதாதிகளைப்பண்ணி எதிர்கொள்ளும் அடியாராய் உய்யலல்லால் வேறு ஸுகமில்லை யென்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், தங்களைப் பெறுவிடில் தரிக்கமாட்டாதபடி ஸ்நிக்தைகளான ஸ்த்ரீகளாலே, ஆபத்துக்கள் வந்தால் இகழப்படுவர்; ஆனபின்பு, என்றும் ஏகப்ரகாரமாக ஸ்நிக்தனை எம்பெருமானை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.*

*[சதுரமென்று தொடங்கி] - "சதிராக வாழாநின்றோம்" என்று தங்களைத் தாங்களை இசைந்து இனிய பேச்சுக்களையுடைவர்களுடைய மதுரமான போகங்களை ஸுஜித்தவர்களே, ஸுஜிக்கைக்கீடான யோக்யதை குன்றினவாறே அவர்களாலே த்யஜிக்கப்படுவர். [அதிர்கொள் செய்கையென்று மேலுக்கு] - லோகமெல்லாம் அதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அஸுரர் மங்கும்படியாக வடமதுரைப் பிறந்தாற்கு ஸ்வாகதாதிகளைப்பண்ணிஎதிர்கொள்ளும் அடியாராய் உஜ்ஜீவிக்கலல்லது ஆத்மாவுக்கு வேறு ஸுகம் இல்லை.*

*ப.—அநந்தரம், தங்களுக்கு போக்யதயா ஸ்வீக்ருதைகளான ஸ்த்ரீகளும் உதவாதபடி க்லேஶிப்பர்; க்லேஶநிவர்த்தகனான க்ருஷ்ணனை ப்ரதிகமநம்பண்ணி ஆஶ்ரயிக்குமதொழிய வேறு ஸுகமில்லை யென்கிறார்.*

*சதுரம் - (அபிமதவிஷயத்தை வஶீகரிக்கவல்ல) சதிரையுடையோம், என்று - என்று, தம்மை - தங்களை, தாமே - தாங்களே, சம்மதித்து - ஸம்வதித்துக்கொண்டு, இன் - ப்ரமுகஸரஸமான, மொழியார் - வார்த்தையையுடையாரான ஸ்த்ரீகளுடைய, மதுரம் - இனிதான, போகம் - போகத்தை, துற்றவரே - பூர்ணமாகவநுபவித்தவர்களே, வைகி - காலாந்தரத்திலே, (அவர்கள்), மற்றொன்று - அவமாநாதிகார்யமான விபரீதஃபலத்தை, உறுவர் - பெறுவர்; (லோகத்துக்கு) அதிர்கொள்-மிகவும்அதிர்த்தியை விளைப்பிக்கையே, செய்கை - ஸ்வபாவமாகவுடைய, அசுரர் - அஸுரர்கள், மங்க - நசிக்*

---

*மாய், ஃபலம் கனத்திருக்குமோவென்ன* - நமோ வென்னல் *இத்யாதி. இளிம்பு - அசாதுர்யம். க்ரமேணாந்வய:.* (கு)

கும்படி, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தாற்கு - அவதீர்ணனான க்ருஷ்ணனுக்கு, எதிர்கொள் - அபிகமந கர்த்தாக்களான, ஆளாய் - சேஷபூதராய்க்கொண்டு, உய்யலல்லால் - உஜ்ஜீவிக்கிலல்லது, (வேறு), இன்பம் - நிரதிசயஸுகம், இல்லை—.

இ.—அஞ்சாம்பாட்டில், தங்களைப்பெறுவிடில் தரிக்கமாட்டாதபடி ஸ்நிக்தைகளான ஸ்த்ரீகளாலே ஆபத்துவந்தால் இகழப்படுவர். ஆனபின்பு, ஏகப்ரகாரமாக ஸ்நிக்தனானவனை ஆச்ரயியுங்கோளென்கிறார்.

[சதுரமென்று] - சதிராகவாழாநின்றோமென்று இருந்ததேகுடியாக எல்லாரும் தம்மை இப்படியிறே நினைத்திருப்பது. [தம்மைத்தாமே சம்மதித்து] - தங்களைத் தாங்களே யிசைந்து. இயற்றி யுடையனானவன், "நம்மை 'சதுரன்' என்றங்கே நினைப்பிடு" என்னும். இவ்வஸ்யப்ரவ்ருத்திக்கு வேறு ஸஹகாரிப்பாரில்லாமையாலே தாமே மேல் எழுந்திட்டுக் கொடுவரவேணும். [இன்மொழியார்]—இனிய பேச்சையுடையவர்களுடைய. அகவாய் மயிர்க்கத்தியாயிருக்கப்பேச்சில் இனிமையாலே வசீகரிப்பர்கள். [மதுரபோகந் துற்றவரே] - மதுரமான போஜ்யங்களை அவர்களைக்கொண்டு நெருங்க பூஜித்தவர்களை. [வைகி மற்றொன்றுறுவர்] - போஜ்யபாகத்தை போனவாறே அவர்களாலே த்யஜிக்கப்படுவர்கள். போஜ்ய யோக்யதையான யௌவநமும், கைதொடுமானமான அர்த்தமும் மாண்டாலும் இவனுக்கு ப்ராத்தை மாறுதிறே; இவன் மேல்விழ அவர்கள் நிஷேதிக்க இவன்படும் எளிமைகளை வாயாலே யருளிச்செய்யமாட்டாமையாலே, 'மற்றொன்று' என்கிறார். [எதிர்கொள் இத்யாதி] - சேதநர் அதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அஸுரர்கள் மங்கும்படியாக. [வடமதுரைப் பிறந்தாற்கு எதிர்கொளாளாயுய்யலல்லால்] - அவனுக்குச் செய்யவேண்டுவதென்னென்னில்?—ஸ்வாகதாதிகளைப்பண்ணி எதிர்கொள்ளுமித்தனை. அவன் மேல்விழாநின்றால் விழுவராகாதொழியுமத்தனையே வேண்டுவது. ஆபிமுக்யம் பண்ணும் அடியாராய் உஜ்ஜீவிக்குமதொழிய. [இல்லைகண்டீர் இன்பமே] - ஆத்மாவுக்கு வேறு ஸுகமில்லை. உயிர்க்கழுவிலேயிருந்து பிபாஸை வர்த்தித்தவனுக்கு ஊர்ஹம் ஶமித்துப்பிறக்கும் ஸுகம்போலேயிறே ஸம்ஸாரத்திற் பிறக்கும் ஸுகம்; பகவத்விஷயத்தைவிட்டு அநர்த்தப்படுகைக்கு வேண்டுவ

ஈடு.—அஞ்சாம்பாட்டு. தங்களைப்பெறுவிடில் தரிக்கமாட்டாதபடி ஸ்நிக்தைகளான ஸ்த்ரீகளாலே ஆபத்துவந்தால் இகழப்படுவர்; ஆனபின்பு, ஏகப்ரகாரமாக ஸ்நிக்தனானவனை ஆச்ரயிக்குமதொழிய வேறுஸுகமில்லை யென்கிறார்.

[சதுரமென்று] - சதிராகவாழாநின்றோமென்று. "நாஞ் சதிரர், நாஞ் சதிரர்" என்றுயிற்று, இருந்ததேகுடியாகத் தந்தாமை நினைத்திருப்பது. [தம்மைத்தாமே சம்மதித்து]-தங்களைத்தாங்களே ஸம்மதித்து. தாங்களேயிசைந்து. அல்பம்இயற்றியையுடை

---

அஞ்சாம்பாட்டு.—சதுரம் இத்யாதி. "இன்மொழியார் மதுரபோகந்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர் - எதிர்கொளாளாயுய்யலல்லா லில்லைகண்டீரின்பம்" என்கிறவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - தங்களை இத்யாதி. கீழ், ப்ராபகாபாஸங்களைச் சொல்லிற்று; இதில், ப்ராப்யாபாஸங்களைச் சொல்லுகிறது. "வடமதுரைப்பிறந்தாற்கு" என்கையாலே- ஏகப்ரகாரஸ்நிக்தனதை ஸித்தம்.

"தம்மைத்தாமே" என்ற பஹுவசநத்தையுட்கொண்டு அர்த்தம் - நாம் சதிரர் இத்யாதி. இருந்ததே குடியாக - எல்லாருமொக்க. ஸம்மதிக்கும்ப்ரகாரம் ஏது? என்ன - அல்பம்

யனு யிருக்குமவன்,"அங்கே நம்மை 'சதிரன்' என்று நினைப்பிட்டுக்கோடுவா:நாம் அதிலே மேலெழுத்திட்டுத்தர" என்னும்; இவ்†வஸஉஸ்யப்ரவ்ருத்திக்கு வேறுஸஹகரிப்பாரைக் கிடையாதே; தானேயிறேயுள்ளது [இன்மொழியார்] - இனிய பேச்சையுடையராயிருந் துள்ளவர்களுடைய. அகவாய் மயிர்க்கத்தியாயிருக்கச்செய்தேயும், ப்ரணயஸரஸமான பேச்சாலே வசீகரிக்கவல்லவர்கள். [மதுரபோகந் துற்றவரே] - மதுரமானஸோ௲த்தை, அவர்களுடனே நெருங்க புஜித்தவர்களே. [வைகிமற்றுென்றுறுவர்] - ஸோகத்துக்குப் பாங்கான யௌவநமும், அதுக்குக்கைம்முதலான த்ரவ்யமும்போமே; பின்னையும் ஆசை மாறுதே; அவ்வோவிடங்களிலேபோயிருக்கும், வருவார்க்கும் விரோதியாய். முற்பட, மனிச்சிலே நாலிரண்டுபேண்ணை "போகலாகாதோ" என்பர்களே; "போகிறோம், போகிறோம்"என்றிருக்குமே,போகாதே; பின்னைவேள்ளாட்டியையிட்டுப் பரிஹவிப்பர்கள்;அதுக்கும் போகானே; பின்னை யாணையிட் டெழுப்பிப்பார்ப்பர்கள்;அதுக்குமெழுந்திரான்; பின்னைக் காலைப்பற்றி யிழுப்பர்கள்: இவன் தூணைக்கட்டிக்கோள்ளும்; இப்படியால் அவர்களாலே பரிஹ௵தராவர்கள்; விபாகத்தில் பிறக்கும் பரிஹவத்தை யநுஸந்தித்து வேறுத்து, அது தம்வாயாலருளிச் செய்யமாட்டாமையாலே 'மற்றுென்று' என்கிறுர். அங்ஙனன்றிக்கே, விபாகத்தில் நன்மையோடே தலைக்கட்டும் விஷயத்தைப்பற்றி உஜ்ஜீவித்துப் போகப்பாருங்கோளேன்கிறுர். [அதிரித்யாதி] – சேதநருடைய நெஞ்சுகள் அதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அசுரவர்க்கம் முடியும்படி வடமதுரையிலேவந்து திருவவதரித்தவற்கு. [எதிர்கோளாளாயுய்யலல்லால்] - ஆ஭ிமுக்ய்ம்பண்ணும் அடியாராய் உஜ்ஜீவிக்குமதோழிய: அவனுக்கு நாம் செய்யவேண்டுவதிது,—அவன்தானே மேல் விழாநின்றுல், விமுவராகாதோழியு மத்தனையே வேண்டுவது. "அந்யத் பூர்ணாத் அபாம் கும்பாத்" (அந்யத்பூர்ணுதபாம்கும்பாத்)—பாண்டவபக்ஷபாத்யாயிருக்கிற க்ருஷ்ணன் வாராநின்றுன்; அவனுக்கு நாட்டையுங் கோடுத்து, போன்னையுங்கோடுத்து, நமக்

இத்யாதி. இயற்றி - த்ரவ்யாத்யாதிக்யம். 'இருக்குமவன்' என்றதுக்கு, 'என்னும்' என்றத்தோடே யந்வயம். அங்கேயென்றது - ஸபையிலே யென்றபடி. நம்மையென்று - ஸ்வாதிஶயந் தோற்றச் சொல்லுகிறபடி. "தாமே" என்ற அவதாரணார்த்தம் - இவ்வஸஉஸ்ய இத்யாதி. மொழியின் இனிமையைச் சொன்னதுக்கு வ்யாவர்த்யம் - அகவாய் இத்யாதி. இவ்விடத்திலே, "[illegible] ஹ்ருதி [illegible]" என்றது அநுஸந்தேயம். "மற்று" என்றது - மதுரபோகத்துக்கு மற்றுன பரிஹவமென்றபடி. "வைகிமற்றுென்றுறுவர் -" சிறிது காலம் சென்றவாறே பரிஹவத்தை யடைவர்களென்று ஸப்தார்த்தம். வைகி - காலாந்தரத்திலே யென்றபடி. மற்றுென்றுறும் ப்ரகாரமேதென்ன - ஸோ௲த்துக்கு இத்யாதி. வைகுகை - யௌவநாதிகள்கழிகை. இருந்துபோகிறுனென்று உதாஸீநைகளாயிராதே, பரிஹவிப்பானேன்? என்ன, வருவார்க்கும் விரோதியாய் என்கிறுர். மனிச்சிலே - ஸஹாமாநத்திலே. பண்ணை - பர்யாயம். "மற்று" என்கிறதென்? இன்னதென்னவொண்ணுதோ? என்ன - விபாகத்தில் இத்யாதி. விபாகத்தில் - ஃபலவேளையில். அவர்களிற்காட்டில் இவனுக்கு ஏற்றம் அருளிச்செய்கிறுர்-அங்ஙனன்றிக்கே இத்யாதி. உஜ்ஜீவிக்கைக்கு ஆபிமுக்யம்போருமோவென்ன - அவனுக்கு இத்யாதி. விவரணம் - அவன்தானே இத்யாதி. ஆ஭ிமுக்ய ஸந்துஷ்டனென்னுமதுக்கு ப்ரமாணம் - அந்யத்பூர்ணத் இத்யாதி. "அந்யத் பூர்ணாத் அபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத் । அந்யத் குஶலஸம்ப்ரஶ்நாந் நசேச்சதி ஜநார்தந:" இத்யுத்யோகபர்வணி ஏகோநநவதிதமே த்ருதராஷ்ட்ரம் ப்ரதி ஸஞ்சய:. இதுக்கவதாரிகை - பாண்டவ இத்யாதி. படையறுத்து - ஸ்வவஶமாக்கி. நாடு

† அஸதஸ்யம் - ஸதஸ்ஸுக்குத் தகாதது: அஸப்யம். ஸதஸ் - ஸபை.

காக்கிக்கொள்ளுகிறேமென்றாற்போலே த்ருதராஷ்ட்ரன் சிலசொல்ல; அதுக்குக்கருத்து-இவற்றாலே அவனைப் படையறுத்துக் கொள்ளுகிறேனென்றாயிற்று. அவன்தான் நெஞ்சாலே நினைப்பதொன்றாய், வாயாலே வ்யவஹரிப்ப தொன்றாயிறே யிருப்பது; இத்தை யறிந்த ஸஞ்சயன்,வருகிறவன் அங்ஙனொத்தவனல்லன்காண்: அவனுக்குவேண்டுவதுஇவ் வளவென்கிறான்; தான் குடிக்குந்தண்ணீரைக் குளிரவைக்கக்கடவனே: அத்தை அவன் வருகிறவழியிலே வாசலிலே வைக்கவமையும். தன் க்ருஹத்திலே அதிதி வந்து புகுந் தால் கால்கழுவுவதாக ஸாமாந்யஶாஸ்த்ரம் விதித்தது, அதுக்கு மேற்பட அவனை வாசிக்கு விசேஷித்துச் செய்யவேண்டுவதில்லை:—"அந்யத்பாதாவநேஜநாத்" (அந்யத்பாதாவநேஜநாத்) - அந்தக்குடத்தில் நீரையிட்டு அவன் திருவடிகளை விளக்க அமை யும், மற்றுவேண்டா. "அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாத்" (அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாத்) நெடுந்தூரம் வந்தவனை "நடந்தகால்கள்நொந்தவோ?"என்ன ப்ராப்தமிறே. 'நசேச்சதி' (நசேச்சதி)-உண்டவனுக்கு உண்ணப்போகாதிறே; அப்படியே இவனுடைய உத்யோகத் திலே அவனுக்கு வயிறுநிறையும்; பின்பு அவன் செய்யுமவையடைய மிகையாயிருக்கும். [இல்லைகண்டீரின்பமே]-து:கங்களிலே சிலவற்றை ஸுகமென்று ப்ரமிக்கிறவித்தனை போக்கி, இதொழிய ஸுகரூபமாயிருப்பதொன்றில்லை. உயிர்க்கழுவிலே யிருக்கிறவனுக்கு பிபாஸையும்வர்த்தித்து, தண்ணீருங்குடித்து, தாஹமும்சமித்தால் பிறக்கும் ஸுகம் போலே யிருப்பதொன்றிறே, ஸம்ஸாரிகளுக்கு போகத்தால் பிறக்கும் ஸுகமாகிறது. ஆடுகிறபாம்பின் நிழலிலேயொதுங்கி, "அதுஅள்ளிக்கொள்ளும்" என்றறியாதே "வெய் யிலைத்தப்பப்பெற்றோம்" என்று ஹ்ருஷ்டராயிருப்பாரைப்போலேயிறே, விஷயாநுபவங்க ளாலே களித்திருக்கிறவிருப்பு இவனுக்கு. (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

இல்லைகண்டீர்இன்பம்அந்தோ! உள்ளதுநினையாதே
தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்?
மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
சொல்லியுய்யப் போகலல்லால்மற்றொன்றில்லைசுருக்கே.

---

முதலானவற்றைக்கொடுத்து ஸ்வவஶயாக்குகை கபடமாகவேணுமோவென்ன - அவன்தான் இத் யாதி. ஆநுகூல்யமே அவனுக்கு வேண்டுவதென்னுமத்தை பதங்களிலே ஏறிட்டுக்காட்டுகிறார் - தான்குடிக்கும் இத்யாதி. "பாதாவநேஜநாத்" என்றதுக்கு அவதாரிகை - தன் க்ருஹத் திலே இத்யாதி. நடந்தகால்கள் நொந்தவோ என்றது - திருச்சந்தவிருத்தம், அறுபத்தோராம் பாட்டு. ஸ்பஷ்டோர்த்த:. ஆச்சாபவத்துக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - உண்டவனுக்கு இத் யாதி. [illegible]தத்திலேயே[illegible]ன - அப்படியே இத்யாதி. ஆகிலென்னென்ன - பின்பு அவன் இத்யா[illegible]தனும் சிலஸுகங்களுண்டாயிருக்க, "இல்லை" என்கிறதென்னென்ன - து:கங்களிலே இத்யாதி. விஷயஸுகம் - ஸுகப்ராந்தியொழிய, வஸ்துத: து:கமென்கிறார் - உயிர்க்கழுவிலே இத்யாதி. "விஷயாணாநுபவஸமயே" இத்யாதி வசநாபிப்ராயேண அநர்த்தபர்யவஸாயி யுமாம் என்கிறார் - ஆடுகிற இத்யாதி. (ரு)

ஆ.—(இல்லைகண்டீர்.) - "எம்பெருமானல்லது வேறு புருஷார்த்தமில்லை" என்னும் இவ்வுண்மையை யுணராதே எத்தனைவர் இங்ஙனேமுடிந்து போனார்? நீங்களும் இங்ஙனே நசியாதே, ஆஸ்ரிதர்க்கும் ஆநமதாநம் பண்ணுகைக்காக வந்து பிறந்தருளினவனுடைய ஔதார்யத்தையே சொல்லி யுய்யுங்கோள்! வேறு உய்யவிரகில்லை: இது ஸங்க்ஷேபேண சொன்னேம்" என்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், "எம்பெருமானை நிரதிசயபுருஷார்த்தம்" என்னும் இவ்வர்த்தத்தை உணராதே பழையார் அநேகம்பேர் இங்ஙனே முடிந்துபோனார்; நீங்களும் இங்ஙனே நசியாதே ஆஸ்ரிதர்க்காக ஸ்ரீமதுரையிலேவந்து பிறந்தருளின ஸர்வேஸ்வரனை யாஸ்ரயிக்கைபல்லது ஆத்மாவுக்கு ஹிதமில்லை, இது ஸங்க்ரஹேண சொன்னோமென்கிறார்.

[இல்லைகண்டீர் இன்பமந்தோ உள்ளது நினையாதே] - வேறுபுருஷார்த்தம் இல்லைகிடிகோள். உண்டான புருஷார்த்தத்தை நினையாதே. [மல்லைமூதூர்] - அதிஸம்ருத்தமாய் அவனுக்குப் பழையதாய் வருகிற ஊர்.

ப.—அநந்தரம், புருஷார்த்த பரிஜ்ஞாநமில்லாமல் முடிந்துபோகாதே க்ருஷ்ணனுடைய ஆநந்தஜநகமான குணகீர்த்தநத்தைப் பண்ணிலல்லது வேறு உஜ்ஜீவநார்த்தமாயிருப்பதொரு ஸங்க்ரஹமில்லையென்கிறார்.

("ஸுகம் வைஷயிகம் ஜநக" என்கிற ஜந்த்திலே), இன்பம் - ஸுகரூபமாயிருப்பதொன்று, இல்லைகண்டீர் - இல்லைகிடீர்: அந்தோ! - ஐயோ! உள்ளது - ஸர்வகாலவர்த்தியான ஆநந்தியாயுள்ள பகவத்ஸ்வரூபத்தை, நினையாதே - அநுஸந்தியாதே, தொல்லையார்கள் - பழையகாலத்திலுள்ளார், எத்தனைவர் - எத்தனைபேர், தோன்றிக்கழிந்தொழிந்தார் - ஜந்மமரணங்களை யாத்ரையாய்ப்போனார்! (ஆனபின்பு), மல்லை - நிரதிசயஸம்பத்ஸம்ருத்தமாய், மூது - (வாமநாவதாரந்தொடங்கி தத்ஸம்பந்தம் மாறாமல்) பழையதான, ஊர் - ஊராயிராநிற்கிற, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தவன் - பிறந்தவனுடைய, வண் - ஆஹ்லாதஜநகமான, புகழ் - குணங்களை, சொல்லி - கீர்த்தித்து, உய்யப்போகலல்லால் - உஜ்ஜீவித்துப்போமதொழிய, மற்று - வேறு, சுருக்கு - ஸங்க்ரஹேண சொல்லலாவது, ஒன்று இல்லை - ஒன்றுமில்லை.

இ.—ஆறாம்பாட்டில், நிரதிசயபுருஷார்த்தத்தை யுணராதே முன்புள்ளார் அநேகர் முடிந்துபோனார்; அங்ஙனே நசியாதே ஆஸ்ரிதர்க்காக அவதரித்து ரக்ஷிக்குமவனையே ஆஸ்ரயிக்குமல்லது ஆத்மாவுக்கு ஹிதமில்லை யென்கிறார்.

[இல்லைகண்டீர் இன்பம்] - ஸம்ஸாரத்தில் ஸுகமில்லை கிடிகோள்; அந்தோ! ஸ்ரோதாக்களுக்கு நான் உபதேசிக்கவேண்டுவதே! ப்ரத்யக்ஷம் அகிஞ்சித்கரமாயிருக்க உபதேசிக்கிறீரே. [உள்ளது நினையாதே] - உண்டான புருஷார்த்தத்தை நினையாதே. உண்டானஇல்லாமையை நினையாதே யென்றுமாம். [தொல்லையார்களெத்தனைவர்] - பழையராயிருப்பாரெத்தனைவர் உத்பத்தி விநாசமேயாய் நடுவிருந்தநாள் புருஷார்த்தத்துக்கு உடலன்றிக்கே முடிந்துபோனார். எத்தனைவரென்கிறது - அநேகரென்கிறது. [மல்லை மூதூர்] - அதிஸம்ருத்தமாய் அவனுக்குப்பழையதாய் வருகிறஊர். ஸித்தாஸ்ரமமாய் வாமநன் நெடுநாள் தபஸ்ஸு பண்ணியும், ஸ்ரீஸத்ருக்நாழ்வான் படைவீடுசெய்தும், கிருஷ்ணன் அவதரித்தும், இப்படி பகவத்ஸம்பந்தம் மாறாததேசம்.

[வண்புகழே] - அவனுடைய கல்யாண குணங்களையே. [சொல்லி உய்யப்போகலல்லால்]-உக்திமாத்ரத்தாலே உஜ்ஜீவித்துப்போமதொழிய. [மற்றொன்றில்லை சுருக்கே]-சுருங்கச் சொல்லலாம் ஹிதம் வேறொன்றுமில்லை காடு கைக்கலாவதுண்டு, திரளச் சொல்லலாவதுஇதுவே.

ஈடு.—நிரதிஶயபுருஷார்த்தத்தை யுணராதே முன்புள்ளாரநேகர் முடிந்து போனார்கள் ; அப்படியே நீங்களும் நசியாதே, ஆஶ்ரிதர்க்காக அவதரித்து ரக்ஷிக்குமவனையே ஆஶ்ரயிக்குமத்தனையல்லது, ஆத்மாவுக்கு ஹிதமில்லையென்கிறார்.

[இல்லைகண்டீரின்பம்] - "ஸர்வம் து:கமயம் ஜகத்" (ஸர்வம் து:கமயம்ஜகத்) என்கிற ஸம்ஸாரத்தில், கெடுவிகாள் ! ஸுகலேஶமுமில்லைகிடிகோள். [அந்தோ !] - ஶ்ரோதாக்களான உங்களுக்கு நான் உபதேசிக்கவேண்டுவதே ! ப்ரத்யக்ஷமும் அகிஞ்சித்கரமாயிருக்க உபதேசிக்கிறேனே. [உள்ளதுநினையாதே] - உண்டான புருஷார்த்தத்தை நினையாதே. 'ஸுகரூபமுமாய் நித்யமுமா யிருப்பது பகவத்விஷயம்" என்று அநுஸந்தியாதே. உண்டானஇல்லாமையை நினையாதேயென்று கீழேகூட்டவுமாம். [தொல்லையித்யாதி] - பழையராயிருப்பா ரெத்தனைபேர், உத்பத்தியானது விநாசத்தோடே கூட்ட, நடுவுள்ளநாள் புருஷார்த்தத்துக்கு உடலன்றிக்கே கழிந்துபோனார். சிலபூண்டுகளுண்டாய், தோன்றின இடந்தன்னிலேநின்று தீய்ந்துபோவன ; அப்படியே. [மல்லையித்யாதி] - ஸம்ருத்தியை யுடைத்தாய், அவனுக்கு என்றுமொக்கக் கலவிருக்கையாய்ப் போருகிற ஸித்தாஶ்ரமமாய், ஸ்ரீவாமநனெழுந்தருளியிருந்தும், ஸ்ரீஶத்ருக்நாழ்வான் படைவீடுசெய்தும், க்ருஷ்ணன்வந்தவதரித்தும், இப்படி பகவத் ஸம்பந்தம் மாறாதேபோருகிற தேசமாயிற்று. [மூதூர்] - பழையதாய் வருகிறவூர் ; அங்கேவந்துஅவதரித்தவனுடைய உதாரமான புகழையே வாயாலே சொல்லி யுஜ்ஜீவித்துப் போமதொழிய. [மற்றொன்றில்லைசுருக்கே] - புறம்பேநின்று பரக்கக்காடுகைக்கலாவதுண்டித்தனைபோக்கி, சுருங்கவொருபாசுரத்தாலே சொல்லலாவதில்லை. (௬)

---

ஆறும்பாட்டு—இல்லைகண்டீர் இத்யாதி. "உள்ளதுநினையாதே" என்று தொடங்கி, "மற்றொன்றில்லைசுருக்கு". என்னுமளவும் - கடாக்ஷித்தவதாரிகை - நிரதிஶய இத்யாதி. இந்த அவதாரிகை "உள்ளதுநினையாதே" என்றதின் முந்தினவர்த்தத்திலே.

"அந்தோ!" என்றதுக்கு ஹார்த்த பாவம் - ஶ்ரோதாக்களித்யாதி. து:கரூபதை ப்ரத்யக்ஷமாயிருக்க உபதேசிக்கிறதென் ? என்ன - ப்ரத்யக்ஷமும் இத்யாதி. க்ருபையாலேயென்றபடி. விவரணம் - ஸுகரூபமுமாய் இத்யாதி. உண்டானவில்லாமை-ஸத்யமான இல்லாமை. ஸம்ஸாரத்தினுடைய பாரமார்த்திகாகாரம் - இன்பமில்லையென்னுமதென்றபடி. த்விதியயோஜனையில், 'இன்பம்-இல்லைகண்டீர்" என்றதுள்ளது ; அத்தை நினையாதே யென்று பதார்த்தம். உக்தத்துக்குத்ருஷ்டாந்தம் - சிலபூண்டுகள் இத்யாதி. மல்லை - ஸம்ருத்தி. அதாவது - பகவத்ஸம்பந்தம்மாறாமை. கலவிருக்கை-கொலுவிருக்கை. என்றுமொக்க இது கலவிருக்கையோவென்னலாவது - ஸித்தாஶ்ரமமாய் இத்யாதி. "சுருக்கே" என்றதுக்கு பாவம் - புறம்பே இத்யாதி. காடுகைக்கலாவது - வாய்கைக்கும்படி வர்ணிக்கலாவது. வாய்க்குக்கேடாய்ச் சொல்லுகையென்றபடி. 'இல்லைகண்டீர்' என்று தொடங்கி, போகலல்லால் - சுருக்கு - மற்றொன்றில்லை என்று அந்வயம்.

## ஏழாம் பாட்டு.

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டாசிந்திப்பேயமையும் கண்டீர்கள் அந்தோ!
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்
குற்றமில்சீர்கற்று வைகல்வாழ்தல்கண்டீர் குணமே.

**ஆ.** -(மற்றொன்றில்லை.) - இச்சுருக்கை மிகப்பரவாமே வ்யக்தமாக்குகிறார். வேறுவக்தவ்யமில்லாதபடி ஸங்க்ஷேபேண ஆத்மோஜ்ஜீவநோபாயத்தை எல்லார்க்கும் சொன்னோம். இதுக்கு அதிகாரிநியமமும், காலநியமமும், தேசநியமுமில்லை. "இவ்வுபாயந்தான் துஷ்கரம்" என்று குறைவுபடவும் வேண்டா, ஸ்ம்ருதிமாத்ரமே யமையும். இது நிஷ்பலமாகிலோவென்னில்?—இது செய்தால் முன்னம் அநர்த்தமில்லையிறே. ஆகலால், ஆஸ்ரிதர்க்காக வடமதுரையிலேபிறந்தானை பசுமேய்க்கும் ஆயனுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை யநுஸந்தியுங்கோள்: இதுதானே யமையுமென்னும்படி போக்யமாய், யுக்தமுமாயிருக்குமென்கிறார்.

**ஒ.**—ஏழாம்பாட்டில், பகவத் ஸமாஸ்ரயணத்தினுடைய எளிமையையும் இனிமையையும் அருளிச்செய்கிறார்.

[மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம்] - இத்தோடொக்க வேறு எண்ணலாவதும் இல்லை. இதுதன்னையும் பரப்பின்றிக்கே சுருங்கச்சொன்னோம். [மாநிலத்து]- இதுக்கு அதிகாரிகள் எங்ஙனேயென்னில்? பூமியிலேஎவ்வுயிர்க்கும்: ஜ்ஞாநவ்ருத்தாதிகள் குறைந்தாரோடு நிறைந்தாரோடு வாசியின்றிக்கே எல்லா ஆத்மாக்களுக்கும். [சிற்றவேண்டா] - ஆயாஸிக்கவேண்டா. [சிந்திப்பே அமையுங்கண்டீர்கள்] உக்திநிரபேக்ஷமாக சிந்தாமாத்ரமே அமையுங்கிடிகோள். [அந்தோ] - இதிலே புகாதொழிவதே என்று இன்னாதாகிறார். [குற்றமன்று] - இவ்வுபாயம் அநர்த்தத்தை விளையாதிறே. [எங்கள் பெற்றத்தாயன் என்றுமேலுக்கு] - ஆஸ்ரிதர்க்காக் வடமதுரைப் பிறந்தானை பசுமேய்க்கும் ஆயனுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாண குணங்களை அப்யஸித்து என்றும் வாழ்கை, ஆத்மாவுக்கு யுக்தம்.

**ப.**—அநந்தரம், சிந்தாமாத்ரஸாலப்யனை க்ருஷ்ணகுணாநுஸந்தாநம் பண்ணி, காலதத்த்வமுள்ளதனையும் வாழ்கை ப்ராப்தம் என்கிறார்.

மற்று - வேறு, ஒன்று இல்லை-வக்தவ்யமாயிருப்பதொன்று இல்லை: சுருங்க - ஸங்க்ரஹேண, சொன்னோம்-(உங்களுக்குச்) சொன்னோம்; மா - பெரிய, நிலத்து - பூமியிலே, எவ்வுயிர்க்கும் - எல்லாவாத்மாக்களுக்கும், சிற்றவேண்டா - பரக்கஆயாசப்படவேண்டா: சிந்திப்பே - சிந்தாமாத்ரமே, அமையும் - அமையும்; கண்டீர்கள் - ("**ஸுயாஸஸ்ஸுகாராதநோ**" என்று ப்ரஸித்தமன்றோ?), அந்தோ - ஐயோ! (இந்தஸௌகர்யமார்க்கும் பலவ்யாப்தமல்லவாகிலும்), குற்றம் - அநர்த்தகரம், அன்று - அல்லவே; (இப்படி ஸ்மர்த்தவ்யமெதுவேதென்னில்), எங்கள் - ஆஸ்ரிதஸவ்யனாய், பெற்றம் - (அஜ்ஞமான) பசுக்களுக்கு, தாயன் - ரக்ஷகமாய்க்கொண்டு, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தான் - அவதீர்ணனானவனுடைய, குற்றமில் - அபேக்ஷாநிரபேக்ஷமாக ஆஸ்ரிதஸம்ரக்ஷணைக

ப்ரயோஜநமான, சீர் - குணங்களை, கற்று - (உபதேசமுகத்தாலே யிப்படி) வ்யுத்பத்திபண்ணி, வைகல் - ("ஸவ்ருத்ருணோநுஸந்தேயோ" என்கிறபடியே) யாவதாத்மபாவிகுணாநுஸந்தாநம்பண்ணி, வாழ்தல்கண்டீர்-வாழ்கைகிடீகோள்! (உங்களுக்கு); குணம் - ஸ்வபாவமாகையும், ப்ராப்தமும்.

இ.—ஏழாம்பாட்டில், பகவத் ஸமாஶ்ரயணத்தினுடைய எளிமையையும் இனிமையையும் அருளிச்செய்கிறார்.

[மற்றொன்றில்லை]-இத்தோடொக்க வேறு எண்ணலாவதில்லையென்னுதல்; இப்போதித்தைச் சொல்லி வேறொருபோது வேறேயொன்றைச் சொல்லுகிறான் என்றிருக்கவேண்டாவென்னுதல். [சுருங்கச்சொன்னோம்]-இதுதன்னையும் பரப்பறச்சொன்னோம். ப்ரதிபத்திக்கு அவிஷயமாம்படியன்றியே ஸங்க்ரஹமாகச் சொன்னோம். [மாநிலத்து] - இதுக்கு அதிகாரிகள் ஸம்ஸாரத்திலே. இவ்வர்த்தத்துக்கு அண்ணியார் பரமபதத்திலுள்ளாராகிலும் உபதேஶத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரிகளென்கை. [எவ்வுயிர்க்கும்] - இது அதிக்ருதாதிகாரமன்று, ஸர்வாதிகாரம். [சிற்றவேண்டா]- ஆயாஸிக்கவேண்டா. சிற்றுதல் - சிதறுதலாய் பரக்கவேண்டாவென்கை. [சிந்திப்பேயமையுங்கண்டீர்கள்] - உக்திநிரபேக்ஷமாக சிந்தாமாத்ரமேயமையுங் கிடீகோள். [அந்தோ]- இவ்விலக்ஷணவிஷயத்தை இழப்பதே என்னுதல். "இது ஸுலபம்" என்றால் காற்கடைக்கொள்ளுகைக்கு உறுப்பாவதே யென்னுதல்.[குற்றமன்று] - ஒருநன்மையில்லையாகிலும், ஓர் அநர்த்தத்தை விளையாதே. "ஶ்ராதஶ்சேஜ்ஜஹிதி" இவ்வுபாயத்துக்கு ஃபலமில்லையாகிலும் தானே ப்ரயோஜநம் போருமென்கை. [எங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான்] - ஆஶ்ரிதர்க்காக வடமதுரைப் பிறந்தானை பசுமேய்க்கும் ஆயனென்னுதல். ஆஶ்ரிதர்க்காக பசுமேய்க்கும் ஆயனுவானுக வடமதுரைப் பிறந்தானென்னுதல். [குற்றமில்சீர் கற்று] - ஹேயப்ரத்யநீகமான கல்யாண குணங்களை அப்யஸிக்கிறதென்னுதல்; பிறப்பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்கையென்னுதல். "ஜந்மகர்ம ச மே திவ்யம்" [வைகல் வாழ்தல் கண்டீர் குணமே] - கற்பதொருகால்; வாழ்ச்சி நித்யமாயிருக்கும் [வாழ்தல் கண்டீர் குணமே]- வாழ்தல்கிடீர் இவ்வாத்மாவுக்கு யுக்தம்; அல்லாததெல்லாம் அப்ராப்தமென்கை.

ஈடு.—ஏழாம்பாட்டு. பகவத்ஸமாஶ்ரயணத்தினுடைய எளிமையையும் இனிமையையும் அருளிச்செய்கிறார்.

[மற்றொன்றில்லை] - இத்தோடொக்க வேறு எண்ணலாவதில்லையென்னுதல், இப்போது இத்தைச்சொல்லி வேறொருபோது வேறொன்றைச்சொல்லுகிறானென்றிருக்க வேண்டா வென்னுதல் [சுருங்கச்சொன்னோம்] - இதுதன்னைப்பரப்பறச்சொன்னோம். ப்ரதிபத்திக்கு அவிஷயமாம்படி சொல்லுகையன்றிக்கே, ஸங்க்ரஹமாகச்சொன்னோம்.

---

ஏழாம்பாட்டு.—மற்றொன்றில்லை இத்யாதி. "சிற்றவேண்டாசிந்திப்பேயமையும் குற்றமன்று" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - பகவத்ஸமாஶ்ரயண இத்யாதி.

இத்தோடொக்க என்றது - "சிந்திப்பேயமையும்" என்றத்தைப்பற்ற. ப்ரதிபத்தியோடொக்க எண்ணலாவது ஓர் உபாயாந்தரமில்லையென்று முந்தின அர்த்தத்துக்குபாவம்; என் வார்த்தையை "விப்ரலம்பகவாக்யம்" என்றிருக்கவேண்டா, "ஆப்தம்" என்று விஶ்வஸியுங்கோள் என்றிரண்டாமர்த்தத்துக்கு பாவம். "சுருங்க" என்றதுக்கு - ஶப்தத்தினுடைய ஸங்க்ரஹமும், அர்த்த

[மாநிலத்து] - இதுக்கு அதிகாரிகள் ஸம்ஸாரத்திலே. இவ்வர்த்தத்துக்குஅண்ணியார் பரமபதத்திலுள்ளாராகிலும், உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலுள்ளாரென்கை. [எவ்வுயிர்க்கும்] - இது அதிக்ருதாதிகாரமன்று; ஸர்வாதிகாரம். [சிற்றவேண்டா] - ஆயாஸிக்கவேண்டா. சிற்றுதல் - சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை. ஒரு வ்யாபாரம் வேண்டாவென்றபடி. [சிந்திப்பேயமையுங்கண்டீர்கள்] - உக்திநிரபேக்ஷமான சிந்தாமாத்ரமே யமையுங்கிடிகோள். [அந்தோ] - "நற்சரக்குக்கிட்டினதனையும் கைவிடுகைக்கு உடலாவதே!" என்று அந்தோ! என்கிறார். [குற்றமன்று] - கீழ்ச்சொன்ன நன்மைகளொன்றுமில்லையேயாகிலும், இதுசொன்னாலும் உங்கள்தலையில் முந்தறமுன்னம் இடிவிழாது. "*யோவஸாநஸ்ஸம்ஸ்ருதாம் - ப்ராதர்த்தே வேதி க்ருஷ்ணேதி*" (யோவஸாநஸ்ஸஉச்யதாம் - ப்ராதர்த்தேவேதிக்ருஷ்ணேதி)-இவ்வுபாயத்துக்குப் பலமில்லையாகிலும், இதுதானே ப்ரயோஜநம் போருமென்கை. [எங்கள்பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்] - வந்துபிறப்பதற்கு முன்னே பெற்றத்தாயன்போலேகாணும், வந்தவதரிப்பதாக ஸங்கல்பித்ததில் புரையற்றிருந்தபடி. ஆஸ்ரிதர்க்காக வடமதுரைப்பிறந்தானை பசுமேய்க்கும் ஆயனென்னுதல். பெற்றத்தாயன் - பசுமேய்க்கும் இடையன். [குற்றமில்சீர்கற்று] - ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை யப்யஸித்தென்னுதல்; பிறப்பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்குமென்னுதல். "**அஹம் வோ பாந்தவோ ஜாத:**" (அஹம்வோபாந்தவோஜாத:). [வைகல்வாழ்தல்கண்டீர்குணமே] - கற்பதொருகாலாய், பின்பு வாழ்ச்சி நித்யமாயிருக்குமாயிற்று; இதொன்றுமே குணம்; இதொழிந்ததடைய அப்ராப்தம். (எ)

---

*தத்தினுடைய ஸாக்ரஹத்வமுமென்று இரண்டர்த்தம். இத்தையருளிச்செய்கிறார் -* இதுதன்னை *இத்யாதி வாக்யத்வயத்தாலே. "ஸம்ஸாரத்திலே" என்கிறதென்? நித்யவிபூதியிலேயன்றோவுள்ளது? என்ன -* இவ்வர்த்தத்துக்கு *இத்யாதி. "எவ்வுயிர்க்கும்" என்றதுக்கு ஹாவம்-*இது அதிக்ருத *இத்யாதி. "சிற்ற" என்றால் ஆயாஸத்தைக்காட்டுமோவென்ன -* சிற்றுதல் *இத்யாதி. "சிந்திப்பே" என்ற அவதாரணார்த்தம் -* உக்திநிரபேக்ஷமான *இத்யாதி. "அந்தோ" என்றதுக்குஹாவம் -* நற்சரக்கு *இத்யாதி.* கிட்டினதனையும் *- கிட்டவிருக்கச்செய்தேயும்.* கீழ்ச்சொன்னநன்மைகள் *ஆவன- ஸர்வோபாயாதிசயத்வ ப்ரதிபத்திவிஷயத்வ ஸாலப்யத்வ ஸர்வாதிகாரத்வ அநாயாஸத்வ உக்திநிரபேக்ஷத்வரூபமான இவ்வாநுகூல்யங்கள். உத்தரார்த்தத்துக்கு ஸம்வாதம் -* யோவஸாந *இத்யாதி:—*
"**ப்ராதர்த்தே வேதி க்ருஷ்ணேதி மாவிசேதி வசஸ்ஸ்ருதாம் । யத்ராஹோ வாபராஹ்ணே வா யோவஸாநஸ்ஸம்ஸ்ருதாம்.**" *அவஸாந: - துக்கம். "குற்றமன்று" என்றதுக்கு ஹாவாந்தரம் -* இவ்வுபாயத்துக்கு *இத்யாதி. ஏகார்த்தமாகவுமாம்.* பெற்றம் *- கன்றும் பசுவும். பிறந்தபின்பு பெற்றத்தாயனென்றதே "பெற்றத்தாயன்பிறந்தான்" என்றதுக்குஹாவம் -* வந்துபிறப்பதற்கு *இத்யாதி.* ஸங்கல்பிதம் *-* வந்தவதரிப்பதாக *இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, "சீர்" என்று - குணகார்யசேஷ்டிதங்களைச்சொல்லுகிறது. "பிறப்பில்புரையற்றிருக்கும்" என்றதுக்குப்ரமாணம் -* அஹம்வோபாந்தவ *இத்யாதி.* "**நாஹம் தேவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச தாநவ: । அஹம் வோ பாந்தவோ ஜாதோ நைதச்சிந்த்யமிதோந்யதா**" *இதி ஸங்காங்குர்வதோ கோபாந் ப்ரதி ஸ்ரீக்ருஷ்ண:. "கற்றுவைகல்வாழ்தல்" என்ற பதச்சேர்த்திக்குஹாவம் -* கற்பதொருகாலாய் *இத்யாதி. "வாழ்தல்கண்டீர்குணம்" என்றந்வயித்து, அவதாரணார்த்தம் -* இதொன்றுமே *இத்யாதி.* குணம் *- ப்ராப்தம். "சுருங்கச்சொன்னோம்" என்றதுக்கு, "சிந்திப்பேயமையும்" என்றத்தோடே அந்வயம்.* (எ)

## எட்டாம் பாட்டு.

வாழ்தல்கண்டீர்குணமிது அந்தோ மாயவனடிபரவி
போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு
வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லைமிக்கதே.

ஆ.—(வாழ்தல்கண்டீர்.) - தன்னுடைய கல்யாணகுணாநுஸந்தாநைகாத்மதாரணரான சீரியர்க்கு வாழ்துணையாக வடமதுரையிலே வந்து பிறந்தருளின ஸர்வேஶ்வரனுடைய கல்யாணகுணாநுஸந்தாநத்துக்குமேற்பட்ட புருஷார்த்தோபாயமில்லையென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், எம்பெருமான் இங்கேவந்து திருவவதாரம்பண்ணியருளுகைக்கு நிதானத்தைச்சொல்லி அவனையே ரக்ஷகனாகப் பற்றுமித்தனைபோக்கி ஒருவர்க்கும் வேறொரு ப்ரயோஜநமில்லை என்கிறார்.

[மாயவனடி பரவியென்று தொடங்கி] - ஆஶ்சர்யமான குணசேஷ்டிதாதிகளையுடையனான தன்னுடைய திருவடிகளை இனிதாய்க்கொண்டு பேசியே போதுபோக்கவேணுமென்று அத்யவஸிக்கவல்லராய், அநந்யப்ரயோஜநரானவர்க்கு உஜ்ஜீவநஹேதுவாக வடமதுரையில் பிறந்த ஸர்வேஶ்வரனுடைய கல்யாணகுணங்களையே மேவும் துணையாக பற்றும் இதுபோக்கிச் சீரியது ஒன்றுமில்லை. [வீழ்துணையென்றது] - ஆசைப்படும் துணையென்றவாறு.

ப.—அநந்தரம், அநந்யப்ரயோஜநரான அதிகாரிகளுக்கு உஜ்ஜீவநஹேதுவான க்ருஷ்ணனுடைய குணங்களை யநிநிவேஶித்தநுபவிக்குமதொழிய, இதில்விஞ்சினதொரு வாசியில்லை யென்கிறார்.

வாழ்தல் - வாழுகிற, இது - இதுவன்றோ, குணம் - (எல்லார்க்கும்) குணமாவது! கண்டீர் - இதுலோகப்ரஸித்தமன்றோ? அந்தோ! - ஐயோ! (வாழும்ப்ரகாரம் அறிகிறதில்லையே. ஏதென்னில்?) மாயவன் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதனான ஸர்வேஶ்வரனுடைய, அடி - திருவடிகளை, பரவி - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்தோத்ரம்பண்ணி, போழ்துபோக - காலக்ஷேபம்பண்ணவேணுமென்று, உள்ளகிற்கும் - நினைக்கவல்லவர்களாய், புன்மை - (ப்ரயோஜநாந்தரஸம்பந்தமாகிற) புல்லிமை, இலாதவர்க்கு - இல்லாதவர்களுக்கு, வாழ்-ஸ்வரூபாநுரூபமானவாழ்ச்சிக்கு, துணையா-உபாயபூதனுகைக்காக, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தவன் - வந்துபிறந்த க்ருஷ்ணனுடைய, வண் - ஆஶ்ரிதாநுஸாவ்யமான, புகழே - குணங்களையே, வீழ் - அபிநிவேஶவிஷயமான, துணையா - போகஸஹாயமாய்க்கொண்டு, போம் - நடக்கிற, இதனில் - இதில், மிக்கது - விஞ்சினது, யாதும் - ஏதேனுமொருவாழ்வும், இல்லை-. வீழ்துணை - விரும்பிய துணையென்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், அவதாரத்துக்கு நிதானத்தைச் சொல்லி அவனையே ரக்ஷகனாகப் பற்றுமதொழிய வேறு விலக்ஷணமாயிருப்பதோராஶ்ரயமில்லை என்கிறார்.

[வாழ்தல்கண்டீர் குணமிது] - அவன் குணங்களை அநுஸந்தித்து வாழுமதே கிடீர்கோள் யுக்தம். [அந்தோ] - கரும்புதின்னக் கூலி கொடுப்பாரைப்போலே இவர்களை அபேக்ஷிக்கவேண்டுவதே எனக்கு. [மாயவனித்யாதி] - ஆஶ்சர்யமான ஸௌஶீல்ய ஶீலாதிகளையுடையவனுடைய திருவடிகளை ப்ரீதியாலே அக்ரமமாக ஏத்தி அத்தாலே காலக்ஷேபம் பண்ணவேணுமென்று அத்யவஸிக்கவல்லரான அநந்யப்ரயோஜநர்க்கு. புன்மையில்லாதவர்கள் - சீரியவர்கள். உள்ளகிற்கை - உள்ளவல்லராகை, அத்யவஸிக்கவல்லராகை. [வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன்] - கண்ணாலே கண்டநுபவிக்கைக்காக, "ஸம்பவாமி யுகே யுகே" என்கிறபடியே துணையாய்வந்து பிறந்தவன். "பரித்ராணாய ஸாதூநாம்" என்றிறே அவதாரத்துக்கு ப்ரயோஜநமிருப்பது. [வண்புகழே வீழ்துணையாப் போமிதனில்] - கல்யாணகுணங்களையே ஆசைப்படுந் துணையாகப் பற்றுமிதுவே போக்கி. [வீழ்துணை] - ஆசைப்படுந் துணை. "தாம் வீழ்வார்" என்னக்கடவதிறே ஆசாயுக்தரை. [யாதுமில்லை மிக்கதே]- இதிற்காட்டில் மேற்பட்டதொன்றுமில்லை.

அ.—எட்டாம்பாட்டு. அவதாரத்துக்கு நிதாநத்தைச்சொல்லி, அவனையேரக்ஷகனாகப் பற்றுமிதொழிய, வேறுவிலக்ஷணமாயிருப்பதோர் அபாஶ்ரயமில்லையென்கிறார்.

[வாழ்தல்கண்டீர்குணமிது] - அவன் குணங்களை யநுஸந்தித்து வாழுமிதுவே கிடீர்கோள் யுக்தம். [அந்தோ] - கரும்புதின்னக் கூலிகொடுப்பாரைப்போலே, இவர்களை யபேக்ஷிக்கவேண்டுவதே எனக்கு. வாழ்ச்சி உங்களதாயிருக்க, இரந்துதிரிவேன் நானுவதே! [மாயவனித்யாதி]-ஸௌஶீல்யஶீலாதிகளால் ஆஶ்சர்யபூதனாயிருந்துள்ள வஸ்துவினுடைய குணஜிதராய், ப்ரீதியாலே அவன் திருவடிகளை யக்ரமமாகவேத்தி, அத்தாலே காலக்ஷேபம் பண்ணுவதாக அத்யவஸிக்கவல்லரான நன்மையையுடையவர்கள், சீரியவர்கள். அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு. * தேரித்தெழுதிவாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போதுபோக்குமவர்கள். "இந்தமாயவனடிபரவுகை சூதுசதுரங்கத்தோபாதி காலக்ஷேபமாக்குகிற புன்மையில்லாதவர்கள்" என்றுபட்டர். [வாழ்துணையித்யாதி] - புன்மையுடையவர்களும் அக்கடக் கழித்து அதுவேபோதுபோக்காக நின்றபின்பு, முதலிலே அதுகுடிபுகுராதவனுக்கு ஆஶ்ரிதஸம்ஶ்லேஷமொழிய வேறு

எட்டாம்பாட்டு.—வாழ்தல் இத்யாதி. "வாழ்துணையா" என்று தொடங்கி, "யாதுமில்லைமிக்கது" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - அவதாரத்துக்கு இத்யாதி.

"வாழ்தல் கண்டீர்குணம்" என்றது அநுவாதம். அவன் குணாநுபவத்தினுடைய ரஸ்யதையைச்சொல்லி, "அந்தோ" என்றதுக்குபாவம் - கரும்புதின்ன இத்யாதி. ஸூசிதம் - வாழ்ச்சி இத்யாதி. போழ்துபோக - காலக்ஷேபம்பண்ணுவதாக, உள்ளகிற்தும் - அநுஸந்திக்கவல்லரான. புன்மையிலாதவர்க்கு - நன்மையுடையவர்க்கென்று பலிதார்த்தம். "கிற்கும்" என்றதுக்கர்த்தம் - வல்லரான் என்று. உள்ளுகை - நினைக்கை. "சீரியவர்கள்" என்றத்தை விவரிக்கிறார் - அநந்யப்ரயோஜநர் இத்யாதி. ஸப்ரமாணகமாக உக்தவிவரணம் - தேரித்து இத்யாதி. நாலாந்திருவந்தாதி, அறுபத்துமூன்றாம்பாட்டு, "தரித்திருந்தேனாகவே" இத்யாதி. வழிபடுகை - அநுதாநே யாத்ரையாகை. தேரித்து - தெரிந்து; அறிந்தென்றபடி. பட்டர் நிர்வாஹத்துக்கு, போழ்துபோக உள்ளகிற்கிறது புன்மை, அதில்லாதவர்களுக்கென்றபடி. அதாவது - போகரூபமாகவன்றிக்கே காலக்ஷேபார்த்தமாக வுள்ளுகிறது. புன்மை - பொல்லாங்கென்றபடி. வாழ்துணையாகைக்கோ இவன்பிறந்ததென்ன - புன்மையுடையவர்களும் இத்யாதி. கழித்து - புன்மைபோகப்பண்ணி.

ப்ரயோஜநமில்லையிறே. அவர்கள் தன் குணங்களையநுபவித்து வாழ்கைக்குத்துணையாக வடமதுரையிலேவந்து அவதரித்தவனுடைய: அவதாரப்ரயோஜநம் "பரித்ராணாய ஸாதூநாம்" (பரித்ராணுயஸாதூநாம்) என்றிறேயிருப்பது. [வண்புகழித்யாதி] - அவனுடைய கல்யாணகுணங்களையே யாசைப்படுந்துணையாகப்பற்றுமிதுபோக்கி. [வீழ்துணை]- ஆசைப்படுந்துணை. †"தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர்" என்னக்கடவதிறே ஆசாயுக்தரை. [இதனில்] - இதிற்காட்டில். [யாதுமில்லை மிக்கதே] – இதனில் மேலாயிருப்பதோன் றுண்டாய், "இதில்நின்று" என்னவேணுமே; இதுக்கு மேலாயிருப்பதோன்றுமில்லை. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

யாதுமில்லைமிக்கதனில்என்றென்றதுகருதி
காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கையும்போம்
மாதுகிலின்கோடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த
தாதுசேர்தோட்கண்ணனல்லால் இல்லைகண்டீர்சரணே.

ஆ.—(யாதுமில்லை.) - எல்லாவற்றிலும் மேற்பட்ட புருஷார்த்தமன்றோ ஸாம்ஸாரிக துக்கநிவ்ருத்திரூப கைவல்யமென்று அத்தை புருஷார்த்தமென்று பற்றில், காதுபெருக்கவென்றுபுக்கு, பண்டுள்ளத்தையும் கெடுத்துக் கூதையாக்கினாற்போலே, பண்டுள்ள ஸாம்ஸாரிக ஸுகத்தையும் இழக்குமித்தனை; ஆதலால், ஸ்ரீமதுரையிலே திருவவதாரம்பண்ணுகையாலே புதுக்கணித்த அழகையுடையனான கண்ணனே பரம ப்ராப்யமென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், எம்பெருமானையொழிய வேறொன்று ரக்ஷக முண்டென்று பற்றினவர்கள், பண்டுநின்ற நிலையுங்கெட்டு அநர்த்தப்பட்டுப்போவர்கள்; ஆனபின்பு, இவன்போக்கி ரக்ஷகமில்லையென்கிறார்.

[யாதுமில்லையென்று தொடங்கி] - இதொழிய மற்றொன்று ரக்ஷகம் இல்லை என்றேதேனுமொன்றைச்சொல்லி அத்தை ரக்ஷகமாகக்கொண்டு, காதுபெருக்கவென்று புக்கு பண்டுள்ளத்தையுங் கெடுத்துக் கூதையாக்கினாற்போலே பண்டுதாங்கள் வாழ்ந்து வருகிற வாழ்வையும் இழப்பர்கள். [தாதுசேர்தோள் கண்ணன்] - வைஜயந்தி ப்ரப்ருதி மாலைகளாலே அலங்க்ருதனான க்ருஷ்ணன். "இவற்றைத்தவிர்ந்து கைவல்

---

இதுவே - ஐகவதநுஜவமே. அது - புன்மை. மப்தார்த்தம் - அவர்கள் இத்யாதி. "ஆஶ்ரித ஸம்ரக்ஷணமே அவதாரத்துக்கு ப்ரயோஜநம்" என்னுமதுக்கு ப்ரமாணம் - அவதாரப்ரயோஜநம் இத்யாதி. "வீழ்" என்று - ஆசையைச்சொல்லுமோவென்ன - தாம் வீழ்வார் இத்யாதி. "தாம் வீழ்வார் தம்வீழப்பெற்றவர்பெற்றாரே - காமத்தின்காழில்கனி' என்றருளுள். நாயகியை முந்துற ஆசைப்பட்டவர்கள் தங்களை அந்நாயகி யாசைப்படப்பெற்றார்களாகில், காமத்தின் கொட்டையில்லாத பலத்தை லபித்தாரென்று இதுக்குப் பொருள். காழ் - கொட்டை. கேவலம் ரஸ ரூபமான கனியென்றபடி.

(அ)

யத்தை புருஷார்த்தமாகப் பற்றிலோவென்னில் ? ஐச்வர்யத்துக்கு யோக்யமுமாய், ஶப்தாதிவிஷயங்களை அநுபவித்து ஸம்ஸாரத்திலே இருக்குமித்தையும் இழக்குமித்தனை யதில் ப்ரயோஜநம் ; ஆனபின்பு, தாதுசேர்தோள் கண்ணனல்லதில்லை கண்டீர் சரண் என்கிறார்'' என்றுஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், வேறொன்றை ப்ரயோஜநமாக நினைத்தால் முன்புள்ள போகத்தையும் இழக்குமித்தனை. நிரதிஶய போக்யனான க்ருஷ்ணனையொழிய ப்ராப்யமில்லை என்கிறார்.

அதனில் - அதிற்காட்டில், மிக்கு - மிஞ்சின ப்ரயோஜநம், யாதும்-ஏதேனுமொன்றும், இல்லை-; என்றென்று - என்று பலகாலும், அது - அந்த ஐஶ்வர்யகைவல்யரூபமான ப்ரயோஜநாந்தரத்தை, கருதி - அநுஸந்தித்து, காது செய்வான் - காதுசெய்யட்புக்கு, கூதைசெய்து-(ஆஶ்ரயமுங் குலைந்து) கூதையாய்விடுமாபோலே, கடைமுறை வாழ்க்கையும் - முன்புபோகிற ஹேயப்ரயோஜநமும், போம் - நசித்துப்போமித்தனை; (ஆனபின்பு), மா - பெரிய, துகிலின் - துகில்களாலுண்டான, கொடி - கொடிகளை, கொள் - உடைய, மாடம் - மாடங்களையுடைத்தாயிருக்கிற, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்த - அவதரித்தவனாய், தாதுசேர் - தேனவீ வைஜயந்த்யாதி மாலாலங்க்ருதமான, தோள் - தோள்களையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனை, அல்லால்-ஒழிய, சரண் - ப்ராப்யதயா புகலிடமாவது, இல்லை - ஒன்றுமில்லை; கண்டீர் - இது நீங்கள் கண்டு கொள்ளலாம். தாது - புஷ்பகேஸரம்.

ஈ.—ஒன்பதாம் பாட்டில், இவனையொழிய வேறொன்றை ரக்ஷகமென்று பற்றினவர்கள், பண்டுநின்ற நிலையுங் கெட்டு அநர்த்தப்பட்டுப் போவர்கள் ; ஆனபின்பு இவனைப்போக்கி வேறு ஶரணமில்லையென்கிறார்.

[யாதுமில்லை இத்யாதி] - ஐஶ்வர்யத்வ்யதிரிக்தமாயிருப்பதொன்றைப் பற்றி ''இதொழிய வேறு ரக்ஷகமாயிருப்ப தொன்றுமில்லை'' என்று சொல்லி அத்தை ரக்ஷகமாகநினைத்து, 'ஸகிமேதாஹம்ருதோக்ஷ'' என்கிற ப்ரதிபத்தியை அதிலே வேணுமென்று பண்ணியிருக்கை. [காது செய்வான் கூதை செய்து]-காது பெருக்கப்புக்கு பண்டுள்ள யோக்யதையையுங் கெடுத்துக் கூதை யாக்கினாற்போலே. [கடைமுறை வாழ்க்கையும்போம்] - தண்ணிய முறையான வாழ்க்கையும் அழியும். ஆபத்தில் அது ரக்ஷகமாகாது; அதின் பக்கலிலே ந்யஸ்தபரனாகைபாலே தான் செய்து கொள்ளுமத்தையுமிழக்கும். [மாதுகிலித்யாதி]- கம்ஸன்வாழ்கிறவூரைப்பட்டைவீட்டைக்கொடிகட்ட இவர் அத்தை க்ருஷ்ணனுடைய அவதாரத்துக்கு உடலாக்குகிறார். ஶிஶுபாலன் விவாஹார்த்தமாகச் செய்த சடங்குகளைத் தனக்குஉடலாக்கிக் கொண்டாற்போலே. [தாதுசேர்தோள் கண்ணனல்லால்] - வைஜயந்திஉள்ளிட்ட தோள்மாலைகளாலே அலங்க்ருதனான க்ருஷ்ணனையொழிய வேறுப்ரயோஜநம்வேண்டாவென்கை. [இல்லை கண்டீர் சரணே] - புறம்பு ரக்ஷகமில்லைகிடீர். அதவா, இப்பாட்டு கைவல்யநிந்தையென்றுமாம். ஆத்மாநுபவஸுகத்திற் காட்டில் மிக்கதொருபுருஷார்த்தமில்லை யென்றே புத்தி பண்ணி. [கடைமுறை வாழ்க்கையும்போம்] - ஐஶ்வர்யாஶ்ரயணத்துக்கு யோக்யமான ஸம்ஸாரத்திலே ஶப்தாதி விஷயங்களையநுபவித்திருக்குமத்தையுமிழக்கும். ஆனபின்பு ஸர்வாபிமதனாய் ஸுலபனான க்ருஷ்ணனே பரமப்ராப்யன் என்கை.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இவனை யொழிய வேறே யொன்றை ரக்ஷகமென்று பற்றினவர்கள், பண்டு நின்றநிலையுங்கெட்டு அநர்த்தப்பட்டுப்போவர்கள்; ஆனபின்பு, இவனல்லது சரணமில்லையென்கிறார். அன்றிக்கே, கைவல்யபுருஷார்த்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம்.

[யாதுமித்யாதி] - பகவத்வ்யதிரிக்தமா யிருப்பதொன்றைப்பற்றி, "இதொழிய வேறுரக்ஷகமாயிருப்ப தொன்றுமில்லை" என்று சொல்லி, அத்தை ரக்ஷகமாக நினைத்து. "[illegible]" (ஸமர்த்தோத்ருஸ்யதேகஸ்சித்) என்கிற ப்ரதிபத்தியை அதிலேபண்ணி. [காது செய்வான் கூதைசெய்து] - காதுபெருக்கப்புக்கு, பண்டுள்ளயோக்யதையையுங் கெடுத்துக் கூதையாக்கினாற்போலே. [கடைமுறைவாழ்க்கையும்போம்] - தண்ணிதான முறைமையாலே வாழக்கடவவாழ்வுஉண்டு - ஸம்ஸாரத்திலே பசலுங் குட்டியுமாய் அளாய்குளாயாய்ப் போருமது: அதுவுங்கூடக் கெடுமித்தனை. ஆபத்தில்அது ரக்ஷகமாக மாட்டாது; அதின்பக்கலிலே ந்யஸ்தபரனாயிருக்கையாலே, தான்செய்துகொள்ளுமத்தனையுமிழக்கும். [மாதுகிலித்யாதி] - கம்ஸன் வாழ்கிறானாய், அலங்காரமாகக்கட்டினகொடியை க்ருஷ்ணனுடைய அவதாரத்துக்கென்றே நினைத்திருக்கிறாராயிற்று இவர். சிசுபாலன், பாணிக்ரஹணத்துக்கு உடலாகச்செய்த சடங்குகளடையத் தனக்கு உடலாக நினைத்துக்கைப் பிடித்தானிறே. [தாதித்யாதி] - வைஜயந்தி தொடக்கமான மாலைகளாலே யலங்க்ருதமான திருத்தோள்களையுடையவன். வேறொருப்ரயோஜநந்தான் வேண்டா. [அல்லாலில்லைகண்டீர்சரணே] - அவனை யொழிய வேறு ரக்ஷகமாகவல்ல தொருவஸ்து இல்லைகிடிகோள். கைவல்யபரமானபோது. [யாதுமித்யாதி] - "இவ்வாத்மாநுபவஸுகத்துக்கு மேற்பட்டிருப்பதொன்றில்லை" என்று, அவ்வருகே பகவதநுபவஸுகமுண்டேயாகிலும் அத்தையே

*ஒன்பதாம்பாட்டு.*—யாதுமில்லை இத்யாதி. *"யாதுமில்லை மிக்கதனில்" என்றுதொடங்கி, "கடைமுறைவாழ்க்கையும்போம் - கண்ணனல்லாலில்லைகண்டீர்சரண்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை* - இவனையொழிய இத்யாதி. *இந்தபதங்களைக் கடாக்ஷித்து ஆத்மாநுபவத்தைச் சொல்லுகிறதென்று யோஜநாந்தரம்* - அன்றிக்கே இத்யாதி.

*"இதனில் - மிக்கது - யாதுமில்லை என்றென்றதுகருதி" என்றந்வயம். பகவத்பராயிருப்பார், "அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திகளுக்கு ஈஸ்வரனையொழியவேறொரு சக்திமானில்லை" என்று புத்திபண்ணுமத்தை, இத் தேவதைபக்கலிலே இவர்கள் புத்திபண்ணுவர்களென்கிறார்* - ஸமர்த்த *இத்யாதி.* "[illegible]". *அதுகருதி - வ்யதிரிக்ததேவதையை நினைத்து.* கூதை - *மூளி.* கடை - *தண்ணிமை.* பசலும் குட்டியுமாய் - *குஞ்சும் குழந்தையுமாய்.* அளாய் குளாயென்று - *ஸம்ப்ரம வ்யாபாரம். ஸம்ஸாரத்தில் வாழுகிறது கேடாம் ப்ரகாரமென்? என்ன அருளிச்செய்கிறார்*-ஆபத்தில் இத்யாதி *வாக்யத்வயத்தாலே.* அது - *தேவதாந்தரம். "மாதுகிலின் கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த - பெரிய துகிலையுடைத்தான கொடிகளையுடைய மாடங்களையுடைத்தாயிருக்கிற வடமதுரையிலே யவதரித்தவென்று பதார்த்தம்.* துகில் - ஆடை. *கொடிகளாலுண்டான வலங்காரத்தைச் சொல்லி, அநந்தரம், "பிறந்த" என்றதுக்கு பாவம்* - கம்ஸன் இத்யாதி. *இப்படி பிறர்க்காகச்செய்தது அவனுக்கானவிடமுண்டோவென்ன* - சிசுபாலன் இத்யாதி. சடங்கு - *க்ரியை. "தாது" என்று - உள்ளிதழாய், மாலையைலக்ஷிக்கிறது. பதார்த்தம்*-வைஜயந்தி இத்யாதி. *இத்தால் பலிதம்* - வேறொரு இத்யாதி. *"கண்ணனல்லால் - சரண் - இல்லைகண்டீர்" என்றந்வயித்தர்த்தம்*-அவனையொழிய இத்யாதி. *"அதுகருதி" என்றதுக்கர்த்தம்* - அவ்வருகே இத்யாதி. *"அதுகருதி" என்றது - ஆத்மாநுபவத்தை புத்திபண்ணியென்ற*

புத்திபண்ணி, காதுபெருக்கப்புக்கவன் அத்தைப் பலகாலும் அறுத்துவைத்து முன்புத்தை யோக்யதையுங்கூடக் கெடுக்குமாபோலே, ஹேயவத் ஸமாஸ்ரயணத்துக்கு யோக்யமான ஸம்ஸாரத்திலே ஸப்தாதிவிஷயங்களை யநுபவித்திருக்கும் அத்தையும் இழக்கும்; ஆன பின்பு, ஸர்வாபயிகனை க்ருஷ்ணனே பரமப்ராப்ய னென்கை. (க)

## பத்தாம் பாட்டு.

கண்ணனல்லாலில்லைகண்டீர் சரணதுநிற்கவந்து
மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்
திண்ணமாநும்முடைமையுண்டேல் அவனடிசேர்த்துய்ம்மினோ
எண்ணவேண்டாநும்மதாதும் அவனன்றிமற்றில்லையே.

ஆ.—(கண்ணனல்லால்) - க்ருஷ்ணனல்லது சரணில்லையென்றிங்ஙனே தன்னுடைய ரக்ஷகத்வத்தை நிலைநிறுத்துகைக்காக ஸ்ரீமதுரையிலேவந்துபிறந்தருளி, பூபாராவதரணம்பண்ணி, ஜகத்தைரக்ஷித்தருளினன்; ஆதலால், அவனேரக்ஷகன்; ஆன பின்பு, உங்களுக்காக வபிமாநிக்கப்படுகிற வஸ்துக்களையும் உங்களையும் அவன் திருவடிகளிலே மோக்ஷத்தேவர ஸமர்ப்பியுங்கோள்; உங்களுக்காக அபிமாநிக்கப்படுகிறவையும் நீங்களும் அவனுக்கே மோக்ஷம், இதில்ஒருஸம்சயமில்லையென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தானேயெல்லார்க்கும் சரணமென்னும்இவ்வர்த்தத்தை ப்ரதிஷ்டிக்கைக்காகவந்து திருவவதாரம் பண்ணியருளின க்ருஷ்ணன் திருவடிகளை ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

[கண்ணனென்று தொடங்கி] - க்ருஷ்ணனல்லது ஸரண்இல்லை என்னும் இவ்வர்த்தத்தை ஸ்தாபிக்கைக்காகவும் அதுக்குஉறுப்பாகஸம்ஹாரத்தைப்போக்கியருளுகைக்காகவும் ஸ்ரீமதுரையிலேவந்து திருவவதாரம் பண்ணினன். உங்களுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் அவன்திருவடிகளிலே மோக்ஷத்தேவர த்ருடமாக ஸமர்ப்பியுங்கோள். [எண்ணவேண்டா நும்மதாதுமவனன்றி மற்றில்லையே] - "இப்படியேயோ அன்றோ" என்று விசாரிக்கவேண்டா. அத்தனையுமன்றே. உங்களுக்கு ஸாத்யமானவையெல்லாம் ஸாதித்துத்தருவான் அவனே. உங்களினவாகநீங்கள்அபிமானித்திருக்கிறவையெல்லாம்அவனினவே; அதிலொரு ஸந்தேஹமில்லை யென்றுமாம்.

ப.—அநந்தரம், தானேப்ராப்யமும் ப்ராபகமுமென்னுமிடம் நிலைநிறுத்துகைக்காக அவதரித்து பூபாரநிரஸநப்பண்ணின க்ருஷ்ணன் திருவடிகளிலே, நீங்கள் ப்ராப்ய ப்ராபகமென்று நினைத்திருக்கிறவற்றையெல்லாம் த்ருடமாக ஸமர்ப்பியுங்கோளென்கிறார்.

---

படி. 'அத்தையுமிழக்கும்' என்ற சப்தத்தாலே ஹேயவதநுபவத்தை ஸூசிப்பிக்கிறது. இந்தபக்ஷத்தில், "சரண்" என்றது - ப்ராப்யமென்றபடி. 'அதனில் - மிக்கது - யாதுமில்லை - என்றென்றது கருதி' யென்றுதொடங்கி, 'வாழ்க்கையும்போம்' ஆனபின்பு, 'மாதுகிலின்' இத்யாரப்ய, 'கண்ணனல்லாலில்லைகண்டீர் சரண்' என்றந்வயம். (க)

*கண்ணன் - க்ருஷ்ணன், அல்லால் - அல்லது, சரண் - வேறுப்ராப்யப்ராபகங்கள், இல்லைகண்டீர் - இல்லைகிடீகோள்; அது - அந்த தன்னுடைய ப்ராப்யப்ராபகத்வம், நிற்க - லோகத்திலே நிற்கைக்காகவும், மண்ணின்பாரம் - தத்விரோதிகளான ஆஸுரப்ராக்ருதிகளாகிற பூபாரத்தை, நீக்குதற்கு - போக்குகைக்காகவும், வந்து - நாகபர்யங்கத்தைவிட்டுவந்து, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தான் - அவதரித்தான், (ஆனபின்பு), நும் - உங்களுக்காகநினைத்திருக்கிற, உடைமை - பதார்த்தம், உண்டேல் - உண்டாமாகில், அவனடி - அவன்திருவடிகளிலே, திண்ணமா - த்ருடமாக, சேர்த்துய்ம்மினோ - ஸமர்ப்பியுங்கோள்; (இது), எண்ண வேண்டா - விசாரிக்கவேண்டா; நும்மது - உங்களுடைய, ஆதும் - ப்ராப்ய ப்ராபகரூபமான ஸமஸ்தபதார்த்தங்களும், அவனன்றி - "மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்று ஸர்வவித பந்துவானவனையொழிய, மற்று - வேறு ஸ்வநிஷ்டமாயிருப்பதொரு வஸ்து, இல்லை - இல்லை.*

*இ.—பத்தாம்பாட்டில், தானே சரணமென்னும் இவ்வர்த்தத்தை ப்ரதிஷ்டிக்கைக்காக வந்தவதரித்த க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.*

*[கண்ணனல்லாலித்யாதி] - க்ருஷ்ணனையொழிய வேறு ஶரணமாவாரில்லையென்னுமிவ்வர்த்தத்தை ஸ்தாபிக்கைக்காகவும் அதுக்குஉறுப்பாக பூபாரத்தைப்போக்குகைக்காகவும் திருவவதாரம்பண்ணினான்; உங்களுடைய ஆத்மாத்மீயங்களை, ஶேஷியாய் ஸுலபனானவன் திருவடிகளிலே ஶேஷத்வேந த்ருடமாக ஸமர்ப்பியுங்கோள். உண்டேலென்கிறது - ஸ்வபக்ஷத்தாலில்லை; அவர்களுடைய அந்யார்த்தப்ரதிபத்தியாலே வந்தன உண்டாகிலென்கை. எண்ணவேண்டா - "அவனதோ நம்மதோ" என்று விசாரிக்கவேண்டா; உங்களை உங்களுடைமையோடு வாசியற அவனுக்கேஶேஷம். அதவா, உங்களுக்கு ஸாத்யமானவையெல்லாம் ஸாதித்துத்தருவான் அவனொழிய வேறில்லை. ஸமிதை பாதி ஸாவித்ரி பாதியாய்உங்கள்தலையிலுஞ் சிறிது கிடக்கிறதன்று. அவனே நிரபேக்ஷோபாயமென்றுமாம்.*

ஈடு.—பத்தாம்பாட்டு. தான் ஶரணமென்னும் அர்த்தத்தை ப்ரதிஷ்டிக்கைக்காக அவதரித்த க்ருஷ்ணன் திருவடிகளை யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

[கண்ணனித்யாதி] - க்ருஷ்ணனையொழிய வேறுஶரணமாவாரில்லை என்னும் இவ்வர்த்தம் நிலைநிற்கைக்காக, இவ்வர்த்தத்தை ஸ்த்தாபிக்கைக்காகவும், அதுக்கு உறுப்பாக பூபாரத்தைப்போக்குகைக்காகவும் திருவவதாரம்பண்ணினான்; ஆனபின்பு, நீங்களும், உங்களுடைமையென்று நினைத்திருந்தனவுண்டாகில் கடுகஅவன்திருவடிகளிலே ஶேஷத்வேந த்ருடமாக ஸமர்ப்பியுங்கோள்! உண்டேலென்றது - ஸ்வபக்ஷத்தா

---

*பத்தாம்பாட்டு.—**கண்ணன் இத்யாதி**. "கண்ணனல்லாலில்லைகண்டீர் சரணது நிற்க வந்து-வடமதுரைப்பிறந்தான் - அவனடிசேர்த்துய்ம்மினோ" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை- **தான்சரணம்** இத்யாதி.*

*"அது" என்றதிக்குப்பொருள் - **இவ்வர்த்தம்** என்றது. "மண்ணின்பாரம் நீக்குதற்கு" என்றிருக்க, "சரணதுநிற்க" என்கிறமாத்ரத்தைச் சொல்லுவானென்னென்ன - **இவ்வர்த்தத்தை** இத்யாதி. இவ்வர்த்தத்தை ஸ்த்தாபிக்கை ப்ரதாநப்ரயோஜநம், பூபாரநிரஸநமே ததுபயுக்தமென்றபடி. "நீக்குதற்கே" என்கிற ஏவகாரம் நிரர்த்தகாவ்யயமாதல்; "அதுநிற்க" என்கிறவிடத்திலே கூட்டி, அதுநிற்கவேயென்னுதல். **திண்ணமா - த்ருடமாக**. "உண்டேல்" என்கிற யதிஶப்தார்த்தம் - **உண்டேல் இத்யாதி**. **நும்மதாதும் - உங்களுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம், அவனன்றி** -*

லில்லை; அவர்களுடைய அஜ்ஞாநத்தாலுண்டான ப்ரதிபத்தியாலேவந்தன வுண்டாகிலேன்கை. [எண்ணவேண்டா] - "இதுதான் அவனதோ, நம்மதோ" என்று விசாரிக்கவேண்டா; உங்களோடு உங்களுடைமையோடு வாசியற அவனுக்கேசேஷம். [மற்றில்லையே] - வேறில்லை. அன்றிக்கே, உங்களுடையஹரத்தில் கர்த்தவ்யாம்சமடைய உங்கள்தலையிலே கிடக்கிறதல்ல; எல்லாம் அவன்பக்கலிலே கிடக்கிறதென்னுதல். [மற்றில்லை] - ஃபலஸித்திக்கீடான ஸாதநமும் அவனை யொழியவில்லை. ஸமிதைபாதி, ஸாவித்ரிபாதியாக நீங்களும் ஒருதலை கூட்டப்படவேண்டுவதில்லை. (கo)

---

## பதினோராம் பாட்டு.

---

ஆதுமில்லைமற்றவனில் என்றதுவேதுணிந்து
தாதுசேர்தோள் [illegible]னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீதிலாதவொண்தமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும்
ஓதவல்லபிராக்கள்நம்மையாளுடையார்கள்பண்டே.

*ஆ.—(ஆதுமில்லை.) - ஆத்மாத்மீயங்களெல்லாம் அவனுக்கேசேஷமென்று துணிந்திருந்த சடகோபன், தாதுசேர்தோள்கண்ணனைச்சொன்ன, நிரவத்யமாய் கல்யாணமான இத்திருவாய்மொழியை ஓதவல்ல மஹாத்மாக்கள், நமக்குப்பண்டே ஸ்வாமிகளென்கிறார்.*

*ஒ —நிகமநத்தில் "[illegible]" என்று தொடங்கி எம்பெருமான் அருளிச்செய்தாற்போலே, இத்திருவாய்மொழி அப்யஸிக்கவல்லார் எனக்கு ப்ரியகரரென்கிறார்.*

*[ஆதுமில்லைமற்றவனிலென்றதுவே துணிந்து] - அவனையொழிய வேறு ப்ராப்யப்ராபகங்கள் இல்லையென்று அத்யவஸித்து. [தாது சேரென்று தொடங்கி] - ஆழ்வார் அருளிச்செய்த நிர்தோஷமாய் ஸஹஸ்ரஸங்க்யமான ஆயிரம் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி அப்யஸிக்க வல்லவர்கள் பண்டேநமக்குஸ்வாமிகள்.*

*ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குஃபலமாக, இதுகற்றவர்களைப் பற்றவுண்டான ஸ்வசேஷத்வத்தை யருளிச்செய்கிறார்.*

*அவனில் - அவனையொழிய, மற்று-வேறு, ஆதும் - ப்ராப்யப்ராபகமாயிருப்பதொருவஸ்துவும், இல்லை-, என்றதுவே - என்னுமதத்தையே, துணிந்து - அத்யவ*

---

*அவனுக்குசேஷமன்றி, மற்றில்லை - ஸ்வநிஷ்டமாயிருப்பதில்லை; த்விதீயார்த்தத்துக்கு, நம்மதாதும் - உங்களுடையஸர்வபரங்களும், அவனன்றி - அவன்பக்கலொழிய, மற்றில்லை - உங்களிடத்திலில்லை யென்றபடி. உபாயாந்தரங்களும் ஸாதநமாகாநிற்க, "மற்றில்லை" என்பானென்னென்ன - ஃபலஸித்திக்கு இத்யாதி. "அவனையன்றிமற்றில்லை" என்றுப், ஏவகாரார்த்தம் - ஸமிதை இத்யாதி. ஆவணியாவட்டத்துக்கு ஐந்நூறுஸமித்தும் ஐந்நூறுகாயத்ரியும் பண்ணலாகாதாற்போலே, அவனோடு நீங்களும் ஒருகூட்டுப்பட வொண்ணாதென்றபடி. கண்ணனல்லாலென்று தொடங்கி, நீங்குதற்கே - வந்து - வடமதுரைப்பிறந்தான், நம்முடைமையுண்டேல் - திண்ணமா - அவனடிசேர்த்துய்ம்மினோ; எண்ணவேண்டா இத்யாரப்யாந்வயஃ.* (க)

ஸித்து, தாதுசேர் - மாலாலங்க்ருதமான, தோள் - தோள்களையுடையனுகையாலே நிரதிசயபோக்யனுய், கண்ணனை - ஆச்ரிதஸுலபனுனக்ருஷ்ணனை, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், தீது - ஸப்தார்த்தங்களிற்குற்றம், இலாத - அற்று, ஒண் - ஸஹகுணமாய், தமிழ்கள் - த்ராமிடரூபமான, இவை ஆயிரத்துள் -, இப்பத்தும் - இப்பத்தையும், ஓதவல்ல - அப்யஸிக்கவல்ல, பிராக்கள் - உபகாரகரான வர்கள், பண்டே - இந்தஅப்யாஸார்த்தமான ஸரீரபரிக்ரஹம் பண்ணினகாலமே தொடங்கி, நம்மை - நமக்கு, ஆளுடையார்கள் - நாயகர். இது கலித்துறை. இது சீர்வகையொழித்த "கலிவிருத்தம்" என்பாருமுளர்.

இ.—நிகமத்தில் "அத்யேஷ்யதேசயஇமம்" என்று தொடங்கி அவன் அருளிச்செய்தாற்போலே இத்திருவாய்மொழியை யப்யஸிப்பார் எனக்கு ப்ரியகரரென்கிருர்.

[ஆதுமில்லை மற்றவனிலென்றதுவே துணிந்து] - அவனையொழிய வேறுப்ராப்ய ப்ராபகங்களில்லையென்று அத்யவஸித்து. [தாதுசேர்தோள் கண்ணனை] - இவர்க்குஇவ்வத்யவஸாயத்தைப் பிறப்பித்தாரரென்னில்?—தோளுந் தோள்மாலையுமான அழகைக் காட்டியாயிற்று இவர்க்குஇவ்வத்யவஸாயத்தைப் பிறப்பித்தது. [தீதிலாதவொண் தமிழ்கள்] - கூராந்தரப்ரஸ்தாவமின்றி யிருக்கையும் ஸ்வார்த்தங்களைத் தானே வெளியிடவற்ருகையும். நிர்தோஷமாய் ஸகுணமானவை யென்றுமாம். ஓதவல்லபிராக்கள் - இப்பத்தை அப்யஸிக்கவல்ல உபகாரகர். ஸம்ஸாரத்தின் தண்மையும், ஈஸ்வரனே ப்ராப்யப்ராபகங்களென்றுமிறே யிதிற் சொல்லிற்று. இத்தை அப்யஸித்துநல்வழிபோமிதுவேயிறே இவர்க்கு உபகாரகராகையாவது. [நம்மையாளுடையார்கள் பண்டே] - இத்தை அப்யஸிக்கைக்கு ஹேதுவான ஸரீரபரிக்ரஹம்பண்ணினகாலமே பிடித்து நாயகரென்கிருர்.

ஈடு.—பதினேராம் பாட்டு. நிகமத்தில், "அத்யேஷ்யதேசயஇமம்" (அத்யேஷ்யதேசயஇமம்) என்று தொடங்கி அவனருளிச்செய்தாற்போலே, இத்திருவாய்மொழி யப்யஸிப்பார் எனக்கு ப்ரியகரரேன்கிருர்.

[ஆதுமில்லைமற்றவனிலென்றதுவேதுணிந்து] – அவனையொழிய வேறுப்ராப்ய ப்ராபகங்களில்லை யென்றத்யவஸித்து. இவர்க்குஇப்படி இந்த வ்யவஸாயத்தைக் கோடுத்

---

நிகமம் - ஆதுமில்லை இத்யாதி. "ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள் பண்டே" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - அத்யேஷ்யத இத்யாதி. "அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ: । ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹமிஷ்டஸ்ஸ்யாமிதி மே மதி:" இதிகீதாஸ்லோகஷ்டாதஸே. "நம்மையாளுடையார்கள்" என்ளுநிற்க, "ப்ரியகரர்" என்பானென்னென்னில்?—அவர் ஸ்வஸ்வரூபத்துக்கீடாக அருளிச்செய்தாலும், வஸ்துஸ்திதியா ஸ்வப்ரவ்ருத்யாதிகர்த்தாக்கள் தமக்கு ப்ரியவிஷயமென்னலாயிறே யிருப்பதாகையாலே இப்படியருளிச்செய்யக் குறையில்லை யென்றுகருத்து.

"அவனில் - மற்று - ஆதுமில்லை - என்றதுவே துணிந்து" என்றந்வயிப்பது. அவனையொழிய வேறேதுமில்லையென்கிறத்தையே யத்யவஸித்தென்று ஸப்தார்த்தம். "சதுரமென்று" என்கிறபாட்டாலே, "அவனையொழிந்தவிஷயங்கள் அபோக்யங்கள்" என்கையாலே - அவனே போக்யனென்றும், "மற்றொன்றில்லை" என்கிறபாட்டிலே, உபாயஸௌகர்யத்தைச்சொல்லுகையாலே - அவனேயுபாயமென்றும் ஸித்தித்ததிறே; அத்தையுட்கொண்டு 'வேறுப்ராப்ய ப்ராபகங்க ளில்லையென்றத்யவஸித்து' என்கிருர், மேலுக்கவதாரிகை - இவர்க்கு இத்யாதி.

தார்ஆர்? என்றால்,—வேறுண்டோ? அவனுடையதோளும் தோள்மாலையுமன்றே? [தாது இத்யாதி]-அவனுடைய ஸௌந்தர்யமாயிற்று, இவரை இப்படி துணியப்பண்ணிற்று. [தீதிலாத] - கடாந்தரப்ரஸ்தாவமின்றிக்கேயிருக்கை. [ஒண்தமிழ்கள்] - உள்ளுண்டான அர்த்தத்தையடைய வெளியிட்டுக்கொடுக்கவற்றாயிருக்கை. நிர்த்தோஷமாய், ஸஹகுணமானவை யென்றுமாம். [ஓதவல்லபிராக்கள்] - இப்பத்தை யப்யஸிக்கவல்லஉபகாரகர். ஸம்ஸாரத்தின்தண்மையும், ஈஶ்வரனுடைய ப்ராப்யப்ராபகத்வமுமிறே இத்திருவாய்மொழியிற் சொல்லிற்று; இத்தை யப்யஸிக்கவே, தீயவழியைத்தவிர்ந்து நல்வழிபோகத்தொடங்குவர்கள். இதுக்குமேற்பட இவர்க்கு உபகாரமில்லையிறே இவர்கள்பண்ணுவது. [நம்மையாளுடையார்கள்பண்டே] - ஒருஜந்மத்திலே யித்தையப்யஸிக்கைக்கீடான அதிகாரத்தை யுடையராயிருப்பாராகில், அவர்கள் பண்டேநமக்கு நாதஸஹிதர். "[illegible]தே" (அத்யேஷ்யதே) என்கிறபடியே, இத்தையப்யஸிக்கைக்கீடான யோக்யதையுள்ள ஜந்மந்தொடங்கி நமக்கு நாதர். (கக)

---

*இத்தால் ஃபலிதம் - அவனுடைய இத்யாதி. ப்ரபந்தத்துக்குத் தீதேதென்ன - கதாந்தர இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, லக்ஷணஹாநியில்லாதவென்றபடி. ஒண்மை - அழகு. அழகேதென்ன - உள்ளுண்டான இத்யாதி. நிர்த்தோஷமாயென்றது - லக்ஷணஹாநியாகிற தோஷமின்றிக்கேயென்றபடி. இத்தையப்யஸித்தவர்கள் இவர்க்குச்செய்த உபகாரமேதென்ன - ஸம்ஸாரத்தின் இத்யாதி. "பண்டே" என்றதுக்கு - பூர்வஜந்மமேதொடங்கி நமக்கு நாதஸஹிதரென்று விவக்ஷித்து, அன்றே தொடங்கி இவர்கள் தமக்கு நாதஸஹிதரென்கைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - ஒரு ஜந்மத்திலே இத்யாதி. உக்தார்த்தத்தை ப்ரமாணமுகத்தாலே ஸ்திரீகரிக்கிறார் - அத்யேஷ்யத இத்யாதி. அதாவது - யஃ - ஆவயோஃ - இமம் ஸம்வாதம் - அத்யேஷ்யதே - அத்யயநம் பண்ணக்கடவனென்ற ஃபவிஷ்யதர்த்தமாகச் சொன்னாற்போலே, "பண்டே-நம்மையாளுடையார்கள்" என்றதுமென்றபடி. "பண்டே" என்றது - யோக்யதையுள்ள ஜந்மந்தொடங்கியென்றபடி. "அயீதே" என்னாதே, "[illegible]தே" என்கையாலே - யோக்யதையுள்ள வன்றேதொடங்கி எனக்கு ப்ரியகரரென்றுதோற்றுகிறது" என்றருளிச்செய்வர். ஆதுமில்லை இத்யாரப்ய, க்ரமேணாந்வயஃ. "தாது" என்று - உள்ளிதழாய் மாலையைலக்ஷித்து, மாலையோடேசேர்ந்த தோளையுடைய க்ருஷ்ணனை யென்று ஃபலிதார்த்தம். (கக)*

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

*கொண்டபெண்டிர்தாம்முதலாக்கூறுமுற்றார்கன்மத்தால்*
*அண்டினவரென்றேயவரைவிட்டு - தொண்டருடன்*
*சேர்க்குந்திருமாலைச்சேருமென்றான் ஆர்க்கும்இதம்*
*பார்க்கும்புகழ்மாறன் பண்டு.*

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்

# இரண்டாந்திருவாய்மொழி--பண்டை நாள் ப்ரவேசங்கள்.

ஆ.—(பண்டைநாளாலே) - இப்படி எம்பெருமானுடைய உறவுடைமையை யநுஸந்தித்து, "இவ்வுறவுடையனான அவனோடேகலந்து பரிமாறவேணும்" என்று மநோரதித்துக்கொண்டு திருப்புளிங்குடியிலே போய்ப்புக்கு, அவ்விடத்தில், தன் திறத்து ஸாமாந்யகடாக்ஷமல்லது வேறொரு விசேஷகடாக்ஷம் பண்ணியருளக்காணாமை யாலே சால இன்னாதாராய், "என்னை உன் அழகிய திருக்கண்களாலே நோக்கியருள வேணும்: திருவடிகளைத் தலையிலேவைத்தருளவேணும்: திருப்பள்ளியுணர்ந்து பிராட்டி யோடேகூட இருந்தருளவேணும்: எழுந்திருந்து என்னெதிரேவந்து அருளவேணும்" என்று இப்புடைகளிலே தம்முடைய மநோரதங்களை யடைய அபேக்ஷிக்கிறார்.

ஒ.—இரண்டாம் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே அவனுடைய நிருபாதிகஸம்பந்தத்தையறிவித்த ஆழ்வார் இப்படி பரமஸம்பந்தியானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே, அவனோடே யெல்லாப்பரிமாற்றமும் பரிமாறவேணு மென்று ஆசைப்பட்டுச் சென்றபடி பெறுமையாலே விஷண்ணராய்த் தம்பக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணாதிருந்ததுக்குமேலே ஒரு சேஷ்டைகள் பண்ணாதே ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளுகையாலே "திருமேனியலசுகிறது" என்று அதிசங்கிதருமாய் "என்னை உன்னழகிய திருக்கண்களாலே நோக்கியருளவேணும்: திருவடிகளைத் தலையிலே வைத்தருளவேணும்: திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடே கூட விருந்தருள வேணும்: எழுந்திருந்துஎன்னெதிரே வந்தருளவேணும்" என்று தொடங்கி தம்முடைய மநோரதங்களையடைய அபேக்ஷிக்கிறார்.

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், கீழே, நிருபாதிகபந்துவான ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபதயா ப்ராப்யதையை யருளிச்செய்து, அவன்கண்வளர்ந்தருளில் கைங்கர்யம்பண்ணுகையை மநோரதித்து, கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியானவனுடைய புண்டரீகாக்ஷத்வத்தையும், அநுரூபஸம்பந்தத்தையும், லக்ஷ்மீஸஹாயத்வத்தையும், ஊர்ஜஸ்வியாகாரத்தையையும், மந்தஸ்மிதஶோபையையும், ஆஶ்ரிதார்த்தமான வாஹநாயுதவத்தையையும், அஸாதாரண பரிகரயோகத்தையும், அகலலோக வந்த்யத்வத்தையும், அதிஶயித ஸௌகுமார்யத்தையும், ஸ்ரீபூமி ஸேவ்யத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிசிஷ்டனான நீ, உனக்கு அஸாதாரண ஶேஷபூதராய்ப்போந்த எங்களுக்கு க்ருபைபண்ணி பூர்ணகடாக்ஷம்பண்ணவும், திருவடிகளையெடுத்துத் தலையிலேவைக்கவும் அங்கீகரிக்கும்போது, பிராட்டியோடேகூட எழுந்தருளியிருந்து அங்கீகரிக்கவும், ஆஶாநுரூபமாக நடந்தெழுந்தருளிவரவும், முகமும் முறுவலுமாய்க்கொண்டு என் முன்னே நிற்கவும். நிற்கும்போது பெரியதிருவடியை மேற்கொண்டு திவ்யாயுதங்களையு மேந்திக்கொண்டு வரவும், அஸாதாரண பரிகரத்தோடேவந்து என்முன்னே எழுந்தருளிவந்திருக்கவும், ஸர்வலோகங்களுங்கண்டு வாழும்படி எழுந்தருளியிருக்கவும், இந்த ஸுகுமாரமானவடிவை நான் அநுபவிக்கும்படிபண்ணவும், நாய்ச்சிமாரை அடிமை கொண்டருளுகிறாப்போலே உன்திருவடிகளிலே யடிமைகொண்டருளவும் வேணு

மென்று, தம்முடைய மநோரதபரம்பரைகளை, திருப்புளிங்குடியிலே கிடந்தருளுகிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ப்ரார்த்தித்தருளுகிறார்.

இ.—இரண்டாம் திருவாய்மொழியில் கீழ்த்திருவாய்மொழியிலே "அல்லாதாரடங்கலும் ஸோபாதிகபந்துக்கள்: அவனே நிருபாதிகபந்து" என்கிற அர்த்தத்தை அநுஸந்தித்து அதுக்கநுகுணமான பரிமாற்றத்துக்காக, பரமபந்துவானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே அவனோடே எல்லாப்பரிமாற்றத்தையும் ஆசைப்பட்டுச் சென்றபடி பெருமையாலே விஷண்ணராய், அதுக்குமேலே ஒரு சேஷ்டைகள் பண்ணாதே ஏகரூபமாகக்கண்வளர்ந்தருளுகைபாலே திருமேனியலைகிறதென்று அத்தலையிலே நோவைக்குறித்து அதிஶங்கிகளுமாய், "என்னார்த்தியுந் தீர்க்கிறிலன், தன் ஆர்த்தியுந் தீர்க்கிறிலன்" என்று வெறுக்கிறார். ஆராவமுதில் "என்னார்த்தி தீர்க்கிறிலன்" என்று வெறுத்தார். இரண்டையுங்குறித்து வெறுக்கிறாரிதில். "கொடியார் மாடக்கோளூர்" என்றதுவே தலையெடுத்து தம்மாற்றாமையெல்லாம் தோற்றும்படி, "என்னார்த்தி தீரக்குளிர நோக்கவேணும்: அநுகூலஸம்ஶ்லேஷத்தாலே அகவாயில் ஸந்தோஷம் தோற்ற விக்ருதனாய்ப் பண்ணும் ஸ்மிதத்தை நான் காணப்பெறவேணும்; பிராட்டியும் தேவருமாயிருக்கிற இச்சேர்த்தியைக்காட்டியருளவேணும்; திருவடிகளை என்தலையிலேவைத்தருளவேணும்; நான்வந்து கிட்டின இத்தால் வந்த ப்ரீதிதோற்ற எழுந்திருந்து என்னோடேவரவேணும்" என்றுகொண்டு தம்முடைய மநோரதங்களைப்படைய அபேக்ஷிக்கிறார். ப்ராப்தியை அநுபவித்தார் கீழ்; ப்ராப்திபலத்தை அபேக்ஷிக்கிறார் இதில்.

ஈடு.—கீழ்த்திருவாய்மொழியிலே - "அவனையொழிந்தாரடங்கலும் ஸோபாதிக பந்துக்கள்: அவனொருவனுமே நிருபாதிகபந்து" என்றார்; நிருபாதிகபந்துவானால் பின்னை பந்துக்ருத்யம்பண்ணாதிருக்க வொண்ணாதிறே. இப்படி பரமபந்துவானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே எல்லாப்பரிமாற்றத்தையும் ஆசைப்பட்டு இவர்சென்று கிட்டினவிடத்தில், இவரையேன்னென்னுதல், திருக்கண்களாலேகுளிரநோக்குதல், ஒரு வார்த்தைசொல்லுதல் செய்யக்கண்டிலர்; காணாமையாலே மிகவும் அவஸந்நரானார்; அது அவனுள்ளாகத்தீருமிறே. அதுக்குமேலேயும் ஒன்றுண்டாயிற்று - "திருமேனி யலசும்படி ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளாநின்றான்: என்வருகிறதோ?" என்று ஒருபயமோடிற்று. கீழே, * ஆராவமுதிலே, "என்னார்த்தியைத்தீர்க்கிறிலன்" என்றின்னாதானார்; இங்கே "என்னார்த்தியும் தன்னார்த்தியுந் தீர்க்கிறிலன்" என்றின்னாதாகிறார். ஆக, "கொடியார் மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே" என்றஅதுவே தலையெடுத்து, பெரிய

---

பண்டைநாள் ப்ரவேஶே; வ்ருத்தாநுவாத பூர்வகமாக இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - கீழ்த்திருவாய்மொழியிலே இத்யாதி. "பண்ணாதிருக்க வொண்ணாதிறே" என்று அநந்தரம் ஆகையாலே பந்துக்ருத்யம் செய்யவேணுமென்று திருப்புளிங்குடியிலேசென்று கிட்டினார் என்றிவ்வளவுங்கூட்டிக்கொள்வது. அது - அவஸாதம். அதேதென்ன - திருமேனி இத்யாதி. "திருவுடம்பசைய" என்றத்தைப் பற்ற - அலசும்படி என்றது. "எத்தனைகாலம் கிடத்தி" என்றத்தைப்பற்ற - ஏகரூபமாக என்றது. அலசும்படி - அலைமாம்படி. * ஆராவமுதிலும் இப்படியன்றோ அபேக்ஷித்தது: இதுக்குவாசியெது? என்ன - கீழே இத்யாதி. தன்னார்த்தி தீர்க்கிறிலனென்றது அங்குமிங்கிலேயுஞ் சொல்லிற்றேயென்ன - ஆக, கொடியார் இத்யாதி. அதினுடைய அநுஹாஸணமிதுவென்றபடி. 'ஆற்றாமையோடே' என்றதுக்கு, "விண்ணைப்பம் செய்து" என்றத்தோடே யந்வயம். ""தாமரைக்கண்களால்நோக்காய்"" "பாதபங்கயமே தலைக்கணி

வாற்றுமையோடே, ''என்னுடையவார்த்தியெல்லாந்தீரும்படி திருக்கண்களாலே குளிர நோக்கியருளவேணும்; என்தலைமேலே திருவடிகளைவைத்தருளவேணும்; தேவரும் பிராட்டிமாருங்கூட எழுந்தருளியிருக்கு மிருப்பை யெனக்குக்காட்டியருளவேணும்; ஸஞ்சயன் பெற்றபேற்றில் எனக்குக்குறையவொண்ணாது''. ''*யத்ரக்ருஷ்ணௌ ச க்ருஷ்ணா ச ஸத்யபாமா ச பாமினீ*'' (யத்ரக்ருஷ்ணௌசக்ருஷ்ணாசஸத்யபாமாசபாமினீ) என்றுசொல்லுகிற படியே, அவ்விருப்பிலேயிறே யவனையழைத்துக்காட்சிகொடுத்தது. இப்படி ''ஸஞ்சயன் வந்தான்'' என்றறிவிக்க, ''நமக்குநல்லானொருவன்; உகவாதார்க்கும் இவ்விருப்பைப் போய்ச்சொல்லுவானொருவன்; அநுகூலனான இவனுக்கு விளைநீரடைத்தோமாகிறோம்: உகவாதார் மண்ணுண்ணும்படி கார்யம்பார்த்தோமாகிறோம்: புகுரவிடுங்கோள்'' என்றானிறே. *நசாபிமந்யுர்நயமௌ தம் தேசமபிஜக்மது:* (நசாபிமந்யுர்நயமௌ தம் தேசமபிஜக்மது:)-தாயுந்தமப்பனும் சேரவிருந்தவிடத்தில் ப்ரஜைகளுக்குச்சென்று கிட்டவொண்ணாமையில்லையிறே; அவர்களுக்குஞ்சென்று கிட்டவொண்ணாதபடியாயிற்றெழுந்தருளியிருக்கிறவிருப்பு; அவ்விருப்பிலேயிறே அவனையழைத்துக் காட்சி கொடுத்தது. அப்படியே ''தேவரும் பிராட்டிமாரும் எழுந்தருளியிருக்கு மிருப்பை யெனக்குக்காட்டவேணும்: என்னைக்கண்டகாட்சியிலே விக்ருதனாய் என்முன்னே நாலடியுலாவியருளவேணும்: அநுகூலதர்சநத்தால் பிறக்கும் ஸ்மிதங்காணவேணும்: ஒருவார்த்தையருளிச்செய்யவேணும்''என்று இங்ஙனே தாமும் அவனும் அறிந்ததாகத் திருவாசலைத் திருக்காப்புக்கொண்டு ஏகாந்தத்திலே தம்முடைய மநோரதங்களையெல்லாம் விண்ணப்பஞ்செய்து, ''இவற்றை இப்போதேபெறவேணும்'' என்று த்வரிக்கிறார். ப்ராப்தியை யநுபவித்தார் கீழிற்றிருவாய்மொழியிலே; ப்ராப்திபலத்தை ஆசைப்பட்டு அபேக்ஷிக்கிறார் இதில்.

---

*யாய்,'' ''உன்தாமரைமங்கையும் நீயும்'' இத்யாதியைப்பற்ற - திருக்கண்களாலே இத்யாதித்ரயமும். இப்படி யபேக்ஷிக்கைக்கு நாம்ஆருக்குக்காட்டினோமென்ன - ஸஞ்சயன் இத்யாதி. அவன்பெற்ற பேறேதென்ன - யத்ரக்ருஷ்ணௌச இத்யாதி. இதுக்கவதாரிகையாதல், ஸாவமாதல் - இப்படிஸஞ்சயன் இத்யாதி. விளைநீரடைக்கை - விளையும்படி யொருகாலே நீரைத் தேக்குகை. அப்படி யருளப்பாடிடும்படி ஒருவர்க்கும் கிட்டவொண்ணாதபடியிருக்குமோவென்ன - நசாபிமந்யு: இத்யாதி. ''யத்ரக்ருஷ்ணௌ ச க்ருஷ்ணா ச ஸத்யபாமா ச பாமினீ । [illegible]'' இத்யாதி. உத்யோகபர்வணி ஏகோநபஞ்சாசே த்ருதராஷ்ட்ரம் ப்ரதிஸஞ்ஜய:. இவ்விருப்பைக்காட்டிக்கொடுத்தானென்னுமது ஏற்றமாகைக்குஉறுப்பாக, அதொருவர்க்கும்சென்று ப்ரவேசிக்கவொண்ணாத ஏகாந்தஸ்தலமென்கிறார் - தாயும் தமப்பனும் இத்யாதிவாக்யத்வயத்தாலே. ''பவளம்போல் கனிவாய்சிவப்ப நீகாணவாராய்'' என்றத்தைப்பற்ற - என்னைக்கண்ட இத்யாதி. ''தவழ்கதிர்முறுவல்செய்து'' என்றத்தைப் பற்ற - அநுகூல இத்யாதி. ''சோதிவாய்திறந்து'' என்றத்தைப்பற்றவாதல், ''கூவுதல்வருதல்செய்யாய்'' என்றத்தைப்பற்றவாதல் - ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும் என்றது. இப்பரிமாற்றம் லோகத்தில் நடப்பதொன்றல்லாமையாலே-தாமும் அவனுமறிந்ததாக இத்யாதி அருளிச்செய்கிறார். இதுக்கு ஸூசகஸப்தம் - ''கொடுவினையேனும்'' என்ற ஏகவசநமும், இருவருமான சேர்த்தியைச்சொல்லுகிற ''தாமரைமங்கையும்நீயும்'' என்றதுவும். இத்தால்பலிதம் - ப்ராப்தியை இத்யாதி. கீழிற்றிருவாய்மொழி - நாராயணஸப்தார்த்தம்; இது சதுர்த்யர்த்தம். ஆக, * ஆராவமுதில்பிறந்த வ்யஸநமும் * அங்குமிங்கிற் சொன்ன ஆர்த்தியும் இத்திருவாய்மொழியிலே தோற்றுகிறது. கைங்கர்ய ப்ரார்த்தனையாயிருக்கையே இதுக்கு விசேஷம்.*

## முதற் பாட்டு.

பண்டைநாளாலேநின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளுங்
கொண்டுநின்கோயில்சீய்த்துப்பல்படிகாற்குடிகுடிவழிவந்தாட்செய்யும்
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்துன்றாமரைக்கண்களானோக்காய்
தெண்டிரைப்பொருநற்றண்பணைசூழ்ந்ததிருப்புளிங்குடிக்கிடந்தானே!

**ஆ.**—பிராட்டி பரிக்ரஹமானதையாலே பண்டை உன்னாலே விஷயீக்ருதராய் ஸர்வவித கைங்கர்ய நிரதருமாய் எங்குங்குடியாக அடிமைசெய்துவர்த்திக்கிற அடியோங்களுக்கருளி, சோதிவாய்திறந்து உன்தாமரைக்கண்களால் நோக்காய்; தெளிந்த திரையையுடைய திருப்பொருநலோடு கூடின அழகிய நீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலே வந்து கண்வளர்ந்தருளினவனே என்று ப்ரார்த்திக்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், அநந்யகதிகளான அடியோங்களைக் குறித்து ஒரு வார்த்தையருளிச்செய்து, விடாய்கெடும்படி திருக்கண்களாலே நோக்கியருளவேணு மென்கிறார்.

[பண்டைநாளென்று தொடங்கி] - பழையதாகவே உன்னுடைய கடாக்ஷத்தையும் அதுக்கு அடியான பெரிய பிராட்டியாருடைய கடாக்ஷத்தையும் பெற்று குடி முறையே ஶாஸ்த்ரசோதிதமானவழி தப்பாதே கோயில்களிலே அஸாதாரண பரிசர்யாரூபமான அடிமைசெய்கிற அடியோங்களுக்கு க்ருபைபண்ணி. [தெண்திரையென்று மேலுக்கு] — தெளிந்த திரையையுடைய திருப்பொருநலோடு கூடின அழகிய நீர் நிலம் சூழ்ந்த திருப்புளிங்குடியிலே வந்து ஸந்நிஹிதனாய்க் கண்வளர்ந்தருளினவனே!

**ப.**—முதற்பாட்டில், குலக்ரமாகதமாக கைங்கர்யம்பண்ணிப்போந்த அடியோங்களுக்கிரங்கி, திருப்பவளத்தைத் திறந்து ஸாந்த்வவாதத்தை யருளிச்செய்து, அழகிய திருக்கண்களாலே பார்த்தருளவேணுமென்கிறார்.

தெண் - தெளிந்த, திரை - திரையையுடைத்தான, பொருநல் - திருப்பொருநலையுடைத்தாய், தண் - குளிர்ந்த, பணை - நீர்நிலங்களாலும், சூழ்ந்த - சூழ்ந்த, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தானே - கண்வளர்ந்தருளுகிறவனே! நின் - (நிருபாதிகபந்துவான) உன், திருவருளும் - திருவருளையும், பங்கயத் தாள் - (உன்னை யருளுவிக்கக்கடவளான) பங்கயத்தாள், திருவருளும் - திருவருளையும், ("ஜாயமாநம் ஹி புருஷம்" என்கிறபடியே), பண்டைநாளாலே - உத்பத்தி காலமே பிடித்து, கொண்டு - (உடையோமாய்க்) கொண்டு, நின் - நீ புகுந்தருளின, கோயில் - திவ்யதேசத்திலே, சீய்த்து - உசித கிஞ்சித்காரத்தைப்பண்ணி, பல்படிகால்- பல்படிகாலுண்டாம்படி, குடிகுடிவழி- குலக்ரமத்திலே (அப்படிகாலந்தோறும்புத்ரபௌத்ராதிஸஹிதராய்க்கொண்டு ஶாஸ்த்ரோக்தமார்க்கத்தைத் தப்பாதபடி), வரக்கடவராய், — வந்து ஆட்செய்யும் - வந்தடிமைசெய்து போருகிற, தொண்டரோர்க்கு - மோக்ஷபூதரானவெங்களுக்கு, அருளி - நிரவதிகக்ருபையைப்பண்ணி, சோதி - உஜ்ஜ்வலமான, வாய் - திருப்பவளத்தை, திறந்து -, (ஸாந்த்வவாதம்பண்ணி), உன் - உனக்கஸாதாரணமான, தாமரை - தாமரைபோலேவிகஸிக்கிற, கண்களால் - திருக்கண்களாலே, நோக்காய் - பூர்ணமாகப்பார்த்தருளவேணும்.

இ—முதற்பாட்டில், அநந்யகதிகளான அடியோங்களைக் குறித்து ஒரு வார்த்தையருளிச்செய்து, விடாய் கெடும்படி குளிர நோக்கியருளவேணு மென்கிறார்.

[பண்டைநாளாலே நின்திருவருளும்] - நெடுநாள் கூடவே பண்ணிப் போந்த கடாக்ஷத்தையும்; எதிர்சூழல்புக்கு நெடுநாள் பட்டக்லேஶத்தின் பலமன்றோவிது? நெடுநாள் க்ருஷிபண்ணி பலவேளையிலேகைவிடவோ? [பங்கயத்தாள் திருவருளும்] - அதுக்கடியாக பெரிய பிராட்டி பார்கடாக்ஷத்தையுங் கொண்டு; அவனுடைய அருளின் ஸ்வாதந்த்ர்யமூர்த்தத்தைத் தவிர்க்குமருள். ப்ரணயித்வத்தால்வந்தபாரதந்த்ர்யமிறே ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்ப்பது? "என்னடியாரது செய்யார்" என்னும் உன்கடாக்ஷமும், "நஸ்ரீ ஞாவராயதி" என்னுமவள் கடாக்ஷத்தையும் பெற்று. "க்ருபயா பர்யபாலயத்" என்று க்ருபாபரதந்த்ரனான உன்கடாக்ஷமும் அந்தபாரதந்த்ர்யத்துக்கடியான அவள் கடாக்ஷமுமென்றுமாம். [நின்கோயில் சீய்த்து] - உகந்தருளின நிலங்களிலே அஸாதாரணபரிசர்யைபண்ணி தேஹாத்மாபிமாநிகள் தந்தாமுடையக்ருஹங்களைப்பேணுவர்கள், பிராட்டியடியாக ஸ்வத்வப்ரஸாதம் பெற்றவர்கள் உகந்தருளின தேஶங்களைப் பேணுவர்கள். [பல்படிகால்] - இன்று புதிதாய் வந்ததோ, நீ விஶேஷகடாக்ஷம் பண்ணத்தொடங்கினவன்று தொடங்கி வந்த தன்றோ? என்கை. [குடிகுடி] - ஸபரிகரமாக. [வழிவந்து] - ஶாஸ்த்ரங்களில் சொல்லுகிறமுறை தப்பாதபடி வந்து ஆட்செய்யும். [தொண்டரோர்க்கருளி] - அடிமைசெய்கிற அடியோங்கள் பக்கலிலே க்ருபைபண்ணி. [சோதிவாய் திறந்து] - பூவலருமாபோலேயாயிற்று, வாய் திறந்து வார்த்தையருளிச் செய்யும்போது திருமுகத்திற்பிறக்கும் செவ்வி. "ஸ்மிதபூர்வாபிபாஷீ" என்று வார்த்தையளவிலேயாயிற்று அக்ரூரன் அநுபவித்தது. தத்காலத்தில் திருமுகத்தில் செவ்வியுமத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [தாமரைக்கண்களால் நோக்காய்] - வார்த்தையில் தோற்றாதவைந்தமும் நோக்கிலேயநுபவிக்கும்படி குளிரநோக்கியருளவேணும். "அவலோகநதாநேந பூயோமாம் பாலய". [தெண்டிரையித்பாழி] - தெளிந்த திரையையுடைய திருப்பொருநலோடே சேர்ந்த அழகிய நீர்நிலஞ்சூழப்பட்ட திருப்புளிங்குடியிலேவந்து கண்வளர்ந்தருளுகிறவனே! தேவர்ஸௌகுமார்யத்துக்குச் சேரும் ஜலஸம்ருத்தியையுடைத்தான தேஶத்திலே கண்வளர்ந்தருளின வம்ஶமுண்டு. இதின் கார்யம்பெறவேணு மென்கிறார். செய்தவம்ஶத்தில் க்ருதஜ்ஞராக வொண்ணாதே.

ஈடு—முதற்பாட்டு. அநந்யகதிகளான அடியோங்களைக்குறித்து ஒரு வார்த்தை யருளிச்செய்து விடாய்கெடும்படி குளிர நோக்கியருளவேணு மென்கிறார்.

[பண்டைநாளாலே நின்திருவருளும்] - நெடுநாள்கூடப்பண்ணிப்போந்தஉன் கடாக்ஷத்தையும். நீ நேற்றுஇன்று பண்ணிப்போந்த க்ருஷியின்ஃபலமோ இது? * எதிர் சூழல்புக்கு நெடுநாள்பட்ட க்லேஶத்தின் ஃபலமன்றோ இது? நெடுநாள் க்ருஷியைப் பண்ணி ஃபலவேளையில்கைவிடவோ? [பங்கயத்தாள் திருவருளும்] - அதுக்கடியான

---

முதற்பாட்டு.—பண்டைநாள் இத்யாதி. "குடிகுடிவழிவந்தாட்செய்யும்தொண்டரோர்க்கு-சோதிவாய்திறந்துஉன் தாமரைக்கண்களால்நோக்காய்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை அநந்யகதிகளான இத்யாதி.

ஶப்தார்த்தம் - நெடுநாள் இத்யாதி. முன்பேதொடங்கி உண்டான உன்திருவருளு மென்று ஶப்தார்த்தம். "அருள்" என்று - தத்கார்யமான கடாக்ஷத்தை லக்ஷிக்கிறது. ஃபலிதம் - நீ நேற்றின்று இத்யாதி. இது - தாம் பண்ணுகிற கைங்கர்யம். ஆனாலென்? என்ன - நெடுநாள் இத்யாதி. அதுக்கடியான - அவனருளுக்கடியான. இவளுடையவருள் அவன்கடாக்ஷத்துக்கு அடியாகை

பெரிய பிராட்டியார் கடாக்ஷத்தையுங்கொண்டு. அவனுடைய அருளின் ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்க்கும் அருள். ப்ரணயித்வத்தால்வந்த பாரதந்த்ர்யமிறே ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்ப்பது. "என்னடியார் அதுசெய்யார்" என்னும் உன்கடாக்ஷமும் "நகஸ்சிந்நாபராத்யதி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்னும் அவள்கடாக்ஷத்தையும் பெற்று. "க்ருபயாபர்யபாலயத்" (க்ருபயாபர்யபாலயத்) என்று, க்ருபாபரதந்த்ரனை உன்னுடைய கடாக்ஷமும், அப்பாரதந்த்ர்யத்துக்கடியான அவள் கடாக்ஷமும் என்றுமாம். [பங்கயத்தாள் திருவருளும்] - உன்னருளின் ஸ்வாதந்த்ர்யமுண்டாகத்தைத் தவிர்க்குமவள்அருளும்படியாக வன்றோ வந்தது. அவளருள் அவன்ஸ்வாதந்த்ர்யத்தைப் பின் செல்லாதபடி பண்ணுமாயிற்று. "அவனுடைய பாரதந்த்ர்யம் ப்ரணயித்வமன்றோ? நிலை நிற்குமோ? ஸ்வாதந்த்ர்யமேயன்றோ ப்ரக்ருதி?" என்று அஞ்சவேண்டா; அவளருகேயிருக்க ஸ்வாதந்த்ர்யம் ஜீவியாது. ஆகையிறே, முற்கூற்றில் அவள் புருஷகாரமாகப் பற்றுகிறது. [நின்கோயில் சீய்த்து] - உகந்தருளினநிலங்களிலே, அஸாதாரணபரிசர்யை பண்ணி. தந்தாமுடைய ஸுக்ருதத்தாலே ஸர்வதநுக்ரஹ முடையரானவர்கள், தந்தாம் க்ருஹங்களைப் பேணுவர்கள்; பிராட்டி புருஷகாரமாக ஸர்வத்ப்ரஸாதம்பெற்றவர்கள், உகந்தருளின நிலங்களைப் பேணுநிற்பர்கள். "நகிஞ்சிதபி குர்வாணோ விஷ்ணோராயதநேவஸேத்" (நகிஞ்சிதபிகுர்வாணோ விஷ்ணோராயதநேவஸேத்) - ஒருதுரும்பு நறுக்கேன் என்னுமவர்களுக்கும், உகந்தருளின நிலத்தைப் பற்றிக்கிடக்கவேணும். ஶரீர ஸம்பந்தமற்றால் பெறவேணுமென்று ஆசைப்படுகிற அடிமையை, இச்ஶரீரத்தோடே கிடைக்குமாகில் விடானிறே. "வயலணியனந்தபுரங் கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினை களையலாமே-" ப்ராப்யத்தை லக்ஷிக்கவே, ப்ராப்ய விரோதிகளைப் போக்கலாமா

---

யாவதென் ? என்ன - அவனுடைய இத்யாதி. ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்க்கும் வழியேதென்ன - ப்ரணயித்வத்தால் இத்யாதி. இசலி க்ருபைபண்ணுவர்களென்று இதில் பதத்வயத்துக்கு ஸாரார்த்தம் - என்னடியார் இத்யாதி. கொண்டு - பெற்றென்றபடி. முன்கின தாத்பர்ய விவரணம் - க்ருபயா இத்யாதி. "வ்யாஹ்ருதேஷிகாகுத்ஸ்த: க்ருபயாபர்யபாலயத்". "அவனுடைய அருளின் ஸ்வாதந்த்ர்யத்தை" இத்யாதி வாக்யவிவரணம் - உன்னருளின் இத்யாதி. ஏதத்விவரணமாதல், "ப்ரணயித்வத்தால்வந்த" இத்யாதிவாக்ய விவரணமாதல் - அவளருள் இத்யாதி. ப்ரணயித்வ கார்யமான பாரதந்த்ர்யம் ஔபாதிகமன்றோ? ஸ்வாதந்த்ர்யமேயன்றோ நிலைநிற்பதென்ன அருளிச்செய்கிறார் - அவனுடைய இத்யாதி. ப்ரணயித்வமன்றோவென்றது - ப்ரணயித்வஹேதுகமன்றோ என்றபடி. 'ப்ரணயித்வகார்யமான பாரதந்த்ர்யம் ஔபாதிகமன்றோ? ஸ்வாதந்த்ர்யமேயன்றோ நிலை நிற்பது?' என்றஞ்சவேண்டாவென்றபடி. அதாவது - ப்ரணயித்வம் நித்யமாகையாலே தத்கார்யமான பாரதந்த்ர்யமும் நித்யமென்றபடி. கைங்கர்யங்களெல்லாமிருக்க, திருவலகிடுகிறத்தை விசேஷிக்கையாலே, எல்லாக்கைங்கர்யங்களிலும் முக்யம்இதுவேயென்கிறார் - உகந்தருளின இத்யாதி. அல்லாதார் ஸ்வஸ்வக்ருஹங்களைப் பேணநிற்க, இவர்களுகந்தருளின நிலங்களைப் பேணுவானென்னென்ன - தந்தாமுடைய இத்யாதி. ஸ்வயத்நாநிவ்ருத்தனானவனுக்கு இவற்றைப் பேணவேண்டுவானென் ? என்ன ; வேணுமென்னுமதுக்கு ப்ரமாணம் - நகிஞ்சிதபி இத்யாதி. "நகிஞ்சிதபிகுர்வாணோ விஷ்ணோராயதநே வஸேத் । விஷ்ணுவேஶ்மஸ்திதஸ்யாஸ்ய க்ருதக்ருத்யத்வம் ஸுநிஶ்சிதம்" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே ஶௌநக: இந்த ப்ரமாணத்துக்கர்த்தம் - ஒருதுரும்பு இத்யாதி. ஆனலடிமை லபித்திப்பது சுந்தல்கழிந்தவிடத்தேயன்றோவென்ன - ஶரீரஸம்பந்தம் இத்யாதி. அப்படி இச்ஶரீரத்தோடே கைங்கர்யம் ப்ரார்த்யமாமோவென்ன - வயலணி இத்யாதி. இதில், கடைத்தலை சீய்க்கை விரோதிநிவ்ருத்திக்கு ஸாதநமாகத் தோற்றுகிறதே யென்ன - ப்ராப்யத்தை இத்யாதி. விரோதிநிவ்

யிற்று. திருக்கண்ணமங்கையாண்டான், அங்கே ஒரு திருமகிழடியிலேயிருந்து, சருகைத் திருவலகிடாநிற்க, கூடவாசித்து நாஸ்திகனாயிருப்பானொருவன், "ஹரு வான் உபாயம், நாம் அநந்யப்ரயோஜநர், இப்போது இந்த க்லேசத்துக்கு ஃபலமேன்?" என்ன, திருவலகிட்ட இடத்தையும் இடாதவிடத்தையும்காட்டி, "இவ்விடமும் அவ்விடமுமிருந்தபடி கண்டாய்க்கு, ஒருஃபலமில்லை' என்று தோற்றியிருந்ததோ?" என்றான். [பல்படிகால்] - இதுதான் இன்றுதோடங்கி வந்ததோன்றோ? நீ கடாக்ஷிக்கப் புக்க அன்று தோடங்கி வந்ததன்றோ? [குடிகுடி] - ஸபரிகரமாக. [வழிவந்து] - ஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிற முறை தப்பாதபடி வந்து. [ஆட்செய்யும்தொண்டரோர்க்கருளி] - அடிமை செய்கிற அடியோங்கள்பக்கலிலே க்ருபைபண்ணி. [சோதிவாய்திறந்து] - பூ அலருமா போலேயாயிற்று, வாய்திறந்து வார்த்தையருளிச் செய்யும்போது திருமுகத்தில் பிறக்கும் சேவ்வி. "ஊமக்ரூரேதிவக்ஷ்யதி" (மாமக்ரூரேதிவக்ஷ்யதி) என்று வார்த்தையளவிலேயாயிற்று, அக்ரூரன் அநுஹவித்தது. தத்காலத்தில் திருமுகத்தில் சேவ்வியும் உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [உன்தாமரைக்கண்களால் நோக்காய்] - வார்த்தையில் தோற்றாத ஹம்ஸமும் நோக்கிலே யநுஹவிக்கும்படி குளிரநோக்கியருளவேணும்; "அவலோகநதாநேந பூயோமாம்பாலயாவ்யய" (அவலோகநதாநேந்பூயோ மாம்பாலயாவ்யய) என்னுமாபோலே. வார்த்தையருளிச்செய்யப்புக்கு விக்கினால் குறையுந் திருக்கண்களாலே தலைக்கட்டியருளவேணும். பிள்ளை தேவப்பெருமாளரையர், "உன்தாமரைக்கண்களால்நோக்காய், நோக்காய்" என்று பலகாலுஞ்சொல்ல, ஆழ்வாரேழுந்திருந்து "பிள்ளாய்! நீ இங்ஙனே திருவுள்ளம் புண்படும்படி பலகாலும் நிர்ப்பந்திக்கிறதேன்? அழகிய மிடற்றைத் தந்தாராகில், நல்லபாட்டைத்தந்தாராகில், பிள்ளைகளையும் ஐஶ்வர்யத்தையும் தந்தாராகில் என் செய்யாதாராக நீர் இங்ஙனேகிடந்து படுகிறது?" என்றருளிச்செய்தாராம். [தெண்திரையித்யாதி] - திருமேனியில் ஸௌகுமார்யத்துக்கு அநுரூபமான ஜலஸம்ருத்தியையுடைத்தான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளப்

---

ருத்தி ஆநுஷங்கிக ஃபலமென்றபடி. அநந்யஸாதநனுக்கு, உகந்தருளின நிலங்களில் பரிசர்யை உபாயத்திலந்வயியாது, ஸ்வயம் ப்ரயோஜநமாயிருக்குமென்கைக்கு ஸம்வாதம் - திருக்கண்ணமங்கை இத்யாதி. நாஸ்திகன் - ப்ராப்யஸ்வரூபமறியாதவன். கண்டாய்க்கு - கண்ட உனக்கு. பல்படிகால் - பலஸந்தாநமாக; ஸந்தாநபரம்பரையாகவென்றபடி. ஒருவனிடத்திலே அநுக்ரஹமுண்டானால், அவன் மாத்ரம் செய்யுமதொழிய எல்லார்க்கும் செய்யவேணுமோவென்ன - இதுதான் இத்யாதி. "சோதிவாய்" என்றதுக்கு ஹாவம் - பூவலருமாபோலே இத்யாதி. அவன் வார்த்தை யுத்தேஶ்யமானால், வாய்திறந்தென்றதே, "சோதிவாய்திறந்து" என்று விசேஷிப்பானென்னென்ன - மாமக்ரூரேதி இத்யாதி. "யாநஹ: ப்ரஶ்யிவீநதெஷவாஷிதிஸம்ஷிதாழ்' வொவதீணெருஜஹதஂயெரு ஊமக்ரூரேதிவக்ஷ்யதி" இதி பஞ்சமேம்ஶே ஸப்தஃஶே அக்ரூர:. நோக்காய் - நோக்கவேணும். "சோதிவாய்திறந்து" என்றத்தோடே, "உன்தாமரைக்கண்களால்நோக்காய்" என்றத்தையுங்கூட்டி ஹாவம்-வார்த்தையில் இத்யாதி. அப்படி நோக்கவேணுமென்று ப்ரார்த்தித்தபேருண்டோவென்ன - அவலோகந இத்யாதி. "ஜவஹ்வஹாதிஹரஹ்வஸாஃஂகஷாஷெஸவ! அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய" இதி ப்ரதமேம்ஶே ப்ரஹ்லாத:. "வார்த்தையில் தோற்றாத" இத்யாதி வாக்யத்வயவிவரணம் - வார்த்தையருளிச்செய்ய இத்யாதி. ப்ராஸங்கிகம் - பிள்ளைதேவப்பெருமாள் இத்யாதி. ஆழ்வாரென்றது - ஆழ்வான் திருத்தமப்பனான ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரென்றபடி. "தெண்திரை" இத்யாதி வர்ணநத்துக்கு ஹாவம் -

பெற்றது. தெளிந்த திரைகளை யுடைய திருப்பொருநலோடே சேர்ந்து அழகிய நீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினமையுண்டு; இது - செய்தவம்மாம். [உன் தாமரைக்கண்களால் நோக்காய்] - செய்தவம்சத்துக்கு க்ருதஜ்ஞதைகவும், செய்யவேண்டும் அம்சத்துக்கு ப்ரார்த்திக்கவும் வேணுமிறே அதிகாரிக்கு. (க)

—————

## இரண்டாம் பாட்டு.

—————

குடிக்கிடந்தாக்கஞ்செய்துநின்றீர்த்தவடிமைக்குற்றேவல்செய்து உன்பொன்னடிக்கடவாதேவழிவருகின்றஅடியரோர்க்கருளி நீயொருநாள், படிக்களவாகநிமிர்த்தநின்பாதபங்கயமேதலைக்கணியாய், கொடிக்கொள் பொன்மதிள்சூழ்குளிர்வயற்சோலைத்திருப்புளிங்குடிக்கிடந்தானே.

ஆ.—(குடிக்கிடந்த.)—த்வத் ஸம்ருத்த்யேகப்ரயோஜநராய்க் கொண்டு உனக்கு அந்தரங்கமான அடிமை செய்து உன் திருவடிகளல்லதறியாதே பரம்பரயா வர்த்திக்கிற அடியோமுக்கு க்ருபைபண்ணி, ஸர்வாத்மாக்களுக்கும் ஸாலப்யமான நின்பாத பங்கயமே ஒருநாள் தலைக்கணியாய்; கொடிக்கொள் பொன்மதிள்சூழ் குளிர்வயல் சோலைத் திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினவனே யென்கிறார்.

ஒ—இரண்டாம்பாட்டில், ஸர்வஸாலப்யமான உன்திருவடிகளை என்தலைமேலே வைத்தருளவேணு மென்கிறார்.

[குடிக்கிடந் தாக்கஞ்செய்து]- குடிக்கிடாகவர்த்தித்துப் பண்டில்லாத நன்மைகளையுமுண்டாக்கித் தன்னுடையரஸ்யதையாலே இதர புருஷார்த்தங்களில் நசையறுக்கவல்ல அடிமைகளில் ஆந்தரங்கமான அடிமைகளைப்பண்ணி உன் திருவடிக ளல்லதறியாதே பரம்பரையாய் வருகிற அடியோமுக்கு க்ருபைபண்ணி. படிக்களவாக - பூமிக்கு அளவாக.

ப.—அநந்தரம், ஆச்ரய விஷயாநுரூப ஸம்பந்தத்தையுடைய உன்திருவடிகளை என்தலையிலே வைக்கவேணு மென்கிறார்.

கொடிக்கொள் - கொடிகளாலே யலங்க்ருதமாய், பொன் - கநகமயமான, மதிள் - மதிளாலே, சூழ் - சூழப்பட்டு, குளிர் - குளிர்ந்த, வயல் - வயலையும், சோலை - சோலையையுமுடைத்தான, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தானே - (ஆஸ்ரிதாநுஸவார்த்தமாகக்) கண்வளர்ந்தருளுகிறவனே! குடிக்கிடந்து - மோக்ஷத்வகுலம் தப்பாதபடிநின்று, ஆக்கம்செய்து - அந்த மோக்ஷத்வம் அபிவ்ருத்தமாம்படியான மோக்ஷ வ்ருத்தியிலே உத்யுக்தராய், நீர்த்த - இதரஸங்கநிவர்த்தகமான, நின் - உன் விஷயமான, அடிமை - அடிமைகளிலே, குற்றேவல் - அந்தரங்கமான வ்ருத்திவிமோக்ஷந்

---

திருமேனியில் இத்யாதி, சப்தார்த்தசுநமுகேசு உக்தார்த்த விவரணம் - தெளிந்த இத்யாதி தமக்காகத் திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனாயிருக்க, 'நோக்காய்'' என்று ப்ரார்த்திக்க வேணுமோ வென்ன - செய்தவம்சத்துக்கு இத்யாதி. தெண்திரையென்று தொடங்கி, கிடந்தானே - பண்டைநாளாலே யென்றுதொடங்கி, கண்களால் நோக்கா யித்யந்தயா:. சீய்ச்சை - திருவலகிடுகை. இது - அஸாதாரணமான அடிமைக்கெல்லாம் உடலக்ஷணம். (க)

களை, செய்து - அநுஷ்டித்து, உன் - உன்னுடைய, பொன் - ஸ்ப்ருஹணீயமான, அடிக்கடவாதே - திருவடிகளையொழிய, (அநுஷங்கஜநிதமாய் அபர்யவஸாந லப்யமான ஸ்வாநந்தத்திலும் தாத்பர்யம் பண்ணாதே), வழி - பாரம்பர்யமார்க்கம், வருகின்ற - தப்பாதபடிவருகிற, அடியோர்க்கு - ஶேஷபூதரானவெங்களுக்கு, அருளி -, நீ - (நிருபாதிக பந்துவான) நீ, ஒருநாள் - (ஆஶ்ரிதபராபிமாநம் வந்தது) ஒருநாளிலே, படிக்கு - அதுக்கு, அளவாக - அநுரூபமாக, நிமிர்த்த - நிமிர்த்தளந்து கொண்ட, நின் - உன், பாத பங்கயம் - நிரதிஶயபோக்யமான திருவடித் தாமரையை, தலைக்கு - என்தலைக்கு, அணியாய் - அநுரூபமான அலங்காரமாம்படி பண்ணியருளவேணும்.

இ.—இரண்டாம்பாட்டில், ஸர்வஸுலபமான திருவடிகளை என்தலையிலே வைத்தருளவேணுமென்கிறார்.

[குடிக்கிடந்து] - குடிக்கீடாகவர்த்தித்து; குலமர்யாதை தப்பாதேவர்த்திக்கை. "இக்ஷ்வாகுவம்ஶ்யரில், கநிஷ்டர் முடிசூடியறிவாரில்லை" என்றாநிறே ஸ்ரீபரதாழ்வான். [ஆக்கஞ்செய்து] - குடிப்பிறப்பண்டில்லாத நன்மைகளை யுண்டாக்கி: "உத்க்ஷிப்ய ஹஸ்தாந் ஜடிலஃ" என்கிறபடியே, ஜடாவல்கலமும் கண்ணுங்கண்ணீருமாயிருக்கை. [நின்திருத்த வடிமைக் குற்றேவல்செய்து] - தன்னுடைய ரஸ்யதையாலே இதர புருஷார்த்தங்களில் நசையறுக்கவல்ல அடிமைகளில் அந்தரங்கமான வடிமைகளைச்செய்து. [உன்பொனடிக் கடவாதே] - உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையல்லதறியாதே யென்னுதல், உன்திருவடிகளைத் தப்பாதேயென்னுதல். அல்லதறியாமையாவது - அநந்யப்ரயோஜநனாகை: தப்பாதொழிகையாவது - ஆஜ்ஞையை அதிலங்கியாதொழிகை; "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய" என்றிருக்கையும், பெருமாளை மீட்கைக்குச்சென்று திருவடிகளிலே விழ "பித்ருவசநத்தை யநுஷ்டித்தோமான நிறம் நமக்குண்டாவது, நீ ராஜ்யத்திலே யிருக்கிற்காண்" என்ன "ஶிரஸா ஹரயம் ஹ்ருஷ்டஃ" என்று மீளுகையும். [வழிவருகின்ற] - பரம்பரையாய் வருகிற என்னுதல்; அடிமைசெய்யும் முறைமையிலொன்றுந் தப்பாதபடி போருகிற என்னுதல். [அடியோர்க்கருளி] - அநந்யகதியாயிருக்கிற எங்கள் பக்கலிலே க்ருபைபண்ணி. [நீயொருநாள்] - ஶேஷியான நீ முறைகலங்கின நாளிலே. [படிக்களவாக நிமிர்த்த] - பூமிக்களவாக நிமிர்த்த. ஸம்யக்ரூபமான திருவடிகளை நிமிர்த்த ஆஶ்சர்யத்தோபாதி போருமாயிற்று; பூமியளவிலே குசைதாங்கினபடி. [நின்பாத பங்கயமே தலைக்கணியாய்] - ஸர்வஸுலபமான உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளை என்தலைக்கு ஆபரணமாம்படி பண்ணியருளவேணும். குணாகுணநிரூபணம் பண்ணாதே யெல்லார்தலைகளிலும் வைத்த திருவடிகளை, அநந்யப்ரயோஜநனான நான் இழக்கவோ? ருசியில்லாதார் தலையிலே வைத்த திருவடிகளை ருசியுடைய என்தலையில் வைக்கலாகாதோ? பூமிக்களவாக்கின திருவடிகளை என்தலைக்களவாக்கலாகாதோ? "கோலமாமென் சென்னிக்கு" என்றிருக்கிற என்தலையில் வைக்கலாகாதோ? இந்தஶீலம் காணாச் சித்தமாயழகிறேனோ? [கொடுக்கொள இதயாய்] - ஸாபேக்ஷமாய ப்ரமஹராமான க்ஷேத்ரத்திலே கண்வளர்ந்தருளப்பெற்றது, "என்வருகிறதோ" என்கிற பயந்தீர; என்னை விஷயீகரிக்கும் இதுவ்வழுறை என்கை. 'ஸா ராஜஸிம்ஹஸ்த்வ வீதஶோகா" என்று ராமஸந்தர்ஶனத்தாற்பிறந்த அதிஶங்கைபோய், "ராஜஸ்யம் ஶோகேந ஸமந ஶோகா" என்று விரஹத்தாலேவந்த ஶோகமே பிராட்டிக்குண்டானாற்போலே.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஸர்வஸாலபமான உன்திருவடிகளை என்தலையில் வைத்தருளவேணு மென்கிறார்.

[குடிக்கிடந்து] - குடிக்கீடாக வர்த்தித்து. குலமர்யாதை தப்பாதபடி வர்த்திக்கை. "இக்ஷ்வாகுவம்ஶ்யரில், தமையனிருக்கத் தம்பிமாரில் முடிசூடியறிவாரில்லை" என்றாணிறே ஸ்ரீபரதாழ்வான். [ஆக்கஞ்செய்து] - குடியில் பண்டில்லாத நன்மைகளையுண்டாக்கி; "பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ்த்வாம் ப்ரதீக்ஷதே | பாதுகே தே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்ச குஶலம் க்ருஹே" (பங்கதிக்தஸ்துஜடிலோபரதஸ்த்வாம் ப்ரதீக்ஷதே - பாதுகேதேபுரஸ்க்ருத்ய ஸர்வஞ்சகுஶலம்க்ருஹே) என்றும், "ஜடிலஞ்சீரவஸநம்" (ஜடிலம்சீரவஸநம்) என்றும், "நஹி தே ராஜபுத்ரந்தம் காஷாயாம்பரதாரிணம் | பரிபோக்தும் வ்யவஸ்யந்தி பௌரா வை தர்மவத்ஸலம்" (நஹிதேராஜபுத்ரந்தம் காஷாயாம்பரதாரிணம் - பரிபோக்தும் வ்யவஸ்யந்தி பௌராவை தர்மவத்ஸலம்)-அருகேயிருக்கச்செய்தேயும் இவனைச் சூழவிருக்கிற பௌரரானவர்கள் இவனை யநுபவிக்கையில் நசையற்றார்கள். அதுக்கடியேன் என்னில்?- "ராஜபுத்ரம்" (ராஜபுத்ரம்) - பெருமாள் பேரநின்றவநந்தரம் முடிந்தவன்மகனன்றோ? இவனோ தான் நமக்குத் தோங்கப்புகுகிறான்?" என்றிருந்தார்கள். "தர்மவத்ஸலம்" (தர்மவத்ஸலம்,-இதுக்கும் அவனோடொக்கும்; தர்மத்துக்காகத் தன்னை யழியமாறினானிறே யவன். "ஏபிஶ்ச ஸசிவைஸ் ஸார்த்தம்" (ஏபிஶ்சஸசிவைஸ்ஸார்த்தம்) - தானொருவனுமே போகவமைந்திருக்க, ஆர்த்தர்பலரையுங் கொண்டுபோனான்; அதுக்கடி - "நாமொருவருமேயன்றிக்கே, பலர் கண்ணநீர்கண்டால் மீளாரோ?" என்னுமத்தைப்பற்ற. வினைசெய்

---

இரண்டாம்பாட்டு.—குடிக்கிடந்து இத்யாதி. "படிக்களவாக நிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஸர்வஸாலப இத்யாதி.

குலமர்யாதை தப்பாதபடி வர்த்திக்கையாவது அவனுக்கு ஶேஷபூதமான ஸ்வரூபத்துக்கநுகுணமாக, ரக்ஷித்தாலும் ரக்ஷியாவிட்டாலும் அவன்கை பார்த்திருக்கை. இப்படி வர்த்தித்த பேருண்டோ? என்ன - இக்ஷ்வாகு இத்யாதி. ஆக்கம் - நன்மை; அதிஶயமாகவுமாம். பண்டில்லாத நன்மைகளாவன - ப்ரேமபாரவஶ்யத்தால் வந்த விக்ருதிகள். இப்படி நன்மையுண்டாக்கின பேருண்டோ? என்ன, த்ருஷ்டாந்தம் - பங்கதிக்தஸ்து இத்யாதி. "பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ்த்வாம் ப்ரதீக்ஷதே | பாதுகே தே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்ச குஶலம் க்ருஹே" இதி யுத்தகாண்டே ப்ரதிப்ரயாணே ராமம்ப்ரதி பரத்வாஜவாக்யம். "ஜடிலஞ்சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம் புவி | ததர்ஶ ராமோ துர்தர்ஶம் யுகாந்தே பாஸ்கரம் யதா" இத்யயோத்யாகாண்டே சித்ரகூடே. "நஹி தே ராஜபுத்ரந்தம் காஷாயாம்பரதாரிணம் | பரிபோக்தும் வ்யவஸ்யந்தி பௌரா வை தர்மவத்ஸலம்" இதி யுத்தகாண்டே ராமாகமநாஸந்நகாலே. "ந - வ்யவஸ்யந்தி" - அத்யவஸித்தார்களில்லை யென்றபடி. இவன்கைகழியப்போகையாலேயோ நசையற்றதென்ன - அருகே இத்யாதி. நசை - மேலாசை. தோங்குகை - இருக்கை. அவன்தன்னோடு- சக்ரவர்த்தியோடு. அதெப்படியென்ன-தர்மத்துக்காக இத்யாதி. இவனும், "தமையனிருக்கத் தம்பிமுடிசூடக்கடவனல்லன்" என்கிறதர்மத்திலே வத்ஸலனென்றபடி. பண்டில்லாத நன்மைகளையுண்டாக்கினதுக்கு ப்ரமாணாந்தரம் - ஏபிஶ்ச இத்யாதி. "ஏபிஶ்ச" என்றதுக்குபாவம் - தானொருவனுமே இத்யாதி. "ஏபிஶ்ச, ஸசிவைஶ்ச" என்று சகாரத்தை யிரண்டிடத்திலும் கூட்டுவது. ஆனால், ஆனைகுதிரைகளைக்கூட்டிக்கொண்டு போவானென்? என்ன - வினைசெய்ய

யப் போவாரைப்போலே, ஆனைகுதிரைகளை யகப்படத் திரட்டிக்கொடு போனானாயிற்று. பிரிவாற்றாமைக்குத் தன்னிற்குறைந்தா ரொருவருமில்லையாயிற்று பரிகரத்தில். "ஶிரஸாயாசிதோமயா" (ஶிரஸாயாசிதோமயா) - நான் தலையாலே இரந்த கார்யத்தையும் மறுப்பரோ? 'ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா" (ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா) என்றாரிறே யவரும்; "அவனும் தனக்கடுக்கும்படிசெய்தான், நாமும் நமக்கடுக்கும்படி செய்தோம்" என்றாரிறே. "அவன் தலையாலேயிரந்த கார்யத்தை மறுத்துப்போந்தோம்" என்றிறே அவர்திருவுள்ளம் புண்பட்டது. "ப்ராதுஃ" (ப்ராதுஃ)- "ப்ராதாஸ்வாமூர்த்திராத்மநஃ" (ப்ராதாஸ்வாமூர்த்திராத்மநஃ) என்கிறபடியே, அவர் தந்திருமேனியாக வன்றோ என்னை நினைத்திருப்பது? ஶேஷம் பூர்வவத். இப்படி இக் குடியிலில்லாத ஏற்றங்களையுஞ்செய்து. "மூத்தாரிருக்க வளையார் முடிசூடக்கடவதன்று" என்றுபோந்தவித்தனைமுன்பு; ஆற்றாமையும், கண்ணும் கண்ணநீருமாய், ஜடையும் புனைந்து வல்கலையுமுடுத்திருந்தாரில்லையிறே முன்பு இவனையொழிய. [நின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்து] - தன்னுடைய ரஸ்யதையாலே இதரபுருஷார்த்தத்தில் நசை யறுக்கவல்ல அடிமைகளில் அந்தரங்கமான அடிமைகளைச்செய்து. [உன்பொன்னடிக் கடவாதே] - தன்சாபலத்தாலே நிர்ப்பந்திக்குமதுவும்அன்றிக்கே, முன்பு பெரியவாற்றாமையோடே ஸ்ரீவஸிஷ்ட்டஸஹவான் தொடக்கமானாரைப் புருஷகாரமாகக்கொண்டு மீட்பதாகச் சென்றவன், 'நாம் ஐயர் சொன்னகார்யம் செய்தோமான நிறம்பெறலாவது, நீர் பதினாலாண்டு ராஜ்யத்திலேயிருக்கில்காணும்" என்ன; "ஆருரோஹரதம்ஹ்ருஷ்டஃ" (ஆருரோஹரதம்ஹ்ருஷ்டஃ) என்று ஹ்ருஷ்டனாய் மீண்டுபோந்தானிறே: அப்படியே, உன்னுடைய ஆஜ்ஞாதிலங்கநம் பண்ணாதே. உன்திருவடிகளுக்குத்தப்பாதே.

---

இத்யாதி. ரதகஜதுரகபதாதிகளைத் திரட்டிக்கொண்டு போனதுக்குஹேது - பிரிவாற்றாமைக்கு இத்யாதி. "மற்றார்" என்னுமதுக்கு நியாமகமருளிச்செய்கிறார் - ஶிரஸாயாசதஸ் தஸ்ய இத்யாதி. யுத்தகாண்டே ராவணவதாநந்தரே ராமஃ, 'ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா' இதி பூர்வார்த்தம். இஶ்ஶ்லோகத்துக்கு பாவம் - அவனும் இத்யாதி. நமக்கடுக்கும்படியென்றது, நம்முடையநைர்க்ருண்யத்துக் கடுக்கும்படியென்றபடி. விவரணம் - அவன்தலையாலே இத்யாதி. "ப்ராதுஃ" என்றதுக்குபாவம் - ப்ராதாஸ்வாமூர்த்திஃ இத்யாதி. "ஆசார்யஸ்ய ப்ரஹ்மணோ மூர்த்திஃ பிதா மூர்த்திஃ ப்ரஜாபதேஃ। மாதா ப்ருதிவ்யா மூர்த்திஸ்து ப்ராதா ஸ்வா மூர்த்திராத்மநஃ" இதி மாநவ தர்மஶாஸ்த்ரே. ஶேஷம்பூர்வவத் என்றது- மஹாப்ரவேஶத்திற் பண்ணின வ்யாக்யாநத்தைநினைத்து. "ஸஹஸ்ர" என்று ப்ராணிகளைச் சொன்னது - ஆனை குதிரைகளுக்கும் உபலக்ஷணம். விவரணம் - மூத்தாருக்க இத்யாதி. 'முன்புஇவனையொழிய' என்றவநந்தரம், அப்படியே இவரும், ப்ராப்யத்வரையாலே, ப்ரபந்நகுலத்தில்லாத 'கண்ணநீர்கைகளாலிறைக்கும்," "மண்ணையிருந்துதுழாவி" இத்யாதிகளாலே சொல்லப்பட்ட அழுவதுதொழுவதான வ்யாபாரங்களாலே அதிசயத்தையுண்டாக்கி என்றுகூட்டுவது. தீர்த்தவடிமையாவது - உனக்கேயற்றுத் தீரப்பண்ணுகிற வடிமையென்று விவக்ஷித்து, அத்தால் பலிதம் - தன்னுடைய இத்யாதி. உன் விஷயமாய் இதரஸங்கநிவர்த்தகமான அடிமைகளில் அந்தரங்கமான வடிமைகளைச்செய்தென்று ஸமுதாயார்த்தம். 'நீர் பதினாலாண்டு ராஜ்யத்திலே யிருக்கில் காணும்' என்றவநந்தரம், 'தன்சாபலத்தாலே நிர்ப்பந்திக்குமதுவுமன்றிக்கே' என்றத்தை யநுஸந்திப்பது. 'நிர்ப்பந்திக்கு மதுவுமன்றிக்கே' என்றதுக்கு, 'ஆருரோஹரதம்ஹ்ருஷ்டஃ' என்றதத்தோடே யந்வயம். ஆஜ்ஞாதிலங்கநம்பண்ணாதே யென்றது - ஈஸ்வரனுக்குத் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவிக்கத் திருவுள்ளமானால், அந்த வ்யஸநத்தைப் பொறுத்துக்கொண்டிருந்தென்றபடி. ஸமுதாயார்த்தம் - உன்திருவடிகளைத் தப்பாதேயென்று.

அன்றியே, உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையல்லதறியாதே என்னுதல். அதாவது - அநந்யப்ரயோஜநனைகை. [வழிவருகின்ற வடியரோர்க்கருளி] - அடிமை முறைதப்பாதே போருகிற அநந்யகதிகளான எங்களுக்கு க்ருபையைப்பண்ணி. [நீயோருநாளித்யாதி] - அந்தஸ்வபாவம் ஒருநாளிலேயாய்ப் பின்பு வற்றுமதோ? அப்ரதிஷேதத்துக்கு மேற்பட ருசி மிகையோ? குணதணநிரூபணம்பண்ணாதே எல்லார்தலையிலும் வைத்த திருவடிகளை, ஆசையுடைய என்தலையிலும் வைக்கலாகாதோ? [படிக்களவாக] - பூமியை விளாக்குலைகொள்ள விஞ்சவளருமதிலும் அரிதுபோலேகாணும், அதுக்களவாகத் திருவடிகளைக் குசைதாங்கின அருமையும் உனக்குஅரியதொன்றாய் நான் க்லேசப்படுகிறேனோ? இத்தனையன்றோ செய்யவேண்டுவது? [நின்பாதபங்கயமே] - ஒருசெவ்விப்பூவைக்கொண்டு காணும் காடுமோடையும் அளந்துகொண்டது [தலைக்கு அணியாய்] - ஏதேனுமாகக்கொள்ள நினைத்தகார்யத்துக்குஅளவாக்க மித்தனையாயிருந்ததிறே; பூமிக்களவாக்கின திருவடிகளை என்தலைக்களவாக்கலாகாதோ? [தலைக்கணியாய்] - "கோலமாமென்சென்னிக்க" என்று இருப்பார்தலையில் வைக்கலாகாதோ? "கதா" (கதா) என்கிறார். [கோடியித்யாதி] - "ஸாராமஸங்கீர்த்தநவீதஶோகா ராமஸ்யஶோகேந ஸமாநஶோகா" (ஸாராமஸங்கீர்த்தநவீதஶோகா ராமஸ்யஶோகேந ஸமாநஶோகா) — பெருமாளுடைய ஸத்பாவத்தில் அதிஶங்கையாலேயும் ஒரு ஶோகமுண்டு. பிரிவாற்றாமையாலே படுகிறதும் ஒருஶோகமுண்டு; அதில் - திருவடியைக் கண்டபின்பு ஒன்று தீர்ந்ததிறே; அப்படியே ஸாக்ஷாத்ஸமமாய் ஶ்ரமஹரமான தேசத்திலே

---

*எந்தவழியே வருகிற என்ன - அடிமைமுறை இத்யாதி. "ஒருநாள்" என்றதுக்குஹாவம் - அந்தஸ்வபாவம் இத்யாதி. அந்தஸ்வபாவமாவது - க்ருபைபண்ணுகை. வற்றுமதோ - வற்றுமதன்றென்றபடி 'படி" என்ற அசேதநஸமாதிக்குஹாவம் - அப்ரதிஷேதத்துக்கு இத்யாதி. மிகையோ - அதிகமாக வேண்டுமதோ? தாத்பர்யம் - குணதண இத்யாதி. படியிலே நிமிர்க்கவென்னாதே. "தளவாக நிமிர்த்த" என்று விசேஷிக்கிறதென்? அப்படியளவாக நிமிர்க்கையருமையோவென்ன - பூமியை இத்யாதி. 'விளாக்குலை கொள்ளுகை' குலை - களையை, விளாக்கொள்ளுகை, - வ்யாபிக்கை. சபளீகரிக்கையென்றபடி. குசைதாங்கின - [illegible] [illegible] ஹாவமாநுஸந்திக்கிறார் - உனக்கரியது இத்யாதி வாக்யத்வயத்தாலே. இத்தனையன்றோ செய்ய வேண்டுவதென்றது - [illegible]. "பங்கயம்" என்றதுக்குஹாவம் - ஒருசெவ்விப் பூவை இத்யாதி. பூமிக்களவாக்கின திருவடிகளை என்னுடைய தலைக்களவாக்கப் போகாதோவென்ன - ஏதேனும் இத்யாதி வாக்யத்வயம். [illegible]. "அணியாய்" என்றதுக்குஹாவம் கோலமாம் இத்யாதி. "அணியாய்" என்கைக்கு, அப்படி ப்ரார்த்யமோவென்ன; ப்ரார்த்யமென்கைக்கும், திருவடிகள் அலங்காரமென்னுமதுக்கும் ப்ரமாணம்-கதாவென்கிறதென்று, 'கதாவா ஸஹஸ்ரயோஜ" இத்யாதி, "ஶிரஸி ரசயிஷ்யதி" இதி யாமுநாசார்யஸ்தோத்ரே. மதினைச்சொன்னதுக்கும், "தலைக்கணியாய்" என்றுசொன்னதுக்கும் ஸம்ருஷ்டார்த்தமாகஹாவம் - ஸாராம இத்யாதி.*

"ஸாராமஸங்கீர்த்தநவீதஶோகா ராமஸ்யஶோகேந ஸமாநஶோகா | ஶரந்முகே ஸாம்புதஶேஷசந்த்ரா நிஶேவ வைதேஹஸுதா பபூவ" இதி ஸுந்தரகாண்டே, "வீதஶோகா" என்னைநிற்க, "ஸமாநஶோகா" என்றது சேரும்படியென்னென்ன - பெருமாளுடைய இத்யாதி 'ராமஸங்கீர்த்தநவீதஶோகா" என்கையாலே பெருமாளுடைய ஸத்பாவத்தில் அதிஶங்கை போயிற்றென்றபடி. கொடிகளையுடைத்தாய், பொன்மதிளாலே சூழப்பட்டு, குளிர்ந்த வயலையும் சோலையையுமுடைத்தான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே என்று ஸப்

கண்வளர்ந்தருளப் பெற்றது, "என்வருகிறதோ?" என்கிற பயந்தீர; இனியென்னை விஷயீகரிக்கும் அதுவேகுறை, அக்குறையுந் தீர்த்தருளவேணும். (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலங்கிடத்தியுன்றிருவுடம்பசையத், தொடர்ந்துகுற்றேவல்செய்துதொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளித், தடங்கோடாமரைக் கண்விழித்துநீயெழுந்துன்றாமரைமங்கையும் நீயும், இடங்கொள்மூவுலகுந்தொழவிருந்தருளாய்திருப்புளிங்குடிங்கிடந்தானே.

ஆ:—(கிடந்தநாள்.)—இங்ஙனே யொருபடியே கண்வளர்ந்தருளுகிற பிரானே! உன் திருவுடம்பு நோவாதே, உன் திருவுடம்பு நோவாதே உன்னடியேனான எனக்காக நீ ஒருநாள், தாமரைத்தடம் மலர்ந்தாற்போலே திருக்கண்களை விழித்து எழுந்திருந்து உன் தாமரைமங்கையும் நீயும், இந்தலோகமெல்லாம் வாழும்படி இருந்தருளாயென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், திருவுடம்பசைய ஒருபடியே கண்வளர்ந்தருளாதே, உன்னடியோமுக்காகத் திருக்கண்களை விழித்து, எழுந்திருந்து, உன்தாமரை மங்கையும் நீயும் இந்தலோகமெல்லாம் வாழும்படியிருந்தருளாய் என்கிறார்.

[தொடர்ந்தென்று தொடங்கி] - இது இப்போதைக்கடுப்பதென்றுணர்த்தி அடிமைசெய்து ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமாய் வருகிற அடிமைநெறிதப்பாதே வருகிற அடியோங்களுக்கு க்ருபைபண்ணி. இம்மூன்று பாட்டிலும் தம்மைக் கொண்டாடுகிறாரல்லர். ஓரிடத்துக்கே கடவாரை வேறு நோக்குவாருண்டோ என்று தம்முடைய அநந்யகதித்வஞ் சொல்லுகிறார். [தடங்கொள் தாமரை] - தடத்தை விழுங்கின தாமரை. இடங்கொள் - இடமுடைத்தானை.

ப.—அநந்தரம், திருமேனியசையும்படி எப்போதும் கண்வளர்ந்தருளாதே அடியோங்கள் கண்டநுபவிக்கும்படியாகப் பிராட்டியோடேகூட உணர்ந்தெழுந்தருளியிருக்க வேணுமென்கிறார்.

திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தானே - ஆஸ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே! (அபேக்ஷாபாரதந்த்ர்யத்தைக்கொண்டு), கிடந்தநாள் - கண்வளர்ந்தருளுகிறவன்று தொடக்கமாக, கிடந்தாய் - இப்படியொருபடிப்படக் கண்வளர்ந்தருளினாய்; உன் திருவுடம்பு - உன்திருமேனி, அசைய-அசையும்படி, எத்தனைகாலம் - இன்னமெத்தனைகாலம், கிடத்தி - கண்வளர்ந்தருளக்கடவை? (இனி), தொடர்ந்து - (எங்கள் அபேக்ஷைக்காக வுன்னை அநுவிதானம்பண்ணிச்) சென்று, குற்றேவல் - அந்தரங்கவ்ருத்தி, செய்து - பண்ணி, தொல் - அநாதிஸித்தமான, அடிமைவழி - சேஷத்வமார்க்கத்திலே, வரும் - வருவோமாய், தொண்டரோர்க்கு - உனக்கேசேஷமாம்படி

---

தார்த்தம். 'கொடிக்கொள்' என்று தொடங்கி, 'கிடந்தானே - குடிக்கிடந்தென்று தொடங்கி, தலைக்கணியாய்' இத்யந்வயம். (உ)

யநந்யகதிகளான எங்களுக்கு, அருளி-இரங்கி, தடம்-தடத்தை, கொள்-கொள்ளும்படி பெருத்த, தாமரை-தாமரைபோன்ற, கண்-திருக்கண்களை, விழித்து - பாக்கவிழித்து, (நீ), எழுந்து - (படுக்கையினின்றும்) எழுந்து, உன் - உனக்கநபாயிநியாய், தாமரை - பூவிற்பிறப்பாலுண்டான போக்யதையையும், மங்கையையும் - பருவத்தையுமுடைய ளான லக்ஷ்மியும், நீயும் - , இடங்கொள் மூவுலகும் - விஸ்தீர்ணஜகத்த்ரயமும், தொழ - (அநந்யப்ரயோஜநராயாதி) கண்டநுபவிக்கும்படி, இருந்தருளாய்-இருந்தருளவேணும்.

இ.—மூன்றாம்பாட்டில், திருவுடம்பசைய ஒருபடியே கண்வளர்ந்தருளாதே அடியோமுக்காகப் பிராட்டியும் தேவரும் எழுந்திருந்தருளவேணும் என்கிறார்.

[கிடந்தநாள் கிடந்தாய்] - ஓர் ஆச்ரிதன் "சாய்ந்தபோதை அழகுகாணவேணும்" என்றுசைப்பட்ட நாள் தொடங்கிக் கண்வளர்ந்தருளுகிறிலேயோ? [எத்தனை காலக்கிடத்தி] - இனியொருவன் வந்து "கிடந்தவாறெழுந்திருந்து பேச" என்னுமளவுங் கிடக்குமித்தனையிறே. எல்லாச் சேஷ்டிதங்களும், "ஸ்ஜா நா்ஜ" என்றிருக்கை தவிராதிறே. [உன் திருவுடம்பசைய]-ஸுகுமாரமான திருமேனி அலசும்படி. ஆர்ப்பிக்கும் அவர்களை பார்க்குமித்தனையோ? உன்னையும் பார்க்கவேண்டாவோ? [தொடர்ந்து குற்றேவல்செய்து] - "இக்கரையில் செய்யவடுப்பது இது" என்று உணர்த்தி அந்தரங்கவ்ருத்தியைப்பண்ணி. பெருமாள் தமக்குஅபிமதங்களில் அவஹிதரன்றிக்கே யிருந்தபோதும், இவ்வடிமையைக் கொண்டருளவேணும்" என்று வடிம்பிட்டு இளைய பெருமாள் அடிமை செய்தாற்போலே. [தொல்லடிமை] - ஆத்மாவுக்குஸ்வாபாவிகமான அடிமை: "ஜஷஸஜெஜகெதுயபூவியபஃ" என்கிறபடியே. [வழிவருந்தொண்டரோர்க்கருளி] - நெறிதப்பாதேவருகிற அடியோங்களுக்கு க்ருபை பண்ணி. இம்மூன்று பாட்டிலும், தம்முடைய யோக்யதையைச் சொன்னாற்போலேயிருக்கும்; அகன்று சொல்லுகிறது; "ஒருவர்க்கே மோக்ஷமாயிருப்பாரை வேறுமுகம் பார்ப்பாருண்டோ?" என்று தம்முடைய அநந்யகதித்வஞ் சொல்லுகிறார். [தடங்கொள்தாமரைக்கண் விழித்து] - பொய்கையை விழுங்கின தாமரைபோலே இடமுடைத்தான திருக்கண்களாலே குளிரநோக்கி. [நீ யெழுந்து] - நீ எழுந்திருந்து: உணர்ந்தருளும் போதைச் செவ்வியை அநுபவிக்கவேணும்; "மாரிமலை முழைஞ்சில்" என்கிறபடியே. [உன் தாமரை மங்கையும் நீயும்]-பிராட்டியும் தேவருஞ் சேரவிருந்து எனக்குக் காட்டித் தரவேணும். "பங்கயத்தாள் திருவருளும்" என்று ஆச்ரயணஉபாயாகையாலே புருஷகாரபாவத்தைப் பற்றச் சொல்லிற்றுக் கீழ்; "அடிமைசெய்யுமிடத்திலும் இருவருஞ் சேர்ந்த சேர்த்தியிலே அடிமைசெய்யக்கடவது" என்னுமத்தைப்பற்றச் சொல்லுகிறது இங்கு. [இடங்கொள் மூவுலகும்] - இடமுடைத்தான ஸகலலோகங்களிலுள்ளாரும். [தொழவிருந்தருளாய்]-அநந்யபரரைப்போலே முறையிலே தொழவிருக்கும் இருப்பை நான் கண்டநுபவிக்கவேணும். [திருப்புளிங்குடிக்கிடந்தானே]-ஸௌலப்யனைபின்பு எல்லாஞ் செய்தருளத்தட்டென்? [திருப்புளிங்குடிக் கிடந்தானே-இருந்தருளாய்] - சாய்ந்தருளின அழகை அநுபவிப்பித்தருளிற்று; இருந்தருளின அழகை அநுபவிப்பித்தருளவேணுமென்கை.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருவுடம்பசைய ஒருபடியே கண்வளர்ந்தருளாதே, அடியோமுக்காகப் பிராட்டியும் தேவரும் எழுந்தருளவேணும் என்கிறார்.

[கிடந்தநாள்கிடந்தாய்] - ''கிடந்ததோர்கிடக்கை'' என்று கிடையழகுகாண வேணுமென்று ஆசைப்பட்டிருப்பா னொருவனுக்காக, ஆசைப்பட்டஅன்றுதொடங்கிக் கண்வளர்ந்தருளினாய். [எத்தனைகாலங்கிடத்தி] – இனியோருவன்வந்து ''கிடந்தவா றெழுந்திருந்துபேசு'' என்னுமளவும் கிடக்கு மித்தனையிறே. எல்லாச்சேஷ்டிதங்களும், ''ஹக்தா நாம்''(பக்தாநாம்) என்றிருக்கை தவிராதிறே.[உன்திருவுடம்பசைய]-ஸுகுமார மான திருமேனியலசும்படி. அர்த்திகளையேபார்க்குமித்தனையோ ? உன்னையும் பார்க்க வேண்டாவோ? [தொடர்ந்துகுற்றேவல்செய்து]-''இத்தசையில் செய்யவடுப்பதுஇது, இத் தசையில் செய்யவடுப்பதுஇது''என்றுணர்த்தி,அந்தரங்கவ்ருத்தியைப்பண்ணி.பெருமாள், தமக்கு அபிமதங்களில் அவஹிதரன்றிக்கே யிருந்தபோதும்,''இவ்வடிமையைக் கொண் டருளவேணும், இவ்வடிமையைக் கொண்டருளவேணும்'' என்று அவ்வவகாலங் தோறும் ''மாம்வத, மாம்வத'' (மாம்வத, மாம்வத) என்று வடிம்பிட்டுஅடிமைசெய்தாற் போலே, அந்தரங்கவ்ருத்திகளைப்பண்ணி. [தொல்லடிமை] - ஆத்மாவுக்கு ஸ்வாபாவிக மான அடிமையாகையாலேபழையதாய்ப்போருகிறஅடிமை.''ஆவிஸ்யுர்மமஸஹஜ கைங்கர்யவிதய:'' (ஆவிஸ்யுர்மமஸஹஜகைங்கர்யவிதய:) என்னக்கடவதிறே. [வழி வருந்தொண்டரோர்க்கருளி] - அடிமைமுறை தப்பாமேபோருகிற அநந்யகதிகளான எங் களுக்கு க்ருபைபண்ணி. இம்மூன்றுபாட்டிலும், தம்முடையயோக்யதையைச் சொன் னாற்போலேயிறேயிருக்கிறது; அதுஅன்று சொல்லுகிறது;''ஒருவர்க்கேயாயிருப்பாரை வேறு

---

மூன்றாம்பாட்டு.—கிடந்தநாள் இத்யாதி. ''உன்திருவுடம்பசைய - எத்தனைகாலங்கிடத்தி- தாமரைமங்கையும்நீயும் - இருந்தருளாய்'' என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - திருவுடம் பசைய இத்யாதி.

''கிடந்தநாள்'' என்கையாலே - கிடந்தகாலத்துக்கு ஒருமுடிவில்லை யென்று தோற்று கிறது. அக்கால தைர்க்யத்துக்கு ஒருஹேது அருளிச்செய்கிறார் - கிடந்ததோர் இத்யாதி. ஆஸ்ரிதர் அபேக்ஷைக்காகக் கண்வளர்ந்தருளுகிற அன்றுதொடங்கி ஒருபடிப்படக் கண்வளர்ந்தருளினாய்; ஸுகு மாரமான உன்திருமேனி யலஸமாம்படி இன்னம் எத்தனை காலம் கண்வளர்ந்தருளக் கடவையென்று பப்தார்த்தம். கிடந்ததோர் கிடக்கையித்யாதி: திருமாலை. 'கிடந்தவாறெழுந்திருந்துபேசுவாழி' திருச் சந்தவிருத்தம். ஸ்பஷ்டோர்த்த:. இதுக்கு ஒருமுடிவுண்டாகவொண்ணாதோ என்கிற இது, ''எத்தனை காலம்கிடத்தி''என்கிற இவர்க்குவிவக்ஷிதமாகையாலே, அம்முடிவுண்டாவது, ஆஸ்ரிதன்,''எழுந்திருக்க வேணும்'' என்றபேக்ஷிக்குமளவும் என்கிறார்-இனியோருவன் இத்யாதி. கிடக்கையிருக்கையெல்லாம் ஆஸ்ரிதரிட்ட வழக்காயிருக்குமோ என்ன - எல்லாச்சேஷ்டிதங்களும் இத்யாதி.''ஸம்ஸ்ரிதாய தாயத்த ஸகலசேஷ்டித:'' என்னக்கடவதிறே. வரதராஜஸ்தவே.(௬௩)அசைய-அலசும்படி;அலஸமாம்படி. இத்தால் ஸாவம் - அர்த்திகளையே இத்யாதி. ''தொடர்ந்து'' என்றவிசேஷணத்துக்குஸாவம் - இத்தசையில் இத்யாதி. ஸத்ருஷ்டாந்தமாகவிவரணம் - பெருமாள் இத்யாதி. தொடர்ந்து - அநுவியாநம்பண்ணி யென்றபடி. வடிம்பிட்டு - ப்ரேரித்து. அடிமையில்தொன்மையேதென்ன - ஆத்மாவுக்கு இத்யாதி. அப்படி ஸ்வாபாவிகமோவென்ன - ஆவிஸ்யுர் இத்யாதி. அஷ்டஸ்லோகீ, ''ஸகாராயசாவதே வஸஹஸஹஜஸஹஸ்ரம் நமிவஹாநாராணாம்ஜிகதாநாம்'' இத்யாதி. கைங்கர்யவிதய: என்கிற தில், விதியென்றது - விதாநமாய், கைங்கர்யக்ரியையைச் சொல்லுகிறது. ''குடிகுடிவழிவந்தாட்செய் யும்தொண்டர்'' என்றும், ''வழிவருகின்றவடியர்'' என்றும், ''தொல்லடிமை வழிவரும்தொண்டர்'' என்றும், தம்முடைய அயோக்யதையையென்றபடி. ''தாமரை'' என்ற சைவசநத்திலேநோக்காகஸாவம்-

முகம்பார்ப்பாரில்லை'' என்று தம்முடைய அநந்யகதித்வஞ் சொல்லுகிறார். [தடங்கொள் தாமரைக்கண்விழித்து]-பொய்கையைக் கண்செறியிட்ட தாமரைபோலே, இடமுடைத் தான திருக்கண்களாலே குளிரநோக்கி. [நீயெழுந்து] - நீயெழுந்திருந்து. ''சீரியசிங்கமறி வுற்று'' என்கிறபடியே, உணர்ந்தருளும்போதை யழகு காணவேணும். [உன்தாமரைமங் கையும்நீயும்] - ''ஸமவத்விஷயத்தில் முதலடியிடுவார் பிராட்டிபுருஷகாரமாகப் பற்றக் கடவது'' என்னுமத்தாலே, ''பங்கயத்தாள்திருவருள்'' என்றார் கீழ்; அடிமைசெய்யுமிடத் திலும் இருவருமான சேர்த்தியிலே யடிமைசெய்வதாகச் சொல்லிப் போருமத்தைப் பற் றச் சொல்லுகிறது இங்கு. [இடங்கொள்மூவுலகும்] - இடமுடைத்தான ஸகலலோகங் களிலுள்ளாரும். [தொழவிருந்தருளாய்] - அநந்யப்ரயோஜநரைப்போலே முறையிலே தொழ நீ யிருக்குமிருப்பை நான் கண்டநுபவிக்கவேணும். [திருப்புளிங்குடிக் கிடந் தானே] - நீ ஸர்வஜ்ஞனன்பின்பு, எல்லாம் செய்தருளவேணும். அபேக்ஷிதங்களெல் லாஞ் செய்தருளக்கடவதானால், அதில் ஏகதேசஞ்செய்தால், குறையுஞ்செய்து தலைக் கட்டவேண்டாவோ? [திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாய்] - சாய்ந்தருளின அழகுகாட்டினாய்; இருந்தருளினபோதை யழகையுங் காட்டியருளாய்! (௩)

## நான்காம் பா. ௬.

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்துவைகுந்தத்துள்நின்று
தெளிந்தஎன்சிந்தையகங்கழியாதேஎன்னையாள்வாய்!எனக்கருளி
நளிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்பநாங்கள்கூத்தாடிநின்றார்ப்ப
பளிங்குநீர்முகிலின்பவளம்போல்கனிவாய்சிவப்பநீகாணவாராயே.

*ஆ.—(புளிங்குடி.) - உன்னுடைய காருண்யத்தினாலே எனக்காகப் புளிங் குடிக்கிடந்து, வரகுணமங்கை யிருந்து, வைகுந்தத்துள்நின்று, தெளிந்த என்சிந்தை அகங்கழியாதே என்னையடிமைகொண்டருளினாற்போலே, இன்னமும் உன்னுடைய பரமகாருண்யத்தினாலே சோதிவாய்திறந்து, தாமரைக்கண்களாலேநோக்கி, திருவடி களை என்தலையிலேவைத்தருளி, பிராட்டியோடேகூட இருந்தருளி, ''ஆழ்வார் அபே க்ஷிதத்தைச் செய்தருளினான்''என்று இந்தக் கல்யாணகுணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட நாங்கள் கூத்தாடி நின்றுஆரவாரப்பட நிறம் அழகிதான மேகத்திலே யுண்டான பவளம்போலே அழகியதிருப்பவளத்திற் சிவப்போடேகாணலாம்படி நீ வர வேணுமென்கிறார்.*

---

பொய்கை இத்யாதி. தடம் - பொய்கை, பரப்பும். கண்செறியிட்ட - மறைத்த. ''நீயெழுந்து'' என் கைக்கு, எழுந்திருக்குமது அழகாயிருக்குமோவென்ன - சீரிய இத்யாதி. அறிவுற்று-உணர்ந்து. கீழே ''பங்கயத்தாள்'' என்றுவைத்து, பின்னையும் 'தாமரைமங்கை'' என்கிறதென்னென்ன-ஸமவத்விஷ யத்தில் இத்யாதி. ''திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாய்'' என்றுகூட்டிஅர்த்தம்-நீ ஸர்வஜ் ஞன இத்யாதி. விவரணம்-அபேக்ஷிதங்கள் இத்யாதி. ''கிடந்தானே - இருந்தருளாய்'' என்றுகூட்டி, உக்தத்தை ஸ்புடமாகக் காட்டுகிறார்-சாய்ந்தருளின இத்யாதி. ஏகதேசம் செய்கையாவது-திருப்புளிங் குடியிலேகிடக்கை. 'உன்திருவுடம்பசைய - கிடந்தநாள் கிடந்தாய் - எத்தனைகாலம் கிடத்தி' என்று தொடங்கி, 'திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாய்' இத்யந்வயம். (௩)

ஒ.—நாலாம்பாட்டில், திருப்புளிங்குடி தொடக்கமான திவ்யஸ்தானங்களிலே ஸந்நிஹிதனாய் என்னை இவ்வளவாக்கினாற்போலே மேலும் என் அபேக்ஷிதங்கள் செய்தருளவேணு மென்கிறார்.

[தெளிந்த என்சிந்தை யகங்கழியாதே என்னையாள்வாய்] - அயோக்ய னென்று அகலாதபடி*கண்கள் சிவந்திலே என்ஹ்ருதயம் தெளிந்தவாறே அங்கே வந்து புகுந்து நிரந்தரமாக விருந்தருளி என்னை ஆளுகிறவனே! [நளிர்ந்த சீருலகம் மூன்றுடன் வியப்ப]-"ஆழ்வார் அபேக்ஷிதத்தைச் செய்தருளினான்" என்று இந்தக்கல்யாண குணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட. [பளிங்கென்று தொடங்கி] - அறத்தெளிந்த நீரை முகக்கையாலே நிறமழிந்தான மேகத்திலேயுண்டான பவளம்போலே அழகிய திருப்பவளத்தில் சிவப்போடே காணலாம்படி நீ வரவேணும்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாகக் கிடந்திருந்து நின்று என்னை யடிமை கொண்ட ஸௌஸீல்யமான வடிவோட்கூட நான் காணும்படி வரவேணு மென்கிறார்.

புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்து - கண்வளர்ந்து, வரகுணமங்கை - திருவரகுணமங்கையிலே, இருந்து-, வைகுந்தத்துள் - ஸ்ரீவைகுண்டத்திலே, நின்று-,தெளிந்த - ("இவை நமக்காகப்பண்ணின வ்ருத்திகளிறே" என்று) தெளிந்த, என் - என்னுடைய, சிந்தையகம் - நெஞ்சுக்குள்ளே நின்று, கழியாதே - போகாதே, (உன்னுடைய சீலாதிகுணங்களைப்ரகாசிப்பித்து), என்னை-, ஆள்வாய் - அடிமைகொண்டவனே! எனக்கு-, அருளி - விசேஷமாகக்ருபைபண்ணி, (உன்னுடைய), நளிர்ந்த - சீதளமான, சீர் - சீலாதிகளை, உலகம்மூன்று-லோகத்ரயமும், உடன் - ஏககண்டமாய்க் கொண்டு, வியப்ப - "ஓராஸ்ரிதபக்ஷபாதமே!" என்று விஸ்மயப்படும்படியாகவும், நாங்கள் - (அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு காணவிருக்கிற) நாங்கள், கூத்தாடி - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி, நின்று-,ஆர்ப்ப - ஆர்ப்பரவம்பண்ணும்படியாகவும், பளிங்கு - தெளிந்த, நீர் - நீராலேநிறைந்த, முகிலின் - காளமேகத்திலே, பவளம்போல் - பவளக்கொடி படர்ந்தாற்போலே, கனி - ஸ்நிக்தமான நிறத்தை யுடைத்தான, வாய் - திருவதரம், சிவப்ப - சிவந்துதோன்றும்படி, காண - நாங்கள் கண்டநுபவிக்கும்படியாக, நீ வாராய் - நீ நடந்துவந்தருளவேணும்.

இ.—நாலாம்பாட்டில், திருப்பதிகளிலே ஸந்நிஹிதனாய் என்னை இவ்வளவாக்கினாற்போலே மேலும் என் அபேக்ஷிதங்கள் செய்தருளவேணு மென்கிறார்.

[புளிங்குடி யித்யாதி] - "திருப்புளிங்குடியிலே கிடந்ததோர்கிடக்கை" என்னும் அழகைக்காட்டியும் திருவரகுணமங்கையிலே "பிரானிருந்தமை காட்டினீர்" என்னும் இருப்பில்அழகைக்காட்டியும், ஸ்ரீ வைகுண்டத்திலே "நிலையாரநின்றான்" என்னும் நிலையழகைக்காட்டியுமன்றோ எனனைப்புகுர நிறுத்திற்று? இவையெல்லாம் நான் இரக்கவோசெய்தது? [தெளிந்தவென சிந்தையகங்கழியாதே]-அயோக்யனென்று அகலாதபடி*கண்கள்சிவந்திலே என்ஹ்ருதயம் தெளிந்தவாறே அதனைக்கைவிடாதே நிரந்தரவாஸம்பண்ணி. [என்னையாளவாய்] - உன்னாலல்லது செல்லாத என்னை குணஜ்ஞானத்தாலே முடியாதபடி யரிப்பித்துப் போந்தாய். [எனக்கருளி] - வ்யதிரேகத்தில் நசையாலே முடியவும்மாட்டாதஎனக்கு க்ருபைபண்ணி. [நளிர்ந்தசீர்] - அநுஸந்தித்தார் ஹ்ருதயம் குளிரும்படியான ஸீலத்தை; "ஆழ்வார் அபேக்ஷிதத்தைச் செய்தருளினான்" என்கிற இக்கல்யாணகுணத்தை. [உலகமூன்றுடன் வியப்ப] - விலக்ஷணரோடு

அவிலக்ஷணரோடு வாசியற எல்லாருமொக்க அநுபவித்து விஸ்மயப்படும்படியாக. [நாங்கள் கூததாடிநின்றார்ப்ப]- நாங்கள் விஸ்மயப்படுமளவன்றிக்கே விக்ருதராம்படி. [பளிங்கு நீர்முகிலின் பவளம்போல் கனிவாய்சிவப்ப]-தெளிந்தநீரை முகக்கைபாலே தர்சநீயமான மேகமானது பவளத்தைப் பூத்தாற்போலேயாயிற்று திருவதரத்தில் பழுப்பிருப்பது. இவர ஸம்ப்ரமத்தைக்கண்டு அவன்பண்ணும் ஸ்மிதமிருக்கிறபடி. [நீகாணவாராயே] - நான்காண நீ வரவேணும். என்னெனிலே உன் நடையழகு காணவேணும். அவன்கூத்திருக்கிறபடி. வல்லாராடினாற் போலேயிறே நடையழகிருப்பது.

ஈடு.—நாலாம்பாட்டு. திருப்பதிகளிலே ஸந்நிஹிதனாய் என்னை இவ்வளவாக்கினாற்போலே, மேலும் என் அபேக்ஷிதஞ் செய்தருளவேணு மென்கிறார்.

[புளிங்குடிஇத்யாதி] - நான் இரக்கவோ இவையெல்லாம் நீ செய்தது? பட்டர், திருநாராயணபுரத்தில் வெறுப்பிலே, "தேவர் ஸ்வாதந்த்ர்ய மெல்லாங் காட்டினாலும் பின்னையும் பண்ணினவிஸ்வாஸத்தில்குலைத்தலின்றிக்கேயிருக்கும்படி எலும்புஉரமுடைய எம்பெருமானார்போல்வார்பக்கல் செய்யுமத்தை எலியேலும்பனான அடியேன்பக்கலிலும் செய்வதோ? "உஹாரயஸ்ரு வவிசேவநக:" (மஹாவிஸ்வாஸபூர்வகம்) என்கிறபடியே ஏதேனும் ஒன்று வந்தாலும் 'இங்குத்தைக்கு ஒன்று வருவதாய் வந்ததன்று; இதுக்கடி, நம்முடையபாபம்' என்று பண்ணின விஸ்வாஸம் குலையாதார் விஷயத்திலே செய்யுமத்தை — இதுதானே ஹேதுவாக நெஞ்சுநெகிழும்படி இளநெஞ்சர்பக்கலிலும்— அத்தைச் செய்யக்கடவதோ?" என்றாராம். திருப்புளிங்குடியிலே "கிடந்ததோர்கிடக்கை" என்னுமழகைக்காட்டியும், வரகுணமங்கையிலே "பிராணிருந்தமைகாட்டினீர்" என்னும்இருப்பழகைக்காட்டியும், ஸ்ரீவைகுண்டத்திலே "நிலையார நின்றான்" என்னும் நிலையழகைக்காட்டியுமன்றோ என்னைப் பகுரநிறுத்திற்று? [தெளிந்தஎன் சிந்தை யகங்கழியாதே]-"அயோக்யன்" என்றுஅகலாதபடி * கண்கள்சிவந்திலே என் ஹ்ருதயத்தைத்தெளிவித்தும் அத்தைக்கைவிடாதே நிரந்தரவாஸம் பண்ணி. [என்னையாள் வாய்] - என்னை "அயோக்யன்" என்று அகலவுமொட்டாதே, பிரிவாற்றாமையால் முடியவுமொட்டாதே, குணஜ்ஞாநத்தாலே தரிப்பித்துக்கொண்டு போந்தாய். [எனக்கருளி] -

---

நாலாம்பாட்டு.—புளிங்குடி இத்யாதி. "புளிங்குடிக்கிடந்து" என்று தொடங்கி, "எனக்கருளி" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - திருப்பதிகளிலே இத்யாதி. இவ்வளவாக்குகை - இந்தப்ராவண்யத்தை விளைக்கை.

"வைகுந்தத்துள்நின்று" என்னுமளவுக்கும்பாவம் - நான்இரக்க இத்யாதி. "தெளிந்தஎன் சிந்தை" என்றதுக்கு - "ஹிரயொவஷியாராஹி:" இத்யாதிப்படியே, எத்தனை துக்கங்கள்வந்தாலும் கலங்காத நெஞ்சென்ற விவக்ஷித்து, அதுக்குஐதிஹ்யம் - பட்டர் இத்யாதி. விவரணம் மஹாவிஸ்வாஸ இத்யாதி. திருநாராயணபுரத்தில் வெறுப்பாவது - எம்பெருமான் திருமேனிக்கும் அழிவுவந்து, பிள்ளை திருநறையூரரையரும் திருநாட்டுக்கெழுந்தருளினத்தால் வந்த துக்கம். எலும்புஉரமுடைய - ஸக்தியுடைய. மஹாவிஸ்வாஸமுடையவென்றபடி. எலியேலும்பனான - அல்பஸக்திகனான. விஸ்வாஸமாந்த்யமுடையனான வென்றபடி. "நான்இரக்கவோ நீயிவையெல்லாஞ்செய்தது" என்கிறவாக்யத்தில் ஹ்ருதிக்ருதமான அர்த்தவிசேஷங்களை விசதமாக அருளிச்செய்கிறார் - திருப்புளிங்குடியில் இத்யாதி. "தெளிந்த" என்றதுக்கர்த்தாந்தரம் - அயோக்யன் இத்யாதி. ஆளும்ப்ரகாரமேதென்ன - அயோக்யன் என்று இத்யாதி. "எனக்கருளி" என்று தொடங்கி மேலுக்கெல்லாம் பாவம் - புறம்பு இத்யாதி. நார்ந்த - சீதளமான. சிருக்குக்குளிர்த்தியேதென்ன - அநுஸந்தித்தார் இத்யாதி. சீராவதேதென்ன - ஆழ்வார் இத்யாதி. விலக்ஷணர் - இந்த்ராதிகள். அவிலக்ஷணர்- பூமியிலுள்ளார். "உடன்" என்றதுக்கர்த்தம் - வாசியற என்றது. "நாங்கள்" என்று - ஆத்மநி

புறம்புபோகாதபடி வளைத்து நீயும் ஜீவநமிடாவிட்டால் எங்ஙனே தரிக்கும்படி? [நளிர்ந்த இத்யாதி] - அநுஸந்தித்தார் ஹ்ருதயம் குளிரும்படியான ஶீலகுணத்தை. "ஆழ்வாரபேக்ஷிதஞ் செய்தருளினான்" என்கிற கல்யாணகுணத்தை. [உலகமூன்றுடன்வியப்ப] - விலக்ஷணரோடு அவிலக்ஷணரோடு வாசியற எல்லாருமொக்கஅநுபவித்து விஸ்மயப் படும்படியாக. [நாங்கள் இத்யாதி] - நாங்கள் விஸ்மயப்படுமளவன்றிக்கே, விக்ருதராம் படி. இவர்க்கு விஸ்மயப்பட அவஸரமில்லையாயிற்று. [பளிங்கு நீர்முகிலின் பவளம் போல்கனிவாய்சிவப்ப] - தெளிந்தநீரை முகக்கையாலே ஊர்ஜ்ஜஸ்யமான மேகமானது பவளத்தைப்பூத்தாற்போலேயாயிற்று, திருவதரத்தில் பழுப்பிருப்பது. இவர் ஸம்ப்ரமத்தைக் கண்டு அவன்பண்ணும் ஸ்மிதமிருக்கிறபடி. [நீ காணவாராயே] - என்னெதிரே உன்னழகு காணவரவேணும். அவன்கூத்திருக்கிறபடி. அவன் மாறிமாறிஇடும்அடி, வல்லாராடினாற்போலேகாணும் இருப்பது. பிள்ளையழகியமணவாளவரையரைப் பெருமாள் ஒருநாள் அருளப்பாடிட்டு, "நாம் இங்ஙனே நடக்கிறோம்; நீ அதுக்கீடாக ஆடிக்காண்!" என்ன, "தம்பிரானே! என்னால் அந்நடைக்கீடாக ஆடப்போமோ? "கானகம்படியுலாவியுலாவி" இத்யாதி: தேவருடையகுழலோசையைக்கேட்டவாறே, பாடல்தவிர்ந்தார்கள்! தேவருடைய ஸ்வாபாவிகமானநடைக்குத் தங்களுடைய ஶிக்ஷாபலத்தாலுண்டான ஆடல் தவிர்ந்தார்கள்; தூரக்குக் கைகோடு கூழ்துழாவி அடியேன் தேவர்திருமுன்னே ஆடவல்லேனோ?" என்றாராம். (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

பவளம்போல்கனிவாய்சிவப்ப நீகாணவந்துநின்பல்நிலாமுத்தம்
தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண் தாமரைதயங்க நின்றருளாய்
பவளநன்படர்க்கீழ்ச் சங்குறைபொருநல்தண் திருப்புளிங்குடிக்கிடந்தாய்
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே.

*ஆ.* - (பவளம்போல்.) - வருமிடத்தில், *ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்காகப் பெரியதிருவடிமேலேறிவந்தருளினாற்போலே, கனிவாய்சிவப்ப நீகாணவந்து நின் பல்நிலாமுத்தந்தவழ் கதிர்முறுவல்செய்து, நின்திருக்கண் தாமரைதயங்க நின்றருளாய்! என்கிறார்.*

---

பஹுவசநம். இவர்க்கு விஸ்மயப்படவேண்டாவோவென்ன - இவர்க்கு இத்யாதி. ஸ்படிகம்போலே தெளிந்த நீரையுடைய காளமேகத்தில் பவளம்பூத்தாற்போலே யிருக்கிற கனிவாயானது சிவந்து தோன்றும்படி என்று ஸப்தார்த்தம். "நாங்கள் கூத்தாடிநின்றோர்ப்ப" என்றவநந்தரம், "கனிவாய் சிவப்ப" என்றதுக்கு பாவம் - இவர் ஸம்ப்ரமத்தை இத்யாதி. "நாங்கள் கூத்தாடிநின்றோர்ப்ப வாராய்" என்ற பதச்சேர்த்தியால் பலித்தபாவம் - அவன்கூத்திருக்கிறபடி என்று. அவன்வருவது கூத்தோவென்ன - அவன் மாறிமாறி இத்யாதி. "நடக்கை - கூத்து" என்னுமதுக்கு ஸம்வாதம் - பிள்ளை இத்யாதி. "அவன் நடைக்கீடாக ஆடப்போகாது" என்கைக்குப்பாசுரம் - கானகம் இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி. கானகம்படி - வநபூமி. பாசுரத்துக்கர்த்தம் - தேவருடைய இத்யாதி. தூரக்குக் கை-குரக்குவலித்த கை. தூரக்கு - குரக்குவாதம். 'புளிங்குடிக்கிடந்து' என்றதொடங்கி அடைவே யந்வயம். (ச)

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாற்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

[பல்நிலாமுத்தமென்று தொடங்கி] - பல்லாகிற ஒளியையுடைய முத்து கதிர்புறப்பட முறுவல் செய்து திருக்கண்களாகிற தாமரைவிளங்க நின்றருளாய். [பவள நன்படரென்றுதொடங்கி] - நல்லபவளப்படரின் கீழே ஸங்குகள் நிர்வ்யாபாரமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய் ஸ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [கவளமென்று தொடங்கி] - மத்தமான பெரிய ஆனையினுடைய விடாய் கெடுகைக்காக அகப்பட்டு நின்ற பொய்கையிலே ப்ரதிபக்ஷத்தைக் காயுமசினத்தையுடைய பெரிய திருவடியை நடத்திக்கொண்டு தோற்றினவனே!

ப.—அநந்தரம், என்முன்னே எழுந்தருளிவந்து மந்தஸ்மிதம்பண்ணிக்கொண்டு நின்றருளவேணுமென்கிறார்.

பவளம் - பவளத்தினுடைய, நன் - செறிந்த, படர்க்கீழ் - பரரத்தின்கீழ், சங்கு - சங்குகளானவை, உறை - வர்த்திக்கும்படியான, பொருநல் - திருப்பொருநலையுடைய, தண் - ஸ்ரமஹரமான, திருப்புளிங்குடி — திருப்புளிங்குடியிலே, கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனும், கவளம் - கவளங்கொள்ளுகையே ஸ்வபாவமான, மா - பெரிய, களிற்றின் - கஜேந்த்ரனுடைய, இடர் - ஆயிரம்தேவஸம்வத்ஸரம் நீராஹாரனாய் நின்று க்லேசித்த து:கம், கெட - போம்படியாக, தடத்து - அந்தத்தடாகத்திலே, காய் - (விரோதிவிஷயத்திலே) வெவ்விய, சினம் - சினத்தையுடைய, பறவை - பெரியதிருவடியை, ஊர்ந்தானே - நடத்திக்கொண்டுவந்தவனே! பவளம்போல் - திருப்பொருநலில் பவளப்படரும் சங்கும் செறிந்தாற்போலே, கனி - ஸ்நிக்தமான, வாய் - திருவதரமானது, சிவப்ப - சிவந்துதோன்ற, நின் - உன், பல் - பல்லாய், நிலா - நிற்கிற, முத்தம் - முத்தம்பார்க்கில், கதிர் - கதிரை, தவழ் - உடைத்தாம்படி, முறுவல்செய்து - முறுவல்செய்துகொண்டு, (ஸ்ரீகஜேந்த்ரன்முன்பு வந்தாற்போலே), காண - (நானும்)காணும்படி, நீ வந்து- நீ ஸத்வரனாய்வந்து, நின் - உன்னுடைய, திரு- அழகிய, கண் - திருக்கண்களாகிற, தாமரை - தாமரையானது, தயங்க - விளங்கும்படி, நின்றருளாய் - ப்ரீதிதோன்ற நின்றருளவேணும். படர் - பற்றை.

இ.—அஞ்சாம் பாட்டில், ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

[பவளம்போல் இத்யாதி] - "ஸ்வாகூநாஜ:" என்கிறபடியே ஒன்றுக்கும் விக்ருதனாகாத நீ, அநுகூலஸ்பர்ஸத்தாலே அகவாயில் ஸந்தோஷம்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணி நிற்கும்படியைக் காணவேணும் [பல்நிலாமுத்தம்] - பல்லாகிற நிலாவையுடைய திருமுத்து நிரையானது. [தவழ்கதிர் முறுவல்செய்து]-கதிர் தவழும்படி - கதிர் புறப்படும்படி, முறுவல்செய்து. [நின்திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்]-திருக்கண்களாகிற தாமரை விளங்க காலடிவந்து, மூடியவரமாட்டாதே ஸ்தப்தனாய்நிற்கும் நிலையைக் காணவேணும். கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகை - தக்காலத்தில் ஒளியாதல், கடல்சலித்தாற்போலே யசைந்து வருகிறபடியாதல். [பவளநன்படரித்யாதி]- நல்லபவளப்படரின் கீழே ஸங்குகள் நிர்வ்யாபாரமாய் வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய் ஸ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! படர் - தூறு.

நிர்ப்பயமாக பவளத்தூற்றிலே ஶங்குகள் வர்த்திக்கையாலே அவ்வூரில் பதார்த்தங்களுக்கு ப⁴யகங்களால் அச்சமில்லையென்கை. [கவள மாகளிறு] - கவளங்கொண்டிருப்பதான பெரிய ஆனை. கவளங்கொண்டவென்ற இத்தால் - மதமுதித மென்கை. இதுக்கு முன்புஇடர் பட்டறியாதஆனை. [இடர்கெடத்தடத்து]-தன்னிலமல்லாத பொய்கையிலே ஒருக்ஷுத்ர பதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப்போக. [காய்சினப் பறவையூர்ந்தானே] - ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தையுடைய பெரிய திருவடியை அவன் வேகம் போராமே அவனைப்பேரித்துக்கொடுவந்து தோற்றிற்றிலையோ? ஆனையின் ஊமைகேடாய் என்னுமை. அதுக்கு வந்து தோற்றினாற்போலே என் முன்னேவந்து தோற்றவேணும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஸ்ரீ க³ஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

[பவளமித்யாதி] - "அவாக்யநாத³ர:" (அவாக்யநாதர:) என்கிறபடியே ஒன்றுக்கும் விக்ருதனாகாத நீ, அநுகூல த³ர்ஶநத்தாலே யகவாயில் ஸந்தோஷம் தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணிநிற்கும்படியைக் காணவேணும். [நின்பல்நிலாமுத்தம்] - பல்லாகிற நிலாவையுடைய முத்துநிரையானது. [தவழ்கதிர்முறுவல்செய்து] - 'கதிர் தவழ் முறுவல்செய்து' - கதிருள்ளடங்காதே புறம்பே தவழும்படி. முத்தத்திலே பல்நிலாக்கதிர் தவழும்படி. முத்தம் - அதரம். கதிர்புறப்படும்படி முறுவல்செய்து. [நின்திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்]- கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகையாவது - அப்போதுபிறந்தவொளியாதல், கடல்சலித்தாற்போலே யசைந்துவருகிறபடியைச் சொல்லிற்றாதல். [நின்றருளாய்] - முந்துற நாலடிவந்து, பின்னை அதுவும் மாட்டாதே ஸ்தப்⁴யனாய் நிற்கும்நிலை காணவேணும் [பவளமித்யாதி] - நல்ல பவளப்படரின்கீழே சங்குகள் நிர்ப்பாதமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய், மநோஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! படர்-தூறு. அவ்வூரில் பதார்த்தங்களுக்கு, ப⁴யகத்துக்கு பயப்பட்டுவர்த்திக்குமது இல்லையாயிற்று. அத்தேஶஸ்வபா⁴வம் இதுவாயிருக்க, "எனக்கு உன்னைக்கிடைக்குமோ? கிடையாதோ?" என்று நான் பயப்படும்படியிருக்கிறதென்? [கவளமித்யாதி] - கவளங்கொண்டிருப்பதான பெரிய ஆனை. கவளங்கொண்ட என்ற இத்

அஞ்சாம்பாட்டு.—பவளம்போல் இத்யாதி. "கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸ்ரீ க³ஜேந்த்ர இத்யாதி.

ஸ்மிதத்துக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் - அவாக் இத்யாதி. அவாக் - வார்த்தை சொல்லக்கடவனன்றிக்கேயிருக்குமவன், அநாதர: - ஆத³ர்த்தவ்யவிஷயமில்லாமையாலே அநாதரித்திருக்குமவன் இதிஶ்ருத்யர்த்த:. பவளம்போலே ஸ்நிக்தமான திருவதரமானது சிவந்துதோன்ற, அத்தை நான்காணும்படி நீவந்தென்று ஸப்தார்த்த:. முக்தினவர்த்தத்துக்கு, "நிலா" என்று - ஒளியாய், திருமுத்துக்கு விசேஷணமாய், பல்லாகிற நிலாவையுடைய திருமுத்து நிரையினுடைய கதிரானது தவழும்படி முறுவல்செய்தென்றபடி அர்த்தாந்தரம் - முத்தத்திலே இத்யாதி. அதாவது - "நிலா" என்றும், "கதிர்" என்றும் - ஒளியாய், இரண்டாலும் - மிக்கதேஜஸ்ஸைச்சொல்லி, பல்லினுடைய மிக்கதேஜஸ்ஸானது, முத்தத்திலே - அதரத்திலே, தவழும்படி முறுவல்செய்தென்றபடி. அதரத்திலே கதிர்தவழுகையாவது - கதிர் புறப்படுகை. பதச்சேர்த்தியால் ஸித்தபா⁴வம் - கண்ணினுடைய இத்யாதி. "காணவந்து" என்றத்தோடே. "நின்றருளாய்" என்றத்தையுங்கூட்டி அர்த்தம் - முந்துற இத்யாதி. "நன் - பவளம் - படர்க்கீழ்" என்று அந்வயிப்பது. படர் - தூறு. இத்தால்பா⁴வம் - அவ்வூரில் இத்யாதி. ஸார்த்தபா⁴வம் - அத்தேஶஸ்வபா⁴வம் இத்யாதி. "கவளங்கொண்ட" என்றத்

தால் - மதமுதிதமென்கை. இதுக்குமுன்பு இடர்பட்டறியாத ஆனை [இடர்கெட] - "வாராயென்றிடரைநீக்காய்" என்று, தன்வாயாலே "ஆரிடர்" என்னும்படியிறே பட்ட இடரின் கனம். "ஆனையின்துயரம்" என்று நெஞ்சுளுக்கும்படியிறே பட்டது. [தடத்து] - தன்நிலமல்லாத பொய்கையிலே க்ஷுத்ரபதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியை யின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப் போம்படியாக. தடமென்று - கரைக்கும், பொய் கைக்கும் பேர். [காய்சினப்பறவையூர்ந்தானே] - ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தை யுடைய பெரியதிருவடியை, அவன்வேகம்போராமை அவனைப்ரேரித்துக்கொண்டுவந்து தோற்றிற்றிலையோ? அவ்வானையின் உளைகிடாய் என்னுளை! அதுக்குத் தோற்றினாற் போலே என்முன்னேவந்து தோற்றியருளவேணும். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல்
மாசினமாலிமாலிமானென்று அங்கவர்படக்கனன்றுமுன்நின்ற
காய்சினவேந்தே! கதிர்முடியானே! கலிவயல்திருப்புளிங்குடியாய்!
காய்சினவாழிசங்குவாள்வில்தண்டேந்தி எம்மிடர்கடிவானே!

*ஆ.—(காய்சினப்பறவையூர்ந்து.) - உம்முடைய மனோரதங்களுக்கு ப்ரதி பந்தகங்களில்லையோ? ஸஹஸா முடியுமோவென்னில் ?—என்னுடைய மனோரதப்ரதி பந்தகங்களைப் போக்குகைக்காக வன்றோ, சங்க சக்ர கதா சார்ங்காதி திவ்யாயுதங் களை ஏந்தியருளியிருக்கிறது? ஆனபின்பு, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே காய்சினப் பறவையூர்ந்து, மாலி சுமாலி மால்யவத்ப்ரப்ருத் யஸுரநிரஸநம்பண்ணி யருளினாற்போலே இந்த ப்ரதிபந்தகத்தையும் நீயே போக்கி என்னுடைய மனோரதத் தையும் முடித்தருளவேணு மென்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், உன்னுடைய அபிலஷிதங்கள் செய்யவொண்ணாத படி ப்ரதிபந்தகங்களுண்டேன்னில்; ஆச்ரிதருடைய ஆபத்துப் போக்குகைக்காக திவ்யாயுதங்களேந்தியிருக்கிற நீ, மாலிப்ரப்ருதிகளான ராக்ஷஸரை முடித்தாற்போலே என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீயே போக்கியருளவேணுமென்கிறார்.*

*[காய்சினப்பறவையென்று தொடங்கி] - மேருஶிகரத்திலேயேறி மேகம் படிந்தாற்போலே ப்ரதிபக்ஷத்தைக் காயும்சினத்தையுடைய பெரியதிருவடியை நடத்*

---

*தால் ஸவித்தஸாவம் - கவளங்கொண்ட இத்யாதி. "மதமுதிதம்" என்றதுக்குஸாவம் - இதுக்கு முன்பு இத்யாதி. 'மாகளிற்றினிடர்" என்றதுக்கு - களிற்றினுடைய பெரியஇடரென்று விவக்ஷித்து, அப்படி பெரியஇடருண்டோவென்ன, ப்ரமாணம் - வாராய் இத்யாதி; சிறியதிருமடல். ஆரிடர் - மிக்கவிடர். ஆர் - மிகுதி. இடர் - துக்கம். ப்ரமாணாந்தரம் - ஆனையின்துயரம் இத்யாதி. நெஞ் சுளுக்கும்படி - ஈடுபடும்படி. களிற்றினிடர் கெடவென்றதே, "தடத்து" என்று விசேஷித்ததுக்கு ஸாவம் - தன்நிலம் இத்யாதி. காய்கை - ஹிம்ஸிக்கை. சினம் - கோபம். "இடர்கெட" என்ற திலே நோக்காகஸாவம்-அவ்வானை இத்யாதி. 'ஊர்ந்தானே" என்றதிலேநோக்காக ஸாவம் - அதுக்கு இத்யாதி. பவளநன்படர்க்கீழென்றதொடங்கி, காய்சினப்பறவையூர்ந்தானே - நீ பவளம்போல் கனி வாய்சிவப்ப - காணவந்து, நின்பல்நிலா இத்யாரப்ய, நின்றருளாய் இத்யந்வயம்.* (ரு)

*நிர்பயமாக பவளத்தூற்றிலே ஶங்குகள் வர்த்திக்கையாலே அவ்வூரில் பதார்த்தங்களுக்கு பயகங்களால் அச்சமில்லையென்கை. [கவளமாகளிறு] - கவளங்கொண்டிருப்பதான பெரிய ஆனை. கவளங்கொண்டவென்ற இத்தால் - மதமுதித மென்கை. இதுக்கு முன்பு இடர் பட்டறியாத ஆனை. [இடர்கெடத்தடத்து] - தன்னிலமல்லாத பொய்கையிலே ஒரு க்ஷுத்ர பதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப்போக. [காய்சினப் பறவையூர்ந்தானே] - ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ் சினத்தையுடைய பெரிய திருவடியை அவன் வேகம் போராமே அவனைப்பேரித்துக் கொடுவந்து தோற்றிற்றிலையோ? ஆனையின் ஊமைகிடாய் என்னுமை. அதுக்கு வந்து தோற்றினாற்போலே என் முன்னேவந்து தோற்றவேணும்.*

௫டு.—அஞ்சாம்பாட்டு. ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

[பவளமித்யாதி] - ''அவாக்யநாதர:'' (அவாக்யநாதர:) என்கிறபடியே ஒன்றுக்கும் விக்ருதனாகாத நீ, அநுகூல தர்ஶநத்தாலே யகவாயில் வைஶ்யந்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணிநிற்கும்படியைக் காணவேணும். [சின்பல்நிலாமுத்தம்] - பல்லாகிற நிலாவையுடைய முத்துநிரையானது. [தவழ்கதிர்முறுவல்செய்து] - 'கதிர் தவழ் முறுவல்செய்து' - கதிருள்ளடங்காதே புறம்பே தவழும்படி. முத்தத்திலே பல்நிலாக்கதிர் தவழும்படி. முத்தம் - அதரம். கதிர்புறப்படும்படி முறுவல்செய்து. [நின்திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்] - கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகையாவது - அப்போதுபிறந்தவொளிபாதல், கடல்சலித்தாற்போலே யசைந்துவருகிறபடியைச் சொல்லிற்றாதல். [நின்றருளாய்] - முந்துற நாலடிவந்து, பின்னை அதுவும் மாட்டாதே ஸ்தப்யனாய் நிற்குமிலை காணவேணும் [பவளமித்யாதி] - நல்ல பவளப்படரின்கீழே சங்குகள் நிர்ப்பாதமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய், ஶ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! படர்-தூறு. அவ்வூரில் பதார்த்தங்களுக்கு, பாயகத்துக்கு பயப்பட்டுவர்த்திக்குமது இல்லையாயிற்று. அத்தேஶஸ்வபாவம் இதுவாயிருக்க, ''எனக்கு உன்னைக்கிடைக்குமோ? கிடையாதோ?''என்று நான் பயப்படும்படி யிருக்கிறதென்? [கவளமித்யாதி] - கவளங்கோண்டிருப்பதான பெரிய ஆனை. கவளங்கோண்ட என்ற இத்

*அஞ்சாம்பாட்டு.—பவளம்போல் இத்யாதி. ''கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய் சினப்பறவையூர்ந்தானே'' என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸ்ரீ கஜேந்த்ர இத்யாதி.*

*ஸ்மிதத்துக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் - அவாக் இத்யாதி. அவாக - வார்த்தை சொல்லக்கடவனன்றிக்கேயிருக்குமவன், அநாதர: - ஆதர்த்தவ்யவிஷயமில்லாமையாலே அநாதரித்திருக்குமவன் இதிஶ்ருத்யர்த்த:. பவளம்போலே ஸ்நிக்தமான திருவதரமானது சிவந்துதோன்ற, அத்தை நான்காணும்படி நீவந்தென்று ஶப்தார்த்த:. முந்தினவர்த்தத்துக்கு, ''நிலா'' என்று - ஒளியாய், திருமுத்துக்கு விசேஷணமாய், பல்லாகிற நிலாவையுடைய திருமுத்து நிரையினுடைய கதிரானது தவழும்படி முறுவல்செய்தென்றபடி. அர்த்தாந்தரம் - மூத்தத்திலே இத்யாதி. அதாவது - ''நிலா'' என்றும், ''கதிர்'' என்றும் - ஒளியாய், இரண்டாலும் - மிக்கதேஜஸ்ஸைச்சொல்லி, பல்லினுடைய மிக்கதேஜஸ்ஸானது, மூத்தத்திலே - அதரத்திலே, தவழும்படி முறுவல்செய்தென்றபடி. அதரத்திலே கதிர்தவழுகையாவது - கதிர் புறப்படுகை. பதச்சேர்த்தியால் ஹலித்தஹாவம் - கண்ணினுடைய இத்யாதி. ''காணவந்து'' என்றத்தோடே. ''நின்றருளாய்'' என்றத்தையுங்கூட்டி அர்த்தம் - முந்துற இத்யாதி. ''நன் - பவளம் - படர்க்கீழ்'' என்று அன்வயிப்பது. படர் - தூறு. இத்தால்ஹாவம் - அவ்வூரில் இத்யாதி. ஹார்த்தஹாவம் - அத்தேஶஸ்வஹாவம் இத்யாதி. ''கவளங்கொண்ட'' என்றத்*

தால் - மதமுதிதமென்கை. இதுக்குமுன்பு இடர்பட்டறியாத ஆனை [இடர்கெட] - "வாராயென்னுரிடரைநீக்காய்" என்று, தன்வாயாலே "ஆரிடர்" என்னும்படியிறே பட்ட இடரின் கனம். "ஆனையின்துயரம்" என்று நெஞ்சுளுக்கும்படியிறே பட்டது. [தடத்து] - தன்நிலமல்லாத பொய்கையிலே க்ஷுத்ரபதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியை யின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப் போம்படியாக. தடமென்று - கரைக்கும், பொய்கைக்கும் பேர். [காய்சினப்பறவையூர்ந்தானே] - ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தையுடைய பெரியதிருவடியை, அவன்வேகம்போராமை அவனைப்ரேரித்துக்கொண்டுவந்து தோற்றிற்றிலையோ? அவ்வானையின் உளைகிடாய் என்னுளை! அதுக்குத் தோற்றினாற்போலே என்முன்னேவந்து தோற்றியருளவேணும். (ரு)

# ஆறும் பாட்டு.

---

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல்
மாசினமாலிமாலிமானென்று அங்கவர்படக்கனன்றுமுன்நின்ற
காய்சினவேந்தே! கதிர்முடியானே!கலிவயல்திருப்புளிங்குடியாய்!
காய்சினவாழிசங்குவாள்வில்தண்டேந்தி எம்மிடர்கடிவானே!

*ஆ.—(காய்சினப்பறவையூர்ந்து.) - உம்முடைய மனோரதங்களுக்கு ப்ரதிபந்தகங்களில்லையோ? ஸஹஸா முடியுமோவென்னில்?—என்னுடைய மனோரதப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்காக வன்றோ, சங்க சக்ர கதா சார்ங்காதி திவ்யாயுதங்களை ஏந்தியருளியிருக்கிறது? ஆனபின்பு, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே காய்சினப் பறவையூர்ந்து, மாலி சுமாலி மால்யவத்ப்ரப்ருத்யஸுரநிரஸநம்பண்ணியருளினாற்போலே இந்த ப்ரதிபந்தகத்தையும் நீயே போக்கி என்னுடைய மனோரதத்தையும் முடித்தருளவேணு மென்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், உன்னுடைய அபிலஷிதங்கள் செய்யவொண்ணாதபடி ப்ரதிபந்தகங்களுண்டென்னில்; ஆஸ்ரிதருடைய ஆபத்துப் போக்குகைக்காக திவ்யாயுதங்களேந்தியிருக்கிற நீ, மாலிப்ரப்ருதிகளான ராக்ஷஸரை முடித்தாற்போலே என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீயே போக்கியருளவேணுமென்கிறார்.*

*[காய்சினப்பறவையென்று தொடங்கி] - மேருஸிகரத்திலேயேறி மேகம் படிந்தாற்போலே ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தையுடைய பெரியதிருவடியை நடத்*

---

*தால் ஃபலித்தபாவம் - கவளங்கொண்ட இத்யாதி. "மதமுதிதம்" என்றதுக்குபாவம் - இதுக்குமுன்பு இத்யாதி. "மாகளிற்றினிடர்" என்றதுக்கு - களிற்றினுடைய பெரியஇடரென்று விவக்ஷித்து, அப்படி பெரியஇடருண்டோவென்ன, ப்ரமாணம் - வாராய் இத்யாதி; சிறியதிருமடல். ஆரிடர் - மிக்கவிடர். ஆர் - மிகுதி. இடர் - துக்கம். ப்ரமாணாந்தரம் - ஆனையின்துயரம் இத்யாதி. நெஞ்சுளுக்கும்படி - ஈடுபடும்படி. களிற்றினிடர் கெடவென்னாதே, "தடத்து" என்று விசேஷித்ததுக்கு பாவம் - தன்நிலம் இத்யாதி. காய்கை - ஹிம்ஸிக்கை. சினம் - கோபம். "இடர்கெட" என்றதிலே நோக்காகபாவம்-அவ்வானை இத்யாதி. "ஊர்ந்தானே" என்றதிலேநோக்காக பாவம் - அதுக்கு இத்யாதி. பவளநன்படர்க்கீழென்றதொடங்கி, காய்சினப்பறவையூர்ந்தானே - நீ பவளம்போல் கனிவாய்சிவப்ப - காணவந்து, நின்பல்நிலா இத்யாரப்ய, நின்றருளாய் இத்யந்வய:.* (ரு)

திக்கொண்டு வந்து, பெரிய சினத்தையுடையரான மாலி மால்யவான் தொடக்கமான அஸுரர்கள் அங்கே முடியும்படி சீறி, அவர்கள் முன்பே நின்ற காயும் சினத்தையுடைய வேந்தே! [கலிவயல் திருப்புளிங்குடியாய்] - "அதுபண்டிறே" என்னவொண்ணாதபடி ஸம்ருத்தமான திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே! இப்பாட்டில் க்ரியை மேலிற்பாட்டிலே.

ப.—அநந்தரம், உகவாதார்முன்னேயகப்படப் பெரியதிருவடியை மேற்கொண்டு சென்று நின்ற நீ, உகந்துகாண ஆசைப்பட்ட என்முன்னே அப்படி அவனை மேற்கொண்டுவந்து நின்றருளவேணு மென்கிறார்.

பொன் - கநகமயமான, மலையின் - மஹாமேருவின், மீமிசை - மேலேபடிந்த, கார்முகில்போல - காளமேகம்போலே, காய்-(விரோதிவிஷயத்திலே) வெவ்விய, சினம் - சீற்றத்தையுடைய, பறவை - பெரியதிருவடியை, ஊர்ந்து - நடத்திக்கொண்டு, காய் - ப்ரதிபக்ஷங்களிலே காலாக்நிகல்பமான, சினம் - சினத்தையுடைய, ஆழி சங்கு வாள் வில் தண்டு - ஸ்ரீபஞ்சாயுதத்தையும், ஏந்தி-, மா-பெரிய, சினம் - சினத்தையுமுடைய, மாலி-, மான் - மஹானான, மாலி - சுமாலி, என்று - என்றுப்ரஸித்தரான, அவர் - அவர்கள், அங்கு - அந்தயுத்தபூமியிலே, பட - நசிக்கும்படி, ("காலாக்நிஸத்ருஶ: க்ரோதே" என்கிற கணக்கிலே), கனன்று - பெரியசீற்றத்தோடே, முன் - (உகவாதார்)முன்னே, நின்ற - (இவ்வழகைக்காட்டி) நின்றவனாய், ("அங்கருளில்லாத்தன்மையாளன்" என்னும்கணக்கிலே), காய் - விரோதிகளுக்கு தாஹகமான, சினம் - க்ரோதகுணத்தையுடைய, வேந்தே—ஸ்வாமியாய், கதிர் - விரோதிவர்க்கம் மடிகையாலே ஒளிவிடுகிற, முடியானே - திருவபிஷேகத்தை யுடையவனாய், (ஆஶ்ரிதார்த்தமாக), கலி - ஸம்ருத்தமான, வயல் - வயலையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானாய், (அவ்வழியாலே), எம் - எங்களுடைய, இடர் - அநுபவாலாபரூபமான து:கத்தை, கடிவானே - கழிக்கக் கடவனாயிருக்கிறவனே! அந்த வாஹநத்தோடும் ஆயுதங்களோடும் திருவபிஷேகத்தோடும் நான் காணும்படியாகவந்து நின் திருக்கண்தாமரை தயங்க நின்றருளாய்! என்று கீழே அந்வயம்.

இ—ஆறும்பாட்டில், உம்முடைய அபேக்ஷிதங்கள் செய்யவொண்ணாதபடி ஆனையிற்காட்டில் ப்ரபல ப்ரதிபந்தகங்களுண்டே யென்ன; மாலிப்ரப்ருதி ராக்ஷஸரிலும் வலிதோ என்னுடைய ப்ரதிபந்தகம்? என்கிறார்.

[காய்சினப் பறவையூர்ந்து] - ப்ரதிபக்ஷத்தில் உனக்குத் தண்ணளியுண்டாகிலும் கண்ணற்றழியச் செய்யும் பெரிய திருவடியை நடத்தி. [பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல்] - அப்போதிருக்கும்படி மேருவைக்கிளிய ஒரு காளமேகம் படிந்தாற்போலே. இப்போது இதுசொல்லுகிறது - பெரியதிருவடி முதுகில் இருப்பைக் காண்கைக்காக. [மாசினமாலி] - பெரியசினத்தை யுடையனாய்க் கொண்டு வந்தமாலி [மாலிமான்] - மஹானான மாலி, ஸுமாலி யென்றபடி. [என்று அங்கவர்பட] - என்கிறவர் அங்கே முடியும்படியாக. [கனன்று முன்நின்ற] - சீறி; அவர்கள்முன்னே நின்ற; வடிவைக் கண்டபோதே எதிரிகள் முடியும்படியிறே வீரமிருப்பது. [காய்சினவேந்தே]- திருநாமம். காயுஞ்சினத்தையுடைய நிர்வாஹகனே! [கதிர்முடியானே] - விளங்கா நின்ற திருவபிஷேகத்தை யுடையவனே! நீர் ரக்ஷகத்வத்துக்கு முடிசூடியிருக்க, நான் இழக்கவோ? [கலிவயல் திருப்புளிங்குடியாய்] - நீ தூரஸ்தனென்று தான் இழக்

கிறேனே? ஸம்ருத்தமான வயலையுடைய திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளின வனே! [காய்சினவாழி இத்யாதி] - காயுஞ் சினத்தையுடைய திருவாழி முதலான திவ்யாயுதங்களை தரித்தது ஆஶ்ரிதருடைய ஆபத்துக்களைப் போக்குகைக்கன்றோ? மேலிற்பாட்டிலே இப்பாட்டுக்குக் க்ரியை.

ஈடு.—ஆறும்பாட்டு. உம்முடைய அபேக்ஷிதங்கள் செய்யவொண்ணாதபடி ப்ரதிபந்தகங்கள் ப்ரபலமன்றோ என்னில்? — 'மாலி, சுமாலி, மால்யவான் இவர்களி லும் வலிதோ என் ப்ரதிபந்தகம்?' என்கிறார்.

[காய்சினப்பறவையூர்ந்து] - ப்ரதிபக்ஷத்தில் உனக்குக் கண்ணோடிலும் கண் ணற்றழியச்செய்யும் பெரிய திருவடியை நடத்தி. [பொன்மலையின்மீமிசைக்கார்முகில் போல்] - அப்போதிருக்கும்படி. மேருவைக்கினிய காளமேகம் படிந்தாற்போலேயாயிற்று இருப்பது. இப்போது இது சொல்லுகிறது - பெரியதிருவடி முதுகிலிருப்பைக் காண்கைக் காக. [மாசினமாலி] - பெரியச்சினத்தை யுடையனுய்க்கொண்டு வந்த மாலி. [மாலி மான்] - மஹானான மாலி. சுமாலியென்றபடி. [என்று அங்கவர்பட] - என்கிறவர்கள் அங்கே முடியும்படியாக. [கனன்றுமுன்னின்ற] - சீறி அவர்கள்முன்னேநின்ற. வடிவைக் கண்டபோதே எதிரிகள் முடியும்படியாயிறே வீரமிருப்பது. [காய்சினவேந்தே] - திருநாமம். காயுஞ்சினத்தையுடைய நிர்வாஹகனே! [கதிர்முடியானே] — விளங்காநின்ற திருவபிஷே கத்தை யுடையவனே! நீ ரக்ஷணத்துக்கு முடிசூடியிருக்க, நான் இழக்கவோ? [கலிவயல் திருப்புளிங்குடியாய்] - நீ தூரஸ்த்தனுய்த்தான் இழக்கிறேனே? ஸம்ருத்தமான்வயலையு டைய திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [காய்சினவாழி இத்யாதி]-காயுஞ் சினத்தையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களை தரித்தது ஆஶ்ரிதருடைய ஆபத் தைப் போக்குகைக்காகவன்றோ? ''எம்மிடர்கடிவானே - திருக்கண்தாமரைதயங்க நின் றருளாய்'' என்று கீழிற்பாட்டிலே இப்பாட்டுக்கு க்ரியை. (௬)

---

ஆறும்பாட்டு.—காய்சினம் இத்யாதி. ''மாசினமாலிமாலிமான்'' என்று தொடங்கி ''கனன்று'' என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - உம்முடைய இத்யாதி.

''காய்சினம்'' என்று விசேஷித்ததுக்கு ஊவம் - ப்ரதிபக்ஷத்தில் இத்யாதி. அன்றிக்கே, ''காய்சினப்பறவை காய்சினவேந்தே'' என்ற பதங்களைக் கடாக்ஷித்து ஊவமாதல். கண்ணற்று - நிர்த் தயமாய். கண்-க்ருபை. இப்போதுஇது சொல்லுகிறதென்றது - வருத்துச்சொல்லுகிறதென்றபடி. மீமிசை - மேலே. கினிய - கபளீகரிக்க. மாலியையும் சுமாலியையுஞ்சொன்னது - மால்யவானுக்கும் உபலக்ஷணம். சுமாலியும் மால்யவானும் ஓடிப்போகையாலே, ''அவர்பட'' என்று - தேஜோவதத்தைச் சொல்லுகிறது. ''மான்மாலி-'' மஹானானமாலி. ''என்று - அவர் - அங்கு - பட -'' என்று ப்ரவிசித்த ரானவர்கள் அந்தயுத்தபூமியிலே படவென்று ஸம்பந்தார்த்தம். கனன்று - சீறி. ஹிம்ஸியாதே, சீறி முன்னே நிற்பனென்னென்ன - வடிவை இத்யாதி. அர்வர்த்தநாமமென்கிறார் - காயும்சினத்தை இத்யாதி. இதுக்குஊவம் - நீ ரக்ஷணத்துக்கு இத்யாதி. கலி - ஸம்ருத்தி. ''திருப்புளிங்குடியாய்'' என்றதுக்குஊவம்-நீ தூரஸ்த்தனுய் இத்யாதி. ''எம்'' என்று - ஆஶ்ரிதரைச்சொல்லுகிறது. இப்பாட் டுக்கு க்ரியையைக் காட்டுகிறார் - எம்மிடர் இத்யாதி, 'பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல - காய்சினப்பறவையூர்ந்து - காய்சினவாழிசங்கு வாள்வில்தண்டேந்தி - மாசினமாலிமாலிமானென்று அவர் - அங்கு - படக் கனன்று முன்னின்ற காய்சினவேந்தே' என்று தொடங்கி, 'திருப்புளிங்குடி யாய் - எம்மிடர்கடிவானே - நின்திருக்கண்தாமரை தயங்க நின்றருளாய்' இத்யன்வயம். (௬)

## ஏழாம் பாட்டு.

---

**எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானே! இமையவர்தமக்குமாங்கனையாய் !
செம்மடல்மலருந்தாமரைப்பழனத்தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்!
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்து நாம்களித்துளநலங்கூர
இம்மடவுலகர்காணநீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே.**

**ஆ.—(எம்மிடர்.)** உத்கர்ஷாபகர்ஷவிபாகமின்றியே ஸர்வாத்மாக்களுக்கும் நீயல்லது வேறு ரக்ஷகருளரோ? ஆனபின்பு, உனக்கு நல்லராயிருப்பார் நீயிருந்தருளு மிருப்பைக் கண்டால் படும் பாடு கண்டு நாங்கள்வாழும்படியாக, இந்தலோகத்திலுள்ள வர்கள் காணும்படி எங்கள் கண்ணெதிரே நீ ஒருநாள் இருந்திடாய் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியின்றிக்கே ரக்ஷகனான நீ, நாங்கள் வாழும்படி எங்கள் கண்ணெதிரே ஒருநாளிருந்திடாய் என்கிறார்.

[எம்மிடரென்று தொடங்கி] - ஸாம்ஸாரிகஸகலது:கங்களையும் போக்கி இங்கே என்னை ஆளுகிறவனே! எத்தனையேனும் அபிமாநிகளான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் அங்கு அப்படி நிர்வாஹகனானவனே! ஸம்ருத்தமான பழனங்களையுடைத்தாய் ப்ரமஹாரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [நம்முடையடியர் என்று தொடங்கி] - திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களுடைய ஸம்ப்ரமத்தைக்கண்டு நாங்கள் களித்து மிகவும் ப்ரீதராக, இந்த லோகத்திலுள்ள ஸாதுக்கள் காணும்படி.

**ப.**—அநந்தரம், அளவிலிகளான எங்களோடு அளவுடையாரோடு வாசியற ரக்ஷகனான நீ, அஸாதாரணஶேஷபூதரான ஸூரிகளநுபவிக்கிற கீர்த்தியைக் கண்டு நாங்களுகக்கும்படி எங்கள் கண்முகப்பே யிருந்தருளவேணுமென்கிறார்.

எம் - எங்களுடைய, இடர் - அவித்யாதி க்ருதமான ஸகல து:கங்களையும், கடிந்து - போக்கி, இங்கு - இந்த பூமியிலேவைத்து, என்னை-, ஆள்வானே - அடிமை கொண்டு போருமவனே, இமையவர்தமக்கும் - அநிமிஷரான ப்ரஹ்மாதி தேவர்களுக்கும், ஆங்கு - அங்கு, அனையாய் - அப்படி அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து ரக்ஷிக்குமவனே, செம் - சிவந்த, மடல் - இதழ், மலரும் - மலருகிற, தாமரை - தாமரையையுடைத்தான, பழனம் - நீர்நிலங்களையுடைய, தண் - குளிர்ந்த, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தாய் - ஆஶ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே! நம்முடை - நம்முடையாரென்னும்படி, அடியர் - உனக்குஅஸாதாரண ஶேஷபூதரான ஸூரிகளுடைய, கவ்வைகண்டு- (அநுபவஜநிதமான) கோலாஹலத்தைக் கண்டு, நாம் - நாங்கள், உகந்து - உகந்து, களித்து - ஆநந்திகளாய், உளம் - நெஞ்சிலே, நலம் - ப்ரேமமானது, கூர - வர்த்திக்கும்படியாக, மடம் - வாசியறியாத, இ - இந்த, உலகர் - லோகத்தாரும், காண - காணும்படி, நீ - (நித்யஸூரிகளை என்றுமிருந்து அநுபவிப்பிக்கிற) நீ, ஒருநாள் - ஒருநாளாகிலும், எங்கள் கண்முகப்பே — இருந்திடாய் - இருந்தருளவேணும்.

இ.—ஏழாம்பாட்டில், துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியற ரக்ஷகனான நீ நாங்கள் வாழும்படி கண்ணெதிரே ஒருநாளிருக்கவேணுமென்கிறார்.

[எம்மிடர் கடிந்து]-எங்களுடைய ஸாம்ஸாரிக ஸகலது:க்கங்களையும் போக்கி. [இங்கு என்னையாள்வானே] - பகவஜ்ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத இஹலோகத்திலே அடிமைகொள்ளுகிறவனே! [இமையவர் தமக்குமாங்கனையாய்] - அகிஞ்சநரான எங்களுக்கேயன்றிக்கே, "ஸம்ஸ்வரோஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் அங்கு அப்படி நிர்வாஹகனானவனே! [செம்மடலித்யாதி]-சிவந்தமடல் மலராநின்றுள்ள தாமரையையுடைய நீர்நிலங்களை யுடைத்தாய் ஸ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [நம்முடையித்யாதி] - உன்னடியார் உன்னையநுபவிக்கிற ஆரவாரத்தைக் கண்டு நாங்களுகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. [இம்மடவுலகர்காண] - அஜ்ஞரான ஸம்ஸாரிகளநுபவிக்கும்படி எங்கள் கண்வட்டத்திலே ஒருநாளிருந்தருளவேணும். நித்யஸூரிகளுக்கு ஸதாதர்ஸந விஷயமான நீ, ஒரு நாள் எங்கள் கண்ணுக்கு விஷயமாயிருந்தாலாகாதோ? உன்னுடைய தர்ஸநம் அதிக்ருதாதிகாரமாகவேணுமோ?

ஈடு.—ஏழாம்பாட்டு. துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியற ரக்ஷகனை நீ, நாங்கள் வாழும்படி கண்ணெதிரே ஒருநாளிருக்கவேணு மென்கிறார்.

[எம்மிடர்கடிந்து] - எங்களுடைய ஸாம்ஸாரிக ஸகலது:கங்களையும் போக்கி. [இங்கென்னையாள்வானே] - பகவஜ்ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத இஹலோகத்திலே என்னை அடிமைகொள்ளுகிறவனே! [இமையவர் தமக்குமாங்கனையாய்] - அகிஞ்சநரான எங்களுக்கே யன்றிக்கே, "ஸம்ஸ்வரோஹம்" (ஸம்ஸ்வரோஹம்) என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் அங்கு அப்படி நிர்வாஹகனானவனே! [செம்மடலித்யாதி] - சிவந்த மடல் மலராநின்றுள்ள தாமரைகளையுடைய நீர்நிலங்களை யுடைத்தாய், ஸ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! உள்ளும் புறம்புமெல்லாம் தாமரையாயிற்று. [நம்முடையித்யாதி] - உன்னடியார் உன்னையநுபவிக்கிற ஆரவாரத்தைக்கண்டு நாங்கள் உகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு, ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. [இம்மடவுலகர்காண] - இந்த ஸம்ஸாரத்தில் அறிவுகேடராய், இடக்கை வலக்கையறியாதவர்களும் கண்ணாலே காணும்படியாக. [நீ ஒருநாளிருந்திடாய் எங்கள்கண்முகப்பே] - எங்கள்கண்வட்டத்திலே ஒருநாள் இருந்தருளவேணும். நித்யஸூரிகளுக்கு ஸதாதர்ஸநவிஷயமான நீ, ஒருநாள் எங்கள்கண்ணுக்கு விஷயமாயிருந்தா லாகாதோ? உன்னுடைய தர்ஸநம் அதிக்ருதாதிகாரமாக வேணுமோ? (எ)

---

ஏழாம்பாட்டு - எம்மிடர் இத்யாதி. "என்னையாள்வானே, இமையவர் தமக்குமாங்கனையாய் - எங்கள் கண்முகப்பே - இருந்திடாய்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - துர்ப்பலரோடு இத்யாதி. "எம்" என்கையாலே - துர்ப்பலரோடு என்றது. "இமையவர்" என்கையாலே - ப்ரபலர்என்றது.

"இங்கு" என்று விசேஷித்ததுக்குபாவம் - பகவஜ்ஜ்ஞாநத்துக்கு இத்யாதி. ஆங்கு - அந்த லோகத்திலே. அனையாய் - அப்படிப்பட்டவனே இத்யர்த்த:. இமையவர்க்குமென்னாதே, "தமக்கும்" என்று விசேஷித்ததுக்குபாவம் - அகிஞ்சநரான இத்யாதி. "செம்மடல் மலரும் தாமரை" என்று - புறத்திலில் தாமரையைச்சொல்லி, "கிடந்தாய்" என்று அவனைச் சொன்னதுக்குபாவம் - உள்ளும் இத்யாதி. "நம்முடை -" உம்முடைய என்றபடி. உன்னடியார் என்றது - திருப்புளிங்குடியில் ஸ்ரீவைஷ்ணவர்களை. கவ்வை - ஆரவாரம். நலம் - ஸ்நேஹம். கூர - மிக்குவர. மடப்பம் - அஜ்ஞாநம். கீழ்வாக்ய விவரணம் - நித்யஸூரிகளுக்கு இத்யாதி. "எங்கள்" என்றதுக்குபாவம் - உன்னுடைய இத்யாதி. எம்மிடர் இத்யாதி, க்ரமேணாந்வய: (எ)

## எட்டாம் பாட்டு.

எங்கள்கண்முகப்பேயுலகர்களேல்லாமிணையடிதொழுதெழுதிறைஞ்சித்
தங்களன்பாரத்தமதுசொல்வலத்தால்தலைத்தலைச்சிறந்துபூசிப்பத்
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய்!திருவைகுந்தத்துள்ளாய்தேவா!
இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாள் இருந்திடாய்வீற்றிடங்கொண்டே.

**ஆ.**—(எங்கள்.) - "நீர்சொல்லிற்றெல்லாம் திருநாட்டிலேசெய்கிறோம்" என்றோ பேசாதிருந்தருளுகிறது? அங்ஙனே செய்தருளவமையாது; எங்கள்கண்ணெதிரே லௌகிகரெல்லாரும் உன்திருவடிகளிரண்டையும் நிரந்தரமாகத்தொழுது க்ருதார்த்தராய், தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய ஶக்த்யநுரூபமான சொற்களாலே மிகவும் மேல்விழுந்து கொண்டாட, இந்தலோகத்திலே இத்திருப்புளிங்குடியிலே பிராட்டியும் நீயுங்கூட ஒருநாளிருந்திடாய்! என்கிறார்.

ஓ.—எட்டாம்பாட்டில், திருநாட்டிலேயன்றோ நீர் அபேக்ஷிக்கிறபடி செய்யலாவதென்னில்; ஸகலலோகங்களும் கொண்டாடும்படி எங்கள் கண்ணெதிரே இஸ்ஸம்ஸாரத்திலே திருப்புளிங்குடியிலே உன்னுடைய வேண்டற்பாடுதோற்ற ஒருநாள் இருந்தருளவேணுமென்கிறார்.

[எங்கள் கண்முகப்பேயென்று தொடங்கி] - எங்கள் கண்ணெதிரே லௌகிகர் எல்லாம் உன்திருவடிகள் இரண்டையும் நிரந்தரமாகத்தொழுது க்ருதார்த்தராய்த் தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய ஶக்த்யநுரூபமான சொற்களாலே மிகவும் மேல்விழுந்து கொண்டாட. [திங்களென்று தொடங்கி] – சந்த்ரபதத்தளவும் உயர்ந்த மாடங்களையுடைய திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனானவனே! அவ்வளவன்றி ஸ்ரீவைகுண்டத்திலேவந்து நின்றருளி மிகவும் விளங்காநின்றுள்ளவனே!

ப.—அநந்தரம், அந்தவிபூதியிலன்றியே, ஸகலலோகங்களுங் கண்டு உன் திருவடிகளிலே விழுந்து தொழுது வாழும்படி, இந்தவிபூதியிலும் திருப்புளிங்குடியிலே உன்வாசிதோற்ற எழுந்தருளியிருக்கவேணுமென்கிறார்.

திங்கள் - (தேவலோகத்தில் மேலெல்லையிலே வர்த்திக்கிற) சந்த்ரன், சேர் - சேரும்படியோங்கின, மாடம் - மாடங்களையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானாய், திருவைகுந்தத்து - திருவைகுந்தத்திலே, உள்ளாய் - எழுந்தருளி நிற்பானாய், தேவா - இந்த ஸௌலப்ய தேஜஸ்ஸையுடையனானவனே! எங்கள் கண்முகப்பே -, உலகர்கள் - லோகத்திலுள்ளார், எல்லாம் - எல்லாரும், அடி - உன் திருவடிகள், இணை - இரண்டையும், தொழுது - தொழுது, எழுது - எழுவதாய்க் கொண்டு, இறைஞ்சி - பாரதந்த்ர்யம் தோன்றும்படி ஸஸம்ப்ரமராய், தங்கள் - தங்களுடைய, அன்பு - ஐக்தியானது, ஆர - வர்த்தியாநிற்க, (அத்தாலே), தமது - தங்களுடைய, சொல் வலத்தால் - உக்திபலாநுரூபமாக, தலைத்தலைச்சிறந்து - ஒருவர்க்கொருவர் அஹமஹமிகையாலே மேல்விழுந்து, பூசிப்ப - ஸ்வைஹ்யமான ஸ்தோத்ரங்களைப் பண்ணும்படி, இ - இந்த, கண் - இடமுடைத்தாய், மா - (நீ வருகைக்கிடாக) ஶ்லாக்யமான, (ஸ்ரீமத்தான), ஞாலத்து - பூமியிலே, இதனுளும் - திருப்புளிங்குடிக்

குள்ளேயும், வீற்றிடங்கொண்டு - உன்மேன்மை இடங்கொண்டு தோன்றும்படி, ஒரு நாள் இருந்திடாய் - ஒருநாள் இருந்தருளவேணும்.

இ.—எட்டாம்பாட்டில், பரமபதத்திலேயன்றோ இருப்பழகு காட்டலாவதென்ன அவ்விருப்பைத் திருப்புளிங்குடியிலே ஒருநாள் இருந்தருளவேணுமென்கிறார்.

[எங்கள் கண்முகப்பே இத்யாதி] - எங்கள் கண்முகப்பே இருக்கவேணும். அது செய்தருளுமிடத்தில் லௌகிகரெல்லாம் திருவடிகளிற் சேர்த்தியழகு கண்டு திருவடிகளிலே விழுவதெழுவதாய் ஆச்ரயித்து. [தங்களன்பார] - தங்கள்ப்ரேமம் மிக்குவர. [தமது சொல்வலத்தால்] - ஶக்த்யநுகுணமான சொற்களாலே யென்னுதல், தாந்தாம் சொல்லவல்லவளவாலே என்னுதல். "பொன்னாலே பூணுநூலிடுவீர்: நூறுபிராயம் புகுவீர்; "விஜயஸ்வ" என்னுதல். [தலைத்தலைச் சிறந்து பூசிப்ப] - மிகவும் மேல்விழுந்து கொண்டாட. [திங்கள் இத்யாதி] - ஸஞ்சாரஶீலனான சந்த்ரனுக்கும் இளைப்பாறலாம்படியான மாடங்களையுடைய திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனானவனே! [திருவைகுந்தத்துள்ளாய்] - அவ்வளவன்றிக்கே, ஸ்ரீவைகுண்டத்திலே நின்றருளினவனே! [தேவா] - பரமபதத்திற்காட்டில் ஸம்ஸாரத்தில் நிலையால்வந்த புகர். [இங்கண் இத்யாதி] - இம்மஹாப்ருதிவியிலே திருப்புளிங்குடியிலே பரமபதத்திலிருக்கும் வேண்டற்பாட்டோடே ஒருநாள் இருந்தருளவேணும்.

ஈடு.—எட்டாம்பாட்டு. பரமபதத்திலேயன்றோ இருப்பழகுகாட்டலாவதென்னே? - அவ்விருப்பைத் திருப்புளிங்குடியிலே ஒருநாளிருந்தருளவேணுமென்கிறார்.

[எங்களித்யாதி] - எங்கள்கண்முகப்பே இருக்கவேணும். அது செய்யுமிடத்தில், லோகத்திலுள்ளாரடங்க, திருவடிகளிலுண்டான சேர்த்தியழகுகண்டு திருவடிகளிலே விழுவதெழுவதாய்க்கொண்டு ஆஶ்ரயித்து. [தங்களன்பார] - தங்கள் ப்ரேமம் மிக்குவர. [தமது சொல்வலத்தால்] - ஶக்த்யநுரூபமான சொற்களாலே யென்னுதல்; தாந்தாஞ் சொல்லவல்லவளவாலேயென்னுதல்; "யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமி புருஷந்தம் ஸநாதநம்" (யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமி புருஷந்தம் ஸநாதநம்) என்னக்கடவதிறே. அதாவது - "நூறுபிராயம்புகுவீர், பொன்னாலே பூணுநூலிடுவீர்" என்றாற்போலே சொல்லுகை. வங்கிப்புரத்துநம்பி "விஜயஸ்வ" (விஜயஸ்வ) என்ன, ஆண்டான் சொன்னவார்த்தையை

எட்டாம்பாட்டு.—எங்கள் இத்யாதி. "இதனையுமொருநாளிருந்திடாய் வீற்றிடங்கொண்டே" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை - பரமபதத்திலே இத்யாதி.

'எங்கள் கண்முகப்பே யிருக்கவேணும்' என்றது - அந்வயித்துச்சொன்னபடி. "தமது - வலத்து - சொல்லால்" என்றந்வயித்து, தந்தாமுடைய பலத்துக்கீடான சொற்களாலே யென்னுதல்; வலம் - பலம்; தாந்தாம் சொல்லவல்ல வளவாலே யென்னுதல். இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் - யதாஜ்ஞாநம் இத்யாதி. "யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமி புருஷந்தம் ஸநாதநம் | தஸ்யைகஸ்யைவ மஹாத்ம்யம் ஹிஸவெகஃவபுருஷஃஸூதஃ" இதி ஸ்ரீநாராயணே ப்ரஹ்மருத்ரஸம்வாதே. அறிந்தவறிந்தவளவுகளிலே சொல்லுகையாவதேதென்ன - அதாவது இத்யாதி. இந்த ப்ரஸங்கத்திலே ஐதிஹ்யம் - வங்கிப்புரத்து நம்பி இத்யாதி. அதாவது - வங்கிப்புரத்து நம்பி, பெருமாளை சேவிக்க வெழுந்தருளினவளவிலே, இடைச்சிகளண்டையிலே யிருந்து ஸேவித்தாராய், அத்தையாண்டான் கண்டருளி, "ப்ராப்யமான ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயமிருக்க அவர்களண்டைக்கெழுந்தருளுவானென்" என்ன; "நாம்அல்பம் † விரகமாயிருப்போம், 'இவர்களொன்றுமறியாத கொச்சைகளாகையாலே, 'யஜ்ஞாரோநவஸ்ஸ்ரீ' என்கிறபடியே ஈஶ்வரனுடைய

† விரகம் - தந்த்ரமுடையோர்.

நினைப்பது. [தலைத்தலைச்சிறந்துபூசிப்ப] - ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து மிகவும் ஆஶ்ரயித்துக் கொண்டாட. [திங்களித்யாதி] - சந்த்ரனுக்கு இதஸ்ததஸ்ஸஞ்சரிக்கையாலுண்டான இளைப்பெல்லாம்ஆறும்படியிருக்குமாயிற்று மாடங்களினுடையவோக்கம்; அதிலே ஸந்நிஹிதனானவனே. [திருவைகுந்தத்துள்ளாய்] - அவ்வளவேயன்றிக்கே, திருவைகுந்தத்திலே நின்றருளினவனே. [தேவா] - பரமபதத்திற்காட்டில் ஸம்ஸாரத்தில் நிலையால் வந்த புகர். [இங்கண்மாஞாலத் திதனுளுமொருநாளிருந்திடாய்] - இந்த மஹாப்ருதிவியிலே, திருப்புளிங்குடியிலேயும் ஒருநாளிருந்தருளவேணும். இருக்குமிடத்தில்[வீற்றிடங்கொண்டு]- பரமபதத்திலிருக்குமாபோலே, உன்னுடைய வ்யாவ்ருத்திதோற்ற இருக்கவேணும். "இதனுளும்" - என்கிறதுக்குக் கருத்தேன்னேன்னில்?—சாய்ந்தருளினவழகு கண்டோமுக்கு, "இவனிருந்தால்எங்ஙனேயிருக்கிறதோ?" என்றும், "இப்படியிருக்கிறவன்றான் நின்றால் எங்ஙனேயிருக்கிறதோ?" என்றும், இங்ஙனே சில அபேக்ஷைகள் பிறக்குமிறே இவர்களுக்கு; அது வேறொருபடியிறே நமக்கு. இவையெல்லாம் நரகாவஹமான விஷயங்களிலேயுண்டு; இவ்விஷயத்தில் தெரியாது. செய்ததெல்லாம் பரிதாகையும், அவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப்படுகையு மெல்லாம் நமக்கு ப்ராக்ருதவிஷயங்களிலே யுண்டாயிருக்கும். இப்படியிருக்குமோ வென்று அறியுமித்தனை. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

**வீற்றிடங்கொண்டுவியன்கோள்மாஞாலத்திதனுளுமிருந்திடாய்அடியோம்**
**போற்றியோவாதேகண்ணிணைகுளிரப்புதுமலராகத்தைப்பருக**
**சேற்றிளவாளைசெந்நெலூடுகளுஞ்செழும்பணைத்திருப்புளிங்குடியாய்!**
**கூற்றமாய் அசுரர்குலமுதலரிந்தகொடுவினைப்படைகள்வல்லானே!**

---

*கடாக்ஷமிவர்களிடத்திலே பள்ளமடையாயிருக்குங்காணும்' என்றங்கேயிருந்தேன்" என்ன; "அவர்கள் சொன்னதேது, தேவரீரருளிச்செய்ததேது" என்று ஆண்டான் கேட்க; "'பாலுண்பீர், பழமுண்பீர்; பொன்னாலே பூணுநூலிடுவீர்; நூறுபிராயம் புகுவீர்; அழுத்த இரட்டையுடுப்பீர்" என்கிற இது அவர்கள் சொன்னவார்த்தை: '**விஜயஸ்வ, விஜயீபவ**' என்று நான் சொன்னவார்த்தை" என்று நம்பியருளிச்செய்ய; "அங்கே போயும் முருட்டு ஸம்ஸ்க்ருதம் விட்டீரில்லையே, எங்கேயிருந்தாலும் நாம் நாங்காணும், இங்கே யெழுந்தருளீர்" என்று ஆண்டானருளிச்செய்தவார்த்தை. தலைத்தலை - ஒருவர்க்கொருவர். சிறந்து - கிட்டி. பூசிப்ப - ஆஶ்ரயிக்க. திங்கள் சேருகைக்கு ஹேதுவேதென்ன - சந்த்ரன் இத்யாதி. சேருகை - படிகையாய், விஶ்ரமிக்கையாகிறது. இங்கே தீப்தியேதென்ன - பரமபதத்தில் இத்யாதி. "**திவௌகஸா**" இத்யாதி. "கண்" என்று - இடமாய், இடமுடைத்தான இம்மஹாபூமியிலென்றபடி. "இதனுளும்" என்றசஸப்தார்த்தம் - பரமபதத்தில் இத்யாதி. அது நமக்குக்காண்கிறோமில்லையேயென்ன - அது வேறேரு இத்யாதி. "வேறொருபடி" என்றதை விவரிக்கிறார் - இவையெல்லாம் இத்யாதி. இவ்விஷயத்தில் - ஐஹவத்விஷயத்தில். ஏதத்விவரணம் - செய்ததெல்லாம் இத்யாதி. பரிதாகை - ஸ்த்தூலமாகை. அதாவது - போராதேயிருக்குமென்றபடி. 'திங்கள் சேர்மாடம்' இத்யாரப்ய, 'தேவா - உலகர்களெல்லாம்' என்று தொடங்கி, 'இங்கண்மாஞாலத்திதனுளும் - இடங்கொண்டு - எங்கள் கண்முகப்பே - ஒருநாள் - வீற்று - இருந்திடாய்' இத்யந்வய:. (அ)*

ஆ.—(வீற்றிடங்கொண்டு.) - என்னுடைய கண்ணிணையானது விடாய் தீர்ந்து குளிர உன்னுடைய செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை ஓவாதே பருகும்படியாக விஸ்மயநீயமான ஸம்ஸாரத்திலே உன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்றும்படி ஒருநாளிருந்தருளவேணும்; ஆஸ்ரிதருடைய து:கத்தைப் போக்கவல்லையாயிருந்து அவை செய்யாதொழியலாமோவென்கிறார்.

ஔ.—ஒன்பதாம்பாட்டில், இவ்விருப்பில் வீறறியாதஸம்ஸாரத்திலே யிருக்கிறதென் என்னில்? ஆசையுடைய நாங்கள் நிரந்தரமாகக் கண்டுவாழுகைக்குஎன்கிறார்.

[வீற்றிடங்கொண்டென்றுதொடங்கி] - உன்னைக்கொண்டு கார்யமின்றிக்கே செல்லுகிற விஸ்மயநீயமான ஸம்ஸாரத்திலே உன்னுடைய வேண்டற்பாடு தோற்றும்படி ஒருநாளிருந்தருளவேணும். இதில் உமக்கு ப்ரயோஜநம் என்னென்னில்?- அநந்ய ப்ரயோஜநரான நாங்கள் கண்களின் விடாய் கெடும்படி செவ்விப்பூப்போலே யிருக்கிற திருமேனியை வாழ்த்தி நிரந்தரமாக அநுபவிக்கும்படி. [சேறுஎன்றுதொடங்கி] - செங்நெலின் நடுவே சேற்றிலே இளவாளைகள் களித்துத் துள்ளாநின்றுள்ள அழகிய நீர்நிலத்தையுடைய திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனானவனே! ம்ருத்யுபோலே அஸுரருடைய குலங்களைப்போக்கவல்லையாய் அதுக்கு உபாயமாய்க் கொடிய ப்ரவ்ருத்திகளையுடைய திவ்யாயுதங்கள் கைவந்திருக்குமவனே! இது பண்டு தம்முடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கினபடிக்கு த்ருஷ்டாந்தம்.

ப.—அநந்தரம், நிரதிசயஸுகுமாரமான உன் வடிவை நாங்கள் கண்டநுபவிக்கை ப்ரயோஜநமாக இந்த விபூதியிலே எழுந்தருளியிருக்கவேணுமென்கிறார்.

சேறு - தன்னிலமான சேற்றிலே வளருகையாலே, இளம்வாளை - இளகிப் பதித்தவாளைகள், செந்நெலூடு - செந்நெலூடே, உகளும் - உகளிக்களித்து வர்த்திக்கக்கடவதாய், செழு - ஸம்ருத்தமான, பணை - நீர்நிலங்களையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திக்கிறவனாய், கூற்றமாய் - ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவாய்க்கொண்டு, அசுரர்குலம் - அசுரகுலத்தை, முதல் - கர்ப்பபர்யந்தமாக, அரிந்த - அறுத்துப்போகடுமவனாய், கொடுவினை - அதுக்கீடான கொடுந்தொழிலையுடைய, படைகள் - ஆயுதங்களை, வல்லானே - விதேயமாகவுடையனானவனே! அடியோம்-உனக்கு அஸாதாரண சேஷபூதரான நாங்கள், போற்றி-மங்களாஸாஸநம் பண்ண, ஓவாதே - இடைவிடாதே, கண்ணிணை - கண்ணிணையானது, குளிர - பரிதாபம் தீர்ந்து குளிரும்படியாக, ("ஜோவ நாஸ்ருஂவிவஹிவ" என்கிறபடியே), புதுமலர் - செவ்விப்பூப்போலே புஷ்பஹாஸஸுகுமாரமான, ஆகத்தை - உன்வடிவை, பருக - த்ருஷ்ணாநுரூபமாக அநுபவிக்கும்படி, வீற்றிடங்கொண்டு - (உன்னுடைய ஸர்வாதிகத்வத்தால்வந்த) வேறுபாடு விஸ்த்ருதமாய்க்கொண்டுதோற்றி, வியன்கொள் - விஸ்தாரவத்தாய், மா - ஶ்லாக்யமான, ஞாலத்து இதனுளும்-இந்த ஜகத்தினுள்ளேயும், இருந்திடாய் - இருந்தருளவேணும்.

இ.—ஒன்பதாம்பாட்டில், இவ்விருப்பில் வீறறியாத ஸம்ஸாரத்தில் இருக்கிறதென்னென்னில்,—ருசியுடைய நாங்கள் கண்டுஅநுபவிக்கைக்கென்கிறார்.

[வீற்றிடங்கொண்டு] - சேஷித்த்வத்தால்வந்த வேறுபாடு தோற்றும்படி. [வியன்கொள்இத்யாதி] - விஸ்மயநீயமான மஹாப்ருதிவியான இதிலேயுமிருந்திடாய்,

உன்னைக்கொண்டுகார்யமின்றிக்கே அந்யபரமான ஸம்ஸாரத்திலே உன்னையொழியச் செல்லாமையுடையார் முன்பேயிருக்குமது உனக்கேற்றமோ? இதில் உமக்குப்ரயோஜநமென்னென்னில்,—[அடியோம்] - அநந்யப்ரயோஜநரான நாங்கள். [போற்றி] - அவ்விருப்பு நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாஶாஸநம் பண்ணி. [ஓவாதே] - உச்சிவீடு விடாதே. [கண்ணிணைகுளிர] - கமர்பிளந்தகண்கள் விடாய்கெட்டுக் குளிரும்படி. [புதுமலராகத்தைப்பருக] - செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியையநுபவிக்கும்படியாக புஷ்பஹாஸஸுகுமாரமான வடிவை "ஶௌவநாஹ்ராவீஷணிவ" என்கிறபடியே நிரந்தரமாக அநுபவிக்கப்பெறுகை. [சேற்றிளவாளை இத்யாதி] - செந்நெலின் நடுவே சேற்றிலே பஞ்சவிம்ஶதிவார்ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத்துள்ளாநிற்பதான அழகிய நீர்நிலத்தையுடைய தேஶம். [செழும்பணை]- அழகிய மருதநிலமென்றுமாம். [கூற்றமாயித்யாதி] - ம்ருத்யுபோலே ப்ரதிபக்ஷத்தை நிஶ்ஶேஷமாகப் போக்கவல்லையாய். அதுக்குஉறுப்பாகக் கொடிய தொழிலையுடைய திவ்யாயுதங்கள் கைவந்திருக்குமவனே! ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதமென்னவுமாம். இதுக்கு முன்பு தம்முடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கினபடிக்கு த்ருஷ்டாந்தமென்னுதல்; உனக்கென்ன அஶக்தி உண்டாய் நான் இழக்கிறேனென்னுதல்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'இவ்விருப்பில் வாசியறியாத ஸம்ஸாரத்திலேயிருக்கிறதென்?' என்னில்,—ருசியுடைய நாங்கள் கண்டநுபவிக்க என்கிறார்.

[வீற்றிடங்கொண்டு] - ஶேஷித்த்வத்தால்வந்த வேறுபாடு தோற்றும்படி. [வியன்கோள் இத்யாதி]-விஸ்மயநீயமான மஹாப்ருதிவியான இதிலேயுமிருந்திடாய் உன்னைக்கொண்டு ஒருகார்யமில்லாத ஸம்ஸாரத்திலே. [இதனுளும்இருந்திடாய்] - இந்தத் திருப்புளிங்குடியாகிற திருப்பதியிலேயும் இருந்திடாய். உன்னை யொழியச் செல்லாமையுடையார் முன்னேயிருந்தாயென்னும் இது போருமோ?[இதனுளும்இருந்திடாய்] - சாய்ந்தருளினபோதிருக்கும் இருப்பை யநுபவிப்பித்தருளிற்று. இனி, இருந்தால் இருக்குமழகையும் அநுபவிப்பித்தருளவேணும். "நமக்கு இவையெல்லாம் இங்கேகாணலாமிறே: சாய்ந்தருளினஅழகு, பெரியபெருமாள்பக்கலிலேகாணலாம்; நின்றருளினவழகு, நம்பெருமாள் பக்கலிலே காணலாம்; இருப்பிலுண்டானவழகு, பெரியபிராட்டியார்பக்கலிலே காணலாம்"என்று பட்டர் அருளிச்செய்வர். நாம் இங்கிருந்து நீர் பெறப்புகிற பேறு ஏதென்ன?- [அடியோமித்யாதி] - அடியோம் - அவ்விருப்பைப்படிவிட, அதுவே ஜீவநமாகவிருக்கிற

ஒன்பதாம்பாட்டு.—வீற்றிடம் இத்யாதி. "வீற்றிடங்கொண்டு" என்று தொடங்கி "புதுமலராகத்தைப்பருக" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இவ்விருப்பில் இத்யாதி.

இடங்கொண்டு - இத்தை ஸ்தாநமாகக் கைக்கொண்டு. "இதனுளும்" என்றதுக்கு இரண்டர்த்தம். மாஞாலமான இந்த பூமியிலும் என்று முந்தினது; இத்தையருளிச்செய்கிறார் - விஸ்மயநீயமான இத்யாதி. மாஞாலத்தில் வைத்துக்கொண்டு இந்தத் திருப்புளிங்குடியிலுமென்று இரண்டாமர்த்தம்; இத்தை யருளிச்செய்கிறார் - இந்தத் திருப்புளிங்குடி இத்யாதி. "இதனுளும்" என்கைக்கு இதுக்குத்தண்மையேதென்ன - உன்னைக்கொண்டு இத்யாதி. நித்யஸூரிகள் நடுவேயிருக்கக்கடவ நமக்கு இங்கே யிருக்கவேண்டுவானென்னென்ன - உன்னையொழிய இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு "இதனுளும்" என்ற ஶப்தார்த்தம் - சாய்ந்தருளின இத்யாதி. இங்கே காணலாம் என்றது-கோயிலிலே காணலாமென்றபடி. இவையெல்லாம் என்றது - கிடையழகும், இருப்பழகும், நிலையழகும். ஆகத்தை - திருமேனியை, ஆகம் - திருமேனி. விவரணம் - புஷ்ப

நாங்கள். [போற்றி]-இவ்விருப்புஇங்ஙனே நித்யமாகச் செல்லவேணுமென்று மங்களாஶா ஸநம்பண்ணி. [ஓவாதே] - உச்சிவீடுவிடாதே. [கண்ணிணைகுளிர] - காணப்பெறுமை யாலே கமர்பிளந்துகிடக்கிறகண்கள், விடாயெல்லாந்தீர்ந்து குளிரும்படியாக. [புதுமலர்இத் யாதி] - செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை யநுபவிக்கும்படியாக. புஷ்பஹாஸ ஸுகுமாரமானவடிவை, "ஶோசநாஶ்ரீவணிவ" (லோசநாப்யாம்பிபந்நிவ) என் கிறபடியே நிரந்தரமாக அநுபவிக்கப்பெறுகை. [சேற்றிளம் இத்யாதி] – அவ்வூரில் பதார் த்தங்களுடைய அபிமதலாபத்தாலே களித்துவர்த்திக்குமாயிற்று. செந்நெலின் நடுவே சேற் றிலே, பஞ்சவிம்ஶதிவார்ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத் துள் ளாநிற்பதான அழகியநீர்நிலத்தையுடைய. [செழும்பணை] - அழகியமருதநிலமென்றுமாம். [கூற்றமாய்இத்யாதி] - ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதங்களை தரித்துக்கொண் டிருக்கிற வென்னுதல்; அன்றிக்கே, ப்ரதிபக்ஷத்துக்குக் கூற்றமாய்க்கொண்டு அவர்களு டைய குலத்தை முதலிலேயரிந்து போகடுமவனாய், அதுக்கு உடலாகக் கொடியதொழில் களையுடைய திவ்யாயுதங்களையுடையனாயிருக்கிறவன் என்னுதல். இப்போது இதுசொல்லு கிறது— இதுக்குமுன்பு, தம்முடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கினபடிக்கு த்ருஷ்டாந்த மென்னுதல்; உனக்கு என்னகுறையுண்டாய் இழக்கிறேன் என்னுதல். (௯)

---

## பத்தாம் பாட்டு.

---

கொடுவினைப்படைகள்வல்லையாய்அமரர்க்கிடர்கெடஅசுரர்கட்கிடர்செய்
கடுவினைநஞ்சே!என்னுடையமுதே!கலிவயல்திருப்புளிங்குடியாய்
வடிவிணையில்லாமலர்மகள்மற்றைநிலமகள்பிடிக்கும்மெல்லடியை
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே.

ஆ.— (கொடுவினை.) - ஆஶ்ரிதவிரோதிநிரஸந ஸமர்த்தனுமாய், ஆஶ்ரித விரோதிநிரஸநஸ்வபாவனுமாய், எனக்கு நிரதிஶயபோக்யனுமாய், திருப்புளிங்குடியிலே வந்து ஸந்நிஹிதனானவனே! வடிவழகுக்கொப்பில்லாத பெரியபிராட்டியாரும், அப்படியே

---

ஸ்ராஸ இத்யாதி. "தஸ்ய தத்வசநம் ஶ்ருத்வா ராமோ வசநமப்ரவீத் । வவஸாவஸாஞ்ஜயி தேவநம் லோசநாப்யாம் பிபந்நிவ" இதியுத்தகாண்டே. (கூ-எ) "புதுமலராகத்தை-ஓவாதே- பருக" என்றந்வயிப்பது. இப்பதத்துக்கு பாவம் - அவ்வூரில் இத்யாதி. உகளுகை - ஸம்ப்ரம மாக ஸஞ்சரிக்கை. செழும்பணை - ஸம்ருத்தமானவயல். மருதநிலம் - நாடுசார்ந்தப்ரதேசம். ஜலஸ்த்தலமாதல். "கூற்றமாய்" என்றது - திவ்யாயுதவிசேஷணமாதல்; ஈஶ்வரவிஶேஷண மாதல். இரண்டையும் அருளிச்செய்கிறார் - ப்ரதிபக்ஷத்துக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. த்விதீயார்த்தத்திலே "கொடுவினைப்படைகள்வல்லானே" என்றதுக்கர்த்தம் - அதுக்குஉடலாக இத்யாதி. இதுசொல்லுகிறதுக்கு ப்ரயோஜநத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - இப் போது இத்யாதிவாக்யத்வயத்தாலே. என்னகுறையுண்டாய்இழக்கிறேன் என்றது-விரோதியைப் போக்கப் பரிகாரமில்லாமலோ, ஶக்தியில்லாமலோ இழக்கிறேன்?என்றபடி. 'சேற்றிளவாளை' என்று தொடங்கி, படைகள்வல்லானே - அடியோம்போற்றி - கண்ணிணைகுளிரப் புதுமலராகத்தை - ஓவாதே பருகும்படி - வியன்கொள்மாஞாலத் திதனுளும் - இடங்கொண்டு - வீற்று இருந் திடாய் இத்யந்வய: (௯)

யிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியும் கூசிஸ்பர்சிக்கவேண்டும்படி ஸுகுமாரமான உன்னுடைய திருவடிகளை, அதில்போக்யதையையறிந்துவைத்து இழக்கைக்கீடான பாபத்தைப் பண்ணின நானும்பிடிக்கும்படி, என்னையொருநாள் அங்கே யழைத்துக் கொள்ளுதல், இங்கே வருதல் செய்தருளவேணுமென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், மிகவும் போக்யமான உன்திருவடிகளிலே நானும் வந்து அடிமைசெய்யும்படி என்னை அங்கே அழைத்துக்கொள்ளுதல், இங்கேவருதல் செய்தருளவேணு மென்கிறார்.

[கொடுவினைப்படைகள் வல்லையாய்] — உனக்கு சேஷமாய்வைத்தே உன்னோடு ப்ரதிகூலித்த சேதநர்பக்கல், நீரிலே நெருப்பெழுந்தாற்போலே சீறி ஆயுதமெடுக்கவல்லையாய். [அமரர்க்கென்று தொடங்கி] - தேவர்களுடைய ஸர்வ து:க்கங்களும் போம்படி அஸுரர்க்கு து:ஸ்ஸஹமான து:க்கத்தை விளைக்குமபடியான ப்ரத்யௌஷ்யமில்லாத நஞ்சாய் எனக்கு நிரதிசய போக்யனாய்த் திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே! [வடிவிணையென்று மேனுக்கு]-வடிவழகுக்கு ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும் அப்படியிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியாரும கூசி ஸ்பர்சிக்கவேண்டும்படி ஸுகுமாரமான திருவடிகளை அதில் போக்யதையை யறிந்துவைத்து இழக்கைக்கீடான பாபத்தைப்பண்ணின நானும் பிடிக்கும்படி.

ப.—அநந்தரம், நாய்ச்சிமாரை யடிமைகொண்டருளினாற்போலே நானும் உன் திருவடிகளிலே யடிமைசெய்யும்படி, என்னை யங்கேயழைத்தல் இங்கே வருதல் செய்தருளவேணுமென்கிறார்.

கொடுவினை - விரோதிவிஷயத்தில் கொடுந்தொழிலான, படைகள் - ஆயுதங்களை, வல்லையாய் - (கார்யங்கொள்ள) வல்லையாய், அமரர்க்கு - அநுகூலரான தேவர்களுடைய, இடர் - து:க்கம், கெட - தீரும்படி, அசுரர்கட்கு - ப்ரதிகூலரானவசுரர்கட்கே, இடர் - து:க்கத்தை, செய் — விளைக்குமிடத்தில், கடு - சடக்கென்னும், வினை - ப்ரவ்ருத்தியையுடைய, நஞ்சே - நஞ்சானவனாய், என்னுடை - (அநந்யப்ரயோஜநனாய் அநந்யகதியான)எனக்கு, அமுதே-(அலப்யமான)அம்ருதமாய்,(அத்யாஸந்நமாம்படி), கலி - ஸம்ருத்தமான, வயல் - வயலையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! ("சுவிமெதக்ஷணா" என்னும்படி), வடிவு - வடிவழகுக்கு, இணையில்லா - நீயும் தகுதியில்லாதபடியான அதிசயிதவைலக்ஷண்யத்தையுடைய, மலர்மகள் - கமலவாஸிநியானலக்ஷ்மியும, மற்றை - ஏவம்பூதவைலக்ஷண்யத்தையுடைய, நிலமகள் - ஸ்ரீபூமியும், பிடிக்கும - (தஙகளுடைய ஸ்வாபாவிக மார்த்தவத்தையுடைய திருக்கைகளாலே) பிடிக்கும்படியான, மெல் - நிரதிசயஸௌகுமார்யத்தையுடைய, அடியை - திருவடிகளை, கொடுவினையேனும் - (ப்ராபதனாய்வைத்து நெடுங்காலமிழக்கும்படி) கொடியபாபத்தையுடைய நானும், பிடிக்க - பிடிக்கும்படியாக, நீ கூவுதல் - நீ அங்கேயழைத்துக்கொள்ளுதல், வருதல்-(நான் அபேக்ஷித்தபடி இங்கே)வந்தருளுதல், ஒருநாள் செய்யாய் - ஒருநாள் செய்யவேணும்.

இ.—பத்தாம்பாட்டில், நிரதிசயபோக்யமான உன்திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி என்னை யங்கேயழைத்தல் இங்கேவருதல் செய்தருளவேணுமென்கிறார்.

*[கொடுவினைப் படைகள் வல்லையாய்] - உனக்கு ஶேஷமாய்வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல் நீரிலே நெருப்பெழுந்தாற் போலே சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். "சிலரை அழியச்செய்ய" என்றால் ஶக்தனன்றிக்கேயிருக்கை. "யதிவாராவணஸ்ஸ்வயம்" என்றிறேயிருப்பது. "நநமேயம்" என்று ப்ராதிகூல்யம் மிகைத்தாலும், "மஹாநுஜாநாதி" என்று பின்பு கண்ணுங் கண்ணநீருமாய் நின்றிறே சொல்லுவது? [அமரர்க்கிடர் கெட] - அஸுரர்களாலே தேவர்களுக்குஉண்டான து:க்கந் தீரும்படி. [அசுரர்க்கிடர் செய்] - அஸுரர்க்கு து:க்கத்தை விளைக்கும். [கடுவினை நஞ்சே] - சடக்கென முடிக்கவற்றாய் ப்ரத்யௌஷதமில்லாத நஞ்சானவனே! [என்னுடை அமுதே] - எனக்கு நிரதிஶயபோக்யனானவனே! ஸாத்யமான தேவர்கள் அமுதன்று. [கலிவயல் திருப்புளிங்குடியாய்] - ஸ்வர்கத்திற் போகவேண்டா; கடலைக் கடைய வேண்டா; திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்று இவருடைய அம்ருதம். [கலி வயல்] - ஸம்ருத்தமான வயல். [வடிவிணை இத்யாதி] - இவ்வடிவில்வந்தால் ஒப்பில்லை. ஐஶ்வத்தத்த்வமும் ஒப்பன்று; "தமேநயவேதிகேஷணா" என்று வேறயாய் நின்றதிறே. [மற்றை நிலமகள்] - அப்படிப்பட்ட நிலமகள். வநவஸமர்த்தையென்னுமித்தனை. [பிடிக்கும் மெல்லடியை] - அவர்களும் கூசித் தொடவேண்டும்படி ஸுகுமாரமான திருவடிகளை. [கொடுவினையேனும் பிடிக்க] - "அவர்கள் ஸந்நிதியுமுண்டாயிருக்க இழப்பதே!" என்னும்இன்னாப்பாலே சொல்லுகிறார். * கண்கள் சிவந்துக்குப் பின்பு நிகர்ஷாநுஸந்தாநமில்லை. நிரதிஶயபோக்யனாய் ஸந்நிஹிதனான நீ ஸத்தையை நோக்குகைக்கு ஒருநாள் அங்கே அழைத்தல், இங்கேவருதல் செய்தருளவேணும். வருதல் என்கிற இத்தை முந்துறச் சொல்லாதொழிந்தது, அந்தஸமுதாயத்தைக் காணவேணுமென்னும் நசையாலே.*

ஈடு.—பத்தாம்பாட்டு. நிரதிஶயபோக்யமான உன்னுடைய திருவடிகளிலே நானும் வந்து அடிமைசெய்யும்படி, என்னையங்கேயழைத்தல், நீ இங்கேவருதல் செய்யவேணுமென்கிறார்.

[கொடுவினைப்படைகள்வல்லையாய்] - நீரிலேநெருப்பெழுந்தாற்போலே, உனக்கு ஶேஷமாய்வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல்சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். அவன் மாட்டாதது சிலரையழியச்செய்கையாயிற்று; "*யதிவாராவணஸ்ஸ்வயம்*" (யதிவா (ராவணஸ்ஸ்வயம்) என்னுமவனிறே. கடலையணைசெய்து, ஊரைச்சூழப்போந்து, பின்னை அங்கதப்பெருமாளைப்புகவிட்டு, கையிலேவந்தகப்பட்டவனை. "*மஹாநுஜாநாதி*"

---

*பத்தாம்பாட்டு.—கோடுவினை இத்யாதி. "வடிவிணையில்லா மலர்மகள்" என்று தொடங்கி, "கூவுதல்வருதல்செய்யாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - நிரதிஶய இத்யாதி.*

*கீழேயெல்லாம் ஸந்நிஹிதனாக அருளிச்செய்து, இங்கே, "கூவுதல்வருதல் செய்யாய்" என்றது - மாநஸாநுபவ வைஶத்யத்தாலே ஸந்நிஹிதனாகவும், அது கலங்கினவாறே, தாம் இங்கும், அவன் அங்குமாகத்தோற்றுகையாலே. கொடிதான வ்யாபாரத்தையுடைய ஶத்ருஸேநையை முடிக்க வல்லையாயென்று ஶப்தார்த்தம். * ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத: அன்றோ? "வல்லையாய்" என்று, ஸர்வஶக்திக்கு அஶக்திப்ரஸங்கமேதென்ன - நீரிலே இத்யாதி. அப்படிமாட்டாதோவென்ன - யதிவா இத்யாதி. "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம்மயா । விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவாராவணஸ்ஸ்வயம்" இதியுத்தகாண்டே ராம:. ஆனாலும் ஸம்ஹரித்தானே யென்ன - கடலை இத்யாதி. "மஹாநுஜாநாதிரணாக்ருதஸ்ரம் ப்ரவிஶ்ய ராத்ரிம் ஶரராஜ*

(கச்சாநுஜாநாமி) என்று தப்பவிட்டது, "இன்னமோருகால் அநுகூலிக்குமோ?" என்று; "நான்முடிந்தேபோமித்தனை" என்று அவன்அதிலேமுதிரநின்றபின்பு, கண்ணுங்கண்ணீருமாயிறே நின்றுகொன்றது. இவர்கள் பண்ணும்ப்ராதிகூல்யத்தாலே யழியச்செய்யுமித்தனை போக்கி, தானாகஅழியச்செய்யமாட்டானாயிற்று. [அமரர் இத்யாதி] – அஸுரர்களாலே தேவர்களுக்கு உண்டான து:கந்தீரும்படி, அஸுரர்களுக்கு து:க்கத்தைவிளைக்கும். [கடுவினைநஞ்சே] - அப்போதே சடக்கெனமுடிக்கவற்றாய், ப்ரத்யௌஷதமில்லாத நஞ்சானவனே! [என்னுடை யமுதே] - அந்நஞ்சுதானே இவர்க்கு அம்ருதமாயிருக்கிறபடி. தேவர்களுடையஉப்புச்சாறன்று. [கலிவயல்இத்யாதி] - இவ்வம்ருதத்துக்குக் கடல்கடைதல், ஸ்வர்க்கத்திலேபோதல் செய்யவேண்டா; திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்றிவ்வம்ருதம். [கலிவயல்] - ஸம்ருத்தமான வயல். [வடிவிணையித்யாதி] - வடிவில்வந்தால் ஒப்பின்றிக்கேயிருக்கும். ஸௌவதத்த்வமும் ஒப்பன்று; "தவேயம் அஸிதேக்ஷணா" (தஞ்சேயமஸிதேக்ஷணா) என்றுஎற்றமாயே நிற்கிறதிறே. [மற்றை நிலமகள்] - ஏவம்பூதை யென்னுமத்தனையவளையும். [பிடிக்கும்மெல்லடியை] - அவர்களுந்திருவடிகளைப் பிடிக்கப்புக்கால், பூத்தொடுவாரைப்போலே "கன்றுகிறதோ?" என்றுகூசித் தொடவேண்டும்படியாயிற்று ஸௌகுமார்யமிருப்பது; அப்படிபட்டதிருவடிகளை. [கொடுவினையேனும்பிடிக்க] - * கண்கள்சிவந்துக்குப்பின்பு இவர்க்கு நிகர்ஷாநுஸந்தாநமல்லையிறே. "அவர்களும் ஸந்நிஹிதராய், ப்ராப்தியுமுண்டாயிருக்க, நான்இகழ்ந்திருப்பதே!" என்று, "பாவியேன்" என்பாரைப்போலே, 'கொடுவினையேன்' என்கிறார். [நீயோருநாள் கூவுதல்வருதல்செய்யாயே] - † (நிரதிசயபோக்யனாய் ஸந்நிஹிதனான நீ, ஸத்தையைநோக்குகைக்குஒருநாள் அங்கேயழைத்தல், இங்கேவருதல் செய்தருளவேணும். முற்பட 'வருதல்' - என்றிலராயிற்று, அஸ்ஸமுதாயத்தைக் குலைக்கவொண்ணாதேனுமத்தாலே. அபேக்ஷையுடையார்பக்கல் அவனைத் தன்விட்டிராரகளிறே, கூடக்கொடுவருவர்களென்னுமத்தைப்பற்றச் சொல்லுகிறார். (கo)

---

* ஜாநே । க்ஷம்ஸ்யதி ராமஸ்ய ஸீதா த்ராவண மந்த்ர க்ஷ்யதி சோகஜ:" இதியுக்தகாண்டே. "சோணாஞ்சநிபேக்ஷணா" "ஸஞ்ஜாதபாஷ்ப:பரவீரஹந்தா" இத்யாத்யுக்த ஸ்வபாவத்தைப்பற்ற - கண்ணுங்கண்ணீருமாய் என்றது. கண்ணும் கண்ணீருமானால் கொல்லக்கூடுமோவென்ன - இவர்கள்பண்ணும் இத்யாதி. க்ரூரவ்யாபாரத்தையுடைய நஞ்சேயென்று பதார்த்தம். நஞ்சின க்ரௌர்யத்தை த்வேதா அருளிச்செய்கிறார் - அப்போதே இத்யாதி. 'அந்நஞ்சுதானே' இத்யாதிக்கு - அஸுரவர்க்கத்துக்கு பாதகனாயிருக்குமிருப்பு, தமக்கு போக்யமாயிருக்குமென்றுகருத்து. "என்னுடை யமுதே" என்றதுக்கு வ்யாவர்த்யம் - தேவர்களுடைய இத்யாதி. "கலிவயல் திருப்புளிங்குடியாய்" என்கிறத்தாலும் அவ்வம்ருதத்தில் வ்யாவ்ருத்தி - இவ்வம்ருதத்துக்கு இத்யாதி. கலி - ஸம்ருத்தி. இணை - ஒப்பு. ஒப்பில்லாமையின் சரமாவதி - ஸௌவத்தத்த்வமும் இத்யாதி. ஆதிக்யமேதென்ன - தஞ்சேயம் இத்யாதி. "தஸ்யா ஸ்ஸ்வேதயாவ்ருத்தாம்தஸ்யா ஹிஜநகாத்மஜாம்। ராவணேந ஹ்ருதேதி மேஸீதேதம் தவேயம் அஸிதேக்ஷணா" இதி ஸுந்தரகாண்டே ஹநூமாந். மற்றை - தத்துல்யையான. "மெல்லடி" என்றுவிசேஷித்ததுக்குபாவம் - அவர்களும் இத்யாதி. "கொடுவினையேன்" என்றவிது, அயோக்யதாநுஸந்தானமோவென்ன; அன்று என்கிறார் - கண்கள் இத்யாதி. ஆனால் "கொடுவினை" என்கிறதுக்கர்த்தமேதென்ன - அவர்களும் இத்யாதி. முந்துற "வருதல்" என்னாதொழிவானென்னென்ன - முற்பட இத்யாதி. பிற்படத்தான் "வருதல்" என்றால் அஸ்ஸமுதாயங்குலையாதோவென்ன - அபேக்ஷை இத்யாதிவாக்யத்வயம். க்ரமேணாந்வய:. (ம)

## பதினோராம் பாட்டு.

**கூவுதல் வருதல் செய்திடாயென்று குரைகடல் கடைந்தவன்தன்னை**
**மேவிநன்கமர்ந்தவியன்புனல்பொருநல் வழுதிநாடன் சடகோபன்**
**நாவியல்பாடலாயிரத்துள்ளும்இவையுமோர்பத்தும்வல்லார்கள்**
**ஓவுதலின்றிஉலகமூன்றளந்தான்அடியிணைஉள்ளத்தோர்வாரே.**

*ஆ.*—(கூவுதல்) - குரைகடல்கடைந்தவன் தன்னை பரம்பராப்யமாகப்பற்றி, கூவுதல் வருதல் செய்திடாயென்று அபேக்ஷித்த வியன்புனல் பொருநல்வழுதிநாடன் சடகோபன் நாவியல்பாடலாயிரத்தில் இத்திருவாய்மொழியைவல்லார், ஆஸ்ரிதஸுலபனை எம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுபவிக்கப்பெறுவரென்கிறார்.

*ஒ.*—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் எம்பெருமானை நிரந்தரமாக ஸேவிக்கப்பெறுவரென்கிறார்.

"கூவுதல் வருதல்" என்றுதொடங்கி - இப்பாட்டுக்கெல்லாம் ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுடைய அபேக்ஷிதம் பூர்க்கைக்காக. கடலைக் கடைந்தருளின - எம்பெருமானை இத்தன்மையை யுடையையான நீ, என்னை அங்கேயழைத்தல் இங்கே வருதல்செய்து என் அபேக்ஷிதத்தைப் பூர்க்கருளவேணும் என்றர்த்தித்து, அப்படியே பூர்ணமாகப் பெறுகையாலே ஸம்ருத்தமான திருவழுதி நாட்டையுடைய ஆழ்வாருடைய அநாயாஸமான வாக்ப்ரவ்ருத்தியையுடைய ஆயிரம் திருவாய்மொழியிலும் விலக்ஷணமான இத்திருவாய்மொழி வல்லார்கள் ஆஸ்ரிதஸுலபனை எம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்தில் அநுபவிக்கப்பெறுவர் ※—ஆராவமுதில் ஆர்த்தருடைய ஆர்த்திதீர்க்கும் ஸ்வபாவனையிருந்து வைத்து என்னுடைய ஆர்த்தி தீர்க்கிலனென்று இன்னாதானார்: இங்கு - பரமவைஷ்ணவப்பைத்து என்னை அங்கீகரித்திலனென்றும், ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளினால் திருவடப்பலசாதோமென்றும் இன்னாதாகிறார்.

*ப.*—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸர்வஜ்ஞத்வலாபத்தை யருளிச்செய்கிறார்.

(ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக) குரை - அதிகோஷத்தை யுடைத்தான, கடல் - கடலை, கடைந்தவன்தன்னை-கடைந்தவனைஸர்வேஸ்வரனை, கூவுதல்-அங்கேயழைத்துக்கொள்ளுதல், வருதல் - (நானிருந்தவிடத்தில்) வருதல், செய்திடாய்-செய்யவேணும், என்று - என்றபேக்ஷித்து, மேவி - அவனுடைய அங்கீகாரத்தைப் பெற்று, (அத்தாலே), நன்கு - நன்றாக, அமர்ந்த - தரித்தவராய், வியன் - ஸம்ருத்தமான, புனல்-ஜலத்தையுடைத்தான, பொருநல் - திருப்பொருநலையுடைத்தான, வழுதிநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, நாவியல்-ஜிஹ்வாவ்யாபாரமான, பாடல் ஆயிரத்துள்ளும் - பாடல் ஆயிரத்துள்ளும்வைத்துக் கொண்டு, ஓர் - அத்விதீயமான, இவையும்பத்தும் - இப்பத்தையும், வல்லார்கள் - வல்லவர்கள், மூன்றுலகம் - த்ரைலோக்யத்தையும், அளந்தான் - அளந்துகொண்ட ஸர்வ

ஸாலஹன், அடி - திருவடிகள், இணை - இரண்டையும், ஓவுதல் - ஓவுதல், இன்றி -, உள்ளத்து - நெஞ்சிலே, ஓர்வார் - அநுஸந்திக்கப்பெறுவர்கள். இது எழுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் அவனை நிரந்தரமாக அநுஹவிக்கப்பெறுவர் என்கிறார்.

[குரைகடல் கடைந்தவன் தன்னை] - கூவுதல்வருதல் செய்திடாய் என்று ப்ரயோஜநாந்தரபரருடைய அபேக்ஷிதம் பூரிக்கைக்குக் கடல்கடைந்தவனை யாயிற்று ஆச்ரயித்தது. இச்சீலத்தையறிந்து, முறைகெடவாகிலும் முறையாலேயாகிலும் கண்டுகொண்டு நிற்கவேணுமென்றாயிற்றுச் சொல்லிற்று. [மேவி நன்கமர்ந்த] - இஸ்ஸ்வஹாவத்தை யநுஸந்தித்து அத்தாலே „ரித்த. [வியன்புனல் இத்யாதி] - அத்தாலே விஸ்மயநீயமான ஜலத்தையுடைய திருப்பொருநலையுடைத்தான திருவழுதிவள நாட்டையுடைய ஆழ்வார். [நாவியல் பாடல்] - மனஸ்ஸஹகாரமின்றிக்கே சொன்னவை. [ஆயிரத்துளிவையும் பத்தும் வல்லார்கள்] - விலக்ஷணமான இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் ஆச்ரிதஸாலஹனுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே அநுஹவிக்கப்பெறுவர். "யதிநாமஹவிஷ்யதி தாவதாஸ்மி க்ருதீஸதா" என்று இது தன்னைப் பேறாகச் சொல்லிற்றிறே. * ஆராவமுதில் ஆர்த்தரக்ஷணம் பண்ணுமவன் என்னுடைய ஆர்த்தி தீர்க்கிறிலன் என்றார். இங்கு-பரமஸௌசீல்யவாய் வைத்து என்னை அங்கீகரித்திலனென்றும், ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளினால் திருவுடம்பலசாதோ என்றும் இன்னதாகிறார்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார், அவனை நிரந்தரமாக அநுஹவிக்கப்பெறுவரேன்கிறார்.

[கூவுதல்இத்யாதி] - 'குரைகடல்கடைந்தவன்றன்னை கூவுதல்வருதல்செய்திடாய்'என்றாயிற்றுஇவர்சொல்லிற்று. முறைகெடவுமாம். முறையிலேயாகவுமாம், காணுமித்தனையேவேண்டுவது. [குரைகடலித்யாதி] - இவ்வபேக்ஷையில்லாதார்க்கும் உடம்பு நோவக்கடல்கடைந்து அம்ருதங்கொடுக்குமவனையாயிற்று இவர் அபேக்ஷித்தது [மேவிநன்கமர்ந்த] - இந்தஸ்வஹாவாநுஸந்தானத்தாலேபொருந்திக் கால்தரையிலேபாவினாராயிற்று. [வியனித்யாதி] - விஸ்மயநீயமான நீரையுடைய திருப்பொருநலையுடைய திருவழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [நாவியல்பாடல்] - மநஸ்ஸஹகாரமுமொழியவா

---

நிகமம் - கூவுதல் இத்யாதி. "இவையும்பத்தும்வல்லார்கள்" என்றுதொடங்கி, "உள்ளத்தோர்வாரே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

அந்வயித்தர்த்தம் - குரைகடல் இத்யாதி. "வருதல்" என்றதே, "கூவுதல்" என்று முற்படவழைப்பானென்னென்ன - முறைகெடவுமாம் இத்யாதி. உடைமையிருந்தவிடத்தே யுடையவன் வந்து கைப்பிடித்துக்கொண்டுபோகை ப்ராப்தமாகையாலே, வருகைமுறை; பார்யையை யாளிட்டழைக்கை முறைகேடானவோபாதி, கூவுகையும் முறைகேடு. குரை - கோஷிக்கிற. "குரைகடல்கடைந்தவன்றன்னை" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - இவ்வபேக்ஷை இத்யாதி. "குரைகடல்கடைந்தவன்றன்னை - கூவுதல்வருதல்செய்யாய்" என்றுசொல்லி, 'இந்தஸ்வஹாவாநுஸந்தானத்தாலே' இவனைக்கிட்டி யென்றுகூட்டுவது. நன்கமர்ந்த - நன்றாகத் தரித்த. தரையில் கால்பாவிநின்றவென்றபடி. பொருநல் - திருத்தாம்ரபர்ணி. "நாவியல்" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - மநஸ்ஸஹகாரம் இத்யாதி. நாவியல்பாடல் - ஜிஹ்வாவ்யா

யிற்றுச்சொல்லிற்று. [ஓவுதலித்யாதி] - ஆஶ்ரிதஸுலபனானவனுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுபவிக்கப்பெறுவர். இத்தனைபோதும், இவர்தாம் "இவற்றைப்பெறவேணும்" என்னும் அபேக்ஷையோடே, "திருக்கண்களாலே குளிரநோக்கியருளவேணும், திருவடிகளைத்தலைமேலேவைத்தருளவேணும்; தேவரீரெழுந்தருளியிருக்குமிருப்பைக்காணவேணும்; நாய்ச்சிமாரும் தேவரீருமாயிருக்கும்படிகாணவேணும்; உலாவும்படி காணவேணும்; ஸ்மிதம் இருக்கும்படி காணவேணும்" என்று ஆசைப்பட்ட இவர்க்கு அப்போதே கிடையாமையாலே, "இவற்றைப்பெறவேணும்" என்னும் மநோரதந்தானே பேறாய்த் தோற்றிற்று; இத்தையப்யஸித்தவர்களுக்கும் இம்மநோரதம் மாறாதே முடியச்செல்லும் என்கிறார். "𑌯𑌦𑌿 𑌨𑌾𑌶𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤 𑌤𑌾𑌵𑌤𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑍃𑌤𑍀 𑌸𑌦𑌾" (யதி நாஶம்நவிந்தேததாவதாஸ்மிக்ருதீஸதா) என்கிறபடியே. (கக)

---

பாரமான பாடலென்று ஸப்தார்த்தம். "உலகமூன்றளந்தானடியிணை - ஓவுதலின்றி - உள்ளத்தோர்வார்" என்றந்வயிப்பது. "ஓவுதலின்றி" என்றதுக்கர்த்தம் - நிரந்தரமாக என்று. ஓர்வார் - அநுஸந்திக்கப் பெறுவார்: அநுபவிக்கப்பெறுவா ரென்றபடி. இது கற்றார்க்கு ப்ராப்தியை ஃபலமாகச்சொல்லாதே, மநோரதத்தை ஃபலமாகச்சொல்லுவானென்? என்ன - இத்தனைபோதும் இத்யாதிவாக்யத்வயம். மநோரதமும் ஃபலமோவென்ன, அதுக்குப்ரமாணம் - யதிநாஶம் இத்யாதி ஜிதந்தாயாம், "[illegible]" இதி பூர்வார்த்தம். 'குரைகடல்கடைந்தவன்தன்னை - கூவுதல்வருதல் செய்திடாய்' என்றுதொடங்கி, 'இவைபும்பத்தும்வல்லார்கள் - உலகமூன்றளந்தானடியிணை - ஓவுதலின்றி - உள்ளத்தோர்வாரே' இத்யந்வய:.

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

பண்டையுறவானபரனைப் புளிங்குடிக்கே
கண்டெனக்கெல்லாவுறவின்காரியமும் - தண்டறநீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன்தாளிணையை
உய்துணையென்றுஉள்ளமே! ஓர்.

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்

---

## மூன்றுந்திருவாய்மொழி--ஓராயிரம் - ப்ரவேஶங்கள்.

ஆ.—(ஓராயிரம்.) - இப்படி ஆழ்வார் அபேக்ஷிக்க, "நீர் இங்ஙனே ப்ரார்த்திக்க வேணுமோ? நம்மோட்டைக் குடற்றுடக்கறியீரோ?" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, அவற்றையநுஸந்தித்து இனியராகிறார்.

ஒ.—மூன்றாம் திருவாய்மொழியில், கீழிற்றிருவாய்மொழியிலே, "கூவுதல் வருதல் செய்யவேணும்" என்று எம்பெருமானை ப்ரார்த்தித்த ஆழ்வார்க்கு, அவனும் "நான் நாராயணனல்லேனோ? நீர்அபேக்ஷித்தபடியே செய்கிறோம்" என்று தன்னுடைய நாராயணத்வத்தைக் காட்டியருள; அந்த நாராயணத்வப்ரகாரத்தை அநுஸந்தித்து "அவனைக் காணவேணும்" என்றுஆசைப்பட்டுக் காணப்பெறாமையாலே ஶலஹீநராய், "ஏதேனுமொருபடி அவனிருந்தவிடத்திலே சென்றாகிலும் அவனுடைய ஶீலவத்தையின் மிகுதியாலே அடிமைசெய்ய விடகில்லை" என்று அவனுடைய ஸௌஶீல்யாதிஶயத்தைப் பேசிமுடிக்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், கீழே - கைங்கர்யப்ரார்த்தனையைப் பண்ணி "கூவுதல்வருதல்செய்யவேணும்" என்றுஅபேக்ஷிக்க, அவனும் தன் நிருபாதிக ஸம்பந்தத்தாலே "நீர்அபேக்ஷிக்கவேணுமோ நம்முடையகார்யஞ்செய்கைக்கு?" என்று தன்னுடைய ப்ரகாரப்ரகாரி ஸம்பந்த த்யோதகமான நாராயணத்வத்தை ப்ரகாஶிப்பிக்கக் கண்டு; அதினுடைய கார்யமான ஸர்வலோகரக்ஷண ஸமர்த்தமாயுள்ள திவ்யநாம ஸம்பத்தையும், ரக்ஷணார்த்த வ்யாபாரத்தையும், அகிலவேதவேத்யதாப்ரகாரத்தையும், நித்யஸூரிபோக்யதையையும், அதினுடைய நிருபமவைலக்ஷண்யத்தையும், அநிஷ்டநிவ்ருத்திஇஷ்டப்ராப்திஹேதுவான லக்ஷ்மீஸம்பந்தத்தையும்,ப்ரபலாநிஷ்டஹஞ்சநத்வத்தையும், அதீஷ்டதேசவர்த்தித்வத்தையும், ஆஶ்ரயணம் மிகையான அதிஶயிதஶீலத்வத்தையும், அதினுடைய வாசாமகோசரமஹத்தையையும் அநுஸந்தித்து, ஏவம்வித ஸ்வபாவனான ஸர்வேஶ்வரனை யநுபவிக்க ஆசைப்பட்டு அவனுடையஶீலத்திலே வித்தராய் அநுபவந்தன்னிலும் அக்ஷமரான ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

இ.—மூன்றாந்திருவாய்மொழியில், "கூவுதல்வருதல் செய்யாய்" என்றார் கீழே; அவன் உம்மைப் பெறுகைக்கு நாமன்றோ ப்ரார்த்திக்கக்கடவோம் என்று நாராயணத்வத்தால்வந்த தன்னோட்டை ப்ராப்தியைக் காட்டிக்கொடுக்க; அந்தநாராயணத்வப்ரகாரத்தை யநுஸந்தித்து, "அவனைக் காணவேணும்" என்றுஆசைப்பட்டுக் காணப்பெறாமையாலே ஶலஹீநராய் நாராயணத்வத்தில் எல்லையான ஶீலகுணத்தை அநுஸந்தித்து ஏதேனுமொருபடி அவனிருந்தவிடத்தே சென்றாகிலும் அவனுடைய ஶீலப்ராசுர்யத்தாலே அடிமைசெய்ய க்ஷமரன்றிக்கே யிருக்கையாலே, அந்தஶீலாதிஶயத்தையே பேசிமுடிக்கிறார். அவன் ஶீலவத்தையைப் பார்த்தவிடத்து, தாமொன்று செய்கை மிகையாம்படியாயிருந்தது. தம்மைப் பார்த்தால் அந்தஶீலத்திலே கால் தாழ்ந்து ஒன்றுஞ்செய்ய க்ஷமரன்றிக்கே யிருக்கையாலே, அந்த ஶீலாதிஶயத்தைப் பேசிமுடிக்கிறார். "கிட்டியடிமை செய்யவேணும்" என்று அபேக்ஷித்தாலும் ஒரு குணத்தை அவன் ஆவிஷ்கரித்தால் அவ்வழியே போகவேண்டும்படியிறே யிருப்பது.

ஈடு.—"நீர் இங்ஙனே யர்த்திக்கவேணுமோ? நம்மோட்டைக்குடற்றுடக்கை யறியீரோ?" என்ன; அத்தை யநுஸந்தித்து இனியராகிறார். "கூவுதல்வருதல்செய்யாய்" என்று ப்ரார்த்தித்தார் கீழ்; "ஆர் ப்ரார்த்திக்கக்கடவற்றை யார் ப்ரார்த்திக்கிறீர்? உம்முடையலாபத்துக்கு நாம் ப்ரார்த்திக்கவேண்டும்படியன்றோ உம்மோடே நமக்கு உண்டான ரக்தஸ்பர்ஶம்? ஆனபின்பு, உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களுஞ் செய்யக்கடவோம்; நீர்வெறுக்கவேண்டா" என்று ஸமாதாநம்பண்ணினான். "மையலேற்றிமயக்கவுன்முகம் மாயமந்திரந்தான்கொலோ" என்னக்கடவதிறே; ஸ்ரீகௌஸல்யையார், "ஏகபுத்ரையான நான் உம்மைப்பிரிந்து தனியிருக்கமாட்டேன்: கூடப்போருமித்தனை" என்று பின்தொடர, புரிந்துபார்த்து, "ஆய்ச்சீ! நீர் என்னைப்பின்தொடருகிறவிடம் தர்மஹாநிகிடீர்" என்று முகத்தைப்பார்த்து ஒருவார்த்தை யருளிச்செய்ய, மீட்கைக்காகப்போன இவள் மங்களாஶாஸநம்பண்ணிமீண்டாளிறே; இதிறே அவனுடைய பார்வைகளும் உக்திகளுமிருக்கும்படி. அவன்ஒருவார்த்தை சொன்னால் பின்னை அவன்வழியே போகவேண்டும்படியாயிறே யிருப்பது. ஆக, அவன் நாராயணனாயிருக்கிற இருப்பை யநுஸந்தித்தார்; அந்நாராயணஶப்தத்தினுடைய அர்த்தத்தை ஆராயவென்றிழிந்தவாறே, ஒருவஸ்துவுக்கும் தன்னுடைய பேறிழவுக்குத் தனக்கு ப்ரார்த்திக்கைக்கு ப்ராப்தியற்றிருந்தது; இப்படியிருக்கிறவன் தன்பக்கலிலே விஶேஷகடாக்ஷம்பண்ணினபடியையும், இந்நாராயணஶப்தார்த்தத்துக்கு எல்லையான அவனுடைய ஶீலகுணத்தையும் அநுஸந்தித்து, "இப்போதே இப்படிஶீலவானானவனைக்காணவேணும்" என்னும்அபேக்ஷைபிறந்தது; அதில் தமக்கு அவ

ஓராயிரம் ப்ரவேஶே:—"நாராயணன் நங்கள்பிரானவனே" என்றத்தைக்கடாக்ஷித்து ஸங்க்ரஹ ஸங்கதி - நீர்இங்ஙனே இத்யாதி. விஸ்தரஸங்கதி - கூவுதல் இத்யாதி. கீழே "குடற்றுடக்கு" என்றதின்விவரணம் - ரக்தஸ்பர்ஶம் என்றது. "ஸமாதாநம்பண்ணினான்" ஸமாஹிதராணுமென்று கூட்டுவது ஒருக்திமாத்ரத்தாலே ஸமாஹிதராக்கக்கூடுமோவென்ன-மையலேற்றி இத்யாதி. உன்னுடைய தாழ்ந்தபேச்சுக்களும் வ்யாபாரங்களும் எங்களைப்பிச்சேற்றியறிவுகெடுக்க, உன்முகம்அம்மான்பொடியோ இத்யர்த்த:. நாய்ச்சியார்திருமொழி, "பெய்யுமாமுகில்" இத்யாதி. "உக்திஆகர்ஷகம்" என்னுமதுக்கு உதாஹரணம் - ஸ்ரீகௌஸல்யையார் இத்யாதி. "நஹிதாவத்த்வேணஜீவிதும்லப்யம்ஸவிஶா ரஸுழ | வஸ்கவாத்ராவிநாவாத்ரா த்ஸஹ" என்றத்தைப்பற்ற - ஏகபுத்ரையான இத்யாதி. "ஸஹத்வா நாபமிஷ்யாமிவாத்ரு யத்ருமமிஷ்யஸி" என்றத்தைப்பற்ற - கூடப்போரும் இத்யாதி. புரிந்துபார்த்து - திரும்பிப்பார்த்து. "ஜீவந்த்யாஹிஸ்த்ரியா பர்த்தா தைவதம் ப்ரபுரேவச" இத்யாதியைப்பற்ற - ஆய்ச்சீ இத்யாதி. "யதுத்தவேவஸ்வகாரணம்" இத்யாதியைப்பற்ற - மீட்கைக்காக இத்யாதி. பார்வைகளுமென்றது - "மையலேற்றி" இத்யாதியிலே விவக்ஷிதம். உக்திகளுமென்றது - "ஆய்ச்சீ, நீர்" இத்யாதிகளை. "உக்திகளுமிருக்கும்படி" என்றத்தை விவரிக்கிறார் - அவன்ஒரு இத்யாதி. இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை விசதமாக உபபாதியாநின்றுகொண்டு, இவர் ஸமாஹிதரானபடியை விஸ்தரிக்கிறார் - ஆக இத்யாதி. முதற்பாட்டில் அர்த்தம் - அவன்நாராயணனாய் இத்யாதி. இரண்டாம்பாட்டைப்பற்ற - ஒருவஸ்துவுக்கும் இத்யாதி. "அறிந்தனமே," "நங்கள்பிரான்" என்றத்தைப்பற்ற - விஶேஷகடாக்ஷம் பண்ணினபடியையும் என்றது. "கடைவதுங் கடலுளமுதம்" என்றத்தைப்பற்ற - ஶீலகுணத்தையுமென்றது. "என்மனமேமென்னுமிராப்பகலின்றி" என்றத்தைப்பற்ற - காணவேணுமென்னும் அபேக்ஷை பிறந்ததென்றது. அபேக்ஷைபிறந்தால் அவனிருந்தவிடத்தே போகவொண்ணாதோவென்ன - அதில்தமக்கு

னிருந்தவிடத்தளவும் கால்நடைதாராதபடிக்கீடாகவாயிற்று,அவனுடைய சீலாதிகளிலே ஈடுபட்டுத் துவக்குண்டபடி. இனித்தான், இவர்போலும் ஒன்றுசெய்கை மிகையாம்படி யிருப்பானொருவனுயிருந்தான் அவன்; இவர்தாம், ஒன்றுசெய்தநுபவிக்கவல்லவரன்றிக் கேயிருந்தார்: அவனுடைய சீலகுணங்களிலே கால்தாழ்ந்திருக்கு மவராகையாலே. இப் படிப்பட்டவனுடைய ஶீலகுணப்ராசுர்யத்தையேசொல்லித் தலைக்கட்டுகிறது, இத்திரு வாய்மொழி. அன்றிக்கே, * கண்கள்சிவந்திலே - ப்ரணவார்த்தத்தை யநுஸந்தித்தார்; அதில் முதலிரண்டரைப்பாட்டாலே - அகாரார்த்தத்தை யருளிச்செய்து, மேல் ஒன்ற ரைப்பாட்டாலே - சதுர்த்யர்த்தத்தையும் மத்யமாக்ஷரத்தில் அர்த்தத்தையும் த்ருதீயாக்ஷ ரத்தில்அர்த்தத்தையும்அருளிச்செய்து,—அவைபிரித்தருளிச்செய்யாதொழிந்தது;சதுர்த்யர்த் தமும் மத்யமாக்ஷரத்திலர்த்தமும் ஶாஶ்ரயமாயல்லதிராமையாலே கூடவருளிச்செய் தார்;—மேல்நாலுபாட்டாலே - த்ருதீயாக்ஷரவாச்யனுடைய வைலக்ஷண்யத்தையருளிச்

---

இத்யாதி. அவனிருந்தவிடத்தளவுமென்றது - "நின்றவேங்கடம்" என்றத்தைப்பற்ற. கால்நடை தாராதபடி என்றது - "தேவர்கள் கைதொழுவார்கள்" என்றத்தைப்பற்ற. "சீலமெல்லையிலான்" என்றத்தைப்பற்ற - சீலாதிகளிலே இத்யாதி. துவக்குண்டபடி - வசீகரிக்கப்பட்டபடி. "எழுது மென்னுமிதுமிகை" என்றத்தைப்பற்ற - இனித்தான் இத்யாதி. ஒன்றுசெய்கை - ஒருகைங்கர்யத் தைச்செய்கை. "தழுவுமாறறியேன்" என்றத்தைப்பற்ற - இவர்தாம் இத்யாதி. "சீலமெல்லையிலா னடிமேல்" என்றத்தைப்பற்ற - இப்படிப்பட்டவனுடைய இத்யாதி. யோஜநாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. * கண்கள்சிவந்துதொடங்கி * ஓராயிரமளவும் திருமந்த்ரார்த்தத்திலே ஏறிடுகிறார். இதுவே இரண்டாம்யோஜனைக்கு வாசி. அநுஸந்தித்தபடி யெப்படியென்ன - அதில் முதலிரண்டரை இத் யாதி. அதாவது - முதற்பாட்டாலே ப்ராப்யமாயிருந்துள்ள விக்ரஹவைலக்ஷண்யத்தையும் இரண் டாம்பாட்டாலே ததாதாரமான திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் அநுஸந்திக்கையாலே, அகா ரத்தில் பதரூபத்தாலவந்த ஶேஷித்வத்தினாலும், ஆத்தஸௌலத்தால்வந்த ஶ்ரிய:பதித்வத்தாலும் ஸித்த மான ப்ராப்யத்வத்தையும், மேல் அரைப்பாட்டாலே - "அவனதருளால்" என்று - "அவர்க்கணே" என்கிற தாத்வர்த்தமானரக்ஷகத்வத்தாலும், ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வத்தாலும் ஸித்தமான வுபா யத்வத்தையும் அருளிச்செய்கையாலே, முதலிரண்டரைப் பாட்டாலே அகாரார்த்தத்தை அருளிச் செய்தா ரென்றபடி. இந்தப்ரகாரம், "ஸர்வேக்ஷரத்வேந காரணத்வோக்தித: । ரக்ஷகத்வாந்வயாத்தஸ்மாத் ஶேஷித்வம்ஸ்ம்ருதம் பவேத் ॥ ஶ்ரீஶத்வஞ்சாப்யுஷஸ்த்ராயஜ்ஞ தைவாரோப்ய ந: । ரக்ஷகத்வேப்யுபாயத்வேப்யபேக்ஷா விஶேஷித: ॥ ஸுஶீலாய நிராகாரணத்வஸ்மித: । ஶேஷித்வேசோபேயத்வம் கிஞ்சித்ப்ரத்யாஸ்ம்ருதம் । ஶ்ரீஶத்வஸம்யோக் தஸ்யாத்யோபேயத்வேப்ரயஸ:" என்று தீபஸங்க்ரஹத் திலே சொல்லப்பட்டது. 'மேலொன்றரைப்பாட்டாலேயித்யாதி' அதாவது - "இறவேறி" என்று ஆத்மஸ்வரூபம் தனக்கு அத்யந்த ஶேஷமென்னுமிடத்தைக் காட்டித்தந்தானென்கையாலே - லுப்த சதுர்த்யர்த்தமான ஶேஷத்வத்தையும், "யானுந்தானுயொழிந்தான்" என்று ஸமாநாதிகரணமாக அரு ளிச்செய்கையாலே - மத்யமாக்ஷரப்ரதிபாத்யாநந்யார்ஹ ஶேஷத்வத்தையும், "தேனும்பாலுங்கன்னலு மமுதுமாகித்தித்தித்து" என்று - த்ருதீயாக்ஷர வாச்யனான ஆத்மாவினுடைய "மநஜ்ஞாநே" என்கிற தாதுஸித்தஜ்ஞாநாநந்த விஶிஷ்டதையால்வந்த போக்யதையையும் அருளிச் செய்கையாலே - மேல் ஒன்றரைப்பாட்டாலே சதுர்த்யர்த்தத்தையும், மத்யமாக்ஷரத்திலர்த்தத்தையும், த்ருதீயாக்ஷரத்தி லர்த் தத்தையும் அருளிச்செய்தென்றபடி. ஆனால் "இது ஶேஷத்வம், இது அநந்யார்ஹத்வம், இது ததாஶ்ர யமானவாத்மா" என்று பிரித்துச்சொல்லாதே, த்ருதீயாக்ஷர வாச்யனான ஆத்மாவோடேகூட்டி யருளிச்செய்வானென்னென்ன - அவை இத்யாதி. வைலக்ஷண்யத்தை-ஜ்ஞாநாநந்தாதிவைலக்ஷண்

செய்து, மேலிரண்டுபோட்டாலே - இவ்வடைவிலே ப்ரணவார்த்தாநுஸந்தாநம்பண்ணாத வோஹ்யகுத்ருஷ்டிகளைநிரஸித்து. ஆக, ப்ரணவார்த்தத்தை யருளிச்செய்து, மேல், நமஸ்ஸப்தார்த்தத்தை * கருமாணிக்கமலை, * நெடுமாற்கடிமை இரண்டாலும் அருளிச்செய்து,—நமஸ்ஸப்தத்துக்கு ஸாப்தமாகவும் ஆர்த்தமாகவும் இரண்டிறே அர்த்தம். அதில் ஸாப்தமானவர்த்தத்தை * கருமாணிக்கமலையிலே யருளிச்செய்து, ஆர்த்தமானவர்த்தத்தை * நெடுமாற்கடிமையிலே யருளிச்செய்தது.— நமஸ்ஸப்தத்துக்கு ஸாப்தமானவர்த்தம் - "நான்எனக்குரியேனல்லேன்" என்கையிறே. ஒருகந்யகையானால் ஒருவனுக்கேயாயிருக்கையும், தான் தனக்கு உரியளன்றிக்கேயிருக்கையுமிறே ஸ்வரூபம்; அத்தையருளிச்செய்தார். * கருமாணிக்கமலையாலே;—மேல், * நாராயணஸப்தார்த்தத்தை யருளிச்செய்தார். * கொண்டபெண்டிராலே; நாராயணஸப்தத்துக்கு அர்த்தம் - ஸ்வாமித்வவாத்ஸல்ய உபாயத்வோபேயத்வ வ்யாபகத்வம் இத்யாதியிறே; மேலே, சதுர்த்யர்த்தத்தை யருளிச்செய்தார் - * பண்டைநாளாலே; சதுர்த்திக்குஅர்த்தம் - கைங்கர்யப்ரார்த்தனையிறே. ப்ரணவார்த்தமும், நமஸ்ஸப்தார்த்தமும், வ்யாபகத்வமும், அவ்யாபகத்வமும், அல்லாத வ்யாபகமந்த்ரங்களிலுமுண்டு; அதில், தாம் ஆதரித்தருளிற்றுத் திருவஷ்டாக்ஷரமென்னும் இடத்தை - * ஓராயிரத்தாலே யருளிச்செய்கிறார். இது நடுவில் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்யும்படி.

---

*யத்தையென்றபடி. அருளிச்செய்த ப்ரகாரமெதென்ன - நமஸ்ஸப்தத்துக்கு இத்யாதி. ஸாப்தமான அர்த்தமெது, ஆர்த்தமானவர்த்தமெது? என்ன - நமஸ்ஸப்தத்துக்கு ஸாப்தமான இத்யாதி. இது "கருமாணிக்கமலையிலே" எப்படி ஸித்திக்கிறதென்ன - ஒருகந்யகை இத்யாதி. "ஆர்த்தமானவர்த்தம்" - ததீயஸேஷத்வபர்யந்தமாகை. அத்தை யருளிச்செய்தார் * நெடுமாற்கடிமையிலே என்றுகூட்டுவது. அதெப்படி யென்ன - நாராயணசப்தத்துக்கு இத்யாதி. தத்புருஷனாலே - ஸ்வாமித்வமும், பஹுவ்ரீஹியாலே - வ்யாபகத்வ வாத்ஸல்யங்களும், அயநசப்தத்தில் வ்யுத்பத்தி த்வயத்தாலும் - உபாயோபேயத்வங்களும் சொல்லப்பட்டதிறே. இந்த ஸ்வாமித்வாதிகளாகிற நாராயணசப்தார்த்தத்தை * கொண்டபெண்டிரிலே யருளிச்செய்தார். எங்ஙனேயென்னில்; "நம்மதாதுமவனன்றிமற்றில்லை," "தொண்டரோமாய்" இத்யாதியாலே-ஸ்வாமித்வத்தையும், "வளைபுகழே" என்றும், "கிளையொன்றுலே யேய்ப்பாருமேட்ப" என்றும் - ஆஸ்ரிதரிருந்தவிடத்தே சென்று †கார்யம் என்றுவாத்ஸல்யத்தையும், "கண்ணனல்லாலில்லைகண்டீர்" என்று - உபாயத்வத்தையும், "குற்றமில்சீர்கற்றுவைகல்வாழ்தல்கண்டீர்" என்று - உபேயத்வத்தையும் அருளிச்செய்தார். "நம்மதாதுமவனன்றி மற்றில்லை" என்றதிலே - வ்யாபகத்வமும் அர்த்தம். அதெப்படியென்ன - சதுர்த்திக்கு இத்யாதி. அர்த்தத்தை யருளிச்செய்தால் போராதோ, இத்திருவாய்மொழியிலே ஸப்தத்தை யருளிச்செய்வானென்னென்ன - ப்ரணவார்த்தமும் இத்யாதி. ஆதரித்தவ்யதைக்காக ஆட்தோப திஷ்டமென்கிறார் - இதுநடுவில் இத்யாதி. சரமசதுர்த்தியில் தாதர்த்யே சதுர்த்தியென்று ஸேஷத்வத்தைச் சொல்லுமளவில், அது லுப்தசதுர்த்தீ ஸித்தமாகையாலும், "விபிஷ்க்ஷ தேஷபூரணே" என்று ப்ராப்தார்த்தத்தில் விதி கோசரியாமையாலும், "நாஹிநிந்தா வந்தகஸேஷகவ்" என்கிற ந்யாயத்தாலே - ஸேஷத்வ ஸ்த்திரீகரணரூபமான கைங்கர்யத்தை சரமசதுர்த்தி சொல்லுகிறது. "ஈதுருஸகைங்கர்யந்தான் ஸித்தமோ, அஸித்தமோ" என்று விசாரிக்குமளவில்; அது ஸித்தமாகையாலே, தத்ப்ரார்த்தனை உபபத்திபலத்தாலும், "ஆயநாயணதாஸீ" என்கிற ஸாப்திகப்ரக்ரியையாலும், ஸித்திக்கிறது.*

---

† இங்கேஅந்வயிக்கவில்லை; கோஸாந்தரங்களைப் பார்க்கவேணுமென்று தோன்றுகிறது.

## முதற் பாட்டு.

ஓராயிரமாய் உலகேழளிக்கும்,
பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்
காராயின காளநன்மேனியினன்
நாராயணன் நங்கள்பிரானவனே.

ஆ.—ஒரொருதிருநாமமே ஆயிரம்படியாய் உலகேழளிக்கும் பேராயிரமுடையவனாய், ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸத்யஸங்கல்பத்வ காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாத்யஸங்க்யேய கல்யாணகுணவிஶிஷ்டனாய், * ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமித குணவிஶிஷ்ட நீலமேகநிப திவ்யரூபனாயிருந்த நாராயணனே ஸர்வேஶ்வரனாகப் பெறுவதே! என்று, தம்முடையதிருவுள்ளத்தில் இன்னாப்பெல்லாந்தீர்ந்து எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை யநுஸந்திக்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், "அவன்நாராயணனன்றோ? நம் அபேக்ஷிதஞ்செய்கை நிஶ்சிதம்" என்று தந்திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.

[ஓராயிரமென்று தொடங்கி] - "ஸஹஸ்ரஶீர்ஷா" இத்யாதி ப்ரகாரத்தாலே ஒரோ திருநாமங்களே நிர்வசநபேதத்தாலே அநேகம்படியாலே எல்லா லோகங்களையும் ரக்ஷிக்கும் திருநாமங்கள் அநேகங்களை உடையனாகையாலே வந்த ஒப்பில்லாத பெருமையை உடையான். [காராயினவென்று தொடங்கி] - மேகம்போலே கறுத்த திருமேனியையுடையான். காராயுள்ள கறுத்தழகிய திருமேனியையுடையானென்று ரூபகம். [நாராயணனென்று தொடங்கி] - ப்ரதாநநாமத்தையுடையவனே நமக்கு ரக்ஷகன்.

ப.—முதற்பாட்டில், நாராயணத்வகார்யமான ஸர்வரக்ஷகமாயுள்ள நாமஸம்பத்தையுடையவன் நமக்கு உபகாரகனென்று அறுதியிட்டு, நெஞ்சைநோக்கி யருளிச்செய்கிறார்.

("ஸம்ஹாரா இத்யாதி வசநக்ரமத்தாலே யுண்டான வ்யுத்பத்திபேதத்தாலும் நிர்வசநபேதத்தாலும்) ஓர் - ஒரோதிருநாமங்கள், ஆயிரமாய் - ஸஹஸ்ரமுகமாய்க்கொண்டு, உலகேழு - ஸர்வவிதமான ஸகல சேதநாசேதநங்களையும், அளிக்கும் - ரக்ஷிக்கக்கடவதான, பேர் - திருநாமங்கள், ஆயிரம் - ஆயிரத்தை, கொண்டது - உடைத்தான, ஓர் - அத்விதீயமான, பீடு - பெருமையை, உடையன் - உடையனாய், (இந்த நாமங்களாலே ப்ரதிபாத்யமாயிருக்கிற), காள காராயின - காளமேகம்போலே ஶ்யாமளமாய், நன் - அப்ராக்ருதமான, மேனியினன் - திவ்யவிக்ரஹத்தையுடையனாய், நாராயணனவனே - அவற்றுக்கடங்க மூலபூதமான நாராயணஶப்தவாச்யனானவனே, நங்கள் - நமக்கு, பிரான் - உபகாரகன்.

இ.—முதற்பாட்டில், "அவன் நாராயணனன்றோ? நம்மபேக்ஷிதஞ்செய்கை நிஶ்சயம்" என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

*[ஓராயிரமாய்] - ஓரோ திருநாமங்களே ஆயிரம் முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும். "ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய:" என்று நிர்வசந பேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. [உலகு] - ரக்ஷிக்குமிடத்தில் ஓரொருத்தரையன்றிக்கே லோகமாக ரக்ஷிக்கும். [ஏழு] - அதுதன்னிலும் ஒரு லோகமாத்ரமன்றிக்கே ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்கும். [அளிக்கும்] - அவன் பாப ப்ராசுர்யத்தாலே, "க்ஷிபாமி" என்னக்கடவன்; இவை ரக்ஷிக்கையே ஸ்வபாவமாயிருக்கும். [ஆயிரங்கொண்டதோர் பீடுடையன்] - இப்படிப்பட்ட திருநாமங்களை ஆயிரமுடையனாகையாலுண்டான பெருமையையுடையவன்; "தேவோ நாம ஸஹஸ்ரவாந்." [காராயின காள நன்மேனியன்] - கார்போன்றவென்னாதே, காராயின என்று - ரூபகம். மேகம்போலே கறுத்த திருமேனியையுடையான். [நன்மேனியன்] - சொன்னது உபமானமன்றென்கை. பெருங்காற்றில் இழிவார் தெப்பங்கொண்டு இழியுமாபோலே ஓர் உபமானம் முன்னாக இழியவேண்டுகையாலே சொன்ன இத்தனை; உபமானரஹிதமென்கை. [நாராயணன்] - ஆயிரம் திருநாமங்களையுடையவனென்று சொல்லி வைத்து, 'நாராயணன்' - என்று விசேஷிக்கையாலே, இதுவே ஸ்வரூபநிரூபகமென்கை; ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்கு ஆஶ்ரயமான ஸ்வரூபத்துக்கு ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் நிரூபகமானாற்போலே. [நங்கள் பிரானவனே] - அவனே நமக்கு ரக்ஷகன். அவதாரணத்தால் தன்பேறாக ரக்ஷிக்குமென்கை. "கூவுதல் வருதல் செய்திடாய்" என்றவிடம் மிகை.*

ஈடு.—முதற்பாட்டு. "அவன் நாராயணனன்றோ? நம் அபேக்ஷிதஞ்செய்கை நிஶ்சிதம்" என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

[ஓராயிரமாய்] - ஓரோருதிருநாமங்களே யாயிரம்முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும். "ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய:" (ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய:) என்று-நிர்வசநபேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. [உலகு] - ரக்ஷிக்குமிடத்தில், ஓரோருத்தராகவன்றிக்கே லோகமாக ரக்ஷிக்கும். [ஏழு] - அதுதன்னிலும் ஒருலோகமாத்ரமன்றிக்கே, ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்கும். ஆஶ்ரிதரோருத்தரை ரக்ஷிக்குமது உண்டிறே யவனுக்கு; அங்ஙனன்றென்கைதிருநாமங்கள். [அளிக்கும்] - இவைபண்ணினபாபங்களைப்பார்த்து 'க்ஷிபாமி'

---

*முதற்பாட்டு.—ஓராயிரம் இத்யாதி. "நாராயணன்நங்கள்பிரானவனே" என்றத்தைக் கடாக்ஷித்து, அதில் ஶப்தஸித்தமான அர்த்தத்தையும், தாத்பர்யஸித்தமான அர்த்தத்தையும் கடாக்ஷித்தவதாரிகை - அவன் இத்யாதி. திருவுள்ளத்தைக்குறித்து என்றது - நாலாம்பாட்டில் "மனமே" என்றத்தைக் கடாக்ஷித்தாதல், "மனமே-சோரேல்கண்டாய்" என்றது - முதல் மூன்றுபாட்டுக்கும் க்ரியையாக விவக்ஷித்தாதல். இதுவேமுக்யம். ஆயிரம்முகத்தாலே ரக்ஷிக்கும் ப்ரகாரமேதென்ன - ஐஶ்வர்யஸ்ய இத்யாதி. நிர்வசநபேதம் - நிருக்திபேதம். பகவானென்கிற திருநாமத்தைச் சொன்னால், அதின் அர்த்தமான ஐஶ்வர்யவீர்யாதிக ளெல்லாவற்றையும் கொடுக்குமென்றபடி. 'ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய:। ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம் பக இதீரணா" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. "உலகு" என்றதுக்கு வ்யாவர்த்யம் - ரக்ஷிக்கும் இத்யாதி. "ஏழு" என்றதுக்கு வ்யாவர்த்யம் - அதுதன்னிலும் இத்யாதி. இத்தால் ஈஶ்வரவ்யாவ்ருத்தி - ஆஶ்ரிதர் இத்யாதி. "அளிக்கும்" என்றதுக்கு வ்யாவர்த்யம் - இவைபண்ணின இத்யாதி. "பேர்" என்*

(க்ஷிபாமி) என்பதும் ஒருபோதுண்டு அவனுக்கு ; அளிக்குமதுஒன்றுமேயாயிற்று, இவற்றுக்கு ஸ்வபாவம். [பேர்] - ரக்ஷிக்கைக்கு ஒருபேர்காணும் வேண்டுவது. அப்படிப்பட்ட திருநாமங்களைத்தான் எத்தனை யுடையனென்னில் ?—[ஆயிரங்கொண்டதோர்பீடுடையன்] - "தேவோநாமஸஹஸ்ரவாந்" (தேவோநாமஸஹஸ்ரவாந்) என்னுமாபோலே. பல பசுவுடையவனென்னுமாபோலே. ஸர்வாயித்த்யம்பண்ண நினைத்தவர்கள் சோறுந்தண்ணீருங் குறையறுத்துக் கொண்டிருக்குமா போலே, ஜகத்ரக்ஷணசிந்தை பண்ணின ஈஶ்வரனுக்கு, அதுக்கு உபாயமாக ஆயிரந்திருநாமங்களுண்டாயிருக்குமாயிற்று. கோயிலாய்த்தான் புத்ரவியோகத்தாலே பட்டர் ஸ்ரீபாதத்திலேவந்து தன்ஶோகமெல்லாந்தோற்றவிழுந்துகிடக்க, அவர் அருளிச்செய்தவார்த்தையை நினைப்பது. ஆயிரந் திருநாமத்தையுடையனுகையால் வந்த பெருமையையுடையவன். அவைதாம் கரைகட்டாக்காவேரிபோலே பரந்திருந்தால், அவற்றையெல்லாம் ஒருமுகஞ்செய்தநுபவிக்கைக்கு ஈடான வடிவையுடையனுயிருக்கும். [காராயினகாளநன்மேனியினன்] - கரரேன்றே யிருக்கிறுராயிற்று, ரூபகம் முற்றுகையாலே. கறுத்திருந்துள்ள காளமேகம்போலே யிருப்பதாய், அதுதானும் பெருக்காற்றிலிழிவார் ஒருதெப்பந்தேடி இழியுமாபோலே ஒன்றைச் சொல்லும்போது உபமாநம் முன்னாகவல்லது சொல்லவொண்ணாமையாலேசொன்ன இத்தனைபோக்கி, திருமேனியைப்பார்த்தால் உபமாநரஹிதமாயாயிற்று இருப்பது. இப்படியிருக்கிறவை தன்னையுடையவன்தான் ஆர் என்ன ? - [நாராயணன்] - ஜ்ஞாநஶக்த்யாதிகளும் குணங்களாயிருக்கச் செய்தே, ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் ஸ்வரூபநிரூபகமா

---

கிற ஏகவசநத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தி - ரக்ஷிக்கைக்கு இத்யாதி. சாடுவுக்கு, பேர்காணும் - வ்யாஜங்காணுமென்றபடி. அப்படிப்பட்ட - ஒரொன்றே யாயிரம்முகமாக ரக்ஷிக்கவற்றுன. பீடு - பெருமை. "ஆயிரந்திருநாமத்தை யுடையனுகை யவனுக்குப்பெருமை" என்னுமதுக்கு ப்ரமாணம் - தேவோநாம இத்யாதி. "ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ராஸ்யஸ்ஸஹஸ்ரசரணோவிபு:। ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோதேவோநாமஸஹஸ்ரவாந்" இதி மஹாபாரதே. "நாமஸஹஸ்ரவாந் - தேவ:" இத்யந்வய:. "ரக்ஷணார்த்தமாக அநேகந்திருநாமங்களையுடையவன்" என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - பலபசு இத்யாதி. ஒருதிருநாமம் போராதோ, ஆயிரம் திருநாமமேதுக்கென்ன - ஸர்வாயித்த்யம் இத்யாதி. திருநாமந்தஞ்சமாயிருக்குமென்கைக்கு ஐதிஹ்யம் - கோயிலாய்த்தான் இத்யாதி. குமாரர்க்கு பட்டர்திருநாமம்சாற்றினுன்; அந்தகுமாரர் பரமபதத்துக்குப்போக, அவன் பட்டர் ஸந்நிதியிலேவந்து க்லேஶப்பட, "நீ 'நம்முடைய திருநாமம்சாற்றின பிள்ளைபோனுன்' என்றன்றோ து:கிக்கிறது: அதுக்கு து:கிக்கவேண்டா, அந்தத் திருநாமமுடையநாம் இருந்தோமே !" என்று, பட்டர் தம்மைப்போலே ஒருவிக்ரஹத்தை எறியருளப்பண்ணி ப்ரஸாதித்தருளினர்." ஶப்தார்த்தம் - ஆயிரந்திருநாமத்தை இத்யாதி. கொண்டது - கொண்ட; உடைத்தான வென்றபடி. மேலுக்கவதாரிகை - அவைதாம் இத்யாதி. கார்போன்றவென்னுதே, "கார்தானுயிருக்கிற" என்றதுக்குபாவம்- காரேன்றே இத்யாதி. கார் - மேகம். "காள - காராயின - நன்மேனியினன்" என்றந்வயிப்பது. கறுத்த மேகம்போன்ற விலக்ஷணமான உபமாநரஹிதமான திருமேனியையுடையவன் என்று பொருள். "நன்" என்றதுக்கர்த்தம் - அதுதானும் இத்யாதி. நன் - உபமான ரஹிதனென்றபடி. அல்லாத திருநாமங்களிருக்க, "நாராயணன்" என்று இத்தை அருளிச்சய்வானென் ? என்ன - ஜ்ஞாநஶக்த்யாதிகளும் இத்யாதி. அதாவது - ஜ்ஞாநஶக்த்யாதிகளும் குணங்களாயிருக்கச் செய்தே, ஜ்ஞாநாநந்தங்கள் ஸ்வரூபநிரூபகங்களாய், ஜ்ஞாநஶக்த்யாதிகள் நிரூபித ஸ்வரூபவிஶேஷணங்களாகிறவோபாதி, இதுவும் திருநாமங்களிலே ஒன்றுயிருக்கச்செய்தே, இது ஸ்வரூபநிரூபகமாய்க்கொண்டு ப்ரதாநமாய், அத்தாலே நிரூபிதமான வஸ்துவினுடைய குணசேஷ்டிதங்களுக்குவாசக

யிருக்குமிறே; அப்படியே, "பேராயிரங்கொண்டதோர்பீடையன்" என்றவனுகிறான் ஆர் என்ன? — "இன்னான்" என்று விசேஷிக்கிறவிடத்தில், 'நாராயணன்' என்கையாலே - நிரூபகமாய்ப்புக்கதிறே இது. ஆயிரந்திருநாமங்களைச் சொல்லி, அவற்றிலே மூன்றை ப்ரயாநமாக எடுத்தது வ்யாபகமந்த்ரங்களாகையாலே; அவற்றிலே இரண்டை மற்றைய வற்றோடொக்கச்சொல்லலாம்படியாயிற்று இதுக்கு உண்டான ப்ராதாந்யம். "அந்தணர்மாட்டந்திவைத்தமந்திரத்தை" என்றும், "நின்திருவெட்டெழுத்துங்கற்றுநான்- உற்றதும்" என்றும், "நாராயணாவென்னும்நாமம்" என்றும், "நமோநாராயணம்" என்றும், இவையிறே திருமங்கையாழ்வார்படி; நம்மாழ்வாரும், "வண்புகழ்நாரணன்" என்று தொடங்கி, திருவாய்மொழி முடியவநுஸந்தித்தது இதுவாயிருக்குமிறே. வேதங்களும், ஆழ்வார்களும் நம்ஆசார்யர்களுமெல்லாம் போனவழி இதுவாயிற்று; நமக்குமெல்லாம் இப்போதும் அவற்றை ஆதரித்தால் ஒருகுற்றமில்லையிறே; இதுதன்னை சூத்ராதிகள் மற்றையார் பரிக்ரஹிக்கை சுட்டியிறே நாம் அதுதன்னைத் தவிர்ந்தது. நம் ஆசார்யர்கள் போனது போருமிறே நமக்காதரிக்கவேண்டுவது. [நங்கள்பிரானவனே] - நமக்கு ரக்ஷகனை உபகாரகன்அவனே. "கூவுதல்வருதல்செய்திடாய்" என்று நம்பேற்றுக்கு நமக்கு ப்ரார்த்திக்க ப்ராப்தியில்லையென்கிறது - அவதாரணத்தால். (க)

---

## இரண்டாம் பாட்டு.

அவனேயகல்ஞாலம்படைத்திடந்தான்
அவனேயஃதுஉண்டுஉமிழ்ந்தான்அளந்தான்
அவனேயவனும்அவனும்அவனும்
அவனேமற்றெல்லாமும்அறிந்தனமே.

*மல்லாத திருநாமங்களென்று - இவ்வாக்யத்துக்குக் கருத்து. இது ப்ரயாநமானபடியென்? என்ன - ஆயிரந்திருநாமங்களை இத்யாதி. விஷ்ணுகாயத்ரியிலே ப்ரயாநமாக எடுத்ததென்றபடி. "நாராயணாய" என்று முற்படவெடுத்தமையைப்பற்ற - இதுக்கு உண்டானப்ராதாந்யம் என்கிறார். ச்ருதியேயன்றிக்கே, ஆழ்வார்களும் விரும்பியிருப்பர்களென்கிறார் - அந்தணர்மாட்டு இத்யாதி. அந்தணர் தநமானவேதத்தினுடைய உத்தரபாகத்திலேயிருக்கிற மந்திரமென்று . திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. அந்தணர் - ப்ராஹ்மணர். மாடு - தநம். நிமயிக்கிறார் - வேதங்களும் இத்யாதி. நம்ஆசார்யர்களு மெல்லாம் என்றது - திருமந்த்ரத்தையே யுபதேசிக்கையைப்பற்ற. ஆசார்யர்கள் இத்தைப்ரயாநமாகையாலே ஆதரித்தார்களேயாகிலும், நாம் இத்தையும் அவற்றையுமொக்க விரும்பாமே உபேக்ஷிப்பானென்? என்ன - நமக்கும் இத்யாதி. ஆனால் பின்னைத்தவிருவானென்னென்ன - இதுதன்னை இத்யாதி. அவற்றை - தத்வ்யதிரிக்த வ்யாபகத்வயத்தையும், நாமாந்தரங்களையும். இதுதன்னையென்றது - ஜாத்யேகவசநமாய், மற்றை வ்யாபகமந்த்ரத்வயத்தையும், அல்லாததிருநாமங்களையும் சொல்லுகிறது. அதுதன்னை என்றதும் - கீழே இதுதன்னை என்றத்தையே சொல்லுகிறது. சுட்டியிறே - நிமித்தமாகவிறே. சூத்ராதிகள் - சைவரான சூத்ராதிகள். ஆதிசப்தத்தாலே - வைஸ்ய க்ஷத்ரியாதிகளைச் சொல்லுகிறது. மற்றையார் - நிர்விசேஷசிந்மாத்ரவாதிகளான அத்வைதிகள். பரிக்ரஹிக்கையாவது - இந்தநாமங்களை தேவதாந்தரபரங்களாகவும் நயிப்பிக்கை. நாராயணசப்தம், ணத்வம் பாதிக்கையாலே, நயிப்பிக்கக்கூடாதென்று கருத்து. எல்லாமென்றாலும் ஸஹஸ்ரநாமமன்றோ, பரிக்ரஹிக்கத் தட்டென்? என்ன - நம் ஆசார்யர்கள் இத்யாதி. ஏவகாரத்துக்கர்த்தம் - கூவுதல் இத்யாதி. 'ஓராயிரமாய்' என்று தொடங்கி, 'அவனே - நங்கள்பிரான்' இத்யந்வயஃ. -(க)*

ஆ.—(அவனே.) - ப்ரஹ்மருத்ராதிகளும் ஈஶ்வரரல்லரோ? நாராயணனே ஸர்வேஶ்வரனென்னுமிடம் எங்ஙனேயறிந்தபடி என்னில்?—அவனே நிகிலஜகந்நிர்மாணோத்தரண நிமரணோத்கிரண க்ரமணாதி ஸர்வேஶ்வரஅஸாதாரண திவ்ய சேஷ்டிதங்களைப் பண்ணுகையாலும், சதுர்முகபசுபதி ப்ரதம்க ப்ரப்ருதி ஸ்தாவரபர்யந்தமான ஸர்வாத்மாக்களுக்கும் ஆத்மபூதனாகையாலும், நாராயணனே ஸர்வேஶ்வரனென்னுமிடம் அறிந்தேனென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், நாராயணஶப்தத்துக்கு அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

முதலடைய இரண்டுவ்யவகாரம்-ஸஹாயநைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. [அவனே அவனும்அவனும்அவனும்] - ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களும் அவனிட்டவழக்கு. [அவனே மற்றெல்லாமும்]-மற்றுமுண்டாயுள்ள சேதநாசேதநங்களெல்லாம் தததீநமே.

ப.—அநந்தரம், அந்தநாராயண ஶப்தார்த்தமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தைப்பண்ணிக்கொண்டு ஸர்வாத்மபூதனானபடியை நமக்கு ப்ரகாசிப்பித்தானென்கிறார்.

அகல் - விஸ்தீர்ணமான, ஞாலம் - ஜகத்தை, படைத்து - உத்பாதித்தானும், இடந்தான் - ப்ரளயாபத்திலே முழுகியிடந்தெடுத்தானும், அவனே - ஸஹாயாந்தர நிரபேக்ஷனான அவனே: அவனே அஃது - அவனே அந்த பூமியை, உண்டு - மஹாப்ரளயத்திலே வயிற்றிலே வைத்துநோக்கி, உமிழ்ந்தான் - ப்ரளயாநந்தரம் உமிழ்ந்தவனும், அளந்தான் - அந்யாதீநமாகம் வாராமல் அளந்துகொண்டவனும், அவனும்அவனும்அவனும் - ஸ்ருஷ்டிஸம்ஹார ரக்ஷணத்துக்குக்கடவராய், (தனக்கு ப்ரகாரதயா வேதாந்தத்திலே "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" என்று ப்ரஸித்தரான ப்ரஹ்ம ருத்ரேந்த்ராதிகளும்), அவனே-, மற்று - மற்றும் ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக் கர்மீபூவித்த, எல்லாமும் - ஸகல சேதநாசேதநங்களும், அவனே - அவனேயாக, அறிந்தனம் - (அவன் தந்த ஜ்ஞாநத்தாலே) அறிந்தோம்.

தி.—இரண்டாம்பாட்டில், கீழ்ச்சொன்ன நாராயணஶப்தத்துக்கு அர்த்தமருளிச் செய்கிறார்.

[அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்] - விஸ்த்ருதமான பூமியை ஸ்ருஷ்டித்து, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் எடுத்தானும் அவனே. அவதாரணத்தாலே, ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸஹகாரிநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. ப்ரளயங்கொள்ளாத பூமியை வயிற்றிலே வைத்து வெளிநாடுகாணவுமிழ்ந்து, அபஹ்ருதமான பூமியை எல்லைநடந்து மீட்டுக்கொண்டான் அவனே. இந்த அவதாரணத்தாலே ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனேயவனும்அவனும்அவனும்] - ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகள் அவனிட்டவழக்கு. "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" "ஸ்ரஷ்டிஸ்திதீ" இத்யாதி என்கிற ப்ரமாணப்ரஸித்தியாலே சொல்லுகிறார். [அவனே மற்றெல்லாமும்]-ப்ரதாநரோடு அப்ரதாநரோடு வாசியற ஸகலசேதநாசேதநங்களும் ததயீநமே. [அறிந்தனமே] - ப்ரஹ்மாதிகள், "ஶ்ரோஹம்" என்றிருக்கையும் அவர்களை ஆஶ்ரயிப்பாருமாய்ச் செல்லாநிற்க நீர் 'அவனே' என்கிறது என்கொண்டென்னில்?—மயர்வற மதிநலமருளப்பெற்றத்தாலே அறிந்தேனென்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. கீழ் ப்ரஸ்துதமான நாராயணஶப்தத்துக்கு அர்த்தத்தை யருளிச்செய்கிறார்.

[அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்] - விஸ்த்ருதமான பூமியை யுண்டாக்கி, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் எடுத்தானும் அவனே. அவதாரணத்தால் - ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனேஇத்யாதி] - ப்ரளயங்கொள்ளாதபடி பூமியையெடுத்து வயிற்றிலே வைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்து, மஹாபலியாலே யபஹ்ருதமாக, எல்லைநடந்து மீட்டுக்கொண்டான் அவனே. இந்த அவதாரணத்தால் – ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனேயித்யாதி] - ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகள் அவனிட்ட வழக்கு. "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:) என்கிற ப்ரஸித்தியைப்பற்றச்சொல்லுகிறார். "ஸ:, ஸ:, ஸ:," என்றே போருகிறார். [அவனே மற்றெல்லாமும்] - "ஸோऽக்ஷர: பரமஸ்ஸ்வராட்" (ஸோக்ஷர: பரமஸ்வராட்) என்கிறபடியே, ப்ரதாநரோடு அப்ரதாநரோடுவாசியற ஸகல சேதநாசேதநங்களும் ததீநமே. [அறிந்தனமே] - ப்ரஹ்மாதிகள் "ஈஶ்வரோऽஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருக்கையும், அவர்களையாஶ்ரயிருப்பாருமாய்ச் செல்லாநிற்க, நீர் 'அவனே' என்கிறதுஎன்கொண்டு என்னில்?- *மயர்வறமதிநலமருளப் பெற்றதாலே யறிந்தவனுகையாலே. ஆக, இரண்டுபாட்டாலும் - திருமந்த்ரத்தையும், அதில் அர்த்தத்தையும் அநுஸந்தித்தாராய் நின்றார். (உ)

---

## மூன்றும் பாட்டு.

---

அறிந்தனவேதவரும்பொருள்நூல்கள்
அறிந்தனகொள்கவரும்பொருளாதல்
அறிந்தனரெல்லாம்அரியைவணங்கி
அறிந்தனர்நோய்களறுக்கும்மருந்தே.

இரண்டாம்பாட்டு.—அவனே இத்யாதி. நாராயணஶப்தத்துக்கர்த்தம்-"நாராஜ்ஜாதாநி தத்வாநி" என்று காரணத்வமும், அந்தர்யாமித்வஹேதுக ரக்ஷகத்வமும், அந்தர்யாமித்வமுமாகையாலே, அம்மூன்றையும் பூர்வோத்தரார்த்தங்களாலே அருளிச்செய்கிறாரென்றபடி. அவனுமவனுமவனும் - அவனே" என்றால் ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளைச் சொல்லும்படியென்? என்ன - ஸப்ரஹ்மா இத்யாதி. விவரணம் - ஸஸ்ஸ: இத்யாதி. ஸ: ஸ: என்றது - "ஸப்ரஹ்மா" என்ற ஶ்ருதியில், தச்சப்தோபாதாநமன்று; "அவன் அவன்" என்றதுக்கு ப்ரதிபதமாக ஸம்ஸ்க்ருதத்தாலே வ்யாக்யாதா அருளிச்செய்தது. "மற்று" என்கிற இது - அக்ஷரஶப்தவாச்யரான முக்தாத்மாக்களைச் சொல்லுகிறது. "பரமஸ்ஸ்வராட்" என்று - முக்தாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அக்ஷர: - விகாரரஹித:. பரம: - ப்ரஹ்மாதிப்ய உத்க்ருஷ்ட:. ஸ்வராட் - ஸ்வதந்த்ர:. முக்தோபீஶ்வராதீந இதி ஶ்ருதேரர்த்த:. ப்ரதாநரோடென்றது - கீழைக்கடாக்ஷித்து. "விஶ்வமேவேதம் புருஷ:" என்றத்தைப்பற்ற - ப்ரதாநரோடு இத்யாதி. க்ரமேணான்வய:. (உ)

---

† ஜிதந்தே - (கக - கச).

ஆ.—(அறிந்தன.) - அபௌருஷேயதயா நிர்த்தோஷாதி துர்லப ப்ரயோஜநரூபார்த்தவத்தாய்ப் பரமபுருஷ யாதாத்ம்ய ஜ்ஞாபகதயைவ ப்ரவ்ருத்தமான ஸகல வேதங்களாலும், * ஜந்மாந்தரஸஹஸ்ரார்ஜித தபோஜ்ஞாநஸமாதிகளாலே ப்ரக்ஷீணாசேஷ கல்மஷராய்த் தன் திருவடிகளிலே ஸஞ்ஜாதபக்திகளான புருஷராலும், ஸாம்ஸாரிக ஸமஸ்த து:க்கபேஷஜதயா பரமப்ராப்யதயா அறியப்படுகிற அவனை, நான் நிர்ஹேதுகமாக அறியப்பெற்றேனென்கிறார். வேதங்களாலும் வேதவித்துக்களாலும் அறியவொண்ணாதவனை, நான் நிர்ஹேதுகமாக உள்ளபடியே அறியப்பெற்றேனென்றுமாம்.

ஒ.—மூன்றாம்பாட்டில், வேதங்களுக்கும் ருஷிகளுக்கும் அறிய நிலமல்லாத எம்பெருமான் தன்னை எனக்குப் பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார்.

[அறிந்தன வேதமென்று தொடங்கி] - அறிந்தனவாயிருக்கிற ஜ்ஞேயார்த்தஸூசகமான வேதங்கள் ஸர்வேச்வரனை ஜ்ஞேயனென்று அறிந்தன. [அறிந்தனரென்று தொடங்கி] - மற்றறிந்தாராயிருக்கிற ருஷிகளும் ஸம்ஸார து:க்கபேஷஜமென்று அறிந்தார்கள்.

ப.—அநந்தரம், ஸகல வேதங்களோடு வைதிகபுருஷர்களோடு வாசியற, தம்மைப்போலன்றியே அவனை யறிந்தவளவை யருளிச்செய்கிறார்.

அறிந்தன - "வேதாஹமேதம்" என்று அறிந்தனவாயிருக்கிற, வேதம் - வேதங்களினுடைய, அரும் - அறிதற்கரிய, பொருள் - பொருள்களையும் நிஷ்கர்ஷித்துத் தருவதான, நூல்கள் - ப்ரஹ்மஸூத்ரேதிஹாஸ புராணாதிகளான சாஸ்த்ரங்கள், ("யதோ வாசோ நிவர்த்தந்தே" என்றும், "யஸ்யாமதம் தஸ்ய மதம்" என்றும், "அவிஜ்ஞாதம் விஜாநதாம்" என்றுஞ் சொல்லுகிற மர்யாதையாலே), அரும் - அறியவரிய, பொருளாதல் - பொருளென்று, அறிந்தன - அறிந்தனவாக, கொள்க - கொள்ளவமையும்; அறிந்தனர் - "ஸஹம்வேத்மி ஹாத்மாநம்" என்றறிந்த வைதிகபுருஷர்கள், எல்லாம் அரியை - ஸர்வபாபஹரணனை ஸர்வேச்வரனை, வணங்கி - ஆச்ரயித்து, நோய்கள் - (தங்களுடைய) ஸாம்ஸாரிக மஹாவ்யாதியை, அறுக்கும் - அறுத்துக்கொள்ளும், மருந்தே - பரமௌஷதமாக, அறிந்தனர் - அறிந்தார்களித்தனை. நாம் அப்படியன்றியே அவன் போக்யதையையும், சீலாதிகளையும் பூர்ணமாகக்காட்ட அறியப்பெற்றோமென்று, கீழில் "அறிந்தனம்" என்கிற வாக்யத்தோடே யந்வயம்.

இ.—மூன்றாம்பாட்டில், வேதங்களும் ருஷிகளும் அறிந்த அளவன்றிக்கே, தன்னை எனக்கே பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார்.

[அறிந்தன வேத அரும்பொருள் நூல்கள்] - ஜ்ஞேயார்த்தத்தை யறிந்தனவாயிருக்கிற வேதங்களாகிற சாஸ்த்ரங்கள் என்னுதல்; அறிந்தனவாயிருக்கிற வேதங்களில் ஜ்ஞேயார்த்தங்களை நிஷ்கர்ஷித்துத்தரும் ப்ரஹ்மஸூத்ரேதிஹாஸ புராணாதிகள் என்னுதல். [அறிந்தன கொள்க வரும் பொருளாதல்] - "ஜ்ஞேயன்" என்னும் இவ்வளவு அறிந்தனவாகக்கொள்ள அமையும். 'யதோ வாசோ நிவர்த்தந்தே' "யஸ்யாமதம் தஸ்ய மதம்" "அவிஜ்ஞாதம் விஜாநதாம்" என்னும் இவ்வளவே அறிந்தது. [அறிந்தனரெல்லாம்] - அறிந்தாராயிருக்கிற பராசர வ்யாஸ வால்மீகி ப்ரப்ருதி ருஷிகளும். [அரியைவணங்கி] - ஸர்வது:க்க நிவர்த்தகனை வணங்கி - ஆச்ரயித்து. [அறிந்

தனர் நோய்களறுக்கும் மருந்தே] - "ஸம்ஸாரதுரிதபேஷஜம்" என்னும் இவ்வளவு அறிந்தார்கள்; "ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டநஷ்டசேஷ்டைகபேஷஜம்". அவனுடைய போக்யதையில் இழிந்திலர்கள். அவனுடைய நிரபேக்ஷோபாயத்வத்தில் இழிந்திலர்கள்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. வேதங்களும், வேதார்த்தவித்துக்களான ருஷிகளும் அறிந்தவளவன்றிக்கே, தன்னை எனக்குப் பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார்.

[அறிந்தனவித்யாதி] - துர்ஜ்ஞேயார்த்தத்தை யறிந்தனவாயிருக்கிற வேதங்களாகிற சாஸ்த்ரங்களென்னுதல்; அறிந்தனவாயிருக்கிற வேதங்களில் துர்ஜ்ஞேயார்த்தத்தை நிஷ்கர்ஷித்துத்தரும்ப்ரஹ்மஸூத்ரம், இதிஹாஸபுராணாதிகளென்னுதல். [அறிந்தனகொள்க அரும்பொருளாதல்] - "துர்ஜ்ஞேயன்" என்னும் இவ்வளவு அறிந்தனவாகக்கொள்ளவமையும், †"யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே), ‡"யஸ்யாமதம்தஸ்யமதம்" (யஸ்யாமதம்தஸ்யமதம்), "அவிஜ்ஞாதம்விஜாநதாம்" (அவிஜ்ஞாதம் விஜாநதாம்) என்னும் இவ்வளவு அறிந்தது. [அறிந்தனரேல்லாம்] - மற்றறிந்தாராயிருக்கிற பராசர வ்யாஸ வால்மீகி ப்ரப்ருதிருஷிகளும். [அரியை வணங்கி] - ஸர்வது:கநிவர்த்தகனை, வணங்கி - ஆச்ரயித்து. [அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே] - "ஸம்ஸாரதுரிதபேஷஜம்" (ஸம்ஸாரதுரிதபேஷஜம்) என்னும் இவ்வளவு அறிந்தார்கள்; "ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டநஷ்டசேஷ்டைகபேஷஜம்" (ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டநஷ்டசேஷ்டைகபேஷஜம்). அவனுடைய போக்யதையில் இழிந்திலர்கள்: அவனுடைய நிரபேக்ஷோபாயத்வத்தி லிழிந்திலர்கள். (ங)

---

மூன்றாம்பாட்டு —அறிந்தன இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - வேதங்களும் இத்யாதி. பூர்ணமாக அறிவித்தான் என்று ப்ரீதராகிறாரென்றது - அர்த்தாத்ஸித்தம்.

"அரும்பொருள் - அறிந்தனவேதம் - நூல்கள்" என்றந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார் - துர்ஜ்ஞேயார்த்தத்தை இத்யாதி. ஸர்வேச்வரனை யறிந்தனவாயிருக்கிற வேதங்களில் அரும்பொருளை விசதீகரிக்கும் நூல்களென்றர்த்தாந்தரம் - அறிந்தனவாய் இத்யாதி. "அரும்பொருளாதல் அறிந்தனகொள்க" - அரும்பொருளானமையை யறிந்தனவாகக் கொள்க என்று திருவுள்ளத்துக்கு அருளிச்செய்கிறார். இதுக்கு நியாமகமேதென்ன - யதோவாச இத்யாதி. ஸ்வதுக்க நிவர்த்தகனை என்றது - "ஹரணாத்தேவது:கா நாம் ஹரிரித்யபிதீயதே" என்கிற வசநத்தைப்பற்ற. உக்தத்துக்கு ப்ரமாணம் - ஸம்ஸாரஸர்ப்ப இத்யாதி. "க்லேசிதேவிஷயம் ஸஹ்ய துக்கசோகாதிவேதநா:" இத்யுத்தரார்த்தம். நோய்கள் அறுக்கும் மருந்தாக அறிந்தார்களாகில் அறியாதது எது? என்ன - அவனுடைய இத்யாதி. அர்த்தாந்தரம் - அவனுடைய நிரபேக்ஷ இத்யாதி. அதாவது - "வணங்கி - நோய்களறுக்கும் மருந்தானமையை - அறிந்தார்கள்" என்கையாலே - ஸாபேக்ஷோபாயமென்று அறிந்தார்கள் இத்தனையொழிய, "அவனே நிரபேக்ஷோபாயம்" என்னுமத்தை யறிந்திலர்களென்றபடி. 'அரும்பொருள் - அறிந்தனவேதம் - நூல்கள் - அரும்பொருளாதல் - அறிந்தன கொள்க – அறிந்தனரெல்லாம் அரியை வணங்கி - நோய்களறுக்கும் மருந்தென்று - அறிந்தனர்' இத்யந்வய:. (ங)

† ‡ கௌஷீதகி உபநிஷத்.

## நான்காம் பாட்டு.

மருந்தேநங்கள்போகமகிழ்ச்சிக்கென்று
பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான்
கருந்தேவனெம்மான்கண்ணன்விண்ணுலகம்
தருந்தேவனைச்சோரேல்கண்டாய்மனமே.

.—(மருந்தே.) உன்னழகாலே எங்கள் போகத்துக்கு வர்த்தகனானவனே என்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரானாயிருந்துவைத்து, இங்கேவந்து பிறந்தருளி, ஆஶ்ரிதவத்ஸலனாய், தன்னையாஶ்ரயித்த நம்போல்வார்க்கும் நித்யஸித்தமான ஸ்வாநுபவத்தைத் தந்தருளும் ஸ்வபாவனான எம்பெருமானை ஒருவண்ணம்பெற்றோம்; இனி அவனைச்சோரவிடாதேகிடாய், நல்நெஞ்சே! என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், அயர்வறுமமரர்களுக்குங்கூட ஸ்ப்ருஹணீயனாயிருந்து வைத்து க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணியருளி என்னையடிமைகொண்டு விண்ணுலகம் தருவானாயிருக்கிற ஸர்வேஶ்வரனை விடாதேகொள்! என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

[மருந்தேயென்று இப்பாட்டுக்கு] - உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்குவரும் ஆநந்தத்துக்கு வர்த்தகனானவனேயென்று அயர்வறுமமரர்களுடைய ஸமூஹங்கள் அக்ரமமாகக் கூப்பிடும்படி அவர்களுக்குத் தன்னை போஜிக்கக் கொடுத்தவனை. [கருந்தேவன்] - கறுத்த திருநிறத்தையுடையனாய்க் கொண்டு திவ்யமானனான அவன்.

ப.—அநந்தரம், நித்யஸூரிபோக்யனாய், நிரதிஶயஸௌலப்ய விஶிஷ்டனாய்க்கொண்டு அவ்வநுபவத்தை நமக்குத் தரவிருக்கிறவனை, நெஞ்சே விடாதேகிடாய்! என்கிறார்.

நங்கள் - எங்களுடைய, போகம் - போகத்தினுடைய, மகிழ்ச்சிக்கு - வ்ருத்திக்கு, மருந்தே - வர்த்தகமான அம்ருதமே, என்று - , பெரு - உத்க்ருஷ்டரான, தேவர் - ஸூரிகளுடைய, குழாங்கள் - ஸமூஹங்களானவை, பிதற்றும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யடைவுகெடக் கூப்பிடும்படி, பிரான் - அவர்களைக் களிப்பிக்கும் மஹோபகாரகனாய், கரு - கருமையையுடைய, தேவன் - திவ்யமான விக்ரஹத்தையுடையனாய், எம்மான் - (அவ்வடிவழகைக்காட்டி) என்னை யடிமைகொண்ட, கண்ணன் - ஸர்வஸுலபனான க்ருஷ்ணனாய், (அந்நிலையிலே), விண்ணுலகம் - பரமபதபோகத்தை, தரும் - தருவானான, தேவனை - ஸமாஶ்ரயணீயனை, மனமே - நெஞ்சே! சோரேல்கண்டாய் - (உன் அந்யபரதையாலே யாதல், நிகர்ஷாநுஸந்தானத்தாலேயாதல்) நழுவவிடாதேகிடாய்! மருந்தென்று - போகத்தை ஸாத்மிப்பிக்கும் பரிஹாரமாகவுமாம்.

இ.—நாலாம்பாட்டில், நித்யஸூரிகளுக்கு போக்யனாய்வைத்து க்ருஷ்ணனாய்வந்து அவதரித்து நம்மையும் அவர்கள்நடுவே வைப்பானாயிருக்கிறவனை விடாதே கிடாய் என்று திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார்.

[மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு] - உன்னுடைய அநுபவத்தால் எங்களுக்குவரும் ஆநந்தத்துக்கு வர்த்தகனானவனே! இப்படிச் சொல்லுகிறவர்கள் ஆரென்னில்?—[பெருந்தேவர்]-அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள். [குழாங்கள்]- அவர்கள், கிண்ணகத்தில் இழிவாரைப்போலே திரள்திரளாகவாயிற்று இழிவது.

*[பிதற்றும்] - ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அக்ரமமாகக் கூப்பிடாநிற்பர்கள். [பிரான்] - அவர்களுக்குத் தன்னை யநுபவிக்கக் கொடுத்த உபகாரகன். [கருந்தேவன்] - காளமேகநிறம்யாமமாய் திவ்யமான வடிவையுடையவன். [எம்மான்] - அவ்வடிவைக் காட்டி யென்னை அநந்யார்ஹமாக்கினவன். நித்யஸூரிகளுக்குப் படிவிடும் வடிவைக் கிடீர் எனக்கு உபகரித்தது! [கண்ணன்] - தன்னிலைகுலையாமல்நின்று உபகரிக்கையன்றியே அவதரித்துவந்து உபகரித்தவன். [விண்ணுலகம் தருந் தேவனை] - பரமபதத்தைத் தருவானாயிருக்கிற ஸர்வேஶ்வரனை. [சோரேல் கண்டாய்மனமே] - நெஞ்சே! விடாதேகிடாய்; அவன்உபகாரகனாய்நிற்க நீ வைமுக்யம்பண்ணாதே கிடாய்! அவன் வைலக்ஷண்யத்தை பூஷயிபண்ணாதே, "ஸுலபன்" என்னக் காற்கடைக்கொள்ளாதே கிடாய்!*

ஈடு.—நாலாம்பாட்டு. நித்யஸூரிகளுக்கு போக்யனாய்வைத்து, க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, நம்மையும் அவர்கள்நடுவே வைப்பானாகவிருக்கிறவனை விடாதே கிடாய்! என்று திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார்.

[மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக் கென்று] - உன்னுடைய அநுபவத்தால் எங்களுக்குவரும் ஆநந்தத்துக்கு வர்த்தகனானவனே! இப்படி சொல்லுகிறவர்கள் தான் ஆரென்னில்? - [பெருந்தேவர்] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள். [குழாங்கள்] - அவர்கள், கிண்ணகத்திலிழிவாரைப்போலே திரள்திரளாகவாயிற்று இழிவது. [பிதற்றும்] - ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அக்ரமமாகக் கூப்பிடாநிற்பர்கள். [பிரான்] - அவர்களுக்குத் தன்னை யநுபவிக்கக்கொடுத்த உபகாரகன். [கருந்தேவன்] - காளமேகநிறம்யாமமாய், திவ்யமான வடிவையுடையவன். [எம்மான்] - அவ்வடிவைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவன். நித்யஸூரிகளுக்குப் படிவிடும் வடிவைக்கிடீர் எனக்கு உபகரித்தது! [கண்ணன்] - தன்னிலைகுலையாமல்நின்று உபகரிக்கை யன்றிக்கே, அவதரித்துவந்து உபகரிக்குமவன். [விண்ணுலகந்தருந்தேவனை] - பரமபதத்தைத் தருவானாயிருக்கிற ஸர்வேஶ்வரனை. [சோரேல்கண்டாய்மனமே] - அவனை உடம்புவெளுக்கப்பண்ணாதேகிடாய், நெஞ்சே! இவன் விடுகையாவது- அவனுக்குஇழவுபோலேகாணும். அவன்பண்ணின க்ருஷி ஃபலித்ததில்லையாமே; இல்லையாகில், அவன் வைலக்ஷண்யத்தைப் புத்திபண்ணாதே, "ஸுலபன்" என்னக் காற்கடைக்கொள்ளாதேகிடாய்! (௪)

---

*நாலாம்பாட்டு.—மருந்தே இத்யாதி. "பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான் - விண்ணுலகம்தருந்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நித்யஸூரிகளுக்கு இத்யாதி.*

*"மருந்து" என்றால் - போக்குமென்றன்றோ அர்த்தம்? வர்த்தகத்வத்தைக் காட்டுமோ? என்ன; வ்யாதிக்குமருந்தென்றால் - தந்நிவர்த்தகத்வமும், தேஹத்துக்குமருந்தென்றால் - தத்வர்த்தகத்வமும் தோற்றுகையாலே, இங்கு வர்த்தகத்வத்தை யருளிச்செய்கிறார்-ஆநந்தத்துக்கு வர்த்தகனானவனே என்று. இவர்களுக்குப் பெருமையேதென்ன - அஸ்ப்ருஷ்ட இத்யாதி. "குழாங்கள்" என்றதுக்கு ஹாவம் - அவர்கள் இத்யாதி. கிண்ணகம் - ப்ரவாஹம். "பிதற்றும்" என்றதுக்கு ஹாவம் - ஜ்வரஸந்நிபதிதரை இத்யாதி. "பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் கருந்தேவன்" என்றவநந்தரம், "எம்மான்" என்றதுக்கு ஹாவம்-நித்யஸூரிகளுக்கு இத்யாதி. "எம்மான்" என்ற பதத்தோடே, "கண்ணன்" என்ற பதத்துக்கு வாஸனை - தன்னிலே இத்யாதி. "கருந்தேவன்" என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - அவனை இத்யாதி. இவர் நெஞ்சுசோர்ந்தால் அவனுடம்பு வெளுக்க வேணுமோவென்ன - இவன் விடுகை இத்யாதி. இழவுஎப்படியென்ன - அவன்பண்ணின இத்யாதி. * ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேதஃ, விலக்ஷணனானவனை விடப்ரஸக்தியேதென்ன - அவன்வைலக்ஷண்யத்தை இத்யாதி. 'நங்கள்போகமகிழ்ச்சிக்கு - மருந்தே - என்று - பெருந்தேவர்' என்று தொடங்கி, 'சோரேல்கண்டாய் மனமே' இத்யந்வயஃ.* (௪)

## ஐந்தாம் பாட்டு.

மனமேஉன்னைவல்வினையேன்இரந்து
கனமேசொல்லினேன்இதுசோரேல்கண்டாய்
புனமேவியபூந்தண்துழாயலங்கல்
இனமேதுமிலானையடைவதுமே,

ஆ.—(மனமே.) - பரமபோக்யனுப்த் தன்னோடொப்பாரின்றிக்கேயிருக்கிற வனை விடாதேகிடாய் நெஞ்சமே! உனக்கு அடியேனுயிருக்கிறேன் என்று பின்னையும் நெஞ்சை இரக்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நிரதிசயபோக்யனான எம்பெருமானை விடாதே கிடீர்! என்று திருவுள்ளத்தை ஆதராதிசயத்தாலே மிகவும் பிரார்த்திக்கிறார்.

[மனமேயென்று தொடங்கி] - நெஞ்சே! உன்னை என் ஆற்றாமையாலே ப்ரார்த்தித்து த்ருடமாகச்சொன்னேன். இத்தை அவச்யம் சோரவிடாதொழிய வேணும். [புனமேவியவென்று தொடங்கி] - செய்வதென்னென்னில்? நிரதிசயபோக் யனுய்த் தன்னோடொப்பார் இன்றிக்கேயிருக்கிறவனை ஆச்ரயி. அர்த்தித்ததுதான் என் னென்னில்? எம்பெருமானை ஆச்ரயிக்கையென்றுமாம்.

ப.—அநந்தரம், போக்யதையினுடைய நிரூபக வைலக்ஷண்யத்தை யுடைய வனை நாம் கிட்டவேணுமென்னுமிடத்தைச் சிக்கெனச்சொன்னேன்; இது நழுவவி டாதேகொள்! என்கிறார்.

மனமே - நெஞ்சே, உன்னை - (என்னிலும் இவ்விஷயத்தில் ஸத்வரமான) உன்னை, வல்வினையேன் - விளம்பாக்ஷமனும்படி ப்ரபலபாபத்தையுடையனுன என்சாப லத்தாலே, இரந்து - அர்த்தித்து, கனமே - த்ருடமாகவே, சொல்லினேன் - சொன் னேன்; இது - இத்தை, சோரேல்கண்டாய் - நழுவவிடாதேகொள்; (எத்தையென் னில்?) புனம் - தன்னிலத்தில், மேவிய - வளர்த்தியாலே, பூ - செவ்விய, தண்துழாய் - திருத்துழாய், அலங்கல் - மாலையையுடையனுப், (இந்தபோக்யதைக்கு), ஏதும் - ஒரு ப்ரகாரத்தாலும், இனம் - ஒப்பு, இலானை - இல்லாதவைலக்ஷண்யத்தையுடையவனை, அடைவதும் - கிட்டவேணுமென்கிறஇத்தை.

இ.—அஞ்சாம்பாட்டில், "நிரதிசயபோக்யனுனவனை விடாதேகிடாய்" என்று திரியட்டும் திருவுள்ளத்தை அர்த்திக்கிறார்.

[மனமே உன்னை] - "இயற்றுவாய் எம்மொடுநீகூடி" என்கிறபடியே முற் பட்டுநிற்கிற உன்னையிறே நான் இரக்கிறது. [வல்வினையேன்] - ஸுலபத்விஷயத்தில் க்ரம ப்ராப்திபற்றுதபடியான பாபத்தைப் பண்ணினேன். உன்னையிரக்கவேண்டி இரக் கிறேனல்லேன். என்சாபலாதிசயத்தாலே யிரக்கிறேனித்தனை. [இரந்துகனமே சொல் லினேன்] - உன்னைக் கால்பிடித்து த்ருடமாகச் சொன்னேன். [இது சோரேல்கண் டாய்] - நான் "தவிர்" என்றாலும் நீ விடப்பாராதே கிடாய். எத்தைவிடாதொழியச் சொல்லுகிறதென்னில்? [புனமேவிய இத்யாதி] - நிரதிசய போக்யனுனவனை ஆச்ரயிக்கையை. [புனமேவிய] - புனத்திலே மேவியிருப்பதான அழகிய திருத்துழாய்

*மாலையை உடையவனுகையாலே ஒப்பின்றிக்கேயிருக்கிறவனை. அத்தோள்மாலையை யுடையனுகையிறே ஸர்வாபாஶ்ரயனுகையாவது. நான் நிஷேபிக்கிலும் மேல் விழவேண்டி யன்றோ விஷயமிருக்கிறது. 'அடைவது' என்று க்ரியையாதல்; சோரேல் கண்டா யென்று - க்ரியையாதல்.*

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நெஞ்சே! அவனைவிடாதே கிடாய் என்றார் - கீழ்; அவ்வார்த்தைதன்னை ஒலக்கவார்த்தையாக நினைத்திராதே கிடாய் என்கிறார் - இதில்.

[மனமேஉன்னை] - மோக்ஷஹேதுவாய் முற்பட்டுநிற்கிறஉன்னையன்றோ, பிற் பாடரைச்சொல்லுமாபோலே யிருக்க நான் சொல்லுகிறது? ஹிதவசன ஶ்ரவணம் உனக்கு ஸ்வாபாவிகமாயிருக்க, என்செல்லாமையாலே சொல்லுகிறேனத்தனையிறே. "முந்துற்ற நெஞ்சே இயற்றுவாய் எம்மொடு நீ கூடி" என்று எனக்குங் காற்கட்டவேண்டும்படி யநுஷ வத்திலே முற்பட்டுநிற்கிற உன்னை. [வல்வினையேன்] - ஹிதவசவிஷயத்தில் க்ரமப்ராப்தி பற்றுதபடியான பாபத்தைப்பண்ணினேன். உன்னையிரக்கவேண்டி யிரக்கிறேனல்லேன்; என் சாபலாதிஶயத்தாலே இரக்கிறே னித்தனை. [இரந்து கனமே சொல்லினேன்] - உன் னைக் கால்பிடித்து த்ருடமாகச்சொன்னேன். இரந்துசொல்லுகைக்கு மணக்கால்நம்பியோ டொப்பர்காணும். [இதுசோரேல்கண்டாய்] - இன்னம் நானே "ஹிதவசன ஶ்ரவணமா காது; இத்தைத் தவிரவேணும்" என்று சொன்னாலும், நீ இத்தைநெகிழவிடாதேகிடாய்! கனம் - பொன். உனக்குப் பரமார்த்தத்தைச்சொன்னேன் என்கை. "சாயால்கரியானை" இத்யாதி. [இதுசோரேல்]-'எத்தைத்தான் நீர் இப்படி சொல்லுகிறது?' என்ன, -[புனமித் யாதி] - நிரதிஶயபோக்யனுனவனை ஆஶ்ரயிக்கையை. புனத்திலே மேவியிருப்பதான அழகியதிருத்துழாய்மாலையை யுடையவனுகையாலே ஒப்பின்றிக்கே யிருக்கிறவனை. அத் தோள்மாலையையுடையவனுகையிறே ஸர்வாபாஶ்ரயனுகையாவது. ஒருதிருமுளைத்திருநாளி

---

*அஞ்சாம்பாட்டு.—மனமே இத்யாதி. "சோரேல்கண்டாய்" என்று இரண்டிடத்திலும் சொன்னால் புநருக்தமன்றோவென்ன; 'அல்பம் வாசியுண்டு'டென்கிறார் - நெஞ்சே இத்யாதி. "கனமே சொல்லினேன்" என்றதைப்பற்ற - ஓலக்கவார்த்தை இத்யாதி. அதாவது - விடாதே கிடாயென் றது அஹ்ருதயமல்ல, ஸஹ்ருதயமென்று கருத்து.*

*"உன்னை" என்றதுக்குபாவம் - மோக்ஷஹேதுவாய் இத்யாதி. ஆனால்சொல்லுகிறதென் னென்ன - ஹிதவசன ஶ்ரவணம் இத்யாதி. செல்லாமை - பொறுக்கமாட்டாமை. "மோக்ஷஹேதுவாய் முற்பட்டுநிற்கிறஉன்னை" என்றதுக்கு ப்ரமாணம் - முந்துற்ற இத்யாதி. இயற்றுவாய் - கார்யத்தை நடத்தப்பார். வல்வினையேதென்ன - ஹிதவசவிஷயத்தில் இத்யாதி. "என்செல்லாமையாலே சொல்லுகிறேனத்தனை" என்றதின்விவரணம் - உன்னையிரக்கவேண்டி இத்யாதி. "கனம்" என்ற துக்குஇரண்டர்த்தம் - த்ருடமாகச் சொன்னேனென்னுதல்; கனம் என்று-பொன்னாய், ஶ்லாக்யமான அர்த்தத்தைச்சொன்னே னென்னுதல். இரந்துசொல்லவேணுமோ வென்ன-இரந்துசொல்லுகைக்கு இத்யாதி. "சோரேல்கண்டாய்" என்றதினுறைப்பை யருளிச்செய்கிறார் - இன்னம் நானே இத் யாதி. "கனம்" என்றதுக்கு - த்ருடமாகவென் றருளிச்செய்து, சீரியஅர்த்தத்தைச் சொன்னேனென் றர்த்தாந்தரம் - கனம் பொன் இத்யாதி. அப்படி தாம் "ஹிதவசன ஶ்ரவணமாகாது" என்றாரோ வென்ன - சாயால் இத்யாதி. மேலுக்கவதாரிகை - எத்தைத்தான் இத்யாதி. சங்கைக்குப்பரிஹாரம் - நிரதிஶய இத்யாதி. கீழ் - தாத்பர்யவித்தார்த்தத்தை யருளிச்செய்து, ஶப்தார்த்தம் - புனத்திலே இத்யாதி. புனம் - நிலம். அலங்கல் - மாலை. இனம் - ஒப்பு. திருத்துழாய்மாலையை யுடையனானால் ஒப்பின்றிக்கே யிருக்கவேணுமோ என்ன - அத்தோள்மாலை இத்யாதி. ப்ராஸங்கிகம் - ஒருதிருமுளை*

னன்றாக இப்பாட்டை யருளிச்செய்து, முன்னாள் கையார் சக்கரத்துக்குப் புறப்பட்டருளினபடி திருவுள்ளத்திலேகிடந்து, "புனமேவியபூந்தண்துழாயலங்கல் இனமேதுமிலானைகையாவது - நேற்றுப்புறப்பட்டருளினபடியிறே" என்று அருளிச்செய்தார். அடைவது-சொல்லினேன்: இதுசோரேல்கண்டாய் என்று க்ரியையாகவுமாம்; எத்தைநீர்சொல்லுகிறதென்ன?—இனமேதுமிலானை யடைவது என்று க்ரியையாகவுமாம். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

அடைவதும்அணியார்மலர்மங்கைதோள்
மிடைவதும்அசுரர்க்குவெம்போர்களே
கடைவதுங்கடலுளமுதம்என்மனம்
உடைவதும்அவற்கேஒருங்காகவே.

ஆ—(அடைவதும்.) - "அவனைவிடாதேகிடாய்" என்று நான்சொல்லி முடிப்பதற்குமுன்னே அவனுடைய செயல்களிலே என்னெஞ்சானது ஒருகடலுடைந்தாற்போலே உடைந்து கிடக்கப்பெற்றேன் என்று தம்முடைய நெஞ்சைப் புகழுகிறார்.

ஓ.—ஆறாம்பாட்டில், தாம் இப்படி அர்த்திக்குங்காட்டில் தம்முடைய திருவுள்ளம் எம்பெருமானுடைய சேஷ்டிதங்களை அநுஸந்தித்து மிகவும் ஶிதிலமாகாநின்றதென்று ப்ரீதராகிறார்.

[அடைவதுமென்று தொடங்கி] - பெரிய பிராட்டியாருடைய மிகவும் அழகிதான திருத்தோளை ஸம்ஶ்லேஷிப்பதும் ஆஶ்ரிதவிரோதிகளான அஸுரரை முடிக்கும் விரகுகளே சிந்தியாநிற்பதும் ஆஶ்ரிதார்த்தமான மஹாப்ரவ்ருத்தி பண்ணியருளாநிற்பதும். [என்மனமென்று தொடங்கி] - என்னுடைய ஹ்ருதயம் ஒருமைப்பட உடைகுலைப்படாநிற்பதும் ஏவம்வித சேஷ்டிதங்களை யுடையவனுக்கே.

---

இத்யாதி. கையார்சக்கரம் - ஆழ்வார்திருநாள். புறப்பட்டருளினபடி - சேனைமுதலியார் புறப்பட்டருளினபடி. சேனைமுதலியார் புறப்பாட்டைப் பெருமாள் புறப்பாடாகத் திருவுள்ளம்பற்றினாரென்றபடி. 'அருளிச்செய்தார்' நஞ்சீயரென்றபடி. 'மனமே யுன்னை வல்வினையேனிரந்து - புனமேவிய' என்றுதொடங்கி, 'அடைவதும் - கனமேசொல்லினேன், இதுசோரேல் கண்டாய்' என்றந்வயமாதல்; 'மனமே' என்றுதொடங்கி, 'சோரேல்கண்டாய், எத்தைநீர் சொல்லுகிறதென்னில், புனமேவிய என்றுதொடங்கி யந்வயமாதல். பெரியதிருவந்தாதி பதினாலாம்பாட்டு - சாயால் இத்யாதி. 'சாயால்கரியானை' - காந்தியால் கறுத்திருக்கிற ஸர்வேஶ்வரனை. 'உள்ளறியாராய்' - உட்புக்கு அறியாதவளாய். 'பேயார்' - பூதனையானவள். 'பேயாராய்' - அறிவுகேட்டை யுடையளாய்க்கொண்டு, முலைகொடுத்தாள்; அப்படியே, நெஞ்சே! 'போய்' - விலக்ஷணவிஷயத்தைக்கிட்டி. 'சுவைத்தூண்' - ரஸித்தநு஭விக்கை. 'தேம்பூண்' - தேம்புதலை விளைவிக்கும்: அவத்யத்தைவிளைக்குமென்று. 'அறிந்தறிந்தும்' - மிகவும் அறிந்துவைத்தும். 'தீவினையாம் பாம்பார்வாய்' - நமக்குஅநிஷ்டமான ஹ்ருதநு஭வமநோரதமாகிற ஸர்ப்பாஸ்யத்திலே. 'கைநீட்டல்பார்த்தி' - கைநீட்டப்பாராநின்றாய். 'நீ யார்' - நீ அந்தப்பேய்ச்சிக்கு எந்தஉறவுஉடையாய்? என்று அயோக்யதாநுஸந்தாநத்தாலே அகலுகிறாரென்று பொருள். தேம்புதல் - குறைதலாய், அவத்யத்தைச் சொல்லுகிறது. தம்செயலில் பூதனைசெயல் நன்றென்று அத்தைக் கௌரவித்து "பேயார்" என்கிறார். (ரு)

ப.—அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்தி ஹேதுவான லக்ஷ்மீ ஸம்பந்தத்தை யுடையவனானவனைப் பற்ற என்னெஞ்சு ஒருபடிப்பட ஶிதிலமாகா நின்றதென்கிறார்.

மலர் - பத்மவாஸிநியான ஆபிஜாத்யத்தையும், மங்கை - பருவத்தையுமுடையளான லக்ஷ்மியினுடைய, அணி - ஆபரணங்களாலே, ஆர் - நெருங்கின, தோள் - திருத்தோளையே, அடைவதும் - ஸம்ஶ்லேஷிப்பதும், (அத்தோளோடேஉண்டான பரிஷ்வங்கம் ஸித்திக்கைக்காக), அசுரர்க்கு-(ப்ரதிகூலரான) அசுரர்களுக்குஆற்றவரிய, வெம்-வெவ்விய, போர்களே - போர்களையே, மிடைவதும் - நெருங்கப்பண்ணுவதும், (ஆஶ்ரிதார்த்தமாக), கடலுள் - கடலுக்குள்ளில், அமுதம் - அம்ருதத்தை, கடைவதும் -, அவற்கே - (இப்படி லக்ஷ்மீவிஶிஷ்டனுமாய் அநிஷ்ட நிவர்த்தகனுமாய் இஷ்டப்ராபகனுமான) அவனுக்கே, என் மனம் - என் நெஞ்சானது, ஒருங்காகவே - ஒருபடிப்பட, உடைவதும் - ஶிதிலமாகாநின்றதும்.

இ.—ஆறும்பாட்டில், தம்முடைய உபதேசம்பலித்து இவ்விஷயத்திலே திருவுள்ளம் ஶிதிலமாகாநின்றதென்று ப்ரீதராகிறார்.

[அடைவதும் அணியார் மலர்மங்கைதோள்] - மிகவும் அழகிதான பிராட்டி திருத்தோளோடே ஸம்ஶ்லேஷிப்பதும்; அவன் தான் வைஶ்வரூப்யங்கொண்டிழிந்தாலும் தோளழகுக்கு அவ்வருகு போகமாட்டான். [மிடைவதும் அசுரர்க்கு வெம்போர்களே] - அவள்தோளை யணைக்கைக்கிடும் பச்சை. "ஹத்வாஸம்வரிஷ்வஜெ" என்றிறே அவள் அணைப்பது. ஆஶ்ரிதவிரோதிகளுக்கு வெம்போர்களை நெருங்கப்பண்ணுவதும் என்னுதல்; அவர்களை முடிக்கும் விரகுகளை சிந்தியாநிற்பதென்னுதல். [கடைவதுங்கடலுளமுதம்]-ப்ரயோஜநாந்தரபரருடைய ப்ரயோஜநத்துக்காகக் கடைவதுமென்னுதல். பிராட்டியைப் பெறுகைக்கு வ்யாபரிக்கும்படி சொல்லுகிறதென்னுதல். அவளை ஸம்ஶ்லேஷிக்கும்படி சொல்லிற்று. அதுக்குஇடும்பச்சை சொல்லிற்று; அவளைப்பெறுகைக்கு யத்நம்பண்ணும்படி சொல்லிற்று. இவை இவர்திருவுள்ளம் உடைகுலைப்படுகைக்கு ஹேதுக்கள். என்னுடைய மநஸ்ஸு ஒருமடைப்பட உடைகுலைப்படாநிற்பதும் ஏவம்வித சேஷ்டிதங்களை யுடையவனுக்கே.

ஈடு.—ஆறும்பாட்டு. தம்முடைய உபதேசம்பலித்து, இவ்விஷயத்திலே திருவுள்ளம் சிதிலமாகாநின்றதென்று ப்ரீதராகிறார்.

[அடைவதும்அணியார் மலர்மங்கைதோள்] - மிகவும் அழகிதான பெரியபிராட்டியார் திருத்தோளோடே ஸம்ஶ்லேஷிப்பதும். அவன்தான் வைஶ்வரூப்யங்கொண்டிழிந்தாலும் தோளுக்குஅவ்வருகு போகமாட்டான். [அணியார்மலர்மங்கை]- "மார்வத்துமாலை" என்கிறபடியே திருமார்வுக்கெல்லாம் தானே யாபரணமாகப்போரும்படியாக

ஆறும்பாட்டு.—அடைவதும் இத்யாதி. "என்மனமுடைவதுமவற்கே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - தம்முடைய இத்யாதி.

"அணி" என்று - அழகாய், "ஆர்தல்"-மிகுதியாய், அழகுமிக்கதோள் என்று - தோளுக்கு விசேஷணமாதல்; இத்தை யருளிச்செய்கிறார் - மிகவும் இத்யாதி. அவயவாந்தரங்களிருக்க, தோளை விசேஷித்ததுக்கு பாவம் - அவன் இத்யாதி. "அணி" என்று - ஆபரணமாய், "ஆர்தல்" - பூர்த்தியாய், ஆர்ந்தவணியான - ஆபரணமாகப் போரும்படியான, மலர்மங்கை என்று - பிராட்டிக்கு விசேஷணமாக அர்த்தாந்தரம் - மார்வத்துமாலை இத்யாதி. விராதநிரஸநம் பச்சையேயென்ன - ப்ரீ

விருப்பாளாய், ஷோக்யதையால் குறைவற்றிருக்கிறவள் தோளோடேயாயிற்றணைவது. [மிடைவதும் அசுரர்க்கு வெம்போர்களே] - அவள் தோளணைக்கைக்குஇடும் பச்சை. "ஹ்ருஷ்டா பர்த்தாரம்பரிஷஸ்வஜே" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே' என்றிறே அவள்அணைப்பது. ஆஶ்ரிதவிரோயிகளுக்கு வெம்போர்களே நெருங்கப்பண்ணுவது மென்னுதல்; அவர்களை முடிக்கும் விரகே சிந்தியாநிற்குமென்னுதல். [கடைவதுங்கடலுளமுதம்]-ப்ரயோஜநாந்தர பரருடைய ப்ரயோஜநத்துக்காகக் கடைவதுமென்னுதல், பிராட்டியைப்பெறுகைக்கு வ்யாபரிக்கும்படி சொல்லுகிறதென்னுதல். அவளை ஸம்ஶ்லேஷிக்கும்படி சொல்லிற்று. அதுக்கிடும் பச்சைசொல்லிற்று. அவளைப்பெறுகைக்கு யத்நம்பண்ணினபடிசொல்லிற்று. இவர்திருவுள்ளம் உடைகுலைப்படுகைக்கு ஷேதுக்களிவை. [என்மனமித்யாதி] - என்னுடைய மநஸ்ஸு ஒருமடைப்பட உடைகுலைப்படாநிற்பதும் ஏவம்விதமான சேஷ்டிதங்களையுடையவனுக்கே. அவன் பனிக்கடலைக்கடைய, இவர் மனக்கட லுடையப்புக்கது. விரகராயிருப்பார், கோழைகளாயிருப்பாரை த்ரவ்யம்வாங்க நினைத்தால், முந்துற மிடுக்கராயிருப்பாரை நெருக்கிவாங்கவே இவர்கள் தாங்களே கொடுசென்று கொடுப்பர்களிறே; அவனும், மஹத்தத்த்வமான கடலை யுலக்கைவிடுநகமிட்டுநெருக்கி அதின் நல்லுயிரை †வாங்கி, இவருடைய திருவுள்ள முடையத் தொடங்கிற்று. (சு)

## ஏழாம் பாட்டு.

ஆகம்சேர் நரசிங்கமதாகி ஓர்
ஆகம்வள்ளுகிரால் பிளந்தானுறை
மாகவைகுந்தங்காண்பதற்கு என்மனம்
ஏகமெண்ணும் இராப்பகலின்றியே.

தாரம் இத்யாதி. "தாம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே" இத்யாரண்யகாண்டே கரவதாநந்தரே. மிடைகை - நெருக்கமாதல், விசாரமாதல். முடிக்கும்விரகு சிந்திக்குமோவென்ன; "தீங்கிழைக்கும்திருமால்" என்னக்கடவதிறே. "மிடைவதும்" என்றதின் அர்த்தத்வயத்துக்கும் சேரவருளிச்செய்கிறார்-ஆஶ்ரித இத்யாதி. கீழில் பதத்வயாநுகுணமாக "கடைவதும் கடலுளமுதம்" என்றதுக்கு விநியோகம் த்வேதா வருளிச்செய்கிறார் - ப்ரயோஜநாந்தர இத்யாதி வாக்யத்வயத்தாலே.‡ த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம். "தைவதாநாம் ப்ரயோஜநம் ஸ்ருதா பூதக்ஷயேந" என்று. அதாவது - "தேவர்களுக்கு" என்று வ்யாஜமாத்ரமாய் பிராட்டிக்காகக் கடைந்தானென்றபடி. த்விதீயயோஜநாநுகுணமாக "அடைவதும்" இத்யாதிஅர்த்தத்தை நிகமிக்கிறார் - அவளை இத்யாதி. உடைகுலைப்படுகை - சிதிலமாகை. ஒருங்காக - ஏக ப்ரகாரமாக. "கடைவதும்" இத்யாதியோடே "என்மனமுடைவதும்" என்றத்தைக்கூட்டி ரஸோக்தி-அவன்பனிக்கடலை இத்யாதி. அவன் பனிக்கடலைக்கடைந்தால் இவர்மனக்கடலுடைவானென்னென்ன, ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்-விரகராய் இத்யாதி வாக்யத்வயத்தாலே. கோழைகள் - ம்ருது ஸ்வபாவர். அப்படியே-'அவனும்' என்றுகூட்டுவது. உலக்கைவிடுநகம்இட்டு-உலக்கையாலேகிட்டி கட்டி. நல்லுயிரை என்றது - "அமுதம்" என்றத்தைப்பற்ற. 'மலர்மங்கை அணியார் தோள் அடைவதும் - அசுரர்க்கு வெம்போர்களே மிடைவதும் - கடலுளமுதம் கடைவதும் செய்யாநிற்குமவற்கே - என்மனம் ஒருங்காகவே உடைவதும்' இத்யந்வய: (சு)

† வாங்க என்று இருக்கலாம்.

‡ இந்த இடத்தைக் கவனிக்கும்போது, 'ஏட்டில் ஏதாவது பங்க்தி விட்டிருக்குமோ?' என்று சங்கை யுண்டாகின்றது.

ஆ.—(ஆகம்சேர்.) - இந்த ஆஸ்சர்யத்தை யநுபவித்து, பின்னையும் ஏவம் விதசேஷ்டிதங்களைச் செய்தருளினவன் தன்னை அவனிருக்கிற திருநாட்டிலே சென்று காணவேணுமென்று ஆசைப்படாநின்றது; அதுவோ அதிதுர்லபமாயிராநின்றது; என்னெஞ்சைக்கொண்டு என்செய்வேன்? என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஏவம்விதசீல குணகனானவன் நிரந்தரவாஸம்பண்ணுகிற, ஒருவர்க்கும் எட்டவொண்ணாத திருநாட்டிலே சென்று காணவேணும் என்று ஆசைப்படாநின்றது என்னெஞ்சு. இதினுடையசாபலத்துக்கு நான்என்செய்ய? என்கிறார்.

[ஆகம்சேர் நரசிங்கமென்று தொடங்கி] - நரத்வ ஸிம்ஹத்வங்கள் பரஸ்பரம் ஸங்கடிதமாய் அத்யந்தவிலக்ஷணமான நரஸிம்ஹமாய் மிகவும் வரமான ஹிரண்யனுடைய உடம்பைக் கூரிய உகிராலே பிளந்தவன் நிரந்தரவாஸம்பண்ணுகிற பரமாகாஸமான ஸ்ரீவைகுண்டத்தைக் காணவேணுமென்று. [என்மனமேகம் எண்ணும் இராப்பகலின்றியே] - என்னுடைய ஹ்ருதயமானது நிரந்தரமாக எண்ணாநின்றது.

ப.—அநந்தரம், ப்ரபலாநிஷ்டநிவர்த்தகனானவன் வர்த்திக்கிற ப்ராப்யபூமியே வேணுமென்று எப்போதும் என்னெஞ்சம் எண்ணாநின்றதென்கிறார்.

ஆகம் - ஒருவடிவிலே, சேர் - பொருந்துவிக்கப்பட்ட, நரசிங்கமதுஆகி-நரத்வ ஸிம்ஹத்வங்களை யுடைத்தாய்க்கொண்டு, (ஹிரண்யனுடைய), ஓர் - அத்விதியமான, ஆகம் - யார்வை, வள் - வளைந்த, உகிரால் - உகிராலே, பிளந்தான் - பிளந்தவன், உறை - வர்த்திக்கிற, மாக வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, காண்பதற்கு - காண்கைக்கு, என்மனம் - என் நெஞ்சானது, இராப்பகல் - இராப்பகலாக, இன்றி - வேறுபாடின்றியே, ஏகம் - ஏகப்ரகாரமாக, எண்ணும் - எண்ணாநின்றது.

இ.—ஏழாம்பாட்டில், அவன் நித்யவாஸம்பண்ணுகிற பரமபதத்தைச் சென்று காணவேணு மென்னாநின்றதுஎன்னெஞ்சு என்கிறார்.

[ஆகம்சேர் இத்யாதி] - நரத்வஸிம்ஹத்வங்கள் சேர்ப்பாலுங் கண்ட சர்க்கரையும்போலே ஸங்கடிதமான நரஸிம்ஹமாய் என்னுதல்; நரஸிம்ஹத்தினுடைய வடிவு இவர்நெஞ்சிலே சேர்ந்தபடியென்னுதல். [ஓராகம்] - ஹிரண்யனுடைய அத்விதீயமான முரட்டுடம்பு. [வள்ளுகிர்] - கூரியவுகிர், வளைந்தவுகிர் என்னவுமாம்; விரோதிநிரஸநஸீலனானவன் நித்யவாஸம் பண்ணுகிற பரமபதத்தைக் காணவேணுமென்று. [என் மனமேகம் எண்ணும்] - என்மநஸ்ஸு ஒருபடிப்பட நினையாநின்றது. சேதநர்க்கு இரா ஒருகார்யமும் பகல் ஒருகார்யமுமா யிருக்குமிறே; இவர்க்கு அஹோராத்ர விபாகமற இதுவேயாய்ச் செல்லாநின்றது. "[illegible] । [illegible]" என்று பிராட்டி திருவயோத்யையை நினைத்தாற்போலேயாயிற்று இவர் திருவுள்ளத்துக்குப் பரமபதம் ஸ்வதேஸமா யிருக்கிறபடி.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன் நித்யவாஸம்பண்ணுகிற பரமபதத்தைச்சென்று காணவேணும் என்னாநின்றது என்னெஞ்சு என்கிறார்.

ஏழாம்பாட்டு.—ஆகம் இத்யாதி. "உறைமாகவைகுந்தங்காண்பதற்கு என்மனமேகமெண்ணும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அவன் நித்யவாஸம் இத்யாதி.

[ஆகம்சேர் இத்யாதி] - நரத்வஸிம்ஹத்வங்கள் சேர்ப்பாலுங்கண்டசர்க்கரை யும்போலே ஸங்கடிதமான நரஸிம்ஹமா யென்னுதல்; நரஸிம்ஹத்தினுடைய வடிவு இவர்நெஞ்சிலே சேர்ந்தபடி யென்னுதல்; "ஸ்மரந் ராகவபாணாநாம்" (ஸ்மரந் ராகவபாணாநும்) என்கிறபடியே மறக்கவொண்ணாதபடி திருவுள்ளத்திலே சேர்ந்தபடி யைச் சொல்லிற்றுதல்; இரண்டு வடிவையுஞ் சேர்த்துக் கோவேந்து தோன்றினபோது இவர்நெஞ்சுக்கு இனியதாய்ச் சேர்ந்திருந்தபடியைச் சொல்லுதல். [ஓராகம்] - அத்விதீய மான முருட்டேம்பு. [வள்ளுகிரால்] - கூரிய வுகிர்; வளைந்தவுகிரென்றுமாம். [பிளந்தானுறை] - அநாயாஸேநகிழித்துப்போகட்டவன் நித்யவாஸம்பண்ணுகிற. [மாகவைகுந்தம்] - அந்நரஸிம்ஹம் வர்த்திக்கிற முழஞ்சு காணவாயிற்று ஆசைப்படுகிறது. "பரமாகாஶம்" (பரமாகாஶம்) என்னக்கடவதிறே. என்னுடைய ஹ்ருதயமானது, எப்போதுமொக்க உச்சிவீடுவிடாதேஇத்தையே மநோரதியாநின்றது. [இராப்பகலின்றியே] - இரா ஒருகார்ய மும் பகல் ஒருகார்யமுமாயிறே நாட்டார்க்கு இருப்பது ; இவர்க்குஎல்லாக்காலத்திலும் இதுவேயாயிற்று; "ஸமாத்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே" (ஸமாத்வா தஶதத்ராஹம்ராகவஸ்யநிவேஶநே) என்று பிராட்டி திருவயோத்யையை நினைத்தாற் போலேயாயிற்று, இவர்திருவுள்ளத்துக்குப் பரமபதம் ஸ்வதேஶமாயிருக்கிறபடி. (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

இன்றிப்போகஇருவினையுங்கெடுத்து
ஒன்றியாக்கைபுகாமையுய்யக்கொள்வான்
நின்றவேங்கடம்நீள்நிலத்துள்ளது
சென்றுதேவர்கள்கைதொழுவார்களே.

---

ஆகத்திலே - ஸர்வேஶ்வரன் திருமேனியிலே, சேர்ந்த-ஸங்கடிதமான நரஸிம்ஹமாயென் னுதல்; இத்தை யருளிச்செய்கிறார் - நரத்வ ஸிம்ஹத்வங்கள் இத்யாதி. ஆகத்திலே - ஆழ்வார் திருவுள்ளத்திலே, சேர்ந்த நரசிங்கமாயென்று இரண்டாமர்த்தம் அருளிச்செய்கிறார் - நரஸிம்ஹத்தி னுடைய இத்யாதி. நரஸிம்ஹத்தின் ஆகமானது இவர் திருநெஞ்சிலேசேர்ந்த நரசிங்கமாயென்று மூன்றாமர்த்தமாதல், த்விதீயார்த்த விவரணமாதல் - ஸ்மரந் இத்யாதி. "ப்ரஹஸ்தம் குப்பகர்ணம் ச நாம்நா விஷ்ணுமிவோத்யதம்। ஸ்மரந் ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர:" இதி யுத்தகாண்டே (சுo-ங). சேர்ப்பால்-குழம்புப்பால். முந்தினஅர்த்தவிவரணம்-இரண்டு வடிவை யும் இத்யாதி. "பிளந்தானுறை மாகவைகுந்தங்காண்பதற்கு" என்றுசேர்த்து பாவம்-அந்நரஸிம்ஹம் இத்யாதி. முழஞ்சு - குகை. மாகம் - மஹத்தான கம். "மாகம்" என்றால் - பரமபதத்தைச் சொல் லுமோவென்ன - பரமாகாசம் இத்யாதி. "என்மனம் - இராப்பகலின்றியே - ஏகமெண்ணும்" என்ற துக்கர்த்தம் - என்னுடைய இத்யாதி. நாள்தோறுமென்னாதே, "இராப்பகல்" என்று விசேஷித்த துக்கு, "நக்தந்திவம்" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவம் - இராவொருகார்யமும் இத்யாதி. திருநகரியைவிட்டு பரமபதத்தை எண்ணுகிறதென்னென்ன; ஸநிதர்ஶநமாக அருளிச்செய் கிறார் - ஸமாத்வாதஶ இத்யாதி. சுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதி ஸீதா. "ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே। புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" இத்யுத்தரார்த்தம். 'ஆகம்சேர்' இத்யாரப்ய, 'என் மனம் - இராப்பகலின்றி - ஏகமெண்ணும்' இத்யந்வய:. (எ)

ஆ.—(இன்றிப்போக) - அவனைக் காண்கைக்குத் திருநாட்டிலே போக வேணுமோ? இங்கே அணித்தாகத் திருமலையிலேயன்றோ அவன் நின்றருளுகிறதென்னில்? - அத்தால் என் எனக்கு? அங்குச்சென்று அடிமைசெய்வார் அயர்வறுமமரர்களல்லரோ? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், தன்னைக் காணவேண்டியிருப்பார்க்குத் திருநாடு முட்டப் போகவேண்டாதபடி யணித்தாகத் திருமலையிலேவந்து நின்றருளினபடியை அநுஸந்தித்து, கால்நடை தந்து அவ்வளவும் போகவல்லவர்களுடைய பாக்யவத்தையைச் சொல்லாநின்றுகொண்டு, தம்முடைய பலஹாநியை ஆவிஷ்கரிக்கிறார்.

[இன்றிப் போகவென்று தொடங்கி] - தன்னை ஆஶ்ரயித்தாருடைய புண்ய பாபரூபகர்மங்களை நிஶ்ஶேஷமாகப் போக்கிப் பின்னை ப்ரக்ருதியில் ஸம்பந்தியாதபடி பண்ணி ரக்ஷித்தருளும் ஸ்வபாவனானவன் நின்றருளும் திருமலை ஸ்வஸம்பந்தத்தாலே ஶ்லாக்யமான பூமியது. [சென்றென்று தொடங்கி] - அவ்வளவும்போய்த் தொழுமிடுக்குடையார் பாக்யவான்கள்.

ப.—அநந்தரம், ஆஸந்நமாக அவன்வர்த்திக்கிற அபீஷ்டதேஶமாயுள்ள திருமலையைச் சென்று அநுபவிப்பார் ஸூரிஸமராநாரிறேயென்று தம்முடைய ஶைதில்யத்தை யருளிச்செய்கிறார்.

இருவினையும் - புண்யபாபரூபமான கர்மங்களிரண்டையும், இன்றி - ஸத்தையழிந்து, போக - போம்படி, கெடுத்து - நஶிப்பித்து, ஒன்றி - துர்விவேசமாம்படி அசித்தோடே ஸம்ஸ்ருஷ்டனாய், ஆக்கைபுகாமை - தேவாதிஶரீரப்ரவேஶம் பண்ணாதபடி, உய்யக்கொள்வான் - அடிமைகொண்டு உஜ்ஜீவிப்பிக்குமவன், நின்ற - அவஸரப்ரதீக்ஷனாய்நிற்கிற, வேங்கடம் - திருமலையானது, நீள்நிலத்து - ஶ்லாக்யபூமியிலே, உள்ளது - உண்டாயிருப்பதொன்று, சென்று - கிட்டி, கைதொழுவார்கள் - கைதொழுமவர்கள், தேவர்களே - (மநுஷ்யரல்லரே;) தேவர்களன்றோ ?

இ.—எட்டாம்பாட்டில், தன்னைக் காண்கைக்குப் பரமபதத்துக்குப் போக வேண்டாதபடி திருமலையிலே வந்து நின்றருளினபடியை யநுஸந்தித்து தம் பலஹாநியாலே தமக்குத் திருமலையோடு பரமபதத்தோடு வாசியற்றதென்கிறார்.

[இன்றிப்போக இருவினையுங்கெடுத்து] - புண்யபாபங்களை இன்றிப்போம்படி ஸவாஸநமாகப் போம்படிபண்ணி. இத்தலையாலே போக்கும்போதிறே ஶேஷிக்கப் போவது. [ஒன்றியாக்கை புகாமை] - அசித்தோடேசேர்ந்து கர்மகார்யமான ஶரீர ப்ரவேஶம்பண்ணாதபடி. [உய்யக்கொள்வான் நின்றவேங்கடம்]-"உயிரளிப்பான்" என்கிறபடியே ரக்ஷணார்த்தமாக அவஸரப்ரதீக்ஷனாய் நின்ற திருமலை. [நீள்நிலத்துள்ளது] - ஸ்வஸம்பந்தத்தாலே ஶ்லாக்யமான பூமியிலுள்ளது. [சென்று தேவர்கள் கைதொழுவார்களே] - அவ்வளவு சென்று தொழுமிடுக்குடையார் "நதே தே மநுஷ்யா தேவாஸ்தே" என்கிறபடியே பாக்யவான்களான தேவர்கள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. இஶ்ஶரீரஸம்பந்தமற்றால் போய் அநுபவிக்கும் பரமபதம் வேணுமோ ? இஶ்ஶரீரத்தோடேயநுபவிக்குந் திருமலை பூமியதன்றோ ? ஆனாலும், நமக்குத் திருமலையோடு பரமபதத்தோடு வாசியற்றதிறே! என்கிறார்.

---

எட்டாம்பாட்டு.—இன்றிப்போக இத்யாதி. 'நின்றவேங்கடம்" என்றதொடங்கி, "கைதொழுவார்களே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இஶ்ஶரீர இத்யாதி.

[இன்றிப்போகஇருவினையுங்கெடுத்து] - புண்யபாபரூப கர்மங்களானவை, இன்றிப்போம்படி - ஸவாஸநமாகப் போம்படி - பண்ணி. தானே போக்கிக்கொள்ளப் பார்க்குமன்றிறே சிறிது கிடக்கப்போவது. [ஒன்றியித்யாதி] - பின்னையும் ருசிவாஸநை கிடக்கில், அசித்தத்த்வத்தோடேபோய்க் கலசி, ஶரீரப்ரவேஶம்பண்ணி, அத்தால் வரும் க்லேஶம் அநுபவிக்க வேணுமிறே; அதுசெய்யாமை. [உய்யக்கோள்வான்இத்யாதி] - ''உயிரளிப்பான்''என்கிறபடியே, ஸர்வரக்ஷணார்த்தமாக அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு நிற்கிற திருமலை. [நீள்நிலத்துள்ளது] - திருமலையை யுடைத்தாகையாலே ஶ்லாக்ய மான பூமியிலுள்ளது திருமலை. அத்தால் பெற்றதேன்? [சேன்றித்யாதி] - அவ்வளவு கால்நடைதந்து போகவல்லார் ஶ்லாக்யரயிகிறே; ''ந தே மநுஷ்யா தேவாஸ் தே'' (நதேமநுஷ்யாதேவாஸ்தே) என்னுமாபோலே, அவனுடைய ஶீலாதிகுணத்தை யநுஸந்யித்துச் சொல்லுகிறார். ப்ரேமாந்யர்க்கு அவ்விடத்தோடு இவ்விடத்தோடு வாசியற்றதிறே, எட்டாமைக்கு. (அ)

— —

## ஒன்பதாம் பாட்டு.

---

தொழுதுமாமலர்நீர்சுடர்தூபங்கொண்டு
எழுதுமேன்னும் இதுமிகையாதலின்
பழுதில்தோல்புகழ்ப்பாம்பணைப்பள்ளியாய் !
தழுவுமாறறியேன்உனதாள்களே.

---

''இருவினையும் - இன்றிப்போக - கெடுத்து'' என்றந்வயித்தர்த்தம் - புண்யபாப இத்யாதி. கர்மங்கள் ஸவாஸநமாகப் போகக் கூடுமோவென்ன - தானே இத்யாதி. கர்மம் க்ஷயித்தால் ஶரீரம் தன்னடையே போம்; ஆயிருக்க, ''ஒன்றியாக்கை புகாமை'' என்று விசேஷிப்பானென்? என்ன - பின்னையும் இத்யாதி. நருசிவாஸநை என்றது - ப்ராக்ருதியினுடைய ருசிவாஸநையென்றபடி. போய்க்கலசி என்றது - த்பு பர்ஜந்ய க்ரமேண வந்தென்றபடி. நிலத்துக்கு நீட்சியேதென்ன - திருமலையை இத்யாதி. நீள் - ஶ்லாக்யமானபடி. இது ஸந்நிஹிதமானாலும் தமக்குப்போக பலமில்லை யென்று விவக்ஷித்து - அத்தால் பேற்றதேன் என்கிறார். ஸந்நிஹிதமானால் போய் அநுபவிக்கலா யிருக்க, ''அத்தால் பெற்றதென்?'' என்று விஷண்ணராவானென்னென்ன - அவ்வளவு இத்யாதி. தான் சேவிக்கமாட்டாவிட்டால் சேவிக்கிறவர்களை ஶ்லாக்யரிகரென்ற பேருண்டோவென்ன- ந தே மநுஷ்யா இத்யாதி. ''ந தே மநுஷ்யா தேவாஸ் தே யே சாரு ஶுப குண்டலம் । முகம் த்³ரக்ஷ்யந்தி ராமஸ்ய வர்ஷே பஞ்சத³ஶே புந:'' இத்யயோத்யாகாண்டே தஶரத:. சக்ரவர்த்திக் குப் பெருமாளைப் பிரிகையாலே ''ந தே மநுஷ்யா:'' என்னலாம்; இவர்க்கு பலஹாநியென் னென்ன - அவனுடைய இத்யாதி. பரமபதம்போலே திருமலையுமெட்டாநிலமோவென்ன - ப்ரே மாந்யர்க்கு இத்யாதி. 'இருவினையும் - இன்றிப்போக - கெடுத்து - ஆக்கைபுகாமை யுய்யக்கொள் வான் நின்ற வேங்கடம்' என்றுதொடங்கி, 'சென்று - கைதொழுவார்கள் - தேவர்கள்' என்றந்வயம். உய்யக்கோள்வான் - உஜ்ஜீவிப்பிக்கைக்காக. நின்றவேங்கடம் - அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிற திருமலை யென்றபடி. (அ)

ஆ.—(தொழுது) - உமக்குத்தான் அங்கீகரிசெய்து அடிமைசெய்கைக்குத் தட்டேன்னென்னில்?-ஹேய ப்ரத்யநீக கல்யாண குண விசிஷ்ட ஸேஷ ஸேஷாஸந கருடப்ரமுகதிவ்யபுருஷர்களாலே பரிசரித சரணயுகளனான உன் திருவடிமலர்களிலே, அத்யந்தம் அபக்ருஷ்டனான நான் அடிமைசெய்கைக்கு அர்ஹனோ? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஏதேனும் ஒருபடி உன்னுடைய திருவடிகளிலே வந்தேனேயாகிலும் "ஈருஷ்டு ஷெண—ராஜவாஈகா ஹோக" என்னும்படியாலே ஸமாஸ்ரயணோந்முகர்பக்கல் அவர்களுடைய ஆபிமுக்யமாத்ரத்திலே துஷ்டனும் ஸ்வபாவனான உன்னுடைய ஸீலவத்தையின் மிகுதியாலே அடிமைசெய்கை யரிதென்கிறார்.

[தொழுதுமாமலர் என்றுதொடங்கி] - அழகிய புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிப்போமென்றால் உன்ஸீலவத்தையாலே இக்குத்தைக்கு மிகை ஆதலால். [பழுதிலேன்று தொடங்கி] - திருவநந்தாழ்வானோட்டை ஸம்ஸ்லேஷத்தாலே ஸ்வாராத்யத்வப்ரதையை யுடையவனே! உன்னுடைய திருவடிகளில் அடிமை செய்யும்விரகு அறிகிறிலேன்.

ப.—அநந்தரம், ஆஸ்ரயணத்தோடும் மிகையாம்படியான உன்னுடைய ஸீலாதிஸயத்தை யநுஸந்தித்து, உன் திருவடிகளில் ஒருப்ரவருத்திக்கு க்ஷமனாகிறிலேனென்கிறார்.

மா - ஸ்லாக்யமான, மலர் - புஷ்பத்தையும், நீர் - அர்க்யாதிஜலத்தையும், சுடர் தூபம் - தீபதூபங்களையும், கொண்டு - ஸ்வீகரித்துக்கொண்டு, தொழுது-தொழுகைக்காக, எழுதும் - உத்போகிப்போம், என்னுமிது—, (உன்ஸீலாதிஸயத்தாலே), மிகைஆதலின் - மிகையாயிருத்தலால், பழுது-(துராராத்யதைபடியான)பழுது, இல்- இன்றியே, தொல்புகழ்-ஸ்வாபாவிகஸௌஸீல்ய ப்ரதையையுடையையாய்,(அதுக்கு ஸூசகமாம்படி), பாம்பு - திருவநந்தாழ்வானை, அணை — படுக்கையாய்க்கொண்டு, பள்ளியாய் - நித்யஸம்ஸ்லேஷம்பண்ணிக் கண்வளர்ந்தருளுகிறவனே!உன தாள்கள்-உன்திருவடிகளை, தழுவும் — ஸம்ஸ்லேஷிக்கும், ஆறு - ப்ரகாரம், அறியேன் - அறிகிறிலேன். அங்குத்தைக்கு ஒருப்ரவ்ருத்தி அபேக்ஷிதையல்ல; நான்ஒருப்ரவ்ருத்திக்கு க்ஷமனாகிறிலேனென்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், இப்படி ஸுலபனான உன்திருவடிகளைக் கிட்டப்பெற்றாலும் ஆஸ்ரயணத்தில் ஆபிமுக்யமாத்ரத்திலே துஷ்டனும் உன் ஸீலவத்தையை அநுஸந்தித்து ஒருப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனாகிறிலேனென்கிறார்.

[தொழுது இத்யாதி] - "ஸ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிப்போம்" என்றால், இது மிகையாம்படியன்றோ உன்னுடைய ஸீலவத்தையிருப்பது? "ஈருஷ்டு ஷெண—ராஜவாஈகா ஹோக" என்கிற விஷயமிறே. [ஆதலின்] - இப்படி ஸீலாதிகனாகையாலே "துராராத்யன்" என்கிற பழுதின்றிக்கே, ஸ்வாபாவிகமான ஸ்வாராத்யத்வ ப்ரதையையுடையையாய், அதுக்குஅடியாக திருவநந்தாழ்வானோடே ஸம்ஸ்லேஷிக்கிறவனே!உன்திருவடிகளை யணையும்விரகு அறிகிறிலேன். திருவடிகளில் அடிமைசெய்யும்விரகுஅறிகிறிலேன்.பலஹாநியாலே முதலிலே கிட்டுகை யரிது. கிட்டினாலும் ஸீலாதிக்யத்தை அநுஸந்தித்து ஒருப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனாகிறிலேன். "இப்பாட்டால் அயோக்யதாநுஸந்தாநம் பண்ணுகிறார்" என்பாரும்

உண்டு. * கண்கள் சிவந்துக்குப் பின்பு அதில்லை. "அவனுடைய உபாயஹாவத்தை அநுஸந்தித்து இத்தலையால் ஒன்றுசெய்கை மிகையாயிருக்கிறபடி சொல்லுகிறார்" என்பாருமுண்டு. இவை - பக்ஷமன்று.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இப்படி ஸுலபனான உன்திருவடிகளிலே கிட்டப்பெற்றாலும், ஆஶ்ரயணத்தில் ஆபிமுக்யத்திலே ஸந்துஷ்டனாம்உன்ஶீலவத்தையை யநுஸந்தித்து, ஒருப்ரவ்ருத்திபண்ண க்ஷமனாகிறிலேனென்கிறார். அன்றிக்கே, "இங்ஙனே ஒருமூன்றுபாட்டு தம்முடைய அயோக்யதையைச் சொல்லுகிறார்" என்பாருமுண்டு; அதுஇல்லையிறே * கண்கள் சிவந்துக்குப்பின்பு இவர்க்கு. "இத்தலையாலே யொன்றை யர்த்தித்துப்பெறுகை மிகையாம்படியா யிருக்கிறவனுடைய உபாயஹாவத்தைச்சொல்லுகிறார்" என்பாருமுண்டு. இவையெல்லாமல்ல; "அவன் ஸந்நிதியில் க்ரமத்தில் பரிமாறவொண்ணாதபடி யழிக்கும் அவனுடைய ஶீலகுணத்தைச் சொல்லுகிறது" என்று நம்முடையவர்கள் நிர்வஹிக்கும்படி.

[தொழுதுஇத்யாதி] - "ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிப்போம்" என்றால், இது மிகையாம்படியன்றோ உன்னுடைய ஶீலவத்தை யிருப்பது? "அந்யத்பூர்ணாதபாம்கும்பாத்" (அந்யத்பூர்ணாதபாம்கும் பாத்) என்கிற விஷயமிறே. [ஆதலின்]-இப்படி ஶீலாதிகனாகையாலே. "துராராதன்" என்கிறபழுதுஇன்றிக்கே, ஸ்வாராதத்வ ப்ரஜ்ஞையையுடையையாய், அதுக்குஅடியாகத் திருவநந்தாழ்வானோடே ஸம்ஶ்லேஷிக்கிறவனே! [தழுவுமாறறியேன்]-உன்திருவடிகளையணையும் விரகுஅறிகிறிலேன். பலஹாநியாலே முதலிலேகிட்டகையரிது; கிட்டினாலும் ஶீலாதிக்யத்தை யநுஸந்தித்து ஒருப்ரவ்ருத்திபண்ண க்ஷமனாகிறிலேன். (க)

---

ஒன்பதாம்பாட்டு.—தொழுது இத்யாதி. "தொழுது-எழுதுமென்னு மிது மிகையாதலின் - தழுவுமாறறியேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இப்படி இத்யாதி. "தொழுது - எழுதும்" என்றதிலேநோக்காக நிர்வாஹாந்தரத்வயம் - அன்றிக்கே இத்யாதி.ப்ராசீனமாவதாரிகாவிவரணம்-இவையெல்லாமல்ல அவன்ஸந்நிதியில் இத்யாதி. மூன்றுபாட்டு என்றது எட்டாம்பாட்டுத்தொடங்கி மூன்றுபாட்டென்றபடி. 'இத்தலை' இத்யாதிக்கு - ததாஶ்ரயணஸௌகர்யஞ் சொல்லுகைக்காக ஆஶ்ரயணீயனானவனுடைய ஸ்வாராததையைச் சொல்லுகிறாரென்று கருத்து.

"மாமலர்நீர்சுடர்தூபங்கொண்டு-தொழுது-எழுதுமென்னுமிது மிகை" என்று அந்வயித்து அர்த்தம் - ஶ்லாக்யமான இத்யாதி. "மா" என்றத்தை - மலர் நீர் சுடர் தூபமெங்கும் கூட்டுவது. "இப்படிஇவன் ஸ்வாராதன்" என்னுமதுக்கு ப்ரமாணம் - அந்யத் இத்யாதி "அந்யத்பூர்ணாதபாம் கும்பாதந்யத்பாதாவநேஜநாத் । அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதி ஜநார்தந:" இதி ஸஞ்சய:. அதுக்கடியாக - ஸ்வாராததைக்கடியாக. இத்தால் - திருவநந்தாழ்வான் அல்பாநுகூல்யங்கொண்டு அங்கீகரிப்பிக்கு மென்றபடி. விரகறியாமைக்கு ஹேதுஎது? என்ன - பலஹாநியாலே இத்யாதி. 'மாமலர்நீர்சுடர் தூபங்கொண்டு - தொழுது - எழுதும்' இத்யாரப்யஅந்வய:. (க)

# பத்தாம் பாட்டு.

தாளதாமரையானுனதுந்தியான்
வாள்கொள்நீள்மழுவாளியுன்னாகத்தான்
ஆளராய்த்தொழுவாரும்அமரர்கள்
நாளும்என்புகழ்கோஉனசீலமே?

**ஆ.**— (தாளதாமரையான்.) - தம்முடைய அநர்ஹாநுஸந்தாநத்தாலே அவன்திருவடிகளில் அடிமைசெய்கையில் தமக்குப்பிறந்த கூச்சமெல்லாம் போம்படியாகத் திருவேங்கடமுடையானுடைய நிரவதிக ஸௌசீல்யகுணத்தைக் கண்டு புகழுகிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தாஸ்யச்சுவடறியாத க்ஷுத்ரரான தேவர்களுக்குங்கூட ஸமாச்ரயணீயனாயிருக்கிற உன்னுடைய திருவடிகளில் ஸௌசீல்யம் காலமெல்லாங்கூடினாலும் என்னால் புகழ்ந்துமுடிக்க வொண்ணாதென்கிறார்.

[தாளதாமரையானென்று தொடங்கி] - அத்யபிமாநியான கமலாஸநன் உன்னுடைய திருநாபியிலான். அநந்யசரணரடையாளமன்றிக்கே, ஒளியையுடைத்தாய் நீண்ட மழுவையுடைய ருத்ரன் உன்னுடைய திருமேனியில் ஒருப்ரதேசத்திலான்; பரிசர்யை பண்ணுகிறார் அடிமைக்குத் தகாத தேவாதிகள்.

ப.—அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரர்க்கும் முகங்கொடுக்கும் உன்னுடைய சீலம் வாசாமகோசரமஹிமாவன்றோ? என்கிறார்.

தாள - தாளையுடைத்தான, தாமரையான் - தாமரையிலேபிறந்த ப்ரஹ்மா, உனது உந்தியான் - உனதுஉந்தியை யாச்ரயமாகவுடையவன்; வாள்-ஒளியை, கொள்-உடைத்தான, நீள் - பெரிய, மழு - பரசுவை, ஆளி - ஆண்டுகொண்டுபோருகிற ருத்ரன், உன் ஆகத்தான் - உன் திருமேனியிலொருபக்கத்தான்; ஆளர் ஆய் - ஸூரிகளோபாதிசேஷபூதராய், தொழுவாரும்-தொழுமவர்கள், அமரர்கள் - ப்ரயோஜநாந்தரபரரான தேவதாந்தரவர்க்கம்; (இப்படி நிரவதிகமான); உன - உன்னுடைய, சீலம் - சீலத்தை, நாளும் - காலதத்த்வமெல்லாங்கூடினாலும், என் - எத்தைச்சொல்லி, புகழ்கோ - புகழ்வேன்?

இ.—பத்தாம்பாட்டில், தாஸ்யச்சுவடறியாத ப்ரஹ்மாதிகளுக்கும் ஸமாச்ரயணீயனாயிருக்கிற உன்னுடைய சீலம் என்னாற் புகழ்ந்துமுடிக்கவொண்ணாதென்கிறார்.

[தாளதாமரையான் இத்யாதி] - தாமரைப்பூவை உத்பத்திஸ்தாநமாகவுடைய ப்ரஹ்மா உன்திருநாபியைப்பற்றி வர்த்தியாநின்றான். கமலயோநித்வத்தால் வந்த தௌர்மாநத்தை உடையவனுக்கிறே உடம்புகொடுத்தது. ஒளியையுடைத்தாய்த் தொடங்கின கார்யத்தை முடியநடத்தவற்றான மழுவையுடைய ருத்ரன் உன்திருமேனியில் ஏகதேசத்திலான். அநந்யசரணத்வலக்ஷணமான தொடையொத்த துளபமுங் கூடையுமாய்ப் புகழ்ந்து நிற்கிறானல்லனே. அடியராய் பரிசர்யை பண்ணுகிறார் தேவர்கள். நித்யஸூரிகள் செய்யும் அடிமையிறே, தேவத்வஸாம்யத்தாலே, "நான்

ஈஶ்வரன்'' என்றிருக்குமவர்கள் செய்கிறது. [உனசீலம் - நாளும் என்புகழ்கோ]- உன்னுடைய ஶீலகுணத்தைக் காலமெல்லாங்கூடினாலும் என்னால் புகழ்ந்துமுடிய வொண்ணுமோ ?

ஈடு.—பத்தாம்பாட்டு. சாஸ்யச்சுவடறியாத ப்ரஹ்மாதிகளுக்கும் ஸமாஶ்ரயணீயனாயிருக்கிறஉன்னுடைய ஶீலம் என்னால் புகழ்ந்து முடிக்கவொண்ணாதென்கிறார்.

[தாளதாமரையான் உனதுந்தியான்] - தாமரைப்பூவை யுத்பத்தி ஸ்த்தாநமாக வுடைய ப்ரஹ்மா, உன் திருநாபியைப்பற்றி வர்த்தியாநின்றான். கமலயோநித்வத்தால் வந்த துர்மாநத்தையுடையவனுக்கிறே உடம்புகொடுத்தது. [வாள்இத்யாதி] – ஒளியை யுடைத்தாய், தொடங்கினகார்யத்தை முடிய நடத்தவற்றான மழுவையுடைய ருத்ரன், உன்திருமேனியில் ஏகதேசத்தைப்பற்றி வர்த்தியா நின்றான். அநந்யஶரணத்வ லக்ஷணமான* தொடையொத்த துளபமுங் கூடையுமாய்ப் புகுந்திருக்கிறானல்லனே. [ஆளர்ஆய்த் தொழுவாருமமரர்கள்]-அடியாராய் ஆஶ்ரயிக்கிறவர்களும் தேவர்கள். நித்யஸூரிகள்செய் யும் அடிமையிறே அமரத்வ ஸாம்யத்தாலே ''நாங்களும் ஈஶ்வரர்கள்'' என்றிருக்குமவர் கள் செய்கிறது. [நாளும்இத்யாதி] - காலத்தையடைய ஒரு போகியாக்கி எனக்குப்புக ழுகைக்கு உறுப்பாக்கினால்தான், என்னாலே புகழ்ந்து தலைக்கட்டலா யிருந்ததோ உன்னு டைய ஶீலகுணம் ? உனசீலம் - நாளுமென்புகழ்கோ. (க0)

---

## பதினோராம் பாட்டு.

---

சீலமெல்லையிலான் அடிமேல்அணி
கோலநீள்குருகூர்ச்சடகோபன் சொல்
மாலையாயிரத்துள் இவைபத்தினின்
பாலர் வைகுந்தமேறுதல் பான்மையே.

ஆ.—(சீலம்.) - சீலமெல்லையிலானா யிருந்த திருவேங்கடமுடையான் திரு வடிகளுக்குத் திருவணிகலமாயிருந்த இத்திருவாய்மொழியோடே ஒருஸம்பந்தமுடை யார், வைகுந்தமேறுகை ஆஶ்சர்யமன்றென்கிறார்.

---

பத்தாம்பாட்டு.—தாளதாமரையான் இத்யாதி. ''தாள்தாமரையான்'' இத்யாரப்ய, ''உன சீலமே'' என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - சாஸ்ய இத்யாதி.

''தாளதாமரையான், வாள்கொள் நீள்மழுவாளி'' என்று - திருநாபீகமலத்திலே பிறந்தவன், ஹிம்ஸாபரிகரமான மழுவையுடையவன், ''அமரரும்'' என்று - என்றுமொக்கச் சாகாதிருக்கிறவர்கள் என்கிற விசேஷணங்கள், 'தாஸ்யச்சுவடறியாத' என்னுமத்தைக் காட்டுகிறது. தாளையுடைய தாமரை யென்று ஶப்தார்த்தம். இது ஶீலமானபடி யென்னென்ன - கமலயோநித்வ இத்யாதி. வாள்-காந்தி. மழு - பரசு. மழுவாளி - மழுவையாளும் ருத்ரன், ''நீள்'' என்றதுக்கர்த்தம் - தொடங்கின இத்யாதி. இதுசீலமோவென்ன - அநந்யஶரணத்வ இத்யாதி. அநந்யஶரணத்வலக்ஷணமான - பாரதந்த்ர்ய லக்ஷணமான வென்றபடி. இது சீலகார்யமோவென்ன - நித்யஸூரிகள் இத்யாதி. ''நாளும்'' என்று சொல்லி, ''உனசீலம் - என்புகழ்கோ'' என்றதுக்குஹாவம் - காலத்தை இத்யாதி. ஒருபோகியாக்கி - ஏகவிஷயமாக்கி. நாளும் - ஸர்வகாலமும். என்புகழ்கோ - என்னவென்று ஸ்தோத்ரம்பண்ணப் போகிறேனென்றபடி.எத்தைச்சொல்லிப் புகழ்வேனென்றபடி. (க0)

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் ஸ்ரீவைகுண்டத்திலே செல்லுகை ஆஸ்சர்யமன்று; ப்ராப்தமென்கிறார்.

[ஸீலமென்று தொடக்கி] - அமர்யாதஸீலனை எம்பெருமானுடைய திருவடிகளிலே விலக்ஷணமான அழகுமிக்கிருக்கிற திருநகரியையுடைய ஆழ்வாருடைய சொற்றொடையான ஆயிரம் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியோடே ஸம்பந்தமுடையார். பான்மை - கடன்.

பி.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

சீலமெல்லையிலான் - அபர்யந்தமான ஸீலத்தையுடையவன், அடிமேல் - திருவடிகளின்மேலே, அணி - அணியப்பட்டதாய், கோலம் - தர்ஸநீயமானரூபமாய், நீள் - ஆயாமவிஸ்தாரவத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, சொல் - ஸப்தாத்மகமான, மாலை - மாலையாயிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்தினின் - இப்பத்தினுடைய, பாலர்-பரிஸரத்திலே(ஸப்தரூபத்தாலேயாதல் அர்த்தரூபத்தாலேயாதல்) அந்வயமுடையவர்கள், வைகுந்தம் - பரமபதத்தில், ஏறுதல் - ஏறப்பெறுகை, பான்மை - ஸ்வபாவம். இது-கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பரமபதத்திற் செல்லுகை ஆஸ்சர்யமன்று; ப்ராப்த மென்கிறார்.

[சீலமெல்லையிலான் அடிமேல்] - அமர்யாதஸீலனை அவனுடைய திருவடிகளிலே. இத்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்பட்டது, ஸீலாதிக்யமாயிற்று. அத்தை நிகமிக்கிறார்: [அணியித்யாதி] - அழகுமிக்கிருந்துள்ள திருநகரி. அன்றியே "கோல நீள்" என்று - ஸப்தந்தானே உண்டாகையாலே. அடிமேலணி-மாலை - என்று கூட்டிக்கொள்ளவுமாம். [ஆயிரத்துள் இவைபத்தினின்பாலர்] - இப்பத்தின் பரிஸரத்திலேயுள்ளாமவர்கள். உக்திமாத்ரம், பாடமாரணம் அர்த்தாநுஸந்தாநம். ஒருவழியாலே இதிலே அந்வயமுண்டாகையாலே பரமபதத்திலே செல்லுகை ப்ராப்தம். "மாக வைகுந்தங் காண்பதற்கு" என்று இவர் ப்ரார்த்தித்தார். இவரை ஆஸ்ரயித்தவர்களுக்கு ப்ரார்த்யமன்று; ப்ராப்தம். பித்ருதநம் புத்ரனுக்கு தாயப்ராப்தமாய் வருமதிறே.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பரமபதத்தே செல்லுகை ஆஸ்சர்யமன்று; ப்ராப்தமென்கிறார்.

[சீலமெல்லையிலானடிமேல்]- †அமர்யாதஸீலனானவனுடைய திருவடிகளிலே. இத்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்பட்டது - ஸீலாதிக்யமாயிற்று; அத்தை நிகமிக்கிறார். [அணிகோலநீள் குருகூர்ச்சடகோபன்சொன்மாலை] - அழகுமிக்கிருந்துள்ள திருநகரி

---

நிகமம்.—சீலம் இத்யாதி. "பத்தினின்பாலர் வைகுந்தமேறுதல்பான்மையே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை-இத்திருவாய்மொழி இத்யாதி.

இத்தால்பாவம் - இத்திருவாய்மொழியால் இத்யாதி. "கோலநீள்" என்றத்தை - * குருகூருக்கு விசேஷணமாக்கி யருளிச்செய்த, "கோலநீள் - அடிமேலணி" என்று - திருவடிகளுக்கு

---

† மர்யாதா - எல்லை, அமர்யாதஸீலன் - எல்லையில்லாத சீலகுணத்தை யுடையவன்,

யையுடைய ஆழ்வார். அன்றிக்கே, கோலநீளேன்று - ஶப்தந்தானே யுண்டாகையாலே, 'அடிமேலணி - மாலை' - என்று கூட்டிக்கொள்ளவுமாம். [ஆயிரத்துள்ளிவைபத்தினின்பாலர்] - இப்பத்தின் பரிஸரத்திலேயுளராமவர்கள். உக்திமாத்ரம், பாடமாரணம், அர்த்தாநுஸந்தாநம், ஒருவழியாலே இதிலேயந்வயமுடையவர்கள். [வைகுந்தம்இத்யாதி]- பரமபதத்திலே சேல்லுகை ப்ராப்தம். * மாகவைகுந்தம்காண்பதற் கேகமேண்ணினூர்- இவர்; இப்பாசுரத்தே யந்வயித்தவர்களுக்கு ப்ரார்த்யமன்று, ப்ராப்தம். பித்ருதநம் புத்ரனுக்கு ஊயப்ராப்தமாயிருக்குமிறே. (கக)

*விசேஷணமாக அர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. அர்த்தத்வபத்திலும், "அணி" என்றது - சாத்தப்பட்டவென்றாய், சொன்மாலைக்கு விசேஷணம். யத்வா, முந்தினவர்த்தத்தில், "அணி" என்றது - விலக்ஷணமென்றாய், குருகூருக்கு விசேஷணமாதல். இப்பத்தின் பரிஸரத்திலேயுளராகையாவதென்? என்ன - உக்திமாத்ரம் இத்யாதி. இவர்க்கு "ஏகமெண்ணும்" என்று ப்ரார்த்யமாயிருக்க, இவர்களுக்கு ப்ராப்தமாகக் கூடுமோவென்ன - மாகவைகுந்தம் இத்யாதி. பான்மை-ப்ராப்தம். அதெப்படியென்ன - பித்ருதநம் இத்யாதி. சீலமெல்லையிலானடிமே லணியப்பட்டதாய், கோலநீள் குருகூர்ச் சடகோபனுடைய சொல்மாலை யித்யாப்யாந்வயஃ* (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—[illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—[illegible]

---

| | |
|---|---|
| திருவாய்மொழி நூற்றந்தாதி. | ஓராநீர்வேண்டினவையுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்<br>நாராயணனன்றேநானென்று - பேருறவைக்<br>காட்டவுமென்சீலத்திற்கால்தாழ்ந்தமாறனருள்<br>மாட்டிவிடும்நம்மனத்துமை. |

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானூர் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

---

## நான்காந்திருவாய்மொழி—மையார் ப்ரவேசங்கள்.

ஆ.—(மையார்கருங்கண்ணி) - இப்படி எம்பெருமானுடைய ஸௌசீல்யாதி ஸந்தர்சநத்தாலே நிர்ப்பீதராய், தத்அநுபவத்திலே ப்ரவ்ருத்தராய் அது கைவாராமையாலே தாம் அவஸந்நராய், அவஸந்ந ஸர்வகரணருமாயிருந்த ஆழ்வார்

ஒ.—நாலாந்திருவாய்மொழியில், எம்பெருமானுடைய ஸௌசீல்யத்தையும் அதுக்கடியான ஸ்ரீய:பதித்வத்தையும் அநுஸந்திக்கையாலே, அப்போதே இந்த்ரியங்களும் தாமும் "அவனைக்காணவேணும்" என்று ஆசைப்பட்டபடி பெறாமையாலே மிகவும் நோவுபட்ட ஆழ்வார் தூணிலே வந்து தோற்றி ஹிரண்யனால் வந்த நலிவை ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குத் தீர்த்தருளினாற்போலே, தம்முடைய ஆர்த்தியைத் தீர்த்தருளின படியை அநுஸந்தித்து ப்ரீதராய் முடிக்கிறார்.

ப.—நாலாந்திருவாய்மொழியில், கீழே அவன் சீலாதிசயத்தை யநுஸந்தித்து ப்ரீதிலரானவர், "சீலவானாப் ஸ்ரீய:பதியானவனை யநுபவிக்கவேணும்" என்று அபிநிவேசித்து, அந்த அபிநிவேசாநுரூபமான ஸந்நிதிவிசிஷ்டத்வத்தையும், அத்யபிநிவேசவிஷயத்வத்தையும், ஆஸ்ரிதரக்ஷகத்வத்தையும், அபேக்ஷாப்ரதிஸம்பந்தித்வத்தையும், காரணத்வாதி குணயோகத்தையும், பரமபத நிலயத்வத்தையும், ஹ்ருதயதாதிசயத்தையும், ஸர்வாந்தராத்மத்வாதிகளையும், கிஞ்சித்காரவிஷயத்வத்தையும், க்ருபாதிகஸம்பந்தத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்பூதனானவனையநுபவிக்கவேணும்" என்கிற ஆகாங்க்ஷையாலே, தம்மோடு கரணங்களோடு வாசியற நோவுபட்ட இவருடைய ஆர்த்தி தீரும்படி முகங்காட்ட அநுபவித்து ஸந்துஷ்டராய், ஆஸ்ரிதாநுரூபமான திருவாய்மொழியை அவன்திருவடிகளிலே பாடி உஜ்ஜீவிக்கப்பெற்றேன் என்று மிகவும் ஹ்ருஷ்டராகிறார்.

இ.—நாலாந்திருவாய்மொழியில், கீழே-அவனுடைய ஸௌசீல்யத்தையும் அதுக்கடியான ஸ்ரீய:பதித்வத்தையும் அநுஸந்திக்கையாலே "அப்போதேபெறவேணும்" என்னும் சாபலம் பிறந்து, பெறாமையாலே* முடியானேயிற்போலே தாமும் விடாய்த்து தம்முடைய கரணக்ராமங்களும் சேதநஸமாயியாலே விடாய்த்து மிகவும் அவஸந்நரானார்; இவருடைய அவஸாதந்தான் அவன் "க்ரமத்திலே வந்து முகங்காட்டுகிறோம்" என்னவொண்ணாதபடியாயிருக்கையாலே, அவன் தூணிலேவந்து தோற்றி ஹிரண்யனால் வந்த நலிவை ஸ்ரீப்ரஹ்லாதனுக்குத் தீர்த்தருளினாற்போலே தம்மார்த்தி தீரவந்து முகங்காட்டினபடியை அநுஸந்தித்து ஹ்ருஷ்டராய்க் காணப்பெற்றேன் என்கிறவளவேயன்றிக்கே "வைஷ்ணவர்களுக்கும் உபகாரகனாகப்பெற்றேன்" என்று தாம் பெற்ற பேற்றைப் பேசி ஹ்ருஷ்டராகிறார்.

ஈடு.—ஈஸ்வரஸ்வாதந்த்ர்யத்துக்குஅடி-அவன் தானாயிருக்கும்; சீலாதிகுணங்களுக்குஅடி-பிராட்டியாயிருக்கும். இதிலேவந்தவாறே ஸ்வாதீநமன்றிக்கே யொழிகிறதோ

---

மையார்ப்ரவேசே: கீழில்திருவாய்மொழியிலே - சீலகுணத்தையும், அதுக்கடியான ஸ்ரிய: பதித்வத்தையும் அருளிச்செய்தாரென்று விவக்ஷித்து, "சீலகுணத்துக்குஅடி பிராட்டியானால், ஔபாதி

வேன்னில்? - அங்ஙனுமாயிராது; நிரூபித்தால், அந்த ஸ்வாதந்த்ர்யத்தோபாதி இவளோட்டைச்சேர்த்தி நித்யமாயிருக்கையாலே. ஹாஷ்யகாரர் மேலே "ஸ்ரீவல்லபஃ" (ஸ்ரீவல்லபஃ)என்ன நினைத்து, ஸ்வரூபத்தை நிரூபிக்கிறவிடத்திலே, ஜ்ஞாநாநந்தங்களுக்கு முன்னே "ஸ்ரிய:பதிஃ" (ஸ்ரிய:பதி:) என்றாரிறே. இப்படியிருக்கிறவனுடைய ஶீல குணத்தையும், அதுக்குஅடியான ஸ்ரிய:பதித்வத்தையும் அநுஸந்தித்தார் - கீழில்திருவாய்மொழியிலே; கடுகப்பெறவேண்டும்படி குணாதிகனுமாய்ப்பெறுவிப்பாரும் அருகேயுண்டாயிருக்கையாலே, இப்போதே பெறவேண்டும்படியான சாபலம் பிறந்தது; அப்போதே பெறக்காணாமையாலே விஷயாநுரூபமாக விடாய்த்தார். பெறவேண்டும்படி குணாதிகனுமாய்,பெறுவிப்பாரும் அருகேயுண்டாயிருக்கப்பெறாவிட்டால்ஆறியிருக்கப்போகாதே ஆகையாலே, சேதநஸமாதியாலே தனித்தனியே கரணங்களும்விடாய்த்துத் தாமும்விடாய்த்தார், * முடியானேயில் வாஸநையாலே. இதுதான் எல்லாத்திருவாய்மொழியோடுங்கூடியிருப்பதொன்றாயிற்று: ஒரு "சென்சொற்கவி," "வீற்றிருந்தேழுலகு," "என்றைக்குமென்னை," "முடியானே," இவையித்தனையிலும் ஓடுகிற ஹாவவ்ருத்தியையுடைத்தாயாயிற்றிருப்பது இப்படி இந்த்ரியங்களுந் தனித்தனியேவிடாய்த்துத் தாமும் விடாய்த்தபடி- ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்திக்குத்தோற்றின இதுதான் க்ரமத்திலே வந்தானேன்னலாம்படி, ஆற்றாமைக்கு க்ரமத்திலேதோற்றப்பற்றாதே தூணிலேவந்துதோற்றினாற்போலே தோற்றவேண்டும்படியாயிற்று. இப்படிப்பட்ட தம்முடைமையையும், அதுக்கடி

---

*கமாகையாலே அநித்யமாகாதோ" என்று சங்கித்துப்பரிஹரிக்கிறார் - ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கு இத்யாதி. 'ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கு அடியவன்றாணுயிருக்கும்' என்கிற இத்தை இப்போதருளிச்செய்தது - ஸ்வாதந்த்ர்யம் ஸ்வாதீநமாகையாலே, அதுக்கு அநித்யத்வப்ரஸக்தியில்லை யென்று தோற்றுகைக்காக. 'இதிலே' என்றது - ஶீலாதிகுணங்களிலே யென்றபடி. ஸ்வாதீநமன்றிக்கே யொழிகிறதோ - ஸ்வாபாவிகமல்லாமையாலே ஔபாதிகமாய் நித்யமன்றிக்கே யொழிகிறதோ வென்றபடி. அங்ஙனுமாயிராது - ஔபாதிகமானாலும் அநித்யமாயிராதென்றபடி. அதுக்கு ஹேதுவேதென்ன- அந்த ஸ்வாதந்த்ர்ய இத்யாதி. அதாவது - உபாதியான பிராட்டியோட்டைச்சேர்த்தி நித்யமாகையாலே இதுவும் நித்யமென்றபடி. நித்யமாகைக்கு அடி ஸ்வரூபநிரூபகையாகையாலே என்னப்பார்த்து, அப்படி ஸ்வரூபநிரூபகையாகையோ? என்ன - ஹாஷ்யகாரர் இத்யாதி. 'ஶ்ரிய:பதிஃ' என்றாரிறே? கீதாஹாஷ்யத்திலேயென்றபடி. "ஶ்ரிய:பதிர்நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநாநந்தஜ்ஞாநாநந்தைகஸ்வரூபஃ" இத்யாரப்ய, "ஸ்வாபாவிகாநவதிகாதிஶயஜ்ஞாநபலைஶ்வர்யவீர்யஶக்திதேஜ:ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணகணஶ்ரீவல்லபஃ" இதி ஸ்ரீகீதாஹாஷ்யே. ப்ராஸங்கிக ஶங்கையைப் பரிஹரித்து, இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - இப்படி இத்யாதி. ஶ்ரிய:பதித்வத்தையும் என்றது - "அணியார்மலர்மங்கைதோள்" என்றத்தைப்பற்ற. சீலாதிகுணங்களும் ஶ்ரிய:பதித்வமும் இத்திருவாய்மொழியில் இவர்க்குஉண்டான விடாய்க்கு உத்தம்பகமென்னுமத்தை யருளிச்செய்கிறார் - கடுக இத்யாதி. விடாய்க்கிறதென்? ஆறியிருக்கவொண்ணாதோ? என்ன - பெறவேண்டும்படி இத்யாதி. உக்தார்த்த நிகமநபூர்வகமாக விடாயினுடைய எல்லையை யருளிச்செய்கிறார் - ஆகையாலே இத்யாதி. விடாய்மாத்ரமோ, ஸந்தோஷமில்லையோவென்ன-இதுதான் இத்யாதி. ஏதத்விவரணம் - ஒருசென்சொல் இத்யாதி. இவர்க்கு இத்திருவாய்மொழில் பிறந்த விடாயினுடைய உறைப்பு எவ்வளவென்ன - இப்படியிந்த்ரியங்களும் இத்யாதி. தனித்தனியே என்றது - "கண்ணே," "என்கருத்தே" "உன்னையுள்ளுமென்னுள்ளம்" இத்யாதியைப்பற்ற. தாமும்விடாய்த்து என்றது - "நானழைப்பன்" "பேதுறுவன்" இத்யாதியைப்பற்ற. தூணிலே வந்து என்றது - "நரசிங்கமதாய்" என்றத்தைப்பற்ற. இத்திருவாய்மொழியில் பத்துப்பாட்டில் ப்ரமேயங்களையும் கொய்துபிடித்தருளிச்செய்கிறார் - இப்படிப்பட்ட இத்யாதி. "என்னுள்ளமுகந்தே" என்றத்தைப்*

யான விடாயையும், அவன்விடாயறிந்து அதுக்கு உதவவந்து முகங்காட்டினபடியையும் அநுஸந்தித்து ஹ்ருஷ்டராய், "நான் க்ருதக்ருத்யனானேன்: அடிமைசெய்யப்பெற்றேன்: வாழ்ந்தேன்: ஸ்ரீவைஷ்ணவர்களுக்குமெல்லாம் நான் உபகாரகனும்படியானேன்: இதோ ருவன் பெறும்பேறிருந்தபடியே!" என்று தமக்குப்பிறந்த லாபத்தை யநுஸந்தித்து இனியராய், அத்தைப்பேசித் தலைக்கட்டுகிறார்.

---

## முதற் பாட்டு.

---

மையார்கருங்கண்ணிகமலமலர்மேல்
செய்யாள்திருமார்வினிற்சேர்திருமாலே!
வெய்யார்சுடராழிசுரிசங்கமேந்தும்
கையா! உன்னைக்காணக்கருதுமென்கண்ணே.

*ஆ.—லக்ஷ்மீகடாக்ஷ ஸம்ஸேவைக ஸேவ்யனாய், தத்பாவஸமனாய், ஸங்க சக்ர திவ்யாயுதவிஷேஷிதகரனான உன் அழகை என்கண்ணானது காண ஆசைப்படாநின்றதென்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், ஸ்ரீய:பதியான எம்பெருமானைக் காணவேணும் என்று தம்முடைய சக்ஷுரிந்த்ரியத்திற்குப் பிறந்த சாபலத்தை அருளிச்செய்கிறார்.*

*[மையாரென்று தொடங்கி] - மேகத்திலே மின் சேர்ந்தாற்போலே மையார்ந்து கறுத்த திருக்கண்களையுடையளாய்ப் பரமபோக்யமாய்ச் சிவந்ததிருநிறத்தையுடைய பெரிய பிராட்டியார் சேரும் திருமார்வையுடையையாய் அவள்பக்கல் அத்யந்தம் வ்யாமுக்தனானவனே! [வெய்யாரென்று தொடங்கி] - மிகவும் வெவ்விதான தேஜஸ்ஸையுடைய திருவாழி, கண்ணுக்கிலக்காம்படி சுரியையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யம் இவற்றை ஏந்தும் திருக்கையையுடையவனே! இப்படிஸ்ப்ருஹணீயனான உன்னைக் காண ஆசைப்படாநின்றது என்னுடைய கண்.*

*ப.—முதற்பாட்டில், நிரதிசயபோக்யதாப்ரகாசகமான லக்ஷ்மீஸம்வந்த்யத்தையும், அந்தபோக்யதையைக் காத்தூட்டும் ஆயுதபூர்த்தியையுமுடைய உன்னைக் காண ஆசைப்படாநின்றது என் கண் என்கிறார்.*

*மையார் - அஞ்சநாலங்காரத்தையுடைத்தாய், கரு - "அஸிதேக்ஷணா" என்னும்படி ஸ்வாபாவிகமான கருமையையுடைத்தான, கண்ணி - திருக்கண்களையுடையளாய், கமலமலர்மேல் - தாமரைப்பூவின்மேலேயிருப்பாளாய், செய்யாள் - (பத்மவர்ணையாகையாலே) சிவந்தநிறத்தையுடையளான லக்ஷ்மியானவள், ("அகலகில்லேனிறையும்" என்று), திருமார்வினில் - திருமார்பினழகிலே (ஈடுபட்டு), சேர் - சேரும்படியாய், (அவ*

---

*பற்ற - ஹ்ருஷ்டராய் என்றது. "கண்டுகொண்டேனே" என்றத்தைப்பற்ற - க்ருத க்ருத்யனானேன் என்றது. "தொண்டர்க்கமுதுண்ண" இத்யாதியைப்பற்ற-ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் இத்யாதி. "உய்ந்தவாறே" என்றைத்தைப்பற்ற - இதோருவன் இத்யாதி. அஞ்சுபாட்டு - * முடியானேயில்ப்ரமேயம்; மூன்றுபாட்டு - * வீற்றிருந்தேழுலகில் ப்ரமேயம்; ஒன்பதாம்பாட்டு - * என்றைக்கும் ப்ரமேயம்; பத்தாம்பாட்டு - * செஞ்சொற்கவியில் ப்ரமேயம்.*

ளுடைய அவயவஶோபையிலும் ஆபிஜாத்யத்திலும் துவக்குண்டு), திரு - அவள்பக்கலிலே, மாலே - அதிஶயிதவ்யாமோஹத்தைப்பண்ணுமவனாய், (இந்தச்சேர்த்திக்கு அஸஹ்யாநேஹபஸங்கிகளாய், ரக்ஷிணத்யோமத்தாலே ப்ரதிபக்ஷத்திலே), வெய்ஆர் - வெம்மைமிகுந்தின, சுடர் - ஜ்வாலையையுடைய, ஆழி - திருவாழியையும், சுரி - (வடிவுதானே யெதிரிகளையும் அழித்து ஆஶ்ரிதர்க்கநுஸாவ்யமாம்படியான வடிவிலே) ரேகாவலயத்தையுடைய, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், ஏந்தும்—, கையா - திருக்கையையுடையவனே! உன்னை - (இப்படி ஸ்ரிய:பதியாய் ஶங்கசக்ரதராயரானை) உன்னை, என் - என்னுடைய, கண் - (சபலமான) கண்ணானது, காண - (ஸூரிகளோபாதி) ஸாக்ஷாத்காரம்பண்ண, கருதும் - மநோரதியாநின்றது.

இ.—முதற்பாட்டில், ஸ்ரிய:பதியானவனைக் காணவேணுமென்று தம்முடைய சக்ஷுரிந்த்ரியத்துக்குப் பிறந்த சாபலத்தை யருளிச்செய்கிறார்.

[மையார் கருங்கண்ணி] - ஸ்வாபாவிகமான கறுப்பையுடைத்தாய் அஞ்ஜநத்தாலே அலங்க்ருதமான திருக்கண்களை யுடையவள். ஒன்றால் ஸமாதாநம்பண்ண வேண்டாதபடி அழகுஸ்வாபாவிகமாயிருக்கையாலே, கண்ணுக்கு அஞ்ஜநம் மங்களார்த்தமாயித்தனையிறே. [கமலமலர்மேற் செய்யாள்] - ஸௌகுமார்யத்தால் வந்த யோக்யதையை யுடையவள். [திருமார்வினிற்சேர்] - மேவத்திலே மின்சேர்ந்தாற்போலேயாயிற்று, சேர்த்தியால் வந்த அழகு; அப்பூ அடிக்கொதித்துக் கால்வாங்கித் திருமார்விலே ஏறவேண்டும்படியாயிற்று, அவளுக்குத் திருமார்விற் சேர்த்தியிருப்பது. [திருமாலே]-அவள் பக்கல் அத்யந்தம் வ்யாமுக்தனானவனே! அவள் திருமார்விற் பண்ணின வ்யாமோஹத்தை இவன் அவயவங்கள் தோறும் பண்ணுமென்கை. இப்படி அந்யோந்யம் சேர்ந்த சேர்த்தியிலேயிறே கைங்கர்யம்பண்ண ஆசைப்பட்டது. இச்சேர்த்தியைப் பற்றவிறே அவள்முன்னாகப் பற்ற ஆசைப்படுவார் ஆசைப்படுவது. "நகஶ்சிந்நாபராத்யதி" என்னுமவளும் "என்னடியாரதுசெய்யார்" என்னுமவனுமான இச்சேர்த்தியிறே ஸம்ஸாரிகளுக்குத் தஞ்சம். [வெய்யார்சுடராழி]-ப்ரதிபக்ஷத்தின்மேலே வெம்மைமிக்கிருந்துள்ள தேஜஸ்ஸையுடைய திருவாழி. [சுரிசங்கம்] - ஒருகார்யம் செய்யவேண்டாதே ஸந்நிவேஶந்தானே தர்ஶநீயமாயிருக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யம். [ஏந்தும் கையா] - கையும் திவ்யாயுதமுமான சேர்த்தியழகையாயிற்று இவர் காணவேண்டியிருப்பது. [உன்னை]-"ஶங்கசக்ரகதாபாணே! ஸ்ரீவத்ஸவக்ஷா:"என்கிறவடிவையுடைய உன்னை. [காணக் கருதும்]-காண ஆசைப்படாநின்றது. இவ்வஸ்துவைப்பார்த்தால் கண்டுகொண்டிருக்கையிறே ஸத்ருஶம். நித்யஸூரிகளும் ஸாக்ஷாத்காரமிறே பண்ணுவது. [என் கண்ணே]-ஸம்ஸாரிகளில் இவர்க்குள்ள வ்யாவ்ருத்தி போருமாயிற்று, இவரிற்காட்டில் இவர் கண்ணுக்கு.

ஈடு.—முதற்பாட்டு. "ஸ்ரிய:பதியானவனைக் காணவேணும்" என்று தம்முடைய சக்ஷுரிந்த்ரியத்துக்குப் பிறந்த சாபலத்தை யருளிச்செய்கிறார்.

[மையார்கருங்கண்ணி]-"அவனைப்பெறவேணும்" என்றிருப்பார் ஆசைப்படுவதும் அவள் முன்னாகவாய், பெற்றால் பின்னை கைங்கர்யம்பண்ணுவதும் இருவருமான

முதற்பாட்டு.—மையார் இத்யாதி. "திருமாலே" என்னுமளவும், "உன்னைக்காணக் கருதுமென்கண்ணே" என்றவற்றையும் கடாக்ஷித்தவதாரிகை - ஸ்ரிய:பதி இத்யாதி.

பிராட்டிசேர்த்திசொன்னதுக்கு பாவமேதென்ன - அவனை இத்யாதி. ஆசைப்படுவதும் என்றது - உபாயமாக ப்ரார்த்திப்பதுமென்றபடி. இது, பூர்வவண்டத்தைப்பற்ற. "கருங்

சேர்த்தியிலேயாயிருக்குமிறே. [மையார்கருங் கண்ணி] - †ஒன்றால் ஸமாதாநம் பண்ண வேண்டாதபடி ஸ்வாபாவிகமான அழகையுடைத்தாயாயிற்றுத் திருக்கண்களிருப்பது. இனி மங்களார்த்தமாக தரிக்கும்தித்தனையிறே அஞ்சநம். "கருங்கண்ணி" என்றாகிற் கச்செய்தே 'மையார்' என்னும்போது, மங்களார்த்தமாக அஞ்சநம் தரித்ததாமித்தனையிறே. [கமலமலர்மேற்செய்யாள்] - இதுவாயிற்று ஸௌகுமார்யமிருக்கும்படி. [திருமார்வுஇத்யாதி] - தாமரைப்பூவில் பரிமளமும் தாதும் அடிக்கோதித்தால் உன்மார்விலே யடிமாறியிடவேண்டும்படி மார்வுபடைத்தவனே! இவள் இவ்வேற்றமெல்லாங் கொண்டும் அம்மார்வுக்குஅவ்வருகுபோகமாட்டாள். அவ்வகலமெல்லாம் போக்யமாயிருக்கையாலே, அவ்வருகுபோகவேண்டாவே. [திருமாலே] - அவனும், இவள் மார்வில் படும்பாட்டை இவளுடைய ஸர்வாவயவங்களிலும் பிச்சேறியிருக்குமாயிற்று. அவனுக்குத் திருக்கண்கள் சிவந்தாயிற்றிருப்பது. அவன் இவளை நிரந்தரகடாக்ஷம்பண்ணுகையாலே, அவன்கண்ணின்சிவப்பு இவள்மேலேயூறி இவள்திருமேனி சிவந்திருக்கும்; இவள் அவனை நிரந்தரகடாக்ஷம் பண்ணுகையாலே, இவள் கண்ணிற்கறுப்பு அவன் திருமேனியிலேபரந்து அவன் திருமேனி ஸ்யாமளமாயிருக்கும். இவளுக்குத் திருக்கண்கள் குளிர்ந்திருக்கும்; அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருக்கும். அவனோட்டைச் சேர்த்தியாலேயாயிற்று இவளுக்குத் தண்ணளி விஞ்சியிருப்பது; இவளோட்டைச் சேர்த்தியாலேயாயிற்று அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருப்பது. ஆக, இருவர்க்கும் இரண்டும் குறைவற்றிருக்கும்,ப்ராணயித்வத்தாலே.வரவிட்ட ஆள் அழியச்செய்யப்புக, "நகஸ்சிந்நாபராத்யதி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்னுமிவள், "என்னடியாரதுசெய்யார்" என்று அவள்தன்னோடே

---

கண்ணி" என்றதுக்குபாவம் - ஒன்றால் இத்யாதி. ஆனால் "மையார்" என்பானென்னென்ன - இனி இத்யாதி. "மங்களார்த்தம்" என்கிறதென்? அழுக்குடலாகுமேலோவென்ன - கருங்கண்ணி இத்யாதி. இத்தால் ஸௌந்தர்யஞ்சொல்லிற்று; மேல் ஸௌகுமார்யம் சொல்லுகிறதென்கிறார் - இதுவாயிற்று இத்யாதி. அதாவது - மலர்மேலேயிருப்பதத்தனைபோக்கி, மற்றையிடம்பொறாத ஸௌகுமார்யமென்கை. "திரு" என்று - அழகைவிவக்ஷித்துபாவமாதல், "சேர்" என்றதுக்குபாவமாதல் - தாமரைப்பூவில் இத்யாதி. "மார்வு" என்று ஏகாவயவகதநத்துக்குபாவமாதல், "சேர்" என்கிறவர்த்தமாநார்த்தமாதல் - இவள்இவ்வேற்றம் இத்யாதி. இவ்வேற்றம் என்றது - கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யஸௌகுமார்யாதிகளை. மாட்டாமைக்கு ஹேதுவேதென்ன - அவ்வகலம் இத்யாதி. அகலம் - வைபுல்யம்: மார்வு என்று லக்ஷணார்த்தம். "மார்வு" என்று ஓரவயவத்தை விசேஷியாதே, வெறுமனே "திருமால்" என்றதுக்குபாவம் - அவனும் இத்யாதி. திருவினிடத்திலே வ்யாமுக்தனென்று பதார்த்தம். அஞ்சநலக்ஷணமாய் ஸ்வாபாவிகமான கருமையையுடைத்தான திருக்கண்களையுடையளாய், தாமரைப்பூவின்மேலேயிருப்பாளாய், பத்மவர்ணையாகையாலே சிவந்ததிறத்தையுடைய லக்ஷ்மியானவள், அழகியமார்விலே சேரும்படியாய், திருவினிடத்திலே வ்யாமோஹத்தையுடையவனேயென்று பதார்த்தம். "மையார்கருங்கண்ணி, செய்யாள்" என்றப்ரஸங்கத்திலே, பரஸ்பரகடாக்ஷங்களாலே திருமேனிகளுக்கு நிறம்வந்ததாக ரஸோக்தி - அவனுக்குத் திருக்கண்கள் இத்யாதி. இருவருடையவும் திருமேனியில் சிவப்பும் கறுப்பும் பரஸ்பரகடாக்ஷங்களால் வந்தவளவேயன்று; இவர்களுடைய தயாவாத்ஸல்யங்களும் பரஸ்பரகடாக்ஷங்களாலே வந்ததென்கிறார் - இவளுக்கு இத்யாதி. ஏதத்விவரணம் - அவனோட்டை இத்யாதி. அந்யோந்யம் சேர்த்தியாலே க்ருபாவாத்ஸல்யங்களானால், ஔபாதிகமாய் அநித்யமாகாதோவென்ன; உபாதி நித்யமாகையாலே நித்யமென்கிறார் - ஆக இத்யாதி. கறுப்பு-குளிர்த்தியாய், க்ருபையைச்சொல்லுகிறது. அப்படி இருவர்க்கும் இரண்டும் விஞ்சியிருக்குமென்கைக்கு நியாமகமேதென்ன, இருவருடையவும் உக்திகளென்கிறார் - வரவிட்டஆள்

---

† ஒன்றால் ஸமாதாநம்பண்ண - அழகுக்காக ஒன்றைக்கொண்டு வைக்க,

மறுதலைக்கும்படியாயிற்று அவன் இருப்பது; ஆகையாலே, இருவருமானசேர்த்தியிலே இவை இருவர்க்கும் குறைவற்றிருக்குமென்றுமாம். வ்யதிரேகித்தஅன்றும் தனித்தனியேகுறைவற்றிருக்குமென்றுமாம். [திருமார்வினில்சேர்] - நித்யாநுபவம் பண்ணுநிற்கச்செய்தேயும், "அகலகில்லேனிறையும்" என்று இன்று வந்து கிட்டின புதியார்படுவத்தையெல்லாம் படாநிற்கும். சேரேன்கிற வர்த்தமாநம் - இத்தைக் காட்டுகிறது. [வெய்யாரித்யாதி] - இவள் கையில் லீலாரவிந்தம் அவனுக்கு போக்யமாயிருக்குமாபோலேயாயிற்று, அவன்கையில் திவ்யாயுதங்கள் இவளுக்குஇனிதாயிருக்கும்படி. இவள் உகப்புக்காக ஆஸ்ரிதவிரோதிகளை யழியச்செய்கைக்குமுதலாய் ஸ்ப்ருஹணீயமாயிருக்குமாயிற்று. ப்ரதிபக்ஷத்தின்மேலே மிக்கவெம்மையையுடைத்தாய்ப் புகரோடு கூடியிருக்கிறதிருவாழி, ஸந்நிவேசமேயமைந்து வேறொருகார்யங் கொள்ளவேண்டாதே வைத்தகண்வாங்காதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படியான ஸ்ரீபாஞ்சஜந்யம். [ஏந்தும்கையா] - வெறும்இவையுமன்று, கையுமன்று: இரண்டினுடையவுஞ்சேர்த்தியாயிற்று, இவர்ஆசைப்படுகிறது. "கூராராழிவெண்சங்கேந்தி - வாராய்" என்னுமவிறே. [உன்னை] - லக்ஷ்மீஸம்பந்தத்தோடும், திவ்யாயுதங்களோடும், திவ்யவிக்ரஹத்தோடுங் கூடியிருக்கிற உன்னை. இவருடைய உத்தேஸ்ய வஸ்து இருக்கிறபடி இதுகாணும். [காணக்கருதும்] - "ஶங்கசக்ரகதாதர: - ஸ்ரீவத்ஸவக்ஷா:" (ஶங்கசக்ரகதாதர: - ஸ்ரீவத்ஸவக்ஷா:) என்கிற உன்வடிவைக்காண ஆசைப்படாநின்றது. அவனை யாசைப்படுவார் ஆசைப்படுவது ஒருகார்யங்கொள்ளவன்று, காணவாயிற்று. * திருவேங்கடத்தானைக் காணவிறே. * காரார்திருமேனிகாணுமளவுமிறே.

---

இத்யாதிவாக்யத்வயத்தாலே. கீழ் - பரஸ்பரம் சேர்த்தியாலே க்ருபாவாத்ஸல்யங்கள் வந்ததாகச் சொல்லி, இவளுக்கு அவிதேக்ஷணத்வமும், அவனுக்கு புருஷோத்தமத்வப்ரயுக்தமான புண்டரீகாக்ஷத்வமும் ஸ்வதஸ்ஸித்தமாகையாலே, க்ருபாவாத்ஸல்யங்களும் பரஸ்பரம் சேர்த்தியால்வந்ததன்றிக்கே ஸ்வாபாவிகங்களென்கிறார் - வ்யதிரேகித்த இத்யாதி. இவள் அம்மார்வுவிட்டு அவ்வருகு போகமாட்டாமையின் எல்லையையருளிச்செய்யாநின்றுகொண்டு, இது "சேர்" என்கிறவர்த்தமாநவித்தமென்று முக்தகண்டமாகவருளிச்செய்கிறார் - நித்யாநுபவம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. பிராட்டியைச்சொல்லி, அநந்தரம் ஆயுதங்களைச்சொன்னதுக்கு பாவம் - இவள்கையில் இத்யாதி. இவ்விடத்திலே - ஸாரோ ந்ருஸிம்ஹவபுஷ: ஸகலஸ்ய ஸோऽயம் தேவ்யாஸ்ஸ ஏஷ விபவோ ஹி ஸுதர்ஶநாக்ய: । த்ருஷ்டாரவிந்தவதநே ஹரிணா ஸமேதா ஸம்பாதிதா ப்ரியதமா ஸஹ ரூபதோ ஹி" இத்யாத்யநுஸந்தேயம். ஸ்ரீகுணரத்நகோஶ (சஎ). ஆனால், "வெய்யார் சுடர்" என்று விசேஷிப்பானென்னென்ன - இவள்உகப்புக்காக இத்யாதி. ஶப்தார்த்தம் - ப்ரதிபக்ஷத்தின் இத்யாதி. "சுரி" என்றதுக்கு பாவம் - ஸந்நிவேசம் இத்யாதி. ஸந்நிவேசம் - ஸம்ஸ்தாநம். "ஸந்நிவேஶஸ்ஸம்ஸ்தாநம்" இதி நிகண்டு. "ஏந்தும்கையா" என்றதுக்கு பாவம் - வெறும்இவையும் இத்யாதி. இரண்டினுடையவும் சேர்த்தியழகை யாசைப்பட்டிருப்பரென்னுமதுக்கு ப்ரமாணம் - கூராராழி இத்யாதி. கீழெல்லாவற்றையும் கடாக்ஷித்து - லக்ஷ்மீஸம்பந்தம் இத்யாதி. திவ்யவிக்ரஹத்தோடுமென்றது - "ஏந்தும்கையா" என்றத்தைப்பற்ற. இவர்க்குஅநுபாவ்யவஸ்து இப்படிப்பட்டதென்கிறார் - இவருடைய இத்யாதி. "காண" என்றதுக்கு பாவம் - ஶங்கசக்ர இத்யாதி. "தேஜஸ்: பரமோ தாதா ஶங்கசக்ரகதாதர: । ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீரஜய்யஶ்ஶாஶ்வதோ த்ருவ:" இதி ராவண வதாநந்தரே மண்டோதரீ. ஸ்ரீஸ்ரீவத்ஸம் வக்ஷஸி யஸ்யஸ: - ஸ்ரீவத்ஸவக்ஷா: என்றுஇங்குஸமாஸம் விவக்ஷிதம். வத்ஸம் - மறு. "காண" என்கிறதென்? கார்யம்கொள்ளவேண்டாவோவென்ன - அவனை இத்யாதி. காண்கைக்கே யாசைப்பட்டிருப்பரென்னுமதுக்கு ப்ரமாணம் - திருவேங்கடத்தானை இத்யாதி. ஸ்பஷ்டோர்த்த:. அங்கும்

நித்யஸூரிகளும் ஸசாசர்மாநம்பண்ணும் இத்தனையிறே. "அணியரங்கனென்னமுதினைக் கண்டகண்கள் மற்றென்றினைக்காணா" என்று இவ்வளவிலே தேக்கிட்டுவிடுவோர்கள் இங்குள்ளார்; "யததேவாஜ்ஞதம்ஸ்ருஷ்டவாந்ருபவ்யந்தி" (எத்தேவாஜ்ஞதம்த்ருஷ்ட்வாத்ருப்யந்தி) என்று இவ்வளவிலே தேக்கிட்டுவிடுவோர்கள் அங்குள்ளார். [என்கண்ணே] - ஸம்ஸாரிகளில் தமக்கு உண்டான சாபலத்தோபாதியும் போருமாயிற்று, இவர்தம்மிற்காட்டிலும் இவருடைய திருக்கண்களுக்கு. இவர்க்கு நேத்ரபூதரான ஏற்றமுண்டிறே சுவற்றுக்கு.

---

## இரண்டாம் பாட்டு.

---

கண்ணே! உன்னைக்காணக்கருதிஎன்னெஞ்சம்
எண்ணேகோண்ட சிந்தையதாய்நின்றியம்பும்
விண்ணோர்முனிவர்க்கென்றுங்காண்பரியாயை
நண்ணாதொழியேனென்றுநான் அழைப்பனே.

ஆ—(கண்ணே.) - என்னெஞ்சம் உன்னைக்காண ஆசைப்படாநின்றது. ப்ரஹ்மாதிகளுக்கும் காணஅரிதாயிருக்கச்செய்தே, எனக்கு த்ருஷ்டபூதனாயிருந்த உன்னையொழிய வேறு எனக்குச் செல்லாமையாலே உன்னைக் காணாதொழியில் தரியேனென்று நான் கிடந்து கதறுகின்றேனென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தமக்கும் தம்முடைய ஹ்ருதயத்துக்கும்உண்டான சாபலத்தை யருளிச்செய்கிறார்.

[கண்ணே என்றுதொடங்கி] - எனக்கு த்ருஷ்டயானவனே! உன்னைக் காண ஆசைப்பட்டு வஹுமனோரதங்களைப்பண்ணி என்னுடைய ஹ்ருதயம் நிரந்தரமாகக் கூப்பிடாநிற்கும். [விண்ணோரென்று தொடங்கி] - ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்குங்கூட அரியையாயிருக்கச்செய்தே என்னுடைய சாபலத்தாலே நான் உன்னைப்பெற்று முடிவன் என்று கூப்பிடாநின்றேன். [நண்ணாதொழியேன்] - உன்னைப் பெறுவிடில் தரியேனென்றுமாம்.

ப.—அநந்தரம், "உன்னைக்காணவேணும்" என்கிற அபிநிவேசத்தாலே, என்னெஞ்சும் நானும் அலற்றாநின்றோமென்கிறார்.

கண்ணே - (எனக்கு சர்வநஸாயநபூதனாய்க்கொண்டு) த்ருஷ்டியானவனே! உன்னை - (ஸாயநபூதனை) உன்னையே, காண - ஸதா தர்சநம்பண்ணி யநுபவிக்க, கருதி, (என்னிலும் சபலமான), என் நெஞ்சம் - என் நெஞ்சானது, எண்ணே கொண்ட - பஹுஸங்க்யாதமான, சிந்தையதாய் - மனோரதங்களைப்பண்ணி நின்று, (காண்கையிலும் ப்ரதிபந்தகம்போகையிலும் அடிமைசெய்கையிலுமுண்டான அபிநிவேசத்தாலே), இயம்பும் - அலற்றாநிற்கும்; நான் - (கரணியான) நான், விண்ணோர்-

---

அப்படியென்கிறார் - நித்யஸூரிகளும் இத்யாதி. இவ்விரண்டுக்குமடைவே ப்ரமாணங்கள் - அணியரங்கன் இத்யாதி. "என்" என்ற விசேஷணத்துக்கு பாவம் - ஸம்ஸாரிகளில் இத்யாதி. நேத்ரபூதர் - ப்ரதாநர். க்ரமேணாந்வய:.

ப்ரஹ்மாதிகளுக்கும், முனிவர்க்கு-ஸநகாதிகளுக்கும், என்றும் -, காண்பு அரியாயை - காணஅரிய உன்னை, நண்ணுதொழியேன் - கிட்டாமல்விடேன், என்று - என்று வ்யவஸிதனுப்க்கொண்டு, அழைப்பன்-(த்வரையாலே) கூப்பிடாநின்றேன்.

இ.—இரண்டாம்பாட்டில், தமக்கும் தம்முடைய நெஞ்சுக்கும் உண்டான சாபலத்தை யருளிச்செய்கிறார்.

[கண்ணே]—எனக்கு த்ருஷ்டியானவனே! [உன்னைக் காணக்கருதி] - நிரதிசயபோக்யனான உன்னைக் காண ஆசைப்பட்டு; காண்கைக்கு ஸாதநமான கண்ணும் காணப்படும் விஷயமும் அவனே என்கிறார்; "சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:" என்னக்கடவதிறே. அவன்தன்னாலே அவனைப்பெறுமவரிறே இவர். ப்ராப்யத்தில் நியதிபோலேயிறே இவர்க்கு ப்ராபகத்தில் நியதியும். [என்னெஞ்சம்] - "இயற்றுவாய் எம்மொடுநீகூடி" என்னவேண்டும்படியான நெஞ்சும். [எண்ணேகொண்ட சிந்தையதாய்] - எண்கொண்ட மநோரதத்தை யுடைத்தாய்: பஹுமநோரதங்களைப் பண்ணி, "காணவேணும்' காணுதேபட்ட ஊநகத்தைப் போக்கவேணும். அடிமை செய்யவேணும்" என்று. [நின்றியம்பும்] - நிரந்தரமாகக் கூப்பிடாநிற்கும். வாக் வ்ருத்தியையும் தானே ஏறிட்டுக்கொள்ளாநிற்கும். [விண்ணோர் இத்யாதி] — தம்முடைய கூப்பீட்டைச் சொல்லுகிறார். ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும்என்றும் கிட்டஅரிய உன்னை. [நண்ணுதொழியேன் இத்யாதி] - "பெறுதொழியேன்: பெற்று முடிவன்" என்று நான் கூப்பிடாநின்றேன். ப்ரஹ்மாதிகளுக்கு துர்லபனாயிருக்கிற உன்னை "பெற்றுமுடிவன்" என்கிறதுஎன்கொண் டென்னில்?—தந்தாம் தலையிலே ஸாதநம் கிடந்தவர்களுக்கு விளம்பஹேதுவு முண்டு. முதலிலே ந்யஸ்தபரனாயிருக்கிற எனக்கு விளம்பஹேதுவில்லை. [நண்ணுதொழியேன்] - அவனைக் கிட்டாதொழியில் நான் தரியேனென்றுமாம். இது ஆய்த்தான் நிர்வாஹம். 'கண்ணே' என்றஇடம் - "அவனே உபாயம்" என்கிறது ; 'உன்னைக் காணக்கருதி' என்றஇடம் - "உபேயமும் அவனே" என்கிறது ; 'எண்ணேகொண்ட சிந்தையதாய்' - என்றஇடம் ஸ்வீக்ருதோபாயருடைய யாத்ரை சொல்லுகிறது. 'நண்ணுதொழியேன்' என்றஇடம் - மஹாவிஶ்வாஸஞ் சொல்லுகிறது.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தமக்கும் தம்முடைய நெஞ்சுக்கும் உண்டான சாபலத்தை யருளிச்செய்கிறார்.

[கண்ணே] - எனக்கு த்ருஷ்டியானவனே! [உன்னைக்காணக்கருதி] - நிரதிசயபோக்யனான உன்னைக் காண ஆசைப்பட்டு. கண்ணைக்கொண்டே கண்ணைக்காணவிருக்குமாபோலேகாணும் இவர்இருக்கிறது. காண்கைக்கு ஸாதநமான கண்ணும், காணப்படும் விஷயமும் அவனென்கிறார்: "சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:" (சக்ஷு-

---

இரண்டாம்பாட்டு.—கண்ணே இத்யாதி. " என்னெஞ்சமெண்ணேகொண்டசிந்தையதாய் " என்றத்தையும் ' நானழைப்பன்" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை - தமக்கும் இத்யாதி.

ரஸோக்தி - கண்ணைக்கொண்டே இத்யாதி. இத்தால் ஃபலிதம் - காண்கைக்கு இத்யாதி. அப்படி யிரண்டுமவனேயென்ன - சக்ஷு - இத்யாதி. " சக்ஷுஸ்ஸும், அத்தால் காணப்படுகிற பதார்த்தமும், அவனுக்கு ப்ரகாரதயாவாம்" என்று இந்த ஶ்ருதிக்கு " ப்ரகார ப்ரகாரி

ம்சத்ரஷ்டவ்யஞ்ச நாராயணஃ)என்னக்கடவதிறே. அவன் தன்னாலே அவனைப் பெறுமவ ரிறே இவர். ப்ராப்யத்தில் நியதிபோலே, இவர்க்கு ப்ராபகத்தில் நியதியும். [என்னெஞ்சம்] - ஸங்கஹேதுவாய்க்கொண்டு, விஷயங்களிலே "பரதுபரது" என்று வாராநிற்குமிறே ஸம்ஸாரிகளுடைய நெஞ்சம்; * மயர்வறமதிநலமருளப்பெற்றார் நெஞ்சிறே, "தொழுதெழு" என்பது. [எண்ணேயித்யாதி] - எண்கொண்ட மநோரதத்தையுடைத்தாய்: வஹுமநோரதங்களைப்பண்ணி, "காணவேணும், காணாதேபட்ட து:கத்தைப் போக்கவேணும், அடிமைசெய்யவேணும்" என்று. [நின்றியம்பும்] - நிரந்தரமாகக்கூப்பிடாநிற்கும். ப்ரவ்ருத்தியையுந் தானே யேறிட்டுக்கொள்ளாநிற்கும். 'கண்ணே' என்கையாலே - "ப்ராபகனவனே" என்றதாய், "உன்னைக்காண" என்கையாலே - "ப்ராப்யவஸ்துவும்அவன்" என்றதாய், "எண்ணேகொண்ட" என்கையாலே - அந்தப்ராபகத்தைக்கொண்டு இந்த ப்ராப்யத்தைப் பெறவேணும்"என்றிருக்கும் அதிகாரியுடைய யாத்ரையிருக்கும்படி சொல் லிற்று. [விண்ணோரித்யாதி] - இதுதான் நெஞ்சுக்கேயாய் நான் கைவாங்கியிருக்கிறேனோ ? ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் என்றுமொக்கக் காணஅரியையா யிருக்கிற உன்னை நான் கிட்டாதொழிவனோ? "பெற்றுமுடிப்பன்" என்று நான் கூப்பிடாநின்றேன்."பெற்றுமுடிப்பன்"என்கிறது இவர்என்கொண்டென்னில்?-"விலக்ஷணதேசவாஸிகளாய்த் தங்களுக்கென்ன ஒருநைம்முதலுண்டாயிருக்கிறவர்களாகையாலே, விளம்பஹேதுவுண்டு அவர்களுக்கு; அங்ஙன்ஒருநைம்முதலில்லாதவர்களுக்கு விளம்பஹேது உண்டோ?" என்று கூப்பிடாநின்றேன். [நண்ணாதொழியேன்] - அவனைக்கிட்டாதொழியில் நான் தரியேன். இது ஆய்த்தான் நிர்வாஹம். "நண்ணாதொழியேன்" என்ற விடம் - மஹாவிச்வாஸஞ் சொல்லுகிறது. அவர்கள் விலக்ஷண தேசத்திலே யிருக்கையாலே க்ரமத்திலே யெடுக்கலாம் ; அங்ஙனன்றிக்கே, ஸம்ஸாரத்தே யகப்பட்டுநிற்கிற

---

ஹாவமன்றிக்கே சக்ஷுஸ்ஸாம் சக்ஷுஸ்ஸாலே காணப்படும் விஷயமும் அவனே" என்ற இதுவும் ஓரர்த்தம் இவர்க்கு விவக்ஷிதம். உபாயாந்தரங்களாலும் அவனைப் பெறலாமேயென்ன - அவன் தன்னாலே இத்யாதி. இந்நிர்ப்பந்தத்துக்கு அடியென்னென்ன - ப்ராப்யத்தில் இத்யாதி. "என்" என்றதுக்கு ஹாவம் - பந்தஹேதுவாய் இத்யாதி வாக்யத்வயம். பரதுபரது என்று - பரபரப்பாய்க்கொண்டு. "எண்ணேகொண்ட -" எண்ணிக்கையை - ஸங்க்யையை, கொண்ட - க்ரமித்த. ஸங்க்யையை யதிக்ரமித்திருக்கிறஎன்றபடி. விவரணம் - வஹுமநோரத இத்யாதி. வஹுமநோரதங்களேது? என்ன - காணவேணும் இத்யாதி. இயம்பும் - கூப்பிடும். நெஞ்சுக்கு ஸ்மரணமொழிய கூப்பிடக்கூடுமோவென்ன - ப்ரவ்ருத்தியை இத்யாதி. "கண்ணே" என்று தொடங்கி, "சிந்தையதாய்நின்றியம்பும்" என்னுமளவாலே - ஜ்ஞாதவ்யார்த்த த்ரயமும் ஸித்தித்ததென்கிறார் - கண்ணே இத்யாதி. உத்தரார்த்தத்துக்கு ஸங்கதி - இதுதான் இத்யாதி. ஸப்தார்த்தம் - ப்ரஹ்மாதிகளுக்கும் இத்யாதி. பெற்று முடிப்பன் என்றது - பலிதார்த்தம். ப்ரஹ்மாதிகளுக்கு அஷ்ப்ராபமான வஸ்துவைக் கிட்டுவேனென்கிறது என்னஹேதுவைக்கொண்டென்று சங்காவாக்யத்துக்குக் கருத்து. பரிஹாரம் - விலக்ஷண இத்யாதி. அதாவது - போகங்களெல்லாவற்றாலும் குறைவற்றதேசத்திலிருக்கிறவர்களாகையாலே, "இப்போதே யவனைப்பெறவேணும்" என்னுமது பிறவாதாகையாலும், தந்தாம் ஸாதநம்முற்றி பலிக்கவேணுமென்னும் அபிஸந்தி நடக்கையாலும் அவர்களுக்குவிளம்பமுண்டென்றபடி. அர்த்தாந்தரம் - அவனை இத்யாதி. "நண்ணாதபோது, ஒழியேன் - தரியேன்" என்ற ஆய்த்தான் நிர்வாஹம். "கிட்டியே விடுவன்" என்றதால் பலிதமான அர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் - நண்ணாதொழியேன் இத்யாதி. 'அங்ஙனொருநைம்முதல்' இத்யாதிவாக்யத்திலே, "முனிவர்" என்ற - யநநசீலரென்றதுக்கு ப்ரதிகோடிகாட்டி, "விண்ணோர்" என்றதுக்கு ப்ரதிகோடிகாட்டுகிறார் -

இவரையிறே கடுகவெடுக்கவேண்டுவது. எடுக்கவேண்டும் நிலத்திலே யிருந்தேன்; எடுக்க வேணுமென்றிருந்தேன்; எடுப்பான் தானுமிருந்தான்; எடுத்தால் பெறுவது தன்னையா யிருந்தது; ஆனபின்பு, எனக்கு என்ன கண்ணழிவு உண்டு? (௨)

---

## மூன்றாம் பாட்டு.

---

அழைக்கின்றவடிநாயேன்நாய்கூழைவாலாற்
குழைக்கின்றதுபோலஎன்னுள்ளங்குழையும்
மழைக்குஅன்றுகுன்றமெடுத்துஆநிரைகாத்தாய்!
பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே.

ஆ.—(அழைக்கின்ற.) - என்னெஞ்சானது, தன்னுடைய அயோக்யதை யையும், ஸாமக்ரீவைகல்யத்தையும் பாராதே, தன்னுடைய சாபலத்தாலே யுன்னை யாசைப்பட்டு விடமாட்டுகிறதில்லை; இப்படி என்னுடைய ஸர்வகரணங்களும் தளரா நிற்கச்செய்தே பேசாதிருந்தருளுகையாலே, உபாயபூர்ப்பராய் ஆபந்நராயிருப்பாரை ரக்ஷிக்கக்கடவதான உன்னுடைய நிரவத்யக காருண்யவெள்ளத்திலும் நான் அகப்ப டேனோ? என்றஞ்சாநின்றேன் என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிட்டு மிகவும் அவஸந்நராகச்செய்தே அவன் வரக்காணாமையாலே, நிஸ்ஸாதநராய் ஆர்த்த ராயிருந்தவர்களைத் தானே கைக்கொண்டு ரக்ஷிக்கக்கடவதான இக்குணத்துக்குப் புறம் பானேனோ என்று நோவுபடுகிறார்.

[அழைக்கின்றவென்று தொடங்கி] - அயோக்யனுமாய் அதிக்ஷுத்ரனுமா யிருந்துவைத்து ஆர்த்தனாய்க் கூப்பிடுகிற என்னுடைய ஹ்ருதயமானது நாய் தன்னு டைய கூழைவாலாலே பிறர்க்குத் தெரியாதபடி ஸ்வாபேக்ஷிதஸூசகமான சேஷ்டை களைப் பண்ணுமாபோலே, ஒருவர்க்குமறிய நிலமல்லாதபடி நோவுபடாநின்றது நிஸ்ஸாதநனாய் வைத்து ஆசைப்படாநின்றேன் என்றுமாம். [மழைக்கு அன்றென்று தொடங்கி] - பசுக்களும் இடையரும் நோவுபடும்படி இந்த்ரன் வர்ஷித்த வர்ஷத்துக்கு மலையை எடுத்துப்பரிஹரித்தருளின உன்னுடைய குணத்துக்குப்புறம்பாகாநின்றேன் என்று நோவுபடாநின்றேன்.

ப—அநந்தரம், ஆர்த்தியேபற்றாசாக ஆஸ்ரிதரக்ஷகனான உன்னுடைய க்ருபையானது என்னை நழுவவிடுகிறதோ? என்றஞ்சாநின்றேனென்கிறார்.

அழைக்கின்ற - (அஹ்நிவேஸாதிஸயத்தாலே) அழைத்துக்கூப்பிடாநிற்பே னாய், அடி - அநந்யகதியான ஸம்பந்தத்தையுடையேனாய், நாயேன் - அதனில் அவத் யாவஹமான நிகர்ஷத்தையுடைய என்னுடைய, என்னுள்ளம் - து:கக்ஷீணமானநெஞ் சானது, (உன்னுடையஸந்நிதியிலே), நாய் - நாயானது, (தன்னினைவை), கூழை -

---

அவர்கள் விலக்ஷண இத்யாதிவாக்யத்வயத்தாலே. பாட்டெல்லாவற்றாலும் ஸித்தித்தவர்த்தத் தைக் கொய்துபிடித்து நிரூபிக்கிறார் - 'எடுக்க' 'எடுக்கவேண்டும்' இத்யாதி. "விண்ணோர்" என்றதுக்கு ப்ரதிகோடியை விவக்ஷித்து "அழைப்பன், கண்ணே, உன்னைக்காண" என்ற பதத்ரயத்தையும்பற்ற - எடுக்கவேணும் இத்யாதிவாக்யத்ரயமும். என்ன கண்ணழிவுஉண்டு என்றது - உக்தஹேதுக்களைப்பற்ற, கண்ணழிவு - விளம்பமும், குறையும். க்ரமேணாந்வய:. (௨)

கூழையான, வாலால் - வாலையசைத்து, குழைக்கின்றதுபோல - ப்ரகாசிப்பிக்குமா போலே; குழையும் - சிதிலமாகாநின்றது; (இந்த்ரன்), அன்று - (அப்படிவர்ஷமுகத் தாலே ஆர்த்தியைஜநிப்பித்த) அன்று, மழைக்கு - அந்தவர்ஷத்துக்கு நிவாரணமாம் படி, குன்றம் - மலையை, எடுத்து- எடுத்து, ஆ - (ரக்ஷாபேக்ஷையைப் பண்ணவல்லதல்லாத) பசுக்களுடைய, நிரை - திரளை, காத்தாய் - ரக்ஷித்தவனே! (உன்னுடைய), அருள் - நிரவதிகக்ருபையானது, (என்னளவில்), பிழைக்கின்றது - தப்புகிறதோ, என்று—, பேதுறுவன் - கலங்காநின்றேன். உனக்குத் தப்புகிறதோவென்றுமாம்.

இ.—மூன்றாம்பாட்டில், இப்படிக் கூப்பிடச் செய்தேயும் அவன் வரக்காணாமையாலே ஆர்த்தியேமுதலாக ரக்ஷிக்கக்கடவ உன்குணத்துக்குப் புறம்பானேனோ என்கிறார்.

[அழைக்கின்றவடிநாயேன் இத்யாதி]-அயோக்யனாய் க்ஷுத்ரனாயிருந்து வைத்து ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினால் அத்தலைக்கு அவத்யமாம்படியாயிற்று தம்முடைய நிலை. அது தன்னைஉடையவனுக்குத் தன் அபிமதத்திலே ருசியைத் தெரிவிப்பது வாலாலேயாயிற்று; அதுதான் கூழையானால், தெரிவிக்கை அரிதாமிறே; அதுபோலே என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால், தமக்குஓடுகிற க்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை. நிஸ்ஸாதநனாய் வைத்து ஆசைப்படாநின்றேன் என்றுமாம். [மழைக்கன்று இத்யாதி] - இந்த்ரன்வர்ஷிக்கிற ஊமையிலே மலையை எடுத்து இடையரையும் பசுக்களையும் ஆர்த்தியே முதலாக ரக்ஷித்தவனே! [பிழைக்கின்ற தருளென்றுபேதுறுவனே] - "வரையாதேரக்ஷித்த அந்த மஹாகுணம் எனக்கு உதவாமையாலே பிழைக்கப்புகாநின்றாய் என்று பேகணியாநின்றேன் என்று ஆளவந்தார் நிர்வாஹம். "அந்த மஹாகுணத்துக்குப் புறம்பாகிறேனோ என்றஞ்சாநின்றேன்" என்று எம்பெருமானார் அருளிச்செய்வர்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. இப்படிக் கூப்பிடச்செய்தேயும் வரக்காணாமை யாலே, ஆர்த்தியே கைம்முதலாக ரக்ஷிக்கக்கடவ உன்குணத்துக்குப் புறம்பானேனோ? என்கிறார்.

[அழைக்கின்றவடிநாயேன்இத்யாதி] - அயோக்யனாய் க்ஷுத்ரனாயிருந்து வைத்து, ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினால் அத்தலைக்கு அவத்யமாம்படியாயிற்றுத் தம்முடைய நிலை. நாய், தன்னையுடையவனுக்குத் தன்னபிமதத்தில் ருசியைத்தெரிவிப்பது வாலாலேயாயிற்று; அவ்வால்தான் கூழையானால் தெரிவிக்கையரிதாமிறே; அதுபோலே, என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால் - தமக்குஓடுகிறக்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை. நிஸ்ஸாதநனாய்வைத்து ஆசைப்படாநின்றே

மூன்றாம்பாட்டு.—அழைக்கின்ற இத்யாதி. "பிழைக்கின்றதருளென்றுபேதுறுவன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இப்படி இத்யாதி.

"அடிநாய் - நாயேனான நான், அழைக்கின்றேன்" என்றந்வயித்து அருளிச்செய்கிறார் - அயோக்யனாய் இத்யாதி. "நாய்" என்கையாலே - அயோக்யத்வமும், க்ஷுத்ரத்வமும் ஸித்தம். அடி - அடியனாய், நாயேன் - நிஹீநனான என்னுடையவென்று பர்யவஸிதார்த்தம். அயோக்யனானால் கூப்பிடுகிறதென்? தவிரலாமேயென்ன - ருசியாலே இத்யாதி. வாலென்னாதே, "கூழை" என்று விசேஷித்ததுக்குபாவம்-நாய், தன்னை இத்யாதி. "கூழைவாலால்" என்றத்ருஷ்டாந்தத்துக்கு அநுகுணமாக பாவத்வயமருளிச் செய்கிறார் - இத்தால் தமக்குஇத்யாதி வாக்யத்வயத்தாலே. த்ருஷ்

னென்றுமாம். [மழைக்குஇத்யாதி] — இந்த்ரன் அச்மவர்ஷத்தை வர்ஷிக்கிறவளவிலே, மலையையெடுத்து இடையரையும் பசுக்களையும் ஆர்த்தியே கைம்முதலாக ரக்ஷித்தவனே! [பிழைக்கின்றதருளேன்றுபேதுறுவனே] - '''வரையாதேரக்ஷித்தமஹாகுணம் எனக்கு உதவாமையாலே யிழக்கப்புகாநின்றாய்'என்று பேகணியாநின்றேன்'' என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. அத்தை எம்பெருமானார் கேட்டருளி, ''இது, பொருளழகிது: ஆனால், இப்போது இவர்க்குஓடுகிற ஊமைக்குச் சேராது; ஆனபின்பு,'பசுக்களும்இடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையையெடுத்துமறித்த இம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாகிறேனோ?' என்று பேதுறாநின்றேன்'' என்று. (௩)

---

## நான்காம் பாட்டு.

---

உறுவதிதுவென்றுஉனக்காட்பட்டுநின்கண்
பெறுவதேதுகோலென்று பேதையேன்நெஞ்சம்
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கேன்றும்
அறிவதரியஅரியாயஅம்மானே!

**ஆ.**—(உறுவதிது) - நீ ஆச்ரிதஸுலபனாயிருக்கச்செய்தே சிலருக்கு அரியையாயிருக்கையாலே, எனக்கும் அரியையாயிருக்கிற்செய்வதென்? என்று என்னெஞ்சு நடுங்காநின்றதென்கிறார்.

**ஒ.**—நாலாம்பாட்டில், தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், அரியையாயிருக்கக் காண்கையாலே நெஞ்சு கலங்காநின்றது என்கிறார்.

[உறுவதிதுவென்று தொடங்கி] - இது பரமப்ரயோஜநம் என்று அடிமை புகுந்து, உன்பக்கல் அடிமைசெய்யப் பெற்றேனோ என்று மிகவும் மூர்க்கமான என்னுடைய ஹ்ருதயமானது கலங்காநின்றது; தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் என்று மொக்க அறியவொண்ணாத நரஸிம்ஹமான ஸர்வேச்வரனே!

**ப.**—அநந்தரம், உத்தேச்யமான சேஷத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியான உனக்கு அடிமையாய்வைத்து,என்பேறு ஏதாயிருக்கிறதோ? என்று என்னெஞ்சுகலங்காநின்றதென்கிறார்.

(ஸம்பந்தமொத்திருக்கச் செய்தேயும்), வானவர் - அநுகூலரானவானவரோடு, தானவர்க்கு - ப்ரதிகூலரானதானவரோடுவாசியற, (ஆச்ரித ஸௌலப்யத்திலும் ஸர்வேச்வரத்வத்திலும், என்றப் - என்றுமொக்க, அறிவது-அறிய, அரிய - அரியை

---

டாந்தத்துக்குத் தெரிவிக்கையரிதென்கிறமாத்ரமே அபேக்ஷிதம். ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, அவ்வருள் உன்னைத் தப்பிப்போகிறதென்று பேதுறாநின்றேனென்று ஸப்தார்த்தம். அருளென்னைத் தப்பிப்போகிறதென்று பேதுறாநின்றேனென்று எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு ஸப்தார்த்தம். பேகணியாநின்றேன் - க்லேசியாநின்றேன். இவர்க்கோடுகிறதசைக்குச் சேராது என்றது - அலாபத்தாலே நோவுபடாநிற்க அவனிழவுக்குநோவுபடுகை சேராதென்றபடி. பேதுறுகை - து:கப்படுகை. 'அழைக்கின்றஅடிநாயேனை - என்னுள்ளம் - நாய் கூழைவாலால் குழைக்கின்றது போல - குழையும்; இவ்வவஸ்தையிலும் வரக்காணாமையாலே, மழைக்குஅன்றென்றுதொடங்கி, அருள் - பிழைக்கின்றது என்று பேதுறுவன் இத்யந்வய:. (௩)

யாம்படியான, அரிஆய - நரஸிம்ஹமான, அம்மானே - ஸ்வாமியே! இது - இந்த ஶேஷத்வமாகிறஸ்வரூபமே, உறுவது - உத்தேஸ்யம், என்று - என்றறுதியிட்டு, உனக்கு - (தத்ப்ரதிஸம்பந்தியான) உனக்கு, ஆட்பட்டு - தாஸ்யாநுமதியைப்பண்ணி, நின்கண்-(ஸ்வாமியான)உன்பக்கல், பெறுவது - பலமாக லபிக்கவருகிறது, எதுகொல் - (ஸ்வரூபாநுரூபகைங்கர்யமோ, ஸம்ஸாரஸ்திதியோ?)எதாயிருக்கிறது? என்று—, பேதையேன் - (ஏதேனுமொன்றை நீ செய்தபடிகண்டிருக்கை ப்ராப்தமென்னும்) அறிவில்லாத என்னுடைய, நெஞ்சம் - நெஞ்சானது, மறுகல்செய்யும் - கலங்காநின்றது.

இ.—நாலாம்பாட்டில், நீர் இங்ஙன் பயப்படுகிறதென்னென்ன ? "தேவாதிகளுக்குஅரியையாகையாலே எனக்கும் அரியையாகிறாயோ?" என்று என்னெஞ்சு கலங்காநின்றதென்கிறார்.

[உறுவது இதுவென்று] - சீரியது அடிமைசெய்யுமது என்று. [உனக்காட்பட்டு]-உனக்கு அடிமைபுகுந்து. "ஸ்வரூபம் ஶேஷத்வபாரதந்த்ர்யம்" என்று உணர்ந்தால் சீரிய ப்ரயோஜநம் கைங்கர்யமிறே. [நின்கண்பெறுவதெது கொலென்று] - உன்பக்கல் பெறுவதேதோவென்று. ஸ்வரூபத்தையும் உணர்ந்து, "கைங்கர்யமே சீரியது" என்றும் அறிந்து, "ஈஶ்வரன் அநந்யப்ரயோஜநர்க்கு வேறொன்றைக் கொடுத்துவிடுவான் ஒருத்தனல்லன்" என்றும் அறியும் இவர், "உன்பக்கல் பெறுவதேதோ?" என்கைக்கு ஹேது என்னென்னில் ?—க்ரமத்திலேவந்து முகங்காட்டுகிறோம் என்று ஸம்ஸாரத்திருப்பே ஶேஷித்துவிடப் புகுகிறதோ ? என்த்வரையறிந்து சடக்கென முகங்காட்டுகிறாயோ ? என்கை. [பேதைபெந்நெஞ்சம் மறுகல்செய்யும்] - நாம் அபிஸந்தி பண்ணினபடியே பலிக்கும் என்னும் அறிவின்றிக்கேயிருக்கிற என்னெஞ்சு கலங்காநின்றது. இங்ஙன் கலங்குகைக்கு அடி யென்னென்னில் ? [வானவர் இத்யாதி] - "தேவா நாம் தாநவா நாஞ்ச" என்று ஸம்பந்யமொத்திருக்க தேவதாநவர்களுக்கும் என்றுமொக்க அறியவொண்ணாத நரஸிம்ஹமான ஸர்வேஶ்வரனே! ஆஶ்ரிதஸௌலப்பத்தோடு ஸர்வேஶ்வரத்வத்தோடு வாசியற அவர்களுக்கு அறியவரியனென்கை. இத்தால், 'ப்ரஹ்லாதனுக்கு எளியையான கோடியிலேயாகிறேனோ, தேவாதிகளுக்கு அரியையாகிற கோடியிலேயாகிறேனோ?' என்று அஞ்சாநின்றேன். தேவாஸுரவிமர்ஶம் பண்ணின ஸமநந்தரம் "நாம் எக்கோடியிலே யாகிறோமோ?" என்ற அர்ஜுநன் அஞ்சினாற்போலே அஞ்சாநின்றேன்.

ஈடு.—நாலாம்பாட்டு. 'நீர் இங்ஙன் பயப்படுகிறதேன்?' என்ன,—"தேவாதிகளுக்குஅரியையாகையாலே எனக்கும் அரியையாகிறாயோ?" என்று என்னெஞ்சுகலங்காநின்றதென்கிறார்.

[உறுவதிதுவென்று] - சீரியது அடிமைசெய்யுமிது என்று. [உனக்காட்பட்டு] - உனக்குஅடிமைபுகுந்து. "ஸ்வரூபம் ஶேஷத்வபாரதந்த்ர்யம்" என்றறிந்தால் சீரிய

நாலாம்பாட்டு.—உறுவது இத்யாதி. "என்னெஞ்சம்மறுகல்செய்யும், வானவர்தானவர்க்கென்றும் அறிவரிய" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - நீர்இங்ஙன் இத்யாதி. இந்தஅவதாரிகை, "மழைக்கன்று" இத்யாதிக்கு - எம்பெருமானார் நிர்வாஹத்தைப்பற்ற.

உறுவது - யோக்யமானது. சீரியதென்றபடி. சீரியதென்றறிந்தபடியென்னென்ன - **ஸ்வரூபம் இத்யாதி.** இவ்விடத்தில் - "**ஶூத்ராஹிதே நாநாமூலவைராஷாயுவ்யூவ**

ப்ரயோஜநம் கைங்கர்யமேயிறே. [நின்கண் பெறுவதெதுகோலென்று] - உன்பக்கல் பெறுவதுஏதோவென்று: ஸ்வரூபத்தையுமுணர்ந்து, "கைங்கர்யமே சீரியதும்" என்றறிந்து, 'ஈஶ்வரன்அநந்யப்ரயோஜநர்க்கு வேறொன்றைக்கொடுத்துவிடுவானொருவனல்லன்" என்றும் அறியும்இவர், "உன்பக்கல் பெறுவதெது?" என்கைக்கு ஹேதுவென்னென்னில்;—"க்ரமத்திலேசெய்கிறோம்" என்று ஸம்ஸாரத்திலிருப்பேபேக்ஷித்துவிடப்புகுகிறதோ? என் த்வரையறிந்து சடக்கென முகங்காட்டுகிறாயோ? என்கை. [பேதையேன் நெஞ்சம்மறுகல்செய்யும்] - "நாம் அபிஸந்தி பண்ணினபடியே ஃபலிக்கும்" என்னும் அறிவின்றிக்கேயிருக்கிற என்னெஞ்சம் கலங்காநின்றது. இங்ஙன் கலங்குகைக்குஅடியேன்? என்னில்,—நெஞ்சினுடைய விவேகஶூந்யதையிறே இதுக்கடி; நீதானும்இதுக்கடி. [வானவரித்யாதி] - "தேவாநாம் தாநவாநாம்" (தேவாநாம்தாநவாநாம்) அம்மானாயிருந்துவைத்து - ஸர்வேஶ்வரனாயிருந்துவைத்து, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் என்றுமொக்க அறியவரியையாய், அந்நிலைதன்னிலே ஒரு சிறுக்கனுக்கு உன்னை யுள்ளபடியறியலாயிருந்தாய்: அதில் நான் எக்கோடியிலே யாகிறேனோ? என்றறியாமை. தேவாஸுரவிபாகம்பண்ணின வநந்தரம், அர்ஜுநன் 'நான் எக்கோடியிலேயாகிறேனோ" என்றஞ்சினாற்போலே. பின்னை அவன் இதுக்குப்பண்ணின பரிஹாரமேன்? என்னில்;—தன் ஸௌலப்யத்தை ப்ரகாசிப்பிக்கையிறே. எளியோமாகையும் ஒருகோடியுண்டாக நீர் சொன்னீராகில், நீர்தாம் அக்கோடியிலேயுள்ளா ரொருவராய் இருந்ீராகில் உமக்கு இனி நாம் கைப்புகுந்தோமென்றிருக்கையமையாதோ? என்கையிறே. (ச)

---

*ஸுயா। ஸத்வத்தாரதஜ்ஞ்யாதிவ்யூபவாஸுஹஸ்யஸுவாயதே" என்று, பிள்ளையருளிச்செய்த வசநத்தை ஸம்வாதமாக அருளிச்செய்வர். "க்ரமத்திலேசெய்கிறோம்" இத்யாதி பரிஹாரவாக்யத்துக்குக்கருத்து - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு உதவினாற்போலே சடக்கெனவுதவுகிறாயோ? ஸ்ரீபரதாழ்வானுக்குப்போலே க்ரமத்திலே செய்கிறாயோ?" என்றருளிச்செய்வர். மேலுக்கவதாரிகை - நீதானும்இதுக்கடி என்று. இதுக்கு - விவேகஶூந்யதைக்கு. "அம்மான்" என்றத்தைப்பற்ற - தேவாநாம இத்யாதி. "தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்। ஸர்வதா சரணத்வந்த்வம்" இத்யாதி. எக்கோடியிலே யாகிறேனோ வென்றது - தேவாஸுரகோடியிலே யாகிறேனோ; ப்ரஹ்லாதகோடியிலே யாகிறேனோ? என்றபடி. ஆழ்வாருடைய ஸம்ஶயம் விளம்பாவிளம்ப கோடிகமாகையாலும், அர்ஜுநனுடையஸம்ஶயம் தேவாஸுரகோடிகமாகையாலும், ஸம்ஶயமாத்ரத்திலே த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் - தேவாஸுர இத்யாதி. இவ்விடத்திலே - "த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச। தைவீ ஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா। விஷ்ணுபக்திபரோ தைவோ விபரீதஸ்ததாஸுர:" என்று அவர்கள் ஸ்வரூபத்தைச் சொல்லி, இதுதன்னை, 'மஹாத்மாநஸ்து மாம் பார்த்த' இத்யாதியாலும், 'ஆஸுரீம் யோநிமாபந்நா:' இத்யாதியாலும்விஸ்தரித்து, 'மாஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ' என்று பரிஹரிப்பதும்செய்தான்" என்றருளிச்செய்வர். இதுக்கு - "மறுகல்செய்யும்" என்றதுக்கு. "உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளம்" என்கிற ஏழாம்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - தன் ஸௌலப்யத்தை இத்யாதி. விவரணம் - எளியோம் இத்யாதி. 'சொன்னீராகில்' என்றவநந்தரம், "நரசிங்கமதாயவுருவே - உகந்தேயுன்னையுள்ளும்" என்றுநீரே சொல்லுகையாலே என்றுகூட்டுவது. 'அம்மானாய்வைத்து - வானவர்தானவர்க்கென்றும் அறிவதரியையாய் அரியானவனே - உறவிது' என்றுதொடங்கி, 'மறுகல்செய்யும்' என்றந்வயம். (ச)*

## ஐந்தாம் பாட்டு.

அரியாயவம்மானையமரர்பிரானைப்
பெரியானைப்பிரமனைமுன்படைத்தானை
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற
கரியான்கழல்காணக் கருதுங்கருத்தே.

**ஆ.**—(அரியாய)- உம்முடைய அபேக்ஷிதந்தானவதென்னில்,—அண்டாதிபதியான ப்ராஹ்மாவுக்கும் காரணபூதனாகையாலே ஸர்வேச்வரனாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், ஸகலஜநமநோநயநஹாரி திவ்யஸௌந்த்ர்யவிசிஷ்டனாய், ஆச்ரிதர்க்காத்மதாநம்பண்ணுகைக்காகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற கரியான் கழல் காண ஆசைப்படாநிற்கு மென்னெஞ்சு என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஸர்வேச்வரனாய்வைத்து ஆச்ரிதஸம்ச்லேஷைகஸ்வபாவனானவன் கழல்காணக் கருதும்என்னெஞ்சம் என்கிறார்.

[அரியாயவென்ற இப்பாட்டுக்கு]- அபரிச்சேத்யனாய் அயர்வறுமமரர்கள்அதிபதியாயிருந்துவைத்து ஜகத்ஸ்ருஷ்டிக்கு உறுப்பாக ப்ராஹ்மாவை முதலிலே உண்டாக்குவதுஞ்செய்து ஆச்ரிதர்க்குஅத்யந்த ஸுலபனாய் ஆச்ரித ஸம்ச்லேஷைகஸ்வபாவனாய் நிரதிசய ஸௌந்தர்யனானவன் திருவடிகளைக்காணவேணுமென்று நினையாநின்றது என்கருத்து.

ப. அநந்தரம், காரணத்வாதி குணயோகத்தையுடையனான உன் திருவடிகளைக் காணவேணுமென்று என்னுடைய நெஞ்சானது நினையாநின்றதென்கிறார்.

அரி ஆய - விரோதிநிரஸநசீலனான, அம்மானை - ஸ்வாமியாய், அமரர்-நிரஸ்தஸமஸ்தவிரோதிகளான ஸூரிகளுக்கு, பிரானை - போகப்ரதனாய், பெரியானை - அவர்களாலும் பரிச்சேதித்து அநுபவிக்கவொண்ணாத பெருமையையுடையனாய், (முமுக்ஷுஸிஸ்ருக்ஷையாலே ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்கு), முன்-முற்படவே, பிரமனை-ப்ராஹ்மாவை, படைத்தானை - உத்பாதித்தவனாய், (உத்பந்நஜந்துரக்ஷணார்த்தமாக,) வரி - வரியையும், வாள் - ஒளியையுமுடைத்தான, அரவின் அணை - திருவரவணையிலே, பள்ளிகொள்கின்ற- பள்ளிகொண்டருளுகிற, கரியான் - (படுக்கைக்குப் பரபாகமான) ச்யாமளவிக்ரஹத்தையுடையவனை, கழல் - திருவடிகளிலே, காண - காணவேணுமென்று, கருத்து - புத்தியானது, கருதும் - நினையாநின்றது. கரியானையென்கிற இரண்டாம்வேற்றுமை எஞ்சிக்கிடக்கிறது. கரியான்றனையென்றும் பாடஞ்சொல்லுவர்.

**இ.**—அஞ்சாம்பாட்டில், நாம் எளியோமான கோடியிலேயன்றோ? நீர், உமக்குப் பேறு கைபுகுந்திருக்க இங்ஙன் பதறுகிறதென்? என்ன,—என்னெஞ்சு காண்கையிலே பதறாநின்றதென்கிறார்.

[அம்மானை] - ஸர்வாதிகனானவனை. [அமரர்பிரானை] - நித்யஸூரிகளுக்குத் தன்னை உபகரித்துக் கொண்டிருக்கிறவனை. [பெரியானை] - அவர்களுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாதவனை. [பிரமனை முன்படைத்தானை] - ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்காக ப்ராஹ்மாவை முதலிலே உண்டாக்கினவனை. அரியாயவென்று கீழோடே கூட்டுவது.

ஸ்ருஷ்டமான ஜகத்திலே ஆஶ்ரிதார்த்தமாகத் தன்னை அழியமாறிவந்து அவதரித்தவனை. [வரிவாள் இத்யாதி] - ஆஶ்ரிதர்க்கு உதவுகையன்றிக்கே தத்ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனானவனை. [வரிவாளரவு]-வரியையும் ஒளியையுமுடைய அரவு. [கரியான்] - வெளுத்த திருநிறத்தையுடைய திருவநந்தாழ்வான்மேலே காளமேகம் சாய்ந்தாற்போலேயாயிற்று கண்வளர்ந்தருளுவது. [காணக்கருதுங் கருத்தே] - காண்கையிலே த்வரியாநின்றது என் மநஸ்ஸு. படுக்கைக்கு பராபாகமானவடிவும் அதுக்குப் பராபாகமான திருவடிகளும் இத்தையாயிற்று ஆசைப்படுகிறது.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நாம் எளியோமானகோடியிலேயன்றோ? உமக்குப் பேறு கைபுகுந்திருக்க நீர இங்ஙன் படுகிறதென்னென்ன,—என்னெஞ்சுகாண்கையிலே த்வரியாநின்றதென்கிறார்.

[அம்மானை] - ஸர்வேஶ்வரனை. [அமரர்பிரானை] - நித்யஸூரிகளுக்குத் தன்னைக்காட்டிக்கொடுத்துஅநுபவிப்பிக்கும் உபகாரகனை. [பெரியானை] - அவர்களுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன்னதீநமாய், தன்னை யவர்களால் பரிச்சேதிக்கவொண்ணாதவனை. [பிரமனைமுன்படைத்தானை] - சதுர்முகனுக்கு ஜநகனாயுள்ளவனை, அரியாய வென்று - கீழேகூட்டுவேது. ஸ்ருஷ்டமானஜகத்திலே, ஆஶ்ரிதார்த்தமாக அவன்ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தன்னை யழியமாறிவந்து அவதரித்தவனை. [வரிவாளித்யாதி] - ஆஶ்ரிதர்க்கு உதவுகையன்றிக்கே, தத்ஸம்ஶ்லேஷஸ்வபாவனாயுள்ளவனை. [வரிவாளரவு] - வரியையும் ஒளியையுமுடைய அரவு. வரி - அழகு. [கரியான்] - வெளுத்ததிருநிறத்தையுடைய திருவநந்தாழ்வான்மேலே ஒருகாளமேகம் சாய்ந்தாற்போலேயாயிற்றுக் கணவளர்ந்தருளுவது. [காணக்கருதுங்கருத்தே] - காண்கையிலே த்வரியாநின்றது, என மநஸ்ஸு. படுக்கைக்குப் பரபாகமானவடிவும், அதுக்குப் பரபாகமான திருவடிகளும் இத்தையாயிற்றுக்காண ஆசைப்படுகிறது. (௫)

---

அஞ்சாம்பாட்டு.—அரியாய இத்யாதி. "அரியாய" என்றத்தையும், "காணக்கருதும் கருத்து" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை - நாம்எளியோமான இத்யாதி.

கருத்து - நெஞ்சு. கீழேகூட்டுவதென்றது - "பிரமனைமுன்படைத்தானை" என்றதுக்குப் பிற்பாடு கூட்டுவதென்றபடி. "அரியாய" என்றவிசேஷணத்துக்கர்த்தம் - ஸ்ருஷ்டமான இத்யாதி. 'ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே' என்றவிடத்திலே - "ப்ரஹ்லாதம்ஸகலாபத்ப்யோ யதாரக்ஷிதவாநுஹரி: । ததாரக்ஷதியஸ்ஸர்வ்ருணோதிசரிதம்ஸதா" என்று ப்ரஸாதிப்பர். "அரியாய" என்றவநந்தரம், "வரிவாளரவினணை" இத்யாதிக்குஸங்கதி - ஆஶ்ரிதர்க்கு இத்யாதி. வரி - அவயவஸௌந்தர்யம். வாள் - ஸமுதாயஶோபை. "அரவினணைப்பள்ளிகொள்கின்றகரியான்" என்றத்தால் பலித்தபாவம் - வெளுத்த இத்யாதி. "கரியான்" என்றத்தைக்கடாக்ஷித்து - படுக்கைக்கு இத்யாதி. அதுக்கு - வடிவுக்கு. கரியானையும் கழலையும்காண - கருத்து - கருதுமென்றந்வயமாதல்; அன்றிக்கே, அம்மானாய், அமரர்பிரானாய், பெரியானாய் பிரமனைமுன்படைத்தானாய் - அரியானாய் - வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற கரியானுடைய கழலைக்காண - கருத்து - கருதுமென்றந்வயமாதல்; இந்தயோஜனையில், த்விதீயை வாக்யாலங்காரம். (௫)

## ஆறாம் பாட்டு.

கருத்தே!உன்னைக்காணக்கருதிஎன்னெஞ்சத்து
இருத்தாகவிருத்தினேன் தேவர்கட்கெல்லாம்
விருத்தா!விளங்குஞ்சுடர்ச்சோதியுயர
தொருத்தா! உன்னையுள்ளுமென்னுள்ளமுகந்தே.

ஆ—(கருத்தே.) - இப்படி நான் உன்னைக்காண இச்சிக்குமளவில், திருநாட்டிலிருக்கும்படியேவந்து என்னெஞ்சிலே புகுந்தருளின உன்னை என்னெஞ்சு உகந்து புஜியாநின்றதென்கிறார்.

ஒ—ஆறாம்பாட்டில், தாம் காண ஆசைப்படுமளவிலே எம்பெருமான் தம்முடைய திருவுள்ளத்திலே வந்து புகுந்தருளினவாறே நெஞ்சு உகந்தநுபவிக்கிறபடியை அருளிச் செய்கிறார்.

[கருத்தே என்று தொடங்கி]-எனக்கு மிடுக்கானவனே! உன்னைக்காணவேணுமென்று அல்பம் மநோரயித்தேன். இனி ஒருகாலும் போகாதபடியாக என்னெஞ்சிலேயிருத்தினேனென்றுமாம். [தேவர்கட்கெல்லாம்விருத்தாவிளங்கும் சுடர்ச்சோதி உயரத்தொருத்தா] - அயர்வறுமமரர்களதிபதியாய் விலக்ஷணதேஜோரூபமாய் உச்ச்ரிதமான திருநாட்டிலே எழுந்தருளியிருந்தருளின அத்விதீயனானவனே!

ப.—அநந்தரம், நான் மநோரயித்தபடியே, பரமபதநிலயனாய் ஸூரிஸேவ்யனான உன்னை என்னெஞ்சானது கண்டு அநுபவியாநின்றதென்கிறார்.

கருத்தே - நான் தளராதபடி எனக்கு வலகரனைக்கொண்டு நெஞ்சுவலியானவனே! உன்னைக் காண - உன்னைக் கண்டநுபவிக்கவேணுமென்று, கருதி - மநோரயித்து, என் நெஞ்சத்து - என் நெஞ்சுக்குள்ளே, இருத்தாக - எழுந்திராதபடி, இருத்தினேன் - இருத்திக்கொண்டேன்; தேவர்கட்கெல்லாம் - ஸூரிகளுக்கெல்லாம், விருத்தா - மூப்பானசேஷியாய், விளங்கும் - உஜ்ஜ்வலமான, சுடர் - ப்ரபையையுடைத்தாய், சோதி - தேஜோமயமாய், உயரத்து - ("விஸ்வதஃப்ருஷ்டேஷு ஸர்வதஃப்ருஷ்டேஷு" என்று) ஸர்வோத்தரமான பரமபதத்திலே, ஒருத்தா - அத்விதீயனாயிருக்குமவனே! என் - என்னுடைய, உள்ளம் - அந்தஃகரணமானது, உன்னை - (நிரதிசய ப்ராப்யபூதனான)உன்னை, உகந்து - அத்யந்தப்ரேமவிசிஷ்டமாய்க்கொண்டு, உள்ளும் - அகவாயிலேயநுபவியாநின்றது.

இ—ஆறாம்பாட்டில், காண ஆசைப்பட்ட வளவிலே அவன் தம்முடைய திருவுள்ளத்திலே புகுந்தருள, தம்முடைய நெஞ்சு உகந்தநுபவிக்கிறபடியை அருளிச் செய்கிறார்.

[கருத்தேயித்யாதி] - எனக்குமிடுக்கானவனே! உன்னைக்காண ஆசைப்பட்ட வளவிலே முகங்காட்டினாய். இவ்விஷயத்தை லபிக்கைக்கு ருசியே அமையுமென்கை. "கண்ணே உன்னைக்காணக்கருதி" என்றார் கீழே; "கருத்தே உன்னைக்காணக்கருதி" என்றார் இங்கே. [என்னெஞ்சத்திருத்தாக விருத்தினேன்] - "மறுகல்செய்யும்" என்கிற நெஞ்சிலே பரமபதத்திலிருக்குமாபோலே யிருத்தினேன். ஐஹவத்கயாமங்யாஹூத

மான நெஞ்சினேறயிது. [தேவர்கட்கெல்லாம் விருத்தா] - நித்யஸூரிகளுக்கெல்லாம் நிர்வாஹகனானவனே! தமிழர் கிழவனென்றும் கிழத்தியென்றும் தலைமகனையும் தலைமகளையுஞ் சொல்லுவர்கள். [விளங்குமித்யாதி] - மிக்கபுகரையுடைய தேஜஸ்ஸை வடிவாகவுடைத்தாய் ஸர்வோத்க்ருஷ்டமான பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற அத்தியனே! [உன்னையுள்ளும் என்னுள்ள முகந்தே] - சடக்கென முகங்காட்டின உன்னைக் கண்டு கலங்கின என்னெஞ்சம் உகந்தே அநுபவியாநின்றது.

ஈடு.—ஆறாம்பாட்டு. காண ஆசைப்பட்டவளவிலே அவன் தம்முடைய திருவுள்ளத்திலேபுகுந்தருள, தம்முடையநெஞ்சு உகந்தநுபவிக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

[கருத்தேயுன்னைக்காணக்கருதி] - எனக்கு மிடுக்கான உன்னைக் காண ஆசைப்பட்டவளவிலே முகங்காட்டினாய்; இவ்விஷயத்தை லஹிக்கைக்கு ருசியேயமையுமென்கை. "கண்ணேயுன்னைக்காணக்கருதி" என்றார் - கீழ்; "கருத்தேயுன்னைக்காணக் கருதி" என்றார் - இங்கே. அநுபபத்தியைக்கொண்டு அர்த்தாபத்தியாலே கல்பித்தல், அநுமாநத்தாலே அதீந்த்ரியமென்றறிதல்செய்யும் வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று மநோரதிக்கிறார். இவர்க்குக் கண்ணுங் கருத்தும் அவனாயிற்று. [என்னெஞ்சத்திருத்தாக விருத்தினேன்] - * மறுகல்செய்தநெஞ்சிலே, * மறுகலிலீசனைப் பரமபதத்திலேயிருக்குமாபோலே யிருத்தினேன். "இவர்பக்கல் இசைவுபெற்றிலோம்" என்றிருக்கிறவன் இத்தனை இசைவுபெற்றால் பின்னைத் தள்ளிக்கதவடைத்தாலும் போகானிறே. "யதீஹஸாரஷோ

---

ஆறாம்பாட்டு.—கருத்தே இத்யாதி. "என்னெஞ்சத்திருத்தாகவிருத்தினேன் - உன்னையுள்ளுமென்னுள்ளமுகந்து" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - காண ஆசைப்பட்ட இத்யாதி.

கருத்து - மிடுக்கு. "கருதி" என்றது - முகங்காட்டினதுக்கும் உபலக்ஷணமாதல்; "இருத்தாகவிருத்தினேன்" என்றத்தைக்கடாக்ஷித்து - முகங்காட்டினாய் என்கிறாராதல். "ஆசைப்பட்டவளவிலே முகங்காட்டினாய்" என்றத்தால் பலிதம் - இவ்விஷயத்தை இத்யாதி. அஜ்ஞாநாஶக்திகளை முன்னிட்டுப் பெறவிருக்கிற எனக்கு, அவனுடைய ஜ்ஞாநஶக்திகளே பேற்றுக்கு பர்யாப்தமென்னுமிடந்தோன்ற அருளிச்செய்கிறார் - கண்ணே இத்யாதி வாக்யத்வயத்வயத்தாலே, 'கருத்தேயுன்னைக்காணக்கருதியென்றாரிங்கே' என்றவநந்தரம், 'இவர்க்குக்கண்ணும் கருத்தும் அவனாயிற்று' என்றந்வயித்துக்கொள்வது. ஜ்ஞாநஶக்திகளிரண்டும் அவனாயிற்றென்றபடி. த்வந்யர்த்தம் - "கண்ணும்கருத்தும் நன்றாயிருக்கவேணும்" என்று லௌகிகவார்த்தை. "உன்னைக்காணக்கருதி" என்கையாலே - ஸாதுஷ்ப்ராபனான ஈஶ்வரனைக் காணவாசைப்படுகிறானென்னுமிடந் தோன்றுகிறதென்கிறார் - அநுபபத்தியை இத்யாதி. அநுபபத்தியைக்கொண்டு அர்த்தாபத்தியாலே கல்பித்தலாவது - மஹீமஹீதராதி ரூபேண வேறொருவரால் செய்யமுடியாத விசித்ரகார்யங்களைக்கண்டு, "இவையெல்லாம் உண்டாக்குகைக்கு யோக்யமான விசித்ரஜ்ஞாநஶக்திகளையுடையானொருவன் கர்த்தாவாகவேணும்" என்று ஓரீஶ்வரனைக் கல்பிக்கை. "த்ருஷ்ட

[illegible]"

இதி அர்த்தாபத்திலக்ஷணம். அர்த்தாபத்திவாதீ - ப்ரபாகரன். அநுமாநத்தாலே அதீந்த்ரியனென்றறிகையாவது - யுக்தியாலே இந்த்ரியங்களுக்கு அப்பாற்பட்டிருப்பானொருவன் கர்த்தாவாகவேணுமென்றறிகை. மஹீமஹீதராதி நிஷ்டகார்யத்வாநுமாநத்தாலே தந்நிர்மாணாநுகுணவிசித்ரஜ்ஞாநஶக்திகனாய் நிரவயவனான ஈஶ்வரனைக் காரணத்வேந கல்பிக்குமவன் - தார்க்கிகன். "இருத்தாக" என்றதுக்கு - ஸ்த்தாவரமாகவென்று விவக்ஷித்தர்த்தம் - மறுகல் இத்யாதி. ஸர்வாதிகன் பரமபதத்திலிருக்குமாபோலே இவர்திருவுள்ளத்திலேயிருக்கக் கூடுமோவென்ன - இவர்பக்கல் இத்யாதி. ஸர்வாதிகன் இப்படி ஸாலஹனான இடமுண்டோவென்ன - யதீஹ இத்யாதி. "யதீஹஸ

[illegible]'' (யதீஹஶரதோநேகாஸ்த்வயாஸார்த்தமஜீந்திதே'', ''இஹ வத்ஸ்யாமிஸௌமித்ரேஸார்த்தமேதேநபக்ஷிணு) — ஐயர் கண்வட்டத்திலே வர்த்திக்கவேணுமென்று நினைத்திருந்தோம்; நடுவிலாய்ச்சிக்கு ப்ரியஞ்செய்யவேண்டுகையாலே அதுசெய்யப்பெற்றிலோம்; இனி, இவர் சிறகின்கீழேயாகிலும் வர்த்திக்கப்பாராநின்றோமென்றாரிறே அன்றிக்கே, [இருந்தாக]-மித்ரஹாவமேகிடீர் என்பக்கலுள்ளதென்னுதல். [தேவர்கட்கெல்லாம் விருத்தா] — ''இனியவ்வருகில்லை'' என்னும்படி உயர்ந்தவர்களுக்கும் அவ்வருகானவனே! தலைமகனையும் தலைமகளையும் ''கிழவனும்கிழத்தியும்'' என்று தமிழர் சொல்லக்கடவர்களிறே. அவளையும் ''மலர்க்கிழத்தி'' என்றார்களிறே. [விளங்கும் இத்யாதி] - ''[illegible]'' (அதயததஃபரோதிவோ ஜ்யோதிர்த்தீப்யதே) என்கிறபடியே, எப்போதுமொக்க விளங்காநிற்பதாய், நிரவதிகதேஜோரூபமாயிருக்கிற பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற அத்விதீயனே! ப்ரகாரத்திலேயிறே நாநாத்வமுள்ளது; ப்ரகாரி ஒருவனேயிறே. [உன்னையித்யாதி] - சடக்கென முகங்காட்டின உன்னை, கண்டு கலங்கின என்னெஞ்சம் உகந்தேயநுபவியாநின்றது. ''தேவர்கட்கெல்லாம்விருத்தா, விளங்குஞ் சுடர்ச்சோதி உயரத்தோருத்தா'' - என்று சொல்லுகிற இவ்விசேஷணங்களுக்குக் கருத்து-மேலானார்க்கும்மேலாய்ப்பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து அவர்களை யநுபவிக்குமாபோலே தன்னை யநுபவிப்பிக்க அநுபவித்த என்னெஞ்சம் ப்ரீதமாகாநின்றதென்கை.

---

## ஏழாம் பாட்டு.

---

உகந்தேஉன்னை உள்ளும் என்னுள்ளத்துஅகம்பால்
அகந்தானமர்ந்தே இடங்கொண்டஅமலா!
மிகுந்தானவன்மார்வகலம் இருகூறு
நகந்தாய் நரசிங்கமதாயவுருவே.

---

[illegible] இதி சித்ரகூடே வீதாம் ப்ரதிராமஃ. ''[illegible] [illegible]'' இதி பஞ்சவட்யாம் ராமஃ. அண்டஜேநவென்னுதே, ''பக்ஷிணு'' என்றதுக்குபாவம் - ஐயர் இத்யாதி. ''இருந்தாக'' என்றதுக்கு - இருக்கவேணுமென்கிற நினைவுமாத்ரத்தாலேயென்றர்த்தாந்தரம் - மித்ர பாவமே இத்யாதி. விருத்தா - வ்ருத்தா என்றபடி. ''விருத்தன்'' என்று - ப்ரயோகமுண்டோவென்ன - தலைமகனையும் இத்யாதி. தலைமகளை ''கிழத்தி'' என்றவிடமுண்டோவென்ன - அவளையும் இத்யாதி. கிழத்தி - கிழவி. ''பூதலக்கிழத்தி'' என்னவும் கடவதிறே. ''[illegible]'' இத்யாதி சாந்தோக்யே. ''[illegible]'' என்றந்வயம். பரஃ - பரஸ்தாத் என்றபடி. இந்த்ரப்ரஹ்மலோகாதிகளுக்கெல்லாம் மேலாயிருக்கிற வைகுண்டரூபமான யாதொருஜ்யோதிஸ்ஸு விளங்காநின்றது என்று இந்தஶ்ருதிக்கு இங்கிப்படி அர்த்தம் விவக்ஷிதம். பாஷ்யத்திலே, ஜ்யோதிஶ்ஶப்தநிர்த்திஷ்டம் - பரம்ப்ரஹ்மமென்றர்த்தம். ''விளங்கும்'' என்றவர்த்தமாநார்த்தம் - எப்போதுமொக்க என்றது. ''சுடர்ச்சோதி'' என்று-மீமிசைச்சொல்லாய், நிரவதிகதேஜோரூபமாய் என்கிறது ஒருவனேவுள்ளது நித்யஸூரிகளில்லையோவென்ன - ப்ரகாரத்திலே இத்யாதி. 'என்னுள்ளம் - உன்னை - உகந்தே - உள்ளும்' என்றந்வயம். (கூ)

ஆ.—(உகந்தே.) - என்னுள்ளேபுகுந்தருளின உன் அழகையும் செயலையும் என்னெஞ்சு உகந்துகொண்டு அநுஸந்திக்க, இதுகாரணமாக நீ மிகவும் ப்ரீதனாய், உன்னைக்காணப்பெறுமையாலே கலங்கின என்னெஞ்சு தெளியும்படி என்னெஞ்சை எற்றைக்கும் இடமாகக் கொண்டருளினாய்! என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய ஆர்த்தியைத் தீர்த்தருளினாற்போலே தம்முடைய ஆர்த்தியை எம்பெருமான் தீர்த்தருளினபடியை அநுஸந்தித்து ப்ரீதராய் அவனை ஏத்துகிறார்.

[உகந்தேயென்று தொடங்கி] - ப்ரீதியோடே உன்னை அநுபவியாநின்றுள்ள ஹ்ருதயத்தினுடைய உள்ளுக்குள்ளே நிர்மலனாய்வைத்து நிர்ஹேதுகமாக அத்யபிநிவேஶத்தைப்பண்ணி வர்த்தித்தருளுகிறவனே! [மிகுந்தானவனென்று தொடங்கி] - கிளர்ந்திருந்துள்ள ஹிரண்யனுடைய அகன்றமார்வை இருகூறும்படி பண்ணவல்ல நகத்தையுடையையுமாய், ஆர்த்தருடைய ஆர்த்தியைத் தீர்க்கும் நரஸிம்ஹரூபியானவனே! நகத்தாயை நகந்தாயென்று மெல்லிக் கிடக்கிறது.

ப.—அநந்தரம், ஹ்ருதயனாய்க்கொண்டு என்னெஞ்சிலேயிருந்து விரோதிநிரஸந ஶீலனான உன்னை என்னகவாய் உகந்தநுபவியாநின்றதென்கிறார்.

அகந்தான் - அகவாயிலே, அமர்ந்து - பொருந்தி, இடங்கொண்ட - இடங்கொண்டு (அதுதானே ப்ரயோஜநமாக)இருந்த, அமலா-உஜ்ஜ்வலஸ்வபாவனாய், (ப்ரபலமான துர்மாநத்தை யழித்திருந்தமைக்கு ஸூசகமென்னலாம்படி), மிகும் - வரபலபுஜபலங்களாலேமிக்க, தானவன் - அஸுரனான ஹிரண்யனுடைய, மார்வு - மார்பத்திலே, அகலம் - பெரியவிடத்தை, † இருகூறு - இருகூறும்படியாக, நகம் - நகத்தை, தாய் - தாவும்படிபண்ணின, நரசிங்கமதாய - நரஸிம்ஹமான, உருவே - ரூபத்தையுடையவனே! என் உள்ளத்து-என் உள்ளத்தின், அகம்பால் - அகவாயானது, உன்னை உகந்தே, உள்ளும் - அநுபவியாநின்றது.

இ.—ஏழாம்பாட்டில், தூணிலே தோற்றி ப்ரஹ்லாதனுடைய ஆர்த்தியைத் தீர்த்தாற்போலே தம்மார்த்தியைத் தீர்த்தருளினபடியை அநுஸந்தித்து ஏத்துகிறார்.

[உகந்தே உன்னை உள்ளும்] - பிரிந்துக்லேஶத்தோடே தலைக்கட்டும் உகப்பன்றிக்கே ஏகரூபமாக உன்னை அநுபவிக்கும்படி. [என்னுள்ளத்து] - எண்ணே கொண்ட சிந்தை என்கிற மநஸ்ஸிலே. [அகம்பாலகந்தான்] - உள்ளுக்குள்ளே. "உள்ளுளாவி" என்னுமாபோலே கமர்பிளந்தவிடமெங்கும் மறுநனையும்படி. [அமர்ந்தே] - தன்பேறாக அத்யபிநிவேஶத்தைப்பண்ணி. [இடங்கொண்ட] - அவகாசமுள்ளவிடமெங்குந் தானேயாம்படி நிறைந்த. [அமலா] - இவ்விருப்புக்கு அவ்வருகு ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசித்தன்றிக்கே ஒரு ஹேதுவைப் பற்றியுமன்றிக்கேயிருக்கை. "எண்ணே கொண்ட சிந்தையதாய் நின்றியம்பும்" என்கிறத்தை ஸாபேக்ஷமாக நினைத்திருக்கிறிலர். [மிகுந்தானவன்] - ப்ராதிகூல்யத்தில் ஓரளவில்நில்லாதவன். தன்னை யில்லைசெய்கையன்றிக்கே தன்னுயிர்நிலையிலே நலிந்தவன்: "ஜ்யோதீம்ஷி தேவ" என்னக்கடவதிறே. [மார்வகலமிருகூறு நகந்தாய்] - அகன்றமார்வானது இரண்டுகூறும்படி பண்ணவல்ல நகத்தையுடையவனே! நகத்தாயென்ற வல்லொற்றை மெல்லொற்றாக்கிக் கிடக்கிறது. [நரசிங்கமதாயவுருவே] - ஸஜாதீயரூபமான வடிவை உடையவன் தன்னை இங்ஙனே யழிய மாறுவதே!

என்கிறார். இத்தால் - என்னெஞ்சு உகக்கும்படி தூணிலேவந்து தோற்றினாற்போலே சடக்கென முகங்காட்டி என்னை அநுபவிப்பித்தானென்கிறார்.

ஈடு —ஏழாம்பாட்டு. தூணிலேதோற்றி ப்ரஹ்லாதனுடைய ஆர்த்தியைத்தீர்த்தாற்போலே தம் ஆர்த்தியைத் தீர்த்தபடியை யநுஸந்தித்து ஏத்துகிறார்.

[உகந்தேஉன்னைஉள்ளும்] - பிரிந்து க்லேசத்தோடே தலைக்கட்டும் உகப்பன்றிக்கே, ஏகரூபமாக உன்னையநுபவிக்கும்படி. [என்னுள்ளத்து] - * எண்ணே கொண்ட சிந்தையுடைத்தான என்உள்ளத்து. [அகம்பால்அகந்தான்]- உள்ளுக்கும் உள்ளே. "உள்ளுளாவி" என்னும்படியே கமர்பிளந்த விடமெங்கும் மறு நனையும்படி. [அமர்ந்தே] - தன்பேறாக அத்யபிநிவேசத்தைப்பண்ணி. [இடங்கொண்ட] - அவகாசமுள்ள இடமெங்கும் தானேயாம்படி நிறைந்த. [அமலா] - இவ்விருப்புக்குஅவ்வருகு ஒருப்ரயோஜநத்தைக்கணிசித்தன்றிக்கே,ஒருஹேதுவைப்பற்றியும் அன்றியேயிருக்கை "எண்ணேகொண்ட சிந்தையதாய்" என்றத்தை ஸாதநமாக நினைத்திருக்கிறிலர். [மிகுந்தானவன்] - ப்ராதிகூல்யத்தில்ஓரளவில் நில்லாத ஊநவன். தன்னை யில்லைசெய்கையன்றிக்கே, தன்னுயிர்நிலையிலே நலிந்தவன்; "ஜ்ஞாநீத்வாத்மைவ" (ஜ்ஞாநீத்வாத்மைவ) என்னக்கடவதிறே. [மார்வகலமிருகூறுநகந்தாய்] - அகன்றமார்வானது இரண்டு கூறும்படி பண்ணவல்ல நகத்தையுடையவனே! நகத்தாயென்கிற வல்லொற்றை மெல்லொற்றாக்கிக்கிடக்கிறது. [நரசிங்கமதாயவுருவே] - "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்கிற விக்ரஹத்தையே இப்படிகொள்வது ! இரண்டவேடிவைக்கோள்வதே! இத்தால்சொல்லிற்றாயிற்றென்னேன்னில்; - ஆஸ்ரிதருடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலேவந்து தோற்றுமவனுகையாலே, தூணிலேதோற்றினாற்போலேவந்துதோற்றி, ஹ்ருதயாவகாசமுள்ளவிடமெங்கும் புகுந்து, கமர்பிளந்தவிடமெங்கும் நீர்பாய்ச்சுமாபோலே, நிரம்ப என்னையநுபவிப்பித்தானேன்கிறார். (எ)

---

ஏழாம்பாட்டு.—உகந்தே இத்யாதி. "இருகூறுநகந்தாய் நரசிங்கமதாயவுருவே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - தூணிலே இத்யாதி.

ஏவகாரார்த்தம் - பிரிந்து இத்யாதி. விவரணம் - உள்ளுளாவி இத்யாதி. "அமலா" என்றதுக்குபாவம் - இவ்விருப்புக்கு இத்யாதி. அவ்வப்ப்ரயோஜநமாகவும், நிர்ஹேதுகமாகவுமிருக்கை அமலத்வமாவது என்றபடி. "ஒருஹேதுவைப்பற்றியன்றிக்கே" என்கிறதென்? "எண்ணேகொண்டசிந்தையதாய்" என்றது ஸாதநமன்றோ? என்ன - எண்ணேகொண்ட இத்யாதி. 'மிகுதி' எத்தாலேயென்ன - ப்ராதிகூல்யத்தில் இத்யாதி. எதத்விவரணம் - தன்னை இத்யாதி. தானவன் - ஊநவன், ப்ரஹ்லாத னுயிர்நிலையோமென்ன - ஜ்ஞாநீது இத்யாதி. "உதாராஸ்ஸர்வஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்" இதிகீதாயாம்(எ-கஅ),நகத்தாயென்றாலன்றோ, நகத்தையுடையவனென்னக் காட்டுமென்ன - நகத்தாயென்கிற இத்யாதி. ஹார்த்தபாவம் - ஸதைகரூப இத்யாதி. "ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே" இதிஸ்ரீவிஷ்ணுபுராணே. "நரசிங்கம்" என்றதுக்குபாவம்-இரண்டு இத்யாதி. பாட்டால்பலித்தபாவம் - இத்தால் இத்யாதி. இத்தால் என்றது - இப்பாட்டாலென்றபடி. 'மிகுந்தானவன்' என்று தொடங்கி; 'உருவே - உகந்தேயுன்னையுள்ளும்படி யென்னுள்ளத் தகம்பால்' என்று தொடங்கி, 'ஏத்துகிறார்' இத்யந்வய: (எ)

## எட்டாம் பாட்டு.

உருவாகியஆறுசமயங்கட்கெல்லாம்
பொருவாகிநின்றானவன்எல்லாப்பொருட்கும்
அருவாகியஆதியைத்தேவர்கட்கெல்லாம்
கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேனே.

ஆ.—(உருவாகிய.)-வேதபாஹ்யமான ஷட்ஸமயங்களில் நான் புகாதபடி பரிஹரித்து, ஸர்வாத்மபூதனான தன்னை எனக்குக்காட்டியருளினவனை நான் காணவும் பெற்றேனென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், எம்பெருமானைக் காணப்பெற்றேனென்று இனியராகிறார்.

[உருவாகியவென்று தொடங்கி] - ஆபாத ப்ரதீதியில் "இவையும் சில தர்சனமோ" என்று தோற்றுகிற பாஹ்யமான ஷட்ஸமயங்களாலும் அவிசால்யமான படியையுடையனாய் ஸகலபதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய் ப்ரதானனுமானவனை. [தேவர்கட்கென்று தொடங்கி] - ப்ரஹ்மாதிகளுக்குங்கூட காரணபூதனானவனை.

ப.—அநந்தரம், ஸர்வாந்தராத்மாவாய், ஸர்வகாரணபூதனாய், ஸர்வஸகலஜ்ஞனான உன்னைக் காணப்பெற்றேனென்கிறார்.

உருவாகிய - ஆபாதப்ரதீதியிலொன்றுபோலே யிருக்கக்கடவதான, ஆறுசமயங்கட்கெல்லாம - சார்வாக பௌத்த க்ஷபண வைசேஷிக ஸாங்க்ய பாசுபதரூபமான பாஹ்யஸமயங்களாறுக்கும், பொருவாகி - "அறுவகைச்சமயமு மறிவருநிலையினை" என்கிறபடியே ப்ரதிபடனாய்க்கொண்டு, நின்றானவன் - அப்ரகம்பனாயிருக்குமவனாய், எல்லாப்பொருட்கும் - ஸமஸ்தபதார்த்தங்களுக்கும், அருவாகிய - அந்தராத்மாவாய்க்கொண்டு, ஆதியை - ப்ரதானனாய், தேவர்கட்கெல்லாம் - ப்ரஹ்மாதிதேவர்களுக்கடங்க, கருவாகிய - காரணபூதனாய், கண்ணனை - ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய்அவதரித்தவனை, கண்டுகொண்டேன் - கண்டநுபவிக்கப்பெற்றேன். பொரு - எதிர்.

இ.—எட்டாம்பாட்டில், க்ருஷ்ணனானவனைக் காணப்பெற்றேனென்று இனியராகிறார்.

[உருவாகியவாறு சமயங்கட்கெல்லாம்] - விஹிதாநுஷ்டானங்களும் நிஷித்தபரிஹாரங்களுமாக உபதேசிப்பாரும் கேட்பாருமாய்ப் போருகையாலே, ஆபாதப்ரதீதியி லொன்று போலேயிருக்கிற பாஹ்ய ஸமயங்களுக்கெல்லாம் அவிசால்யமானபடியையுடையனாய் நின்றான். [பொருவென்று] - தடை. அவற்றால் மேலிடவொண்ணாதபடி நிற்கை. [எல்லாப்பொருட்கும் அருவாகிய வாதியை]-ஸகல பதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய் நியாமகத்வத்தாலே ப்ரதானனுமானவனை [தேவர்கட் கெல்லாம் கருவாகிய]- ப்ரஹ்மாதிகளுக்குங்கூட காரணபூதனானவனை. [கண்ணனை]-கார்யங்களிலேஒன்றுக்குத்தான் கார்யமானவனை. [கண்டுகொண்டேனே]- அவதாரத்துக்குப்பிற்பாடராயிருக்க, கண்டுகொண்டேனே என்கிறாரிறே; ப்ரேமார்த்ரசித்தர்க்கென்றுங் காணலாம்; அவதார ஸமகாலத்திலும் காணவொண்ணாது சிசுபாலாதிகளுக்கு. பாஹ்யஸமயங்களால் அவி

சால்யனுப்ஸர்வாந்தராத்மாவாய்க்கொண்டுஸர்வநியந்தாவாய் ப்ரஹ்மாதிகளுக்கும் உத்பாதகனுயிருந்துவைத்து ஆஶ்ரிதர்க்கு ஸுலபனுயிருக்கிறவனைக் காணப்பெற்றேனென்கிறார்.

௭௫.—எட்டாம்பாட்டு. ஸகலபதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய் ப்ரஹ்மாதிகளுக்குக் காரணபூதனுனவனைக் காணப்பெற்றேனென்று இனியராகிறார்.

[உருவாகிய வாறுசமயங்கட்கெல்லாம்] - ஆபாதப்ரதீதியில் ஒன்று போலேயிருக்க, சிலவற்றைவிதிப்பது, சிலவற்றைநிஷேதிப்பது, நிஷ்டரிஹாரத்தைச் சொல்லுவதாய்க்கொண்டு உபதேசிப்பாரும் கேட்பாருமாய்ப்போருகிற பாஹ்யஸமயங்களெல்லாவற்றாலும். [பொருவாகிநின்றானவன்] - பொருவென்று தடை. அவற்றால் தன்னை இல்லைசெய்யவொண்ணாதபடி அப்ரதிஹதனாய் நின்றான். [எல்லாப்பொருட்கும் அருவாகியவாதியை] - ஸகலபதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவாய், நியாமகத்வத்தாலே ப்ரதாநனுமானவனை. [தேவர்கட்கெல்லாம்கருவாகிய] - ப்ரஹ்மாதிதேவர்களுக்கெல்லாம் காரணபூதனுயுள்ளவனை. [கண்ணனை] - கார்யங்களிலே யொன்றுக்குத் தான் கார்யமானவனை. [கண்டுகொண்டேனே] - அவதாரத்துக்குப் பிற்பாடராயிருக்க, 'கண்டுகொண்டேன்' என்கிறாரிறே; ப்ரேமார்த்ரசித்தர்க்கென்றுங்காணலாம்: அவதாரஸமகாலத்திலுங்காணவொண்ணாது சிசுபாலாதிகளுக்கு. பாஹ்யஸமயங்களால் அவிசால்யனுய், ஸர்வாந்தராத்மாவாய்க்கொண்டு ஸர்வநியந்தாவாய், ப்ரஹ்மாதிகளுக்கும் உத்பாதகனுயிருந்துவைத்து, ஆஶ்ரிதஸுலபனுனவனைக் காணப்பெற்றேனென்கிறார். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

---

கண்டுகொண்டு என்கண்ணிணையாரக்களித்து
பண்டைவினையாயின பற்றோடறுத்து
தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள்சொன்னேன்
அண்டத்தமரர்பெருமான்அடியேனே.

ஆ.—(கண்டுகொண்டு) - இப்படி கண்ணாரக்கண்டுகொண்டு அவனை வர்த்தவும் பெற்றேனென்கிறார்.

---

எட்டாம்பாட்டு.—உருவாகிய இத்யாதி. "எல்லாப்பொருட்குமருவாகிய - தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேன்" என்ற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - ஸகலபதார்த்தங்களுக்கும் இத்யாதி.

"உருவாகிய வாறுசமயங்கட்கெல்லாம்" - அழகியதாயிருக்கிற ஆறுஸமயங்களெல்லாவற்றுக்குமென்று ஸப்தார்த்தம். அபார்த்தங்களைச்சொல்லுகிற ஸமயங்களுக்கு அழகென்னென்ன - ஆபாத இத்யாதி. உருவாகிய - ஆபாதப்ரதீதியிலொன்றுபோலே யிருக்கிற என்று ஸப்தார்த்தமாகவுமாம். பொருவாகிநின்றான் - தடையாய்நின்றான்; ப்ரதிகடனென்றபடி. "தடை" என்றத்தால்ஆவம் - அவற்றால் இத்யாதி. அப்ரதிஹதனாய் நிற்கைபாவம் - த்ருடப்ரமாணஸித்தனாய் நிற்கை. மேலே "கருவாகிய" என்று - காரணத்வஞ்சொல்லுகையாலே, "ஆதியை" என்று - ப்ரதாநனைச்சொல்லுகிறது. கருவென்று - கர்ப்பமாய், அத்தாலே காரணத்வஞ்சொல்லுகிறது. காரணத்வமேயாகில் ஸௌலப்யமில்லையோவென்ன - கார்யங்களிலே இத்யாதி. ஒன்றுக்கு - வஸுதேவர்க்கு. 'கண்டுகொண்டேனென்கிறாரிறே' என்றநந்தரம், இதுக்குக்கருத்தென்னென்னில்?—என்றுகூட்டுவது. பாட்டை நிகமிக்கிறார் - பாஹ்ய இத்யாதி. (அ)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், தன்னை அநுபவிக்கவும்பெற்று ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாம்படி திருவாய்மொழி பாடவும் பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[கண்டுகொண்டேனென்று தொடங்கி] - என்னுடைய ஸகலஇந்த்ரியங்களும் க்ருதார்த்தமாம்படி கண்டுகொண்டு. நானும் களித்துக் காண்பதுக்கு முன்புபட்ட துக்கத்தை நிஶ்ஶேஷமாகப்போக்கி. [அண்டத்தென்று தொடங்கி] - நான் ஸர்வேஶ்வரனாலே விஷயீக்ருதனானேன்.

ப.—அநந்தரம், என்னுடைய ஸ்வரூபாநுரூபமாகக் கண்டநுபவித்து விரோதியுங்கழிந்து, ப்ராப்யபூதனவன் விஷயத்திலே ஸாதவதர்க்கு போக்யமாம்படி வாசிககிஞ்சித்காரம் பண்ணப்பெற்றேனென்கிறார்.

(ஜ்ஞாநப்ரேமாத்மகமான), என்கண் - என்கண்கள், இணை - இரண்டும், ஆர - வயிறுநிறையும்படி, கண்டுகொண்டு களித்து -, (இந்த ஸ்வரூபஜ்ஞாநமடியாக),பண்டை - அநாதிஸித்தமான, வினை ஆயின - அஹங்காரமமகாராதி ஸமஸ்தவிரோதிகளையும், பற்றோடு - ஸவாஸநமாக, அறுத்து - போக்கி, அண்டத்து - பரமபதத்திலே, அமரர் பெருமான் - * அயர்வறுமமரர்களதிபதியான ப்ராப்யபூதனுக்கு, அடியேன் - (நித்யகிங்கரனான) நான், தொண்டர்க்கு - அவனடியார்க்கு, அமுதுண்ண - உகந்தநுபவிக்கலாம்படி, சொல்மாலைகள் - ஶப்தஸந்தர்ப்பரூபமான வாசிக கைங்கர்யத்தை, சொன்னேன் - பண்ணினேன். இப்பாட்டில் - மந்த்ரத்தில் ப்ரதமபதார்த்தமான ஸ்வரூபஜ்ஞாநத்தையும், மத்யமபதார்த்தமான விரோதிநிவ்ருத்தியையும், சரமபதார்த்தமான கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும், கைங்கர்யவ்ருத்திவிஶேஷத்தையும், மந்த்ர தாத்பர்யமான ததீயஶேஷத்வத்தையுஞ் சொல்லிற்றாயிற்று.

இ.—ஒன்பதாம்பாட்டில், தன்னை யநுபவிக்கப்பெற்று அதுக்குமேலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாம்படி திருவாய்மொழி பாடவும் பெற்றேனென்கிறார்.

[கண்டுகொண்டு] - "நான் அழைப்பேனே" என்ற விடாய் எல்லாங்கெடக் காணப்பெற்று. [என் கண்ணிணையார] - "காணக்கருதும் என்கண்ணே" என்கிற கண்களின் விடாய்கெட. [கண்ணிணையார - கண்டுகொண்டு] - கலியர் "வயிறு நிரம்பவுண்டேன்" என்னுமாபோலே களித்து-மறுகினநெஞ்சு களிக்கும்படி. [பண்டையித்யாதி] - இவ்வுகப்புக்கு இடைச்சுவரான ப்ராக்தந கர்மங்களானவற்றை ஸ்வாஸநமாகப்போக்கி, காண்பதற்கு முன்புள்ள துக்கத்தை ஸவாஸநமாகப்போக்கி. [தொண்டர்க்கு இத்யாதி] - என்னளவன்றிக்கே, வைஷ்ணவர்களுக்கும் உபகாரகனாகப்பெற்றேன். இப்பேறு என்னால் வந்ததாகமாட்டாது; நான் ஸர்வேஶ்வரனாலே விஷயீக்ருதனானேன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. தன்னையநுபவிக்கப்பெற்று, அதுக்குமேலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாம்படி திருவாய்மொழி பாடவும்பெற்றேனென்கிறார்.

[கண்டுகொண்டு] - "நான் அழைப்பன்" என்ற விடாயெல்லாங்கெடக் காணப்பெற்று. [என்கண்ணிணையார] - "காணக்கருதுமென்கண்ணே" என்ற கண்

ஒன்பதாம்பாட்டு.—கண்டுகொண்டு இத்யாதி. "கண்டுகொண்டென்கண்ணிணையாரக் களித்து - தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - தன்னை இத்யாதி.

கண்டென்றாதே, "கண்டுகொண்டு" என்றதுக்குவாஸநை - நான்அழைப்பன் இத்யாதி. "ஆர" என்றதுக்கர்த்தம் - கலியர் இத்யாதி. கலியர் - பசியர். ஆர - பூர்ணமாக,

கள் விடாய்கெட. [கண்ணிணையார - கண்டுகொண்டு] - கலியர் "வயிறாரவுண்டு" என்னுமாபோலே. [களித்து] - மறுகின நெஞ்சு களித்து. [பண்டைவினையாயின பற்றோடறுத்து] - இவ்வுகப்புக்கு இடைச்சுவரான ப்ராக்தநகர்மங்களை ஸவாஸநமாகப்போக்கி. [தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்] - என்னளவும் அன்றிக்கே, வைஷ்ணவர்களுக்கும் உபகாரகனாகப்பெற்றேன். "நானுமுண்டு என்பரிகரமும் ஜீவித்து, என்பந்துக்களுக்கும் விருந்திடவல்லேனானேன்" என்பாரைப்போலே. [சொல்மாலைகள்சொன்னேன்] - ததீயசேஷத்வபர்யந்தமான பேற்றைப் பெற்றேன். பெற்ற பேற்றின் கனமிருந்தபடியாலே, இது தான்றோன்றியான கைப்பற்றடியாகவந்ததொன்றல்ல. [அண்டத்தமரர்பெருமானடியேனே] - ஸர்வேச்வரனாலே விஷயீக்ருதனானேன்.

---

## பத்தாம் பாட்டு.

---

அடியானிவனென்று எனக்காரருள்செய்யும்
நெடியானை நிறைபுகழ்அஞ்சிறைப்புள்ளின்
கொடியானைக் குன்றமலுலகமளந்த
அடியானையடைந்து அடியேன்உய்ந்தவாறே !

*ஆ.—(அடியானிவன்.) - பெரியதிருவடி தன்திருவடிகளிற்செய்யும் வ்ருத்திகளெல்லாவற்றையும் என்னையிட்டு நிர்ஹேதுகமாகச் செய்வித்துக் கொண்டருளினானொருவனையாஶ்ரயித்து நானுய்யும்படியே! என்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், எம்பெருமானைப் பெற்று க்ருதார்த்தனானேன் என்கிறார்.*

*[அடியான் இவனென்று தொடங்கி] - அடியான் என்றொரு வ்யாஜத்தாலே நிர்ஹேதுகமாகத் தன்னளவிலே எனக்கு ப்ரஸாதத்தைப் பண்ணும் ஸர்வேஶ்வரனை. [நிறைபுகழென்று மேலுக்கு]-ஸௌர்யவீர்யாதிஜ்ஞான ப்ரஜ்ஞையையுடைய பெரியதிருவடியைத் தன்னுடைய நிர்ஹேதுகரக்ஷணத்துக்குக் கொடியாக எடுப்பதாய்ச்செய்து ஜ்ஞானஜ்ஞான நிரூபணம்பண்ணாதே ஜகத்தையெல்லாம் அந்தரப்படாதபடி அளந்துகொண்டு ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனைப்பெற்று நான் க்ருதார்த்தனானபடியென்? பெரியதிருவடியை விஷயீகரித்தாற்போலே என்னை விஷயீகரித்தது என்பக்கல் என்ன நன்மை கண்டோ என்னில்?—திருவுலகளந்தருளினாற்போலே நிர்ஹேதுகமாக என்றுமாம்.*

---

பண்டை - *ப்ராக்தநமான.* பற்றோடு - *வாஸனையோடு.* இடைச்சுவர் - *ப்ரதிபந்தகம்.* நானுமுண்டு என்றது - *"கண்டுகொண்டு" என்றதைப்பற்ற. "என்கண்ணிணையாரக்களித்து" என்றதைப்பற்ற* - என்பரிகரமும் *இத்யாதி. "தொண்டர்க்கமுதுண்ண" என்றதைப்பற்ற* - என்பந்துக்களுக்கும் *இத்யாதி.* ஹலிதார்த்தம் - ததீயசேஷத்வ *இத்யாதி.* அதாவது - *வாசிக கைங்கர்யம் பண்ணப் பெற்றேனென்று கருத்து. மேலுக்கவதாரிகை* - பெற்றபேற்றின் *இத்யாதி.* தான்றோன்றியான கைப்பற்று - *ஸ்வயத்நமூலமான ஸாதநம். 'அண்டத்தமரர்பெருமானடியேன் - களிக்கும்படி - என்கண்ணிணையார - கண்டுகொண்டு - பண்டை' என்று தொடங்கி, 'சொல்மாலைகள்சொன்னேன்' இத்யந்வய:.* (க)

ப.—அநந்தரம், இந்த அநுபவத்துக்கடியான நிருபாதிகஸம்பந்தத்தையுடையவனைக் கிட்டி நான் உஜ்ஜீவித்த ப்ரகாரமென்? என்று ஹ்ருஷ்டராகிறார்.

இவன் அடியான் - இவன் நமக்கு ஸ்வதஸ்ஸேஷபூதன், என்று - என்று திருவுள்ளத்திலேகொண்டு, எனக்கு ஆர் - எனக்கு பரிபூர்ணமான, அருள் - க்ருபையை, செய்யும் - பண்ணுகிறக்செய்தே, நெடியானை - ஒன்றுஞ்செய்யாதபடி மேன்மேலெனப் பாரிப்பையுடைய பெரியவனுப், நிறை - இந்தரக்ஷணத்துக்கு அநுரூபமான, புகழ் - ஸீல ஸௌலப்ய ஜ்ஞாநஸக்திப்ரமுவமான ப்ரதையை யுடையனுய், அம் - விலக்ஷணமான, சிறை - சிறகையுடைய, புள்ளின் - பெரியதிருவடியை, கொடியானை - ரக்ஷணப்ரதைக்குக் கொடியாகவுடையனுய், குன்றாமல் - அந்யாபிமாநமாகிற குறைவுவாராமல், உலகம் - லோகத்தை, அளந்த - அளந்துகொண்ட, அடியானை - நிருபாதிகஸம்பந்த ப்ரகாஸகமான திருவடிகளையுடையவனை, அடைந்து - கிட்டி, அடியேன் - ப்ரகாஸிதமான ஸேஷத்வஸ்வரூபத்தையுடைய நான், உய்ந்தவாறே - உஜ்ஜீவிக்கப்பெற்றபடியே!

இ.—பத்தாம்பாட்டில், இப்படி அவனைப்பெற்று க்ருதார்த்தனேனென்கிறார்.

[அடியானிவனென்று] - "மேல் பண்ணப்புகுகிற ஔதார்யம் ப்ராப்தம்" என்று தோற்றுகைக்காக "அடியான்" என்றுஒருபேரையிட்டாயிற்று உபகரித்தது. [எனக்காரருள்செய்யும் நெடியானை] - கொள்ளுகிற என்னளவன்றிக்கே தன்னளவிலே உபகரித்த ஸர்வேஸ்வரனை. [நிறைபுகழ்அஞ்சிறைப்புள்ளின் கொடியானை] - ஸௌர்யவீர்யாதி குணப்ரதையையுடையனுய் நிரந்தரபகவதநுபவத்தாலே தர்ஸநீயனுமான பெரியதிருவடியைக் கொடியாகவுடையவனை; ரக்ஷணத்துக்குக் கொடிகட்டி ரக்ஷிக்குமவனை; பெரியதிருவடியை விஷயீகரித்தாற் போலே என்னை விஷயீகரித்தவன் என்கை. இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையில் என்னநன்மையுண்டென்னில்? - [குன்றாமலித்யாதி] - குணகுண நிரூபணம்பண்ணாதே திருவுலகளந்தருளினாற் போலே நிர்ஹேதுகமாக என்கிறார். தன்பெருமையையும் ஸௌலப்யத்தையும் என்னை அநுபவிப்பித்தான். [அடைந்தடியேன் உய்ந்தவாறே] - ஸேஷத்வமே ஹேதுவாக உஜ்ஜீவித்தபடியென்? ஸேஷத்வஜ்ஞாநத்துக்கு இத்தனை ப்ரயோஜநமுண்டோ?

ஈடு.—பத்தாம்பாட்டு. இப்படி அவனைப்பெற்று க்ருதார்த்தனேனென்கிறார்.

[அடியானிவனென்று] - "மேல் பண்ணப்புகுகிற ஔதார்யம் ப்ராப்தம்" என்றுசொல்லுகைக்காக, "அடியான்" என்றுஒருபேரையிட்டாயிற்று உபகரித்தது. [எனக்காரருள்செய்யும்நெடியானை] - கொள்ளுகிறஎன்னளவன்றிக்கே, தன்னளவிலேயுபகரித்த ஸர்வேஸ்வரனை. * அருள்பெறுவார் அடியாரிறே:புத்ரர்களுக்கு அம்மமேயிறே

---

பத்தாம்பாட்டு.—அடியான் இத்யாதி. "அடைந்தடியேனுய்ந்தவாறே" என்றதைப் பற்ற அவதாரிகை - இப்படி இத்யாதி.

அருள்செய்யுமென்னுதே, "அடியானிவன்" என்று விசேஷித்ததுக்குபாவம் - மேல் பண்ண இத்யாதி. அருள்செய்கைக்கு ஹேது "அடியான்" என்கிறஇதுஎன்றபடி. "ஆரருள் செய்யும்" என்றவநந்தரம், "நெடியான்" என்றதுக்கு பாவம் - கொள்ளுகிற இத்யாதி. அடியார்க்கருள்செய்கை ப்ராப்தமோவென்ன - அருள்பெறுவார் இத்யாதி. அருள்பெற ப்ராப்தியுள்ளது புத்ரர்களுக்கன்றோவென்ன - புத்ரர்களுக்கு இத்யாதிவாக்யத்வயம். அடியாரிடத்திலே

யுள்ளது; எல்லாவற்றிலும் கூறுண்டாயிருக்குமிறே யபசாரத்து. பிள்ளை யுகளாங்கப்ரஹ்மராயர், பட்டரை ஸமாதாநம் பண்ணவேணும் என்று. "இருகைமதவாரணம்" என்கிறவனை வரக்காட்டினராய், "அவனைத் திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பர்" என்னுமத்தைப்பற்ற; அவனும்வந்து சிலவார்த்தைகளை விண்ணப்பஞ்செய்து, திருவள்ளமும் ப்ரஸந்நமாயிருக்கிறவளவிலே; "இவனுடைய வைஷ்ணவத்வமிருக்கும்படி திருவுள்ளம் பற்றியிருக்கையுண்டே" என்றார்களாய்; "சொல்லவேணுமோ, நாலுதாஸர்களன்றோ" என்றது தொடக்கமாக, இப்பாட்டை யருளிச்செய்தார். [ஆருருள்செய்யும்] - பெறுகிற என்னளவிலேயன்றிக்கே, தருகிற தன்னளவிலே தந்தான். தனக்களவுதானேன்னேன்ன? - [நெடியானை] - "ஸர்வேஶ்வரன்" என்னுமித்தனை. [நிறையித்பாதி]- இதுதான் நான்இன்றிருந்து உபபாதிக்கவேண்டியிருந்ததோ ? கட்டிக்கொண்டிருக்கிற கொடியிலே தெரியாதோ ? ஶௌர்யவீர்யாதி குணப்ரதையையுடையனாய் நிரந்தரஸம்வஹநஸேவத்தாலே தர்ஶநீயமான வேஷத்தையுடையனா யிருக்கிற பெரிய திருவடியை த்வஜமாகவுடையவனை. பெரியதிருவடியை விஷயீகரித்தாற்போலே என்னை விஷயீகரித்தவனை. இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையில்என்ன நன்மையுண்டேன்னில்? [குன்றுமலுலகமளந்தஅடியானை] - குணாகுணநிரூபணம்பண்ணாதே திருவுலகளந்தருளினாற்போலே, நிர்ஹேதுகமாகவேன்கிறார். ஓரடியுங்குறையாமே பூமிப்பரப்பை யளந்துகொண்ட திருவடிகளையுடையவனை.தன்பெருமையையும், ஸௌலப்யத்தையும் என்னை யநுஸவிப்பித்தான். [அடைந்தடியேன்உய்ந்தவாறே] - ஶேஷத்வமே ஹேதுவாக உஜ்ஜீவித்தபடியேன் ? ஶேஷத்வ ஜ்ஞாநத்துக்கு இத்தனை ப்ரயோஜநமுண்டோ? (௧0)

---

*ஈஶ்வராநுக்ரஹம் அதிஶயித்திருக்குமென்னுமதுக்கு ஸம்வாதம் - பிள்ளையகளங்க இத்யாதி. ஆழ்வான் ஸ்ரீபாதத்திலே யாஶ்ரயித்த பிள்ளையகளங்கப்ரஹ்மராயர், பட்டரிடத்திலே அபசாரப்பட, அதுநிமித்தமாகக் கோயிலைவிட்டு பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருள, "இருகைமத வாரணம்" என்கிறவனை பட்டர்திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பரென்னுமத்தைப்பற்ற ஸமாதாநம்பண்ணவேணுமென்று அந்தத் † திருவெள்ளைக்காரனை வரக்காட்டினரென்று சிலவுத்தாஹரித்துக்கொண்டு அந்வயித்துக்கொள்வது. இருகைமதவாரணமென்கிறவன் - நம்பெருமாளுக்குப் பரிவனான கைக்கோளன். 'இவனுடைய' இத்யாதிவாக்யம் - நடன்த்ரஹ்லக்ஷணம். 'சொல்ல வேணுமோவித்யாதி'-பட்டர் ஸ்ரீஸூக்தி. "கொள்ளுகிற" இத்யாதிவாக்யவிவரணம் - பெறுகிற இத்யாதி. இதுதான் என்றது - ஸர்வேஶ்வரத்வந்தானென்றபடி. மேலுக்கவதாரிகை - இப்படி இத்யாதி. இப்படி விஷயீகரிக்கைக்கு என்றது - "ஆருருள்செய்யும்" என்றதைப்பற்ற. தாத்பர்யவித்தார்த்தம் - குணாகுண இத்யாதி. ஶப்தார்த்தம் - ஓரடியும் இத்யாதி. கீழே - "நெடியானை" என்று தொடங்கி "உலகமளந்தவடியானை" என்னுமளவும் - அருளுகைக்கு ஶேஷமாக யோஜித்து, இங்கே - பரத்வஸௌலப்யங்களை யநுஸவிப்பித்தானென்று ப்ரத்யேகமாக்கி ஸாவாந்தரம் - தன்பெருமையையும் இத்யாதி. கீழே "அடியான்" என்று சொல்லியிருக்க, மீளவும் "அடியேன்" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் - ஶேஷத்வமே இத்யாதி. "உய்ந்தவாறே!" என்கிற ஸ்வரத்துக்கு அர்த்தமாதல், விவரணமாதல் - ஶேஷத்வ ஜ்ஞாநத்துக்கு இத்யாதி. க்ரமேணாந்வய:.* (௧௦)

---

† திருவேளைக்காரனை என்றிருக்குமோ ? என்று தோன்றுகின்றது.

## பதினோராம் பாட்டு.

ஆறுமதயானை யடர்த்தவன்தன்னை
சேறார்வயல்தென்குருகூர்ச்சடகோபன்
நூறேசொன்னஓராயிரத்துள் இப்பத்தும்
ஏறேதரும் வானவர்தம்இன்னுயிர்க்கே.

ஆ.—[ஆறுமதயானை] - ப்ரதிகூலநிரஸநம்பண்ணினாற்போலே என்னுடைய து:கத்தையெல்லாம் போக்கியருளினவனைச் சொன்ன இப்பத்தும், வானவர்தம் இன்னுயிர்க்கேறானவனைத் தரும் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி தன்னுடைய ரஸ்யதையாலே அயர்வறுமமரர்களுடைய ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.

[ஆறுமதயானையடர்த்தவன்றன்னை]- குவலயாபீடத்தை முறித்தாற்போலே நம்முடைய ஓரிதத்தைப் போக்கினவனை. [சேறார்வயலென்றுமேலுக்கு]-ப்ரதிபக்ஷம் போனவாறே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார், ஹாரதராமாயணாதிகளில் காண்ட பர்வாதிபேதம்போலே தரிப்பார்க்கெளிதாம்படி நூறுநூறாக அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழிலும் இத்திருவாய்மொழி வானவர்தம் இன் உயிர்க்கு ஏறானவனைத் தருமென்றுஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக இதனுடைய நித்யஸூரிபோக்யதையை யருளிச்செய்கிறார்.

ஆறு - ஒருகாலும் மட்டுப்படாத, மதம் - மதத்தையுடைய, யானை - குவலயாபீடமாகிறவானையை, அடர்த்தவன் தன்னை - நிரஸித்தக்ருஷ்ணனைப்பற்ற, சேறு - சேறு, ஆர் - மிக்க, வயல் - வயலையுடைத்தான, தென் - அழகிய, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், நூறே - நூறுநூறாக, சொன்ன ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் - , வானவர்தம் - நித்யஸூரிகளுடைய, இன் - உகந்த, உயிர்க்கு - நெஞ்சிலேசென்று, ஏறேதரும் - ஏறுநிற்கும். வானவர்தம்இன்னுயிர்க்கு ஏறான ஸர்வேஶ்வரனைத்தருமென்றுமாம். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி தன்போக்யதையாலே நித்யஸூரிகளுடைய ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.

[ஆறுவித்யாதி] - ஒருநாளும்மாறாத மதத்தையுடைய குவலயாபீடத்தை நிரஸித்தவனை; அத்தை நிரஸித்தாற்போலே என் விரோதியைப் போக்கினவனை. ப்ரதிபக்ஷம் போனவாறே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார். [நூறே சொன்னவாயிரம்] - கிழிகிழியாகக் கொடுப்பாரைப்போலே, நூறுநூறாக அருளிச்செய்தபடி. ஹாரதராமாயணாதிகளில் காண்டபர்வாதி பேதம்போலே தரிப்பார்க்கெளிதாம்படி செய்தாரென்கை. இத்திருவாய்மொழி நித்யஸூரிகள் ஹ்ருதயத்தைப் புண்படுத்துமென்னுதல்; நித்யஸூரிகளுக்கு ஏறான ஸர்வேஶ்வரனைத் தருமென்னுதல்.

ஈடு.—பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்போக்யதையாலே நித்யஸூரிகள் ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.

[ஆருமதயானையடர்த்தவன்தன்னை] - ஒருநாளும் மாறாத மதத்தையுடைய குவலயாபீடத்தை நிரஸித்தவனை. அத்தைநிரஸித்தாற்போலே என்விரோதியைப்போக்கினவனை. [சேருர்வயல்] - குவலயாபீடமோதான், திருநகரியில் வயலையுழுவது நடுவே தாகவோட்டாதேகிடந்தது! [நூறேசொன்னவோராயிரம்] – கீழ்கீழாகக்கோடுப்பாரைப் போலே, நூறுநூறாகச்சொன்னபடி. ஸாரதராமாய ச்ருதிகளில் காண்டடர்வாதிலேசுட் போலே, யரிப்பார்க்கு எளிதாம்படி செய்தாரென்கை. இத்திருவாய்மொழி நித்யஸூரிகள் ஹ்ருதயத்தைப் புண்படுத்துமென்னுதல்; நித்யஸூரிகளுக்குஎருன ஸர்வேச்வரனைத்தரு மென்னுதல். (கக)

*நிமமம்.—ஆறு இத்யாதி. "இப்பத்தும்எரேதரும்வானவர்தமின்னுயிர்க்கு" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி. நித்யஸூரிகள் ஹ்ருதயத்தை நோவுபடுத்துகைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - தன்போக்யதையாலே என்று.*

*ஆறுகை - மாறுதல். ஸார்த்தஸாவம் - அந்தத இத்யாதி. "யானையடர்த்தவன்றன்னைச் சேருர்வயல்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - குவலயாபீடமோதான் இத்யாதி. இது வ்யாக்யாதாவின் ரஸோக்தி. அதாவது - அங்குத்தைக்கு ஒருதிங்குவரில் ஆழ்வாருளராகமாட்டார்; ஆழ்வார்க்கொரு தீங்குவரில் திருநகரியிலுள்ளார் ஸத்தையின்றிக்கே யிருக்கையாலே யவ்வூரில் வயலுழுவாரில்லை; ஆகையாலே, ப்ரதிபக்ஷம்போனவாறே ஸம்ருத்தமான வயலையுடைய திருநகரியென்கை. "நூறு" என்கிறதுக்கு பாவம் - கீழ் இத்யாதி. கீழ் - சாணிகை. நூறுநூறாகச் சொன்னதுக்கு பாவமேதென்ன - பாரத இத்யாதி. முதல் ஆதிபதத்தாலே - ஸாரவத்தமும், இரண்டாம் ஆதிபதத்தாலே - ஸ்கந்தமும் சொல்லுகிறது. "வானவர்தம்இன்னுயிர்க்கு-எரேதரும்" என்றந்வயித்தர்த்தம் - இத்திருவாய்மொழி இத்யாதி. "எறு" என்று - ப்ரஹாரமாய், எடுபாடு. ஒருவனொருவன்கையிலே யடிபட்டால் "அவனையறைந்தான்" என்று லோகத்தார்சொல்லக்கடவர்களிறே. த்விதியார்த்தத்துக்கு, "எறு" என்று - வ்ருஷபமாய், நித்யஸூரிகளுக்கு ப்ரதாநனான ஸர்வேச்வரனைச் சொல்லுகிறது. "உயிர்" என்று - நெஞ்சு. இன்னுயிர் - உகந்தநெஞ்சு. 'ஆருமதயானை' இத்யாரப்ய, 'பத்தும் - வானவர்தம் இன்னுயிர்க்கு - எரேதரும்' இத்யந்வய:.*

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி.—ஶ்ரீமாயிக: ப்ரியஸுஹ்ருத்ஸ்வஜநோத்தயா நாதவ்யாஜேந ஸ்வஜநஸம்ஸ்ம்ருதிப்ரதம்ஸ்வாஸ: । ஸம்பூர்ணஸத்கவிதஸ்யாஸ்ய வா கடாக்ஷைர் ஜ்ஞாநபரிதோஷ ஸம்பூஜ்ய கூடஸ்தோ(?) ।

---

த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—†ஸ்கந்தஸ்கந்தஸாராவாஸ ஜநஸுஹ்ருதாவதாரணாகவ்ய ... அத்யந்தஸுதிஸ்வாதஸாரார்தவிஸ்தீர்ணதயாநாத்ஸநாம்வ்யூஹஸாராஸ । ஸ்வேஷாம் ஸந்த்ராவித்தாயா: ஸ்வஜநவஶதயா தத்ரா வஸத்திஹஸ்த்ர । ஸ்வஸ்வாமித்வாதிவ்யூஹாஜ்ஞஶக்திஸரிஸ்வத்யஹாணீஷ்டோஸி:

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

மையார்கண்மாமார்பில் மன்னும் திருமாலைக்
கையாழிசங்குடனேகாணவெண்ணி - மெய்யான
காதலுடன் கூப்பிட்டுக்கண்டுகந்தமாறன்பேர்
ஓதவுய்யுமே இன்னுயிர்.

---

ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

† ஸ்கந்தஸ்கந்தஸாராவாஸ என்று இருக்கலாம்.

# ஐந்தாந்திருவாய்மொழி--இன்னுயிர் - ப்ரவேஶங்கள்.

ஆ.—(இன்னுயிர்ச்சேவலும்) - இப்படி எம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாற்போலே திருவுள்ளத்தாலே விஶதமாக அநுஸந்தித்து, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே, எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டியைப்போலே யவஸந்நராய், அவளுடைய பாசுரத்தாலே தம்முடைய வ்யஸநத்தைப் பேசுகிறார். இப்பிராட்டிதான், எம்பெருமானைப் பிரிந்திருக்கிறஸமயத்திலே சில குயில்களுடைய கூக்குரல்களைக்கேட்டுத் தனியே சிந்திக்கிறாள். எம்பெருமான் "என்னை முடிக்கவேண்டும்" என்றுகோலி, முடிக்குமிடத்தில் ஸ்வவிஶ்லேஷத்தாலல்லது முடிக்கவொண்ணாமையாலே, விஶ்லேஷந்தான் ஸம்ஶ்லேஷத்தை யொழியக் கூடாமையாலே, விஶ்லேஷார்த்தமாக ஸம்ஶ்லேஷித்து, பின்னை விஶ்லேஷிப்பதுஞ் செய்து, " இந்தவிஶ்லேஷத்தாலும் முடியாதொழியிலோ?" என்னும் ஶங்கையாலே, "யதி விஶ்லேஷத்திலும் கொடிதான என்குணங்களை யவளுடைய ஸந்நிதியிலே சொல்லி யவளை முடியுங்கோள்!" என்றுசொல்லிக் குயில்களைப் போரவிட்டானென்று தன்னிலே சிந்தித்து ;

ஒ.—அஞ்சாந் திருவாய்மொழியில், கீழிற்றிருவாய்மொழியில் எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து ப்ரீதராய், பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அப்போதே தம் அபேக்ஷிதம் பெறாமையாலே மிகவும் அவஸந்நராய், தமக்கோடுகிற வ்யஸநம் பொறுக்குமளவன்றிக்கே லௌகிக பதார்த்தாநுஸந்தாநத்தாலே ஹ்ருதயத்தை அந்யபரமாக்கித் தரிக்கவேணும் என்று அவற்றையநுஸந்திக்கப்புக, அவையும் அவனுக்கு ஸ்மாரகமாக அவற்றாலே மிகவும் நோவுபட்ட ஆழ்வார் தம்முடைய தஶையை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார் : எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறாளொரு பிராட்டி, பெருவிடாய் பட்டார்க்குத் தண்ணீர் குடித்ததாறுதே அதிலே மிகவும் அபேக்ஷை பிறக்குமாபோலே பண்டை ஸம்ஶ்லேஷமும் மிகவும் த்ருஷ்ணை பிறந்து நோவுபடுகைக்கு உடலாய், அவனைக் காணப்பெறாமையாலே போதுபோகாமே ஒருபடி போதுபோக்குகைக்காகத் தன்னுடைய நிரதிஶய போக்யமான உத்யானத்திலேசென்று புக்கு, பரஸ்பர ப்ரேமப்ரவணமாய் மிதுநமாய்க்கொண்டு வர்த்திக்கிற பக்ஷிகளுடைய வடிவுகளையும் ப்ரவ்ருத்திகளையும் பேச்சுக்களையும் அநுஸந்தித்து, அவை எம்பெருமானோட்டைக் கலவியையும் அவன் தன்னையும் ஸ்மரிப்பிக்க அத்தாலே மிகவும் கலங்கி, "என்னை முடிக்கைக்கு உபாயம் விஶ்லேஷம்" என்று பார்த்து விஶ்லேஷந்தான் ஸம்ஶ்லேஷத்தை யொழியக் கூடாமையாலே அதுக்காக என்னோடே கலந்து பிரிந்தவிடத்திலும் நான் முடியாமையாலே, "நாம் முககாட்டாதே நமக்கு ஸ்மாரகமான பதார்த்தங்களைப் போகக்காட்ட அவற்றைக்கண்டு இவள்முடியும்" என்றுபார்த்து இவன் வரக்காட்ட வந்தனவாகக் கொண்டு, "முசல்வேட்டைக்கு அரணைப் பண்ணினாற்போலே என்னை முடிக்கைக்கு இத்தனை பாரிடபுவேணுமோ?" என்று மிகவும்நொந்து கத்யந்தரமில்லாமையாலே ஜீவத்தஶாநுஸந்தாநத்தாலே யரிக்கிறாள்.

ப.—அஞ்சாந் திருவாய்மொழியில், கீழ் - மாநஸமாக அபரோக்ஷித்தது பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே அபிநிவேஶித்து ப்ரீதரானவர், அவ்வநுபவாநுரூபமாக

ஶம்பிறந்து; அநுபாவ்யனான ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரிதஸௌலப்யத்தையும், ஸௌஶீல்யத்தையும், தந்நிவேஶ்யமான ஆகர்ஷகத்வத்தையும், ஆஶ்சர்யகுணநியோகத்தையும், அநந்யார்ஹத்வாபாதகத்தையும். அநுபாவ்யமான அவயவஶோபையையும், ஸௌந்தர்யஜநகமான ரூபவைலக்ஷண்யத்தையும், அவஸாதகமான காயவத்தையையும், போக்யமான புண்டரீகாக்ஷத்வத்தையும், ப்ராப்யதேஶவர்த்தித்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனானவனோடே யதாமநோரதங்கலந்து பரிமாறப்பெறாத ஆர்த்திக்குமேலே, ஸ்வச்சந்தவர்த்திகளான லௌகிகபதார்த்தங்களும் தத்குணவிக்ரஹாதிகளுக்கு ஸ்மாரகமாக, அத்தாலே ஶிதிலையாய், முத்பந்தரஸாந்த்ரதையாலே அவனுடைய குணாநுஸந்தானத்தாலே தரித்த ப்ரகாரத்தை, நாயகனான ஈஶ்வரனைப் பிரிந்தவளோர் நாயகி, தன்னாற்றாமையாலே 'லௌகிகமான பக்ஷ்யாதி பதார்த்தங்களைக் கண்டாகிலும் போது போக்குவோம்" என்று அபிஸந்திபண்ணி, பரஸ்பர ஸம்ஶ்லிஷ்டங்களாய் ரஸித்துத்திரி கிறஅவை அவனுடைய ஸம்ஶ்லேஷத்துக்கும் வடிவுக்கும் பேச்சுக்கும் ஸ்மாரகமாய்க் கொண்டுநலிய, அத்தாலே ஈடுபட்டுப் போலிகண்டு இரங்கினவள், பின்னும் போக்கில்லாமை யாலே அவனுடைய குணங்களை ஸ்மரித்து தரித்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

இ.—அஞ்சாந் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே அவனை ஸாக்ஷாத்கரித்து ப்ரீதராய் பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய் அப்போதே கண்ணாலே காணுதல், அணைத்தல், வார்த்தைசொல்லக் கேட்டல் செய்யப் பெறாமையாலே அவஸந்நராய், "லௌகிகபதார்த்தாநுஸந்தாநத்தாலே ஹ்ருதயத்தை அந்யபரமாக்கித் தரிக்கவேணும்" என்று அவற்றை அநுஸந்திக்கப்புக, அவையும் அவனுக்கு ஸ்மாரகமாக, அவற்றாலே நோவுபட்டவர் தம்முடைய தஶையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார். "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றவர் தம் ப்ராணரக்ஷணத்துக்கு ஒரு திர்யக்கின் காலிலே விழுகிறாரிறே. "அடியேன் உய்ந்தவாறே" என்றவர், ஸ்மாரகங்கள் கையிலே நோவுபடும்படியாய் விழுந்ததிறே. கலந்துபிரிந்து நோவுபடுவாள் ஒருபிராட்டி, அவன் வரக்காணாமையாலே லௌகிகபதார்த்த தர்ஶநத்தாலே போதுபோக்குகைக்காகத் தன்னுடைய உத்யானவனத்திலேபுக்கு, போகப்ரவணமாய் மிதுநமாயிருக்கிற பக்ஷிகளுடைய வடிவுகளையும், ப்ரவ்ருத்திகளையும், பேச்சுக்களையுங்கண்டு, "இவை அவனோட்டைக் கலவிக்கும், அவன் வடிவுக்கும், பேச்சுக்கும் ஸ்மாரகமாய்நலிய, இவற்றுக்கு நம்மோடு பகை பெரிதன்று; அவன வரவிட்டவையாகவேணும்: அவன்தான் நம்மைமுடிக்கைக்கு உபாயம் விஶ்லேஷமென்றுபார்த்து, அதுதான் ஸம்ஶ்லேஷத்தையொழியக் கூடாமையாலே அதுக்காகக் கலந்துபிரிந்தான்: நாம் அவ்வளவிலும் முடியாமையாலே சென்றற்ற ஸமயத்திலே, ஸ்மாரகங்களைமுன்னிட இவள்முடியுமென்று பார்த்து அவன் வரக்காட்ட வந்தன" எனக்கொண்டு, "என்னைமுடிக்கைக்கு முசல்வேட்டைக்கு அரணைப்பண்ணினாற் போலே இத்தனை பாரிப்புவேணுமோ?" என்று நொந்து மத்யந்தரமில்லாமையாலே அவன்குணங்களையே அநுஸந்தித்து தரித்தாளாய்த் தலைக்கட்டுகிறது. நம்மைப் பார்த்தால் இழவேயாயிருந்ததேயாகிலும் அவனைப்பார்த்தால் இழக்கவேண்டாதபடி யிறே அவன்குணங்களிருப்பது.

ஈடு.—"தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று களித்தவர், தம்முடைய ப்ராணரக்ஷணத்துக்கு திர்யக்குக்களின் காலிலேவிழும்படி

யாயிற்று. "தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகோண்டேனே" என்னும் படி வைஶத்ய்ம்பிறந்தபோதே, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே யபேக்ஷைபிறந்தது. "இவர்க்குஇன்னம் விடாயைப்பிறப்பித்து முகங்காட்டவேணும்" என்று இவர் அபேக்ஷித்ததைச் சடக்கெனத்தலைக்கட்டிற்றிலன் ஈஶ்வரன். நினைத்தபோதே அபேக்ஷிதம் பெறுமையாலே தளர்ந்து, லௌகிகபதார்த்தாநுஸந்தாநத்தாலே ஹ்ருதயத்தை யந்யபரமாக்கி தரிப்போம்" என்றும், "அவனோடுபோலியான பதார்த்தங்களைக்கண்டாகிலும் தரிப்போம்" என்றும் லௌகிகபதார்த்தங்களிலே கண்வைத்தார். அவை ஆஶ்வாஸஹேது வன்றிக்கே, ஸ்மாரகமாய் பாதகமாகப்புக்கது. ஏதேனுமொருபதார்த்தம் தோற்றிலும், அவற்றினுடையஸத்பாவம் அவனையொழியவில்லாமையாலே, அவனைக்காட்டிக்கொண்டிறே தோற்றுவது.

லௌகிகபதார்த்தங்கள் அவனுக்கு ஸ்மாரகமாய் நலிய, அவற்றால் நோவுபடுகிற படியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொரு பிராட்டி, தன்னாற்றாமையாலே "அவனோடு போலியான பதார்த்தங்களைக் கண்டாகிலும் தரிப்போம்" என்று, அவ்வாற்றாமை கைகொடுக்க உத்யாநத்திலேபுறப்பட, அங்குண்டான குயில்மயில்தொடக்கமானவை அவனுடைய பேச்சுக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய்நலிய, "இவைநலிகைக்கு இவற்றோடு நமக்கொருபகையில்லை, இவை நலிகைக்கு ஓரடியுண்டாகவேணும்; அவன் நம்மை முடிக்கவேணும்' என்று பார்த்தான்; 'அதுக்கு உபாயம்விஶ்லேஷம்' என்றுபார்த்து, பிரிவு கலவியை யொழியக் கூடாமையாலே கலந்தான், பிரிந்தான், பிரிந்தவிடத்திலும் நாம் முடியாதிருந்தோம், பிரிந்து நோவுபட்டிருக்கிற ஸமயத்திலே 'நம்மோடுபோலியான பதார்த்தங்களைக்காட்டி முடிப்போம்' என்று பார்த்து வரவிட்டானித்தனை; "உங்களுக்கு நினைவு இதுவாகில் இப்பாரிப்பெல்லாம்வேணுமோ" என்று அவற்றுக்கு வார்த்தைசொல்லி, "நம்மைப் பார்த்தாலிறே இப்படிநோவுபடவேண்டுவது? அவனைப் பார்த்தால் நோவுபடவேண்டாவிறே!" என்று அவன் குணஜ்ஞாநத்தாலே, வருந்தி தரித்துத் தலைக்கட்டுகிறதாயிருக்கிறது.

---

இன்னுயிர்ப்ரவேசம்: கீழ்த்திருவாய்மொழியில் - ப்ரமேயத்தையும், இதில்-ப்ரமேயத்தையும் அநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு – தோண்டர்க்குஇத்யாதி. விஸ்தாரஸங்கதி - தேவர்கட்கு இத்யாதி. ஆனால், ஈஶ்வரன நுபவிப்பியா தொழிவானென் ? என்ன - இவர்க்கு இன்னம் இத்யாதி. 'அபேக்ஷிதம்பெறுமையாலேதளர்ந்து' என்ற வநந்தரம், "லௌகிகபதார்த்தங்களிலே கண்வைத்தார் : விரக்தராயிருக்கிறவர்இதிலே கண்வைப்பானென்னென்னில்" என்று இத்தனையும் அத்யாஹரிப்பது. இதுக்கு பரிஹாரத்வயம் - லௌகிக இத்யாதி. அதாவது ஹ்ருதயத்தை யந்யபரமாக்கி தரிப்போமென்றும், போலியான பதார்த்தஸநத்தாலே தரிப்போமென்றும் கண்வைத்தாரென்றபடி. போலியான பதார்த்தம் பாதகமானமையைக்காட்டுகிறார் - அவையாஶ்வாஸ இத்யாதி. ஹ்ருதயத்தை அந்யபராமாக்கி தரிக்கப்போகாமையைக் காட்டுகிறார்- ஏதேனும் இத்யாதி. "நிற்கின்றதெல்லாம்நெடுமால்" என்னக்கடவதிறே.

அந்யாபதேசத்தாலேபேசும் ப்ரகாரத்தை விஸ்தரிக்கிறார்-எம்பெருமானோடே இத்யாதி. குயில் - பேச்சுக்கும், மயில் - வடிவுக்கும் ஸ்மாரகம். நம்மைப்பார்த்தால் - நம்முடைய தோஷபூயஸ்தையைப்பார்த்தாலென்றபடி. அவனைப்பார்த்தால் - உயர்திகுணவிசிஷ்டனை அவனைப் பார்த்தாலென்றபடி. "தன்புகழேத்த" என்றத்தைப்பற்ற - குணஜ்ஞாநத்தாலே இத்யாதி. இத் திருவாய்மொழியால் - "முமுக்ஷுவுக்கு விஷயதர்ஶநம் பாதகம்" என்கிறது. "இதுஎம்பெருமானார் உகந்ததிருவாய்மொழி" என்று அந்தப்ரஸங்கத்திலே ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் கதையைப்ப்ரஸாதிப்பர்.

## முதற் பாட்டு.

---

இன்னுயிர்ச்சேவலும்நீருங்கூவிக்கொண்டிங்கெத்தனை
யென்னுயிர்நோவமிழற்றேன்மின் குயிற்பேடைகாள்
என்னுயிர்க்கண்ணபிரானை நீர்வரக்கூவுகிலீர்
என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்கும் இத்தனைவேண்டுமோ ?

ஆ.—இக்குயில்களை நோக்கி "அவன் திருநாமங்களைச் சொல்லிக்கூவி என்னை நோவுசெய்யாதே கொள்ளுங்கோள் ! இங்கு அத்தனைக்கு விஷயமுண்டோ ?" என்ன, இக்குயில்கள் "உன்னை நோவுசெய்கைக்காகவோ அவனை நாங்கள் கூவுகிறது" என்ன, அன்றாகில், அவனை வரக்கூவுகிறிலிகளோ, என்னை முடிக்கவிறே கூவுகிறது; என்னை முடிக்கும்போது இத்தனை பாரிப்பு வேணுமோ? என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், சில குயிற்பேடைகளைக் குறித்து என்னை முடிக்கைக்கு இத்தனை பாரிப்புவேணுமே? என்கிறார்.

[இன்னுயிர்ச்சேவலென்று தொடங்கி]-விரஹவ்யஸநம் அறிந்திருக்கிற குயிற்பேடைகாள் ! உங்களுக்கு நற்சீவனான சேவல்களும் அவற்றுக்கு அநுரூபைகளான நீங்களும் பரஸ்பரஸம்ச்லேஷார்த்தமாக அழைத்துக்கொண்டு விச்லேஷத்தாலே தளர்ந்திருக்கிற என் உயிர்நோவ மிகவும் ப்ரணயகலஹத்தைப் பண்ணாதே கொள்ளுங்கோள்! [என்னுயிர்க் கண்ணபிரானென்று மேலுக்கு]-பொதுகரைச்சொல்லுமாபோலே எங்களை இங்ஙனே சொல்லுவானேன் ? என்றினவாகக்கொண்டு தாரகனான க்ருஷ்ணனைவரக் கூவுகிறிலிகோள் ; ஆனபின்பு, என்னை முடிப்பார்க்கு இத்தனைபாரிப்பு வேணுமோ ?

ப.—முதற்பாட்டில், ஆஸ்ரிதஸுலபனான க்ருஷ்ணனை வரவழையாதே உங்களில் நீங்கள் அழைத்து மிழற்றி என்னைநலியாதே கொள்ளுங்கோளென்று, சேவலோடே சேர்ந்த சில குயிற்பேடைகளைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

குயில்பேடைகாள் - ! இன்னுயிர் - பஹிஶ்சரமான ப்ராணன்போலே போக்யமாய் தாரகமான, சேவலும்-, இன்னுயிர் நீரும் - அதுக்குஇனியவுயிராய் என்னோடு ஸ்த்ரீத்வஸாஜாத்யத்தையுடைய நீரும், கூவிக்கொண்டு - (ஒருவர்க்கொருவர் ஸம்ச்லேஷார்த்தமாக) அழைத்துக்கொண்டு, இங்கு - என் ஸந்நிதியிலே, எத்தனை-மிகவும், என் உயிர் - என் ப்ராணனானது, நோவ - ஈடுபடும்படிக்கீடாக, மிழற்றேன்மின் - அநக்ஷரரஸமான ஸம்ச்லேஷ ஶப்தங்களைப் பண்ணாதே கொள்ளுங்கோள் ! என் - எனக்கு, உயிர் - தாரகனாயுள்ள, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, பிரானை - உபகாரகனை, நீர் - நீங்கள், வரக்கூவுகிலீர் - வரும்படி அழைக்கிறிலிகோள்! (உங்கள் கூவுதலால்) என் உயிர் - என் ப்ராணனை, கூவி - அபஹரித்து, கொடுப்பார்க்கும் - அவனுக்குக் கொடுப்பார்க்கும், இத்தனை - இத்தனை வ்யாபாரம், வேண்டுமோ - வேணுமோ ?

இ.—முதற்பாட்டில், சில குயிற்பேடைகளைக் குறித்து என்னை முடிக்கைக்கு இத்தனைபாரிப்பு வேணுமோ? என்கிறாள்.

[இன்னுயிர்ச் சேவலும்] - நற்சீவனான சேவலும் பஹிஶ்சரப்ராணனைப் போலே கண்வட்டத்திலே வர்த்தியாநிற்கை. பிரிந்துபடுகுலையடிக்கும் சேவலைப்போ

லன்றிக்கே, பேடைக்கு தாரகமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே! போக்யமுமாய்
தாரகமுமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே! [நீரும்]-சேவலுக்குஇன்னுயிரான நீரும்.
[கூவிக்கொண்டு] - சேர்த்தியைக்காட்டி நலிகிறதுக்குமேலே, பேச்சாலும் நலியவே
ணுமோ! ஸம்ஶ்லேஷார்த்தமாக பரஸ்பரம் பேரைச்சொல்லி அழைத்துக்கொண்டு.
[இங்குஎத்தனை] - இந்த எத்தனைத்த விஷயமுண்டோ? பிரிவாலே சென்றற்ற இதில்
உங்கள்பாரிப்புக்கு விஷயமுண்டோ? அன்றிக்கே, [எத்தனை என்னுயிர்நோவ மிழற்றேன்
மின்] - பிரிவாலேதளர்ந்திருக்கிற என்னுயிர்நோவ மிகவும் ப்ரணய கூஜிதத்தைப்பண்
ணாதே கொள்ளுங்கோள். 'உயிர்நோவ' - என்கையாலே உடல் சென்றற்றதென்கை.
ராமஶரம்போலே உயிரிலேபுக்கு வ்யாபரிக்கவற்றாயிற்று இந்த த்வநி. என்னுயிரொன்
கையாலே - இவற்றின் பேச்சுக்கேட்கத் தளிர்க்கும் அவனில் தனக்கு உண்டான
வ்யாவ்ருத்தி. [மிழற்றுகையாவது] - நிரம்பாமென்சொல். ஸம்ஶ்லேஷதசையிற் சொல்
லத்தொடங்கித் தலைக்கட்டாத பேச்சுக்கள். [நோவமிழற்றேன்மின்] - இப்பேச்சைக்
கேட்கில் இவள்முடியுமென்று அறிந்து பேசாதிருக்கவேண்டாவோ? ஸ்த்ரீவதமென்
றறிந்தால் மீளவேண்டாவோ? [குயிற்பேடைகாள்] - விஜாதீயர் செய்யுமத்தை நீங்
களுஞ் செய்யவேணுமோ? சேவலைக்கொண்டு காரியங்கொள்ள நினைத்தாலும் பேடை
யின் காலைப்பிறேபிடிப்பது. [என்னுயிர் இத்யாதி] - எங்களை பாதுகரைச்சொல்லுமா
போலே சொல்லுகிறதென்? என்றனவாகக்கொண்டு எனக்கு தாரகனான க்ருஷ்ணனை
வரக்கூவுகிறிலீகோள். தாரகங்கள் வ்யக்திதோறும் வ்யவஸ்திதமாயிறேயிருப்பது. திர்
யக்குக்களுக்கு த்ருணம், மனுஷ்யர்களுக்குச் சோறு, தேவர்களுக்கு அம்ருதம், இவ
ளுக்கு க்ருஷ்ணன். [கண்ணபிரான்] - பரார்த்தமாகத் தன்னையாக்கி வைக்குமவன்.
[நீர்] - அந்வயத்தில் ரஸமறியும் நீங்கள், வ்யதிரேகத்தில் நோவு அறியவேண்டாவோ?
[வரக்கூவுகிலீர்] - நீங்கள் அவன்முன்னே சென்று த்வநித்திகோளாகில் அத்தாலே
என்செல்லாமையை நினைத்துவாரானோ? அது செய்கிறிலீகோள்; என்னை நலிகைக்கு
வேண்டுவது செய்கிறிகோள் அத்தனை; நானும் அவனுஞ் சேருகைக்கு வேண்டுவது
செய்கிறிலீகோள். அழிக்கவல்லவை சேர்க்கவும்வற்று என்றிருக்கிறாள். அவன்கார்யம்
இவற்றின் கையது என்றிருக்கிறாள். ஶடகரானவர்கள் பாதகரேயாகிலும் ரக்ஷ
கர் என்றிறேயிருப்பது. [என்னுயிர் இத்யாதி] - என்னையும் அவனையுஞ் சேர்க்கிறிலீ
கோள்; அல்லாதபின்பு, இனி என்னை முடிக்கைபாயிருந்ததிறே உங்களுக்குக் கருத்து;
அதுக்கு இப்பாரிப்பெல்லாம் வேணுமோ? பண்டே சென்றற்ற என்னுயிரைவாங்கி
அவன்கையிலே கொடுக்கையாகில் கருத்து. அதுக்கு இதெல்லாம் வேணுமோ? நீங்
கள் சேரவிருக்கையும் கலக்கையும் அந்யோந்யம் நாமக்ரஹணம்பண்ணுகையும், ப்ரணய
ஶப்தஶப்தத்வநியும் இதெல்லாம் வேணுமோ? நொந்தாரை ஜீவிப்பிக்கையன்றோ அரி
யது? முடிக்கையிற் பணியுண்டோ?

ஈடு.—முதற்பாட்டு. சில குயிற்பேடைகளைக்குறித்து, என்னை முடிக்கைக்கு
இத்தனை பாரிப்பு வேணுமோ? என்கிறாள்.

---

முதற்பாட்டு - இன்னுயிர் இத்யாதி. “குயிற்பேடைகாள் - என்னுயிர் கூவிக்கொடுப்
பார்க்குமித்தனைவேண்டுமோ” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - சிலகுயில் இத்யாதி.

[இன்னுயிர்ச்சேவலும்] - நற்சேவலான சேவலும். ஸ்வப்ராணனைப் போலே கண்வட்டத்திலே வர்த்தியாநிற்கை. பிரிந்து படுதலையடிக்கும் சேவலைப்போலன்றிக்கே, பேடைக்கு தாரகமாயிருக்கும் சேவலும் உண்டாகாதே! போக்யமுமாய் தாரகமுமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே! [நீரும்] - சேவலுக்குஇன்னுயிரான நீரும். [கூவிக்கொண்டு] - சேர்த்தியைக்காட்டி நலிகிறதுக்கு மேலே, பேச்சாலும் நலிய வேணுமோ? ஸம்ஶ்லேஷார்த்தமாக பரஸ்பரநாமக்ரஹணம் பண்ணிக்கொண்டு. [இங்கு எத்தனை] - இங்கு அத்தனைக்கு விஷயமுண்டோ? இங்குப்பிரிவாலே சென்றற்றது. உங்கள் பாரிப்புக்கு விஷயமுண்டோ? "[illegible]" (அதிகம்ஸோபதே) என்னுமாபோலே நலியாநின்றதாயிற்று; அன்றிக்கே, [எத்தனையென்னுயிர்நோவமிழற்றேல்மின்] - பிரிவிலே தளர்ந்திருக்கிற என்னுயிர்நோவ மிகவும்ப்ரணயகூஜிதத்தைப்பண்ணுதேகோள்ளுங்கோள். "உயிர்நோவ" என்கையாலே-உடல் பண்டேசென்றற்றதென்கை.ராமஶரம் போலே உயிரிலேபுக்குவ்யாபரிக்கவும்வற்றாயிற்று இந்தத்வநி. "என்னுயிர்" என்கையாலே இவற்றின்பேச்சுக்கேட்கத்தளிர்க்குமவனில் வ்யாவ்ருத்தி. மிழற்றுகையாவது-நிரம்பாமென்சொல்; ஸம்ஶ்லேஷதஶையில் சொல்லத்தொடங்கித் தலைக்கட்டாதபேச்சுக்கள். [நோவமிழற்றேல்மின்]-இப்பேச்சு இவள் செவிப்படில் முடியுமென்றறிந்து, பேசாதிருக்க வேண்டாவோ? ஸ்த்ரீவதமென்றறிந்தால் மீளவேண்டாவோ? [குயிற்பேடைகாள்]-விஜா

---

இன்னுயிரான சேவலென்கிறார் - நற்சேவலான் இத்யாதி. விவரணம் - ஸ்வப்ராண இத்யாதி. பேடை கண்வட்டத்தைவிடாதே வர்த்திக்கிறவையைப்பற்ற "நற்சேவல்" என்கிறதென்றபடி. இதுக்கு ஹார்த்தஹாவம் - பிரிந்து இத்யாதி. படுதலையடிக்கும் - ஹிம்ஸிக்கும். இனிதுமாய் உயிருமான சேவலென்றர்த்தாந்தரம் - போக்யமுமாய் இத்யாதி. பேச்சு, நலிவானபடியைக் காட்டாநின்றுகொண்டு, பர்யார்த்தம் - ஸம்ஶ்லேஷார்த்தமாக இத்யாதி. "இங்கு" என்றது - என்னிடத்திலே என்றபடியாய், "எத்தனை" என்று - அல்பமாய், உங்கள் பாரிப்புக்கு அல்பமும் விஷயமில்லையென்று முந்தினவர்த்தம் - இங்குஅத்தனைக்கு இத்யாதி. அத்தனைக்கு - சேர்த்திக்கும் நாமக்ரஹணத்துக்கும். "அத்தனைக்கு விஷயம்" என்றதின்விவரணம் - இங்குப்பிரிவாலே இத்யாதி. இவைதன்னை நலிகையாவது - அத்தலையை ஸ்மரிப்பித்து பாதகமாகையாலே, அத்தை உதாஹரணபூர்வகமாகத் தெரிவிக்கிறார்-அதிகம் இத்யாதி."[illegible]" இதி கிஷ்கிந்தாகாண்டே ப்ரதமே. (௧௦௦) "[illegible]" என்கையாலே - விஷயத்தினளவல்லாத பாதகத்வஞ்சொல்லுகிறது. இரண்டாம்அர்த்தம் - அன்றிக்கே எத்தனை இத்யாதி. அதாவது - "இங்கு" என்று - இந்தஸ்தலமாய், "எத்தனை" என்று - மிகுதியாய், என்னுயிர்நோவ இந்தஸ்தலத்திலே மிகவும் மிழற்றேல்மின் என்றபடி. இந்த அர்த்தத்துக்கு, "எத்தனை" என்றது-"மிழற்றேல்மின்" என்றத்தோடே அந்வயிப்பது. "என்னுயிர்" என்கிறதுக்கு அர்த்தகதனபூர்வகமாக நிஷ்கர்ஷவிவரணம் - பிரிவிலே இத்யாதி. "உயிர்நோவ" என்றதுக்குவாவை - உயிர்நோவ இத்யாதி. "உயிர்நோவ" என்றதுக்குஹாவார்த்தம் - ராமஶரம்போலே இத்யாதி. அதாவது - உடல்குறியழியாதிருக்க உயிரிலே நலியவற்றென்றபடி. "என்னுயிர்" என்றதுக்கு வ்யாவர்த்த்யம் - என்னுயிரென்கையாலே இத்யாதி. † "மிழற்றலும் மிழற்றலும் நிரம்பாமென்சொல்." நிரம்பாமென்சொல் என்றது - அர்த்தோக்தியான ம்ருதுஸம்பாஷணம். "நிரம்பாமென்சொல்" என்றதின்விவரணம் - ஸம்ஶ்லேஷதஶையில் இத்யாதி. எங்களுக்கு ப்ரக்ருதியான மிழற்றுதலைத்தவிரப்போமோவென்ன - இப்பேச்சு இத்யாதி. விவரணம் - ஸ்த்ரீவதமும் இத்யாதி. "பேடைகாள்" என்றதுக்குஹாவம் - விஜாதியர் இத்யாதி. விஜாதியர் - புமான்கள். சேவலைக்

---

† திவாகரம்—(௧௦-ந் தொகுதி.

தீயர்செய்வதை நீங்களுஞ்செய்யவேணுமோ? சேவலைக்கொண்டு கார்யங்கொள்ளநினைத்தாலும் பேடையின்காலையிறே பிடிப்பது. [என்னுயிர்க் கண்ணபிரானை] - "எங்களை யாதுகரைச்சொல்லுமாபோலே சொல்லுகிறதென்?" என்றினவாகக்கொண்டு; எனக்கு தாரகனை க்ருஷ்ணனை வரக்கூவுகிறிலீகோள். தாரகங்கள், வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதங்களாயிறேயிருப்பது. திர்யக்குக்களுக்கு த்ருணம், மநுஷ்யர்களுக்கு அந்நம், தேவர்களுக்கு அம்ருதம், இவளுக்கு க்ருஷ்ணன்; * எல்லாங்கண்ணனிறே. [கண்ணபிரான்] - பாரார்த்யமாகத் தன்னை ஒக்கிவைக்குமவன். [நீர்] - அந்வயத்தில் ரஸமறியும் நீங்கள், வ்யதிரேகத்தில் நோவுமறியவேண்டாவோ? [வரக்கூவுகிலீர்] - நீங்கள் அவன்முன்னேசென்று யாசித்திகோளாகில், தானேசெல்லாமையை நினைத்துவாரானோ? அதுசெய்கிறிலீகோள். என்னைநலியவேண்டுவன செய்திகோள் இத்தனை. நானும்அவனும் சேருகைக்குவேண்டுவன செய்திலீகோள். அழிக்கவல்லவை சேர்க்கவும்வற்று என்றிருக்கிறார். இவற்றின்வாயது வாணாளென்றிருக்கிறாள். [என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ] - என்னையும் அவனையுஞ்சேர்க்கிறிகோளல்லாதபின்பு, இனிஎன்னைமுடிக்கையாயிருந்ததிறே உங்களுக்குக்கருத்து; அதுக்கு இப்பாரிப்பெல்லாம்வேணுமோ? பண்டேசென்றற்றஎன்னுயிரைவாங்கி அவன்கையிலே கொடுக்கையாகில்கருத்து, அதுக்கு இதெல்லாம்வேணுமோ? நீங்கள்சேரவிருக்கையும், கலக்கையும் அந்யோந்ய நாமக்ரஹணம் பண்ணுகையும் ப்ரணயகத்கதத்வநியும், இதெல்லாம்வேணுமோ? நொந்தாரைஜீவிப்பிக்கையன்றோஅரிது? முடிக்கையில் பணியுண்டோ?

## இரண்டாம் பாட்டு.

இத்தனைவேண்டுவதன்றந்தோ! அன்றிற்பேடைகாள்!
எத்தனைநீரும்நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்
வித்தகன்கோவிந்தன்மெய்யல்லனொருவர்க்கும்
அத்தனையாம்இனியென்னுயிர்அவன்கையதே.

---

கொண்டு கார்யங்கொள்ள நினைத்தமைதோற்ற "இன்னுயிர்ச்சேவல்" என்று முந்துறவெடுத்து, இங்கே "பேடைகாள்" என்றதை ப்ரதாநமாகச்சொல்லுவானென்? என்ன - சேவலை இத்யாதி. "கூவுகிலீர்" என்றதற்கு அவதாரிகை - எங்களை இத்யாதி. என்றினவாக - என்று சொன்னதுகளாக. இவளுக்குக்ருஷ்ணன் தாரகமானபடியென்? என்ன - தாரகங்கள் இத்யாதி. "வ்யவஸ்த்திதங்கள்" என்றதைக்காட்டுகிறார் - திர்யக்குக்களுக்கு இத்யாதி. "இவளுக்கு க்ருஷ்ணன்" என்னுமதுக்கு ப்ரமாணம் - எல்லாம் இத்யாதி. "பிரான்" என்றதுக்கர்த்தம் - பாரார்த்யமாக இத்யாதி. உனக்கு பாதகமாகிறது எங்களுக்குத்தெரியுமோவென்ன - அந்வயத்தில் இத்யாதி. அந்வயம் - ஸம்ச்லேஷம். வ்யதிரேகம் - விச்லேஷம். நாங்கள்கூவினால் அவன் வருவனோ? என்ன - நீங்கள் இத்யாதி. விவரணம் - என்னைநலிய இத்யாதிவாக்யத்வயம். பக்ஷிகள் சேர்ப்பிக்கவற்றோவென்ன - அழிக்கவல்லவை இத்யாதி. விவரணம் - இவற்றின் இத்யாதி. வாயதுவாணாள் - என்றது - வார்த்தையாலேவாழும்நாளான ஆயுஸ்ஸென்றபடி. நாங்கள்முடிக்க வந்ததுக்கு நியாமகமேதென்ன - என்னையும் இத்யாதி. ஸப்தார்த்தம் - பண்டே இத்யாதி. கீழெல்லாவற்றை ஸங்க்ரஹித்து "இதெல்லாம்" என்றதைக்காட்டுகிறார் - நீங்கள் இத்யாதி. "வேண்டுமோ?" என்ற ஸ்வரத்துக்கு பாவம் - நொந்தாரை இத்யாதி. குயிற்பேடைகாள் - இன்னுயிர்ச்சேவலும் இத்யாரப்யாந்வய:

(க)

ஆ.—(இத்தனை.) - "அன்றிற்பேடைகாள்! நீரும் நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்; என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கும் இத்தனை வேண்டுவதில்லை" என்று சொல்ல, அவையும், "உன்னோடுள்ளகலவியே தாரகமாயிருக்கிறவன் ஒருக்ஷணம் உன்னைப்பிரியுமளவில் அவனை இங்ஙனே கொடுமை சொல்லவேணுமோ? தானேவருகிறானிறே!" என்ன; "அவன் அங்ஙனே ப்ரணயஸ்வபாவனைப்போலேயிருக்குமத்தனை காண்! அவனொருவர்க்கும் மெய்யாக ஸ்நேஹியல்லன்; ஆனபின்பு, அவன்வருகையென்றொரு பொருளுண்டோ? இனியென்னுயிரானது முடிந்ததிறே?" என்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், 'உங்கள் சேவலும் நீங்களுமாய்க்கொண்டு ப்ரணயகூஜிதங்களாலே என்னைநலியாதே கொள்ளுங்கோள்!' என்று சிலவன்றிற்பேடைகளை தயநீயமாக இரக்கிறாள்.

[அன்றிற்பேடைகாள்] - 'பெண்பிறந்திரல்லீரோ? [எத்தனைநீரும் நுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்] - நாங்களென்செய்தோம்?' என்ன, மிகவும் கரைந்து ஏங்காநின்றீர்கோள். [வித்தகன் கோவிந்தன் மெய்யனல்லனொருவர்க்கும்] - 'உன்னோடுள்ள கலவியே தாரகமாயிருக்கிற அவன் ஒருக்ஷணமும் பிரியுமளவில் அங்ஙனே எங்களைவிட்டு நலிவிக்கிறானைக் கொடுமை சொல்லவேணுமோ? அவன்தானே வருகிறானிறே' என்ன,- அவன் அங்ஙனே ப்ரணயஸ்வபாவரைப்போலே இருக்குமத்தனை. [ஒருவர்க்கும் மெய்யனல்லன்] - உங்களுக்கும் இத்தனையே வலிப்பது. [அத்தனையாம் இனியென்னுயிர் அவன்கையதே] - இப்படிச் சொல்லவும் அவைவிடாதே கூவப்புக்கவாறே முடிந்தேனாகாதே என்கிறாள்.

ப.—அநந்தரம், பசுக்களுக்கும் ரக்ஷகனாம்படி ஸுசீலனான க்ருஷ்ணனை மெய்யனாகநினைத்து, என்னை யவனுக்காக என்செய்ய நலிகிறீர்கோளென்று, சிலஅன்றிற்பேடைகளைச்சொல்லுகிறாள்.

அன்றிற்பேடைகாள் - (பிரிவில் தரிக்கமாட்டாத ஸ்வபாவத்தையுடைய) அன்றிற்பேடைகாள்! நீரும் - (சேவலின் நினைவறிந்து பரிமாறும்) நீங்களும், நுஞ்சேவலும் - (உங்கள் நினைவறிந்து பரிமாறும்) சேவலுமாய்க்கொண்டு, எத்தனை - எத்தனை ப்ரகாரம், கரைந்து - ஸம்ச்லேஷரஸத்தாலே புலம்பி, ஏங்குதிர் - சப்திக்கிறீர்கோள்? இத்தனை - இத்தனைப்ரவ்ருத்தி, வேண்டுவதன்று - ; அந்தோ -! (என்னை நலியும்படி யுங்களைவரக்காட்டின), வித்தகன் - விஸ்மயநீய சேஷ்டிதனாய், கோவிந்தன் - பசுக்களையும் ரக்ஷிக்குமவனென்கிற ஸௌசீல்யத்தை ப்ரகாசிப்பித்து லோகத்தை வசீகரிக்கும் க்ருஷ்ணனானவன், ஒருவர்க்கும் - (நாட்டோடு நல்லவர்களோடுவாசியற) ஒருவர்க்கும், மெய்யன் அல்லன் - மெய் பரிமாறுவானொருவனல்லன்; (ஆனபின்பு, அவன் நினைவின்படி உங்கள் ப்ரவ்ருத்தியுண்டாகையாலே), இனி என்னுயிர் - இனி என்ப்ராணனானது, அவன்கையதே ஆம் அத்தனை -.

இ.—இரண்டாம்பாட்டில், சில அன்றிற்பேடைகளைக் குறித்து, உங்கள் சேவலும் நீங்களுமாய்ப் ப்ரணயகூஜிதங்களாலே என்னை நலிகிறதென்? என்கிறாள்.

[இத்தனை வேண்டுவதன்று] - என்னைமுடிக்கைக்கு இத்தனை வேண்டுவதில்லை. குயில்களைப்பார்த்து "இத்தனை வேண்டுமோ?" என்னாநிற்க, இடையிலே அன்றில்களினுடைய த்வநி நலிய, 'இத்தனைவேண்டா' என்னவேண்டும்படியிறே இவள்

தமை. குயில்களினுடைய த்வநியிலே பணிபோந்து செல்லாநிற்க நடுவே, † ஒளியம்பு விடுவாரைப்போலே அன்றில்கள் த்வநிக்க, புரிந்துபார்த்து, இவையமையாதோ! நீங்களும் வேணுமோ! என்கிறாளிறே. இப்படி சொன்னவிடத்திலும் மேன்மேலென த்வநிக்கத் தொடங்கிற்று; அதிலேதான் சோர்ந்து பரவசமாத்ரையாய், "ஐயோ!" என்கிறாள். [அன்றிற்பேடைகாள்] - குயிற்பேடைகளிற்காட்டில் உங்கள்பக்கல் ஒரு வாசிகண்டிலோம்; அவற்றிற்காட்டில் வ்யதிரேகத்தில் ஆற்றாமைமிக்கிறே யிவற்றுக் கிருப்பது. உங்கள்சேவலிற்காட்டிலும் ஒருவாசிகண்டிலோம்; குயிற்பேடைகளிற் காட்டிலும் ஒருவாசி கண்டிலோம். நலிவுக்கு விஜாதியரிலுமவ்வருகாய், ஸஜாதியரிலும் அவ்வருக யிருந்தீகோள். "நாங்கள் என்செய்தோம்" என்ன? - [எத்தனைநீரும் நுஞ் சேவலுங் கரைந்தேங்குதிர்]-[நீரும்]-சேவலினுடைய கருத்தறிந்து பரிமாறுகிறநீரும். [நுஞ்சேவலும]-உங்கள் கருத்தறிந்து பரிமாறுகிற உங்கள்சேவலும். [எத்தனைகரைந் தேங்குதிர்] - ப்ரணயத்திலே இழிந்தமைதோற்றப் பரிமாறுகின்றீகோள். இருவர் கூடக்கலக்கும் ஸமயமோவிது? என்னை நலிகைக்காகக் கலந்துகொளித்தனை யன்றோ; கலந்தால்தான் உங்கள்நினைவுதோற்ற வாய்விடவேணுமோ! உங்களை யழியமாறியன்றோ என்னைநலிகிறது. [வித்தகன் இத்யாதி] - "அவனொரு க்ஷணகாலம் தாழ்க்குமளவில் எங்களையிட்டு அவன் நலிவிக்கிறானாகச் சொல்லவேணுமோ?" என்ன, அவன்படிகளை என்வாயிலே கேளுங்கோளென்கிறாள். வித்தகன் - விஸ்மயநீயன். இப்போது அநுகூலர்க்கு அரியவித்தகனாயிருந்தவன். கோவிந்தன் - ஸர்வரக்ஷகன். இத்தால் ரக்ஷக ராவாரைப்போலேயிருந்து பாதகனுமவன். ரக்ஷகனென்று பற்றப்போகாது; பாதக னென்று விடப்போகாது. [மெய்யனல்லனொருவர்க்கும்] - "பரமப்ரணயி, ஸர்வ ரக்ஷகன்" என்றிருக்கிற உங்களுக்கும் பொய்யே ஸித்திப்பது. "ராமோ த்விர்நாபிபா ஷதே" "ஸக்ருதேவ," "அநந்தம்" என்னும் ராமாவதாரத்தைப்போலேயிறே நீங்கள் நினைத்திருக்கிறது; கபர்த்தனுக்கும் மெய்சொல்லி, திருவடிக்கும் மெய்சொல்லு மவனல்லனே! "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும், பகலையிரவாக்குகையு மிறே இவ்வவதாரத்தில் க்ருத்யம். இப்படி சொல்லவும் அவைவிடாதே கூவிற்றின; முடிந்தேனாகாதே! என்கிறாள். [அத்தனையாம் இனி] - இனி, அத்தனையாகாதே என் கிறாள். [என்னுயிர் அவன்கையதே] - என்னுடைய ப்ராணனானது அவன் கைப்பட் டது. அவனன்னேயாய்த் தலைக்கட்டினபின்பு, என்னுடைய ப்ராணரக்ஷணத்துக்கு உங்கள் கால்பிடிக்க வேண்டாவாகாதே.

ஈடு.—இரண்டாம் பாட்டு. சிலஅன்றிற்பேடைகளைக்குறித்து, உங்கள்சேவல் களும் நீங்களுமாய் ப்ரணயகூஜிதங்களாலே என்னை நலிகிறதேன்? என்கிறாள்.

[இத்தனைவேண்டுவதன்று] - என்னைமுடிக்கைக்கு இத்தனைவேண்டுவதில்லை. குயில்களைப்பார்த்து, "இத்தனைவேண்டுமோ!" என்றுநிற்கச்செய்தே, இடையிலே அன்றி

---

இரண்டாம் பாட்டு - இத்தனை இத்யாதி. "அந்தோவன்றிற்பேடைகாள் எத்தனைநீரும் நுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்" என்றவர்களைக்குறித்தவதாரிகை - சிலஅன்றில் இத்யாதி.

நீழே குயிலுக்குச்சொன்ன வார்த்தையையே அன்றில்களுக்கும் சொல்லுவானென்? என்ன - குயில்களை இத்யாதி. அதாவது - ஆற்றாமையின் அதிசயத்தாலேயென்றபடி. ஸ

---

† ஒளியம்பு - மறைந்திருந்து எய்யும் அம்பு.

லினுடைய த்வநி நலிய, அப்பாசுரமே இவற்றுக்குச்சொல்லவேண்டும்படியிறே பிறந்த தசை. மஹாராஜரும் வாலியும் போராநிற்க நடுவே ஒளியிட்டாகப் பெருமாள்விட்டாற்போலே, குயில்களும் இவளுக்காய் "கூவாதே கொள்ளுங்கோள்" என்பது அவையுயரக்கூவுவது ஆகாநிற்கச்செய்தே, நடுவே அன்றிலானது, செவிவழியே நெருப்பையுருக்கி வார்த்தாற்போலே த்வநிக்க, புரிந்துபார்த்து, "இவையே யமையாதோ! நீங்களும் வேணுமோ!" என்கிறாள். இவள் இப்படி சொல்லச்செய்தேயும் த்வநிக்கத்தொடங்கிற்று. [அந்தோ!] - "சரணம்" என்றவாயை அம்பாலே நிறைப்பாரைப்போலே, உங்கள்படியிருந்தபடியென்! ஐயோ! என்கிறாள். [அன்றிற்பேடைகாள்] - குயிற்பேடைகளிற்காட்டில் உங்களுக்குஒருவாசிகண்டிலோம். உங்கள் சேவலிற்காட்டில் ஒருவாசியும் கண்டிலோம். நலிகைக்கு, ஸஜாதீயரிலும் விஜாதீயரிலும் அவ்வருகாயிருந்தீர்கோள். "நாங்கள் என் செய்தோம்?" என்ன, - [எத்தனை] - மிகவும். [நீரும் நுஞ்சேவலும்] - சேவலின் கருத்தறிந்து நடத்துகிற நீரும், உங்கள்கருத்தறிந்து பரிமாறுகிற உங்கள் சேவலும். "அந்தர்ஜாதமபிவ்யக்தம்" (அந்தர்ஜாதமபிவ்யக்தம்) என்னுமாபோலே, பேடையின்கருத்தறிந்து பரிமாறுகின்றதாயிற்றுச் சேவல். [கரைந்தேங்குதிர்] - பிறரை நலிகைக்காகத் தந்தாமை யழித்துக்கொள்வாருண்டாகாதே! ப்ரணயதாரையில் தானழிந்தமைதோற்றப் பரிமாறுகின்றன. இருவர் கூடக்கலக்கும் ஸமயமோ இது? கலந்தாற்றான், உங்கள் தசைதோற்ற வாய்விடவேணுமோ? [வித்தகன் இத்யாதி] - "அவன்

---

*த்ருஷ்டாந்தமாக விவரணமாதல், "இத்தனைவேண்டுவதன்று" என்றதுக்கு ஸாவதாரமாதல் - மஹாராஜரும் இத்யாதி. இவையே யமையாதோவென்றது - குயில்களேயமையாதோவென்றபடி. "அந்தோ!" என்றதுக்கவதாரிகை - இவளிப்படி இத்யாதி. "அந்தோ!" என்றதுக்கு வாஸனை - சரணம் இத்யாதி. இதுக்குபாவம் - குயிற்பேடைகளில் இத்யாதி. அதாவது - குயிற்பேடைகளைப்பற்ற அன்றிற்பேடைகளுக்கு, வாயலகு நெகிழ்க்கிலும் பொறுக்கமாட்டாத விஶ்லேஷாஸஹிஷ்ணுத்வமுண்டாகையாலே, அந்தவாசியைக் கண்டிலோமென்றபடி. "பேடைகாள்" என்றதுக்குபாவம் - உங்கள்சேவலில் இத்யாதி. அதாவது - சேவல் புமானாகையாலே, கடிநப்ரக்ருதியாய்ப் பெண்ணினுடைய வ்யஸநமறியாத ஆகாரத்தையுடையனாயிருக்கும்; அப்படியன்றிக்கே, பெண்கள்படும் வ்யஸநம் பெண்களுக்குத்தெரிந்தபடியான ஏற்றமுண்டே உங்களுக்கு. இப்போது நிர்த்தயமாய் நலிகையாலே அந்தவாசிகண்டிலோமென்றபடி. விவரணம் - நலிகைக்கு இத்யாதி. ஸஜாதீயர் - குயிற்பேடைகள். விஜாதீயர் - சேவல்கள். பேடையின்கருத்தறிந்து பரிமாறுகைக்கு த்ருஷ்டாந்தம் - அந்தர்ஜாதம் இத்யாதி. "தஸ்யாஶ்ச ராமோ த்விகுணம் ஹ்ருதயே பரிவர்த்ததே । அந்தர்ஜாதமபிவ்யக்தமாக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா । தஸ்ய பூயோ விஶேஷேண மைதிலீ ஜநகாத்மஜா" இதி பாலகாண்டே ஸர்கே. (எ) "தஸ்யாஶ்ச: தஸ்யாஶ்ச ஹ்ருதயே ராம:, த்விகுணம் - ப்ருஶம், பரிவர்த்ததே; தஸ்மாத் ராம:, தஸ்யா: அந்தர்ஜாதமபிஹ்ருதயம் - அபிப்ராயம், ஹ்ருதா - மநஸா, வ்யக்தமாக்யாதி - ஜாநாதி. தஸ்ய - ராமஸ்ய, ஹ்ருதயே, மைதிலீ, பூயோவிஶேஷேண - அதிஶயேந, பரிவர்த்ததே; தஸ்மாத், தஸ்ய-ராமஸ்ய, ஹ்ருதயம் - அபிப்ராயம், மைதிலீ, மநஸா, ஆக்யாதி - ஜாநாதி, ஏதது க்தம்பவதி: - பரஸ்பரஹ்ருதயாந்தர்வர்த்திநோ பரஸ்பரபாவம் உபாஜாநீத இத்யர்த்த இதி" என்றுஉடால். "கரைந்து" என்றதுக்குபாவம் - பிறரை இத்யாதி. "ஏங்குதிர்" என்றதுக்குபாவம் - ப்ரணயதாரையில் இத்யா. கரைந்து - ஈடுபட்டு. ஏங்குதிர் - ஶோகாதிசயத்தாலே வார்த்தை சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே நடுங்குதிர். இதுக்குபாவம் - இருவர்கூட இத்யாதிவாக்யத்வயம். கலக்கும் ஸமயமோ இது என்றது - தன்தசையைப்பற்ற. வாய்விடவேணுமோவென்றது - "ஏங்குதிர்"*

+ ஒரு க்ஷணகாலம் தாழ்க்குமாகில் எங்களைவிட்டு அவன் நலிகிறானாகச்சொல்ல வேணுமோ?'' என்ன; அவன்படிகளையுட்டக்க என்பக்கலிலேகேளுங்கோள்! [வித்தகன்] - விஸ்மயநீயன். இப்போது, அநுகூலர்க்கு * அரியவித்தகன். [கோவிந்தன்] - ஸர்வ ரக்ஷகன். இத்தால் - ஸர்வரக்ஷகரைப்போலேயிருந்து வாதகனுமவன். ரக்ஷகனென்று பற்றப்போகாது, வாதகனென்று விடப்போகாது. [மெய்யனல்லனொருவர்க்கும்] - "பரம ப்ரணயி, ஸர்வரக்ஷகன்" என்றுநினைத்து அவன்கார்யம் செய்யப்போந்த உங்களுக்கும் பொய்யே பலிப்பது. "ராமோ த்விர் நாபிபாஷதே," (ராமோத்விர்நாபிபாஷதே) "நத்ருதம் பூர்வம்," (நத்பஜேயம்) "ஏதத்வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம்மம) என்னும் ராமாவ தாரம்போலேயேன்றிறே நீங்கள் நினைத்திருக்கிறது; பகலையிரவாக்குவது, "ஆயுதமெடேன்" என்றுஆயுதமெடுப்பதாகையிறே இவ்வவதாரத்துக்கு க்ருத்யம். "ராமாவதாரத்தில் மெய்யும், க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே, ஆஸ்ரிதர்க்குத்தஞ்சம்; அவன் பொய்யனாகிலென்? மெய்யனாகிலென்? இருந்தபடி யுகக்குமத்தனையன்றோ நாங்கள்"என்றுதொடங்கின கார்யத் திலே மூதிரநின்றன. [அத்தனையாம் இனி] - இனியத்தனையாகாதே! இவற்றின் ஒருப்பா டிருந்தபடியால், அவன்நினைவே தலைக்கட்டிவிட்டதாகாதே! என்கிறாள். என்ப்ராணன் அவன்கைப்பட்டபின்பு, என்னுடைய ரக்ஷணத்துக்கு உங்கள் கால்பிடிக்கவேண்டாவே?

---

என்றத்தைப்பற்ற. பரமப்ரணயியாய் ஸர்வரக்ஷகனை - அவன் ஒருக்ஷணகாலம் தாழ்க்குமளவில் என்று கூட்டுவது. "விஸ்மயநீயன்" என்றத்தாலே அவனுடைய காபட்யம் சொல்லிற்றாகிறதென்ன - இப்போது இத்யாதி. * பிரகடகரியவித்தகனன்றிக்கே, இப்போது அநுகூலர்க்கு * அரியவித்தகனென்றபடி. ஸர்வரக்ஷகத்வம் காபட்யமல்லவேயென்ன - ஸர்வரக்ஷகன் இத்யாதி. மேலே, "மெய்யனல்லன்" என்றிருக்கையாலே, "வித்தகன்-" ப்ரணயிபோலே யிருக்கிறானேயொழிய அநுகூலர்க்கு ப்ரணயியல்ல, தூர்லபனென்றும், "கோவிந்தன்" - 'ரக்ஷகரைப்போலே இருந்து வாதகனுமவன்' என்றும், வ்யங்க்யமாக வ்யாக்யாநம் பண்ணுகிறார். "கோவிந்தன்" என்ற துக்கு பலிதம் - ரக்ஷகனென்று இத்யாதி. ரக்ஷகனென்று பற்றப்போகாது, இப்போது வாதக னாகையாலே; வாதகனென்றுவிடப்போகாது, முன்பு பசுக்களை ரக்ஷிக்கையாலே. "ஒருவர்க் கும்" என்ற சப்தத்துக்கு பாவம் - பரமப்ரணயி இத்யாதி. "வித்தகன்" என்றத்தைப்பற்ற - பரமப்ரணயியென்றது. "கோவிந்தன் மெய்யனல்லன்" என்று கூட்டி பாவம்-ராமோத்விர் இத்யாதி. "அநுருதமுக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந । ஏஷ மே ஹி பரா ப்ரதிஜ்ஞா ராமோ த்விர் நாபிபாஷதே" இதி கைகேயீம் ப்ரதி ராம:. (அயோத்யா ௧௮-௩௦) "அவன்வஞ்சகன்" என்னுமத்தை அவன் செயலே ஸ்தாபிக்குமென்கிறார் - பகலை இத்யாதி. மேலுக்கவதாரிகை - ராமாவதாரத்தில் இத்யாதி. 'ஆஸ்ரிதர்க்குத்தஞ்சம்' என்றவநந்தரம், "ஆகையாலே" என்றுகூட்டுவது. தொடங்கினகார்யத்தில் - இவளை நலிகையில். விவரணம் - இவற்றினொருப்பாடு இத்யாதி. ஒருப்பாடு - உத்யோகம். "என்னுயிர் அவன்கையதே" என்றதுக்கு பாவம் - என் ப்ராணன் இத்யாதி. 'அன்றிற்பெடைகாள், எத்தனை நீரும் நீஞ்சேவலும் கரைந்தேங்குதிர் - இத்தனைவேண் டுவதன்று அந்தோ! வித்தகன் கோவிந்தன் - ஒருவர்க்கும் - மெய்யனல்லன்; இனியென்னுயிர் அவன்கையதே யாமத்தனை' என்று அந்வயம். (௨)

---

+ 'க்ஷணம் கால் தாழ்க்குமளவில்' என்று பாடாந்தரம்.

## மூன்றாம் பாட்டு.

அவன்கையதேயெனதாருயிர் அன்றிற்பேடைகாள்!
†எவன்சொல்லிநீர்குடைந்தாடுதிர் புடைசூழவே
தவஞ்செய்திலா வினையாட்டியேனுயிரங்குண்டோ?
†எவன்சொல்லிநிற்றும்? நும்மேங்குகூக்குரல்கேட்டுமே.

**ஆ.**—(அவன்கையதே.) - எம்பெருமானோடே கலந்து பரிமாறுகைக்கு பாக்ய ஹீனையான என்னுயிர், நும் ஏங்குகூக்குரல்கேட்டு மயங்கிக் கிடக்கச்செய்தே, அதின் மேலே எத்தனுஞ்சொல்லிக்கொண்டு வன் குடைந்து ஆடுகிறீர்கோள் என்னருகே நின்று? என்கிறாள்.

ஒ—மூன்றாம்பாட்டில், அற நோவுபட்ட என்னை நலியாதே கொள்ளுங்கோள் என்று அன்றிற்பேடைகளை மீளவும் இரக்கிறாள்.

[அவன்கையதே யென்று தொடங்கி] - அன்றிற்பேடைகாள்! என்னுடைய ப்ராணன் அவன்கையிலேயா யிருக்கச்செய்தே என்னை "முடிக்கவேணும்" என்று எனக்கு உத்ஸஹமாம்படி ப்ரணய ரோஷத்திலேயுள்ளன சில உக்திகளைப் பண்ணிக் கொண்டு ஒன்றிலொன்று அவகாஹித்து ஸஞ்சரியா நின்றீர்கோள்; உங்களுக்கு நலியலாம்படி ப்ராணனைத் தருகைக்கிடான பாக்யத்தைப் பண்ணியிருக்கிற என்னுடைய ப்ராணன் என்பக்கல் உண்டோ? தவஞ்செய்திலா வினையாட்டியேனென்கிறது-விச்லேஷித்தாலும் அவனைப்போலே தரித்திருக்கைக்கு பாக்யம் பண்ணிற்றிலேனென்றுமாம். [எவனென்று தொடங்கி] - ப்ரணயபரவசமாய்க்கொண்டு ப்ரவ்ருத்தமான உங்களுடைய த்வநியைக்கேட்டு எத்தைச்சொல்லி தரிப்போம்.

ப.—அநந்தரம், அவனுடைய விச்லேஷாதிசயத்தாலே ஆக்ருஷ்டப்ராணை யாயிருக்கிற நான் உங்கள் சப்தத்தைக்கேட்டும் எத்தைச்சொல்லி தரிப்பேனென்று, பின்னையும் அவ்வன்றிற்பேடைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

அன்றிற்பேடைகாள் -! அவன்கையதே - அந்த ஸர்வேச்வரனான கோவிந்தன் கையதே, எனது ஆர்உயிர் - என்னுடைய ப்ராணனானது; நீர் - நீங்கள், எவன்சொல்லி - எத்தனை உக்திவிசேஷங்களைப்பண்ணி, குடைந்து - ஒன்றைக்கொன்று உள்ளேயாம்படி ஸம்ச்லேஷித்து, புடைசூழவே - என்னுடையபரிஸரத்திலே, ஆடுதிர் - ஸஞ்சரிக்கிறீர்கோள்! தவம் - அவனைப்போலே பிரிவுக்காற்றியிருக்கும் பாக்யத்தை, செய்திலா - பண்ணாதே, வினையாட்டியேன் - போலிகண்டுநடும்படியான பாபத்தைப்பண்ணின என்னுடைய, உயிர் - ப்ராணன், (அங்கே போனபடியாலே), இங்கு உண்டோ-? நும் - உங்களுடைய, ஏங்கு - ஸம்ச்லேஷசிதிலமான, கூக்குரல் - சப்தங்களை கேட்டும், எவன் - எத்தை, சொல்லி நிற்றும் - சொல்லிநிற்பது?

இ.—மூன்றாம்பாட்டில், அற நோவுபட்ட என்னை நலியாதே கொள்ளுங்கோள் என்று அன்றிற்பேடைகளையே திரியவும் இரக்கிறாள்.

† 'எவம்' என்று வழக்கும்,

[அவன்கையதே எனதாருயிர்] - என்னுடைய ப்ராணன் அவன்கையதே. மிதுநமானால் ப்ராணன்கள் மாறாடியன்றோயிருப்பது? உங்களுக்குஇது அவ்யுத்பந்நமோ! "ஸஹாசெவ்யாஃ." [அன்றிற்பேடைகாள்] - வ்யதிரேகத்தில் ஆற்றாமையை அறியும் நீங்கள் இதில் இழிபாதொழியவேண்டாவோ! "உன்னை நலிகிறோமோ! எங்களுக்குக் கலவிஸ்வபாவமன்றோ?" என்ன, [எவன்சொல்லி] - ப்ரணயரோஷமையிலே உள்ளனவாய் எனக்கு தெௌர்ஸஹமான சிலஉக்திகளைப்பண்ணி; அவைசொன்னபாசுரம் தன்வாயாற் சொல்லமாட்டுகிறிலள். [நீர்குடைந்து] - ஒன்றிலேயொன்று அவகாஹித்து. [ஆடுதிர்] - பரிமாறுநின்றிகோள். ஆட்டம் - நடையாட்டம், [புடைசூழவே] - சுற்றிலே ஸஞ்சரியாநின்றிகோள்; அடைமதிட்படுத்துகைக்குச் சுற்றிலே விட்டுக்கொண்டிருப்பாரைப் போலே. செவியைப்புதைத்துப் பிழைப்போமோ! கண்ணைப்புதைத்துப் பிழைப்போமோ! [தவஞ்செய்திலா இத்யாதி] - என்னைமுடிக்க நினைத்துவந்த உங்களுக்கு, என்ப்ராணனை இங்கேவைத்துத் தருகைக்கீடான பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன். கபோதம்போலே உங்களுக்கு உபகரித்து உங்கள் ப்ரீதிபங்களைப்பெறாத பாபகர்மாவானேன். "அவனைப்போலே பிரிவுக்கு இளையாதபடி பாக்யத்தைப்பண்ணப் பெற்றிலேன்" என்று பிள்ளான் நிர்வாஹம். [உயிருக்குண்டோ] — என்னுயிரோவ மிழற்றினவன்றோ அங்கேபோய்த்தே என் ப்ராணன்; என்பக்கலுண்டோ?" என்று விளக்கேற்றிக் காட்டுவாரைப்போலே யிருக்கிறது. [எவன்சொல்லிநிற்றும்]-எத்தைச்சொல்லித் தரிப்போம்? உங்கள் ஒருப்பாடு இதுவானபின்பு, தரிக்கவிரகுண்டோ? [நும்மேங்குகூக்குரல் கேட்டுமே] - ப்ரணயபரவசமான உங்களுடைய த்வநியைக்கேட்டும், பிரிவாற்றாமைக்கு தரிக்கிலும் உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லோமோ! உங்கள்த்வநி கேட்டாரை முடிக்குமதன்றோ! உங்கள்செவியைப் புதைத்தோ நீங்கள் கூப்பிடுகிறது? "நிஷ்கூஜநைகபாகாநாம் நிஸ்ஸப்தஸமவர்த்திநாம்। வாணார்ஜுநவிஸ்தாரகதீகயதேஷாஹவிஷ்யதி".

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவ்வன்றிற்பேடைகள் தம்மையே, திரியவும், தன் செயலறுதியாலே யிரக்கிறாள்.

[அவன்கையதே எனதாருயிர்] - என் ப்ராணன், அவன்கையதே. மிதுநமானால் ப்ராணன்கள் மாறாடியன்றோவிருப்பது? உங்களுக்கு இது அவ்யுத்பந்நமோ? [அன்றிற்பேடைகாள்] - அந்வயரஸம்அறிவார், பிரிந்தார்படுவதும் அறியவேண்டாவோ? [எவன்சொல்லி] - ஏதேனும் சிலவற்றைச் சொல்லி. அவைசொல்லுகிற பாசுரஞ் சொல்லில் தன்வாய் வேம்போலேகாணும். [நீர்குடைந்து] - ஒன்றிலேயொன்று அவகாஹித்து. [ஆடுதிர்] - பரிமாறுநின்றிகோள். [புடைசூழவே] - சுற்றிலே ஸஞ்சரியா

---

மூன்றாம் பாட்டு - அவன் இத்யாதி. மீளவும் அன்றிற்பேடைகளை இரப்பானென்? என்ன- அவ்வன்றில் இத்யாதி.

"அவன்கையதே" என்று அறியும்படி யென்? என்ன - மிதுநம் இத்யாதி. "ஸஹாசெவ்யாஃ" இத்யாதி அநுஸந்தேயம். கீழ்ப்பாட்டிலே - "அவன்கையதே" என்றது - நைராஸ்யத்தால் சொன்னவார்த்தை; இதிலே ப்ரணயித்வத்தாலே சொன்னவார்த்தை. "பிரிவில் நாங்கள் செய்கிறவையெல்லாம் பாதகமாகச் சொல்லாநின்றாய்: பிரிவு உனக்குபாதகமென்கிற இதுஎங்களுக்குத் தெரியுமோ?" என்ன - அந்வயரஸம் இத்யாதி. அந்வயரஸம் - ஸம்ஶ்லேஷ ரஸம். இன்னதென்றதே, "எவன்" என்பானென்? என்ன - அவைசொல்லுகிற இத்யாதி. நீர் - நீங்கள். சூழ - ஸஞ்ச

நின்றிகோள். அடைமதிட்படுத்துவார் சுற்றிலேவிட்டுக்கொண்டிருக்குமாபோலே. செவியைப் புதைத்துப் பிழைப்பேனோ! கண்ணைப்புதைத்துப் பிழைப்பேனோ! பெருமாளும் பரிகரமும் லங்கையை யழிக்கைக்குச் சூழப்போந்தாற்போலேகாணும் இவளுக்கு இது இருக்கிறது. பாவியேன்! உங்கள்பாரிப்புக்கு இங்கு விஷயமுண்டாகப் பெற்றதில்லை; [தவஞ்செய்தில்லா] - உயிரை இங்கேவைத்து உங்களுக்கு உபகரிக்க பாக்யம்பண்ணிற்றிலேன். ''அவனைப்போலே பிரிவுக்குச் சிதையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன்'' என்று பிள்ளான்பணிக்கும். [உயிரிங்குண்டோ!] - வல்லடிக்காரர்க்கு விளக்கேற்றிக் காட்டுமாபோலேகாணும், ''இங்குண்டோ!'' என்று காட்டுகிறபடி. [எவஞ்சொல்லிநிற்றும்] - எத்தைச் சொல்லித் தரிப்பது? [நும் இத்யாதி] - ப்ரணயபரவசரான உங்களுடைய த்வநியைக்கேட்டும்.பிரிவுக்குத் தரித்திருக்கிலும்,உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லோமோ! உங்கள் த்வநி, கேட்டாரை முடிக்குமதன்றோ! உங்கள்செவியைப்புதைத்தோ நீங்கள் கூப்பிடுகிறது? ''நிஸ்வநம் சக்ரவாகாநாம் நிஸம்ய ஸஹசாரிணாம் | புண்டரீகவிஸாலாக்ஷீ கதமேஷா பவிஷ்யதி'' (நிஸ்வநம்சக்ரவாகாநாம் நிஸம்யஸஹசாரிணாம் | புண்டரீகவிஸாலாக்ஷீகதமேஷாபவிஷ்யதி.) (௩)

---

## நான்காம் பாட்டு.

---

கூக்குரல்கேட்டும்நங்கண்ணன்மாயன்வெளிப்படான்
மேற்கிளைகொள்ளேன்மின் ‡நீருஞ்சேவலுங்கோழிகாள்!
வாக்கும்மனமும்கருமமும் நமக்காங்கதே
ஆக்கையும்ஆவியும் அந்தரம்நின்றுழலுமே.

---

*ரிக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் - அடைமதிள் இத்யாதி. அடைமதிட்படுத்துகை - முற்றுகை போடுகை. ''எவஞ்சொல்லி, புடைசூழ'' என்கிற இரண்டுபதங்களாலும் - தனக்குஇவற்றால்வந்த நலிவைத் தப்பவிரகில்லை என்கிறாள் - செவியை இத்யாதி. ''எவஞ்சொல்லி'' என்றத்தைப்பற்ற - செவியை இத்யாதி. ''புடைசூழவே'' என்றத்தைப்பற்ற - கண்ணை இத்யாதி. ''அடைமதிட்படுத்துவார்'' என்றத்தை விஶேஷரிஷ்டமாகக் காட்டுகிறாள் - பெருமாளும் இத்யாதி. மேலுக்கவதாரிகை - பாவியேன் இத்யாதி. ''தவஞ்செய்திலா'' இத்யாதிக்கர்த்தம் - உயிரை இத்யாதி. அர்த்தாந்தரம் - அவனைப்போலே இத்யாதி. பாக்யத்தைப்பண்ணாத பாவியேனுடைய என்னுடைய ப்ராணன்கள்இங்குண்டோ? என்று ஶப்தார்த்தம். உயிருண்டோவென்றதே, ''இங்கு'' என்று விசேஷித்ததுக்குபாவம் - வல்லடிக்காரர் இத்யாதி. வல்லடிக்காரர் - ஹிம்ஸகர். நிற்றும் - தரிப்போம், ''எங்குகூக்குரல்'' என்றதுக்கு பாவமாதல், ''கேட்டும்'' என்ற ஶப்தத்துக்கு பாவமாதல் - பிரிவுக்கு இத்யாதி. பிழைக்கப்போகாதோவென்ன - உங்கள் இத்யாதி. தனக்கு வ்யாபகமாகையாலே அவற்றுக்கும்இதுவ்யாபகமென்றுநினைத்து பாவம்- உங்கள்செவியை இத்யாதி.தனக்கு வ்யாபகமென்றத்தைக்கொண்டு இப்படி நினைத்தபேருண்டோ வென்ன - நிஸ்வநம் இத்யாதி. ''நிஸ்வநம் சக்ரவாகாநாம் நிஸம்ய ஸஹசாரிணாம் | புண்டரீகவிஸாலாக்ஷீ கதமேஷா பவிஷ்யதி'' இதி (கிஷ் - ௩௦ - ௧௦) ராமஃ. 'அன்றிற்பேடைகாள் - எனதாருயிர் - அவன் கையதே; எவஞ்சொல்லி நீர்' என்றுதொடங்கி, 'உயிரிங்குண்டோ? நும்மெங்கு கூக்குரல்கேட்டும் எவஞ்சொல்லிநிற்றும்', இத்யந்வயஃ.* (௩)

---

‡ 'நீரும் நுஞ்சேவலும்' என்பதும் பாடம்.

**ஆ.**—(கூக்குரல்) - கோழிகாள்! நீரும் நுஞ்சேவலும் மேன்மேலும் அவனை என்செய்யக் கூவுகிறீர்கள்? என்ன; "நாங்கள் அவனைவரக்கூவுகிறோம்" என்று அவை சொல்ல; அவன்வருகைக்குக் கூவுகிறீர்களாகில் அவன் வாராதொழிகிறதென்? ஆதலால், அவன்வரக்கூவுகிறீரல்லீர்; என்னை முடிக்கைக்காகக் கூவுகிறீர்தானோ? முன்னமே என்னுடைய ஸர்வகரணங்களும் முடிந்தன; இனி என்செய்ய வருந்துகிறீர்கள்? என்ன; கரணங்கள் முடிந்தனவாகில் உன்னுடையபேச்சும் இச்சேஷ்டிதங்களும் கூடுகிறபடியெங்ஙனே? என்னில்,—முடியச்செய்தே, என்னுடைய ஆக்கையும் ஆவியும் நடுவே நின்று படும் வ்யஸநவாஸநையாலே அழைக்கிறனவத்தனை யென்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், சிலகோழிகளைக் குறித்து நீங்கள் உச்சமாகக்கூவி என்னைநலியாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

[கூக்குரலென்று தொடங்கி] - உங்களுடைய கூக்குரலைக் கேட்டிருந்தும் ஆஶ்சர்யஶீலனாக ப்ரஸித்தனான க்ருஷ்ணன் "இவள் பிழைபாள்" என்று பார்த்துத் தோற்றி வருளுகிறிலன். கோழிகாள்! உங்களுடைய சேவல்களும் நீங்களும் உங்களுடைய ஜாத்யுசிதமாய் ப்ரணயப்ரவ்ருத்தமான உச்சஶப்தத்தைப் பண்ணாதே கொள்ளுங்கோள்! [வாக்கும்மனமும் என்றுதொடங்கி] - "உன்னுடைய ஸர்வகரணங்களையும் அபஹரித்து உன்னை முடிக்கவென்றுவந்த நாங்கள் கூவாதிருப்போமோ?" என்றனவாகக்கொண்டு என்னுடைய ஸர்வகரணமும் பண்டே அவன்பக்கலின; இனிஎன்செய்ய வருந்துகிறீர்கோள்? என்ன; ஆகில், இப்பேச்சும் இச்சேஷ்டிதமுங் கூடினபடி எங்ஙனே என்னில்?—அவை போகச்செய்தே வ்யஸநவாஸநையாலே தேஹமும் ப்ராணனும் நடுவேநின்று துःகப்படுகிறன வித்தனை.

ப.—அநந்தரம், ஆஶ்சர்யகுணசேஷ்டிதனான க்ருஷ்ணன் வருகிறிலன், நீங்கள் எனக்கு வ்யாகுலமாம்படி கூப்பிடாதே கொள்ளுங்கோள் என்று, சில மயிற்பேடைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

கோழிகாள் - மயில்காள், கூக்குரல் - நீங்கள் ஒன்றுக்கொன்று அழைக்கிற குரல், கேட்டும் - அவனிருந்தவிடத்திலும் கேட்கும்படியாயிருக்கச்செய்தேயும், நம் - (எல்லாரும் "நம்முடையவன்" என்னும்படி) ஸுலபனாய், மாயன் - கிட்டினாரை யாஶ்சர்யகுணசேஷ்டிதங்களாலே ஈடுபடுத்தும், கண்ணன் - க்ருஷ்ணன், வெளிப்படான் - வருகிறிலன்; நும் - உங்கள், சேவலும் நீரும் - சேவலும் நீருமாகச் சேர்ந்துகொண்டு, மேல் - மேலே, கிளைகொள்ளேன்மின் - திரளாகக்கூப்பிடாதே கொள்ளுங்கோள்! நமக்கு - எங்களுக்கு, வாக்கும் மனமும் கருமமும் - வாங்மநःகாயங்கள், ஆங்கதே - அவன்பக்கலிலேயாயிற்று; ஆக்கையும் - ஶரீரமும், ஆவியும் - ப்ராணனும், அந்தரம் நின்று - நடுவே, உழலுமே - அலமருகிறவித்தனை. கோழி - மயில். கிளைத்தல் - ஶப்தித்தல்.

இ.—நாலாம்பாட்டில், சிலமயில்களைக் குறித்து நீங்கள் உச்சமாகக்கூவி என்னை நலியாநின்றீர்கோள் என்கிறாள்.

[கூக்குரல் கேட்டும்] - நீங்கள்கூவுகிற த்வநியைக் கேட்டிருந்தும். இவற்றினுடைய த்வநிசெல்லாதவிடமில்லை யென்றிருக்கிறாள். [நங்கண்ணன்] - வடயக்ஷப்ரஸித்திபோலே இதொருப்ரஸித்தி யுண்டாக்கிவைப்பதே. [மாயன்] - ஆஶ்சர்யஶீலன்; பிரிந்தால் யரிக்கவொண்ணாதபடி கிட்டினபோது கையைக் காலைப்பிடித்துத் தாழ

மாய் ப்ரணயப்ரவ்ருத்தமான உச்சசப்தத்தைப் பண்ணுதேகோள்ளுங்கோள். இவள் ஈடுபடப்பட, ஒரு தான மேழவைத்துக் கூவாநின்றன வாய்த்து. [நீருஞ்சேவலும்]-ஒன்று தோடங்கின கார்யத்தை ஸஹசரமுந்தோடங்கிக் குறையுங் கூடமுடியாநின்றது. [கோழி காள்] - ஸ்த்ரீவதம்பண்ணுகைக்கு ஒருஜாதியாக ஒருப்படவேணுமோ? கோழியேன் கிறது - மயிலே. "'நீர் நலியாதே கோள்ளுங்கோள்' என்னுமளவும் பார்த்தன்றே நாங்க ளிருக்கிறது? ஸர்வகரணங்களையும் அபஹரிக்கவந்த நாங்கள் தவிருவோமோ? தோடங் கினகார்யம் தலைக்கட்டவேணுமே, எங்களுக்கு" என்று கருத்தாக, அதுக்காகில் பின்னை அங்கே போங்கோளேனகிருள். [வாக்கும் மனமும் கருமமும் நமக்காங்கதே] - என் னுடைய ஸர்வ கரணங்களும் அவன்பக்கலின. "அங்கேபோய் இவை த்வநிக்க அவ னுக்குத் தரிப்புஅரிதாய் வந்து முகங்காட்டும்" என்னும் நினைவாலே சோல்லுகிருள். அங்கேயாகில், இப்பேச்சும் சேஷ்டிதங்களும் கூடினபடியேன்னேன்ன? - [ஆக்கையு மாவியுமந்தரம்நின்றுழலுமே] - வ்யஸநவாஸநையாலே, தேஹமும் ப்ராணனும் நடுவே நின்று க்லேசப்படுகிற இத்தனை. பிடித்துவிட்ட கோம்புபோலே வாஸநையேயுள்ளது. நோவுபடவேண்டுவதுண்டு, நலிகைக்கு ஆஶ்ரயமில்லை. (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

அந்தரம் நின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள்!
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ
இந்திரஞாலங்கள்காட்டி இவ்வேழுலகுங்கோண்ட
நந்திருமார்வன்நம்மாவியுண்ணநன்கேண்ணினன்.

*ஆ.—(அந்தரம்நின்ற.)-'உங்களுக்கு நானென்னஅநிஷ்டம் பண்ணினேன்? நீங்கள் நடுவேநின்று, அவன்திருநாமங்களைச்சொல்லி என்னைவையியாதேகொள்ளுங் கோள்!' என்று பூவைகளைநோக்கிச்சொல்லி, 'பண்டு இந்தலோகத்தைத் தனக்காக்கிக் கொள்ளுகைக்குச் சிலபொய்செய்தாற்போலே என்னோடேகலந்து பரிமாறுகிறுனைகத் தோற்றும்படி சிலபொய்களைச் செய்தகன்றுபோன இது; என்னைமுடிக்கைக்கு நல்ல விரகுபார்த்தான்; என்ன சதுரனோ!' என்று தன்னிலேநொந்து சொல்லுகிருள்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னினவாயிருந்து நலிகிற பூவைகளைக்குறித்து, "அவன்தான் என்னை முடிக்கைக்கு அழகிதான விரகுபார்த்தான்; உங்களுக்கு இங்கு விஷயமில்லை" என்கிருள்.*

---

*பஸிப்பத்யமாகையாலே, 'ஜாத்புசிதமாய்' என்கிறூர். "ஆந்தை கிளைக்கூட்டிற்று" திரே. "மேல்" என்றதுக்குபாவம் - இவள்பட இத்யாதி. "நீரும்சேவலும்" என்றிரண்டையும் சொல்லி, "கிளை" என்று ஏகவசநமாகச் சொன்னதுக்கு பாவம் - ஒன்றுதோடங்கின இத்யாதி. "கோழிகாள்" என்கிற பஹுவசநத்துக்கர்த்தம் - ஸ்த்ரீவதம் இத்யாதி. பேச்சும் சேஷ்டிதமும் என்றது - "மேற்கிளைகொள்ளேன்மின், உழலும்" என்றத்தைப்பற்ற. விவரணமாதல், தேஹமும் ப்ராணனும் நடுவே நின்று க்லேசப்படுகிறதுக்கு த்ருஷ்டாந்தமாதல் - பிடித்துவிட்ட இத்யாதி. பலிதம் - நோவுபட இத்யாதி. "உழலும்" என்றதுக்கு பாவமாதல். 'கூக்குரல்கேட்டும் நங்கண் ணன் மாயன் வெளிப்படான் - வாக்கும்' என்றுதொடங்கி, 'உழலுமே ; கோழிகாள் நீரும்சேவலும் மேற்கிளைகொள்ளேன்மின்' இத்யந்வயம்.* (ச)

[அந்தரமென்று தொடங்கி] — நலிகைக்கொரு காரணமின்றிக்கே யிருக்கச் செய்தே, என்னை நலிந்துகொண்டு ஸஞ்சரிக்கிற என்னுடைய பூவைகாள்! உங்களுடைய பாரிப்புக்கு என்பக்கல் அவகாசமில்லை. குழறாதே கொள்ளுங்கோள்! [இந்திரஞாலமென்று தொடங்கி] - ப்ரணயித்வ ப்ரஸித்தியையுடையனாயிருந்துள்ள எம்பெருமான் பண்டு இந்தலோகத்தைத் தனக்காக்கிக் கொள்ளுகைக்குச் சிலபொய் செய்தாற்போலே என்னோடேகலந்து பரிமாறுகிறானாகத் தோற்றும்படி சிலபொய்களைச் சொல்லி விச்லேஷிக்கை என்னை முடிக்கைக்கு உபாயமென்று அவன்தானே நல்லவிரகு பார்த்தான்: என்னைமுடிக்கப் பார்த்த பார்வை, அழகிதாகப் பார்த்தான் என்று தன்னிலே நொந்து சொல்லுகிறாளென்றுமாம்.

ப.—அநந்தரம், க்ருத்ரிமசேஷ்டிதங்களைக்காட்டி ஸர்வலோகத்தையும் பிறர்க்காகாதபடி பண்ணுமவன் உள்ளாளான உங்களையிட்டு நம்முடைய ப்ராணாபஹாரம்பண்ணுகைக்கு நன்றாக எண்ணினானென்று, தன்னுடைய பூவைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

நலிகைக்கு விஷயமின்றிக்கேயிருக்கச்செய்தே, அந்தரம் நின்று-நடுவே, உழல்கின்ற - நிஷ்ப்ரயோஜநமாக அலமருகிற, யானுடைப்பூவைகாள் - நான் என்னுடையவை என்று அபிமானித்த பூவைகாள்! நும்திறத்து - உங்கள் இடையாட்டத்தில், (என்னை நலிகைக்கு), ஏதும்இடையில்லை-ஓர்அவகாசமில்லை; குழறேன்மின்-(நீங்கள்) அநக்ஷரரஸமாம்படி ஸப்தியாதே கொள்ளுங்கோள்! இந்திரஞாலங்கள்காட்டி - இந்த்ரஜாலங்கள் போலே மெய்யென்று ப்ரமிக்கும்படியாக குணவிக்ரஹ சேஷ்டிதங்களைக்காட்டி, இவ்வேழுலகும் - இந்த ஸப்தலோகத்தையும், கொண்ட - (பராபிமாநத்தையும் ஸ்வாபிமாநத்தையும் அறுத்துத் தனக்கேயாம்படி) பண்ணிக்கொண்டு, நம்திருமார்வன் - நமக்கு(தன்) திருமார்விலேயிருக்கிற பிராட்டிபக்கல் ப்ரணயித்வத்தைக்காட்டி அகப்படுத்தினவன், நம் - நம்முடைய, ஆவி - ப்ராணனை, உண்ண - க்ரஸித்துக்கொள்ளுகைக்கு, நன்கு எண்ணினான் - நன்றாக நிரூபித்தான்.

இ.—அஞ்சாம்பாட்டில், தன்னினவாயிருந்து நலிகிற பூவைகளைக்குறித்து அவன்தான் என்னைமுடிக்கைக்கு நல்விரகுபார்த்தான்; இனி, உங்களுக்கு இங்கு விஷயமில்லை என்கிறாள்.

[அந்தரம்நின்றுழல்கின்ற] - உங்களுக்கு இங்குநலிகைக்கு விஷயமின்றிக்கேயிருக்க நடுவேநின்று வ்யர்த்தமே க்லேசப்படுகிறீர்கோள் இத்தனை. [யானுடைப் பூவைகாள்] - என்னுடைய பூவைகாள்! ஸர்வஸாதாரணராயிருப்பார் செய்யுமத்தை, சிலர்க்கு ஸ்வம்மாயிருப்பார் செய்யக்கடவதோ? ஸ்வதந்த்ரன் செய்யுமத்தை பரதந்த்ரரான நீங்களும் செய்யக்கடவதோ? நான் எனக்கு என்னவமையுமாகாதே வ்யாமோகமாகைக்கு? அவனும் என்னுடையவனாகைபிறே நலிந்தது. கலந்தார் செய்யக்கடவத்தை வயிற்றிற் பிறந்தார் செய்யக்கடவதோ? [நும்திறத்தேதுமிடையில்லை] - உங்கள்இடையாட்டத்தில், என்னைநலிகைக்கு ஓர்அவகாசமில்லை; உங்கள்பாரிப்புக்கு என்பக்கல் ஓர்அவகாசமில்லையென்றுமாம். [குழறேன்மினோ] - அநக்ஷரரஸமானபேச்சைக் காட்டி முடியாதே கொள்ளுங்கோள். "உருவின வாள் உறையிலிடுங்கோள்" என்னுமா போலே. கெடுவிகாள்! உங்கள்வாயைப் புதையுங்கோளென்கிறாள். [இந்திரஞாலங்கள் காட்டி]-

*கண்டார்க்கு விடவொண்ணாத வடிவையும், சீலத்தையும், சேஷ்டிதத்தையுங்காட்டி. 'இவை நிலைநில்லாமையாலே பொய்காண்' என்கிறாள். [ஏழுலகுங்கொண்ட] - பிறருடைமை கொள்ளுமிடத்தில் லஜ்ஜியாதபடி கொள்ளுமவன். [நந்திருமார்வன்] - ப்ரணயித்வத்தால்வந்த ப்ரஸித்தியை எனக்குக்காட்டி. பிராட்டியோடு பழகிற்றும் ப்ரணயிபாப் அன்று; அத்தைக்காட்டிக் கண்டாரை அகப்படுத்திக் கொள்ளுகைக்காக. சில பொய்களைக்காட்டி மஹாபலிபக்கல் நின்றும் பூமியைக் கொண்டாற்போலே, கலந்து பரிமாறுகிறானென்று தோற்றும்படி சிலபொய்களைச் செய்து விஶ்லேஷிக்கை. என்னை முடிக்கைக்கு உபாயமென்றுமாம். [நம்மாவியுண்ண நன்கெண்ணினான்] - நம்மை முடிக்கைக்கு நல்விரகு தானேபார்த்தான். உங்களுக்கு இங்கு அவகாசமில்லை. ஸர்வஶக்தியானவன் உத்யோகித்த கார்யத்திலே குறைகிடப்பதாய் அதிலே நீங்கள் ஸஹகரிக்கிறீர்களோ? நம்மை முடிக்கப் பார்த்தபார்வை அழகிதாகப் பார்த்தான் என்று தன்னிலே நொந்து சொல்லுகிறாள் என்றுமாம்.*

ஈடு.—அஞ்சாம்பாட்டு. தன்னினவாயிருந்துநலிகிற பூவைகளைக்குறித்து, அவன்தான் என்னை முடிக்கைக்கு நல்ல விரகு பார்த்தான்; இனி உங்களுக்கு இங்கு விஷயமில்லை என்கிறாள்.

[அந்தரம்நின்றுழல்கின்ற]—உங்களுக்கு இங்கு நலிய விஷயமின்றிக்கேயிருக்க, நடுவேநின்று வ்யர்த்தமே க்லேஶப்படுகிறீர்களித்தனை. [யானுடைப்பூவைகாள்] - என்னுடைப்பூவைகாள்! ஸர்வஸாதாரணராயிருப்பார் செய்பவற்றை, சிலர்க்கு ஸ்வமாயிருப்பார் செய்யக்கடவதோ? நான் எனக்குஎன்ன வமையுமாகாதே பாதிக்கைக்கு? அவனும், என்னுடையவனுகையிறே நலிந்தது! [நுந்திறத்தேதுமிடையில்லை] - உங்கள் இடையாட்டத்தில், என்னைநலிகைக்கு ஓர் அவகாசமில்லை; உங்கள் பாரிப்புக்கு என்பக்கல் ஓரவகாசமில்லையென்றுமாம். [குழறேன்மின்] - அநக்ஷர ரஸமானபேச்சைக் காட்டி முடியாதேகொள்ளுங்கோள்! அவன்தான் அதிகரித்தகார்யத்தில் நெகிழநின்றானுகிலன்றோ, நீங்கள் இப்படி முதிரநிற்கவேண்டுவது? அதுக்கு உங்களுக்கு அவகாசம் வைத்தானோ! [இந்திரஞாலங்கள்காட்டி] - கண்டார்க்குவிடவொண்ணாதவடிவையும், சீலத்தையும்,

---

*அஞ்சாம்பாட்டு - அந்தரம் இத்யாதி. "யானுடைப்பூவைகாள் - நம்மாவியுண்ணநன்கெண்ணினான் - நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - தன்னினவாய் இத்யாதி. தன்னினவாய் என்றது - "யானுடைப்பூவைகாள்" என்றத்தைப்பற்ற. தன்னினவாய் - தன்னுடையவைகளாய்; தனக்கு போஷ்யங்களாய் என்றபடி.*

*"யானுடைப்பூவைகாள்" என்று விசேஷிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் - ஸர்வஸாதாரண இத்யாதி. ஸர்வஸாதாரணராயிருப்பார் என்றது - காட்டிலேவர்த்திக்கையாலே ஸர்வஸாதாரணமான மயில்தொடக்கமான பக்ஷிகளாயாதல், கீழிற்பாட்டில் "நங்கண்ணன்" என்ற க்ருஷ்ணனையாதல், "நந்திருமார்வன்" என்றத்தைக்கடாக்ஷித்து, என்னுடைய ஸம்பந்தமே ஹேதுவாக பாதிக்கிறீர்களென்று பாவார்த்தம் - நான்எனக்கு இத்யாதி. விவரணம் - அவனும் இத்யாதி. இடை - அவகாஶம். உங்களிடையாட்டத்தில் என்றது - உங்களுக்கென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, "திறம்" என்று - ஸமூஹமாய், பாரிப்பைச் சொல்லுகிறது. மேலுக்கெல்லாம் அவதாரிகை - அவன்தான் இத்யாதி. அவகாஶம் வையாமல் அவன்செய்த வ்யாபாரங்களைச் சொல்லுகிறது மேல். "இந்திரஞாலங்கள்" என்கிற பஹுவசந விவக்ஷிதங்களையும், அவற்றை இந்திரஞாலமாக அருளிச்செய்கைக்கு ஹேதுவையும் அருளிச்செய்கிறார் - கண்டார்க்கு இத்யாதி. அதாவது - இந்திரஞாலமாவது, கண்டவல்லது நிற்கவொண்ணாதபடி ஆகர்ஷகமாயிருப்பதொரு வித்யையிறே; அப்படி ஸௌந்தர்யாதி*

சேஷ்டிதத்தையுங் காட்டி. இவை நிலைநில்லாமையாலே, "போய்கள்" என்கிறாள். இந்திரஜாலமென்றும், பொய்யென்றும் பர்யாயம். [ஏழைநங்கோவிடை] - பிறருடைய வஸ்துவை அபஹரிக்கப்புக்கால், அவர்களுக்கு ஒன்றும் சேஷியாதபடி அபஹரிக்குமவன். [நந்திருமார்வன்] - ப்ரணயித்வத்தால்வந்த ப்ரஸித்தியை எனக்குக்காட்டி. பிராட்டி யோடே பழகிற்றும் ப்ரணயியாய்அன்று; அத்தைக்காட்டிக் கண்டாரை யகப்படுத்திக் கொள்ளுகைக்காக. சிலபொய்களைக்காட்டி ஸூக்ஷ்மைக்கோண்டாற் போலே, கலந்து பரிமாறுகிறானென்றுதோற்றும்படி சில பொய்களைச் செய்து விஶ்லேஷிக்கை என்னை முடிக்கைக்கு உபாயமென்றுமாம். [நம்மாவியுண்ண நன்கெண்ணினன்] - நம்மை முடிக்கைக்கு நல்விரகுபார்த்தான். உங்களுக்கு இங்கு அவகாஶமில்லை. ஸர்வஶக்தி யுத்யோகித்த கார்யத்திலே குறைகிடப்பதாய், அதிலே நீங்களும் ஸஹகரிக்கிறீகோளோ! நம்மை முடிக்கப்பார்த்த பார்வை அழகிதாகப்பார்த்தான் என்று, தன்னிலே நோக்கு சொல்லுகிறா ளென்றுமாம். (௫)

---

## ஆறாம் பாட்டு.

---

நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே
யின்குரனிழற்றேல் என்னுநயிர்க்காகுத்தன்
நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன்கைகாலினன்
நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டு நீங்கினன்.

**ஆ.**—(நன்கெண்ணி.) - 'அவன்பிரிந்த தசையில் அவன்திருநாமங்களையும் சொல்லாமைக்கன்றோ உன்னை நான் வளர்த்தது? ஆனபின்பு, அவன்திருவடிவுபோலே

---

களும் அநுபவித்தாலொழிய நிற்கவொண்ணாதபடி ஆசர்ஷகமாயிருக்குமத்தைப்பற்ற, இவற்றை "இந்திரஜாலங்கள்" என்கிறதென்றபடி. லீலாஹாவகாவிலக்ஷிதங்கள் - சௌர்யாதிகள். பொய்பாக அர்த்தாந்தரம் - இவை இத்யாதி. "இந்திரஜாலம்" என்றால், பொய்யைச் சொல்லுமோவென்ன - இந்திரஜாலமென்றும் பொய்யென்றும் பர்யாயம் என்று. "ஏழைநங்கோ" என்ற ஶப்தத்துக்கு ஹாவம் - பிறருடைய இத்யாதி. "நம்" என்ற ப்ரஸித்திக்கு ஹாவம் - ப்ரணயித்வத்தால் இத்யாதி. ப்ரஸித்தனான திருமார்வனென்று ஸப்தார்த்தம். பிராட்டியோட்டைச் சேர்த்தியைக்காட்டி என்னை யகப்படுத்திக்கொண்டவனென்று தாத்பர்யார்த்தம். "திருமார்வன்" என்றதுக்கு வெளிப்பாகார்த்தம். பிராட்டியோடே இத்யாதி. "இந்திரஜாலங்கள்" என்றதொடங்கி, "நன்கெண்ணினன்" என்றளவும் - பக்ஷிகளைப்பார்த்துச்சொல்லுகிறாளென்றும், தன்னிலே நோக்கு சொல்லுகிறாளென்றும், இத்தை த்வேதாவிவக்ஷித்து முந்தினவகையைக்காட்டுகிறார் - சிலபொய்களை இத்யாதியாலே; இரண்டாம்வகையைக்காட்டுகிறார்-நம்மை முடிக்க இத்யாதி முடிவில் வாக்யத்தாலே. "நன்கு" என்கிறதுக்கு அர்த்தத்வயம் - நன்றாகவென்றும், வ்யதிரேகலக்ஷணையாய், க்ரூரமாகவென்றும். இந்தஇரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - நல்விரகுபார்த்தான் என்றும், அழகிதாகப்பார்த்தான் என்றும். அழகிதாக - க்ரூரமாகவென்றபடி. "அவனும்செய்துபோகிறான், அவன்செய்தகுறைகளை நாங்கள்முடிக்கிறோம்" என்ன-ஸர்வஶக்தி இத்யாதி. 'அந்தரங்கின்றழல்கின்ற யானுடைப்பூவைகாள்! இந்திரஜாலங்கள்' என்றதொடங்கி, நன்கெண்ணினன்-நந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ?' இத்யர்த்வய:. 'நம்மாவியுண்ணநன்கெண்ணினன்' - நம்முடையப்ராணன்களை க்ரஸித்துக்கொள்ளுகைக்கு நன்றாக நிரூபியாநின்றானென்று உரையில் ஸப்தார்த்தம். (௬)

யிருக்கும் உன்வடிவைக்காட்டி, அதின்மேலே அவன் திருநாமங்களையுஞ்சொல்லி என்னை நோவுசெய்யாதேகொள்ளாய் !" என்று தன்கிளியைக் குறித்துச்சொல்லுகிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், தன்தசையை அறியாதே திருநாமத்தைச் சொல்லுகிற கிளியைக் குறித்து நான் ஸ்வஸ்தையாயிருந்தபோது எனக்குஇனிதாகத் திருநாமத்தைச் சொல்லக் கேட்கைக்கன்றோ உன்னை நான் வளர்த்தது. எனக்கு அஸாத்யமான தசையில் திருநாமத்தைச் சொல்லாதேகொள்! என்று அத்தை நிவர்த்திப்பிக்கிறாள்.

[என்னுயிர்க் காகுத்தனென்று மேலுக்கு] - உன்னுடைய சிவந்தவாயும் கண்ணும் கையுங் காலும்போலேயிருக்கிற திருப்பவளந் தொடக்கமான திவ்யாவயவங்களையுடையவனுமாய் உன்னுடைய குளிர்ந்த ச்யாமமாயிருந்துள்ள திருநிறத்தையுடையனாய் எனக்கு நல்லுயிராயிருக்கிற காகுத்ஸ்தன் இனி என்னோடே ஸம்ச்லேஷித்து என்ப்ரக்ருதியை அறிந்துவைத்தே பிரிந்தான்.

ப.—அநந்தரம், தர்சநீயமான அவயவசோபையையுடைய சக்ரவர்த்தித் திருமகன் கலந்துபிரிந்தான்; அவனுக்கு ஸ்மாரகமான வடிவோடேயிருந்து உன்னுடைய ம்ருதுபாஷணத்தாலே நலியாதேகொள்! என்று தான் வளர்த்ததொரு கிளியைச் சொல்லுகிறாள்.

என் ஆருயிர் - எனக்கு வ்யதிரேகத்திலே தரிக்கவரிதான ப்ராணனாய், காகுத்தன் - "மற்றிலேன்தஞ்சமாகவே" என்னும்படியான சக்ரவர்த்தித்திருமகன்; நின் - உன்னுடைய, செய்ய - சிவந்த, வாய் - வாயை, ஒக்கும் வாயன் - ஒக்கும் வாயையுடையனாய், கண்ணன் - அத்தோடொக்கும் கண்ணையுடையனாய், கைகாலினன் - அத்தோடொக்கும் கைகாலையுடையனாய், நின் - உன்னுடைய, பசும் சாமம் - பசுமையழியாத ச்யாமநிறம்போலேயிருக்கிற, நிறத்தன் - நிறத்தையுடையனாய்க்கொண்டு, கூட்டுண்டு - (என்னோடே) ஸம்ச்லேஷித்து, நீங்கினான் - பிரிந்தான்; நன்கு- (எனக்கு ஆபத்துக்கு உதவுவதியென்கிற)நன்மையை, எண்ணி - எண்ணி, நான் வளர்த்த - நான் வளர்த்துப்போந்த, சிறு - சிறியவடிவையுடைத்தாய், பைதல் - முக்யமான, கிளியே - கிளியே! இன் - இனிமையாலே என்னைநலிபடுத்துகிற, குரல் - குரலை, நீ - (அவன் வடிவுக்கு ஸ்மாரகமாய் நலிகிற) நீ, மிழற்றேல் - அர்த்தோக்தி ஸரஸமாகப் பண்ணாதே கொள்.

இ.—ஆறும்பாட்டில், தன்தசையை அறியாதே திருநாமத்தைச் சொல்லுகிற கிளியைக்குறித்து எனக்கு அஸஹ்யமான தசையிலே சொல்லவோ உன்னை வளர்த்தது? என்று அத்தை நிவர்த்திப்பிக்கிறாள்.

[நன்கெண்ணி] - திருநாமம் ஸாத்மிக்கும் தசையையறிந்து சொல்லவும், அஸஹ்யமான தசையில் தவிரவுமன்றோ உன்னைவளர்த்தது? [நான்வளர்த்த] - ஏக புத்ரைகளைப் போலேயாய்த்து வளர்த்தது. நான்ஒன்றை ஆதரிக்கவமையுமாகாதே அநபயாவாகைக்கு! அவனும் கிளியோபாதி ஸவ்யனாயிறேயிருப்பது. [சிறுகிளிப் பைதலே]-சிறுமை - பருவம். பைதல்-வயஸ்ஸுக்குத்தக்க பாசமுமின்றிக்கேயிருக்கை. உன் பசற்றனமிறே நலிகைக்கடி. [இன்குரல்]-"கூரியவேல் என்னுமாபோலே. [நீமிழற்றேல்] - நிரம்பாமென்சொல்லாலே என்னை முடியாதேகொள். மாத்ருவதத்திலேயும் ப்ரவ்ருத்திப்பார் உண்டோ? [என்னாருயிர்க் காகுத்தன்] - வ்யதிரேகத்தில் தரிக்க

*அரிதாம்படியிறே கிட்டினபோது பரிமாறும்படி. "தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாக" என்றிறே இவர் இருப்பது. [நின்செய்யவாய் ஒக்கும்வாயன்] - உன்னுடைய சிவந்தவாய்போலே யிருக்கும் வாயையுடையவன். உபமானத்தைச் சொல்லிச் சேர்த்துவிடுமித்தனையொழிய, உபமேயந்தன்னைப் பேசமுடியாது. உன்னைப்போலே சிவந்த கண்ணையும், கையையும் திருவடிகளையும் உடையவன். [நின்பசுஞ்சாமநிறத்தன்] - உன்னுடைய குளிர்ந்த ஶ்யாமமான நிறத்தையுடையவன். பசுஞ்சாமம் - ஶ்யாமமாய், எரித்திருக்கையன்றிக்கே குளிர்ந்திருக்கை. பச்சைநிறமென்னவுமாம். ஒருடம்பிலே இத்தனைபகை தேடிவைக்கலாமோ! [கூட்டுண்டு நீங்கினான்] - கலந்து என்ப்ரக்ருதியை அறிந்துவைத்துப் பிரிந்தான்: அவன் கூடவிருந்தாலன்றோ உன்படிகள் அநுகூலமாயிருப்பது! தனியிருப்பில் நலிவார் ராவணாதிகளன்றோ! அநுகூலர் நலிவரோ?*

ஈடு.—ஆறாம் பாட்டு. தன்உக்தியறியாதே திருநாமத்தைச்சொல்லுகிற கிளிப்பிள்ளையைக்குறித்து, எனக்குஅஸஹ்யமான உக்தியிலே சொல்லவோ உன்னைவளர்த்தது? என்று அத்தை நிவர்த்திப்பிக்கிறாள்.

[நன்கெண்ணி] - திருநாமம் ஸாத்மிக்கும் உக்தியறிந்து சொல்லவும் அஸஹ்யமானஉக்தியில் தவிரவுமன்றோ உன்னைவளர்த்தது? [நான்வளர்த்த] - ஏகபுத்ரைகளைப்போலே யாயத்துவளர்த்தது; நானென்றைஆதரிக்கவமையமாகாதே அந்யமாவாகைக்கு! அவனும் கிளியோபாதி ஸ்வஜநமிறே யிருப்பது. [சிறுகிளிப்பைதலே] - சிறுமை - பருவம். பைதல் - வயஸ்ஸுக்குத்தக்க பாகமின்றிக்கேயிருக்கை. உன் பசற்றனமிறே நலிகைக்கடி. [இன்குரல்] - "கூரியவேல்" என்னுமாபோலே. [நீ மிழற்றேல்] - நிரம்பாமென்சொல்லால் என்னை முடியாதேகொள்! மாத்ருவதத்திலேயும் ப்ரவர்த்திப்பாருண்டோ? [என்னாருயிர்க் காகுத்தன்] - வ்யதிரேகத்தில் தரிக்கையரிதாம்படி யிறே கிட்டினபோது பரிமாறிற்று. "தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாக" என்றிறே இவரிருப்பது; [நின்செய்யவாயொக்கும்வாயன்] - உன்னுடைய வாய்போலே யிருக்கும் வாயையுடையவன். உபமானத்தைச்சொல்லிச் சேர்த்துவிடுமித்தனையொழிய, உபமேயந்தன்னைப் பேசமுடியாது. [கண்ணன்கைக்காலினன்] - உன்னைப்போலே சிவந்த

*௬ம் பாட்டு—நன்கெண்ணி இத்யாதி. "நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே - இன்குரல் நீமிழற்றேல்" என்ற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - தன் உக்தி இத்யாதி.*

*வளர்க்கையிலே, நன்றாகவெண்ணி வளர்க்கையாவதேதென்ன, அருளிச்செய்கிறார் - திருநாமம் இத்யாதி. "கிளிப்பைதலே" என்ற ஏகவசநத்தைக்கடாக்ஷித்தாதல், "வளர்த்த" என்ற மாத்ரத்துக்காதல் அர்த்தமருளிச்செய்கிறார் - ஏகபுத்ரைகளை இத்யாதி. இத்தால் ஹார்த்தஸ்வமாதல், "நான் வளர்த்த" என்றதுக்கர்த்தமாதல் - நானென்றை இத்யாதி. நீ யாதரித்தாரில் அப்படி யப்பதாவாருண்டோவென்ன - அவனும் இத்யாதி. சிறுமையும் பைதலும் புநருக்தமன்றோவென்ன - சிறுமை இத்யாதி. "பைதல்" என்றத்தால்ஸ்வம் - உன்பசற்றனம் இத்யாதி. பசற்றனம் - பால்யம். விஶ்லேஷதஶையில் இதின்குரல், விரஹிணிகளுக்கு வாதகமாயிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - கூரியவேல் இத்யாதி. நிரம்பாமென்சொல் - அபூர்ணமாய் ம்ருதுவான அர்த்தோக்திகள். "யான்வளர்த்த" என்றத்தைக்கடாக்ஷித்து, "மிழற்றேல்" என்றதுக்குஹார்த்தஸ்வம் - மாத்ருவதத்திலேயும் இத்யாதி. கூட்டுண்டுநீங்கினவனை "என்னாருயிர்" என்பானென்? என்ன - வ்யதிரேகத்தில் இத்யாதி. வ்யதிரேகத்தில் - விஶ்லேஷத்தில். பெருமாளை இவர் தஞ்சமென்றிருப்பாரோவென்ன - தயரதற்கு இத்யாதி. செய்யவாயனென்றால் போதாதோ? "செய்யவாயொக்கும்" என்பானென்? என்ன - உபமாநத்தை இத்யாதி. உன்னைப்போலேசிவந்த என்றது - உன்வாயைப்போலே சிவந்த*

கண்ணையும், கையையும், திருவடிகளையுமுடையவன். [நின் பசுஞ்சாமநிறத்தன்] - உன்னுடையகுளிர்ந்த ஸ்யாமமான நிறத்தையுடையவன். [பசுஞ்சாமம்] - ஸ்யாமமாய் எரித்திருக்கையன்றிக்கே, குளிர்ந்திருக்கை. ஓருடம்பிலே இத்தனை பகைதேடிவைக்கலாமோ? [கூட்டுண்டு நீங்கினான்] - கலந்து என் ப்ரக்ருதியையறிந்துவைத்துப் பிரிந்தான்; அவன் கூடவிருந்தாலன்றோ உன்படிகள்அநுகூலமாயிருப்பது? தனியிருப்பில் நலிவார் ராவணாதிகளன்றோ? அநுகூலரும் நலிவரோ? (௬)

## ஏழாம் பாட்டு.

கூட்டுண்டுநீங்கிய கோலத்தாமரைக்கண்செவ்வாய்
வாட்டமிலென்கருமாணிக்கம் கண்ணன்மாயன்போல்
கோட்டியவில்லோடு மின்னுமேகக்குழாங்கள்காள்
காட்டேன்மின்நும்முரு என்னுயிர்க்குஅதுகாலனே.

ஆ.—(கூட்டுண்டு) - என்னோடே கூட்டுண்டுநீங்கி, அதினால் ஒருவாட்டமின்றியே ஆஸ்சர்யமான அழகையுடையவனாய், ஶார்ங்காதிதிவ்யாயுதோபேதனாய், ஹாரகேயூராதி திவ்யபூஷண பூஷிதனாயிருந்த கண்ணனைப்போலேயிருந்த, கோட்டிய வில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்! இந்த வ்யஸநத்தின்மேலே, காட்டேன்மின் நும் உரு; என்னுயிர்க்கு அதுகாலன் என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், அவனுடைய திருநிறம்போலேயிருக்கிற நிறத்தையுடைய மேகமாலையைக் கண்டு பொறுக்கமாட்டாமை உங்கள் வடிவைக்காட்டி என்னை முடியாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

[கூட்டுண்டென்றுதொடங்கி]-என்னோடேகலந்து பிரிகையாலே அழகிய தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையும் சிவந்த திருப்பவளத்தையும் எனக்கு மறக்கவொண்ணாதபடி ஶ்லாக்யமான கறுத்த திருநிறத்தையுமுடையனாய் அத்யாஸ்சர்யமான வடிவழகையுடையனுமாய், என்னைப்பிரிந்து ஒருவாட்டமின்றிக்கேயிருக்கிற க்ருஷ்ணனைப் போலே. [கோட்டியவில் என்று மேனுச்கு] - வளைந்த வில்லோடே கூட மின்னுகின்றுள்ள, மேகஸமூஹங்காள்! உங்கள்வடிவைக் காட்டாதே கொள்ளுங்கோள்; என்செய்யவென்னில்,-என்னுடைய ப்ராணனுக்கு அது ம்ருத்யு. அதுவென்று மேகங்களுடைய வடிவைக் காணமாட்டாமை பராங்முகியாயிருந்து சொல்லுகிறாள்.

ப.—அநந்தரம், தன்னை ஈடுபடுத்தின க்ருஷ்ணன்வடிவுக்குப் போலியான மேகஸமூஹத்தைக்கண்டு, என்னைமுடிக்கைக்கு ஹேதுவான உங்களுடைய ரூபத்தைக் காட்டாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

என்றபடி. பசுமை - குளிர்த்தி. சாமம் என்றால் போராதோ? 'பசு' என்று குளிர்த்தியை விசேஷிப்பானென்? என்ன - ஸ்யாமமாய் இத்யாதி. "நின்செய்யவாயொக்கும்" இத்யாதியால் ஸூசிதம் - ஓருடம்பிலே இத்யாதி. இவைபகையோ, அவனுக்குஸ்மாரகமாய் அநுகூலமாயிராதோவென்ன - அவன் கூட இத்யாதி. "நீமிழற்றேல்" என்றக்ரியாபதத்துக்குச்சேர ஸாவம்-தனியிருப்பில் இத்யாதி வாக்யத்வயம். 'நன்கெண்ணி - நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே - என்னாருயிர்க்காகுத்தன்' என்று தொடங்கி, 'நீங்கினான் - இன்குரல்-நீமிழற்றேல்' இத்யந்வயஃ (௬)

கூட்டுண்டு - என்னோடு ஏகரஸமாம்படி ஸம்ஶ்லேஷித்து, நீங்கிய - பிரிந்த தசையில், கோலம் - தர்ஶநீயமான, தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண் - கண்ணையும், செம்-சிவந்த, வாய்-அதரத்தையுமுடையனாய், வாட்டமில் என் கருமாணிக்கம் - இடைவிடாமல்எனக்கு ஸ்ம்ருதிவிஷயமான நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையனாய்க்கொண்டு, (எனக்கு), கண்ணன் - (ஸுலபனான) க்ருஷ்ணனாகிற, மாயன்போல்- ஆஶ்சர்யசேஷ்டிதனைப்போலேயிருக்கிற, கோட்டிய - வளைக்கப்பட்ட, வில்லொடு-வில்லோடே கூட, மின்னும் - மின்னுகிற, மேகக்குழாங்கள்காள் - மேகஸமூஹங்கள்காள்! என் - என்னுடைய, உயிர்க்கு - ப்ராணனுக்கு, அது காலன் - அது ம்ருத்யுரூபமாயிருக்கும்; நும்உரு - உங்கள்வடிவை, காட்டேன்மின் - காட்டாதேகொள்ளுங்கோள்.

இ.—ஏழாம் பாட்டில், அவன்வடிவுக்குப் போலியான மேகமாலையைக் கண்டு உங்கள் வடிவைக்காட்டி என்னைமுடியாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

[கூட்டுண்டு நீங்கியவென்று தொடங்கி]-"ஏகதத்த்வம்" என்னும்படி கலந்து பிரிந்தபின்பு அவனுடைய அவயவஶோபையிருந்தபடி என்னுதல்; இவளோடே கலக்கையாலேவந்த ஶோபையென்னுதல். [கோலத்தாமரைக்கண் செவ்வாய்] - தர்ஶநீயமான தாமரைபோலேயிருக்கிற கண்ணையும் சிவந்தவாயையும் உடையவனாய். [வாட்டமில் என்கருமாணிக்கம்] - பிரிந்தபின்பும் மறக்கவொண்ணாதபடி ஸ்மாரகமாய் நலிகிற நீலரத்நம்போலேயிருக்கிற நிறத்தையுடையனாய்; கலந்தபோது வடிவிற்பிறந்த செவ்வி பிரிந்தபின்பும் அப்படியேயிருக்கிறபடியைச் சொல்லிற்றாகவுமாம்: இத்தலையை வெறுந்தரையாக்கினபின்பு நிறம் இரட்டித்தபடி. "நைவதம்ஶாந் ந மஶகாந்" என்று அவனிருக்க, அரைக்ஷணம் தாழ்த்தானென்ன இவ்வார்த்தையைச் சொல்லுகிறாளிறே! [கண்ணன் மாயன்போல்] - ஆஶ்சர்யசேஷ்டிதனான க்ருஷ்ணனைப்போலே; கலந்தபோது காலைக் கைப்பிடித்துப் பரிமாறி ஸுலபனாயிருந்தபடி. [கோட்டிய இத்யாதி] - வளைத்த வில்லோடேகூடி மின்னாநின்றுள்ள மேகஸமூஹங்காள்! கௌஸ்துபஸ்தாநீயமிறே மின். [காட்டேன்மின் நும்உரு] - ம்ருத்யுஸத்ருஶமான உங்கள் வடிவைக்காட்டாதே கொள்ளுங்கோள். அவ்வடிவைக்கொண்டு அகலவிருந்தவனோடு உங்களோடு வாசியற்றிருந்ததீ! "அதுவென்" என்னில்?-[என்னுயிர்க்கு அது காலனே]-பண்டே விரஹதின்ற என்னுடைய ப்ராணனுக்கு ம்ருத்யு. 'குழாங்கள்காள்' என்றுவைத்து, 'அது' என்கிறது காணமாட்டாமையாலே முகம்மாறிச் சொல்லுகிறாள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன்வடிவுக்குப்போலியான மேகமாலையைக்கண்டு, உங்கள் வடிவைக்காட்டி என்னைமுடியாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

[கூட்டுண்டுஇத்யாதி] - "ஏகதத்த்வம்" என்னும்படி கலந்து பிரிந்தபின்பு அவனுடைய அவயவஶோபையிருந்தபடி யென்னுதல்; இவளோட்டைக் கலவியால்வந்த ஶோபையென்னுதல். [கோலத்தாமரைக்கண்செவ்வாய்] - அழகியதாமரைபோலேயிருக்கிற திருக்கண்களையும், சிவந்த அதரத்தையுமுடையனாய். [வாட்டம் இத்யாதி] - கலந்த

---

ஏழாம்பாட்டு.—கூட்டுண்டு இத்யாதி. "கண்ணன்மாயன்போல்கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - அவன்வடிவுக்கு இத்யாதி.

"கோலத்தாமரைக்கண்செவ்வாய்"—அவயவஶோபைசொன்னதுக்கு பாவத்வயம்-ஏகதத்த்வம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. முந்தினபாவம் - வெறுப்பிலே. பிற்பதத்தில் பாவத்வயாது

போதைச்சேவ்வி, விரஹத்திலும் தலைச்சாவி வெட்டப்போகிறதில்லைகாணும்; இத்தலையை வெறுந்தறையாக்கினபின்பு இரட்டித்தபடி. [என்கருமாணிக்கம்] - பிரிந்தபின்பும் மறக்கவொண்ணுதபடி நலிகிற நீலரத்நம்போலேயிருக்கிற திருநிறத்தை யுடையனுய். "நைவதம்ஸாந்நமஸாகாந்" (நைவதம்ஸாந்நமஸாகாந்) என்று அவனிருக்க, அரைக்ஷணந் தாழ்த்தானேன்னு இவ்வார்த்தையைச் சோல்லுகிருளிறே! [கண்ணன் மாயன் போல்] - ஆஸ்சர்யபூதனுன க்ருஷ்ணனைப்போலே; கலந்தபோது காலைக்கையைப் பிடித்துப் பரிமாறி ஸஹ்யனுயிருந்தபடி. [கோட்டியவில்இத்யாதி] - வளைத்தவில்லோடேகூடி மின்னுநின்றுள்ள மேகஸமூஹங்காள்! கௌஸ்துபம் திருமேனிக்கு ப்ரகாஸகமாமா போலே இராநின்றது மின். [காட்டேன்மின் நம் உரு] - ம்ருத்யுஸத்ருஸமான உங்கள் வடிவைக் காட்டாதேகோள்ளுங்கோள்! அவ்வடிவைக்கோண்டு அகல இருந்தவனேடு உங்களோடு வாசியில்லையா யிருந்ததீ! "அதுவென்?" என்னில், - [என்னுயிர்க்கு அது காலனே]-விரஹம்தின்று பண்டே தற்புஅற்ற என்ப்ராணனுக்கு அது ம்ருத்யுவாகாநின்றது. 'குழாங்கள்காள்காட்டேன்மின்நம்உரு' - என்றுவைத்து 'அது' - என்கிறது, காணமாட்டாமை, முகத்தைமாறவைத்துச் சோல்லுகிருள். (எ)

---

## எட்டாம் பாட்டு.

உயிர்க்கதுகாலனேன்றுஉம்மையானிரக்தேற்கு நீர்
குயிற்பைதல்காள்!கண்ணன்நாமமேகுழறிக்கோன்றீர்
தயிர்ப்பழஞ்சோற்றேடு பாலடிசிலுந்தந்து சோல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே!

---

குணமாக வ்யுத்க்ரமமாக ஸாவத்வயம் - கலந்தபோதை இத்யாதிவாக்யத்வயம். தலைச்சாவிவேட்டப் போகிறதில்லை - எழுச்சியறுக்கப்போகிறதில்லை. தலைச்சாவிவெட்டுகையாவது - பயிர் மதாளித்துப் போனல் தனிக்கிளையறுத்துப் போகடுகை. இத்தால் - கலந்தபோதைச் சேவ்வியின் ஆதிக்யஞ்சொல்லுகிறது. "என்" என்றதுக்குபாவம் - பிரிந்தபின்பும் இத்யாதி. வாட்டமின்றிக்கேயிருக்கிற, என்னுடைய நீலரத்நம்போன்ற வடிவையுடையவனென்று ஸப்தார்த்தம். "என்-" எனக்கு எப்போதும் ஸ்ம்ருதிவிஷயமான என்றபடி. "நஜீவேயம் க்ஷணமபி" என்றிருக்கிறவனை, விஸ்லேஷத்தாலே உஜ்ஜ்வலனுயிருக்கிறுனென்பானேன்? என்ன - நைவதம்ஸாந் இத்யாதி. ஆற்றுமையாலேஎன்றபடி. "நைவதம்ஸாந்நமஸகாந்நகீடாந்நஸரீஸ்ருபாந் ராகவோபநயேத்காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா" இதி வைதேஹீம்ப்ரதி மாருதிः. ஸுந்-(௩௬-௪௨) ஆஸ்சர்யமேதென்ன-கலந்தபோது இத்யாதி. கோட்டுதல் - வளைத்தல், "மின்" என்றதுக்கு த்ருஷ்டாந்தமேதென்ன - கௌஸ்துபம் இத்யாதி. "கோட்டியவில்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரீஸார்ங்கமென்று கண்டுகொள்வது. "நம்" என்றதுக்குபாவம் - அவ்வடிவை இத்யாதி, என்னுதல்; ஆஸ்வஸிப்பிக்கவந்த எங்களையிங்ஙன் சொல்லுவானேன்? என்ன - அவ்வடிவை இத்யாதி என்னுதல். அதுவேன்னேன்னில் என்றது - உம்முருவைக் காட்டாதேகொள்ளுங்கோ ளென்கிறதுக்கடி என்? என்னில் என்றபடி. தற்புஅற்ற- பலமற்ற. "நம்முரு" என்று ப்ரத்யக்ஷமாகச்சொல்லிவைத்து, "அது" என்கிறதென்? என்ன - குழாங்கள்காள் இத்யாதி. அடைவே அந்வயம். (எ)

ஆ.—(உயிர்க்கது) - 'கண்ணனுடைய திருநாமங்களைச்சொல்லில் நான் முடிவன்: அவற்றைச் சொல்லாதொழியவேணும்' என்று உங்களை நான் இரக்க, பின்னையும் அவற்றையேசொல்லிக்கொன்றீர்கோள்! நான் உங்களை வளர்த்தப்ரயோஜநம் அழகிதாகப் பெற்றேனென்று, தன் குயில்களை இன்னாதாகிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், சிலகுயில்களைக்குறித்து, வேண்டாவென்று ப்ரார்யிக்க மேன்மேல் திருநாமத்தைச்சொல்லி நலிந்தீர்கோள்: உங்களை வளர்த்த ப்ரயோஜநம் பெற்றேனிறே என்று இன்னாதாகிறாள்.

[உயிர்க்கென்று தொடங்கி] - 'குயிற்பிள்ளைகாள்! அவனுடைய திருநாமங்களை நீங்கள் சொல்லில் நான்முடிவன்; அவற்றைச் சொல்லாதொழியவேணும்' என்று உங்களை இரந்த எனக்கு, க்ருஷ்ணனுடைய திருநாமங்களையே சொல்லி என்னைக் கொன்றீர்கோள். [தயிர்ப்பழஞ்சோறென்று தொடங்கி] - காலந்தோறும் உங்களுக்கு அபேக்ஷிதமானவற்றையே தேடியிட்டு உங்களைச்சொல்ல அப்யஸிப்பித்ததுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணினீர்கோள்! சாலத் தக்காராயிருந்தீர்கோள்!

ப.—அநந்தரம், அவஸாதகரமான க்ருஷ்ணன்நாமங்களைச்சொல்லவேண்டாவென்கைச்செய்தே சொல்லிமுடித்தீர்கோளே!' என்று, தான்வளர்த்த சிலகுயில்களைச் சொல்லுகிறாள்.

நான் - நான், (இவ்வவஸ்தையில்), அது - அது, உயிர்க்கு - ப்ராணனுக்கு, காலமென்று - ம்ருத்யுரூபங்கிடீர்கோளென்றுசொல்லி, உம்மை - உங்களைக்குறித்து, இரந்தேற்கு - ப்ரார்த்தித்த எனக்கு, குயிற்பைதல்காள் - குயிற்பிள்ளைகாள்! நீர் - நீங்கள், (உங்கள் பிள்ளைத்தனத்தாலே), கண்ணன்நாமமே - ஐவ்பனை க்ருஷ்ணனுடைய திருநாமங்களை, குழறி - அநக்ஷரரஸமாகச்சொல்லி, கொன்றீர் - முடித்துவிட்டீர்கோளிறே! (உங்கள்பால்யத்துக்கீடாக), தயிர்ப்பழஞ்சோற்றொடு - இளம்போதைக்குத் தயிரையுடைத்தான பழஞ்சோற்றோடே, பாலடிசிலும் - பிற்காலுக்குப்பாலுஞ்சோறும் ஆக, தந்து - (உங்களுக்குத்)தந்து, சொல் - (அவன் திருநாமங்களாகிற) சொற்களை, பயிற்றிய - அப்யஸிப்பித்த, (அதுக்குப்ரத்யுபகாரமாக), நல்வளம் - நல்லஸம்பத்தை, ஊட்டினீர் - அநுபவிப்பித்தீர்! பண்பு - நல்லசீர்மையை, உடையீர் - உடையிராயிருந்தீர்!

இ.—எட்டாம் பாட்டில், சில குயில்களைக்குறித்து திருநாமஞ் சொல்ல வேண்டாவென்றிரக்க, அத்தையே சொல்லி நலிந்தீர்கோள்! உங்களை வளர்த்த ப்ரயோஜநம் பெற்றேன்! என்கிறாள்.

[உயிர்க்கு] - தோற்புரையேபோமதன்று அது என்கிறாள், தன்வாயாலே சொல்ல மாட்டாமையாலே. [காலமென்று] - நலிகையன்றிக்கே முடிக்குமென்று. [உம்மை] - நீங்களேயிரந்து என்காரியஞ்செய்யும் உங்களை. [நான்] - உங்களுக்கு ஜநநியாய் மறக்கவொண்ணாத நான். [இரந்தேற்கு] - உங்களை நியமிக்கத்தேனோ? என்செல்லாமையாலே சரணம்புகுந்த எனக்கு. [நீர்] - நியாம்யரான நீங்கள், ப்ராணனுந்தவாதுகாரானீர்கோள். [குயிற்பைதல்காள்] - உங்கள்பால்யம் என்ப்ராணனோடே போய்த்திறே! பருவஞ்சிரம் பாமை [illegible] தாய்வாசியறியவேண்டாவோ? "நாங்கள்செய்ததென்?" என்ன, [கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்] - தீரமாற்றாலே நெஞ்சைப் புண்படுத்திவைக்கும் க்ருஷ்ணன் திருநாமங்களையே அவ்யக்தமாகச்சொல்லி முடித்தீர்கோள். ம்ருதஸஞ்சீவநமான ராம

ருணங்களை ஒருகால் சொல்லலாகாதோ ? [தயிர் இத்யாதி] - தயிரும் பழஞ்சோறும், பாலும்வெஞ்சோறும் அவ்வவகாலங்களுக்கு உசிதமாகத்தந்து திருநாமங்களைக்கற்பித்ததுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணினிகோள். [நல்வளமூட்டினீர்] - நல்லஸம்பத்தை பூஜிப்பித்திகோள் ! நான் காலந்தோறும் உங்களுடைய ரக்ஷணம்பண்ணிப் போந்தேன்; நீங்களும் இவ்விடங்களிலே நலிந்துபோந்திகோள் ! [பண்புடையீரே] - ப்ராப்தியும் ஸவ்யதையும் கிடக்க, சாலநீர்மையுடையீரா யிருந்திகோள் ! ரக்ஷகவிஷயத்தில் நிர்த்தயரா யிருந்திகோள் ! பண்பு - குணம்.

ஈடு.—எட்டாம் பாட்டு. சில குயில்களைக்குறித்து, திருநாமஞ்சொல்லவேண்டாவென்று நான் இரக்க, அத்தையேசொல்லி நலிந்திகோள் ; உங்களை வளர்த்த ப்ரயோஜநம்பெற்றேன் என்கிறாள்.

[உயிர்க்குஅது] – தோற்புரையேபோமதன்று அது வென்கிறாள், தன்வாயாலே சொல்ல மாட்டாமையாலே. [காலனென்று] - நலிகையன்றிக்கே முடிக்குமென்று. [உம்மை] - இரந்து என்கார்யஞ்செய்யும் உங்களை. [நான்] - உங்களுக்கு மறுக்கவொண்ணுதபடி ஜநநியான நான். [இரந்தேற்கு] - உங்களை நியமித்தேனோ? என்சொல்லாமையாலே சரணம்புகுந்த எனக்கு. [நீர்] - நியாம்யரான நீங்கள். ஸரணாகதவாதுகரானிகோள். [குயிற்பைதல்காள்] - உங்கள்பால்யம் என்ப்ராணனோடே போய்த்திறே! பருவம் நிரம்பாமையிலும் தாய்வாசியறிய வேண்டாவோ ? "நாங்கள்செய்ததென் ?" என்ன, [கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர்] - தீரா மாற்றாலே நெஞ்சைப்புண்படுத்திவைக்கும் க்ருஷ்ணன் திருநாமங்களையே அவ்யக்தமாகச்சொல்லி முடித்திகோள். * ம்ருதஸஞ்சீவநமான ராமகுணங்களையும் ஒருகால் சொன்னலாகாதோ ! [தயிர்இத்யாதி] - தயிரும்பழஞ்சோறும், பாலும்வெஞ்சோறும் அவ்வவகாலங்களிலேதந்து திருநாமங்களைக்கற்பித்த அதுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணினிகோள் ! [நல்வளமூட்டினீர்] - நல்லஸம்பத்தை புஜிப்பித்திகோள் ! நான் காலந்தோறும் உங்களுடைய ரக்ஷணம்பண்ணிப்போந்தேன் ; நீங்களும் இவ்விடங்களிலேவந்து நலிந்துபோந்திகோள். இக்குயில்களுக்கு அந்நதோஷம்ஃபலித்து

எட்டாம் பாட்டு - உயிர்க்கு இத்யாதி. "உம்மைநானிரந்தேற்கு - கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர் - சொல்பயிற்றியநல்வளமூட்டினீர்" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலகுயில்களை இத்யாதி. வளர்த்த ப்ரயோஜநம் பெற்றேன் என்றது - வெறுப்பு. "உயிர்க்கு" என்றதுக்குவ்யாக்யை - தோற்புரை இத்யாதி. இன்னதென்னாதே, "அது" என்கிறதென்னென்ன - அதுவென்கிறள் இத்யாதி. "அது" என்கிறது - வக்ஷ்யமாணமான கண்ணன் நாமத்தை. "இரந்தேற்கு - கொன்றீர்" என்றகூட்டி ஹார்த்தபாவம் - ஸரணாகத இத்யாதி. * ப்ரார்த்தநாமதியிறே ஸரணாகதியாவது. "பைதல்காள்" என்றதுக்கு இரண்டுபாவம். அர்த்தமறியாத பருவமென்று முந்தினது ; அத்தையருளிச்செய்கிறார் - உங்கள்பால்யம் இத்யாதி. தாய்வாசியறியாத பருவம் என்று பாவாந்தரம் - பருவம்நிரம்பாமையிலும் இத்யாதி. அதாவது - தாய்க்கும் பேய்க்கும் வாசியறிந்து முடித்த க்ருஷ்ணனைப்போலே யிருக்கவேண்டாவோ? என்றபடி. தீராமாற்றலே- மாற்றாலேதீராத ; ப்ரத்யௌஷதத்தாலே தீராதபடி. மாற்று - ப்ரத்யௌஷதம். "கண்ணன் நாமமே" என்றஅவதாரணார்த்தம் - ம்ருதஸஞ்சீவந இத்யாதி. சொல் - திருநாமங்களை. பயிற்றிய - பயில்வித்ததுக்கு ; அப்யஸிப்பித்ததுக்கென்றபடி. இத்தால்பாவம் - நான் காலந்தோறும் இத்யாதி. ரஸோக்தி - இக்குயில்களுக்கு இத்யாதி. அதாவது - பலிபுக்கினுடைய அந்நத்தை புஜிக்குமென்று ரஸோக்தி ; நானிட்ட சோறு விஷமாய்விட்டதேயென்று ஸ்வபாவார்த்தம். "பண்புடையீர்" என்றது - வ்யங்க்யோக்தி. பண்பு - ஸ்வபாவம். நீர்மையுடையீராய் என்று - விபரீதலக்ஷணை. விவரணம் - ரக்ஷகவிஷயத்

விட்டதோ? [பண்புடையீரே] - ப்ராப்தியும் ஸம்பந்தமும்கிடக்க, சால நீர்மையுடையீரா யிருந்திகோள்! ரக்ஷகவிஷயத்தில் நிர்த்தயராயிருந்திகோள்! (௮)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

பண்புடைவண்டொடுதும்பிகாள்!பண்மிழற்றேன்மின்
புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும்நும்இன்குரல்
தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்கும்
கண்பெருங்கண்ணன்நம்மாவியுண்டெழநண்ணினான்.

*ஆ.—(பண்புடை.)-'பண்புடைவண்டொடுதும்பிகாள்! அவனைப்பிரிந்த வ்யஸநத்தின்மேலே அவன் திருநாமங்களைப்பாடுகிற இதுவொன்றும் பொறுக்கலாயிருந்ததில்லை; பண்மிழற்றேல்மின்' என்ன; "அவன் திருநாமங்களைப்பாடுகை உனக்கு அத்யந்த ப்ரியமல்லவோ?" என்று அவை சொல்ல, 'அவன் தன்னழகைக்காட்டி என்னை மாய்த்துப்போனான் காண்!' என்கிறாள்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், மதுபாநமத்தமாய்க்கொண்டு பாடுகிறன சில வண்டுகளையும் தும்பிகளையும் குறித்து 'உங்களுடைய த்வநிகள் து:ஸஹமாயிருந்தன. நீங்கள் பாடாதே கொள்ளுங்கோள்' என்கிறாள்.*

*[பண்புடையென்று தொடங்கி] - நீர்மையையுடைய வண்டோடுகூடின தும்பிகாள்! பண்மிழற்றாதே கொள்ளுங்கோள். 'பண்புரை' என்று பாடமானபோது, பண்ணை முரலாநின்றுள்ள வண்டோடு கூடினது. [புண்புரையென்று தொடங்கி] - புண்ணின் ‡ விவரத்திலே வேலைக்கொடு குத்தாற்போலேயிராநின்றது, உங்களுடைய இனியத்வநிகள். [தண்பெருநீரென்று மேலுக்கு] - குளிர்ந்த நீர்வெள்ளத்திலே பெரிய தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரிய கண்களையுடைய க்ருஷ்ணன் அவ்வழகைக்காட்டி என்னை மாய்த்துப் பிரிந்துபோனான். குளிர்ந்த நீர்வெள்ளத்தையுடைய தடாகம் தாமரை பூத்தாற்போலே பெரியகண்களையுடைய க்ருஷ்ணனென்றுமாம்.*

*ப.—அநந்தரம், நிரதிசயபோக்யமான கண்ணழகையுடைய க்ருஷ்ணன் எங்களுடைய ப்ராணாபஹாரம் பண்ணிப்போனான்; புண்ணிலே வேலைக்கொடு குத்தினாற்போலே பாடாதே கொள்ளுங்கோள்! என்று சிலவண்டுகளையும் தும்பிகளையுங் குறித்துச் சொல்லுகிறாள்.*

*பண்புடை - பாட்டின் நீர்மையையுடைத்தான, வண்டொடுதும்பிகாள்-வண்டுகளோடுகூடின தும்பிகாள்! நும் இன் குரல் - உங்களுடைய இனிய குரலானது, புண்புரை - புண்ணின்புரையிலே, வேல்கொடு - வேல்கொண்டு, குத்தாலொக்கும் - குத்தினாற்போலேயிராநின்றது; (நீங்கள்), பண்மிழற்றேன்மின் - பண்ணைமதுரமாகவாப்தியாதேகொள்ளுங்கோள்! தண் - குளிர்ந்து, பெரு - நிரம்பின, நீர் - நீரையுடைய,*

---

*தில் இத்யாதி. 'குயிற்பைதல்காள் - உயிர்க்கதுகாலன் என்று தொடங்கி, 'இரக்கேதற்கு, நீர்-கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்; தயிர்ப்பழம்' என்று தொடங்கி,'பண்புடையீர்' இத்யந்வய: (௮)*

---

‡ விவரம் - தொளை,

தடம் - தடாகம், தாமரைமலர்ந்தாலொக்கும் - தாமரைமலர்ந்தாற்போலே, பெருங் கண் - கண்ணின்பெருமையையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனானவன், நம் - நம்முடைய, ஆவி - ப்ராணனை, உண்டு - அபஹரித்து, எழுநண்ணினான் - அகலப்போனான். 'பண்புரை' என்று பாடமானபோது, ஸ்வாபாவிக ஶப்தத்தையுடையவை என்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், மதுபாநமத்தமாய்க்கொண்டு பாடுகிறன சில வண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து உங்கள் த்வநிகள் துஸ்ஸஹமாயிருந்தன நீங்கள் பாடாதே கொள்ளுங்கோள் என்கிறாள்.

[பண்புடை இத்யாதி] - நீர்மையுடைய வண்டோடேகூடின தும்பிகாள்! பண் மிக்க ஆளத்தியையாதே கொள்ளுங்கோள். 'பண்புரை' - என்று பாடமானபோது பண்பான உரையாய் முரலுகையைச் சொல்லுகிறது; பண்ணைமுரலாநின்ற வென்றுமாம். [புண் இத்யாதி] - புண்ணின் விவரத்திலே வேலைக்கொண்டு குத்தாப்போலே யிராநின்றது. உங்கள் இனிபத்வநி. கீழில் பதார்த்தங்களெல்லாங்கூடப் புண்படுத்தின, அதிலேநலிகிறன இவை. [தண்பெருநீர் இத்யாதி] - குளிர்ந்து பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரியகண் களையுடைய க்ருஷ்ணன். [நம்மாவியுண்டெழ நண்ணினான்]-அவ்வழகைக்காட்டி என்னை முடித்துப் பிரிந்துபோனான்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. மதுபாநமத்தமாய்ப்பாடுகிறன சிலவண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து, உங்கள் த்வநி எனக்கு துஸ்ஸஹமாயிருந்தது, நீங்கள்பாடாதே கொள்ளுங்கோள்! என்கிறாள்.

[பண்புடை வண்டோடுதும்பிகாள்] - நீர்மையுடைய வண்டோடேகூடின தும்பிகாள்! [பண்மிழற்றேன்மின்] - பண்மிக்க ஆளத்திவையாதேகொள்ளுங்கோள். "பண்புரை" - என்று பாடமானபோது, பண்பானவுரையாய், முரலுகையைச் சொல்லுகிறது; பண்ணை முரலாநின்ற வென்றுமாம். [புண்புரைவேல் கோடுகுத்தாலொக்கும் நும் இன்குரல்] - முன்பே மற்றையவற்றின் த்வநியாலே புண்பட்டிறேயிருக்கிறது: அதிலே வேலைக்கோடு குத்தினாற்போலேயிராநின்றது உங்கள் த்வநி. [தண்பெருநீர்த் யாதி] - குளிர்ந்த பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய்

---

ஒன்பதாம்பாட்டு - பண்புடை இத்யாதி. "வண்டொடுதும்பிகாள் - வேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின்குரல் - மிழற்றேன்மின்" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - மதுபாநமத்தமாய் இத்யாதி.

நீர்மையென்று - காநாநுகுணமான ஸ்வபாவமூர்ச்சநங்களையறிகை; "வண்டு" என்றும், "தும்பி" என்றும் - ப்ருங்கஜாதியில் அவாந்தரபேதம். ஆளத்தி - ஆலாபம். "பண்புரை" என்ற பாடத்திலே, "பண்பு" என்று - அழகாய், "உரை" என்று - ஶப்தமாய், அழகிதான ஶப்தத்தையுடைய வண்டென்றபடி. பண்ணைமுரலாநின்ற என்றத்விதீயார்த்தத்துக்கு, "பண்" என்று - காநமாய், "புரை" என்று - செருக்கமாய், காநப்ராசுர்யத்தையுடைய வண்டென்று ஶப்தார்த்தம். "புண்புரை"- புண்ணினுடைய, புரையிலே - வாயிலேயென்றபடி. இவளுக்குப் புண்ணேதென்ன - முன்பே இத்யாதி. "பெருங்கண் - கண்ணன்" என்றந்வயிப்பது. நம்மாவியுண்டு - நம்முடைய ப்ராணனை †ப்ரஹரித்து. எழுநண்ணினான் - அகலப்போனான்; பிரிந்துபோனான் என்று ஶப்தார்த்தம். 'பண்

---

† 'அபஹரித்து' என்று பாடமானால் பன்னீராயிரப்படிக்குச் சேரும்.

அவ்வளவன்றிக்கே பெரிய கண்ணையுடைய க்ருஷ்ணன். [நம்இத்யாதி] - அவ்வடிவழகைக்காட்டி என்னை முடித்துப் பிரிந்துபோனான். (க)

## பத்தாம் பாட்டு.

எழநண்ணிநாமும் நம்வானநாடனோடொன்றினோம்
பழனநன்னாரைக்குழாங்கள்காள்பயின்றெனினி
இழைநல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது
தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந் தழைக்கவே.

ஆ —(எழநண்ணி.) - அவன்கருத்துப்படியே நானும் முடிந்தேன்; என்னுடைய ஆக்கையுந் தளர்ந்தது; 'பழனநன்னாரைக் குழாங்கள்காள்! பயின்றெனினி?' என்றுசொல்லி, பின்னையும், 'நான்பட்டபாடு ஒருவரும் படாதொழிந்திடுக' என்று சொல்லிக்கொண்டு முடிந்தாளென்கிறது, இப்பாட்டு.

ஒ.—பத்தாம் பாட்டில், 'திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்க மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு, 'நான் முடிந்தேன்: இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?' என்கிறாள்.

[எழநண்ணியென்று தொடங்கி] - இங்கேயிருந்து அவனை பூஜிக்கும் ஆசையைத்தவிர்ந்து, அவன்கருத்தின்படியே நானும்முடிந்தேன்; பழனங்களிலேயிருப்பதுஞ்செய்து நீங்கள் கோலினபடியேமுடிக்கவல்ல நாரைக்குழாங்கள்காள்! திரண்டு என், இனி? [இழையென்று தொடங்கி] - விலக்ஷணமான ஶரீரமும் க்ரமேண பசைபற்றது. [தழையென்றுதொடங்கி] - இப்படி தளர்ந்து முடியப்புகுகிறவள், எம்பெருமானுடைய விஶ்லேஷஸம்ருத்தமாக என்கிறாள். நான்பட்ட து:கம் ஒருவரும் படாதொழிய வேணும் என்று தன்னுடைய கோலின் மிகுதியாலே சொல்லுகிறாளென்றுமாம். நான்போக, லோகமெல்லாமுடைய என்னார்த்திகாணாதே பிழைக்குமாகாதே! என்றுமாம்.

ப.—அநந்தரம், 'பரமபதநிலயனோடே நாங்கள் ஒன்றுபட்டுவிட்டோம்; இனி, உங்கள் திரட்சிக்கு ப்ரயோஜநமென்?' என்று, சில நாரைத்திரளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

(அவன் நினைவுக்கீடாக), நாமும் - நாமும், எழநண்ணி - போக்கிலேயொருப்பட்டு, நம் வானநாடனோடு - நமக்கு ப்ராப்யமான பரமபதத்திலே யிருக்கிறவனோடே, ஒன்றினோம் - ஏகஹ்ருதயராய்விட்டோம்; பழனம் - நீர்நிலத்திலே, நல் - ஊர்ஶியமாய்க்கொண்டு, நாரைக்குழாங்கள்காள்-(திரண்டிருக்கிற)நாரைக்குழாங்கள்காள்! இனி பயின்றென் - இனிச் செறிந்து விசாரிக்கிறதுக்கு என்னப்ரயோஜநமுண்டு? இழைநல்ல-(அவனுக்கு)ஆபரணம்போலே ஸ்ப்ருஹணீயமான, ஆக்கையும்-ஶரீரமும், பையவே-க்ரமத்திலே, புயக்கற்றது - கைவிட அப்யஸியாநின்றது; (இனி, என்னுடைவேங்காதைமையாலே), எங்கும் - எல்லாத் தேசமும், தழை - விஸ்தீர்ணமாய், நல்லவின்பம் - நன்றான

புடைவண்டொடு தும்பிகாள்! தண்பெருநீர்' என்று தொடங்கி, 'எழநண்ணினன்;' ஆகையாலே, நும்மின்குரல் - புண்புரைவேல்கொடு குத்தாலொக்கும்-பண்மிழற்றேன்மின்' இத்யாதி (க)

ஸாவத்தை, தலைப்பெய்து - பெற்று, தழைக்க - ஸம்ருத்தமாகக்கடவது. †புயக்குதல்-புயத்தல்: வாங்குதலாய் விடுகையைச் சொன்னபடி.

இ.—பத்தாம்பாட்டில், திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னை முடிக்க மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு, 'நான் முடிந்தேன், இனி, நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?' எனs

[எழுநண்ணி இத்யாதி] - போக்கிலேயொருப்பட்டு, நாமும் நம்வானநாடனோடொன்றினோம். கடலைக் குளப்படியிலேமடுத்தாற்போலே தன்னையிலக்காக்கி இத்தலையை வெறுந்தறையாக்கித் தன்னைக்கொண்டு அகன்றான். நாமும் அயர்வறுமமரர்கள் அதிபதியோடே ஒருமிடறானோம். நித்யஸூரிகளும் அவனுமாயிருந்து நம்மைமுடிக்க எண்ணினபடியே நாமும் இசைந்தோம். அவன் முடிக்கநினைக்க, நாம் ஜீவிக்கவெண்ணி இடக்கைப்புரிமுறுக்குகை தவிர்ந்து நாமும் முடிகையிலே துணிந்தோம். நித்யஸூரிகளும் சந்தாநுவர்த்திகளாகையாலே அவன்கருத்தே கருத்தாயிருப்பர்களிறே. [பழனநன்னாரைக்குழாங்கள்காள்] - நீர்நிலங்களிலே வர்த்திப்பதாய், தொடங்கினகார்யம் முடிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடைத்தான நாரைக்குழாங்கள்காள்! [பயின்றென்னினி] - திரண்டு ப்ரயோஜநமென்? நான் அவன்கருத்தைப் பின்செல்ல நினைபாதவன்றன்றோ உங்கள்மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுள்ளது? முதலிகள் திரள்திரளாகவிருந்து பெருமாளையும் பிராட்டியையுஞ் சேர்க்கைக்கு விரகுபார்த்தாற்போலே, இவை திரள்திரளாக விருந்து தன்னையும் அவனையும் பிரிக்கைக்கு விசாரிக்கிறன என்றிருக்கிறாள். ''அவன் வேண்டுவாரைச் சேர்க்கையும் வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குக்கள்பணி'' என்றிருக்குமிறே, ராமாவதாரத்தில் வாஸனையாலே. [வானநாடன்] - 'நாரைக்குழாங்கள்காள், என்கையாலே, உபயவிபூதியும் வேணுமோ ஓர்அபலையைமுடிக்கைக்கு! [இழைநல்ல வாக்கையும்] - ஆபரணத்தாலே அழகிதான ஶரீரமென்னுதல். ஆபரணம் பூண்டாற்போலேயிருக்கிற விலக்ஷணஶரீரமென்னுதல். [பையவே புயக்கற்றது] - க்ரமேண பசைபற்றதென்னுதல். க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல். புயத்தலென்று -போதலாதல், புயக்கென்று - ஆகர்ஷகத்வமாதல். [தழைநல்ல இத்யாதி] - ஈஶ்வர விபூதி ஸம்ருத்தமாகவேணும் என்கிறாள். நஸ்கித்தான் காத்தளிக்கும் பொழிலிறே. ''தாந்தாம் முடியநினைப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப்போலே சொல்லுகிறாள்'' என்று ஆளவந்தார் நிர்வாஹம். ''நான்பட்டபாடு நாடுபடாதொழிய வேணும்'' என்று எம்பெருமானார். ''நான்முடிய என்னார்த்திகாணாதே லோகமடையப் பிழைக்கும்'' என்று பட்டர்.

ஈடு.—பத்தாம்பாட்டு. திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னை முடிக்க மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு, 'நான் முடிந்தேன்: இனி, நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?' என்கிறாள்.

[எழுநண்ணி] - போக்கிலே ஒருப்பட்டு. [நாமும் நம்வானநாடனோடொன்றினோம்] - கடலைக் குளப்படியிலே மடுத்தாற்போலே தன்னை யிலக்காக்கி இத்தலையை வெறுந்தறையாக்கித் தன்னைக்கொண்டகன்றான். நாமும், * அயர்வறுமமரர்க ளதிபதி

பத்தாம்பாட்டு - எழுநண்ணி இத்யாதி. ''நாமும் நம் வானநாடனோடொன்றினோம், நாரைக குழாங்கள்காள் பயின்றென்னினி'' என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - திரள இத்யாதி. மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு என்றது -''பயின்றென்னினி'' என்றத்தைப்பற்ற, போக்கிலே ஒருப்பட்டு என்றது - திருவடிச்சாருகையிலே யொருப்பட்டென்றபடி. ''வானநாடு'' என்று விசேஷித்ததுக்கு

† புயக்கற்றது என்பதற்குப் பன்னீராயிரப்படியில் அருளியதைப்பார்க்குமிடத்து, புய்க்குதல், புய்த்தல்-வாங்குதலாய், விடுகையைச்சொன்னபடி என்று இருக்கலாமென்று தோன்றுகிறது.

யோடே ஒருமிடமுன்றோம். நித்யஸூரிகளும் அவனோடாகவிருந்து நம்மைமுடிக்கவெண்ணின படியே, நாமும் இசைந்தோம். அவன் முடிக்க நினைக்க, நாம் ஜீவிக்கவேண்ணி, இடக் கைப்புரி முறுக்குகைதவிர்ந்து, நாமும் முடிகையிலே துணிந்தோம். நித்யஸூரிகளும் ஸந்தாநுவர்த்திகளாகையாலே, அவன்கருத்தே கருத்தாயிருப்பர்களிறே. [பழனநன்னாரைக் குழாங்கள்காள்] - நீர்நிலங்களிலே வர்த்திப்பனவாய்த் தொடங்கின காரியம் முடிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடைத்தான நாரைக்குழாங்கள்காள்! [பயின்றென்னினி] - இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமேன்? நான் அவன்கருத்தைப் பின்செல்லாதவன்றன்றோ உங்கள் மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுள்ளது? முதலிகள் திரள்திரளாகவிருந்து பெருமாளையும் பிராட்டி யையும் சேர்க்கைக்கு விரகு பார்த்தாற்போலே, இவை திரள்திரளாகவிருந்து தன்னையும் அவனையும் பிரிக்கைக்கு விரகு பார்க்கிறன வென்றிருக்கிறாள். "அவன் வேண்டுவாரைச் சேர்க்கையும், வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குக்களுக்குப் பணி" என்றிருக்குறே, ராமாவதாரத்தில் வாஸநையாலே. 'வானநாடன் - நாரைக்குழாங்கள்காள்' - என்கை யாலே, உபயவிபூதியும்வேணுமோ ஓரபலையை முடிக்கைக்கு? [இழைநல்லவாக்கையும்]- ஆபரணத்தாலே அழகிதான ஶரீரமென்னுதல், ஆபரணம் பூண்டாற்போலேயிருக்கிற விலக்ஷண ஶரீரமென்னுதல். [பையவே புயக்கற்றது] - க்ரமேண பசையற்றதென்னு தல், க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல். புயத்தலென்று - போதலாதல், புயக் கென்று - ஆகர்ஷகமாதல். [தழைநல்லவித்யாதி] - ஈஶ்வரவிபூதி ஸம்ருத்தமாக வேணுமென்கிறாள். "தாந்தாம் முடியநினைப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப்போலே சொல்லுகிறாள்" என்று ஆளவந்தார் நிர்வாஹம்; "நான் பட்ட பாடு நாடு படாதொழிய வேணும்" என்று எம்பெருமானார்; "நான் முடிய என்னார்த்திகண்டு நோவுபடாதே, லோகமடங்கப் பிழைக்குமாகாதே!" என்று பட்டர். (கo)

---

பாவம் - நித்யஸூரிகளும் இத்யாதி. "ஒன்றினோம்" என்றதுக்கு பாவம் - அவன்முடிக்க இத்யாதி. இடக்கைப்புரி முறுக்குகையாவது - வலக்கைப்புரி முறுக்குகைக்கெதிராக இடக்கைப்புரியாக முறுக்குகை. அதாவது - ப்ராதிகூல்யஞ்செய்கை யென்றபடி. "ரக்ஷகிலக்ஷணோவத்யஃ" என்ற படியாலுக்கான நித்யஸூரிகள் நம்மையிலே பொருப்பகொர்களோவென்ன - நித்யஸூரிகளும் இத் யாதி. சந்தாநுவர்த்திகள் என்றவிடத்திலே, "பெருமாளையநுவர்த்தித்து இளையபெருமாள் பிராட்டி யைக் காட்டிலே விட்டுவந்தாரிறே" என்றருளிச்செய்வர். "நல்" என்றதுக்கர்த்தம் - தொடங்கின இத்யாதி. திரண்டு ப்ரயோஜநமேன் - மந்த்ரித்து ப்ரயோஜநமென்? என்றபடி. பயிலுகை-திரண்டு மந்த்ரிக்கை. ப்ரயோஜநமில்லையோவென்ன - நான் அவன் கருத்தை இத்யாதி. திரளாகவிருந்து முடிக்க மந்த்ரிக்கிறபடியை த்ருஷ்டாந்த பூர்வகமாகக் காட்டுகிறாள் - முதலிகள இத்யாதி. பக்ஷிகளுக்கு பிரிக்க ப்ரஸக்தியுண்டோவென்ன-அவன் வேண்டுவாரை இத்யாதி. ஆபரணத்தாலே அழகிதான வென்றது - பூர்வாவஸ்தையைப்பற்ற. பையவே க்ரமேண "புயக்கற்றது" என்றதுக்கர்த்தத்வயம். பசுமையற்றதென்னுதல்; புயக்கிலே - போகையிலே, அற்றது - உத்யோகித்ததென்னுதல். இவ்வர்த் தத்வயத்துக்கும் வ்யுத்க்ரமமாக ஶப்தநிர்வாஹம் - புயத்தல் இத்யாதி. பசையாலே, ஆகர்ஷகத்வம் ஃபலிதம். "எங்கும் - தழைநல்லவின்பம் தலைப்பெய்து - தழைக்க" என்றந்வயிப்பது. எங்கும் - விபூதியெங்கும், தழைத்து - நன்றானவின்பத்தைப்பெற்று, தழைக்க - ஸம்ருத்தமாகவேணுமென்று ஶப்தார்த்தம். தாத்பர்யம் - ஈஶ்வரவிபூதி இத்யாதி. தான்முடிகிறவள் "லோகம் ஸம்ருத்தமாக வேணும்" என்கிறதென்னென்ன, த்ரிவிதபாவம் - தாந்தாம் இத்யாதி. பட்டர் நிர்வாஹம், வெறுப்பிலே. 'பழனநன்னாரைக் குழாங்கள்காள் - எழநண்ணி, நாமும் நம்வானநாடனோடொன்றி னோம்;- பயின்றென்னினி? இழை நல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது; எங்கும் தழைநல்லவின் பம் தலைப்பெய்து தழைக்கவே' இத்யந்வயஃ. (கo)

## பதினோராம் பாட்டு.

இன்பந்தலைப்பெய்துஎங்குந்தழைத்த பல்லூழிக்குத்
தன்புகழேத்தத் தனக்கருள்செய்தமாயனைத்
தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இவை
ஒன்பதோடொன்றுக்கும்மூவுலகும்உருகுமே.

ஆ. — (இன்பம்.) - பின்னையும், "விரோணஸம்ஜ்ஞாம்ருதிஸஹ" என்னும் படியாலே தாமுளராய் மேல் அருளிச்செய்கிறார். அநுபவிதாக்களுக்கு நிரவதிக ஸௌரவஹமாய் லோகமெல்லாம் நிறைந்த தன்புகழை, ஸர்வகாலமும் ஏதேனும் துர்த்தசைகளிலும் ஏத்தும்படி தனக்கருள்செய்த மாயனை, தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இத்திருவாய்மொழியில் சொன்ன ஆர்த்தியை அநுஸந்திப்பார் என் படுவார்களோ ? என்கிறார்.

ஒ.— நிகமத்தில், இத்திருவாய்மொழியினுடையசீர்மை ஹ்ருதயத்திலே படில் ஆரேனுமாகிலும் தரியாரென்கிறார்.

[இன்பமென்று தொடங்கி] - லோகமெல்லாம் வெள்ளமிட்ட நிரதிஶயப்ரீதியையுடையராய்க்கொண்டு காலதத்த்வமுள்ளதனையும் தன்புகழை ஏத்தும்படி தனக்கு அருள்செய்த ஆஶ்சர்யபூதனை. [தென்குருகூர்ச்சடகோபன் என்று மேலுக்கு] — ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் "ஒன்பது பாட்டிலுண்டான வ்யஸநம் ஸவம்" என்னும்படி வ்யஸநம் மிக்கிருக்கிற பத்தாம்பாட்டொன்றையுமுடைய இத்திருவாய்மொழி கேட்டால், விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியன் றிக்கே ஸ்திதியிலாரவர்.

ப.— அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலமாக, இதுகேட்ட ஸர்வலோகத்தினுடையவும் மநோவிகாரத்தை யருளிச்செய்கிறார்.

இன்பம்தலைப்பெய்து - இன்பத்தை உண்டாக்காநின்றுகொண்டு, எங்கும் தழைத்த - எங்கும் வ்யாப்தமான, தன்புகழ் - தன்னுடைய குணப்ரதையை, பல்லூழிக்கு - காலதத்த்வமுள்ளதனையும், ஏத்த - ஏத்துமபடியாக, தனக்கு - தமக்கு, அருள்செய்த - நிரவதிக க்ருபையைப்பண்ணின, மாயனை - ஆஶ்சர்யபூதனை, தென் - கட்டளைப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் சொல் - ஆழ்வார் அருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, இவை ஒன்பதோடொன்றுக்கு - கீழொன்பதுபாட்டில் க்லேஶம்ஒருகூறும், (பத்தாம்பாட்டில் க்லேஶம்ஒருகூறுமான இவற்றுக்கு), மூவுலகும் - த்ரைலோக்யமும், உருகும் - ப்ரேமத்தாலே த்ரவியாநிற்கும். இது கலித்துறை.

இ — நிகமத்தில், இத்திருவாய்மொழியிற் பாசுரம் ஹ்ருதயத்திலேபடில், ஆரேனுமாகிலும் தரியாரென்கிறார்.

[இன்பமித்யாதி] - எங்கும் தழைத்த இன்பம். [தலைப்பெய்து] - லோகமெல்லாம் வெள்ளமிட்ட நிரதிஶயப்ரீதியையுடையராய்க்கொண்டு. [பல்லூழிக்குத்தன் புகழேத்த] - காலமுள்ளதனையும் தன்குணங்களை ஏத்தும்படி. [தனக்கருள்செய்த] - ஸம்

ஸாரிகளிலே அந்யதமரானவர்க்கு மயர்வறமதிநலமருளிச்செய்தபடி. [மாயனை] - ஸம்ஸாரிகள் நடுவே என்னை ஒருவனையும் விஶேஷகடாக்ஷம்பண்ணின ஆஶ்சர்யசேஷ்டிதனை. அங்ஙனன்றிக்கே, [இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைத்த-தன்புகழை பல்லூழிக்கு தனக்கருள்செய்த மாயனை]-அநுபவிப்பார்க்கு நிரதிஶய ஆநந்தத்தை விளைப்பதாய் எங்குமொக்கப்பரம்பின தன்கல்யாணகுணங்களை காலதத்த்வமுள்ளதனையும் நான் அநுபவிக்கும்படிபண்ணினான் என்றுமாம். இவர், "குணஜ்ஞாநத்தாலே தரித்தார்" என்கிறது, 'தன்புகழேத்தத் தனக்கருள்செய்த' என்றத்தைக் கொண்டிறே. நித்யஸூரிகளநுபவத்தையும், தமக்கு அவர்களோபாதி ப்ராப்தியையும் அநுஸந்தித்து நோவுபட்டார்; என்றுமொக்க இழந்திருக்கிற ஸம்ஸாரிகள் படியைப் பார்த்த வாறே அவர்களில் ஆவ்விருப்புத்தானே பேறாய்த்தோற்றிற்று. உபயரிலும் வ்யாவ்ருத்தியுண்டிறே இவர்க்கு. சடகோபன்சொல் என்றபரோக்ஷ நிர்த்தேஶமாகையாலே தனக்கருள்செய்த என்னலாமிறே; "வால்மீகிர்ப்பகவாந் ருஷி:" என்னுமாபோலே. [ஒன்பதோடொன்றுக்கும்]-"கீழொன்பது பாட்டிலும் உண்டானவ்யஸநம்ஸர்வம்" என்னும்படி வ்யஸநம்மிக்க பத்தாம்பாட்டையுடைய இவை. ஸ்மாரகபதார்த்தங்களாலே ஜீவநத்தில் நசைபோடே நோவுபட்ட ஒன்பதுபாட்டோடே, ஜீவநத்தில் நசையற்ற ஒரு பாட்டுக்கும், விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியற இல்லாதவர். கீழே, "நம்மூர்த்தயவசித்தேட்டு நாட்டுக்கு நோவுபடவேண்டா" என்றார்; பின்னையும் நாட்டுக்கு வையில்யமே ஶேஷித்துவிட்டது.

ஈடு.—நிகமத்தில், இத் திருவாய்மொழியிற் பாசுரம் ஹ்ருதயத்திலேபடில், ஆரேனுமாகிலும் தரியார் என்கிறார்.

[இன்பந்தலைப்பெய்து எங்குந்தழைத்த]-எங்குந்தழைத்த இன்பந்தலைப்பெய்து - லோகமெல்லாம் வெள்ளமிட்ட நிரதிஶயப்ரீதியையுடையராய்க்கொண்டு. [பல்லூழிக்குத் தன்புகழேத்த] - காலமுள்ளதனையும் குணங்களை ஏத்தும்படி. [தனக்கருள்செய்த] - ஸம்ஸாரிகளிலே அந்யதமரானவர்க்கு, * மயர்வறமதிநலமருளிச்செய்தபடி. [மாயனை] - ஸம்ஸாரிகள் நடுவே என்னையொருவனையும் விஶேஷகடாக்ஷம்பண்ணின ஆஶ்சர்யசேஷ்டிதனை. அங்ஙனன்றிக்கே, [இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த - தன்புகழேத்த - பல்லூழிக்கு - தனக்கருள்செய்தமாயனை] - அநுபவிப்பார்க்கு நிரதிஶயாநந்தத்தை விளைப்பதாய் எங்குமொக்கப் பரம்பின தன்கல்யாணகுணங்களை, காலதத்த்வமுள்ளதனையும் நான்அநுபவிக்கும்படி பண்ணினானென்றுமாம். இவர் "குணஜ்ஞாநத்தாலே தரித்தார்" என்கிறது, "தன்புகழேத்தத் தனக்கருள்செய்த" என்ற இத்தைக்கொண்டிறே. நித்யஸூரி

---

நிகமம் - இன்பம் இத்யாதி. "ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இத் திருவாய்மொழியில் இத்யாதி. ஆரேனுமாகிலும் என்றது - "உலகும்" என்றத்தைப்பற்ற.

"இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த" என்றது - ஆழ்வாருக்கு விஶேஷணமானபோது; "எங்குந்தழைத்த - இன்பந்தலைப்பெய்து" என்றந்வயம்; புகழுக்கு விசேஷணமானபோது, இருந்தபடியே. அந்வயாநுகுணமாகவர்த்தம் - லோகமெல்லாம் இத்யாதி. யோஜநாந்தரத்துக்கு அர்த்தம்-அநுபவிப்பார்க்கு இத்யாதி. ப்ரவேஶத்திலே "குணஜ்ஞாநத்தாலேதரித்தார்" என்றதுக்கு நியாமகம் காட்டுகிறார் - இவர் குணஜ்ஞாநத்தாலே இத்யாதி. "தன்புகழேத்த" என்கைக்கு, அவனோடே ஸம்ஶ்லேஷித்து குறைநுபவம் பண்ணினரோவென்ன - நித்யஸூரிகள் இத்யாதி. இவ்விடத்திலே,

கள்அநுஹவத்தையும், தமக்கு அவர்களோடொத்த ப்ராப்தியையும் அநுஸந்தித்து நோவுபட்டார்; என்றுமொக்க இழந்திருக்கிற ஸம்ஸாரிகள்படியைப் பார்த்தவாறே, இந்நோவு தானே பேருய்த்தோற்றிற்று. ''சடகோடன்சோல்'' என்று பரோக்ஷநிர்த்தேஶத்தாலே, தனக்கருள்செய்த என்னலாமிறே; ''[illegible]'' (வால்மீகிர்ப் பகவாந்ருஷி:) என்னுமாபோலே. [ஒன்பதோடோன்றுக்கும்] - ''கீழொன்பதுபாட்டிலும் உண்டான வ்யஸநம் ஸாவம்'' என்னும்படி வ்யஸநம் மிக்க பத்தாம்பாட்டையுடைய இவை. ஸ்மாரகபதார்த்தங்களாலே ஜீவநத்தில் நசையோடே நோவுபட்ட ஒன்பது பாட்டோடே, ஜீவநத்தில் நசையற்ற ஒருபாட்டுக்கும். [மூவுலகும்உருகுமே] - ஆரேனுமாகிலும் தரியார். என்னுடைய ஆர்த்தநாதத்தாலே நாடஅழியவேண்டாவாகாதே என்றவர்க்கு, பின்னையும் நாட்டார்க்கு வைமுக்யமே ஃபலித்துவிட்டது. 'எங்குந்தழைத்த- இன் பந்தலைப்பெய்து - பல்லூழிக்குத் தன்புகழேத்த - தென்குருகூர்ச்சடகோபன் - தனக்கருள் செய்த மாயனை-சோல்லாயிரத்துள் இவையோன்பதோ டோன்றுக்கும் மூவுலகு முருகும்.'

---

''[illegible] ।
[illegible]''(ராம பால·௪-௧).என்றத்தை அருளிச்செய்வர். எனக்கருள்செய்தவென்னாதே, ''தனக்கு'' என்கிறதென் ? என்ன - சடகோபன் இத்யாதி. பரோக்ஷநிர்த்தேஶம் பண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் - வால்மீகிர் இத்யாதி. பத்தென்னாதே, ''ஒன்பதோடொன்று'' என்றதுக்குஃபாவம்- கீழொன்பது இத்யாதி. ஏதத்விவரணம் - ஸ்மாரக இத்யாதி. ''தழைநல்ல'' இத்யாதியில் பட்டர் நிர்வாஹத்துக்குச்சேர வ்யாக்யாதாவின் ஈடுபாடு - என்னுடைய இத்யாதி. (௧௧)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible] ।
[illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible] ।
[illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி. {
இன்னுயிர்மால்தோற்றினது இங்கென்னெஞ்சிலென்று கண்ணால்
அன்றவனைக்காணவெண்ணி ஆண்பெண்ணாய் - பின்னை அவன்
தன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனருள்
உன்னுமவர்க்குஉள்ளமுருகும்.

---

ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், சீயர்திருவடிகளே ஶரணம்.

# ஆறாந்திருவாய்மொழி—உருதுமால் ப்ரவேசங்கள்.

ஆ.—(உருதுமால்.) - இப்படி எம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்தாலே முடிந்து பின்னையும் நெடும்போதுகூட லப்த ஸம்ஜ்ஞராயிருந்த ஆழ்வார்

ஒ.—ஆறாந் திருவாய்மொழியில், கீழில்திருவாய்மொழியில் பிறந்த வ்யஸநத்தின் மிகுதியாலே முடிகல் எம்பெருமானைப்பெற்றுதரித்த லான ஆழ்வாரை, இப்போது ஒருஸம்ச்லேஷமின்றிக்கேயிருக்கச்செய்தே இவருடைய ஜீவநாத்ருஷ்டம், இருக்கும் வியந்தில் எம்பெருமான் தம்மோடே தலைதடுமாறாகப் பரிமாறின பரிமாற்றத்தை ஸ்மரிப்பிக்க, அத்தாலே உணர்ந்து, இன்னுயிர்ச்சேவலில் விச்லேஷத்தாலே ஸாவஸாதோஹவங்களுக்குப் பாத்தமில்லாதபடியான தசையிலே,—பிராட்டி 'ஸஸீதாபஹரணாத்ருஹம்'' என்று ராமகுணஸ்மரணம்பண்ணி அதிப்ரீதையானாற்போலே ஸம்ச்லேஷதசையில் அவனுடைய வ்யாமோஹத்தை மிகவும் ஸ்மரித்து,ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார்.

ப.—ஆறாந்திருவாய்மொழியில், கீழ் இவர் ஸ்மாரகதர்சநத்தாலே அத்யந்தம் அவஸந்நரானவளவிலே, ஆச்வாஸகரமாம்படி ஈச்வரன் தன்குணங்களை ப்ரகாசிப்பிக்க; அவனுடைய ஆச்சர்யப்ரகாரத்தையும், அநபஹத்வைசித்ர்யத்தையும், ஔதார்ய ஸ்வபாவத்தையும், அதிசயிதசீலத்தையும், ஆச்ரிதஸுலபதையையும், அத்யந்தவ்யாமோஹத்தையும், வ்யாமோஹபர்யவஸாநத்தையும், அபேக்ஷா நிரபேக்ஷமான நித்யாதரத்தையும், அநுபாவ்யஸௌந்தர்யத்தையும், அஜிதவைசேஷிகத்தையும், அநுஸந்தித்து, இந்தகுணங்களினுடைய வைலக்ஷண்யாநுபவத்தால் பிறந்த ப்ரீத்யதிசயத்தாலே, மிகவும் ஹ்ருஷ்டராகிறார்.

இ — ஆறாந்திருவாய்மொழியில், கீழில்திருவாய்மொழியில் • நாமும் நம் வானநாடனோடொன்றினோம் என்று விரஹம்ஆற்றமாட்டாமையாலே முடிகையிலே வ்யவஸிதராய் நின்றாராயிருந்தது ; இத்திருவாய்மொழியில், அவன் குணங்களை அநுஸந்தித்து அத்தால்வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஹ்ருஷ்டராகிறாரா யிராநின்றது. குணாநுபவம் பண்ணுகைக்கு அவன் முகங்காட்டவேணும்: இப்போது இங்கொரு ஸம்ச்லேஷமில்லை; ஸம்ச்லேஷமில்லாமையேயன்றிக்கே தர்சநோபவம் பண்ணுகைக்கும் ஆச்ரயமில்லாதபடியான வ்யஸநம் செல்லுகிறது. ஆனபின்பு, இது ஸங்கதமானபடியென்னென்னில், பெறில்,தரித்தல் அல்லாதபோது முடிதல்செய்யுமளவான இவர் தசையைப் பார்த்து இவர் ஜீவநாத்ருஷ்டத்தாலே, இருக்கும் வியந்தில் தம்மோடே தலைதடுமாறாகப் பரிமாறின பரிமாற்றத்தை அவன் ஸ்மரிப்பிக்க, அத்தாலே யுணர்ந்து பிராட்டி 'ஸஸீதாபஹரணாத்ருஹம் ராகவஸ்யநிவேசநே । ஸமாஜ்ஞாநாநிநாஷாணிநாமஹா ஸுகாலேஸ்ம்ருதீ ।'' என்று ராமகுணத்தை ஸ்மரித்து அதிப்ரீதையானாற்போலே, ஸம்ச்லேஷதசையில் தாழநின்று பரிமாறின அவனுடைய வ்யாமோஹாதிசயத்தை தத்காலத்திற்போலே விசதமாக ஸ்மரித்து அத்தால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அத்யந்த ஹ்ருஷ்டராகிறார். ஆளவந்தார் 'அப்ரீதி'ஹர்ஷ ஹேதுஸங்கரம் என்றருளிச்செய்வர்.

ஈடு.—"எழுநண்ணிநாமும் நம் வானநாடனோ டொன்றினோம்" என்று தம் ஜீவநத்தில் நசையற்றுச் சொன்னவார்த்தையிறே - கீழ் ; இவ்வளவில் வந்து முகங்காட்டி இவரைப் பெறுதல், இல்லையாகில் இழத்தல் செய்யவேண்டும்படியான தசையாய்த்து. இவ்வவஸ்த்தையிலே, திருவடிசென்று கிட்டினபோது, முன்பு நெடுநாள்பட்ட வ்யஸநமுங் கிடக்கச்செய்தே, பெருமாளும் வாராதிருக்க, "ஸமாஂ த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே । புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" (ஸமாத்வாதஶ தத்ராஹம் ராகவஸ்யநிவேஶநே | புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வ. காமஸம்ருத்திநீ) என்கிறபடியே, பன்னிரண்டாண்டு பெருமாளுந் தானும் ஒருபடிப்படக் கலந்த கலவி வந்து பிராட்டிக்கு ஸ்ம்ருதிவிஷயமானாற்போலே, * இருத்தும்வியந்தில் தலைதமோருகப்பிறந்த கலவிவந்து ஸ்ம்ருதிவிஷயமாய்த்து. அதுக்கடி, இவர் அதிகரித்த கைங்கர்யத்தை முடியச்செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான இவருடைய ஜீவநாத்ருஷ்டமாவது ; அன்றிக்கே, இவர் சொல்லக்கேட்கையிலே பாரித்துக்கொண்டிருக்கிற ஈஶ்வரனுடைய பாக்யமாவது; ஸம்ஸாரிஸம்ஸாரப்ரீதி உள்ளடங்காமை வழிந்து புறப்பட்ட இவர் சொல்லுக்கேட்டு ஸம்ஸாரி விஷயத்திலே ருசிபிறக்கவிருக்கிற சேதநருடைய பாக்யமாவது. இப்படி, * இருத்தும் வியந்தில் ஸம்ஶ்லேஷம் வாரா ஸ்ம்ருதிவிஷயமாய்த்து. "ஸமாஂ த்வாதஶ" (ஸமாத்வாதஶ) - பிள்ளாய் ! இன்று இங்ஙனே வெறுந்தறையாயிருக்கிற நான், எங்கள் மாமனார் மாளிகையிலே பன்னிரண்டாண்டு ஒருபடிப்பட ராமகுணங்களை விலைநீரடைத்துக்கொண்டேன்காண் ! என்றாளிறே. இங்கு, * இருத்தும் வியந்து தன்னில் "மூவலகுந்தன் னேறியா வயிற்றிற்கொண்டு - சிறியேனுடைச் சிந்தையுள் நின்றொழிந்தான்" என்று புறம்பேங்கும் முறையிலே பரிமாறினவன், இவரொருவரளவிலுமிறே முறைகேடப் பரிமாறிற்று ; அப்படிப்பட்ட பரிமாற்றந்தான், இப்போது ஒரு

---

உருகுமால் ப்ரவேஶம்; வ்ருத்தாநுவாதபூர்வகமாக ஸங்கதி - எழுநண்ணி இத்யாதி. விவரணம் - இவ்வளவில் இத்யாதி. இத்தால் - கீழ்இவர்க்கோடின வ்யஸநம் வரசாமகோசரமென்றபடி. இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - இவ்வவஸ்த்தையிலே இத்யாதி. பிராட்டிக்கு, திருவடியைக்காண்கையாலே ஸ்ம்ருதிகூடும், இவர்க்குக்கூடும்படியென் ? என்னில் ; "ஸத்ருஶாத்ருஷ்டசிந்தாத்யா: ஸ்ம்ருதிபீஜஸ்ய போதகா:" என்கிற ஸ்ம்ருதிஹேதுக்களில், இவ்விடத்தில் அத்ருஷ்டம் ஸ்ம்ருதிஹேதுவென்று விவக்ஷித்து, இத்தை த்ரிவிதமாகக்காட்டுகிறார் - அதுக்கடி இத்யாதிவாக்யத்ரயத்தாலே. ப்ரஸ்துதஶ்லோக வ்யாக்யாநம் - ஸமாத்வாதஶ இத்யாதி. ஒருபடிப்பட என்றது - "காலாத்வநோரத்யந்தஸம்யோகே" என்கிறஸூத்ரத்தில், * அத்யந்தஸம்யோகத்தைப்பற்றத்விதீயை இந்தஸூத்ரத்துக்கு உதாஹரணம்-" மாஸமதீதே," "க்ரோஶம் குடிலா நதீ" என்று. மாஸமதீதே என்றால் - ஒருமாஸமிடைவிடாதே அத்யயநம்பண்ணினான் என்றும், க்ரோஶம் குடிலாநதீ என்றால் - இரண்டரைநாழிகைதூரம் இடைவிடாதே வக்ரையாயிருக்கிறது நதியென்றுமிறேயர்த்தம். * வீற்றிருந்தேழுலகு முதலானவற்றிற் கலவியிருக்க, * இருத்தும் வியந்தில் அநுபவம் ஸ்ம்ருதிவிஷயமாய்த்தென்னுமதுக்கு நியாமகமேதென்ன ; உபயமும் ஏகார்த்தமாகையாலேயென்கிறார் - இங்கு இருத்தும்வியந்து இத்யாதி. முறைகேடப்பரிமாறுகையாவது - இவரை ஶேஷியாகவைத்து, தான் ஶேஷபூதனாகப் பரிமாறுகை. "பரிமாறிற்று என்றார் அங்கு, அப்படியே. இங்கும் 'அறிகிலேன்றன்னுளனைத்துலகும்நிற்க' என்று தொடங்கி 'சிறியவென்னுருயிருண்ட' என்றார், முறைகெடப்பரிமாறினபடி தன்னையே

ஸ்ம்ருதிமாத்ரமாயிருக்கையன்றிக்கே, தசாந்தரபத்திபிறந்தது: அப்படியே, மேன்மையுடையவன், அம்மேன்மையுங்கிடக்கச் செய்தே தாழநின்று பரிமாறின குணத்தையும் வடிவழகையுஞ்சொல்லி, அதுதான் "இப்போதையநுபவமே" என்னும்படியாயிருப்பதொரு புத்திபிறந்து, அவனுடைய சீலகுணாநுஸந்தாநத்தாலே சிதிலராகிறார். "கடலைத் தரைகாண்பாரைப்போலே, * இருந்தும்வியந்தில் அநுபவத்தை இத்தலை கொண்டேறச் சேர்ப்பதே நம்முதலிகள்!" என்று விஸ்தரேணயருளிச்செய்வர். அப்ராப்தியுங் கிடக்கச் செய்தே, சீலகுணாநுஸந்தாநத்தாலே சிதிலராகிறாய்த்து. "அப்ரீதிகர்ப்ப குணாநுஸந்தாநம்" என்று ஆளவந்தார் அருளிச்செய்யுஞ்சந்தை இதுக்கு. "பஹவோ ந்ருப" (பஹவோந்ருப) - சக்ரவர்த்தி, "பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணவேணும்" என்று கோலி, "நாம் அறுபதினாயிரமாண்டுகூட ஒருதலைமிதிக்க ஒருதலைகிளர இப்படி வருந்தியடிப்படுத்தின ராஜ்யத்தை இன்று சிறியவன்தலையில்வைத்தால் இதுபோருக்குமோ?" என்றுபார்த்து, "இதுதன்னை நாட்டோடே சேரவிசாரித்துச்செய்வோம்" என்று, ராஜலோகத்தோடே கூட்டினவிடத்து, "ஜநௌகோத்குஷ்டஸந்நாதோ விமாநம் கம்பயந்நிவ" (ஜநௌகோத்குஷ்டஸந்நாதோ விமாநம்கம்பயந்நிவ) என்று - சக்ரவர்த்தி மாளிகையழித்துச் செய்யவேண்டும்படி ஆர்த்துக்கொள்ள, அத்தைக்கேட்டு, "நாம் நினைத்த கார்யம் வாய்க்கப் போய்த்து; ஆனாலும் இவர்கள் நினைவுதன்னை இவர்கள் வாக்காலே சொல்லக்கேட்டாலாகாதோ?" என்னுமத்தைப்பற்ற, "வாரீர்கோள்! 'கதம் நு மயி தர்மேண' (கதம்நுமயிதர்மேண) என்று - அறுபதினாயிரமாண்டு சிறியத்தைப் பெரியது நலியாதபடியாகப் பூமிப்பரப்படைய நோக்கிக்கொண்டு, 'பாண்டரஸ்யாதபத்ரஸ்ய ச்சாயாயாம் ஜரிதம் மயா' (பாண்டரஸ்யாதபத்ரஸ்யச் சாயாயாம்ஜரிதம்மயா) என்று "முத்தின்குடைநிழலிலேதிரிந்து எனக்கென்ன ஒருஸாதகம்கோலாதே உங்களுடைய

---

சொன்னார்; ஆகையாலே இரண்டும் ஏகார்த்தமாகையாலே, * இருந்தும்வியந்தில் அநுபவம் ஸ்ம்ருதிவிஷயமாய்த்து" என்றது அத்யாஹார்யம். "நினைதொறும்" என்றத்தைப்பற்ற - ஸ்ம்ருதி விஷயமாய்த்து என்றது - பசித்தபோது உண்ணலத்தை நினைத்தாற்போலே, * இருந்தும்வியந்தில் அநுபவம் ஸ்ம்ருதிவிஷயமானால் இப்போது ஸாக்ஷாத்கரிக்கலாகாதோவென்ன - அப்படிப்பட்ட இத்யாதி. இவ்விடத்திலே - "த்ருஷ்டஸ்ய ஸ்ம்ருதி" இத்யாதியையருளிச்செய்வர். மேல்வாக்யவிவரணம் - அப்படியே,மேன்மை இத்யாதி. அம்மேன்மையும் என்றது - * இருந்தும் வியந்தில் மேன்மையுமென்றபடி. தாழநின்று பரிமாறின் குணத்தையுமென்றது - "ஆளுமாட்செய்யுஞ்சீர்மை" என்றத்தைப்பற்ற. "கார்முகில்வண்ணன்" இத்யாதியைநினைத்து - வடிவழகையும் என்றது. * "இருந்தும்வியந்திற் சொல்லி ஸ்ம்ருதிவிஷயமாய்த்து" என்னுமதுக்கு ஆப்த ஸம்வாதம் - கடலை இத்யாதி. 'அருளிச்செய்வர்' - நஞ்சீயரென்றபடி. நீயிர்திருவாய்மொழியிலே தன்னைக்காணவேணுமென்று வ்யஸநப்பட்டவர்க்கு, இங்கே தன்னை யநுபவிப்பித்தானோ? என்ன - அப்ராப்தியும் இத்யாதி. அப்ராப்தியும் என்றது - ப்ரத்யக்ஷ ஸமாநாகார மாநஸாநுபவமன்றிக்கே ஸ்ம்ருதிமாத்ரத்தால் வந்த வ்யஸநமும் கிடக்கச்செய்தேயென்றபடி. யத்வா, இவ்வாக்யம் - கீழே "குணஜ்ஞாநத்தாலே தரித்தார்" என்றதுக்குச்சேர ஸங்கத்யந்தரமாய், * இன்னுயிர்ச்சேவலில் வ்யஸநமுங் கிடக்கச்செய்தே யென்னுதல். இதுக்குஸம்வாதம் - அப்ரீதிகர்ப்ப இத்யாதி. 'இதுக்கு - ஆளவந்தாருளிச்செய்யும் சந்தை - அப்ரீதிகர்ப்பகுணாநுசந்தாநம்' என்றந்வயிப்பது. இதுக்கு - இத்திருவாய்மொழிக்கு. குணங்கள் ஈடுபடுத்துமோவென்ன. ப்ரமாணம் - பஹவ இத்யாதி. இதுக்கவதாரிகை - சக்ரவர்த்தி இத்யாதி. "யதி மே ஜரயா வ்ருத்தஸ்ய மா ஹஸதி" என்றதுக்கர்த்தம் - சிறியத்தை இத்யாதி. முத்துக்களால் வந்த பாண்டரத்வமென்ற

ரக்ஷணதர்மத்தையே செய்துகொண்டுபோந்தேன்: நான் ஒருவார்த்தைகேட்டவிடத்து 'இப்போது நீயிருக்கச்செய்தேவேணுமோ? க்ரமத்திலேசெய்துகொள்ளுகிறோம்' என்னுதல், அன்றியே 'கார்யமாகில் செய்யலாகாதோ?' என்று வார்த்தைசொல்லுகையன்றிக்கே, படுகுலையடித்தவனைத் தப்ப ஒருதார்மிகன்கீழே யொதுங்க நினைப்பாரைப்போலே, என்னை விட்டு என்மகனையமையுமென்று நீங்கள் விரும்புகைக்கு நான் உங்களுக்குப்பண்ணின அபராதமேன்?'' என்ன; ''நீ எங்களுக்குப் பண்ணிற்று ஓர்அபராதமில்லை; உன்மகனுடைய குணபராதங்கள் இதுக்கடி: நீ நோக்கிக்கொண்டு போந்தபடிகளில் ஒரு குறையில்லை; குணவானாயிருப்பானொரு பத்ரனைப்பெற்று நாட்டைப்படுகுலையடித்தாய்காண்! ''**பஹவ:**'' (பஹவ:) - உன்னளவல்லகாண் ரக்ஷணதர்மத்தில் அவர்க்கு உண்டான பாரிப்பு. ''**யாத்ருநாமிவ**'' (தாதுநாமிவ) - நாட்டிலே சிலரை குணஹீநரென்று நிந்தித்தும், சிலரை குணவான்களென்று கொண்டாடுகிறதும், ''இன்ன ஆகரத்திற்போன்'' என்று விலைபெறுமாபோலே, ''இவ்வாஶ்ரயத்திலே கிடக்கிறகுணம்'' என்றுய்த்து புறம்பு விலைபோவது. ''**ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்ய குணவத்தயா**'' (ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா.)

---

## முதற் பாட்டு.

உருகுமால்நெஞ்சம்உயிரின்பரமன்றிப்
பெருகுமால்வேட்கையும் என்செய்கேன்தொண்டனேன்
தெருவெல்லாங்காவிகமழ் திருக்காட்கரை
மருவியமாயன்தன் மாயம் நினைதோறே.

*ஆ.—திருக்காட்கரைமருவியமாயன் பண்டு என்னோடு கலந்து பரிமாறின பரிமாற்றங்களை நினைக்க நினைக்க ப்ரீத்யதிஶயத்தினாலே என் நெஞ்சு அழிஞ்சு நீராய்*

*திருவள்ளம்பற்றி* - முத்தின்தூடை என்றது. படுகுலையடித்தவனை - குலையிலே பட்டுவிழும்படியடித்தவனை; ஹிம்ஸகனை என்றபடி. ''**பஹவ:**'' என்ற ஶப்தம்ஆபேக்ஷிகமாகையாலே - உன்னளவல்லகாண் என்கிறார். அப்படிகுணங்களுண்டோவென்ன - **யாத்ருநாமி** இத்யாதி. *தாது: - ரத்நாகரங்களுக்கு. சிலரைநிந்திக்கிறது* - இவருடையகுணம் இல்லாமையாலேயென்று கருத்து. *குணமீடுபடுத்துமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரம்* - ஹ்ருதயாநி இத்யாதி. ஆமமந்தேவ - *கடைந்தவர்போலே யானதென்றபடி.* ''பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே'' *இத்யயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதி ராஜலோக: ததைவ,* ''ஸ்த்ரியோ நாநா [illegible] ஸமீபிக: | ஜநளெவா [illegible] | [illegible] | ஸர்வாந் [illegible] தாஹிதம் | வாணஸ்ய [illegible] யாயாமஜிதம்மயா'' இதி. ''ஜ்ஞாநவிஜ்ஞாநஸம்பந்நோ நிதேஶே நிரத: பிது: | யாத்ருநாமிவ ஸௌமித்ரே குணாநாமாகரோ மஹாந்'' இதி கிஷ்கிந்தாகாண்டே வாலிநம் ப்ரதி தாரா. ''விராஜயந் ராஜஸுதோ ராஜமார்கம் நரைர்வ்ருத: | ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்ய குணவத்தயா'' இத்யயோத்யாகாண்டே.

உருகாநின்றது; இப்படிப்படாநின்றால் மாயங்களை நினைக்கை தவிரலாமிறே; என்னுடைய நிரவதிகமான அபிநிவேசமானது தவிரவொட்டுகிறதில்லை; நான் என்

ஒ—முதற்பாட்டில், திருக்காட்கரையில் எம்பெருமானுடைய ஆச்சர்யமான பரிமாற்றங்களை நினைத்தோறும் என்னெஞ்சு மிகவும் சிதிலமாகாநின்றதென்கிறார்.

[உருகுமாலென்று தொடங்கி]- ஸதாநுபவத்துக்கு ப்ரதமோபகரணமான நெஞ்சு உருகாநின்றது; ஆத்மாவுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அபிநிவேசமானது மிகாநின்றது. இவ்வபிநிவேசாதிசயமானது பரந்து தரிக்கவொட்டுகிறதில்லை. அதிசபலனான நான் என்னசெய்வேன்? [மாயன்] - ஆச்சர்யமான ஸௌசீல்யாதிகளை யுடையவன்.

ப.—முதற்பாட்டில், திருக்காட்கரையில் நிற்கிற ஸர்வேச்வரனுடைய ஆச்சர்ய ப்ரகாரத்தை யநுபவித்து, அபிநிவேசத்தாலே என்னெஞ்சு சிதிலமாகாநின்றதென்கிறார்.

தெருவெல்லாம் - வீதிகள்தோறும், காவி கமழ் - செங்கழுநீர் மணங்கமழும்படியான, திருக்காட்கரை - திருக்காட்கரையிலே, மருவிய - பொருந்தி வர்த்திருக்கிற, மாயன்தன் - ஆச்சர்யபூதனுடைய, மாயம் - அத்யாச்சர்யமான ஸௌசீல்யாதிகளை, நினைதோறும் - அநுஸந்திக்குந்தோறும், நெஞ்சம் - (அநுபவப்ரதமோபகரணமான) நெஞ்சு, உருகும் - சிதிலமாய் த்ரவியாநின்றது; (அநுபவ ஸாரஸ்யாதிசயத்தாலே), உயிரின் பரமன்றி - ஆத்மாவுக்குப் பொறுக்கவரிதாம்படி, வேட்கை - அபிநிவேசம், பெருகும் - அதிப்ரவ்ருத்தமாகாநின்றது; தொண்டனேன் - அத்யந்த சபலனான நான், என்செய்கேன் - (பகவத்ஸௌசீல்யத்தை மாற்றவோ, அபிநிவேசத்தை பகஞ்சுரிப்படுத்தவோ, அநுபாவ்யகுணங்களை விலக்கவோ, ஆச்சர்யபூதமான சாபல்யத்தைத் தவிர்க்கவோ?) எதுசெய்வேன்? 'ஆல்' என்ற அசை - விஸ்மயத்தைக் காட்டுகிறது.

இ—முதற்பாட்டில், திருக்காட்கரையில் நின்றருளின அவனுடைய ஆச்சர்யமான பரிமாற்றங்களை நினைத்தோறும் என்னெஞ்சு சிதிலமாகாநின்றதென்கிறார்!

[உருகுமால் நெஞ்சம்]- அநுபவத்துக்கு ப்ரதமோபகரணமான மநஸ்தத்வம் சிதிலமாகாநின்றது. அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதராகைக்கும் நெஞ்சு வேணுமே. "தொழுதெழு" என்கைக்கும் "நீயுநானுமிந்நேர்நிற்கில்மேல் மற்றோர் நோயும் சார்கொடான்" என்கைக்கும் நெஞ்சுவேணுமிறே. நீஞ்சப்புக்கவனுக்கு வாய்க்கரையிலே தெப்பமொழுகுமாபோலே பரிகரமான நெஞ்சு சிதிலமாகாநின்றது. எதிர்த்தலையுமுண்டாம்படி பரிமாறஅறியான். அநுபவத்துக்குஇருவர்வேணுமென்றிரான். [உயிரின்பரமன்றிப் பெருகுமால்வேட்கையும்] - ஆத்மாவுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அபிநிவேசம் பெருகாநின்றது. அணுபரிமாணமான இவ்வஸ்துவினளவன்றிக்கே ஆறு பெருகுமாபோலே மேன்மேலெனப் பெருகாநின்றது. ஆலும் ஏவும் விஷாதாதிசய ஸூசகம். "நெஞ்சம் உருகுமால் - வேட்கையும் பெருகுமால்" என்று தம்மால் நியமிக்கவொண்ணாத விஷாதமும் தோற்றச்சொல்லுகிறார். [என்செய்கேன்] - நெஞ்சுஉருகாதபடி தரிப்பேனோ? பெருகுகிற அபிநிவேசத்தையடைப்பேனோ? இதுக்கடியான அவன்

ரூணங்களைத்தவிர்ப்பேனோ? [தொண்டனேன்] - அதுக்கடியான என் சாபலாதிஶயத் தைத் தவிர்ப்பேனோ ? சாபலம் அஸாத்மியென்று கைவாங்கவொட்டுகிறதில்லை. மறந்து யரிக்க வொட்டுகிறதில்லை. [தெருவெல்லாம் காவிகமழ்] - வேட்கைக்கு ஹேதுசொல்லு கிறதுமேல்முடிய. குறுந்தெருவோடு பெருந்தெருவோடு வாசியறச் செங்கழுநீரின் பரிமளம் பரக்கிறபடி. ஊரோடுசேர்ந்த பொய்கைகளாகையாலே உள்ளோடு புறம் போடு வாசியறப் பரிமளம் அலைஎறிகிறபடி. தெருவெல்லாம் ஒருபரிமளம், உள்ளு லவபூர:. [திருக்காட்கரைமருவிய] - பரத்வத்திற்காட்டிலும் அவதாரத்திற்காட்டி லும் ஏற்றஞ்சொல்லுகிறது. பரத்வம் கெடுக்கைநீட்டு; அவதாரம் காலாவதியையுடை த்து. [மாயன்] - ஆஶ்சர்யமான ஸௌந்தர்யாதிகளையுடையவன். [மாயம்] - கிட்டின போது தாழநின்று பரிமாறினபடி. [நினைதொறே] - ஊரைநினைத்தபோதும், ஸௌந் தர்யத்தைநினைத்தபோதும், ஒருஊரும் ஒருவடிவும் இல்லாதாரைப்போலே தாழநின்ற ஶீலத்தை நினைத்தபோதும். ஸர்வப்ரகாரத்தாலே அநுபவிப்பிக்கவல்லன்அவன், மூன்றிலே காலதத்த்வமுள்ளதனையும் கால்தாழ்ந்து புதியராய் அநுபவிக்கவல்லர் இவர்; "அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதம்" என்றவரிறே.

ஈடு.—முதற்பாட்டு. திருக்காட்கரையில் எம்பெருமானுடைய ஆஶ்சர்யங்க ளான பரிமாற்றங்களை நினைதோறும் என்னெஞ்சு ஶிதிலமாகாநின்றதென்கிறார்.

[உருகுமால்நெஞ்சம்] - அநுபவத்துக்கு ப்ரதமோபகரணமான நெஞ்சு ஶிதில மாகாநின்றது. அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதராகைக்கும் நெஞ்சுவேணுமிறே. நீஞ்சப்புக்கவனுக்குவாய்கரையிலேதெப்பமோழுகுமாபோலே, பரிகரமான நெஞ்சு ஶிதில மாகாநின்றது. "தொழுதெழு" என்கைக்கும், "நீயுநானுமிந்நேர்நிற்கில்" என்கைக்கும் நெஞ்சுவேணுமே. எதிர்த்தலையையுண்டாக்கிக் கலக்கவறியான் காணும் ! கலக்கைக்கு இரண்டு தலையும் வேணுமென்றிறான். [உயிரின்பரமன்றிப் பெருகுமால்வேட்கையும்]- ஆத்மாவுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அபிநிவேஶம் பெருகாநின்றது. பிள்ளாய், அணுபரிமாணமான இவ்வஸ்துவின் அளவல்ல, ஆற்றுப் பெருக்குப்போலே மேன் மேலெனப் பெருகாநின்றது. [ஆல்] - விஷாதாதிஶயஸூசகம். "நெஞ்சம் உருகுமால் - வேட்கையும் பெருகுமால்" என்று, தம்மால் நியமிக்கவொண்ணாத விஷாதந்தோற்றச்

முதற்பாட்டு.—உருகுமால் இத்யாதி. "திருக்காட்கரைமருவிய மாயன்தன்மாயம் நினை தொறும் - உருகுமால்நெஞ்சம" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - திருக்காட்கரையில் இத்யாதி

காணுந்தோறுமுருகாநிற்க நெஞ்சை விசேஷிப்பானென் ? என்ன - அநுபவத்துக்கு இத்யாதி. நெஞ்சுக்கு ப்ரதமோபகரணத்வ மெப்படியென்ன - அநுபவிக்கைக்கும் இத்யாதி. அநு பவோபகரணமான நெஞ்சு ஶிதிலமானால் அநுபவிக்க விரகில்லையென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம். நீஞ்ச இத்யாதி. வாய்கரையிலே - ஆற்றருகே. "அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதராகைக் கும் நெஞ்சுவேணும்" என்னுமதுக்குஅடைவே ப்ரமாணத்வயம் - தொழுதெழு இத்யாதி. "ஆல்" என்றதுக்கு பாவம்-எதிர்த்தலையை இத்யாதி. விவரணம் - கலக்கைக்கு இத்யாதி. கீழ்வாக்யத் துக்கு பாவமாதல், "பெருகும்" என்கிற வர்த்தமாநார்த்தமாதல் - பிள்ளாய் இத்யாதி. பிள்ளாய் என்றது - வார்த்தைப்பாடு. விஷாதாதிஶயமேதென்ன - நெஞ்சம் இத்யாதி. அதாவது - "ஒருசீல மிருந்தபடியென்" என்று நடப்படுகிற மநஶ்ஶைதில்யத்தையும், "இந்தசீலாதிகளை உத்தரோத் தரம் அநுபவிக்கவேணும்" என்கிற அபிநிவேஶப்பெருக்கையும் தம்மால் நியமிக்கப்போகாத விஷாதாதிஶயமென்றபடி. தம்மால்இதுக்கொரு ப்ரதிக்ரியையில்லை என்னுமத்தை மூன்றுவாக்யத்

## இரண்டாம் பாட்டு.

நினைதொறுஞ்சொல்லுந்தொறுநெஞ்சிடிந்துகும்
வினைகொள்சீர்பாடிலும்வேமெனதாருயிர்
சுனைகொள்பூஞ்சோலைத்தென்காட்கரையென்னப்பா!
நினைகிலேன்நானுனக்காட்செய்யும்நீர்மையே.

ஆ.—(நினைதொறும்.) - எல்லாருடைய துக்கங்களையும் போக்கக்கடவதான உன்னுடைய இக்குணங்களை நினைத்தல், சொல்லுதல், பாடுதல் செய்யில், என்னெஞ்சும் இவ்வாத்மாவும் மாயாநின்றன; "நீர் இங்ஙனே ஈடுபடுகைக்கு உம்முடைய திறத்தில் நான் செய்ததென்?" என்னில், - நான் "உன்னையடிமை கொள்ளுகிறோம்" என்று கொண்டு வந்து நீ என்திறத்துச் செய்தருளின செயல்களை, நினைக்கலாமோவென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், திருக்காட்கரையில் எம்பெருமானைக் குறித்து உன்னேடு நான் பரிமாறின பரிமாற்றத்தை நினைக்க க்ஷமனாகிறிலேனென்கிறார்.

[நெஞ்சுஇடிந்துகும்] - ஹ்ருதயம் கட்டழிந்து நீராகாநின்றது. [வினைகொள் சீர்] - எல்லாருடைய துக்கங்களையும் போக்கக்கடவியவான கல்யாணகுணம்; சேஷ்டிதங்களோடு கூடின குணங்களென்றுமாம். குணமாவது - ஸௌசீல்யம்: சேஷ்டிதமாவது - இக்குணக்ருதமான தாழ்ந்த பரிமாற்றம்; "ஸா ஸ்ரீ வஹாயஷிஷுதி" ஐதிஹ்யம். [ஆருயிர்] - ஆத்மா. [சுனைகொள் பூஞ்சோலை] - சுனைகளோடுகூடின அழகியசோலை. [என்னப்பா] - எனக்கு வஸ்யனானவனே! எம்பெருமான் தம்மோடு அக்ரமமாகப் பரிமாறினபடியை, விநயத்தாலே ஆட்செய்யும் நீர்மை என்கிறார்.

ப.—அநந்தரம், நிருபாதிகவஸ்யனான உன்னுடைய ஸம்ஸ்லேஷப்ரகாரத்தை யநுஸந்திக்க க்ஷமனாகிறிலேனென்று அவன்தன்னை நோக்கி யருளிச்செய்கிறார்.

சுனைகொள் - தடாகங்களையுடைத்தான, பூஞ்சோலை- பூஞ்சோலைகளையுடைய, தென் - ஔதார்யமான, காட்கரை - திருக்காட்கரையிலே, என் அப்பா - எனக்கு நிருபாதிகபந்துவாய்க்கொண்டு நிற்கிறவனே! வினைகொள் - உன்னுடைய ஸம்ஸ்லேஷாதிசய வ்யாபாரப்ரகாசகமான, சீர் - சீலஸௌலப்யாதிகுணங்களை, நினைதொறும்-ப்ரதிக்ஷணம் அநுஸந்திக்குந்தோறும், நெஞ்சு-அநுஸந்தானோபகரணமான நெஞ்சானது, இடிந்து- சிதிலமாய், (அவ்வநுஸந்தானம் அதிநிவேசவாஸனையாலே வாக்வ்யவஹார விஷயமாய்க் கொண்டு), சொல்லுந்தொறும்-சொல்லத்தொடங்கின க்ஷணந்தோறும், உருகும்-நெஞ்சுதான் நீராயுருகாநின்றது; (அவ்வதிநிவேசமொட்டில்† நில்லாமையாலே), பாடிலும் - ("பாடியிளைப்பிலம்" என்கிறபடியே அக்குணங்களைப்)பாடி யரிக்கத்தேடிலும், எனதாருயிர் - காணியான என் ஆத்மாவானது, வேம் - (ரஸாதிசயம்ஆற்றமாட்டாமையாலே) பரிதப்தமாகாநின்றது; (ஆதலால்), நான் - (ஏவம்விதனான) நான், உனக்கு ஆட்செய்யும் - உனக்கு சேஷவ்ருத்தி பண்ணுகைக்குஉறுப்பான, நீர்மை - ப்ரகாரத்தை, நினைகிலேன் - நினைக்கவும் க்ஷமனாகிறிலேன்.

---

† 'அவ்வதிநிவேசமொருமட்டில்' என்று ஒரு ஸ்ரீகோசம்.

## பத்தாம் பாட்டு.

---

வாரிக்கொண்டுஉன்னைவிழுங்குவன்காணிலென்று
ஆர்வுற்றவென்னையொழியஎன்னில்முன்னம்
பாரித்துத்தான் என்னைமுற்றப்பருகினான்
காரொக்கும்காட்கரையப்பன்கடியனே.

ஆ.—(வாரிக்கொண்டு.) - "நீர்தாம் அவனை ஸாக்ஷாத்கரியாதே உம்மை ஸாக்ஷாத்கரிக்கக் கொடுத்துக்கொண்டிருப்பானேன்?" என்னில்,-உன்னைக்காணில் வாரிக்கொண்டுவிழுங்குவன் என்று நான் மநோரதித்துக்கொண்டிருக்க, எனக்குத்தன்னை ஸாக்ஷாத்கரிக்கவொண்ணாதபடி என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை யாக ஸாக்ஷாத்கருளினான்; தன்னாலே விளையக்கடவ வ்யஸநத்தினளவு பாராதே, ஸஹிலகர்ப்பமான மேகம் தன்னளவிலே வர்ஷித்தாற்போலே, என்னுடைய சிறுமைபாராதே என்னளவில் இங்ஙனே அதிமாத்ரமாகச் செய்தருளவேணுமோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தம்மோடேகலந்த எம்பெருமானுக்குத் தம்மிலும் அபிநிவேசம் மிக்கிருந்தபடியை அருளிச்செய்கிறார்.

[வாரிக்கொண்டென்று தொடங்கி] - உன்னைக்காணில் அசேஷசேஷவ்ருத்தியும்பண்ணி ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று அபிநிவேசிக்க என்னையொழிய எனக்குமுன் தன்னுடைய ப்ரணயசேஷ்டிதாதிகளைக் காட்டி என்னைநோக்கி நிச்சேஷமாகப் பருகினான். [காரொக்குங் காட்கரையப்பன் கடியனே] - பரமோதாரனான காட்கரையப்பன் ப்ரணயத்தில் மிகவும் முற்பாடனாயிருக்கும்.

ப.—அநந்தரம், அபிநிவேசத்திலும் வந்தால் என்னிலும் முற்பாடனாய்க் கொண்டு சீக்ரகாரியாயிராநின்றான் என்கிறார்.

உன்னைக்காணில் - உன்னைக்காணப்பெறில், வாரிக்கொண்டு-ஸ்வரூபரூபகுணவிபூதியிலே யொன்றும் சேஷியாதபடி, விழுங்குவனென்று - கபளீகரித்து புஜிப்பனென்று, ஆர்வுற்ற - ஆதரித்த, என்னையொழிய - என்னளவன்றியே, என்னில் முன்னம் - எனக்குமுன்னே (நானுள்ளவன்றே தொடங்கி), பாரித்து -, தான்-(அபரிச்சிந்நஸ்வபாவனான) தான், என்னை - (அத்யல்பனான) என்னை, (பசித்தவன் சோறுகண்டாற்போலே யிருக்கிற என்னளவன்றியே தாஹித்தவன் தண்ணீர் குடித்தாற்போலே பெருவிடாய்ப்பட்டு தான்), முற்ற - பூர்ணமாம்படி, பருகினான் - பருகினான்; காரொக்கும் - (கடலைப்பருகும்) காளமேகம்போலே, காட்கரையப்பன் - திருக்காட்கரையிலே நிற்கிற உபகாரகன், கடியன் - (அநுபவத்திலொருவர்க்கும் முற்பாடுகொடாதபடி) சீக்ரகாரியாயிருந்தான்.

இ—பத்தாம்பாட்டில், தம்மிலும் அவனுக்கு அபிநிவேசம் மிக்கிருந்தபடியைக்காட்டி அத்தாலும் நோவுபட்டபடியை அருளிச்செய்கிறார்.

[வாரிக்கொண்டு]-"அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று "நித்யஸூரிகளுக்கும் அவகாசம் கொடேன்" என்றாய்த்து இவர்பாரித்தது, "வழுவிலாவடிமை செய்யவேண்டும்" என்றாரிறே. [உன்னை] - ஸர்வசேஷியாய் விலக்ஷணனான உன்னை. [விழுங்குவன்] -

ஶேஷபூதனுக்குக் கைங்கர்யமிறே தாரகம். [காணில்] - உன்னைக்காணப்பெறில். [என்று ஆர்வுற்ற] - இப்படி அபிநிவேஶித்த ஆர்வத்தையுற்ற. [என்னையொழிய] - என்னளவு பாராதே. [என்னில் முன்னம்பாரித்து] - நான பாரித்தவளவுமன்றிக்கே நான்பாரித்த காலத்துக்குமுன்பே பாரித்து. ஆசார்ய விஷயீகாரத்துக்குப் பின்னிறே இவருடைய பாரிப்பு; ஸம்பந்தத்துக்கு திரஸ்காரஹேது இல்லாமையாலே, அவனுடைய பாரிப்பு ஸத்தாப்ரயுக்தமிறே. [தானென்னை] - விபுவாய் ஸ்வதந்த்ரனான தான் அணுபரிமாண னாய் பரதந்த்ரனான என்னை. [முற்றப்பருகினான்] - தன் குணசேஷ்டிதாதிகளைக் காட்டி என்னை நீராக்கி நிஶ்ஶேஷமாகப்பருகினான்; "அஹமந்நமஹமந்நமஹமந்நம் அஹமந்நாதோ" என்கிறபடியே இத்தலையையழித்துப் பரிமாறினான் என்றபடி. "விழுங்கு வன்காணில்" என்றிறே இவர்பாரித்தது. [காரொக்கும் காட்கரையப்பன்] - பரமோதாரனாய் ஸந்நிஹிதனானவன். [கடியனே] - ஸ்வகார்யத்தில் விரைந்திருக்கும்; எதிர்த் தலைக்கு ஒன்றும் விட்டுக் கொடாமைனைகை.

ஈடு.—பத்தாம்பாட்டு. தம்மோடு கலந்த எம்பெருமானுக்குத் தம்மிலும் அபிநிவேஶம் மிக்கிருந்தபடியைச் சொல்லுகிறார்.

[வாரிக்கொண்டு] - "இவ்வஸ்துவில் பிறர்க்கு ஒன்றும்ஶேஷியாதபடியாக ஸாதிக்கக்கடவோம்" என்றிருந்தாராய்த்து. அதாவது - "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்" என்று பாரித்தது. "அநந்தவைநதேயாதிகளுக்கும் அடிமைசெய்ய இடங்கொடேன்" என்றிருந்தாராய்த்து; "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்கிற படியே. [உன்னை] - ஸர்வஶேஷியான வுன்னை. [விழுங்குவன்] - ஶேஷபூத னுக்குக் கைங்கர்யமேயிறே தாரகம். [காணில்] - உன்னைக் காணப்பெறில். [என்று ஆர்வுற்ற] - இப்படி யபிநிவேஶித்த - ஆர்வத்தையுற்ற. [என்னையொழிய] - என்னளவு பாராதே. [என்னில் முன்னம் பாரித்து] - நான் பாரித்தவளவுமன்றிக்கே நான் பாரித்த காலத்துக்குமுன்பே பாரித்து. ஆசார்யவிஷயீகாரத்துக்குப்பின்பிறே இவருடைய பாரிப்பு; ஸம்பந்தத்துக்குத் திரஸ்காரஹேதுவில்லாமையாலே, அவனுடையபாரிப்பு ஸத்தாப்ர யுக்தமிறே. [தானென்னை] - விபுவாய் ஸ்வதந்த்ரனான தான், அணுபரிமாணனாய்ப் பர தந்த்ரனான என்னை. [முற்றப்பருகினான்] - தன் குணசேஷ்டிதங்களைக்காட்டி என்னை

---

பத்தாம்பாட்டு - வாரிக்கொண்டு இத்யாதி. "என்னில் முன்னம் - பாரித்து" என்றத் தைச் ஸூசிப்பிக்கவதாரிகை - தம்மோடு இத்யாதி.

"உன்னை - காணில் - வாரிக்கொண்டு-விழுங்குவன் என்று பாரித்த" என்று அந்வயித்தர்த் தம் - இவ்வஸ்துவில் இத்யாதி. "பிறர்க்கொன்றும் ஶேஷியாதபடி" என்றதின் விவரணமாதல், பலிதமாதல் - அநந்தவைநதேய இத்யாதி. வழுவிலாவடிமைசெய்யப் பாரித்ததுக்கு ப்ரமாணம் - அஹம் இத்யாதி. "விழுங்குவன்" என்கைக்கு அடிமை தாரகமோவென்ன-ஶேஷபூதனுக்கு இத் யாதி என்னளவென்றது - என்னநுஸந்தாநாபிநிவேஶத்தை என்றபடி. "என்னில் - பாரித்து, முன் னம் பாரித்து" என்று பிரித்தர்த்தம் - நான் பாரித்த இத்யாதி. இவருக்கு முன்பு பாரிப்பில்லையோ வென்ன - ஆசார்ய இத்யாதி. இவர்க்கு முன்னே அவன் பாரிக்கைக்கு அடி எதென்ன - ஸம்பந் தத்துக்கு இத்யாதி என்னுதல்; ஶேஷத்வம், நித்யமாயிருக்கிறவர்க்குப் பாரிப்புப் பின்பாவானென்? அவனுக்கு முன்பாவானென்? என்ன - ஸம்பந்தத்துக்கு இத்யாதி என்னுதல். ஸம்பந்தத்துக்கு - ஸம்பந்தஜ்ஞானத்துக்கு என்றபடி. 'பருகினான்" என்றதுக்கு பாவம்-தன்குண இத்யாதி. கீழ்வாக்ய

நீராக்கி நிஃஶேஷமாகப்பருகின்றான்; "வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ" (வசஸாஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ) என்கிறபடியே; இத்தலையைப்பழித்துப் பரிமாறினானென்றபடி. உண்டபடி சொன்னார் கீழ்; உண்டவனுக்குத் தண்ணீரும் அபேக்ஷிதமிறே; ஆகையாலே, தண்ணீர் குடித்தபடி சொல்லுகிறார். அவனுடைய * உண்ணுஞ்சோறு பருகுநீர் இருக்கிறபடியிறே யிது. [காரோக்குங்கட்கரையப்பன்] - பரமோதாரனாய் ஸங்க்ரஹிதனானவன். [கடியனே] - போஜநையில் விரைந்திருக்கும். இரண்டுதலையாய்ப் பரிமாறப் புக்கால் எதிர்த்தலைக்கு இடம் வையான்.

## பதினொராம் பாட்டு.

கடியனைக்கஞ்சனைக்கொன்றபிரான்தன்னைக்
கோடிமதிள்தென்குருகூர்ச்சடகோபன்சொல்
வடிவமையாயிரத்திப்பத்தினால்சன்மம்
முடிவெய்தி நாசங்கண்டீர்களெங்கானலே

ஆ.—(கடியனைப்.) - ஆஶ்ரிதர்க்காக ஏதேனுஞ்செயல் செய்யிலும் இங்ஙனேயதிமாத்ரமாகச்செய்தருளும் ஸ்வபாவனைப் பிரித்தவனைச்சொன்ன இப்பத்து, ஐஹலௌகிகமான நம்முடைய ஸம்ஸாரத்தை ஸகாரணமாகப்போக்குமென்கிறார்.

ஒ.—நிகமத்தில், ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்க்கு ஜந்மம்முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும் என்கிறார்.

[கடியனைப் கஞ்சனைக்கொன்ற பிரான்தன்னை] - கண்பாராதே கம்ஸனைக் கொன்ற மஹோபகாரகனை. [கொடிமதிள் தென்குருகூர்ச் சடகோபன்சொல் வடிவமையாயிரத்து இப்பத்தினால்] - ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வாருடைய சொல்லான நல்லபடியையுடைய ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி கற்றதே ஹேதுவாக, துஃகரூபமான ஸம்ஸாரகாந்தாரம் நசிக்கும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, ஜந்மவிநாஶத்தை அருளிச்செய்கிறார்.

கடியனைப் - அவன் நினைவுக்கும் தான் முற்பாடனாய்க்கொண்டு, கஞ்சனைக் கொன்ற - கம்ஸனைக்கொன்ற, பிரான்தன்னை - மஹோபகாரகனான க்ருஷ்ணனை,

---

ஸவிதம் - வசஸா இத்யாதி. "தஸ்ய தஷ்வசநம் ஶ்ருத்வா ராமோ வசநகோவிதஃ! வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ" இதி யுத்தகாண்டே (௧௧-௧௩) விபீஷணம்ப்ரதி ராமஃ. "பருகினான்" என்றதிலே ஒரு ரஸோக்தி-உண்டபடி இத்யாதி. கீழ்ச்சென்றது-எட்டாம்பாட்டில் "என்னை முற்றவுந் தானுண்டான்" என்றதைப்பற்ற. இத்தரஸோக்தியால் ஸவிதவர்த்தம் - அவனுடைய இத்யாதி. விவரணம் - இரண்டுதலையாய் இத்யாதி. கடியன் - த்வரையையுடையவன். 'காணில் - உன்னை - வாரிக்கொண்டு - விழுங்குவன்' என்றுதொடங்கி, க்ரமேணாந்வயஃ. (௧௦)

கொடிமதிள் - கொடியையுடைத்தான மதிளையுடைய, தென்குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, வடிவுஅமை - ஹமவத் குணங்களை வடிவுபட ப்ரதிபாதிக்கையில் ஸம்ருத்தமான, ஆயிரத்து - ஆயிரத்திலும், இப்பத்தினல் - இப்பத்தினாலே, எம் - நம்முடைய, சன்மம்-ஜந்மபரம்பரையும், முடிவு எய்தி - அவஸாநத்தைப்பெற்று, கானல் - ஸம்ஸாரமாகிற ம்ருகத்ருஷ்ணிகையும், நாசங்கண்டீர் - நசிக்குங்கிடீகோள். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு ஜந்மம் முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்குமென்கிறார்.

[கடியனாய்க் கஞ்சனைக்கொன்ற]-கம்ஸன் தான் நினைத்த நினைவை அவன் தன்னோடே போம்படி பண்ணினான். [கடியனாய்]- தன்பக்கலின்றிக்கே வந்தேறி யென்கை. [பிரான்தன்னை] — முன்பு உபகாரகனானவன்கிடீர் நம்மையழித்தான். உகந்தாரையழிக்கையிறே வ்யாயகமாவது; விரோதிகளையழிக்கும்இது உபகாரமிறே! [கொடிமதிள் தென்குருகூர்] - கம்ஸவிஜயத்துக்குக் கொடிகட்டிற்றுத் திருநகரியாய்த்து. ஸ்வாமி விஜயத்துக்கு உரிய அடியாரிருந்த விடத்தேயிறே கொடிகட்டுவது. [வடிவமையாயிரம்]-ஸமுதாயசோபையை யுடைத்தாயிருக்கை. கட்டடங்கவழகிதாயிருக்கை. விஜயமுண்டானவாறே ப்ரசஸ்திமாலைகளுஞ் செல்லாநிற்குமிறே. [சன்மம் முடிவெய்தி] - ஜந்மபரம்பரைகளுக்கு அவஸாநத்தை லபித்து. [நாசங்கண்டீர்கள் எங்கானலே] - ஜந்மத்துக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும். [கானல்] - ம்ருகத்ருஷ்ணிகை. இன்னம் பிறக்க விராதே, ஸம்வத்ஸரானுஹவம் ஸாத்மிக்கும் தேசத்திலே புகுவர்கள்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி யப்யஸிப்பார்க்கு, ஜந்மம்முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும் என்கிறார்.

[கடியனாய்க்கஞ்சனைக் கொன்றபிரான்தன்னை]-கம்ஸன் தான் நினைத்த நினைவை அவன்தன்னோடேபோம்படி பண்ணினான். [கடியனாய்] - தன்பக்கலின்றிக்கேவந்தேறியேன்கை; "கோண்டசீற்றம்" என்னக்கடவதிறே. [பிரான்தன்னை] - முன்பு உபகாரகனானவன்கிடீர் நம்மையழித்தான்! உகந்தாரையழிக்கையிறே வ்யாயகமாவது; விரோதிகளையழிக்குமது உபகாரமிறே. [கோடிமதிள்தென்குருகூர்] - கம்ஸவிஜயத்துக்குக் கோடிகட்டிற்றுத் திருநகரியாய்த்து; ஸ்வாமிவிஜயத்துக்கு, உரியவடியாரிருந்தவிடத்தேயிறே கோடிகட்டுவது. [வடிவமையாயிரம்] - ஸமுதாயசோபையையுடைத்தாயி

நிகமம் - கடியனாய் இத்யாதி. "பத்தினால் சன்மம்முடிவெய்தி நாசங்கண்டீர்களெங்கானல்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

"கடியன்" என்றது - இகது, கோபவானென்றபடி. "கடியனாய்க்கஞ்சனைக் கொன்ற" என்றதுக்கு ஹார்த்தபாவம் - கம்ஸன் இத்யாதி. "ஆய்" என்றதுக்குபாவம் - தன்பக்கல் இத்யாதி. அப்படிவந்தேறியோவென்ன - கோண்டசீற்றம் இத்யாதி. "கடிகொள்பூம்பொழில்" என்கிற பாட்டிலே; திருமொழி அஞ்சாம்பத்து எட்டாந்திருமொழி மூன்றும்பாட்டு. கோண்டசீற்றம் - ஏறட்டுக்கொண்ட சீற்றமென்றபடி. நீராம்படியழிக்கிறவனை "பிரான்" என்பானென்? என்ன - முன்பு இத்யாதி. "கொன்றபிரான்" என்று ஹிம்ஸை உபகாரமோவென்ன - உகந்தாரை இத்யாதி. பதச்சேர்த்திக்குபாவம் - கம்ஸவிஜயத்துக்கு இத்யாதி. திருநகரியிலே கொடிகட்டுவானென்னென்ன - ஸ்வாமி இத்யாதி. விவரணம் - கட்டடங்க இத்யாதி. "கஞ்சனைக்கொன்றபிரான்தன்னை - வடிவ

ருக்கை. கட்டடங்க அழகிதாயிருக்கை. விஜயமுண்டாகைபாலே ப்ராஶஸ்திமாலைகளுஞ் செல்லாநிற்குமிறே. [சன்மம்முடிவெய்தி] - ஜந்மபரம்பரைக்கு அவஸாநத்தைலபித்து. [நாசங்கண்டீர்களெங்கானலே]-ஜந்மத்துக்கு அடியான ஸம்ஸாரமும் நசிக்கும். கானல்-ம்ருகத்ருஷ்ணிகை. இன்னமிங்கே பிறக்கவிராதே, ஸமவத்துறைஸம்ஸாரம் ஸாத்மிக்கும் தேஶத்திலேபுகுவர்கள். (௯௧)

---

யையாயிரம்" என்றகூட்டிஷாவம் - விஜயம் இத்யாதி. ப்ராஶஸ்திமாலைகள் - வெற்றி ஸ்தோத்ர மாலைகள். "சன்மம்" என்றது - ஜாத்யேகவசநம். நாசங்கண்டீர்கள் - நாசமாக்கக்கடவீர்கள். எங்கானல் - நம்முடைய ஸம்ஸாரம். "எம்" என்றது - ஸகலம்பந்திகளைச் சொல்லுகிறது. ஸவிதம் - இன்னமிங்கே இத்யாதி. "கானல்" என்றது - ம்ருகத்ருஷ்ணிகைபோல் ஸம்ஸாரமென்றபடி. 'கடியனுப்' என்றுதொடங்கி, 'இப்பத்தினுல் சன்மம் முடிவெய்தி - எங்கானல் - நாசங்கண்டீர்கள்" என்றந்வயம். (௯௧)

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி.—ஸ்வஸ்யாந்தர்மேணையநுஸமயமபி ஷுயிஸ்வ ஸம்வ்ருத்தஸம்ஷிவிவஶோஸாரிஸ்ய ஸ்நேஹ பத்மாபவஸந்யுதகேஸிக்கேஸ ஸ்ருதம்ஸ்ருத்யஸம்ஹருதநாவ்யஸநிஷக்தே ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— ஸ்மர்தவ்யைஸ்ஸ்வைகஸா ஊலி ஶ்ருதிபாவாநுபாத்ரைஸ்ஸம்ச்லேஷஸ்ஸம்ச்லேஷைஸ்ஸ்வதேஹைஃதபா ஸ்வ தாகஷுகஸார்க ஔதார்யபூர்வைஶ்ரீஶோதவி ஊ ஸவவ்ருதஃ ஸ்நேஹிணேஸ்ஸ ஸஹ்ரா ஸ்ரீஸ்தாபூர்வைர்வவஶக்யாஶாரிதி ஶஜ்ஞைஸ்ஸஜாநாநாம் ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.
உருகுமாலென்னெஞ்சமுன்செயல்களெண்ணிப்
பெருகுமால்வேட்கையெனப்பேசி — மருவுகின்ற
வின்னாப்புடனவன்சீர்க்குரைத்தமாறன்சொல்
† என்னுச்சொல்லாதிருப்பதெங்கு.

---

ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

† 'என்னுல்ல'ென்றும் பாடம்,

# ஏழாந்திருவாய்மொழி. எங்கானல் - ப்ரவேசங்கள்.

ஆ.—(எங்கானல்.) - இந்த அப்ராப்திகர்ப்பமான குணாநுஸந்தாந ஜநித ப்ரீதியானதுமாறி அப்ராப்த்யம்சமே தலையெடுத்து அந்யாபதேசத்தாலே தூதப்ரேஷணம்பண்ணுகிறார்.

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில், இப்படி அப்ராப்திசூந்ய ஸ்மரணத்தாலே மிகவும் ப்ரீதரானவர்க்கு இப்போது ஸ்வரூபஸாக்ஷாத்கார மில்லாமையாலே, ஸ்மரணத்தால்வந்த ப்ரீதியும் மாறி அப்ராப்தியே தலையெடுத்து, அத்யந்தம் அவஸந்நரான ஆழ்வார், தம்முடைய தசையை ஒருபிராட்டியுடைய தூதவாக்யத்தாலே எம்பெருமானுக்கு அறிவிக்கிறார். எம்பெருமானுடைய அழகிலே ஈடுபட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தாள் ஒருபிராட்டி அவன்வரவு காணாதே அவனாலல்லது செல்லாத ப்ரக்ருதியாகையாலே தன்னாற்றாமையாலே க்ருஹத்தில் நின்றும் உத்யாநப்ரதேசத்திற் சென்று, அங்கேயிருந்தன சிலபக்ஷிகளைக்குறித்து நிரதிசயபோக்யமான வடிவையுடையனாய்க் க்ருபாப்ரவாஹியானவன், தான் தனக்கு ஸ்நேஹிகளானோரோட்டைப் பரிமாற்றத்தாலே என்னுடைய தசையை உணராதே மறந்திருந்தானத்தனை. ஆதலால், தன்னழகைக் கண்டு பிரிந்தார் தரிப்பரோ என்று அவனுக்கு அறிவிக்கவேணுமென்று அவற்றை ஸவிநயமாக இரக்கிறாள்.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், கீழ் குணஸ்மரணத்தாலே சிதிலரானவர், அந்த சைதில்யம் பாஹ்யாநுபவபர்யந்தமான அபிநிவேசத்தைப் பிறப்பிக்க, அநுபவயோக்யமாம்படி திருமூழிக்களத்திலே எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனுடைய அதிசயித போக்யதாகாரத்தையும், அஸாதாரணஜநாநுபாவ்யத்வத்தையும், சேஷித்வப்ரகாசரூபவைலக்ஷண்யத்தையும், நித்யாநுபாவ்ய சேஷித்வத்தையும், நிரதிசயவிபூதிமத்த்வத்தையும், நித்யாநபாயிநீஸம்பந்தத்தையும், அத்யுஜ்ஜ்வல அவயவத்வத்தையும், ஆபிரூப்யாதிசயத்தையும், அஸாதாரணசேஷித்வசிஹ்நத்தையும், அநுபஹித க்ருபாயோகத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விசிஷ்டனான ஸர்வேச்வரனைக் கிட்டியநுபவிக்கப் பெறாத ஆர்த்தியாலே வடகமூவத்தாலே லபிக்கப் பாரித்தப்ரகாரத்தை, நாயகனான ஸர்வேச்வரனைப்பிரிந்தநாயகியானவள், வ்யதிரேகத்தில் தரிக்கவரிதான அவனுடைய அழகை யநுபவிக்கைக்காகச் சிலபக்ஷிகளை இரந்து தூதுபோகவிடுகிற பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். * அஞ்சிறையமடநாரையிலே - அபராதஸஹத்வம் பற்றாசாகவும், * வைகல்பூங்கழிவாயிலே - சேஷித்வஸம்பந்தம் பற்றாசாகவும், * பொன்னுலகாளிரீலே - ஏகரஸத்வம் பற்றாசாகவும், இத்திருவாய்மொழியிலே - ஸௌந்தர்யம் பற்றாசாகவும் தூதுவிடுகிறாள்: "[illegible]"

இ.—ஏழாந்திருவாய்மொழியில், அப்ரீதிசூந்ய குணஸ்மரணத்தாலே மிகவும் ப்ரீதரானவர், பாக்யஹாநியாலே அப்ரீத்யம்சமே தலையெடுத்து அவனைப்பெறில் ஜீவித்தல், பெறுவிடில் முடிதலாம்படியான தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே

*அருளிச்செய்கிறார். இயற்கையிலே புணர்ந்துபிரிந்தாள் ஒருபிராட்டி, அவன் அழகிலே ஈடுபட்டு அவஸந்நையாய்த் தன்னாற்றாமை கைகொடுக்க உத்யாநத்திலே சென்று அங்கிருக்கிற பக்ஷிகளைக்குறித்து, 'பின்னானார் வணங்குஞ் சோதி திருமூழிக்களம்' என்கிறபடியே தூதுபோவார்க்கு அருமைப்பட்டு அறிவிக்கவேண்டாதபடி திருமூழிக்களத்திலே வந்துநின்றருளினான், தனக்கு நல்லாரை விடமாட்டாதவனாகையாலே நம்தசையை அறியாதிருந்தானத்தனை. க்ருபாஸ்வபாவனாகையாலே நம்தசையை அறிவிக்க வரும்; தன்னழகைக்கண்டு பிரிந்தார் தரிப்பரோ? என்றுஅறிவிக்கவேணுமென்று, அவற்றை ஸவிநயமாக இரக்கிறாளொருபிராட்டி பேச்சாலே தம்தசையை அருளிச்செய்கிறார். அஞ்சிறையமடநாரையில் "இத்தலையில் அபராதத்தாலே வாராதொழிந்தானித்தனை" என்று அவனுடைய அபராதஸஹத்வம் பற்றாசாகத் தூதுவிட்டார்; வைகல் பூங்கழிவாயில் "நல்லதுகண்டால் கால்தாழுமவனாகையாலே மறந்திருந்தானித்தனை; நம் ஆர்த்தியை யறிவித்தால் தன்னினிமையிலே நெஞ்சுவைப்பானொருவனல்லன்" என்று அதுபற்றாசாகத் தூதுவிட்டார்; பொன்னுலகாளியில் "ஐஸ்வர்யப்பரப்பாலே மறந்திருந்தானத்தனை. ஆஸ்ரிதரோடு ஏகரஸனென்று அறிவிக்கவே வரும்" என்று ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிட்டார்; இதில் தனக்கு நல்லாரை விடமாட்டாமையாலே வாராதிருந்தானித்தனை. "தன்வடிவழகது, குணங்களவை; ஆனபின்பு பிரிந்தார்க்கு ஜீவித்திருக்கப்போமோ" என்று அவ்வடிவழகும் குணங்களும் பற்றாசாகத் தூதுவிடுகிறது.*

ஈடு.—கீழ் அப்ரீதிஹர்ஷாநுஸந்தாநத்தாலே மிகவும்ப்ரீதரானவர், ஸாத்ய ஹாநியாலே அப்ரீத்யம்ஸமே தலையெடுத்து, அவனைப்பெற்றுப் பிழைத்தல், பெறுவிடில் முடிதலாம்படியான தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்.

இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி, அவன்வடிவழகிலே யீடுபட்டு அவஸந்நையாய், தன்ஆற்றாமை கைகொடுக்கத் தன்உத்யாநத்திலேசென்று, அங்கிருக்கிற பக்ஷிகளைக்குறித்து, "'பின்னானார்வணங்குஞ்சோதி திருமூழிக்களம்'' என்கிறபடியே தூதுபோவார்க்கு அருமைப்பட்டு அறிவிக்கவேண்டாதபடி திருமூழிக்களத்திலேவந்து நின்றருளினான்; தனக்கு நல்லாரை விடமாட்டாதவனாகையாலே நம்தசையறியாதிருந்தானத்தனை; க்ருபாவானாகையாலே நம் தசையறிவிக்கவரும்; "உம்மைப்பிரிந்தார் தரிப்பரோ?"என்றுஅறிவிக்கவேணும்"என்று அவற்றை ஸவிநயமாக இரக்கிறாளொருபிராட்டி பேச்சாலே தம்தசையை அருளிச்செய்கிறார். * அஞ்சிறையமடநாரையிலே, "நம்பக்கல் அபராதத்தாலே வாராதொழிந்தானத்தனை: அவனுடைய அபராத ஸஹத்வத்தை யறி

---

*எங்கானல் ப்ரவேசம்: ஸங்க்ரஹஸங்கதி - கீழ் அப்ரீதி இத்யாதி.* பெறவிடில் முடிதலாம்படியான *என்றது - "* என்னகமேனியொடும்" என்றத்தைப்பற்ற.*

*"அந்யாபதேசத்தாலே" என்றத்தை உபபாதிக்கிறார் - இயற்கையிலே - யாத்ருச்சிகமாக* வென்றபடி. அவஸந்நையாகில், உத்யாநகமநங்கூடுமோவென்ன - தன் ஆற்றாமை இத்யாதி. ஆனால் வாராதிருப்பானென்னென்ன - தனக்குநல்லாரை இத்யாதி. *"தமரோடங்குறைவார்க்கு" என்றத்தைக் கடாக்ஷித்து* - நல்லாரைவிடமாட்டாதவனாகையாலே *என்றது. "தான் தம்மைக்கொண்டகல்தல் தகவன்று" என்றத்தைப்பற்ற* - க்ருபாவானாகையாலே *என்றது. "நங்கால்களென்றலைமேற் கெழுமீரோ" என்றத்தைப்பற்ற* - ஸவிநயமாகஇரக்கிறாள் *என்றது. கீழே, தூதப்ரேஷணம்பண்ணின மூன்று திருவாய்மொழிக்கும் இத் திருவாய்மொழிக்கும் வாசியேதென்ன* - அஞ்சிறைய இத்யாதி. அபராதத்தாலே *என்றது- "என்பிழையே நினைந்தருளி" என்றத்தைப்பற்ற.* அபராதஸஹ

விக்கவரும்'' என்று அபராதஸஹத்வம் பற்றாசாகத் தூதுவிட்டாள்; * வைகல்பூங்கழி வாயில், ''நல்லதுகண்டால் கால்தாழுமவனுகையாலே திருவண்வண்டூரில் ஸம்ருத்தியைக்கண்டு கால்தாழ்ந்தானத்தனை. நம்மார்த்தியை யறிவித்தால் தன்இனிமையில் நெஞ்சுவைப்பானொருவனல்லன்'' என்று அதுபற்றாசாகத் தூதுவிட்டாள்; *,பொன்னுலகாளியில், ''திருக்கோளூரேறப்போக'' என்று தன்னுடைய ந௱ரோபவநத்தளவுஞ்சென்று வைலஹாநியாலே போகமாட்டாதேயிருக்கிற பிராட்டி, பின்னையும், அவன்வரக்காணாமையாலே, ''வாராதொழிகைக்கு நிவந்யநம் - தன்ஐஶ்வர்யப் பரப்பாலே; தான் ஆஶ்ரிதரோடு ஏகரஸனுகையாலே வரும்'' என்று ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிட்டாள்; இதில், ''தனக்கு நல்லராயிருப்பாரை விடமாட்டாமையாலே வாராதிருந்தானுமித்தனை; தன்வடிவழகது; குணங்களவை; ஆனபின்பு, பிரிந்தார்க்கு ஜீவித்திருக்கப்போமோ?'' என்று அவன் வடிவழகும் குணங்களும் பற்றாசாகத் தூதுவிடுகிறாள்.

---

## முதற் பாட்டு.

---

எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும்
செங்காலமடநாராய்! திருமூழிக்களத்துறையும்
கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக்கூத்தர்க்கென்தூதாய்
நுங்கால்களென்தலைமேற் கெழுமீரோநுமரோடே.

*ஆ.—'தன்னைப்பிரிவில் நான் தரிக்கமாட்டாதபடி தன்னழகாலும் தன்செயலாலும் என்னைத் தோற்பித்து அடிமையாக்கி, என்னோடே கலந்தருளிப்போய், திருமூழிக்களத்திலே இருந்தருளின எம்பெருமானுக்கு என்திறஞ்சொல்லவேணும்; உங்களுக்கடிமையே நானிருக்கிறேன்' என்று நாரைகளை இரக்கிறாள்.*

*ஒ.—முதற்பாட்டில், சிலநாரைகளைக் குறித்து எம்பெருமான் தன்னுடைய அழகாலும் குணங்களாலும் தன்னைத் தோற்பித்தபடியைச் சொல்லி அவனுக்கு என் உம்மையை அறிவித்து வந்து உங்களுடைய திருவடிகளை என்தலைமேலே வைக்கவேணுமென்கிறாள்.*

*[எங்கானலென்று தொடங்கி] - எங்கள் உத்யாநத்தில் உள்ளிற்கழியிலே இரைதேடி இங்கே இனிதாகவர்த்திக்கிற சிவந்தகாலையுடைய ஸுவ்யமான நாராய்! [எங்குடக் கூத்தர்க்கு] - ஆத்மநிவேதநவசநம். குடக்கூத்தாடின அழகைக்காட்டி என்னையகப்படுத்திக் கொண்டவனுக்கு. [நுங்கால்களென்று தொடங்கி] - ஸபரிகரமாக உங்கள் திருவடிகளை என்தலைமேலே வைக்கவேணும்.*

---

த்வம் என்றது - ''என்பிழைத்தாள் திருவடியின்தகவினுக்கு'' என்றத்தைப்பற்ற. ஸம்ருத்தியை என்றது - ''சிறந்தசெல்வம்'' என்றத்தைப்பற்ற. அதுபற்றாசாக - ஆர்த்தரக்ஷணதீக்ஷை பற்றாசாக; இது ''என்னையுமுளளென்மின்கள்'' என்றத்தைப்பற்ற. ஐஶ்வர்யப்பரப்பாலே என்றது - ''யாவையும் யாவருமாய்'' என்றத்தைப்பற்றவாதல், ''மூன்னுலகங்களெல்லாம்படைத்த'' என்றத்தைப்பற்றவாதல். ஐகரஸ்யம் பற்றாசாக என்றது - ''தண்அழாய்நமக்கன்றி நல்கான்'' என்றத்தைப்பற்ற. வடிவழகு என்றது - ''அக்கமலத்திலைபோலுந்திருமேனி'' என்றத்தைப்பற்ற. ''தமரோடங்குறைவார்க்கு'' என்றத்தைப்பற்ற - குணங்களவை என்றது.

ப—முதற்பாட்டில், அதிஸாயிதமான போக்யதா ப்ரகாரத்தை யுடையனாயுள்ள க்ருஷ்ணனுக்கு என் தூதாகப்போன உபகாரத்துக்காக என்தலையிலே உங்கள் கால்களைவைக்கவேணுமென்று சிலநாரைகளை ஆதரித்து அபேக்ஷிக்கிறாள்.

எங்கானல்அகங்கழிவாய்-உங்களுக்கு விசேஷாஹமாம்படி எங்கள் மனையிலே வர்த்திக்கிற கடற்கரையிற் சோலையிலகவாயிற் கழியிடத்திலே, இரைதேர்ந்து - உங்கள் ஸைந்யாதிஸயந்தோற்றும்படி இரைத்தை வஸ்துவை போக்யமாக விரும்பி, இங்கு - ஸந்நிதியிலே, இனிது - ப்ரணயப்ரீதியோடே, அமரும் - வர்த்திக்கக்கடவையாய், செம் - என்தலைக்குஅலங்காரமென்னலாம்படி சிவந்திருக்கிற, கால் - காலையுடைத்தாய், மடம் - நியமித்துக் கார்யங்கொள்ளலாம்படி ம்ருதுதையையுடைய, நாராய்-, திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - ஆஸ்ரிதஸௌலப்யத்தைக்கொண்டு நித்யவாஸம்பண்ணுமவராய், கொங்குஆர் - தேன்மிஞ்சி, பூ - தர்ஸநீயமான, துழாய் முடி - திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையராய், எங்குடக்கூத்தர்க்கு - குடக்கூத்தாடுகிற மனோஹாரிசேஷ்டிதத்தாலே எங்களுக்கு நிரதிஸயபோக்யபூதரானவர்க்கு, என்தூதாய் - என்னுடைய தூதக்ருத்யத்திலேசென்று, (அந்தவுபகாராதிஸயத்தாலே), நுமரோடே - ("[illegible]" என்கிறபடியே, உன்ஸம்பந்திகளான) தாரபுத்ராதிகளோடேகூட, நுங்கால்கள் - எனக்காக வழிநடந்த உங்கள் கால்களை, என்தலைமேல் - அதுக்குப்பாத்ரபூதமாகையாலே உத்தமாங்கமான என் தலையிலே, கெழுமீர் - சேர்க்கவேணும். உபகாரகன் ஆசார்யனையாகிலும் உபகாரஸ்ம்ருதி தத்ஸம்பந்தி பர்யந்தமளவுஞ் செல்லுமிறே. "நாராய்" என்கிற ஒருமை ஜாத்யேகவசநம்.

இ.—முதற்பாட்டில், சிலநாரைகளைக் குறித்து அவன் தன்அழகாலும் குணங்களாலும் தன்னைத் தோற்பித்தபடியைச் சொல்லி என்தசையை அவனுக்கு அறிவித்துவந்து உங்களுடைய திருவடிகளை என்தலைமேலே வைக்கவேணுமென்கிறாள்.

[எங்கானல்] - ஐஸ்வர்யவிஷயத்தில் உபகாரகரோடு ஐகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க 'எம்' என்கிறது - உபகாரஸ்ம்ருதியாலே ஒன்றைத் தன்னதாக்கிக் கொடுத்தல்லது தரிக்கமாட்டாதபடியாலே சொல்லுகிறது. பிறர்க்கு உபகரிக்கைக்கு உறுப்பாகவரும் மமகாரம் உத்தேஸ்யமாயிருக்குமிறே. ஐஸ்வர்யவிஷயத்துக்கு ஆக்கினவன்றே தன்னதடங்க வடகர்க்கு ஸேஷமாயிருக்க உபகாரஸ்ம்ருதி ஆறியிருக்க வொட்டாமையாலே வருமதிறே. ஆத்மஸமர்ப்பணத்திற்கும் அடி இதுவிறே. [கானலென்று] - கடற்கரைச் சோலையாதல், நெய்தல் நிலமாதல். [அகங்கழிவாய்] - உள்ளான கழியிடத்திலே. அந்தர்க்ருஹப்ரவேஸத்திற்கு அநுமதிவேண்டாதபடியிறே இவை அந்தரங்கமாயிருக்கிறபடி. "கஹிதாநி ஹஸ்யாநி" என்கிறபடியே வர்த்தியாநின்றன. [இரைதேர்ந்து] - இரைதேடி; "[illegible]" என்கிறபடியே; பண்டுதனக்கு உபகரித்தபடியைச் சொல்லுகிறாள், இப்போது உபகரிக்கைக்காக. [இங்கு] - இத்தலையை யழித்துத் தூதுவிடவேண்டும்படி அகலவிருந்தவனைப் போலன்றியே, ஸந்நிஹிதராகப் பெற்றேன் என்கிறாள். [இனிதமரும்] - இனிதாக நம்மோடே ஸஹவாஸம்பண்ணப் பெறுகை; விலக்ஷணபோகங்களை புஜித்து வர்த்திக்குமென்றுமாம். [செங்கால] - சிவந்தகாலையுடைய. என்முடியிலேயிருக்கும் கால்போலேயிருந்ததீ, நான் தலையிலே

வைத்துக்கொள்ளப் புகுகிறகாலும். [மடநாராய்] - ஐஸ்யமான நாராய்! [திருமூழிக்களத்துறையும்] - தூதுபோவார்க்கு அடுத்து அணித்தாக நிற்கையாலே பரமபதத்திற்காட்டில் ஏற்றமிருக்கிறபடி. [கொங்கார் பூந்துழாய்முடி யெங் குடக்கூத்தர்க்கு] - ஒப்பனையையும் மனோஹாரிசேஷ்டிதங்களையும் எனக்காக்கி வைத்தவர்க்கு; 'எம்' என்கிறது ஒப்பனையிலும் சேஷ்டிதத்திலும் இரண்டிலுமாகிறது. 'எம்' என்று - ஆத்மநிவேதனவசநம். [என்தூதாய்]-ஒப்பனையிலும் செயலிலுந் தோற்று வெறுந்தரையாயிருக்கிற என்னுடைய தூதக்ருத்யத்திலே அதிகரித்து. [நுங்கால்கள் என்தலைமேல்] - உபகாரகரான உங்களுடையகாலை உபக்ருதையாய் உஜ்ஜீவிக்க இருக்கிற என்தலையிலே. இவளுடைய தலையிலே வைக்கக்கண்டதாய்த்து இவற்றின்கால்; இவற்றினுடைய காலைவைக்கக் கண்டதாய்த்து இவள்தலை; இரண்டும் பாரார்த்யமாகக் கண்டதாய்த்து. [செழுமீரோ] - அவனுக்கு சேஷமாக்கினபோதே வடகர்க்கு சேஷமாகையாலே என்னையிகொண்டு வைக்கவேண்டாவிறே; என்தலைமேலே சேரீகோளோ? [நும ரோடே] - "ஸவாஸநஸஹஜநபருஷணை:" என்கிறபடியே ஸபரிகரமாக. "ஜூவாய ... வஹாவா ... ஸ்ருதி:" என்னக்கடவதிறே.

ஈடு.—முதற்பாட்டு. சிலநாரைகளைக் குறித்து அவன் தன்னழகாலும் குணங்களாலும் தன்னைத் தோற்பித்தபடியைச்சொல்லி, என்தசையை அவனுக்குஅறிவித்துவந்து உங்கள்திருவடிகளை என்தலைமேலே வைக்கவேணு மென்கிறாள்.

[எங்கானல்] - ஹமவத்விஷயத்தில் உபகாரகரோடு ஐகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க, 'எம்' என்றது - ஒன்றைத் தம்மதாக்கிக் கொடுத்தல்லது யசிக்கமாட்டாத உபகாரஸ்ம்ருதியாலே சொல்லுகிறது. பிறர்க்கு உபகரிக்கைக்காகவரும் மமகாரம் உத்தேஶ்யமாயிருக்குமிறே. தன்னை ஹமவத்விஷயத்துக்குஆக்கினவன்றே தன்னதடங்கலும் அங்குத்தைக்கு சேஷமாயிருக்க, உபகாரஸ்ம்ருதியிறே இப்படி சொல்லுவித்தது. ஆத்மஸமர்ப்பணத்துக்கும் அடி இதுவிறே. கானலென்கிறது - கடற்கரைச்சோலையாதல், நெய்தல்நிலமாதல். [அகங்கழிவாய்] - உள்ளான கழியிடத்து. அந்தர்க்ருஹப்ரவேஶத்துக்கு அநுமதி வேண்டாதபடியிறே இவை அந்தரங்கமாயிருக்கிறபடி. "கூமிதா நிர ஹஸ ... நி"

---

முதற்பாட்டு - எங்கானல் இத்யாதி. "செங்கால மடநாராய்" என்று தொடங்கி "செழுமீரோ" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - சிலநாரைகளை இத்யாதி. குணங்களாலும் என்றது "திருமூழிக்களத்துறையும்" என்றத்தைப்பற்ற.

'ஐகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க' என்றவநந்தரம், "எம் என்று மமகரிப்பானென்னென்ன" என்று கூட்டுவது. பரிஹாரம் - எம் என்றது இத்யாதி. உபகாரமாவது-இத்தசையிலேவந்து முகங்காட்டினது. எல்லாமென்றுஉம் மமகாரம த்யாஜ்யமன்றோவென்ன - பிறர்க்கு இத்யாதி. "ஹமவத்விஷயத்தில்" இத்யாதி வாக்ய விவரணம் - தன்னை ஹமவத்விஷயத்துக்கு இத்யாதி. அங்குத்தைக்கு என்றது - வடகர்க்குஎன்றபடி. இப்படி சொல்லுவித்தது என்றது - "எங்கானல்" என்னும்படி சொல்லுவித்ததென்றபடி. அப்படி உபகாரஸ்ம்ருதியாலே மமகாரம்பண்ணின இடமுண்டோவென்ன -ஆத்மஸமர்ப்பணத்துக்கும் இத்யாதி. இதுக்கு "எனதாவி தந்தொழிந்தேன்" என்றதிலே நோக்கு. நெய்தல் நிலமாவது - கடற்கரைமாத்ரம். எங்களுடையகானலில் உள்ளானகழியிடத்து என்று ஸம்பந்தார்த்தம். "அகங்கழிவாய்" என்ற பதங்களுக்கு பாவம் - அந்தர்க்ருஹ இத்யாதி. அந்தரங்கத்வ கார்யத்தைக்காட்டுகிறார்-கூமிதாநி இத்யாதி. "கூமிதாநிர ஹஸ ... " இதி மஹாபாரதே கர்ணவசநம் (க). இவற்

(கதிதாகிரஹஸ்யாகி) என்கிறபடியே வர்த்தியாநின்றன. [இரைதேர்ந்து] - இரைதேடி; "[illegible]" (க்ருஹோபக்ரமஸங்கிதம்) என்கிறபடியே: பண்டு தனக்கு உபகரித்தபடியைச் சொல்லுகிறாள், இப்போது உபகரிக்கைக்காக. [இருந்த] - இத்தலையை யழித்துத் தூதுவிடவேண்டும்படி அகலவிருந்த அவனைப்போலன்றியே, ஸந்நிஹிதராகப் பெற்றேனென்கிறாள். [இனிதமரும்] - இனிதாக நம்மோடே ஸஹவாஸம் பண்ணப் பெறுகை; விலக்ஷணபோகங்களை ஹாஜித்து வர்த்திக்குமென்றுமாம் [செங்கால]-சிவந்த காலையுடைய. என்மடியிலேயிருக்கும் கால்போலேயிருந்தத் நான் தலையிலே வைத்துக் கொள்ளப்புகுகிற காலும். [மடநாராய்]-ஸௌம்யமான நாராய்! [திருமூழிக்களத்துறையும்]- தூதுபோவார்க்குஅடுத்தணித்தாகத் திருமூழிக்களத்திலே நிற்கையாலே, பரமபதத்திற்காட் டில் ஏற்றமிருக்கிறபடி. [கொங்கார்பூந்துழாய்முடி யெங்குடக்கூத்தர்க்கு] - ஒப்பனையை யும் மநோஹாரிசேஷ்டிதத்தையும் இரண்டையும் எனக்கு ஆக்கிவைத்தவர்க்கு. "எம்" என்கிறது - ஒப்பனையிலும் சேஷ்டிதத்திலு மிரண்டிலுமாகிறது. 'எம்' என்று - ஆத்மநி பஹுவசநம். [என்தூதாய்] - அவ்வொப்பனையிலும் சேஷ்டிதத்திலுந்தோற்று அவனைப் பெற்று ஜீவித்தல், இல்லையாகில் முடிதலாயிருக்கிற என் ஸாதக்ருத்யத்திலே யதிகரித்து. [நுங்கால்களென்றலைமேல்] - உபகாரகரான உங்களுடையகாலை, நீங்கள் உபகரிக்க ஜீவிக்கவிருக்கிற என்தலைமேலே; மயிர்கழுவிப் பூச்சூட விருப்பாரைப்போலே. அவற்றின் காலாகில் இவள் தலையிலே யிருக்கக்கண்டன; இவள் தலையாகில் அவற்றின் கால்வைக்கக் கண்டிருந்தது; இரண்டும் பரார்யமாயிருந்தபடி. [கெழுமீரோ]-ஒரு விதிகொண்டு ப்ரவர்த் திக்க வேண்டாவாய்த்து இங்கு; † அவனுக்காக்கினவாறே உங்களதாயிருக்குமிறே. கோடு வந்துசேரீகோளோ? [நுமரோடே] - "[illegible]" (ஸ்தோத்ரபௌத்ர

---

றைத் தூதுவிட நினைக்கிறவள் இரைதேடினத்தைச் சொல்லுவானென்னென்ன - பண்டு தனக்குத்திய யாதி. பண்டு உபகரிக்கையாவது-தூதுபோவதற்குமுன்னே தன் கழியிலே இரைதேடுகை. "இனி தமரும்" என்றதுக்கு அர்த்தத்வயம் - அமருகை - பொருகை - பொருந்துகையாய். இனிதாக நம் மோடே ஸஹவாஸம்பண்ணப் பெறுகையாதல், செவ்வும் பேடையும் விலக்ஷண போகங்களை ஹாஜித்து வர்த்திக்கையாதல்; இந்தஅர்த்தத்வயத்தையும் அருளிச்செய்கிறார்-இனிதாக இத்யாதிவாக்ய த்வயத்தாலே. இத்தால் - "[illegible]" என்றதனைச் சொல்லுகிறதென்றாய்க் கண்டுகொள்வது. காலில் சிவப்பைச் சொல்லுகிறதுக்கு [illegible] - என்மடியிலே இத்யாதி. மடியிலிருக்குங்கால் - நாயகன் கால். அடுத்தணித்தாக - மிகவும் ஸந்நிஹிதமாக. கொங்கு - பரி மளம், ஆர் - பூர்ணமான, பூந்துழாய்முடி - பரிமளத்தையுடைய திருத்துழாயை முடியிலேயுடைய வென்று ஸமஸ்தார்த்தம். "இரண்டையு மெனக்காக்கிவைத்த" என்றதுக்கு ப்ரஸக்தமென்ன - எம் என்கிறது இத்யாதி. "தலைமேல்" என்னவமைந்திருக்க, "என்றலைமேல்" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - மயிர்கழுவி இத்யாதி. அதாவது - தன்தலை அவற்றின் காலுக்கு அர்ஹமென்றுமிடத் தோற்று கைக்காக விசேஷிக்கிறதென்றபடி. "நுங்கால்கள், என்தலை" என்ற பதச்சேர்த்திக்கு ஹாவம் - அவற் றின் இத்யாதி வாக்யத்வயம். இத்தால் ஃபலிதம் - இரண்டும் இத்யாதி. "கெழுமீரோ!" என்ற ஸ்வ ரத்துக்குஹாவம் - ஒருவிதி இத்யாதி. அதுக்கடியேதென்ன - அவனதாக்கின இத்யாதி கெழுமீரோ- சேருங்கோள். "[illegible]" இதி ஸங்க்ஷேபே (கக). அப்படி பத்ர்ரகளும் உத்தேச் யரோவென்ன-ஆசார்யவத் இத்யாதி. "[illegible]; [illegible]"

† 'அவனுக்கு' என்கிற இந்தப்பாடம் அடையவளைந்தானரும்பதத்துக்குச் சேரும். சீயரரும்பதத்துக்கு 'அவனது' என்று பாடமாகத் தோற்றுகிறது.

ஸ்ஸகணை:)என்னுமாபோலே,ஸபரிகரமாக.''ஆசார்யவதாசார்யபுத்ரேவ்ருத்தி:'' (ஆசார்யவதாசார்யபுத்த்ரேவ்ருத்தி:) என்னக்கடவதிறே. (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

நமரோடும்பிரியாதேநீரும்நுஞ்சேவலுமாய்
அமர்காதற்குருகினங்காள்! அணிமுழிக்களத்துறையும்
எமராலும்பழிப்புண்டுஇங்குஎன்?தம்மாலிழிப்புண்டு
தமரோடங்குறைவார்க்குத்தக்கிலமே?கேளீரே!

ஆ.—(நமரோடும்) - ''அவருக்குச் சொல்லும் வார்த்தையைக் கேளுங்கோள்'' என்று குருகுகளையழைத்துவைத்து, நடுவே,தன்னோவாலே,''தம்மாலும்உபேக்ஷிதையாய் எல்வைர்யாக்களாலும் கர்ஹிதையாயிங்கேயிருக்கும் இவ்விருப்பென்செய்ய! இவ்விருப்பில் முடிகையேநன்று'' என்று தன்னிலேசொல்லி இன்னாதாய், பின்னையும் அவளை விடமாட்டாமையாலே, ''தாமும் தம் பரிஜநங்களுமாயிருந்த இருப்புக் காண்கைக்கு நான் அநர்ஹையாயிழந்துபோமித்தனையோ?'' என்று கேளீரென்று கொண்டு,தான் சொல்லப்புக்கவார்த்தையை அவற்றுக்குச் சொல்லிமுடிக்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், சிலகுருகுகளைக்குறித்து திருமூழிக்களத்து எம்பெருமானுக்குத் தாமும் தமக்கு நல்லாருமாயிருந்தஇருப்பை நான் இழந்தேபோமித்தனையோ? என்று அறிவியுங்கோள் என்கிறாள்.

[நமரோடும் என்றுதொடங்கி] - உங்களுடைய வந்யாக்களோடும் பிரியாதே நீங்களும் உங்களுடைய சேவல்களும் ஸம்ஸ்லேஷியா நிற்பதுஞ்செய்து பரஸ்பரம் காதலையுடைய குருகினங்காள்! [அணிமூழிக்களத்துறையும் என்றுமேலுக்கு] - குருகினங்களைக்குறித்து வார்த்தை சொல்லுகிறவள், அர்த்யோக்தியிலே அத்தைத் தவிர்ந்து வந்யாக்களாலும் இகழப்பட்டு திருமூழிக்களத்திலே உறைகிற தம்மாலும் உபேக்ஷிக்கப்பட்டிருக்கும் இவ்விருப்பில் முடிகையே நன்று என்று தன்னிலே விஷண்ணையாய் மீளவும் அவற்றைக்குறித்து தாம் தம்பரிஜநங்களோடே அங்கே நித்யஸம்ஸ்லிஷ்டரானவர்க்குநாங்களாகோமோ என்று கேளுங்கோள் என்று,தொடங்கின வார்த்தையை முடியச்சொல்லுகிறாள்.

ப.—அநந்தரம், ''அஸாதாரணபரிஜநங்களோடே அநுபாவ்யராயிருக்கிற தமக்கு நாங்கள் அநுரூபரல்லோமோ?'' என்று கேளுங்கோள் என்று சில குருகுகளைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

நமரோடும் - சந்தாநுவர்த்திகளான பந்துஜநங்களோடும், பிரியாதே-, நீரும்- (சேவலையநுவிதாநப்பண்ணும்) நீங்களும், நுஞ்சேவலுமாய் - உங்களையநுவிதாநம்பண்ணுஞ்சேவலுமாய், அமர்காதல் - ஸம்ஸ்லேஷித்து வர்த்திக்கும்படியான ப்ரணயத்தை

---

வாரித்ருவர்த்தி:'' இத்யாபஸ்தம்பஸூர்மே. 'எங்கானலகம்' என்று தொடங்கி, 'என்றுதாய் - நமரோடே - நுங்கால்களென்றலைமேல் கெழுமீரோ' இத்யந்வய:. (க)

யுடைய, குருகினங்காள் - ! அணி - ஊர்ஸமீபமான, மூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுகிற, தம்மால் - தம்மாலே, இழிப்புண்டு - காதாசித்க ஸம்ஶ்லேஷாநந்தரம் உபேக்ஷிக்கப்பட்டு, (அதடியாக), எமராலும் - என்னொடு அநுவர்யமுடையவராலும், பழிப்புண்டு - பழிக்கப்பட்டு, இங்கென் - இங்குத்தை யிருப்புக்கு என்னப்ரயோஜநமுண்டு! தமரோடு - அஸாதாரணபரிஜநத்தோடே, அங்கு - அங்கே, உறைவார்க்கு - நித்யவாஸம்பண்ணுகிற தமக்கு, தக்கிலமே - நாங்களாகோமோ? கேளீரே - கேளுங்கோள்.

இ.—இரண்டாம்பாட்டில், சிலகுருகுகளைக் குறித்து தாமும் தமக்கு நல்லாருமாயிருக்கிற விருப்பை நான் இழந்தேபோயித்தனையோ? என்று அறிவியுங்கோள் என்கிறாள்.

[நுமரோடும் பிரியாதே] - "தமரோடங்குறைவார்" என்றப்த்து, ப்ராப்ய வஸ்துவைச்சொல்ல நினைக்கிறது; அதுக்கீடாக இவையும் குறைபற்றிருக்கிறபடி. குறைவாளர் கார்யம் குறைவற்றார்க்குத் தீர்க்கவேண்டாவோ? [நீரும் நுஞ்சேவலுமாய்] - சேவலின் நினைவறிந்து பரிமாறும்நீரும்உம்முடையகருத்தறிந்து பரிமாறுஞ்சேவலுமாய் ஸம்ஶ்லேஷரஸம் அறியும் நீங்கள். பிரிந்தாருடைய செல்லாமையும்அறியவேண்டாவோ! உண்டார்க்கு உண்ணாதார் பசி தீர்க்கவேண்டாவோ? [அமர்காதல் குருகினங்காள்] - பரஸ்பரம்பொருந்தின காதல்; ஆசையிலே விஶ்லேஷத்தை ஸஹிப்பியாத ஆசையுண்டாகாதே! ஆசையிலுங்குறைவற்று, விஶ்லேஷமின்றியிலே கருத்தறிந்து பரிமாறவுங் கடவதாயிருக்கப்பெறுவதே நீங்கள்! [குருகினங்காள்] - என்று ஸம்போதித்து வைத்துத் தொடங்கின வார்த்தை முடியச்சொல்லமாட்டாதவளாகையாலே அர்த்தோக்தியிலே அத்தைமுடித்துத் தானிருக்கிற இருப்பிலே விஷண்ணையாகிறாள். [எமராலும் பழிப்புண்டு அணிமூழிக்களத்துறையும் தம்மாலும் இழிப்புண்டு] - காதாசித்க ஸம்ஶ்லேஷமே ஹேதுவாக பந்துக்கள் கைவிட்டார்கள். காதாசித்கமாக ஸம்ஶ்லேஷித்தவளவிலே தாமும் உபேக்ஷித்தார்; பந்துக்கள் கைவிட்டதுவே ஹேதுவாகக் கைக்கொள்ளவேணும். பிறபட்டார்க்குக் காட்டிக் கொடுக்கவந்து நிற்கிற நிலையாலும் கைக்கொள்ளவேணும். இரண்டும் என்னளவிலே உபேக்ஷாஹேதுவாவதே! [இங்கு என்] - இவ்விருப்புக்கு என்னப்ரயோஜநமுண்டு? "[illegible]த்தில் ஒருதேஶவிஶேஷத்திலே பெறவேண்டித்தான் ஆறியிருக்கிறேனோ?" என்று தன்னிலே விஷண்ணையாய்ப் பின்னையும் தன்செல்லாமையாலே அவற்றைக் குறித்து வார்த்தை சொல்லுகிறாள். [தமரோடு இத்யாதி] - தம் பரிஜனங்களோடே பங்கே நித்யவாஸம்பண்ணுகிற தமக்கு நாங்களாகோமோ என்று கேளுங்கோள். தாமும் தமக்கு நல்லாருமாயிருக்கிற இருப்புக்கு, "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிருப்பாராகாரோ என்று கேளுங்கோள்!

ஈடு.—இரண்டாம்பாட்டு. சில குருகினங்களைக் குறித்து, "தாமும் தமக்கு நல்லாருமாயிருந்தவிருப்பை நானிழந்தேபோமித்தனையோ?" என்றறிவியுங்கோளென்கிறாள்.

---

இரண்டாம்பாட்டு — நுமரோடும் இத்யாதி. "தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீர்" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை - சிலகுருகினங்களை இத்யாதி.

[நுமரோடும்பிரியாதே] - "தமரோடங்குறைவார்" என்றுய்த்து ப்ராப்யவஸ்து வைச்சொல்ல நினைக்கிறது; அப்படியே இவையும் குறைவற்றிருக்கிறபடி. குறைவாளர் கார்யம் குறைவற்றார்க்குத் தீர்க்கவேண்டாவோ! உண்டார்க்கு, பட்டினிகிடந்தார் பசி பரிஹரிக்க ப்ராப்தமிறே. [நீரும் நுஞ்சேவலுமாய்] - சேவல்நினைவறிந்து பரிமாறும் நீரும், உம்முடைய கருத்தறிந்து பரிமாறும்சேவலுமாய். ஸம்ஶ்லேஷரஸமறியும் நீங்கள், பிரிந்தாருடைய செல்லாமையும் அறியவேண்டாவோ! [அமர்காதல் குருகினங்காள்] - பரஸ்பரம் பொருந்தின காதல். ஆசையிலே, விஶ்லேஷத்தை ஃபலிப்பியாதவாசையுண்டாகாதே! ஆசையிலுங்குறைவற்று, விஶ்லேஷமுமின்றியிலே, கருத்தறிந்து பரிமாறவுங்கடவதாயிருப்பதே நீங்கள்முன்னம்! "குருகினங்காள்" என்று ஸம்போதித்துவைத்து, தொடங்கின வார்த்தை முடியச்சொல்லமாட்டாத வைலக்ஷண்யத்தாலே அர்த்தோக்தியிலே யத்தை முடித்து, தானிருக்கிறவிருப்பிலே விஷண்ணையாகிறாள். [எமராலும்பழிப்புண்டு - அணிமுழிக்களத்துறையும் தம்மாலுமிழிப்புண்டு] - காதாசித்க ஸம்ஶ்லேஷமே ஹேதுவாக பந்துக்கள் கைவிட்டார்கள்; காதாசித்க ஸம்ஶ்லேஷத்தளவிலே தாமும் உபேக்ஷித்தார். பந்துக்கள் கைவிட்டதே ஹேதுவாகக் கைக்கொள்ளவேணும்; பிற்பாடர்க்குக் காட்சி கொடுக்கவந்துநிற்கிற நிலையாகையாலும் கைக்கொள்ளவேணும்; இரண்டும் என்னளவில் உபேக்ஷாஹேதுவாவதே! [இங்கேன்] - இவ்விருப்புக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? தம்மைப்பெற்றிருக்கிறேனே, பந்துக்களைப் பெற்றிருக்கிறேனே? இங்குள்ளார்கைவிட்டால் பின்பு தம்மெல்லைக்குள்ளே யாக்கிக்கொள்ளவேண்டாவோ? பகவத் விஷயத்திலே புட்புக புட்புக, அன்றுதொடங்கிக் கைவிடுவர்களிறே ஸம்ஸாரத்திலுள்ளார். †("ஶரீர ஸம்பந்தரத்திலே ஒருதேசவிசேஷத்திலே பெறவேண்டித்தான் ஆறியிருக்கிறேனோ?" என்று தன்னிலே விஷண்ணையாய், அத்தை) அவ்வளவிலேவிச்சேதித்து, பின்னையும், தன்செல்லாமையாலே அவற்றைக்குறித்து வார்த்தைசொல்லுகிறாள்:—[தமரோடங்குறைவார்க்கு] - தம்பரிஜனங்களோடே அங்கே நித்யவாஸம் பண்ணுகிறதமக்கு, நாங்களாகோமோ?

---

"நுமரோடும்" என்றிவற்றைச்சொன்னதுக்கு ஹாவம் - தமரோடு இத்யாதி. இவை குறைவற்றால் தனக்கு ப்ரயோஜநமேதென்ன-குறைவாளர் இத்யாதி. "தீர்க்கவேணும்" என்கிறநிர்ப்பந்தமேதென்ன,- லௌகிக த்ருஷ்டாந்தத்தாலே யத்தை த்ருடீகரிக்கிறார் - உண்டார்க்கு இத்யாதி. இத்தால்ஹாவம் - ஸம்ஶ்லேஷ இத்யாதி. "அமர்காதல்" என்றதுக்கு - பாரஸ்பரஸத்ருஶமான காதலென்று கீழருளிச்செய்து, அமருதல் - காலத்தோடேபொருந்துதலாய், நித்யமான காதலென்றர்த்தாந்தரமாதல், கீழ்வாக்யத்துக்கு ஃபலிதமாதல் - ஆசையிலே இத்யாதி. "அமர்காதல், நுமரோடும் பிரியாதே, நீரும் நுஞ்சேவலுமாய்" என்கிற பதத்ரயங்களாலும் ஃபலிதம் - ஆசையிலும் இத்யாதி. "இங்கென்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - குருகினங்காள்என்று இத்யாதி. "தக்கிலமேகேளீர்" என்று முடியச்சொல்லமாட்டாத வைலக்ஷண்யாலேயென்றபடி. பதத்வயதுக்கும்ஹாவம் - காதாசித்க இத்யாதி வாக்யத்வயம். கீழ்வாக்யத்வயஃபலிதம்-பந்துக்கள் இத்யாதிவாக்யத்ரயம். என், ப்ரயோஜநமில்லையோ? என்ன-தம்மைப்பெற்று இத்யாதி. ஆனால் செய்யவடுப்பதென்? என்ன - இங்குள்ளார் இத்யாதி. காதாசித்க ஸம்ஶ்லேஷமாத்ரத்திலே பந்துக்கள் விடுவார்களோவென்ன - பகவத்விஷயத்திலே இத்யாதி. மேலுக்கவதாரிகை - அவ்வளவிலே இத்யாதி. அவ்வளவிலே - விஷண்ணையானவளவிலே. விச்சேதித்து - விஷாதத்தைவிட்டு. தக்கிலமே - தகோமோ? கீழ்வாக்யத்துக்குஹாவம் -

---

† குண்டலிதம் சில ஸ்ரீகோஶங்களில் இல்லையென்கிறார்கள்.

என்று கேளுங்கோள். தாமும் தமக்கு நல்லாருமாயிருக்கிற விருப்புக்கு, "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவ தென்றுகொலோ" என்றிருப்பாரானாரோ? என்று கேளுங் கோள். (௨)

## மூன்றாம் பாட்டு.

தக்கிலமே?கேளீர்கள்தடம்புனல்வாய்இரைதேரும்
கொக்கினங்காள்குருகினங்காள்குளிர்மூழிக்களத்துறையும்
செக்கமலத்தலர்போலும் கண்கைகால்செங்கனிவாய்
அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே.

ஆ.—(தக்கிலமே.)-தன்னைக்காண்கைக்கு நான் ஆர்த்தியன்றியே அவ்வழகையுங் காணப்பெறாதே இழந்துபோமித்தனையோ? என்று கேளீர் என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், சில கொக்கினங்களையும், குருகினங்களையும் நோக்கித் தன்னழகைக் காண்கைக்கு நாங்கள் யோக்யதையை உடையோமல்லோமோ? என்று கேளீர் என்கிறாள்.

[தடம்புனல்வாய்இரைதேரும்]- பொய்கைகளுடைய நீரிலே இரைதேடுகிற. [செக்கமலம்] - செந்தாமரை. [அடிகள்] - ஸ்வாமி.

ப.—அநந்தரம், அவயவங்களோடு ஸமுதாயத்தோடு வாசியற அதிமாத்ர போக்யமான வடிவையுடையவர்க்கு நாங்கள் அபோக்யரோ? கேளுங்கோள்! என்று சில சில கொக்கினங்களையும் குருகினங்களையுங்கூட அபேக்ஷிக்கிறாள்.

தட - பெரிய, புனல்வாய் - தடாகத்திலே, இரைதேரும் - ஆமிஷார்த்திகளாய்க்கொண்டு, (என்னுடைய நிர்வேதாநுகுணமாகத் தனித்தனியே திரள்திரளாயிருக்கிற), கொக்கினங்காள் குருகினங்காள்-! குளிர் - ஸ்ரமஹரமான, மூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - நித்யவாஸம் பண்ணுமவராய், செய் - சிவந்த, கமலத்து - கமலத்தின், அலர்போலும் - அலர்போலேயிருக்கிற, கண் - ("ஜிதந்தே" என்னப் பண்ணும்) கண்ணையும், கை - ("[illegible]" என்று ப்ரார்த்திக்கும்படியே யணைக்கும்) கையையும், கால்-("சரணௌ ஶரணம் ப்ரபத்யே" என்று ஆஸ்ரயிக்கும்) திருவடிகளையும், செங்கனிவாய் - ("மாபைஷீ:" என்று ஸாந்த்வநம் பண்ணும்) சிவந்தகனிநிறத் திருப்பவளத்தையும், அக்கமலத்து - அந்தக்கமலத்துக்குப்பரபாகமான, இலைபோலும் - இலைச்செறிவுபோலே யிருக்கிற ஸ்யாமளமான, திருமேனி-திருமேனியையுமுடையராய், அடிகளுக்கு - அவ்வடிவழகைக்காட்டி எனக்கு

---

தாமும்தமக்கு இத்யாதி. அதவா, "தமரோடு" என்று விசேஷித்ததற்கு ஸ்வாரஸ்யமாதல் - தாமும் தமக்கு இத்யாதி. அதாவது - தாம் மாத்ரமன்றிக்கே ததீயபர்யந்தமாக அபேக்ஷித்த நாங்கள் அந்தத் தைக்கு ஆகோமோவென்று வ்யங்க்யம். 'நமரோடும்' என்றுதொடங்கி, 'குருகினங்காள் - எமராலும் பழிப்புண்டு - அணிமூழிக்களத்துறையும்-தம்மாலுமிழிப்புண்டு - இங்கென்?, - தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீர்' இத்யந்வய: பழிப்புண்கை - பழிக்கப்படுகை. இழிப்புண்கை - உபேக்ஷிக்கப்படுகை. (௨)

ஸ்வாமியானவர்க்கு, தக்கிலமே - (இவ்வழகை யநுபவிக்கைக்கு நாங்கள்) யோக்யரல்லோமோ என்று, கேளீர்கள் - கேளுங்கோள்.

இ.—மூன்றாம்பாட்டில், சிலகொக்கினங்களையும் குருகினங்களையும் நோக்கித் தன்அழகு காண்கைக்கு நாங்கள் யோக்யரல்லோமோவென்று கேளீர் என்கிறாள்.

[தக்கிலமே கேளீர்கள்] - ஓரறுதிபெறக் கேட்டுப்போருங்கோள்! அவர் "வேணும்" என்னில் நாமும் நம்ப்ராணனைநோக்கவும், அவர் "வேண்டா" என்றாராகில் நாமும் ஒன்றிலே துணியும்படியும் நிஸ்சிதமாகக்கேட்டுப் போருங்கோள். [தடம்புனல் வாயிரைதேரும்]-பொய்கைபின்னீரிலே இரைதேருகிற; உபவாஸக்ருஶையான என்னைப் போலன்றியே இரை மிடற்றுக்குக் கீழேயிழியும்படியிறே உங்கள் பௌஷ்கல்யம். [கொக்கினங்காள் - குருகினங்காள்] - "யாநகவீநாஸஹஸ்ராணி" என்கிறபடியே கண்ணால் கண்டவற்றை அடையவவுகிறாள். "சிலவற்றைப் போகவிட்டோம், அத்தாலே நங்கார்யம் தலைக்கட்டும்" என்று ஆறியிருக்கும் விஷயமன்றே. [குளிர்மூழிக்களத்துறையும்] - விரஹதாப தப்தையாயிருக்கிற எனக்கு அந்தஸ்ரமஹரமான தேஶத்தில் ப்ராப்தியரிதாவதே! [செக்கமலம் இத்யாதி] - இக்குளிர்த்திக்கு அடியான அகவாயில் வாசத்தடமிருக்கிறபடி; சிவந்தலர்ந்த தாமரைபோலேயிருக்கிற கண்முதலான திவ்யாவயவங்களையுடையவன்; முதலுறவு பண்ணும் கண், அந்நோக்குக்குத் தோற்றாரை அணைக்கும் கை, ஸ்பர்ஶத்துக்குத் தோற்றார்விழுந் திருவடிகள், திருவடிகளிலே விழுந்தாரை ஸாந்த்வநம்பண்ணி தரிப்பிக்கும் முறுவல். [அக்கமலத்திலைபோலுந் திருமேனி] - அவர்களுக்கு உஜ்ஜீவநமான வடிவு. அவயவங்களுக்குப் பரபாகமான செந்தாமரை யிலைபோலேபாய்த்து திருமேனி. வெண்டாமரையென்னில் விஜாதீயமென்று 'அக்கமலம்' என்கிறது. [அடிகளுக்கு]-வடிவழகையும் அவயவஶோபையையுங்காட்டி யெழுதிக்கொண்டவர்க்கு இவ்வடிவுக்குத் தோற்று வைவர்ண்யத்தை தரித்திருப்பார் யோக்யரல்லரோ? என்றுகேட்டுப் போருங்கோள்!

ஈடு.—மூன்றாம் பாட்டு. சில கொக்கினங்களையும் குருகினங்களையும்நோக்கி, தன்அழகுகாண்கைக்கு நாங்கள் யோக்யரல்லோமோ? என்றுகேளீர் என்கிறாள்.

[தக்கிலமேகேளீர்கள்] - நாம்ஒன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டுப் போருங்கோள். அவன் இன்னம் "இதுவேணும்" என்றிருந்தானாகில் ப்ராணன்களை வருந்தி நோக்கிக்கொண்டுகிடக்கவும், "வேண்டா" என்றிருந்தானாகில் நாமும் ஒன்றிலே துணியும்படியும் அறுதியாகக்கேட்டுவிடுங்கோள். [தடம்புனல்வாயிரைதேரும்] - மிக்க ஜல ஸம்ருத்தியையுடைய பொய்கையில் நீரிலே இரைதேடுகிறவளவாயிருந்தது உங்களுக்கு. ("உபவாஸக்ருஶாம்" (உபவாஸக்ருஶாம்) என்கிறபடியே) † உபவாஸக்ருஶையான என்னைப்போலன்றியே, இரை மிடற்றுக்குக்கீழ் இழியும்படியிறே உங்கள்பௌஷ்கல்யம்!

---

மூன்றாம்பாட்டு.—தக்கிலமே இத்யாதி. "கொக்கினங்காள்குருகினங்காள் - திருமேனியடிகளுக்கு-தக்கிலமேகேளீர்கள்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலகொக்கினங்களையும் இத்யாதி.

மீளவும் "தக்கிலமேகேளீர்" என்றதுக்கு பாவம் - நாமொன்றிலே இத்யாதி. விவரணம்-அவன்இன்னம் இத்யாதி. "தடம்புனல்" என்றதிலே, ஜலஸம்ருத்தியும் அர்த்தாத்ஸித்தம். விவரணம்-உபவாஸ இத்யாதி. கொய்யடி - மெத்தென்றவடி. 'இனங்காள்' என்ற பஹுவசநார்த்தம் -

---

† குண்டலிதம் இரண்டு ஸ்ரீகோஶங்களில் இல்லையென்கிறார்கள்.

[கொக்கினங்காள் குருகினங்காள்] - குருகு - கொக்கினமாம். "யாம்கபீநாம்ஸஹஸ்ராணி" (யாம்கபீநாம்ஸஹஸ்ராணி) என்கிறபடியே. கண்ணுற் கண்டவற்றையடைய ஏவுகிறாள்; "சிலவற்றைப்போகவிட்டோம், அவை கார்யம் தலைக்கட்டும்" என்று ஆறி யிருக்கும் விஷயமன்றே! [குளிர்மூழிக்களத்துறையும்] - விரஹதப்தையாயிருக்கிற எனக்கு அந்த ச்ரமஹரமான தேசத்தில் ப்ராப்தியரிதாவதே! [செக்கமலத்தலர்போலும்] - அக்குளிர்த் திக்கு அடியான உள்ளில் வாசத்தடமிருக்கிறபடி; சிவந்தலர்ந்த தாமரைபோலேயிருக்கிற கண்முதலான திவ்யாவயவங்களையுடையவன் முதலுறவுபண்ணும் கண்; அந்நோக்குக் குத் தோற்றாரையணைக்கும் கை; ஸ்பர்சத்துக்குத்தோற்றார் விழுந்திருவடிகள்; திருவடி களிலே விழுந்தாரை †ஸாந்த்வநம்பண்ணி யரிப்பிக்கும் முறுவல். [அக்கமலத்திலைபோலுந் திருமேனி] - அவர்களுக்கு உஜ்ஜீவநமானவடிவு. அவயவங்களுக்குப் பரபாகமான செந்தாமரையிலைபோலே யாய்த்துத் திருமேனி. வெண்டாமரையேன்னில் விஜாதீய மென்று, 'அக்கமலம்' என்கிறது. [அடிகளுக்கு] - அந்த அவயவசோபையையும் வடி வழகையுங்காட்டி யெழுதிக்கொண்டவர்க்கு. இவ்வடிவழகுக்குத் தோற்று வைவர்ண் யத்தை தரித்திருப்பார் அங்குத்தைக்கு அயோக்யரோ என்று கேட்டுப்போருங்கோள். அவன் புருஷோத்தமனானால், இவள் * நாரீணாமுத்தமையாம்போது இப்படியேயிருக்க வேணுமிறே. (௩)

---

## நான்காம் பாட்டு.

---

திருமேனியடிகளுக்குத் தீவினையேன்விடுதூதாய்
திருமூழிக்களமென்னுஞ்செழுநகர்வாயணிமுகில்காள்!
திருமேனிஅவட்கருளீரென்றக்கால் உம்மைத்தன்
திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே.

யாம்கபீநாம் இத்யாதி. "யாம்கபீநாம்ஸஹஸ்ராணி ஸுபஹூந்யயுதாநி ச। திக்ஷு ஸர்வாஸு மார்கந்தே ஸேயமாஸாதிதாமயா" இதி ஸ்ரீராமாயணே ஸுந்தரகாண்டே ஹநுமாந் (௩௦-௩). முற்றப் போகவிட்டவை வருமளவும் ஆறியிராமல் கண்டவற்றையெல்லாம் தூதுவிடுவானென்? என்ன - சிலவற்றை இத்யாதி. திருமூழிக்களத்திலுண்டான ஸௌலப்யத்தை வர்ணிக் கிறதுக்கு பாவம் - விரஹதப்தையாய் இத்யாதி. வாசத்தடம் என்றது - அவயவங்கள் தாமரையானால், அதுகளிருக்குமிடம் தடாகமென்னுமத்தாலே. "கண், கை. கால்" என்கிற க்ரமத்துக்கு பாவம் - முத லுறவு இத்யாதி. அவர்களுக்கு - அநுபவிப்பார்க்கு. பரபாகம் - அவயவங்களுக்கு இத்யாதி. "கமலத்திலை" என்னாதே, "அக்கமலம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - வெண்டாமரை இத்யாதி. அதாவது - ஸாமாந்யேந "கமலம்" என்றால், வெண்டாமரையையுஞ் சொல்லுமாகையாலே, வைஜாத்ய பரிஹாரார்த்தமாக "அக்கமலம்" என்று செந்தாமரையை விசேஷிக்கிறதென்றபடி. "கண்கைகால் செங்கனிவாய் - திருமேனி" என்றவநந்தரம் "அடிகளுக்கே" என்றதுக்கு பாவம் - அந்த அவயவ இத்யாதி. கீழ்வாக்யத்துக்கு பாவம் - இவ்வடிவழகுக்கு இத்யாதி. வாசஸம்பந்தமில்லாதிருக்க, "வைவர்ண் யத்தை தரித்திருப்பார்" என்கிறதென்? என்ன - அவன் புருஷோத்தமன் இத்யாதி. 'தடம்புனல் வாய்' என்றுதொடங்கி, 'அடிகட்கு - தக்கிலமே கேளீர்கள்' இத்யர்த்தம். (௩)

---

† ஸாந்த்வநம் பண்ணுதல் - நல்வார்த்தை சொல்லுதல்.

ஆ.—(திருமேனி.) - திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாய் அணிமுகில்காள்! திருமேனி யவட்கருளீர் என்று இத்தனையுஞ்சொன்னாலும், உங்களுக்குப் பரமயுக்தமான திருமேனியொளியை யுங்களை யிழப்பித்து, அவ்வூரில் நின்றும் போகவிடுக்குமோ? இத்தனையுஞ் சொன்னால் என்செய்யும்? என்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், சிலமேவங்களை நோக்கி 'என்வார்த்தையை அவனுக்குச் சொன்னால் உங்களைத் தண்டிக்குமோ?' என்கிறாள்.

[திருமேனியென்று தொடங்கி] - தன்வடிவழகாலே ஜகத்தையடைய அடிமைகொண்டிருக்கிறவர்க்கு அவ்வழகையிழந்து நோவுபடுகைக்கீடான பாபத்தைப் பண்ணின என்னுடைய தூதாய், திருமூழிக்களமென்று ப்ரஸித்தமாயிருக்கிற திருநகரியில், அழகிய முகில்காள்! [திருமேனியவட்கென்று மேலுக்கு] - அவளுக்கு உம்முடைய திருமேனியை அருளீர் என்று சொன்னக்கால், உங்களைத் தன்திருமேனியில் ஒளியைமாற்றி, உங்கள்அழகெல்லாம்தெரியும்படிநீங்கள்நிற்கும் நிர்மலமான ஆகாசத்தில் நின்றும் உங்களைப்போக்குமோ! திருமூழிக்களமென்னுஞ் செழுநகரில், திருமேனியடிகளுக்கு என்றுமாம்.

ப.—அநந்தரம், 'அழகாலேஅடிமைகொள்ளுமவர்க்கு என் தூதாய்ச்சென்று, உம்முடைய திருமேனியை யவளுக்கு உபகரியீரென்று ஒருவார்த்தைசொன்னால் உங்கள் ஸாரூப்யத்தையும் தேசவாஸத்தையுந் தவிர்க்குமோ' என்று சிலமேகங்களைக் குறித்து வார்த்தைசொல்லுகிறாள்.

அணி - தர்சநீயமான வடிவையுடைய, முகில்காள் -! திருமூழிக்களமென்னும் - "பின்னானார் வணங்குஞ்சோதி திருமூழிக்களம்" என்னும்படி ப்ரஸித்தமான, செழுநகர்வாய் - விலக்ஷணநகரத்திலே வர்த்திக்கிறவராய், திருமேனியடிகளுக்கு - "[illegible]" என்று வடிவுதானே ஸர்வாதிகத்வ ப்ரகாசகமான ஸௌஷ்டவத்தையுடையவர்க்கு, தீவினையேன் - (அவரோடுஉறவுண்டாயிருக்க அநுபவிக்கப்பெறாத) க்ரூரமான பாபத்தையுடைய நான், விடு - விடுகிற, தூதாய் - தூதராய்ச்சென்று, 'அவட்கு - அவளுக்கு, திருமேனி - உம்முடைய நிரதிசய போக்யமான வடிவை, அருளீர் - உபகரித்தருளீர்' என்றக்கால் - என்று ஒருஉக்தி நேர்ந்தக்கால், உம்மை - (பாருஷ்யமாகவார்த்தைசொன்ன உங்களை), தன் திருமேனி ஒளி - (தான்அடியிலே யுங்களுக்குத்தந்த)தன்திருமேனியிலொளியை, அகற்றி - தவிர்த்து, தெளிவிசும்பு கடியுமே - விலக்ஷணமான ஆகாசத்தில் வர்த்தியாதபடிபண்ணுமோ? ஸ்வார்த்தமாக அபேக்ஷித்தார்க்குங் கொடுக்குமவன், எனக்காக அபேக்ஷித்ததுக்காக ஸாரூப்யத்தையும் விஷ்ணுபதாச்ரயத்வத்தையும் தவிர்க்கை அஸம்பாவிதமென்கிறாள்.

இ.—நாலாம்பாட்டில், சிலமேவங்களைநோக்கி 'என்னவஸ்த்தை அவனுக்குச் சொன்னால் உங்களை தண்டிக்குமோ?' என்கிறாள்.

[திருமேனியடிகளுக்கு] - ஸ்வரூபகுண விபூதிகளையொழிய வடிவழகாலே ஸர்வஸ்வாமியென்று தோற்றும்படியிருக்கிறவர்க்கு. வடிவழகாலே ஜகத்தையடையத் தோற்பித்து அடிமைகொண்டிருக்கிறவர்க் கென்றுமாம். "[illegible]" என்கிறபடியே, ப்ரதிகூலர்க்கும் ஆகர்ஷகமாயிறே வடிவிருப்பது. [தீவினையேன் விடு தூதாய்] - ஸர்வ ஸாதாரணமான வடிவையிழந்து உங்கள்காலிலே விழவேண்டும்

வர்த்திக்கிற அழகியமுகில்காளேன்னுதல்; செழுநகர்வாயடிகளுக்குச் செப்புமின்களேன்னுதல். [திருமேனியவட்கருளீர்] - பரார்த்யமான உடம்பை ஆசைப்பட்டார்க்குக் கொடுத்தலாகாதோ? 'ஸக்தாநாம்'' (பக்தாநாம்) என்கிறபடியே, இவ்வுடம்பு ஆசைப்பட்டாரதன்றே? என்றுசொல்லுங்கோள். காமினிகளுக்கு ஸ்வரூபாதிகளிற்காட்டில் வடிவிலேயிறே அபேக்ஷை. [அருளீர்] - ப்ரணயித்வமன்றே குடிபோய்த்து; க்ருபையும் மறுத்ததோ? [என்றக்கால்] - "வாசாதர்மமவாப்நுஹி" (வாசாதர்மமவாப்நுஹி) என்று உங்களுக்கொருவார்த்தையன்றே நேரவேண்டுவது! [உம்மை]-இப்படி உபகாரகரான உங்களை. [தன்திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே]-உங்கள்வடிவிற் புகரையும்போக்கி நிர்மலமான ஆகாசத்தினின்று உங்களையோட்டுமோ? உங்களுக்கு இதுக்கு முன்பில்லாதவற்றையும் உண்டாக்குமதொழிய, பண்டுள்ளவற்றைத் தவிர்த்து உங்களை தண்டிக்குமோ? அல்ப ஸாத்ருஶ்யத்தைத்தவிர்த்து, "பரமம்ஸாம்யமுபைதி" (பரமம்ஸாம்யமுபைதி) என்கிறபடியே ஸர்வதாஸாத்ருஶ்யத்தையும்தந்து, ஆகாசமாத்ரஸ்த்திதிகளன்றிக்கே பரமகாசத்தையுந்தாரானோ? உங்களுடைய உக்திமாத்ரத்தாலே எனக்கும் உங்களுக்கும் ப்ரயோஜநமொத்திருக்க, ஆறியிருக்கக்கடவிகோளோ? (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

தெளிவிசும்புகடிதோடித்தீவளைத்துமின்னிலகும்
ஒளிமுகில்காள்!திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்குத்
தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும்
துளிவார்கட்குழலார்க்கென்தூதுரைத்தல்செப்புமினே.

*ஆ.—(தெளிவிசும்பு.)-அவளுக்கு அருளீர் என்னவமையுமோ? இன்னருக்கருளீரென்னவேண்டாவோ வென்னில், - யாவளொருத்தியுடைய நெஞ்சை யுமக்குத் திருநாடாகக்கொண்டு நீருறைகிறீர், அவளுக்கருளீர்! என்று சொல்லிகோளென்கிறாள்.*

---

*என்று ஶப்தார்த்தம். செப்புமின்கள் என்று - அத்யாஹார்யம். "ஸக்தாநாம்" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - பரார்த்யமான இத்யாதி. அருளீர்-அருளினாலாகாதோ? திருமேனி பரார்த்யமோவென்ன - ஸக்தாநாம் இத்யாதி. ஸ்வரூபகுணாதிகளிருக்க, திருமேனியைச் சொல்லுவானென்னென்ன - காமினிகளுக்கு இத்யாதி. தன் திருமேனியோடொத்த வொளியையகற்றியென்று ஶப்தார்த்தம். "கடியுமே" என்றவிடத்திலேயேகாரத்துக்கு பாவம் - உங்களுக்குஇதுக்கு இத்யாதி. விவரணம் - அல்ப இத்யாதி. "என்றக்கால்" என்றத்தைக்கடாக்ஷித்துஹாவம் - உங்களுடைய இத்யாதி. எனக்கு ப்ரயோஜநம் என்றது - ஸத்தையை; உங்களுக்கு ப்ரயோஜநம் என்றது - பரமஸாம்யாபத்தியை. 'திருமூழிக்களமென்னும்' என்றுதொடங்கி, 'முகில்காள் - திருமேனியடிகட்குத் தீவினையேன் விடுதூதாய் - திருமேனியவட்கருளீர் என்றக்கால்' என்று தொடங்கி கடியுமே யென்றந்வயமாதல்; அணிமுகில்காள் - தீவினையேன் விடுதூதாய் திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாய்வர்த்திக்கிற - திருமேனியடிகட்கு - திருமேனியவட்கருளீர் என்று செப்புமின்கள்: என்றக்கால், உம்மை என்று தொடங்கி, கடியுமே என்றந்வயமாதல். இதுக்கு ஸ்வாபதேசமாக, "† பூண்டநாள்" இத்யாதிசூர்ணை யநுஸந்தேயம். (௪)*

† ஆசார்யஹ்ருதயே.

ஒ.—அஞ்சாம்பாட்டில், "நாங்கள் உன்வார்த்தையை விண்ணப்பஞ்செய்தால், அவன் அங்கீகரிக்குமோ ?" என்று கேட்பீர்களாகில், பரமபதத்திற்பண்ணும் அபிநிவேசத்தை என்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரிக்கும் ; ஆனபின்பு, அவனுக்கு எனக்காக ஒருவார்த்தை விண்ணப்பஞ்செய்யவேணும் என்கிறாள்.

[தெளிவிசும்பென்று தொடங்கி] - நிர்மலமான ஆகாசத்திலே கடுகாக ஓடிக் கொள்ளிவட்டம்போலே மின்விளங்குகிற அழகியமுகில்காள் ! [திருமூழிக்களத்துறையு மொண்சுடர்க்கென்று மேலுக்கு] - கன்றைக் காணாதொன்றுதபடி பாபத்தைப்பண்ணின என்னுடைய ஹ்ருதயத்திலே பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தைப்பண்ணி வர்த்திப்பதுஞ்செய்து, துளியொழுகும் மதுவை உடைத்தான திருக்குழலையும் விலக்ஷணமான ஒளியையுமுடையனுக்கொண்டு திருமூழிக்களத்திலே வர்த்திக்கிறவனுக்கு என்னுடைய ஸந்தேசவாக்யத்தைச் சொல்லுங்கோள்.

ப.—அநந்தரம், பரமவ்யோமஸப்தவாச்யமான நிரதிசயவிபூதியில் இருக்குமாபோலே என்னெஞ்சிலே யிருக்கிறவனுக்கு என் தூதாய்ச்சென்று வார்த்தைசொல்லக்குறையில்லை என்று, அம்மேகங்கள்ளையே பார்த்துச் சொல்லுகிறாள்.

தெளிவிசும்பு - நிர்மலமான ஆகாசத்திலே, கடிதோடி - (ஸ்வர்க்கத்திலே ஸஞ்சரிப்பாரைப்போலே என்கார்யத்துக்கு த்வரிக்கிறீர்களென்னலாம்படி) கடுகாகவோடி, தீ வளைத்து - அலாதசக்ரம்போலே, மின் இலகும் ஒளி முகில்காள் - அழகிய மின் விளங்காநிற்க அத்தாலே வடிவில் அழகுவளர்ந்து தோற்றும்படியான முகில்காள் ! திருமூழிக்களத்து - திருமூழிக்களத்தில், உறையும் ஒண்சுடர்க்கு - நித்யவாஸத்தாலே ஸௌசீல்யஸௌலப்யாதி விலக்ஷண குணோஜ்ஜ்வல்யத்தையுடையராய், தெளிவிசும்பு - விமலமான திவ்யாகாசத்தை, திருநாடா - நிரதிசயவிபூதியாகவுடையராய்வைத்து, தீவினையேன்மனத்து - ஸம்ஸ்லேஷமுகத்தாலே பரிதாபஹேதுவான பாபத்தையுடைய என்னெஞ்சிலே, உறையும் - முகந்தோன்றவிராதிருக்குங்கொண்டு, துளி - துளித்து, வார் - ஒழுகுகிற, கள் - மதுவையுடைத்தான, குழலார்க்கு - மயிர்முடியழகை ப்ரகாசிப்பித்துக்கொண்டிருக்கிற அவருக்கு, என் தூதுரைத்தல் - 'செப்புமின்' என்கிற ஸந்தேசவாக்யத்தை, செப்புமின் - சொல்லுங்கோள் ! திருக்குழல் மதுவாருகிறது - அகவிதாகவைக்க பூவிற்செவ்வியாலே.

இ.—அஞ்சாம்பாட்டில், நீயே ஐபாக்கைப் பிரப்பித்தப், திருமேனி யொளிபகற்றி என்று ; ஆனபின்பு, எங்கள் வார்த்தையை அங்கீகரிக்குமோ என்னில், - பரமபதத்திற்பண்ணும் ஆதரத்தை என்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியா தொழியான்; ஆனபின்பு, எனக்காக ஒருவார்த்தை விண்ணப்பஞ்செய்யவேணும் ! என்கிறாள்.

[தெளிவிசும்பு கடிதோடி] - நிர்மலமாய் விசாலமுமான ஆகாசத்திலே ஸ்வபூமியிலே ஸஞ்சரிப்பாரைப்போலே கடுநடையிலே ஸஞ்சரித்து. இவற்றின் த்வரையெல்லாம் தன்கார்யத்துக்கு உடலென்றிருக்கிறாள். [தீவளைத்து மின்னிலகும்] - கொள்ளிவட்டம் போலே மின்விளங்காநிற்கிற; தன்வடிவில் இருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப்போலேயாய்த்து மின்னிக்கொண்டு ஸஞ்சரிக்கிறபடி. [ஒளிமுகில்காள்] - பரபாகத்தாலே அழகிதானவடிவையுடைய முகில்காள் ! [திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்க்கு] - திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுகையாலே புகர்மிக்கிருந்தவர்க்கு.

அவன்வடிவுக்குப் போலியாயிறே உங்கள்வடிவிருப்பது. [தெளிவிசும்பு இத்யாதி] - "பரமபதம் தேஶமாயிருக்க அத்தைக் காற்கடைக்கொண்டு என் நெஞ்சிலே நித்ய வாஸம்பண்ணுகிறவன்" என்று சிற்றுட்கொண்டான் பணிக்கும். "பரமபதத்திற் பண்ணும் வ்யாமோஹத்தை என்நெஞ்சிலேபண்ணி வர்த்தியாநின்றான்" என்று எம் பெருமானார். [தீவினையேன்] - நெஞ்சிலே ப்ரகாஶியாநிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப்பண்ணினேன். [துளிவார்கட் குழலார்க்கு] - துளியொழுகும் மதுவை யுடைத்தான திருக்குழலையுடையவர்க்கு; வல்லார் பூமுடித்தால் பூதோற்றக்கடவதன்றியே, மதுவொழுகக் காணுமித்தனையிறே. [என்தூதுரைத்தல் செப்புமினே] - தலையிற்பூச் சருகாயிருக்கிற என்னுடைய தூதவாக்யத்தை அவர்க்குச் சொல்லுங்கோள். அபிநிவிஷ்டராய்த் தாமே வரக்கடவராகச் சொல்லிவைத்து, தூதுவிடவிருக்கிறபடியை அறிவியுங்கோள்.

ஈடு.— அஞ்சாம்பாட்டு. "எங்கள் வார்த்தையை அவன் அங்கீகரிக்குமோ?" என்றிருந்தனவாக. 'பரமபதத்திற்பண்ணின ஆதரத்தை என்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியாதொழியான்; ஆனபின்பு, எனக்காக ஒருவார்த்தை விண்ணப்பஞ்செய்யவேணும்' என்கிறாள்.

[தெளிவிசும்புகடிதோடி] - நிர்மலமாய் நிராலம்பநமான ஆகாசத்திலே, பூமியிலே ஸஞ்சரித்தாற்போலே கநேடையிலே ஸஞ்சரித்து. இவற்றின் த்வரையெல்லாம் தன் கார்யத்துக்கு உடலென்றிருக்கிறாள். [தீவளைத்துமின்னிலகும்]-கொள்ளிவட்டம்போலே மின் விளங்காநிற்கிற. தன்வடிவில் இருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப் போலேயாய்த்து,மின்னிக்கொண்டு ஸஞ்சரிக்கிறபடி. [ஒளிமுகில்காள்]-பரபாகத்தாலே அழகிதான வடிவையுடைய முகில்காள்! [திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு] - திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகையாலே புகர் மிக்கிருக்கிறவர்க்கு. அவன் வடிவுக்குப் போலியாயிறே உங்கள்வடிவிருப்பது. [தெளிவிசும்பித்யாதி] - பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தை என்னெஞ்சிலேபண்ணி வர்த்தியாநின்றான். [தீவினையேன்] - நெஞ்சிலே ப்ரகாசியாநிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப் பண்ணினேன். இதுக்கு, சிற்றுள்கொண்டான், "கோம்பது பருத்தியாக அங்காடிபாரித்து, தனக்கு பரமபதங் கல

---

அஞ்சாம்பாட்டு - தெளிவிசும்பு இத்யாதி. இதிலும் கீழிற்பாட்டிற் சொன்ன மேகங்களையே தூதுவிடுகையாலே, அதுக்கீடாக "தெளிவிசும்பு திருநாடாத்தீவினையேன் மனத்துறையும்" இத்யாதியையும், "என்தூதுரைத்தல் செப்புமினே" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை - எங்கள் வார்த்தை இத்யாதி. "திருமேனியொளியகற்றி" இத்யாதியாலே இவள் ஶைபல்யங்கையைப் பிறப்பிக்கையாலே, அத்தைக் கேட்ட மேகங்கள், எங்கள் வார்த்தையை அங்கீகரிக்குமோ என்றிருந்தன வென்றபடி "விசும்பு" என்றதுக்கர்த்தம் - நிராலம்பநமான என்றது. "கடிதோடி" என்று விசேஷித்ததுக்குபாவம் - இவற்றின் இத்யாதி. தீவளைத்து - தீவளைத்தாற்போலே; கொள்ளிவட்டம்போலே. கொள்ளிவட்டம் - அலாதசக்ரம். "மின்னிலகும்" என்றதுக்கு பாவம் - தன்வடிவில் இத்யாதி. மின்னோடே கூடுகையால்வந்த பரபாகத்தாலே யென்றபடி. ஒளி - அழகு. "ஒளிமுகில் - ஒண்சுடர்" என்றபதச்சேர்த்திக்குபாவம் - அவன்வடிவுக்கு இத்யாதி. "தீவினையேன் மனத்தை - தெளிவிசும்பு திருநாடாகக்கொண்டு - உறையும்" என்று முந்தின நிர்வாஹம். மனத்தே யுறையாநிற்க, "தீவினை" என்கிறதென்னென்ன - நெஞ்சிலே இத்யாதி. வெறுப்பாக தாத்பர்யாந்தரம் - இதுக்கு இத்யாதி. "தெளிவிசும்பு திருநாடாயிருக்க, தீவினையேன் மனத்துறையும்" என்று சிற்றுள்கொண்டான் நிர்வாஹம். கோம்பது பருத்தியாக- பருத்தி கொம்பிலேயிருக்கச் செய்தே. அங்காடி பாரித்து - அது புடவையானதாய் அத்தை விற்

விருக்கையாயிருக்க, அத்தைக் காற்கடைக்கொண்டு ஸங்க்ருஹீதரைப்போலேயிருக்க என்னெஞ்சிலே ப்ரகாசியாநின்றான்'' என்று. இதுதான் இத்திருவாய்மொழிக்குச் சொன்ன வாக்யார்த்தத்தோடு சேராது; ஒரோர் அவஸரங்களிலே சொல்லிப்போம் வார்த்தையிறே. [துளிவார்கட்குழலார்க்கு] - துளியாநின்றுள்ள மதுவையுடைத்தான திருக்குழலையுடையவர்க்கு; வல்லார் பூமுடித்தால் பூத் தோற்றக்கடவதன்றிக்கே மதுவொழுகக்காணுமத்தனையிறே. [என்தூதுரைத்தல் செப்புமினே] - தலையிற்பூச்சருகாயிருக்கிற என் தூதவாக்யத்தை யவர்க்குச் சொல்லுங்கோள். அவிநிவிஷ்டராய்த் தாமே வருவாராகச்சொல்லி வைத்து, இப்போது தூதுவிட விருக்கிறபடியை யறிவியுங்கோள். (௫)

---

## ஆறாம் பாட்டு.

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள்!
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும்
மாதரைத்தம்மார்பகத்தே வைத்தார்க்கு,என்வாய்மாற்றம்
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையுங்கலையுமே.

ஆ.—(தூதுரைத்தல்.) ' தூமொழிவாய்வண்டினங்காள்! என்னுடைய சுடர்வளையும் கலையுமிழந்தேனென்று சொல்லவேணும்; சொல்லுமிடத்தில், அவனுடைய கள்வார்த்தையை அநாதரியாமே, பிராட்டி ஸந்நிதியிலே வைத்துச் சொல்லவேணும் என்கிறாள்.

ஒ.—ஆறாம்பாட்டில், எம்பெருமானுக்கு என்இடையாட்டம் விண்ணப்பம் செய்யுமிடத்து உங்கள்வார்த்தை விலைசெல்லும்படி பிராட்டி ஸந்நிதியிலேவைத்துச் சொல்லுங்கோள்! என்று சிலவண்டுகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

[தூமொழிவாய் வண்டினங்காள்] - வருவோமல்லோம் என்றிருக்கிலும் உங்கள் பேச்சாலே அவனுக்கும் வரவேண்டும்படியான இனியபேச்சையுடைய வண்டினங்காள்! [போதிரைத்து மதுநுகரும்பொழில்] - பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபானம் பண்ணும்பொழில். [என்வாய்மாற்றமென்று தொடங்கி] - என் பாசுரமான தூதவாக்யத்தைச் சொல்லுவதிகோளாகில், என்னுடைய அழகியவளையும் கலையும் ஶிதிலமானபடியைச் சொல்லுங்கோள்.

---

கக் கடைபரப்பி அளப்பது விலைபேசுவதாமாபோலே யென்றபடி. அங்காடி பார்த்து - பார்த்தாற்போலே யென்று கூட்டுவது. தூதப்ரகரணத்திலே வெறுப்பாகச் சொல்லுகிறது உசிதமோ என்கிற ஶங்கையிலே யருளிச்செய்கிறார் - இதுதான் இத்யாதி. இதுதான் என்றது - "மனத்துறைவாரைப்போலே" என்று வெறுப்பாகச் சொல்லுவதுதானென்றபடி. வாக்யார்த்தத்தோடு என்றது - இதின் ப்ரவேஶத்திலே "வடிவழகும் குணங்களும் பரிஹாசகத் தூதுவிடுகிறாள்" என்ற வாக்யார்த்தத்தோடு சேராதென்றபடி. ஆனால் இது எங்ஙனே சேரும்படியென்ன - ஒரோரவஸரங்களிலே இத்யாதி. குழலிலே பூவொழிய மதுவுண்டோவென்ன - வல்லார் இத்யாதி. கீழ்ப்பதத்தோடே "என்" என்றத்தைக்கூட்டி பாவம் - தலையில் இத்யாதி. அவனை "துளிவார்கட்குழல்" என்கையாலே, ப்ரதிகோடியாக - தலையிற் பூச்சருகாய் என்கிறார். "தூதுரைத்தல்" என்றதுக்கு பாவம் - அநிநிவிஷ்டராய் இத்யாதி. க்ரமேணாந்வயஃ. (௫)

ப.—அநந்தரம், நித்யாநபாயிநியான பிராட்டியைத் திருமார்விலே யுடைய வர்க்கு, உங்கள் வார்த்தை ஈடேறும்படி அச்சேர்த்தியிலே சொல்லுங்கோள் என்று, சிலவண்டுகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

தூமொழிவாய் - கந்தலற்றபேச்சில் வாய்ப்பையுடைய, வண்டினங்காள் -! போதுஇரைத்து- புஷ்பவிகாஸதசையில் ஹர்ஷத்தாலே கோலாஹலம்பண்ணிக்கொண்டு, மதுநுகரும் - உங்களுக்கு மதுபாநம்பண்ணலாம்படியான, பொழில்- பொழிலையுடைத்தான, மூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - வர்த்திப்பாராய், மாதரை - நாரீணாமுத்தமையான லக்ஷ்மியை, தம் மார்பகத்தே வைத்தார்க்கு - அவளும் "அகலகில்லேன்" என்னும்படி போக்யமான தன் திருமார்விலே நித்யவாஸம்பண்ணும்படி வைத்தவர்க்கு, என்வாய்மாற்றம் - என்வாக்கின்பாசுரமான, தூதுரைத்தல் - தூதவாக்யத்தை, செப்புதிரேல் - சொல்லப்பார்த்தீகோளாகில், சுடர் - உஜ்ஜ்வலமான, வளையும்- வளையையும், கலையும் - வஸ்த்ரத்தையும், தூதுரைத்தல் - தூதுக்குப்பாசுரமாக, செப்புமின்கள் - சொல்லுங்கோள்.

இ.—ஆறும்பாட்டில், சிலவண்டுகளைக்குறித்து, உங்கள்வார்த்தை விலை செல்லும்படி பிராட்டி ஸந்நிதியிலே சொல்லுங்கோள் என்கிறாள்.

[தூதுரைத்தல் செப்புமின்கள்] - என்னுடைய தூதவாக்யத்தை அறிவிக்க அமையும்; நீங்கள் கொண்டுவரவேண்டா. [தூமொழிவாய் வண்டினங்காள்] - இனிய பேச்சையுடைய வண்டுகாள்! அவன் அநாதரிக்கிலும் உங்கள்பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறே உங்கள் பேச்சிருப்பது. மஹாராஜர்க்கும் பெருமாளுக்கும், "[illegible]" என்று விஜாதீயமான இரண்டுதலையும் பொருந்தும்படி திருவடிவார்த்தை சொன்னாற்போலே. "[illegible]". [போதிரைத்து மதுநுகரும்பொழில்] - பூக்களிலே யிரைத்துக்கொண்டு மதுபாநம் பண்ணும்பொழில் என்னுதல். போதிலே - காலத்திலேயென்னுதல், எதிரிகளோடும் அம்பேர்க்கவும் வேண்டா. மீட்சியிலேயாகவும் வேண்டா, ததிமுகாதிகள் காத்திருப்பாருமில்லை. மதுபாநம்பண்ணுகிறவர்களுடனே கூட மதுபாநம்பண்ண அமையும். [மாதரைத் தம்மார்பகத்தே வைத்தார்க்கு] - நீங்கள் சொல்லுமத்தனையே வேண்டுவது. உங்கள்வார்த்தை கொண்டாடிக்கேட்பிக்கும் புருஷகாரமும் உண்டென்கை. [என்வாய்மாற்றம் இத்யாதி]- என்பாசுரமான தூதவாக்யத்தைச் சொல்லப் பார்த்தீகோளாகில், என்னுடைய அழகியவளையும் கலையும் ஶிதிலமானபடியைச் சொல்லுங்கோள்; செப்புவதிகோளாகில் அதுதானே யெனக்குச் சுடர்வளையும் கலையும். அறிவிக்குமதுவே குறை; வரவு தப்பாதென்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. சிலவண்டுகளைக்குறித்து, 'உங்கள்வார்த்தை விலை செல்லும்படி பிராட்டிஸந்நிதியிலே சொல்லுங்கோள் என் தூதவாக்யத்தை' என்கிறாள்.

[தூதுரைத்தல் செப்புமின்கள்] - என்தூதவாக்யத்தை யறிவிக்கவமையும்; கொண்டுவரவேண்டா. [தூமொழிவாய் வண்டினங்காள்] - இனியபேச்சையுடைய

---

ஆறும்பாட்டு - தூதுரைத்தல் இத்யாதி. "வண்டினங்காள் - மாதரைத்தம்மார்பகத்தே வைத்தார்க்கு" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலவண்டுகளை இத்யாதி.

"செப்புமின்கள்" என்றதுக்கு பாவம் - என்தூதவாக்யத்தை இத்யாதி. "தூய்தானமொழி

வண்டுகாள்! அவன் அநாதரிக்கிலும் உங்கள் பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறே பேச்சிருப்பது. பெருமாளும் இளையபெருமாளும் கையும் வில்லுமாய் வருகிறபடியைக் கண்டு, "இவர்கள் வாலிவரவிடவருகிறார்களோ?" என்றுஅஞ்சி மஹாராஜர் நாலுமூன்று யோஜநம்அவ்வருகேயோட, மீண்டுவந்து "[illegible]" (கெம்புகம் ஸாகஞ்சநேள) என்று விஜாதீயமான இரண்டுதேயம் பொருந்தும்படியாக "[illegible]" (அதஸம்ஸ்காரஸம்பந்நா) என்கிறபடியே வார்த்தைசொன்னானிறே. [போதிரைத்துமதுநுகரும்போழில்] - பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபாநம்பண்ணும்போழிலென்னுதல்; போதிலே - காலத்திலேயென்னுதல். உங்களுக்கு மீட்சியிலே யாகவும்வேண்டா: ததிமுகாதிகள் காப்பாருமில்லை; முன்பு மதுபாநம்பண்ணுகிறவர்களோடே மதுபாநம்பண்ணவமையும். [மாதரைத் தம்மார்பகத்தேவைத்தார்க்கு] - நீங்கள் சொல்லுமத்தனையேவேண்டுவது. உங்கள்வார்த்தைகேட்டிருக்கவும், கேட்டுக்கோண்டாடுகைக்கும் புருஷகாரமுண்டேன்கை. [என்வாய்மாற்றம் இத்யாதி] - என்பாசுரமான உசிதவாக்யத்தைச் சொல்லப்பார்த்திகோளாகில், என்னுடைய அழகியவளையும் கலையும் சிதிலமானபடியைச் சோல்லுங்கோள்! செப்புதிகோளாகில், அதுதானே எனக்குச்சுடர்வளையும் கலையுமென்னுதல். அறிவிக்குமதே குறை, அவர்வரவு தப்பாது. (௩)

---

ளைய வாயிலேயுடைய வண்டினங்காள்" என்று விசேஷிக்கைக்கு பாவம் - அவன் அநாதரிக்கிலும் இத்யாதி. இப்படி பேச்சிலினிமையாலே பொருந்திற்றுண்டோ வென்ன-பெருமாளும் இத்யாதி. "[illegible]" இதி கிஷ்கிந்தாகாண்டே (5-18). "[illegible]" இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே (17-48). கிஷ்கிந்தாகாண்டத்திலே இருவர் இருதலையும் பொருந்தச் சொன்ன ச்லோகம்-"[illegible]" என்கிற (உ-கூஉ) ச்லோகமாகவுமாம், யுத்தகாண்டத்தில் "[illegible]" இத்யாதி ச்லோகத்தையெடுத்தது, வ்யக்தமாயிருக்கையாலே. வார்த்தைசொன்னானிறே திருவடியென்றபடி. போது-பூவும்,காலமும். காலத்திலே அலருகிறகாலத்திலே. இத்தால் பாவம்-உங்களுக்குஇத்யாதி. முன்புமதுபாநம்பண்ணுமவர்கள்-நித்யஸூரிகள். "மாதரை" இத்யாதிக்கு பாவம்-நீங்கள் இத்யாதி. வாய்மாற்றம்-பாசுரம். "தூதுரைத்தல் செப்புதிரேல் - சுடர்வளையும் கலையும் - செப்புமின்கள்" என்பது முதலின யோஜனை; "செப்புதிரேல்- அதுவே யெனக்குச் சுடர்வளையும் கலையும்"என்றுஇரண்டாம் யோஜனை. முதல் யோஜனையில், "செப்புமின்கள்" என்று - அநுஷங்கம்; இரண்டாம் யோஜனையில் "அதுவே" என்றுஅத்யாஹாரம். செப்புகை சுடர்வளையும் கலையுமாமோவென்ன - அறிவிக்குமதே இத்யாதி. 'தூமொழிவாய்' என்றுதொடங்கி, 'மார்பகத்தேவைத்தார்க்கு - என் வாய்மாற்றமான தூதுரைத்தல்செப்புமின்கள்; தூதுரைத்தல் செப்புதிரேல் சுடர்வளையும் கலையும்போனபடியை - செப்புமின்கள்' என்றந்வயமாதல்; தூதுரைத்தல் செப்புதிரேல் அதுதானே எனக்குச் சுடர்வளையும் கலையுமென்னுதல். (௩)

## ஏழாம் பாட்டு.

சுடர்வளையுங்கலையுங்கொண்டு அருவினையேன்தோள்துறந்த
படர்புகழான் திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண்
சுடர்பவளவாயனைக்கண்டு ஒருநாள்ஓர்தூய்மாற்றம்
படர்பொழில்வாய்க்குருகினங்காள்!எனக்கொன்றுபணியீரே.

ஆ.—(சுடர்வளையும்) - 'படர்பொழில்வாய்க் குருகினங்காள்! உன்னழகாலே யவளை வசீகரித்து அவளோடேகலந்து பின்னை யவளைத்துறந்ததுவே புகழாகக் கொண்டிருக்கிற இருப்பு உனக்குப்போருமோ? என்று சொல்லீகோள்' என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், பின்னையும் சிலகுருகினங்களைக் குறித்து 'சிலரோடு கலந்து அவர்களைத்துறந்து அதுவேபுகழாக இருக்குமிருப்புப் போருமோ?' என்று எம்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்யுங்கோள் என்கிறாள்.

[சுடர்வளையும் கலையுமென்று தொடங்கி] - என்னுடைய வளையையும் கலையையும் அபஹரித்து தான்இகழ்கைக்கீடான பாபத்தைப்பண்ணின என்னை விஶ்லேஷித்து அதுவே பெரும்புகழாக வுடையனுய்க்கொண்டு திருமூழிக்களத்திலே நிரந்தரவாஸம் பண்ணுநிற்பதுஞ்செய்து, என்னோட்டை விஶ்லேஷத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையும் திருப்பவளத்தையும் உடையவனுயிருக்கிறவனைக் கண்டு. [ஒருநாள் என்று மேலுக்கு]-பெருத்திருந்துள்ள பொழிலிலேயிருக்கிற குருகினங்காள் எனக்காக ஒருநாள் ஒருவார்த்தை அவனுக்குப் பணிக்கவேணும்.

ப.—அநந்தரம், அத்யுஜ்ஜ்வலமான அவயவஶோபையை யுடையவரைக் கண்டு எனக்குஒருவார்த்தை சொல்லுங்கோளென்று, சிலகுருகுகளை யபேக்ஷிக்கிறாள்.

படர் - பரந்த, பொழில்வாய் - பொழிலிடத்தேவர்த்திக்கிற, குருகினங்காள் -! சுடர் - ஒளியையுடைத்தான, வளையும் - வளையையும், கலையும் - கலையையும், கொண்டு - கைக்கொண்டு, அருவினையேன் - கடக்கவரியபாபத்தையுடையேனான என்னுடைய, தோள் துறந்த - தோளிலே யதிவ்யாமுக்தனுய்ச்சேர்ந்தவன் அத்தை யநாதரித்து, (அதுதானே), படர் - லோகவ்யாப்தமான, புகழான் - புகழாகவிருக்குமவனுய்,திருமூழிக்களத்துஉறையும்-(†அத்யாஸக்தியாலேஆர்த்தியைபதிஶயிப்பிக்கும்படி) திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுமவனுய், பங்கயக்கண் - (கலந்தபோதோடு பிரிந்தபோதோடு வாசியற செவ்வியழியாதபடி) பங்கயம்போன்ற திருக்கண்களையும், சுடர் - ஒளியையுடைய, பவளம்-பவளம்போன்ற, வாயனை - திருவதரத்தையுமுடையவனை, கண்டு-, எனக்கு - (ஆர்த்தி வடிவிலேதோன்றும்படியான) எனக்காக, ஒருநாள்- (நித்யாக்நிஹோத்ரம்போலே பலநாள் வேண்டாதபடி)ஒருநாள், ஓர்-(ஆர்த்தரக்ஷணர்த்தமாகையாலே) அத்விதீயமாய், தூய்மாற்றம் - தெளிவாலே ஶ்லாக்யமானவார்த்தையை, ஒன்று - (பரப்பற) ஒன்றுயிருக்கும்படி, பணியீரே - பணிக்கவேணும்; பணியுங்கோளென்று கௌரவ்யதைதோன்றச் சொல்லுகிறாள்.

இ.—ஏழாம்பாட்டில், சிலகுருகினங்களைக்குறித்து, 'சிலரோடே கலந்து அவர்களைத்துறந்து அதுவேபுகழாக இருக்கை போருமோ? என்று அவர்க்கு அறிவியுங்கோள்' என்கிறாள்.

---

† அத்யாஸக்தி - நெருங்கிவசிக்கை.

[சுடர்வளையும் இத்யாதி] - இத்தலையில் தனக்கு ப்ரயோஜநமான அம்சத்தைக்கொண்டு என்னைப் பொகட்டுப்போனான். [அருவினையேன்] - ஆச்ரயித்துப் பொகட்டுப்போக அவனையிழந்து உங்கள்காலிலே விழும்படியான பாபத்தைப்பண்ணினேன். [தோள்துறந்த] - கலந்தபோது தன்வ்யாமோஹமெல்லாங் கொண்டு தோளுக்குஅவ்வருகு போகமாட்டானாயிருந்தபடி. [படர்புகழான்] - "தன்னையல்லதறியாதாரைப் பொகடவல்லவன்" என்று அதுவேபுகழாகப் புகழ்வித்துக் கொண்டிருக்கிறவன். [திருமூழிக்களத்துறையும்] - ஊரொன்றாக ஆயிருக்கவொண்ணாதபடி திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவனை. [பங்கயக்கண்சுடர் பவளவாயனை] - பொகட்டுப்போனாலும் விடவொண்ணாதபடியான அவயவசோபையை யுடையவனை; என்னோட்டை விச்லேஷத்தாலே புதுக்கணித்த அவயவசோபையை உடையவனை என்றுமாம். [கண்டு] - அந்நோக்கையும் முறுவலையும் காண்கையாலே உங்களுக்கு என்னிற்காட்டில் பேறு முற்பட்டிருக்கிறதிறே; அவ்வடிவழகைக்காட்டி உங்களையும் போனகார்யத்தையும் விஸ்மரிப்பிக்கவல்லன். [ஒருநாள்] - ஒருநாளை அமையும்; பிற்றைநாள் சொல்லவேண்டுவதில்லை. [ஓர்தூய்மாற்றம்] - அநந்யபரமான நல்வார்த்தை. முடிகிறாள் ஓர்அபலை உஜ்ஜீவிக்கச்சொல்லுகிற வார்த்தையிறே. [படர்பொழில்வாய்க் குருகினங்காள்] - பரந்தபொழிலிடத்திலே வர்த்திக்கிற குருகினங்காள்! நான் உபவாஸக்ருசையாயிருக்க, நீங்கள் ஜீவித்துக் களித்திருக்கப்போருமோ? நான் முடிந்தால் உங்களுக்கு இச்சோலைப்பரப்பெல்லாம் நோக்குவாருண்டோ? [எனக்கு] - என்னுடையிருக்கிறபடி கண்டிகோளிறே. [ஒன்றுபணியீரே] - எனக்கு உஜ்ஜீவநமாயிருப்பதொரு வார்த்தை சொல்லுங்கோள், இரண்டாம் வார்த்தைவேண்டா. [பணியீரே] - தான் ஜநககுலத்திலே பிறக்கவுமாய்; எதிர்த்தலை திர்யக்குக்களாகவுமாம்; ஐச்வர்யவிஷயத்தில் உபகாரகரைச் சொல்லக்கடவது இங்ஙனேயிறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. சிலகுருகினங்களைக்குறித்து, "சிலரோடே கலந்து அவர்களைத் துறந்து அதுவே புகழாக இருக்கைபோருமோ என்று அவர்க்கறிவியுங்கோள்" என்கிறாள்.

[சுடர்வளையுங்கலையுமித்யாதி] - இத்தலையில் தனக்கு ப்ரயோஜநமான அம்சத்தைக்கொண்டு என்னைப்போகட்டுப்போனான்; தனக்கு பாதகமானவற்றைக்கொண்டு அல்லாதவற்றைப் போகட்டுப்போனான்; கைகடங்கினத்தையுங்கொண்டு மடிச்சரக்கையுங் கொண்டுபோனான். [அருவினையேன்] - ஆதரித்துவந்து கலந்தவன் போகட்டுப்போம்படியான பாபத்தைப்பண்ணினேன். [தோள்துறந்த] - அந்த வ்யாமோஹமெல்லாங் கொண்டு தோளுக்கவ்வருகு போகமாட்டிற்றிலன்போலேகாணும் அவன்தான். [படர்புகழான்] - "தன்னாலல்லது செல்லாதாரை இங்ஙன் விடவல்லாரில்லை" என்று இதுவே

ஏழாம்பாட்டு.—சுடர் இத்யாதி. "குருகினங்காள் - அருவினையேன் தோள் துறந்த படர்புகழான் - எனக்கொன்று பணியீர்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலகுருகினங்களை இத்யாதி.

"தோள்துறந்த" என்றுமளவுக்கும் பாவம் - இத்தலையில் இத்யாதி. விவரணம் - தனக்கு இத்யாதி. "சங்குஞ்சரிந்தன" இத்யாதிப்படியே எல்லாம் சிதிலமாயிருக்க, விசேஷிக்கிறதென்னென்ன - கைக்கு இத்யாதி. ப்ரதாநத்தைச் சொல்லிற்றென்றபடி. சாடுக்கு-கைக்கடங்கினது - வளை; மடிச்சரக்கு - புடவை. "தோள்" என்று ஏகவசநத்தைச் சொன்னதுக்கு பாவம் - அந்த வ்யாமோஹம் இத்யாதி. இவனுக்குப் புகழேதென்ன - தன்னாலல்லது இத்யாதி.

புகழாகக் கொடியும் காளமுமெடுத்துப் புகழ்வித்துக் கொண்டிருக்கிறுனுய்த்து. [திருமூழி களத்துறையும்] - தூரஸ்யனென்றுஆறியிருக்கவொண்ணுதபடி திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனை. [பங்கயக்கண்சுடர் பவளவாயனை] - போகட்டுப்போனு னென்று போகட்டிருக்கவொண்ணுத அவயவஸோபையையுடையவனை; என்னை இப் பாடுபடுத்துகையாலே புதுக்கணித்த அவயவஸோபையை யுடையவனை யென்றுமாம். [கண்டு] - அந்நோக்கையும் முறுவலையும் காண்கையாலே, உங்களுக்குஎன்னிற்காட்டில் பேறு முற்பட்டிறேயிருக்கிறது. [ஒருநாள்] - ஒருநாளேயமையும், பிற்றைநாள் சொல்ல வேண்டுவதில்லை. இரண்டாநாள் சொல்லுமது பழியென்றிருக்குமவளிறே. [ஓர்தூய் மாற்றம்] - அத்விதீயமான நல்லவார்த்தை. முடிகிறுளோரவலை யுஜ்ஜீவிக்கச் சொல்லு கிற வார்த்தையிறே. [படர்பொழில்வாய்க் குருகினங்காள்] - பரந்தபொழிலிடத்தே வர்த் திக்கிற குருகினங்காள்!நான் உபவாஸ க்ருமையாயிருக்க,நீங்கள் ஜீவித்துக்களித்திருக்கை போருமோ? நான் முடிந்தால் உங்களுக்கு இந்தச்சோலைப்பரப்பெல்லாம்நோக்கித் தருவார் ஆர்?[எனக்கு]-என்வடிவிருக்கிறபடி கண்டிகோளிறே. [ஒன்றுபணியீரே] - இரண்டாம் வார்த்தை சொல்லவேண்டா. [பணியீரே] - தான் ஜநககுலத்திலேபிறக்கவுமாம், எதிர்த் தலை திர்யக்குகளாகவுமாம்,ஹமவத்விஷயத்தில் வடகரைச் சொல்லும்படியிறே யிது.(எ)

## எட்டாம் பாட்டு.

எனக்கொன்றுபணியீர்கள் இரும்பொழில்வாய்இரைதேர்ந்து
மனக்கின்பப்படமேவும்வண்டினங்காள் தும்பிகாள்
கனக்கொள்திண்மதிள் புடைசூழ் திருமூழிக்களத்துறையும்
புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே.

ஆ.—(எனக்கொன்று.)- 'வண்டினங்காள்!தும்பிகாள், உன்னழகைக்காணப் பெறுதே யவளிழந்துபோமித்தனையோ? என்று சொல்லிகோள்' என்கிறுள்.

ஒ.—எட்டாம்பாட்டில், சில வண்டுகளையும் தும்பிகளையுங்குறித்து அங் குத்தை யழகுக்கு என்புகுருகிறதோ?'' என்று ஐயப்படவேண்டாதபடி ஸுரக்ஷிதமா யிருப்பதொரு தேஶத்திலே எழுந்தருளியிருந்தான். இனி நம்முடைய ஆர்த்தி தீர்க்கு மத்தனையே அபேக்ஷிதம்.ஆனபின்பு,என்னுடைய ஆர்த்தியை அறிவியுங்கோளென்கிறுள்.

---

ஆனல், விட்டிருக்கவொண்ணுதோவென்ன - தூரஸ்யன் இத்யாதி. இப்போது அவயவங்களை வர்ணித்ததுக்கு ஸாவத்வயம் - போகட்டுப்போனுன் இத்யாதிவாக்யத்வயம். முந்தினது - ஸ்வாபா விகமான அழகைப்பற்ற; இரண்டாவது - வெறுப்பிலே. ''கண்டு'' என்றதுக்கு ஸாவம் - அந் நோக்கையும் இத்யாதி. வேண்டாமைக்குஅடியேதென்ன - இரண்டாநாள் இத்யாதி. இவ்விடத் திலே, ஸக்ருத்க்ருதஸ் ஶாஸ்த்ரார்த்த: என்றது விவக்ஷிதம். மேலே ''எனக்கொன்று'' என்றிருக் கையாலே, ''ஓர்'' என்றதுக்கு அத்விதீயமான என்கிறுர். வார்த்தைக்குஅத்விதீயத்வமேதென்ன - முடிகிறுள் இத்யாதி என்னுதல்; தூய்மைக்கு ஸாவமாதல். ''பொழில்வாய்'' என்றதுக்கு ஸாவம் - நான்உபவாஸ இத்யாதி. ''படர்'' என்று விசேஷித்ததுக்கு ஸாவமாதல், ஸாவாந்தர மாதல் - நான்முடிந்தால் இத்யாதி. ''எனக்கு'' என்றதுக்கு ஸாவம் - என்வடிவு இத்யாதி. ''ஒன்று'' என்றதுக்கு ஸாவம் - இரண்டாம் இத்யாதி. சொல்லீரென்னுதே, ''பணியீர்'' என்ற துக்கு ஸாவம் - தான் இத்யாதி. 'படர்பொழில்வாய்க் குருகினங்காள் - சுடர்வளையும்' என்று தொடங்கி, 'ஓர்தூய்மாற்றம் - எனக்கொன்று பணியீர்' இத்யந்வய:. (எ)

[இரும்பொழிலென்று தொடங்கி] - பெரியபொழிலிலே இரைதேடி மனஸ்ஸிலே இனிமை பிறக்கும்படி ஸம்ச்லேஷிக்கிற வண்டினங்காள்! தும்பிகாள்! [கனங்கொள் திண்மதிளென்று மேலுக்கு] - கனத்தை யுடைத்தாய்த் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே வர்த்திப்பதுஞ்செய்து தன்னிலத்திலே நின்ற காயாம்பூப்போலேயிருக்கிற திருமேனியையும் ஸௌரப்யமான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையும் உடையவனுக்கு.

ப.—அநந்தரம், வடிவழகையும் ஒப்பனையையும் உடையராயிருக்கிறவர்க்கு எனக்கொருவார்த்தை சொல்லவேணுமென்று, சிலவண்டுகளையும் தும்பிகளையும் பார்த்துச்சொல்லுகிறாள்.

இரு - பெரிய, பொழில்வாய் - பொழிலிடத்தே, இரைதேர்ந்து - போக்யமான மதுவைத் தேடாநின்றுகொண்டு, மனக்கு - மனஸ்ஸுக்கு, இன்பம்பட - இனிமையுண்டாம்படி, மேவும் - ஸம்ச்லேஷித்து வர்த்திக்கிற, வண்டினங்காள் தும்பிகாள் - ! கனம்கொள் - கனத்தையுடைத்தாய், திண் - சிக்கென, மதிள் - மதிளாலே, புடை - சுற்றும், சூழ் - சூழப்பட்ட, திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுமவராய், புனம்கொள் - தன்னிலத்தில் நிலையுடைத்தான, காயா மேனி - காயாம்பூவின் நிறத்தையுடையராய், பூந்தழாய்முடியார்க்கு - ஸௌரப்யமான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவர்க்கு, எனக்கு - எனக்காக, ஒன்று - ஒருவார்த்தை, பணியீர் - சொல்லவேணும்.

ஈ.—எட்டாம்பாட்டில், சிலவண்டுகளையும் தும்பிகளையும் குறித்து 'அங்குத்தைக்கு பயப்படவேண்டாதபடி ஸாரக்ஷிதமான தேசத்திலேயிருக்கப் பெற்றோம் இனி என்னார்த்தியை அறிவியுங்கோள்' என்கிறாள்.

[எனக்கொன்று பணியீர்கள்] - நீங்கள் ஒருவார்த்தை சொல்லாவிடில் முடியுமளவாயன்றோ என்தசையிருக்கிறது. [இரும்பொழில் வாயிரைதேர்ந்து] - பரப்பான சோலை எங்குப்புக்கு இரைதேடி. [மனக்கின்பம்படமேவும்] - மனஸ்ஸிலே இனிமை பிறக்கும்படியன்றோ நீங்கள் கலக்கிறபடி, பிரிவால்வந்த க்லேசமேயிறே எனக்கு ஸஹித்தது. [கனங்கொள் இத்யாதி] - கனத்துத் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு. அத்தலையில் அழகை அநுஸந்தித்தால் ரக்ஷைதேட்டமாயிறேயிருப்பது. [புனங்கொள் இத்யாதி] - தன்னிலத்திலேநிற்கும் காயாவின் நிறம்போலேயாய்த்து நிறமிருப்பது; அவ்வடிவழகுக்கு மேலே யொப்பனையழகை உடையவர்க்கு, ஸௌரப்யமான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவர்க்கு, அவ்வடிவையும் ஒப்பனையையும் அநுபவித்துப் பிரிந்த எனக்கு ஒன்று பணியீர்கள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. சிலவண்டுகளையும் தும்பிகளையும் குறித்து, 'அங்குத்தைக்கு பயப்படவேண்டாதபடி ஸாரக்ஷிதமான தேசத்திலேயிருக்கப்பெற்றோம்: இனி என்னார்த்தியை யறிவியுங்கோள்' என்கிறாள்.

---

எட்டாம் பாட்டு.—எனக்கு இத்யாதி. "வண்டினங்காள் தும்பிகாள், கனங்கொள் திண் மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும் - எனக்கொன்று பணியீர்கள்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலவண்டுகளையும் இத்யாதி.

[எனக்கொன்றுபணியீர்கள்] - நீங்கள் ஒருவார்த்தை சொல்லாவிடில் முடியும் உமையாயன்றோ என்சைமையிருக்கிறது. [இரும்பொழில்வாயிரைதேர்ந்து] - பரந்தசோலை யிடமெங்கும்புக்கு இரைதேடி. [மனக்கின்பம்படமேவும்] - மநஸ்ஸிலே இனிமை பிறக்கும்படி யன்றோ நீங்கள் கலக்கிறபடி. விரஹத்தால் வரும் க்லேசம் ஹலியாதபடியாகக் கலவாநின்றதாய்த்து - பிரிவிலும் வற்றாத ஆநந்தமுண்டாம்படி கலவாநின்றதாய்த்து - [கனக்கொளித்யாதி] - கனத்துத் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு. அத்தலையில் ஸௌசீல்யத்தை யநுஸந்தித்தால், ரக்ஷை தேட்டமாயிறே யிருப்பது. அவனோடே கிட்டிக் கலக்கப் பெறுமையாலே வருவதும் ஓராற்றாமையுண்டு; அவனுக்கு எங்கே என்னதீங்கு வருகிறதென்றும் ஓராற்றாமையுண்டு; அதிலேயொன்று தீரப்பெற்றது முந்தறமுன்னம். [புனக்கொள் காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே] - தன்னிலத்திற் காயாவின் நிறம்போலேயாய்த்து நிறமிருப்பது. அவ்வடிவழகுக்குமேலே ஒப்பனையழகையுமுடையவர்க்கு. வடிவழகுஅது, ஒப்பனையழகுஅது. அவ்வடிவழகையும் ஒப்பனையழகையும் அநுபவித்துப்பிரிந்தவெனக்கு ஒருவார்த்தை சொல்லுங்கோள். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

பூந்துழாய்முடியார்க்குப்பொன்னாழிக்கையாருக்கு
ஏந்துநீளிளங்குருகே! திருமூழிக்களத்தாருக்கு
ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே.

ஆ.—(பூந்துழாய்.) - ஏந்துநீளிளங்குருகே! ஏந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண் நீர்ததும்பத் தாம் தம்மைக்கொண்டகலுகை தம்முடைய க்ருபைக்குப் போராதென்று சொல்லிகோளென்கிறாள்.

ஒ —ஒன்பதாம்பாட்டில், நினைத்தது செய்துமுடிக்க வல்லதொரு குருகைக் குறித்து நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மைவைத்துப் போகவேண்டாவோ என்று விண்ணப்பஞ்செய்! என்கிறாள்.

---

தும்பி - வண்டுகளிலவாந்தரபேதம். "எனக்கு" என்றதுக்கு பாவம் - நீங்கள் இத்யாதி. "இன்பம்படமேவும்" என்றதே, "மனக்கின்பம்பட" என்றதுக்கு பாவம் - விரஹத்தால் இத்யாதி. விவரணமாதல், வர்த்தமாநார்த்தமாதல் - பிரிவிலும் இத்யாதி. (பிரிந்து - அநுபவிக்கிற.) "கனக்கொள்திண்மதிள்" என்று ரக்ஷையைச் சொல்லுவானென்னென்ன - அத்தலையில் இத்யாதி. ஸௌந்தர்யத்தையென்றது - "புனக்கொள்காயாமேனி" என்றத்தைப்பற்ற .இத்தால் பாவம் - அவனோடே இத்யாதி. தீரப்பெற்றது என்றது - "கனக்கொள்திண்மதிள்புடைசூழ்" என்கையாலே. "புனக்கொள்காயா" என்றதுக்கர்த்தம் தன்னிலத்தில் இத்யாதி. "பூந்துழாய் முடியார்க்கு" என்றதுக்கர்த்தம் - அவ்வடிவழகுக்கு இத்யாதி. இரண்டையுஞ் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - அவ்வடிவழகை இத்யாதி. எனக்கொன்று பணியீர் - எனக்காக ஒருவார்த்தை சொல்லுங்கோள். 'இரும்பொழில்வாய்' என்று தொடங்கி, 'முடியார்க்கு - எனக்கொன்று பணியீர்கள்' இத்யந்வயம். (அ)

---

† குண்டலிதம் அநந்விதம்.

[ஏந்துநீரென்று தொடங்கி] - தரையிலே நடக்குமாபோலே நீரிலே நடக்க வல்ல இளங்குருகே! [ஏந்துபூண் முலை பயந்தென்று தொடங்கி] - தரிக்கப்பட்டிருந்துள்ள ஆபரணங்களையுடைய முலை விவர்ணமாய், இணைமலர்போலேயிருக்கிற கண் நீர் மல்கும்படி நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மைக்கொண்டு போகை, தம்முடைய க்ருபைக்குப் போராதென்று, ப்ரணயகலஹத்தைவிட்டுத் தன்னுடைய ஆர்த்தியாலே சொல்லுகிறாள்.

ப.—அநந்தரம், அஸாதாரண சேஷித்வசிஹ்நத்தையுடையரானவர்க்கு, தம்மைக்கொண்டு தாம்போதல் தகுதியல்லவென்று சொல்லவேணுமென்று, ஒருகுருகைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

ஏந்து நீர் - நீருக்குஅஞ்சவேண்டாதபடி அதுதானே தரிக்கும்படியாய், இள - (கமநஸாமர்த்யத்துக்குஉறுப்பான)இளமையையுடைய, குருகே-! பூந்துழாய் முடியார்க்கு- (ஸர்வசேஷித்வ ஸூசகமாம்படி) ஔஜ்ஜ்வல்யமான திருத்துழாயை முடியிலேயுடையராய், பொன் - ஸ்ப்ருஹணீயமான, ஆழி - திருவாழியை, கையார்க்கு - கையிலேயுடையராய், திருமூழிக்களத்தார்க்கு - திருமூழிக்களத்திலே ஆஸந்நமாக நிற்கிறவர்க்கு, பூண் - ஆபரணத்தை, ஏந்து - ஏந்தின, முலை - முலையானது, பயந்து - பயப்பையுடைத்தாய், என் இணை மலர்கண் - இணைமலர்போலே (தன்னைக்கண்டபோதே விகஸிதமாம்படியான) என்கண்கள், நீர் ததும்ப - (விரஹத்தாலே) போகாம்ப்ரு நிரம்பும்படியாக, தாம் - (சேஷத்வத்தையும் போக்யத்வத்தையும் சீலத்தையுமுடைய) தாம், தம்மைக்கொண்டு- தம்மையறிந்துவைத்துக்கொண்டு, அகல்தல் - அகலப்போகை, தகவுஅன்றுஎன்று-(தம்முடைய)தயைக்குப்போராதென்று, உரையீரே-சொல்லீரென்று உபசரித்துச் சொல்லுகிறாள்.

ஈ.—ஒன்பதாம்பாட்டில், ஒருகுருகைக்குறித்து'நிரதிசயபோக்யரானதாம் போம்போது தம்மைவைத்துப் போகவேண்டாவோ? என்று விண்ணப்பஞ்செய்யுங்கோள்' என்கிறாள்.

[பூந்துழாய் முடியார்க்கு] - திருமுடிக்குஒப்பனையான வளையமிருக்கிறபடி. [பொன்னாழிக்கையார்க்கு]- திருமுடிக்குவளையம்போலேயாய்த்துத் திருக்கைக்குத் திருவாழி. [ஏந்து நீரிளங்குருகே] - தரையிலே நடப்பாரைப்போலே நீரிலே நடக்கவல்ல இளங்குருகே! உன்ஸமநஸாமர்த்யத்தாலுண்டான பலம் நான் பெறவேண்டாவோ? நடுவே நீர் இடைச்சுவாறாலும் தேங்கவேண்டாவிறே உனக்கு. [திருமூழிக்களத்தார்க்கு]-வளையம்போலேயும் ஆபரணம்போலேயும், அவ்வூரில்நிலையும் அழகுக்குஉடலென்றிருக்கிறாள். அவை விக்ரஹத்துக்குஆபரணமானாற்போலே நிலம் ஸ்வரூபத்துக்கு ஆபரணமிறே. அழகும் குணமும் ஒருதலைத்த விஷயமிறே. [ஏந்து பூண்முலை பயந்து] - ஆபரணங்களை தரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தை பரித்து. ஆபரணங்கள் ஸம்ஶ்லேஷார்ஹமாகக் கழற்றுமவை; இது ஸம்ஶ்லேஷத்தாலல்லது கழலாதிறே. வ்யதிரேகத்தில் இப்படியிராதபோது பும்ஸ்த்வவ்யாவ்ருத்தி கிடையாதிறே; ஆசையும் ஸ்த்ரீத்வமுமிறே இதுக்கடி. ஆபரணம் அழகுக்கு நிறங்கொடுக்குமாபோலேயிறே, ஸ்த்ரீத்வத்துக்கும் ஆசைக்கும் வைவர்ண்யம். [என்னிணை மலர்க்கண்] - இணைமலர் போலேயிருக்கிற என்கண். தம் அழகையே இலக்காக உடைத்தான கண். அவன்சொல்லும்படி அறிந்திருக்கையாலே சொல்லுகிறாளித்தனைபோக்கி, அல்லாதபோது தன்

கண்ணிலழகைத் தான் சொல்லுகிறு ளல்லளிறே. [நீர்ததும்ப] - ஆநந்தாஸ்ருவுக்கு இட்டுப்பிறந்த கண் ஸோகாஸ்ருவுக் கிலக்காம்படி. [தாம்] - கீழ்ச்சொன்ன அழகை யும் ஸீலத்தையும் உடைய தாம். [தம்மைக்கொண்டகல்தல்]-தமக்கு அகல வேண்டினுல், "இவ்வடிவைப்பிரிந்தார் பிழைபார்" என்று தம்மைவைத்தன்றோ போவது; தம்மைக் கண்ணுடிப்புறத்திலே கண்டறிவரே. தம்மைப்பிரிந்த ஊமைக்கு உதவுகைக்கன்றோ தம்மைக்கண்டது. "ஊகாவேஷூாகாவஷோ நெஹைவஸ்ராஹிரஹவ". [தகவன் றென் றுரையீரே] - மென்மையும் ப்ரணயித்வமும் போறுலும் ஊயை குடிபோகவேணுமோ? நிர்ஊயர் செய்யுமத்தைச் செய்தாரென்று சொல்லுங்கோள்! ஸ்த்ரீவதமென்றால் அஞ்சா தார் செய்யுமத்தைச் செய்தாரென்று சொல்லுங்கோள்! என்கிறாள்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஒருகுருகைக்குறித்து, "நிரதிஶயபோக்யரான தாம் போம்போது தம்மைக்கோண்டுபோகை தம்முடைய தகவுக்குப் போருமோவென்று விண்ணப்பஞ்செய்" என்கிறாள்.

[பூந்துழாய்முடியார்க்கு] - திருமுடிக்கு ஒப்பனையானவளையமிருக்கிறபடி. [பொன்னாழிக்கையார்க்கு] - திருக்கைக்கு வளையமிருக்கிறபடி. [ஏந்துநீரிளங்குருகே] - மிக்கபுனலிலே, தறையிலே நடப்பாரைப்போலே நடக்கவல்ல இளங்குருகே! உன் மமநஸாமர்த்யத்தாலுண்டானபலம் நான் பெறவிறே புகுகிறது. நடுவே நீர்இடைச்சுவ ராலும் தேங்கவேண்டாவிறே உனக்கு. [திருமூழிக்களத்தார்க்கு] - வளையம்போலேயும் ஆபரணம்போலேயும் அவ்வூரில்நிலையும் அழகுக்கு உடலாயிருக்கிறபடி. அவை விக்ர ஹத்துக்கு ஆபரணமானுற்போலே, ஸீலம் ஸ்வரூபத்துக்குஆபரணமிறே. அழகும் குணங் களும் ஒருதலைத்தவிஷயமிறே. [ஏந்துபூண்முலைபயந்து] - ஆபரணங்களை யரிக்கக்கடவ முலை வைவர்ண்யத்தையரித்து. ஆபரணங்கள் ஸம்ஶ்லேஷார்த்தமாகக் கழற்றுமவை; இது ஸம்ஶ்லேஷத்தாலல்லது கழலாதிறே. வ்யதிரேகத்தில் இப்படியிருக்கையிறேஸ்த்ரீத்வ மாவது; இங்ஙனிராதவன்று பும்ஸ்த்வாத் வ்யாவ்ருத்தி கூடாதிறே. [என்னிணைமலர்க் கண் நீர்ததும்ப] - இணைமலர்போலேயிருக்கிற என்கண். தம்மழகையே இலக்காக வுடையகண், சோகாஶ்ருவுக்குஇலக்காம்படி. அவன் சொல்லும்படியறிந்திருக்கையாலே

---

ஒன்பதாம்பாட்டு.—பூந்துழாய் இத்யாதி. "குருகே-தாந்தம்மைக்கொண்டகல்தல் தகவன் றென்றுரையீர்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஒருகுருகை இத்யாதி.

ஏந்துதல் - உலாவுதலாய், மிகுதியைச் சொல்லுகிறது. "நடக்கவல்ல" என்றத்தால் பலிதம் - உன்மமந இத்யாதி. விவரணம்-நடுவே இத்யாதி. தேங்கவேண்டா - தடுமாறவேண்டா. "பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையார்க்கு - திருமூழிக்களத்தார்க்கு" என்றபதச்சேர்த் திக்கு பாவம் - வளையம்போலே இத்யாதி. அப்படி யழகுக்குஉடலாமோவென்ன - அவை இத் யாதி. பலிதம் - அழகும் இத்யாதி. "பூண் - ஏந்து - முலைபயந்து" என்றந்வயிப்பது. ஆபரணங் களை யரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தை யரித்து என்றர்த்தமருளிச்செய்கிறார் ஆபரணங்களை இத்யாதி. "ஏந்தபூணும்படி முலைபயந்து" என்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, பயப்பு ஆபரணமாமோ வென்ன - ஆபரணங்கள் இத்யாதி. இது ஶ்லாக்யமான ஆபரணமென்றபடி. பிரிவில் விவர்ணை யாகவேணுமோவென்ன - வ்யதிரேகத்தில் இத்யாதி. இப்படி ஸ்த்ரீத்வத்துக்கு வைவர்ண்யம் ஆப ரணமென்று கொள்ளாதபோது அநிஷ்ட ப்ரஸஞ்சநம் பண்ணுகிறார் - இங்ஙனிராத இத்யாதி. "இணைமலர்க்கண்" என்று விசேஷித்ததுக்கு பாவம்-தம்மழகையே இத்யாதி. "என்னிணைமலர்க் கண்" என்று ஆத்மஶ்லாகைபண்ணலாமோவென்ன - அவன் சொல்லும்படி இத்யாதி. "தம்மழ கையே யிலக்காகவுடைய கண்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு,

பது. "தனக்கேயாக எனைக்கொள்ளவேணும்" என்றிறே இத்தலையிருப்பது [தகவன்றேன் றுரையீரே] - ப்ரணயித்வமும் மேன்மையுமெல்லாங் கிடக்கச்செய்தே, இது நிர்த்தயர் செய்யும்செயலென்று சொல்லுங்கோள். ஸ்த்ரீவதத்துக்கு அஞ்சாதார் செய்யுமவற்றைச் செய்தீரேன்று சொல்லுங்கோள். (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

தகவன்றேன்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து
மிகவின்பம்பட மேவும் மென்னடையவன்னங்காள்!
மிகமேனிமெலிவெய்திமேகலையுமீடழிந்துஎன்
அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே.

ஆ.—(தகவன்றென்று.) - மென்னடைய அன்னங்காள்! தாந் தம்மைக் கொண்டகல்தல் தகவன்றென்று நீங்கள் சொல்லவேணும்; சொல்லுமிடத்தில், என்னுடைய மேனியும் மிக மெலிவெய்தி மேகலையும் ஈடழிந்து என்னாத்மாவும் முடிவதற்கு முன்னே சென்று சொல்லவேணும் என்கிறாள்.

ஒ.—பத்தாம்பாட்டில், சில அன்னங்களைக்குறித்து, எம்பெருமானுக்கு என்தசையை நான் முடிவதுக்குமுன்பே அறிவியுங்கோளென்கிறாள்.

[தடம்புனலென்று தொடங்கி]—பெரிய நீர்வெள்ளங்களிலே இரையைத்தேடி மிகவும் இனிமைபிறக்கும்படி ஸம்ஶ்லேஷியாநிற்பதுஞ்செய்து அத்தாலே ஸரஸமான ஸஞ்சாரத்தையுடைய அன்னங்காள்! [மிகமேனியென்று மேலுக்கு] - உடம்பு மிக மெலிந்து மேகலையும் கட்டழிந்து நான் முடிவதுக்குமுன்பே.

ப.—அநந்தரம், திருமூழிக்களத்தில் ஆஸக்தியாலே நிரவயிகதயாவான் என்னும்படி யிருக்கிறவர்க்கு, என்ஸத்தை யழிவதற்குமுன்னே "இதுதம்முடைய தயாநுரூபமல்ல" என்று சொல்லுங்கோளென்று, சில அன்னங்களைப்பார்த்துச்சொல்லுகிறாள்.

தட - பெரிய, பொழில்வாய் - பொழிலிடத்தில், இரை - இரையை, தேர்ந்து - ஸம்பாதித்து, மிக - மிகவும், இன்பம் - ஆநந்தம், பட - உண்டாம்படி, மேவும் - சேர்ந்துவர்த்திக்கிற, மென்னடைய - மெல்லிய நடையையுடைய, அன்னங்காள்! மேனி - ஶரீரம், மிக - மிகவும், மெலிவுஎய்தி - மெலிவையெய்தி, (அத்தாலே), மேகலையும் - பரிவட்டமும், ஈடழிந்து - கட்டுக்குலைந்து, (அதுக்குமேலே), என் அகமேனி - அகவாயில் ஸ்வரூபமும், ஒழியாமே - குலையாதபடி, திருமூழிக்களத்தார்க்கு - ஆஶ்ரிதர

---

இத்யாதி. இவர் அத்தலைக்கு ஶேஷமோவென்ன - தனக்கே இத்யாதி. ப்ரணயித்வமும் மேன்மையு மெல்லாங்கிடக்கச்செய்தே என்றது - ப்ரணயித்வத்துக்கும் மார்த்தவத்துக்கும் சேராதமாத்ரமேயன்றிக்கேயென்றபடி. "நிர்த்தயர்செய்யும்செயல்" என்றத்தை விவரிக்கிறார் - ஸ்த்ரீவதத்துக்கு இத்யாதி. தகவன்று - தயைக்குப்போராது. தகவு - க்ருபை. 'எந்நீரிளங் குருகே - எந்தபூண்முலை' என்றுதொடங்கி, 'அகல்தல்-பூந்துழாய் முடியார்க்கு' என்றுதொடங்கி, 'திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீரே' இத்யந்வயம். (கூ)

நுக்ரஹார்த்தமாகத் திருமூழிக்களத்திலே நிற்கிறவர்க்கு. தகவன்றென்று - இக்கலை யின் ப்ரயோஜநம் பெறுமையாலே இது உலையின் கார்யமல்லவென்று, உரையீர்கள் - சொல்லுங்கோளென்கிறாள்.

இ.—பத்தாம்பாட்டில், சில அன்னங்களைக்குறித்து நான் முடிவதற்கு முன்னே அவனுக்கு என் உலையை அறிவியுங்கோள் என்கிறாள்.

[தகவன்றென்றுரையீர்கள்] - அவனை அழிக்கையாவது கிருபையன்கை, அவனுக்கு நிரூபகம் உலையயாகையாலே அவனுடைய மர்மமறியுமவளாகையாலே அத்தலை யில்லையென்கிறாள். [தடம்புனல்வாயிரைதேர்ந்து] - மிக்க நீர்வெள்ளத்தை யுடைத் தான பொய்கைகளிலே இரைதேடி. கலவிக்கு உறுப்பான வ்யாபாரமேயாயிருக்கிறபடி. [மிகவின்பம்படமேவும்]-இனிமை கரைபுரளும்படியன்றோ நீங்கள் ஸம்ச்லேஷிக்கிறது. பிரிவுதேட்டமாம்படி உந்மஸ்தகரஸமாய்ச் செல்லுகிறபடி. விச்லேஷியாவிடில் இரண் டாச்ரயமும் அழியும்படியாய்த்து இவைபரிமாறுகிறபடி. [மென்னடைய அன்னங்காள்]- கலவியின்மிகுதி நடையிலே தொடைகொள்ளலாம்படி ஸாஸஞ்சாரம் இருக்கிறபடி. [மிகமேனிமெலிவெய்தி]-நான் இவ்விருப்பு இருக்க உங்களுடைய கலவியும் ஸாஸ ஸஞ்சார மும் ப்ரீதிஹேதுவாக ப்ராப்திபுண்டோ? உங்கள் கலவியின் மிகுதிபோபாதி போரும் என்வடிவில் மெலிவின் மிகுதியும். [மேகலையுமீடழிந்து] - பரிபட்டமும் கட்டழிந்து; மேகலை தொங்கும்போது ஆச்ரயம் வேணுமே. [என்அகமேனிபொழியாமே] - புறப்பு கழுமவை கழன்றது, அகவாயில் ஸ்வரூபம் கழலுவதற்கு முன்னே; நான் முடிவ தற்கு முன்னே என்கை. [திருமூழிக்களத்தார்க்கு]-தம்மைபொழியச்செல்லாதார் ஸத் தையை நோக்குகைக்கு எடுத்து வந்திருக்கிறவர்க்கு. [திருமூழிக்களத்தார்க்கு தகவன் றென்று உரையீரே] - பொரிபுறந்தடவி அத்தலையைப்பேணிப் போந்தது அமையும்; இனி அவர்படியைச் சொல்லிப் போருங்கோள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. சில அன்னங்களைக் குறித்து, நான் முடிவதற்கு முன்னே அவனுக்கு என்நிலையை யறிவியுங்கோளென்கிறாள்.

[தகவன்றென்றுரையீர்கள்] - அவனுடைய ஸத்தை யழிக்கைக்கு 'தக வில்லை' என்னுங்கோள். அதாவது - நிர்த்தயனென்கை. அவனுக்கு நிரூபகம் நிலை யாகையாலே, அவனுடைய மர்மம்அறியுமவளாகையாலே, அத்தை யில்லையென்கிறாள். [தடம்புனல்வாயிரைதேர்ந்து] - மிக்க நீர்வெள்ளத்தையுடைத்தான பொய்கைகளிலே யிரைதேடி. கலவிக்கு உறுப்பான வ்யாபாரமேயாயிருக்கிறபடி. [மிகவின்பம்படமேவும்]- ஸாவம் கரைபுரளும்படியன்றோ நீங்கள் ஸம்ச்லேஷிக்கிறபடி. பிரிவு தேட்டமாய் உந் மஸ்தகரஸமாய்ச் செல்லுகிறபடி. விச்லேஷியாவிடில் இரண்டாச்ரயமும் அழியும்படி

---

பத்தாம்பாட்டு.—தகவு இத்யாதி. "அன்னங்காள் - அகமேனிபொழியாமே திருமூழிக் களத்தார்க்கு - தகவன்றென்றுரையீர்கள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலவன்னங்களை இத்யாதி.

தடம் - மிகுதி. மீளவும் "தகவன்றென்றுரையீர்கள்" என்கிறதென்னென்ன - அவ னுடைய இத்யாதி. குணோத்தரங்களிருக்க, "தயையில்லை" என்கிறதுக்குக் கருத்தென்னென் னென்ன - அவனுக்கு இத்யாதி. இத்தால் ஸூசகம் - கலவித்து இத்யாதி. மேலே "மிகவின்பம் - மேவும்" என்றிருக்கையாலே - கலவித்து உறுப்பான வ்யாபாரம் என்றது. "மிகவின்பம்" என்றதுக்கு தாத்பர்யம் - ஸாவம் இத்யாதி. இத்தால் ஸூசகம் - பிரிவு இத்யாதி. விலக்ஷணம் -

யாய்த்து இவைபரிமாறுகிறபடி. [மென்னடையவன்னங்காள்] - கலவியின்மிகுதி நடையிலே தோடைகொள்ளலாம்படி ஸஞ்சரியாநின்றனவாய்த்து. [மிகமேனிமெலிவெய்தி] - ஸரஸஸஞ்சாரமெல்லாம் குலைந்ததிறேயுங்களுக்கு; கண்டிகோளிறே நானிருக்கிறபடி; என்தசையைக்கண்டால் தரித்திருக்கலாயிருந்ததோ? உங்கள் கலவியின்மிகுதியோபாதி போரும், என்னுடம்பின் மெலிவும். [மேகலையுமீடழிந்து] - பரியட்டமும்கட்டுக்குலைந்து; மேகலை தோங்கும்போது ஆஶ்ரயம்வேணுமே. [என்னகமேனியொழியாமே]-புறம்புள்ளது அடையக் கழன்றது: இனி அகவாயில் ஸ்வரூபம் கழல்வதற்குமுன்னே; நான் முடிவதற்கு முன்னே யென்கை. [திருமூழிக்களத்தார்க்கு] - தம்மையொழியச் செல்லாதார் ஸத்தை நோக்குகைக்காகவந்து கிடக்கிறவர்க்கு [திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீர்கள்] - பொரிபுறந்தடவி அத்தலையைப்பேணியுண்டதமையும்: இனி அவர்படியை நேராகச் சொல்லிப் போருங்கோள். அப்படி முன்பு பேணிஞளோ இவளேன்னில்; "எனதவளவண்ணர்தகவுகள்" என்று திருத்தாயார்சொல்லிற்றுப் பொறுமல், "தகவுடையவனே" என்று, "கெடுவாய்! ஆகரத்தில் தகவுமறுக்குமோ?" என்றாளிறே; அத்தைச் சொல்லுகிறாள். (கக)

---

## பதினோராம் பாட்டு.

---

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையுமொண்சுடரை
ஒழிவில்லாஅணிமழலைக்கிளிமொழியாள்அலற்றியசொல்
வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்வாய்ந்துரைத்த
அழிவில்லாஆயிரத்துஇப்பத்தும்நோயறுக்குமே.

*ஆ.—(ஒழிவின்றி.) - எம்பெருமானைப் பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவையாயிருப்பாளொருபிராட்டி அவனைப்பிரிந்தலற்றின பாசுரத்தாலே, தத்ஸத்ருஶ ஸ்வபாவரான வண்குருகூர்ச்சடகோபன் எம்பெருமானைப்பிரிந்தலற்றின இப்பத்து, தத்விஶ்லேஷரூப வ்யாதியைப் போக்குமென்கிறார்.*

*ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்னை அப்யஸித்தார்க்கு எம்பெருமானைப் பிரிகைக்கீடான ஸம்ஸாரதுரிதத்தை அறுக்கும் என்கிறார்.*

---

விஶ்லேஷியாவிடில் இத்யாதி. "மென்னடை" என்றதுக்குபாவம் - கலவியின் இத்யாதி. தோடைகொள்ளுகை - காண்கை. பதப்ரயோகப்ரயோஜநம் - ஸரஸ இத்யாதி. அதுக்கடியேதென்ன - கண்டிகோளிறே இத்யாதி. உனக்கு வ்யஸநமுண்டானால் ஸரஸஸஞ்சாரம் குலையவேணுமோவென்ன - என்தசையை இத்யாதி. "மிகவின்பம் - மிகமேனி" என்ற பதச்சேர்த்திக்குபாவம் - உங்கள்கலவியின் இத்யாதி. மெலிவும் - ஆர்த்தியும். மேகலை-வஸ்த்ரம். கட்டுக்குலைகைக்கு ஹேதுவேதென்ன - மேகலைதோங்கும் இத்யாதி. மேனிமெலிவெய்துகையாலே ஆஶ்ரயமில்லையென்றபடி. தம்மையொழியச் செல்லாதார் என்றது - திருமூழிக்களத்திலுள்ளாரை. குணாதிகனென்று சொல்லுகிற நீ இப்படி சொல்லலாமோவென்ன - பொரி புறம் இத்யாதி. அதாவது - உள்ளே ரஸமில்லாத பொரிக்கு சர்க்கராதிகளை மேலேதடவுமாபோலே, ப்ரணயித்வமில்லாதவனுக்கு ப்ரணயித்வத்தையாரோபித்து, "தகவில்லை" என்றவர்கள் முன்னே "தகவுடையவன்" என்றுசொன்னதமையுமென்றபடி. 'தடம்புனல்வாய்' என்று தொடங்கி, 'திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீர்கள்' இத்யந்வயம். (கo)

[ஒழிவின்றியென்று மேலுக்கு] - திருமூழிக்களத்தில் ஸௌலப்யமதயாலே நிரந்தரவாஸம்பண்ணி அங்கே ஸந்நிஹிதனாயிருக்குமவனை. [ஒழிவில்லா என்று தொடங்கி] - எம்பெருமானுக்குத் திருமூழிக்களத்தைப் பிரிந்து புரிக்க ஸம்பாவனை யுண்டேயாகிலும் அவனைப்பிரியில் தரியாததன்மையை யுடையளாய் அழகியதாய் முக்தமான கிளியின் பேச்சுப்போலேயிருக்கிற பேச்சை யுடையளான பிராட்டி தன்னாற்றாமையாலே ப்ரலாபித்த பாசுரத்தில் ஒன்றும் குறைபாடு படாதிருக்கிற ஆழ்வார் நோவுபட்டு உரைத்த.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலமாக, ஸம்ஸாரவிஶ்லேஷரூபமான வ்யாதியினுடைய ஶாந்தியை யருளிச்செய்கிறார்.

ஒழிவுஇன்றி-(ஒருகாலும்) விஶ்லேஷமில்லாதபடி, திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுகையாலே, ஒண்சுடரை - விலக்ஷணமான தேஜஸ்ஸையுடையவரை, ஒழிவில்லா - பிரிவில் தரியாதபடியாய், அணி - அழகிய, மழலை - முக்ததையையுடைத்தான, கிளிமொழியாள் - கிளிபோலொத்த பேச்சையுடையவள், அலற்றிய - தன்னார்த்தியாலே அக்ரமமாகச்சொன்ன, சொல் - பாசுரத்தை, வழுஇல்லா - (அந்த ப்ரேமத்தில்) குறையில்லாதபடியாய், வண்குருகூர் - விலக்ஷணயான திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், வாய்ந்துரைத்த - (அவனுடைய ஸ்வபாவங்களைக்)கிட்டி பரமஸித்துஉரைத்ததாய், ஒழிவுஇல்லா - ஶ்ரோதாக்கள் நெஞ்சில்நின்றுப்போகாத, ஆயிரத்துஇப்பத்தும்-, நோய் — (ஸம்ஸாரவிஶ்லேஷ ஹேதுவான), ஸம்ஸாரவ்யாதியை, அறுக்கும் - தீர்த்துக்கொள்ளும். இது - சாலைத் தாழிசை: கலிவிருத்தமென்பாருமுளர்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு, பிரிவுக்கடியான ஸம்ஸாரதுரிதத்தை இதுதானே அறுத்துக்கொடுக்கும் என்கிறார்.

[ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்] - ஒருநாளும் விடுகையின்றிக்கே அவ்வூரிலே நித்யவாஸம் பண்ணுகிறவர்க்கு. [ஒண்சுடர்]-“பின்னானார்” வணங்குஞ்சோதி என்கிறபடியே அவ்வூரில் நிலையால்வந்த புகர் நிற்கிறபடி. அவ்வூரில் ஸௌலப்யதையால்வந்த புகர். பிற்பாடர்க்கு முகங்கொடுக்கும் நீர்மையால்வந்த புகர். [ஒழிவில்லா] - அவன் அவ்வூரை யொழியில் தரிக்கமாட்டாதாப்போலே அவனையொழிய தரிக்கமாட்டாதவளானவை. [மழலைக்கிளிமொழியாள்] - அழகியதாய் முக்தமான கிளியின் பேச்சைப் போலேயிருக்கிற பேச்சை உடையவள். [அலற்றியசொல்] - தன் ஆற்றாமையாலே அக்ரமமாகச் சொன்ன பாசுரத்தை. [வழுவில்லா வண்குருகூர்ச்சடகோபன்] - அப்பிராட்டிபடியில் ஒன்றும் குறைவின்றிக்கேயிருக்கிற ஆழ்வார். [வாய்ந்துரைத்த] - கிட்டி உரைத்த ஸாவலம்பத்தாலே நோவுபட்டுரைத்த. [ஒழிவில்லாவாயிரத்துஇப்பத்து]- கேட்டார்கள் நெஞ்சை ஒருநாளும் விடாதேவர்த்திக்கிற இப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு ஸமகாலத்திற்போலே ஸர்வகாலமும் ரஸம்பிறக்கும்படியாய்த்து இருப்பது. [நோயறுக்குமே]-ஸம்ஸாரவிஶ்லேஷமாகிற நோய் அறுக்கும். கலந்து பிரிந்துநிற்பார்களின் காலிலே விழுந்து க்லேஶிக்கவேண்டா, விஶ்லேஷப்ரஸங்கமில்லாத தேஶத்திலே புகப்பெறுவர்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்கு, பிரிவுக்கடியான ஸம்ஸாரதுரிதத்தை இதுதானே யறுத்துக்கொடுக்கும் என்கிறார்.

[ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்] - ஒருநாளும் விடநினையாதே அவ்வூரில் நித்யவாஸம்பண்ணுமவனை. [ஒண்சுடர்] - "பின்னானார்வணங்குஞ்சோதி" என்கிறபடியே, அவ்வூரில் நிலையால்வந்த புகரிருக்கிறபடி; —அவ்வூரில் போக்யதையால் வந்த புகர், பிற்பாடர்க்கு முகங்கொடுக்கும் நீர்மையால் வந்த புகர். [ஒழிவில்லா] - அவன் அவ்வூரையொழியில் தரிக்கமாட்டாதாற்போலே, அவனையொழியில் தரிக்கமாட்டாதவளென்கை; "நசஸீதாத்வயாஹீநா" (நசஸீதாத்வயாஹீநா) என்னுமவளிறே. [அணிமழலைக்கிளிமொழியாள்] - அழகிய முக்தமான, கிளியின் பேச்சுப்போலேயிருக்கிற பேச்சையுடையவள். [அலற்றியசொல்]-தன்னுற்றாமையாலே யக்ரமமாகச்சொன்ன பாசுரத்தை. [வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்] - பிராட்டிபடியி லொன்றும் குறைவற்றிருக்கிற ஆழ்வார். [வாய்ந்துரைத்த] - கிட்டியுரைத்த; பாவபந்தத்தாலே சொன்னவென்றபடி. [அழிவில்லாவாயிரத்துஇப்பத்து] - கேட்டவர்கள்நெஞ்சையொருநாளும் விடாதே வர்த்திக்கிற இப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு, ஸமகாலத்திற்போலே ஸர்வகாலமும் ரஸம்பிறக்கும்படியாய்த்துஇருப்பது. [நோயறுக்குமே]-பகவத்விஶ்லேஷமாகிறநோயையறுக்கும்; கலந்து பிரிந்து திர்யக்குக்களின் காலிலேவிழுந்துக்லேஶிக்க வேண்டா; விஶ்லேஷமில்லாத தேசத்திலே புகப்பெறுவர். (கக)

---

*நிகமம் - ஒழிவின்றி இத்யாதி. "இப்பத்தும்நோயறுக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி. நோய் - விஶ்லேஷஹேதுவான ஸம்ஸாரதுரிதம். கீழே ஸௌலப்யத்தால்வந்த புகராக அருளிச்செய்து, பாவாந்தரம் - அவ்வூரில் போக்யதையால் இத்யாதி. "பின்னானார்" இத்யாதி வாக்யவிவரணம் - பிற்பாடர்க்கு இத்யாதி. "ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும் - ஒழிவில்லா" என்கிற பதச்சேர்த்திக்குபாவம் - அவன்அவ்வூரை இத்யாதி. தரிக்கமாட்டாளென்னுமதுக்கு ப்ரமாணம் நசஸீதா-இத்யாதி. ஒழிவில்லா - பிரியில் தரிக்கமாட்டாத. "அணிமழலை" என்றது - மொழிக்கு விஶேஷணம். வழுவுதல் - நழுவுதல். கிட்டுகையாவதேதென்ன - பாவபந்தத்தாலே இத்யாதி. ஆயிரத்துக்கு அழிவில்லாமையேதென்ன - கேட்டவர்கள் இத்யாதி. போக்யதையாலேயென்றபடி. விவரணம் - இப்பாசுரத்தை இத்யாதி. "நோயறுக்கும்" என்றது - இஷ்டப்ராப்திக்கும் உபலக்ஷணமென்கிறார் - கலந்து இத்யாதி.* (கக)

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— [illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

*எங்காதலுக்கடி மாலேய்ந்த வடிவழகென்று*
*அங்காதுபற்றுசா ஆங்கவன்பா - லெங்குமுள்ள*
*புள்ளினத்தைத்தூதாகப்போகவிட்டமாறன்தாள்*
*உள்ளினர்க்குத் தீங்கை யறுக்கும்.*

*ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.*

# எட்டாந்திருவாய்மொழி—அறுக்கும்வினை-ப்ரவேசங்கள்.

ஆ.—(அறுக்கும்வினை.) – இப்படி தூதப்ரேஷணம்பண்ண, பின்னையும் எம்பெருமானை வரக்காணாமையாலே அவஸந்நராய்,

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி தம்முடைய ஆர்த்தியை அறிவிக்கச்செய்தேயும் எம்பெருமான் அப்போதே வரக்காணாமையாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார் தூதப்ரேஷணத்தாலும் மநஃப்ரஸாதங்களாலும் அவனுடைய ஸ்வாநுஸந்தாநத்தாலும்'அவன்வந்து நம்மை விஷயீகரித்துக் திருநாவாயிலே கொண்டுபோகை நிச்சிதம்' என்றத்யவஸித்து, லங்கையிலேவந்து திருவடி தன்னைத் திருவடிதொழுது போனபின்பு பிராட்டி "பெருமானைக் காண்பதெப்போதோ?" என்று பதறினாற்போலே திருநாவாயிலே புகவேணுமென்றுபதறி, 'அங்கே புகவல்லேனே?' என்றும், 'புகும் நாள் என்று?' என்றும், 'அங்கேபுக்கு என்கண்ணாரக்கண்டு அடிமைசெய்யவல்லேனே?' என்றும் தொடங்கி அநேகமநோரதங்களைப் பண்ணுகிறார். போகவிட்ட தூதர் வரப்பற்றாமை "நாம் அவனிருந்தவிடத்தே போவோம்" என்று மநோரதிக்கிறாரென்றுமாம்.

ப.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி வடகமுவத்தாலே ப்ராபிக்க அபிநிவேசித்தவர், ப்ராப்யத்வராதிசயத்தாலே, அவன்பரிபூர்ணனாய்க்கொண்டு திருநாவாயிலே யெழுந்தருளியிருக்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக்கண்டு; அவனுடைய அநுகூலவிரோதிநிராஸக தேசவர்த்தித்வத்தையும், அநுகூலவ்யபத்வவைபவத்தையும், அஸாதாரண ஸம்பந்தத்தையும், நித்யகைங்கர்யவிஷயத்வத்தையும், பக்தபரிஜநஸந்தாநபூர்த்தியையும், ஆஸ்ரிதஸுலபதையையும், ரக்ஷித்வரக்ஷகத்வாதியாகாரபூர்ணதையையும், அநுகூலஜ்ஞாநப்ரதத்வத்தையும், ஸ்வாவஸ்ய ஸர்வேஸ்வரத்வத்தையும், அதிரமணீயவிக்ரஹயோகத்தையும் அநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரனான ஸர்வேஸ்வரனெழுந்தருளியிருக்கிற தேசத்தைக்கிட்டி யநுபவிப்பதென்றோ! என்று ஸஹர்ஷமாக மநோரதிக்கிறார்.

இ—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி தம் ஆர்த்தியை அறிவிக்கச்செய்தேயும் அப்போதே வரக்காணாமையாலே அவஸந்நரானவர் தூதப்ரேஷணத்தாலும் அவன் ஸ்வாநுஸந்தாநத்தால் வந்த மநஃப்ரஸாதத்தாலும்"அவன்வந்து நம்மை விஷயீகரித்து, அமர்ந்த நிலமான திருநாவாயிலே கொண்டுபோகை நிச்சயம்" என்று அத்யவஸித்து, க்ரமத்தாலே கொண்டுபோகப் பற்றாமையாலேபதறி, "அங்கே புகவல்லேனே, புகும் நாள்என்றோ? அங்கேபுக்கு என்கண்ணாரக் கண்டு அடிமைசெய்யவல்லேனே?" என்று இப்படி அநேக மநோரதங்களைப் பண்ணுகிறார். திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டபின்பு பெருமானைக்கிட்டுந்தனையும் பிராட்டிக்குச்சென்ற மநோரதம்போலே இவர்க்குச் செல்லுகிறது. "உபாயோபேயங்கள் ஈம்வானே" என்று அத்யவஸித்தார்க்கு, ப்ராப்யருசியில் கண்ணழிவற்றால் விளம்ப ஹேதுவில்லாமையாலே, ப்ராப்யஸித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. அதவா, போகவிட்டதூது வரப்பற்றாமை "நாம் அவனிருந்தவிடத்தே போவோம்" என்று

மநோரதிக்கிறார். ப்ராப்யஸித்தியிலுண்டான த்வரையாலே, பெரியமுதலியார் எப்போதும் இத்திருவாய்மொழியை அநுஸந்திக்கதருளுவரென்று 'பெரியமுதலியார் திருவாய்மொழி' என்றுய்த்து இத்தைச் சொல்லுவது.

ஈடு.—திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவநந்தரம் பெருமாளைக்கிட்டுவதற்குமுன்பு பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலே, கீழ்விட்டதூதர் அத்தலைப்பட்டு அவனைக்கொண்டு வருவதற்குமுன்னே நடுவு இவர்க்குப்பிறந்த மநோரதத்தைச்சொல்லுகிறது. இப்படி தம்முடைய ஆர்த்தியறிவிக்கச்செய்தேயும் அப்போதே வரக்காணாமையாலே யவஸந்நரானவர், தூதப்ரேஷணத்தாலும்அவன்குணாநுஸந்தாநத்தாலும் மநஃப்ரஸாதத்தாலும் "அவன்வந்து நம்மைவிஷயீகரித்து அமர்ந்தநிலமான திருநாவாயிலே கொடுபோகை நிஸ்சிதம்" என்று அத்யவஸித்து, க்ரமத்தால் போகப்பற்றாமையாலே பதறி, "அங்கேபுகவல்லேனே? புகும்நாள்என்றோ? அங்கேபுக்கு என் கண்ணாரக்கண்டு அடிமைசெய்ய வல்லேனே?" என்று இப்படி அநேகமநோரதங்களைப்பண்ணுகிறார். "உபாயோபேயங்களிரண்டும் ஈஸ்வரனே" என்று அத்யவஸித்தார்க்கு, ப்ராப்யருசி கண்ணழிவற்றால் விளம்பஹேதுவில்லாமையாலே, ப்ராப்யஸித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. இம்மநோரதந்தான் இவனுக்குத் தவிராததுமாய், அதுதான் இனியதுமாய், இவனுடைய ஸ்வரூபத்தோடு சேர்ந்திருப்பதும் ஒன்றிறே. பெரியமுதலியார், ப்ராப்யஸித்தியில் த்வரையாலே எப்போதும் இத்திருவாய்மொழியை யநுஸந்தியாநிற்பர்; ஆகையாலே, இத்தை "பெரியமுதலியார் திருவாய்மொழி" என்றுய்த்துச்சொல்லுவது. அதவா, "விட்டதூதர்கள் தாழ்த்தார்களென்று தாமே அவன்வர்த்திக்கிற தேசத்தேறப்போகவொருப்படுகிறார்" என்பாருமுண்டு.

---

"அறுக்கும்வினை" ப்ரவேசம். ஸத்ருஷ்டாந்தமாக ஸங்க்ரஹஸங்கதி - திருவடிசென்று இத்யாதி. பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலே யென்றது-"ஸாஹமேஷ்யாமி ராமேண ஸமாகம்யவராஹிணீ । ஸுக்ருதம்வதிமேஸாகஸ்யவாஸ்யாமிப்ரியமிதி" என்ற திருவடிசொல்லிப்போனவற்றையே எப்போதும்மநோரதித்துக்கொண்டிருக்கையைப்பற்ற 'மநோரதத்தைச்சொல்லுகிறது' என்றவநந்தரம், "இத்திருவாய்மொழி" என்று கூட்டுவது. அத்தலைப்பட்டு - அங்கேபோய். பிராட்டிக்குப் பெருமாள் வருவரென்று திருவடியறிவித்தபின் பாகையாலே, "எப்போதுஅவரைக்காணப்புகுகிறோம்?" என்று பதறக்கூடும்; இவர்க்கு அங்ஙனொன்று இன்றிக்கேயிருக்க மநோரதம் கூடினபடி எங்ஙனே? என்கிற சங்கையிலே, விஸ்தரஸங்கதி - இப்படி இத்யாதி. "குறுக்கும்வகையுண்டுகொலோ" "நாளறியேனே," "அணுகப்பெறுநாள் எவைகொலோ", "கண்ணாரக்களிக்கின்றதுஇங்குஎன்றுகொல்" இத்யாதியைப்பற்ற - அங்கே புகவல்லேனே இத்யாதித்ரயமும். உபாயம் அவனே என்றத்யவஸித்தால் "த்வஸ்யஸ்த்வ ஸம்ஹவெக" என்றிராதே மநோரதிப்பானென்? என்ன - உபாயோபேயங்கள் இத்யாதி. ப்ராப்யருசி கண்ணழிவற்றால் - ப்ராப்யத்திலாதரம் குறைவற வுண்டானாலென்றபடி. ப்ராப்ய த்வரையுண்டென்றால் ஸ்வரூபவிருத்தத்தைச் செய்யலாமோவென்ன- இம்மநோரதம் இத்யாதி. "ப்ராப்யத்வரையாலே மநோரதிக்கிறார்" என்றதுக்கு ஸம்வாதம் - பெரியமுதலியார் இத்யாதி. பெரியமுதலியார் - ஆளவந்தார். ஸங்கத்யந்தரம் - அதவா இத்யாதி.

---

# முதற் பாட்டு.

அறுக்கும்வினையாயின ஆகத்தவனை
நிறுத்தும் மனத்தொன்றிய சிந்தையினார்க்கு
வெறித்தண்மலர்ச்சோலைகள் சூழ்திருநாவாய்
குறுக்கும்வகையுண்டுகொலோ ! கொடியேற்கே.

ஆ.—ஸம்வத்தர்ஸாநாபேக்ஷராயிருப்பாருடைய துக்கங்களைப் போக்கும் திருநாவாயை நமக்கும் ஒருகால் குறுகுகைக்கு உபாயமுண்டோ ? என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார்.

[அறுக்குமென்று தொடங்கி] - அவனை ஹ்ருதயத்திலே நிறுத்தவேணு மென்னும் அத்யவஸாயத்திலே ஒருப்பட்ட மநோரதத்தை யுடையார்க்கு ஸகல துக்கங்களையும் போக்கும். [வெறி]-பரிமளம். [கொடியேற்கு]-அங்குப் புகப்பெறாதே நோவுபடுகைக்கிடான பாபத்தைப்பண்ணின எனக்கு.

ப.—முதற்பாட்டில், ‘ஆஸ்ரிதாநிஷ்டநிவர்த்தகனாய் நிரதிசயபோக்ய மான திருநாவாய் எனக்குக் கிட்டும் வகையுண்டோ?’ என்கிறார்.

ஆகத்து-(தங்கள்)அகவாயிலே, அவனை-(ஸமஸ்தவிரோதிநிவர்த்தகனும் நிரதிசயபோக்யனுமான)ஸர்வேச்வரனானவனை, நிறுத்தும் - நிறுத்தவேணுமென்கிற;மனத்து - நெஞ்சிலே, ஒன்றிய - ஒருமைப்பட்ட, சிந்தையினார்க்கு - மநோரதத்தையுடையவர்களுக்கு, வினையாயின - அவித்யாகர்ம வாஸநாருசிகளான அநிஷ்டவிரோதிகளையுடைய, அறுக்கும் - போக்குவதாய், வெறி - பரிமளப்ரசுரமான, தண் - ஸ்ரமஹரமாய், மலர் - புஷ்போத்தரமான, சோலைகள் சூழ் - சோலைகளையுடைய, திருநாவாய் - திருநாவாயானது, கொடியேற்கு - (அநுபவாஸித்திவேஷாநுரூபமாகக் கிட்டப்பெறாத) கொடுமையையுடைய எனக்கு, குறுக்கும்வகை உண்டுகொலோ - கிட்டும்விரகு உண்டாமோ?

இ.—முதற்பாட்டில், எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார்.

[அறுக்கும் வினையாயின] - வினையென்று பேர்பெற்றவற்றை அடங்கலும் போக்கும்; ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்திவிரோதி, ஸ்ரீரத்நவில் ப்ரவேசிக்கவொட்டாதே ப்ராப்தமாய் வருமவை, அவற்றையடைய ஒருகாலே போக்கும். க்ரமத்தாலே போக்கவேண்டுவது தானே போக்கிக் கொள்ளுமன்றிறே; அவன் போக்குமன்று “[illegible]” “ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி” என்கிறபடியேயாகக் கடவதிறே. இப்படி செய்வது ஆர்க் கென்னில் : [ஆகத்தவனை நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு] - அவனை ஹ்ருதயத்திலே நிறுத்தவேணு மென்னும் அத்யவஸாயத்திலே ஒருமைப்பட்ட மநோரதத்தை உடையவர்க்கு. [வெறி இத்யாதி] - வினையை வர்த்திப்பிக்கிலும் புக்குக்கொடுநிற்கவேண்டும்படியாய்த்து ஸேவ்யமாயிருப்பது. பரிமளத்தையுடைத்தாய் ஸ்ரமஹரமாய் நித்யவஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாய். [குறுக்கும்வகையுண்டுகொலோ] - குறுகப்பண்ணும் விரகுவதோவென்னுதல்; குறுகும் விரகுவதோவென்னுதல்; குறுக்குமென்று அத்தேஸமாஸையை. அந்த ஸாஸையாலே அருளிச்செய்வதே! என்று விஸ்மயப்பட்டருளினார் எம்பெருமானார். [கொடியேற்கே] - ஆஸாலேஸமுடையார்க்குப் புகலாந்தேஸமாயிருக்க, புகப்

பெறாதே நோவுபடுகைக்கடியான பாபத்தைப்பண்ணின எனக்கு. 'கொடியேற்கு - ஆகத்தவனை நிறுத்தும் மனத்தொன்றிய சிந்தையினார்க்கு - வினையாயின - அறுக்கும் - திருநாவாய் குறுக்கும்வகை, உண்டுகொலோ?'

ஈடு.—முதற்பாட்டு. எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார்.

[அறுக்கும்வினையாயின] - வினையென்று பேர்பெற்றவையடங்கலும் போக்கும்;—ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்யத்தை ப்ராபிக்குமிடத்தில்வரும் விரோதிகள், வர்த்தமாநதேஹத்தளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே ப்ராரப்தசேஷமாய்நின்று அவ்வருகேயும்போம்படி விளம்பிக்கக்கடவவை. நின்றநின்றநிலைகள்தோறும் உண்டாயிருக்குமிறே விரோதிகள். புதுப்புடைவை யழுக்குக்கழற்றுமாபோலே க்ரமத்தாலேபோக்க வேண்டுவது தான்போக்குமன்றிறே; பகவத்ப்ரஸாதத்தாலே போமன்று ஒருகாலே போமிறே; "மேருமந்தரமாத்ரோபி", (மேருமந்தரமாத்ரோபி) "ஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே," (ஸர்வேபாப்மாந:ப்ரதூயந்தே) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி)என்கிறபடியேயாகக்கடவதிறே. ப்ரஹ்மஹத்யைக்கு ப்ராயஶ்சித்தம்பண்ணினால், மோஹத்யைக்குத் தனித்துப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டிவருமிறே; அங்ஙன்வேண்டாவிறே பகவதநுக்ரஹங்கொண்டுகார்யங்கொள்ளுமிடத்தில். ஆர்க்குத்தான்இப்படிச்செய்வது?என்னில்-; [ஆகத்துஇத்யாதி]-ஹ்ருதயத்திலே அவனைநிறுத்த வேணுமென்னும் அத்யவஸாயத்திலே ஒருமைப்பட்டமநோரதத்தையுடையார்க்கு. [வெறியிதயாதி] - வினையைப்போக்காதே வர்த்திப்பிக்கிலும் விடவொண்ணாதபடி யாய்த்து, தேசமிருப்பது. பரிமளத்தையுடைத்தாய் ஶ்ரமஹரமாய் நித்ய

முதற்பாட்டு.—அறுக்கும் வினை இத்யாதி. "கொடியேற்கு - திருநாவாய் குறுக்கும் வகையுண்டுகொலோ?" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை - எனக்கு இத்யாதி.

வினைகள்அநேகமுண்டோவென்ன - ருசி இத்யாதி. ருசிவிரோதியாவது - ப்ரயோஜநாந்தரஸ்ரத்தை, தேவதாந்தரபஜநாதிகள். உபாயவிரோதியாவது- †"கர்மஜ்ஞாநஸஹஸ்ரேஷு" இத்யாத்யுக்தஸங்காத்ரயம், ஸாதநாந்தரஸ்ப்ருஹை முதலானவை. ப்ராப்யத்தை ப்ராபிக்குமிடத்தில் வரும் விரோதிகள் ஆவன - "அவனே உபாயம்" என்றத்யவஸாயம்பிறந்தாலும், அவன் திருவடிகளை ப்ராபிக்குமிடத்தில் "அவித்யாகர்மவாஸநாருசிகள், ஸாகவதாபசாரம்," என்றாற்போலே வருகிறவிரோதிகள். 'வர்த்தமாநதேஹத்தளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே' என்கிறவிடத்திலே, "ப்ராரப்தாபவர்க்கஸர்வபாபவிமுக்த"இத்யாத்யநுஸந்தேயம். கண்டதுக்கெல்லாம் விரோதிகளுண்டோவென்ன - நின்றநின்ற இத்யாதி. வினைகளொருகாலே அறக்கூடுமோவென்ன - புதுப்புடைவை இத்யாதி. ஒருகாலேபோமென்னுமதுக்கு ப்ரமாணங்கள் - மேருமந்தர இத்யாதி. "மேருமந்தரமாத்ரோபி ராஶி: பாபஸ்ய கர்மண: | கேஶவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி" இதிஸ்ரீவிஷ்ணுதர்மே (எஅ-அத்யா). "ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" இதிசாந்தோக்யே (ரு-உச-வைஶ்வாநர வித்யாயாம்). "புதுப்புடைவை" இத்யாதி வாக்யத்வயவிவரணம் - ப்ரஹ்மஹத்யைக்கு இத்யாதி வாக்யத்வயம். ஒருமைப்பட்ட - உத்யோகித்த. ஊரில் போக்யதையை வர்ணித்ததுக்கு பாவம் - வினையைப்போக்காதே இத்யாதி. ஶப்தார்த்தம் - பரிமளத்தை இத்யாதி. "மலர்ச்சோலை" என்று நிருபகமாகச் சொல்லுகை

† இங்கே அரும்பதம் விளங்கவில்லை: ருசிவிரோதி என்று தொடங்கும் வாக்கியங்கட்கு அடையவளைந்தான அரும்பதத்தில் எழுதியிருக்குமாறு:—ருசிவிரோதியாவது - பகவத்விஷயத்திலே ஆசைபிறக்கவொட்டாதபடி வருகிற விரோதி: அதாவது - ப்ரயோஜநாந்தரஸ்ரத்தை. உபாய விரோதியாவது - ஸ்வயம் ப்ரயோஜநம்அவன் என்னும் ருசிபிறந்தாலும் அவனே யுபாயமென்று அத்யவஸிக்கவொட்டாதபடி வருகிறவிரோதி: அதாவது ஸாதநாந்தரஸ்ப்ருஹை.

வஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாய். [குறுக்கும்வகையுண்டுகொலோ] - குறுகப் பண்ணும்வகை ஏதோ? என்னுதல்; குறுகும் விரகேதோ? என்னுதல்; குறுக்குமென்று - அத்தேஶஸஹாஸை. எம்பெருமானார் திருவடிதொழவெழுந்தருளாநிற்க, "திருநாவாயேத்தனையிடம்போரும்?" என்று எதிரேவருகிறார் சிலரைக் கேட்டருள, "குறுக்கும்" என்றார்களாய், அத்தைக்கேட்டு "இப்பாஷையாலே யருளிச்செய்வதே ஆழ்வார்!" என்று போர வித்தராயருளினார். [கோடியேற்கு] - கோடியேனுக்கு. ஆஶாலேஶமுடையார்க்கு ப்ராபிக்கலாம் தேசமாயிருக்க, ஆசையும் கண்ணழிவற்றிருக்க புகப்பெறாதே நோவுபடுகைக்கடியான பாபத்தைப்பண்ணினஎனக்கு. 'ஆகத்தவளைநீறுக்கும் மனத்தோன்றியசிந்தையினார்க்கு - வினையாயின அறுக்கும் - வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் - கோடியேற்கு - குறுக்கும்வகை யுண்டுகொலோ?' (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

கோடியேரிடைக் கோகனகத்தவள்கேள்வன்
வடிவேல்தடங் கண்மடப்பின்னைமணாளன்
நெடியானுறைசோலைகள்சூழ்திருநாவாய்
அடியேனணுகப்பெறுநாள்எவைகொலோ?

*ஆ.—(கொடியேரிடை) - பெரியபிராட்டியாரோடும் நப்பின்னைப்பிராட்டியாரோடும் கூட அவன் எழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப் புகுவதென்றோ? என்கிறார்.*

*ஓ.—இரண்டாம்பாட்டில், திருநாவாயிலேபுகும் நாளென்றோ? என்கிறார்.*

*[கொடியென்றுதொடங்கி]-கொடிபோலே அழகிய இடையையுடைய பெரியபிராட்டியாருக்கு வல்லபனாய் கூரியவேல்போலேயாய்ப்பெருத்திருக்கிற கண்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு போக்தாவாய், அவ்வளவன்றிக்கே, மஹிஷீபரிஜநாதிகளுக்கு ஒருமுடிவின்றிக்கே யிருக்கிறவன் நிரந்தரவாஸம் பண்ணுவதாய்ச்செய்த இவன் பரிகரமெல்லாங்கொண்டு ஒருமூலையிலே அடங்கும்படி சோலைப்பரப்பையுடைய திருநாவாயை.*

*ப.—அநந்தரம், மஹிஷ்யாதி போக்யதா வைபவத்தை யுடையவன் வர்த்திக்கிற திருநாவாயை நான் கிட்டும்நாள்களெவை? என்கிறார்.*

*கொடிஏர்இடை - கொடிபோலழகிய இடையையுடையளாய், கோகனகத்தவள் - தாமரைப்பூவிற் பிறப்பாலே நிரதிஶயபோக்யையான லக்ஷ்மிக்கு, கேள்வன் - ஸக்ருஶனாய், வடி வேல் - வடித்த வேல்போலே யொளியையும் கூர்மையையுமுடைத்*

---

யாலே - நித்யவஸந்தமான என்றது. இரண்டாமர்த்தம் - குறுகும் என்கிற மேல்வொற்றை "குறுக்கும்" என்று வல்லொற்றாக்கிக்கிடக்கிறதாய், குறுக்கும்விரகேதோ என்று. ஆனால், குறுகும்வகையென்னாதே "குறுக்கும்வகை" என்கிறதென்னென்ன - குறுக்கும் இத்யாதி என்னுதல்; மூன்றாமர்த்தமாதல். "தேஶஸஹாஸை" என்றதுக்கு ஸம்வாதம் - எம்பெருமானார் இத்யாதி. பாபமேதென்ன - ஆஶாலேஶம் இத்யாதி. அந்வயம் - ஆகத்தவளை இத்யாதி. "வினையாயின - அறுக்கும்" என்றது - திருநாவாய்க்கு விஶேஷணம். (க)

தான, தடங்கண் - பெரியகண்களையும், மடம் - மடப்பத்தையுமுடைய, பின்னை - நப்பின்னைப்பிராட்டிக்கு, மணாளன் - போக்தாவாய், (இவ்வளவன்றியே), நெடியான் - அபர்யந்த போக்யதாதிசயத்தையுடையவன், உறை - வர்த்திக்கிற (தேசமாய்), சோலைகள் - நாநாவிதமான சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருநாவாய் - திருநாவாயை, அடியேன்-(அநந்யப்ரயோஜனன) நான், அணுகப்பெறும்நாள்-அணுகப்பெறும்நாள்கள், எவைகொலோ - எவையோ? வடிவென்று - மாவடுவாய், மாவடுப்பிளவுபோலவும் வேல்போலவு மென்றுமாம்.

இ —இரண்டாப்பாட்டில், திருநாவாயிலேபுகும் நாளென்றோ? என்கிறார்.

[கொடியேரிடையித்யாதி] - கொடிபோலே அழகிய இடையை யுடையளாய்ப் புஷ்பத்திற்பரிமளம் உபாதானமாகப்பிறந்த பிராட்டிக்கு வல்லபனானவன். “நகஸ்ஸிம்ஹா பராத்யதி” என்பாரும் அருகேயிருக்க இழக்கவோ! என்கிறார். [வடிவேலித்யாதி] - கூரியவேல்போலே ஓராளுமொருநோக்கும் நேராய், போக்தாவின் அளவல்லாத போக்யதையை யுடைத்தான கண்களை யுடையளாய் ஆத்மகுணோபேதையான நப்பின்னைப் பிராட்டி செவ்விகொள்ள இட்டுப்பிறந்தவன். தன்கண்ணாலே அவனையொடியெறிந்து நமக்காக்கித்தருமவளிறே நப்பின்னைப்பிராட்டி. [நெடியான் இத்யாதி] - இவ்வளவன்றிக்கே மஹிஷீபரிஜநங்களுக்கு எல்லையின்றிக்கே யிருக்குமவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம். அவனுக்கும் அவன்பரிகரத்துக்கும் குறைவற வர்த்திக்கலாஞ் சோலைப் பரப்பையுடைத்தான தேசம். [அடியேனணுகப் பெறுநாள்] - அடிமை செய்கைக்கு இட்டுப் பிறந்த நான் வந்து கிட்டப்பெறும் நாளென்றோ?

ஈடு.—இரண்டாம்பாட்டு. திருநாவாயிலே புகும்நாளென்றோ? என்கிறார்.

[கொடியேரித்யாதி] - கொடிபோலேயழகிதான இடையையுடையளாய்ப் புஷ்பத்திற் பரிமளம் உபாதாநமாகப் பிறந்த பிராட்டிக்கு வல்லபனானவன். “நகஸ்ஸிம்ஹா பராத்யதி” (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாரும்அருகேயிருக்க இழக்கவோ? என்கிறார். [வடிவேல்தடங்கண்மடப்பின்னைமணாளன்] - கூரிய வேல்போலே ஓராளும் ஒருநோக்கும் நேராய் போக்தாவினளவல்லாத போக்யதையை யுடைத்தான கண்ணையுடையளாய், ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வி புஜிக்கைக்கு இட்டுப்பிறந்தவனாய்த்து. [நெடியான்] - இப்படிப்பட்ட மஹிஷீபரிஜநாதிகளால் எல்லைகாணவொண்ணாதவன். [உறையித்யாதி] - அவனுக்கும் அவன் விபூதிக்கும் குறைவற வர்த்திக்கலாம்படி இடமுடைத்தான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயை. [அடியேன்]- வநவாஸத்துக்குப் பெருமாளும் பிராட்டியுமாய்க் கலக்குமிடத்தில் * ஹவாம்ஸ்துவிற்படியே எல்லாவடிமைகளும் செய்கைக்கு இளையபெருமாள் நேர்பட்டாற்போலேயாய்த்து,

---

இரண்டாம்பாட்டு,—கோடியேர் இத்யாதி. “திருநாவாய் - அணுகப்பெறும்நாள் எவைகொலோ?” என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை -திருநாவாயிலே இத்யாதி.

ஏர் - அழகு. இத்தால் ஸாவம் - நகஸ்ஸிம் இத்யாதி. வடி - கூர்மை. ஓராளுமொரு நோக்கும் மென்றது - ஓராளுக்கோரம்புபோலே ஒருநோக்காலே யகப்படுத்திக்கொள்ளுகையென்றபடி. பிராட்டிமாரைச் சொன்ன வநந்தரம், “நெடியான்” என்கையாலே அர்த்தம் - இப்படிப்பட்ட இத்யாதி. “சோலைகள்” என்கிற பஹுவசநத்துக்குஸாவம் - அவனுக்கும் இத்யாதி. பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியைச்சொல்லி, அநந்தரம் “அடியேன்” என்றதுக்கு ஸாவம் - வநவாஸத்துக்கு இத்யாதி. புறப்பட்டு என்று கூட்டுவது. ஸவாம்ஸ்துவிற்படியே - அந்த

இங்குத்தைக்கு அடிமைசெய்கைக்கு இவர் நேர்பட்டபடியும். இளையபெருமாளைப் போலே அடிமைசெய்வித்துக் கொள்ளுகிற விஷயத்திற் குறையில்லையாய்த்து இவர்க்கு. ஸ்ரீஜநகராஜன்திருமகளொருத்தியுமிறே அங்கு. [அணுகப்பெறுநாளெவைகொலோ] - அத்தேசத்தை நான் கிட்டப்பெறும் நாளெதோ? (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

எவைகொல்அணுகப்பெறுநாள்என்றெப்போதும்
கவையில்மனமின்றிக்கண்ணீர்கள்கலுழ்வன்
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய்
அவையுள்புகலாவதுஓர்நாள் அறியேனே.

*ஆ.—(எவைகொல்). - 'என்றோ திருநாவாயை யணுகப் பெறுவது?' என்று எப்போதும் தனேகசித்தனாய்க் கண்ணீர் சோரவிருக்கிறநான், ஹேயப்ரத்யநீகனான திருநாரணன்சேர் திருநாவாயிலே அவனுடைய தீவ்யபரிஷத்திலேபோய்ப் புகுநாள் என்றென்று அறிகிலேன் என்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், 'திருநாவாயிற்றிருவோலக்கத்திலே புகும் நாள் என்றோ?' என்று அறிகிறிலே னென்று அவஸந்நராகிறார்.*

*[எவைகொல் என்று தொடங்கி] - அணுகப்பெறுநாள் எவையோவென்று ஸர்வகாலமும் மற்றொன்றறியாதே ஒருமைப்பட்டுக் கண்ணீர் பாயாநிற்பன். [நவையில் திருநாரணன்] - தார்லஹுத்வாதிதோஷம் தட்டாதபடி பிராட்டியோடேகூடி ஆச்ரித ஸுலபனானவன்.*

*ப.—அநந்தரம், 'அஸாதாரணஸம்பந்த விசிஷ்டனான நாராயணன் வர்த்திக்கிற திருநாவாயோலக்கத்திலே புகுவதொருநாள் அறிகிறிலேன்' என்கிறார்.*

*அணுகப்பெறுநாள் - கிட்டப்பெறுநாள், எவைகொலென்று - எவை யென்று, எப்போதும் - ஸர்வகாலத்திலும், கவையில்மனமின்றி - வேறொன்றிற் புகுரும் நெஞ்சின்றியே (ஏகாக்ரசித்தனாய்க்கொண்டு), கண்ணீர்கள்-, கலுழ்வன் - பல்காலிப்பன்; நவைஇல் - (தார்லஹுத்வ ஸௌபாதிகத்வாதிரூபமாகிற) குற்றமின்றியே, திருநாரணன் - (ஸுலஹுனைப் நிருபாதிகபந்துவாய்) ஸ்ரீய:பதியான நாராயணன், சேர் - வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயில், அவையுள் - அவனுடைய ஓலக்கத்திலே, புகலாவது - ப்ரவேசிக்கலாவது, ஓர்நாள்-ஒருநாள், அறியேனே - இன்னதென்றறிகிலேன். நவை - குற்றம். அவை - ஓலக்கம்.*

*இ.—மூன்றாம்பாட்டில், 'திருநாவாயில் திருவோலக்கத்திலே புகும் நாளென்று?' என்று அறிகிறிலேன் என்கிறார்.*

*[எவைகொலித்யாதி] - நான் வந்து கிட்டப்பெறும் நாளெவை? என்று. [எப்போதும்]- ஒருகால்இத்தைச்சொல்லி அல்லாதபோது அநுபபாதைத பண்ணுகிறேனோ?*

---

ஸ்லோகத்திற்படியே யென்றபடி. இவர்நேர்பட்டால் விஷயம் குறைபட்டிருக்குமோவென்ன - இளையபெருமாளை இத்யாதி. *எற்றமுண்டென்கிறார்* - ஸ்ரீஜநகராஜன் இத்யாதி. (உ)

[கவையில் மனமின்றி] - அது தன்னிலும் இதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ? இருதலைத்த நெஞ்சின்றியே. [கண்ணீர்கள் கலுழ்வன்] - கண்ணீர்கள் வெள்ளமிட விருப்பன். [நவையில் திருநாரணன்] - துர்லபத்வாதி தோஷமின்றிக்கேயிருக்கிற ஸ்ரீமானான நாராயணன். ஸௌலப்யத்துக்குஊற்றான பிராட்டியோடேகூடத் திருநாவாயிலேவந்து ஸுலபனானவன். [திருநாவாயவையுள் புகலாவதோர் நாளறியேனே] - திருநாவாயிலே பேரோலக்கமாகயிருக்க அத்திரளிலே சென்றுகூடப் பெறும்நாளென்றென்று அறிகிறிலேன். அவை - சபை, நவை - குற்றம். "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிருக்கும் அவராகையாலே, அந்நாளை யாசைப்படுகிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. 'திருநாவாயில் திருவோலக்கத்திலே புகும்நாள் என்று?' என்றறிகிலேனென்கிறார்.

[எவைகொலித்யாதி] – நான் வந்து கிட்டப் பெறும்நாள் எவை என்று? [எப்போதும்] - ஒருகால் இத்தைச் சொல்லி அல்லாதபோது அந்யபரதைபண்ணுகிறேனோ? [கவையில்மனமின்றி] - அதுதன்னிலும் இதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ? இருதலைத்த நெஞ்சின்றிக்கே. [கண்ணீர்கள்கலுழ்வன்] - கண்ணீர்கள் வெள்ளமிடவிருப்பன். [நவையில்திருநாரணன்] - துர்லபத்வாதி தோஷம்இன்றிக்கே யிருக்கிற ஸ்ரீமானான நாராயணன். ஸௌலப்யத்துக்குஊற்றான பிராட்டியோடேகூடத் திருநாவாயிலேவந்து ஸுலபனானவன். 'திருநாவாயிலே பேரோலக்கமாக விருக்க, "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதுஎன்றுகொலோ?" என்று'ஆசைப்பட்ட நான் அத்திரளிலேசென்று கூடப் பெறும் நாள் என்று?' என்றறிகிறிலேன். அவை - சபை. நவை - குற்றம். (௩)

---

## நான்காம் பாட்டு.

---

நாளேலறியேன் எனக்குள்ளனநாளும்
மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன்
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா!

ஆ.—(நாளேலறியேன்.) - நிரவதிக ஸௌந்தர்யபூர்ண விசிஷ்டையான நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்நேஹியனான உனக்கு மீளா அடிமைப்பணிசெய்யப்புகுந்தேன்; 'அடிமைசெய்யும் நாளென்று?' என்றறிகிறிலேனென்கிறார்.

---

மூன்றாம்பாட்டு.—எவைகொல் இத்யாதி. "திருநாவாயவையுள்புகலாவதோர்நாளறியேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - திருநாவாய் இத்யாதி.

இப்பதப்ரயோகத்துக்கு பாவம் - அதுதன்னிலும் இத்யாதி. இதுக்கர்த்தம்-இருதலைத்த நெஞ்சின்றிக்கே என்று. இருதலைத்தநெஞ்சு - இருதலையான நெஞ்சென்றபடி. முகாந்தரமுமாய் - விஷயாந்தரமுமாயென்றபடி. கவையில் மனமின்றி-கவையிலேயான மனமின்றிக்கே-வேறொன்றிற்பெருகின நெஞ்சின்றிக்கே; ஏகாக்ரசித்தனாய்க்கொண்டென்றபடி. கவை - கார்யம்; விஷயாந்தரமென்றபடி. கண்ணநீர்களாலே கலங்குவனென்று பதார்த்தம். அதாவது – கண்ணநீர் வெள்ளமிடாநிற்பனென்றபடி. "கலுழ்வன்" என்கிறதுக்கு நிகண்டு - "கலுழி - கலங்குதல், அழுதல்." "கலுழுவன்" என்றுஇவ்வர்த்தங்களையெல்லாஞ் சொல்லும். "திருநாரணன்" என்று தொடங்கி மேலுக்கு பதார்த்தம் - ஸௌலப்யத்துக்கு இத்யாதி. (௩)

ஒ.—நாலாம்பாட்டில், எல்லாவடிமையும் கொள்ளுகைக்கூடான திருச்சோலையையுடைய திருநாவாயிலே நப்பின்னைப்பிராட்டியோடேகூட எழுந்தருளியிருக்கிற உனக்கு ஆத்மாந்தரூபாஸ்யம் பண்ணும்படி விஷயீக்ருதனான நான் திருவடிகளில் அடிமையிலே அதிகரிக்கும்நாள் என்றென்று அறிகிலேனென்று பகருகிறார்.

[வாளேய்தடங்கண்] – வாள்போலேயாய் பெருத்திருக்குமின கண்.

ப.—அநந்தரம், நித்யகைங்கர்யத்திலே அந்விதனாய்ப்புகுந்த நான், அந்தக் கைங்கர்யோபயுக்தமான நாள்கள் உளவானபடி யறிகிறிலேனென்கிறார்.

நீள் - ஓங்கி, ஆர் - நிறைந்த, மலர் - பூவையுடைத்தான, சோலைகள்-சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருநாவாய் - திருநாவாயிலே, வாளேய் - வாள்போலே நீண்ட ஒளியையுடைத்தான, தடங்கண் - பெரியகண்ணை யுடையளாய், மடப்பின்னை - ஆத்மகுணபூர்ணையான நப்பின்னைப்பிராட்டிக்கு, மணாளா - நிரதிசயபோக்தாவானவனே! (ஸூரிகளைப்போலே), நானும், மீளாவடிமைப்பணி செய்ய - விச்சேதரஹித நிரந்தர கைங்கர்யம் பண்ணுகைக்கு, புகுந்தேன் - அந்வயித்தேன்; (அதுக்கு), எனக்கு -, உள்ளன - உளவாகக் கற்பித்துவைத்த, நாள்நல் - நாளாகில், அறியேன் - (அவை) நானறிகிறிலேன்.

இ.—நாலாம்பாட்டில், ஆத்மாந்தரூபாஸ்யம் பண்ணும்படி விஷயீக்ருதனான நான் நப்பின்னைப்பிராட்டியோடே கூட விருக்கிறவிருப்பிலே அடிமை செய்யப்பெறும் நாளென்றென்றறிகிறிலேன் என்கிறார்.

[நாளேலறியேனெனக்குள்ளன] - பெறக்கடவ நாள்என்றென்று அறிகிறிலேன் என்னுதல். பிரிந்திருக்கக்கடவ நாளைத்தானென்று அறிகிறிலேன் என்னுதல். பேறுஸித்தமானபின்பு பதறுகிறதென்னென்னில்?- [நானும் மீளாவடிமைப்பணிசெய்யப் புகுந்தேன்] - நித்யஸூரிகள்பண்ணும் ஆத்மாந்ததாஸ்யத்திலேயன்றோ நானும்அதிகரித்தது. ஒருப்ரயோஜநத்தைக் கொள்ளக்கிட்டினவனைப் ஆறியிருக்கிறேனோ? தாஸ்ய பரிமளத்தில் சுவடறியாதவனைப் ஆறியிருக்கிறேனோ? [நீளார்மலர்ச் சோலைகள்] - ஓங்கிப்பரப்புமாறப் பூத்தசோலைகளையுடைத்தான தேசம்; அடிமைசெய்கைக்குப் புஷ்பாத்யுபகரணங்களால் குறைவற்ற தேசமென்னுதல். நப்பின்னைப் பிராட்டியுந்தானுமாகப் புஷ்பாபசயம் பண்ணலாம் தேசமென்னுதல். [வாளேய்தடக்கண்] - ஒளியையுடைத்தான பரந்த கண்ணென்னுதல், வாள்போலேகண்டாரை அழிக்கவல்ல பரந்த கண்ணென்னுதல்; அவனை அநந்யார்ஹனாம்படியாக்கவல்ல கண்ணழகையுடையவள் என்கை. [மடப்பின்னை மணாளா] - அழகேயன்றிக்கே ஆத்மகுணங்களாலும் தூவக்க வல்லவளுக்கு வல்லபனானவனே! தேசாந்தரம்போன ப்ரஜை ஊர்அணித்தானவாறே தாய்மாரைப் பலகாலும் நினைக்குமாபோலே ப்ராப்யதேசம்அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுஸந்திக்கிறார்.

ஈடு.—நாலாம்பாட்டு. 'ஆத்மாந்ததாஸ்யம்பண்ணும்படி விஷயீக்ருதனான நான், நப்பின்னைப்பிராட்டியோடேகூடவிருக்கிற விருப்பிலே யடிமைசெய்யப்பெறும் நாள் என்று?என்றுஅறிகிறிலேன்' என்கிறார்.

---

நாலாம்பாட்டு.—நாளேல் இத்யாதி. "மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன் - மடப்பின்னைமணாளா - நாளேலறியேன்" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை - ஆத்மாந்ததாஸ்யம் இத்யாதி.

[நாளேலறியேனெனக்குள்ளன] - பேறக்கடவநாள் என்றென்றறிகிறிலேன் என்னுதல்; நான் பிரிந்திருக்கக்கடவ நாள்எத்தனையுண்டென்றறிகிறிலேனென்னுதல். பேறு ஸித்தமானபின்பு பதறுகிறதேன்? என்னில் - [நானும் மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன்] - நித்யஸூரிகள்பண்ணும் ஆத்மாந்ததாஸ்யத்திலேயன்றோ நானும்அதிகரித்தது? ஒருப்ரயோஜநத்தைக் கொள்ளக் கிட்டினவனாய்ஆறியிருக்கிறேனோ? தாஸ்யபரிமளத்திற் சுவடறியாதவனாய்ஆறியிருக்கிறேனோ? [நீளார்மலர்ச்சோலைகள்] - ஓங்கிப் பரப்புமாறப்பூத்த சோலைகளையுடைத்தான தேசம். அடிமைசெய்கைக்குப்புஷ்பாத்யுபகரணங்களால் குறைவற்றதேசம் என்னுதல்; நப்பின்னைப்பிராட்டியும் தானுமாகப் புஷ்பாபசயம்பண்ணலாம் தேசமென்னுதல். [வாளேய்தடங்கண்] - ஒளியையுடைத்தான பரந்த கண் ணென்னுதல்; வாள்போலே கண்டாரை அழிக்கவல்ல பரந்தகண் என்னுதல்; அவனை அநங்யார்ஹமாக்கவல்ல கண்ணழகையுடையவளென்கை. [மடப்பின்னைமணாளா] - அழகேயன்றிக்கே ஆத்மகுணங்களாலும் துவக்கவல்லவளுக்கு வல்லபனானவனே! தேசாந்தரம்போனப்ரஜை ஊர்அணித்தானவாறே தாய்மாரைப் பல கால் நினைக்குமாபோலே, ப்ராப்யதேசம்அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுஸந்திக்கிறார். (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

மணாளன்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும்
கண்ணாளனுலகத்துயிர்தேவர்கட்கேல்லாம்
விண்ணாளன்விரும்பியுறையுந்திருநாவாய்
கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகோல்கண்டே.

*ஆ.—(மணாளன்.) - லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், தேவாதி ஸ்தாவராந்த நிகிலஜநநிர்வாஹகனாய், ஸ்ரீவைகுண்டநிலயனான எம்பெருமான் விரும்பியுறையும் திருநாவாயை, இப்ப்ரக்ருதியோடே கண்ணாரக்கண்டு களிப்பதென்றோ? என்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், திருநாவாயை என் கண்ணின்விடாய் தீரக் கண்டு க்ருதார்த்தனாவதென்றோ? என்கிறார்.*

---

*"எனக்குள்ளன - நாளேலறியேன்" என்றந்வயிப்பது. எனக்குளவாகக் கர்பித்து வைத்த நாளானவறியேனென்று பலிதார்த்தம். இன்னநாளென்று விசேஷியாமையாலே இத்தை த்யோதா காட்டுகிறார் - பேறக்கடவநாள் இத்யாதி வாக்யத்வயத்தாலே. மீளா - அவிச்சிந்நமான. அடிமைப்பணி - தாஸ்யக்ருத்யம். "அடிமைப்பணி" என்றதுக்கு பாவம் - ஒரு ப்ரயோஜநத்தை இத்யாதி. "மீளாவடிமைப்பணி" என்றதுக்கு பாவம்-தாஸ்யபரிமளத்தில் இத்யாதி. "அடிமைப் பணிசெய்ய" என்றத்தையும் "மடப்பின்னைமணாளா" என்றத்தையும் கூட்டி பாவத்வயம் - அடிமைசெய்கைக்கு இத்யாதிவாக்யத்வயம். வாள் - ஒளியும், வேலும். ஏய்கை - உடைத்தாகையும், ஒப்பும். கீழ் வாக்யவிவரணம் - அவனை இத்யாதி. துவக்கவல்ல - வசீகரிக்கவல்ல. பாட்டுத்தோறும் பிராட்டிமாரை யருளிச்செய்ததுக்கு பாவம் - தேசாந்தரம் இத்யாதி. 'நீளார்மலர்' என்று தொடங்கி 'அடிமைப்பணி செய்யப் புகுந்தேன்: எனக்குள்ளன - நாளேலறியேன்' இத்யந்வயம்.* (௪)

[கண்ணாளன் உலகத்துயிர் தேவர்கட்கெல்லாம் விண்ணாளன் விரும்பியுறையும் திருநாவாய்] - லோகத்திலுண்டான தேவமனுஷ்யாதிகளுக்கு நிர்வாஹகனாய், ஸ்ரீவைகுண்டநாயகனாயிருந்தவன் அத்யாதரம் பண்ணிக்கொண்டு வர்த்திக்கருளுகிற திருநாவாயை. [இங்கு] - ப்ரக்ருதியோடே.

ப.—அநந்தரம், பத்நீபரிஜநஸ்தாநாதி பரிபூர்ணனானவன் வர்த்திக்கிற திருநாவாயை, என்கண்ணானது நிறையும்படி கண்டு அநுபவிப்பதென்றோ? என்கிறார்.

மலர்மங்கைக்கும் - பத்மவாஸிநியான லக்ஷ்மிக்கும், மண்மடந்தைக்கும் - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும், மணாளன் - போக்தாவாய், உலகத்து - லோகத்தில், உயிர் தேவர்கட்கெல்லாம் - ப்ராணிகள் தேவதைகள் எல்லார்க்கும், கண்ணாளன் — நிர்வாஹகனாய், விண்ஆளன் - பரமவ்யோமமாப்தவாச்யமான பரமபதத்திலுள்ளாரையும் அடிமைகொள்ளுமவன், விரும்பி-(இந்த விபூதித்வபத்திலும்) விரும்பி, உறையும் - வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயை, கண் - கண்கள், ஆர - பரிபூர்ணமாம்படி, கண்டு -, இங்கு - இங்கே, களிக்கின்றது - ப்ரதிஸந்தாநம்பண்ணுவது, என்றுகொல் - என்றோ?

இ.—அஞ்சாம்பாட்டில், திருநாவாயை என் கண்ணின்விடாய்தீரக்கண்டு உகப்பதென்றோ? என்கிறார்.

[மணாளன் இத்யாதி] - பிராட்டிக்கும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் வல்லபன். புருஷகாரமாவாரும் பொறைக்குஉவாத்தாவாரும் உண்டாயிருக்க இழக்கவேணுமோ? [கண்ணாளன் இத்யாதி] - லோகத்தில் மனுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனானவன். அவர்கள் படுக்கைப்பற்று நோக்குகிறபடி. [விண்ணாளன்] - பிராட்டிமாரும் தானும் தனக்குத் தகுதியான பரமபதத்திலே திவ்யபர்யங்கத்திலே யிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன். [விரும்பியுறையும் திருநாவாய்] - உபய விபூதிநாதன் பெறாப்பேறாக ஆதரித்து வர்த்திக்கிற தேசம். அவன் விரும்புகிற தேசமல்லது ப்ராப்யமில்லையிறே. [கண்ணார] - காண்கையிலே விடாய்ப்பட்ட கண்கள் வயிறுநிறைய. [களிக்கின்றது இங்கு என்றுகொல்] - "கலைகளே" என்று ஒரு தேச விசேஷத்திலே களிக்கையொழிய, இங்கே களிக்கப்பெறுவதென்றோ? [கண்டே] - "காண்கை நிச்சிதம்" என்னும் விச்வாஸத்தால் களிக்கையன்றிக்கே, கண்டே களிப்பது என்றோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருநாவாயைக் கண்ணின்விடாய்தீரக்கண்டு அநுபவிப்பதென்று? என்கிறார்.

[மணாளனித்யாதி] - பெரியபிராட்டியார்க்கும் ஸ்ரீபூமிப்பிராட்டியார்க்கும் வல்லபனானவன். புருஷகாரமாவாரும் பொறைக்குஉவாத்தாவாருமுண்டாயிருக்க இழக்கவேணுமோ? [கண்ணாளனித்யாதி] - லோகத்தில் மநுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனானவன். அவர்கள் படுக்கைப்பற்று நோக்குகிறபடி.

---

அஞ்சாம்பாட்டு-மணாளன் இத்யாதி. "திருநாவாய் கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - திருநாவாயை இத்யாதி.

இத்தால் ஸாரம் - புருஷகாரம் இத்யாதி. உவாத்து - உபாத்யாயன். உயிர் - மநுஷ்யர். "பிராட்டிமார்க்கு - மணாளன்" என்றவநந்தரம் "தேவர்கட்கெல்லாம் - கண்ணாளன்" என்றதுக்கு ஸாரம் - அவர்கள் இத்யாதி. படுக்கைப்பற்று - ஸ்த்ரீகளுக்குவிட்ட தேசம். "படுக்கைதானிரு

[விண்ணுளன்] - படுக்கைதானிருக்கிறபடி; பிராட்டிமாரும்தானும் தனக்குத்தகுதியான பரமபதத்தில் திவ்யபர்யங்கத்திலேயிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன். [விரும்பியுறையும்திருநாவாய்] - உபயவிபூதிநாயகன், பெறுப்பேறாக ஆதரித்து வர்த்திக்கிறதேசம். அவன்விரும்புகிறதேசமல்லது ப்ராப்யமில்லையிறே. [கண்ணார]-காண்கையிலே விடாய்ப்பட்ட கண், ஆர - வயிறுநிறைய. [களிக்கின்றது இங்கு என்று கொல்]-**"அஹமந்நமஹமந்நம்"** (அஹமந்நமஹமந்நம்) என்றுஒரு தேசவிசேஷத்தே களிக்கையொழிய, இங்கே களிக்கப்பெறுவதுஎன்றோ? [கண்டே]-"காண்கை நிஸ்சிதம்" என்னும் விஸ்வாஸத்தால் களிக்கையன்றிக்கே, கண்டேகளிப்பதென்றோ? (ரு)

---

## ஆறும் பாட்டு.

---

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள்
தொண்டேயுனக்காயொழிந்தேன்துரிசின்றி
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
கொண்டேயுறைகின்றஎங்கோவலர்கோவே.

ஆ.—(கண்டே) - எனக்காகத் திருநாவாயைக் கோயிலாகக்கொண்டுஉறைகிற கோவலர்கோவே! உன்பக்கலிலே அநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையேனுன என்னுடைய கண்கள் திருநாவாயிலே உன்னைக் கண்டு களிப்பதுஎன்றோ? என்கிறார்.

ஓ.—ஆறும்பாட்டில், திருநாவாயில் எம்பெருமானைக் குறித்து, கண்கள் உன்னைக்கண்டு களிப்பதென்றோ? என்கிறார்.

[தொண்டே உனக்காய் ஒழிந்தேன் துரிசின்றி] - அந்யபரதை கெட்டு உனக்கே அடிமையானேன். [வண்டென்று மேனுக்கு] - புக்காரை மற்றொன்றறியாதபடி பண்ணவல்ல நிரதிஶய போக்யமான திருச்சோலைகள் சூழப்பட்ட திருநாவாயை ஆதரித்து அங்கே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஆஶ்ரிதஸுலபனானவனே!

ப.—அநந்தரம், திருநாவாயிலே வர்த்திக்கிற ஆஶ்ரிதஸுலபனுன உன்னைக் கண்டு என்கண்கள் களிப்பதென்று? என்கிறார்.

வண்டுஆர்- வண்டுகள்நிறைந்த, மலர்ச்சோலைகள் - மலரையுடையசோலைகள், சூழ் - சூழ்ந்த, திருநாவாய் - திருநாவாயை, கொண்டு - (வாஸஸ்தாநமாகத்திருவுள்ளத்திலே) கொண்டு, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுமவனாய், எங்கோவலர்கோவே- எனக்கும் கோபாலர்க்கும் ஸௌலப்யத்தைக்காட்டி ஸ்வாமியான க்ருஷ்ணனே! துரி

---

கிறபடி" என்றத்தை விவரிக்கிறார் - பிராட்டிமாரும் இத்யாதி. "கண்ணுளன் - விண்ணுளன் விரும்பியுறையும்" என்று கூட்டி பாவம் - உபயவிபூதி இத்யாதி. பரமபதத்தைவிட்டுத் திருநாவாயை "கண்ணார - கண்டு" என்கிறதென்னென்ன - அவன்விரும்புகிற இத்யாதி. "விடாய்ப்பட்ட" என்கையாலே - வயிறுநிறைய என்றது. "இங்கு" என்றதுக்கு பாவம் - அஹமந்நம் இத்யாதி. "கண்டே!" என்கிற ஏவகாரார்த்தம் - காண்கை இத்யாதி. 'மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் - மணாளன் - உலகத்துயிர் தேவர்கட்கெல்லாம் - கண்ணுளன்-விண்ணுளன்-விரும்பியுறையும் திருநாவாய் - இங்கு - கண்ணார - கண்டே - களிக்கின்றது-என்றுகொல்?' இத்யந்வயம்.

மாய்த்து. [எங்கோவலர்கோவே] - க்ருஷ்ணனுய்வந்தவதரித்து இடையர்க்கு ஸுலபனாற்போலே, திருநாவாயிலேவந்து எனக்கு ஸுலபனானவனே! (சு)

## ஏழாம் பாட்டு.

கோவாகியமாவலியைநிலங்கொண்டாய்
தேவாசுரஞ்செற்றவனேதிருமாலே
நாவாயுறைகின்றஎன்னாரணநம்பீ!
ஆவாவடியான்இவனென்றருளாயே.

ஆ.—(கோவாகிய) - ஆஸ்ரிதஜநஸமீஹிதப்ரதனாய், ஆஸ்ரிதஜநாநிஷ்ட நிவாரணஸ்வபாவனுமாய் ஆஸ்ரிதவத்ஸலனுமாய், ஆஸ்ரிதஸுலபத்வார்த்தமாகத் திருநாவாயிலே அவதீர்ணனுமாயிருந்த நாராயணநம்பீ! ஆவா அடியானிவனென்றருளாய், என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற நாரணநம்பீ! ஐயோ இவன் அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

[கோவென்று தொடங்கி] - ஆஸ்ரிதருடைய அபேக்ஷிதங்களை முடித்துக் கொடுக்கும் ஸ்வபாவனாய் ஆஸ்ரிதப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனுமாய் வைத்து அதுக்கடியான ஸ்ரிய:பதியுமாய் ஆஸ்ரிதர்க்கணித்தாகைக்காக திருநாவாயிலே எழுந்தருளியிருப்பதுஞ்செய்து ஆஸ்ரிதவத்ஸலனாய் இப்படி "ஆஸ்ரிதர்க்குஉறுப்பாகப் பெற்றோம்" என்றத்தாலே பூர்ணனானவனே!

ப.—அநந்தரம், சேஷித்வ ரக்ஷகத்வ ப்ராப்யத்வ ரூபமான ஆகாரபூர்த்தியையுடைய நீ, உறவைப்பார்த்து க்ருபைபண்ணவேணுமென்கிறார்.

கோவாகிய-(த்ரைலோக்யத்துக்கும்) சேஷியாகத் தன்னையபிமாநித்திருந்த, மாவலியை - மஹாபலியை, நிலங்கொண்டாய் - பூமியை அபேக்ஷித்துவாங்கி அதினுடைய அந்யசேஷத்வம்போய் அநந்யார்ஹமாம்படி சேஷியானவனாய், (சேஷமான ஜகத்துக்கு), தேவாசுரம் - தேவாஸுரவிமர்த்தத்தால் வருகிற விரோதத்தை, செற்றவனே - சமிப்பித்து த்வதேகசரணனுக்குமவனாய், நாவாயுறைகின்ற - திருநாவாயிலே நிரந்தரவாஸம்பண்ணுகிற, என் -, நாரணநம்பீ - ஸமஸ்தகுணவிபூதி விசிஷ்டத்வத்தால்வந்த நாராயணத்வ பூர்த்தியையுடையையாய், திருமாலே - இந்த சேஷித்வ ரக்ஷகத்வ ப்ராப்யத்வபூர்த்திக்கு அஸாதாரணமான ஸ்ரிய:பதித்வத்தையுடையவனே! (காருண்யரூபையானவளோட்டைச்சேர்த்தியாலே), ஆ ஆ - ஐயோ! இவன் அடியானென்று-இவன் நமக்கு சேஷபூதனென்று, அருளாயே-* ஆகாரத்ரயவிசிஷ்ட ஸம்பந்தத்தைப்பார்த்து இரங்கியருளவேணும்.

இ.—ஏழாம்பாட்டில், ஆஸ்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற தேவர் அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

---

பாவம் - க்ருஷ்ணனாய் இத்யாதி. 'வண்டார்' என்றுதொடங்கி, 'கோவே - தரிசின்றி-உனக்கு-தொண்டாயொழிந்தேன்; இங்கு - கண்டே-கண்கள்-களிக்கின்றது-என்றுகொல்?' இத்யந்வய:.(சு)

[கோவாகிய இத்யாதி] - ஈஶ்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக வைத்தான், மஹாபலி அவனைத்தள்ளி அப்பதத்தைத் தான் எறட்டுக்கொண்டான்; பாதகனானவன் ஸ்வபலத்தாலே பெறட்டுக்கொண்டபடியாலே "ஈஶ்வரோஹம்" என்று ரக்ஷகனான இந்த்ரனுக்குக் கொடுக்கைக்காக அவன் பக்கல்நின்றும் விபூதியை வாங்கினானைத்து. ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்கொடுக்கைக்குத் தன்னையழியமாறும் ஸ்வபாவனென்கை. [தேவாசுரந்செற்றவனே] - தேவாஸுரஸங்க்ராமத்திலே பரஸ்பரவதமேயாய்ச் சென்றவாறே, அநுகூலரான தேவர்களுக்காக அஸுரர்களை யழியச்செய்தவனே! மஹாபலிபக்கல் குணலேஶத்தாலே தன்னையழியமாறினான், அசுரர் அங்ஙனன்றியே இல்லாமையாலே அவர்களையழியச் செய்தபடி. [திருமாலே] - ஆஶ்ரிதரை ரக்ஷிக்கைக்கும் தத்ப்ரதிகூலரை நிரஸிக்கைக்கும் அடி ஸ்ரீய:பதியாகையாலே; தான் உகவாதார்பக்கல் ஐஶ்வர்யத்தை மாற்றி உகப்பார்க்குக் கொடுக்கைக்கு அடி ஸ்ரீய:பதியாகையாலே. [நாவாயுறைகின்ற] - ரக்ஷகனானவன் தூரஸ்தனாகையன்றியே ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிறவனே! [நாரணநம்பீ] - அதுக்கு உறுப்பாக ஆஶ்ரிதவத்ஸலனாய் "அவர்களுக்கு உறுப்பாகப் பெற்றோம்" என்று அத்தாலே பூர்ணனானவனே! ஆஶ்ரிதரக்ஷணத்தை நினைக்க ஸர்வார்த்தபூர்ணனானவன் என்றுமாம். [ஆவாவடியானிவனென்றருளாயே] - "அநந்யகதியான இவன் ஐயோ நோவுபடுகிறான்" என்று க்ருபைபண்ணியருளவேணும்; "ஸோஹம் தே தேவ தேவேஶ நார்ச்சநாதௌ ஸ்துதௌ ந ச। ஸாமர்த்யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத மே"; இவன் நமக்கு அஸாதாரணனென்று, ஸம்பந்தத்தைப் பார்த்து க்ருபைபண்ணியருளவேணும் என்றுமாம்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆஶ்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம்பண்ணுகிற தேவர், அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

[கோவாகியமாவலியை நிலங்கொண்டாய்] - ஸர்வேஶ்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக்கிவைத்தான்; அவனைத்தள்ளி அந்தப்பதத்தைத் தானெறட்டுக்கொண்டு "நானே அரசு" என்றிருந்தானாய்த்து. நீ கொடுக்கக்கொள்கையன்றிக்கே, அதுக்கெல்லாம் தானே நியாமகன் என்றபிமாநித்திருந்தானாய்த்து; "வெறும்புறத்திலே, தன்னதல்லாதத்தை 'தன்னது' என்றெறட்டுக்கொண்டிருக்கக்கடவ அவன் கையிலே இவ்விஷயமுங்கிடக்குமாகில் நாடு தடிக்கிடவாது" என்று பார்த்தருளி, இந்த்ரனதான விபூதியை அவன்பக்கலில்நின்றும் வாங்கினான். [தேவாசுரந்செற்றவனே] - தேவாஸுர ஸங்க்ராமத்திலே அவர்கள் படுவது இவர்கள் படுவதாய் இங்ஙனே பருவச்செல்லப்புக்கவாறே, ஒருதலையையழித்து தேவஜாதிக்குக் குடியிருப்பும் பண்ணிக்கொடுத்தானாய்த்து. [திருமாலே] - ஆஶ்ரிதரக்ஷணத்துக்கும் தத்ப்ரதிகூல நிரஸநத்துக்கும் அடி ஸ்ரீய:பதியாகை. [நாவாயுறைகின்ற] - இப்படி ரக்ஷிக்குமிடத்தில் அடுத்தணித்தாக முகந்தோற்றத்

---

ஏழாம்பாட்டு - கோவாகிய இத்யாதி. "நாவாயுறைகின்ற என்நாரணநம்பீ - ஆவாவடியானிவனென்றருளாயே" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - ஆஶ்ரிதார்த்தமாக இத்யாதி.

"ஆகிய" என்றதுக்கு பாவம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. அதாவது - தனக்கில்லாதத்தை எறட்டுக்கொண்டானென்கிறது "ஆகிய" என்கையாலே என்றபடி. விவரணம் - நீ கொடுக்க இத்யாதி. "மாவலியைநிலங்கொண்டாய்" என்றதுக்கு பாவம் - வெறும்புறத்திலே இத்யாதி. வெறும்புறத்திலே - நிர்நிபந்தநமாக. மாவலியை - மாவலிபக்கல்நின்றும். தேவாஸுரயுத்தத்திலே அஸுரரைச் செற்றவனே. கீழிரண்டையும்பற்ற - ஆஶ்ரித இத்யாதி. அடுத்தணித்தாக - ப்ரத்யாஸந்நமாக.

திருநாவாயிலே நித்யவாஸம்பண்ணுகிற. [என்நாரணநம்பீ] - ஆஶ்ரிதவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே நோக்காக ஸர்வாந்தர்யாமியானவன். [நாரணநம்பீ] - அதுக்கு உறுப்பாக ஆஶ்ரிதவத்ஸலனாய், அவர்களுக்கு உறுப்பாகப்பெற்றோமென்றத்தாலே பரிபூர்ணனானவனே! [ஆவா இத்யாதி] - "க்ருபயா கேவலமாத்மஸாத் குரு" (க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:) என்கிறபடியே, 'ஐயோ, இவன் அநந்யகதி; இவனுக்கு வேறொருபுகலில்லை' என்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும். [அடியான்] - அவன் அருளுகைக்கும் இவன் அருள்கொள்ளுகைக்கும் ஸம்பந்தஞ் சொல்லுகிறது.

---

## எட்டாம் பாட்டு.

---

அருளாதொழிவாய்அருள்செய்துஅடியேனைப்
பொருளாக்கி உன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்
மருளேயின்றி உன்னைஎன்னெஞ்சத்திருத்தும்
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே!

ஆ.—(அருளாதொழிவாய்.) - அஜ்ஞாநகந்தமில்லாததொருபடி உன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிவிஷய திவ்ய ஜ்ஞாநத்தை உன்க்ருபையாலே எனக்குத் தந்தருளின நீ, இன்னமும் உன்க்ருபையாலே "நம்மடியான் இவன்" என்று விஷயீகரித்தருளி, அடியேனை உன் பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தருளாதொழிவாய், திருவுள்ளமானபடி செய்தருள்! என்றுகொண்டு எம்பெருமானை இன்னுதாகிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், அபிலஷித்தபடி பெறாமையாலே திருவுள்ளம் கலங்கின ஆழ்வார் "அருளிலுமருள், தவிரிலும்தவிர், இப்போது கலங்காதே உன்னை அநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணும்" என்றர்த்திக்கிறார். [அருளாதொழிவாயென்று தொடங்கி] - கிருபைபண்ணாதொழியிலுமொழி, க்ருபைபண்ணி நிரதிஶயபோக்யமான திருவடிக்கீழே என்னை வைத்துக்கொள்ளிலும் கொள். [மருளே என்ற மேலுக்கு] - தென் திருநாவாயென்தேவே! அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்நெஞ்சிலே இருத்தும்தெளிவைத் தரவேணும்.

---

"நம்பி" என்றதுக்கு பாவம் - அதுக்கு உறுப்பாக இத்யாதி. அதவா, கீழ்வாக்யத்திலே, அந்தர்யாமித்வஸூசித ஸௌலப்யத்தைச்சொல்லி, இவ்வாக்யத்தில் - வாத்ஸல்யஞ் சொல்லுகிறதாதல். அதுக்கு உறுப்பாக - ரக்ஷணத்துக்குஉறுப்பாக. அந்தர்யாமித்வமும் வாத்ஸல்யமும் பஹுவ்ரீஹியாலே-'க்ருபாமாத்ர இத்யாதி.' "ஸோऽஹம் தே தேவதேவேஶ நார்சநாதௌ ஸ்துதௌ ந ச। ஸாமர்த்யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத மே" இதி பஞ்சமேம்ஶே (எ - எo).
"அடியான்" என்றதுக்கு ப்ராப்தமான அர்த்தம் - அநந்யார்ஹ ஶேஷத்வம்; ஆர்த்தமானவர்த்தம் - அநந்யகதித்வம். ஒருவர்க்காயிருப்பாரை வேறு சிலர் ரக்ஷிக்க ப்ராப்தியில்லையிறே என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - இவன் அநந்யகதி இத்யாதி. "அடியான்" என்றதுக்கு பாவாந்தரம்-அவன் அருளுகைக்கு இத்யாதி. முந்தினது - அநந்யகதித்வம். (எ)

ப.—அநந்தரம், நீயருளாதிருக்கவுமாம், அருளவுமாம்; ஒரு கலக்கமில்லாதபடி உன்னை என்னெஞ்சிலேவைத்து அநுபவிக்கும்படியான ஞானத்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

அருளாதொழிவாய் - (இவன் செய்தபடி செய்கிறேன் என்று) க்ருபைபண்ணாதிருக்கிலுமிருக்கிறாய்; அடியேனை - (அநந்யகதியாய்ப் புனக்கேயாயிருக்கிற) என்னை, அருள்செய்து - நிரவதிக க்ருபைபண்ணி, பொருள் ஆக்கி - லப்தஸத்தாகனாக்கி, உன் பொன்னடிக்கீழ் - உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளின்கீழே, புக - ப்ரவேசிக்கும்படி, வைப்பாய் - வைக்கிலும் வைக்கிறாய்; தென் - கட்டளைப்பட்ட, திருநாவாய் - திருநாவாயிலே, என்தேவே - எனக்குப் பரமப்ராப்யனாகவிருக்கிறவனே! மருளே இன்றி - ஒருகாலும் அஜ்ஞாநகந்தமில்லாதபடி, உன்னை - (ஸர்வப்ரகாரபரிபூர்ணனாய் போக்யனான) உன்னை, என்நெஞ்சத்து - (அத்யந்தாஸக்திவிசிஷ்டமான) என்னெஞ்சிலே, இருத்தும் - இருத்தியநுபவிக்கும்படியான, தெருளே - தெளிந்த அறிவை, தரு - எனக்குத் தந்தருளவேணும். தருவென்று - தருவாயாகவேணுமென்றபடி.

இ.—எட்டாம்பாட்டில், அப்போதே அபேக்ஷிதம் பெறுமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம்; அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்னெஞ்சிலே இருத்தும்படி தெளிவைத் தரவேணும்" என்கிறார்.

[அருளாதொழிவாய்] - இவன் செய்தபடி செய்கிறேனென்று க்ருபைபண்ணாதேயிருக்கிலும் இரு; என்னார்த்தியைக்கண்டு க்ருபைபண்ணி நிரதிசயபோக்யமான உன்திருவடிகளின்கீழே அநந்யகதியான என்னை வைத்துக்கொள்ளிலும் கொள். [மருள் இத்யாதி] - மயர்வறமதிநலமருளினபடியே அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை எப்போதும் என்மனஸ்ஸிலே வைத்துக்கொள்ளும்படி, "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும். [தென்திருநாவாயென்தேவே] - "திருநாவாயிலே நின்றருளின நீயே ஆஸ்ரயணீயன்" என்னுமிடத்தை எனக்கறிவித்தவனே!

ஈடு.—எட்டாம்பாட்டு. அப்போதே யபேக்ஷிதம் பெறுமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம்; அஜ்ஞாநகந்தமில்லாதபடிஉன்னை என்னெஞ்சிலே யிருத்தும்படி தெளிவைத் தரவேணும்" என்கிறார்.

[அருளாதொழிவாய்] - என்பக்கல் க்ருபைபண்ணாதே இவன் பட்டது படுகிறான் என்றிருக்கிலும் இரு. [அருள்செய்து] - அன்றிக்கே, என்தூர்க்கதியைக்கண்டு க்ருபைபண்ணி. [அடியேனை யித்யாதி]-அஸத்கல்பனாயிருக்கிற என்னை, "ஸந்தமேநம்" என்கிறபடியே ஒருவஸ்துவாம்படி பண்ணி, நிரதிசயபோக்யமான உன் திருவடிகளின் கீழே வைத்துக்கொள்ளிலும் கோள். பொருளானாரை வைத்துக்கொள்ளும் ஸ்தாநம் பொன்னடிக்கீழ்போலே காணும். [மருளேயின்றியித்யாதி] - அடியில் * மயர்வறமதிநல மருளினபடியே, அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என் மநஸ்ஸிலே எப்போதும் வைத்துக்கொள்ளும்படி, "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும். [தென்திருநாவாயென்தேவே - தெருளேதரு] என்று க்ரியை; அன்றிக்கே,

---

எட்டாம்பாட்டு - அருளாதொழிவாய் இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - அப்போதே இத்யாதி. அருளாயென்றார் - அப்போதே என்று கூட்டுவது.

"ஆக்கி"என்றதுக்கு ஸாவம்-அஸத்கல்பனாய் இத்யாதி. "பொன்" என்கையாலே-நிரதிசயபோக்யம் என்றபடி. இத்தால் ரஸோக்தியாக ஸாவம் - பொருளானாரை இத்யாதி. பொருள் -

"மருளேயின்றி யுன்னை என்னெஞ்சத்திருத்தும் தெருளேதரு தென்திருநாவாய் என்தேவே ! அருளாதொழிவாய், அருள்செய்து அடியேனைப் பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப் பாய்: திருவுள்ளமானபடிசெய்" என்றும் பிள்ளான்பணிப்பது. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

தேவர்முனிவர்க்குஎன்றுங்காண்டற்கரியன்
மூவர்முதல்வன்ஒருமூவுலகாளி
தேவன்விரும்பியுறையுந்திருநாவாய்
யாவரணுகப்பெறுவார்இனியந்தோ?

ஆ.—(தேவர்.)-ப்ரஹ்மாதிகளுடைய சக்ஷுராதி ஸர்வகரணங்களுக்கும் அகோசரனாய், ப்ரஹ்மாதி ஸ்தாவராந்த ஸமஸ்தஜந்து நிர்மாணத்ராண ஸம்ஹரண சீலனான எம்பெருமான் விரும்பிக்கொண்டு ஸர்வகாலமும் உறைகிற திருநாவாயை அணுகப்பெறுமவர்கள் என்ன ஸாமர்த்யம் பண்ணினார்களோ? நான் ஸாமர்த்யஹீனனாயிழந் தேன்! என்று நோகிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், "நதேதேநாஸஹாஷரதேவஸே" என்று சக்ர வர்த்தி சொன்னாற்போலே "திருநாவாய் காணப்பெறாதே நான் முடியாநின்றேன். இனி வேறு திருநாவாய் அநுபவிக்கும் பாக்யவான்களாரோ" என்கிறார்.

[தேவரென்றுதொடங்கி] - ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் துர் ஜ்ஞேயனாய் ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனான ஸர்வேஸ்வரனாய் அத்யந்த விஸஜா தீயனானவன் அத்யாதரத்தைப்பண்ணிக்கொண்டு நிரந்தரமாக வர்த்தித்தருளுகிற திரு நாவாயை.

ப.—அநந்தரம், 'அறிவுடையார்க்கும் அறியவரிய ஸர்வாயிகன் வர்த்திக்கிற திருநாவாயை, அத்யந்தாபிநிவிஷ்டனான நான் பெற்றிலேன்; இனி யார் பெறப் புகு கிறார்?' என்கிறார்.

தேவர் முனிவர்க்கு-ஸமஸ்ததேவர்களுக்கும் ஸநகாதிமுனிவர்களுக்கும், (ஸ்வ யத்நத்தால்), என்றும் - ஸர்வகாலமும், காண்டற்கு - காண, அரியன் - அரியனாய், மூவர் - ப்ரஹ்மருத்ராதிகளுக்கு, முதல்வன் - ஸத்தாதிஹேதுபூதனாய், ஒரு - அத்விதீய மான, மூவுலகு - ஜகத்த்ரயத்தையும், ஆளி - (தன் ஸங்கல்பத்தாலே) நிர்வஹிக்குமவ னாய், தேவன் - ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஈஸ்வரன், விரும்பி - அத்யாதரம் பண்ணி, உறையும் - வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயை, அந்தோ - ஐயோ! இனி - இனி, அணுகப்பெறுவார்யாவர் - அணுகப்பெறுவாரார்? இவ்விநிவேசாதி ஶயத்திலும் கிட்டாதது இனிக்கிட்டுகிறதோ என்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், தாம் இப்படிச் சொன்ன வநந்தரம் அவன்பக்கல் ஒருவாசி காணாமைபாலே, "நதேதேநாஸஹாஷரதேவஸே" என்று சக்ரவர்த்தி சொன்

---

வன்துவும், தநமும். தரு-தரவேணும். தென்-அழகியதான. பின்ளான் நிர்வாஹத்துக்கு, "தெருளே தரு" என்றது - தேவுக்கு விசேஷணம். (அ)

'அந்தோ' - என்கிறபதத்தாலே - எனக்குள்ளது, அவனுக்கு உண்டாகப் பெறுதொழிவதே. "நதேமநுஷ்யா:" (நதேமநுஷ்யா:) - அவர்கள் செத்துப் பிறக்கிறவர்களுக்குக் கூட்டல்லர்கள். "தேவா:" (தேவா:)-அவர்கள் நித்யாநுபவம்பண்ணுகிறவர்களுக்குக் கூட்டாமித்தனை. "ய இத்யாதி" (யஇத்யாதி)-பதினாலாண்டும் ஒருபடி தப்பிக்கிடந்து அவர் மீண்டுவந்தால் அவ்வொப்பித்த முகத்தைக் காணப்பெறும் பாக்யாதிகர் ஆரோ? இங்கே, காதாசித்காநுபவம்பண்ணுமவர்கள், நித்யாநுபவம் பண்ணுமவர்களிலும் சீரியரே; "விண்ணுளாரிலும்சீரியரே." "வர்ஷேபஞ்சதமேபுந:" (வர்ஷேபஞ்சதமேபுந:) - பதினாலாண்டும் கழித்துப் பதினையாம் ஆண்டைக்கு இருப்பாரிறே காணப் பெறுவார்? காலம் முடிந்ததென்றிருக்கிறாய்த்து சக்ரவர்த்தி. (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

அந்தோ! அணுகப்பெறுநாள்என்றுஎப்போதும்
சிந்தைகலங்கித்திருமால்!என்றழைப்பன்
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்
வந்தேயுறைகின்றஎம்மாமணிவண்ணா.

ஆ.—(அந்தோ.) - இப்படி யுன்னை யாசைப்பட்டுப் பெறுதேயொழிந்தாலும் நிராசனாய்விடமாட்டாதே, பின்னையும், என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருநாவாயிலேவந்திருந்தருளின இக்குணத்தை யநுஸந்தித்து, என்றோ உன்னை நான் அணுகப்பெறுவதென்று எப்போதும் சிந்தைகலங்கித் திருமாலென்றழையாநிற்பன்! என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், உன்னை ஆசைப்பட்டுப் பெறுதொழிந்தாலும் விடமாட்டாதே சிந்தைகலங்கித் திருமாலே என்றழைப்பன்! என்கிறார்.

[அந்தோவென்று தொடங்கி] - 'ஐயோ! அணுகப்பெறும் நாள்என்றோ? என்று ஸர்வகாலமும் ஹ்ருதயம் கலங்கி ஶ்ரிய:பதியே!' என்று கூப்பிடாநிற்பன். [கொந்தார்மலரென்று மேலுக்கு] - நிரதிஶயபோக்யமான திருச்சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயிலே ஆஶ்ரிதர்க்கு ஸுலபனாய்வந்து வர்த்தித்தருளுவதுஞ்செய்து அதிஶ்லாக்யமான அழகை உடையவனே!

---

தேவாஶ்ச யேஜராமரணஹீநா: தேவஜ்ஞாத்ருஶிராமஸ்யவர்ஷேபஞ்சதமே புந:" இத்யயோத்யாகாண்டே (கூச.கூக) தஶரத:. "வர்ஷேபஞ்சதமே" என்றத்தைக் கடாக்ஷித்து - பதினாலாண்டுமோரபடி இத்யாதி. ஒருகால் பெருமாளைக்கண்டவர்கள் நித்யாநுபவம்பண்ணுமவர்களுக்குக் கூட்டாவர்களோவென்ன - காதாசித்க இத்யாதி. "த்ரக்ஷ்யந்தி" என்கையாலே - காதாசித்காநுபவம் என்றது. இதுக்கு ஸம்வாதம்-விண்ணுளாரிலும் இத்யாதி. ஸததாநுபவத்திற்கு மேட்டுமடையான இங்கேயிருந்து காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள், நித்யாநுபவம் பண்ணுகிறவர்களிலும் அதிகரென்றபடி. "புந:" என்றதுக்கர்த்தம் - பதினாலாண்டும் கழித்து இத்யாதி. பதினாலாண்டும் கழிந்து பதினையாமாண்டு வாராதோவென்ன- காலம் இத்யாதி. (கூ)

ப.—அநந்தரம், விடவொண்ணாத ஸௌந்தர்யத்தையுடைய உன்னைக் கிட்டப்பெறுநாளுண்டாவதுதான்! என்று நெஞ்சுகலங்கிக் கூப்பிடாநின்றேனென்கிறார்.

கொந்தார் - கொத்தாகநிறைந்த, மலர்ச்சோலைகள் - பூக்களையுடைத்தான சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருநாவாய் - திருநாவாயிலே, வந்தே - (பரமபதத்தை விட்டே)வந்துநிற்குமவனாய், உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுகிற, எம் மாமணியன்ன - நிரதிஶயபோக்யமான நீலரத்நம்போலே யிருக்கிற வடிவையுடையவனே! அந்தோ - ஐயோ! அணுகப்பெறுநாள் என்று - உன்னை யணுகப்பெறுநாளாவதுதான் என்று, எப்போதும் - ஸர்வகாலமும், சிந்தைகலங்கி - நெஞ்சுகலங்கி, திருமாலென்று - ஸ்ரீமானே யென்று, அழைப்பன் - கூப்பிடாநின்றேன்.

இ.—பத்தாம்பாட்டில், உன்னைப்பெறுமதொழிந்தாலும் விடமாட்டாதே மநஸ்ஸுகலங்கிக் கூப்பிடாநிற்பன் என்கிறார்.

[அந்தோ இத்யாதி] - சொல்லத்தொடங்கினது தலைக்கட்டமாட்டாத வலஹாநியாலே அந்தோ! என்கிறார். "அணுகப்பெறுநாள்மவை" என்னவேண்டியிருக்க அதுமாட்டாதொழிகிறாரிறே. ஒருகால்சொல்லி வலஹாநியாலே விடுகையன்றிக்கே, ஸர்வகாலமும் ஹ்ருதயம் கலங்கி மாதாபிதாக்களைச்சொல்லிக் கூப்பிடுமாபோலே திருமாலென்றழையாநிற்பன். "விதாரோ தாவரோயவ:". [கொந்தாரித்யாதி] - கொத்து மிக்க மலரையுடைத்தான சோலைகளாலே சூழப்பட்டிருந்துள்ள திருநாவாயிலே. நித்ய வஸந்தமான சோலைகளை உடைத்தாகையாலே நிரதிஶயபோக்யமான தேஶமென்கை. [வந்தேயித்யாதி] - ஒருதேஶத்திலேசென்றே காணக்கடவதான வடிவைக்கொண்டு ஆஶ்ரிதார்த்தமாகவந்து நித்யவாஸம் பண்ணுகிறவனே! அவ்வடிவை எனக்குக் காட்டாதவன்று, உன்வரவு அஸத்ஸமமன்றோ வென்கை.

ஈடு.—பத்தாம் பாட்டு. உன்னைக் காணப்பெறாமை நெஞ்சழிந்து கூப்பிடாநின்றேன் என்கிறார்.

[அந்தோஅணுகப்பெறுநாள் என்றெப்போதும்] - சொல்லத்தொடங்கினது தலைக் கட்டமாட்டாத வலஹாநியாலே, அந்தோ! என்கிறார். "அணுகப்பெறுநாள்மவைகொல்" என்னவிறே நினைப்பது. [எப்போதும்]-ஒருகால் சொல்லப்புக்கு இளைத்தால் விடுகையன்றிக்கே, ஸர்வகாலமும். [சிந்தைகலங்கி இத்யாதி] - ஹ்ருதயம்கலங்கி; மாதாபிதாக்கள் பேரைச் சொல்லி ஆர்த்தனான ப்ரஜை கூப்பிடுமாபோலே திருமால் என்றழைப்பன். [கொந்தார் இத்யாதி] - கொத்துமிக்க மலரை யுடைத்தான சோலைகளாலேசூழப்பட்ட திருநாவாயிலே. நித்யவஸந்தமான சோலைகளை யுடைத்தாகையாலே நிரதிஶயபோக்யமான தேசமென்கை. [வந்தேயுறைகின்ற] - ஒருதேஶவிசேஷத்திலே சென்று காணக்கடவதான வடிவைக் கொண்டு ஆஶ்ரிதார்த்தமாகவந்து நித்யவாஸம்பண்ணுகிறவனே! அவ்வடிவு எனக்குக் காட்டாதவன்று உன்வரவு அஸத்ஸமமென்கை. (க0)

பத்தாம்பாட்டு.—அந்தோ இத்யாதி. "சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - உன்னை இத்யாதி.

சொல்லத்தொடங்கினது ஏது? என்ன-அணுக இத்யாதி. அதாவது - "அணுகப்பெறு நாள்மவைகொலோ அந்தோ!" என்னநினைத்து, வலஹாநியாலே "மவைகொல்" என்று முடியச் சொல்லமாட்டாதே, முன்னே "அந்தோ" என்கிறாரென்றபடி. மவைகொல் என்று - அத்யாஹார்யம். சோலைகளைச் சொன்னதுக்கு பாவம் - நித்யவஸந்தமான இத்யாதி. "மாமணி வண்ணா" என்றதுக்கர்த்தம் - ஒருதேசவிசேஷத்திலே இத்யாதி. ஸார்த்தபாவம் - அவ்வடிவு இத்யாதி. உத்தரார்த்தத்தை யநுஸந்தித்து பூர்வார்த்தத்தை யநுஸந்திப்பது - அந்வயக்ரமம். (க0)

# பதினோராம் பாட்டு.

---

வண்ணம்மணிமாட நல்நாவாயுள்ளானை
திண்ணம்மதிள்தென்குருகூர்ச்சடகோபன்
பண்ணார்தமிழ்ஆயிரத்திப்பத்தும்வல்லார்
மண்ணாண்டுமணங்கமழ்வர்மல்லிகையே.

ஆ.—(வண்ணம்.) - இத்திருவாய்மொழிவல்லார், ஐஹிகாமுஷ்மிக ஸகல க்ஷேமங்களையும் ஆர்ஜிக்கப்பெறுவ ரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் பெறும்பேற்றை யருளிச்செய்கிறார்.

[வண்ணம்மணிமாடமென்று தொடங்கி]-நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய் நிரதிஶயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை. [திண்ணம்மதிளென்று மேலுக்கு] - திண்ணிதான மதிளையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. பண்ஆர்ந்த தமிழான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்கள், ஐஹிகாமுஷ்மிக ஸகல க்ஷேமங்களையும் ஆர்ஜிக்கப்பெறுவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலமாக, உபயவிபூதியிலுண்டான ஆதரணீயத்தைத்† யருளிச்செய்கிறார்.

வண்ணம் — நாநாவர்ணங்களை யுடைத்தான, மணி - மாணிக்கங்களாலே சமைந்த, மாடம் - மாடங்களையுடைத்தாய், நல் - நிரதிஶயபோக்யமான, நாவாயுள்ளானை - திருநாவாயிலே வர்த்திக்கிறவனைப் பற்றவுண்டாய், திண் - திண்ணியதாய், அம்- அழகிய, மதிள் - மதிளையுடைய, தென்குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடையதாய், பண்ஆர் - பண்நிறைந்த, தமிழாயிரத்து - தமிழானவாயிரத்து, இப்பத்தும் - இப்பத்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், மண் - பூம்யுபலக்ஷிதமான லீலாவிபூதியை, ஆண்டு - தங்கள் நினைவின்படியே ஸ்வத்வமாக நிர்வஹித்து நித்யவிபூதியிலும் பகவதநுபவ ஜ்ஞாநத்தாலே, மல்லிகை - மல்லிகைபோலே பரிஶுத்தமான, மணம்கமழ்வர் - யஶஸ் ஸௌரப்யவிகாஸத்தையுடையவராவர். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் ஐஹிகாமுஷ்மிக க்ஷேமங்களையும் ஆர்ஜிக்கப்பெறுவர் என்கிறார்.

[வண்ணம்இத்யாதி]-நாநாவர்ணங்களானரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய் நிரதிஶயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை. [திண்ணம்மதிளித்யாதி] - திண்ணிதானமதிளையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வாரருளிச்செய்த; திருநாவாய்க்குரக்ஷை திருநகரியிலேபோலே. ஆழ்வார்பரியவே அவ்வூர்க்கு ரக்ஷையென்னுதல். ஈஶ்வரனுக்கு தநம்ஆழ்வாராகையாலே தநம்கிடந்தவிடத்திலே

---

† ஆதரணீயதையை என்றிருந்தால் ஸ்வரஸம். அல்லது - பாவப்ரதாந நிர்த்தேஶமென்று கொள்க.

[மாலைநண்ணித் தொழுதெழுமினோ] - ஸர்வேஶ்வரன் திருவடிகளைக்கிட்டி ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள். "மால்" என்று ஸ்நேஹகார்யமான வ்யாமோஹமாய், மாலையுற்றேனெனவுமாம்; பக்தியுக்தராய் என்றபடி. "தொழுதெழு" என்கிற தம்முடைய வாஸனையாலே, "தொழுதெழுமினோ" என்கிறார். [வினைகெட] - பகவத்ப்ராப்தி விரோதியான கர்மமென்னுதல்; மல்லிகை கமழ்தென்றலில் விரஹ க்லேஶம் தீரும்படியாக என்னுதல். [காலைமாலை] - ஆஶ்ரயணத்துக்குக் காலநியதி இல்லையென்கிறது; "ஆகிநடுவந்திவாய்" என்கிறபடியே ஸர்வகாலத்துக்கும் உபலக்ஷணம். [கமலமலரிட்டு] - ஸர்வபுஷ்பங்களுக்கும் உபலக்ஷணம். நீங்கள் விரும்பின ப்ராக்ருத த்ரவ்யமே அமையுமென்கை. [நீர்] — அதிகாரிகளும் முன்புத்தை நீங்களேயமையும். [வேலையித்யாதி] - ஸமுத்ரம் அணித்தாகையாலே திரைகள்வந்து மோதா நின்றுள்ள மதிளாலேசூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே பரமஹரமான தேஶமென்கை. [ஆலின்மேலால் அமர்ந்தான்]-ஸகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து ஒரு பவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளினவன். உங்கள் விரோதி நிரஸநங்கள் ஊர் வடங்களேயாகிலும் வடிப்பிக்கவல்லன் என்கை. அவன் அடியிணைகளை, இறைஞ்சுமின்.

ஈடு.—முதற்பாட்டு. இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற ஆஶ்ரயணத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[மாலைநண்ணித்தொழுதெழுமினோ]-ஸர்வேஶ்வரன் திருவடிகளைக்கிட்டி யாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள். "மால்" என்று ஸ்நேஹகார்யமான வ்யாமோஹமாய், மாலையுற்றேனெனவுமாம்; பக்தியுக்தராயென்றபடி. 'தொழுதெழுமினோ' என்கிறார், "தொழுதெழு" என்கிற தம்முடைய வாஸனையாலே. "அருளினன்" என்று ப்ரபத்தியைப்பற்றி இழிந்தவராகையாலே, தம்வாஸநை தோற்றச்சொல்லுகிறார். [எழுமினோ] - ஸர்வேஶ்வரன் இவ்வாத்மவர்க்கத்துக்கெல்லாம் ஶேஷியாய் அவனைக் குறித்து ஶேஷத்வாகாரம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே பலர்க்குமாகச் சொல்லுகிறார். [வினைகெட] - பகவத்ப்ராப்தி விரோதிவர்க்க மென்னுதல்; * மல்லிகைகமழ் தென்றலில் விரஹக்லேசந் தீரும்

முதற்பாட்டு.—மாலை இத்யாதி. இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற ஆஶ்ரயணமாவது - உபாஸநமுகத்தாலும் ப்ரபத்திமுகத்தாலும் அவனையடைகை.

"ஆலின்மேலாலமர்ந்தானை - மாலினுடைய - அடியிணைகளை - நண்ணித் தொழுதெழுமினோ" என்றந்வயித்து, ப்ரபத்திபரமாக அர்த்தம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. "மாலை" என்கிற ஐகாரம் அவ்யயம். "மாலைநண்ணி" என்றதுக்கு பக்திபரமாக அர்த்தாந்தரம் - மாலென்று இத்யாதி. ஸ்நேஹகார்யமான வ்யாமோஹத்தை பக்தியென்கிறது, காரணே கார்யோபசாரம் பண்ணுகிறதென்றபடி. ஆயாஸ ஸாத்ய பக்தியை, "தொழுதெழுமினோ" என்று லகுவாகச் சொல்லுவானென்? என்ன - தொழுதெழுமினோ இத்யாதி. விவரணம் - அருளினன் இத்யாதி. அதாவது - "அருளினன்" என்று நிர்ஹேதுக பகவத்க்ருபை யொன்றையே யவலம்பித்து ஸர்வேஶ்வரனைப்பற்றின வாஸனை தோற்ற வென்றபடி. "எழுமினோ" என்கிற பஹுவசநார்த்தம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. பக்திபரமானபோது, "வினை" என்றதுக்கர்த்தம் - பகவத்ப்ராப்தி இத்யாதி. ப்ரபத்திபரமானபோது அர்த்தாந்தரம் - மல்லிகை இத்யாதி. அதுவா, அர்த்தத்வயமும் பக்திபரயோஜனையிலேயாகவுமாம்; அப்போது, விரஹக்லேஶம் தீரும்படியென்றது பக்திமான்களுக்கு விரஹக்லேஶமில்லாதிருக்கச்செய்தேயும் தம்முடைய வாஸனையாலே யருளிச்செய்தாரென்றபடி. பக்திமானுக்கு, "ப்ராதஸ்ஸ்ம்ருத்யாஸந்த்யாயோர் மத்யாஹ்நாதிஷு ஸம்ஸ்மரந் । நாராயணமவாப்நோதி ஸத்ய: பாபக்ஷயாந்நர:" என்று - காலையும் மாலையும் ஆஶ்ரயிக்கவேணும். ப்ரபத்திபரமான

## இரண்டாம் பாட்டு.

கள்ளவிழும்மலரிட்டு நீர்இறைஞ்சுமின்
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி நாளுந்தொழுதெழுமினோ தொண்டரே !

ஆ.—(கள்ளவிழும்.) - அவன் திருவடிகளைக் கள்ளவிழும் மலரிட்டு நீர் இறைஞ்சுமிடத்தில், அவற்றை நெஞ்சாலே நினைத்துக்கொண்டு நாளும் இறைஞ்சுமின் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், 'சாபலமுடையார் அவன் திருவடிகளை ஸமாஶ்ரயிக்குமிடத்தில் அவனுக்குஎன் புகுருகிறதோ ? என்று ஸ்நேஹிகளுக்கு அஞ்சவேண்டாதபடி சேமமுடைத்தான திருக்கண்ணபுரத்தை அநுஸந்தித்து நிர்பரராய் நீங்கள் நாள்தோறும் ஆஶ்ரயியுங்கோள் ? என்கிறார்.

[கள்ளவிழும் மலர்] - செவ்விப் பூ. [நள்ளியென்று தொடங்கி] - ஜல ஸம்ருத்தியாலே நள்ளிசேரும் வயல்சூழ்ந்த அகழின் அருகே நக்ஷத்ர பதத்தளவும் உயர்ந்திருக்கிற மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்தை. வெள்ளியாலே செய்யப்பட்டுத் தகுதியான மதிளென்றுமாம்.

ப.—அநந்தரம், அவன் வர்த்திக்கிறதேசத்தை ஆராதித்து அதினுடைய க்ஷேமவத்தையை யநுஸந்தித்து ஸுகிகளாய் வர்த்திக்கப் பாருங்கோளென்கிறார்.

தொண்டர் - அநுபவசாபலமுடைய, நீர் - நீங்கள், கள் - மது, அவிழும் - மலருகிற, மலர்இட்டு - பூக்களைக்கொண்டு, இறைஞ்சுமின் - ஆராதியுங்கோள் ; (ஜலஸம்ருத்தியாலே), நள்ளி - (க்ஷுத்ரமான) பெண்நண்டுகள் அகப்பட, சேரும் - சேர்ந்துவர்த்திக்கிற, வயல் - வயல்களாலே, சூழ் - சூழப்பட்ட, கிடங்கின் - அகழினுடைய, புடை - பரிஸரத்திலே, வெள்ளி - வெள்ளியாலே, ஏய்ந்த - சமைந்த, மதிள் - மதிளாலே, சூழ் - சூழப்பட்ட, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை, (ரக்ஷையுடையதேசமென்று), நாளும்உள்ளி - நித்யாநுஸந்தாநம்பண்ணி, தொழுதுஎழுமினோ - அநுபவஜநிதப்ரீதியாலே தொழுது கிளர்த்தியோடே அர்த்தியுங்கோள். 'இறைஞ்சுமின்' என்கிறவிடம், கீழில் * அடியிணைகளோடே யந்விதமாய், தேசபரமாகவுமாம். வெள்ளியேய்ந்தவென்று - சுக்ரபதத்தோடே சேர்ந்தவென்றுமாம். அன்றியே, வெள்ளிபோன்ற நிறமுடைய மதிளென்றுமாம். நள்ளி - பெண்நண்டு.

இ.—இரண்டாம்பாட்டில், "இவ்விஷயத்துக்கு என்வருகிறதோ ?" என்று அஞ்சும்படி சாபலமுடையார் ஸுரக்ஷிதமான தேசமென்று, நிர்பயராய் நித்யமாக ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[கள்ளவிழும் இத்யாதி] - செவ்விப்பூவைக் கொண்டுஆஶ்ரயியுங்கோள். இவன் ப்ரேமத்தாலே செவ்வியை யுடைத்தாய் விலக்ஷணமான புஷ்பங்கள் தேடக்கடவன் ; "கள்ளார் துழாயும் கணவலரும்" என்கிறபடியே புஷ்பஜாதிமாத்ரமே அமையுமிறே, அவன்படியைப் பார்த்தால். [நள்ளியித்யாதி] - நள்ளியென்று, பெண்நண்டு. நீர்

## மூன்றும் பாட்டு.

தொண்டர்!நுந்தம்துயர்போக நீர்ஏகமாய்
விண்டுவாடாமலரிட்டு நீர் இறைஞ்சுமின்
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்து
அண்டவாணன் அமரர்பெருமானையே.

ஆ.—(தொண்டர்.) - ஸர்வலோகேஶ்வரனாய், * அயர்வறுமமரர்கள் அதிபதியாயிருந்துவைத்து, ஸர்வஸமாஶ்ரயணீயனாகைக்காகத் திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருந்த அவனுக்கு அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்யுங்கோள் என்கிறார்.

ஒ.— மூன்றும்பாட்டில், சாபலமுடைய நீங்கள் துக்கம்கெட உபயவிபூதியுக்தனாய் திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவனை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[வண்டுபாடும் பொழில்] - நிரதிஶயபோக்யமான திருச்சோலை. [அண்டவாணன்] - லீலாவிபூதியையுடையான். [அமரர்பெருமான்] - நித்ய விபூதியையுடையான்.

ப.—அநந்தரம், விலக்ஷணவிபூதியுக்தனாய்க்கொண்டு ஸுலபனான ஸர்வேஶ்வரனை ஏககண்டராய் ஆராதியுங்கோள் என்கிறார்.

வண்டு - வண்டுகளானவை, பாடும் - களித்துப்பாடும், பொழில்-, சூழ் - சூழ்ந்த, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, அண்டவாணன் - பரமபதநிலயனாய், அமரர்பெருமானை - ஸூரிபோக்யனாய்க்கொண்டு நின்றவனை, தொண்டர் - ஸகலகைங்கர்யஸித்திவேஶயுக்தரானவர்களே! நுந்தம்துயர் - உங்களநுபவாலாபக்லேஶம், போக - தீரும்படி, நீர் - நீங்கள், ஏகம்ஆய் - ஏக ஹ்ருதயராய்க்கொண்டு, விண்டு - விகாஸோந்முகமாய், வாடா - செவ்வியழியாத, மலர்இட்டு - பூக்களையிட்டு, நீர்இறைஞ்சுமின் - உங்கள் ஶேஷத்வாநுரூபமாக ஆராதியுங்கோள்.

இ.—மூன்றும்பாட்டில், திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதியுக்தனாய்த்து; உங்கள் துக்கம் கெட அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[தொண்டர்] - ஆஶாலேஶமுடைய நீங்களென்னுதல்; "ஸுஹ்ருத்வைஷ்ணவஶ்ரீஷு" என்றிருக்கும் நீங்களென்னுதல். [நுந்தம் துயர்போக] - துயரும் வ்யாவ்ருத்தமாயிறே யிருப்பது. விஷயப்ராவண்யத்தால்வந்த து:க்கமென்னுதல், இறைஞ்சப்பெறாத தன்னுடைய விரஹத்தால்வந்த து:க்கமென்னுதல். [நீர் ஏகமாய்] - நீங்கள் அநந்யப்ரயோஜநராய் என்னுதல், நீங்களெல்லாரும் ஒருமிடறாய் என்னுதல். 'தொண்டர்' என்கையாலே எல்லாரும் ஒருமிடறாகலாமிறே. [விண்டு வாடாமலர்] - அலரத்தொடங்கினவளவாய்க் கழியவலர்ந்து வாடாத பூ. செவ்விப்பூவைக்கொண்டு ஆஶ்ரயியுங்கோள் என்கை. [வண்டுபாடும் இத்யாதி] - வண்டுகள் மதுபாநமத்தமாய்க்கொண்டு பாடாநின்றுள்ள சோலைசூழ்ந்த தேஶம்; "மதஶ்ஶராஶோகயஷூஷ" என்கிறபடியே நிரதிஶயபோக்யமான தேஶமென்கை. [திருக்கண்ணபுரத்து அண்டவாணன் அமரர்

நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனுமானவனென்னுதல். இங்கே ஆஶ்ரயித்து விரோதியைப் போக்கிப் பூர்ணநுபவம்பண்ண ஒருதேஶவிசேஷம் தேடிப்போகவேண்டா: நித்யஸூரிகளும்இங்கேவந்துஅநுபவிக்கும்படியிலாதிகுணதிக்யம்உண்டிறேஇங்கு.அந்தர்க்குவைத்த சாலையில் விழித்திருப்பார்க்கு உஜ்ஜீவநமில்லையே; அப்படியன்றிறே இங்குத்தை நிலை. "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" (ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்) - இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி - "அம்மேட்டிலும் ஏறிப்பாயா நின்றால் தேசிகருக்குச் சொல்ல வேணுமோ?" என்று. (ங)

---

## நான்காம் பாட்டு.

---

மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை
தேனைவாடாமலரிட்டு நீர் இறைஞ்சுமின்
வானையுந்தும் மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
தான்நயந்தபெருமான் சரணாகுமே.

ஆ. —(மானைநோக்கி.) - எல்லார்க்கும் இனியனைக்கொண்டு நப்பின்னைப் பிராட்டியோடேகூடத் திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருந்த எம்பெருமானுக்கு இப்படி அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்யவே, தன்திருவடிகளில் நித்ய ஸித்தமான கைங்கர்யரூப ஸம்பத்தை யுங்களுக்குத் தந்து ரக்ஷித்தருளுமென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், திருக்கண்ணபுரத்திலே எம்பெருமானை நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[மானைநோக்கியென்று தொடங்கி] - மான்கள் தோற்கும்படியான நோக்கையும் ஸ்த்ரீத்வத்தையுமுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு நாதனாய் நிரதிஶயபோக்யனானவனைச் செவ்விப்பூவையிட்டு நீங்கள் தொழுங்கோள். [வானையுந்தும திளென்றமேலுக்கு]- மிகவும் உயரிதான மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்தை ஆதரம்பண்ணின ஸர்வேஶ்வரனானவன் தான் உங்களுக்கு ரக்ஷகனாம்.

ப.—அநந்தரம், அதிஶயிதபோக்யனான க்ருஷ்ணனை,நப்பின்னைப்பிராட்டி சேர்த்தியிலே ஆராதியுங்கோள் என்கிறார்.

மான் - மானானது, நை - (தோற்று)நையும்படியான, நோக்கு - நோக்கை யுடையளாய், மடம் - ஆத்மகுணபூர்ணையான, பின்னைதன் - நப்பின்னைப்பிராட்டிக்கு,

---

உபஸ்ஹிதாநுன்" என்றத்தால் பாவம் - இங்கேயாஶ்ரயித்து இத்யாதி. ஸம்ஸாரிகளுக்காக நிற்கிறநிலையிலே நித்யஸூரிகளுக்கு ப்ராப்தியில்லையேயென்ன - அந்தர்க்கு இத்யாதி. இத்தால் - ஸர்வ ஸமாஶ்ரயணீயனென்றபடி. ஸர்வஸமாஶ்ரயணீயனானால் "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" என்றது சேரும்படியென்? இந்தவசநத்திலே நித்யஸூரிகளுக்கு ப்ராப்தியில்லையென்று தோற்றாநின்றதேயென்ன - ப்ரதிமாஸ்வ இத்யாதி. அம்மேடென்றது - அப்ரபுத்தரை. அப்ரபுத்தாநாமபி என்று ஆளவந்தாருக்குக்கருத்து. "ஸுஹ்ருதிஷுதிவிஷ்ணோஹ்ருதிஷுதியோகிநாம் | ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம் ஸர்வத்ர ஸமதர்ஶிநாம்." 'வண்டுபோடும்' என்றுதொடங்கி, 'பெருமானை - தொண்டரென்று, இறைஞ்சுமின்' இத்யர்வயம். (ங)

பாங்கான தேஶம்'' என்று அத்தை விரும்பிவர்த்திக்கிற ஸர்வேஶ்வரனானவன். [சரணு குமே] - உங்களுக்கு ரக்ஷகனும், அம்மதிள் அவனுக்கு அரணானாற்போலே உங்களுக்கு அவன் மதிளாம். (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

சரணமாகும்தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால்வைகுந்தங்கொடுக்கும்பிரான்
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் தனதன்பர்க்குஅன்பாகுமே.

ஆ.—(சரணமாகும்.) - இப்படி ஶக்தியோகத்தாலே அவனை ஆஶ்ரயிக்க க்ஷமரன்றியே தன்திருவடிகளையே யுபாயமாகப்பற்றினார்க்கு ஒருபடியாலன்றியே எல்லாப்படியாலும் ரக்ஷகனாய், அப்போதே அவர்களை இப்ப்ரக்ருதியை விடுவித்துத் திருநாட்டிலேகொண்டுபோய்த் திவ்யப்ரக்ருதிகளாக்கி அவர்களோடே ஸம்ஶ்லேஷித்தல்லது தரிக்கமாட்டாதிருக்கச்செய்தே, அவர்களுக்கு இப்ப்ரக்ருதிஸம்பந்தம் அநாதிவாஸனையாலே ஸஹ்யமாயிருக்கையாலே, க்லுப்தகாலத்திலே இப்ப்ரக்ருதிதானேவிட்டால் திருநாட்டைக்கொடுத்தருளி, பின்னையும் அவர்கள்பக்கலுள்ள ஸ்நேஹாதிஶயத்தாலே தான் ஒன்றும் செய்யாதானாய், இவர்களுக்கு எத்தைச்செய்வேன் என்றிருக்குமென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், இப்படி ஶக்தியோகத்தால் அவனைஆஶ்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன்திருவடிகளே உபாயமாகப்பற்றினார்திறத்திற் செய்தருளும்படியை அருளிச்செய்கிறார்.

[சரணமென்று தொடங்கி] - தன்திருவடிகளையே உபாயமாகப்பற்றினார் ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றாரேயாகிலும் அவர்களுக்கு ரக்ஷகனும். மேலும் ''எல்லாம்'' என்றவற்றுக்குப் பொருள் இப்படியே. [மரணமென்று தொடங்கி] - ப்ரபந்நரானபின்பு அவர்களைபொழியத் தனக்குச் செல்லாதிருக்கச்செய்தே அவர்கள் இசையக்கொண்டுபோய் ஶரீராவஸாநத்திலே மஹோபகாரத்தைக்கொடுக்கும் மஹோபகாரகன். பண்டுவாஸிதமான விஷயங்கள் இந்தஶரீரத்தோடேபோம்; இனி, ஒரு ஶரீரத்திலே ப்ரவேஶித்து விஷயங்களிலே நசைபண்ணுவதுக்கு முன்பில் உபாயிலே மிகவும் போக்யமான தன்னழகைக்காட்டி இவனை இசைவித்து அப்போதே விஷயீகரிக்கும் என்றுகருத்து. [அரணமைந்த மதிளென்று மேலுக்கு] - அரணமாகப்போரும் மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே யிருந்து ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனானவன் தனக்கு ஸ்நேஹிகளானவர்க்கு மிகவும்ஸ்நேஹியாம்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதர்க்குப் பரமபதப்ரதனானவன், ஸ்வவிஷயத்தில் கைங்கர்யாதி நிவிஷ்டரானார்க்கு, அவிதிவேஶந்தான் ஒருவடிவுகொண்டாற்போலேயாம் என்கிறார்.

---

பின. நயக்கை - விருப்பம். ''மதிள்'' என்ற விசேஷணம் த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - அம்மதிள் இத்யாதி. (௪)

ப்ரபத்தி ஸர்வாதிகாரமேன்கிறது; "ஸமோஹம்ஸர்வபூதேஷு" (ஸமோஹம்ஸர்வ பூதேஷு) என்னக்கடவதிறே. பகவத்விஷயந்தான் ஸ்பர்ஶவேதியாயிருக்குமிறே; கைசிகத்தில் பகவத்ஸம்பந்தமுடையானொருசண்டாளனோட்டை ஸம்பாஷணம் ப்ராஹ்மணனுடைய ஆசாரவைகல்யத்துக்குப் பரிஹாரமாய்த்து; அவ்விடத்திலெல்லாம் சொல்லுகிற அர்த்தம் இதுவேயாய்த்து. [மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்] - இவன் தன் பக்கலிலே ந்யாஸம்பண்ணினவன்றுதொடங்கி இவனையொழியத் தனக்குச்செல்லாமையுண்டாயிருக்கச்செய்தேயும், இவனுடைய ருசியை யநுவர்த்தித்து, ஶரீரவிஶ்லேஷத்தளவும் அவஸரப்ரதீக்ஷனாய்நின்று, பின்னையதுண்டானால் பரமபதத்தைக்கொடுக்கும் உபகாரகன். தன்திருவடிகளைப்பற்றினவன்றே தானிருக்கிறவிடத்திலே இவனைக்கொடுபோய்ச் சேரவைத்துக்கொள்ளவேண்டியிருக்கச்செய்தேயும், நடுவேஇவனிருக்கும் நாலுநாளும் அவனுக்கு*ஒருபகலாயிரமூழியாயிருக்கையாலே 'மரணமானால்' என்கிறது. "மரணமானால்" என்கிறது - தனக்குஅஶக்தியில்லை, இவனுக்குக் கர்த்தவ்யமில்லை, இவன்ருசியைக்கடாக்ஷித்து நிற்கிறவித்தனை. இப்பாட்டில் "மரணமானால்" என்றத்தைக்கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம். [அரணமைந்த] - 'நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கேநின்றான்; என்வருகிறதோ?' என்றுஅஞ்சவேண்டாதிருக்கை. அரணமாம்படி சமைந்த: [தரணியாளன்]- பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. [தனதன்பர்க்கன்பாகுமே] - தனக்கு ஸ்நேஹிகளானவர்பக்கல் அதிப்ரவணனாம். [அன்பாகும்] - "அன்புடையவன்" என்று பிரிக்கவேண்ணாதபடி அன்புதான் ஒருவடிவுகொண்டாற்போலேயிருக்கை. (ரு)

---

உபபத்தியருளிச்செய்கிறார் - ஸமோஹமித்யாதி. "ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய: । யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்" இதி கீதாயாம் நவமே. இந்தப்ரபத்திக்கு விஷயபூதனான ஈஶ்வரன் தாரதம்யம்பாராதே விஷயீகரிக்குமென்கையாலே ப்ரபத்தியும் ஸர்வாதிகாரமென்று இவ்வாக்யத்துக்கு பாவம். அசுத்தரும் பகவத்விஷயத்துக்கு அதிகாரிகளோவென்ன - பகவத்விஷயந்தான் இத்யாதி. அதாவது - அசுத்தரையும் சுத்தராக்குமென்றபடி. அப்படி பகவத்விஷயந்தான் ஸ்பர்ஶவேதிபோலே அசுத்தரையும் சுத்தராக்கினவிடமுண்டோவென்ன; ஸாக்ஷாத் ஸ்வஸம்பந்திகளையேயன்றிக்கே தத்ஸம்பந்தி ஸம்பந்திகளையும் ஶுத்தராக்குமென்கிறார் - கைசிகத்தில் இத்யாதி. "ஆனால்" என்றதின் பாவார்த்தம் - இவன்தன்பக்கலிலே இத்யாதி. அது - ஶரீரவிஶ்லேஷம். இதுதன்னை ஸ்பஷ்டமாகக் காட்டுகிறார் - தன்திருவடிகளை இத்யாதி. இவனுடைய ருசியாலே நடுவிருக்கும் நாலுநாளும் என்று கூட்டுவது. ஒருபகல் ஆயிரமூழியாயிருக்கிறது. அஶக்தியாலே யானாலோ? என்ன - மரணமானாலென்கிறது இத்யாதி. ப்ரவேஶத்திற்சொன்ன நிரூபணத்துக்கெல்லாம் ஶப்தநிர்வாஹம் இதுவென்கிறார் - இப்பாட்டில் இத்யாதி. கீழ்ச்சொன்ன - ப்ரவேஶத்திலேசொன்ன. பதப்ரயோகத்துக்கு பாவம் - நித்யஸூரிகள் இத்யாதி. அரணமாம்படிசமைந்த-ரக்ஷகமாம்படி சமைந்தவென்று பதார்த்தம். திருக்கண்ணபுரத்திலேயிருக்கிற தரணியாளனென்றபடி. "அன்பாகும்" என்றால் அதிப்ரவணனென்று தோற்றுமோ? என்ன—அன்புடையவனென்று இத்யாதி. 'அரணமைந்த' என்று தொடங்கி, 'தரணியாளனை - பிரான் - தனதாளடைந்தார்க்கெல்லாம் - சரணமாகும் - தனதன்பர்க்கன்பாகும் - மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்' என்றந்வயம். (ரு)

---

'அரணமாம்படி சமைந்த' என்பது ஸ்ரீகோஶங்களிற் காணவிடினும், அரும்பதத்தை நோக்க, இருக்கவேணுமென்று தோன்றுகின்றது.

## ஆறாம் பாட்டு.

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
செம்பொனாகத்தவுணனுடல்கீண்டவன்
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்து
அன்பன்நாளும்தனமெய்யர்க்குமெய்யனே.

ஆ.—(அன்பனாகும்.) - இப்படி தன்திருவடிகளில் அநந்யப்ரயோஜநரான ஸ்நேஹத்தையுடையரானவர்கள்பக்கல், தானும் என்றும் அநந்யப்ரயோஜநனான ஸ்நேஹத்தையுடையனாய், ஸ்வாநுபவவிரோதிகளையும் தானே போக்குமென்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், திருக்கண்ணபுரத்தில் எம்பெருமான் ஆச்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹிக்குமென்கிறார்.
[செம்பொனாகத்தவுணன்] - ஹிரண்யன். [நன்பொனேய்ந்த மதிள்சூழ்] - "ஆச்ரிதவிஷயீகாரத்துக்கு உறுப்பான தேசம்" என்று நல்ல பொன்னாலே செய்யப்பட்ட மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்துக்கு ஸ்நேஹியானவன் தன்திறத்து அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்குத் தானும் என்றும் அநந்யப்ரயோஜநனாயிருக்கும்.

ப.—அநந்தரம், ப்ரஹ்லாதனுடைய ஸ்வாநுபவவிரோதியான ஹிரண்யனைப்பிளந்தவன், தன்பக்கல் பாரமார்த்திக ப்ரேமமுடையார்க்குப் பரமார்த்தனாமென்கிறார்.

தனதாளடைந்தார்க்கெல்லாம் - தன்திருவடிகளை ஆச்ரயித்தார்க்கெல்லாம், அன்பனாகும் - நிரவதிகவாத்ஸல்யயுக்தனாய், செம் - சிவந்த, பொன் - பொன்போலேயிருக்கிற, ஆகத்து - வடிவையுடையனான, அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - ஶரீரத்தை, கீண்டவன் - அநாயாஸேந கிழித்தவனாய், (இப்படி ஆச்ரிதவிரோதிகளைப் போக்கி அடிமைகொள்ளுகைக்காக), நன்பொன் - நன்றான பொன்னாலே, ஏய்ந்த - சமையப்பட்ட, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, அன்பன் - விரும்பிவர்த்திக்குமவன், தனமெய்யர்க்கு - தன்பக்கல் பாரமார்த்திகப்ரயோஜநபுத்தியுடையார்க்கு, நாளும் - என்றுமொக்க, மெய்யன் - (தானும்அவர்கள்பக்கலிலே) பாரமார்த்திக ப்ரயோஜநபுத்தியுடையனாயிருக்கும்.

இ.—ஆறாம்பாட்டில், தன்னை ஆச்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாமென்கிறார்.
[அன்பனாகும் இத்யாதி] - தன்திருவடிகளை உபாயமென்று பற்றினார்க்கு, "ஶரணாகதவத்ஸல:" என்கிறபடியே அவர்கள் தோஷம் தோன்றாதபடி வ்யாமுக்தனாயிருக்கும். "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்". இவர்களுடைய விரோதி செய்வது என்? என்னில்; ஸ்ரீப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டதுபடும். ஹிரண்யனாகிற அஸுரனுடைய ஶரீரத்தை அநாயாஸேந கிழித்தவன். [நன்பொன் ஏய்ந்தமதிள்] - நல்லபொன்னாலே செய்யப்பட்ட மதிள்: ஸ்ப்ருஹணீயமான மதிளென்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] - ஆச்ரிதரக்ஷணத்துக்கு உறுப்பான தேசம் என்று அவன் விரும்பி வர்த்திக்கிற ஊர். [தனமெய்யர்க்கு - நாளும் மெய்யனே] - தன்பக்கல் அநந்யப்ரயோஜநராயிருப்

பார்க்கு என்றுமொக்கத் தான் அநங்யப்ரயோஜநனாயிருக்கும். தன்பக்கல் மித்ரபாவ முடையார்க்கு "நத்யஜேயம்" என்றிருக்கும் அவன்.

ஈடு.— ஆறும்பாட்டு. தன்னை ஆஶ்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாமென்கிறார்.

[அன்பன் இத்யாதி] - தன்திருவடிகளையே உபாயமாகப் பற்றினார்க்கு, "ஶரணாகதவத்ஸல:" (ஶரணாகதவத்ஸல:) என்கிறபடியே அவர்கள் தோஷம் தோற்றாத படி வ்யாமுக்தனாயிருக்கும்; "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்" (தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்). இவர்களுடைய விரோதி செய்வதென்னென்னில்?—ப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டது படும். ஹிரண்யனென்கிற அஸுரனுடைய ஶரீரத்தை அநாயாஸேந கிழித்த வன். [நன்பொனேய்ந்தமதிள்] - நல்லபொன்னாலே செய்யப்பட்ட மதிள்; ஸ்ப்ருஹ ணீயமான மதிள் என்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] - "ஆஶ்ரிதரக்ஷணத்துக்குப் பாங் கானதேஶம்" என்றுவிரும்பி வர்த்திக்கிற ஊர். [நாளும்தனமெய்யர்க்குமெய்யனே] - தன் பக்கல் * அநங்யப்ரயோஜநரா யிருப்பார்க்கு, தானும் அவர்கள்பக்கல் என்றுமொக்க அநந்ய ப்ரயோஜநரா யிருக்கும், தன்பக்கல் மித்ரபாவமுடையார்க்கு "நத்யஜேயம்" (நத்ய ஜேயம்) என்றிருக்கும் அவன். (சு)

## ஏழாம் பாட்டு.

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்து
ஐயன்ஆகத்தணைப்பார்கட்கு அணியனே.

ப்ர.—ஸுந்தரகாண்டே உக. ராவணம் ப்ரதிஸீதா. விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல: தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி । உ௦ - யுத்த காண்டே கஅ. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந தோஷோயத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்.

ஆறும்பாட்டு—அன்பனாகும் இத்யாதி. "செம்பொனாகத்தவுணனுடல் கீண்டவன் - தனமெய்யர்க்கு மெய்யனே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - தன்னை இத்யாதி.

அப்படி வ்யாமுக்தனோவென்ன - தோஷோயத்யபி இத்யாதி. "விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல: । தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" இதி ஸுந்தர காண்டே ராவணம்ப்ரதி ஸீதா (உக-உ௦). "மித்ரபாவேந" இத்யாதி, "தோஷோயத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" இதி யுத்தகாண்டே ராம:. (கஅ-ங) திருக்கண்ண புரத்தன்பன் - திருக்கண்ணபுரத்திலே அன்பையுடையவனென்று ஶப்தார்த்தம். தனமெய்யர்க்கு நாளும் மெய்யனென்றபடி. "மெய்" என்று - அநங்யப்ரயோஜநத்தையாக வருளிச்செய்து, மித்ர பாவமாக அர்த்தாந்தரம் - தன்பக்கல் இத்யாதி. அதாவது - மித்ரபாவமொழிய மெய்கூடாமை யாலே, மெய் என்று - மித்ரபாவத்தைச் சொல்லுகிறதென்றபடி. 'செம்பொனாகத்து' என்று தொடங்கி, 'திருக்கண்ணபுரத்தன்பனானவன் - தனதாளடைந்தார்க்கெல்லாம் - அன்பனாகும் - தனமெய்யர்க்கு - நாளும் - மெய்யனும்' என்றந்வயம். (சு)

ஆ.—(மெய்யனாகும்.) - இப்படி அநந்யப்ரயோஜநராகத் தொழுவார்க்கெல்லாம் தன்னை உள்ளபடியே காட்டிக்கொடுக்கும்; அநந்யப்ரயோஜநராகத் தொழாதார்க்கெல்லாம் தன்னை உள்ளபடி காட்டான். அநந்யப்ரயோஜநராக ஆச்ரயிக்கைக்கு ஏகாந்தத்தைப்பண்ண அவன் இப்படி ஸுலபனானபோதென்னில்; தானே ப்ராப்யன் என்றிருப்பார்க்கு அவன் ஸுலபனாய், இவ்விடத்தில் ஒரு ஸந்தேஹமில்லையென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்குத் தான் ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்களுடைய அபேக்ஷிதங்களையே கொடுத்துத் தன்னை அகற்றும் என்கிறார்.

[செப்பில்வாளையென்று மேலுக்கு] - அதிஸம்ருத்தமான திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற பரமஸௌசீல்யவானானவன் அநந்யப்ரயோஜநனானார்க்கு ஸுலபனாம். இதில் ஒருஸந்தேஹமுமில்லை.

ப.—அநந்தரம், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய்க்கொண்டு ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவ்வோ ப்ரயோஜநங்களைக்கொடுத்து அகலநிற்குமென்கிறார்.

விரும்பித்தொழுவார்க்குஎல்லாம் - தன்பக்கலிலே ப்ரயோஜநபுத்தியன்றி விரும்பி யாச்ரயிப்பார்க்கெல்லாம், மெய்யன்ஆகும் - (தன்னுடைய) பாரமார்த்திகமான ப்ராப்யாகாரத்தை யுடையனாய்க்கொண்டு ப்ரகாசியாநிற்கும்; புறமேதொழுவார்க்கெல்லாம் - புறம்பே சிலப்ரயோஜநங்களைக் கணிசித்து கர்த்தமாக ஆச்ரயிப்பார்க்கு, பொய்யன்ஆகும் - அந்த ப்ரயோஜநத்தளவைக் கொடுத்துத் தன்னை மறையாநிற்கும்; செய்யில் - தன்னிலமானசெய்யிலே, வாளை - வாளையானது, உகளும் - உகளாநிற்கிற, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, ஐயன் - உபகாரகனாக நிருபாதிக ஸௌசீல்யவாயிருக்கிறவன், ஆகத்தணைப்பார்கட்கு - தன்காலகவாயிலே தன்னை ப்ராப்யமாக ஸ்வீகரிப்பார்க்கு, அணியனே - (ஸாதாரணஸௌசீல்யவாயிருக்கச்செய்தே) அஸாதாரண ஸுலபனும்.

இ—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவற்றைக் கொடுத்துத் தான் அகலும் என்கிறார்.

[மெய்யன் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயிக்குமவர்கள் ஏனுமாகிலும் அவர்கள் அபேக்ஷிதத்தையுடைய நடக்கும்; ப்ரயோஜநங்களைப் பற்ற ஆச்ரயிப்பார்க்கு ஸத்யமான அர்த்தப் பதார்த்தங்களை அளித்துக்கொடுத்தானைத் தன்னைக்கொண்டகலும். "ஜுஷாஸுபாந்தேவஸேநோ" என்றிருக்கும் பாண்டவர்களுக்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டவந்த துர்யோதனுக்கு நாராயணகோபாலர்களை அடையக் கொடுத்தானாய், தான் பாண்டவர்களுக்காய் நின்று அத்தலையை அழியச்செய்கையாலே பொய்யனாகும். [செப்பில்இத்யாதி] - செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலேநிற்கிற பரமஸௌலப்யம். திர்யக்குக்களும் களித்துவர்த்திக்கும்படி ஸௌஹார்த்தம் என்கை. [ஆகத்து இத்யாதி] - தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும். அநந்ய ப்ரயோஜநர்க்கு, "கிஞ்சராவஸேவகதா" என்றிருக்கும்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அத்தைக்கொடுத்துத் தான்அகலநிற்குமென்கிறார்.

[மெய்யனாகும் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு அவர்களாரேனுமாகிலும் அபேக்ஷிதத்தை முடிய நடத்தும்; புறம்பே ப்ரயோஜநங்களைப்பற்ற ஆச்ரயிப்பார்க்கு வ்யஞ்ஜகமான அப்புருஷார்த்தங்களை யாதரித்துக் கொடுத்தானாய்த் தன்னைக் கொண்டகலும். "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா:" (க்ருஷ்ணாச்ரயா:க்ருஷ்ணபலா:) என்றிருப்பார்க்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயணகோபாலர்களையடையக் கொடுத்தானாய், தான் பாண்டவர்களுக்காகநின்று அத்தலையை யழியச்செய்கையாலே பொய்யனாகும். [செய்யில் இத்யாதி] - செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்தியாநிற்கிற திருக்கண்ணபுரத்திலேநிற்கிற பரமஸம்பந்தம். திர்யக்குக்களும் களித்து வர்த்திக்கும்படியான போக்யதையையுடைய தேசமென்கை. தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும்; அநந்ய ப்ரயோஜநர்க்கு "கிங்கரௌ ஸமுபஸ்திதௌ" (கிங்கரௌஸமுபஸ்த்திதௌ) என்றிருக்கும். (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

அணியனாகும்தனதாளடைந்தார்க்கெல்லாம்
பிணியுஞ்சாராபிறவிகெடுத்தாளும்
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின்நாளும் பரமேட்டிதன்பாதமே.

*ஆ.—(அணியன்.) - இப்படி தன்திருவடிகளையே ப்ராப்யம் என்று பற்றின ரெல்லாருடைய துக்கங்களையும் துக்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கி, அவர்களுக்கு ஸுலபனாம்; ஆகலால், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்குமா*

---

*ப்ர.—மஹாபாரதே (த்ரோ - கஅரு.) க்ருஷ்ணாச்ரயா: இத்யாதிக்கு உத்தரார்த்தம் - க்ருஷ்ண:பராயணமேஷாம் ஜ்யோதிஷாமிவசந்த்ரமா: ॥உ௪॥*

---

*ஏழாம்பாட்டு.—மெய்யனாகும் இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அநந்ய இத்யாதி.*

*"எல்லாம்" என்றதைப்பற்ற - அவர்களாரேனுமாகிலும் என்றது. ஆரேனுமாகிலும் என்றது - எத்தனையேனும் நிஹீநஜந்மாக்களேயாகிலு மென்றபடி. முடியநடத்துகையாவது - ப்ராப்திபர்யந்தமாக நடத்துகை. அநுகூல கைங்கர்யங்களைக் கொடாமையைப்பற்ற - தன்னைக் கொண்டகலும் என்கிறார். இப்படி யெங்கே கண்டோமென்ன - க்ருஷ்ணாச்ரயா: இத்யாதி. "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" இத்யாதி, மஹாபாரதே. த்ரோண - (கஅரு-உ௪) இதுசொன்னதுக்கு பாவம் - திர்யக்குக்களும் இத்யாதி. "ஆகத்தணைப்பாருக்கு" இத்யாதிக்கு அர்த்தம் - தன்னை இத்யாதி. விவரணம் - அநந்ய இத்யாதி. "இமௌ ஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ । ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்" இதி பாலகாண்டே விஸ்வாமித்ரம்ப்ரதி ராம:. (நக-௪) 'செய்யில்' என்று தொடங்கி, 'ஐயன் - விரும்பித்தொழுவார்க்கெல்லாம் - மெய்யனாகும் - புறமேதொழுவார்க்கெல்லாம் - பொய்யனாகும் - ஆகத்தணைப்பார்கட்கணியனே' இத்யந்வய:* (எ)

குறித்து"கிம்கார்யம்ஸீதயாமம"(கிம்கார்யம்ஸீதயாமம) என்றுரிறே. [பிணியும் சாரா] - உங்களுடைய ஸகலதுஃகங்களும்போம். [பிறவிகெடுத்தாளும்] - அந்த துஃகஹேதுவான ஜந்மத்தைப் போக்கி அடிமைகொள்ளும். [மணிபொனேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்] - மணியாலும் பொன்னாலும் செய்த மதிளாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே யென்று ஸப்தமியாக்கிக்கொள்ளுவது. [பரமேட்டி தன்பாதமே - பணிமின்நாளும்] - பரமபதத்தி லிருக்கும்படியி லொன்றும் குறையாதபடியாய்த்து இங்கிருப்பது. அவன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பண்ணுங்கோள். அங்கு நித்யஸூரிகள் பணியவிருக்கு மவன் இங்கே வந்தபின்பு, நீங்களும் அவன்திருவடிகளிலே பணியப்பாருங்கோள். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

பாதம்நாளும் பணியத்தணியும்பிணி
ஏதம்சாரா எனக்கேல்இனியென்குறை?
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்து
ஆதியானைஅடைந்தார்க்குஅல்லலில்லையே.

*ஆ.—(பாதம்நாளும்.) - இப்படி அவன் திருவடிகளையாச்ரயிக்கவே, ஐஹிக உதநுபவவிரோயியான உத்தர பூர்வாகங்களெல்லாம்போம், இதிலொரு ஸம்சயமில்லை யென்றுசொல்லி, 'அவன்திருவடிகளையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றப்பெற் றேன்; எனக்கினி என்னகுறையுண்டு?' என்றுகொண்டு ஸ்வலாபத்தைச் சொல்லுகிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், உபதேசநிரபேக்ஷமாக நான் முன்னம் எம்பெரு மானை யாச்ரயித்து ஸுகியாகப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்.*

*[பாதநாளுமென்றுதொடங்கி மேலுக்கு] - நாள்தோறும் அவனை ஆச்ரயித்து வரப் பண்டுபண்ணின பாபங்கள் நசிக்கும். பண்ணினபாபம் சேஷியாது. எனக்கென்ன ஒருகுறை இல்லை. [வேதநாவரென்று மேலுக்கு] - வேதார்யவித்துக்கள் விரும்பும் திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனான ஸர்வேச்வரனை அடைந்தார்க்கு துஃகங்க ளில்லையே; இது நிச்சிதம்.*

*ப.—அநந்தரம், நான் அவனை ப்ராபித்து என் ஸகலதுஃகங்களும் தீரப் பெற்றேன்; காரணபூதனானவனைக் கிட்டினார்க்கு துஃகமுண்டோ? என்கிறார்.*

*பாதம் - அவன்திருவடிகளை, நாளும் - நாடோறும், பணிய - அநுஸந்திக்க, பிணி - முன்புண்டான துஃகங்களெல்லாம், தணியும் - போம்; ஏதம் - மேலுமொரு*

ஸுமெதநஹோவாமெஹாமக்ஷுணெநயவீயவஸா" இதி யுத்தகாண்டே ஸுக்ரீவம் ப்ரதிராமஃ. (சக-4,5). ஏய்ந்த-செய்த. "திருக்கண்ணபுரத்தில்-பரமேட்டி" என்று விசேஷித்ததுக்கு பாவம்- பரமபதத்தில் இத்யாதி. அவன் திருவடிகளிலே பணியவேண்டுவானென்னென்ன - அங்கு நித்ய ஸூரிகள் இத்யாதி; அன்றிக்கே, 'பரமபதத்தில்' இத்யாதிவாக்யத்தில், "திருக்கண்ணபுரத்திலே யிருக்கிறவன் பரமேட்டி"என்று அர்த்தம் அருளிச்செய்தாராய்,பரமபதஸ்த்தன்கிடீர் இங்கு வந்திருக் கிறான் என்றர்த்தாந்தரமாதல். 'மணிபொனேய்ந்த' என்று தொடங்கி, 'திருக்கண்ணபுரத்தில்- பரமேட்டிதன்பாதம் - பணிமின்; தனதாளடைந்தார்க்கெல்லாம் - அணியனாகும்; நாளும் - பிணி யும்சாரா: பிறவிகெடுத்தாளும்' இத்யந்வயஃ. பரமே ஸ்த்தாநே ஸ்த்தித இதி பரமேஷ்டீ. (அ)

இ.—பத்தாம்பாட்டில், ப்ரீத்யதிசயத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லி ஸக்திப்ரபத்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார்க்குத் திருக்கண்ணபுரமென்கிற உக்தி மாத்ரத்தாலே ஸமஸ்தது:க்கங்களும் போமென்கிறார்.

[இல்லையல்லல்] - ஸகலது:க்கங்களும் போம். இனி எனக்கு என்ன குறையுண்டு? ஐச்வர்யாத்யநுபவவிரோதி துரிதங்கள் போனபின்பு, எனக்கு அநுபவிக்கைக்கு ஒரு தேசவிசேஷம் தேடப்போகவேண்டியிருந்ததோ? என்றும் அருளுது போயறுதான பின்பு, அவனால் வருவதுக்கு ஒரு குறையுண்டோ? [அல்லிமாதரிக்யாதி] - பெரிய பிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வை யுடையவன். ஆச்ரயணத்தில் குறைவுபார்த்து அவன் அநாதரியாதபடி "நகச்சிந்நாபராத்யதி" என்பாரும் அருகே யுண்டு. திண்ணிதானமதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலே சொல்ல. ஸக்தியிலே யிழிகைக்கு பரிகாரமின்றிக்கே ப்ரபத்திக்கும் வ்யவஸாயமில்லாதார் "திருக்கண்ண புரம்" என்று வாயாலே சொல்லவே ஸமஸ்ததுக்கங்களும் போம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ப்ரீத்யதிசயத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லி, ஸக்தி ப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார் திருக்கண்ணபுரமென்கிற உக்தியைச் சொல்லவே ஸமஸ்தது:க்கங்களும் போமென்கிறார்.

[இல்லையல்லல்] - ஸகலது:க்கங்களும்போம். [எனக்கேல் இனியென்குறை] - இனியெனக்கென்ன குறையுண்டு? ஐச்வர்யாத்யநுபவவிரோதியான துரிதங்களும்போனபின்பு, எனக்கு அநுபவத்துக்கு ஒருதேசவிசேஷம் தேடப் போகவேண்டியிருந்ததோ? [அல்லிமாத் யாதி] - பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவன். ஆச்ரய ணத்திற்குறைபார்த்து அவன் அநாதரியாதபடி "நகச்சிந்நாபராத்யதி" (நகச்சிந்நா பராத்யதி) என்பாரும்அருகேயுண்டு. திண்ணிதான மதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. ஸக்தியிலிழிகைக்குப்பரிகாரமின்றிக்கே ப்ரபத்திக்கு வ்யவஸாயமின்றிக்கே யிருக்குமவர்கள், "திருக்கண்ணபுரம்" என்று வாயாலேசொல்லவே, ஸமஸ்தது:க்கங்களும் போம். (கO)

---

## பதினோராம் பாட்டு.

பாடுசாராவினை பற்றறவேண்டுவீர்!
மாடநீடு குருகூர்ச்சடகோபன் சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துள்இப்பத்தும்
பாடியாடிப்பணிமின் அவன்†தாள்களே.

---

பத்தாம்பாட்டு.—இல்லையல்லல் இத்யாதி. "எனக்கேலினியென்குறை - திருக்கண்ண புரஞ்சொல்ல நாளுந்துயர்பாடுசாரா" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை-ப்ரீத்யதிசயத்தாலே இத்யாதி.

"இனி" என்றதுக்கு ஸ்வயம் அநுபவத்துக்கு இத்யாதி. இப்போதுதிசை சொன்னதுக்கு ஸாவம் - ஆச்ரயணத்தில் இத்யாதி. "நல்லிசெப்பத்" என்கையாலே - திண்ணிதானமதிள் என்றது. "சொல்ல" என்றதுக்கு ஸம்ஜ்ஞம்-ஸக்தியில் இத்யாதி. நாளுந்துயர் - நாள்தோறுமுண்டான துயர். பாடுசாரா - அருகில் கிட்டாது. அடைவே அர்த்தம். (கO)

† 'தாள்களையே' என்றும் பாடம்.

போதே போம் என்கிறார். [மற்றிலம் அரண்] - இவனையொழிய வேறு ரக்ஷகரில்லை. [வான்பெரும்பாழ் தனிமுதலா] - கார்யஜாதமழிந்தாலும் அழியாமையாலே வலிதாய், அபரிச்சிந்நமாய், போகமோக்ஷங்களை விளைப்பதாய், அத்விதீயமான மூலப்ரக்ருதி தொடக்கமாக. [சுற்றுநீர் படைத்து] - "அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே, ஆவரணஜலத்தை ஸ்ருஷ்டித்து. [அதன்வழித்தொல் முனிமுதலா] - அவ்வழியாலே தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநநசீலனான சதுர்முகன் தொடக்கமாக. [முற்றும் தேவரோடு உலகுசெய்வான் திருமோகூர்] - எல்லா தேவஜாதியோடுங்கூட எல்லா லோகங்களையும் உண்டாக்குமவன் வர்த்திக்கிற திருமோகூர். [சுற்றி நாம் வலஞ் செய்ய] - நாம் சென்று விடாதே ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ண. [நம் துயர் கெடும்கடிதே]- "வழித்துணையில்லை" என்று நாம்படுகிற து:க்கங்கள் சடக்கெனப்போம். "அத ஸோ அபயம் கதோ பவதி" என்னக்கடவதிறே. ஆனபின்பு, மற்றிலம் அரண்.

ஈடு.—ஏழாம்பாட்டு. நம்முடையரக்ஷணம் தனக்குஅவர்ஜநீயமான உத்பாதகன் வர்த்திக்கிற திருமோகூரை யாஶ்ரயிக்கவே, நம்முடையது:கங்கள் அப்போதேபோமென்கிறார்.

[மற்றிலம்அரண்] - வேறோர்அரணையுடையோமல்லோம். அவன்தான் ரக்ஷகனாகவல்லனோவென்னில்; இதுவன்றோ அவன்படியென்கிறது, மேல். [வான்இத்யாதி]- இவ்வருகுண்டான கார்யவர்க்கமடங்கலும்அழிந்தவன்றும் தானழியாமையாலேவலிதாய், அபரிச்சிந்நமாய், போகமோக்ஷங்களை விளைப்பதான அத்விதீயமான மூலப்ரக்ருதிதொடக்கமாக [சுற்றுநீர்படைத்து] - "**அப ஏவ ஸஸர்ஜாதௌ**" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே ஆவரணஜலத்தை ஸ்ருஷ்டித்து. [அதன்வழித்தொல்முனிமுதலா] - அவ்வழியாலே, தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநநசீலனான சதுர்முகன்தொடக்கமாக. [முற்றுந்தேவரோடுஉலகுசெய்வான்திருமோகூர்] - எல்லா தேவஜாதியோடுங்கூட எல்லா லோகங்களையும் உண்டாக்குமவன் வர்த்திக்கிற திருமோகூர். [சுற்றிநாம்வலஞ்செய்ய] - நாம்சென்றுவிடாதே ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ண. [நம்துயர்கெடும்கடிதே] - "வழித்துணையில்லை" என்று நாம் படுகிறது:கம் சடக்கெனப்போம் "**அத ஸோ அபயம் கதோ பவதி**"(அதஸோபயம்கதோபவதி) என்னக்கடவதிறே; ஆனபின்பு, மற்றிலம்அரண்.(எ)

---

ஏழாம்பாட்டு.—மற்றிலம் இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நம்முடைய

"வான்" என்று - வலிதாய், நித்யமாயென்றபடி. அபரிச்சிந்நமாய் என்றது - "அநந்தஸ்யாந்தஸ்யாஜ:" என்றத்தைப்பற்ற. நித்யமான மூலப்ரக்ருதியை ஸ்ருஷ்டிக்கையாவது - தமோக்ஷராவ்யக்தரூபேண பரிணமிப்பிக்கை. சுற்றுநீர் - ஆவரணஜலம். "அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத் । தத் அண்டமபவத் ஹைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்" இதி மநுஸ்ம்ருதௌ (க-அ). அதன்வழி - அவ்வழியாலே. "அதன்வழி" என்று - ஸமஷ்டிஸ்ருஷ்டி, பஞ்சீகரணம், அண்டஸ்ருஷ்டி முதலானவற்றைச் சொல்லுகிறது. தொன்மை - பழமை. "முற்றும்" என்றது - * தேவர்க்கும் * உலகுக்கும் விசேஷணம். சுற்றி - விடாதே. அவனையாஶ்ரயித்தால் து:க்கம் போமோவென்ன - அதஸோஅபயம் இத்யாதி. தைத்திரீயகே. யதொருபோது ப்ரஹ்மத்யாநத்தை யடைகிறான், அநந்தரம் அபயங்கதனவன் என்று ஶ்ருதிக்கர்த்தம். ப்ரதிஷ்டா - த்யாநம். 'வான்பெரும் பாழ்' என்றுதொடங்கி, 'உலகுசெய்வானுடைய திருமோகூரை - நாம் - சுற்றி - வலஞ்செய்ய - கடிது - நந்துயர்கெடும்; ஆகையாலே, அரண் - மற்றிலம்' இத்யந்வய:. (எ)

## எட்டாம் பாட்டு.

துயர்கெடும்கடிதடைந்துவந்து அடியவர்!தொழுமின்
உயர்கொள்சோலை ஒண்தடமணியொளிதிருமோகூர்
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்தத்
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே.

**ஆ.**— (துயர்கெடும்) - பரமப்ராப்ய ஸாதனை அவனுக்கும்கூட போக்ய மான திருமோகூரே நமக்கு ப்ராப்யம்; ஆதலால், ப்ரதிகூலரெல்லாரும் துக்கஸாகர நிமக்நராம்படி தயரதன்பெற்ற ஸமஸ்தகல்யாணகுண விசிஷ்டமான மரதகமணித்தடத்தினைத் திருமோகூரிலே கண்டுச்சென்று ஸேவியுங்கோள் என்கிறார்.

ஒ.— எட்டாம்பாட்டில், திருமோகூரில் நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆச்ரயிக்க நம்முடைய துக்கங்களெல்லாம்போம் என்கிறார். [அடைந்து] - கிட்டி. [உயர் என்றுதொடங்கி] - உயர்ந்த சோலையாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூரிலே. [பெயர்கள் ஆயிரம் என்று மேலுக்கு] - செளர்யவீர்யாதிகளுக்கு வாசகமான பல பெயர்களை யுடைய வலியராக்ஷஸர்கள் புக்கழுந்தும்படி தயரதன்பெற்ற மரதகமணிபோலேயிருக்கிற தடாகத்தினை.

ப.—அநந்தரம், உங்களுடைய ஸகல க்லேசமும் தீரும்படி சீலசீதள்மான தசரதாத்மஜதடாகத்தைக் கிட்டி பரிசவியுங்கோள் என்கிறார்.

உயர்கொள் - உயர்த்தியையுடைய, சோலை - சோலைகளையும், ஒண் - விலக்ஷண்மான, தடம் - தடாகங்களையும், அணி - அலங்காரமாக வுடைத்தாய், ஒளி - அத் யுஜ்ஜ்வலமான, திருமோகூர் - திருமோகூரிலே, (ஜகத் ரக்ஷகத்வத்தால்வந்த), ஆயிரம் - அஸங்க்யாதமான, பெயர்கள்உடைய - விருதுபேரையுடையராய், வல் - ப்ரபலரான, அரக்கர் - ராக்ஷஸர், (விபீஷணப்ரப்ருதிகளைப்போலே துறையறிந் திழியாமையாலே), புக்கழுந்த - புக்கழுந்தும்படியாக, தயரதன்பெற்ற - தசரதன்பெற்ற, (விஷஹரமுமாய் ஆபரணமுமான), மரதகமணி - மரகதமணிபோலே ச்யாமளமான நிறத்தையுடைய, தடத்தினை - தடாகத்தை, அடியவர் - * ஞானதுர்ரஸ்யமுபாமதரான நீங்கள், வந்து அடைந்து - வந்துகிட்டி, தொழுமின் - தொழுங்கோள். துயர் - உங்கள்அஸஹாயத்தாலே க்லேசமானது, கடிது - சடக்கென, கெடும் - நசிக்கும். விஷஹரமுமாய் ஆபரணமு மான மரதக த்ருஷ்டாந்தத்தாலே ப்ரதிகூல நிரஸநமும் அநுகூலர்க்கு ஆச்ரயமுமாம் என்று கருத்து.

**இ.**—எட்டாம்பாட்டில், திருமோகூரிலே நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆச்ரயிக்க நம்முடைய துக்கமெல்லாம்போம் என்கிறார்.

[துயர்கெடும்கடிது] - நாம் அபேக்ஷியாதிருக்க துக்கமானது சடக்கெனத் தானே போம். [அடைந்துவந்து] - வந்தடைந்து; வந்துகிட்டி. [அடியவர் தொழுமின்] - "வழித்துணையில்லை" என்று க்லேசப்படுகிற நீங்கள் ஆச்ரயியுங்கோள். [உயர்

கொள் இத்யாதி] - உயர்ந்த சோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூர். ஒளி - ஸமுதாயஶோபை. சோலையைக் கண்டால் வடிவை ஸ்மரிக்கலாயிருக்கும், தடாகங்களைக்கண்டால் வடிவில் ஶ்ரமஹரதையை நினைக்கலாயிருக்கும். [பெயர்கள் ஆயிரமுடைய] - ஈஶ்வரனுக்கு ரக்ஷணத்தாலே ஆயிரம் திருநாமம் உண்டாயிருக்குமாபோலே, இவர்களும் பாதகத்வத்தாலே அநேகம் பெயரையுடையராயிருப்பர்கள். "யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு" என்றிறே பெயர்கள். [வல்லரக்கர் புக்கழுந்த] - பெருமிடுக்கரான அஸுரர்கள் புக்கழுந்தும்படி, சக்ரவர்த்திபெற்ற நீலமணிபோலேயிருக்கிற தடாகத்தினை - அடைந்துவந்து - அடியவர் தொழுமின். "பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்" என்கிறபடியே அநுகூலர்க்கு ரக்ஷகமாய், "காகுத்ஸ்த்தபாதாலவேவ தநுஷ:" என்கிறபடியே ப்ரதிகூலர்க்கு நாஶகமாயிறேயிருப்பது. "ஸம்ஹாரிணாராவணஸைந்ய..." என்று பக்ஷியைப் போகவிட்டாரிறே.

௯.—எட்டாம் பாட்டு. திருமோகூரிலே நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆஶ்ரயிக்க நம்முடைய துக்கமெல்லாம் போம் என்கிறார்.

[துயர்கெடும்கடிது] - நாம் அபேக்ஷியாதிருக்கத் தன்னடையே சடக்கெனப் போம் நம்முடைய துக்கங்கள். [அடைந்துவந்து] - வந்தடைந்து; வந்துகிட்டி. [அடியவர்தொழுமின்] - "வழித்துணையில்லை" என்று க்லேஶப்படுகிற நீங்கள் ஆஶ்ரயியுங்கோள். [உயர் இத்யாதி] - உயர்ந்தசோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூர். †(ஒளி - ஸமுதாயஶோபை.) சோலையைக்கண்டால் அவன் வடிவுக்கு ஸ்மாரகமாயிருக்கும், தடாகங்களைக்கண்டால் அவன்வடிவில் ஶ்ரமஹரதைக்கு ஸ்மாரகமாயிருக்கும். * வாசத்தடம்போல் வருவானிறே அவன்தான். [பெயர்களாயிரமுடைய]-ஈஶ்வரன் ரக்ஷித்துப் படைத்த பெயர்களோபாதி போருமாய்த்து இவர்கள் பரஹிம்ஸைபண்ணிப்படைத்த பெயர்; "யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு" என்றாற்போலேயிறே இவர்கள் பெயர். [வல்லரக்கர்புக்கழுந்த] - பெருமிடுக்கரான அஸுரர்கள் புக்கழுந்தும்படி. [தயரதன் இத்யாதி] - சக்ரவர்த்திபெற்ற நீலமணிபோலேயிருக்கிற தடத்தை - அடைந்துவந்து அடியவர் தொழுமின். "பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்" (பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்) என்கிறபடியே அநுகூலர்க்கு ரக்ஷகமாய், "காகுத்ஸ்த்தபாதாலவேவ தநுஷ:" (காகுத்ஸ்த்தபாதால

---

எட்டாம்பாட்டு.—துயர் இத்யாதி. "திருமோகூர் - தயரதன்பெற்ற மரதக மணித்தடத்தை - வந்தடியவர்தொழுமின்: துயர்கெடும் கடிது" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - திருமோகூரிலே இத்யாதி.

"கடிது - துயர்கெடும்" என்றதுக்கர்த்தம் - நாம் இத்யாதி. உயர்த்தியையுடைய சோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமாய் ஒளியையுடைத்தான திருமோகூரென்று ஶப்தார்த்தம். ஒளி - ஸமுதாயஶோபை. "மரதகமணித்தடம்" என்றத்தைக் கடாக்ஷித்து, இது சொன்னதுக்கு பாவம் - சோலையை இத்யாதிவாக்யத்வயம். அப்படியிருக்குமோவென்ன - வாசத்தடம் இத்யாதி. "ஸஹஸ்ரநாமா" என்று - ஆயிரம்பேருள்ளது அவனுக்கன்றோவென்ன - ஈஶ்வரன் இத்யாதி. அந்தப்பேர்களேதென்ன - யஜ்ஞசத்ரு இத்யாதி. இவனைத் தடாகமாக ரூபித்ததுக்கு பாவம் த்வேதா அருளிச்செய்கிறார் - பதிதரு இத்யாதி. "ஸம்ஹாரிணாராவணஸைந்யஸாம

---

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்,

முகேபதந்ஸ:) என்கிறபடியே உகவாதார்க்கு நாசகமாயிறேயிருப்பது. "மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்" (மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகா நநுத்தமாந்) என்று பக்ஷியையும் வழிநடத்துமவனிறே. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

மணித்தடத்தடிமலர்க்கண்கள் பவளச்சேவ்வாய்
அணிக்கோள்நால்தடந்தோள்தேய்வம் அசுரரையேன்னும்
துணிக்கும்வல்லரட்டன் உறைபோழில்திருமோகூர்
நணித்துநம்முடைநல்லரண் நாம்அடைந்தனமே.

*ஆ.—(மணித்தடத்தடி.) - நிரவயிக ஸௌந்தர்யத்தையும் ப்ரதிகூலநிரஸந ஸாமர்த்த்யத்தையும் உடையனாயிருந்த எம்பெருமான் எழுந்தருளியிருந்த, ஸர்வஸுலபமாய் பரமப்ராப்யமான திருமோகூரை நாமும் புஜிக்கப் பெற்றோமேயென்று, தம்முடைய லாபத்தைப் பேசுகிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், நமக்கு அரணான திருமோகூரை நாம் ப்ராபிக்கப் பெற்றோமென்று ஸ்வலாபத்தைப்பேசுகிறார்.*

*[மணித்தடத்து என்றுதொடங்கி] - ப்ரமபோக்யமான திருவடிகளையும், மலர்போலேயிருக்கிற திருக்கண்களையும், பவளம்போலே சிவந்த வாயையுமுடையனாய், தனக்குத்தானே ஆபரணமாய்ப் பெரிய நாலுதிருத்தோள்களையுமுடைய தைவமாய், ப்ரதிகூலரை என்றும் மாய்க்கும் ஸ்வபாவனாய், மிகவும் மிடுக்கனானவன் நிரந்தரவாஸம் பண்ணுவதுஞ்செய்த பொழிலையுடைய திருமோகூர் ப்ரத்யாஸந்நமாய்த்து.*

*ப.—அநந்தரம், விலக்ஷணாவயவ விசிஷ்டன் வர்த்திக்கிற திருமோகூரை நமக்கு ரக்ஷகமாகக் கிட்டப்பெற்றோமென்று ப்ரீதராகிறார்.*

*மணித்தடத்து - தெளிந்த தடாகம்போலே (குளிர்ந்த), அடி - திருவடிகளையும், மலர் - விகஸிதமான தாமரைபோலே யிருக்கிற, கண்கள் - திருக்கண்களையும், பவளம்செவ்வாய்-பவளம்போலே சிவந்த திருவதரத்தையு முடையனாய், அணிக்கொள்- * ஸர்வபூஷண பூஷார்ஹமாய், நால் - நாலுவகைப்பட்ட, தடம் - பெரிய, தோள் - திருத்தோள்களையுடைய, தெய்வம் - தீவ்யவிக்ரஹத்தையுடையனாய், (இவ்வழகுக்குப்*

---

ரௌத்ரஹ்ருஷீகேசஸ்ஸர்வஸாஹவஹ்நி: । ய: ஸர்வஸ்யம் தாரயிதா ஸ்வகேத்ருகஸ்ஸ்யுஹ்யவாதாஸ்ஸேவதநுஸ: " இதி ப்ரஹஸ்தாதிப்ரதி விபீஷண:. (ராம-யு-கஃ-உ0) வழித்துணையாகப் பற்றுகிறவிடத்திலே சக்ரவர்த்தித்திருமகனைச் சொல்லுவானென்னென்ன-மயாத்வம்இத்யாதி. "யாமதிரஜ்ஜுஸீமாநிரோஷிதாநெஹ்யாமதி: । ஸுமாரவநீநாம்யாவ யாவஹோஷ்டி ரூடாயிநா (சுஅ-உகஹ) யோகவ்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந் " இத்யாரண்யகாண்டே ராம:. 'உயர்கோள்சோலை' என்று தொடங்கி, 'மணித்தடத்தினை - அடியவர் - வந்து - அடைந்து - தொழுமின்: கடிது - துயர்கெடும்' இத்யந்வய:. (அ)

புறம்பு ரக்ஷை தேடவேண்டாதபடி), அசுரரை - ஆஸுரப்ரக்ருதிகளை, என்றும் - ஸர்வ காலமும், துணிக்கும் - சேதிக்கும், வல் அரட்டன் - பெருமிடுக்கனானவன், (ஆஸ்ரிதர்க்கு அச்சமறும்படி அநுஸந்தேயமாகைக்காக), உறை - நித்யவாஸம்பண்ணுமிடமாய், பொழில் - (ஸௌரப்யமான) பொழிலையுடைய, திருமோகூர் — திருமோகூராகிற, நம்முடை - நம்முடைய, நல் அரண் - விலக்ஷணரக்ஷகமான தேசமானது, நணித்து - அத்யாஸந்நமாய்த்து: நாம் -(துணை தேடித் தனிமைப்படுகிற) நாம், அடைந்தனம் - அநுபவிக்கப்பெற்றோம். அரட்டன் - மிடுக்கன்.

இ.—ஒன்பதாம்பாட்டில், நமக்கு அரணான திருமோகூரை நாம் ப்ராபிக்கப் பெற்றோமென்று ஸ்வலாபத்தைப்பேசுகிறார்.

[மணித்தடத்தடி] - தெளிந்ததொரு தடாகம்போலேயாய்த்துத் திருவடிகளிருப்பது. ஸ்ரமஹரமான திருவடிகளென்கை. [மலர்க்கண்கள்] - அந்தத் தடாகம் பூத்தாற்போலேயாய்த்துத் திருக்கண்கள் இருப்பது. [பவளச்செவ்வாய்] - பவளம் போலே சிவந்த திருவதரத்தையுடையனாய். [அணிக்கொள் இத்யாதி] - தனக்குத் தானே ஆபரணமாய்ப் பெரிய நாலுதிருத்தோள்களையுமுடைய தைவம். அவன் வழித்துணையாம்போது ஸ்ரமஹரமான வடிவும் தன் உகப்புத்தோற்றின ஸ்மிதவீக்ஷணமுமுடையனாய், ஒரு கல் மதிளுக்குள்ளே போமாபோலே அச்சங்கெடும்படியாய்த்துக் கொடுபோவது. [தெய்வம்] - விஜிகீஷுவாயிருந்தாய்த்துக் கொடுபோவது. இவனுக்கு எங்கே என்ன தீங்குவருகிறது என்னும் அதிசங்கையினாலே, ஆசிலேவைத்த கையும் தானுமாய்ப்போகை. [அசுரரை என்றும் துணிக்கும் வல்லரட்டன்] - அஸுரவர்கத்தை என்றும் † துணித்தொடுக்கும் பெருமிடுக்கன் நித்யவாஸம்பண்ணுகிற பொழிலையுடைய திருமோகூர். "ஸிம்ஹம்வர்த்திக்கும் முழைஞ்சு" என்னுமாபோலே. [நணித்து] - கிட்டிற்று. ப்ரத்யாஸந்நம். [நம்முடை நல்லரண்] - நமக்கு ரக்ஷகமான தேசத்தை. [நாம் அடைந்தனம்] - ரக்ஷகாபேக்ஷையுடைய நாம் கிட்டப்பெற்றோம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நமக்குஅரணான திருமோகூரை நாம் ப்ராபிக்கப் பெற்றோமென்று ஸ்வலாபத்தைப் பேசுகிறார்.

[மணித்தடத்தடி] - தெளிந்த தடாகம்போலேயாய்த்துத் திருவடிகளிருப்பது. ஸ்ரமஹரமான திருவடிகளென்கை. [மலர்க்கண்கள்] - அத்தடாகம் பூத்தாற்போலேயாய்த்துத் திருக்கண்கள் இருப்பது. [பவளச்செவ்வாய்] - ப்ரவாளம்போலே சிவந்த திருவதரத்தையுடையனாய், தனக்குத் தானே ஆபரணமாயிருக்கும் பெரிய நாலுதிருத்தோள்களையுமுடைய தெய்வம். அவன் வழித்துணையாகப் போம்போது, ஸ்ரமஹரமான வடிவும் தன்னுகப்புத்தோற்றின ‡ஸ்மிதவீக்ஷணாதிகளையும் உடையனாய், ஒருகல் மதிளுக்

---

ஒன்பதாம்பாட்டு.—மணித்தடத்து இத்யாதி. "நம்முடை நல்லரண் நாமடைந்தனமே" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை - நமக்கு இத்யாதி.

"மணி" என்கையாலே - நைர்மல்யம் சொல்லுகிறது. இத்தால்பாவம் - ஸ்ரமஹரமான இத்யாதி. * தடத்துக்கநந்தரம் "மலர்" என்றதுக்கு பாவம் - அத்தடாகம் இத்யாதி. "அணிக்கொள் - தடம் - நால் - தோள்தெய்வம்" என்றந்வயிப்பது. வழித்துணைசொல்லுகிறவிடத்திலே திவ்யாவயவங்களைச் சொல்லுகிறதுக்குபாவம் - அவன்வழித்துணையாக இத்யாதி. "அடி" என்று - திருமேனிக்கும் உபலக்ஷணம். "தெய்வம்" என்றது - "திவுக்ரீடாவிஜிகீஷா" இத்

---

† துணித்தடுக்கும் என்று காணப்படுகிறது. ‡ ஸ்மிதவீக்ஷணங்கள் என்றிருக்கலாம்.

குள்ளே போமாபோலே அச்சங்கெட்டுப் போம்படியாய்த்துத் தோள்நிழலிலே யொதுங்கிறு லிருக்கும்படி. விஜிகீஷையோடேயாய்த்துப் போவது : "வழியிலே யெங்கே யென்ன ப்ரதிபந்தகம்வருகிறதோ?" என்று ஆசிலேவைத்த கையுந்தானுமாயாய்த்துப்போவது. [அசுரரையென்றும் துணிக்கும் வல்லரட்டன்] - அஸுரவர்க்கத்தை யென்றும் துணிக்கும் பெருமிடுக்கன். [உறைபொழில்திருமோகூர்] - நித்யவாஸம்பண்ணுகிற பொழிலையுடைய திருமோகூர். "ஸிம்ஹம்வர்த்திக்கும் முழைஞ்சு" என்னுமாபோலே. [நணித்து] - கிட்டிற்று - ப்ரதயாஸந்நம். [நம்முடைநல்லரண்] - நமக்கு ரக்ஷகமான தேசத்தை. [நாம் அடைந்தனமே] - ரக்ஷகாபேக்ஷையுடைய நாம் கிட்டப் பெற்றோம். (௯)

## பத்தாம் பாட்டு.

நாமடைந்தநல்லரண்நமக்கென்றுநல்லமரர்
தீமைசெய்யும்வல்லசுரரை அஞ்சிச்சென்றடைந்தால்
காமரூபங்கொண்டு எழுந்தளிப்பான்திருமோகூர்
நாமமேநவின்றுஎண்ணுமின்ஏத்துமின்நமர்காள் !

ஆ.—(நாமடைந்த.) - திருமோகூரே நமக்கெற்றைக்கும் ப்ராப்யமாக நாம் அடையப்பெறுவதே! என்று பின்னையும் ஸ்வலாபத்தைச் சொல்லி யநுபவித்து, ஆச்ரிதருடைய இச்சாநுகுணமான வடிவைக்கொண்டு அவர்களுடைய விரோதிகளை நிரஸித்து ரக்ஷித்தருளுமவன் எழுந்தருளியிருந்த திருமோகூரினுடைய திருநாமத்தையே சொல்லி அவ்வூரை யேத்துங்கோள் என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ஸர்வரக்ஷகனாயிருக்கிறவன்எழுந்தருளியிருக்கிறதிருமோகூரை ஆதரித்துநினைத்துஏத்துங்கோள், நமக்குபந்துக்களாயுள்ளார் என்கிறார்.

[நாமடைந்த என்று தொடங்கி] - நமக்கு நாம் பற்றின நல்லரண் என்று உபாயஜ்ஞரான அமரர், சத்ருக்களான அஸுரரை அஞ்சிச்சென்று ஆச்ரயித்தால் அவர்களுடைய ரக்ஷணத்துக்கு வேண்டும் வடிவைக்கொண்டு புறப்பட்டு ரக்ஷிக்குமவனுடைய திருமோகூரினுடைய.

ப.—அநந்தரம், ஆச்ரிதவிஷயத்தில் அபீஷ்டவிக்ரஹ பரிக்ரஹம்பண்ணி ரக்ஷிக்குமவனுடைய திருமோகூரினுடைய திருநாமத்தை, நம்மோடு அந்வயமுடையார், அநுஸந்தித்து ஏத்துங்கோள் என்கிறார்.

'நமக்கு - நமக்கு அஸாதாரணமாக, நாம்அடைந்த - நாம்பற்றின, நல்லரண் - விலக்ஷணமானவரண்', என்று - என்றுகொண்டு, நல்அமரர் - நல்லதறியும் தேவர்களானவர்கள், தீமைசெய்யும் - பொல்லாங்கை ப்ரவர்த்திக்கக்கடவ, வல் - ப்ரபலரான, அசுரரை - அஸுரர்களைக்குறித்து, அஞ்சிச்சென்றடைந்தால் - அஞ்சிச்சென்றாச்ரயித்

யாதி யுபாதவித்தமான விஜிகீஷையைச் சொல்லுகிற தென்கிறார் - விஜிகீஷையோடே இத்யாதி. விவரணம் - வழியிலே இத்யாதி. ஆசிலே - ஆயுதப்பிடியிலே. "வல்" என்று - பெருமையாய், "அரட்டு" என்று - மிடுக்காய், பெருமிடுக்கனென்றபடி. "வல்லரட்டன்" இத்யாதிக்கு ஹாவம் - ஸிம்ஹம் இத்யாதி. (௯)

தால், காமரூபங்கொண்டு - அநுரூபமாய் அபீஷ்டமான வடிவைக்கொண்டு, எழுந்து - கிளர்ந்து, அளிப்பான் - ரக்ஷிக்குமவன், திருமோகூர் - திருமோகூரினுடைய, நாமமே - பேர்பட்டபுகழையே, நமர்காள் - நம்மோடு அநுவந்துமுடைய நீங்கள், நவின்று - பயின்று, எண்ணுமின் - நினையுங்கோள்; (அவ்வளவில் பர்யவஸியாதே), ஏத்துமின் - ப்ரீதிப்ரேரிதராயேத்துங்கோள். காமரூபம் என்று - அம்ருதப்ரதாநதசையில் பெண்ணாகி யமுதூட்டினபடியைச் சொல்லிற்றாகவுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், ரக்ஷகனாவன்வர்த்திக்கிற திருமோகூரை, நமக்கு பந்துக்களானார் ஆதரித்து நினைத்து ஏத்துங்கோள் என்கிறார்.

[நாம் அடைந்த இத்யாதி] - நமக்கு நாம் ரக்ஷகமென்று அடைந்த நல்ல அரண் என்று. [நல்லமரர்] - தங்கள் ஆபத்துக்கு இவனே உபாயம் என்றிருக்கையாலே 'நல்லமரர்' என்கிறார். இதிறே அஸுரர்களிற்காட்டில் வ்யாவ்ருத்தி. பரஹிம்ஸையே யாத்ரையாயிருக்கிற அஸுரர்களுக்கு அஞ்சிவந்து சரணம்புக்கால். [காமரூபங்கொண்டு இத்யாதி] - ரக்ஷணாநுரூபமான வடிவைக்கொண்டு புறப்பட்டு ரக்ஷிக்குமவன் வர்த்திக்கிற திருமோகூரினுடைய. [காமரூபம்] - "நாரஸிம்ஹவபுஸ்ஸ்ரீமான் ஸிம்ஹஸ்யாயுதநம்ஸ்தயா" என்கிறபடியே. ஊரின்பேரை வாயாலே சொல்லி அத்தை அநுஸந்தித்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஏத்துங்கோள் நம்முடையவர்கள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸர்வரக்ஷகன் வர்த்திக்கிற திருமோகூரை, நமக்கு பந்துக்களானார், ஆதரித்து நினைத்தேத்துங்கோள் என்கிறார்.

[நாம் அடைந்தவித்யாதி]-"நமக்கு ரக்ஷையாக நாம்கிட்டின நல்லரண்"என்று அவர்கள் பாசுரமிருக்கும்படி. [நல்லமரர்] - தங்கள் ஆபத்துக்கு இவனே யுபாயமென்றிகையாலே 'நல்லமரர்' என்கிறார். அசுரர்களிற்காட்டில் வ்யாவ்ருத்தியித்தனையிறே. [தீமைசெய்யும் இத்யாதி] - பரஹிம்ஸையேயாத்ரையாயிருக்கிற அஸுரர்களுக்குஅஞ்சி வந்து சரணம் புக்கால். [காமம் இத்யாதி] - ரக்ஷணநுரூபமான வடிவைக்கொண்டு புறப்பட்டு ரக்ஷிக்கிறவன் வர்த்திக்கிற திருமோகூர். [நாமமே நவின்று] - ஊரின்பேரை வாயாலேசொல்லி யநுஸந்தித்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஏத்துங்கோள் நம்முடையவர்கள்.

---

பத்தாம்பாட்டு.—நாமடைந்த இத்யாதி. "எழுந்தளிப்பான் திருமோகூர் நாமமேநவின்றெண்ணுமின் ஏத்துமினமர்காள்" என்றவற்றைக் கடாக்ஷித் தவதாரிகை - ஸர்வரக்ஷகன் இத்யாதி. "நமக்கு - நாமடைந்தநல்லரண்" என்றந்வயம். ரக்ஷையாகவென்றது - அத்யாஹார்யம். அவர்களென்றது - வக்ஷ்யமாணரான நல்லமரரை. ஈச்வராபிமாநிகளை "நல்லமரர்" என்பானேன் னென்ன - தங்களாபத்து இத்யாதி. ஹிதம் - அசுரர்களில் இத்யாதி. "தீமைசெய்யும்" என்று நிரூபகமாகச் சொல்லுகையாலே - பரஹிம்ஸையே யாத்ரையாய் என்றது. "அசுரரை" என்றது-அசுரர்க்கென்றபடி. எழுந்து - புறப்பட்டு. நவின்று - வாயாலேசொல்லி. எண்ணுமின் - அநுஸந்தியுங்கோள். 'நல்லமரர் - நமக்கு ரக்ஷையாக - நாமடைந்தநல்லரண் - என்று' என்றுதொடங்கி, 'ஏத்துமின்நமர்காள்' இத்யந்வயः. திருமோகூரினுடைய நாமமேயென்றபடி. (கo)

# பதினோராம் பாட்டு.

ஏத்துமின்†நமர்காள்!என்றுதான் குடமாடு
கூத்தனைகுருகூர்ச்சடகோபன் ‡குற்றேவல்கள்
வாய்த்தஆயிரத்துள்இவை வண்திருமோகூர்க்கு
ஈத்தபத்திவைஏத்தவல்லார்க்குஇடர்கெடுமே.

ஆ.—(ஏத்துமின்.) - என்னுடைய திவ்யமான சேஷ்டிதங்களை யுகந்திருப்பார் எல்லாரும் வந்தேத்தி வாழுங்கோளென்று தான் குடமாடுகூத்தனைக் குருகூர்ச்சடகோபன் சொன்னவாயிரத்தில், திருமோகூரைச்சொன்ன இத்திருவாய்மொழியைக் கொண்டு அவ்வூரை யேத்துங்கோள் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், திருமோகூர்க்குக் கொடுத்த இத்திருவாய்மொழியை விரும்புவார்க்கு ஸகல து:கங்களும் போமென்கிறார்.

[ஏத்துமின் என்று தொடங்கி] - தன்னுடைய திவ்யசேஷ்டிதங்களை உகந்திருப்பார் எல்லாருங்கண்டு வாழுங்கோளென்று தான் குடமாடுகையாகிற மநோஹாரி சேஷ்டிதங்களையுடையனானவனைக் குறித்து அந்தரங்கவ்ருத்திகளாய்க்கொண்டு நேர்ப்பட்ட ஆயிரம் திருவாய்மொழியிலும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, அநிஷ்டப்ராப்தி விரோதிநிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

நமர்காள் - நம்முடையவர்களெல்லாரும், ஏத்துமினென்று - (உங்களுகப்புத் தோற்றும்படி) ஏத்துங்கோளென்று, தான் குடமாடுகூத்தனை - தான் குடங்கொண்டாடின கூத்தனானவனைப்பற்ற, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, குற்றேவல்கள் - அந்தரங்கவ்ருத்திகளாய், இவை - (ஈச்வரனுக்குத் தகுதியாம்படியாக),வாய்த்த-, ஆயிரத்துள் - ஆயிரத்துக்குள்ளே, வண் திருமோகூர்க்கு - விலக்ஷணமான திருமோகூர்க்கு, ஈத்தபத்திவை - ஸமர்ப்பிக்கப்பட்ட பத்து: (இவற்றை), ஏத்தவல்லார்க்கு- ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு சொல்லவல்லவர்களுக்கு, இடர்கெடும் - (சரீராவஸாநத்திலே வழித்துணை யில்லாத) து:கம் தீரும்.

இ.—நிகமத்தில், திருமோகூர்க்குக் கொடுத்த இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார்க்கு து:கநிவ்ருத்தி உண்டாம் என்கிறார்.

[ஏத்துமின்] - நற்சேஷ்டிதங்களை உகப்பார் எல்லாருங்கண்டு வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி ஏத்துங்கோளென்று தானேசொல்லிக் குடக்கூத்தாடினவனை. [குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்] - ஆழ்வாருடைய அந்தரங்க வ்ருத்திகள். அவன் குடக்கூத்தை அநுஸந்தித்து இவர் வாசிகமான அடிமையிலே அதிகரித்தார். [வாய்த்த ஆயிரத்துள்இவை] - ஸர்வேச்வரனுக்கு நேர்பட்ட ஆயிரத்துக்குள்ளேயுள்ள இவை. [வண் திருமோகூர்க்கு ஈத்தபத்து] - விலக்ஷணமான திருமோகூர்க்குக்கொடுத்த பத்து. "ரத்நஹாரீவபார்திவ:" என்னுமாபோலே இப்பத்தின்நன்மையாலே இவை திரு

† 'எமர்காள்' என்றும் பாடம்.
‡ 'குற்றேவல்' என்பதும் பாடம்.

*மோகூர்க்காயிருந்ததென்று கொடுத்தார். [இவை ஏத்தவல்லார்க்கு இடர்கெடுமே] - இப்பத்தை அப்யஸிக்கவல்லார்க்கு, ஶரீராவஸாநத்திலே "வழித்துணையில்லை" என்று க்லேஶப்பட வேண்டாதபடி காளமேவம் வழித்துணையாம்.*

ஈடு.—நிகமத்தில், பரமோதாரமான திருமோகூர்க்குக்கொடுத்த இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார்க்கு து:கநிவ்ருத்தியுண்டாம் என்கிறார்.

[ஏத்துமின்] - நம்சேஷ்டிதங்களை யுகப்பார் எல்லாரும் கண்டு வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி யேத்துங்கோளென்று, தான்சொல்லி, அதுக்கு விஷயமாகத் தான் குடக்கூத்தாடினவனை. [குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்] - ஆழ்வாருடைய அந்தரங்க வ்ருத்திகள். அவன்குடக்கூத்தை யநுஸந்தித்து இவர் வாசிகமான அடிமையிலே யதிகரித்தார். [வாய்த்தவாயிரத்துள்ளிவை] - ஸர்வேஶ்வரனுக்கு நேர்பட்ட ஆயிரத்துக்குள்ளே வாய்த்தவையாய்த்து இவை. [வண்திருமோகூர்க்கு ஈத்தபத்து] - பரமோதாரமான திருமோகூர்க்குக் கோடுத்த பத்து. "ரத்நஹாரீசபார்த்திவ:" (ரத்நஹாரீசபார்த்திவ:) என்னுமாபோலே, இத்திருவாய்மொழியில் இனிமையாலே திருமோகூர்க்காயிருந்தன வென்று கோடுத்தார். [இவையேத்தவல்லார்க்கு இடர்கேடும்] - இப்பத்தை யப்யஸிக்க வல்லார்க்கு, ஶரீராவஸாநத்தில், "வழித்துணையில்லை" என்று க்லேஶப்படவேண்டாதபடி காளமேவம் வழித்துணையாம். (கக)

---

*நிகமம் - ஏத்துமின் இத்யாதி. "வண்திருமோகூர்க்கீத்த பத்திவையேத்தவல்லார்க்கு இடர் கெடும்" என்றத்தைக்கடாக்ஷித் தவதாரிகை - பரமோதாரமான இத்யாதி.*

*அதுக்கு - ஏத்துகைக்கு. அவன் "எமர்காள் - ஏத்துமின்" என்றதிவர்க்கு ஃபலித்ததென்கிறார் - அவன் குடக்கூத்தை இத்யாதி. "வாய்த்த" என்றது - ஆயிரத்துக்கும் பத்துக்கும் விசேஷணம். ஈத்த - கொடுத்த. ஆயிரத்திலும் இப்பத்தைக்கொடுப்பானென்னென்ன - ரத்நஹாரீ இத்யாதி. "ஸர்வஸம்பத்ஸம்ருத்தாநாம் ஸர்வேஷாம் | ரத்நஹாரீ ச பார்த்திவ:" இதி பாலகாண்டே வஸிஷ்டம் ப்ரதி விஶ்வாமித்ர:(டுந. க). "இடர்கெடும்" என்றதால் ஃபலிதம் - இப்பத்தை இத்யாதி. 'எமர்காள் - ஏத்துமின் - என்று தான் குடமாடு' இத்யாரப்யார்த்தய:. (கக)*

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி.—ஶ்ரேயோநிதேஸ்ஸ்வயமிஹாஸ்து ஸஹாயபாவம் ... [illegible]

---

த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலீ.—[illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம்
காளமேகத்தைக் கதியாக்கி - மீளுதலாம்
ஏதமிலா விண்ணுலகில்ஏறவேண்ணும்மாறனெனக்
கேதமுள தெல்லாம் கெடும்.

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

# இரண்டாந் திருவாய்மொழி—கெடுமிடர் ப்ரவேசங்கள்.

ஆ.—(கெடுமிடர்.) - இப்படி ஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடத் திருமோகூரில் எம்பெருமானையநுபவித்து, திருவநந்தபுரத்திலேயும் அவனை இவர்களோடேகூட அநுபவிக்கைக்காக,—

ஒ.—இரண்டாம் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிலே தமக்கு வழிகொடுபோகைக்கு நல்லதுணையைப் பெற்ற ஆழ்வார், "தமக்கு ப்ராப்யதேசம் ஏதோ?" என்று ஆராய்ந்து, ஸாம்ஸாரிக ஸகலது:க்கங்களுமின்றிக்கே நிரதிசய போக்யமாய், நித்யஸூரிகளுக்குங்கூட ஸ்ப்ருஹணீயமாய், தமக்கு எல்லா அடிமையும் செய்கைக்கு யோக்யமாயிருந்துள்ள திருவனந்தபுரத்தை ப்ராப்யதேசமாக அத்யவஸித்து, அங்கேபோய் ஸர்வசேஷவ்ருத்தியும் பண்ணவேணுமென்று அநுகூலஜநங்களோடேகூடப் போகையிலே உத்யோகிக்கிறார்.

ப.—இரண்டாந் திருவாய்மொழியில், கீழ்வழித்துணையாகக் காளமேகத்தை ஆஶ்ரயித்த இவ்வாழ்வாரை ப்ராப்யதேசத்தேறக் கொண்டுபோக உத்யோகித்த ஸர்வேஶ்வரன், "தேசத்தினுடைய ப்ராப்யத்வத்தையும் தன்னுடைய கைங்கர்ய ப்ரதிஸம்பந்திதையையும் இந்தவிஷயத்திலே ப்ரகாஶிப்பித்து இவர் உகப்பை விளைப்பித்துக்கொண்டுபோவோம்" என்று திருவுள்ளம்பற்றி, நிரதிசயபோக்யமான திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிறபடியைக்காட்டக் கண்டு ஸந்துஷ்டராய்; அவனுடைய ஆஶ்ரித ஸம்ஶ்லேஷஸ்வபாவத்தையும், ஆஶ்சர்யாவஹமான அந்வயத்தையும், அபேக்ஷஜநத்ரக்ஷகத்வத்தையும், அநவதிக வாத்ஸல்யத்தையும், அநுபஹிதஶேஷித்வத்தையும், ஸர்வதேவநிர்வாஹகத்வத்தையும், ஸகலஜகத்ஸ்ருஷ்ட்யாதியோகத்தையும், பரமப்ராப்யத்வத்தையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும், ஆராதநவைலக்ஷண்யா பாதகத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருவனந்தபுரந்தன்னையே ப்ராப்யமாகஅறுதியிட்டு, இங்கே தம்முடைய ஸகலக்லேஶமும் தீரும்படி அவனுடைய போக்யமான திருநாமங்களைக் கீர்த்தித்தும், பஹுமுகமான கைங்கர்யங்களைப் பண்ணியும், அநுகூலஜநங்களோடே அநுபவிக்கப்பார்க்கிறார்.

தி.—இரண்டாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிலே தமக்கு வழிகொடுபோகைக்குத் துணைபெற்ற ஆழ்வார், "தமக்கு ப்ராப்ய தேசம்ஏதோ?" என்று ஆராய்ந்து, "திருவனந்தபுரமேப்ராப்யம்" என்று அறுதியிட்டாராய், ஸர்வேஶ்வரன் தான் வந்து விரும்பி வர்த்திக்கும்படியான போக்யதையாலும், அவன் நித்யவாஸம் பண்ணுகையாலே ஸாம்ஸாரிக துரிதம் தட்டாமையாலும், நித்யஸூரிகளும் இங்கேவருகையாலே அடியார்கள் குழாங்களும் இங்கே உண்டாய் அத்திரளிலே சென்று புகலாம்படியிருக்கையாலும், அவ்வருகே போக்குண்டானால் அவர்களோடே போகலாயிருக்கையாலும், வழிபோமிடத்தில் "அமாநவ: புருஷ:" என்னும்படியாலே ஆதிவாஹிகரில் தலைவனுய்த் தன்பேறாகக் கொண்டுபோவான் ஒருவனுகையா

லும், அங்குப்போனால் பெறக்கடவ அடிமையை "கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினை களையலாம்" என்று இங்கே பெறலாயிருக்கையாலும் திருவநந்தபுரமே ப்ராப்யமென்று அறுதியிட்டு, அங்கேபோய்ப் புகுகைக்கு அநுகூலஜனங்களோடே கூடப் போகைக்கு உத்யோகிக்கிறார். உகந்தருளின நிலங்களிற்காட்டில் திருவனந்தபுரத்தை ப்ராப்யமென்கைக்கு அடி, "கடைத்தலை சீய்க்கப்பெற்றால்" என்று அடிமைசெய்பலாயிருக்கையாலும், "அமரர்கோனர்ச்சிக்கின்று அங்ககப்பணி செய்வர் விண்ணோர்" என்று நித்யஸூரிகளும் இங்கே வருகையாலும்: இவர் ஒன்றை ஆதரித்தால் அதுக்குத் தக்க பாசுரமிட்டுச் சொல்லுமித்தனைபிறே.

ஈடு.—" 'ஒருநற்சுற்றம்' என்கிறதிருமொழியிலே பலதிருப்பதிகளையும் அருளிச்செய்த இதுக்குக் கருத்தேன்?" என்று சீயர் பட்டரைக்கேட்க, "பிறந்தகத்தில்நின்றும் புக்ககத்துக்குப்போம் பெண்பிள்ளைகள் ஸம்பந்திக்களிருந்தவிடமெங்கும் கண்டு வினவப்போமாபோலே, ப்ராப்யபூமியணித்தானவாறே திருப்பதிகள்தோறும் புகுகிறார்" என்றருளிச்செய்தார். இவரும் அப்படியே திருப்புளிங்குடியிலேபுகுவது, திருக்காட்கரையிலே புகுவது, திருமூழிக்களத்திலேபுகுவது, திருநாவாயிலேபுகுவது, திருக்கண்ணபுரத்திலேபுகுவது, திருமோகூரிலேபுகுவது, திருவனந்தபுரத்திலே புகுவதாகிறார். ப்ராப்யபூமியேறப் போவதாக ஒருப்பட்டு, நடுவுண்டான ப்ரதிபந்தகங்களைப்போக்கி வழிகொடுபோய்விடுகைக்குக் காளமேகத்தைத் துணையாகப்பற்றினாராய் நின்றது - கீழ்; "அவ்வளவுதான் நமக்குப்போகவேணுமோ, இங்கே (நமக்கு) திருவனந்தபுரம் ப்ராப்யமாகவுண்டாயிருக்க?" என்று திருவனந்தபுரத்தை ப்ராப்யமாக அத்யவஸித்து; அத்தேசமாகிற இதுதான், வாசமே கமழுஞ்சோலை வயலணியனந்தபுர மாகையாலே, அவன்தனக்குவிரும்பி வர்த்திக்கவேண்டும்படி நிரதிஶயபோக்யமுமாய், அவன்வந்து வர்த்திக்கையாலே ஸம்ஸாரதுரிதமும் தட்டாதவிடமுமாய், இச்சரீரஸம்பந்தமற்று அவ்வருகுபோனால் செய்யுமடிமையை ருசிபிறந்தபோதே இங்கேசெய்யலாம்படியுமாய், இனித்தான் 'அமரர்கோனர்ச்சிக்கின்றங்ககப் பணிசெய்வர்விண்ணோர்" என்கிறபடியே நித்யஸூரிகளும் வந்தடிமைசெய்கிற தேசமாகையாலே "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ?" என்று ஆசைப்பட்டபடியே அவர்களோடேகூடவுமாய், அவ்வருகுபோக வேண்டிற்றாகிலும் "பேரியோரை யொருகாலும்பிரிகிலேன்" என்கிறபடியே அவர்களோடேபோகவுமாயிருக்குமிறே. உகந்தருளின நிலங்களில் நிலைதான் - முதலிலே பகவத்விஷயத்தில் ருசியைப்பிறப்பிக்கைக்கு உடலுமாய், ருசிபிறந்தால் "யேயதாமாம்ப்ரபத்யந்தே" (யேயதாமாம்ப்ரபத்யந்தே) என்கிறபடியே ஸௌலப்யத்துக்கு எல்லைநிலமுமாகையாலே உபாய பாவமும் பூர்ணமாய், ப்ராப்யபூமியில் கொடுபோமிடத்தில், ஆதிவாஹிககணத்தில் ப்ரதானனை

---

கெடுமிடர் ப்ரவேஶே; * பண்டைநாள் தொடங்கிப் பலகாலும் திருப்பதிகளை யருளிச்செய்வானென்னென்ன - ஒருநற்சுற்றம் இத்யாதி. இதோடுஇத்திருவாய்மொழிக்கு ஸங்கதி ப்ராப்யபூமி இத்யாதி. "சுரும்பலற்றும்" இத்யாதியைப்பற்ற - ப்ராப்யமாகவுண்டாயிருக்க என்றது. ப்ராப்யமாக அத்யவஸிக்கைக்கடியேதென்ன, பலஹேதுக்களாலே அது ப்ராப்யமாம் ப்ரகாரத்தை உபபாதிக்கிறார் - அத்தேசமாகிற இத்யாதி. "நேசஞ்செய்து" என்றத்தைப்பற்ற - அவன்றனக்கு விரும்பி இத்யாதி. "தீருநோய்வினைகளெல்லாம்" என்றத்தைப்பற்ற - ஸம்ஸாரதுரிதம் இத்யாதி. "கடைத்தலைசீய்க்கப்பெற்றால்" இத்யாதியைப்பற்ற - இச்சரீரஸம்பந்தம் இத்யாதி. உத்தாகாரங்களெல்லாம் இங்குக்கூடுமோவென்ன - உகந்தருளின இத்யாதி. 'உடலாயிருக்குமிறே'

தானே "ஹார்தாநுக்ருஹீத:" (ஹார்த்தாநுக்ருஹீத:) என்கிறபடியே வழியில் ப்ரதிவந்யகங்களைப்போக்கிக் கொடுபோகைக்கும் முற்பாடனாகைக்கும் உடலாய், ஸம்ஸாரவந்யமற்று அவ்வருகேபோனால் செய்யும்அடிமையை விரோதிகிடக்கச்செய்தே காதாசித்கமாகச்செய்கைக்கும் உடலாயிருக்குமிறே. ஆக, "ருசியைப்பிறப்பிக்கைக்கும் உடலாய், ருசிபிறந்தபோதே யுபாயமாகைக்கும் உடலாய், ஜ்ஞாநஶக்திவர்த்தகங்களுமாய், விரோதியும் கிடக்கச்செய்தே யடிமைசெய்கைக்கும் உடலாயிருக்கையாலே, திருவனந்த புரமே பரமப்ராப்யம்" என்றறுதியிட்டு, நம்மோடு ஸம்வந்யமுடைய அநுகூலஜநங்க ளடங்க அங்கேபோய்த் திரளுங்கோளென்கிறார். இதுதான் அல்லாததிருப்பதிகளுக்கும் ஒவ்வாதோ? "யாவரும் வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை மேவிவலஞ் செய்து கைதொழக்கூடுங்கொலென்னு மென்சிந்தனையே" என்று இத்யாதிகளுமுண்டே யென்னில்? - எல்லாவற்றுக்கும் எல்லாமுண்டாயிருந்தாலும் ஓரோவிடங்களிலே ஓரநுஸந்யாநவிசேஷங்களோடிறல் அதுக்குச்சேர வார்த்தைசொல்லு மித்தனையிறே.

## முதற் பாட்டு.

கெடும்இடராயவெல்லாம் கேசவாவென்னநாளும்
கொடுவினைசெய்யுங்கூற்றின்தமர்களுங்குறுககில்லார்
விடமுடையரவில் பள்ளிவிரும்பினான்சுரும்பலற்றும்
தடமுடைவயல் அனந்தபுரநகர்புகுதும்இன்றே.

*ஆ —திருவனந்தபுரத்திலே போய்ப்புகுகைக்கு ப்ரதிவந்யகம்போகைக்கு கேசவாவென்று திருநாமத்தைச் சொல்லிக்கொண்டுபோய்ப் புகுவோம்; வாருங்கோள் என்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், ப்ராப்யமான திருவநந்தபுரத்துக்குப் போகைக்குப் ப்ரதிவந்யக கர்மங்களெல்லாம் போம்: நமக்கு இனிதாக "கேசவா" என்னும் இத்திரு*

ஆகையாலே கூடுமென்றபடி. உக்தத்தைச் சேர்த்துக்கொண்டு பரமப்ராப்யத்தை நிகமிக்கிறார் - ஆக இத்யாதி. 'ஜ்ஞாநஶக்தி வர்த்தகங்களுமாய்' என்றவிடத்திலே - "ஸஞ்சிந்நாஜ்ஞாநஸந்தாநஸ்ஸம்ஸாரஸ்ஸர்வதோ கதா । ஸ்மாவாஸ்ய ஸ்மாப்யாஸ்ய ஸ்மாதஸ்மிந் ஸமயஸ்ஸ்ய: । ஸ்மாஹதஸ்ய ஸ்மரஸ்யஸ்யநாஸிகாம் ஸம்ஸ்ம்ருஜேத்" என்றதநுஸந்தேயம். "நடமினோநமர்களுள்ளீர்" என்றத்தைப்பற்ற-நம்மோடு ஸம்பந்யம் இத்யாதி. அதுக்குச்சேர வார்த்தைசொல்லு மித்தனை என்றது - இருந்தபடிக்கீடாக வ்யாக்யாநம் பண்ணவேணுமேயென்றபடி. பெரியோரை யொருகாலும் பிரிகிலேன் என்றது - திருமொழி. * கண்சோர வெங்குருதியிலே, "தோளும்" இத்யாதி. "பலம் பலவதாம் சாஹம் காமராகவிவர்ஜிதம் । தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப:" இதி ஸ்ரீகீதாயாம் (எ - கக). ஹார்த்தாநுக்ருஹீத இதி. "ததோகோக்ரஜ்வலநம் தத்ப்ரகாஶிதத்வாரோ வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச ஹார்தாநுக்ருஹீதஶ்ஶதாதிகயா" இதி உத்தரமீமாம்ஸாயாம் சதுர்த்தாத்யாயஸ்ய த்விதீயபாதே.

நாமத்தைச் சொல்லிக்கொண்டு அங்கே போய்ப் புகுருவோம் வாருங்கோள் என்று, ஸ்ரீவைஷ்ணவர்களை அழைக்கிறார்.

[கேசவன்] – கேஶிஹந்தா. [நாளும் கொடுவினைசெய்யும் கூற்றின்தமர்களும் குறுககில்லார்] - என்றும் கொடிய ப்ரவ்ருத்திகளைப்பண்ணி நலியக்கடவ யமபடரும் கிட்டமாட்டார். [விடமுடையரவு என்றுமேனுக்கு] - "படர்கொள் பாம்பணைப்பள்ளிகொள்வான்" என்று ஆசைப்பட்டாற்போலே ப்ரதிகூலர்க்கு வந்து அணுகவொண்ணாதபடி விஷத்தையுடைய திருவநந்தாழ்வான்மேலே ஆதரித்துக் கண்வளர்ந்தருளுகிறவனதாய், "ப்ராப்யதேஶம்" என்று தெரியும்படி மதுபானமத்தமான வண்டுகளாலே அலற்றவும்பட்டுத் தாபத்ரயத்தைப் போக்கவல்ல பொய்கைகளோடு கூடின வயலாலே அணைத்திருந்துள்ள திருவநந்தபுரத்திலே இச்சை பிறந்த இன்றே போய்ப்புகுவோம்.

ப.—முதற்பாட்டில், அயத்நஸாத்யமாய் வக்லேஶம் தீரும்படி பாபக்ஷயமான அவனுடைய போக்யநாமங்களைக் கீர்த்தித்துக்கொண்டு ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவனானவனுடைய திருவனந்தபுரத்தைக் கிட்டுங்கோள் என்று, ஸ்வஜநமான ஸாத்வதர்களைக்குறித்து அருளிச்செய்கிறார்.

"கேஶவாநந்த கோவிந்த வாஸுதேவ ஜகந்மய" என்கிறபடியே, ப்ரஶஸ்தகேஶனான க்ருஷ்ணனுடைய, கேசவாஎன்ன - கேசவநாமத்தைச் சொல்லவே, (போக்யமான பாலைக்குடிக்கவே பித்தம் தன்னடையே நசிக்குமோபாதி), இடர்ஆயனவ்லாம் - ஸகலது:க்கங்களும், கெடும் - (புக்கவிடம் தெரியாதபடி) கெட்டுப்போம்; நாளும் - நிரந்தரமாக, (பாபாநுரூபமாக), கொடு வினை - க்ரூரயாதனைகளை, செய்யும் - செய்யாநிற்கிற, கூற்றின்தமர்களும் — யமபடரானவர்கள், ("ஐதீரயதி" என்று கமலநயநநாமோச்சாரணத்தாலே, "த்ருணமிவ ஜ்வலநாத்" என்கிறபடியே*கோலாடி குறுகப்பெறாதே, "கள்ளர்போல்" என்னும்படியே), குறுககில்லார் - ஓடிப்போவர்கள்; (ஆன பின்பு), (விரோதிவர்க்கம் அணுகாதபடி), விடம்உடை - விஷௌஜ்ஜ்வல்யத்தையுடைய, அரவில் - திருவரவணையிலே, பள்ளிவிரும்பினான் - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ப்ரீதிதோன்றும்படி விரும்பிக் கண்வளர்ந்தருளுகிறவனுடையதாய், (குணாநுபவப்ரீதரான முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலே), சுரும்பு - மதுபானமத்தமான வண்டுகள், அலற்றும் - அக்ரமமாக (அலற்றும்படியான), தடம் - பூந்தடங்களை, உடை - உடைத்தான, வயல் - வயல்களையுடைய, அனந்தபுரநகர் - திருவனந்தபுரத்தை, இன்றே - (காலவிளம்பம் பிறவாதபடி) இன்றே, புகுதும் - கிட்டுங்கோள்.

இ.—முதற்பாட்டில், ப்ரீதியாலே திருநாமத்தைச்சொல்லி, திருவநந்தபுரத்துக்குப் போவார்க்கு ப்ரதிபந்தகங்களெல்லாம் கெடும்; அங்கேபோய்ப் புக வாருங்கோள் என்று அநுகூலரை அழைக்கிறார்.

[கெடும் இடராயவெல்லாம்] - இடர் என்று பேர்பெற்றவை யடங்கப்போம். "யாவந்தி ஸந்தி பாபாநி" என்று பாபாநுரூபமாக ப்ராயஶ்சித்தம் ஷோதித்திருக்கும்; திருநாமத்துக்கு அங்ஙன் ஒருநியதி இல்லை. "ஸர்வஸ்மாத் ஸுக்ருதீ - நஶ்யதி" என்கிறபடியே ஸகலபாபங்களும் போம். திருநாமங்கள்தான் பல வேணுமோ? என்னில்,—[கேசவாவென்ன]- ஒருவிரோதியைப் போக்கினபடியைச்சொல்ல விரோதி

வர்க்கமாகப் போமென்னுதல், ப்ரஸ்துதகேஶனென்றால், "க்லேஶவ: க்லேஶநாஶந:" என்கிறபடியே ஸாம்ஸாரிக ஊரிதங்களெல்லாம் போமென்னுதல். "பாபேந்த்நாக்நி:" என்னக்கடவதிறே. [என்ன] - அர்த்தாநுஸந்தாநம் வேண்டா: உக்திமாத்ரமே அமையும் பாபவிமோசனத்துக்கு, என்கிறது. [நாளும் இத்யாதி] - நாள்தோறும் க்ரூரமான வ்ருத்தியைப்பண்ணும் யமபடரும் கிட்டமாட்டார். "ஸ்வபுருஷம்" இத்யாதி, "தஸ்யயஜ்ஞவராஹஸ்ய" இத்யாதி. [கில்லார்] - ஶக்தரல்லர். எரிகிறநெருப்பிலே ஏறச் சக்தருண்டோ? [விடமுடை இத்யாதி] - இனிமேல் ப்ராப்யத்தைச்சொல்லுகிறது. [விடமுடை] - விரோயிவர்க்கத்துக்குக் கிட்டவொண்ணுதபடியிருக்கை. [அரவு] - ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களை யுடைத்தாயிருக்கை. [பள்ளிவிரும்பினன்] - பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியேயாய்த்து அங்குக் கண் வளருவது. "பாதேநாத்யாரோஹதி" என்னலாம்படி யாய்த்திருப்பது. [சுரும்பலற்றும்] - "ஸாமகாயந்நாஸ்தே" என்று முக்தர் களித்து வர்த்திக்குமாபோலே யாய்த்து, அவ்வூரில் திர்யக்குக்களும் வர்த்திக்கிறபடி. [தடமுடை வயல்] - ஸாம்ஸாரிகமான தாபத்தைப் போக்கும் விரஜாதிகளைப்போலே ஶ்ரமஹரமாயாய்த்துத் தடாகங்களிருப்பது. [அனந்தபுரநகர்] - கலங்காப் பெருநகரம் போலன்றியே, இவ்வுடம்போடேகிட்டி அநுபவிக்கலாம் தேஶம். [புகுதும் இன்றே] - "க்ரமத்தே புகுகிறோம்" என்று ஆறியிருக்குமதன்று; இச்சைபிறந்த இன்றேபோய்ப் புக வாருங்கோள்.

ஈடு.—முதற்பாட்டு. ப்ரீதியாலே திருநாமத்தைச்சொல்ல, திருவனந்தபுரத்துக்குப் போகைக்கு விரோதியானவையெல்லாம்போம்; அங்கே புகவாருங்கோள் என்று அநுகூலரையழைக்கிறார்.

[கேடுமிடராயவெல்லாம்] - இடரென்று பேர்பெற்றவையெல்லாம் கெடும். ப்ரஹ்மஹத்யைக்கு ப்ராயஶ்சித்தமாக த்வாதஶவார்ஷிகம் சரித்தால் மற்றொருபாபத்துக்கு மற்றொருப்ராயஶ்சித்தம்பண்ணவேண்டியிருக்குமிறே; இங்கு அதுவேண்டா; "பாபேந்த்நாக்நி:" (பாபேந்தநாக்நி:) என்கிறபடியே. ப்ராயஶ்சித்தமும் பலவாயிருக்குமோவென்னில்?—[கேசவாவென்ன] - அவன்ஒருவிரோயியைப்போக்கினபடிசொல்ல, விரோயி யென்று பேர்பெற்றவையெல்லாம் நஶிக்கும்; ராவணனொருவனும் ப்ராதிகூல்யம்பண்ண ராக்ஷஸஜாதியாக நசித்தாற்போலே. [எல்லாம்] - அநுபவிக்கக்கடவையும் முன்பே

முதற்பாட்டு.—கேடுமிடர் இத்யாதி. "கேசவாவென்ன - இடராயவெல்லாம் - கெடும் தடமுடைவயல் அனந்தபுரநகர் புகுதும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - ப்ரீதியாலே இத்யாதி.

இத்தால் ஃபலிதம் - ப்ரஹ்மஹத்யைக்கு இத்யாதி. "திருநாமம்பாபநிவர்த்தகம்" என்னுமதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் -பாபேந்தந: இத்யாதி. "யஸ்மிந்ந்யஸ்த மதிர்ந யாதி நரகம் ஸ்வர்கோபி யச்சிந்தநே விக்நோ யத்ர நிவேஶிதாத்மமநஸோ ப்ராஹ்மோபி லோகோऽல்பக: முக்திம் சேதஸி ய: ஸ்திதோऽமலதியாம் பும்ஸாம் ததாத்யவ்யய: கிம் சித்ரம் யதகம் ப்ரயாதி விலயம் தத்ராச்யுதே கீர்த்திதே" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே மாங்கல்யஸ்தவே. "கேஶவா" என்கிறவிடத்தில்-"யஸ்மாத்த்வயைவ துஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்த்தந தஸ்மாத் கேஶவ நாம்நா த்வம் லோகே ஜ்ஞேயோ பவிஷ்யஸி" (விபு-ரு-௧௬-௨௩)என்றதுஅநுஸந்தேயம்.ஒருவிரோதிநிரஸநவாசகமான திருநாமம்சொன்னால் ஸகலவிரோதிகளும் போகக்கூடுமோவென்ன,வ்யதிரேகத்ருஷ்டாந்தம்-ராவணன் இத்யாதி. "எல்லாம்" என்றதுக்கர்த்தம் - அநுபவிக்க இத்யாதி. அநுபவிக்கக்கடவை யென்றது - உத்தராகம். அநுபவிக்கிறவை-பூர்வாகம். அப்படி நசிக்குமோவென்ன; ப்ரமாணம்-

தொடங்கி அநுபவிக்கிறவையும் நசிக்கும்; "போயபிழையும் புகுதருவானின்றனவும்." [என்ன] - உக்திமாத்ரமே இதுக்கு வேண்டுவது: கார்யத்தில்வந்தால் அர்த்தக்ரியாகாரி யாயே தலைக்கட்டும்; அன்றிக்கே, ப்ரஶஸ்தகேஶனாயிருக்கும் இருப்பைச்சொல்ல ஸம் ஸாரதுரிதங்கள் அடங்கலும்போம் என்னுதல், "கேஶவ: க்லேஶநாஶந:" (கேஶவ: க்லேஶநாஶந:) என்கிறபடியே; அன்றியே, ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனென்னுதல்; ஆனாலும் சொல்லிப்போருமது முதற்பொருளே. [நாளும்இத்யாதி]-நாள்தோறும் கொடிய செயலைச் செய்யக்கடவ ம்ருத்யுவுக்கு அந்தரங்கராயிருப்பாரும் வந்துகிட்டப்பெறார்கள். யமனுக்குஅந்தரங்கரேன்று ஸர்வேஶ்வரனுடையார்பக்கலிலேவந்துகிட்டவோ? "ஸ்வபுருஷம்" (ஸ்வபுருஷம்) இத்யாதி; "தஸ்யஜ்ஞவராஹஸ்ய" (தஸ்யஜ்ஞவராஹஸ்ய) இத்யாதி; "ப்ரணாமம்யேபிகுர்வந்தி" (ப்ரணாமம்யேபிகுர்வந்தி) என்றிறே அவன்வார்த்தையும். "இறைஞ்சியும்சாதுவராய்ப்போதுமின்களேன்றான்"-அவர்களைக்கண் டால் "நாம் கடவோமல்லோம்" என்றுபோராதே, கிட்டியநுவர்த்தித்துப் போரும்கிடி கோள்! "ஸ்வபுருஷம்"(ஸ்வபுருஷம்)-யமன், தன்பரிகரம்கையும்பாசமும்சூலமும் நாயு மாய்ப்போருகிறபடியைப்பார்த்து, பாகவதர்களும்அல்லாதாரும்கலந்திருப்பர்கள்; "பாக வதர்கள்முன்னே இவன்கிட்டில்செய்வதேன்?" என்று துணுக்கென்று சொல்லுகிறான். "ஸ்வபுருஷம்" (ஸ்வபுருஷம்) - தனக்குஅந்தரங்கனாயிருக்கையாலே, தன்மேன்மை சொல்லவேண்டுமிடத்திலே தாழ்வுசொல்லுகிறானாய்த்துத் தவிரவொண்ணாமையாலே. "அபிவீக்ஷ்ய" (அபிவீக்ஷ்ய) - இவன்தான் நாலிரண்டோலைமறுக்கத் தரமுடையனா யிருக்குமாய்த்து ; சொற்செல்லுகைக்காக இப்படியிருக்கிறவனைப் பார்க்கிறபார்வையிலே கார்யகௌரவமெல்லாம் தோற்றும்படிபார்த்தானாய்த்து. "மதுஸூதநப்ரபந்நாந்" (மதுஸூதநப்ரபந்நாந்) - "இவர்களைநலிந்தால்அவனுக்கேன்?" என்ன ; இவர்கள் அவன் பக்கலிலே ந்யஸ்தபரராயிருப்பர்கள் ; இவர்களுக்கு வந்ததொன்றுக்கு அவன்மார்வுதட் டிக்கொண்டு வரும். உன்னுடையோமாய்ப்போகிற எங்களுக்கு வேறுசிலர்க்குஅஞ்சவேண்

போய இத்யாதி.போயபிழை-பூர்வாகம். புகுதருவானின்றன-உத்தராகங்கள். "என்ன-கெடும்" என்றதுக்குபாவம் - உக்திமாத்ரமே இத்யாதி. "நாமஸங்கீர்த்தநம் யஸ்ய ஸர்வபாப ப்ரணாஶநம் | ... கேஶவ: க்லேஶநாஶந:" இதி மஹாபாரதே. மூன்று மர்த்தத்துக்கு "... ப்ரஹ்மாணம் ஈஶாநம் ... | ... கேஶவ நாமவாந்" என்கிற ஶ்லோகமநுஸந்தேயம். "கெடுமிடராய வெல்லாம்" என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டாகையைப்பற்ற அருளிச் செய்கிறார் - ஆனாலும் இத் யாதி. "தமர்களும்" என்ற ச ஶப்தத்துக்கர்த்தம் - யமனுக்கு இத்யாதி. கிட்டமாட்டாமைக்குப் பல ப்ரமாணங்கள் - ஸ்வபுருஷம் இத்யாதி. * தாளதாமரையிலெழுதப்பட்டது. "தஸ்யஜ்ஞவரா ஹஸ்ய விஷ்ணோ: அமிததேஜஸ: | ப்ரணாமம்யேபிகுர்வந்தி தேஷாமபி நமோ நம: " இதி ஸ்ரீ விஷ்ணுதர்மே. அவன் வார்த்தையும்-யமன்வார்த்தையும். "இறைஞ்சியும்" இத்யாதி பாசு ரத்துக்கர்த்தம் -அவர்களை இத்யாதி. "ஸ்வபுருஷம்".(விபு-ரு-எகரு). என்றெடுத்ததுக்கர்த்தம் சொல்லுவதாகப் பதோபாதாநம்-ஸ்வபுருஷம் என்று. "பாஶஹஸ்தம்" என்றத்தைக் கடாக்ஷித்து ஶ்லோகாவதாரிகை - யமன் இத்யாதி. "அபி, வி" என்ற உபஸர்க்கார்த்தம்-இவன்தான் இத்யாதி வாக்யத்வயம். அவனுக்கு - ஈஶ்வரனுக்கு. அவன் மார்வுதட்டிக்கொண்டு என்றது - "ஸகாஷாயி

டேம்படி இருந்ததாகில் நீ பின்னை யாராய் இவ்விருப்பிருந்துஎவுகிறது? என்ன,—"ப்ரபுரஹம் அந்யந்ருணாம்"(ப்ரபுரஹமங்யந்ருணும்)-எனக்கு அடைத்தவிஷயத்தில் சொற்செல்லா தாகிலன்றே எனக்குக் குறையாவது? நாம் கடவோமல்லாதவிஷயத்திலே நாம் ஆராயாநிற் கவோ? இதுதன்னைத் திருமழிசைப்பிரானும் அருளிச்செய்தாரிறே - "திறம்பேன்மின்" இத்யாதி. "அவன்றமரேவ்வினையர்" இத்யாதி. அவர்கள் தங்களிலே சொல்லியிருக்கும் வார்த் தையிறேஇது. "மாறுசெய்த" இத்யாதி. சக்ரவர்த்தித்திருமகனுர் பேரை இவன்ஆராயவோ? ஒருதிருவேட்டையிலே, பட்டர் திருவூற்றங் கரையிலே பேரோலக்கமாகவிருக்க, "ஸந்த்ய யையானது" என்று சிலர் விண்ணப்பஞ் செய்ய, "நாம் பெருமாளழகிலே துவக்குண்டு இன்றொருநாளும் கர்த்தவ்யத்திலே அல்பம் தாழநின்றோமென்றால் இது குற்றமாக யமன் கேட்கவோ? †ஒருராஜாஇருந்து நாட்டுக்கணக்குக் கேட்டுக்கொடு வாராநின்றால் ராஜாவுக்கு அந்தரங்கனாயிருப்பானொருவன்பேரை வாசித்தால், 'ஓங்காண்! அதுகிடக்க: மேற்சொல்

---

ஷ்யாதி" என்றத்தைப்பற்ற. "ப்ரபுரஹமந்யந்ருணாம்" இத்யாதிக்கவதாரிகை உன்னுடை யோமாய் இத்யாதி. திறம்பேன்மின்கண்டீர் - தப்பாதேகிடிகோள். செவிக்கு - செவியிலே. "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றவிடத்திலே - "பெருமாள்ஒருநாள் கிழக்கே புறப்பட்டரு ளின வளவிலே மழைவர, கீழையூரிலாலயத்திலே யெழுந்தருள, எம்பெருமானாரும் முதலிகளும் புறம்பேமழையிலே நனைந்துகொண்டு நிற்கிறவளவிலே, ஒருவன்வந்து 'பெருமாளுள்ளேயெழுந் தருளினுரே: தேவரீரும்உள்ளே யெழுந்தருள வொண்ணுதோ?' என்ன, 'கெடுவாய், மஹாராஜர் வேஶ்யாகமநம் பண்ணினுல் ததஸாமாரண்மஹிஷியும் பரபுருஷகாமிநியாகலாமோ?'என்று எம்பெரு மானுருளிச்செய்தார்" என்கிற ஐதிஹ்யம் அருளிச்செய்வர். "யமபடர்கிட்டமாட்டார்" என்னு மதுக்கு ப்ரமாணாந்தரமும் அதுக்கர்த்தமும் அருளிச்செய்கிறுர் - அவன்றமர் இத்யாதி நாலுவாக்யத் தாலே. மூன்றாந்திருவந்தாதி ஐம்பத்தஞ்சாம் பாட்டு. அவர்கள் தங்களிலே - யமபடர் தங்களிலே யென்னுதல், ஆழ்வார்கள் தங்களிலேயென்னுதல்: இவ்வாக்யத்துக்கர்த்தம் ஸங்ஹிதம். "ஆட்பட் டார் பேர்" என்றது - ஆட்பட்டபேரென்னுதல், ஆட்பட்டவர்களுடைய பரிகரபூதரென்னுதல், ஆட்பட்டவர்களுடைய பேரை யரித்தவர்களென்னுதலென்று மூன்றர்த்தம். அவன்றமர் - அவ னடியார், எவ்வினையராகிலும் - எப்படிப்பட்ட பாபத்தையுடையரேயாகிலும், எம்கோனவன்ற மரேயென்றொழிவதல்லால் - நம்முடைய ஸ்வாமியானவனுடைய அடியாரென்றொழியுமதல்லால், நமன்றமராலாராயப்பட்டறியார்கண்டீர் - யமபடராலாராயப்பட்டறியார்கிடிகோள், அரவணைமேல் பேராயற்காட்பட்டார் பேர். ஆட்பட்டார்பேர் - ஆராயப்பட்டறியார்கண்டீர் இத்யந்வயம். ப்ரமா ணாந்தரம் - மாறுசெய்த இத்யாதி. திருச்சந்தவிருத்தம். இதுக்கு பாவம் - சக்ரவர்த்தி இத்யாதி. மாறுசெய்த - எதிரிட்டுக்கொண்ட, வாளரக்கன் - ருத்ரன்பக்கல் பெற்ற வாளையுடைய ராவண னுடைய, நாள்உலப்ப - ஆயுஸ்ஸை முடிக்கைக்காக, அன்று - பிராட்டியைப் பிரித்து ப்ராதிகூல் யத்திலே கைவளர்ந்தவன்று, இலங்கை நீறுசெய்து - திருவடியைக்கொண்டு லங்கையை பஸ்ம மாக்கி, சென்று கொன்று - லங்கையளவும் சென்று அவனைக்கொன்று, வென்றிகொண்டவீரனார் - அவனை ஜயித்த வீரஸ்ரீயையுடைய சக்ரவர்த்தித் திருமகனார்; வேறுசெய்து தம்முளென்னைவைத் திடாமையால் - "இவன் நம் திருவடிகளுக்குப் புறம்பாயிருப்பானொருவன்" என்று தம்முடைய திருவுள்ளத்திலென்னை நினையாமையால், நமன்கூறுசெய்துகொண்டு - செய்தார் செய்தகுற்ற மாராயக்கடவ யமன், சக்ரவர்த்தித்திருமகனார் அந்தரங்கனாக்கிவைத்த என்னைப் பிரித்துக்கொண்டு, இறந்தகுற்றமெண்ணவல்லனே - செய்துகழிந்த பாபத்தை நினைக்க ஶக்தனோ? என்று பாட்டுக்கு ஸப்தார்த்தம். "யமவஶ்யதைக்கஞ்சவேண்டா" என்னுமதுக்குஐதிஹ்யம்- ஒரு திருவேட்டையிலே இத்யாதி. கேட்கவோ - கேளானே யென்றபடி. "ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" என்ற ஈஶ்வராஜ்ஞையை மறுத்தால் தண்டியாதிருக்கலாமோவென்ன - ஒருராஜா இத்யாதி. ஆகில், ஆஜ்

---

† 'ஒரு' என்பதில்லாமல் 'ராஜா' என்பதே அடையவளைந்தானிற் பாடம்.

என்றால் பின்னையொருகாலமும் அப்பேரெடுத்து வாசிக்கப்பெறாதுகாண்'' என்றாராம்: இந்தப்ரஸங்கத்திலே, ''உனக்காகித் தொண்டுபட்டநல்லேனை வினைகள்நலியாமைநம்பு நம்பீ'' என்றருளிச்செய்தார். ''வள்ளலேஉன்தமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல்'' இருவர் ஒருவழிப் போகப்பெறார்கள். ''கொடுமைசெய்யும்'' இத்யாதி -விழுக்காடறியாதே வந்துகிட்டில் செய்வதென்னென்னில், - ''தடவரை'' யித்யாதி - திருவாழியையிட்டுத் தோளைக்கழித்தல், ஓர்அம்பாலே தலையையுருட்டுதல் செய்யுமத்தனை. வாணன்பட்டது படுதல், ராவணன்பட்டது படுதல் செய்யுமத்தனை. ''வேண்டாமை நமன்றமரென்தமரை வினவப்பெறுவாரலரென்று உலகேழாண்டான்'' - யமபடர் நம்முடையாரை வினவப் பெறார்கள், அதுக்கடியேன்? ''வேண்டாமை''. ஊர்க்கணக்கனோ கோயிற்கட்டணத்திலே புக்குப் படுக்கைப்பற்றுஆராய்வான்? ''செய்தாரேல் நன்றுசெய்தார்'' என்கிறவன் இவர்கள்கையில் காட்டிக்கொடானே. ''நின்னுமம்கற்றவாவலிப்புடைமை - நமன்றமர்தலைகள்மீதே - நாவலிட்டுழிதருகின்றோம்.'' ''ப்ரபவதிஸம்யமநே'' (ப்ரபவதிஸம்யமநே) - உங்களை நியமிக்கப்போந்த என்னைப்போலல்லகாண் என்னை நியமிக்குமவன்; இவ்வோலக்கத்திலே வந்தாலிறே †நான் ஆராய்வது? அவன் எங்குமுளனிறே. [நாளும்கொடுவினை செய்யுங்கூற்றின்தமர்களும்குறுககில்லார்] - பழையதாக நலிந்துபோந்த வாஸநைகொண்டு ஹமவத் விஷயத்திலே முதலடியிட்ட இன்றும் கிட்டவோ? [குறுககில்லார்] - ''நிர்தோ

ஞாதிலங்கநம் பிறந்தாலும் அஞ்சவேண்டாவேயென்ன - இந்த இத்யாதி. இந்தப்ரஸங்கத்திலே என்றது - அந்தரங்கனுயிருப்பா னொருவனென்ற இந்தப்ரஸங்கத்திலேயென்றபடி. திருமொழி ஆறும்பத்து மூன்றாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. சொல்லாய் திருமார்பா - பிராட்டியைத் திருமார்விலேயுடையவனே! இதுக்கொரு போக்கடி சொல்லவேணும்; உனக்காகித் தொண்டுபட்ட நல்லேனை - உன் திருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே யந்வயிக்கும்படியான வைலக்ஷண்யத்தையுடைய என்னை, வினைகள்நலியாமைநம்புநம்பீ - கர்மங்கள் என்னை நெருக்காதபடி நீ யங்கீகரித்தருளவேணும் பூர்ணனானவனே! என்று ஸப்தார்த்தம். ''யமவஸ்யதைக்கு அஞ்சவேண்டா'' என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் - வள்ளலே இத்யாதி. ''கள்ளர்'' என்றதுக்கு பாவம் - இருவர் இத்யாதி. ப்ரமாணாந்தரமும் அதுக்குபாவமும் அருளிச்செய்கிறார் - கொடுமை செய்யும் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. உக்ரக்ருத்யங்களைச் செய்யும் யமனும், என் கோலாடிகுறுகப்பெறா - என்னுடைய ஆஜ்ஞை நடக்குமிடமெல்லாம் புகுரப்பெறான் இத்யர்த்தம். விவரணம் - வாணன் இத்யாதி. ப்ரமாணாந்தரம் - வேண்டாமை இத்யாதி. திருமொழி பத்தாம்பத்து ஆறாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, ''நீண்டான்'' இத்யாதி. இதுக்கு பாவம் - யமபடர் இத்யாதி. வேண்டாமை - ப்ராப்தியில்லாமையாலென்று ஸப்தார்த்தம். இதுக்கு லௌகிகத்ருஷ்டாந்தம் - ஊர் இத்யாதி. கோயிற்கட்டணம் - அந்தப்புரம். படுக்கைப்பற்று - ஸ்த்ரீகளிருக்கிறவிடம். அவன்தான் காட்டிக்கொடுத்தாலோ - என்ன - செய்தாரேல் இத்யாதி. ப்ரமாணாந்தரம் - நின்னுமங்கற்ற இத்யாதி. திருமாலை, முதற்பாட்டு. ஆவலிப்பு - அவலேபம்; கர்வமென்றபடி. யமனுக்கு எல்லாரும் அஞ்சவேண்டியிருக்க, யமன் தான் ஈஸ்வரனுக்கு அஞ்சுகைக்கடி யருளிச்செய்கிறார் - ப்ரபவதி இத்யாதி. ''அஹமமரவரார்ச்சிதேந தாத்ரா யம இதி லோகஹிதாஹிதே நியுக்த:। ஹரிகுருவஶகோऽஸ்மி ந ஸ்வதந்த்ர: ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:.'' ''விஷ்ணு:'' என்றத்தைக் கடாக்ஷித்தர்த்தம் - உங்களை இத்யாதி. இவனுக்குக் குறையேது, அவனுக்கு ஏற்றமேதென்ன - இவ்வோலக்கத்திலே இத்யாதி. என்றும் பாதித்துப்போந்தவனுக்கு இன்று கிட்டவொண்ணாதோவென்ன - பழையதாக இத்யாதி; இதுக்கு ''நாளும்'' என்றதிலே நோக்கு. ''கேசவா'' என்றது - உக்தி மாத்ரமாகையாலே, 'முதலடியிட்ட' என்கிறார். கிட்டாமைக்கடியேதென்ன - நிர்த்தோஷம் இத்

† இவன் என்ற பாடம் ஸ்வரஸமன்று.

[illegible]" (நிர்த்தோஷம்வித்தி)-சாவதுபிறப்பதாய்ப் போந்தவனாவது, பரிஹாரமில்லாத தோஷங்களையுடையனாவது: ஆனாலும் அவனை நிர்த்தோஷனாகவே புத்திபண்ணுவது. தோஷங்களுண்டாயிருக்க இப்படி நினைக்கவேண்டுவானேனென்னென்னில்? "[illegible] (ப்ரபாவாத்)-இவனையோ பார்ப்பது? இவன்பற்றினவனைப் பார்க்கவேண்டாவோ? இவனை யாராய்கையாவது - ஸம்ஸாரத்தைப் பரிச்சேதிக்கையாமிறே. [கில்லார்] - எரிகிற நெருப்பிலே கிட்டுவாருண்டோ? நியாமகனுடைய நியமநவாக்யங்கொண்டு கிட்டாமை யல்லவிறே; தந்தாமை வேண்டாதாருண்டோ? [விடமுடையித்யாதி] - இனிமேல் ப்ராப்யத்தைச் சொல்லுகிறது. [விடமுடை] - செந்தேங்குக்கு முட்கட்டினாற்போலே ஒருவர்க்கும் முகங்கொள்ளவொண்ணாதிருக்கை; "வாய்ந்தமதுகைடபரும் வயிறுருகிமாண்டார்"- விரோதிகளாய்க்கிட்டினார் முடிந்துபோம்படியா யிருக்கும். [அரவு] - ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைத்தாயிருக்குமிறே. [பள்ளிவிரும்பினான்] - பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடியேயாய்த்து அங்குக் கண்வளர்ந்தருளுகிறது. "[illegible]" (பாதேநாத்யாரோஹதி) என்று துகைத்தேறலாயாய்த்து இருப்பது. [சுரும்பமற்றும்] - "[illegible]" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று முக்தர்செய்யுமவற்றை வண்டுகள்செய்யாநிற்கும். [தடமுடைவயல்] - விரஜை மற்றையவற்றுக்குப் போலியா யிருக்குமாய்த்துத் தடாகங்கள். [அணந்தபுரநகர்] - கலங்காப்பெரு நகரத்துக்குப் போலியாயிருக்கும். [புகுதுமின்றே] - "க்ரமத்திலேபுகுகிறோம்" என்றுஆறி யிருக்குமதன்று; இச்சைபிறந்தஇன்றே போய்ப்புகுவோம். (௧)

---

யாதி. "[illegible] । [illegible] । [illegible]" இதி ஸாரதே ஸாத்த்வதேச. "[illegible]" என்றதையும் "[illegible]" இத்யாதிகளையும் கடாக்ஷித்து, "[illegible]" என்றதுக்கர்த்தம் அருளிச்செய்கிறார் - சாவது இத்யாதி வாக்யத்ரயத்தாலே. குறுகாதென்னாதே, "கில்லார்" என்றதுக்கு பாவம் - எரிகிற இத்யாதி. இவ்விடத்திலே, "[illegible] । [illegible]" என்றதுஅநுஸந்தேயம். விவரணம் - நியாமகனுடைய இத்யாதி. செந்தேங்கு - செவ்விளநீர். ஒருவர்க்கும் முகங்கொள்ளவொண்ணாதிருக்கைக்கு ப்ரமாணம் - வாய்ந்த இத்யாதி. மூன்றாந்திருவந்தாதி, அறுபத்தாறும்பாட்டு, "காய்ந்து" இத்யாதி. இதுக்கு பாவம் - விரோதி இத்யாதி. பர்யங்கவித்யை - தேவிமாரிலே கண்டுகொள்வது. கண்வளர்ந்தருளுகைக்கு ப்ரயோஜநம் - பாதேந இத்யாதி. சுரும்பு - வண்டு. இதுக்கு பாவம் - ஏதத் இத்யாதி. மற்றவை யென்றது - ஆரம், ஐரம்மதீயம் என்கிற தடாகங்களை. "நகர்" என்றதுக்கு பாவம் - கலங்கா இத்யாதி. "இன்றே" என்கிற அவதாரணார்த்தம் - க்ரமத்திலே இத்யாதி. 'விடமுடை' என்று தொடங்கி, 'நகர் - இன்றே புகுதும்: கேசவாவென்ன - இடராயவெல்லாம் - கெடும்: நாளும் கொடுவினைசெய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்' இத்யந்வய:. (௧)

## இரண்டாம் பாட்டு.

---

இன்றுபோய்ப்புகுதிராகில் எழுமையும்ஏதஞ்சாரா
குன்றுநேர்மாடமாடே குருந்துசேர்செருந்திபுன்னை
மன்றலர்பொழில் அனந்தபுரநகர்மாயன்நாமம்
ஒன்றும்†ஓராயிரமாம் உள்ளுவார்க்குஉம்பரூரே.

ஆ.—(இன்றுபோய்.) - ப்ரதிபந்தகம் போகைக்குக் கேசவாவென்னும் திருநாமம் சொல்லவேணுமென்று நியமமுண்டோவென்னில், - அதில்லை; அவனுடைய ஆயிரந்திருநாமத்திலே வேண்டிற்றொரு திருநாமத்தை நினைக்கஅமையும்; நினைக்கவே, நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகராய் இன்றேபோய்த் திருவனந்தபுரத்திலே புகலாம்; போய்ப்புகுதிராகில் ஒருநாளும் ஒருதுக்கமில்லை யென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ப்ரதிபந்தகங்கள் போகைக்கு ஒருதிருநாமம் சொல்ல அமையும்; அது ஒன்றுமே ஆயிரம் ப்ரகாரத்தாலே ரக்ஷகமாம் என்கிறார்.

[இன்று என்றுதொடங்கி]-போவோமென்று இச்சைபிறந்த இன்றேபோய்ப் புகுவதிகோளாகில் ஒருநாளும் ஒருது:க்கமும் ஸ்பர்சியா. [குன்று என்றுதொடங்கி]-குன்றோடொத்த மாடங்களையும், அவற்றினருகே பரஸ்பரம் சேர்ந்த குருந்துமுதலான வ்ருக்ஷங்களையும் மன்றிலே அலராநின்றுள்ள பொழிலையுமுடைய திருவனந்தபுரமாகிற நகரத்தில் ஆச்சர்யபூதனை எம்பெருமானுடைய திருநாமம். [உள்ளுவார்க்கு உம்பரூரே] - ஆராய்வார்க்குத் திருவனந்தபுரமே ப்ராப்யபூமி.

ப.—அநந்தரம், ஆச்சர்யபூதனானவனுடைய திருநாமங்கள் ஸஹஸ்ர முவமாக ஸ்ரேயமாம் என்கிறார்.

இன்று - காலவிளம்பம் பிறவாதபடி ருசிபிறந்தவின்றே, போய் - சென்று, புகுதிர் ஆகில் - ப்ராபிப்புதிகோளாகில், ("தேநாவஜநஸம்ஸாரு" என்கிறபடியே), எழுமையும் - யாவதாத்மபாவி, ஏதம் - ஸம்ஸாரதோஷம், சாரா - தட்டாது; (ப்ராபிக்கிற ப்ராப்யதேசந்தான்), குன்றுநேர் - மலைபோலேயிருக்கிற, மாடம் - மாடங்களினுடைய, மாடே - பரிஸரத்திலே, குருந்துசேர் - குருந்தோடு சேர்ந்த, செருந்தி - செருந்தியும், புன்னை - புன்னையும், மன்று - மன்றிலே, அலர் - அலரும்படியான, பொழில் - பொழிலையுடைத்தாகைபாலே நிரதிசயபோக்யமான, அனந்தபுரநகர் - திருவனந்தபுரமாகிற நகரத்திலே, மாயன் - (ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமான ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணவிசிஷ்டனான) ஆச்சர்யபூதனுடைய, நாமம்-தத்குணவாசகநாமம், ஒன்றும் - ஏதேனுமொன்றாகிலும், ஓர்- அத்விதீயமாய்க்கொண்டு, ஆயிரம்ஆ - ஸஹஸ்ர முவமாக, உள்ளுவார்க்கு-நிரூபிப்பார்க்கு, (அத்தேசத்தில் குறைநுபவமே), உம்பரூர்- பரமபதம். பரமபதம் வர்ஜநீய மென்றுமாம். மன்றென்று - மன்றலாய், பரிமளத்தை விகஸிக்கிற பொழிலென்றுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், ப்ரதிபந்தகங்கள் போகைக்குச்சொன்ன திருநாமங்கள்தானே ஓரோவொன்றே ஆயிரம் ப்ரகாரத்தாலே ரக்ஷகமா மென்கிறார்.

[இன்றுபோய்ப் புகுதிராகில்] - போவோமென்று இச்சைபிறந்த இன்றே போய்த் திருவனந்தபுரத்தே சென்று புகுவீராகில். இதரவிஷய விரக்திவேண்டாவோ? இச்சாமாத்ரமே அமையுமோ? என்னில்,— "யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்" என்னவேண்டுவது, அயிக்ருதாயிகாரமானவற்றுக்கு; ஸர்வாயிகாரமுமாய், ப்ராப்தமுமாய், முன்பே இவனையிச்சித்து இவன்இச்சை பார்த்திருக்கும் விஷயத்துக்கு, இச்சாமாத்ரமே வேண்டுவது. அப்ராப்தவிஷயத்துக்கிறே அயிகாரிஸம்பத்தி வேண்டுவது? [எழுமையும் ஏதம்சாரா] - காலதத்த்வமுள்ளதனையும் ஒருவ்யஸநம் வாராது. [சாரா] - அவன் திருமுகங்கொண்டு தவிர்க்கவேண்டா; இவ்வாஶ்ரயம் நமக்கு இருப்பன்று என்று, ஸர்வது:க்கமும் கழலும். ஏதத்தைவிளைத்தாலும் விடவொண்ணாதபோக்யதையைச்சொல்லுகிறது:—[குன்றுநேர் இத்யாதி]-குன்றோடொத்த மாடங்கள். மலைகளைச் சேரவைத்தாற்போலேயாய்த்து மாடங்கள் இருப்பது. அதினருகே அம்மாடங்களுக்கு நிழலாம்படியாய்த்துக் குருந்தமிருப்பது. அதனோடே சேர்ந்த செருந்தி புன்னை என்னுதல்; அந்யோந்யம் சேர்ந்தவையென்னுதல். ஊர்ச் சுற்றிலே அலர்ந்துகிடக்கும்படியான பொழிலையுடைய ஊர். இத்தால் - உகந்தருளின நிலங்களில் ஸ்தாவரங்களும் ஜ்ஞாநாயிகரோபாதி உத்தேஶ்யமென்கை. [அனந்தபுர நகர்மாயன்] - நித்யஸூரிகள் ஓலக்கங்கொடுக்க மேன்மையோடேயிருக்கும் வைகுந்த மாநகர்போலன்றியே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கும் ஶீலாயிகன் வர்த்திக்கிற ஊர். [மாயன்] - தன்மேன்மை பாராதே, ஸம்ஸாரிகள் சிறுமைபாராதே முகங்கொடுக்கும் ஆஶ்சர்யபூதன். [நாமம் ஒன்றும் ஓராயிரமாம்] - ஒருநாமமே அநேகமாம்படி ரக்ஷகமாம்; "உலகேழளிக்கும் பேராயிரம் கொண்டதோர் பீடுடையன்" என்கிறபடியே. [உள்ளுவார்க்கு உம்பரூரே] - இந்நீர்மையையும் ப்ரயோஜநத்தையும் அநுஸந்யிப்பார்க்கு இதுதானே பரமபதமென்னுதல், அவர்களுக்கு அநந்தரம் ப்ராப்யம் பரமபதமென்னுதல். அவன் நித்யவாஸம் பண்ணுகையாலேயிறே பரமபதம் உத்தேஶ்யமென்கிறது.

ஈடு.—இரண்டாம்பாட்டு, ப்ரதிபந்தகங்கள் போகைக்குச் சொன்ன திருநாமந்தானே ஆயிரம்ப்ரகாரத்தாலே ரக்ஷகமாமென்கிறார்.

[இன்றுபோய்ப்புகுதிராகில்] - போவோமென்று இச்சைபிறந்த இன்றே போய்ப் புகுவுதிகோளாகில். இதரவிஷய விரக்திதொடக்கமான அதிகாரிஸம்பத்திவேண்டாவோ? இச்சாமாத்ரமே யமையுமோ? வென்னில் - "யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்" (யதஹரேவவிரஜேத் ததஹரேவப்ரவ்ரஜேத்) என்கிறபடியே அவை

---

இரண்டாம்பாட்டு.—இன்றுபோய் இத்யாதி. "நாமமொன்றுமோராயிரமாம்" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - ப்ரதிபந்தகங்கள் இத்யாதி. சொன்னதிருநாமந்தானே யென்றது - "கேசவா" என்றத்தைப்பற்ற.

'இதரவிஷய' இத்யாதிவாக்யம் - ஶங்காநுவாதம். பரிஹாரம் - யதஹ: இத்யாதி. "ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் । க்ருஹாத் வநீ பூத்வா ப்ரவ்ரஜேத் । யதி வேதரதா ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத் । க்ருஹாத்வா வநாத்வா யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்" இதி ஜாபாலி:. யதஹரேவ - யஸ்மிந்நஹந்யேவேத்யர்த்த:. விரஜேத் - விரக்தோபவதி. ததஹரேவ - தஸ்மிந்நஹந்யேவ. ப்ரவ்ரஜேத் - ஸந்ந்யஸ்தோபவேதித்யர்த்த:.

வேண்டுவது, அதிக்ருதாதிகாரமான விஷயங்களுக்கு; ஸர்வாதிகாரமுமாய் ப்ராப்தமுமாய் முன்பே இவனையிச்சித்து இச்சைபார்த்திருக்கும் விஷயத்துக்கு இச்சாமாத்ரமே வேண்டுவது; விஷயாநுரூபமாக அதிகாரி ஸம்பத்தி இவனால் ஸம்பாதிக்க முடியாமையாலும் ஆட்பார்த்துழிதருமவனாகையாலும் வேண்டா. "**யதிவா ராவணஸ்ஸ்வயம்**" (யதிவா ராவணஸ்ஸ்வயம்) - என்னுமவனிறே; விபீஷணனென்று பேராய், ராவணனாயிருந்தானென்று மீளாதேகிடீர். அதுவேன்? அங்குநின்றும்வந்தானொருவனைக் கைக்கொண்டதாகவமையாதோ வென்னவேண்டா: குறைவாளர்க்கிறே நம்மால் அபேக்ஷையுள்ளது: அதுள்ளது ராவணனுக்கிறே. "**விபீஷணஸ்து தர்மாத்மா**" (விபீஷணஸ்துதர்மாத்மா) என்று தனக்கென்ன ஒருகைம்முதலுமுண்டாகையாலே நாளைவரவுமாம்: அரைக்ஷணம் கிட்டாவிடில் நாசமாயிருக்கிறது அவனுக்கேயன்றோ? ஆனபின்பு, அவனையன்றோ முற்படக் கைக்கொள்ளவேண்டுவது? இனித்தான் இவனைக் கைக்கொண்டால், இவனும் இவன்தன்னோடே நால்வருமாய்ப்போம்; ராவணனைக் கைக்கொண்டால், துறுப்புக் கூடாகக் கைக்கொண்டதாகலாம்; மஹாராஜரொருவரையும் அங்கீகரிக்க வாநரஜாதியாக வாழ்ந்துபோனாற்போலே. [ஏழுமையுமேதஞ்சாரா] - ஒருகாலமும் போல்லாங்குவந்து கிட்டாது. [சாரா] - அதுக்கு அவன்தான் நினைப்பிடவும்வேண்டா. "சும்மேனாதே கைவிட்டோடித்தூறுகள்பாய்ந்தன" என்கிறபடியே "நமக்குஇவ்விடம் ஆஶ்ரயமல்ல" என்று தன்னடையேவந்து கிட்டாது; ராஜகுலஸம்பந்தத்தாலே விட்டோடிப்போம்; "வானோ

அவை - அதிகாரிஸம்பத்பாதிகள். அதிக்ருதாதிகாரமான விஷயங்களுக்கு - ப்ரவ்ரஜ்யாதிகர்மங்களுக்கு. 'ஸர்வாதிகாரமுமாய்' என்றவிடத்திலே-"**ப்ரஹ்மக்ஷத்ரவிஶஶ்ஶூத்ரா: ஸ்த்ரியஶ்சாந்தரஜாதய: । ஸர்வ ஏவ ப்ரபத்யேரந் ஸர்வதாதாரமச்யுதம்**" என்றது அநுஸந்தேயம். இச்சாமாத்ரமேயமையும் என்னுமதுக்கு ஹேத்வந்தர கதநபூர்வகமாக, இச்சைபார்த்திருக்கும் என்னுமதுக்கு ப்ரமாணங் காட்டுகிறார் - விஷயாநுரூபமாக இத்யாதி. ஆட்பார்த்துழிதருமவன் என்றது - "நமக்கடிமையாவாருண்டோ" என்றதுவே யாத்ரையாய்த் திரியுமவனென்றபடி. நாலாந்திருவந்தாதி அறுபதாம்பாட்டு, "ஆட்பார்த்துழிதருவாய்" இத்யாதி. அப்படி இவன் ஆஹிமுக்யம் பார்த்திருக்குமோவென்ன - யதிவா இத்யாதி. "**ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா । விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவா ராவணஸ்ஸ்வயம்**" இதி யுத்தகாண்டே ராம:. (18-34½) "யதிவா" என்றதுக்கர்த்தம் : விபீஷணன் என்று இத்யாதி. போராய் என்றது பேரிட்டுக்கொண்டுவந்தானாயென்றபடி. "ஸ்வயம்" என்றதுக்கு பாவம் - அதுவேன் இத்யாதி. அதாவது - "ஸ்வயம்" என்று இவனுக்கதிஶயஞ் சொல்லுகிறதென்? அங்குநின்றும் வந்தவனொருவனாகிலும் அவனைக் கைக்கொண்டாரென்னுமது அமையாதோ என்னவேண்டாமென்றபடி. அது - குறை. விபீஷணன் குறைவாளனல்லவோவென்ன - விபீஷணஸ்த்வித்யாதி. "**விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித: । ப்ரக்யாதவீர்யௌ ச ரணே ப்ராதரௌ கரதூஷணௌ**" இத்யாரண்யகாண்டே சூர்பணகா (கஎ-உச). ராவணனையே கைக்கொள்ள வேணுமென்றதுக்கு ஹேத்வந்தரம்-இனித்தான் இத்யாதி. துறுப்புக்கூடு-தூர்ரூப்பொலி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - மஹாராஜர் இத்யாதி. ஏதத்தைப் போக்குமென்னாதே, "ஏதம்சாரா" என்றதுக்கு பாவம்-அதுக்குஅவன் இத்யாதி. விவரணம்-சும்மேனாதே இத்யாதி. சும்மேனாதே-மூச்சுவிடாதே போகைக்கு ஹேது - ராஜகுல இத்யாதி. அப்படி போமோவென்ன, ப்ரமாணம் - வானோ இத்யாதி. பெரியதிருவந்தாதி ஐம்பத்துநாலாம்பாட்டு. ஆகாசம், கடல், காற்றுத் தீ காடுகளிலே எங்கேயொருங்கிற்றோ? வன்துயரை மருங்கு கண்டிலம் என்று பாட்டுக்கர்த்தம். "ஏதஞ்சாரா" என்ற

மறிகடலோ'' இத்யாதி. [குன்றுஇத்யாதி] - ஏதம் சார்ந்தாலும் சென்று புகவேண்டும்படி
காணும் ஊரின்ஐச்வர்யமும் ஹோக்யதையும். மலைகளைப் புடைபடத்தோளைத்து நேரு
ங்கவைத்தாற்போலே யிருக்கிற மாடங்களும், அதினருகே அம்மாடங்களுக்கு நிழல்செய்
தாற்போலே யிருக்கிற குருந்து, அத்தோடே சேர்ந்த செருந்தி, புன்னையென்னுதல்; அந்
யோந்யம் சேர்ந்தவையென்னுதல். [மன்றலர்பொழில்] - ஊர்ச்சுற்றிலே யலர்ந்துகிடக்கு
மாய்த்துப் பொழில்கள். அன்றியே, மன்றென்று - மன்றலாய், மன்றலென்று - பரிமள
மாய், அலருகையாவது - பரம்புகையுமாய், பரிமளம் பரம்பாநின்றுள்ள பொழிலென்று
மாம். மன்றலை-மன்று என்று குறைத்துக் கிடக்கிறது. [குன்றுநேர்மாடம்] - ''பிள்ளை
திருநறையூரரையரும் பட்டரும் உள்ளேபுக்கு ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்க நான் ஸேவித்துப்
போனேன்: அல்லாதாரெல்லாம் விரைந்து சடக்கென வாராநிற்க, இவர்கள் திருமாளி
கைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக்கோண்டு
வருகிறபடியைக் கண்டு, 'அல்லாதார்க்கும் இவர்களுக்கும் செயல்ஒத்திருக்கச்செய்தே
இவர்களான வாசியிருந்தபடியேன்!' என்றிருந்தேன்'' என்றருளிச்செய்வர். [சேர்
செருந்தி] - ''ஶாவலெவாஹஷுதிலெவஜெஷிீ'' போலேயாய்த்து. மேல் நித்யஸூரி
களைச் சொல்லக்கடவதாயிருக்க, இங்கே ஸ்த்தாவரங்களைச் சொல்லுகிறது - உகந்தரு
ளின நிலங்களில் விலக்ஷணரோடு ஸ்த்தாவரங்களோடு வாசியில்லையென்றிருக்கும் உத்
தேஶ்ய புத்தியாலே: நித்யஸூரிகளுக்காலும் அவ்வருகேபோக நினைவுண்டாகைக்கு
யோக்யதையுண்டு: நினையார்கள் இத்தனை:கைங்கர்யத்தில் உறைப்பாலே: நினைக்கைக்கும்
யோக்யதையுண்டிறே; வேறோரிடத்தில் போக நினைக்கைக்கு ப்ராப்தியில்லையிறே இவற்
றுக்கு. பிள்ளை ஜநநாதப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே மரம்வெட்டுவியாநிற்க எம்பார்
அருளிச்செய்த வார்த்தையை நினைப்பது. ஆச்சான் திருவாலிநாடுதாஸர் நல்லன சில

வநந்தரம் ''குன்றுநேர்'' இத்யாதிகளைச் சொன்னதுக்கு ஹாவம் - ஏதம் இத்யாதி. ''குன்றுநேர்
மாடம்'' என்றத்தைப்பற்ற - ஐச்வர்யமும் என்றது: ''குருந்துசேர்'' இத்யாதியைப்பற்ற - ஹோக்
யதையும் என்றது. ஸப்தார்த்தம் - மலைகளை இத்யாதி. நேர் - ஒப்பு. மாடு - சமீபம். புடைபட -
இடமுண்டாம்படி. ''மாடேகுருந்து'' என்றதுக்கு ஹாவம் - அம்மாடங்களுக்கு இத்யாதி. ''சேர்''
என்றதுக்கு - மாடங்களினருகேசேர்ந்தகுருந்துசேர்புன்னை என்று முந்தினவர்த்தம். அத்தோடே -
அந்தமாடங்களோடேயென்றபடி. 'மன்று' என்று-நாற்சந்தியாய், சுற்றுமென்றபடி. † புன்னைகளை
யுடைத்தாய் க்ராமபர்யந்தங்களிலே விகஸியாநின்றுள்ள பொழிலென்னுதல், குருந்து முத
லான வ்ருக்ஷங்களை யுடைத்தாய் பரிமளம் ப்ரவஹியாநின்றுள்ள பொழிலென்னுதல். ''மன்று''
என்று - பரிமளத்தைச் சொல்லும்படியென்? என்ன - மன்றலை இத்யாதி. ''குன்றுநேர்'' இத்யா
தியாலே வர்ணிக்கைக்கு இவை ஹோக்யமாயிருக்குமோவென்ன, ஐதிஹ்யம் - பிள்ளை இத்யாதி.
விரைந்து - த்வரித்து. 'அருளிச்செய்வர்' நஞ்சீயரென்றபடி. ''சேர்'' என்றதுக்கு - வ்ருக்ஷங்கள்
அந்யோந்யம் ஸக்ருஶமாயிருக்குமென்று மூன்றுமர்த்தமாதல், த்விதீயார்த்த விவரணமாதல்.
ராகவோர்ஹதி இத்யாதி. கீழ் பொழிலை வர்ணித்தவபிப்ராயத்தை யநுவதித்துப் பரிஹரிக்கிறார்-
மேல்நித்யஸூரிகளை இத்யாதி. ''விண்ணோர்'' என்றத்தைப்பற்ற - நித்யஸூரிகள் என்றது. ஆறு
லும் விலக்ஷணரான ஸூரிகளோபாதி இவையும் உத்தேஶ்யமாமோவென்ன - நித்யஸூரிகளுக்கு இத்
யாதிநாலுவாக்யம். கைங்கர்யத்திலுறைப்பு - ஜ்ஞாநகார்யமான ப்ரேமாதிஶயம். திவ்யதேசங்களிலுள்
ளவை ஹஹவத்கடாக்ஷவிஷயமாகையாலே யுத்தேஶ்யமென்னுமதுக்கு ஐதிஹ்யம் - பிள்ளைஜநநாத
இத்யாதி. எம்பார் அருளிச்செய்த வார்த்தை * மானேய்நோக்கிலே கண்டுகொள்வது. இவை
அவன் கடாக்ஷவிஷயமென்றதுக்கைதிஹ்பம் - ஆச்சான் இத்யாதி. சூரவன்பாக்கு - ஶ்லாக்யமான

† 'குருந்துமுதலான வ்ருக்ஷங்களை' என்றிருக்கலாம்.

சுரவன்பாக்குக்களை பட்டருக்குக் கோடுவந்துகொடுத்தாராய், அவற்றைக்கண்டு "இவை யிருந்தபடியென்? * திருவருள்கமுகினின்றும்வந்தவையோ?" என்றருளிச் செய்தாராம். நீராலே வளர்ந்தவையன்றே, அவனுடைய கடாக்ஷத்தாலே வளர்ந்தவையிறே. [அனந்த புரநகர்மாயன்] - ஸ்ரீவைகுண்டத்தைவிட்டு "தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கலாம்" என் னுமத்தாலே திருவனந்தபுரத்தை விடமாட்டாதே நிற்கிற ஶீலகுணதிக்யத்தைச் சொல்லு கிறது. [நாமமொன்றுமோராயிரமாம்] - ஒருதிருநாமந்தானே விரோதிகளைப்போக்கி ரக்ஷிக்குமென்னுமிடஞ் சொல்லிற்றிறே; அப்படியே ஆயிரம்படி ரக்ஷகமான ஆயிரந்திரு நாமத்தையுடையவன். [உள்ளுவார்க்கு] - உத்தேஶ்யதை குறைவற்றிருந்தது, இனி அநுஸந்திப்பாரேயிறே தேட்டம். [உள்ளுவார்க்கு] - ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரி களோலக்கங்கொடுக்க அவர்கள் நடுவேயிருக்கக்கடவ ஸர்வேஶ்வரன், "தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கலாம்" என்று இத்தேசத்தை விரும்பிவர்த்திக்கிற நீர்மையிலேற்றத்தை அநுஸந்திக்கவல்லார்க்கு. [உம்பரூரே] - திருநாமங்களை யநுஸந்திப்பார்க்கு, அவ்விடந் தானே யும்பரூரென்றுமாம்; அன்றியே, உள்ளுவார்பெறுமிடம் உம்பரூரென்னவுமாம். அவ்விடந்தானுமுத்தேஶ்யமாகிறதும் அவன்விடாதே வர்த்திக்கையிறே. இனி ஶர்மைக்ய முடையவன் தான் இவ்விடத்தே வர்த்தியாநின்றால் பின்னை இவ்விடமேஉத்தேஶ்ய மாகத் தட்டில்லையிறே. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

ஊரும்புட்கொடியும்அஃதே உலகேல்லாம்உண்டுமிழ்ந்தான்
சேரும்தண்ணனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில்
தீரும்நோய்வினைகளேல்லாந் திண்ணம்நாம்அறியச்சொன்னோம்
பேருமோராயிரத்துள் ஒன்றுநீர்பேசுமினே.

ஆ—(ஊரும்புள்.) - போகோபகரணங்களினாலும் லீலோபகரணங்களினாலும் பரிபூர்ணனாயிருந்த எம்பெருமானுக்கும் ப்ராப்யமான திருவனந்தபுரத்திலே

---

பாக்கு. "திருவருட்கமுகு" என்றதுக்கர்த்தம் - நீராலே இத்யாதி. அனந்தபுரநகரில்ஆஶ்சர்யமே தென்ன - ஸ்ரீ வைகுண்டத்தை இத்யாதி. 'சொல்லிற்றிறே' - முதற்பாட்டிலேயென்றபடி. திரு நாமங்களாயிரத்தையு முடையவ னென்றது - ப்ராஸங்கிகம். "உள்ளுவார்க்கு" என்றதுக்குஅவதா ரிகை - உத்தேஶ்யதை இத்யாதி. "ஒன்றுமோராயிரமாம்" என்றது - ஒருநாமமே ஆயிரம்ப்ரகாரம் ரக்ஷகமாமென்னுதல், குணசேஷ்டிதாதிகளையொழிய நாமமொன்றுமே ஆயிரமுண்டாயிருக்கு மென்னுதல்; 'என்னுதல்' என்கையாலே - இவ்வர்த்தத்வயமும் தோற்றுகிறது. "ஓராயிரமாம்" என்றத்தோடே "உள்ளுவார்க்கு" என்றத்தைச் சேர்த்து ஸாவம்-திருநாமங்களை இத்யாதி. கீழே, நாமத்தை உள்ளுவார்க்கு என்றருளிச்செய்து, "மாயன்" என்றதிற்சொன்ன சீலகுணத்தையுள்ளு வார்க்கு என்றுஅர்த்தாந்தரம் - ஸ்ரீ வைகுண்டத்திலே இத்யாதி. இது சதுர்விம்ஶத்ஸஹஸ்ரத்திலே ஸ்புடம். அவ்விடந்தானே - திருவனந்தபுரந்தானே. நித்யவிபூதியன்றோ வுத்தேஶ்யமென்ன - அவ்விடந்தானும் இத்யாதி. அவ்விடந்தானும் - பரமபதந் தானும். இவ்விடமே - திருவனந்த புரமே. உம்பரூர் - * தேவாநாம்பூரித்யர்த்தஃ. பரமபதம். "உம்பரூர்" என்றதுக்கு - திருவனந்த புரமே யும்பரூரென்னுதல், திருநாமங்களை யநுஸந்திப்பாரிருந்தவிடமே யும்பரூரென்னுதல், உள் ளுவார் பெறுமிடம் உம்பரூரென்னுதல் என்றர்த்தத்ரயமாதல்; அர்த்தத்வயமாதல். (உ)

அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு புகுதிராகில் உங்களுடைய ஸமஸ்தது:கங்களும் போம்: இது நிஸ்சிதம்; இப்ப்ராப்யத்தைப்பெறுகைக்கும் ப்ரதிபந்தகம்போகைக்கும் ஆயிரந்திருநாமத்திலே ஒருதிருநாமத்தைச் சொல்லவேணுமென்னும் நியமமில்லை; அவனுடைய அஸங்க்யேயமான திருநாமத்திலே வேண்டிற்றொரு திருநாமத்தைச் சொல்லுங்கோளென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ப்ரதிபந்தகங்கள் போகைக்கு இன்னதிருநாமமென்று இல்லை, ஆயிரத்திலும் ஏதேனுமொன்றைச் சொல்லவமையுமென்கிறார்.

[ஊரும்புள்ளென்றுமேலுக்கு] - ஸர்வவிஷயஶேஷவ்ருத்தியும் பெரிய திருவடியைக் கொள்ளுவதுஞ்செய்து ஜகத்துக்கு ஸர்வவிதரக்ஷகனுமானவன் கண்வளர்ந்தருளுகிற நிரதிஸயபோக்யமான திருவனந்தபுரத்தைப் பரமப்ராப்யமென்று அங்கேபுகுவுதிகோளாகில், து:கங்களும் து:கஹேதுவான பாபங்களுமெல்லாம் போம்; ஒருவர்க்கும் தெரியாத ரஹஸ்யத்தை வ்யக்தமாம்படி நாங்கள் சொன்னோம்.

ப.—அநந்தரம், அத்தேசத்தை ப்ராபித்தவளவிலே ஸமஸ்தவிரோதிகளும் கழலும்: ஸர்வரக்ஷகனான அத்தேசிகனுடைய திருநாமங்களாயிரத்திலும் ஏதேனுமொன்றையுஞ்சொல்லி அநுபவியுங்கோளென்கிறார்.

(ரக்ஷணார்த்தமாக), புள் - பெரியதிருவடியை, ஊரும் - நடத்தாநிற்கும், கொடியும் - ரக்ஷணத்துக்குக்கட்டினகொடியும், அஃதே - அதுவே: (சென்று ரக்ஷிக்கவொண்ணாத ப்ரளயத்தளவில்); உலகெல்லாம் - லோகத்தையெல்லாம், உண்டு - அமுது செய்து (வயிற்றிலேவைத்துநோக்கி), உமிழ்ந்தான் - ப்ரளயாநந்தரமுமிழ்ந்தவன், சேரும் - பிற்பாடர்க்கு முகங்கொடுக்கைக்காகக் கண்வளர்ந்தருளுகிற, தண் - ஸ்ரமஹரமான, அனந்தபுரம் - திருவனந்தபுரத்தை, சிக்கென - அநந்யப்ரயோஜநத்வ வ்யவஸாயத்தையுடையீர்களாய்க்கொண்டு, புகுதிராகில் - ப்ராபிப்புதிகோளாகில், நோய் - (ப்ரயோஜநாந்தரருசியான) நோயும், வினைகளெல்லாந்தீரும் - (அதுக்கடியான) கர்மங்களும் நிஸ்ஸேஷமாக நஸிக்கும்; நாம் - இவ்வர்த்தத்தில் நிலவரானநாங்கள், (உங்களுக்கு), அறிய - அறியும்படி, திண்ணம் - த்ருடமாக, சொன்னோம் -; (அங்குச்சென்றால்), பேரும்ஓராயிரத்துள் - அவனுடைய அநுபாவ்யமான நாமமாயிரத்திலும் வைத்துக்கொண்டு, ஒன்று - ஏதேனுமொன்றை, நீர் -, பேசுமின் - சொல்லுங்கோள். போக்யமாமிடத்தில் ப்ரயோகாப்ரயோக விசாரமில்லையென்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், ப்ரதிபந்தகங்கள் போகைக்கு தேசப்ராப்தியே அமையும், ஆயிரந்திருநாமத்திலும் ஏதேனுமொன்றைச் சொல்லுங்கோள் என்கிறார்.

[ஊரும்புள்] - வாஹனமானது பெரியதிருவடி. [கொடியும் அஃதே] - இது நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணம். இது, நித்யஸூரிகளுக்குக் கொடுத்துவைக்கும் நாநாரஸாநுபவத்தை இன்றுசெல்லு மவனுக்கும் கொடுக்குமென்னுமிதுக்காகச் சொல்லுகிறது. [உலகெல்லாம் உண்டுமிழ்ந்தான்] - ப்ரளயாபத்தில் ஆபத்தேமுதலாக வரையாதே திருவயிற்றிலேவைத்து, உள்ளிருந்து நோவுபடாதபடி வெளிநாடுகாண உமிழ்ந்தான். [சேரும்] - இப்படி உபயவிபூதியையும் நிர்வஹிக்கிறவன் ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் தன்செல்லாமையாலே வந்து கண்வளர்ந்தருளுகிற நிரதிஸயபோக்யமான திருவனந்தபுரத்தை. [சிக்கெனப் புகுதிராகில்] - "நவ

*பாநாவதந்தே"* என்கிறபடியே மீட்சியில்லாத ருசியோடேபோய்ப் புகுவுதிகோளாகில், து:கங்களும் து:கஹேதுக்களான பாபங்களும் போம். [திண்ணம் நாம் அறியச்சொன்னோம்] - அநுபவித்துக் கைவந்த நாங்கள், ஒருத்தர்க்கும் தெரியாத ரஹஸ்யத்தை வ்யக்தமாக அறியும்படி சொன்னோம். இதுண்டாய்க் கழிந்தார் வார்த்தையாகையாலே ஆப்தமென்கை. ப்ரதிபத்தி பண்ணுதார் இழக்குமித்தனை. து:கநிவ்ருத்திக்கு தேசப்ராப்தியே அமையும்; குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்கள் ஆயிரத்திலும் ஒரு திருநாமத்தைச் சொல்லி அநுபவியுங்கோள்.

ஈடு.—மூன்றும்பாட்டு. ப்ரதிபந்தகங்கள்போகைக்கு தேசப்ராப்தியேயமையும்: ஆயிரந்திருநாமத்திலும் ஏதேனுமொன்றைச்சோல்லி யநுபவியுங்கோ ளேன்கிறுர்.

[ஊரும்புள்] - பெரியதிருவடியை வாஹநமாகக்கோண்டு நடத்தும். [கோடியுமஃதே] - இது நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணம். அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தர்க்கு "சென்றுற்குடையாம்" என்கிறபடியே உண்டாகச் சோல்லுகிற நாநாபாவம், இன்று போய்க்கிட்டினவனுக்கும் வாசியறக் கோடுக்கு மேன்கைக்காகச் சோல்லுகிறது. இவன் "**அஹம்ஸர்வம்கரிஷ்யாமி**" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்றிருந்தாலும் பலமில்லையிறே, "குருஷ்வ" என்று அவன்அப்படி கோள்ளாதவன்று. இவனுக்கு கிஞ்சித்கரியாதவன்று ஸ்வரூபலாபமில்லை. நிரபேக்ஷனதான் குறையநின்று இவனுடைய குறையைத்தீர்க்குமாய்த்து. தான் ஸாபேக்ஷனுய் நின்று இவனை நிரபேக்ஷனுக்கும். இவனுக்கு ஸ்வரூபஸித்தியுண்டாம்படி பண்ணிக்கோண்டு நிரபேக்ஷனுகவேணுமிறே அவனுக்கு. இவனுடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாக அவன் தன்னைத் தாழவிட்டானேன்றுல், அதுதானே நைரபேக்ஷ்யத்துக்கு உடலாயிருக்குமிறே அவனுக்கு. "இன்னார்தூதனேன நின்றுன்"என்றபின்பிறே அவனுக்கு ஸ்வரூபஸித்தியுண்டாய்த்து. [உலகு இத்யாதி]-ஸம்

---

*மூன்றும்பாட்டு.—**ஊரும்** இத்யாதி. "அனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில் தீரும் நோய் வினைகளெல்லாம், பேருமோராயிரத்துள் ஒன்று நீர்பேசுமின்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - **ப்ரதிபந்தகங்கள் இத்யாதி.***

*"புள்ளை - ஊரும்" என்றந்வயிப்பது. இது உபலக்ஷணமென்கிறுர் - **நித்ய** இத்யாதி. **நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணம்** என்றது - பெரியதிருவடி யொருவனையும் வாஹநமாகவும் கொடியாகவும் கொள்ளுமென்ற இது, நித்யஸூரிகளெல்லாரையும் ஒவ்வொருத்தரையே அநேக சேஷவ்ருத்திகள் கொள்ளுமென்னுமதுக்கும் உபலக்ஷணமென்றபடி. இப்பதப்ரயோகத்துக்கு **பாவம்- அஸ்ப்ருஷ்ட இத்யாதி**. அவன் கொடுக்கிறதென், தானே செய்யவொண்ணுதோவென்ன - **இவன் இத்யாதி**. "**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதஶ்ச தே**" இத்யாதி*

**ஸாநுஷு ரம்ஸ்யதே । க்ரியதாமிதி மாம் வத**

**பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா"** *இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணோ. (ஙக-உக,-உஉ) பூர்ணனவன் இவனைக்கொண்டு கைங்கர்யம் கொள்ளுகிறதென்னென்ன- **இவனுக்கு இத்யாதி. ஆகையாலே** நிரபேக்ஷனென்று கூட்டுவது. விவரணம் - **தான் ஸாபேக்ஷன் இத்யாதி. ஆனாலும்** நைரபேக்ஷ்யஹாநிவாராதோவென்ன -**இவனுக்குஇத்யாதி** என்னுதல்; கீழே-பரார்த்தமாக ஸாபேக்ஷனகையாலே நைரபேக்ஷ்யஹாநியில்லை யென்றருளிச்செய்து, இங்கே - ஸ்வநைரபேக்ஷ்ய ஸித்தியும் இவனையும் நிரபேக்ஷனுக்கினுலென்கிறுர் - **இவனுக்கு இத்யாதி** என்னுதல். விவரணம் - **இவனுடைய இத்யாதி**. தாழவிட்டது நைரபேக்ஷ்யத்துக்கு உடலாகக்கண்ட விடமுண்டோவென்ன - **இன்னார் தூதன் இத்யாதி.** திருமொழி இரண்டாம்பத்து, "மூன்னோர்தூது" இத்யாதி. **நின்றன் - ஸத்தை***

ஸாரஸ்பர்ஶமில்லாதாரை எல்லாவடிமைகளும் கொள்ளுகையன்றிக்கே, ப்ரளயாபத்தில் லோகத்தை யெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கி, பின்னை யுள்ளேகிடந்து தளர வொண்ணுதென்று வெளிநாடுகோண வுமிழ்ந்தவன். [சேரும்தண்ணனந்தபுரம்] - ப்ரளயாபத்தில் ஜகத்துக்கு அவன்வயிற்றில் புகாதபோது உண்டான செல்லாமையோபாதியும் போருமாய்த்து அவனுக்குஇத்தேசத்தில் புகுராதபோதுஉண்டானதரிப்பறுதி; ப்ரளயாபத்தினின்றும் ஜகத்தையடைய ரக்ஷித்தவன் † (ஸ்ருஷ்டமான ஜகத்தினுடையரக்ஷணார்த்தமாக) வந்துசேருகிற விடமேன்னுதல், அவன் நிர்ப்பரனுய்க்கொண்டு சாய்ந்தருளுகிற விடமேன்னுதல். [தண்ணனந்தபுரம்] - ப்ராந்தியாலே அவன்இப்படி விரும்புகிறுனல்லன்; ஹோக்யதையாலே விடமாட்டாமையாய்த்து. உகந்தருளினநிலமாகில் இப்படியிருக்கவேண்டாவோ? "தானுகந்தவூர்" என்னக்கடவதிறே. தானுமுகந்து நித்யஸூரிகளும் உகக்குமிடமிறே பரமபதம்; இங்குத் தன்னுகப்பேயிறே: இவர்கள் வைமுக்யம்பண்ணு நிற்கச்செய்தேயும் தான் விடமாட்டாதே அவஸரப்ரதீக்ஷனுய் நிற்கிறவிடமிறே. [சிக்கென] - "**நவபுநராவர்த்ததே**" (நசபுநராவர்த்ததே) என்கிறபடியே மீளாத ருசியையுடையீர்களாய்க்கொண்டு கிட்டுவுதிகோளாகில். [தீரும்இத்யாதி]-து:க்வங்களும் து:க்வஹேதுக்களு மெல்லாம் நசிக்கும். [திண்ணம்] - "**ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யம்**" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யம்) என்னுமாபோலே. [நாம்அறியச்சொன்னேம்] - சரதமாக அநுபவத்தாலே கைகண்ட நாம், இதில் வாசியறியாத நீங்களும் இழக்கவொண்ணுதென்று உங்கள் நெஞ்சிலே படும்படிசொன்னேம். [நாம்] - நெடுநாள் க்லேஶப்பட்டுக் கரைகண்டவரிறே. [சொன்னேம்] - இனி கர்மவஶ்யராய்ப்படுமேவர்கள், சொன்ன வார்த்தை ப்ரதிபத்திபண்ணுமையாலே படுகிறுர்களத்தனை ; நம்மேல் குறையற நாம் சொன்னேம். செயலுக்கு தேசப்ராப்திஅமையுமேன்றீர், இனிச்சொல்லியிருக்க வடுப்பதேன் என்ன ?-[பேரும்ஓர்இத்யாதி]-ஒருதிருநாமந்தானே ஆயிரம்படி ரக்ஷகமான ஆயிரந் திருநாமத்தையுடையவனென்று சொன்னேமிறே முன்பே; அதில் வாய்க்குத்தோற்றிற்று ஒரு திருநாமத்தைச் சொல்லுங்கோள். [பேசுமினே]-மநஸ்ஸஹகாரமும் வேண்டா. (௩)

---

பெற்றுன். "உலகெல்லாமுண்டுமிழ்ந்தான் சேரும்" என்றபதச்சேர்த்திக்கு பாவம் - ப்ரளயாபத்தில் ஜகத்துக்கு இத்யாதி. உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, பதச்சேர்த்திக்கு பாவாந்தரம் - ப்ரளயாபத்தினின்றும் இத்யாதிவாக்யத்வயம். "சேரும்" என்றது - ரக்ஷ்யாபேக்ஷையோடேவந்து நிற்கிறவென்னுதல், சாய்ந்தருளுகிறவென்னுதலென் றர்த்தத்வயம். "தண்" என்றதுக்கு பாவம் - ப்ராந்தியாலே இத்யாதி. ஈடுபாடு - உகந்தருளின இத்யாதி. இப்படியிருக்கவேண்டாவோ வென்றது - ஈஶ்வரன விரும்பும்படி ஹோக்யமாயிருக்க வேண்டாவோவென்றபடி. "அவன் விரும்பினதே உகந்தருளினநிலம்" என்றதுக்கு ப்ரமாணம் - தானுகந்த இத்யாதி. "அலம்புரிந்த" இத்யாதி, திருநெடுந்தாண்டகம். இதுக்கர்த்தம் - தானும் இத்யாதி. "தன்னுகப்பேயிறே" என்றத்தை விவரிக்கிறுர் - இவர்கள் இத்யாதி. சரதம் - நிஶ்சிதம். "**நவபுநராவர்த்ததே நவபுநராவர்த்ததே**" இதி சாந்தோக்யே. (அ-கரு-சரமனது:) "**ஸத்யம்ஸத்யம் புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே । வேதஶாஸ்த்ராத்பரம்நாஸ்திநதைவம்கேஶவாத்பரம்**" இதிமஹாபாரதே. "அறிய" என்றதுக்கு பாவம்-இதில்வாசி இத்யாதி. அப்படி கைகண்டாரேர்வென்ன-நெடுநாள் இத்யாதி. "சொன்னேம்" என்ற ஸம்ஹிதநிர்த்தேசத்தால் ஃபலிதம்-இனி கர்மவஶ்யராய் இத்யாதி. செயலுக்கு - காயிகவ்யாபாரத்துக்கு. சொன்னேமிறே முன்பேயென்றது- "ஓராயிரமாய்" என்கிறபாட்டிலேயென்றபடி. "பேசுமின்" என்றதுக்கு பாவம்-மநஸ்ஸஹகாரமும் இத்யாதி. அத்விதீயமான ஆயிரந்திருநாமத்திலும் வைத்துக்கொண்டு ஏதேனுமொன்றைச் சொல்லுங்கோளென்று ஶப்தார்த்தம். (௩)

# நான்காம் பாட்டு.

பேசுமின்கூசமின்றிப்பெரியநீர் வேலைசூழ்ந்து
வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுரம்
நேசஞ்செய்துறைகின்றானைநெறிமையால்மலர்கள்தூவிப்
பூசனைசெய்கின்றார்கள் புண்ணியஞ்செய்தவாறே.

ஆ.—(பேசுமின்.) - நாம் அநர்ஹரென்று கூசாதே அவன்திருநாமத்தைச சொல்லுங்கோளென்றுசொல்லி, அடிமைசெய்கையிலே அவர்களுக்கு ஸ்ப்ருஹைபெறுகைக்காகத் திருவனந்தபுரத்தில் எம்பெருமானுக்கு அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்கிறவர்கள் என்னபுண்யஞ்செய்தாரோவென்று, அவர்களுடைய ப்ரஸம்ஸாமுகத்தாலே ப்ராப்யமான அடிமையினுடைய உத்கர்ஷத்தைச் சொல்லுகிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஆஸ்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக, 'திருவனந்தபுரத்தில் எம்பெருமானுக்கு அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமை செய்கிறவர்கள் என்னபுண்யம் செய்தார்களோ?' என்கிறார்; அவர்கள் பாக்யம்பண்ணினபடியைப் பேசுங்கோள் என்றுமாம்.

[பேசுமின் கூசமின்றி] - அயோக்யரென்று கூசாதே திருநாமத்தைச்சொல்லுங்கோள். [பெரியநீர் என்றுதொடங்கி] - பெரியநீரையுடைய கடல்சூழ்ந்து நிரந்தரமான பரிமளத்தையுடைய சோலையோடுகூடினவயலாலே அணியப்பட்ட திருவனந்தபுரத்தை விரும்பி அங்கே கண்வளர்ந்தருளுகிறவனை.

ப.—அநந்தரம், ஆஸ்ரித ரக்ஷணார்த்தமான நிரவதிக வாத்ஸல்யத்தையுடையனைக்கொண்டு திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிறவனை ஆராதிக்கிறவர்களுடைய பாக்யாதிஸயத்தை ஸ்லாகிக்கப்பாருங்கோள் என்கிறார்.

பெரிய - ஸம்ருத்தமான, நீர் - ஜலத்தையுடைத்தான, வேலை - கடலாலே, சூழ்ந்து - சூழப்பட்டு, வாசமே கமழும் - பரிமளத்தைப்பரப்பாநிற்கிற, சோலை- சோலைகளையும், வயல் - வயல்களையும், அணி - அலங்காரமாகவுடைய, அனந்தபுரம் - திருவனந்தபுரத்திலே, நேசம்செய்து - (ஆஸ்ரித முகப்ரகாஸகமாக) நிரதிஸய வாத்ஸல்யத்தைப்பண்ணி, உறைகின்றானை-நித்யவாஸம்பண்ணுகிறவனை, நெறிமையால் - அவன் மோக்ஷித்வாநுரூபமான மார்க்கத்தாலே, மலர்கள் - புஷ்பாத்யுபகரணங்களை, தூவி - (ப்ரேமபரவசராய்க்கொண்டு) விநியோகித்து, பூசனைசெய்கின்றார்கள்- ஆராதிக்கிறவர்கள், புண்ணியம் - பாக்யத்தை, செய்தவாறு - பண்ணினப்ரகாரத்தை, கூசமின்றி - (உங்களுடைய) அயோக்யதையைப்பாராதே (வத்ஸலனானவனை ஆராதிக்கிறவர்களுடைய வாத்ஸல்யாதிஸயத்தைப்பார்த்துக்) கூசாதே, பேசுமின் - ஸ்லாகிக்கப்பாருங்கோள்.

இ.—நாலாம்பாட்டில், ஆஸ்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக, 'திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமைசெய்கிறவர்கள் என்ன பாக்யவான்கள்!, என்கிறார்; அவர்கள் பாக்யம் பண்ணினபடியைப் பேசுங்கோள் என்றுமாம்.

[பேசுமின் கூசமின்றி] - உங்கள் அயோக்யதையைப்பார்த்துக் கூசாதே, அத்தலையில் நீர்மையையும் ப்ராப்தியையும் பார்த்துப் பேசுங்கோள். வளவேழுலகில்

தமக்குப்பிறந்த விருப்பு இவர்களுக்கும் ஒக்குமென்றிருப்பரிறே. [பெரியநீர் இத்யாதி] - பெரியநீரையுடைத்தான கடல்சூழ்ந்திருப்பதாய் நிரந்தரமான பரிமளத்தையுடைய சோலையோடுகூடின வயலாலே அலங்க்ருதமான திருவனந்தபுரம். சோலையின் பரிமளம் புறப்படாதபடி மதிளிட்டாற்போலேயாய்த்துக் கடலிருப்பது. கடலில் நாற்றம் மேலிடாதபடியாய்த்துப் பரிமளம் விஞ்சியிருப்பது. [நேசஞ்செய்து உறைகின்றானை] - பரமபதத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி; "ஆர்த்தரக்ஷணத்துக்கு" என்கிறபடியே. ஆர்த்தரக்ஷணத்துக்கு உடலான தேசமென்று ஸ்நேஹித்து நித்யவாஸம்பண்ணுகிறவனை. அத்தேசத்துக்கு ஆர்த்தரில்லாக் குறையுண்டிறே. "ஆர்த்தரில்லாதவிடமும் ஒருவாஸஸ்தாநமோ?" என்று அத்தேசத்தை வசைபாடியாய்த்திருப்பது. 'நேசஞ்செய்து உறைகின்றானை-பேசுமின் கூசமின்றி' என்னுதல்; 'புண்ணியஞ்செய்தவாற்றை-பேசுமின் கூசமின்றி' என்னுதல். [நெறிமைபால் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய், சூட்டுநன்மாலைப்படியே புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அக்ரமமாக ப்ரயோகித்து அடிமைசெய்யுமவர்கள் நித்யஸூரிகளிற்காட்டில் ஹாஸ்யாதிகர்: ஸம்ஸாரத்திலே நித்யஸூரிகள் பரிமாற்றத்தையுடையவர்கள் ஹாஸ்யாயிகரன்றே? அப்போது, புண்ணியஞ்செய்தவாறே! என்று ஆஸ்சர்யம். இவர்கள்படியைப் பேசும்போது ஸர்வேஸ்வரனைப் பேசுமதிற்காட்டில் கூச்சமறப் பேசலாமிறே.

ஈடு.—நாலாம்பாட்டு. ஆஸ்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக, 'திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமை செய்கிறவர்கள் என்ன ஹாக்யவான்கள்!' என்கிறார்; அவர்கள் ஹாக்யம்பண்ணினபடியைப் பேசுங்கோளென்றுமாம்.

[பேசுமின்கூசமின்றி] - உங்கள் அயோக்யதையைப்பார்த்துக் கூசாதே பேசுங்கோள். தாம் * மயர்வறமதிநலம்அருளப்பெறச்செய்தேயும், அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போந்த வாஸநையாலே "அருவினையேன்" என்று பேசுகைக்குக் கூசினவிது, இவர்களுக்கும் உண்டேன்றிருக்கிறார். ஹ்ஹவத்விஷயத்தைப் பேசும்போது கூசத்தான்வேண்டாவிறே: அப்ரதிபத்தியாலேயிறே பேசாதிருந்தது; ப்ராப்தவிஷயமென்றறியவே கூசாதே பேசலாமிறே. [பெரியநீர் இத்யாதி] - மிக்கஜலத்தையுடைத்தான கடலாலேசூழப்பட்டு, வாசமேகமழாநிற்குமாய்த்துச்சோலை. சூழப்போந்தசோலையில் பரிமளம் புறம்புபோகாதபடி மதிளிட்டாற்போலேயாய்த் திருப்பது கடல். [வாசமே கமழும்] - கடலில் நாற்றம் மேலிடாதபடி சோலையில் பரிமளமே விஞ்சியிருக்குமாய்த்து; இப்படிப்பட்ட சோலையையுடைத்தான வயலாலே யலங்க்ருதமான திருவனந்தபுரத்தை. 'நேசஞ்செய்துறைகின்

நாலாம்பாட்டு.—பேசுமின் இத்யாதி. "பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகாத்வயம் அருளிச்செய்கிறார் - ஆஸ்ரயிப்பார்க்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே..

இவர்களுக்குக்கூச ப்ரஸக்தியேதென்ன - தாம் இத்யாதி. அவனைப்பேசும்போது கூசவேண்டாவென்னுமத்தையும், இப்படியிருக்கச்செய்தேயும் தாம் கூசியகன்றதுக்கு ஹேதுவையும், அவனைக் கூசாதேபேசுகைக்கு ஹேதுவையும் அடைவேயருளிச்செய்கிறார் - ஹ்ஹவத்விஷயத்தை இத்யாதி வாக்யத்ரயத்தாலே. "வேலைசூழ்ந்து வாசமேகமழும்" என்ற பதச்சேர்த்திக்கு ஹாவம்- சூழப்போந்த இத்யாதி. "வாசமே" என்ற அவதாரணார்த்தம் - கடலில் இத்யாதி. "கடலில் நாற்றம் மேலிடாதபடி" என்றதுக்கு ஸ்வாபதேஸம் - ஸம்ஸாரகந்தமும் தட்டாதபடியென்று. சோலையையுடைத்தான வென்றது-சோலையையு முடைத்தாயென்றபடி. பாட்டின் முந்தினவவதாரிகைக்குச்சேர அந்வயம்-நேசஞ்செய்து இத்யாதி வாக்யத்வயம். த்விதீயாவதாரிகைக்குச் சேர அந்வயம்-

ளுனே - பேசுமின் கூசமின்றி' என்று கீழோடே கூட்டவுமாம்; அப்போது, "நேசஞ்செய் துறைகின்றுனே - பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே?" என்றது - ஆஶ்சர்யத்திலே யாகிறது. அன்றிக்கே, பெரியீர் தொடங்கி - 'பூசனைசெய்கின்றார்கள் புண்ணியஞ் செய்தவாற்றை - பேசுமின் கூசமின்றி' என்னவுமாம்; அப்போது, கூசமின்றிப் பேசுகையாவதேன்? என்னில்,—ஸௌலப்யவத்விஷயம்போலே வாய்வந்தபடி சொல்லவொண்ணாதிறே ஸாத்வத விஷயம். [நேசஞ்செய்துறைகின்றுனே] - பரமபதத்தில் தவிரவொண்ணாமையாலே யிருக்குமத்தனை. அவ்விடத்தை வசைசொல்லியாய்த்து இங்குவர்த்திப்பது; "ஆர்த்தரக்ஷணத்துக்கு உடலல்லாதவிடமும் ஒரு வாஸஸ்தாநமாயற்றதோ!" என்று, ஆர்த்தரக்ஷணத்துக்குப் பாங்கானதேஶமென்று விரும்பிவர்த்திப்பது இங்கேயாய்த்து; "அதிகம் புரவாஸாச்ச" (அதிகம்புரவாஸாச்ச). [நெறிமையால் மலர்கள்தூவி]- "ஸர்வேஶ்வரன் ஶேஷி; இவ்வாத்மவஸ்து அவனுக்குஶேஷம்" என்கிற முறைமையாலே, புஷ்பாத்யுபகரணங்களை அவன்திருவடிகளிலே பணிமாறி; அன்றிக்கே, அவன்தான் இத்தேஶத்தை ஸ்நேஹித்து வர்த்திக்கிறாப்போலே தாங்களும் ஸ்நேஹத்தையுடையராய் மலர்கள் தூவியென்னுதல்; இவர்கள் வர்த்திக்கிறவிடமென்று அவன் விரும்பி வந்தவோபாதி தாங்களும் ஒருப்ரயோஜநத்தைக் கணிசியாதே யாஶ்ரயித்தேன்னவுமாம். [புண்ணியஞ்செய்தவாறே] - * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி அடிமைசெய்கிறவர்களதும் ஓரடிமையாயற்றதோ! ஸ்ரீபரதாழ்வானைப்போலே யாய்த்துஅவர்கள்; இளையபெருமாளைப்போலேயாய்த்து இவர்கள். அவன் விட்டுப்போரச்செய்தேயும், பாரதந்த்ர்யத்தாலே விடமாட்டாதே கிடக்கிறார்களித்தனையிறே. (ச)

அன்றிக்கேஇத்யாதி. ஸாத்வதர்களைப்பேசும்போது கூச்சத்துக்கு ப்ரஸக்தியேதென்கிற ஶங்கையையநுவதித்துப் பரிஹரிக்கிறார் - அப்போது கூசமின்றி இத்யாதிவாக்யத்வயத்தாலே. 'அப்போது' என்றவநந்தரம், "ஸாத்வதவிஷயத்தை" என்றுகூட்டுவது. 'வாய்வந்தபடி சொல்லவொண்ணாதிறே ஸாத்வதவிஷயம் என்றது-அவர்கள் அவனிலும் பூஜ்யராகையாலே பேசப்போகாதென்றபடி. ஆனால் பேசும்படியென்னென்ன; பூஜ்யரேயாகிலும் ஸுலபராகையாலே பேசத்தட்டில்லையென்று கருத்து. "அனந்தபுரம்நேசஞ்செய்து" என்றத்தால் பாவம்- பரமபதத்தில் இத்யாதி. கீழ்வாக்ய விவரணம் - அவ்விடத்தை இத்யாதி. வசை-தோஷம். இங்கே யவனுக்கு ஸ்நேஹமுண்டாகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - ஆர்த்தரக்ஷணத்துக்கு இத்யாதி. இவ்வாக்யாநந்தரம் அவ்விடத்தை வசை இத்யாதி வாக்யம் அநுஸந்தேயம். இதுக்கு ஸம்வாதம் - அதிகம் இத்யாதி. "சித்ரகூடஸ்ய தர்ஶநம் .... அதிகம் புரவாஸாச்ச மந்யே தவ ச தர்ஶநாத்"

இதி சித்ரகூடே ஸீதாம்ப்ரதி ராமஃ. (அயோ-கூ௪-௧௨) சித்ரகூடஸ்ய-தர்ஶநம்-புரவாஸாத்-அதிகம்ச, மந்தாகிந்யா:-தர்ஶநம்-தவ - தர்ஶநாத்-அதிகம்ச-மந்யே இத்யந்வயஃ. நெறிமையால் - ஶேஷஶேஷிபாவமுறையாலேயென்னுதல், ஸ்நேஹமார்க்கத்தாலேயென்னுதல். த்விதீயார்த்தத்துக்கு, நெறிமையாலென்று-அவன் ஸ்நேஹித்தமார்க்கத்தாலேயென்றபடி. த்விதீயார்த்தவிவரணமாதல், த்ருதீயார்த்தமாதல் - இவர்கள் வர்த்திக்கிற இத்யாதி. த்ருதீயார்த்தமானபோது, "நெறிமையால்" என்றது - அநந்யப்ரயோஜநதையாலே யென்றபடி. "செய்தவாறே" என்ற ஸ்வரத்துக்கு பாவம், சூட்டுநன்மாலைகள் இத்யாதி. திருவிருத்தம். இருவருடையவும் ஆதிக்யந்யூநதைகளுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரீபரதாழ்வானை இத்யாதி வாக்யத்வயம். அவர்கள்- நித்யஸூரிகள். இவர்கள் - திருவனந்தபுரத்தி லடிமைசெய்கிறவர்கள். நித்யஸூரிகள் ஸ்ரீபரதாழ்வானைப்போலே யானபடியை இசைவிக்கிறார் - அவன்விட்டுப்போர இத்யாதி. 'பெரியீர்' என்று தொடங்கி, 'நேசஞ்செய் துறைகின்றானை - கூசமின்றி - பேசுமின்; நேசஞ்செய் துறைகின்றானை நெறிமையால்' என்று தொடங்கி, 'புண்ணியம் செய்தவாறே' என்று விஸ்மிதராகிறாரென்னுதல்; பெரியீர்' என்று தொடங்கி, 'புண்ணியம்செய்தவாற்றை - கூசமின்றி - பேசுமின்' என்றந்வயமாதல். (ச)

# ஐந்தாம் பாட்டு.

புண்ணியஞ்செய்துநல்லபுனலோடுமலர்கள்தூவி
எண்ணுமின் எந்தைநாமம்இப்பிறப்பறுக்கும்அப்பால்
திண்ணம்நாம்அறியச்சொன்னோம்செறிபொழில்அனந்தபுரத்து
அண்ணலார்கமலபாதம் அணுகுவாரமரராவார்.

ஆ.—(புண்ணியஞ்செய்து.) - நீங்களும் அங்ஙனே புண்யரூபமான திருநாமத்தைச்சொல்லி நிரஸ்தஸமஸ்தப்ரதிபந்தகராய்த் திருவனந்தபுரத்திலேபோய்ப் புக்கு பாஹ்யாந்தர ஸர்வகரணங்களாலும் எம்பெருமானுக்கு அடிமைசெய்யுங்கோள்! அவன் உங்களுடைய இந்தஸம்ஸாரத்தைப் போக்கும்; இப்போது தன் திருவடிகளை ஆஶ்ரயிக்கிற உங்களைப் பின்னை யமரராக்கும்; இது நிஶ்சிதம். உமக்குத் தெரியச் சொன்னோம் என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருவனந்தபுரத்தில் ஆஶ்ரயிக்குமவர்கள் அயர்வறுமமரர்களோடு ஒப்பர் என்றுகொண்டாடி, அப்படியே நீங்களும் ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[புண்ணியம் என்றுதொடங்கி] - ஸ்நேஹத்தைப்பண்ணி நல்லபுனலோடு கூடின மலர்களை ப்ரேமபரவஶராய்க்கொண்டு திருவடிகளிலே பணிமாறி என்ஸ்வாமியுடைய திருநாமத்தை அநுஸந்தியுங்கோள்; அடிமைக்கு விரோதியான இஸ்ஸம்ஸாரத்தை அறுக்கும். [அப்பால் என்றுமேலுக்கு] - வேறு அயர்வறுமமரர்கள் என்று சொல்லப்படுகிறவர்களும் செறிந்த பொழிலையுடைய திருவனந்தபுரத்திற் கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய நிரதிஶய போக்யமான திருவடிகளை ஆஶ்ரயிக்குமவர்கள்; இப்பொருள் நிஶ்சிதம்; இது வ்யக்தமாகச் சொன்னோம்.

ப.—அநந்தரம், திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற நிருபாதிகஶேஷியான வன்திருவடியைக் கிட்டினவர்கள் ஸூரிகளாகை அறுதி; ஆகலால், ப்ரேமயுக்தராய்க் கொண்டு ஆராதித்து அவன் திருநாமங்களை'யநுஸந்தியுங்கோள் என்கிறார்.

புண்ணியம்செய்து-ஹோமரூபையான பக்தியைப்பண்ணி, நல்ல-ஶக்த்யுபஹ்ருதமாகையாலே அவனுக்கு ஆதரணீயமான, புனலொடு மலர்கள்- ஜலபுஷ்பாதிகளை, தூவி – (ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு) ப்ரயோகித்து, எந்தை - உத்பாதகனானவனுடைய, நாமம் - திருநாமங்களை, எண்ணுமின் - நிரந்தராநுஸந்தானம்பண்ணி யநுஸந்தியுங்கோள்; (இவ்வநுஸந்தானமே), இப்பிறப்பு - த்ருஷ்டதோஷமான இஜ்ஜந்மத்தை, அறுக்கும் - அறும்படிபண்ணும்; அப்பால் - மேலும், செறிபொழில் - செறிந்த பொழிலையுடைத்தான, அனந்தபுரத்து - திருவநந்தபுரத்திலே, அண்ணலார்கமலபாதம்- நிருபாதிகஸ்வாமியானவன் திருவடிகளை, அணுகுவார் - (உக்தப்ரகாரத்திலே) ஸ்நேஹமாகக்கிட்டுமவர்கள், அமரராவார் - * அயர்வறுமமரர்களிலே அந்யதமராவர்கள்; (இவ்வர்த்தத்தை), நாம் - (அவிஜ்ஞரான) நாங்கள், திண்ணம் - த்ருடமாக, அறிய-, சொன்னோம் - சொன்னோம்.

இ.—அஞ்சாம்பாட்டில், திருவனந்தபுரத்தில் ஆஶ்ரயிக்குமவர்கள் நித்யஸூரிகளாவர்கள்; ஆகையாலே, நீங்களும் ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

*[புண்ணியம் செய்து] - ஸ்நேஹத்தைப்பண்ணி: வர்ணாஶ்ரமதர்மஇதிகர்தவ்யதாகமான பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை நினைக்கிறது. "மத்பக்தோ மந்மநாபவ" என்னக்கடவதிறே. [நல்லபுனல் இத்யாதி] - நல்லபுனலோடேகூடின மலர்களைப்பரிமாறி: அர்ச்சனாதிகளைச் சொல்லுகிறது. "மத்யாஜீமாம் நமஸ்குரு" என்னக்கடவதிறே. [எண்ணுமின் எந்தைநாமம்] - என்ஸ்வாமியுடைய திருநாமத்தை அநுஸந்தியுங்கோள். இடறினவன் "அம்மே?" என்னுமாபோலே வருத்தவனுடைய திருநாமத்தை அநுஸந்தியுங்கோள்: "ஸததம் கீர்த்தயந்த:" என்னக்கடவதிறே. [இப்பிறப்பறுக்கும்] - பிறவியினுடைய தோஷப்ராசுர்யம் ப்ரத்யக்ஷஸித்தமிறே. [அப்பால் - அமராராவார் - செறிபொழிலனந்தபுரத்து அண்ணலார் கமலபாதம் அணுகுவார்] - செறிந்தபொழிலையுடைய திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய நிரதிஶய போக்யமான திருவடிகளை ஆஶ்ரயிக்குமவர்கள், "இப்பிறப்பறுக்கவேணும்" என்ன வேண்டாத நித்யஸூரிகளாவர்கள். இத்தால் - விரோதியைப் போக்குமளவன்றியே உத்தேஶ்யத்தைப் பெறுகைக்கும் திருவனந்தபுரமே ஆஶ்ரயணீயஸ்தல மென்கிறது. [திண்ணம் நாம் அறியச்சொன்னோம்] - வ்யக்தமாக, மயர்வறமதிநலமருளப்பெற்ற நாம், தேஹாத்மாபிமாநிகளான நீங்கள் அறியும்படி உங்கள் அநர்த்தத்தைப் பார்த்துச் சொன்னோம்.*

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருவனந்தபுரத்தில் ஆஶ்ரயிக்குமவர்கள் நித்யஸூரிகளாவர்கள்; ஆகையாலே, அங்கே நீங்களும் ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

[புண்ணியஞ்செய்து] - ஸ்நேஹத்தைப்பண்ணி. யதாநம் வர்ணாஶ்ரமதர்மங்களை இதிகர்த்தவ்யதையாக வுடைத்தா யிருக்குமிறே; ஆக, ஸத்கர்மபலமான பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை நினைக்கிறது. "**மத்பக்தோ - மந்மநாபவ**" (மத்பக்தோ - மந்மநாபவ) என்னக்கடவதிறே. [நல்லபுனலோடு மலர்கள் தூவி] - நல்ல புனலோடே கூடின மலர்களை ப்ரேமபரவசராய்க்கொண்டு பணிமாறி. இத்தால் - அர்ச்சநாதிகளைச் சொல்லுகிறது. "**மத்யாஜீமாம்நமஸ்குரு**" (மத்யாஜீமாம்நமஸ்குரு) என்னக்கடவதிறே. [எண்ணுமின்] - "**ஸததம்கீர்த்தயந்த:**" (ஸததம்கீர்த்தயந்த:) என்றுநின்றதிறே.

---

*அஞ்சாம்பாட்டு.*—**புண்ணியம்** *இத்யாதி. "அனந்தபுரத்தண்ணலார் கமலபாதமணுகுவார் - அப்பால் - அமராராவார்: எண்ணுமின்எந்தைநாமம்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை -* **திருவனந்தபுரத்தில்** *இத்யாதி.*

*புண்யஶப்தம் கர்மவாசக மொழிய, பக்திவாசகமாம்படியென்? என்ன - யதாநம் இத்யாதி; வர்ணாஶ்ரமதர்மங்களை யென்றபடி.* **இதிகர்த்தவ்யதையாக** *- அங்கமாக. ஸ்நேஹமும் பக்தியும் பர்யாயம். இத்தால்-காரணமான கர்மத்தையிட்டுக் கார்யமான பக்தியை லக்ஷிக்கிறதென்கிறார் -* **ஆக ஸத்கர்ம** *இத்யாதி. காரணமான கர்மத்தையிட்டுக் கார்யமான பக்தியை லக்ஷிக்கிறதென்? கர்மந்தன்னையே சொன்னாலோ? என்ன -மத்பக்த: இத்யாதி. அதாவது - "***மந்மநாபவ, மத்பக்தோ மத்யாஜீபவ, மத்பக்தோ மாம் நமஸ்குரு***" என்று எல்லாம் பக்திபுரஸ்ஸரமாகச் செய்யச்சொல்லுகையாலே, இங்கும் "நல்லபுனலொடு" இத்யாத்யுக்த அர்ச்சநாத்யங்கத்வேந பக்தியைச் சொல்லுகிறதென்று கொள்ளவேணுமென்றபடி. " அர்ச்சநாதிகளைப்பண்ணி" என்றதுக்கு ப்ரமாணம் - "மத்யாஜீ" இத்யாதி. பகவந்நாமோச்சாரணமும் பக்திக்கு உபயுக்தமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - "ஸததம்" இத்யாதி. "***மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம் நமஸ்குரு | மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண: ||*** (௩௪) **ஸததம்**

[எந்தைநாமம்] - இடறினவன் ''அம்மே'' என்னுமாபோலே திருநாமம்சொல்லும்போது ஒரு அதிகாரிஸம்பத்தி தேடவேண்டா; சீயர் பட்டரை ''திருநாமம் சொல்லும்போது ப்ரயதனாய்க்கொண்டுசொல்லவேணுமோ?'' என்று கேட்க, ''கங்கையிலேமுழுகப்போமவனுக்கு வேறொரு †உவர்க்குழியிலே முழுகிப்போக வேணுமோ? மேலுண்டான நன்மையைத் தருகிற இது அதிகாரிஸம்பத்தியையும் தரமாட்டாதோ?'' என்றருளிச்செய்தாராம். திருநாமம் சொல்லுகைக்கு ருசியேயாய்த்து வேண்டுவது; அவர்களே அதிகாரிகள். [இப்பிறப்பறுக்கும்] - கண்டதிறே இதினுடைய இழையீடு. கவிழ்ந்துபார்க்கவமையுமே இதினுடைய அகவாயை; தன்னடையே விரக்தி பிறக்குமே. இப்படி ப்ரத்யக்ஷிக்கச் செய்தேயும் கார்யகரமாகாதிருக்கிறதிறே வாஸனையின் கனம். ஒருசெட்டியை ''இவன் தமிழுக்குத்தேசிகனாயிருக்கும்''என்று பட்டருக்குக்காட்டினார்களாய், ''உனக்குஏதேனும் அபேக்ஷையுண்டாகில் கேட்கலாகாதோ?'' என்ன. ''சிலர் 'காண்கிறதேஹத்துக்கு அவ்வருகு ஆத்மாவுமில்லை, தர்மாதர்மங்களுமில்லை, ஈஶ்வரனுமில்லை' என்றிராநின்றார்கள்: சிலர் 'இத்தேஹந்தான் அஸ்த்திரம்' என்று இதின்தோஷத்தை தர்ஶித்து 'அவ்வருகே ஸ்த்திரமாயிருப்பதோன்றைப் பற்றவேணும்' என்றிராநின்றார்கள்: விஷயமொன்றாயிருக்க இவ்விரண்டு படிமாற்றமும் நடக்கிறபடியெங்ஙனே?'' என்ன; '' 'மம மாயா துரத்யயா'' (மமமாயாதுரத்யயா) என்றும் 'மாயாமேதாந்தரந்திதே' (மாயாமேதாந்தரந்திதே) என்றும் சொல்லுகிறபடியே பாக்யவான்களுக்கு இதினுடைய தோஷதர்ஶநத்தைப் பண்ணிக் கழித்துக்கொள்ளுகைக்கும், பாக்யஹீநர்க்கு இதிலே போக்யதாபுத்திபண்ணி அநர்த்தப்படுகைக்கும் உடலாம்படி கர்மாநுகுணமாக இத்தை இடையேடுத்துக்காணும் ஈஶ்வரன்பண்ணிற்று'' என்றருளிச்செய்தார். ''இதுகண்டாய்'' என்னும்படியா யிருக்குமிறே:நாம் நன்றாக நினைத்திருக்குமதல்ல இதுக்குஆகாரம்; ஈஶ்வரன், வெளிச்சிறப்பைப் பிறப்பிக்க ''இது அல்பம், அஸ்த்திரம்'' என்றுஅறிந்தஇதுவேகிடாய் இதுக்கு நிலைநின்ற ஸ்வபாவம். [இப்பிறப்பறுக்கும்] - இப்படி ஹேயதயா ஜ்ஞாதவ்யமான இத்தேஹஸம்பந்தத்தை யறுக்கும். [சேறிபொழில்இத்யாதி] - செறிந்த சோலையையுடைத்தான திருவனந்தபுரத்திலேவந்து கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியுடைய நிரதிஶயபோக்

கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: । நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே'' (க௪) இதி பகவத்கீதாஸு நவமே. ''எந்தைநாமம்'' என்று விசேஷித்ததுக்கு பாவம் - இடறினவன் இத்யாதி. இதுக்கு ஸம்வாதம் - சீயர் இத்யாதி. இத்தால் பலிதம் - திருநாமம் இத்யாதி. ''இ'' என்றதுக்கு பாவம் - கண்டதிறே இத்யாதி. இதினுடைய - தேஹத்தினுடைய. இழையீடு - நூலாலே தைக்கை. அதாவது - இழையிட்டாற்போலே யிருக்கிற அவயவங்களுடைய சேர்த்தி. விவரணம் - கவிழ்ந்து இத்யாதி. அகவாயை - அந்தஸ்த்தங்களான மூத்ரபுரீஷாதி தோஷங்களை. அகவாயில் தோஷத்தை தர்ஶிக்கவும் நமக்கு விரக்தி பிறவாமைக் கடியேதென்ன - இப்படி இத்யாதி. ''வாஸனையின்கனம்'' என்றதுக்கு ஸம்வாதம் - ஒரு செட்டியை இத்யாதி. காட்டினவிடத்து, பட்டர் ''நாமறியாததொன்று இவனைக் கேட்கவேண்டியிருந்ததோ'' என்று, அவன்தன்னையே ''நம்பக்கலிலே வேண்டுவது கேட்கலாகாதோ'' என்றாரென்றபடி. இடையேடுத்து - நிறுத்து; நிஶ்சயித்தென்றபடி. இது ஹேயம் என்னுமதுக்குப்ரமாணம் - இதுகண்டாய் இத்யாதி. இரண்டாந்திருவந்தாதி, அறுபத்தாறும்பாட்டு. இதுக்கர்த்தம்-நாம் இத்யாதி. உக்தத்தை யநுவதித்துக்கொண்டு, பலிதார்த்தம் - இப்படி இத்யாதி. ''அப்பால் - அமரரானவர்களும் - அனந்தபுரத்தண்ணலார் கமலபாதமணுகுவார்'' என்று தாத்பர்யாந்தரம் - இப்பிறப்பறுக்கும் இத்

† 'உவட் குழியில்' என்று காணப்படுகிறது.

யமான திருவடிகளைக் கிட்டுமவர்கள். [அப்பால் - அமரராவார்] - "இப்பிறப்பறுக்கும்" என்ன வேண்டாத தேஹத்தைப் பரிக்ரஹித்து அடிமைசெய்கிறவர்களும், திருவனந்த புரத்துக் கண்வளர்ந்தருளுகிறவன் திருவடிகளை யாஶ்ரயித்தவர்கள். ஆக, இத்தால் விரோதியைப் போக்குமளவே யன்றியே உத்தேஶ்யத்தைப் பெறுகைக்கும் திருவனந்த புரமே ஆஶ்ரயணீயஸ்த்தலமென்கிறது. [திண்ணம்] - நிஶ்சிதம். [நாம்அறியச்சொன் னோம்] - அவனாலே * மயர்வறமதிநலமருளப்பெற்ற நாம், தேஹாத்மாபிமாநிகளான நீங்களும் அறியும்படி உங்கள்அநர்த்தத்தைப் பார்த்துச் சோன்னோம். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

அமரராய்த்திரிகின்றார்கட்கு ஆதிசேரனந்தபுரத்து
அமரர்கோன்அர்ச்சிக்கின்று அங்ககப்பணிசெய்வர்விண்ணோர்
நமர்களோ!சொல்லக்கேண்மின்நாமும்போய்நணுகவேண்டும்
குமரனார்தாதைதுன்பந்துடைத்தகோவிந்தனாரே.

*ஆ.—(அமரராய்.) - திருநாட்டிலேபோய் எம்பெருமானுக்கு அடிமைசெய் கையன்றோ ப்ராப்யமென்னில்?—அங்குள்ளாரும் திருவனந்தபுரத்திலே வந்தன்றோ அடிமைசெய்கிறது; ஆதலால் இங்கே யடிமைசெய்யும் இதுவே ப்ராப்யம்; ஆனபின்பு, நாம் இங்கேபோய் அடிமைசெய்யவேணுமென்கிறார்.*

*ஒ.—ஆறாம்பாட்டில், அயர்வறுமமரர்களும்வந்து அடிமைசெய்கிறது திரு வனந்தபுரத்திலேயாதலால் திருநாட்டிற்காட்டில் பரமப்ராப்யம் திருவனந்தபுரம்; நாமும் இங்கே அடிமைசெய்யவேணும் என்கிறார்.*

---

*யாதி. முந்தினயோஜனையில் " இப்பிறப்பறுக்கும், அப்பால் - அமரராவார் " என்கிற பதத்வயத் தாலும் ஃபலிதம் - ஆக இத்யாதி. 'புண்ணியம்செய்து' என்று தொடங்கி, 'எந்தைநாமம்-எண்ணு மின், இப்பிறப்பறுக்கும்; 'செறிபொழில்' என்று தொடங்கி, 'அணுகுவார்' - அப்பால் - அமரரா வார்; திண்ணம் நாம் அறியச்சொன்னோம்' இத்யந்வயஃ. 'இதுகண்டாய் நன்னெஞ்சே' இத்யாதி. நன்னெஞ்சே - ஸம்ஸாரம் பொல்லாதென்றால் அதுக்கிசைந்து என்னோடு ஒருமிடறானநல்ல நெஞ்சே! இப்பிறவியாவது, த்ருஷ்டதோஷதுஷ்டமான இந்த ஸம்ஸாரமாகிறது - இதுகண் டாய் - "இது நிலைநிற்கும், போக்யமாயிருக்கும்" என்று நாட்டார் ப்ரமிக்கிறவாகாரமின்றிக்கே அல்பாஸ்த்திரத்வாதி தோஷதூஷிதமான இவ்வாகாரத்தோடேகூடின இதுவே கிடாய்; எல்லாநா முற்றது இதுகண்டாய் - முன்பு அநாதிகாலமெல்லாம் நன்றாய்த்தோற்றுகிற ஆகாரத்தாலே நாம் மறுபாடுருவ துக்காநுபவம் பண்ணிப் போந்தது இதுகிடாய்; நாரணன்பேரோதி - வகுத்தஶேஷி யான நாராயணனுடைய திருநாமங்களை நிரந்தரமாகச்சொல்லி, நரகத்தருகணையாக்காரணமும் இதுகண்டாய் - ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய பர்யந்தத்திலும் ப்ரவேஶியாமைக்குக் காரணமும் அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்களாலே த்யாஜ்யமென்னும் ஆகாரம் ப்ரத்யக்ஷிக்கலாம்படி யிருக்கிற இஜ்ஜந்ம ஸம்பந்தங்கிடாய்; வல்லையேல்காண் - 'மேலெழத்தோற்றுகிற நன்மையில் பசை யில்லை, தோஷமேயிதுக்கு வேஷம்'என்னுமத்தைத் தப்பாதபடி காணவல்லையாகில் நான்சொன் னது ஒக்குமென்னும் இடத்தைக் கண்டுகொள் என்று பாட்டுக்கர்த்தம். (ரு)*

[அமரரென்று தொடங்கி] - தேவர்களாய்த்திரிகிற ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனானவன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலே அயர்வறுமமரர்களுக்கு ப்ரதானனான ஸ்ரீஸேனாபதியாழ்வான் அடிமைசெய்யுமிடத்தில் எடுத்துக் கை நீட்டுவார் அயர்வறுமமரர்கள். [நமர்கள் என்றுமேலுக்கு] - பந்துக்களாயுள்ள நீங்கள் சொல்லக்கேளுங்கோள் ; தேவஸேனாபதியாய்ப் பெருமிடுக்கனான ஸுப்ரஹ்மண்யனுக்குங்கூட ஜநகனானவனுக்குப் பாதகத்தால்வந்த து:க்கத்தைப்போக்கின க்ருஷ்ணனை நாமும் போய்க்கிட்டவேணும்.

ப.—அநந்தரம், ஸர்வதேவநிர்வாஹகன் வர்த்திக்கிற திருவநந்தபுரத்திலே ஸூரிகள் ஆராதியாநிற்பர்கள் ; நாமும்போய்க் கிட்டவேணும் என்கிறார்.

குமரனார்தாதை - ஸுப்ரஹ்மண்யனுக்கு உத்பாதகனான ருத்ரனுடைய, துன்பம் துடைத்த - பாதகது:கத்தைப்போக்கின, கோவிந்தனார் - க்ருஷ்ணனாய், அமரர் ஆய் - மற்றும் தேவர்களாய், திரிகின்றார்கட்கு - திரிகிறவர்களுக்கும், ஆதி - உத்பாதகனானவன், சேர் - கண்வளர்ந்தருளுகிற, அனந்தபுரத்து - திருவனந்தபுரத்திலே, அமரர் கோன் - ஸேனைமுதலியார், அர்ச்சிக்கின்ற - ஆராதிக்கிற இதுக்கு, அங்கு - அத்தேசத்திலேவந்து, அகப்பணிசெய்வர் - அந்தரங்கவ்ருத்திபண்ணி எடுத்துக்கைநீட்டுவார், விண்ணோர் - பரமபதவாஸிகளாயிருக்கும்; நமர்களோ - நம்முடையவர்களானவர்களே! சொல்லக்கேண்மின் - சொல்லக்கேளுங்கோள்; நாமும் போய் - நாமும்(அவர்களோடே) போய், நணுகவேண்டும் - கிட்டவேணும்.

இ.—ஆறும்பாட்டில, நித்யஸூரிகளும் வந்து அடிமைசெய்கையாலே திருவனந்தபுரமே ப்ராப்யம்: அங்கே நாம் அடிமைசெய்யவேணும் என்கிறார்.

[அமரராய்த் திரிகின்றார்கட்கு] - மநுஷ்யாதிகளிற்காட்டில் சிலநாள்ஏறவிருக்கிற இத்தைக்கொண்டு தங்களை நித்யரென்று அபிமாநித்திருக்கிறவர்களுக்கு. [திரிகின்றார்கட்கு] - மநுஷ்யாதிகளிற்காட்டில் பந்தகம் கனத்திருக்கச்செய்தேயும், நிர்ப்பயராய்த் திரியாநிற்பர்கள். மநுஷ்யர்களுடைய விரக்திக்கு அவர்கள் பரிக்ரஹித்தவளவிறே த்யஜிக்கவேண்டுவது? ப்ரஹ்மாவுக்கு சதுர்த்தச புவநமும் த்யஜிக்கவேணும். [ஆதிசேர் அனந்தபுரத்து] - காரணபூதன் வர்த்திக்கிற தேசத்திலே. [அமரர்கோனர்ச்சிக்கின்ற இத்யாதி] - ஸ்ரீஸேனாபதியாழ்வான் அடிமைசெய்யுமிடத்தில் எடுத்துக் கைநீட்டுவார் நித்யஸூரிகள். [நமர்களோ சொல்லக்கேண்மின்] - நம்மோடு குடல்துடக்குள்ள நீங்கள் சொல்லக்கேளுங்கோள்; "வழுவிலா அடிமைசெய்யவேண்டும்நாம்" என்கிற நம்நினைவே நினைவாயுள்ளார் கேளுங்கோள. [நாமும்போய் நணுகவேண்டும்] - அந்த நித்யஸூரிகள்திரளிலே அடிமையிலே ருசியையுடைய நாமும் சென்று கிட்டவேணும். இங்கேயிருந்து மநோரதிக்குமளவு போராது; அத்திரளிலே சடக்கெனப் புகவேணும். அவர்கள்நடுவே ஸம்ஸாரிகளான நமக்குக் கிட்டவொண்ணுமோ? என்னில்,—[குமரனார் இத்யாதி] - தேவஸேனாபதியாய் ப்ரபலனான ஸுப்ரஹ்மண்யனுக்குங்கூட ஜநகனானவனுக்குப் பாதகத்தால்வந்த து:க்கத்தைப்போக்கின க்ருஷ்ணனை; பாணனுக்குத் துணையாயிருக்கிற ருத்ராதிகள் து:க்கநிவ்ருத்திக்கு ஹேதுவாயிருக்கிறவன் நம்து:க்கத்தைப்போக்கச் சொல்லவேணுமோ? ருத்ராதிகளுக்கு து:க்கநிவர்த்தகனாயிருக்கும்; பசுக்களுக்கும் இடையர்க்கும் எளியனாயிருக்குமென்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. நித்யஸூரிகளும் வந்து அடிமைசெய்கிறது இங்கே யாகையாலே திருவனந்தபுரமே பரமப்ராப்யம்: அங்கே நாம் அடிமைசெய்யவேணு மென்கிறார்.

[அமரராய்த்திரிகின்றார்கட்கு]-மாம்பழத்தோடு ஒருஸம்பந்தமில்லாத தொன்றுக்கு மாம்பழவுண்ணியென்று பேராயிருக்குமாபோலே, இக்கரையராய் அவ்வருகுள்ளாரிற்காட்டில் நாலுநாளேழ ஜீவித்திருந்து சாகிற இவ்வளவையேகொண்டு தங்களுடைய ஆயுஸ்ஸுக்கு ஓரவஸாநமுண்டாயிருக்கச்செய்தே அதில்லாதாரைப்போலே துர்மாநம் பண்ணிக்கொண்டு திரிவர்களாய்த்து. [திரிகின்றார்] - வைபவம் கனத்திருக்கச்செய்தேயும், நிர்ப்பயராய்த் திரிவர்களாய்த்து. இவனளவல்லவிறே யவர்களுக்கு. விடும்போது ஒரு தேஹமாத்ரமாதல், ஒரு ஸ்த்ரீயாதலாயிருக்கும் இவனுக்கு; ப்ரஹ்மாவுக்கு அண்டமித்தனையும் விடவேண்டி வருமிறே. [ஆதிசேரனந்தபுரத்து] - இவர்களுக்கும் அவர்களுக்கும் அவன்பக்கல் ஸாம்யம் காரணத்வத்திலேயாய்த்து. அவர்களுக்கு, ஸத்தையை நிர்வஹித்துக்கொடுக்கும்; இவர்களுக்கு, தேஹத்தையும் ஆத்மாவையும்சேர்த்து இத்தேஹம் க்ஷணந்தோறும் நசிக்க உண்டாக்கி நடத்திக்கொடுக்கும். ஜகத்காரணபூதனானவன் வந்து நித்யவாஸம்பண்ணுகிற திருவனந்தபுரத்து. [அமரர்கோன் இத்யாதி] - ஸ்ரீஸேநாபதி யாழ்வான் நித்யகைங்கர்யம் பண்ணுகிறான்; நித்யஸூரிக ளெடுத்துக் கைநீட்டுவார். [நமர்களோ சொல்லக் கேண்மின்] - "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று சொன்னதுக்குள்ளே யடங்கும்படி என்னோடே நிருபாதிகஸம்பந்தமுடையாரடங்க நான்சொல்லுகிற வார்த்தையைக் கேளுங்கோள். பந்துக்களாயிருப்பார்க்கு நல்வார்த்தை சொல்லவேணுமிறே. [நாமும்] - அடிமையிலே ருசியுடையநாமும், நித்யஸூரிகளோடு ஒருகோவையாய்ச் சென்றுகிட்டி அடிமைசெய்யவேணும். [போய் நணுகவேண்டும்] - இங்கேயிருந்து மநோரதிக்குமளவு போராது, போய்ப்புகவேணும். அவர்கள் நடுவே ஸம்

---

*ஆறும்பாட்டு.—அமரராய் இத்யாதி. "அமரர்கோனர்ச்சிக்கின்றங்கு அகப்பணி செய்வர்விண்ணோர், நாமும்போய் நணுகவேண்டும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - நித்ய ஸூரிகளும் இத்யாதி.*

*"ஆய்" என்றதுக்கு பாவம் - மாம்பழத்தோடு இத்யாதி. அதாவது - நித்யஸூரிகளுடைய அமரத்வம் தங்களுக்கின்றிக்கேயிருக்க, அதுஉண்டானதாக அபிமாநித்துக்கொண்டு திரிவர்களென்றபடி. ஏழ - விளம்பித்து. "திரிகிறார்கள்" என்றதுக்கு பாவம் - வைபவம் இத்யாதி. அப்படி வைபவமதிகமோ? என்ன - இவனளவல்ல இத்யாதி. இவன் - மநுஷ்யன். அதெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார் - விடும்போது இத்யாதி வாக்யத்வயத்தாலே. ப்ரஹ்மாதிகளுக்கு அமரத்வமில்லையாகிலும், நித்யஸூரிகளுக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஸ்வரன்உத்பாதகனுமாகாரம் ஸமாநமென்கிறார் - இவர்களுக்கும் இத்யாதி. ஸாம்யம் காரணத்வத்திலே என்கையாலே - ப்ரஹ்மாதிகளுக்கு நித்யஸூரிகளோடு அமரத்வஸாம்யமில்லையென்று கருத்து. இருவர்க்கும் ஆதியாம் ப்ரகாரமேதென்ன - அவர்களுக்கு இத்யாதி. அநுஜ்ஞாபாவத்தில் ஸத்தாஹாநி பிறக்கையாலே அநுபவிப்பித்து ஸத்தையை நோக்குமென்றபடி. "அமரராய்த் திரிகின்றார்கட்காதி" என்றத்தால் பலிதம் - ஜகத்காரண இத்யாதி. "அர்ச்சிக்கின்று" என்றது - மலையாளபாஷை; அர்ச்சிக்கிறவிடத்திலென்னுதல், அர்ச்சிக்கிறானென்னுதல். 'அங்கு - அத்தசையிலே. அகப்பணி செய்வர் - அந்தரங்கவ்ருத்திபண்ணுவார்; எடுத்துக் கைநீட்டுவாரென்றபடி. நமர்களானால் சொல்லவேணுமோவென்ன - பந்துக்களாய் இத்யாதி. "நணுகவேண்டும்" என்றதிக்கர்த்தம் - நித்யஸூரிகளோடு இத்யாதி. "போய்" என்றதுக்கு வ்யாவர்த்யம் - இங்கேயிருந்து இத்யாதி. துமானும்*

ஸாரிகளான நமக்குக் கிட்டவோண்ணுமோவென்னில் - [குமரனுர் இத்யாதி] - (தேவ ஸேநாபதியாய்ப்ரபலனை ஸுப்ரஹ்மண்யனுக்குங்கூட ஜநகனுனவனுக்குப் பாதகத் தால்வந்தது:ஃகத்தைப் போக்கினக்ருஷ்ணனை )தேவர்களும்அஸுரர்களும்கூட்டுப்படை யாய் எதிரிட்டுவருமன்றும், அவர்கள் ஆபந்நராஞல் அவர்கள் ஆபத்தைப்போக்கி ரக்ஷிக்கு மவனுய்த்து அவன்; ஆனபின்பு, நமக்கு அத்தேசத்தை ப்ராபிக்கைக்கு ஓரருமைப்பட வேணுமோ? தூர்மாநிகளுக்கும் து:ஃவநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்குமவன், அபிமாந சூந்யரான நமக்குத் தன்னைக் கிட்டுகையில் அருமைப்படுத்துமோ? ருத்ராதிகளுக்கு து:ஃவ நிவர்த்தகனுயிருக்கும்; பசுக்களுக்கும் இடையர்க்கும் கையாளாயிருக்கும். 'கோவிந்த னுரை - நாமும் போய் நணுகவேண்டும்.' (சு)

---

## ஏழாம் பாட்டு.

துடைத்தகோவிந்தனுரேஉலகுயிர்தேவும்மற்றும்
படைத்தஎம்பரமமூர்த்தி பாம்பணைப்பள்ளிகொண்டான்
மடைத்தலைவாளைபாயும் வயலணியனந்தபுரம்
கடைத்தலைசீய்க்கப்பெற்றால்கடுவினைகளையலாமே.

*ஆ.—(துடைத்த) - ஆஸ்ரிதது:ஃவாபநோதந ஸ்வபாவனுய், ஸர்வகாரண மாகையாலே ஸர்வேஸ்வரனுன எம்பெருமான் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத் திலேசென்று அடிமைசெய்யப்பெறில், நம்முடைய து:ஃவமெல்லாம்போம், அடிமைசெய் யப்போங்கோ ளென்கிருர்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், ஸர்வேஸ்வரன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத் திலே சென்று அடிமைசெய்ய இதுக்குமுன்பெல்லாம் அடிமைசெய்யப் பெற்றிலோ மென்னும் து:ஃவம் இப்போதே போமென்கிருர்.*

*[உலகுயிர் என்றுதொடங்கி] - லோகத்தையும் தேவர்களையும் மற்றுமுண் டான ஆத்மாக்களையும் உண்டாக்கின ஆஸ்ரிதர்க்கு ஸுலபனுன ஸர்வேஸ்வரனுமாய், திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுவதுஞ்செய்தவனுடைய, ஜலஸம்ருத்தியாலே களித்து மடைத்தலையிலே வாளைபாயாநின்றுள்ள வயலாலே அலங்க்ருதமானதிருவனந்த புரத்தில் திருவாசலிலே திருவலகுதிருப்பணி செய்யப்பெற்றால்.*

---

தாதை துன்பந்துடைத்தது - *வாணனைத் தலையறுதே ரக்ஷிக்கையென்கிருர்* - தேவர்களும் இத் *யாதி. அதாவது - "கோவிந்தனுர்" என்று க்ருஷ்ணனைச்சொல்லுகையாலே, பாணயுத்தத்தில் துன்பம் துடைத்தானென்றபடி.* ஆனபின்பு *என்றது* - *தூர்மாநிகளுக்கும் ரக்ஷகனுனபின்பென்ற படி. "அருமைப்படவேணுமோ" என்றத்தை யுபபாதிக்கிருர்* - *தூர்மாநிகளுக்கும் இத்யாதி· சீழ்ப்பதத்தோடே "கோவிந்தனுர்" என்றத்தைக்கூட்டி* ஸாவம் - ருத்ராதிகளுக்கு இத்யாதி. *க்ரியையேதென்ன* - கோவிந்தனுரை இத்யாதி. *'அமரராய்' என்று தொடங்கி, 'விண்ணோர்: ஆஜ்ஞையாலே, நமர்களோ! சொல்லக்கேண்மின் ; குமரனுர்' என்று தொடங்கி, 'கோவிந்தனுரை - நாமும்போய் நணுகவேண்டும்' இத்யந்வய:.* (சு)

ப.—அநந்தரம், ஸகலஜகத்ஸ்ருஷ்ட்யாதி யுக்தனான ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருவனந்தபுரத்திலே யடிமைசெய்யப்பெற்றால், ப்ராப்யாலாபநிபந்தநமான க்லேஶத்தைப் போக்கலா மென்கிறார்.

உலகு - லோகங்களையும், உயிர்-(மநுஷ்யாதிகளான) ப்ராணிகளையும், தேவும்-தேவதைகளையும், மற்றும் - மற்றும் மஹதாதிபதார்த்தங்களையும், துடைத்த - ஒன்றொழியாமல் படைத்து ஸம்ஹரித்தவனாய், கோவிந்தனாரே - (“தமோ ஏகீ ஸவதி” என்கிறபடியே அவ்வவஸ்த்தையில் த்யோதமான விக்ரஹயுக்தனானையாலே) கோவிந்தஶப்தவாச்யனானவன்தானே, (ஸம்ஹ்ருதமான அந்த ஸகலபதார்த்தங்களையும்), படைத்த - உத்பாதித்தவனாய், எம் - இக்காரணத்வத்தை நமக்குப்ரகாசிப்பித்த, பரமமூர்த்தி - ஸர்வாதிகஶேஷியாய், (ஸ்ருஷ்ட ஜகத்ரக்ஷணார்த்தமாக), பாம்புஅணை- திருவரவணையிலே, பள்ளிகொண்டான் - கண்வளர்ந்தருளுகிறவனுடையதாய், (ஜலஸம்ருத்தியாலே), மடைத்தலை—மடைத்தலைகளிலே, வாளை பாயும் - வாளை களித்துப்பாயும், வயல் அணி - வயல் அலங்காரமாகவுடைய, அனந்தபுரம் - திருவனந்தபுரத்திலே, கடைத்தலை - திருவாசலிலே, சீய்க்கப்பெற்றால் - ஸம்மார்ஜநப்ரமுகஶேஷவ்ருத்திகளைப் பண்ணப்பெற்றால், கடு வினை-(கைங்கர்யாலாபநிபந்தநமான) அதிஶயிதது:கத்தை, களையலாம் - போக்கலாம். கோவிந்தனென்றது - “க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:” என்று க்ருஷ்ணனைச் சொல்லிற்றாகவுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், ஸர்வேஶ்வரன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலேசென்று அடிமைசெய்யப்பெறில், ஒருதேஶவிசேஷத்திலே சென்று அடிமைசெய்யப் பெற்றிலோமென்னும் து:கம் போமென்கிறார்.

[துடைத்த கோவிந்தனார் இத்யாதி] - துடைக்கை - ஸம்ஹரிக்கை. அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டியிருப்பது. “க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம்”. [உலகுயிர் இத்யாதி] - லோகத்தையும் தேவஜாதியையும் மற்றுமுண்டான ஆத்மாக்களையும் உண்டாக்கினவன். இவை, அதிப்ரவ்ருத்தமானவன்று ஸம்ஹரித்து, பின்பு, புருஷார்த்தோபயோகியான கரணங்களைக் கொடுத்து ரக்ஷித்த. [எம் பரமமூர்த்தி]- ஆஶ்ரிதஸுலபனான ஸர்வேஶ்வரன். [பாம்பணைப் பள்ளிகொண்டான்] - ஸ்ருஷ்டமான ஜகத்திலே ரக்ஷணார்த்தமாகத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளினவனுடைய. [மடைத்தலை இத்யாதி] - ஜலஸம்ருத்தியாலே மடைத்தலைகளிலே களித்து வாளை பாயாநின்றுள்ள வயலாலே யலங்க்ருதமான தேஶத்திலே. ஸாமகாநத்தாலே முக்தர் களித்துவர்த்திக்குமாபோலேயாய்த்து அத்தேசத்தில் திர்யக்குக்களும் களித்து வர்த்திக்கும்படி. [கடைத்தலை சீய்க்கப்பெற்றால்] - திருவாசலிலே திருவலகு திருப்பணிசெய்யப்பெற்றால். [கடுவினை களையலாமே] - அடிமைசெய்யப்பெறாமையா லுண்டான க்லேஶமெல்லாம் போம். ஶேஷத்வஜ்ஞாநம் பிறந்தால், ஸ்வரூபாநுரூபமானவ்ருத்தி பெறாமையால் வரும் க்லேஶம் ப்ராயஶ்சித்தத்தால் போக்குமதன்றிறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஸர்வேஶ்வரன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலே சென்று அடிமைசெய்யப்பெறில், ஒருதேஶவிசேஷத்தே சென்று அடிமைசெய்யப்பெற்றிலோமென்னும் து:கம் போ மென்கிறார்.

ஏழாம்பாட்டு.—துடைத்தகோவிந்தனார் இத்யாதி. “அனந்தபுரம் கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே” என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வேஶ்வரன் இத்யாதி.

[துடைத்தகோவிந்தனுரே இத்யாதி]-துடைக்கை - ஸம்ஹரிக்கை. அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டி யிருப்பது. "க்ருஷ்ணஏவஹிலோகாநாம்" (க்ருஷ்ணஏவஹிலோகாநாம்,) "வையமேழும்கண்டாள் பிள்ளைவாயுளே." [உலகுயிரித்யாதி] - லோகத்தையும் தேவஜாதியையும் மற்றுமுண்டான ஆத்மாக்களையும் உண்டாக்கின. இவை அதிப்ரவ்ருத்தமான வன்று ஸம்ஹரித்து, பின்னை புருஷார்த்தோபயோகியான கரணங்களைக் கொடுத்து ரக்ஷித்த. [எம் பரமமூர்த்தி] - ஆஸ்ரிதஸவ்யனுன ஸர்வேஸ்வரன். [பாம்பணைப் பள்ளிகொண்டான்] - ஸ்ருஷ்டமான ஜகத்திலே ரக்ஷணுர்த்தமாகத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவனுடைய. [மடைத்தலைஇத்யாதி] - ஜலஸம்ருத்தியாலே மடைத்தலைகளிலே களித்து வாளைகள் பாயாநின்றுள்ள வயலாலே அலங்க்ருதமான தேசத்திலே; முக்தர் ஸாமகாநம்பண்ணிக் களித்து வர்த்திக்குமாபோலே யாய்த்து, அத்தேசத்தில் திர்யக்குக்களும் களித்து வர்த்திப்பது [கடைத்தலைசீய்க்கப்பெற்ருல்] - திருவாசலிலே திருவலகு திருப்பணிசெய்யப்பெற்ருல். [கடுவினைகளையலாமே] - அடிமைசெய்யப் பெறுமையாலுண்டான க்லேஶமெல்லாம் போம். ஶேஷத்வஜ்ஞாநம் பிறந்தால், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திபெறுமையால் வரும் க்லேஶம் ப்ராயஶ்சித்தத்தால் போக்குமதன்றே. (எ)

---

## எட்டாம் பாட்டு.

கடுவினைகளையலாகுங் காமனைப்பயந்தகாளை
இடவகைகொண்டதென்பரெழிலணியனந்தபுரம்
படமுடையரவிற் பள்ளிபயின்றவன்பாதங்காண
நடமினோநமர்களுள்ளீர்! நாம்உமக்கறியச்சொன்னோம்.

**ஆ.**—(கடுவினை.) - ஸௌந்தர்ய லாவண்ய ஸௌவநாதி கல்யாணகுணநிதியான எம்பெருமான் எல்லார்க்கும் ஆத்மஸமர்ப்பணம்பண்ணிக்கொண்டிருக்கிற திருநகரி, திருவனந்தபுரம் என்றுசொல்லாநின்றுர்கள்; நாமும் அங்கே கண்வளர்ந்தருளுகிற

---

ஸ்ருஷ்டிக்குமுன்னே ஸம்ஹாரத்தைச் சொல்லுவானென்னென்ன - அப்யய இத்யாதி. க்ருஷ்ணனே ஜகத்ஸம்ஹாரம் பண்ணினு னென்ன- க்ருஷ்ணஏவஹி இத்யாதி. "க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாவ்யய:" இத்யாதி மஹாபாரதே ராஜஸூயே.(௩அ ௨௩) இதுக்கு ப்ரமாணந்தரமாதல், அன்றிக்கே, துடைக்கை-நிஶ்ஶேஷமாக விழுங்குகையென்று அவாந்தரப்ரளயமாக அர்த்தாந்தரம் விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணமாதல் வையமேழும் இத்யாதி.படைத்தொழியத் துடைத்ததும் உபகாரமோவென்ன - இவை அதிப்ரவ்ருத்தம் இத்யாதி. மடைத்தலை - மடைகளிலேயென்றபடி. இதுக்குஹாவம் - முக்தர் இத்யாதி. கடைத்தலை - தலைக்கடை; வாசலென்றபடி. சீய்க்கை - திருவலகிடுகை. கைங்கர்யம் பண்ணப்பெறுமையாலுள்ள க்லேஶத்தை "கடுவினை" என்னலாமோவென்ன - ஶேஷத்வஜ்ஞாநம் இத்யாதி. அதாவது - ஶேஷத்வஜ்ஞாநாநந்தரம் கடைத்தலை சீய்க்கப்பெற்றுல் களையலான கடுவினை, அதுபெறுமையால்வந்த க்லேஶமேயாகவேணும். அஃகர்மமாகில் ப்ராயஶ்சித்தவிநாஶ்யமென்கை. 'உலகுயிர்தேவும்மற்றும்-துடைத்தகோவிந்தனுரே, உலகுயிர்தேவும்மற்றும் படைத்த எம் பரமமூர்த்தி' என்றுதொடங்கி, 'களையலாமே' இத்யந்வய:. (எ)

அவன் திருவடிகளைக் காணப்போமின்கோள்: இஸ்ஸம்ருத்தியை நீங்கள் அறியாமையாலே இழக்கலாகாதென்று உங்களுக்கு அறிவித்தோமென்கிருர்.

ஒ.—எட்டாம்பாட்டில், 'திருவனந்தபுரத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் காணப்போருங்கோள்!' என்று ஸ்ரீவைஷ்ணவர்களை அழைக்கிருர்.

[கடுவினை] - மிக்க வினை. [காமனை என்று தொடங்கி] - விலக்ஷணமான திருவனந்தபுரத்தை லோகத்தையெல்லாம் தன்னழகாலே பிச்சேற்றக்கடவனை காமனுக்கு ஜநகனுய், அவனிலும் முக்தனை க்ருஷ்ணன், ஸ்தாநமாகக் கொண்டதென்பர். தன்னுடைய ஸ்பர்ஶஸுகத்தாலே விரித்தபணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே நிரந்தரமாகப் பள்ளிகொண்டருளுகிறவனுடைய திருவடிகளைக் காண நடவுங்கோள். எனக்கு வந்யர்களாயுள்ள நீங்கள் இஸ்ஸம்ருத்தியை யறியாதே இழக்கலாகாதென்று சொன்னேம்.

ப.—அநந்தரம், நிரதிஶயபோக்யமான திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற பரமப்ராப்யனுதன் திருவடிகளை யநுபவிக்கைக்கு நம்முடையராயுள்ளார் எல்லாரும் நடக்கும்படி பாருங்கோளென்கிருர்.

கடு வினை-(ப்ராப்திவிளம்ப ஹேதுக்களாயுள்ள)க்ரூரமான பாபங்களை, களையல் ஆகும் - போக்கலாம், காமனை - (அழகுக்கு ப்ரஸித்தனை) காமனை, பயந்த - உத்பாதித்தவனுய், காளை - (அவ்வளவிலும்) யௌவநம்குலையாத க்ருஷ்ணனுனவன், இடவகை - இடமாக, கொண்டது—, எழில்-அழகை, அணி- அணிந்த, அனந்தபுரம் - திருவனந்தபுரம், என்பர் - என்றுசொல்லாநிற்பர்; (அங்கே), படமுடை-(ஸ்வஸ்பர்ஶத்தாலே விரிகிற)பணங்களையுடைய, அரவில் - திருவரவணையிலே, பள்ளி - கண்வளர்ந்தருளுகையிலே, பயின்றவன் - மிகவும் செறிந்தவனுடைய, பாதம் - திருவடிகளை, காண - கண்டநுபவிக்கைக்கு, நமர்களுள்ளீர் - நம்முடையராயுள்ளீர், நடமினோ - நடவுங்கோள்; (அறிவிப்பார் குறையாயிராதே), நாம் - (விஷயவைலக்ஷண்யம் அறிந்த) நாங்கள், உமக்கு - உங்களுக்கு, அறிய - அறியும்படி, சொன்னேம் - சொன்னேம்.

இ.—எட்டாம்பாட்டில், திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் காணப்போருங்கோள் என்று அநுகூலரை அழைக்கிருர்.

[கடுவினை களையலாகும்] - அநுபவவிரோதியாய்ப் போக்கவரிதான பாபம் போம். [காமனைப் பயந்தகாளை] - இது நான்உபதேசிக்கவேண்டுவது அவனை ப்ரத்யக்ஷிக்குந்தனையுமிறே. நாட்டையடங்கத் தன்னழகாலே பிச்சேற்றித்திரியும் காமனுக்கும் உத்பாதகனுனவன். [காளை]-யௌவநம் ப்ரஸவாந்தமாயிருக்க, பருவத்தால் அவனிலும் இளகிப்பதித்திருக்கும். [இடவகை இத்யாதி] - அழகாலே அலங்க்ருதமான திருவனந்தபுரத்தை வாஸஸ்தாநமாகக் கொண்டதென்று விஶேஷஜ்ஞர் வாய்புலற்றுநிற்பர்; "வஹுநாஹம்விஹ-வை-யா:". [படமுடைஇத்யாதி] ஸ்வஸ்பர்ஶத்தாலேவிஸ்த்ருதபணனுன திருவநந்தாழ்வான்மேலே நிரந்தரமாகக் கண்வளர்ந்தருளுகிறவனுடைய திருவடிகளைக் காண. பயின்றவென்று - வீசி வில்லிட்டெழுப்பிலும் எழுப்பவொண்ணுதபடியிறே படுக்கை வாய்ப்பிருப்பது. [நடமினோநமர்கள் உள்ளீர்] - என்னோடு குடற்றுடக்குடையாரடைய நடவுங்கோள். [நாம் உமக்குஅறியச் சொன்னேம்] - "வரிவாளரவினணைப்

*பள்ளிகொள்கின்றகரியான்கழல் காணக்கருதுங்கருத்தே'' என்று சபலரான நாம், ''ஸ்நகம ஈ~ஃவம்ஸ~வஜூநள'' என்னும்படியிருக்கிற உங்களுக்குநெஞ்சிலேபடச்சொன்னோம்.*

ஈடு.—எட்டாம்பாட்டு. திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக்காணப் போருங்கோளென்று, அநுகூலரை யழைக்கிறார்.

[கடுவினைகளையலாகும்]-நம்மால்போக்கவரிதான பாபங்களையும் போக்கலாம். [காமனைப்பயந்தகாளை] - உங்களுக்கு நான் உபதேசிக்கவேண்டுவது அவ்வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்குமளவுமே! நாட்டைத் தன்னழகாலேவெருட்டித் திரிகிற காமனுக்கும் உத்பாதகனாயிருக்கும். இருவரையும் கூடக்கண்டால் ''முறைகெடச்சொன்னார்களே'' என்றிருக்கும். ''ஃபஸவாஞ்ஜயளவநம்'' (ப்ரஸவாந்தஞ்சயேளவநம்) என்கிறதும், இவ்விஷயத்திலே மற்றைப்படியாயிருக்கிறது காணும். [இடவகைகொண்டதென்பர்] - இவ்விடத்தை வாஸஸ்த்தானமாகக்கொண்டதென்று, அறிவுடையாரடங்கச் சேவிசீப் பாய்ந்துகிடப்பார்கள்; ''வதூநாஹம்விஈ~வபு~யா:'' (பத்மநாபம்விதுர்ப்புதா:). [எழிலணியனந்தபுரம்] - பரமபதத்தில் ஒருபுதுமை செய்யவொண்ணாதிறே; அங்குத்தையிற் காட்டில் இங்குத்தைக்குத் தன்னேற்றமிருக்கிறபடி. [படமுடையரவில்] - ஸர்வேஶ்வரன் சாய்ந்தருளினால் அவனுக்குப்பிறக்கும் விகாஸம்சொல்லுகிறது - படமுடையரவென்று. [பள்ளிபயின்றவன்] - ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான வஸ்துவும் உணர்த்தியறும்படியாய்த்துப் படுக்கைவாய்ப்பு. [பாதம்இத்யாதி] - திருவடிகளைக்காணும்படியாக, ''வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற கரியான்கழல்காணக்கருதும்கருத்து'' என்றிருக்கும் என்னோடு ஒருகுடற்றுடக்குடையாரடங்கலும் போகப் பாருங்கோள். திருவத்யயநம பாடாந்றக, இத்தைக் கேட்டருளி, ஆளவந்தார் ''நமக்குஆழ்வாரோடே ஒருஸம்பந்யமுண்டாக வேணும்'' என்று, அப்போதே ஸ்ரீபாதத்தையுடையாரைக் கூட்டிக்கொண்டெழுந்தருளினார். [நாம்] - கண்வளர்ந்தருளுகிறவழகில் சுவடறிந்து, ''யவரேலுமவர் - எம்மையாளும் பரமர்'' என்னக்கடவ நாம். [உமக்குஅறியச்சொன்னோம்] - அவவடிவைக் காணவேணுமென்கிற அபேக்ஷையுடைய உங்களுக்கு அறியும்படிசொன்னோம். (அ)

---

*எட்டாம்பாட்டு.—கடுவினை இத்யாதி. '' பள்ளிபயின்றவன் '' என்று தொடங்கி, ''நமர்களுள்ளீர்'' என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - திருவனந்தபுரத்திலே இத்யாதி.*

*'' கடுவினை '' என்றதுக்கு ஃாவம் - நம்மால் இத்யாதி. இப்போது அவன் அழகைச் சொல்லுகிறதுக்கு ஃாவம் - உங்களுக்கு இத்யாதி. ஶப்தார்த்தம் - நாட்டை இத்யாதி. வெருட்டி - மருட்டி. '' காமனைப்பயந்த '' என்றவநந்தரம் ''காளை'' என்றதுக்கு ஃாவம் - இருவரையும் இத்யாதி. ''காளை'' என்றதுக்கு ஃாவம் - ப்ரஸவாந்தஞ்ச இத்யாதி. ''ரேணாஹாநிவெரணி ஃஸவாஞஜயளவநம் ஃவிதம்ஃணதாஞஜ யாவிதாஞஜமளரவம்''. காளை - யுவா. '' என்பர் '' என்றதுக்கு ஃாவம்-அறிவுடையார் இத்யாதி. சேவிசீப்பாய்ந்துகிடப்பர்கள் - வித்தராயிப்பார்கள். வித்தராயிருக்கிறதுக்கு ப்ரமாணம் - பத்மநாஃம் இத்யாதி. இது ப்ரமாணத்திரட்டில் காணவில்லை. ''எழில்'' என்று - உபவநாதிகாந்தியாய், அத்தாலே அலங்க்ருதமான அனந்தபுரமென்றபடி. இத்தால் வ்யாவ்ருத்தி - பரமபதத்தில் இத்யாதி. அவனுக்கு - திருவனந்தாழ்வானுக்கு. ''நமர்கள் - நடமின்'' என்றதுக்கு ஃாவம் - வரிவாள் இத்யாதி. போருங்கோள் - வாருங்கோள். ப்ராஸங்கிகம் - திருவத்யயநம் இத்யாதி. ''நாம்'' என்றதுக்கு ஃாவம்-கண்வளர்ந்து இத்யாதி. ''பாற்கடல்சேர்ந்த'' என்றத்தைப்பற்ற-கண்வளர்ந்தருளுகிற என்றது. 'காமனைப்பயந்த காளை - எழிலணியனந்தபுரம் - இடவகைகொண்டதென்பர்; கடுவினைகளையலாகும்; படமுடையரவில்பள்ளி' என்றுதொடங்கி, 'பாதம்காண - நமர்களுள்ளீர் - நடமினோ; நாம் உமக்கறியச்சொன்னோம்' இத்யந்வய:.* (அ)

# ஒன்பதாம் பாட்டு.

நாம்உமக்கறியச்சொன்னநாள்களும்நணியவான
சேமம்நன்குடைத்துக்கண்டீர் செறிபொழில்அனந்தபுரம்
தூமநல்விரைமலர்கள்துவளறவாய்ந்துகொண்டு
வாமனனடிக்கென்றேத்தமாய்ந்தறும்வினைகள்தாமே.

ஆ.—(நாம் உமக்கு.) - சேமம் நன்குடைத்தான திருவனந்தபுரத்திலே சென்று எம்பெருமானுக்கு அடிமைசெய்ய உங்களுடைய து:கங்களெல்லாம் தாமே போம்; ஆனபின்பு, அடிமைசெய்கைக்கு உபகரணமான இப்ப்ரக்ருதிமுடிவதற்கு முன்னே இப்போதேசென்று அடிமைசெய்யுங்கோள்; நாம் உமக்குஅறியச்சொன்னோம் என்கிறார்.

ஒ.--ஒன்பதாம்பாட்டில், "நாளேலறியேன்" என்றும், "மரணமானால்" என்றும் சொன்னகாலம் அணித்தாய்த்து; ஈண்டெனத் திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமைசெய்ய, அடிமைக்கு விரோதியான கர்மங்களெல்லாம் நசிக்குமென்கிறார்.

[நன்குடைத்து] - மிக உடைத்து. [தூமநல்விரைமலர் என்றுமேலுக்கு] - வாமநனுடைய திருவடிகளுக்கென்று நல்ல ஸமாராதநோபகரணங்களை ஸம்பாதித்து அவனை ஆஶ்ரயிக்க அடிமைக்கு ப்ரதிபந்தகங்களெல்லாம் தானே நசிக்கும்.

ப.—அநந்தரம், ப்ராப்தனானவன்திருவடிகளிலே கைங்கர்யத்தைப்பண்ண கைங்கர்யப்ரதிபந்தகங்கள் தானே போமென்கிறார்.

("வைத்தநாள்வரை"என்று), நாம்-நாம், (முன்பு),உமக்கு-உங்களுக்கு, அறியச்சொன்ன நாள்களும் - சொன்னஶரீராவஸாந திவஸங்களும், நணிய ஆன-நண்ணியவாய்த்தின, செறிபொழில் - செறிந்தபொழிலையுடைத்தான, அனந்தபுரம்-திருவனந்தபுரமானது, நன்கு - நன்றான, சேமம் - ரக்ஷையை, உடைத்துக்கண்டீர் - உடைத்துக்கிடிகோள்! (ஆனபின்பு அங்கே), தூமம் - ஆராதநோபகரணமான தூபத்தையும், நல் - நன்றான, விரை - பரிமளத்தையுடைத்தான, மலர்கள் - புஷ்பங்களையும், துவள் அற - குற்றமற, ஆய்ந்துகொண்டு-, வாமனன்அடிக்குஎன்று - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபாவனான ஸ்ரீவாமநன்திருவடிகளுக்கென்று ஸங்கல்பித்து, ஏத்த - (ததங்கீகாரார்த்தமாக) அவனுடைய ஶீலாதிகுணங்களை ஸ்துதிக்க, வினைகள் - கைங்கர்ய ப்ரதிபந்தி கர்மங்கள், தானே - ஸ்வயமேவ, மாய்ந்தறும் - நசித்துப்போம். தூபமென்றும் பாடஞ் சொல்லுவர்கள்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஶரீராவஸாநமணித்தாய்த்து; ஈண்டெனத் திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமைசெய்ய, ப்ராப்யவிரோதியான கர்மம் போமென்கிறார்.

[நாம் உமக்கு இத்யாதி] - "நாளேலறியேன்" என்றும், "மரணமானால்" என்றும் நாம் உங்களுக்குச்சொன்ன காலம்அணித்தாய்த்து. 'ததஸ்தம் ம்ரியமாணம்' என்று அவன்தான் சொன்ன வார்த்தையை இவர் சொல்லுகிறார். [சேமம் நன்குடைத்துக்கண்டீர் செறிபொழில் அனந்தபுரம்] - ஸம்ஸாரபயத்துக்கு மிகவும் ரக்ஷகமாய் போக்யமுமான தேஶம்; போக்யமான தேஶந்தானே பயஶாந்திக்கு ஹேதுவாகப்

பெற்றது. [நன்குடைத்து] - மிகவுமுடைத்து. [தூம நல்விரைமலர் இத்யாதி] - புஷ்பாதியுபகரணங்களை விலக்ஷணமாக்கிக்கொண்டு. [வாமனன் இத்யாதி] - தன்னுடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளனுமவனை, அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயிக்க, அடிமைக்கு ப்ரதிபந்தகங்கள் தானே நஶிக்கும்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஶரீராவஸாநம் அணித்தாய்த்து; ஈண்டெனத் திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமைசெய்ய,தாஸ்யவிரோதிகர்மங்கள் தானே நசிக்குமென்கிறார்.

[நாம்உமக்கு இத்யாதி] - "நாளேலறியேன்" என்றும் "மரணமானால்" என்றும் சொல்லிப்போந்த நாள்களும் கிட்டியவாய்த்தின. பிறர்க்குஅப்படித்தாம் சொன்னாரோ வென்னில்,—*மாலைநண்ணியிலே "மரணமானால்" என்று ஈஶ்வராபிப்ராயத்தைத் தாம் அறிந்து, அத்தைப்பிறர்க்கு உபதேஶித்தாரிறே. இதிலும் பரோபதேஶமிறே. "தஸ்மிந்ஸ்தமிதே" (தஸ்மிந்நஸ்தமிதே) இத்யாதி-ஶீஷ்மன் முடியாநின்றான், பின்னை இவ்வர்த்தம் †கேட்கலாவார் இல்லையென்று அவன் அருளிச்செய்தவார்த்தையை, இப்போது இவர்தாம் அருளிச்செய்கிறார். "அஸ்தமிதே" (அஸ்தமிதே)-கண்ணுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணுவாரும், நெஞ்சுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணுவாருமாக, ஆதித்யர்களிருவராய்த்து; "ஞானமாகி ஞாயிறாகி." "ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி" (ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி) ஸ்வரூபத்தோபாதி நித்யமாயிருக்குமிறே தர்மபூதஜ்ஞாநமும்; இனி இதுக்கு உதயாஸ்தமய வ்யவஹாரம் ஜ்ஞாநப்ரஸர த்வாரத்தை யபேக்ஷித்தாயிருக்குமிறே. அவன்போனால்

---

ஒன்பதாம்பாட்டு.— நாம் உமக்கு இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - ஶரீராவஸாநம் இத்யாதி. தமக்கு ஶரீராவஸாநமணித்தாய்த்தென்றபடி.

"நாளேலறியேன்" என்று ப்ரார்த்தித்த தமக்கு "மரணமானால்" என்று ஈஶ்வரன்அவதியாகச் சொல்லிப்போந்த நாள்களும் கிட்டினவாய்த்தின என்றபடி. ஆனால் அவன் தமக்கு அவதியாகவிட்டுக்கொடுத்த நாளன்றோ; அது பிறர்க்குத் தாம் சொல்லவில்லையே ; ஆனபின்பு, "உமக்கறியச்சொன்ன" என்னும்படி எங்ஙனே? என்கிற ஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் - பிறர்க்கப்படி இத்யாதி. பரோபதேசமிறே-பரோபதேசமாகையாலே பிறர்க்குஉபதேசித்தாரென்றபடி. "மரணமானால்" என்று முன்பு நாம்உங்களுக்குச் சொன்ன ஶரீராவஸாநதினங்களும் கிட்டின வாய்த்தினவென்று ஶப்தார்த்தம். "தமக்கு ஶரீராவஸாநமணித்தாய்த்து" என்கிற இத்தை இப்போதருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநத்தை ஸங்க்ரஹமாக அருளிச்செய்கிறார் - தஸ்மிந் இத்யாதி. "தஸ்மிந்நஸ்தமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே । ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி தஸ்மாத்த்வாம் சோதயாம்யஹம்॥" இதி மஹாபாரதே தர்மபுத்ரம் ப்ரதி க்ருஷ்ண:. இதுக்கர்த்தம்-ஶீஷ்மன் இத்யாதி. "அஸ்தமிதே" என்னாதே "அஸ்தமிதே" என்றதுக்கு பாவம்-கண்ணுக்கு இத்யாதி. ஜ்ஞாநியை ஆதித்யனுகச் சொல்லலாமோவென்ன - ஞானமாகி இத்யாதி. திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினாலாம்பாட்டு, "ஈனமாய" இத்யாதி. "ஞாயிறாகி" என்று - ஆதித்யஸஹபாடத்தாலே ஜ்ஞாநமுமாதித்யனென்றபடியாய், அதுதான் ஜ்ஞாதாவுக்கும் உபலக்ஷணம். "தமோ பாஹ்யாந்தரம் ஹந்தி ப்ரகாஶயதி யஸ்ஸதா। ஸபாஹ்யாப்யந்தரஜ்ஞாநவிஷயத்வாதுபாஸ்யதே" என்னக்கடவதிறே. நித்யமாய் விபுவான ஜ்ஞாநம்அல்பமாவானென்? என்ன - ஸ்வரூப இத்யாதி. 'தர்மபூத ஜ்ஞாநமும்' என்றவநந்தரம், "இப்படியிருக்க ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி என்பானென்னென்னில்" என்று கூட்டுவது. பரிஹார: - இனிஇதுக்கு இத்யாதி: அதாவது - கர்மஸம்ஸ்ருஷ்டசேதநனுடைய மநஸ்ஸை யபேக்ஷித்திருக்கையாலே அல்பமாயிருக்குமென்றபடி. இவனே வேணுமென்கிற நிர்ப்பந்தமேதென்ன - அவன்போனால் இத்யாதி. அதாவது -

---

† கேட்கலாவார் - தெரிந்துகொள்ளுமாறு வினவப்படுதற்கு உரியவர்.

பின்னைக் கொள்வாரும் கொடுப்பாருமின்றிக்கே பரிமாற்றமறும். இதுக்கு பட்டர் அருளிச்செய்ததாக, பரிஜையப்பர் - ‘‘ஒருமதிப்பன் தலையில் கிடவாதவன்று கொள்வார் கொடுப்பாரின்றியே எளிவிலையனாய்ப் போம்.’’ ‘‘தஸ்மாத்த்வாம் சோதயாம்யஹம்’’ (தஸ்மாத்த்வாம் சோதயாம்யஹம்) - ஆகையாலேகாண் உன்னை த்வரிப்பித்து ‘‘அவன்பக்கலிலேபோய்க் கேள்’’ என்று சொல்லுகிறது. [சேமம் நன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபுரம்] - நிரதிசயபோக்யமான தேசந்தானே மரணதசைக்கு ரக்ஷகமாம். [தூமநல்விரைமலர்கள்] - நன்றானதூபம், பரிமளத்தையுடைத்தான நல்லபுஷ்பங்கள் இவற்றை. [துவளற இத்யாதி] - தனக்கும் அவனுக்கும் ஸத்ருசமாம்படி விலக்ஷணமாக்கிக்கொண்டு. [வாமனன் இத்யாதி] - தன்னுடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளனாயிருக்குமவன் திருவடிகளுக்குஎன்றேத்த. [மாய்ந்தறும்வினைகள்தானே] - இவன் தன் ஸ்வரூபத்துக்கு அநுரூபமான பரிமாற்றத்திலே யத்நிக்க, விரோதிகளடைய நசித்துப்போம். (கூ)

———

## பத்தாம் பாட்டு.

———

மாய்ந்தறும்வினைகள்தாமேமாதவா! என்னநாளும்
எய்ந்தபொன்மதிள்அனந்தபுரநகர்எந்தைக்கென்று
சாந்தொடுவிளக்கந்தூபந் தாமரைமலர்கள்நல்ல
ஆய்ந்துகொண்டேத்தவல்லார்அந்தமில்புகழினாரே.

ஆ.—(மாய்ந்தறும்.) - அவன்திருநாமங்களிலே ஏதேனும் ஒருதிருநாமத்தைச்சொல்ல, அடிமைசெய்கைக்கு ப்ரதிபந்தகங்களெல்லாம் தானே போமென்று சொல்லிமுடித்து, திருவனந்தபுரத்திலேபோய் எம்பெருமானுக்கு அடிமைசெய்யும் மஹாத்மாக்கள் ஆரோதான்? என்றுகொண்டு, அவர்களைக் கொண்டாடுகிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், திருவனந்தபுரத்தில் எம்பெருமானுக்கு அடிமைசெய்யுமவர்களுடைய மாஹாத்ம்யம் பேசநிலமன்று என்கிறார்.

[எய்ந்தபொன் மதிள்] - சேர்ந்திருந்துள்ள பொன்மதிள்.

ப.—அநந்தரம், திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற ஸ்வாமிதிருவடிகளிலே ஆராதநரூப கைங்கர்யம்பண்ணுவர்கள், அநவதிகமாஹாத்ம்ய யுக்தராவாரென்கிறார்.

மாதவா! என்ன - ஸ்ரிய:பதியென்று சொன்னபோதே, வினைகள் - விரோதிகள், தானே - ஸ்வயமேவ, மாய்ந்தறும் - நசிக்கும்; நாளும் - நிரந்தரமாக, எய்ந்த - செறிந்த, பொன்மதிள் - பொன்மதிளையுடைத்தாயிருக்கிற, அனந்தபுரநகர் - திருவனந்தபுரமாகிற நகரத்தில், எந்தைக்கு - ஸ்வாமியானவனுக்கு, என்று - என்று ஸங்

மதிப்பன் தலையில்கிடவாமையாலே பரிமாற்றமறுமென்றபடி இதுக்குஆப்தஸம்வாதம் - இதுக்கு பட்டர் இத்யாதி. இதுக்கு - இஸ்ஸ்லோகத்துக்குத் தாத்பர்யமாகவென்றபடி. பரிஜை என்று ஊர். செறிந்தபொழிலையுடைய திருவனந்தபுரமானது நன்றான ரக்ஷையையுடைத்துக் கிடிகோளென்று ஸப்தார்த்தம். ‘நல்லதூமம், நல்லமலர்கள்’ என்று கூட்டுவது. துவளற - குற்றமற. ‘‘ஏத்த-மாய்ந்தறும்வினைகள்’’ என்று ஸாதநமாகவோ ஏத்துகிறதென்ன - இவன்தன் இத்யாதி. அடிக்கென்று - திருவடிகளுக்கென்று ஸங்கல்பித்து. ‘‘தூபநல்விரை’’ என்றும் ‘‘தூமநல்விரைமலர்’’ என்றும் பாடத்வயமுண்டு. (க)

கல்பித்து, நல்ல - நன்றான, சாந்தொடு - அங்கராகத்தோடே, விளக்கம் - தீபத்தையும், தூபம் - தூபத்தையும், தாமரைமலர்கள் — தாமரைப்பூக்களையும், ஆய்ந்துகொண்டு - (பலஸங்ககர்த்ருத்வங்களாகிற தூராலும் மயிரும் புழுவும்படாதபடி) ஆராய்ந்துகொண்டு, ஏத்தவல்லார் - அங்கீகாரஸந்துஷ்டராய் ஏத்தவல்லவர்கள், அந்தம்இல் - நிரவயிகமான, புகழினர் - ஶேஷத்வப்ரதையை யுடையராவர்.

இ—பத்தாம்பாட்டில், திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமைசெய்யுமவர்கள் பெருமை பேசநிலமன்று என்கிறார்.

[மாய்ந்தறும் இத்யாதி] - மாதாபிதாக்கள் சேர்த்தியைச்சொல்ல அநாதி காலார்ஜிதமான துக்கங்கள் தானே போம். [ஏய்ந்த இத்யாதி] - அங்குத்தைக்குத் தகுதியான மதிளையுடைய திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற என்ஸ்வாமிக்கென்று புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்கவல்லார். [அந்தமில் புகழினரே]-"அமரராவார்" என்கிறவளவன்றிக்கே, விண்ணுளாரிலும் சீரியராவர்.

ஈடு.—பத்தாம்பாட்டு. திருவனந்தபுரத்திலேபுக்கு அடிமை செய்கிறவர்கள் பெருமை பேச நிலமன் றென்கிறார்.

[மாய்ந்தறும்வினைகள்தானே மாதவாவென்ன] - மாதாபிதாக்கள் பேரைச் சொல்ல அநாதிகாலார்ஜிதமான துக்கங்கள் தானேபோம். (மாதவாவென்ன - மாய்ந் தறும்வினைகள்) - அப்பாவென்ன உச்சி குளிருங்காணும். [ஏய்ந்தஇத்யாதி] - அங்குத் தைக்கு ஈடான போன்மதிளையுடைய திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற என் ஸ்வாமிக் கென்று புஷ்பாத்யுபகரணங்களைக் கோண்டு ஆஶ்ரயிக்கவல்லார்.[அந்தமில்புகழினரே] - "அமரராவார்" என்கிறவளவன்றிக்கே * விண்ணுளாரிலும் சீரியராவர். (கo)

## பதினோராம் பாட்டு.

அந்தமில்புகழ்அனந்தபுரநகராதிதன்னை
கோந்தலர்போழிற்குருகூர்மாறன்சோல்லாயிரத்துள்
ஐந்தினோடைந்தும்வல்லார்அணைவர்போய்அமருலகில்
பைந்தோடிமடந்தையர்தம்வேய்மருதோளிணையே.

ஆ.—(அந்தமில்) - ப்ரியதமர்களுக்கு ப்ரியதமைகள் போக்யமாமாபோலே, திருநாட்டிலுள்ளார்க்கும் இத்திருவாய்மொழி வல்லார் போக்யமாவ ரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் திருநாட்டிலுள்ளார்க்கு போக்யராவரென்கிறார்.

---

பத்தாம்பாட்டு.—மாய்ந்தறும் இத்யாதி. "அனந்தபுரநகரெந்தைக்கென்று - ஏத்தவல்லார் அந்தமில்புகழினர்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - திருவனந்தபுரத்திலே இத்யாதி.

"மாதவாவென்ன நாளும் - வினைகள் மாய்ந்தறும்" என்றந்வயித்தர்த்தம்-மாதாபிதாக் கள் இத்யாதி. "மாதவாவென்ன - வினைகள் - மாய்ந்தறும்" என்றதிலே ரஸோக்தி - அப்பா இத்யாதி. அப்பாவென்ன உச்சிகுளிருமோ? என்ன, லோகத்தில் வ்யங்க்ய வ்யவஹாரம்இங்கே மெய்யாய்த்து என்றபடி. ஏய்ந்த - தகுதியான. ஆய்ந்துகோண்டு - ஆராய்ந்துகொண்டு. 'மாதவா வென்னநாளும் - வினைகள் மாய்ந்தறும்; ஏய்ந்த' என்றுதொடங்கி அந்வயம். (கo)

[அந்தமில் என்று தொடங்கி]-முடிவில்லாத புகழையுடையனாய்த் திருவனந்த புரத்திலே ஸந்நிஹிதனான ஜகத்காரணபூதனான புருஷனை, ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, பரமபதத்தில் * மதிமுகமடந்தையராலுண்டான ப்ரஹ்மாலங்கார ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

அந்தமில்புகழ் - நிரவதிக குணனாய்க்கொண்டு, அனந்தபுரநகர் - திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற, ஆதிதன்னை - ஸர்வகாரணபூதனை, கொந்து - பூங்கொத்துக்கள், அலர் - அலருகிற, பொழில் - பொழில்சூழ்ந்த, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, மாறன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும், ஐந்திநோடு - (கேவலம் பரோபதேசமான) ஐந்திநோடேகூட, ஐந்தும் - தம்மையும் கூட்டிக்கொண்டு உபதேசித்த ஐந்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், போய் - (அர்ச்சிராதிமார்க்கத்தாலே) போய், அமருலகில் - * அயர்வறும் அமரர்களினுடைய லோகமான பரமபதத்திலே, பைந்தொடி - அழகியஹஸ்தாபரணங்களையுடையரான, மடந்தையர்தம் - திவ்யாப்ஸரஸ்ஸுக்களினுடைய, வேய் மரு - வேய்போலே விலக்ஷணமான, தோளிணை - தோள்களாலே செய்யப்படுமதான ப்ரஹ்மாலங்காரத்தை, அணைவர் - அணையப்பெறுவர். தொடி - வளை. இது - கலிவிருத்தம்.

இ.— நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் திருநாட்டிலுள்ளார்க்கு போக்யராவர் என்கிறார்.

[அந்தமில்புகழ் அனந்தபுரநகராதி தன்னை]-திருவனந்தபுரத்திலே நிரவதிக குணனாய் ஜகத்காரணபூதனானவனை. பரமபதத்தில் குணம் ஸாவதிபோலேகாணும். நித்யவஸந்தமான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. [ஐந்திநோடைந்தும் வல்லார்] - ரத்நங்களை முகமறிந்து சேர்த்துச்சேர்த்திகளைக் கொண்டாடுமாபோலே, ஐயைந்தாகவாய்த்து அநுபவிக்கிறது. [அணைவர் இத்யாதி] - பரமபதத்திலே, "ஶதம் மாலாஹஸ்தா:" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே, அப்ஸரஸ்ஸுக்களுடைய கொண்டாட்டத்துக்கு விஷயபூதராவர். "முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள" என்றத்தோடு "வேய்மருதோளிணையை - அணைவர்" என்கிற இத்தோடு வாசியில்லை. "மதிமுகமடந்தைய ரேந்தினர்வந்தே" என்னக்கடவதிறே.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் திருநாட்டிலுள்ளார்க்குபோக்யராவ ரேன்கிறார்.

[அந்தமில்இத்யாதி] - திருவனந்தபுரத்திலே நிரவதிக குணனாய், ஜகத்காரணபூதனானவனை; ஆஶ்ரயிக்கிறவர்களும் அந்தமில்புகழினர்: ஆஶ்ரயணீயனும் அந்தமில்புகழினன்காணும். பரமபதத்தை விட்டுத் திருவனந்தபுரத்திலேவந்து ஆஶ்ரிதர்க்காகக் கண்வளர்ந்தருளுகையாலே புகழுக்குஒருமுடிவில்லையாய்த்து அவனுக்கு; ஸம்ஸாரத்தை விட்டு உகந்தருளினநிலத்திலே அடிமைசெய்கையாலே புகழுக்குஅந்தமில்லையாய்த்து இவர்களுக்கு. இவனை அடிமைகொள்ளுகையாலே புகழுக்கெல்லையில்லையாய்த்து அவனுக்கு;

நிகமம்.—அந்தமில் இத்யாதி. "ஐந்திநோடைந்தும்வல்லார்" என்றுதொடங்கி "தோளிணையே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

"அனந்தபுரநகர் - அந்தமில்புகழ் - ஆதிதன்னை" என்றந்வயித்தர்த்தம் - திருவனந்தபுரத்திலே இத்யாதி. கீழே ஆஶ்ரயிக்குமவர்களை "அந்தமில்புகழினர்" என்று, இங்கே ஆஶ்ரயணீயனை "அந்தமில்புகழாதி" என்றதுக்கு ஹாவம் - ஆஶ்ரயிக்கிறவர்களும் இத்யாதி. அதெப்படியென்ன - பரமபதத்தை இத்யாதி வாக்யத்வயம். கீழ்வாக்யத்வயவிவரணம் - இவனையடிமை

அவனுக்குஅடிமைசெய்கையாலே புகழுக்கு அந்தமில்லையாய்த்து இவர்களுக்கு. இஸ்ஸம்ஸாரத்திலேயிருந்தால் இவனுக்குப் புகழுண்டாகிலாய்த்துப் பரமபதத்திலிருந்தால் அவனுக்குப் புகழுண்டாவது. இந்நிலத்தை விடவிட இவனுக்குப் புகழுண்டாமாபோலே, அந்நிலத்தைவிட விட அவனுக்குப்புகழுண்டாம். இருவர்க்கும் இரண்டும் அலப்யலாபமிறே. [கொந்தலர்பொழில்குருகூர்இத்யாதி] - நித்யவஸந்தமான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. [ஐந்திலொடைந்தும்வல்லார்] - ரத்நங்களை முகமறிந்துகோத்துச் சேர்த்திகளைக் கொண்டாடுமாபோலே, ஐயைந்தாகவாய்த்து அநுபவிக்கிறது. [அணைவர்இத்யாதி] - ஸ்ரீவைகுண்டத்தேறப்போய், "[illegible]" (ஸதம்மாலாஹஸ்தா:) இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே, அங்குத்தை யப்ஸரஸ்ஸுக்களுடைய ஆதரத்துக்கு விஷயபூதராவரென்றபடி. "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்றத்தோடு "வேய்மருதோளிணை - அணைவர்" என்கிற இத்தோடு வாசியில்லை "மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே" என்னக்கடவதிறே. (கக)

இத்யாதி. அனந்தபுரநகரிலே வந்தபின்பு "அந்தமில்புகழ்" என்கிறதென்? பரமபதத்திலேயிருந்தால் புகழில்லையோவென்ன - இஸ்ஸம்ஸாரத்திலே இத்யாதி. விவரணம்-இந்நிலத்தை இத்யாதி. இத்தால் ஃபலிதம் - இருவர்க்கும் இத்யாதி. கொந்தலர் - கொத்துக்கொத்தாக அலருகிற. பத்தென்றதே, "ஐந்திலொடைந்தும்" என்றதுக்கு பாவம் - ரத்நங்களை இத்யாதி. "அவர்கள்தோளோடேயணைவர்" என்கிறதுக்கு பாவமேதென்ன - "[illegible]" இத்யாதி. "[illegible]" இத்யாதி; கௌஷீதக்யுபநிஷதி. என்றபடி என்கையாலே - இதுவே தாத்பர்யமென்று கருத்து. பைந்தொடி - அழகிய ஹஸ்தாபரணங்களையுடைய. தொடி - முன்கைவளை. வேய்மருதோளிணை - மூங்கிலோடொத்த தோளிணையோடே, அணைவர் - ஸம்ஶ்லேஷிக்கப் பெறுவரென்று ஸப்தார்த்தம். 'அந்தமில்புகழ்' என்று தொடங்கி, 'ஐந்திலொடைந்தும்வல்லார் - அமருலகில் - போய் - பைந்தொடிமடந்தையர்தம் வேய்மருதோளிணை - அணைவர்' இத்யந்வய:. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

கெடுமிடர்வைகுந்தத்தைக்கிட்டினுற்போல்
தடமுடையனந்தபுரந்தன்னில் - படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக்காதலித்தான்மாறனுயர்
விண்டனிலுள்ளோர்வியப்பவே.

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

# மூன்றாந் திருவாய்மொழி—வேய்மருதோள் - ப்ரவேசங்கள்.

**ஆ.**—(வேய்மருதோள்.) - இப்படி எம்பெருமானோடேகலந்து பரிமாறிச் செல்லாநிற்கச்செய்தே, இப்ப்ரக்ருதியிலே தாமிருந்த இருப்பைக்கண்டு, "இப்ப்ரக்ருதி ஸம்பந்தம் காரணமாக எம்பெருமான் விடிலோ?" என்றுள்ள அதிசங்கையாலே அவஸந்நராகிறார். வண்துவரைப்பெருமாளோடே கலந்து பரிமாறச்செய்தே பசுமேய்க்கப்போங்காலம் ப்ராப்தமானவாறே "இவன் இனிப்பசுமேய்க்கப்போகிலோ?" என்றுள்ள அதிசங்கையினாலே அக்கோபிமார் அவஸந்நைகளானாற்போலே அவஸந்நராய், அவர்களுடைய பாசுரத்தாலே அலற்றுகிறார். திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகள், வண்துவரைப்பெருமாளோடேகூட எழுந்தருளியிருக்கச்செய்தே, அவன்பசுமேய்க்கப் போங்காலம் வருமளவில் அவன்போனானாகக்கொண்டு, பிரிந்தார்படும் வ்யஸநமெல்லாம் பட்டு, வ்யஸநத்தையும் பிரிந்தஅவன்கொடுமையையும் தோழிமாருக்குச் சொல்லுமா போலே அவன்தன்னைக்குறித்துச் சொல்லுகிறார்கள்.

ஒ.—மூன்றாந்திருவாய்மொழியில், ப்ராப்யபூமியில் போக்யதையையும், அங்குப்போனால் அடிமைசெய்யும்படியையும் அநுஸந்தித்து ப்ரீதராய், அப்போதே ப்ராப்யபூமியில் செல்லப்பெறாமையாலும் பண்டு பலகால்பிரிந்த வாஸநையாலும் ப்ரக்ருதியிலே யிருக்கிறமையை அநுஸந்தித்தும், தான் நினைத்ததே செய்யக்கடவதான ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை யநுஸந்தித்தும், அவனுக்குத் தம்மை விஷயீகரித்தல்லது நிற்கவொண்ணாத பரமபக்தி தமக்கில்லையாகவும் பார்த்தும், "இப்ப்ரக்ருதியிலே இன்னமும் தம்மை வைத்தருளில் செய்வதென்?" என்னும் பயத்தாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார், தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். இரவெல்லாம் எம்பெருமானோடே ஸம்ச்லேஷித்து விடிந்தாலும் பிரியக்கடவதாக அவனுக்கு நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே, ஸகலஸத்த்வங்களும் உணர்ந்து கிளம்புவதுஞ் செய்து, குயில்கள் கூவுவது, மயில்களாலிப்பது, இளங்காற்று வந்துநடையாடாநிற்பது, கன்றுகளும் பசுக்களும் காடெல்லாம் பரவாநிற்பதுமாய்க்கொண்டு போதுவிடிந்தவாறே பண்டென்றும் இக்காலத்திலே பிரியக்கண்ட பழக்கத்தாலே வெருவி, அவன் பசுமேய்க்கப்போகிறானாக அதிசங்கைபண்ணி, அவன்எதிரே அவனைப்பிரிந்தால் படும் வ்யஸநத்தைப் படுகிறாளொரு பிராட்டி, அவனைப்பிரிந்து இன்னுயிர்ச்சேவலினும் மல்லிகை கமழ்தென்றலினும் படும் வ்யஸநத்தை அவன்முன்பே படாநின்றுகொண்டு தாம் தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்று நோவுபடும் ப்ரக்ருதியுமாய், அவன்பக்கல் பரிவுடையாரெல்லாருடைய பரிவையுடையாளான இவள், வ்யஸநத்தின் மிகுதியாலே, "பசுநிரைமேய்க்கப் போகவேண்டா என்று வாயாற்சொல்லவும் க்ஷமையாகிறிலேன்; நான் நினைத்தன சொல்லவல்லேனும்படி உன்னுடைய அணிமிகு தாமரைக்கையை என் தலைமேலே வைத்தருளி உன்னுடைய திருக்கண்களாலே நோக்கியருளி என்னைத் தரிப்பித்தருளவேணும்" என்றும், "ஸப்ரமாதமான காட்டில் பசுமேய்க்கப்போகாதொழியவேணும்" என்றும் சொல்லி மிகவும்ஆர்த்தையாய்க் கூப்பிடுகிறாள். எம்மாவீட்டில், தம்முடைய தாதர்த்த்யத்தை ஆசைப்பட்டார்; இத்திருவாய்மொழியில் நான்

ததர்த்தமாகவுமாம், தவிரவுமாம்: எம்பெருமானுக்கு ஸஹ்ருத்திகளுண்டாம் இத்தனை வேண்டுவதென்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், கீழே திருவனந்தபுரத்திலே அடிமை செய்யப் பாரித்தவர், அவிலம்பேந கிட்டப்பெறாமையாலே, அவனுடைய போக்யதையும் ப்ராப்யஸாவமும் அடிமைகொள்ளப்பாரித்திருக்கிறபடியும் புத்திஸ்த்தமாம்படி ஹ்ருதயஸந்நிஹிதனாயிருக்கச்செய்தேயும், சீக்ரப்ராப்தியில் இச்சையாலே த்வரிக்கும்படியான ஸௌஹார்த்யாதிஶயத்தையுடையராகையாலே, அவனுடைய புண்டரீகாக்ஷத்வத்தையும், ஆஶ்ரிதஸுலப்யத்வத்தையும், அபிரூபத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும், அர்த்தநீய ஸம்ஶ்லேஷத்வத்தையும், அமாயஸ்வபாவத்தையும், ரமணீய ஸௌலப்யத்வத்தையும், ஆகர்ஷகாவயவத்வத்தையும், அஸாதாரணநாயகத்வத்தையும், ஆஶ்ரிதஜநபோக்யத்வத்தையும் அநுபவித்து, விலம்பம் பொறாமையாலே விஶ்லேஷத்தை அதிஶங்கித்து, ஏவம்பூதனான நீ என்னை அகலாதொழியவேணுமென்று அபேக்ஷித்து, தமக்குடபிறந்த ஆர்த்தியை அவன் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்த ப்ரகாரத்தை; க்ருஷ்ணனோடே ஸம்ஶ்லேஷித்து ப்ராதஸ்ஸமயத்திலே அவனுடைய பிரிவை ஶங்கித்து அஞ்சினளொருகோபிகை, "ஸந்த்யையில் பாதகங்கள் நலிவுசெய்யாநிற்கும்: என்னை நீ ஆஶ்வஸிப்பித்துக்கொண்டிருக்கவும்வேணும்; போனவிடத்திலே ஆஸுரப்ரக்ருதிகள்வர்த்தல் என்னும்மா என்றஞ்சாநின்றேன்" என்று, திருவாய்ப்பாடியில் பெண்களெல்லார்க்குமாகச் சமைந்தவனுடைய போக்கை விலக்கின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—மூன்றாந்திருவாய்மொழியில், திருவநந்தபுரத்தில் போக்யதையையும் அங்குப்போனால் அடிமைசெய்யும்படியையும் அநுஸந்தித்து, அந்த ப்ராப்யபூமியிலே புகவேணுமென்று பாரித்தார்; அப்போதே செல்லப்பெறாமையாலே அஸ்தாநே பயஶங்கையாய் விழுந்தது. ப்ராப்யபூமியில் அப்போதே செல்லப்பெறாமையாலும், பார்த்தபடியே அடிமைசெய்யப் பெறாமையாலும், முன்பு பலகாலும் பிரிந்தவாஸனையாலும், அநாதிகாலம் வாஸிதமான அசித்ஸம்ஸர்க்கத்தாலும், ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தாலும், - அதாகிறது - ஶிஶுபாலனுக்குத் தன்னைக்கொடுத்தும் ஸ்ரீபரதாழ்வானை வளைப்புக்கிடக்க மறுத்து மீண்டுபோரும்படியுமிறே ஸ்வாதந்த்ரியமிருப்பது; அத்தாலும், - அவன்தானே வந்து மேல்விழும்படியான பரமபக்தி நமக்கில்லையென்றிருக்கையாலும், "இன்னம் ப்ரக்ருதியிலே தம்மைவைக்கில் செய்வதென்?" என்னும் பயத்தாலே அவஸந்நரானவர், தமதுதஶையை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். இவைதான் பயநிவ்ருத்திக்கு உடலாயிருக்க, கலக்கத்தாலே பயப்படுகிறார். அத்தேஶத்தில் புகப்பெற்றிலோமென்னவேண்டா: "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்று உபக்ரமத்திலே ஶிதிலராம்படியான ப்ரேமபாரவஶ்யத்தாலே இப்போது போகமாட்டாதொழிகிறாராகையாலே. அங்கேசென்று அடிமைசெய்யப் பெற்றிலோமென்னவேண்டா; புகழும நல்லொருவனிற்படியே இவர்சொல்முதலாக த்ரிவிதகரணவ்யாபாரங்களையும் அவன் தனக்கெல்லாவடிமையுமாக நினைத்திருக்கையாலே. அசித்வாஸனைக்கு அஞ்சவேண்டா; விலக்ஷணவாஸனையாலே துர்வாஸனையைப் பரிஹரிக்க இருக்கிறவரல்லாமையாலே, ஸர்வஶக்தியைக்கொண்டு பரிஹரிக்குமவரிறே; இன்னம் முடியானேயிற்காரணங்களையுடையவர்க்கு பயமில்லையிறே. அவன் ஸ்வாதந்த்ர்யத்துக்கு அஞ்ச

வேண்டா; விரோதியை இடையிலே துணித்துக்கொண்டு போகைக்கு உடலாகையாலே; "ஸுகம்த்வா ஸஹ வாஸேஹ்யா ஶோக்ஷயிஷ்யாமி" என்றானிறே. ஶக்தியில்லையென்று அஞ்சவேண்டா; அது உபாயமல்ல. இங்ஙனேயிருக்க, ப்ரேமத்தாலேவந்த இருட்சியாலே அஸ்தாநேபீதராய் தம்தஶையை அந்யாபதேஶத்தாலே சொல்லுகிறார். ராத்ரியெல்லாம் க்ருஷ்ணனோடே ஸம்ஶ்லேஷித்து, ப்ரபாதஸமயத்திலே ஸகல ஸத்த்வங்களும் உணர்ந்து, குயில்கூவுவது, மயில்களாலிப்பது, இளங்காற்று ஸஞ்சரிப்பது, கன்றுகள் பசுக்கள் காடெங்கும் பரம்புவதாகிறவற்றைக்கண்டு, அவனுக்குப் பிரியக்கடவதாக நினைவின்றிக்கேயிருக்கப் பண்டென்றும் இக்காலந்தன்னிலே பிரிந்துபோந்த வாஸனையாலே அவன் பசுமேய்க்கப் போகிறானாக அதிஶங்கைபண்ணி, போனானாக அத்யவஸித்து, "நீயும்பிரிந்தாய்; நீ பிரிந்தால் நலியக்கடவ பதார்த்தங்களும் நலியாநின்றன; பசுமேய்க்கப்போமது எனக்கு அநபிமதம். நீ போகவேண்டா என்றுசொல்லவொண்ணாதபடி என்னுடையநாக்கு நீரற்றுவாராநின்றது. நான் நினைத்தது சொல்லவல்லேனாம்படி உன்னுடைய அணிமிகு தாமரைக்கையை என்தலையிலே வைத்தருளி உன்திருக்கண்களாலே நோக்கியருளவேணும்; அஸுரராக்ஷஸ ஸஞ்சாரத்தாலே ஸப்ரமாதமானகாட்டில் பசுமேய்க்கப் போகாதொழியவேணும்."—"நாதாவிதாஹ்ருதா", என்று இவ்வாத்மாவுக்கு ஸர்வவிஷயவைந்யமுமென்று உணர்ந்தால் தன்னிழவிற்காட்டில் இவனுக்குப் பரியவேண்டும்படியாயிறே யிருப்பது; ஆனபின்பு, - "நீ போகில் நானுளளாகமாட்டேன்" என்று இன்னுயிர்ச்சேவலிலும் மல்லிகைகமழ்தென்றலிலும் அவனைப் பிரிந்துபட்ட வ்யஸநத்தை அவன்ஸந்நிதியிலேபட, அத்தைப்பார்த்து, "நாம் போகக்கடவோமல்லோம்; நாம்போக நினைப்பதும் செய்திலோம்" என்று தான் போகாமையை இவள்நெஞ்சிலே படுத்த, அத்தாலே தரித்தாளொரு பிராட்டி பேச்சாலே தம் தஶையை யருளிச்செய்கிறார். எம்மாவீட்டில், தம்முடைய தாடர்த்த்யத்தை ஆசைப்பட்டார்; இதில் அவன்ஸம்ருத்தியை ஆஶாஸிக்கும்இதுவே புருஷார்த்தமென்கிறார்.

ஈடு.—திருவனந்தபுரத்திலேபுக்குப் பாரித்தபடியே அடிமைசெய்யப் பெறாமையாலே, அதிஶங்கைபண்ணவேண்டும்படியாய் வந்து விழுந்தது.

ஶ்ரீவைஷ்ணவர்களும் தாமுமாய் அடிமைசெய்யவேணுமென்று பாரித்தார்; பாரித்தபடியே அத்தேசத்திலேபோய்ப் புக்கு அடிமைசெய்யப் பெற்றிலர். அத்தேசத்திலே அப்போதேபோய்ப் புகப்பெறாமையாலும், பாரித்தபடி அடிமைசெய்யப்பெறாமையாலும், நெடுநாள் பிரிந்துபோந்த வாஸனையாலும் - அநாதியாய்வருகிற அசித்ஸம்ஸர்க்கத்தை அநுஸந்தித்து அஞ்சினவச்சத்தாலும், ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தை அநுஸந்தித்து அஞ்சினபடியாலும், - அதாவது - ஶிஶுபாலனுக்குத் தன்னைக்கொடுத்து ஶ்ரீபரதாழ்வானுக்கு

---

வேய்மருதோளிணை ப்ரவேஶம்; கீழே திருவனந்தபுரத்தை ப்ராப்யமாகவத்யவஸித்து ஶ்ரீவைஷ்ணவர்களும் தாமுமாய் அடிமைசெய்யப்பாரித்தவர், இதிலே உபேக்ஷைப்படுவானென்? என்கிற ஶங்கையிலே ஸங்க்ரஹஸங்கதி - திருவனந்தபுரத்திலே இத்யாதி.

விஸ்தரஸங்கதி - ஶ்ரீவைஷ்ணவர்களும் இத்யாதி. "காலாழும்நெஞ்சழியும்" என்னுமவராகையாலே - அடிமைசெய்யப்பெற்றிலர் என்றபடி. நெடுநாள் பிரிந்துபோந்த வாஸனையாவது - * யாதானும்பற்றி நீங்கித் திரிந்த வாஸனை. ஏதத்விவரணம் - அநாதியாய் இத்யாதி. "ஸ்வாதந்த்ர்யத்தை யநுஸந்தித்தஞ்சினபடியாலும்" என்று ஸ்வாதந்த்ர்யத்துக்கு அஞ்ச ப்ரஸக்தியேதென்ன - அதாவது இத்யாதி. கீழ்ச்சொன்னவையெல்லாம் பயநிவ்ருத்திக்கு ஹேதுவன்றோ?

மறுத்துப்போன ஸ்வாதந்த்ர்யமிறே.—இனி ஸர்வேஶ்வரன் தானேவந்து விஷயீகரிக்கைக் கீடான ஶக்தி தமக்கு இல்லையென்றிருக்கையாலும், † (''இன்னமும் ப்ரக்ருதியிலே வைக்கில் செய்வதென்? என்னும் பயத்தாலே அவஸந்நராய்) தமக்குப்பிறந்த தஶா விஶேஷத்தை ஒருபிராட்டி பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். பயநிவ்ருத்திக்கு உடலான இதுதானேயிறே இப்போது இவர்க்கு பயஹேதுவாகிறது. இப்போதே அத்தேசத்திலே போய்ப் புகப்பெற்றிலோம் என்றிருக்கவேண்டா: அவனை அநுஸந்திபித்தால் ''காலாழும் நெஞ்சழியும்'' என்று ஶக்திபாரவஶ்யத்தாலே இப்போது அடியிடமாட்டாது ஒழிகிறு ராகையாலே. அடிமைசெய்யப்பெற்றிலோ மென்று அஞ்சவேண்டா; * புகழுநல்லொருவ னிற்படியே இருந்தவிடத்தேயிருந்து ஏதேனுமாகச்சொன்னவற்றையே தனக்கு அடிமை யாகக்கொள்ளும் ஸ்வபாவத்தாலே. இன்று நினைத்தவற்றையும் செய்தவற்றையுமெல் லாம் தனக்கு அடிமையாக நினைத்திருக்குமவனிறேயவன். இனித் தமப்பன்பகை யாக அவனிலும் இவன் அண்ணியனென்று வரநின்ற ப்ரஹ்லாதனிறே முடிவிலேவந்து எதிரிட்டான். ஆக, ப்ராந்தனுக்குப்பிறந்த தெளிவுபோலே அசித்ஸம்ஸ்ருஷ்டனுக்குப் பிறக்கும் ஜ்ஞாநத்தை விஶ்வஸிக்கவொண்ணாது என்றிறே இவர்தாம் ப்ரக்ருதி ஸம்பந் தத்தைநினைத்து ''தேறேல்என்னை'' என்று அஞ்சிற்றும்; 'அங்ஙனஞ்சவேண்டா, * முடி யானேயிற் கரணங்களையுடையவராகையாலே.; அவன் ஸ்வாதந்த்ர்யத்தை நினைத்தஞ்ச வேண்டா ; ''ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி'' (ஸர்வபாபேப்யோமோக்ஷ யிஷ்யாமி) என்று விரோதியைத் துண்டித்துக்கொண்டு போகைக்கும் உடலாயிருக்கை யாலே. ஶக்தி தமக்கு இல்லையென்றிருக்கவேண்டா; ப்ரபத்தியை யுபாயமாகப்பற்றின வராகையாலே. இனி, ''நோபஜநம்ஸ்மரந்'' (நோபஜநம்ஸ்மரந்) என்கிறபடியே இத்தை ஸ்மரியாதபடியான ஸாக்ஷாத்காரமில்லாமல் † படுத்துகிறபாடிறே இது. ப்ரத்

என்ன - பயநிவ்ருத்திக்கு இத்யாதி. கீழ்ச்சொன்ன அஞ்சும் பயநிவ்ருத்தி ஹேதுவானமையைக் காட்டுகிறார்-இப்போதே இத்யாதி. அவன் அப்படிகொள்ளும் ஸ்வபாவனோவென்ன-இன்று நினைத் தவற்றையும் இத்யாதி. இவ்விடத்திலே, ''நாராயணேக்ஷிஷு ஸூர்யாயமாணே தத்வ நயோ ஜபபோஜந ஸ்நாந பரிசர்யாதி...'' என்றது அநுஸந்தேயம். அசித்ஸம் ஸர்க்கத்தை நினைத்தால் பயப்ரஸக்தி யேதென்ன - இனித்தமப்பன் இத்யாதி. ஆனால் ஜ்ஞாநம் பிறந்ததுவேதாய்த்தென்ன - ஆக ப்ராந்தனுக்கு இத்யாதி. இந்த அசித்ஸம்ஸர்க்கம் பயநிவ்ருத்திக்கு உடலானபடியென் ? என்ன - அங்ஙனஞ்சவேண்டா இத்யாதி. இத்தால் - ப்ரஹ்லாதாழ்வானைப் போலே கரணங்கள் ப்ராக்ருதஹோமங்களிலே மண்டியிருக்கையன்றிக்கே,தமக்கு பகவத்விஷயத் தில் மண்டினகரணங்களாகையாலே அஞ்சவேண்டாவென்றபடி. ''நெடுநாள்பிரிந்துபோந்த வாஸ னையாலும்'' என்றது - ப்ரத்யேகஹேதுவாய், பயஹேதுவாகிறதென்னவுமாம் ; அப்போது இந்த ப்ருதியஹேதுவுக்கு பயநிவ்ருத்தி ஹேதுத்வம் சொல்லாவிட்டாலும், *முடியானேயிற்கரணங்களை யுடையவராகையாலே ப்ரக்ருதிஸம்பந்தத்தை நினைத்து அஞ்சவேண்டாவென்று சொன்னது, ப்ரக்ருதிஸம்பந்தத்தால்வந்த பிரிவையும் நினைத்தஞ்சவேண்டா வென்னுமதுக்கும் உபலக்ஷண மென்றுகண்டுகொள்வது. ஸ்வாதந்த்ர்யம் பயநிவருத்திஹேதுவாம்படியை யருளிச்செய்கிறார் - அவன் ஸ்வாதந்த்ர்யத்தை இத்யாதி. ஶக்தியில்லையென்னுமது பயஹேதுவன்றோ ? என்ன - ஶக்தி தமக்கு இத்யாதி. ஆனால் எத்தாலே அதிஶங்கைபண்ணுகிறாரென்ன - இனி நோபஜநம் இத் யாதி. பயஹேதுக்களானபக்ஷத்திலே பரிஹாரம் அஞ்சுக்குச்சொல்லி, ''நெடுநாள் பிரிந்து போந்த வாஸனையாலும்'' என்றதுக்கு பரிஹாரம் சொல்லாமையாலே, ஸாக்ஷாத்காரமில்லாமல் படுத்துகிறபாடிறேயிது என்றது - 'ஸாக்ஷாத்காரமில்லாமல் நெடுநாள் பிரிந்துபோந்தவாஸனை

† படுத்துகிறபடியிறே என்றும் பாடமுண்டு.

யக்ஷுமும் அகிஞ்சித்கரமாய், கூடவிருக்கச்செய்தே "பிரிந்தான்" என்று ப்ரமிக்கும்படி பிரிவால்வந்த வாஸநை மேற்கோள்ளுகிறதிறே. யோக்யதைகிடந்து, படுத்துகிறபாடிறே. "மயர்வறமதிநலமருளினன்" என்று - ஸஹவத்ப்ரஸாதலப்தமாய், பரஹக்திரூபமாய், ருசிகார்யமாயிருக்கிற இருட்சியிருக்கிறபடியிறே இது. இனி, ஈஶ்வரனுக்குக் கால்நடையாடாததோரு தேசத்திலே இவரைவைத்துப்பரிஹரிக்கலாமத்தனை. கலந்து நெடுநாள்பிரிந்து போந்தாள் ஒருபிராட்டியாய், அவ்வாஸநையாலே, க்ருஷ்ணன்கூடவிருக்கச்செய்தேயும், இவன்பண்டுபிரிந்துபோந்த ப்ரஹாதகாலமும்வந்து அக்காலத்துக்கு அடைத்தகாற்றுக்கள் அடிக்கையாலும், குயில்கள்கூவுகையாலும், மயில்கள் ஆலிக்கையாலும், காடெங்கும் ஒக்கக் கன்றுகளும் பசுக்களும் பரக்கையாலும், "இக்காலத்தில் அவன்போகை தவிரான்; பசுக்களினுடைய ரக்ஷணம் ஒருதலையானால் அவற்றைவிட்டு நம்மோடிருப்பான் ஒருவனல்லன்; ஆனபின்பு அவன்போனான்" என்று கூடவிருக்கச்செய்தேயும் அவன்பிரிவை நிஶ்சயித்து, ஒரு * இன்னுயிர்ச்சேவல் * மல்லிகைகமழ்தென்றல் தொடக்கமானவற்றில் அவன் அஸந்நிதியிற் பட்ட க்லேஶத்தையுடைய அவன்கண்முகப்பேபட்டு. ஸர்வஶக்தியான அவன்தனக்கும் பரிஹரிக்கவோண்ணாதபடியாய்த்து இவ்வாபத்து. அதாவது-போனாய் வருகிறானல்லன், போகநினைத்தானைத் தவிருகிறானல்லனே. இப்படிநோவுபட்டு; "நீ ஸர்வதா பசுமேய்க்கப்போகை தவிராய்: உன்போக்கு எனக்கு அநபிமதம்; ஆகையாலே உன்னுடையபோக்கை விலக்கவேணுமென்று நினையாநின்றேன்; இதுக்கு நாநீர் வருகிறதில்லை; அதுக்குப் பரிஹாரமாக உன்கையை என்தலையிலேவைக்கவேணும்; நீ பசுமேய்க்கப்போகாதோழியவேணும்; 'ஸப்ரமாதமானகாட்டில் நீ பசுமேய்க்கப்போனால்

---

*படுத்துகிறபாடிறேயிது' என்று கூட்டிக்கொள்வது என்றும் சொல்லுவர்கள். அதாவது, இப்போது * முடியானேயிற் கரணங்களையுடையாராய் ஸாக்ஷாத்காரமுண்டாயிருக்கையாலே அஞ்ச வேண்டாவென்று கருத்து. ஸாக்ஷாத்காரமில்லையென்கிறதென்? * கெடுமிடரிலே ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான மாநஸாநுஸந்தாநத்தைப் பண்ணிக்கொடுக்கவில்லையோ? என்ன -* **ப்ரத்யக்ஷமும்** *இத்யாதி என்னுதல்; அன்றிக்கே, இவ்வாக்யம் அந்யாபதேஶத்திலேயாய், ஒருகோபிகை, க்ருஷ்ணன் ப்ராதஃகாலத்திலே கூடவிருக்கச்செய்தே பசுமேய்க்கப்போனதை அதிஶங்கைபண்ணுகிறாளென்று விவக்ஷித்து, கூடவிருக்கச்செய்தே போனதை அதிஶங்கைபண்ணக்கூடுமோ? என்ன -* **ப்ரத்யக்ஷமும்** *இத்யாதி என்னவுமாம். "மேற்கொள்ளுகிறதிறே" என்றத்தை விவரிக்கிறார் -* **யோக்யதை** *இத்யாதி.* **யோக்யதை***யாவது - விஶ்லேஷஹேதுவான ஶரீரபரிக்ரஹம். அதிஶங்கை பண்ணுகிறது ப்ராந்திகார்யமன்றோ? அது த்யாஜ்யமன்றோ? என்ன -* **மயர்வற** *இத்யாதி. இவ்வதிஶங்கை இவர்க்கு நிவ்ருத்தமாவதெப்போது? என்ன-* **இனிஈஶ்வரன்** *இத்யாதி. "ஒருபிராட்டி பாசுரத்தாலே பேசுகிறார்" என்றத்தை விஸ்தரேண அருளிச்செய்கிறார் -* **கலந்து** *இத்யாதி. "நீகண்ணா" என்றத்தைப்பற்ற -* **கூடவிருக்கச்செய்தேயும்** *என்றது. "அவைமேய்க்கப்போதி" "பசுநிரைமேய்ப்பொழிப்பான்" இத்யாதியாலே 'ப்ரஹாதகாலம்' என்றது ஸ்புடம் "வாடைதூவ" என்றத்தைப்பற்ற-* **அக்காலத்துக்கு** *இத்யாதி. "இனநிரைமேய்க்க" என்றத்தைப்பற்ற-* **காடெங்கும்** *இத்யாதி. "அவைமேய்க்கப்போதி" என்றத்தைப்பற்ற -* **அவன்போகைதவிரான்** *என்றது. தவிரானென்று நிஶ்சயிக்கைக்கு நியாமகமேதென்ன -* **பசுக்களினுடைய** *இத்யாதி.* **ஒருதலையானால்** *- தனக்கே பாரமானாலென்றபடி. அதெப்படியென்ன-* **அதாவது போனாய்** *இத்யாதி. "வெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேம்" என்றத்தைப்பற்ற -* **எனக்குஅநபிமதம்** *என்றது. "அணிமிகுதாமரைக்கையை" இத்யாதியையும், "வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கு" என்றத்தையும், "அசுரர்கள் தலைப்பெய்யில்யவங்கொல்" என்றத்தையும்பற்ற -* **உன்கையையென்று தொடங்கி, அஞ்சாநின்றேன்** *என்னுமளவும். "அஞ்சனவண்ணனை" என்கிற* **திருமொழிப்படியே "என்**

அங்குள்ள அஸுரராக்ஷஸாதிகளாலே என்புகுருகிறதோ?' என்றுஅஞ்சாநின்றேன்'' இனி, ''மாதாபிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:'' (மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:)என்றுஅவன் ஸர்வவித⁴பந்து⁴வுமாயிருக்குமாபோலே; இத்தலைக்கும் ஸம்பந்த⁴ஜ்ஞாநம்பிறந்தால் எல்லாப்பரிவுகளும் உண்டாயிருக்குமிறே; ''யதா²யதா²ஹி'' (யதாயதாஹி) என்கிறபடியே. ஆனபின்பு, நீ போகில் நான் உள்ளாகமாட்டேனென்று இப்படி நோவுபட, அவனும் இத்தையடைய அநுஸந்தி⁴த்து, ''நான் போகிறேனல்லேன்'' என்று, தன்போகாமையை இவள்நெஞ்சிலே படுத்தித்தரிப்பிக்கத்தரித்ததாய்த்தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழியில். இத்தால்- தாத³ர்த்²யத்தினுடைய எல்லையிருக்கிறபடியிறே * எம்மாவீட்டிலே ''தனக்கேயாகவெனைக் கொள்ளுமீதே'' என்று நிஷ்கர்ஷித்ததொன்று உண்டிறே; அத்தை அழிக்கிறதாய்த்துஇங்கு. என்னைக்கொள்ளவேணுமென்றிறே அங்குச்சொல்லிற்று; என்னோடு கலக்கவுமாம், வேறே சிலரோடே கலக்கவுமாம்: அங்குத்தைக் குறை தீருமத்தனை வேண்டுவதென்கிறது இங்கு. அதுதன்னில் எனக்கு என்றவிடம், புருஷார்த²மாகைக்காகச் சொன்னவித்தனையிறே. அது அசித்வ்யாவ்ருத்திக்கு உடலாமித்தனை. இவன்தான் எனக்கு என்னுதவன்று புருஷார்த²மாகாது, அவன்தான் விரும்பி ப்ரவர்த்திப்பதும் செய்யான்.

---

*செயப்பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவம்'' என்று தாயாரன்றோ பரியக்கடவள்? தாய்க்குண்டான பரிவு இவர்க்குஉண்டாகக்கூடுமோ? என்று ஸ்வாபதேஶத்திலும், மஹிஷியானவளுக்கு மாதாவுக்குஉள்ள பரிவுண்டாகக்கூடுமோ? என்று அந்யாபதேஶத்திலும், வருகிற இரண்டு ஶங்கைக்கும் பரிஹாரம் அருளிச்செய்கிறார்-இனி,* **மாதாபிதா** *இத்யாதி வாக்யத்வயத்தாலே. அதாவது - அவனுடைய ஸர்வவித பந்த⁴வத்துக்குள்ளே புத்ரத்வமும் ஒரு பந்த⁴வமாகையாலே புத்ரனிடத்தில் தாய்க்குள்ள பரிவு ஈஶ்வரனிடத்திலே இவர்க்கு நடக்குமென்று - 'மாதாபிதா' இத்யாதி வாக்யத்வயத்துக்கு பாவம். மஹிஷியான ஸ்ரீகௌஸலையார்க்கு சக்ரவர்த்தியிடத்திலே மாத்ருத்வப்ராயுக்தமான பரிவு நடந்தாற்போலே, இவளுக்கும் க்ருஷ்ணனிடத்திலே மாத்ருத்வப்ராயுக்தமான பரிவு நடக்குமென்று - 'யதா²யதா²ஹி' இத்யாதிவாக்யத்துக்கு பாவம் -* **மாதாபிதா** *இத்யாதி. ஸுபாலோபநிஷதி.* **''யதா²யதா²ஹி கௌஸல்யா தா³ஸீவச்ச ஸகீ²வச । பா⁴ர்யாவத்³ ப⁴கி³நீவச்ச மாத்ருவச்சோபதிஷ்ட²தே''** *இத்யயோத்யாகாண்டே கைகேயீம் ப்ரதி த³ஶரத²:. ''செங்கனிவாய்' என்றத்தைப்பற்ற -* **தரிப்பிக்கத்தரித்ததாய்** *இத்யாதி. இத்திருவாய்மொழியால் ஆழ்வாருடைய அத்யந்த பாரதந்த்ர்யம் ப்ரகாஶிக்கிறதென்கிறார் -* **இத்தால்** *இத்யாதி. இத்தாலென்றது - இத்திருவாய்மொழியாலென்றபடி.* **தாத³ர்த்²யத்தினுடைய எல்லையாவது** *- அத்தலைக்கே உறுப்பாக விநியோகப்படுகை. ''உன் தன் திருவுள்ளம் இடர்கெடுந்தோறும்'' இத்யாதியைப்பற்ற -* **தாதர்த்²யத்தினுடைய எல்லையிருக்கிறபடி** *என்றது. இதுதான் * எம்மாவீட்டிலும் சொல்லிற்றில்லையோ? அதில் இதுக்கு வாசியேதென்ன -* **எம்மாவீட்டிலே** *இத்யாதி வாக்யத்வயம். அதாவது - அங்கு விநியோகப்பட்டது தமக்கு உறுப்பாக விநியோகப்பட்டாரென்னும்படி: அதிலும் இது ஸாராம்ஶமாயிருக்கும் என்றபடி. அதெப்படியென்ன -* **என்னைக்கொள்ளவேணும்** *இத்யாதி. கீழே * எம்மாவீட்டிலும்இதுக்கு ஆதிக்யமுண்டென்று அருளிச்செய்து, இரண்டுக்கும் ஸாம்யம் விவக்ஷித்து, ஆனால் அங்கே எனக்கு என்று சொல்லுவானென்னென்ன -* **அதுதன்னில்** *இத்யாதி.* **புருஷார்த்தமாகைக்காக** *வென்றது - ஸ்வபோக்த்ருத்வ ஶந்தாரஹிதமாக அவன்கொடுக்கிறபேறு ரஸமாகைக்காகவென்றபடி. அவ்வளவுமன்றிக்கே, சேதநனை வாசியைப்பற்ற எனக்கு என்கிறதென்று ஹேத்வந்தரம் -* **அது அசித்வ்யாவ்ருத்திக்கு** *இத்யாதி. இவ்விரண்டு அர்த்தத்தையும் முகபேதேந விவரிக்கிறார் -* **இவன்தான்** *இத்யாதி வாக்யத்வயத்தாலே,*

# முதற் பாட்டு.

**வேய்மருதோளிணைமெலியுமாலோ! மெலிவும்என்தனிமையும்யாதும்நோக்**
**காமருகுயில்களுங்கூவுமாலோ! கணமயிலவைகலந்தாலுமாலோ! [காக்**
**ஆமருவினநிரைமேய்க்கநீபோக்குஒருபகலாயிரமூழியாலோ!**
**தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ! தகவிலைதகவிலையேநீகண்ணா!**

ஆ.—உன்னைப் பிரிகையாலே என்னுடைய தோள்கள் மெலியா நின்றன; இவற்றின்மெலிவும் என் தனிமையும் ஒன்றும்பாராதே இக்குயில்களானவை உன்திரு நாமங்களைக் கூவாநின்றன; அதின்மேலே மயில்களும் கலந்தாலாநின்றன; ஒருபகல் பிரியுமளவில் இங்ஙனே படவேண்டுமோ? என்னில்,—நீ பசுமேய்க்கப் போனவாறே அவ்வொருபகல்தான் ஆயிரம்ஊழிபாகாநிற்கும்; அதின்மேலே நீயும் உன்னுடைய கண்களாலே என்னை ஈராநின்றாய்; உன்னைப் பிரிந்து நான் இங்ஙனே படாநிற்கச் செய்தே எங்களைப்பிரிந்து நீயிருக்கவல்லையாவதே! நீயிருந்த லோகத்திலும் இல்லை யாகாதே க்ருபை! லோகத்திலே சிறிது க்ருபையுண்டாகிலும் உன்பக்கல் ஒருக்ருபை யில்லை என்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமான் பிரிகிறானென்று வ்யஸநப்படாநிற்கச் செய்தே அதுக்குமேலே குயில்தொடக்கமான பதார்த்தங்களுடைய த்வநிகளாலும் அவனுடைய நோக்காலும் தனக்குப்பிறந்த அவஸாதத்தை வாயாலே தோழிமார்க்குச் சொல்லுமாபோலே அவனுக்கு அறிவிக்கிறாள்.

[வேய்மரு தோள்] - உனக்கு ஸ்ப்ருஹணீயமான தோள். [மெலிவும் என்று தொடங்கி] - உன்னைப்பிரிந்திருக்கிற என்னுடைய அவஸாதமும் இவ்வவஸாதத்திலே எனக்கு ஒருதுணையின்றிக்கே யிருக்கிறமையையும் ஒன்றும்பாராதே பரஸ்பரம் விருப்ப முடைய குயில்களும் கூவாநின்றன; அதுக்குமேலே, மயில்கள் திரண்டு கலந்து ஆலாநின்றன. கண்டு தரிக்கமாட்டாமையாலே முகத்தைத் திரியவைத்து 'அவை' என்கிறாள். [ஆமருவென்று தொடங்கி] - உன்னோடும் மருவித் தன்னிலொத்த பசு நிரைகளை மேய்க்கைக்கு நீபோகிற ஒருபகல் ஆயிரம் ஊழியாகாநின்றது என்று இவள் சொல்ல; "இதொரு ஸ்வபாவமிருக்கும்படியே?" என்று ப்ரீதனாய் அவன் நோக்க; நீ பசுமேய்க்கப் போமதிலுங்காட்டிலும் அழகிய திருக்கண்களாலே நோக்கி நோவு படுத்தா நின்றாய்; க்ருஷ்ணனே! நீயிருக்கிற லோகத்தில் க்ருபாதத்த்வமில்லை, அங் குண்டாகிலும் உன்பக்கல் க்ருபையில்லை என்கிறாள்.

ப.—முதற்பாட்டில், நீ பிரியப்புகுகிறாயென்கிற நினைவாலே குயில்தொடக்க மானவற்றாலே ஈடுபடுகிற என்னை, உன்கண்ணழகைக்கொண்டு நலியாநின்றாயென்கிறாள்.

(விரஹம் பொறாமையாலே), வேய்மரு - வேய்போலேகுழலோடின, தோள் இணை - தோள்கள் இரண்டும், மெலியும் - (புறவாயும் காணலாம்படி) மெலியாநின்றன; (அவ்வளவன்றியே), என்மெலிவும் - (ஆஸ்ரயமான) என்ஸரீரத்தின் மெலிவும், என் தனிமையும்-(பிரிவாற்றாத) என்தனிமையும், யாதும் - ஒன்றையும், நோக்கா - பாராதே, காமரு - ஊர்ஸநீயமான, குயில்களும் - குயில்களானவை, ("தனிமைப்பட்டாரை

நலியக்கடவோமல்லோம்" என்றிராதே), கூவும் - (தம்மில் தாம் சேர்த்திக்காகக்) கூவாநின்றன ; கணமயிலவை - திரளானமயில்களானவை, கலந்து - (தம்மில்தாம்) கலந்து, ஆலும் - நடியாநின்றன ; ஆ - பசுக்களானவை, மருவு இனம் — செறிந்து இனமொத்திருக்கிற, நிரை - திரள்களை, மேய்க்க - மேய்க்கைக்காக, நீ-, போக்கு - லீலாபரனாய்க்கொண்டு போகிற, ஒருபகல்-, ஆயிரம்ஊழி - ("த்ருடியுகாயதே" என்கிறபடியே) ஸஹஸ்ரயுகமாகாநின்றது ; (அதுக்குமேலே குயில்கள் மயில்கள் உன்போக்குக்குத் தாம் நன்றாம்படி), தாமரை - தாமரைபோலே தர்ஸநீயமான, கண்கள்கொண்டு - கண்களைக்கொண்டு, ஈர்தி - ஈராநின்றாய் ; கண்ணா - (பெண்பிறந்தாரை * நெஞ்சு துக்கஞ்செய்யப்போந்த) க்ருஷ்ணனே ! நீ தகவிலை - நீ (ஸ்த்ரீகளை) நலியத்தகாதென்கிற ஸாமாந்ய க்ருபையுமுடையையல்லை ; தகவிலை - (நோவுபட்டாரை நலியலாகாதென்கிற) விசேஷ க்ருபையும் உடையையல்லை. இந்த நைர்க்ருண்யம் ஸ்வபாவமாயே விட்டதிறே என்றுகருத்து. வேய்மருதோளிணை என்று - அவன்கொண்டாடும்படி அழகைச்சொல்லவுமாம். காமருகுயிலென்று அழகியகுயில்; காவிலேமருவினவென்னவுமாம். "ஆலோ!" என்னுமவைகள் - விஷாதஸூசகங்கள்.

இ.—முதற்பாட்டில், அவன்பிரிகிறானென்கிற வ்யஸநம் செல்லாநிற்க, அதுக்குமேலே குயில்தொடக்கமான பதார்த்தங்களின் த்வநிகளாலும் அவன்நோக்காலும் தனக்குப்பிறந்த அவஸாதத்தை, தோழிமார்க்குச் சொல்லும் பாசுரத்தாலே அவன்தனக்குச் சொல்லுகிறாள்.

[வேய்மருதோளிணை] - பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேயைப்போலியாகச் சொல்லலாம் தோள்கள்இரண்டும். [இணைமெலியுமாலோ] - நீ சேர்த்தியழகு கொண்டாடும் தோள்களிரண்டும் பட்டபாடு பாராய்! தன்தோளழகைத் தான்சொல்லுமவளல்லள் ; அவன் கொண்டாடக் கேட்டுப்போந்தவளாகையாலே சொல்லுகிறாள். ராஜபுத்ரனுக்கு "பூந்தோட்டமழியாநின்றது" என்பாரைப்போலே, உன்போகோபகரணங்கள் அழிகிறபடி பாராய்! என்கிறாள். கிண்ணகத்திலே அடிச்சூடுமாபோலே, அவன் கூடியிருக்கச்செய்தே ப்ராக்திஜ்ஞாநத்தை யநுவர்த்தித்துத் தோளிணை மெலியாநின்றன. இவன் ஸந்நிதியிலும் அகவாயிற் பிரிவுகிடக்கையாலே அதின்கார்யம் உடம்பிலும் உண்டாகாநின்றது. [மெலியுமாலோ] - இனி நீவந்தாலும் அஸத்ஸமமென்கை. [ஆலோ] - விஷாதாதிஸயஸூசகமாய்க்கிடக்கிறது. [மெலிவும் என்தனிமையும்] - நாட்டாருடைய மெலிவும் தனிமையும்போலல்ல, என்மெலிவும் தனிமையும். உன்தனிமையும் உன்மெலிவும்போலல்ல. "மிகமேனிமெலிவெய்தி" என்றும் "தமியமாலோ" என்றும் பிரிவிற்சொன்னவையுமன்று ; அவன்கூட விருக்கச்செய்தே வந்த மெலிவும் தனிமையுமிறே இது. இங்ஙன் கூடுமோவென்னில் ; "தாம் தம்மைக்கொண்டகறல் தகவன்று" என்னுமவள் கூடவிருக்கச்செய்தே பிரிந்தானாகச் சொல்லவும் தட்டில்லையிறே ; இவன்தன்னாலும் ஸமாதேயமன்று ; போனானையிட்டு வருகிறானல்லன்; போகநினைத்தானைத் தவிருகிறானல்லன். அவனும் இவள்தோளில் மெலிவில் மெய்ப்பாட்டைக்கண்டு "நாம் பிரிந்தோமோ" என்று ப்ரமிக்குமத்தனை ; அதுதான் இவன்தன்னுடைய ஸௌபாக்ய பலமிறே. முன்பு பிரிந்தால் இவளுடைய ஆற்றாமை தோழிமார் சொல்லக்கேட்டுப் போருமித்தனை ; இப்போது, தானேயிருந்து காணப்பெற்றான். தோழிமாரோடே பண்ணும் வ்ருத்தகீர்த்தனத்தை இவன்தன்

னோடே பண்ணுகிறாள். [யாதும் நோக்கா] - ஒன்றும் நோக்கா. என்மெலிவாதல், என்தனிமையாதல், ஒன்றும் பார்க்கிறனவில்லை. [காமருகுயில்களும்] - காமருதல் - விரும்புதல். பரஸ்பரம் விருப்பத்தையுடைத்தாயிருக்கை. பிரிவுக்கு உடலான கலவியன்றிக்கே நித்யஸம்ச்லேஷத்துக்கடியான ப்ரீதியோடே கலவாநின்றன. நீ நலிகிறதுக்குமேலே குயில்களும் நலியாநின்றன. நீ நலியவரவிட்ட பதார்த்தங்களிலும் நீயே நல்லை. [கூவுமாலோ] - தனியிருப்பில் என்னோவைக்கண்டால், கலவிக்குப் போக்கு விடுகிற தங்கள் வாயைப் புதைக்க வேண்டாவோ? [கணமயிலவை] - ஒரு திரளாக வ்யாபகமாகாநின்றன. [அவை] - த்ருஷ்டிவிஷம்போலே யிருக்கையாலே, முகத்தைத் திரியவைத்து 'அவை' என்கிறாள். [கலந்தாலுமாலோ] - "இத்தனியிருப்பிலே கலக்கையாவது ஸ்த்ரீவதம்" என்றிருக்கவேண்டாவோ? இவற்றுக்குக் கலவியால் உண்டான ஹர்ஷம் உள்ளடங்காமையாலே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுகின்றன. 'பஶ்ய லக்ஷ்மண ந்ருத்யந்தம் மயூரமுபந்ருத்யதி । மயூரஸ்ய வநே நூநம் ரக்ஷஸா ந ஹ்ருதா ப்ரியா" இம்மயிலினுடைய பேடை அவனாலே அபஹ்ருதசித்தையாய்த்தில்லையாகாதே! "வாஞ்ஜஸீகவிஶாலாக்ஷீகய ஶோஷா ஸவிஷ்யதி" என்னவேண்டியிருக்கிற ஊமையிலே, நீயும் உன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தே போகாநின்றாய். [ஆமருவினநிரைமேய்க்க] - உன்னோடு மருவித் தன்னிலொத்த பசுநிரைகளை மேய்க்கைக்கு. [மருவினநிரை] - "மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர" என்கிறபடியே, அவனையொழியில் தரியாதவையிறே. ரக்ஷிக்கும்போதும் திரளாக வேணுமோ? [நீபோக்கு ஒருபகல்] - நீபோகிற ஒருபகலென்னுதல், உன்னுடைய போக்கான ஒருபகலென்னுதல்; இவை பக்ஷத்திலே பிறக்கும். போகவிடுகிற ஒருபகல், நீ கழிக்கிற ஒருபகலென்னுதல்; இது பக்ஷத்துக்குச்சேரும், சொல்லிப் போருமதன்று. "ஒருபகலளவேயன்றோ?" என்ன,—உன்னைப்போலே என்றிராதே கொள்ளாய்; உனக்கிறே ஒருபகலாயிருக்கிறது: அதுதானே எனக்கு அநேக கல்பமாயிராநின்றது; "யயௌ வர்ஷகோடிபிஶ்ச க்ஷணஶ்ச நவிநாஶக:". [தாமரைக்கண்கள் கொண்டுஈர்தியாலோ] - "நாம் பிரிந்திலோம், பிரியநினைத்திலோம்: இப்படியிருக்க, போனோமுமாய், போனால் நலியக்கடவ பதார்த்தங்களும் நலிந்ததாயிருக்கிற இது, ஒரு ப்ரேமஸ்வபாவமிருக்கும்படியே!" என்று ஸாதரமாகப்பார்க்க, அழகிய திருக்கண்களாலேநோக்கி நோவுபடுத்தாநின்றாய் என்கிறாள். இந்நோக்கிற்காட்டில் நீ பசுமேய்க்கப்போக அமையுமென்கை. "முன்புத்தை நோக்கு ஸ்ம்ருதிவிஷயமாகச் சொல்லுகிறாள்" என்பாருமுண்டு. 'ஈர்தி' - என்கையாலே இப்போது பார்த்தானாகவேணும். இப்படி சொன்னவிடத்திலும் நோக்கை மாறவைத்திலன். [தகவிலை தகவிலையேநீகண்ணா] - [தகவிலை] - நீஇருந்த லோகத்தில் க்ருபையில்லை. [கண்ணா - நீ - தகவிலை] - ஜகத்திலுண்டாகிலும், க்ருஷ்ணனே! உன்பக்கல் க்ருபையில்லை என்னுதல்; வீப்ஸையாலே, உனக்கு க்ருபையில்லை என்று நான் கொடியெடுக்கிறேனென்னுதல். "ஸீதாவிவாஸநயநோ: காருண்யாம்ருதவிக்ஷு" "ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யமுத்த்ருத்ய புஜமுச்யதே". விலக்காதவளைவைக்கொண்டு பிறரையின்னாதாகிறதென்? உன்பக்கல் க்ருபையில்லை; "ஶரவர்ஷோத்தரஸாயோரக்ஷித்வாக்ருபா கஸ்ய ந ஜாயதே".

ஈடு.—முதற்பாட்டு. அவன்பிரிகிருனென்கிற வ்யஸநம் செல்லாநிற்க, அதுக்கு மேலே, குயில்தோடக்கமான வ்யஞ்சகபதார்த்தங்களின் த்வநியாலும் அவன் நோக்காலும் தனக்குப் பிறந்த அவஸாதத்தைத் தோழிமார்க்குச் சொல்லுமாபோலே அவன்தனக்குச் சொல்லுகிருள்.

[வேயித்யாதி] - சுற்றுடைமையாலும் பசுமையாலும் வேயை ஒருவகைக்குப் போலியாகச் சொல்லலாயிருக்கிற தோள்களிரண்டும் மெலியாநின்றனவென்கிருள்; செருக்கனுயிருக்கும் ராஜபுத்ரனுக்கு "உன்பூந்தோட்டம்அழிகிறது" என்பாரைப்போலே. தன் பிரிவில் இவளாற்ருமை கேட்டார்வாய்கேட்கை யன்றிக்கே கைம்மேலே காணலாயிருக்கிறதுகாணும் இவள்மெலிவு. இவளுடைய ப்ராந்தியை யநுவர்த்தித்து, கிண்ணகத்திலே யடிச்சுடுவாரைப்போலே அவன் கூடவிருக்கச் செய்தேயும் மெலியாநின்றனவாய்த்துத் தோள்கள். கூடவிருந்தாலும் ப்ரயோஜநமில்லையிறே அகவாயிலே பிரிவுண்டாகில்; அதின் கார்யமான மெலிவு பிறந்தன்றிநில்லாதிறே. தன்தோள்கள் மெலிகிறஇத்தை "உன்னுடையதோள்கள்மெலியாநின்றன" என்பாரைப்போலே சொல்லுகிருள் காணும்! தேவதத்தனென்றத்தோடு வாஸுதேவஸப்தத்தோடு வாசியறும்படி அவனுக்கு ப்ரகாரமாயிறே இவ்வாத்மவஸ்து விருப்பது. நீ கலக்கப் புக்கால் விடாயாறுவதெங்கே? * மெல்லியல் தோள்தோய்ந்திறே விடாயாறுவது. [இணை] - நீ சேர்த்தியழகுசொல்லி வாய்வெருவும் தோள்கள் படுகிறபாடு பாராய்! தன்னழகைத் தான் கொண்டாடுமவளல்லளே: அவன் சொல்லக்கேட்ட செவியேற்றுலே சொல்லுகிருளிறே. இனி நீ வந்தாலும் அஸத்ஸமங்

முதற்பாட்டு.— வேய்மரு இத்யாதி. "ஆமருவினநிரைமேய்க்க நீ போக்கொருபகலாயிர மூழியாலோ, காமருகுயில்களும் கூவுமாலோ, கணமயிலவைகலந்தாலுமாலோ, தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - அவன் பிரிகிறன் இத்யாதி. வ்யஸநம்செல்லாநிற்க என்றது - "மெலிவும் என் தனிமையும்" என்றத்தைப்பற்ற.

வேயோடே பொருந்தியிருக்கிறது எவ்வாகாரத்தாலே? என்ன - சுற்றுடைமையாலும் இத்யாதி. மருவுகை - ஸாத்ருஶ்யாகாரேண பொருந்துகை. தோள்களை வர்ணித்து, இது மெலியாநின்றது என்று அவனுக்குச் சொல்லுகிறதுக்கு பாவம் - செருக்கனாய் இத்யாதி. சாடு - தன் பிரிவில் இத்யாதி. கைம்மேலே - ப்ரத்யக்ஷமாகவென்று சாடுவுக்கர்த்தம். விஶ்லேஷத்திலொழிய கூடவிருக்கச்செய்தே மெலியக்கூடுமோவென்ன - இவளுடைய இத்யாதி. விவரணமாதல், ப்ராந்தியாலன்றிக்கே அகவாயில் விஶ்லேஷாநுஸந்தாநத்தாலும் மெலிவுண்டாகிறதென்று பரிஹாராந்தரமாதல் - கூடவிருந்தாலும் இத்யாதி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு-தன்தோள்கள் இத்யாதி. ஆற்ருமையிருந்தபடி யென்னென்றபடி. இத்தால் - இவள்தோள் மெலிந்தால் தன்னுடைய அபிமதம் போகிறதென்று வ்யஸநப்படுகை யன்றிக்கே, இவளுக்குவந்த மெலிவு தனக்குவந்ததாயிருக்கையாலும், அவனுக்கு வ்யஸநம் இரட்டித்திருக்குமென்று கருத்து. இவள் தோள்மெலிந்தால் வ்யஸநம் அவனதாயிருக்குமென்கிற இதுக்கு வ்யாபதேஶம் - தேவதத்தன் இத்யாதி. "வேய்மருதோளிணை மெலியும்" என்றத்தால் ஃபலிதமாதல், "மெலியும்" என்றதுக்கு ஹார்த்தபாவமாதல் - நீகலக்க இத்யாதி. அப்படி இவள்தோள் விடாயாறுமிடமோவென்ன - மெல்லியல் இத்யாதி. ம்ருதுஸ்வபாவமான தோளோடேயணைந்தென்றபடி. திருநெடுந்தாண்டகம், "கல்லெடுத்து" இத்யாதி. "இணை" என்றதுக்கு ஹார்த்தபாவம் - நீசேர்த்தியழகு இத்யாதி. அவன்வாய்வெருவும் தோளென்பானென்? தன்தோளழகைத் தானே சொல்லுகிருளாகாதோ, என்ன - தன்னழகை இத்யாதி. செவியேற்றுலே - செவியாலே கேட்கையாலே. மெலியும் - ஶிதிலமாகாநின்றன. † "மெலியும்" என்ற ஊதார்த்தத்துக்கு பாவம்-இனிநீவந்தாலும் இத்யாதி. மெலிவும் தனிமையும்

† மெலியுமென்றது - காலத்தைக்காட்டாது தன்மையைக் காட்டுவதாகக் கொண்டு ஊதார்த்தமாகக் கூறுகிருரென்க.

கிடாய். [ஆலோ!] - விஷாதாதிசய ஸூசகமிருக்கிறபடி. [மெலிவும்என்தனிமையும்] - நாட்டார் மெலிவும் தனிமையும்போலல்லவிறே என்மெலிவும் என்தனிமையும். உன் மெலிவும் உன்தனிமையும்போலல்ல; கூடவிருக்கச்செய்தே வருகிற தனிமையும், பிரியாதிருக்கச்செய்தே வருகிற மெலிவுமிறே இது. "பொன்செய்பூண்மென்முலைக்கென்றுமெலியுமே" என்றும், "மிகமேனிமெலிவெய்தி" என்றும், "தமியமாலோ" என்றும் சொன்னவற்றி னளவல்லவிறே. அவன்அஸந்நிதியில் பட்டவையிறே அவை; கூடவிருக்கச்செய்தே வருகிறதிறே இது. "தாந்தம்மைக்கொண்டகறல் தகவன்று" என்று தாம் போவார் தம்மை வைத்தன்றோ போகக்கடவது என்னக்கடவ அவளுக்கு, கூடவிருக்கச்செய்தே போனானென்று நினைக்கவுமாமிறே ப்ரேமஸ்வபாவத்தாலே. அவன்தான் போனானாய் வருகிறானல்லன், போகநினைத்தானாய்த் தவிருகிறானல்லன்; அவனாலும் அப்ராதிக்ரியமிறே இது. அவன்தானும், இவள் மெலிவில் மெய்ப்பாட்டைக்கண்டு "நாம்பிரிந்தோமோ?" என்று ப்ரமிக்கும்படியிறே யிருக்கிறது. இருவரும் இருவர்க்கும் ஊமத்தங்காயானால் தெளியவிரகில்லை. இதுதான் அவனுடைய ஸௌபாக்யபலமிருந்தபடியிறே. முன்பு இவள்பிரிவாற்றாமையால் பட்டவையெல்லாம் தான் கண்டறியானே; தோழிமார் மற்றையார்சொல்லக் கேட்டார்வாய் கேட்குமித்தனையிறே; "வாஹிவாத" (வாஹிவாத) இத்யாதிவத்; இப்போது, தன் கண்ணாலே காணப்பெற்றானே. இவள்தான், தோழிமாரோடு சொல்லுமத்தை இப்போது அவன்தன்னோடே சொல்லுகிறாளிறே. [யாதும்நோக்கா] - ஒன்றையும் பார்க்கிறதில்லை. தோளின்மெலிவும் தனிமையும் இவையொன்றும் பார்க்கிறனவில்லை. [காமருகுயில்களும்] - காமருதலாவது விருப்பம். இவற்றினுடைய கலவி பிரிவுக்கு உடலாயிராமையாலே மேன்மேலென விருப்பத்தை யுடைத்தாயிருக்குமிறே. கலவி பிரிவோடே வ்யாப்தமென்னும் பயமில்லை இவற்றுக்கு. [குயில்களும்] - நீயேயன்றிக்கே, இவையும் பாதகமாகாநின்றன. நீ பாதிக்க வரவிட்ட பரிகரத்திற்காட்டில் இன்னமும்

---

*தன்னதாயிருக்க, "என்மெலிவும், என்தனிமையும்" என்று விசேஷித்ததுக்குபாவம் -* நாட்டார் *இத்யாதி. அதாவது - லோகத்தில் விரஹிணிகளுடைய மெலிவையும் அஸஹாயதையையும் வ்யாவர்த்திக்கிறது. அவ்வளவன்றிக்கே, ஈஶ்வரனில் வ்யாவ்ருத்தி -* உன்மெலிவும் *இத்யாதி. நாட்டாருடையவும் ஈஶ்வரனுடையவும் மெலிவும் தனிமையும் போலல்லாதபடியெப்படியென்ன -* கூடவிருக்க *இத்யாதி. "என்மெலிவு மென்தனிமையும்" என்றதுக்கு - நாட்டாரிலும் ஈஶ்வரனிலும் வ்யாவ்ருத்தியாக அருளிச்செய்து, தான் கீழ்ப்பட்ட மெலிவு தனிமைகளளவல்லவென்று மூன்றாம் வ்யாவ்ருத்தி -* பொன்செய்பூண் *இத்யாதி. அதெப்படியென்ன-*அவன் அஸந்நிதியில் *இத்யாதி. கூடவிருக்கச்செய்தே போனானென்று நினைக்கலாமோ? என்ன,—*தாந்தம்மை *இத்யாதி. அதாவது- அங்கு அஸம்பாவிதத்தைச் சொன்னாற்போலே இங்கு இதுவும் கூடுமென்றபடி. இப்படி நினைக்கிறவளுக்கொரு பரிஹாரம்பண்ணவொண்ணாதோ? என்ன -* அவன்தான் *இத்யாதி. 'அப்ராதிக்ரியம்" என்றதின் சரமாவதி -* அவன்தானும் *இத்யாதி. இத்தால்பலிதம் -* இருவரும் *இத்யாதி. இவ்வாற்றாமைதான் அவனுக்குப் பெரும்பேறாயிருக்குமென்கிறாராதல், மேலுக்கு உபோத்காதமாதல் -* இதுதான் *இத்யாதி.* இதுதான் *என்றது - இந்த வ்யஸநஹேதுவான ப்ராவண்யந்தானென்றபடி. அதெப்படியென்ன -* முன்பு இவள் *இத்யாதி வாக்ய சதுஷ்டயம். அவ்வளவன்றிக்கே, இவனுக்கின்னமுமொரு அலப்யலாபமென்கிறார் -* இவள்தான் *இத்யாதி. அதாவது - காணப்பெற்றமாத்ரமன்றிக்கே வாயாலே சொல்லக்கேட்கவும் பெற்றானென்று இதுவும் ஒரு ஸௌபாக்யமென்றபடி. விவரணம் -* தோளின் மெலிவும் *இத்யாதி. "காமரு" என்றவர்த்தமாந நிர்த்தேசத்துக்கர்த்தம் -* இவற்றினுடைய *இத்யாதி. விவரணம் -* கலவி *இத்யாதி. அநுக்த ஸமுச்சயமாக சபப்தார்த்தம் -* நீயேயன்றிக்கே *இத்யாதி. ப்ராயோங்யே ஸமுச்சயமாக அர்த்தாந்தரம்.*

நீதானே நல்லே. [கூவுமாலோ] - என்னுடைமையைக்கண்டால் இவற்றுக்கு வாயைப்புதைக்க வேண்டாவோ? பிரிந்து நோவுபடுகிகிற என்படியைக் கண்டால் "நஞ்சுபோலே நம்முடைய ய வநி இவளுக்கு வாயகமாம்" என்று தவிரவேண்டாவோ? "கலஸ்நாராயதே விதழ" (கஸ்யநாராத்யதேசித்தம்) - உருவின வாள் உறையிலே யிடவேண்டும்படிகாணும் இவளுடைய ஊமை. [கணமயில்] - எதிர்த்தலையையும் தனியேவைத்து நோவுபடுத்தித் தானும் தனியேயிருந்து நோவுபடுவோரைப்போலே யன்றிக்கே, சேர்த்தியையுடையவா யிரா நின்றதாய்த்து இவை. [அவை] - த்ருஷ்டிவிஷம்போலே யிருக்கையாலே முகத்தை மாறவைத்து 'அவை' என்கிறாள்: கண்கோண்டு காணப்போகாமையாலே. ஒருதிரளாக வாயகமாகாநின்றதாய்த்து. [கலந்து] - "இவ்வளவில் நாம் கலக்கை ஸ்த்ரீவயம்" என்றறிந்து மீளுகிறதில்லை. [ஆலுமாலோ] - கலந்த கலவியால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுகின்றனவென்று ப்ரத்யக்ஷித்துவைத்து, 'அவை' என்னும்போது முகத்தை மாறிச்சோல்லுகிறாளாய் இருந்ததிறே. "மயூரஸ்ய" (மயூரஸ்ய) - இருவராயிருப்பார் எல்லாரையும் பிரித்தானென்றேயிருக்கிறார். மயிலினுடைய பெண்டாட்டியை ராவணன் கோண்டுபோய்த்திலனோ? "வநே" (வநே)-திருவயோத்யையிலேவந்து பிரித்தானல்லனே! ஹோமத்துக்கு ஏகாந்தமானகாட்டிலேயிறே. "ரக்ஷஸா நஹ்ருதாப்ரியா" (ரக்ஷஸாநஹ்ருதாப்ரியா) - நீர்மைகேடனான அப்படிகோலக்காரனால் பிரிக்கப்படாதது இதோன்றுமேயாகாதே! [ஆமருவுஇத்யாதி] - இவ்வளவில் "கதமேஷாபவிஷ்யதி" (கதமேஷாபவிஷ்யதி) என்னவேண்டியிருக்க, அதுசெய்யாதே, அவன் தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே ஒருப்படாநின்றான். உன்னோடே

நீவாயிக்க இத்யாதி. "கூவும்" என்றதுக்குஹார்த்தஸாவம் - என்னுடைமையை இத்யாதி. உன்னுடைமையைக்கண்டால் வாயைப் புதைக்கவேணுமோவென்ன - பிரிந்து இத்யாதி. விவரணமாதல். இவளுக்கு வாயகமானல் தவிரவேணும் என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - கஸ்ய இத்யாதி. "கநயாவித்யாவராஜஸாநவஜநஸ்யா । கஸ்யநாராயதேவிதத்ஸ்ஜா ஸௌரோரவீ" இதி கிஷ்கிந்தாகாண்டே ஹநுமத்வசந மாதாரீம் † ப்லாவதோ ராமஸ்யவசநம். (௩௩). "உருகாஸோ:" என்றதுக்கு ஸாவம்- உருவின இத்யாதி. இத்தால் - திருவடிவார்த்தை மாதுர்யத்தாலே சத்ருவையும் ஈடுபடுத்துமாபோலே, இவளுடைய உடைமையைக்கண்டால் சத்ருக்களுமிரங்கவேண்டும்படி யிருக்குமென்றபடி. "கணமயில்" என்றதுக்கு - மிதுநமான மயிலென்று விவக்ஷித்து, இதுக்கு வ்யாவர்த்த்யம் - எதிர்த்தலையையும் இத்யாதி. ப்ரத்யக்ஷத்திலே ஆலுகிற மயிலை "அவை" என்கிறதென்னென்ன - த்ருஷ்டிவிஷம் இத்யாதி. "த்ருஷ்டிவிஷம்போலே" என்றதின்விவரணம் - கண்கோண்டு இத்யாதி. "கணமயில்" என்றதுக்கர்த்தாந்தரம் - ஒருதிரளாக இத்யாதி. அதுக்குத் தன் ஸ்த்ரீயோடே கலக்கவேண்டாவோ? நீ உடைவெப்படுவானென்? என்ன - இவ்வளவில் இத்யாதி. முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறாளென்கிறதென்கொண்டென்ன-கலந்தகலவியால் இத்யாதி. விஸ்லேஷத்தில் மயூரதர்ஸநம் வாயகமானவிடமுண்டோவென்ன - மயூரஸ்ய இத்யாதி. "மயூரஸ்யவநேநூநம்ரக்ஷஸா நஹ்ருதாப்ரியா । தஸ்மாந்ந்ருத்யதிரம்யேஷு வநேஷு ஸஹகாநநா" இதி கிஷ்கிந்தாகாண்டே. (க-௪௨). இதுக்கு ஸாவம்-இருவராய் இத்யாதி.ஸப்தார்த்தம்-மயில் இத்யாதி."வநே" என்கிறதுக்குஸாவம்-திருவயோத்யையிலே இத்யாதி. "ரக்ஷஸா" என்றதுக்கு வாஸனை - நீர்மை இத்யாதி. படிகோலக்காரன் - வாதுகன். "ஆமருவினம்" இத்யாதிக்கவதாரிகை - இவ்வளவில் இத்யாதி. "மருவு இனம்- ஆ - நிரை" என்றந்வயித்தர்த்தம் - உன்னோடே இத்யாதி. மருவு - மருவியிருக்குமென்ற

† "ப்லாவத:" என்ற இடத்தில் ஸத்ருப்ரத்யம் சிந்த்யம்; ப்லாவசோ:நஸ்ய என்று இருக்கலாம்'

மருவித் திரளாயிருக்கிற ஆநிரையுண்டு - பசுநிரை; அத்தைமேய்க்க. * மேய்ந்தபுல்லும் கடைவாய்வழி சோரவிறே நிற்பது; வேறொன்றின்றிக்கே இவனோட்டைச் சேர்த்தியேயிறே இவற்றுக்கு தாரகம். [இனம்] - அவனுடைய ரக்ஷ்யகோடியிலே யந்வயித்தாலும் தனியராயிருப்பாரை ரக்ஷிக்கநினையான்; திரளாயிருப்பாரையாய்த்து அவன் ரக்ஷிக்க நினைப்பது. [நீபோக்கொருபகல்] - நீபோகிற ஒருபகலென்னுதல்; உன்னுடைய போக்கான ஒருபகலென்னுதல்; அன்றிக்கே, பசுக்களை மேய்க்கைக்காக நீபோகவிடுகிற பகல் என்னவுமாம். "இதெல்லாம் ஒருபகலளவேயன்றோ?" என்தான்! [ஆயிரம்இத்யாதி] - உன்னைப் போலேயென்று இராதேகொள்ளாய் எங்களையும். இரவொன்றும் பகலொன்றும் உத்தேஸ்யமாயிருப்பார் படியாயிராதுகாண், எல்லாக்காலத்திலுமொன்றே போதுபோக்காக இருப்பார்க்கு. "யதாப்தகோடிப்ரதிமஃ க்ஷணஸ்தேநவிநாபவத்" (யதாப்தகோடிப்ரதிமஃ க்ஷணஸ்தேநவிநாபவத்.) 'போனோமல்லோம்: போகநினைத்தோமல்லோம்; நாம் கூடவிருக்கச்செய்தே பிரிந்தோமாகக்கொண்டு நோவுபட்டுப் பதார்த்தங்களுமுடைய வாயகமாயிருப்பதே! இதொரு ப்ரேமஸ்வபாவம் இருக்கும்படியேன்?" என்று கண்ணாலே குளிரநோக்கினான்:—[தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ] - நீ நோக்காலே நலிவதில் இன்னம் பசுமேய்க்கப்போகையே நன்று. "முன்புத்தைநோக்கு ஸ்ம்ருதிவிஷயமாய்ச் சொல்லுகிறாள்" என்பாருமுண்டு; "ஈர்தி" - என்கையாலே இப்போது நலியாநின்றாய் என்றே சொல்ல அமையுமிறே. இப்படி சொல்லச்செய்தேயும் நோக்கை மாறவைத்திலன். [தகவிலை] - ஜகத்தில் க்ருபையில்லைகிடீர் என்கிறாள்; அவனை விலக்குகிறார் இல்லையாகாதே. நம்மோடு விரோதித்தாரை இன்னாதாகிறதேன், இவன் நம்மை நலியாநிற்க? ஒன்றுக்கு அந்நதோஷமுண்டு, ஒன்றுக்கு ஸம்ஸர்க்க தோஷமுண்டு; ஆனபின்பு, இவை நம்மோடே விரோதிக்கை ப்ராப்தமன்றோ? மயில், ஸுப்ரஹ்மண்யனுடைய வாஹநமாகையாலே ஸம்ஸர்க்க தோஷமுண்டு; குயில், †பலிபுக்கினுடைய அந்நத்தை புஜிக்கைபடி.

மருவுகை - பொருந்துகை. இவனோடே மருவியிருக்குமோவென்ன - மேய்ந்த இத்யாதி. கடைவாய்வழியே நழுவவென்றபடி. பெரியாழ்வார் திருமொழி, மூன்றாம்பத்து, ஆறாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு, "திரண்டெழுதழை" இத்யாதி. புல்லு கடைவாயிலேவழிந்தால் அவற்றுக்கு தாரகமேதென்ன - வேறென்றின்றிக்கே இத்யாதி. "இனம்" என்றதுக்கு பாவம் - அவனுடைய இத்யாதி. 'மேய்க்கைக்காக - பசுக்களை - நீ போகவிடுகிறபகல்' என்றந்வயிப்பது. "போக்கொருபகல்" என்றதுக்கு - போகிறவொருபகலென்னுதல்; போக்குகிற - கழிக்கிற, ஒருபகலென்னுதல்; பசுக்களைப்போகவிடுகிற வொருபகலென்னுதல் என்றர்த்தத்ரயம். விவரணம் - இரவொன்றும் இத்யாதி. பாவாந்தரமாதல். ஒருபகலாயிரமூழியாமோவென்ன - யதாப்தஃ இத்யாதி. "ஸததாஸஹமெளலீஹராஸயோஸஹிதந: । யதாப்தகோடிப்ரதிமஃக்ஷணஸ்தேநவிநாபவத்" இதி பஞ்சமேம்ஸேத்ருதீயே(நக). மேலுக்கவதாரிகை-போனோமல்லோம் இத்யாதி. "தகவிலை" என்றதுக்கவதாரிகை - இப்படி இத்யாதி. க்ருபையில்லாமைக்கு நியாமகமேதென்ன - அவனை இத்யாதி. கண்கள்கொண்டீராதபடி விலக்குகிறாரில்லை, க்ருபையுண்டானாலாரேனும் விலக்குவர்களிறே; ஆகையாலே, தகவில்லையென்றபடி. முந்தின "தகவிலை" என்றதுக்கு - லோகத்தில் தகவில்லையென்ற அர்த்தமொழிய, குயில்மயில் தொடக்கமானவற்றுக்குத் தகவில்லையென்றர்த்தாந்தரம் விவக்ஷித்து, "நீகண்ணு - தகவில்லை" என்றதுக்கவதாரிகை - நம்மோடு இத்யாதி. அவற்றுக்குத் தன்னோடுவிரோதிக்க ப்ராப்தியேதென்ன - ஒன்றுக்கு இத்யாதி வாக்யத்ரயம். தோஷத்வயத்தையும் உபபாதிக்கிறார் - மயில் இத்யாதி. வ்யாக்யாதாவினிடுபாடு -

† பலிபுக்கு-காக்கை. குயில் காக்கையாலே வளர்க்கப்படுதலால், அதின் அன்னத்தைப்புஜித்ததாம்.

யாலே அந்நதோஷமுண்டு [நீ - தகவிலை] - உனக்குத் தகவில்லை. "தகவுடையவனே" என்று கூப்பிடுமவள்கிடீர், அவன் ஸந்நிதியிலே இப்போது 'தகவிலை' என்கிறாள். நீ தக வுடையையல்லை. மேலில் "தகவிலை" என்கிறது போலன்றிக்கே, முற்பட்டதுக்குத் தக விலையென்று பொருளாய், நாட்டில் க்ருபையில்லையென்னவுமாம்; அன்றியே இரண்டும் தகவிலை என்றேயாய், அப்போது இரட்டிப்புக்குக்கருத்து-நீதகவுடையை யல்லையென்னு மிடத்துக்குக்†கோடியெடுக்கிறேனென்கிறாள், "ஏவமார்த்தாஸ்யோஷித்ஸு க்ருபாகஸ்யநஜாயதே"(ஏவமார்த்தாஸ்யோஷித்ஸுக்ருபாகஸ்யநஜாயதே)என்கிறபடியே.

## இரண்டாம் பாட்டு.

தகவிலைதகவிலையேநீகண்ணா! தடமுலைபுணர்தோறும்புணர்ச்சிக் காராச், சுகவெள்ளம்விசும்பிறந்துஅறிவைமுழ்க்கச்சூழ்ந்துஅதுகனவென நீங்கியாங்கே, அகவுயிரகமகந்தோறும்உள்புக்குஆவியின்பரமல்லவேட்கை அந்தோ!, மிகமிகஇனிஉன்னைப்‡பிரிவையாமால்வீவநின்பசுநிரைமேய்க் கப்போக்கே.

*ஆ.—(தகவிலை.) - ஸம்ஶ்லேஷஜநிதமான நிரவதிக நிர்வ்ருதி செல்லாநிற் கச்செய்தே இப்படிபடுகிறதென்? என்ன,—அந்த நிரதிஶய ஸம்ஶ்லேஷ மெல்லாம் ஸ்வப்நகல்பமாய், உன்பக்கலுள்ள நிரதிஶயஸ்நேஹத்தாலே பசுமேய்க்கப்போக்குக் காரணமாக நீபிரிகிறாயென்று நான்முடியக்கிடாய் புகுகிறதென்கிறாள்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், இங்ஙனே இப்பிராட்டி சொல்லாநிற்கச்செய்தே இவள் தரிக்கைக்காகப் பலகாலும் அணைத்தருள, நீ இங்ஙனே ஸம்ஶ்லேஷித்து நிரதி ஶயஸுகம் பிறக்கச்செய்தே அந்த ஸுகமெல்லாம் நீபோகக்கடவையென்னுமதினாலே ஸ்வப்நங்கண்டு விழித்தாற்போலே பொய்யாய் நோவுபடாநின்றேனென்கிறாள். பூர்வ வ்ருத்தமான ஸம்ஶ்லேஷந்தன்னையே சொல்லிற்றாகவுமாம். [தடமுலையென்று தொடங்கி] - தடமுலைபுணர்தொறும் புணர்ச்சியின் அளவல்லாத ஸுகவெள்ளம் அப ரிச்சேத்யமான ஆகாஶத்தையும் கடந்து என்னுடைய அறிவுகெடும்படி பெருகினது, ஸ்வப்நம்போலேயாய்; போய். [ஆங்கேயென்றுமேலுக்கு] - அத்தஶையிலே ஸம் ஶ்லேஷவிஶ்லேஷங்களால் இடமுடைத்தான ஹ்ருதயத்திலுள்ளுண்டான அவகாஶங்கள்*

---

தகவுடையவனே இத்யாதி. ஶப்தார்த்தம் - நீ தகவுடையையல்லை என்று. ஶப்தநிர்வாஹம் காட்டு கிறார் - மேலில் இத்யாதி. மேலில் தகவிலையென்கிறதுபோலன்றிக்கே யென்றது - "நீ கண்ணா- தகவிலை" என்றதுபோலே அவனை ஸம்போதித்து மத்யமபுருஷனைச் சொல்லுகையன்றிக்கே என்றபடி. கோடியெடுக்கிறேன் - அநேகஞ் சொல்லுகிறேனென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, இரண்டும் மத்யமபுருஷன்; முந்தினவர்த்தத்துக்கு,முந்தின தகவிலை-ப்ரதமபுருஷனாய்,, தகவில்லை யென்றபடி,இரண்டாம் தகவிலை-மத்யமபுருஷன்."நாட்டில் க்ருபையில்லை"என்றதுக்குஸம்வாதம்- ஏவமு இத்யாதி. "ஸகுஸ்ரீஸ்ரீஹ்ருதயஸ்ரீமாநுயதேமயா ஏவமார்த்தாஸ்யோஷித்ஸு க்ருபாகஸ்யநஜாயதே"இதி பஞ்சமேஶ்லோகவிம்ஶே.(கக - ருo).

---

† கொடியெடுக்கிறேனென்று அடையவளைந்தானுக்குப்பாடம்.
‡ பிரிவையாமா என்று பன்னீராயிரப்படிக்குப்பாடம்.

தோறும் உள்ளே சென்றுபுக்கு அஸிநிவேஸம் பொறுக்குமளவன்றிக்கே யிராநின்றது; பலகாலும் உன்னைப்பிரிகையுண்டாம்படி நீ பசுநிரை மேய்க்கப் போம் போக்கெல்லாம் வீவனவாகவேணும்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதஸவ்யனான நீ ஒருக்ருபையின்றி யிராநின்றாய்; உன்னுடைய ஸம்ஶ்லேஷரஸந்தானே பரிதாபஹேதுவாகா நின்றது, விஶ்லேஷஹேது வான பசுமேய்க்கப்போக்குத் தவிரவேணுமென்கிறாள்.

கண்ணா-(பெண்பிறந்தார்க்கு ஸவ்யனென்று ப்ரஸித்தனான) கண்ணா! நீ -, தக விலைதகவிலையே - (அந்தஸவ்யதைக்கீடான) க்ருபையை ஒருபடியாலுமுடையை யல்லையா யிராநின்றாய் ; (நீ ஸந்நிஹிதனாயிருந்து ஸம்ஶ்லேஷிக்கிறவளவிலும்), தட - (நீ ஶ்லா கிக்கும்படி) பெரிதான, முலை - முலைகளை, புணர்தொறும் - பரிஷ்வங்கம்பண்ணும் க்ஷணந்தோறும், புணர்ச்சிக்கு-அந்தஸம்ஶ்லேஷத்துக்கு, ஆரா - உள்ளடங்காதே அதி ஶயிதமான, சுகவெள்ளம்-ஸுகஸாகரமானது விசும்புஇறந்து-(அபர்யந்தமான) ஆகாசத் துக்கும் அவ்வருகேபோய், அறிவை - அறிவும், மூழ்க்க-அழுந்தும்படியாக, சூழ்ந்து-, (அப்போதே), அது கனவென - அதுஸ்வப்நகல்பமாக, நீங்கி-கழிந்து, ஆங்கே - அவ்வவ ஸ்தையிலே, அகவுயிர் - அந்தர்க்கதமான ப்ராணன்நின்ற, அகமகந்தோறும் - புடை கள்தோறும், உள்புக்கு - உள்ளே ப்ரவேசித்து, ஆவியின் - (ஆஶ்ரயமான) ஆத்மா வுக்கு, பரம்அல்ல-பொறுக்கவொண்ணாதபடி, வேட்கை - அஸிநிவேஸம் (போந்து வாரா நின்றது); அந்தோ ! - ஐயோ ! [கூடஇருக்கிற உனக்கு இத்தசையை சொல்லிக் காட்ட வேண்டுவதே !] இனி -, (இவ்வளவில் நீ செய்யவேண்டுவது), மிகமிக - மேன்மேலும், உன்னை-, பிரிவையாம்ஆல்-பிரிவானத்தை நாங்களுடையோமாம்படியாக, நின் - உன்னு டைய, பசுநிரைமேய்க்கப்போக்கு - பசுநிரைமேய்க்கப்போக்குக்களானவை, வீவ-தவிர் வனவாகவேணும். வீதல் - ஒழிதல்.

இ.—இரண்டாம்பாட்டில், இவள் யரிக்கைக்காகப் பலகால் அணைத்தருள, இஸ்ஸம்ஶ்லேஷமெல்லாம் நீபோகக்கடவை என்னுமதிலே ஸ்வப்நங்கண்டு விழித் தாற்போலே பொய்யாய், நோவுபடாநின்றேனென்கிறாள். பூர்வ வ்ருத்தமான ஸம்ஶ் லேஷத்தைச் சொல்லிற்றாகவுமாம்.

[தகவிலைதகவிலை இத்யாதி] - [நீகண்ணா - தகவிலையே] - பெண்பிறந்தார்க்கு ஸ்வம்மான நீ நிர்கூபனே யாகாநின்றாய். க்ருஷ்ணனென்றால் பெண்களுக்கேயாயிருக்கு மென்னுமிடம் ப்ரஸித்தமிறே."நாம் பிரிய நினையாதிருக்க, நிர்கூயன் என்கிறது தன்ஆற் றாமையாலேயிறே" என்றுஅதுக்குப்பரிஹாரமாகஅணைத்தான்.[தடமுலைபுணர்தொறும்]- "அணைக்கிறது பிரிகைக்கிறே" என்று கைநெகிழ்ந்தவிடத்திலே உடம்பு வெளுக்கும்: அதுக்குப் பரிஹாரார்த்தமாகத் திரியவணைக்கும்; ஆக, இப்படி அதிஶங்கையும் பரிஹா ரமுமாய்ச் செல்லுமித்தனை யாய்த்து. தடமுலையென்றது - ஸோக்தாவாலுண்டறுக்க வொண்ணாத ஸோக்யதாப்ரகர்ஷம் ; "மலராள் தனத்துள்ளான்" இத்யாதி. [புணர்ச்சிக் காராச்சுகவெள்ளம்]-கலவியினளவல்லாத ஸுகஸாகரம்: கலக்குமிடத்தில் இருவர்க்கும் அநுரூபமாயிறே ஸுகமிருப்பது. அவன்ஸ்வரூபம் இயத்தாரஹிதமாயிருக்குமாபோலே யாய்த்து ஸோக்யதாப்ரகர்ஷமும்: அதனிற்பெரிய அவாவிறே இவளது. [விசும்பிறந்து இத்யாதி] - அந்த ஸுகம் அபரிச்சிந்நமான ஆகாஶத்தைக்கடந்து மயர்வறமதிநல மருளப்பெற்ற அறிவையும் மூழ்த்தும்படி பெருகிற்றென்னுதல் ; விசும்பென்று - பரம

ப்தம். அறிவாகிறது உபயவிபூதியையும் விளாக்கொலைகொள்ளும் தன்னறிவென்னுதல். [கனவெனா நீங்கி] - ஸ்வப்நகல்பமென்னலாம்படி வற்றிப்போய். இந்த்ரஜாலங்களென்றும் கனவென்றும் அஸ்திரங்களைச் சொல்லக்கடவதிறே. கலந்தபோது ஸுகம் அபரிச்சிந்நமாயிருக்கும், பிரிவைக்கண்டவாறே பெருக்காறுஅடிசுடுமாபோலே து:கமும் அபரிச்சிந்நமாயிருக்கும். [ஆங்கே] - அத்தசையிலே. [அகவுயிர்] - ப்ராணஸ்தாநமான ஹ்ருதயம். [அகமகந்தோறும்] - ஹ்ருதயத்திலுள்ளுண்டான அவகாசந்தோறும். முன்புள்ள ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே ஹ்ருதயம் புடைபட்டிறேயிருப்பது; அவ்வவகாசங்களினுள்ளே சென்றுபுக்கு, ஆஶ்ரயத்தினளவன்றிக்கே அஸிநிவேகம் பெருகிவாராநின்றது. ஸம்ஶ்லேஷஸுகம் புக்கவிடமெங்கும் ஆற்றாமையாய்த்து. அணுபரிமாணமான ஆத்மாவால் பொறுக்குமளவன்று. ஆகை. ஸுகமும், து:கமும், ஸ்வரூபேணாவஸ்திதியும் என்றுமூன்று; ஸ்வரூபேணாவஸ்திதியில் நிற்கிறதில்லை. [அந்தோ] - இது உனக்கு உபதேசிக்கவேண்டுவதே! கலவியில் இருவரும் கூடக்கலந்து பிரிவாலாற்றாமை உனக்கு உபதேசகம்யமாவதே! கலவிக்கு இருவராய், நோவு ஒருதலைக்கேயாவதே! இனிமேற் செய்யவடுப்பதென்னென்ன?—[பசுநிரைமேய்க்கப் போக்கு - வீவ] - போக்கு - போக்குக்களானவை, "பசுவந்தன" என்னுமாபோலே. [வீவ] - தவிர்வனவாகவேணும். அதுவேண்டுகிறதென்னென்ன? [மிகமிகஇனி உன்னைப்பிரிவையாமால்] - போகில் மேன்மேலெனப் பிரிவுண்டாம். பிரிவையென்று - செய்யுட்பாடாய், பிரிவாமென்றபடி. உன்னைப்பிரிகையுண்டாம். [இனி] - முன்புத்தைப் பிரிவுகளுக்கு ஜீவித்திருந்தேனாகிலும் இனி ஜீவித்திருக்கமாட்டேன்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இவள் தரிக்கைக்காகப் பலகால் அணைத்தருள, இஸ்ஸம்ஶ்லேஷ ஸுகமெல்லாம் நீ போகக்கடவையென்னும் இதினாலே ஸ்வப்நம் கண்டு விழித்தாற்போலேயாய் நோவுபடாநின்றேனென்கிறாள். பூர்வவ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்தையே சொல்லிற்றாகவுமாம்.

[தகவிலை இத்யாதி] - (நீ - கண்ணா - தகவிலையே) - க்ருஷ்ணனென்றால் பெண்களுக்கு ஸ்வமாயிருக்குமென்று ப்ரஸித்தமிறே. பெண்களுக்கு ஸ்வமான நீ நிர்த்தயனேயாகாநின்றாய். "நம்மை நிர்த்தயனென்பதே! பிரியநினைத்தோமல்லோம்: பிரிந்தோமல்லோம்" என்று இவள் தரிக்கைக்காக நெருக்கி யணைத்தான். [தடமுலை இத்யாதி] - நூறாயிரந்தரம் அணையாநிற்கச்செய்தேயும் "அணைக்கிறது பிரிகைக்கிறே" என்று அணைத்த கை நெகிழ்த்தவிடமெங்கும் இவளுடம்பு வெளுக்கப்புக்கவாறே, அத்தைக் கண்டு இதினுடைய ஸமாதாநார்த்தமாக அணைக்க, இங்ஙனே அதிசங்கையும் ஸமாதாநமுமாய்ச் செல்லுமத்தனை. இதுதான் பூர்வஸம்ஶ்லேஷத்தைச் சொல்லிற்றாகவுமாம். இப்போதை ஸம்ஶ்லேஷந்தன்னையே சொல்லுகிறது. [தடமுலை] - தன்னையறியப்புக்கார்

---

இரண்டாம்பாட்டு.—தகவிலை இத்யாதி. "தடமுலைபுணர்தொறும் புணர்ச்சிக்காரா" என்றுதொடங்கி "வேட்கை" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இவள் இத்யாதி.

"நீகண்ணா - தகவிலை" என்று - அநுவாதம். 'பெண்களுக்குஸ்வமான' இத்யாதிவாக்யாநந்தரம் - க்ருஷ்ணனென்றால் இத்யாதி வாக்யம்அநுஸந்தேயம். மேலுக்கவதாரிகை - நம்மை இத்யாதி. "புணர்தொறும்" என்றதுக்குபாவம் - நூறாயிரந்தரம் இத்யாதி. இப்போதை ஸம்ஶ்லேஷந்தன்னையே சொல்லுகிறதென்றது - இப்போதையில் ஸம்ஶ்லேஷம் சொல்லுகிறதே முக்யமென்றபடி. "தடம்" என்றதுக்குபாவம் - தன்னை இத்யாதி, "நேதிநேதி" என்றபடுவத்தையென்றபடி.

படவேத்தையாய்த்து இவற்றை அநுபவிக்கப்புக்க தானும்படுவது; துலைய அநுபவித்து முடிக்கப்போகாதாய்த்து; போக்தாவாலும் உண்டறுக்கவொண்ணாத போக்யதாதிசயத்தைச் சொன்னபடி. [புணர்ச்சிக்காராச்சுகவெள்ளம்] - ஸம்ஶ்லேஷத்துக்கு அடங்காத ஸுகஸாகரம். கலக்கிற இருவர்க்கும் ஈடாயிறே ஸுகமிருப்பது. அவன் ஸ்வரூபம் இயத்தாரஹிதமாய் இருக்குமாபோலேயாய்த்து போக்யதாப்ரகர்ஷமும்: * அதனிற்பெரிய என் அவாவிறே இவளது. அன்றியே, [புணர்தோறும் புணர்ச்சிக்காராச்சுகவெள்ளம்]- அதாவது - ஸம்ஶ்லேஷம் காதாசித்கமாய், ஸுகம் நிரதிசயமாயிருக்கை. † "நிலத்தினும் பெரிதேவானிலும் உயர்ந்தன்று, நீரினுமாரளவன்றே சாரல், கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு பெருந்தேனிழைக்கும் நாடனொடுநட்பே" என்னக்கடவதிறே. குறிஞ்சிப்பூக் கொண்டு, பெருந்தேனிழைக்கை. இஸ்ஸுகந்தான் எவ்வளவுபோருமென்னில்? [விசும்பு இத்யாதி] - ஸர்வபதார்த்தங்களையும் தன்னுள்ளே வைத்துக்கொண்டிருக்குமதிறே ஆகாசமாகிறது; அதுதன்னைக் குளப்படியாக்கி, * மயர்வறமதிநலமருளப்பெற்ற அறிவையும் விளாக்கொலைகொள்ளாநின்றதாய்த்து. அன்றிக்கே, விசும்பென்று-பரமபதமாய்,—"தாமரைக் கண்ணனுலகு" என்னக்கடவதிறே ஸுகாதிசயத்துக்கு. ஆக,—த்ரிபாத்விபூதியையும் விஞ்சி, உபயவிபூதியையும் தன்னுள்ளேயாம்படியிருக்கிற அறிவையும் மேலிடும்

---

*ஏதத்விவரணம் - துலைய இத்யாதி. இத்தால் பலிதம் - போக்தாவால் இத்யாதி. உண்டறுக்க - அநுபவித்துத்தலைக்கட்ட. புணர்தோறும் - ஸம்ஶ்லேஷிக்குந்தோறும். அதுக்கடியேது? என்ன - கலக்கிற இத்யாதி. இருவர்படியும் எப்படியிருக்குமென்ன - அவன்ஸ்வரூபம் இத்யாதி வாக்யத்வயம். அவன் போக்யதா ப்ரகர்ஷமும் என்றபடி. "புணர்ச்சி" என்று - அல்பஸம்ஶ்லேஷமாய், ஆராச்சுகவெள்ளம் - அதுக்கடங்காத நிரதிசயஸுகம் என்றருளிச்செய்து, "புணர்ச்சி" என்று - காதாசித்க ஸம்ஶ்லேஷமாய், "ஆராச்சுகவெள்ளம்" என்று - அதுக்கடங்காத நிரவதிகஸுகமென்று யோஜநாந்தரம் - அன்றியே புணர்தோறும் இத்யாதி. அல்பஸம்ஶ்லேஷத்தாலுண்டான அநவதிக ஸுகமென்னுதல், காதாசித்க ஸம்ஶ்லேஷத்தாலுண்டான அநவதிகஸுகமென்னுதலென்று அர்த்தத்வயம். ஸம்ஶ்லேஷம் அல்பமாய் ஸுகம் அநவதிகமாயிருக்குமென்றும், ஸம்ஶ்லேஷம் அல்பகாலமாய் அத்தாலே ஸுகம் அநவதிகமாயிருக்குமென்றும் இரண்டுக்கும்பேதம். "அல்பஸம்ஶ்லேஷத்தாலே அநவதிகஸுகமுண்டு" என்கைக்கு ஸம்வாதம் - நிலத்தினும் இத்யாதி. இச்செய்யுளிலே அல்பஸம்ஶ்லேஷத்தாலே அதிகஸுகமுண்டாமென்று எங்கேசொல்லிற்றென்ன - குறிஞ்சிப்பூ இத்யாதி. தாழ்வரையில் கறுத்தகோலையுடைய குறிஞ்சிப்பூவின் ரஸத்தைக்கொண்டு மிக்க தேனை ஸம்பாதிக்கிற நாட்டையுடையவனோட்டை ஸ்நேஹம், பூமியைப்பற்றவும் பெரிதாய் ஆகாசத்தைப்பற்றவுமுயர்ந்து நீரைப்பற்றவும்நிறைந்திருக்குமன்றோ? என்றபடி. உயர்ந்தன்று என்றது - உயர்ந்ததென்றபடி. இம்மூன்றும் மற்றையிரண்டு பூதங்களுக்கும் உபலக்ஷணமாய், பஞ்சபூதங்களைப்பற்றவும் பெரியதென்றபடி. இத்தால் - அல்பரஸத்தைக்கொண்டு அதிகமானதேனை ஸம்பாதிக்கிறதேசமாகையாலே அத்தேசத்தையுடையவனுடைய அல்பஸம்ஶ்லேஷம் அதிகஸுகாவஹமென்று கருத்து. "விசும்பிறந்து" என்றதுக்கர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. மோக்ஷஸுகத்தைப்பற்றவும் ஸம்ஶ்லேஷஸுகம் விஞ்சியிருக்குமோவென்ன - தாமரை இத்யாதி. அதாவது - அத்யந்த விஷயாஸக்தனாயிருப்பானொருவனை மீட்கைக்காக "காமபுருஷார்த்தம் அல்பாஸ்த்திரத்வாதிதோஷதுஷ்டம், மோக்ஷஸுகமேகாண் அநந்தஸ்த்திரபலம்" என்ன, விஷயாஸக்தன் சொல்லுகிறான்- "தாம்வீழ்வார்மென்றோட்டுயிலினினிதுகொல், தாமரைக்கண்ணனுலகு" என்று: தாமரைக்கண்ணனுலகுண்டு - மோக்ஷஸுகம்; அது, தாங்களேவிழுந்து ஆசைப்படும் ஸ்த்ரீகளுடைய ம்ருதுவானதோளிலே யுறங்குகிறதிற்காட்டில் இனிதுகொல்? அன்றேயென்றபடி. "தாமரைக்கண்ணனுலகு - இனிதுகொல்" என்றந்வயம். த்விதீயார்த்தத்தை விவக்ஷித்து, "விசும்பிறந்து அறிவை மூழ்க்க" என்றதின் அர்த்தத்தை நிரூபிக்கிறார்-ஆகஇத்யாதி. மூழ்க்கச்சூழ்ந்தது - மூடும்படிவிஞ்சியிருக்கிற அந்தச்சுகவெள்ளமென்றபடி. "அதனிற்பெரிய*

---

† குறுந்தொகை - ௩.

படியாய்த் திருக்கிறது. [அது கனவெனநீங்கி] - அது ஸ்வப்நகல்ப மென்னலாம்படி கழிந்ததாய்த்து. அதின்பரப்பைக்கண்டவாறே அதுக்கு ஓர்அவதியில்லை யென்னும்படியாய்த்திருந்தது; அதுவும் வற்றினபடியைக் கண்டவாறே, இது பெருக்காறுவற்றி அடிசுட்டாற்போலேயாய்த்து. அப்படி கலந்தவனிறே பிரிந்தானும். கனவென்றும் இந்த்ரஜாலமென்றும் - அபர்யாப்தமான கலவியைச் சொல்லக்கடவது; இதுவும் அநந்தரம் காணவொண்ணாதபடியாயிருக்குமே. [ஆங்கே] - அத்தசையிலே. [அகவுயிர்] - ப்ராணஸ்தாநமான ஹ்ருதயம். [அகமகந்தோறும்] - ஹ்ருதயத்திலுண்டான அவகாசந்தோறும். முன்புள்ள ஸம்ச்லேஷவிச்லேஷங்களாலே ஹ்ருதயம் புடைபட்டிறேயிருப்பது. ஸம்ச்லேஷவிச்லேஷம் அவகாசத்தையுண்டாக்கும்; அந்த அவகாசமுள்ளவிடமெங்கும் ஆற்றாமை புகுந்தது. [ஆவியின்பரமல்லவேட்கை] - அணுபரிமாணமான ஆத்மவஸ்துவின் அளவல்ல அபிநிவேசம்; "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்றாரே அவரும்; ஆச்ரயத்தின் அளவல்லவாய்த்து அபிநிவேசம். ஸுகது:கங்களும், அவையொழிந்த ஸ்வரூபேணாவஸ்திதியும் என்று மூன்றுஉண்டிறே; அதில் ஸ்வரூபேணாவஸ்திதியிலேதான் நிற்கப்பெற்றதோ! [அந்தோ!] - இதுதனக்கு உபதேசங்கொண்டறிய வேண்டுவதே! கலக்கிறபோது இருவரும்வேண்டிப் பிரிவில்வந்த ஆற்றாமைக்கு நான் சொல்லவேண்டும்படியாவதே!. கலவிக்கு இருவராய் ஆற்றாமை யொருதலையிலேயாவதே!. ஆனால் செய்யவேண்டுவதென்னென்னில்?—[நின்பசுநிரைமேய்க்கப்போக்கு - வீவ]. அதுதான் தவிரவேண்டுகிறது என்னென்னில், - [மிகமிகவினியுன்னைப் பிரிவையாமால்] — மேன்மேலெனஉன்னைப்பிரிவாம். [பிரிவை] - என்கிறவிது - செய்யுட்பாடாய், பிரிவுண்டாம்படி வருகிற பசுநிரை

---

வென்னவா" என்னக்கடவதிறே. ஆராச்சுகவெள்ளமானது கனவென நீங்கினபடியென்னென்ன - அதின்பரப்பை இத்யாதிவாக்யத்வயம். அதின்பரப்பை-ஸுகத்தின் வைபுல்யத்தை. அதுக்குஹேதுவேதென்ன - அப்படிகலந்தவன் இத்யாதி. அதாவது - அவ்வஸ்துவின் வைலக்ஷண்யம் பிரிவிலும் அப்படிபண்ணவற்றென்றபடி. அப்படியென்றது - ஆராச்சுகவெள்ளம் உண்டாம்படியென்றபடி. "கனவு" என்று - ஸ்வப்நம்; அன்றிக்கே, அபர்யாப்தமான கலவியாகவுமாமென்கிறார் - கனவென்றும் இத்யாதி. "கனவு" என்று - அபர்யாப்தமான கலவியைச்சொல்லுமோவென்ன - இதுவும் இத்யாதி. இதுவும் - கலவியுமென்றபடி. உயிர்னுடையஅகம் - ப்ராணஸ்தாநமான மநஸ்ஸு. அகமகந்தோறும் - மநஸ்ஸினுடைய அவகாசந்தோறுமென்றபடி. அணுவானமநஸ்ஸுக்கு அவகாசமுண்டோவென்ன-முன்புள்ள இத்யாதி. உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, "உள்புக்குஆவியின் பரமல்லவேட்கை" என்றதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார் - ஸம்ச்லேஷம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. "ஆத்மவஸ்துவினளவல்ல அபிநிவேசம்" என்றதுக்கு ப்ரமாணம் - என்றனளவன்றால் இத்யாதி. இரண்டாந்திருவந்தாதி, 'மாலேநெடியோனே" இத்யாதி. இதுக்கர்த்தம் - ஆச்ரயத்தின் இத்யாதி. 'அந்தோ' என்ற பதோபாதாநாநந்தரம், ஸுகது:கங்களும் இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். "அந்தோ!" என்றதுக்குபாவம் - ஸுகது:கங்களும் இத்யாதி. ஸ்வரூபேணாவஸ்திதியாவது - ஸுகது:கங்களிரண்டுமின்றிக்கே யிருக்கிற அவஸ்த்தை. "அந்தோ!" என்றதுக்குபாவாந்தரம் - இதுதனக்கு இத்யாதி. விவரணம் - கலக்கிறபோது இத்யாதி. ஏதத்விவரணம் - கலவிக்கு இத்யாதி. மிகமிக - மேன்மேல். "உன்னைப்பிரிவையாம் -" உன்னுடைய விச்லேஷமுண்டாம். உத்தரோத்தரமுன்னுடைய விச்லேஷவ்யஸநம்வருமென்றபடி. "பிரிவையாம்" என்றிருக்க, பிரிவாம் என்பானென்னென்ன - பிரிவையென்கிற இத்யாதி. செய்யுட்பாடு - அவ்யயம். "பாட்டென்னவும் செய்யுளெனப்படும்" என்றிருக்கையாலே, செய்யுளென்று - பாட்டாய், பாடென்று - சேருகையாய், சந்தஸ்ஸுசேரும்படி யென்றபடி. ஆக, செய்யுட்பாடாயென்றது - சந்த:பூரணார்த்தமாயென்றபடி. ஆல் - அசை. "போக்கு" என்று ஏகவசநமாய், "வீவ" என்று பஹுவசநமாவானென்

மேய்க்கப்போக்கு வீவ. ''பசுவந்தன'' என்னுமாபோலே போக்குக்கள் தவிரப்படுவன வாக, [இனி - வீவ] - இதுக்கு முன்புள்ளகாலமெல்லாம் பிரிந்துபோந்தாயேயாகிலும், இனிமேலுள்ள காலமாகிலும் தவிரவேணும். (உ)

---

## மூன்றாம் பாட்டு.

**வீவன்நின்பசுநிரைமேய்க்கப்போக்கு வெவ்வுயிர்கொண்டெனதாவிவேமால், யாவருந்துணையில்லையானிருந்துஉன்னஞ்சனமேனியையாட்டங்காணேன், போவதன்றுஒருபகல்நீயகன்றால்போருகயற்கண்ணிணைநீரும் நில்லா, சாவதுஇவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந்தஇத்தொழுத்தையோம்தனிமைதானே.**

*ஆ.*—(வீவனின்.) - உன் பசுமேய்க்கப் போக்குக் காரணமாக நான் முடிவன்; விரஹாக்நியாலே என்னுத்மா தஹ்யமாநமாகாநின்றது: பின்னையொரு துணையுமில்லை; உன்வரவு பார்த்துக்கொண்டு நான் தனியேயிருப்பன்; என் துணையானவுன்னை வரவுங்காணேன்; நீ யகன்றால் இப்பகலெங்கும் போவதுஞ்செய்யாது; இக்கண்ணநீரும் நில்லாது; இந்த ஒருதலைமாத்திரமான ஸ்நேஹமானது சாலப்பொல்லாதாகாதே! என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், நீஉபேக்ஷித்திருக்க இடைப்பெண்களான நாங்களே ஸ்நேஹித்திருக்கிற இவ்வொருதலைக்காமம் நசிக்கவேணு மென்கிறாள்.

[வெவ்வுயிர்கொண்டு என்று தொடங்கி] - வெவ்விதாக நெடுமூச்செறிந்து என்னுடைய ஹ்ருதயம் தஹ்யமாகாநின்றது; நீ போனவாறே ஸர்வமும் ப்ரதிகூலமாம்; இவ்வவஸாநத்தோடே நான் ஜீவித்திருப்பதுஞ்செய்து ப்ரமஹாரமான வடிவை யுடைய உன்னுடைய ஸஞ்சாரமும் காணேன்; நீ போனால் பகல் குறைந்துகாட்டாது; வ்யஸநம் பொறுக்கமாட்டாமையாலே அலமந்துபோருகிற கயல்போலேயிருக்கிற கண்களும் நீர் மாறுகிறனவில்லை. [சாவது இவ்வாய்க்குலத்து என்று தொடங்கின மேலுக்கு] - எங்களுடைய விஶ்லேஷம் நசிப்பதென்றுமாம். முடிந்து பிழைக்க வேணுமென்று கருத்து. எங்களுக்கு விநாஶமாவது தனிமை யென்றுமாம்.

*ப.*—அநந்தரம், ஊர்ஶநீயமான வடிவழகையுடைய உன்னைக்காணாதே க்லேசிக்கிற எங்களுடைய தனிமையானது முடிவாகவேணுமென்கிறாள்.

நின்பசுநிரைமேய்க்கப்போக்கு-(நீ ஸ்வதர்மாநுஷ்டாநமாக நினைத்துப்போருகிற) உன் பசுநிரைமேய்க்கப்போக்கிலே, வீவன் - நான்முடிந்துவிடுவன் ; வெவ்வுயிர் கொண்டு - (விரஹவ்யஸயாலே) வெவ்விதாகமூச்சுவிட்டு, எனது ஆவி - என்னுடைய ஆத்மாவானது, வேம் - அத்தாலேபரிதபியாநின்றது; (அவ்வவஸ்தையில்), துணை - துணையாவார், யாவருமில்லை - ஒருவருமில்லை: (அவ்வளவிலும் ஆஶாபந்தத்தாலே), யான் - நான், இருந்து - முடியாதிருந்து, உன் அஞ்சனமேனியை - அஞ்சநம்போலே

---

னென்ன - பசுவந்தன் இத்யாதி. அதாவது - பசுக்களென்று அர்த்தாத்விதிக்குமாபோலே, போக்குக்களென்றும் விதிக்குமென்றபடி. ''இனி'' என்றதுக்கர்த்தம் - இதுக்குமுன்பு இத்யாதி. (உ)

தர்ஶநீயமான உன்வடிவை, ஆட்டம் - நடையாட்டம், காணேன்-; நீ அகன்றால் - நீ போனால், ஒருபகல் - அந்தவொருபகல்தான், போவதுஅன்று-போகாதேநில்லாநிற்கும்: (ஆற்றாமையாலே அலமந்து), பொரு - (தன்னில்தான்)பொருகிற, கயல்-கயல்போன்ற, கண்ணிணை - நீ கொண்டாடும்கண்ணிரண்டும், நீரும் நில்லா-நீர்தணித்தாலும் நிற்கிறன வில்லை; இவ்வாய்க்குலத்து - (நீ பிறந்த) இடைக்குலத்திலே, ஆய்ச்சியோமாய்ப்பிறந்த-இடையராய்ப்பிறவாதே இடைச்சிகளாய்ப்பிறந்த, தொழுத்தையோம் - தண்ணியோமான எங்களுடைய, இத்தனிமைதானே - இத்தனியிருப்புச்செய்தது, சாவது - போவதாகவேணும். தனிமை — ஸ்வபாவமாகையாலே, அதன்முடிவு தங்கள்முடிவென்று கருத்து. தனிமைதானே எங்களுக்குச் சாவாவதென்றுமாம்.

ஈ.—மூன்றாம்பாட்டில், நீ உபேக்ஷித்திருக்க நாங்கள் ஸ்நேஹித்திருக்கிற இவ்வொருதலைக்காமம் நசிக்கவேணுமென்கிறாள்.

[வீவன் இத்யாதி]-"பசுமேய்க்கை ஸ்வதர்மமாகையாலே அதுக்காகப் போக்கைத் தவிரலாமோ?" என்ன; உன்போக்கிலே நான்முடிவன்; ஸ்த்ரீவயம் ஹலிக்கவரும் தர்மம் தர்மமல்ல காண்! இது உனக்கு முடிவாகிறபடி எங்ஙனே? என்ன,—[வெவ்வுயிர் இத்யாதி] - உன்போக்கை நினைத்து வெவ்விதாக நெடுமூச்செறிந்து, அத்தாலே ஹ்ருதயம் உலர்ந்து, விரஹாக்நியாலே வேவாநின்றது. நான் போனால வ்ருத்தகீர்த்தநத்தாலே தரித்தாலோவென்ன?—[யாவரும் துணையில்லை] - நீபோனால் உதவக்கடவ தோழியரும் துணையல்லர்: குயில்முதலான பதார்த்தங்களும் ப்ரதிகூலமாம். துணையான உன்ஸந்நிதியில் எல்லாரும் துணையாம், நீபோனாலொரு துணையில்லை. [யான் இருந்து]-வ்யவஸாயத்திலும் நூறே ப்ராயமாயிருப்பன். விலக்ஷணவிஷயமாகையாலே முடியவுமொட்டாது, தரிக்கவுமொட்டாது. நசையாலே முடியவுமொண்ணாது, ஆற்றாமை தரிக்கவுமொட்டாது. [உன் அஞ்சனமேனியை யாட்டம்காணேன்] - இருந்தால் ஜீவிக்கும் ஜீவநமும் பெறேன். ஸ்ரமஹரமான வடிவைக்கொண்டு என்முன்னே ஸஞ்சரிக்கக் காணேன். உன்னைக் கண்ணுடிப்புறத்திலும் கண்டறியாயோ? இவ்வடிவைப் பிரிந்தார் பிழையா ரென்றிருக்க வேண்டாவோ? காமினியாகையாலே ஸ்வரூபத்திலும் குணத்திலும்இழியாளிறே: வடிவையிறே ஆசைப்படுவது. [ஆட்டம்] - நடையாட்டம். இதெல்லாம் ஒரு பகலளவுக்கேயென்ன - [நீயகன்றால் - போவதன்று ஒருபகல்] - நீ பிரிகையாலே ஒரு பகலாவது போகிறதில்லை. முப்பது நாழிகை சென்றால் ஒரு க்ஷணமும் குறைந்து காட்டுகிறதில்லை. உனக்குப்போலே யென்றிருந்தாயோ எனக்கும்? காலத்தினுடைய குறைவும் நிறைவும் விஷயாதீநமாயிறே யிருப்பது. கலவியில் கல்பம் க்ஷணமாய், வ்யதிரேகத்தில் ஒருக்ஷணம் கல்பமாயிறே யிருப்பது. [பொருகயல் இத்யாதி] - வ்யஸநத்தாலே அலமந்து பொருகிற கயல்போலேயிருக்கிற கண்களும் நீர்மாறுகிறதில்லை. கண்ணீர் என்னால் தகையப்போகிறதில்லை. [நீரும்நில்லா] - உன்னைத்தகையிலும் என்னால் அத்தைத் தகையப்போகிறதில்லை. பின்னைச் செய்யவடுப்பதென்? என்ன,—[சாவது இத்யாதி] - இவ்வாய்க்குலத்திலே இடைச்சியோமாய்ப்பிறந்த இத்தண்ணியோமான எங்கள் தனிமை. [சாவது] - நசிப்பது. அதாவது - முடிந்து பிழைக்கவேணு மென்கை. [தனிமைதானே - சாவது] - எங்களுக்குத் தனிமைதானேயிறே மரணமாவது? தனிமையென்றும் விநாஶமென்றுமிரண்டில்லை யென்றுமாம். நாங்கள் ஜீவிக்கவுமாம், தவிரவுமாம்: இந்த ஒருதலைக்காமம் நசிக்கவேணும்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. நீ உபேக்ஷித்திருக்க நாங்கள் ஸ்நேஹித்திருக்கிற ஒருதலைக்காமம் நசிக்கவேணுமென்கிறாள்.

[வீவன் இத்யாதி] - உன் பசுநிரைமேய்க்கப் போக்குநிமித்தமாக, நான்வீவன்- நான்முடிவன். "அதுஎனக்கு தர்மமன்றோ?" என்றிராதே, உனக்கு ஸ்த்ரீவதமாய்ப்பலிக் கக்கிடாய்ப் புகுகிறது. இப்போது முடியும்படி வந்ததென்னென்னில், - [வெவ்வுயிர் இத்யாதி] - என்னைப்பார்க்கமாட்டாயோ ? உன்னுடைய போக்குநிமித்தமாக நெடுமூச் செறிந்து அதுவேஹேதுவாக உலர்ந்த என்னுடைய ஹ்ருதயமானது, விரஹாக்நிகொளுந்தி எரியாநின்றது; இதிலே நீரைச்சொரியவல்லையே யென்கிறாள். [எனதாவி] - உன்னைப் போலேயென்றிராதே கொள்ளாய் அல்லாதாரையும் [யாவருந்துணையில்லை] - துணையான நீதானேபோனாய்: நீபோனால் துணையான தோழிமார் தானேயில்லை: குயில் மயில் தொடக்க மானவை தானே ஊர்ப்பகையாய்த்து. [யானிருந்து] - நீபோனால் படுவுற்றைத்தான் படப் பெற்றேனோ? எல்லாம் பட்டும் நூறேபிராயமாயிருந்தது; இன்னம் ஒருகால் காணலா மென்னும் நசைமுடியவொட்டாதிறே. பிரிந்த விஷயந்தான் முடியவுமொட்டாது, தரித் திருக்கவுமொட்டாது ; அர்ஜுநன் பின்பிருந்து எளிவரவுபட்டாற்போலே. [உன்னஞ்சன மேனியை யாட்டங்காணேன்] - இருந்தார் ஜீவிக்கும் ஜீவநத்தைத்தான் ஜீவிக்கப் பெற்றேனோ? * ஏழையராவி தேட்டமாயிருக்கிறதுகாணும் இவளுக்கு இப்போது. [உன்]- உன்னை நீதான் கண்ணாடிப்புறத்திலே கண்டறிதியே. கண்டாயாகில் "நம்மைப்பிரிந்த வர்கள்பிழையார்கள்" என்றிருக்கவேண்டாவோ ? [மேனியை] — ஸ்வரூபத்திலாதல்

---

*மூன்றாம்பாட்டு.—வீவன் இத்யாதி. "இவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப் பிறந்த இத் தொழுத்தையோம் தனிமைதானே - சாவது" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - நீ உபேக்ஷித் திருக்க இத்யாதி.*

*"முடிவன்" என்றால் ஜாத்யுசிதப்ரமத்தை விடப்போமோவென்ன - அதுஎனக்கு இத்யாதி. வெவ்வுயிர்கொண்டு - நெடுமூச்செறிந்துகொண்டு. வெவ்வுயிர் - பெருமூச்சு. தாத்பர்யம் - என் னைப்பார்க்க இத்யாதி. "ஆவி வேம்" என்றதுக்கு ஹார்த்தபாவமாதல், "ஆவி" என்றதுக்கு பாவ மாதல் - இதிலே இத்யாதி. "எனது" என்றதுக்கு பாவம் - உன்னைப்போலே இத்யாதி. நான் போனால் வ்ருத்தகீர்த்தநத்தாலே தரித்தாலோவென்ன - யாவரும்துணையில்லை இத்யாதி. இதுக் கர்த்தம் - துணையான இத்யாதி. ஊர்ப்பகை - ஊரிலுள்ளபேரெல்லாம் பகை. "யானிருந்து" என்றதுக்கு பாவம் - நீபோனால் இத்யாதிவாக்யத்வயம். படுவுற்றைத்தான் படுகையாவது - உத்தர க்ஷணத்திலே முடிகை. ஆனால் முடியவொண்ணாதோவென்ன - இன்னமொருகால் இத்யாதி. ஆனால் தரித்திருக்கிறதுக்கென்னென்ன-பிரிந்த இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - அர்ஜுநன் இத் யாதி. அவன்போனதை நிஸ்சயித்துச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே, "அஞ்சனமேனியை யாட்டங்காணேன்" என்றதுக்கு - உருவுவெளிப்பாடாக்கி, அந்தவுருவுவெளிப்பாடுதான் தேட்டமா யிருக்கிறதென்கிறார் - இருந்தார் இத்யாதி. விஸ்லேஷத்தில் உருவுவெளிப்பாடு காமிநிகளுக்கு உஜ் ஜீவநமாயன்றோ விருப்பது? அதுவுமில்லையென்றபடி. ஆனால் * ஏழையராவியிலே உருவுவெளிப் பாடும் ப்ராகமாய்த்தில்லையே ? என்ன - ஏழையராவி இத்யாதி. அங்ஙனன்றிக்கே "அஞ்சனமேனி" என்ற துக்கு பாவம் - இருந்தார் இத்யாதி. இருந்தார் - நூறேபிராயமாக விருந்தார். ஜீவிக்கும்ஜீவநம் - அநுபவிக்கும்அநுபவம். "ஆட்டம்காணேன்" என்றதுக்கு பாவம் - ஏழையராவி இத்யாதி என்றிங் ஙனே யோஜிக்கவுமாம். நம் வடிவு உனக்கு அநுபவிக்கவேணுமாகில், மெள்ளச்செய்கிறோமென்றாறி யிருக்க வொண்ணாதோவென்ன-உன்னை இத்யாதி. கண்டால் நாம் செய்யுமதேதென்ன-கண்டாயாகில் இத்யாதி. ஸ்வரூபாதிகள்கிடக்கத் திருமேனியைச் சொல்லுவானென்னென்ன - ஸ்வரூபத்திலாதல்*

குணத்திலாதல் இழியுமவளன்றே: காமிநி உடம்பை ஆசைப்படுமேவளிறே! [ஆட்டங்காணேன்] -அவ்வடிவோடே என்முன்னே ஸஞ்சரிக்கக் காணப் பெறுகிறிலேன். ''இதேல்லாம் ஒருபகலைக்கே'' என்ருன் - [போவதன்று இத்யாதி] - உனக்குப்போலே என்றிராதே கோள்ளாய் எங்களுக்கும். நீ பேரநின்ருல், நாழிகைமுப்பது சென்ருலும் மலையாளர் வளைப்புப்போலே ஓரடிபேராதாய்த்து; அது பகலின் ஸ்வஹாவமல்ல :—[நீயகன்ருல்] - உன் ஸ்வஹாவத்தாலே. பகலின் ஸ்வஹாவமாகில் கூடவிருந்தபோதும் போகாதோழியவேணுமிறே. கூடவிருந்தால் இரவுகாணவோண்ணுதாற்போலே யாய்த்து, நீயகன்ருல் பகல் போகாதபடி. அவன்கூடவிருந்தால் இரவுகாணவோண்ணுதே; * நாரணனைக்கண்டேன்-பகற்கண்டேனிறே. ''போவதன்றேருபகல்'' என்று இதுதானும் சொல்லமாட்டாதே காணும் அவனிருக்கிறது; ''கலவி செல்லாநிற்கச்செய்தே பிரிவைநினைக்கை யாவதேன்?'' என்றிறே அவனிருப்பது; ''பிரியேன்'' என்னவல்லன் என்ருளே பண்டே. [பொருகயல் இத்யாதி] - உன்போக்கை நினைத்துப் பாய்கிற கண்ணநீர் என்ருல் தகையப்போகிறதில்லை. [நீரும்நில்லா] - உன்னைத் தகையிலும் நீரைத் தகையப் போகிறதில்லை. பொருகிற கயல்போலேயாய்த்துப் பிரிவைநினைத்துத் தடுமாறுகிறபடி. அதுக்குச் செய்யவேண்டுவதேன் ? என்ன — [சாவது இத்யாதி] - இவ்விடைக்குலத்தில் இடைச்சிகளாய்ப் பிறந்த தண்ணியோமான எங்களுடைய தனிமை சாவது. நீபோகிலும் போகிருய், இருக்கிலும் இருக்கிருய்: இத்தனிமை நசிப்பது. ''இவனுக்கு நான் நூறுபிள்ளை பெறவேணும்'' என்ற ஸாவித்ரியைப்போலே சொல்லுகிருள். அன்றிக்கே, [தனிமைதானே-சாவது]-எங்களுக்குத் தனிமையென்றும் விநாஶமென்றும் இரண்டில்லைகாண்! தனிமைதானே விநாஶமென்னவுமாம். ''நின்னலாலிலேன்'' என்னுமவரிறே ; ''இறப்பதற்கேயேண்ணுது'' என்

*இத்யாதி. உக்தார்த்தத்துக்கு உபபத்தி - காமிநி இத்யாதி. ''இருந்தார் ஜீவிக்கும்'' இத்*[illegible] *தின் அர்த்தாநுகுணமாக ''ஆட்டம்காணேன்'' என்றதுக்கர்த்தம் - அவ்வடிவோடே இத்யாதி. ஆட்டம் - நடையாட்டம்; ஸஞ்சாரம். ''நீயகன்ருல் - ஒருபகல் - போவதன்று'' என்றதுக்கு ஹாவம் - உனக்குப்போலே இத்யாதி. விவரணம் - நீ பேர இத்யாதி. மலையாளர்வளைப்பாவது - மலையாளிகள் ஒருவன்கையிலே யொன்றைவாங்க நினைத்தால் வாங்கியல்லது போகார்கள்: வளைப்புக்கிடப்பார்கள் ; அதுபோலே என்றபடி. ''நீயகன்ருல்'' என்றதுக்கவதாரிகை-அது இத்யாதி. பகலின் ஸ்வஹாவந்தானுலோவென்ன - பகலின் இத்யாதி. அதாவது - பகலின் ஸ்வஹாவமேயானுல், அவனோடே கூடியிருந்தபோது ஒருக்ஷணமாய்ப்போகிறதிறே, அப்போதும் போகாதொழிய வேணுமென்றபடி. அவன் ஸ்வஹாவத்தாலே போமோவென்ன ; வ்யதிரேக த்ருஷ்டாந்தமுகேந உபபாதநம்-கூடவிருந்தால் இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - பகற்கண்டேன் இத்யாதி. இவளைப்போலே அவனும் ''நீயகன்ருல் - போவதன்றேருபகல்'' என்னவேண்டாவோவென்ன - போவதன்று இத்யாதி. மாட்டாமைக்குஹேதுவேதென்ன - கலவி இத்யாதி. ஹேத்வந்தரம்-பிரியேன் இத்யாதி. அதாவது-சொன்னுலும் விஶ்வஸியாளென்றபடி. ''பேதை நின்னைப்பிரியேனினியென்றகன்ருன்'' என்று திருமொழி. ''நீரும்'' என்ற சஶப்தார்த்தம் - உன்னை இத்யாதி. ''பொரு'' என்றதுக்கு ஹாவம். பொருகிற இத்யாதி. பொருகிற - யுத்தம் பண்ணுகிற. விவரணம் - நீபோகிலும் இத்யாதி. தொழுத்தையோம் இத்தனிமை, என்றந்வயிப்பது. இதுக்கு த்ருஷ்டாந்தம் - இவனுக்கு இத்யாதி. அதாவது - நீ போகாதே கூடவிருக்கவேணுமென்று மறைத்துச்சொல்லுகிருளென்றபடி. ''சாவது'', என்கிற இது, மரணவாசியாக அர்த்தாந்தரம் - எங்களுக்கு இத்யாதி. ''தனிமை-விநாசம்'' என்னுமதுக்கு ப்ரமாணத்வயம் - நின்னலால் இத்யாதிவாக்யத்வயம். இறப்பதற்கேயேண்ணுது - கைவல்யத்தில் மநஸ்ஸைவையாதேயென்று ஶப்தார்த்தம். கைவல்யத்தையென்னுதே, ''இறப்பதற்கே'' என்கையாலே - ஐஶவத்விஶ்லேஷம் மரணமென்றபடி. இத்தால் - கேவலனுக்கு ஐஶவத்ப்ராப்தி யில்லையென்றுகருத்து. திருநெடுந்தாண்டகம், ''மின்னுருவாய்'' இத்யாதி. தொழுத்தையோம். தண்ணி*

ருரே யவரும். அன்றிக்கே, [தனிமை - சாவது] - இத்தனிமை சாலப்பொல்லாதென்னவுமாம். இவ்வொருதலைக்காமம் போவது. கைக்கிளைத்தலைவி பொறையழிந்தால்எல்லாம் சொல்லப்பெறுமிறே. (௩)

---

## நான்காம் பாட்டு.

தொழுத்தையோந்தனிமையுந்துணைபிரிந்தார்துயரமும்நினைகிலை கோவிந்தாநின், தொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித் துறந்தெம்மையிட்டு அவைமேய்க்கப்போதி, பழுத்தநல்லமுதின்இன்சாற்றுவெள்ளம்பாவியேன்மனமகந்தோறும்உள்புக்கு, அழுத்தநின்செங்கனிவாயின்கள்வப் பணிமொழிநினைதோறும்ஆவிவேமால்.

ஆ—(தொழுத்தையோம்.) - அடியோங்கள் தனிமையையும் உன்னைப் பிரிந்து நாங்கள்படுகிற வ்யஸநத்தையும் ஒன்றும்பாராதே, உன்னுடைய பசுக்களையே யுகந்து எங்களைத்துறந்து பொகட்டு அவை மேய்க்கப்போதி என்ன; "உன்னுடைய கடாக்ஷமே தாரகமாயிருக்கிற நான் உன்னைப்பிரிந்துபோகையாவதென்" என்றாற்போலே ஸாந்த்வரூபமாய் ப்ரேமகர்ப்பமாய் அதிமதுரமாயிருப்பனசில பணிமொழிகளை யருளிச்செய்தருள; இவையிறே நினைக்கநினைக்க என்னைமாய்க்கின்றன என்கிறாள்.

ஓ.—நாலாம்பாட்டில், இவன் போகிறானென்று இப்பிராட்டி நோவுபடப் புக்கவாறே, "உன்னைப்பிரிய ஸம்ஹாவனையுண்டோ?" என்று மற்றும் ஸவிநயமாகச் சில வார்த்தைகளை யருளிச்செய்ய, இவையிறே என்னைமாய்க்கின்றன என்கிறாள்.

[தொழுத்தையோம் என்றுதொடங்கி] - கோவிந்தா! ஆஸிமதரைப்பிரிந்தார் படும் விஶ்லேஷமும், உன்னைப்பிரிந்து நாங்கள்படும் வ்யஸநமும் நினைக்கிறிலை; உன் தொழுவில்நிற்கும் பசுக்களையே ஆதரித்து அசேதநபதார்த்தங்களைப் பொகடுமாபோலே எங்களைப்பொகட்டு அவை மேய்க்கப் போகக்கடவை. [பழுத்த நல்லமுது என்று தொடங்கி] - பக்வமாய் விலக்ஷணமான அம்ருதத்தினுடைய இனியசாற்று வெள்ளம் போலே ஹ்ருத்யமாயிருக்கிற உன்னுடைய பணிமொழிகளை ஹ்ருதயாவகாஹந்தோறும் மறக்கவொண்ணாதபடி ஸ்திரமாக்க, உன்னுடைய சிவந்த கனிபோலேயிருக்கிற வாயில் ஸர்வஸ்வாபஹாரக்ஷமமான பணிமொழிகளை நினைதோறும் ஆவி வேவாநின்றது.

---

யோம். மூன்றாமர்த்தத்துக்கு, "தனிமை - சாவது" என்றது - தனிமை மரணஸமமென்று ஸப்தார்த்தம். அதாவது - "[illegible] [illegible]" என்றாற்போலே சாவதுக்குஒக்குமென்றாய், பொல்லாதென்றபடி. "தனிமை - சாவது" என்றந்வயம். அவன்செய்தபடி கண்டிருக்குமதொழிய, கற்புடைய தலைவி "நீபோனால் மூடிவன்" என்னலாமோவென்ன - கைக்கிளை இத்யாதி. கைக்கிளையென்று - ஒருதலைக்காமமாய், தலைவியென்று - நாயகியாய், ஒருதலைக்காமமுடையநாயகி யென்றபடி. பொறை - க்ஷமை. (௩)

ப.— அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணஸ்வபாவனுன நீ ரக்ஷ்யைகதேசமான எங்களைப்போகட்டுப்போகாநின்றாய்; நாங்கள் உன்னுடைய க்ருத்ரிமோக்திகளை நினைத்து க்லேஶியாநின்றோம் என்கிறாள்.

கோவிந்தா - (கோபீஜநரக்ஷணத்தாலே) கோவிந்தாபிஷேகம்பண்ணினவனே! தொழுத்தையோம்-(உனக்கு ரக்ஷ்யபவர்க்கமாய்) அடிமைப்பட்ட எங்களுடைய, தனிமையும் - தனிமையையும், துணை - துணையானஉன்னை, பிரிந்தார் - பிரிந்தவர்கள், துயரமும்-ஆற்றாமையையும், நினைகிலை - நினைக்கிறிலை; (பிரிந்து தனிமைக்கு ஆற்றாமைப்பட்ட ஆர்த்திபாராதே), உன் - உன்னஸிமாநமான, தொழுத்தனில் - தொழுவில், பசுக்களையே - பசுக்களையே, விரும்பி- ஆதரித்து, எம்மை - (ரக்ஷ்யைகதேஶமான) எங்களை, துறந்து - அநாதரித்து, இட்டு - போகட்டு, அவை - அவற்றை, மேய்க்க - ரக்ஷிக்கைக்காகவே, போதி - போகாநிற்புதி : (அதுக்குமேலே), பழுத்த - பரிபக்வமாய், நல்அமுதின் - தெளிந்த அம்ருதத்தினுடைய, இன்- இனிப, சாற்றுவெள்ளம்-ரஸத்தினுடைய வெள்ளமானது, பாவியேன் - பிரிவுக்கடியான பாபத்தையுடைய என், மனமகந்தோறும் - நெஞ்சுபுடைதோறும், உள்புக்கு - புக்கு, அழுத்த - அழுத்தும்படியாக, நின் - உன்னுடைய, செம் - சிவந்த, கனிவாயின் - கனிபோலே போக்யமாயிருக்கிற திருப்பவளத்தில், கள்வம் - க்ருத்ரிமமான, பணி - தாழ்ந்த, மொழி - மொழிகளானவற்றை, நினைதொறும் - நினைக்குந்தோறும், ஆவி - என் ப்ராணன், வேம் - பரிதபியாநின்றது. பணிமொழி - தாழ்வையுடைத்தானமொழி; சொன்னமொழியென்னவுமாம்.

ஈ.—நாலாம்பாட்டில், இவன்போக்கை நினைத்து நோவுபடப்புக்கவாறே, "உன்னைப்பிரிய ஸம்பாவனையுண்டோ?" என்று இப்புடைகளிலே ஸவிநயமாகச் சில வார்த்தைகளைச் சொல்லப்புக, இவையிறே என்னை யழிக்கிறதென்கிறாள்.

[தொழுத்தையோம் தனிமையும்] - பஞ்சலக்ஷங்குடியிற்பெண்கள் திரண்டதிரளிலே படுகிற தனிமையிறே. தொழுத்தையோமென்றும் அடிச்சியோமென்றும் தங்கள்தோல்வியைச் சொல்லுகிறார்கள். [துணைபிரிந்தார் துயரமும்] - துணைபிரிந்தாரென்று - உன்னைப்பிரிந்தாரென்றபடி. "துணையென்றால் த்விஷ்டமாயன்று காணிருப்பது" என்னும் ஆச்சான். அவனை துணை; அல்லாதாரெல்லாம் கழுத்துக்கட்டி. தொழுத்தையோம் தனிமையும் அறிகிறிலை, துணைபிரிந்தார் துயரமும் அறிகிறிலை. பிரிகிறோம் நாங்களென்றும் அறிகிறிலை; பிரிகிறது உன்னையென்றும் அறிகிறிலை. [கோவிந்தா] - பசுக்களையும் இடையரையும் ரக்ஷிக்கவன்றோ கோவிந்தாபிஷேகம் பண்ணிற்று. [உன்தொழுத்தனில் பசுக்களையே விரும்பி] - உனக்கு ரக்ஷ்யமிரண்டானால் ஒருதலையை விரும்பவேண்டுகிறதென்? உன்தொழுவிலே வளைத்துவைத்தபசுக்களையோ விரும்பலாவது? உன்கைக்குள் அகப்பட்டாரை விரும்பலாகாதோ? பிரிந்தால்வரும் ஆற்றாமையறியாதார் வேணுமோ ரக்ஷிக்கைக்கு? [பசுக்களையே விரும்பி] - இவர்களையணைத்துக்கொண்டிருக்கும் தசையிலும் நினைவு அங்கேயாய், கண்ணியென்பது, பசுவென்பதாகாநிற்கும்: மித்யாபரிரம்பணமே யாய்த்துள்ளது. அமுதனார் "பசுவின் காலிலே முட்பாய்ந்தால் இடையன் தலைகாண் சீக்கொள்ளுமது" என்பர். உடம்பில் முட்பாய்ந்தால் உஜ்ஜீவாநுபவம் ஆத்மாவதிறே. [துறந்து] - அவற்றை விரும்பித் தங்களை ஸந்ந்யஸித்தான் என்றிருக்கிறார்கள். [எம்மையிட்டு]-அசேதநபதார்த்தங்களைப்

போகடுமாபோலே எங்களைப்போகட்டு. [அவை மேய்க்கப்போதி] - கூடவிருக்கும் போதும் அவற்றை ஸ்மரிக்கும். அவற்றின்பின்பு போனால் நம்மை நினைப்பதும் செய்யான். அவற்றினுடைய ரக்ஷணத்திலே ஆயாஸமுண்டு; எங்களுடைய ரக்ஷணத்திற்கு ஸந்தியில்லையமையும். [பழுத்த இத்யாதி] - "நாம் போகையாவதென்? போனாற்றான் உங்களை மறப்பதுண்டோ? என்னாற்றாமை உங்களுக்குண்டோ, மாதாபிதாக்கள் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பசுமேய்க்கப்போகிறோம் இத்தனையன்றோ?" என்று சிலநீசஸாஷணத்தைப் பண்ணினான்; இவைகிடாய் உன்மறத்தை எங்கள்பக்கல் வரவொட்டாதவை. பக்வமாய் விலக்ஷணமான அம்ருதத்தினுடைய இனிய சாற்றுவெள்ளம்போலே போக்யமாயிருக்கிற உன்னுடைய பணிமொழியுண்டு - சொல்லுகிறவார்த்தையென்னுதல்; கலவியிலே ஒருவகையான வாமம்ருதத்தைச் சொல்லுதல். [பாவியேன்] - அம்ருதம் நஞ்சாம்படியான பாபத்தைப் பண்ணினேன். பிரிவை நினைத்து, "பிரியேன்" என்னுமது விஷஸமமிறே. ஹ்ருதயாவகாஶந்தோறும் பிரிக்கவொண்ணாதபடி யழுத்த, உன்னுடைய சிவந்தகனிபோலேயிருக்கிற வாயில். [கள்வப்பணிமொழி] - எழுதிக்கொள்ளுகிற தாழ்ந்தபேச்சுக்கள். பிரிவைநினைத்துச் சொல்லுகிற வார்த்தையாகையாலே நெஞ்சையழிக்கக் கடவதாயிறேயிருப்பது. [கள்வம்] - நினைவொன்றும் செயலொன்றுமாயிருக்கை. [நினைதொறும்] - "தரிக்கலாமோ?"என்று நினைக்கப்புகும்: அதுதான் வ்யஸநமாம்! பின்னையும் விடமாட்டாள்; இப்படி யுருவச்செல்லாநிற்கை. [ஆவி வேமால்] - தனக்கு ஆஶ்ரயமான ப்ராணனைதா வேவாநின்றது. க்ஷணிக பக்ஷாரயம்போலே உத்பத்தியும் விநாஶமுமாய்ச் செல்லாநிற்கை. அக்நி ஆஶ்ரயாஶியாயிறேயிருப்பது?

ஈடு.—நாலாம்பாட்டு. இவன்போக்கை நினைத்து நோவுபடப்புக்கவாறே "உன்னைப் பிரிகைக்கு ஸம்பாவனையுண்டோ?" என்று இப்புடையிலே ஸவிநயமாகச் சில வார்த்தைசொல்ல, இவையிறே யென்னை யழிக்கிற தென்கிறாள்.

[தொழுத்தையோம்தனிமையும்] - பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களும் கூடிப் படுகிற தனிமையிறே. தொழுத்தையோமென்றும் அடிச்சியோமென்றும் தாங்கள்தோற்ற தோல்வி தோற்றச் சொல்லுகிறார்கள். [துணைபிரிந்தார்துயரமும்] - துணைபிரிந்தாரென்று உன்னைப்பிரிந்தாரென்றபடி. "துணையென்றால் த்விஷ்ட்டமாயன்றுகாணிருப்பது" என்னுமாச்சான். இவர்களும் அவனுக்குத்துணையாய், அவனும் இவர்களுக்குத் துணையாயன்றிருப்பது; துணையாகை ஒருதலையிலே வ்யவஸ்த்திதமாய்த்து; துணையாவானவனொரு

நாலாம்பாட்டு.—தொழுத்தையோம் இத்யாதி. "நின்செங்கனிவாயின் கள்வப்பணிமொழி நினைதொறுமாவிவேமால்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை அருளிச்செய்கிறார், இதுக்குக் கீழோடே ஸங்கதி - இவன்போக்கை இத்யாதி.

"தொழுத்தையோம்" என்ற பஹுவசநார்த்தம் - பஞ்சலக்ஷம் இத்யாதி. பதப்ரயோகத்துக்கு பாவம் - தொழுத்தையோம் என்றும் இத்யாதி. "துணை" என்றால் உன்னையென்று காட்டுமோவென்ன - துணையென்றால் இத்யாதி. விவரணம் - இவர்களும் இத்யாதிவாக்யத்வயம். அவனையொழிந்தார் துணையாகவொண்ணாதோ, அவனே துணையாகவேணுமோவென்ன; "அவனொருவனுமேதுணை, அல்லாதாரெல்லாம்பாதகர்" என்று உர்ப்பிப்பியாநின்றுகொண்டு, அதுக்கு ப்ரமாணமும்காட்டுகிறார் - துணையாவான் இத்யாதிவாக்யத்ரயத்தாலே. கழுத்துக்கட்டி - கழுத்திற்கட்டிபோலே பாதகமென்று ஸ்வபாவார்த்தம்; கழுத்திலேகட்டப்பட்ட லிங்கமென்று யுத்பத்தி,

வனுமேயாய்த்து; அல்லாதாரடங்கலும் கழுத்துக்கட்டியாயாய்த்திருப்பது; * வன்துணை யிறே. தொழுத்தையோம் தனிமையும் நினைகிறிலை, துணைபிரிந்தார் துயரமும் நினைகிறிலை. பிரிகிறோம் நாங்களென்றும் பிரிகிறதுஉன்னையென்றும் பார்க்கிறிலை. [கோவிந்தா] - பசுக் களையும் இடையரையும் ரக்ஷிக்கைக்கன்றோ கோவிந்தாபிஷேகம் பண்ணிற்று. பிற விப்பாடும் பின்தொடருமிறே. அதாவது - தன்ஸ்த்ரீ ஆர்த்தையாயிருந்தாலும், பசுக்களை விரும்பி அவற்றுக்குப் புல்லும் நீருமுள்ள இடந்தேடமேித்தனையிறே. [நின்இத்யாதி] - உனக்கு ரக்ஷ்யகோடி இரண்டானால் ஒருதலையே விரும்பவேண்டுகிறதேன்? இரண்டு தலையையும் ஒக்கவிரும்பினாலாகாதோ? [நின்தொழுத்தனில்] - ஓரிடத்தே வளைத்து வைத்த பசுக்களையேயோ ரக்ஷிக்கலாவது? உன்கைக்குள் அகப்பட்டாரை ரக்ஷிக்க லாகாதோ? இவர்களையணைத்துவிட்டுப் பின்னையிறே பசுமேய்க்கப்போவது. [பசுக் களையே] - நீ போனால் பிரிவுக்குஆற்றாமைப்பட அறியாதாரையேயோ நீ ஆதரிப்பது? [விரும்பி] - இவர்களையணைத்துக் கட்டிக்கொடுகிடந்தாலும், கண்ணியேன்பது, கன்று கள்விட்டுக் கொடுபோகாநின்றதேன்பதாய் வாய்வெருவுவது அவற்றையேயாய்த்து. இங் கிருக்கும்போதும் நெஞ்சுஅங்கேயாய்த்து. இங்குள்ளது மித்யா†பரிரம்பணமே. பிள்ளையமு தனார், "ஒருபசுவின்காலிலே முள்பாய்ந்தால் இடையன் தலைகாண் சீக்கொள்ளுவது" என்பராம். ஶரீரத்திலேயொன்று வந்தால் ஸுகதுஃகங்கள் அநுபவிப்பான் ஆத்மா விறே. [துறந்துஎம்மை] - அவற்றை விரும்பவிரும்பத் தங்களை ஸந்யஸித்ததேன்றிருக் கிறார்கள். [எம்மைஇட்டு] - அசேதநபதார்த்தங்களைப் போகடுமோபோலே எங்களைப் போகட்டு. இவர்களுடனிருக்கும்போதும் அவற்றை ஸ்மரிக்கும்; அவற்றின்பின்னே போனால் இவர்களை நினையான். [அவைமேய்க்கப்போதி] - அவற்றினுடைய ரக்ஷ ணார்த்தமாகப் போகக்கடவை. அவற்றினுடைய ரக்ஷணத்தில் ஆயாஸமுண்டு, எங்க ளுடைய ரக்ஷணத்துக்கு ஸந்நியியேயமையும்; "இடறவேன்பிள்ளையைப் போக்கி னேன்" "எற்றுக்கேன் பிள்ளையைப் போக்கினேன்" என்று வயிறுபிடிக்கவேண்

---

வன்துணை - வலியதுணை, திருமொழி, மூன்றாம்பத்து, ஏழாந்திருமொழி ஆறாம்பாட்டு, "என் துணையென்று" இத்யாதி. தாத்பர்யார்த்தமாதல், "தொழுத்தையோம் தனிமையும் துணைபிரிந் தார்" என்கிற புநருக்திக்குப் பரிஹாரமாதல் - பிரிகிறோம் இத்யாதி. அதாவது - எங்கள் மார்த்தவ மும் உன் வைலக்ஷண்யமும் நினைக்கிறிலையென்றபடி. "கோவிந்தா" என்றத்தை "தொழுத்தை யோம்" இத்யாதியோடே கூட்டிபாவம் - பசுக்களையும் இத்யாதி. அதாவது - எங்களையும் ரக்ஷி யாதேவிடலாமோவென்றபடி. "கோவிந்தா - பசுக்களையேவிரும்பி" என்று மேலேகூட்டிபாவம்- பிறவிப்பாடு இத்யாதிவாக்யத்வயம். "பசுக்களையே" என்றஅவதாரணார்த்தம் - உனக்கு ரக்ஷ்ய இத்யாதி. "தொழுத்தனில்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஓரிடத்தே இத்யாதிவாக்யத்வயம். தொழுத்தனில் - தொழுத்தில். இவர்கள் கைக்குள்ளே யகப்பட்டார்களோவென்ன - இவர்களை இத்யாதி. "பசுக்கள்" என்ற அல்ப சைதந்யவத்தைக்கு பாவம் - நீபோனால் இத்யாதி. விருப்பத் தின் சரமாவதி - இவர்களையணைத்து இத்யாதி. பலிதம் - இங்கிருக்கும்போதும் இத்யாதி. பசுக்களிடத்தில் விருப்பத்தின் சரமாவதிக்கு ஸம்வாதம் - பிள்ளையமுதனார் இத்யாதி. பசுக்களின் நோவு இவனதானதுக்கு த்ருஷ்டாந்தம் - ஶரீரத்திலே இத்யாதி. "விரும்பி - எம்மை - துறந்து" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - அவற்றை இத்யாதி. "இட்டு" என்றதுக்கு பாவம் - அசேதந இத்யாதி. "விரும்பி - இட்டு" என்ற பதத்வயபலிதம் - இவர்களுடன் இத்யாதிவாக்யத்வயமும். "போதி" என்றதுக்கு ஹார்த்தபாவம் - அவற்றினுடையரக்ஷணத்தில் என்று தொடங்கி நாலுவாக் யம். பெரியாழ்வார் திருமொழி, மூன்றாம்பத்து இரண்டாந்திருமொழி, "மிடறு" இத்யாதி, "பற்று மஞ்சள்" இத்யாதி-எற்றுக்கு- என்னப்ரயோஜநத்துக்கு. அவர்கள் சொன்னதுக்கு ஸமாதானம் பண்

---

† பரிரம்பணம்-ஆலிங்கநம்.

மேம்படியா யிருக்குமது; எங்களுடைய ரக்ஷணத்தில் ஆயாஸம் வேண்டா, கூட விருக்கவமையும். [பழுத்த இத்யாதி] - "நான் போகையாவதேன்? போனால்தான் உங்களை மறப்பதுண்டோ? என்னுற்றமை உங்களுக்குண்டோ? †நான் மாதாபிதாக்களுக்குப் பரதந்த்ரனானால் அவர்கள் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே போகிறேனித்தனையன்றோ? போனாலும் நெஞ்சு இங்கேயன்றோ?" என்றாற்போலே சில நீசஹாஷணங்களைப் பண்ணினான்; இவைகிடாய் எங்களை மறக்கவொண்ணாதபடி பண்ணுகிறது. பக்வமாய் அதிவிலக்ஷணமான அம்ருதத்தினுடைய இனிய சாற்றுவெள்ளம்போலே ஹோக்யமாம்படி சொல்லுகிற வார்த்தையென்னுதல்; அன்றிக்கே, கலவியிலே ஒருவகையைச் சொல்லிற்றாகவுமாம். அதாவது - வாகம்ருதமென்றபடி; "வாயமுதம் தந்தென்னைத் தளிர்ப்பிக்கின்றான்" என்னக்கடவதிறே. [பாவியேன்]- அம்ருதமே நஞ்சாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பிரிவை நினைத்து "பிரியேன்" என்னும் இது விஷஸமமிறே. [மனமகந்தோறும் இத்யாதி] - ஹ்ருதயாவகாசந்தோறும் மறக்கவொண்ணாதபடி யழுத்த, உன்னுடைய சிவந்தகனிபோலேயிருக்கிற வாயினுடைய. [கள்வப்பணிமொழி] - இச்சாற்றுவெள்ளத்துக்குஊற்றுவாய்காணும்; எழுதிக்கொள்ளுகிற தாழ்ந்த பேச்சுக்கள். பிரிவைநினைத்துச் சொல்லுகிற வார்த்தையாகையாலே, நெஞ்சை யழிக்கக் கடவதாயிறே யிருப்பது. நினைவுஒன்றும் சொலவுஒன்றுமாயிருக்கை. [நினை தோறும்] - "இவை யாரகமாமோ?" என்னும்நினைவாலே நினைக்கப்புகுமே: அதுவாயக மாமே; பின்னையும் விடமாட்டாளே; இங்ஙனே யுருவச் செல்லு மித்தனை. [ஆவி

---

ணிக்கொள்ளுகிறான் - நான் இத்யாதி. "போதி" என்றதுக்கு உத்தரம் - நான் போகையாவதேன் என்று. "நினைகிலை" என்றதுக்கு உத்தரம் - போனாற்றான் இத்யாதி. "தனிமையும் துயரமும்" என்றதுக்கு உத்தரம்-என்னுற்றமை இத்யாதி. "பசுக்களையே" என்றதுக்கு உத்தரம் - நான் மாதா இத்யாதி. "விரும்பி" என்றதுக்கு உத்தரம் - போனாலும் இத்யாதி. "பழுத்தநல்லமுதின் இன் சாற்றுவெள்ளமான - நின் செங்கனிவாயின கள்வப்பணிமொழி" என்று "சாற்றுவெள்ளம்" என்றத்தை * கள்வப்பணிமொழியோடே அந்வயித்தல்; அன்றிக்கே, "நின்செங்கனிவாயின் - பழுத்த நல்லமுதின் இன் சாற்றுவெள்ளம்" என்று வாகம்ருதமாதல். அதாரஸத்தை "அமுதம்" என்றதுக்குப்ரமாணம் - வாயமுதம் இத்யாதி. பெரியாழ்வார்திருமொழி, "கன்னற்குடம்" இத்யாதி. தளிர்ப்பிக்கை - தரிப்பிக்கையென்றபடி. "க்ஷாநாவாஸவிஷம் தஸ்யா: வசநம் நநு। ஸ்வஷாஞ்சஹவாஸ்யா‡ரஸாயநமிவோதிதம்" என்றாரிறே பெருமாள். "பாவியேன்' என்றதுக்கர்த்தம் - அம்ருதமே இத்யாதி. இது கீழ்ச்சொன்ன முந்தினவர்த்தத்துக்கு அநுகுணம்—அம்ருதம்போன்ற மொழி நஞ்சாவானென்ன என்ன?- பிரிவை இத்யாதி. அங்ஙனன்றிக்கே, 'அம்ருதமே' இத்யாதிவாக்யம் த்விதீயார்த்தானுகுணம்; 'பிரிவை நினைத்து' இத்யாதிவாக்யம் ப்ரதமார்த்தாநுகுணமென்னவுமாம். அழுத்த - நீயழுந்தப்பண்ண வென்றபடி. முந்தினவர்த்தத்திலே ரஸோக்தி - இச்சாற்றுவெள்ளத்துக்கு இத்யாதி. "கள்வம்" என்று - களவாய், அத்தால் ஆகர்ஷகத்வமாக அர்த்தம் - எழுதிக்கொள்ளுகிற இத்யாதி. தாழ்ந்தபேச்சாலே ஆவி வேகவேணுமோவென்ன - பிரிவை நினைத்து இத்யாதி. "கள்வம்" என்றதுக்கு - கபடமாகவர்த்தாந்தரம் - நினைவுஒன்றும் இத்யாதி. பணிமொழி - நீசஹாஷணம். ஆக, "கள்வம்" என்று - ஆகர்ஷகமென்னுதல், கபடமென்னுதல் என்று அர்த்தத்வயம். "நினைதொறும்" என்கிற ப்ரகாரவொஹாஸ்யத்துக்கு ஹாவம் - இவை யாரகமாமோ இத்யாதி. தனக்து என்றது - நினைவுக்கென்றபடி. ப்ரா

---

† நான் என்பது அடையவளைந்தானுக்குப் பாடமில்லை.

‡ ரஸாயநமிவாத்ரதீ என்று பாடம்.

வேமால்]- தனக்குஆஸ்ரயமான ப்ராணனுனது வேவாநின்றது. அக்நி ஆஸ்ரயாஸியாயிறே யிருப்பது. 'பழுத்தநல்லமுதினின் சாற்றுவெள்ளமான - நின்செங்கனிவாயின் கள்வப் பணிமொழி - பாவியேன் மனமகந்தோறும், உள்புக்கழுத்த - நீ மறக்கவொண்ணுதபடி பழுந்தப்பண்ண அவற்றை நினைக்கநினைக்க ஆவி வேவாநின்றது.' (௪)

## ஐந்தாம் பாட்டு.

**பணிமொழிநினைதொறும்ஆவிவேமால்பகனிரைமேய்க்கியபோயகண்ணு! பிணியவிழ்மல்லிகைவாடைதூவப்பெருமதமாலையும்†வந்தன்றுலோ [தந்து மணிமிகுமார்வினின்முல்லைப்போதுஎன்வனமுலைகமழ்வித்துன்வாயமுதந் அணிமிகுதாமரைக்கையைஅந்தோ அடிச்சியோந்தலைமிசைநீயணியாய்!**

*ஆ.—(பணிமொழி.) - "பசுமேய்க்கப்போகாதிருக்கச்செய்தே இப்படிப் படுகிறதென்?" என்ன; பசுமேய்க்கப் போனுயே யல்லையோ?பசுமேய்க்கப்போய்ப் பகலு மெல்லாம் முடிந்து பிணியவிழ்மல்லிகைவாடை தூவப் பெருமதமாலையும்வந்ததுகிடாய்! ஈண்டபகலெல்லாம் உன்னைப்பிரிந்தாலுள்ள வ்யஸநமெல்லாந் தீரும்படி என்னை ஒருகால் புல்கி, ம்ருதஸஞ்ஜீவநமாய் அம்ருதகல்பமான திருவார்த்தைகளாலே என்னை யுஜ்ஜீவிப் பித்து, என்னுடைய ஆர்த்தியெல்லாம் போம்படி உன்னுடைய அழகிய திருக்கைகளை என் தலையிலே ஒருகால் வைத்தருளா யென்கிருள்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், "நான் உன்னுடைய ஸந்நிதியிலே வர்த்தியாநிற்க, நீ இப்படிப்படுகிறதென்?" என்று எம்பெருமான் இப்பிராட்டிக்கு அருளிச்செய்ய; இப்பிராட்டியும், "நீ பசுமேய்க்கப்போகக் கடவையான பின்பு, நீயும்போனுய்; நீபோனுல் நலியக்கடவஸந்த்யையை தொடக்கமான பதார்த்தங்களாலே நலிவுபடுகிற என்னை ஆலிங்க நாதிகளைப்பண்ணி உஜ்ஜீவிப்பித்தருளவேணும்" என்கிருள்.*

*[மேய்க்கிய] - மேய்க்க. [பிணியவிழ் மல்லிகைவாடை தூவப்பெருமதமாலை யும் வந்தன்றுலோ] - அலராநின்றுள்ள மல்லிகையினுடைய மணத்தை வாடையானது தூவ; பெருங்கிளர்த்தியானஸந்த்யையும் வந்தது. [மணிமிகுமார்வினில்என்றுமேலுக்கு] - கௌஸ்துபாதிகள் நிறம்பெறும்படியான உன்னுடைய திருமார்பில் முல்லைமாலையாலே என்னுடைய அழகியமுலையைக் கமழப்பண்ணி, உன்னுடைய வாயமுதத்தைத்தந்து அணி மிக்கிருந்துள்ள அழகிய திருக்கையை எங்கள்தலைமேலே ஐயோ! வைத்தருளாய்.*

---

னன் என்று - ஆத்மாவைச்சொல்லுகிறது. ஆஸ்ரயம் வேவானென்? என்ன - அக்நி இத்யாதி. அதாவது-அக்நி தனக்காஸ்ரயமான காஷ்டத்தை ஊஹிக்குமாபோலே, நினைவும் தனக்காஸ்ரயமான ஆத்மாவை ஊஹிக்கிறதென்றபடி. அதுவா, நினைவுக்குஆஸ்ரயம் மநஸ்ஸாகையாலே, ப்ராணனென்று மநஸ்ஸைச் சொல்லுகிறதென்னவுமாம். முந்தினவர்த்தத்திலே, அந்வயம் - பழுத்த இத்யாதி. 'நீமறக்கவொண்ணுதபடி' என்றதுக்குச் சேர, "பணிமொழியைக்கொண்டு" என்று கூட்டிக்கொள் வது. "வாமம்ருதம்" என்ற பக்ஷத்தில், 'நின்செங்கனிவாயின் - பழுத்தநல்லமுதினின் சாற்று வெள்ளம்' என்றுதொடங்கி, 'அழுத்த - அழுந்தப்பண்ண, அதுக்குமேலே, கள்வப்பணிமொழி நினைதொறும் ஆவிவேமால்' என்று அந்வயம். பணி-தாழ்ச்சி, மொழி-உக்தி: நீசபாஷணமென்றபடி.

---

† 'வந்தின்றுலோ' என்று ஓதுவர்.

ப.—அநந்தரம், உன்னுடைய விஶ்லேஷத்தாலே என்னை வாடைதொடக்கமானவை நலியாநின்றன, என் ஆர்த்தி தீரும்படி ஸம்ஶ்லேஷித்து ஆஶ்வஸிப்பிக்க வேணுமென்கிறாள்.

பணிமொழி - (நீ) ஆஶ்வாஸகரமாகச் சொல்லுகிற வார்த்தைகள்தானே, (பிரிவுக்குஉறுப்பாகையாலே), நினைதொறும் - நினைக்குந்தோறெல்லாம், ஆவி - நெஞ்சு, வேம் - வேவாநின்றது; பகல் - பகலெல்லாம், நிரைமேய்க்கிய - நிரைமேய்க்கைக்காக, போய - போய்விட்ட, கண்ணா - க்ருஷ்ணனே! பிணி - கட்டிலேபகப்பட்டு, அவிழ் - விகஸிதமான, மல்லிகை - (மதுவையுடைத்தான) மல்லிகையை, வாடை - வாடையானது, தாவ-தூவாநிற்க, பெரு - பெரிய, மதம் - செருக்கோடே, (மத்தகஜம்போலே), மாலையும் - மாலை, வந்தன்று - வந்தநித்தனை; (இநின்கையிலே யகப்படாதபடி), மணி-கௌஸ்துப ரத்நமானது, மிளிரும் - பேரொளிவிஞ்சிவருகிற, மார்வினில் - திருமார்பில், முல்லைப்போது-முல்லைப்பூவானது, என் வனமுலை-என் அழகியமுலையிலே, கமழ்வித்து-கமழும்படியாகப் பரிஷ்வங்கித்து. உன்வாயமுதம்தந்து-நிரதிஶயபோக்யமான உன்னுடைய வாயம்ருதத்தைத் தந்து, அணி மிகு - அலங்காரோத்தரமாய் ஸ்ப்ருஹணீயமான, தாமரை - தாமரைபோன்ற, கையை -, அடிச்சியோந்தலைமிசை - அடிச்சியோமான எங்கள் தலையிலே, நீ,— அணியாய் - அலங்காரரூபமாக வைக்கவேணுமென்று அக்ராம்யமாக ஸம்ஶ்லேஷப்ரகாரஸூசகமாயிருக்கிறது. அந்தோ - ! என்னுற்றாமையை உனக்கறிவிக்கவேண்டுவதே! என்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், "நான் ஸந்நிஹிதனாயிருக்க நீ இப்படிப்படுகிறது என்?" என்ன; "நீ பசுமேய்க்கப் போகக்கடவையானபின்பு, நீயும்போனாயே; நீ போனால் நலியக்கடவ ஸந்த்யாதிபதார்த்தங்களாலே நலிவுபடுகிற என்னை ஆஶ்வஸிப்பித்தருள வேணும்" என்கிறாள்.

[பணிமொழி இத்யாதி] - பிரிவைநினைத்து "பிரியேன்" என்று சொல்லுகிற உன்வார்த்தைபோலே, உன்னைப் பிரியாமைக்குச் சொல்லுகிற வார்த்தையல்ல. உன்னது கள்வப்பணிமொழியாகையாலே பொய்; இது அநுபவத்துக்குப் பாசுரமிட்டுச் சொல்லுகிற வார்த்தையாகையாலே மெய். நான் போனேனோவென்ன? [பகல்நிரை இத்யாதி] - பகலெல்லாம் பசுமேய்க்கப்போனாய். [கண்ணா] - என்று ஸம்போதித்து, அவன் தனக்கே "நீபோனாய்" என்கிறாளிறே. [மேய்க்கிய] - மேய்க்க. [பிணிஇத்யாதி] - நீபோனால் நலியக்கடவ பதார்த்தங்கள் நலிகையாலே, போனமை நிஶ்சிதம் என்கிறாள். மல்லிகை கமழ்தென்றல் ஆகாராந்தரத்தாலே நலியாநின்றது. கட்டவிழுகிற மல்லிகையினுடைய மணத்தை வாடையானது தூவாநின்றது. ராவணன் ஸந்யாஸிவேஷத்தைக் கொண்டுவந்து தோற்றினாற்போலே, வாடையானது குளிர்காற்றாய் வந்து நலியாநின்றது. [தூவ] - தன்மேல் வெக்காயந்தட்டாமே கடக்கநின்று வீசாநின்றது. "வஜ்ரகேஸரவஸம்வ்ருதஃ" - மத்தகஜமானது முன்னே தலைப்பறைகொட்ட வருமாபோலே, வாடையை முன்னேவிட்டுக்கொண்டு பெரிய கிளர்த்தியோடே ஸந்த்யையும் வந்தது. இவளை முடிக்கவேணுமென்று ஸந்த்யையானது கூட்டுத் தேடிக்கொண்டு வாராநின்றது. [வந்தன்றாலோ] - வந்தால் பரிஹரிக்கவொண்ணாது. அர்ஜுநனைக்குறித்து பகதத்தன் விட்ட ஶக்திக்கு மார்வையேற்றாற்போலே, நடுவேபுகுந்து நோக்காய். ஸந்நிஹிதனாயிருந்த என்னை, நீ செய்பச்சொல்லு

கிறதென்? என்ன, - [மணிமிகு மார்வினில்] - ஸ்ரீகௌஸ்துபம் நிறம்பெறும்படியான மார்வென்னுதல், திருமார்வடங்க ஸ்ரீகௌஸ்துபத்திற் புகரேயாம்படி யிருக்குமென்னுதல். கலவியிலும் கழற்றவொண்ணாதபடியிறே ஸ்ரீகௌஸ்துபமிருப்பது. ஸ்த்ரீக்கு ஸ்தநம்போலே, ஸ்ரீகௌஸ்துபம் புருஷோத்தமசிஹ்நமிறே. அம்மார்வில் முல்லைமாலையாலே என்னுடைய அழகிய முலையைப்பரிமளிதமாக்கி. ஸ்ரீகௌஸ்துபத்தோடு தோளில் மாலையோடு வாசியற ஹேதுபகரணமாயிருக்கிறபடி. தோளில் முல்லைமாலையின் பரிமளத்தை முலைக்கு ஆக்கவேணுமென்கையாலே, கலவியை அநுவாத்யமாகச் சொல்லுகிறது. [உன்வாயமுதம் தந்து] — கலவியில் உன்மஸ்தகரஸமானவளவில் தடுமாற்றத்திற்குப் பரிஹாரமான தாழ்ந்தபேச்சுக்களைச் சொல்லுதல், வாகம்ருதத்தைச் சொல்லுதல்: பேச்சென்றேயாய்த்துச் சொல்லிப் போருவது. "உன்போக்கு எனக்குஅநபிமதம், அத்தைத்தவிர்"என்று சொல்லப்புக்கு, அதொண்ணாதபடி 'நாநீர் வருகிறதில்லை: அதுக்குப் பரிஹாரமாக உன்கையை என்தலைமேலே வைகிடாய்' என்கிறாள். ஆபரண ப்ரசுரமாய் அதுதான் மிகையாம்படி தனக்குத்தானே ஆபரணமான கையை. [அந்தோ] - சேர்ந்து குளிர்ந்துவிடாயர்க்குச் சமைத்துவைத்த தண்ணீரை வார்க்கச் சொல்லவேண்டுவதே! என் ஆற்றாமையை நான் உனக்கு அறிவிக்கவேண்டும்படியாவதே! [அடிச்சியோம்] - கலவியில் தோற்ற தோல்வியாலே சொல்லுகிறாள். [தலைமிசை நீஅணியாய்] - எங்கள் ஶிரஸ்தோத்துக்குப் பரிஹாரமாக உன்கையை வையாய். "வேணுமாகில் எடுத்துவைத்துக் கொள்ளுங்கோள்" என்ன; "எங்கள் பேற்றுக்கு நாங்கள் யத்நம்பண்ணுமவர்களோ? நாங்கள் நீவிரும்பி மேல்விழப் பெறுமவர்களன்றோ?" [அணியாய்] - ஆபரணங்களுக்கு அவன் கைபோலேயாய்த்து இவர்கள்தலைக்கு அவன் கை. ஆற்றாமைமிக்கவளவிலும் அவனாலே பெறவிருக்குமவர்களிறே. "நின்பாதபங்கயமே தலைக்கணியாய்." "ஜீயஉ-லயபூாநசேஜூாமிஷூக்ஷி" என்னக்கடவதிறே.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. "நான் ஸந்நிஹிதனாயிருக்க நீஇப்படிப்படுகிறதேன்?" என்ன,—"நீ பசுமேய்க்கக்கடவையான பின்பு,நீயும்போனாய்:நீபோனால்நலியக்கடவஸந்த்யாஶுபதார்த்தங்களால் நலிவுபடுகிற என்னை ஆஶ்வஸிப்பித்தருளவேணும்"என்கிறாள்.

[பணிமொழிநினைதோறும்ஆவிவேமால்]- பிரிவைநினைத்து "பிரியேன்" என்று சொல்லுகிற உன்வார்த்தைபோலே உன்னைப் பிரியாமைக்காகச் சொல்லுகிற வார்த்தையல்ல; உன்னது * கள்வப்பணிமொழியாகையாலே போய், இது அநுபவத்துக்குப் பாசுரமிட்டுச் சொல்லுகிறதாகையாலே மெய். "நான்போனேனோ?" என்ன,—[பகல்இத்யாதி] - பகலெல்லாம் பசுமேய்க்கப்போனாய். [கண்ணா] - என்று ஸம்போதித்து,

அஞ்சாம்பாட்டு.—பணிமொழி இத்யாதி. "பகல்நிரைமேய்க்கியபோயகண்ணா" என்றதுக்கு ப்ரஸங்கமருளிச்செய்யாநின்றுகொண்டு, "பிணியவிழ்மல்லிகை" இத்யாதியைக் கடாக்ஷித்துப் பாட்டுக்கவதாரிகை - நான் இத்யாதி. ஸந்த்யாதி-ஸாயம்ஸந்த்யாதி.

மீளவும் "பணிமொழிநினைதொறுமாவிவேமால்" என்றதுக்கு பாவம் - பிரிவைநினைத்து இத்யாதி வாக்யத்ரயம். அதாவது - நான் போகாமைக்காக ஒன்றைச்சொன்னாயத்தனைபோக்கி இது ஸத்யமன்றென்று அவன் சொன்ன வார்த்தையை ஸ்வீகரித்துக்கொண்டு, தான்சொன்ன வார்த்தை ஸத்யமென்று அவன்நெஞ்சிலே படுத்துகைக்காக மீளவும் சொல்லுகிறாளென்றபடி. ஈடுபாடு - கண்ணாவென்று இத்யாதி; இதொரு ப்ராந்தி யிருந்தபடியென்? என்றபடி. 'என்கிறா

தால் இழியாதொழிகையன்றிக்கே என்வார்த்தையாகஅமைவதே கொள்ளாமைக்கு! [அசுரர்இத்யாதி] - ஜந்மத்தால் தண்ணியருமாய்,தாங்கள் பலருமாய், முன்கை மிடுக்கருமாயிருப்பர்கள் ; அதுக்குமேலே, துஷ்ப்ரக்ருதியான கம்ஸனேவவாய்த்து வருவது. [தவத்தவர் மறுகநின்றுஉழிதருவர்]-என்னையிறே யுனக்குவிடலாவது; நீ நல்லவர்கள் குடல் மறுகும்படி ஸஞ்சரியாநிற்பர்கள் ; தபோநிஷ்டரான ருஷிகள்: ஸ்வரக்ஷணத்துக்கு உன்கைபார்த்திருக்குமவர்கள் ; தபோவிக்நத்தாலே கலங்கும்படி ஸஞ்சரியாநிற்பர்கள் ; "**கர்ப்பபூதாஸ்தபோதநா:**" (கர்ப்பபூதாஸ்தபோதநா:) என்றும் "**ஏஹிபஶ்யஶரீராணி**" (ஏஹிபஸ்யஸரீராணி) என்றுமிருக்குமவர்கள் ; "அவர்களால் உனக்குஎன்வருகிறதோ?" என்று கலங்கவேன்றுமாம். அன்றிக்கே, ஸ்ரீநாரதபகவான், ஸ்ரீஸுக்ரீவமஹாராஜர், பெரியாழ்வார், பிள்ளையுறங்காவில்லிதாஸர் தொடக்கமானவரைச் சொல்லிற்றுதல். ஆனால் ஸ்நேஹிகளானவர்களுடையவிரோதியைப் பின்னைப்போக்கவேண்டாவோவென்ன [தனிமையும்பெரிதுனக்கு] - உன்கால் நெடுகநெடுகத் தனிமையே மிக்குவிட்டதே யுனக்கு ! "**ஏகதாதுவிநாராமம் க்ருஷ்ணோப்ருந்தாவநம்யயௌ**" (ஏகதாதுவிநாராமம் க்ருஷ்ணேப்ருந்தாவநம்யயௌ) என்று நம்பிமூத்தபிரானையொழியவே ஸஞ்சரிக்கும் காலம் பெரிது உனக்கு. [இராமனையுமுவர்த்தலை] - "நம்பிமூத்தபிரான் ஸந்நிதியில் தீம்புசெய்யவொண்ணாது" என்று அவனுடனும் நெஞ்சுபொருந்தி வர்த்திக்கிறிலை. [உவர்த்தலை] -

---

'அநுஷ்டாநகௌரவத்தால் இழியாதொழிகை யன்றிக்கே' என்றது - நாம் காட்டிலே போனால் அசுரர்களாலே பாதைவருகையாலே கோபாலநாத்யநுஷ்டாநத்தில் ஆயாஸமுண்டென்னுமத்தாலேபோகாதொழிகையன்றிக்கேயென்றபடி. 'என்வார்த்தையாக வமைவதே கொள்ளாமைக்கு' என்றது-"ஒருஸ்த்ரீயினுடையவார்த்தையன்றோ" என்றுஎன்வார்த்தைஉனக்குஅங்கீகரியாமைக்குப் பர்யாப்தமாய் விட்டதேயென்றபடி. அஸுரஶப்தத்துக்கும், பஹுவசநத்துக்கும், "வன்கையர்" என்றதுக்கும் க்ரமேணார்த்தம் - ஜந்மத்தால் இத்யாதி. "கஞ்சனொடு" என்றதுக்கர்த்தம் - அதுக்குமேலே இத்யாதி. தவத்தவர் - தபஸ்ஸையுடையவர்களென்று ஶப்தார்த்தம். "தவத்தவர்" என்றதுக்கு - "**யஸ்யஜ்ஞாநமயம் தப:**" என்றும், "**தபஸாலோசநே**" என்றும், தபஶ்ஶப்தம் - ஜ்ஞாநவாசியாய், ஶக்திஶ்சஜ்ஞாநவிசேஷ: ஆகையாலே, ஜ்ஞாநவிசேஷமான ஶக்திமான்களென்று விவக்ஷித்துஅர்த்தம் அருளிச்செய்கிறார்-என்னையிறே இத்யாதி. நீநல்லவர்கள் என்றது - உனக்கு நல்லவர்களென்றபடி. இப்பக்ஷத்தில், மறுகுதலாவது-மங்களாஶாஸநபரதையாலே "அற்றைக்கென்வருகிறதோ?" என்று கலங்குகை. அர்த்தாந்தரம் - தபோநிஷ்டரான இத்யாதி. "**தபஸா ஶக்ரிகஸ்ஸ:**" என்கையாலே, தவமென்று - ப்ரபத்தியாய், ப்ரபந்நரென்று மூன்றுமர்த்தம்- ஸ்வரக்ஷணத்துக்கு இத்யாதி. த்விதீயார்த்தத்தில் "மறுக" என்றதுக்கர்த்தம் - தபோவிக்நத்தாலே இத்யாதி. த்விதீயத்ருதீயார்த்தங்களுக்காதல் மூன்றுமர்த்தத்துக்காதல் ப்ரமாணத்வயம் - **கர்ப்பபூதா** இத்யாதி. "**ந்யஸ்தண்டாவயம்ராஜந் ஜிதக்ரோதா ஜிதேந்த்ரியா: ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா:**" (உக) **ஏஹிபஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் । ஹதாநாம் ராக்ஷஸைர்கோரைர் பஹூநாம் பஹுதா வநே**" (சரு) இத்யாரண்யகாண்டே தண்டகாரண்யவாஸிநோ மஹர்ஷய:. மூன்றுமர்த்தத்தில், "மறுக" என்றதுக்கர்த்தம் அவர்களால் இத்யாதி. அவர்களால்-அஸுரர்களால்.உனக்கு-ரக்ஷகனானவுனக்கு. முந்தினவர்த்தவிவரணம் - அன்றிக்கேஸ்ரீநாரத இத்யாதி. "பெரிது" என்றதுக்கு பாவம் - உன்கால் இத்யாதி. அப்படி தனிமையுண்டோவென்ன- **ஏகதா** இத்யாதி. பஞ்சமேசப்தமே- "**விநாராமம் க்ருஷ்ணோப்ருந்தாவநம்யயௌ ஸஹ கோபாலை:**" இத்யுத்தரார்த்தம். உவத்தலை உகக்கிறாயில்லை யென்னுதல். இராமனையும் - இராமனுடனும். உவர்த்தலை - உவர்த்தலை

உவர்த்தலையுடையை. [உடன்திரிகிலையும்] - நெஞ்சில் பொருத்தமில்லாவிட்டால், தூரத்திலேகண்ட எதிரிகளுக்கு "இவர்களிருவரும் கூடித்திரியாநின்றார்கள்" என்று அஞ்சும்படி ஒக்கத்திரிவதும் செய்கிறிலை. [என்றுஇத்யாதி] - நீபோகிறாயென்றல்ல, நம்பிமூத்தபிரானுடன் கூடத்திரிகிறிலையென்றாய்த்து என்னுடையஹ்ருதயம் மறுபாடுருவ வேகிறது. [ஊடறே] - உள்ளூறவென்றபடி. என்னுடைய ஹ்ருதயமானது வேவாநின்றது. இப்படி நிர்ப்பந்திக்கைக்கு நான் இவ்விருப்பைக்குலைந்து போகாநின்றேனோவென்ன—[திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி] - ஆமாம்; நீ ஓரோ விருப்புக்கள் குலைத்துக்கொண்டு போந்தறியாயிறே. பரமபதத்தி லிருப்பைக்குலைத்தன்றோ பசுநிரைமேய்க்கப்போந்தது. அங்கேயிருக்கவும் பெற்றதில்லை. அங்குநின்றும்போந்தது பொல்லாதாகச்செய்ததென்றிருக்கிறாள். அங்கேயிருந்தானாகில் இங்கு என்வயிறுஎரியவேண்டாவே. நாம் பெறுவோம் இழப்போம்; இவ்வஸ்துதானழியாதொழியலாய்த்தே. அவர்களைவிட்டும் பசுக்களை விரும்பக்கடவ நீ எங்களை யுபேக்ஷிக்கச்சொல்லவேணுமோ? அங்குநின்றும்போந்திலோம் என்னவொண்ணாதே அவனால். "இதொரு ப்ரேமஸ்வபாவமிருந்தபடியென்!" என்று ஸ்மிதம்பண்ணினான். [செங்கனிவா யெங்களாயர்தேவே] - அதிலே யீடுபடுகிறார்கள். "அவ்விருப்புக் குலைந்து போந்தமையுண்டு, உங்களைவிட்டுப்போவேனோ?" என்று ஸ்மிதம்பண்ண; இவர்களும் வாய்க்கரையிலே யழுந்துகிறார்கள். (கo)

---

## பதினோராம் பாட்டு.

செங்கனிவாயெங்களாயர்தேவுஅத்திருவடிதிருவடிமேல்பொருநல், சங்கணிதுறைவன்வண்தென்குருகூர்வண் சடகோபன்சொல்லாயிரத்துள்,மங்கையராய்ச்சியராய்ந்தமாலைஅவனொடும் பிரிவதற்கிரங்கித்தையல், அங்கவன் பசுநிரைமேய்ப்பொழிப்பான்உரைத்தன இவையும்பத்தவற்றின் சார்வே.

*ஆ.—(செங்கனிவாய்)- செங்கனிவாயெங்களாயர் தேவுஅத்திருவடி திருவடி மேல் பொருநல் சங்கணி துறைவனுயிருந்த வண்தென்குருகூர் வண்சடகோபன் சொன்ன ஆயிரத்துள்,மங்கையராய்ச்சியராய்ந்த மாலை அவனொடும் பிரிவாற்றாமையாலே தையல் பசுநிரைமேய்ப்பொழிப்பான் சொன்ன இப்பத்து, அவன் திருவடிகளைச் சேர்விக்குமென்கிறார்.*

---

*யுடையை; வெறுப்பையுடையையென்னுதல்; உவர்த்தல் - வெறுப்பு. நெஞ்சில் பொருத்தமில்லாதாருடன் கூடத்திரிந்தால் ப்ரயோஜநமேதென்ன - தூரத்திலே இத்யாதி. "என்றென்று" என்கிற வீப்ஸைக்கும் "ஊடுற" என்றவிதுக்கும் பாவம் - நீ போகிறாய் இத்யாதி. என்றேன்று என்று பலகாலும் நினைத்து. இதுக்கு பாவம் - ஆமாம் இத்யாதி. விவரணம் - பரமபதத்தில் இத்யாதி. ஹார்த்த பாவம் - அங்கேயிருக்கவும் இத்யாதி. அங்குநின்றும் போந்தது நல்லதன்றோ வென்ன-அங்கேயிருந்தானாகில் இத்யாதி. அங்கேயிருந்தால் உன் அபிமதம் ஸித்தியாதேயென்ன - நாம் பெறுவோம் இத்யாதி. "ஆமாம்நீ" இத்யாதி வாக்யவிவரணம் - அவ்விருப்புக்குலைந்து இத்யாதி. திவத்திலும் - திவத்திற்காட்டிலும் உவத்தி - உகப்புதி. வாய்க்கரை - அதரம். (கo)*

ஓ.—நிகமத்தில், ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழியிலும், எம்பெருமானை "பசுநிரை மேய்க்கவேண்டா" என்று பிராட்டி நிஷேதித்த பாசுரமான இதுவும் அல்லாதவற்றோடொக்க ஒருதிருவாய்மொழியே! என்று விஸ்மிதராகிறார்.

[செங்கனிவாய் என்றுதொடங்கி] - தான் பசுநிரைமேய்க்கப் போகாமை தோற்றும்படி முறுவல்செய்கையாலே சிவந்த கனிபோலேயிருக்கிற திருப்பவளத்தையுடையனாய் ஆஸ்ரிதஸுலபனாய் ஆயர்தேவான ஸ்வாமியுடைய திருவடிகளிலே, சங்குகளாலே அணியப்பட்ட திருப்பொருநலாகிற ஆற்றையுடையராய் ஸம்ருத்தமான திருநகரியையுடையரான பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும். [மங்கையர் என்றுதொடங்கி] - இடைப்பெண்கள் அவனோடு பிரிகிறோமென்று நோவுபட்டுச் சொன்ன பாசுரத்தை அவர்களிலே ஒருத்தி பசுநிரைமேய்க்கப் போகவேண்டாவென்று சொன்ன.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக ஸம்ஸ்லேஷத்தை யருளிச்செய்கிறார்.

செம் - சிவந்த, கனி - கனிபோலேயிருக்கிற, வாய், - திருவதரத்தையுடையனாய், எங்கள் - எங்களுக்கு போக்யபூதனாய், ஆயர்தேவு - அப்படியே ஆயர்க்கு போக்யபூதனாய், அத்திருவடி திருவடிமேல் - (அவர்களுக்கு ஸ்வாமியுமான) அவன் திருவடிகளின்மேலே, பொருநல் - திருப்பொருநலில், சங்கணி - சங்குகள்சேரும், துறைவன் - துறையையுடையராய், வண் - ஸம்பத்தையும், தென்குருகூர் - அழகையுமுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகராய், வண்சடகோபன்சொல் - உதாரரான ஆழ்வாருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, மங்கையர் - யௌவனஸ்வபாவைகளான, ஆய்ச்சியர் — இடைச்சிகள், ஆய்ந்தமாலை - அநுஸந்தித்த தொடையாய், அவனொடும் - அவனோடு, பிரிவதற்கு - பிரிகிறதுக்கு, இரங்கி - க்லேசித்து, அங்கு - அத்திரளிலே, தையல் - (ப்ரபலையாயிருப்பாளொரு) இடைப்பெண்பிள்ளை, அவன் -, பசுநிரைமேய்ப்பு - பசுநிரைமேய்க்கையை, ஒழிப்பான் - ஒழிக்கைக்காக, உரைத்தன - உரைக்கப்பட்டனவாயிருக்கிற, இவையுப்பத்து - இவைபத்தும், அவற்றின் - அவர்களாய்ந்த மாலைகளின் பலமான அவனுடைய ஸம்ஸ்லேஷமே பலமாம்படி, சார்வு - சேறிந்தன; அல்லாத திருவாய்மொழிகளின் பலமே இவற்றுக்கும் பலமாய்த்தினவென்றுமாம்; இவையும் அல்லாத திருவாய்மொழிகளில் சார்வதே! என்று இதினுடைய வைலக்ஷண்யஜ்ஞானமே பலமாச்சுதாகவுமாம். இது - எண்சீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், அவனை, "பசுநிரை மேய்க்கவேண்டா" என்று நிஷேதித்தபாசுரமான இத்திருவாய்மொழியும் அல்லாதவற்றோடொக்க ஒருதிருவாய்மொழியே! என்று விஸ்மிதராகிறார்.

[செங்கனிவாய் இத்யாதி] - தன்முறுவலாலே எங்களைத் தோற்பித்தாற்போலே, தன்பருவத்திற் பிள்ளைகளையும் தோற்பித்த ஸர்வஸ்வாமியுடைய திருவடிகளிலே சொல்லிற்று. "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்னக்கடவதிறே. [பொருநல் இத்யாதி] - இவர் இருந்தவிடத்தே ஸத்துக்கள் சேருமாபோலே, சங்குகளாலே அணியப்பட்ட திருப்பொருநலையுடையராய், ஸம்ருத்தமான திருநகரியையுடையராய், பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்திலும். [மங்கையராய்ச்

*சியர் இத்யாதி] - அவனோட்டைப் பிரிவு பொறுக்கமாட்டாதபடியாலே ஒருபருவத்தில் இடைப்பெண்கள் அநுஸந்தித்த தொடையாய், அவர்களிலே ஒருத்தி "பசுநிரை மேய்க்கவேண்டா" என்றுரைக்காள்: "எல்லாரும் திரளச்சொன்னால் அவன் செவிப்படாது" என்னுமத்தாலே நப்பின்னைப் பிராட்டியைப்போலே அவனுக்கு மறுக்கவொண்ணாத தரமுடையாளொருத்தியை வார்த்தை சொல்லவிட்டார்கள்; இப்படியாகிலிறே, "அடிச்சியோம்" என்றும், "தொழுதையோம்" என்றும் "ஆழுமென்னருயிர்" என்றும், "என்சொற்கொள்" என்றும் சொன்ன பன்மைகளும் ஒருமைகளும் சேரக்கிடப்பது. [இவையும்பத்து அவற்றின்சார்வே] - கீழ்ச்சொன்ன திருவாய்மொழிகளருகே இதுவும் ஒருதிருவாய்மொழியே! என்றுப்க்கு நிர்வஹித்துப் போருவது. அங்ஙனன்றிக்கே, கீழில் திருவாய்மொழிகளுக்குச் சொன்ன ஃபலமே இதுக்கும் ஃபலமென்னுதல்; மங்கையாராய்ச்சியர் ஆய்ந்த மாலைபாற் பலித்த பலமே இதுக்கும் பலமென்னுதல். அவர்களுக்கு அவன் போகாமல் நீண்டானுகில் இவர்களுக்கும் அதுவே பலமாய், அவனோடே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணப்பெறுவர் என்கிறார்.*

ஈடு.—நிகமத்தில்; அவனை "பசுநிரைமேய்க்கப்போகவேண்டா" என்று நிஷேதித்த பாசுரமான இத்திருவாய்மொழியும் அல்லாதவற்றோடொக்க ஒருதிருவாய்மொழியே! என்று விஸ்மிதராகிறார்.

[செங்கனிவாய்இத்யாதி] - அவ்வயிரவுருக்கான முறுவலாலே எங்களைத் தோற்பித்தாற்போலே, தன்பருவத்திற் பிள்ளைகளையும் தோற்பித்த ஸர்வஸ்வாமி திருவடிகளிலே சொல்லிற்று. 'செங்கனிவாய்' என்கையாலே தங்களைத்தோற்பித்தபடி சொல்லிற்று; 'ஆயர்தேவு' என்கையாலே தன்பருவத்திலுள்ளாரைத் தோற்பித்தபடி சொல்லிற்று; "**பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்**" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்). [அத்திருவடிதிருவடிமேல்] - அந்த ஸர்வஸ்வாமியானவன் திருவடிகளிலே. அவன் ஶேஷித்வத்தைக்காட்டிக்கொடுத்தான்; திருவடிமேலென்கையாலே இவரும் ஶேஷத்வத்திலே நின்றார். [பொருநற்சங்கணிதுறைவன்] - தாமிருந்தவிடத்திலே ஸத்துக்களடங்கலும் வந்துசேருமாபோலே யாய்த்து, திருப்பொருநலில் சங்குகள் வந்துசேரும்படி. [மங்கையர்இத்யாதி] - அவனோட்டைப்பிரிவுபொறுக்கமாட்டாமையாலே ஒருபருவத்திலிடைப்பெண்கள்அநுஸந்தித்த தொடையாய். [தையல் இத்யாதி] - "ஸஹைபோலேயெல்லாரும் திரண்டுவார்த்தைசொன்னால் செவிப்படாது" என்றுபார்த்து, அவனுக்கு மறுக்கவொண்

---

*நிகமம் - செங்னிவாய் இத்யாதி. "அவன் பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன இவையும்பத்தவற்றின் சார்வே!" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - அவனை இத்யாதி 'ஒரு திருவாய்மொழியேயென்று விஸ்மிதராகிறார்' என்றது - "சார்வே!" என்கிற ஸ்வரத்தைப்பற்ற.*

*செங்கனிவாயாலே ஆயர்களையும் தோற்பித்தானென்றபடி. இருவரையும் தோற்பித்தபடியைக் காட்டுகிறார் - செங்கனிவாய் இத்யாதி. 'செங்கனிவாய் எங்கள் என்கையாலே' என்று கூட்டுவது; 'செங்கனிவாய் ஆயர்தேவுஎன்கையாலே' என்றுகூட்டுவது. தோற்பித்தபடி யென்றதுக்கு-"[illegible]" என்றதிலேநோக்கு. தன்பருவத்திலுள்ளாரைத்தோற்பிக்குமோவென்ன-**பும்ஸாம்** இத்யாதி. "[illegible] ரூபௌதார்யகுணை: பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" இத்யயோத்யாகாண்டே. (ந-உஎ½) இத்தால் ஃபலிதம் - அவன் ஶேஷித்வத்தை இத்யாதிவாக்யத்வயும், "அவனொடும்பிரிவதற்கிரங்கி -*

ணுதபடி நப்பின்னைப்பிராட்டியுடைய தரமுடையாளொருத்தி பசுமேய்க்கப்போகாமே மீட்கைக்காகச்சொன்னவை யாய்த்து. "அடிச்சியோம்" என்றும் "தொழுத்தையோம்" என்றும் "ஆழுமென்னாருயிர்" என்றும் "என்சொற் கொள்" என்றும்சொன்ன பன்மைக்கும் ஒருமைக்கு மெல்லாம் சேருமிறே. [இவையும்பத்து அவற்றின்சார்வே] - 'அவை' என்கிறது கீழ்த்திருவாய்மொழிகளையாய், "அவற்றினருகே இதுவுமொரு திருவாய்மொழியே!" என்று ஆச்சர்யத்திலேயாக்கியாய்த்து சீயர் அருளிச்செய்ததும் வ்யாக்யானம் பண்ணிற்றும். அன்றிக்கே, [இவையும்பத்துஅவற்றின்சார்வே] - கீழ்த்திருவாய்மொழிகளுக்குச் சொன்ன ஃபலம் இதுக்கும் ஃபலமென்றதாகவுமாம். அன்றிக்கே, அவையென்கிறது - "மங்கையராய்ச்சிய ராய்ந்தமாலை" என்கிறவற்றையாய், இவையும்அவற்றோடொக்கும். அதினுடைய ஃபலமே யிதுக்கும் ஃபலம் அது நிவர்த்தகமாகில் இதுக்கும் பேறுண்டாம். அவர்கள் "நீபோகாதேகோள்" என்ன அவன் தவிர்ந்து அவர்களுடனே கலந்தாற்போலே, இது கற்றாரும் அவனோடே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணப்பெறுவர். 'செங்கனிவாயெங்களாயர் தேவு - அவனோடும் பிரிவதற்கிரங்கி - மங்கையராய்ச்சிய ராய்ந்தமாலை — தையல் அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன - அத்திருவடிதிருவடிமேல்பொருநல் சங்கணிதுறைவன்-வண்தென்குருகூர் வண்சடகோபன்-சொல்லாயிரத்துள்- இவையும் பத்துஅவற்றின்சார்வே' என்றந்வயம். (கக)

---

மங்கையராய்ச்சியராய்ந்தமாலை" என்றந்வயிப்பது. ஆய்ந்தமாலை - நெஞ்சிலே யாராய்ந்தமாலை. "ஆய்ச்சியராய்ந்தமாலை - தையல் - உரைத்தன" என்ற பன்மையுமொருமையும் சேரும்படியென்னென்ன - ஸ்ஹைபோலே இத்யாதிவாக்யத்ரயம். 'அடிச்சியோமென்றும்' இத்யாதி வாக்யாதியிலே, "இப்படியாகில்" என்று அத்யாஹாரம். வ்யாக்யாநம்பண்ணிற்றும் என்றது - ஒன்பதினாயிரம் வ்யாக்யாநம் பண்ணிற்றுமென்றபடி. முந்தினவர்த்தத்தில், "சார்வே!" என்றது - ஸ்வாத்திலே த்விதீயார்த்தத்துக்கு- சார்வு - ஒப்பு. அவற்றோடொத்தது - அவற்றோடொத்த ஃபலத்தையுடையதென்றபடி; "சார்வே" என்கிற ஏகாரம் இப்போது அவ்யயம். விவரணம்-அதினுடைய இத்யாதி. அதினுடைய - ஆய்ந்தமாலையினுடைய வென்றபடி. கீழ்வாக்யவிவரணம் - அதுநிவர்த்தகம் இத்யாதி. "நிவர்த்தகமாகில்" என்றவாக்யவிவரணம் - அவர்கள் இத்யாதி. இப்பாட்டுக்கு அந்வயங்காட்டுகிறார் - செங்கனிவாய் இத்யாதி. உரைத்தன - உரைத்தவார்த்தைகளை. "சடகோபன்சொன்ன" என்றந்வயிப்பது. "சொல்" என்றது -சொன்னவென்றபடி. "ஆய்ந்த" என்றது - நெஞ்சாலே யாராய்ந்தவென்றாய், அநுஸந்ஹித்த மாலையென்றபடி. பொருநல்-திருத்தாம்ரபர்ணி. திருப்பொருநலில் சங்குகள்சேரும் துறையையுடையராய் ஸம்பத்தையுடைய அழகிய திருநகரிக்கு நிர்வாஹகராய் உஊரரான ஆழ்வாரருளிச்செய்த என்று ஸப்தார்த்தம். மங்கையராய்ச்சியர்-யௌவநஸ்வஹாவைகளான இடைப்பெண்களென்றபடி. "ஆய்ந்தமாலை" என்றது - "உரைத்தன" என்றதுக்கு விசேஷணம். "அநுஸந்தித்தமாலையான - உரைத்தவார்த்தைகளை - சடகோபன்சொல்" என்றுயோஜிப்பது. மேய்ப்பொழிப்பான் - மேய்க்கையை யொழிக்கைக்காக. அவனோடும் பிரிவதற்கிரங்கி' - அவனோட்டைப்பிரிவுக்கு க்லேசித்து. அந்து - அத்திரளிலே. இவையும்பத்து - இவைபத்தும் என்றந்வயிப்பது. (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தைத்
தான்மருவாத்தன்மையினால்தன்னையின்னம் - பூமியிலே
வைக்குமெனச்சங்கித்துமால் தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு.

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

---

## நான்காந்திருவாய்மொழி—சார்வே - ப்ரவேஶங்கள்.

ஆ—(சார்வே.) - இப்படி ப்ராஸங்கிகத்தை முடித்து * பத்துடையடியவரிலே ப்ராரப்தமான பக்தியோக ஸுலபத்வத்தை நிகமிக்கிறார்.

ஒ.—நாலாந்திருவாய்மொழியில், எம்பெருமான், "உம்மை ஒருநாளும்பிரியேன்" என்று இவரை ஆஶ்வஸிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும்ப்ரீதரான ஆழ்வார், வீடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலுமாக ப்ரஸ்துதமான பக்தியோகமாகிற உபாயம் ஸ்வஸாத்யத்தோடே சேர்ந்தபடியை ஸாக்ஷாத்கரித்து அத்திருவாய்மொழிகளில் பக்திவர்த்தகமாகச் சொன்ன குணங்களைப் பராமர்ஶியாநின்றுகொண்டு, பக்தியோகத்தை நிகமிக்கிறார். எம்பெருமானை, "பசுமேய்க்கப்போகாதொழியவேணும்" என்று அபேக்ஷிக்க, அவனும் அப்படியே தவிருகையாலே ப்ரீதரான ஆழ்வார், அவன் பக்திலப்யனென்னுமிடம் நிஶ்சிதமென்கிறாரென்றுமாம்.

ப.—நாலாந்திருவாய்மொழியில், கூடவிருக்கச்செய்தே ஈஶ்வரனுடைய பிரிவை யதிஶங்கைபண்ணும் தமக்குப் பிறந்தப்ரேமாதிஶயத்தாலே அவனும் விஶ்லேஷப்ரஸங்கமில்லாதபடி ஸம்ஶ்லேஷப்ரகாரத்தைத் தெளிவிக்க, அத்தாலே ஸந்துஷ்டராய், "தன்பக்கல் பக்தியுக்தராயிருப்பார்க்கு ஸுலபனாயிருக்கும்" என்றறுதியிட்டு, அந்த பக்திலப்யத்வோபபாதகமாக; அவனுடைய பரத்வஸௌலப்யத்வ விஶிஷ்ட ஐஶ்வர்யத்வத்தையும், அதுக்கடியான ஶ்ரிய:பதித்வத்தையும், அநுபாவகத்வபூர்த்தியையும், ஆஶ்

ரிதாரக்ஷணஸ்யைர்யத்தையும், அநந்யஹநி ஸுலஹத்வத்தையும், அதிஶயிதஸௌஶீல்யத்வத்தையும், லோக்யவிக்ரஹத்வத்தையும், நித்யாநுஹாவ்யமான ரக்ஷகத்வத்தையும், தத்த்வயாதாத்ம்ய ப்ரகாஶகத்வத்தையும், அஸாதாரண ஜந ப்ராப்யத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன்விஷயத்தில் தமக்குப் பிறந்த ஊக்தியானது லோகோபகரணமாய்க்கொண்டு ப்ராப்யாந்தர்க்கதமானப்ரகாரத்தை யநுஸந்தித்து ப்ரீதராகிறார்.

இ.—நாலாந் திருவாய்மொழியில், பிரியநினைவின்றிக்கேயிருக்க அதிஶங்கையாலேபிரிந்தார் படும்வ்யஸநத்தைப்பட்டு அத்தாலே அவஸந்நரான இவரை, "உம்மை ஒருநாளும் பிரியேன்" என்று ஆஶ்வஸிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும்ப்ரீதரானவர், வீடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலுமாக ப்ரஸ்துதமான ஊக்தியானது ஸ்வஸாத்யத்தோடே சேர்ந்தபடியை ஸாக்ஷாத்கரித்து, அத்திருவாய்மொழிகளில் ஊக்திவர்யகமாகச்சொன்ன குணங்களைப் பராமர்ஶிபாநின்றுகொண்டு, தமக்குப் பேற்றுக்குஉடலாக முதல்திருவாய்மொழியிற் சொன்ன ப்ரபத்தியைச் சொல்லித் தலைக்கட்டுகிறார். "மயர்வறமதிநலமருளினன்" என்று முதல் திருவாய்மொழியிலே ப்ரபத்தியைச் சொல்லிற்றிறே. இவருடைய ஊக்திதான், "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகலப்ய:" என்று ஜ்ஞாநகர்மாநுக்ருஹீத வேதாந்த விஹிதஊக்தியன்று. அதுவாகில் அபரோக்ஷ்ராயிகரணந்யாயம் ப்ரஸங்கிக்கும் அந்த ஜ்ஞாநகர்மங்களினுடைய ஸ்தாநத்திலே ஊஹவத்ப்ரஸாதத்தாலே பரஊக்திதொடக்கமான ப்ராப்யாந்தர்கதமான அவஸ்தைகளிறே இவரது; அப்படி வீடுமின்முற்றத்திலும், பத்துடையடியவரிலும் பிறர்க்கு உபதேஶித்த ஊக்தி ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை நிரூபிக்கிறார்: ஸாத்யத்தோடே பொருந்துகையாவது-ஸாத்யத்தை லபிக்கை. அதாகிறது:—ஸாக்ஷாத்காரம். கீழ், இவர்க்கு அநுஸந்தாநமில்லையோ வென்னில்; அவையெல்லாம் ஒருரஸவிஶேஷங்களைப் பற்றச்சொல்லிற்று. இதில், உபக்ரமத்திலே தாம் விதித்த ஊக்தியை நிரூபிக்கிறார். "பசுமேய்க்கப் போகாதொழிய வேணும்" என்று அபேக்ஷிக்க, 'அவனும் தவிர்ந்தோம்' என்று சொல்லுகையாலே ப்ரீதராய், அவன் ஊக்திலக்ஷ்யனென்னுமிடம் நிஶ்சிதமென்கிறார்" என்று பிள்ளான் நிர்வாஹம்.

ஈடு.—தம்மைப்பிரிய நினைவின்றிக்கேயிருக்க அதிஶங்கையாலே பிரிந்தார் படும் வ்யஸநத்தைப்பட்டு, அத்தாலே யவஸந்நரானவரை, "உம்மையொருநாளும் பிரியேன்" என்று அவன்ஆஶ்வஸிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும் ப்ரீதரானார்-கீழ். முதல் திருவாய்மொழியிலே, தத்த்வவிஷயமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லியற்றது;

சார்வேதவநெறிப்ரவேஶ; இத்திருவாய்மொழிக்கு * வீடுமின்முற்றம் * பத்துடையடியவரோடே ஸங்கதியாதல்; * வேய்மருதோளிணையோடே ஸங்கதியாதல், இது பிள்ளான் நிர்வாஹம்.வ்ருத்தாநுவாதம்-தம்மை இத்யாதி.ஆஶ்வஸிப்பிக்கவென்றது "செங்கனிவாய்"என்றத்தைப்பற்ற. * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும்சொன்ன ஊக்தியையும், முதல் திருவாய்மொழியிலே ஸூசிதமான ப்ரபத்தியையும், * சார்வே தவநெறியிலே நிரூபிக்கிறாராகையாலே, தத்த்வபரமான முதல்திருவாய்மொழியிலர்த்தத்தை * கெடுமிடரிலே நிரூபிக்கிறாரென்கிறார் - முதல்திருவாய்மொழியிலே இத்யாதி. "தத்த்வபரமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லி" என்றது - "அருளினன்" என்று ப்ரபத்தியைச் சொல்லுகையாலே உபாயமும் உக்

இனி அந்த தத்த்வந்தானே ப்ராப்யமாயிருக்குமிறே. அந்த ப்ராப்யவேஷத்தையும், ப்ராப்தி பலமான கைங்கர்யத்தையும், "படமுடையரவிற் பள்ளிபயின்றவன்" என்றும் "கடைத்தலைசீய்க்கப்பெற்றால்" என்றும் அநுஸந்தித்தார் - * கெடுமிடரிலே; அந்தப்ராப்யம் அப்போதே கைபுகுரப்பெறாமையாலும் நெடுநாள்படப் பிரிந்துபோந்த வாஸநையாலும் வெருவி இவர் அவஸந்நராக, இவர்க்கு ப்ராஸங்கிகமாகப் பிறந்த அவஸாதத்தை அநுஸந்தித்து அவனும் ஆஶ்வஸிப்பிக்க ஆஶ்வஸ்தராய் நின்றார் - * வேய்மருதோளிணையிலே. ஆக, முதல்திருவாய்மொழியிலே - தத்த்வவிஷயமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லி, அவ்வஸ்துதானே ப்ராப்யமாயிருக்கையாலே அந்தப்ராப்யத்தைப் பெறுகைக்கு உபாயமான பக்தியோகத்தை * வீடுமின் முற்றத்தாலே சொல்லி, அந்த பக்திமான்களுக்கு அவன் ஸுலபனாயிருக்கும் என்று அவன் ஸௌலப்யத்தை * பத்துடையடியவராலே சொல்லி, ஆக, வீடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலும் சொன்ன பக்தியானது ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லி, அத்திருவாய்மொழிகளில் பக்திவர்தகமாகச் சொன்ன குணங்களைப் பராமர்ஶியா நின்றுகொண்டு, தாம் தம்முடைய பேற்றுக்கு உபாயமாக முதல்திருவாய்மொழியிற் சொன்ன ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறார் - இதில்.

---

*தமேயாகிலும், தத்த்வ பரத்வ ப்ராதான்யத்தைப்பற்ற. * கெடுமிடரிலே ப்ரதிபாதிக்கிறது கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியையன்றோ? இது பரத்வ ப்ரதிபாதகமான முதல்திருவாய்மொழியின் நிகமனமாகிறபடி யெங்ஙனே? என்ன - இனி அந்த தத்த்வந்தானே இத்யாதி; அந்த பரவஸ்துவே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாகையாலே நிகமனமாகலாம் என்றபடி.* அந்த ப்ராப்யவேஷத்தையும் ப்ராப்திபலமான கைங்கர்யத்தையுமென்றது *- "அமரர்களதிபதி, தொழுதெழு" என்ற பதங்களைக் கடாக்ஷித்து. * வேய்மருதோளிணை எதினுடைய நிகமனமென்ன -* அந்த ப்ராப்யம் அப்போதே *இத்யாதி. * வேய்மருதோளிணை ப்ராஸங்கிகமென்றபடி.* இனிமேல், முதல் திருவாய்மொழி*யோடே * வீடுமின்முற்றத்துக்கு ஸங்கதிகதன பூர்வகமாக, * வீடுமின்முற்றத்தினுடையவும் * பத்துடையடியவருடையவும் ப்ரமேயத்தை யருளிச்செய்துகொண்டு, அவற்றிற்சொன்ன பக்தியையும் முதல்திருவாய்மொழியில் ஸூசிதமான ப்ரபத்தியையும் இதிலே நிகமிக்கிறாரென்கிறார் -* ஆக முதல்திருவாய்மொழியிலே *என்றுதொடங்கி,* தலைக்கட்டுகிறார் *என்னுமளவாலே. * வீடுமின் முற்றத்திற்சொன்ன பக்தி ஸாத்யபக்தியாயிருக்க, 'ப்ராப்யத்தைப்பெறுகைக்கு உபாயமான பக்தியோகத்தை' என்றதுக்குக் கருத்து - தாம் உபய ஸாத்யபக்தி ப்ரபத்தியிலே மூட்ட ப்ரபத்தியுபாயமாய்த் தலைக்கட்டுமென்று. இங்ஙனன்றிக்கே, இந்த ஸாத்யபக்திதன்னையே ப்ரபத்தியென்றால் 'தம்முடைய பேற்றுக்கு உபாயமாக முதல்திருவாய்மொழியிற் சொன்ன ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறாரிதில்' என்றத்தோடே சேராது. "*வீடுமின் முற்றத்திலும் *பத்துடையடியவரிலும் சொன்ன பக்தி ஸாத்யபக்தி" என்றே யருளிச்செய்வர். ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லியென்றது - "தவநெறிக்கு - சார்வே" என்றத்தைப்பற்ற.* ஸ்வஸாத்யத்தோடே பொருந்துகையாவது *- பக்த்யுபாயம் பலவ்யாப்தமாகை.* குணங்களைப் பராமர்ஶியா நின்றுகொண்டு *என்றது - "உரலினோடிணைந்திருந்து" என்றத்தை "தாமோதரன்" என்றும், "புயற்கருநிறத்தனன்" என்றத்தை "கார்மேகவண்ணன்" என்றும், "அடியவர்க்கெளியவன்" "எளிவருமியல்வினன்" என்றத்தை "சார்வே" என்றும், "அமைவுடைமுதல்கெடல்" இத்யாதியை "பெருமையனே வானத்திமையோர்க்கும்" என்றும், "பிறர்களுக்கரியவித்தகன்" என்றத்தை "காண்டற்கருமையனே" என்றும், "மலர்மகள்விரும்பும்" என்றத்தை "திருமெய்யுறைகின்ற" என்றும், இப்புடைகளிலே பராமர்ஶித்துக்கொண்டென்றபடி.* முதல்திருவாய்மொழியிற் சொன்ன *என்றது - "அருளினன்" என்றத்தைப்பற்ற.* ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறார் *என்றது - "பண்டேபரமன்பணித்தபணிவகையே - கண்டேன் கமலமலர்ப்பாதம்" என்றத்தைப்பற்ற.*

இவ்விரண்டுகோடியும் இவர்க்கு உண்டாயிருக்கச்செய்தேயும், தம்முடைய பேற்றுக்கு உடலாக இவர்நினைத்திருப்பது ப்ரபத்தியையிறே. முதல்திருவாய்மொழியிலே ப்ரபத்திக்கு ஸூசகமான ஶப்தமுண்டோ வென்னில்,—"அருளினன்" என்றாரிறே. இனித்தான் இவருடைய பக்தி வேதாந்தவிஹிதையான பக்தியல்ல; அதுதன்னையே பார்க்குமன்று அபஶூத்ராதிகரணந்யாயம் ப்ரஸங்கிக்கும். அதுதான் இவ்வாழ்வாருடைய ப்ரபாவத்தாலே கூடாதோவென்னில்; அது இவருடைய உக்திகளோடு விரோதிக்கும். "அருளினன்" என்கிற இப்புடைகளிலேயிறே இவருடைய உக்திகள். "**உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகைகலப்ய꞉**" (உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகைகலப்ய꞉) என்று ஜ்ஞாநகர்மங்களாலே ஸம்ஸ்க்ருதாந்த꞉கரணனுக்குப் பிறக்குமதிறே பக்தியாகிறது; அந்த ஜ்ஞாநகர்மங்களினுடைய ஸ்தாநே பகவத்ப்ரஸாதமாய், அதுக்கு அநந்தரமான பரபக்தி தொடங்கிப் பிறந்ததாயிருக்கும் இவர்க்கு. இனித்தான், இவர்வழியேபோய் இவருடையபேறே பேறாக நினைத்திருந்த பாஷ்யகாரரும், ப்ரபத்தியைப்பண்ணி, பின்னை பக்திதொடங்கி ப்ரார்த்தித்தாரிறே. அவன்உபாயமானாலும் இவனுக்கு ருசியுண்டாய் ப்ராப்யஸித்தியுண்டாக வேணுமே; இல்லையாகில் புருஷார்த்தமாகாதே; ப்ராப்யம் இன்னதென்று நிஷ்கர்ஷித்து அந்த ப்ராப்யருசி கண்ணழிவற உடையவனுக்கிறே அவன் ப்ராபகனாவது; ஆகையாலே, இவருடைய பக்திப்ரபத்திகள் விகல்பிக்கலாம்படியிறே இருப்பது. ஆக, * வீடுமின்

---

*இவர்க்கு பக்தியுண்டாயிருக்க ப்ரபத்தியே பேற்றுக்கு உடலாவானென்னென்ன - இவ்விரண்டு இத்யாதி. "அருளினன்" என்றால் ப்ரபத்தியைச் சொல்லுமோவென்னில்: "அதுவுமவனதின்னருளே" என்று ப்ரபத்திக்கும் அடி க்ருபையாகையாலே ப்ரபத்தியென்று ஸித்தம். இவர்க்கு ப்ரபத்தியே பேற்றுக்கு உபாயமென்பானென்? பக்திதானானாலோ என்னில், அப்படியாமன்று அபஶூத்ராதிகரணத்தோடும் இவருடைய உக்திகளோடும் விரோதிக்குமென்கிறார் - இனித்தான் என்று தொடங்கி நாலுவாக்யத்தாலே. வேதாந்த விஹிதபக்தியானாலோவென்ன - அதுதான் இத்யாதி. ந்யாயம் ப்ரஸங்கிக்கும் - ந்யாயவிரோதம் ப்ரஸங்கிக்குமென்றபடி. அதுதான் - வேதாந்த விஹிதபக்திதானென்றபடி. விவரணம் - அருளினனென்கிற இத்யாதி. ஆனால் இவர்க்கு பக்திதான் வந்தவழியேதென்ன - உபய இத்யாதி. யாமுநாசார்ய வசநம்: உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய - கர்மஜ்ஞாநஸம்ஸ்க்ருதாந்த꞉கரணஸ்ய. ஐகாந்திகமாகையாவது - பலதலைத்திருக்கை யன்றிக்கே பகவானாகிற ஒருதலையேபற்றியிருக்கை. ஆத்யந்திகமாகையாவது - அந்தமதீத்ய வர்த்தமாநமென்றாய், யாவதாத்மபாவியாயிருக்கை. ப்ரபந்நனுக்கும் பக்திவேணுமென்கைக்கு ஸம்வாதமாதல், பகவத்ப்ரஸாதம் பக்திஹேதுவென்னுமதுக்கு ஸம்வாதமாதல் - இனித்தான் இவர்வழியே இத்யாதி. ப்ரபந்நனுக்கும் அநுபவ கைங்கர்யங்கள் அபுருஷார்த்தமாகாமைக்காக பக்திவேணுமென்கிறார் - அவன்உபாயம் இத்யாதி. ப்ரபத்தே꞉ பூர்வபாவித்வேநவும் பக்திவேணுமென்று உபபத்திமுகேந ஊர்ஸிப்பிக்கிறார் - ப்ராப்யமின்னதென்று இத்யாதி. ஆகையாலே என்றது - ப்ரபத்தியேயன்றிக்கே ஸாத்யபக்தியுமுண்டாகையாலே யென்றபடி. பக்திப்ரபத்திகள் விகல்பிக்கலாம்படியிறே யிருப்பது என்றது - "அவனுடைய க்ருபையேயுபாயம்" என்றறுதியிட்டிருக்கிற இவருடைய ஸித்தாந்தத்தைப்பார்த்தால் "ப்ரபத்தியே இவர்க்குள்ளது, பக்தியில்லை" என்றும், ஆர்த்தியின் மிகுதியாலே ப்ரபத்தியைப் பண்ணும்இவருடைய அநுஷ்டாநத்தைப்பார்த்தால் "பக்தியே இவர்க்குள்ளது, வேறொன்றுமில்லை" என்றும் விபஜித்துச் சொல்லலாம்படியாயிருக்குமிறே என்றபடி. இத்தால் - "பக்தியாதல் ப்ரபத்தியாதலொழிய இரண்டுமுண்டாகக் கூடுமோ?" என்கிற ஶங்கையும் பரிஹ்ருதம். மேலே, "ஆகவீடுமின்முற்றத்திலும்" இத்யாத்யுக்தத்தை நிரூபிக்கிறார் - ஆகவீடுமின் முற்றத்திலும் இத்யாதி. பிறர்க்கு உபதேசித்த பக்தி தம்மு*

முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் பிறர்க்கு உபதேசித்த பக்தி தம்முடையபேற்றுக்கு உடலாயிருந்தபடியைச் சொல்லி, இதுதான் ஸ்வஸாத்யத்தோடே சேர்ந்தபடியைச் சொல்லி நிகமிக்கிறார் இதில். இது ஸாயுஜ்யத்தோடே சேர்ந்திருப்பது ப்ராப்தியுண்டானாலன்றோ வென்னில்? - ஸாக்ஷாத்காரரூபமான அநுஸந்தாநமுண்டாக வமையுமிறே இப்போது; குணம் அநுபாவ்யமானால் அந்தகுணவிசிஷ்டமாக இங்கேயிருந்து உபாஸியா நின்றானிறே. ஆக, உபாஸந வேளையிலும் அதிருக்கும்படியை அநுஸந்திக்கத் தட்டில்லையிறே. ஆனால் பின்னைக் கீழுமெல்லாம் இந்த ப்ராப்யாநுஸந்தாநமே யன்றோ பண்ணிப் போந்ததென்னில்; அவற்றைப் பற்றிப் பிறந்தன சிலரஸவிசேஷங்களைச் சொன்ன இத்தனையிறே அவ்விடங்களில்;உபக்ரமித்த அர்த்தத்தை யுபஸம்ஹரிக்கையென்னு மொன்று உண்டே ; அத்தைச்சொல்லுகிறது - இங்கு. இங்ஙனன்றிக்கே, பிள்ளான் ஒருருவிலே "'நீபசுகேய்க்கப்போகவேண்டா' என்றாள்; 'ஆகில் தவிர்ந்தேன்' என்றான்; இவன் தனை ஸாதநமில்லைகிடீர், இவன் பக்திலப்யனேன்னுமிடம் நிஶ்சிதமென்கிறார்"

---

*டைய பேற்றுக்கு உடலாகக்கூடுமோவென்னில்; விபீஷணாதிகள் ராவணாதிகளுக்கு உபதேசிக்க தத்த்வாரா தங்களுக்கு பகவத்ப்ராவண்யாதிஶய ஹேதுவானாற்போலே, இவர்க்கும் பிறரைக் குறித்து உபதேசித்த பக்தி பகவத் ப்ராவண்யத்தைப் பிறப்பிக்க அத்தாலே ப்ரபத்தியைப் பண்ண, அது தம்முடைய பேற்றுக்கு உடலாய் ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லி நிகமிக்கிறார் ; ஆகையாலே, இவர்க்குக் கூடுமென்றபடி. " தம்முடைய பேற்றுக்கு உடலாய் " இத்யாதியின் விவரணம் -* **இதுதான் ஸ்வஸாத்த்யத்தோடே** *இத்யாதி.* **ஸாத்த்யத்தோடே சேருகையாவது** *- ஸாயுஜ்யவ்யாப்தமாகையாய், ஸாக்ஷாத்காரமாகையென்றபடி.* **இதுவென்றது** *- பிறர்க்கு உபதேசித்த பக்தியென்றபடி. தமக்குஇன்னம் பகவத்ப்ராப்தி ஸித்தியாதிருக்க, தத்பலம்பெற்றேனென்னும்படி எங்ஙனேயென்கிற ஶங்கையையநுவதித்துப் பரிஹரிக்கிறார் -* **இது ஸாத்த்யத்தோடே** *இத்யாதி.* **ப்ராப்தி** *யாவது - ப்ரத்யக்ஷாநுபவமென்றபடி.* **ஸாக்ஷாத்காரரூபமான அநுஸந்தாநமாவது** *- ப்ரத்யக்ஷஸமாநாகாரமென்று தோற்றாதே ப்ரத்யக்ஷமென்றே தோற்றுகிற மாநஸாநுபவவிசேஷம்.* **இப்போது** *என்றது-இங்கேயிருக்கச்செய்தே யென்றபடி. ஆனால், ப்ராப்திதஶையில் அநுபவம்போலே அப்ராப்திதஶையிலும் அநுபவம் போகரூபமாயிருக்குமோ வென்ன -* **குணமநுபாவ்யம்** *இத்யாதி. அதாவது - "[illegible]" என்கிறபடியே ப்ராப்திதஶையிலே குணம் அநுபாவ்யமாயிருக்கச் செய்தேயும், இங்கேயும் அக்குண விசிஷ்டமாக வுபாஸிக்கிறானிறே குணாநுபவத்தின் போகரூபதையைப் பற்றவென்றபடி.* **அதிருக்கும்படியை** *- குணாநுபவத்தின் போகரூபதையிருக்கும்படியை யென்றபடி.* **கீழுமெல்லாம்** *என்றது - " கண்ணனை நான்கண்டேனே," " கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்," " கண்டசதிர் கண்டொழிந்தேன்," "கண்டுகொண்டேன் கண்ணிணையாரக்களித்து" இத்யாதியைக்கடாக்ஷித்து.* **ப்ராப்யாநுஸந்தாநம்** *என்றது - ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸாநுஸந்தாநமென்றபடி.* **அவற்றைப்பற்றி** *என்றது - ஓரோகுணங்களைப் பற்றியென்றபடி.* **அவ்விடங்களில்** *- அந்தத்திருவாய்மொழிகளில்.* **இத்தால்** *- அவ்விடங்களைப்பற்ற இத்திருவாய்மொழிக்கு * முனியே நான்முகன் அணித்தாகையாலே மாநஸாநுபவத்துக்கொரு வைஶத்யவிசேஷமுண்டென்றபடி. கீழெங்கும் ப்ராப்யாநுஸந்தாநமுண்டானாலும் விஶ்லேஷவ்யஸநம் அதிஶயித்திருக்கையாலே ப்ராப்யாநுபவம் மட்டமாயிருக்கும் : இங்கு பலவேளையாகையாலே ப்ராப்யாநுபவம் பூர்ணமாயிருக்குமென்று கருத்து. * வீடுமின் முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்னவர்த்தத்தை நிகமிக்கைக் கடியேதென்ன -* **உபக்ரமித்த** *இத்யாதி. ஸங்கத்யந்தரம் -* **இங்ஙனன்றிக்கே** *இத்யாதி. கீழ் எம்பெருமானார் நிர்வாஹத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்து, மேல் ஆளவந்தார் நிர்வாஹத்தைக் கடா*

என்று பணித்தான். இன்னமும் முதல்திருவாய்மொழியில் ப்ராப்யத்தை அருளிச்செய்தார்; அந்த ப்ராப்யத்துக்கு ப்ராபகமாக, வேதாந்தங்களில் பக்தியென்றும் ப்ரபத்தியென்றும் இரண்டு உபாயங்களை விதித்தது; அவை யிரண்டிலும், பக்தி, த்ரைவர்ணிகாதிகாரம்; ப்ரபத்தி, ஸர்வாதிகாரம். அதில் ஸர்வாதிகாரமுமாய் தாம் திருவுள்ளத்தாலே தமக்கு உபாயமாக அங்கீகரித்த ப்ரபத்தியை, * வீடுமின்முற்றத்திலே அருளிச்செய்தார்; த்ரைவர்ணிகாதிகாரமான பக்தியை, * பத்துடையடியவரிலே அருளிச்செய்தார். ஆக, இரண்டு திருவாய்மொழியிலும் அருளிச்செய்த பக்திப்ரபத்திகள் ஸ்வாஸாத்யத்தோடே பொருந்தினபடியை அருளிச் செய்கிறார் * சார்வே தவநெறி, * கண்ணன்கழலிணை, இரண்டாலும். அதில், *சார்வே தவநெறியாலே-ப்ரபத்தி ஸ்வாஸாத்யத்தோடே பொருந்தினபடியை அருளிச்செய்கிறார். ''சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்'' என்று - தபஶ்ஶப்தத்தாலே ப்ரபத்தியைச் சொல்லுகிறது. ''தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:'' (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்று தபஸ்ஸுக்களில் மிக்க தபஸ்ஸாகச் சொல்லிற்றிறே ப்ரபத்தியை. ''பண்டேபரமன்பணித்தபணிவகையே - கண்டேன் — கமலமலர்ப்பாதம், காண்டலுமே விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்'' என்றும் ''இருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றான்'' என்றும், ''மாமேகம் ஶரணம்வ்ரஜ அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' (மாமேகம் ஶரணம்வ்ரஜ அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்ற அர்த்தத்தை அருளிச்செய்தார். ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான்பணிப்பது;-''ப்ரபத்திவிஷயமாகவாய்த்து * வீடுமின்முற்றம்:'' உடையவரும்அப்படியே ப்ரபத்திவிஷயமாக அருளிச்செய்து கொடுபோந்து, பாஷ்யம் அருளிச்செய்தபின்பு, 'ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணாது என்று வீடுமின்முற்றத்தையும் பக்திவிஷயமாக்கி அருளிச்செய்தார். ஆக, முதல் திருவாய்மொழியில் சொன்ன ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராப்திபலமான கைங்கர்யத்தையும், கெடுமிடரிலே 'படமுடையரவிற்பள்ளிபயின்றவன்' என்றும் 'கடைத்தலை சீய்க்கப்பெற்றால்' என்றும் அருளிச்செய்து, அக்கைங்கர்யத்தில் களைபறித்து, 'உன்தன்திருவுள்ளம் இடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும்' என்று உத்தரவண்டத்தில் நமஶ்ஶப்தார்த்தத்தை அருளிச்செய்து, கெடுமிடராலும் வேய்மருதோளிணையாலும் - முதல்திருவாய்மொழியை நிகமித்து, சார்வே தவநெறியாலும் கண்ணன்கழலிணையாலும் - வீடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலும் சொன்ன

---

க்ஷித்தருளிச்செய்கிறார் இன்னமும் இத்யாதி. தபஶ்ஶப்தம் ப்ரபத்தியைச் சொல்லுமோவென்ன - தஸ்மாந்ந்யாஸம் இத்யாதி. தைத்திரீயகே. பின்னையும்ப்ரபத்திக்கு ஸூசகஶப்தமுண்டென்கிறார் - பண்டேபரமன் இத்யாதி. ''ஸாதநபக்தி ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடி'' என்றதுக்கு ஶப்தம் - ''பாடீர வன்றுமம் வீடேபெறலாமே'' என்றது. * வீடுமின்முற்றம் பக்திபரமென்று முன்புசொன்னதுக்கும், ப்ரபத்திபரமென்று இப்போது சொன்னதுக்கும் ஆப்தஸம்வாதம் - ஆளவந்தார் இத்யாதி. பக்திவிஷயமாக்கி என்றது - ஸாத்யபக்திவிஷயமாக்கியென்றபடி. * வேய்மருதோளிணை முதல்திருவாய்மொழியின் நிகமநமென்கைக்காக மீளவும் ஆளவந்தார் நிர்வாஹத்தை யநுவதிக்கிறார் - ஆகமுதல்திருவாய்மொழியில்இத்யாதி. இத்தால் - *வேய்மருதோளிணைக்கு இரண்டுஹாவம் - ப்ராஸங்கிகமாகப் பிறந்த அவஸாதத்தை யநுஸந்தித்து அவனும் ஆஶ்வஸிப்பிக்க ஆஶ்வஸ்தராய் நின்றாரென்றும், கைங்கர்யத்தில் களையறுக்கிறதென்றும். ஆக, ''முதற்றிருவாய்மொழியின் நிகமநம் - * கெடுமிடர்: * வீடுமின்முற்றம் * பத்துடையடியவர் இரண்டும் ஸாத்யபக்திபரம் : ஏதந்நிகமநம்; - * சார்வேதவநெறி ; * வேய்மருதோளிணை ப்ராஸங்கிகம்''

ஸக்தி ப்ரபத்திகள் ஸ்வஸாத்த்யத்தோடே பொருந்தினபடியை அருளிச்செய்தார்'' என்று ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது.

---

## முதற் பாட்டு.

---

**சார்வே தவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்**
**கார்மேகவண்ணன் கமலநயனத்தன்**
**நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்றநேமியான்**
**பேர்வானவர்கள்பிதற்றும் பெருமையனே.**

**ஆ.**—(*சார்வே.*)—*ஸௌந்தர்யத்தினாலும் ஐஸ்வர்யத்தினாலும் திவ்யவிக்ரஹாதியாலும் பரிபூர்ணனாயிருந்துவைத்து ஆஸ்ரிதஸுலபனாக தத்ஸஜாதீயதயாவதீர்ணனான எம்பெருமானுடைய திருவடிகள் பக்தியோகத்தினாலே ப்ராபிக்கலாம், இதில் ஒரு ஸம்ஸயமு மில்லையென்கிறார்.*

ஒ.—*முதற்பாட்டில், உபயவிபூதியுக்தனா யிருந்துவைத்து ஆஸ்ரிதஸுலபனான எம்பெருமானுடைய திருவடிகள் பக்தியோகலப்ய மென்கிறார்.*

[*சார்வே என்றுதொடங்கி*] - *ஆஸ்ரிதஸுலபனான க்ருஷ்ணனுடைய திருவடிகள் பக்தியோகத்துக்கு ப்ராப்ய மென்னுமிடம் நிஸ்சிதம். ''வணக்குடைத் தவநெறி'' என்றுசொல்லுகிற அத்தை, இங்கு 'தவநெறி' என்கிறது. ''தாமோதரன்தாள்'' என்று உரலினோடிணைந்திருந்த ஸௌலப்யத்தை ப்ரத்யபிஜ்ஞை பண்ணுகிறது. [கார்மேக வண்ணன் என்றுமேலுக்கு] - கறுத்தமேகம்போலே ஸ்ரமஹரமான திருநிறத்தையும் அழகியதிருக்கண்களையு முடையனாய் ஸர்வத்துக்கும் ஈஸ்வரனாய், ஜகத்ரக்ஷணத்துக்கு உறுப்பான திருவாழியை யுடையனாய், அயர்வறுமமரர்கள் தோற்றுப்பேசும் பெருமையை யுடையனான தாமோதரன் என்றந்வயம்.*

ப.—*முதற்பாட்டில், ஸர்வஸ்மாத்பரனாய் போக்யபூதனானவன் பக்திலப்யனென்கிறார்.*

*கார்மேகம் - காளமேகம்போலே ஸ்யாமளமான, வண்ணன் - வடிவையுடையனாய், (அதுக்குப்பரபாகமாம்படி), கமலம் - கமலம்போலேயிருக்கிற, நயனத்தன் - திருக்கண்களையுடையனாய், (அவ்வடிவழகேயன்றியே), நீர்வானம் மண்ணெரிகாலாய்நின்ற - பஞ்சபூதப்ராமுவமான ஸமஸ்தஜகத்தும் ப்ரகாரமாம்படி அந்தராத்மாவாய், நேமியான் - ரக்ஷணபரிகரமான திருவாழியையுடையனாய், பேர் - இவ்வழகுக்கும் ப்ராப்திக்கும் ரக்ஷகத்வத்துக்குமான திருநாமங்களை, வானவர்கள் - பரமபதவாஸிகளானவர்கள், பிதற்றும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அக்ரமமாகச் சொல்லும்படியான, பெருமையன் -*

---

*என்று எம்பெருமானார் நிர்வாஹம்; முதல்திருவாய்மொழியின் நிரமம் - * கெடுமிடர் * வேய்மருதோளிணை இரண்டும்; * வீடுமின்முற்றம் ப்ரபத்திபரம்; * பத்துடையடியவர் ஸாதநபக்திபரம்: ஏதந்நிரமம்-* சார்வேதவநெறி * கண்ணன்கழலிணை'' என்றாளவந்தார் நிர்வாஹமென்று கண்டு கொள்வது. * வேய்மருதோளிணையோடே நேரே ஸங்கதி'' என்று பிள்ளான் நிர்வாஹம்.*

பெருமையை யுடையனாய், இப்படி (உபயவிபூதிநாதனாய்வைத்து), தாமோதரன்-("மத்துறுகடைவெண்ணெய் களவினிலுரவிடை யாப்புண்டெத்திறம்" என்கிறபடியே வெண்ணெய்க்களவிலே தாம்பாலேகட்டுண்டு அத்தாலே) தாமோதரனென்று பேராம்படி ஆஸ்ரிதஸௌலப்யனானவனுடைய, தாள்கள் - திருவடிகளானவை, தவநெறிக்கு - "வணக்குடைத் தவநெறி" என்று ப்ரஸித்தமான பக்திமார்க்கத்துக்கு, சார்வே - ப்ராப்யமாயே யிருக்கும்.

இ.—முதற்பாட்டில், உபயவிபூதியுக்தனாய்வைத்து ஆஸ்ரிதஸுலபனானவனுடைய திருவடிகள் பக்தியோகலப்ய மென்கிறார்.

[தவநெறிக்குத் தாமோதரன்தாள்கள் - சார்வே] - தவநெறிக்கு - பக்திமார்க்கத்துக்கு. "வணக்குடைத் தவநெறி" என்றத்தைச் சொல்லுகிறது. "நமோ நம:" என்றவணக்கத்தைக் கரணஸரீரமாக உடைத்தாயிருக்குமிறே பக்தி. அன்றிக்கே, "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" என்று ஜ்ஞாநவிஸேஷமான பக்தியைத் தபஸ்ஸென்று சொல்லுகிறது. இவன் ஒருகால் தலைவணங்க, பெருவருத்தமான காயக்லேஸமாக நினைத்திருக்கும் ஈஸ்வராபிப்ராயத்தாலே சொல்லவுமாம். [தாமோதரன்] - "உரவினொடிணைந்திருந்து" என்றத்தைச் சொல்லுகிறது. ஸர்வாதிகனாய்வைத்து, ஓரிடைச்சி கட்டவும் அடிக்கவும் தன்னைக்கொடுத்து, அத்தால்வந்த தழும்பாலே அதுதானே தனக்குத் திருநாமமாம்படி யிருக்கிறவன். [தாள்கள்] - தன்னை உகப்பார்க்கு அவன்இப்படி எளியனானால் அவனை உகப்பார் அஸ்ஸௌலப்யத்துக்குத் தோற்று அவன்திருவடிகளைப் பெறு மித்தனையிறே. சார்வு - ப்ராப்யம். "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றும் "எளிவருமியல்வினன்" என்றும் 'அவன் சார்வு' என்றார்; இங்கு, சார்வேயென்று அவதாரிக்கிறார். எப்படிப்பட்டவன் இங்கு ஸுலபனாகிறா னென்னில்,- விலக்ஷணவிக்ரஹத்தை யுடையனாய் உபயவிபூதியுக்தனானவன் என்கிறார் :— [கார்மேகவண்ணன்] - நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே ஸ்ரமஹரமான வடிவை யுடையவன். அடியிலே இவனுக்கு ருசியைப் பிறப்பித்து பக்திபர்யந்தமாக வளர்த்து அதுபக்வமானால் பின்னைத்தானே ப்ராப்யமாம்படி யிருக்கிற வடிவு. கறுத்தமேகமென்னுதல்; கார்காலத்து மேகமென்னுதல். "புயற்கருநிறத்தனன்" என்றத்தை நினைக்கிறது. [கமலநயனத்தன்] - அவ்வடிவுக்குப் பாஹ்ருமாய் அகவாயில் தண்ணளிக்கு ப்ரகாஸகமான திருக்கண்களை யுடையவன். [நீர்வானம் இத்யாதி] - விக்ரஹவைலக்ஷண்யமே யன்றியிலே ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. பஞ்சபூதங்கள், தத்கார்யமான தேவாதிபதார்த்தங்களுக்கும் உபலக்ஷணம். [நேமியான்] - ஜகத்ரக்ஷணத்துக்கு உறுப்பான திருவாழியை யுடையவன். நித்யவிபூதியிலும் கையுந்திருவாழியுமாயிறே யிருப்பது. [பேர்வானவர்கள்] - அமரரான ப்ரஹ்மாதிகளை வ்யாவர்த்திக்கிற தென்னுதல், வானவர்கள் பேர்பிதற்று மென்னுதல். [பிதற்றும் பெருமையனே] - அளவுடையாரும் அடைவுகெடப் பேசும்படியான பெருமையை யுடையவன். "யாவையும் யாவரும்தானும் அமைவுடை நாரணன்" என்றத்தை நினைக்கிறது. இப்படி உபயவிபூதிநாதனாய்வைத்து, தன் விபூதியிலே ஒரு பதார்த்தத்துக்கு ஸேஷமாய் வந்து அவதரித்து, கட்டவும் அடிக்கவுமாம்படி யிருக்கிற - தாமோதரன் - தவநெறிக்கு- சார்வே.

ஈடு.—முதற்பாட்டு. உபயவிபூதியுக்தனாயிருந்துவைத்து ஆஸ்ரிதஸுலபனானவனுடைய திருவடிகள் பக்தியோகலப்யமென்கிறார்.

[சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்] - 'தவநெறிக்கு - சார்வே' - "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றும் "எளிவரும் இயல்வினன்" என்றும் சொன்ன அவன்திருவடிகள் சார்வென்கிறார். சார்வு - ப்ராப்யம். [தவநெறிக்கு] - பக்திமார்க்கத்துக்கு (தபோமார்க்கமென்றபடி) - "வணக்குடைத்தவநெறி" என்றாரே அங்கே; அத்தைச்சொல்லுகிறார்; "தவநெறி" என்னுங்காட்டில் பக்தியைச்சொல்லிற்றாமோவென்னில்; - "நமஸ்யந்தஶ்சமாம்" (நமஸ்யந்தஶ்சமாம்) என்று நமஸ்ஸைக் கரணஶரீரமாக உடைத்தாயிருக்குமிறே பக்தி; இவன்ஒருப்ரணாமத்தைப் பண்ணினால் "இவன் நம்மை நோக்கிக் குவாலாக வருந்தினான்" என்று இதுதன்னைப் பெரிய காயக்லேஶமாக நினைத்திருக்குமவன்கருத்தால் சொல்லுகிறது. அன்றிக்கே, "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" (யஸ்ய ஜ்ஞாநமயம்தப:) என்று ஜ்ஞாந விசேஷமான பக்தியைத் தபஸ்ஸென்று சொல்லிற்றாகவுமாம். [தாமோதரன்தாள்கள்] - "உரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவு" என்றத்தைச் சொல்லுகிறார் இங்கு. யசோதாதிகள்கையிலே கட்டுண்டு தழும்பு சுமந்ததுவே திருநாமமாயிருக்குமவனிறே; யசோதாதிகள்கையிலே கட்டுண்பானொருவனைபின்பு, அவனையுகப்பார் அவன்காலைக் கட்டிக்கொள்ளுமித்தனையிறே. எப்படிப்பட்டவன்ஸுலபனாகிறானென்னில்,

முதற்பாட்டு.—சார்வே இத்யாதி. "நீர்வானம்" என்று தொடங்கி, "பெருமையன் தாமோதரன் தாள்கள்- தவநெறிக்கு - சார்வு" என்று அந்வயமுகேநாவதாரிகை - உபயவிபூதி இத்யாதி. இந்த அவதாரிகை, ப்ரவேஶத்தில் அருளிச்செய்த முந்தின யோஜநாநுகுணம்.

ப்ரவேஶத்திலே, தபஶ்ஶப்தத்தாலே - ப்ரபத்தியைச் சொல்லுகையாலும், இங்கே பக்தியோகலப்யமென்கையாலும், இப்பாட்டு ப்ரபத்திபரமாயும் பக்திபரமாயுமிருக்கிறது. கீழுக்கிறப்ரகாரத்தைக்காட்டுகிறார் - பத்துடை இத்யாதி. "தவநெறி" என்று * பத்துடையடியவரிலே யிருக்கிறதோவென்ன - வணக்குடை இத்யாதி. அங்குத்தான்இது சொல்லும்படி எப்படியென்று ஶங்கித்து, த்வேதாபரிஹாரம் - தவநெறியென்னுங்காட்டில் இத்யாதி. தவநெறியென்னுங்காட்டில் தபஸ்ஸைச்சொல்லுமதொழிய பக்தியைச்சொல்லிற்றாமோவென்னி லென்றபடி. கரணஶரீரமாக - அங்கமாகவென்றபடி. 'இருக்குமிறே பக்தி' என்றவநந்தரம், "ஆகையாலே" என்று கூட்டிக்கொள்வது. கரணஶரீரமான நமஸ்காரத்தைத் தபஸ்ஸென்பானென்னென்ன - இவனொரு இத்யாதி. அதாவது - அங்கமானநமஸ்ஸை ஈஶ்வராபிப்ராயத்தாலே தபஸ்ஸென்னலாமாகையாலே, அங்கமானநமஸ்ஸையிட்டு அங்கியான பக்தியைத் தபஶ்ஶப்தத்தாலே உபசரிக்கிறதென்றபடி. ப்ரபத்திபரமானபோது, "தஸாம் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" என்னக்கடவதிறே. "தவநெறி" என்றத்தை ஸாத்ய பக்தியாக ஸாதிக்கப்புக்கு, "நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா" என்றத்தையெடுத்தது-ஸாத்யபக்திமானுக்கும் ஸம்பாவிதமான ப்ரணாமாதிகளுண்டாகையாலே. குவால் - அதிகம். வருந்தினான் - ப்ரயாஸப்பட்டான். "தபஸ்ஸென்று - ஜ்ஞாநத்தைச் சொல்லும்" என்னுமதுக்கு ப்ரமாணம் - யஸ்யஜ்ஞாநமயம் இத்யாதி. "ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்யஸ்ய ஜ்ஞாநமயம் தப: । தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாமரூபமன்னஞ்ச ஜாயதே" இதி முண்டோபநிஷதி. "ஸததம் கீர்த்தயந்தோமாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: । நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே" இதி கீதாஸு நவமே. * பத்துடையடியவரின் நிகமநமென்கைக்கு ஸூசகஶப்தம் - உரலினோடு இத்யாதி. ஶப்தார்த்தம் - யசோதாதிகள் இத்யாதி. "தாள்கள்" என்றதுக்குக் கீழையுங்கூட்டிபாவம் - யசோதாதிகள் இத்யாதி. மேலுக்கெல்லாமவதாரிகை - எப்படிப்பட்டவன் இத்யாதி. இவ்வடிவழகைச்சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநவிசேஷங்

விலக்ஷணவிக்ரஹயுக்தனாய் உபயவிபூதியுக்தனானவன்கிடீர்! என்கிறார். [கார்மேகவண்ணன்] - நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவன். ஸக்தி தனக்கு இவன்தான் க்ருஷிபண்ணவேண்டா, ருசிக்கு உத்பாதகமுமாய் பின்பு அத்தை வளர்த்து அது பக்வமானால் தானே ப்ராப்யமாம் வடிவையுடையவன். * காதல் கடல்புரைய விளைவித்தகாரமர் மேனியிறே. கார்காலத்தில் மேகம்போலேயென்னுதல், கறுத்தமேகமென்னுதல். "புயற்கருநிறத்தனன்" என்றத்தைச்சொல்லுகிறார். [கமலநயனத்தன்]-அகவாயில் குணங்களுக்கு ப்ரகாஶகமாயிருக்குமிறே திருக்கண்கள். அநுக்ரஹமடையத் தோற்றுவது கண்வழியேயிறே. வாத்ஸல்யப்ரகாஶகமான திருக்கண்களையுடையவன். வடிவழகு கண்டு மேல்விழுகையன்றிக்கே, மேன்மையாலும் மேலேவிழவேண்டுமென்னுமத்து. [நீர் வானம்இத்யாதி] - விக்ரஹவைலக்ஷண்யமேயன்றிக்கே ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. "யாவையும் யாவரும்தானுமமைவுடைநாரணன்" என்றத்தை நிரூபிக்கிறார். ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும் சொன்னவித்தால்-அவற்றின் கார்யமான தேவாதி விசேஷங்களையும் நினைக்கிறது; இத்தால் - லீலாவிபூதியைச் சொல்லுகிறது. [நேமியான்] - கையுந்திருவாழியுமாய் நித்யவிபூதியிலேயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. [பேர்வானவர்கள்] - இவ்வருகில்ஆக்கனான தேவர்களன்றிக்கே அவ்வருகில் பெருமக்கள் ஏத்தும்படியான பெருமையையுடையவன். அன்றிக்கே, "வானவர்கள் - பேர் - பிதற்றும் பெருமையன்" என்றுமாம். இங்கு ருசியுடையாரும் பிதற்றுமித்தனை: ப்ராப்யம் கைபுகுந்தவ்வருகு பட்டாராயிருக்கிறவர்களும் பிதற்றுமத்தனை. கார்மேகவண்ணனாய், கமலநயனத்தனாய், நீர்வானம் மண்ணெரிகாலாய்நின்ற நேமியானாய், பேர்வானவர்கள் பிதற்றும் பெருமையனாயிருந்துவைத்து - தாமோதரனானவன் திருவடிகள் - தவநெறிக்கு - சார்வே; இது நிஶ்சிதம். (௧)

---

*கள் அருளிச்செய்கிறார் - ஸக்தி தனக்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே. விக்ரஹம் ஸக்திவர்த்தகமோவென்ன - காதல் இத்யாதி. காரென்று - கறுப்பாதல், கார்காலமாதல். "கார்மேகவண்ணன்" என்றது * பத்துடையடியவரிலேயுண்டோவென்ன - புயற்கரு இத்யாதி. அப்படி ப்ரகாசகமோவென்ன - அநுக்ரஹம் இத்யாதி. ஸப்தார்த்தம் - வாத்ஸல்ய இத்யாதி. கமலநயநத்வம் பரத்வ ஹேதுவென்று ஸாவாந்தரமாதல், "நீர்வானம்" இத்யாதிக்கவதாரிகையாதல் - வடிவழகு இத்யாதி. அவதாரிகாபக்ஷத்திலே, "வடிவழகு" இத்யாதிவாக்யவிவரணம் - விக்ரஹவைலக்ஷண்யமே இத்யாதி. "வடிவழகு" இத்யாதிவாக்யம் ஸாவாந்தரமானபோது, "நீர்வானம்" இத்யாதிக்கு ஸாவம் - விக்ரஹவைலக்ஷண்யமே இத்யாதி என்றுகண்டுகொள்வது. "நீர்வானம்" இத்யாதி * பத்துடையடியவரிலேயுண்டோவென்ன - யாவையும் இத்யாதி. பஞ்சபூதங்களையும் சொன்னால் எல்லாம் சொன்னதாமோவென்ன - ப்ருதிவ்யாதி இத்யாதி. "தலேஃவாரஶோயாகா" இத்யாதியைப்பற்ற - கையுந்திருவாழியுமாய் இத்யாதி. பேர்வானவர்கள் - பெரியவானவர்கள். "பேர்வானவர்கள்" என்றதுக்கு ஸாவம் - இவ்வருகில் இத்யாதி. பேர் - பெருமை. இரண்டாமர்த்தத்துக்கு, "பேர்" என்று - திருநாமம். அஜ்ஞரான இவ்வருகுள்ளவர்களன்றோ பிதற்றுமவர்களென்ன - இங்கு ருசி இத்யாதிவாக்யத்வயம். அந்வயித்துக்காட்டுகிறார் - கார்மேகம் இத்யாதி. "சார்வே" என்ற அவதாரணார்த்தம் - நிஶ்சிதம் என்றது.* (க)

## இரண்டாம் பாட்டு.

பெருமையனேவானத்திமையோர்க்குங் காண்டற்
கருமையனே ஆகத்தணையாதார்க்கென்றும்
திருமெய்யுறைகின்ற செங்கண்மால்நாளும்
இருமைவினைகடிந்து இங்கென்னையாள்கின்றானே.

ஆ.—(பெருமையனே.) - ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரனாய், அநாஶ்ரிதர்க்கு துர்த்தர்ஶனாய், பெரியபிராட்டியாரோடு நித்யஸம்ஶ்லிஷ்டனாயிருந்த எம்பெருமான், நாளும்இருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றானென்றுகொண்டு, தம்முடையலாபத்தைப் பேசுகிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஶ்ரியஃபதியான ஸர்வேஶ்வரன் என்னுடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி நாள்தோறும் என்னை இஹலோகத்திலே அடிமை கொள்ளாநின்றானென்று, தம்முடைய லாபத்தைப் பேசுகிறார்.

[பெருமையனே வானத்திமையோர்க்கும்] - ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரன். [காண்டற்கருமையனே ஆகத்தணையாதார்க்கு]-"பிறர்களுக்கரிய வித்தகன்" என்கிறது. [என்றும் திருமெய்யென்று மேலுக்கு] - என்றும் பெரியபிராட்டியார் திருவுடம்பிலே உறைவதுஞ்செய்து, அத்தாலே, மதுபானமத்தரைப்போலே சிவந்ததிருக்கண்களை யுடையனான ஸர்வேஶ்வரன். இத்தால் - "மலர்மகள் விரும்புநமரும் பெறலடிகள்" என்கிற விடத்தை ப்ரத்யபிஜ்ஞை பண்ணுகிறது.

ப.—அநந்தரம், பரத்வாதிஹேதுவான ஶ்ரியஃபதித்வத்தை யுடையவன், தன் ஶீலாதிஶயத்தாலே என்னை அடிமைகொள்ளாநின்றானென்கிறார்.

வானத்து - ஊர்த்வலோகவாஸிகளான, இமையோர்க்கும் - ப்ரஹ்மாதிகளுக்கும், பெருமையன் - (அவ்வருகான) பெருமையை யுடையனாய், ஆகத்து - நெஞ்சிலே, அணையாதார்க்கு - அநுஸந்தியாதார்க்கு, காண்டற்கு - காண்கைக்கு, அருமையன் - அரியனாயிருக்குமவனாய், என்றும் - ஸர்வகாலமும், திரு - லக்ஷ்மியானவள், ("அகலகில்லேனிறையும்" என்று), மெய் - திருமேனியிலே, உறைகின்ற - நிரந்தரவாஸம் பண்ணுகையாலே, செங்கண் - நிரதிஶய ஐஶ்வர்ய ஸூசகமான சிவந்த திருக்கண்களை யுடைய, மால் - பெரியவன், இருமைவினை கடிந்து - புண்யபாபரூபகர்மங்களைப்போக்கி, இங்கு - இந்தவிபூதிதன்னிலே, நாளும் - நாள்தோறும், என்னை -, ஆள்கின்றான் - அடிமைகொள்ளுகிறான்.

இ.—இரண்டாம்பாட்டில், ஸர்வேஶ்வரனாய் ஶ்ரியஃபதியாய்வைத்து என் விரோதியைப் போக்கி இங்கே அடிமைகொள்ளாநின்றானென்று. தாமோதரத்வம் தமக்கு ஃபலித்தபடியைப் பேசுகிறார்.

[பெருமையனே இத்யாதி] - ஊர்த்வலோகஸ்தராய் "ஸ்ருஷ்ட்யாதிகளுக்குத் தங்களுக்குமேலில்லை" என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரன். "அமைவுடைமுதல்கெடல் ஒடிவிடையறநிலமதுவாம் அமைவுடை அமரர்" என்றதை நினைக்கிறது. ஊர்மாநம் கனத்திருக்கையும் விடுமிடத்துக் காற்கட்டு குவாலாயிருக்கையுமிறே

நம்மிற்காட்டில் வ்யாவ்ருத்தி. [காண்டற்கு இத்யாதி] - தானே மேல்விழாநின்றால் இசைவின்றியே யிருப்பார்க்குக் கிட்டவொண்ணுதபடியா யிருக்கும். "பிறர்களுக்கரிய வித்தகன்" என்றத்தை நினைக்கிறது. என்றுமொக்கப் பிராட்டி திருமேனியிலே உறைகிற. [என்றும்] - "அகலகில்லேனிறையும்" என்கிற நித்யவாஸத்தைச் சொல்லுகிறது. "மலர்மகள் விரும்பும்" என்றத்தை நினைக்கிறது. [செங்கண்] - அவளோட்டை ஸஹவாஸத்தாலே, மதுமுழிதரைப்போலே சிவந்த திருக்கண்களை யுடையவன். [மால்] - அவளோட்டைச்சேர்த்தியால்வந்த பெருமையையுடையவன். "..." "அரும்பெறலடிகள்" என்றத்தை நினைக்கிறது. [இருமைவினைகடிந்து - நாளும்-இங்கு என்னையாள்கின்றானே] - புண்யபாபரூபகர்மங்களைப் போக்கி, ஒரு தேசவிசேஷத்திலன்றிக்கே இஹலோகத்திலே நாள்தோறும் என்னை அடிமைகொள்ளாநின்றான்; அங்கு-ஸாக்ஷாநுபவம்; இங்கு-ஸாக்ஷாத்ஜ்ஞாநத்தாலே யரிக்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஸர்வேச்வரனாய் ச்ரிய:பதியாயிருந்துவைத்து என் விரோதியைப் போக்கி என்னை இங்கே அடிமைகொள்ளா நின்றானேன்று, கீழ்ச்சொன்ன ஸௌலப்யம் தமக்குப் பலித்தபடியை யருளிச்செய்கிறார்.

[பெருமையனே வானத்திமையோர்க்கும்] - "அமைவுடை முதல்கெடலோடிவிடை யறநிலமதுவா மமைவுடையமரர்" என்றத்தைச் சொல்லுகிறது. அல்லாதார் கீழேயிருக்க தாங்கள் விலக்ஷணமான தேசங்களிலே இருக்கிறார்களாய், ஸ்ருஷ்ட்யாதிகளுக்கும் தாங்களே கடவர்களாக நினைத்துத் தங்களைக் குவாலாக நினைத்திருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் தன்னையாச்ரயித்து ஸ்வரூபம் பெறவேண்டும்படியான பெருமையையுடையவன். [வானத்து]-அவ்வாசியே அவர்களுக்குஉள்ளது; அவனைப்பார்த்தால் நம்மோடவர்களோடு வாசியில்லை. ஸம்ஸாரத்தில் நம்மிலும் கனவியராயிருப்பர்கள். நமக்குப் பற்றின வளவேயிறே விடவேண்டுவது, அவர்களுக்கு த்ரைலோக்யமும் விடவேணுமே. [காண்டற்குஇத்யாதி] - தானேவந்து மேல்விழா நின்றால் விலக்காமையின்றிக்கே யிருப்பார்க்குக் காண அரியனாயிருக்கும். ஸம்பந்தம்இன்று தேடவேண்டா: பெறவேணுமென்கையும் வேண்டாவென்கையுமிறே யுள்ளது. "பிறர்களுக்கரியவித்தகன்" என்றத்தைச் சொல்லு

இரண்டாம்பாட்டு.—பெருமையனே இத்யாதி. "வானத்திமையோர்க்கும் - பெருமையனே" என்றுதொடங்கி, "என்னையாள்கின்றான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வேஶ்வரனாய் இத்யாதி.

"பெருமையனே" இத்யாதி * பத்துடையடியவரிலே யெங்கே சொல்லிற்றென்ன - அமைவுடை இத்யாதி. "வானத்திமையோர்க்கும் - பெருமையனே" என்றந்வயித்தர்த்தம் - அல்லாதார் இத்யாதி. "இமையோர்க்கும்" என்ற சமப்தார்த்தம் - தங்களைக்குவாலாக இத்யாதி. "வானத்து" என்று விசேஷித்ததுக்கு பாவம் - அவ்வாசியே இத்யாதிவாக்யத்வயம். நம்மைப் பற்ற வாசியில்லையோவென்ன - ஸம்ஸாரத்தில் இத்யாதி. ஸம்ஸாரத்தில் ஆதிக்யமுண்டென்றபடி. கனவியர் - கனத்தவர்: அதிகரென்றபடி. அதெப்படியென்ன - நமக்கு இத்யாதி. "ஆகத்தணையாதார்க்கு - காண்டற்கருமையனே" என்றதுக்கர்த்தம் - தானேவந்து இத்யாதி. ஆகத்தணையாமை - மநஸ்ஸில் வையாமையாய், விலக்காமையில்லாதார்க்கென்றபடி. விலக்காமையின்றிக்கே யிருப்பார்க்கு - விலக்குகிறவர்களுக் கென்றபடி. காண்கைக்கு விலக்காமைமாத்ரம் போருமோவென்ன - ஸம்பந்தம் இத்யாதி. 'வேண்டாவென்கையுமிறே யுள்ளது' என்றவனந்தரம், "பெறுகைக்கு மிழக்கைக்கும்" என்றுஅத்யாஹார்யம். இது * பத்துடையடியவரிலே யெங்கே

கிறது. [என்றும்திருமெய்யுறைகின்ற] - ரஹஸ்யத்தில் நித்யயோகத்தைச் சொல்லுகிறதிறே. * அகலகில்லேனிறே. "மலர்மகள்விரும்புநமரும் பெறலடிகள்" என்றத்தைச் சொல்லு கிறது. என்றுமோக்கப் பெரிய பிராட்டியார் வர்த்திக்கிற திருமேனியையுடையவன். [செங்கண்] - அவளோட்டை நித்யஸம்ஶ்லேஷத்தாலே, நீர்பாய்ந்த பயிர்போலே செவ்வி பெற்ற திருக்கண்களையுடையவன். [மால்] - "யஸ்யஸாஜநகாத்மஜா" (யஸ்யஸாஜநகாத்மஜா) என்றவளையுடையனுகையால் வந்த பெருமையைச் சொல்லுகிறது: "அரும்பெற லடிகள்" என்றத்தைச் சொல்லுகிறது. [நாளும்இத்யாதி] - (இருமைவினைகடிந்து-நாளும்-இங்கு என்னையாள்கின்றானே) - புண்யபாபரூப கர்மங்களைப் போக்கி, இத்தைவிட்டு ஒரு தேசவிசேஷத்திலே போனால் கொள்ளக்கடவ அடிமையை இஹலோகத்திலே நாள் தோறும் கொள்ளாநின்றான். அங்குப்போனால் குணாநுபவத்தாலே ஸத்தையை நிர்வஹிக்கும்; இங்கு குணஜ்ஞாநத்தாலே தரிப்பியாநிற்கும். (உ)

## மூன்றாம் பாட்டு.

ஆள்கின்றான்ஆழியான்ஆரால்குறைவுடையம்
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர்கடிந்தோம்
வாள்கேண்டையோண்கண் மடப்பின்னைதன்கேள்வன்
தாள்கண்டுகோண்டுஎன்தலைமேற்புனைந்தேனே.

ஆ.—(*ஆள்கின்றான் ஆழியான்.*)-*ஆள்கின்றானாழியான் ஆரால்குறைவுடையம்; இனி இஸ்ஸம்ஸாரத்தில் மீளக்கடவதன்று; எங்ஙனேயென்னில் - இந்த ஸம்ஸார துஃகத்தைக் கடிந்தோம்: வாள்கெண்டையொண்கண்மடப்பின்னைதன்கேள்வனுடைய திருவடிகளைக் கண்டுகொண்டு என்தலைமேல் புனைந்தேன் என்கிறார்.*

ஒ.—*மூன்றாம்பாட்டில், மறுவலிடாதபடி ஸம்ஸாரத்தைப்போக்கி நப்பின்னைப்பிராட்டிக்கு நாயகனானவனுடைய திருவடிகளைக் கண்டுகொண்டு என்தலைமேலே புனையப்பெற்றேனென்கிறார்.*

---

*சொல்லிற்றென்ன-பிறர்களுக்கு இத்யாதி. மெய் - விக்ரஹம். ரஹஸ்யத்தில்நித்யயோகமாவது - த்வயத்தில் மதுப்பைச்சொல்லுகிறது. "உறைகின்ற" என்கிற வர்த்தமாநத்தாலே - பிரியாதே வர்த்திக்கிறாளென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - அகலகில்லேனிறே என்று; "உறை மார்பா" என்னுமளவும் விவக்ஷிதம். இது * பத்துடையடியவரிலே சொல்லிற்றோவென்ன - மலர்மகள் இத்யாதி. "என்றும்திரு - உறைகின்ற - மெய்" என்றதுக்கு ஸப்தார்த்தம் - என்று மோக்க இத்யாதி. "திரு - உறைகின்ற செங்கண்மால்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - அவ ளோட்டை இத்யாதி. "திரு - உறைகின்ற - மால்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - யஸ்யஸா இத்யாதி. "[Grantha text] । [Grantha text]" இதி மாரீச: (ரா-ஆ-௩௭-௧௮). மால்-பெரியவன்:ஸ்வாமியென்றபடி. இது*பத்துடையடியவரிலே சொல்லிற்றோவென்ன-அரும்பெறல்இத்யாதி. தேசவிசேஷத்தில் கொள்ளும் அடிமையை இங்கே கொள்ளும்படியென்? என்ன - அங்குப்போனால் இத்யாதி. 'வானத்திமையோர்க்கும் - பெருமையனே, ஆகத்தணையாதார்க்கு - காண்டற்கருமையனே, என்றும் திரு - உறைகின்ற - மெய் - செங்கண்மால், இங்கு - இருமைவினைகடிந்து - நாளும் - என்னையாள்கின்றானே' இத்யந்வய:.* (உ)

[ஆள்கின்றான் ஆழியான் ஆரால்குறைவுடையம்] - ஸர்வேஶ்வரன் என்னை அடிமை கொள்ளாநின்றான். இனி, ஆரைக்கொண்டு கார்யமுடையோம்? [வாள் கெண்டை யொண்கண்] - ஒளியையுடைய கெண்டைபோலேயிருக்கிற அழகிய கண்.

ப.—அநந்தரம், நப்பின்னைப்பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே நிரதிஶயாநுபாவ்யனான க்ருஷ்ணன் திருவடிகளை யநுபவிக்கப்பெற்றேன்; அவன் ரக்ஷகனாக விரோதி மறுவலிடாது; என்ன குறையுண்டு? என்கிறார்.

("கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான்" என்கிறபடியே), ஆழியான் - கையுந்திருவாழியுமாய்க்கொண்டு, ஆள்கின்றான் - விரோதியைப்போக்கி ரக்ஷித்தருளாநின்றான்; (அத்தாலே), பிறவித்துயர் - ஜந்மப்ரயுக்த ஸகலது:க்கங்களையும், கடிந்தோம் - போக்கினோம்; மீள்கின்றது இல்லை - (இனி அது)மீளுகிறதில்லை; (ஆனபின்பு), ஆரால்குறைவுடையம் - நம்மோடு பிறரோடு வாசிபற ஒருவராலும் ஒருகுறையை யுடையோமல்லோம்; வாள் - (கூர்மைகெடுமையாலே) வாளும், கெண்டை - (குளிர்த்தி மிளிர்த்தியாலே) கெண்டையும், போலியாம்படி, ஒண் - விலக்ஷணமான, கண் - கண்ணை யுடையளாய், மடம் - மடப்பம் முதலான ஆத்மகுணங்களாலே பூர்ணையான, பின்னை தன் - நப்பின்னைப்பிராட்டிக்கு, கேள்வன் - அபிமதநாயகனானவனுடைய, தாள் - திருவடிகளை, கண்டுகொண்டு - அபரோக்ஷித்து, என்தலைமேல் - என்தலைமேலே, புனைந்தேன் - தரிக்கப்பெற்றேன்.

ஈ.—மூன்றாம்பாட்டில், மறுவலிடாதபடி ஸம்ஸாரத்தைப்போக்கி நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனுடைய திருவடிகளை ஶிரோபூஷணமாகப் பெற்றேன் என்கிறார்.

[ஆள்கின்றான் ஆழியான்] - வகுத்த ஸர்வேஶ்வரன் அடிமைகொள்ளாநின்றானென்னுதல்; ஆழியைவைத்த கையுந்தானுமாய் விரோதியைப்போக்கி அடிமைகொள்ளாநின்றான் என்னுதல். அஶக்தனானதன்னாலே ஸாத்யமான அசேதநக்ரியாகலாபங்கள் கொண்டு விரோதியைப் போக்குமவரன்றே இவர்? ஸர்வஶக்தி கையில் திருவாழியின் கூர்மையாலே போக்குமவரிறே. [ஆரால் குறைவுடையம்] — என்னால் வருமதொரு குறையுமில்லை; யமாதிகளால் வருமவையுமில்லை. [மீள்கின்றதில்லை] - இனி மறுவலிடுகிறதில்லை. [பிறவித்துயர் கடிந்தோம்] - து:க்கஹேதுவான ப்ரக்ருதிஸம்ஸர்கத்தையும் ஓட்டினோம். பரமபதத்திலே புகச்செய்தேயும் ருசிமுன்னாகப்போகாத வைதிகபுத்ரர்களுக்கு மீளவேண்டிற்றிறே. "மயர்வறமதிநலமருளினன்" என்று ருசிஜநகனும் அவனேயாய்ப் பேறும் அவனாலேயாயிருக்கிற எனக்குப் புனராவ்ருத்தி ப்ரஸங்கமில்லை யென்கை. இதுக்கு ஹேதுவென்னென்னில்? [வாள்கெண்டை இத்யாதி] - ஒளியையுடைத்தாய்க் கெண்டைபோலே முக்த்யமாய் தர்ஶநீயமான திருக்கண்களையுடையவளாய், ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனுடைய. அவளடியாகவந்த பின்பு, என்னுடைய கர்மவஶ்யதையாலேயாதல், அவன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயாதல் இழக்கவேணுமோ? அவன் என்னைக் கடாக்ஷியாவிட்டால், அவள் கடாக்ஷத்துக்கு இலக்கன்றிப்போகிறான். அவன் ஸ்வாதந்த்ர்யங்கொண்டாடினால் அவள் நோக்கு இழக்குமிறே. என்ஜீவநத்தைப் பறித்தானாகில் தன்ஜீவநத்தை யிழக்கிறான். [தாள்கண்டுகொண்டு] - தாளாலே அவனைக் கண்டுகொண்டேன்னுதல், தாளைக்கண்டு கொண்டேன்னுதல். "நின்செம்மா பாதபற்புத் தலைசேர்த்து" என்றும், "கோலமா

மென்சென்னிக்கு" என்றும் ஆசைப்பட்டபடியே, என்தலைமேலே சூடப்பெற்றேன் என்கிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. மறுவலிடாதபடி ஸம்ஸாரத்தைப் போக்கி நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனுடைய திருவடிகள் ஶிரோபூஷணமாகப் பெற்றேன் என்கிறார்.

[ஆள்கின்றான் ஆழியான்] – ஆசிலேவைத்த கையும் தானுமாய் விரோதியைப்போக்கி அடிமைகொள்ளாநின்றான் என்னுதல்; வகுத்த ஸர்வேஶ்வரன் அடிமைகொள்ளாநின்றான் என்னுதல் பின்னையும் அவன்கை பார்த்திருக்கவேண்டும் அசேதநக்ரியாகலாபங்களைப் பூண்கட்டாநிற்பர்கள் சிலர்; "கூரம்பனல்லால்" என்று அம்பின் கூர்மையையும் "சுடர்வட்டவாய்நுதி நேமியீர்" என்று திருவாழியில் கூர்மையையுங் கொண்டு பெறவிருப்பர்கள் சிலர். அஶக்தனான தன்னாலே ஸாத்யமான க்ரியாஜாதத்தைப்பற்றிப் பெறவிருப்பர்கள் சிலர்; ஸித்தஸ்வரூபனான ஸர்வஶக்தியைப்பற்றிப் பெறவிருப்பர்கள் சிலர். க்ரியாஜாதத்தை நெகிழச்சொல்லி, "கெடுவாய், என்னையன்றோ பற்றுகிறது" என்றானிறே [ஆரால்குறைவுடையம்] - என்னாலே இழக்கவேண்டுதல், ஆராயக்கடவ யமாதிகளுக்கும் வந்துகிட்டலாதல், அவன்தன்னளவும் சென்றால் பின்னையும் ஒன்றைப் பார்த்திருத்தல் செய்யவேண்டும்படியாய் இருப்பதோன்றையோ நான்பற்றிற்று? 'ஆரால்' - என்கிறார்காணும்: என்றும் ஒருசேதநனாலே பேறென்றிருக்குமவராகையாலே. [மீள்கின்றதில்லை] - இனி மறுவலிடுகிறதில்லை [பிறவித்துயர்கடிந்தோம்] - ஸம்ஸாரதுரிதத்தை யோட்டினோம். † பரமபதத்தில் புகச்செய்தேயும் ருசிமுன்னாகப் பேறல்லாமையாலே கடலில்புக்க துரும்புபோலே மீளப்போந்தார்களிறே வைதிக

மூன்றாம்பாட்டு.—ஆள்கின்றான் இத்யாதி. "மீள்கின்றதில்லை" என்றுதொடங்கி "தலைமேல்புனைந்தேனே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - மறுவலிடாதபடி இத்யாதி.

"ஆழியான் - ஆள்கின்றான்" என்றதுக்கு த்வேதா பாவம் - ஆசிலே இத்யாதி வாக்யத்வயம். ஆசு - ஆயுதப்பிடி. ஆழியைக்கொண்டாள்கின்றானென்று முந்தினவர்த்தம். திருவாழி பரத்வஸூசகமாகையாலே - 'வகுத்தஸர்வேஶ்வரன்' என்கிறது. தம்மை "ஆழியான் - ஆள்கின்றான்" என்கையாலே ப்ரதிகோடியையும் கூட்டி பாவம்-பின்னையும்அவன்கைபார்த்து இத்யாதி வாக்யத்வயம். பின்னையும் என்றது - ஸாதநாந்தரங்களை யநுஷ்டித்தபின்பு மென்றபடி. 'கூரம்பனல்லால்' – நாலாந்திருவந்தாதி எட்டாம்பாட்டு, "இலைதுணை" இத்யாதி. கீழ்வாக்யத்வயவிவரணம் - அஶக்தனான இத்யாதிவாக்யத்வயம். 'பின்னையுமவன்கைபார்த்து' இத்யாதிவாக்யத்தாலே - கார்யஸித்தியில் ஈஶ்வராபேக்ஷையும், 'அஶக்தனான' இத்யாதிவாக்யத்தாலே - ஸ்வரூபஸித்தியில் சேதநாபேக்ஷையும் சொல்லப்படுகிறது. ஶாஸ்த்ரவிஹிதமான உபாயாந்தரங்களைவிட்டு அவனைப் பற்றக் கூடுமோவென்ன - க்ரியாஜாதத்தை இத்யாதி. 'என்றானிறே' - சரமஶ்லோகத்தாலே யென்றபடி. ஆரால் குறைவுடையம் - ஒன்றாலும் குறைவுடையோமல்லோமென்றபடி. இதுக்கு பாவம் - என்னாலே இத்யாதி. * யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்கையாலே என்னாலிழக்கவேண்டுதலென்றபடி. ஆராயக்கடவ யமாதிகளுக்கும் வந்துகிட்டலாதல் என்றது- ஸம்ஸாரியான நிலையில் நில்லாமையைப்பற்ற. பின்னையுமோன்றைப் பார்த்திருத்தல் என்றது - அவன் விஷயமான ஸாத்யாதிகளைப்பற்றியும் அவன் க்ருபையைப் பார்த்திருத்தலென்றபடி. ஆனால், எத்தால் என்னாமல், "ஆரால்" என்கிறதென்னென்ன - ஆராலென்கிறார்காணும் இத்யாதி. மறுவலிடுகிறதில்லை என்றது - ஸம்ஸாரம் மறுவலிடுகிறதில்லை யென்றபடி. பிறவித்துயர்கடிந்தால் மீளாமை ஸித்தமாயிருக்க, "மீள்கின்றதில்லை" என்கைக்கு ப்ரஸக்தியேதென்ன - பரமபதத்தில் இத்யாதி. திருமேனியோடேயிருக்க "கடிந்தோம்" என்று பூதமாகச் சொல்லுவா

† பரமபதத்தே என்று பாடாந்தரம்.

புத்ரர்கள். "மயர்வறமதிநலமருளினன்" என்று ருசிமுன்னாக அவன் தரப்பெறவிருக்கிற நமக்குப் புநராவ்ருத்தி ப்ரஸங்கமுண்டோ? "கடிந்தோம்" என்கிறாரிறே: அவன் செய்வானாக ஏறட்டுக்கொண்ட கார்யத்துக்கு "ஸ்மிதோஸ்மி" என்னலாம்படி யிருக்குமிறே. [வாள் இத்யாதி] - அவன் ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்ததாகில் † அடுகுவளம் தடைப்படும்போலேகாணும். இனி என்னாலேதான் விடப்போமோ? அவனாலேதான் விடப்போமோ? என்னுடைய பாரதந்த்ர்யம்போலே அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கும் ஏதேனும் கண்ணழிவுண்டோ? அவன் ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்ததோ தன்னாணையிழக்கிறான். * மணநோக்கமுண்டானிறே. ஒளியையுடைத்தான கெண்டைபோலே முக்யமாய் வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டு இருக்கவேண்டும்படியான அழகிய கண்களையுடையளாய் ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபன். [தாள்கண்டுகொண்டு] - காட்சிக்கு ஹேதுசொல்லிற்றிறே. [என்தலைமேல்புனைந்தேனே] - "துயரறுசுடரடிதொழுதெழு" என்றும் "பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும், "கோலமாமேன்சென்னிக்கு" என்றும் சொல்லுகிறபடியே, மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப் போலேயிருக்கிற போக்யதைசொல்லுகிறது. "நின்செம்மாபாதபற்புத் தலைசேர்த்து" என்று ப்ரார்த்தித்தவத்தைத் தலையாகப்பெற்று க்ருதக்ருத்யனானேன். (ரு)

---

னென்? என்ன-கடிந்தோமென்கிறார் இத்யாதி. "நமோஸ்து தே மஹாதேவ ... ... " இதிஹாஸ(கஅ.) "மீள்கின்றதில்லை" என்பானென்? ஸ்வதந்த்ரனான நான் தன்னிலோவென்ன - வாள் இத்யாதி. விசேஷணங்களுக்கு பாவம் - அவன் ஸ்வாதந்த்ர்யம் இத்யாதி. அடுகுவளம் - அடுகென்று - பெட்டிமேற் பெட்டியாய், வளமென்று - போக்யவஸ்துவாய்; பெட்டிமேற் பெட்டியாக வைத்திருக்கிற போக்யவஸ்து: போனகப்பெட்டியென்றபடி. (அடுகுவளம்-போஜநமும்.) அடுகுவளம் தடைப்படுகையாவது - நப்பின்னைப்பிராட்டி கடாக்ஷம் பெறுமை. நப்பின்னைப்பிராட்டிபுருஷகாரம் சொன்னதுக்கு பாவம் - இனியென்னாலே இத்யாதி. இனியென்றது - என்னுடைய அங்கீகாரம் நப்பின்னைப்பிராட்டி யடியாகவந்தபின்பென்றபடி. அவனாலே விடப்போகாமைக் கடியேதென்ன - என்னுடைய இத்யாதி. "அவன் ஸ்வாதந்த்ர்யம்" இத்யாதிவாக்யவிவரணம் - ஸ்வாதந்த்ர்யம் இத்யாதி. கடாக்ஷம் போஜநமென்னுமதுக்கு ப்ரமாணம் - மணநோக்கம் இத்யாதி. திருமொழி. ஸப்தார்த்தம் - ஒளியை இத்யாதி. வாள் - ஒளி. காட்சிக்கு ஹேது என்றது - நப்பின்னைப்பிராட்டி புருஷகாரத்தை. "என்" என்றதுக்கு பாவம் - துயரறு இத்யாதி. "புனைந்தேன்" என்கிற பதஸக்தியாலே 'மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப்போலே' என்றது. "தலைமேல்புனைந்தேன்" என்றதுக்கு பாவம் - நின்செம்மா இத்யாதி. தலையாகவென்றது - சாடு. தலையிலேயாகவென்றும், ஶ்ரேஷ்டமாகவென்றும். 'வாள் கெண்டை' என்றுதொடங்கி, 'புனைந்தேன், பிறவித் துயர்கடிந்தோம் - மீள்கின்றதில்லை, ஆழியான் - ஆள்கின்றான், ஆரால் குறைவுடையம்' இத்யந்வயः. (ரு)

---

† அடைகுவளம் என்று வேறு அரும்பதத்திற் காண்கிறது.

## நான்காம் பாட்டு.

தலைமேல்புனைந்தேன் சரணங்கள்ஆலின்
இலைமேல்துயின்றான் இமையோர்வணங்க
மலைமேல்தான்நின்றுஎன்மனத்துளிருந்தானை
நிலைபேர்க்கலாகாமைநிச்சித்திருந்தேனே.

ஆ—(தலைமேல்.) - இனி இவனை என்தலையில்நின்றும் ஒருவராலும் பேர்க்கவொண்ணாதென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், என்னுடைய ஹ்ருதயத்திலேயிருக்கிற ஸர்வேச்வரனை ஒருவராலும் விச்லேஷிக்கப்பண்ண வொண்ணாமையை நிச்சயித்து, அத்தாலே க்ருதார்த்தனாயிருந்தேன் என்கிறார்.

[ஆலினிலைமேல் என்றுதொடங்கி] - என்பாடு வருகைக்காக ஆலினிலைமேலே வந்து கண்வளர்ந்தருளி அயர்வறுமமரர்கள் அடிமைசெய்யத் திருமலையிலே நின்றருளி என்னையிசைவித்து என் ஹ்ருதயத்திலே புகுந்திருந்தவனை.

ப.—அநந்தரம், ஆச்ரிதரக்ஷணத்தில் ஸ்திரஸ்வபாவனானவனை நெஞ்சிலிருந்த இருப்புக் குலைக்கவொண்ணாதென்று அறுதியிட்டிருந்தேனென்கிறார்.

சரணங்கள் - அவன்திருவடிகளை, தலைமேல் - என்தலைமேலே, புனைந்தேன் - வைத்துக்கொண்டிருந்தேன் ; (அகடிதகடநாஸமர்த்தனாய்க்கொண்டு,) ஆலினிலைமேல் - ஆலிலையில், துயின்றான் - கண்வளர்ந்தருளும் ஸர்வரக்ஷகனாய், இமையோர் - நித்யஸூரிகள், வணங்க - தொடர்ந்துவந்துவணங்கும்படி, மலைமேல் - திருமலையிலே, தான் - ஸ்வயம் ப்ரயோஜநமாம்படியாக, நின்று - எழுந்தருளிநின்று, என்மனத்துள் - என் நெஞ்சுக்குள்ளேபுகுந்து, இருந்தானை - ப்ரதிஷ்டிதனாயிருந்தவனை, நிலை - இவ்விருப்பில் ஸ்தைர்யம், பேர்க்கல்ஆகாமை - குலைக்கவொண்ணாமையை, நிச்சித்து - நிச்சயித்து, இருந்தேன் - (அத்தாலே) க்ருதக்ருத்யனாயிருந்தேன்.

இ.—நாலாம்பாட்டில், என் மநஸ்ஸிலேயிருக்கிற ஸர்வேச்வரனை ஒருவராலும் விச்லேஷிக்கவொண்ணாதென்று நிச்சயித்து, அத்தாலே க்ருதார்த்தனாயிருந்தேன் என்கிறார்.

[தலைமேல் இத்யாதி] - அமரர் சென்னிப்பூவான திருவடிகளைச் சூடப்பெற்றேன். ப்ரார்த்தித்துப் போகையன்றிக்கே கிட்டப்பெற்றேன். [ஆலினிலைமேல் துயின்றான்] - இவர்க்கு ருசிபிறக்கைக்குப் பண்ணின க்ருஷியைச் சொல்லுகிறது. ப்ரளயாபத்தில் ஸகலலோகங்களையும் தன்திருவயிற்றிலேவைத்து ஒருபவனாயிருப்பதொரு ஆலின்தளிரிலே கண்வளர்ந்தான் ; அதுதனக்குமேலே, நித்யஸூரிகள் அடிமைசெய்யத் திருமலையிலே வந்துநின்றான். தன்னுடைய ஆபத்ஸகத்வத்தையும், ஸர்வஶக்தித்வத்தையும், மேன்மையோடேகூடின ஸௌலப்யத்தையுங்காட்டி என்னையிசைவித்து என்மநஸ்ஸிலேபுகுந்து ஸ்தாவரப்ரதிஷ்டையா யிருந்தவனை. [நிலைபேர்க்கலாகாமை நிச்சித்து] - அவ்விருப்பை என்னால் போக்கவொண்ணாமையை நிச்சயித்து. அவன் போகைக்குஉறுப்பாக என்னால் செய்யலாவது ப்ராதிகூல்யமிறே; நெஞ்சைக்

கொண்டிருக்கையாலே அதுசெய்ய வொண்ணுதிறே. [இருந்தேனே] - இனி ஒருஹய மில்லையென்று நிர்ஹபனுயிருந்தேன். "ஆநநுஂஷுஹணொவிஷாநு நஹிஹெகி" என்று அவனுடைய ரக்ஷகத்வத்தையறிந்தாலும், ஹோக்யதையையறிந்தாலும், ஒன்று லும் சலியானிறே.

ஈடு.—நாலாம்பாட்டு. என்மநஸ்ஸிலேயிருக்கிற ஸர்வேஶ்வரனை ஒருவராலும் விஶ்லேஷிப்பிக்கவோண்ணுதேதன்று நிஶ்சயித்து, அத்தாலே க்ருதக்ருத்யனுயிருந்தேனென்கிருர்.

[தலைமேல்புனைந்தேன்சரணங்கள்] - * அமரர்சென்னிப்பூச்சூடப்பெற்றேன். ப்ரார்த்தித்துப்போகையன்றிக்கே அத்திருவடிகளை என்தலைமேலே வைத்துக்கொள்ளப் பெற்றேன். இப்பேறு இவர்பெறுகைக்கு அவன்க்ருஷிபண்ணினபடி சோல்லுகிறது மேல்: அவன் * வண்டடத்தினுட்கிடந்து தபஸ்ஸுபண்ணிற்று, இவர் இப்பேறு பெறுகைக்கு. [ஆலினிலைமேல்துயின்றான்] - தன்னைக்கோண்டு கார்யமுடையார் சிலரைக் கண்டிலன்; எல்லார்க்கும் ஆராய்ச்சிப்படும்படியான செயலைச்செய்வோமென்று பார்த்தான்; வேண்டா வேண்பாரைக் கண்டதில்லை. அது ஸாத்மித்தவாறே நித்யஸூரிகளும் தானுமாகவந்து திருமலையிலேநின்றான்; அதுவும் ஸாத்மித்தவாறே இவருடைய ஹ்ருதயத்திலேவந்துபுகுந்தான்; இங்கு விலக்குவாரில்லாமையாலே ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக விருந்தான். * போருப்பிடையேநின்றும் புனல்குளித்துங்காணும்இவர்நேஞ்சிலே புகுந்திருந்தது * பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்து இவருடைய * மனக்கடலிலே வாழப்புக்கான்: இப்படியிருந்தவனை. [நிலைபேர்க்கலாகாமை] - இவன்போகைக்கு உறுப்பாக என்னுலாவதெல்லாம் செய்தேன், அதுக்கும் கேட்பானுயிருந்திலன். [நிச்சித்திருந்தேன்] - "நஹிஹெகி" (நபிபேதி) என்றிருந்தேன். அவன்படியையறிந்தால் இவனுக்கு நிர்ப்பயனுயிருக்

---

நாலாம்பாட்டு.—தலைமேல் இத்யாதி. "என்மனத்துளிருந்தானை நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - என்மநஸ்ஸிலே இத்யாதி.

"தலைமேல் புனைந்தேன் சரணங்கள்" என்றது - அநுவாதம். "புனைந்தேன்" என்றதுக்கு ஹாவம் - அமரர்சென்னி இத்யாதி. "புனைந்தேன்" என்றதுக்கு - சூடினேனென்றர்த்தம் விவக்ஷித்து, சூடுவது புஷ்பமாகையாலே, திருவடிகளை 'அமரர்சென்னிப்பூ' என்கிருர். "புனைந்தேன்" என்ற பூதார்த்தத்துக்கு ஹாவம் - ப்ரார்த்தித்து இத்யாதி. மேலுக்கெல்லாம் அவதாரிகை - இப்பேறுஇவர் இத்யாதி. "ஆலினிலைமேல்துயின்றான்" என்றமாத்ரத்துக்கவதாரிகை - அவன் வண்டடத்தின் இத்யாதி. வண்டடம் - அழகிய தடாகம். ஏகார்ணவமென்றபடி. பெரியதிருமடல். இதெல்லாம் செய்யவேணுமோ இவரை விஷயீகரிக்கைக்கு என்கிறஶங்கையிலே, "ஆலினிலை மேல் துயின்றான்" என்றதுக்கு ஹாவம் - தன்னைக்கோண்டு இத்யாதிவாக்யத்ரயம். ஆராய்ச்சிப் படும்படியான - ப்ரஸித்தமாம்படியான. அதாவது: "ஆபத்பந்துவும் அகடிதகடநாஸமர்த்தனும்இவனே" என்று ப்ரஸித்தமாம்படியான செயலென்றபடி. "இமையோர்" என்றுதொடங்கி "மனத்துளிருந்தானை" என்னுமளவுக்கும் ஹாவம் - அதுஸாத்மித்தவாறே இத்யாதி. "இருந்தான்" என்றதுக்கு ஹாவம் - இங்குவிலக்குவார் இத்யாதி. கீழெல்லாவற்றுக்கும் ரஸோக்தி - போருப்பிடையே இத்யாதி. பனிக்காலத்திலே மலைகளின்நடுவே நின்றும், குளிர்காலத்திலே பொய்கைகளிலேபுக்கு முழுகிக்கிடந்துமென்றபடி. மூன்றுந்திருவந்தாதி எழுபத்தாறும்பாட்டு. அப்படி கடலில்நின்றும் இவர்நெஞ்சிலே புகுந்தானென்ன - பனிக்கடலில் இத்யாதி. ஶீதளஸ்வஹாவமான கடலில் கண்வளர்ந்தருளினபடியை நேராக மறந்துவிட்டோடிவந்து என்னுடைய மனக்கடலிலே வாழவல்லனென்றபடி. "பேர்க்கலாகாமை" என்றதுக்கு ஹாவம் - இவன்போகைக்கு இத்யாதி. "நஹிஹெகி" என்றதுக்கு ஹாவம் - அவன்படியை இத்யாதி. "அவன்படியை"

கத் தட்டில்லையிறே. "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந" (ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந் நபிபேதி குதஶ்சந) - தன்சோகம் மறுநினையும்படியான ஆனந்தம் இவன்பக்கலிலே உண்டென்றறிந்தால், பின்னை இவன்ஶோகம் போகைக்குக் குறையில்லையிறே. "குதஶ்சந" (குதஶ்சந) - பின்னை புத்திபூர்வகமாகப் பண்ணின ப்ராதிகூல்யத்துக்கும் அஞ்சவேண்டா. (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

நிச்சித்திருந்தேனென்னெஞ்சங்கழியாமை
கைச்சக்கரத்தண்ணல் கள்வம்பெரிதுடையன்
மெய்ச்சப்படான்பிறர்க்கு மெய்போலும்பொய்வல்லன்
நச்சப்படும்நமக்குநாகத்தணையானே.

ஆ.—(நிச்சித்திருந்தேன்.) - இவ்வளவோ என்திறத்தில் அவன்செய்ய நினைத்திருக்கிறான்? இப்படி எளியனோ அவன்? என்னில், - ப்ரதிகூலருக்குக் காணவரியன், நமக்கெளியன்காண்! என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், எம்பெருமான் என்திறத்தில் செய்தருள நினைக்கிறவை ஒருவர்க்கும் அறிய நிலமல்ல என்கிறார்.

[கைச்சக்கரத்தண்ணல்] - கையிலே திருவாழியையுடைய ஸர்வேஶ்வரன். [மெய்ச்சப்படான் என்று தொடங்கி] - அநாஶ்ரிதர்க்கு குணங்களால் கொண்டாடப்படான்; அவர்களுக்கு மெய்செய்வாரைப்போலே பொய்செய்யவல்லவன்; ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைக போக்யனானவன், ஆஶ்ரிதரான நமக்கு நச்சப்படும்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதஸுலபனாய் அநாஶ்ரிததுர்லபனானவன், அநந்யமதிகளான நமக்கு ப்ராப்யனாக ஆசைப்படப்படுமென்கிறார்.

என் நெஞ்சம் - என் நெஞ்சை, கழியாமை - விட்டகலாதபடியான ஸ்வபாவத்தை, நிச்சித்திருந்தேன் - அறுதியிட்டிருந்தேன்; சக்கரம் - (ரக்ஷகமாய் போக்யமான) திருவாழியை, கை - கையிலேயுடையனாய், அண்ணல் - அஸாதாரணஸ்வாமியாய், கள்வம்பெரிதுடையன் - நெஞ்சிலேயிருக்கச்செய்தே நான் அறியாதபடி தானறிந்ததாகப்பேசி அவ்வ்யாபாரங்களிலே பாரிப்பையுடையனாய், (தன் ஸ்வபாவம் நாமறிந்து கொண்டாடுகிறாற் போலே), பிறர்க்கு மெய்ச்சப்படான் - பிறர் கொண்டாடாதவனாய்,

---

என்றதுக்கு ப்ரஸக்தமேதென்ன - ஆநந்தம் இத்யாதி. எடுத்தவாக்யத்துக்கர்த்தம் - தன்ஶோகம் இத்யாதி. 'புத்திபூர்வகமாக' என்கிறவிடத்திலே, ஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே "ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ:" என்கிறவிடத்திலே, "ஸஹிஷ்ணு:" என்றதுக்கு - "தேஷாமபி ஸ்வாஶ்ரயாக்ரூரப்ருத்யாநாம் ஸஹஸ்ரநிகாநாம் புத்யாபுத்யாவஸக்ருத்ஸஹஸ்ரப்ரவ்ருத்தாநாம் விவிதநிஷேதஶாஸநாதிலங்கநாநாம் ஸாதாரணாஸாதாரணாநாம் ஸர்வஜ்ஞாநிந்த்யாநாம் ஸர்வம்ஸஹநஸஹநாவதீநாம் ஸஹஸ்ரக்ஷமிஷ்யாணாம்வாநவதிகாநாமேவாபராதாநாம் ஸஹிஷ்ணு:" என்றத்தை நினைப்பது. (ச)

மெய்போலும்- ஆஶ்ரிதர்க்கு மெய்யே செய்யுமாபோலே, பொய்வல்லன் - அநாஶ்ரிதர்க்குப் பொய்யே செய்யவல்லனாய், நாகத்தணையான் - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான அநந்தஶாயியானவன், நமக்கு - , நச்சப்படும் - பரமப்ராப்யமாதனாக ஆசைப்படும்.

இ.—அஞ்சாம்பாட்டில், அவன் என்திறத்திற்செய்தருள நினைத்திருக்கிறவை ஒருவர்க்கும் அறிய நிலமன்று என்கிறார்.

[நிச்சித்திருந்தேன் இத்யாதி] - தானே க்ருஷிபண்ணித் தன்பேறாகவந்து என்நெஞ்சிலே யிருக்கையிலே, இனி ஒருகாலமும் விட்டுப்போகான் என்னுமிடத்தை நிஶ்சயித்திருந்தேன். [கைச்சக்கரத்தண்ணல்] - கையிலே திருவாழியையுடைய ஸர்வஸ்வாமி.கைப்பற்றினாரை ஒரு காலமும் விடானென்கை. [கள்வம் பெரிதுடையன்] - நெஞ்சைவிட்டுப் போகாமையே யன்றிக்கே இங்கேயிருந்தே ஒருவர்க்கு அறியவொண்ணாதே தான் அறிந்ததாக அநேகத்தைப் பாரியாநின்றான். அர்ச்சிராதிமதியே கொடுபோக நினைப்பது, அமாநவகரத்தாலே ஸ்பர்ஶிப்பிக்கத் தேடுவது, அப்ஸரஸ்ஸுக்களையிட்டு எதிர்கொள்ளத் தேடுவதாகாநின்றான். [மெய்ச்சப்படான் பிறர்க்கு] - நான் தன்குணங்களைச் சொல்லி ஏத்தினாற் போலே, அநாஶ்ரிதர் கிட்டிக்கொண்டாடப் படான். இரண்டும் இவர்க்குப் பேறாயிறேயிருப்பது.[மெய்போலும் பொய்வல்லன்] - பாண்டவர்களுக்கு மெய்யனாயிருக்குமா போலே துர்யோதனாதிகளுக்குச் செவ்வை செய்வாரைப் போலே யிருந்து பொய்யாய்த்தலைக்கட்டும்படி செய்யவல்லன். [நச்சப்படும் நமக்கு] — தன்னை பொழியச்செல்லாத நமக்குக் கிட்டி ஆஶ்ரயிக்கலாம்படி யிருக்கும். [நாகத்தணையானே] - சிலர்க்கு அரியனாயிருக்க நமக்குக் கிட்டலாயிருக்கிறது எத்தாலே? என்னில், - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷகாமனாயிருக்கையாலே. அவனுக்கு அபிமதனுமாய் நமக்குக் கிட்டுகைக்கு அடியுமாயிறே திருவனந்தாழ்வான் இருப்பது.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. அவன் என்திறத்தில் செய்யநினைக்கிறவை ஒருவர்க்கும் அறிய நிலமன்றென்கிறார்.

[நிச்சித்து இத்யாதி] – நீரிலே கிடந்தும் பர்வதாக்ரத்திலே நின்றும் தன் பேறாகத் தபஸ்ஸுபண்ணி வந்து என்னெஞ்சிலே இருக்கையாலே, இனி ஒருகாலமும் விட்டுப்போகானென்று நிஶ்சயித்திருந்தேன். [கைச்சக்கரத்தண்ணல்] - கையிலே திருவாழியையுடைய ஸர்வேஶ்வரன். ஆஶ்ரிதரை ஒருகாலும் கைவிடாதவன்; "எப்போதும் கைகழலாநேமியான்" என்னக்கடவதிறே. [கள்வம்பெரிதுடையன்] - நெஞ்சைக் கைவிடாமையே யன்றிக்கே, இங்கேயிருந்து நாம் அறியாதிருக்கத் தான் அறிந்ததாகக்கொண்டு அவ்வருகே குவாலைப் பாரியாநின்றான். பரமபதத்தேறக் கொடுபோக ஒருப்படுவது, அமாநவனை இடுவித்து ஸ்பர்ஶிக்க நினைப்பது, * மதிமுக மடந்தையரை வரக்காட்டி எதிர்கொள்ளப் பார்ப்பதாய்க் குவாலைப் பாரியா நின்றான்.

---

அஞ்சாம்பாட்டு.—நிச்சித்து இத்யாதி. "கள்வம் பெரிதுடையன்" என்றதைப்பற்ற அவதாரிகை - அவன் இத்யாதி.

அநுவாதத்துக்கு பாவம் - நீரிலே இத்யாதி. கழியாமை - விட்டுப்போகாமை, இத்தால் ஃபலிதம் - ஆஶ்ரிதரை இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - எப்போதும் இத்யாதி. பெரியதிருவந்தாதி, "இப்போது மின்னம்" இத்யாதி. குவாலை - அதிகத்தை. குவாலேதென்ன - பரமபதத்தேற இத்

"இதுதான் ஸர்வஸாதாரணமாகிற் செய்வதேன்" என்றுஅஞ்சவேண்டா: [மெய்ச்சப்படான் பிறர்க்கு] - நான் தன்குணங்களைச்சொல்லிப் புகழ்கிறுப்போலே, பிறர் தன் குணங்களைச் சொல்லிப் புகழலாம்படியிரான்; அவர்களுக்கு துஷ்ப்ராபனுயிருக்கும். [மெய்போலும் பொய் வல்லன்] - அர்ஜுநாதிகள்பக்கல் இருக்குமாபோலேயிறே துர்யோதநாதிகள் பக்கலிலும் இருப்பது; கார்யத்தில்வந்தால் மெய்செய்வாரைப்போலே பொய்செய்து தலைக்கட்டும். "இதுதான் நம்மளவிலும் ஏறிற்செய்வதேன்?" என்றஞ்சவேண்டா. [நச்சப்படும்நமக்கு] - உகவாதார்பக்கலில் செய்வுற்றை நம்பக்கல் செய்யான். அதுக்கு விஸ்வாஸமேன்னேன்னில், - [நாகத்தணையானே] - நம்மோடு விஸஜாதீயர் பக்கல் செய்வதுகொண்டு கார்யமேன்? நம்மோடு ஸஜாதீயர்பக்கல் பரிமாறினதன்றே நமக்குப் படிமா. நம்முடைய பேற்றுக்கு அடியுமாய் நமக்கு ஸஜாதீயருமானுரோடு பரிமாறும்படி இதுவன்றே? (௫)

## ஆறும் பாட்டு.

நாகத்தணையானை நாள்தோறுஞ்ஞானத்தால்
ஆகத்தணைப்பார்க்குஅருள்செய்யுமம்மானை
மாகத்திளமதியஞ் சேருஞ்சடையானைப்
பாகத்துவைத்தான்தன் பாதம்பணிந்தேனே.

ஆ.—(நாகத்தணையானை.) - ஆஶ்ரிதருடைய நிகர்ஷம்பாராதே திருவநந்தாழ்வானுக்கு அருள்செய்யுமாபோலே அவர்களுக்கு நாடோறும் அருள்செய்யுமம்மான் தன் பாதம் பணியப்பெற்றேனென்கிறுர்.

ஒ —ஆறும்பாட்டில், இன்றுபுகுந்து ஆஶ்ரயிப்பாரையும் குணதோஷம் பாராதே நித்யாஶ்ரிதரைப்போலே விஷயீகரிக்கும் ஸ்வபாவனுன ஸர்வேஶ்வரன் திருவடிகளைப் பணியப்பெற்றே னென்கிறுர்.

[ஞாநம்] - பக்தி. நாள்தோறும் அருள்செய்யும் என்றந்வயம். [மாகத்திளமதியம் என்றுதொடங்கி மேலுக்கு] - ஐஶ்வர்யத்துக்கு ஸூசகமான பிறையைச் சூடி ப்ரயோஜநாந்தரபரதைக்கு உறுப்பான ஸாமர்த்யம் தோற்றும்படியான ஜடையையுடையவனைத் திருமேனியில் ஒருபார்ஶ்வத்திலே வைத்தவனுடைய திருவடிகளைப் பணியப்பெற்றேன்.

ப.—அநந்தரம், நித்யாஶ்ரிதரோடு முமுக்ஷுக்களோடு ப்ரயோஜநாந்தரபரரோடு வாசிபற உபகரிக்கும் ஸௌஶீல்யாதிஶயத்தை யுடையவன் திருவடிகளிலே வணங்கப்பெற்றேனென்கிறுர்.

நாகம் - நித்யகைங்கர்யநிரதரான திருவநந்தாழ்வானை, அணையானை - படுக்கையாகவுடையனுய், நாள்தோறும் - ஸர்வகாலமும், ஞாநத்தால் - பக்திரூபஜ்ஞாநத்

டாதி. "மெய்ச்சப்படான்" என்றதுக்கவதாரிகை - இதுதான் இத்யாதி. மெய்ச்சப்படான் - கொண்டாடப்படான். நச்சப்படும் - ஆசைப்படுமவன். நம்மோடு ஸஜாதீயர் - அநந்யப்ரயோஜநத்வேந ஸஜாதீயர். படிமா - த்ருஷ்டாந்தம். "நம்மோடு ஸஜாதீயர்" இத்யாதிவாக்ய விவரணம் - நம்முடையபேற்றுக்கு இத்யாதி.

(௬)

தாலே, ஆகத்து - நெஞ்சிலே, அணைப்பார்க்கு - வைத்தநுஸந்திக்கும் முமுக்ஷுக்களுக்கு, அருள்செய்யும் - நிரதிஶயபோக்யனாய்க்கொண்டு உபகரிக்கும், அம்மானை - ஸ்வாமியானவனாய், மாகத்து - ஆகாசவர்த்தியான, இளமதியம் - இளம்பிறையானது, சேரும் - சேரும்படியான, சடையானை - ஜடையையுடையனாகையாலே, (ஜ்ஞாநக்ருத்ஜ்யோதிபாஸகத்வங்கள் இரண்டையுமுடையருத்ரனை), பாகத்து - (தன் திருமேனியில்)ஒருபக்கத்திலே, வைத்தான்தன் - வைத்த நிரதிஶய ஸௌஶீல்யவானுடைய, பாதம்பணிந்தேன் - திருவடிகளை வணங்கப்பெற்றேன். "அணையானை, அம்மானை" என்கிற வேற்றுமைப்போலி இரண்டும் ஐகாரம் அசையாய்க்கிடக்கிறது. அன்றியே, 'பாகத்துவைத்தானைப் பாதம்பணிந்தேனே' என்று பாடம்சொல்லுவாருமுளர்.

இ.—ஆறாம்பாட்டில், இன்றுபுகுந்து ஆஶ்ரயித்தாரையும் நித்யாஶ்ரிதரைப்போலே விஷயீகரிக்குமவன் திருவடிகளிலே நிர்மமனாய் விழப்பெற்றேனென்கிறார். திருவநந்தாழ்வானுக்கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கும் வாசிவையாதே உடம்புகொடுக்குமவனை வணங்கப்பெற்றேனென்கிறார் என்றுமாம்.

[நாகத்தணையானை] - தன்னை உகந்தாரைப் படுக்கையாகக் கொள்ளுமவனை. [ஞானத்தால் ஆகத்தணைப்பார்க்கு - நாள்தோறும் அருள்செய்யும்] - ஞானம் - பக்தி. பக்தியாலே நெஞ்சிலேயணைக்க நினைப்பார்க்கு, அவர்களுடைய ஹ்ருதயத்தை ஒருநாளும் விடான். [அம்மானை] - ஆஶ்ரயிலேஶமுடையார்க்குத் தன்பேறாக விடாமைக்கு ப்ராப்தி சொல்லுகிறது. [மாகம் இத்யாதி] - ஸர்வப்ரதாநன் என்று தோற்றும்படி சந்த்ரனைச்சூடி ஸாபகத்வ ஸூசகமான ஜடையையுடையனுமான ருத்ரனுக்குத் திருமேனியில் ஒருபார்ஶ்வத்திலே இடங்கொடுத்தவனுடைய திருவடிகளை ஆஶ்ரயிக்கப்பெற்றேன்.

ஈடு.—ஆறாம்பாட்டு. இன்று ஆஶ்ரயிப்பாரையும் நித்யாஶ்ரிதரைப்போலே விஷயீகரிக்குமவன் திருவடிகளிலே நிர்மமனாய் விழப்பெற்றேன் என்கிறார். † (திருவநந்தாழ்வானுக்கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கும் வாசிவையாதே உடம்பு கொடுக்குமவனை வணங்கப்பெற்றேனென்கிறாரென்றுமாம்.)

[நாகத்தணையானை] - உகந்தாரைப் படுக்கையாகக் கொள்ளுமவனாய்த்து. [நாடோறும்இத்யாதி] - ஜ்ஞாநத்தால்ஆகத்தணைப்பார்க்கு நாள்தோறும் அருள்செய்யுமவனாய்த்து. ‡ (இப்போது, ஞானமென்று - ஜ்ஞாநவிசேஷமான பக்தியைச் சொல்லுகிறது. பக்தியாலே ஹ்ருதயத்திலே கோடுகுந்து சேர்ப்பார்க்கு நாள்தோறும் அருள்செய்யுமவனாய்த்து.) இவனால் எப்போதும் நினைக்கப்போகாதே! அக்குறைதீர ஏகரூபனான தான் நாள்தோறும் அருள்செய்யுமாய்த்து. [மாகம்இத்யாதி] - ஸர்வப்ரதாநனென்று தோற்றும்

ஆறாம்பாட்டு.—நாகத்தணையானை இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இன்று இத்யாதி. இன்றாஶ்ரயிப்பாரையும் என்றது - "ஞானத்தால்ஆகத்தணைப்பார்" என்றத்தைப் பற்ற.

"நாகத்தணையானை" என்றத்தால் பலிதம் - உகந்தாரை இத்யாதி. "நாடோறும்" என்றத்தை "அருள்செய்யும்" என்றத்தோடே கூட்டுகிறதென்? அடைவே நிர்வஹித்தாலோவென்ன - இவனால் இத்யாதி. அக்குறைதீர - அவன் நினைக்கமாட்டாத குறைதீரவென்றபடி. மதியையும் ஜடையையும் சொல்லுகிறதுக்கு பாவம் - ஸர்வப்ரதாநன் இத்யாதி. "நாகத்தணையானை, அம்

† குண்டலிதம் ‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

படி சந்த்ரனைச்சூடி ஸாயகத்வஸூசகமான ஜடையையுமுடையனான ருத்ரனுக்குத் திருமேனியிலே ஒருபார்ஶ்வத்திலே இடங்கொடுத்தவனுடைய திருவடிகளை ஆஶ்ரயிக்கப்பெற்றேன்; இனி எனக்கொருகுறையுண்டோ? (௬)

---

## ஏழாம் பாட்டு.

---

பணிநெஞ்சே!நாளும்பரமபரம்பரனை
†பிணியொன்றுஞ்சாரா பிறவிகெடுத்தாளும்
மணிநின்றசோதிமதுசூதனென்னம்மான்
அணிநின்றசெம்பொன்அடலாழியானே.

**ஆ.**—(பணி.) - ஆஶ்ரிதஸுலபனாய், தத்விரோதி நிரஸநஸ்வபாவனாய், தகுநுகுண திவ்யாயுதோபேதனாய், ஸர்வேஶ்வரனாயிருந்த எம்பெருமானை, நெஞ்சே! வணங்கு; வணங்கில் பின்னையொருநாளும் ஒரு து:கம் வாராது. து:கஹேதுவான ஸம்ஸாரத்தைப்போக்கி நம்மையடிமைகொண்டருளு மென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸர்வேஶ்வரனை, நெஞ்சே! நாள்தோறும் அநுபவி; அவன்தானே ப்ரதிபந்தகங்களையெல்லாம் நீக்கி அடிமைகொள்ளும் என்கிறார்.

[பிணிஎன்று தொடங்கி] - ஸர்வாதிகனான ஈஶ்வரனை, நெஞ்சே! நாள்தோறும் பணி; ஒருது:கங்களும் ஸ்பர்ஶியா. து:கஹேதுவான ஸம்ஸாரத்தைக்கெடுத்து அடிமைகொள்ளும். [மணிநின்றசோதி என்றுமேலுக்கு] - நீலமணியினுடைய ஒளியையுடையனாய், ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனாய், எனக்கு பவ்யனுமாய், தனக்கு ஆபரணமாய் நிற்பதுஞ்செய்து செம்பொன்போலே யிருக்கும்நிறத்தை யுடைத்தாய் ப்ரதிகூலரை யடர்க்கும் ஸ்வபாவமான திருவாழியையுடையவன்.

**ப.**—அநந்தரம், நிரதிஶயபோக்யமான விக்ரஹத்தையுடையவன் நம்மை விரோதியைப்போக்கி யடிமைகொள்ளுமவனாகையாலே ஸர்வாதிகனானவனை அநுபவியென்று, நெஞ்சைக்குறித்து அருளிச்செய்கிறார்.

மணிநின்றசோதி - நீலரத்னத்தின் நிறத்தில் தேஜஸ்ஸுபோலேயிருக்கிற நிறத்தையுடையவனாய், மதுசூதன் - மதுவைநிரஸித்தாற்போலே அநுபவவிரோதியைப்போக்கி, என்னம்மான் - அவ்வழகையநுபவிப்பித்த என்ஸ்வாமியாய், அணிநின்ற-தனக்குத்தான்ஆபரணமாய்நிற்பதாய், செம்பொன் - சிவந்தபொன்போலே ஸ்ப்ருஹணீயமான வடிவையுடைத்தாய், அடல் - ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமான யுத்தோத்யோகத்தையுடைய, ஆழியான் - திருவாழியையுடையவன், பிறவி - நம்ஜந்மத்தை, கெடுத்து - போக்கி, ஆளும் - அடிமைகொண்டருளும்: பிணி - ஸம்ஸாரக்லேஶங்கள், ஒன்றும் சாரா - ஒன்றும் தட்டாது; (ஆதலால்), பரமபரம்பரனை - தனக்கு

---

மானை" என்கிறவிடத்தில், ஐகாரம் அவ்யயமாய், நாகத்தணையானும் அம்மானும் பாகத்திலே வைத்தானாயிருக்கிறவனுடைய திருவடிகளையென்றபடி. மாகத்திளமதியம் - மஹத்தாயிருக்கிற ஆகாசத்திலே வர்த்திக்கிற பாலசந்த்ரன். (௬)

---

† 'பிணியென்றும்' என்று ஆறாயிரப்படியின் பாடம்.

மேலில்லாதவனுய்க்கொண்டு ப்ரஹ்மாதிகளுக்கும் பரனானவனை, நெஞ்சே! நாளும் - நித்யமாக, பணி - வணங்கியநுபவிக்கப்பார்.

இ.—ஏழாம்பாட்டில், 'நம் ப்ரதிபந்தகங்களையெல்லாம் தானே போக்கி அடிமைகொள்ளுமவனை நாள்தோறும் அநுபவி' என்று, திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார்.

[பணிநெஞ்சே இத்யாதி] - நெஞ்சே! நாள்தோறும் அநுபவிக்கப்பார். [பரம பரம்பரனை] - ஸம்ஸாரிகளுக்கு அவ்வருகான ப்ரஹ்மாதிகளுக்கும் பரரான நித்யஸூரிகளுக்கும் நிர்வாஹகனானவனை. [பிணிஒன்றும் சாரா] - ஸகலது:க்கங்களும் நம்மை ஸ்பர்சியா. அந்தது:க்கங்களுக்கடியான ஜந்மத்தைப்போக்கி அடிமைகொள்ளும். [மணிநின்றசோதி] - நீலமணியின் ஒளியை வடிவாக வகுத்தாற்போலே யிருந்துள்ள வடிவையுடையவன். அடிமைகொள்ளும் வடிவிருக்கிறபடி. [மதுசூதன்] - அவ்வடிவை அநுபவிப்பார்க்கு விரோதியானவற்றை, மதுவைப் போக்கினாற்போலே போக்குமவன். [என்னம்மான்] - அப்படியே என்விரோதியைப்போக்கி முகந் தந்தவன். [அணிநின்ற செம்பொன் அடலாழியானே] - தன்கைக்குத் தானே ஆபரணமாய் அநுபவிப்பார்க்கு ஸ்ப்ருஹணீயமான வடிவையுடைய யுத்தோத்யுக்தமான திருவாழியைக் கையிலேயுடையவன். அநுபவத்துக்குத் தானே விஷயமாய், விரோதியைப் போக்குகைக்குத் தானே ஆபரணமான பரிகரத்தை யுடையவன்.

ஈடு.—ஏழாம்பாட்டு. 'நம் ப்ரதிபந்தகங்களையெல்லாம் தானேபோக்கி அடிமைகொள்ளுமவனை நாள்தோறும் அநுபவி' என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

[பணிஇத்யாதி] - நெஞ்சே! நாள்தோறும் அநுபவிக்கப் பார். நல்ல வாய்ப்பாயிருந்தது. [பரமபரம்பரனை] - இந்த்ராதிகளுக்குப்பரரான ப்ரஹ்மாதிகளுக்கும் பரரான நித்யஸூரிகளுக்கும் நிர்வாஹகனானவனை [பிணியொன்றும்சாரா] - து:க்கங்களொன்றும் நம்மை ஸ்பர்சியாது. அந்த து:க்கங்களுக்கடியான ஜந்மத்தை அடிவேரோடே போக்கி நம்மை நித்யகைங்கர்யம் கொள்ளுமவன். [மணிநின்றசோதி] - ஜந்மத்தையுண்டாக்கினாலும் விடலாயோ வடிவழகிருக்கிறபடி. நீலமணியினொளியை வடிவாக வகுத்தாற்போலேயிருக்கிற வடிவையுடையவன். [மதுசூதன்] - அவ்வடிவழகை யநுபவிப்பார்க்கு வரும் விரோதிகளை, மதுவைப்போக்கினாற்போலே தள்ளிக்கோடுக்குமவன். [என்னம்மான்] - இப்படி என்விரோதியைப் போக்கி முகந்தந்தவன். [அணிஇத்யாதி] - அநுப

---

ஏழாம்பாட்டு.—பணிநெஞ்சே இத்யாதி. "பிணியொன்றும் சாரா பிறவிகெடுத்தாளும்: அடலாழியானை-பணி: நெஞ்சே நாளும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - நம் ப்ரதிபந்தகங்களை இத்யாதி.

அந்வயமுகேந பாவம் - நெஞ்சே நாள்தோறும் இத்யாதி. "பரமபரம்பரனை" என்று அவன் பெருமைசொன்னதுக்கு பாவம் - நல்லவாய்ப்பாயிருந்தது என்று. அதாவது - பரமபரம்பரனுகையாலே எல்லாராலும் மேல்விழும்படி யுத்க்ருஷ்டனாயிருக்கிறவன் தானேவந்து மேல்விழுகையாலே நல்லவாய்ப்பாயிருந்ததென்றபடி. "பிறவி" இத்யாதிக்கர்த்தம்- அந்தது:க்கங்களுக்கு இத்யாதி. "கெடுத்து" என்றத்தைப்பற்ற - அடிவேரோடே என்றது. இதில் பதத்தோடேகூட்டி பாவம் - ஜந்மத்தை இத்யாதி. மணிதான் தேஜோரூபமாய் நிற்கிறாப்போலே யிருக்கிறவடியென்று விவக்ஷித்

விப்பார்க்குவிரோதிகளேயும் போக்கி,திருக்கைக்குத்தானே ஆபரணமாய்அநுபவிப்பார்க்கு ஸ்ப்ருஹணீயமான வடிவையுடைய யுத்தோந்முகமான திருவாழியைக்கையிலேயுடைய வன். அநுபவத்துக்கும் தானேயாய் விரோதிநிரஸநத்துக்கும் தானேயான பரிகரத்தை யுடையவன். (எ)

## எட்டாம் பாட்டு.

ஆழியான்ஆழியமரர்க்கும்அப்பாலான்
ஊழியான்ஊழிபடைத்தான்நிரைமேய்த்தான்
பாழியந்தோளால்வரையெடுத்தான்பாதங்கள்
வாழிஎன்நெஞ்சே! மறவாதுவாழ்கண்டாய்.

*ஆ.—(ஆழியான்.) - * அயர்வறுமமரர்களதிபதியாய், அவர்களிற்காட்டிலும் விஸஜாதீயமான ஸ்வரூபகுணவிபூதிகளையுடையனாய், நித்யஸித்தனாய், காலதத்த்வ ப்ரப்ருதி ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் ஸ்ரஷ்டாவாயிருந்துவைத்து, ஆச்ரிதஸௌலபார்த்தமாக தத்ஸஜாதீயதயாவதீர்ணனாய், தத்ஸமாநசேஷ்டிதனாய், எல்லாருக்கும் புகலிடமாயிருந்த திருத்தோளாலே வரையையெடுத்து ஆச்ரிதரக்ஷணம்பண்ணியருளினவன் திருவடிகளே, என் நெஞ்சே! மறவாது வாழ்கிடாய் என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், "அவனையநுபவி" என்றவாறே ப்ரீதமான நெஞ்சைக்கொண்டாடி, 'நெஞ்சே! அவனைவிடாதே அநுபவி' என்கிறார்.*

*[ஆழியான் என்றுதொடங்கி] - திருவாழிதொடக்கமான நித்யாச்ரிதரை யுடையனாய், அவர்களிற்காட்டிலும் ஸ்வரூபகுணங்களால் விஸஜாதீயனாய், காலசேஷமான ப்ரளயகாலத்திலும் உளனாய்க் காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களையும் படைப்பதும் செய்து, தன்னாலே ஸ்ருஷ்டமான ஜகத்திலுள்ளேவந்து திருவவதாரம்பண்ணி பசுமேய்ப்பதும் செய்து, அவற்றுக்கு வந்த ஆபத்தை நீக்குகைக்காக, ஜகத்துக்கெல்லாம் ஒதுங்கவிடம் போரும்படியான அழகியதோள்களாலே கோவர்த்தநோத்தரணம் பண்ணுவதுஞ் செய்தவனுடைய திருவடிகளே.*

*ப.—அநந்தரம், ஸர்வாதிகனாய் ஸர்வப்ரகார ரக்ஷகனானவன் திருவடிகளே, நெஞ்சே, விஸ்மரியாமல் அநுபவித்து வாழும்படி பார் என்கிறார்.*

*ஆழியான் - ரக்ஷகமான திருவாழியை யுடையனாய், ஆழி - கம்பீரஸ்வபாவரான, அமரர்க்கும் - நித்யஸூரிகளுக்கும், அப்பாலான் - அவ்வருகான மேன்மையை யுடையனாய், ஊழியான் - ஸம்ஹ்ருதிஸமயத்தில் தானொருவனுமேயாய், ஊழிபடைத்தான் - காலோபலக்ஷித ஸமஸ்தவஸ்துக்களுக்கும் ஸ்ரஷ்டாவாய், நிரைமேய்த்தான் -*

---

*தருளிச்செய்கிறார் - நீலமணி இத்யாதி. அணிநின்ற - ஆபரணமாய்நின்ற வென்றபடி. "அணி நின்ற, செம்பொன், அடல்" என்றவிசேஷணத்ரயத்தால் பலித்தபாவம் - அநுபவத்துக்கும் இத்யாதி. 'பிணியொன்றும்சாரா' இத்யாகப்ய, 'ஆழியானை, பரமபரம்பரனை - நெஞ்சே! - நாளும்-பணி' இத்யந்வயம்.*
(எ)

ஸ்ருஷ்டமான வஸ்துக்களைப் பின்சென்று ரக்ஷிப்பானாய் வைத்து, (அவற்றுக்கு ஆபத்து வந்தால்), பாழி - மிடுக்கையுடைத்தாய், அம் - போக்யமான, தோளால் - திருத்தோளாலே, வரை - மலையை, எடுத்தான் - எடுத்து நோக்குமவனுடைய, பாதங்கள் - திருவடிகளை, என் -, நெஞ்சே—, மறவாது - மறவாதே, வாழ்கண்டாய் - நித்யாநுபவம் பண்ணி வாழப் பார்; வாழி - இவ்வாழ்வு நித்யமாகச்செல்லுக. ஆழியான் — அபரிச்சிந்ந ஸ்வபாவனென்றுமாம். வாழியென்று - வாழ்த்துதலாகவுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், "அவனை அநுபவி" என்றவாறே உகந்த நெஞ்சைக்கொண்டாடி, 'அவனை இடைவிடாதே அநுபவி' என்கிறார்.

[ஆழியான்] - ஸர்வேஶ்வரத்வ ஸூசகமான திருவாழியைக் கையிலேயுடையவன். [ஆழியமரர்க்கும் அப்பாலான்] - கம்பீரஸ்வபாவரான நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன். [ஊழியான்] - காலஶேஷமான ப்ரளயகாலத்தில் தான் ஒருவனுமேயுளனாய். [ஊழிபடைத்தான்] - காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களையும் "பஹு ஸ்யாம்" என்றுசொன்ன ஸங்கல்பத்தாலே உண்டாக்குமவன். [நிரைமேய்த்தான்] - தன்னாலே ஸ்ருஷ்டமான பதார்த்தங்களிலே ஒருபதார்த்தத்துக்கு ஶேஷமாய் அவதரித்து, ரக்ஷாபேக்ஷையுடைத்தான பசுக்களை ரக்ஷித்தமவன். அப்பசுக்களுக்கும் இடையர்க்கும் இந்த்ரனால்வந்த ஆபத்திலே மலையையெடுத்து ரக்ஷிக்குமவன். பாழி என்று - வலியாதல், இடமுடைமையாதல். தோளின்நிழலிலே ஒதுங்கினால் ஒருகணையத்துக்குள்ளே யிருப்பாரைப்போலே பயங்கெடுத்தகோளென்னுதல்; லோகமடங்க ஒதுங்கினாலும் விஞ்சியிருக்கும் தோளென்னுதல்; "பாஹுச்சாயாமவஷ்டப்த:". [அந்தோள்] - ரக்ஷகமாகையன்றிக்கே, "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா" என்று மங்களாஶாஸநம் பண்ணவேண்டியிருக்கை. [பாதங்கள்] - ஆபத்ஸகனுடைய திருவடிகளை. [வாழி] - மேற்சொல்லப்புகுகிற கார்யத்தை நினைத்து, "ஸ்வஸ்தி தே" என்னுமாபோலே, உனக்குஇது நித்யமாய்ச் சொல்லவேணுமென்கிறார். [என்னெஞ்சே]- புறம்புள்ளாரைச் சுமையெடுத்துத் தன்வழியே கொடுபோகாநிற்க, முறையிலே நின்று என்வழியே நின்ற நெஞ்சே! நாட்டார்க்கு பந்தகமாகாநிற்க எனக்கு மோக்ஷஹேதுவான நெஞ்சே! [மறவாது] - இதரவிஷயங்களிற்போலன்றியே, விஸ்மரிக்கை ஸ்வரூபநாஶமென்னும்படியான விஷயங்கிடாய். "ஸாஹாநி:" என்னக்கடவதிறே. [வாழ்கண்டாய்] - உன்பேற்றுக்கிறே நான் கால்பிடிக்கிறது.

ஈடு.—எட்டாம்பாட்டு. "அவனையநுபவி" என்றவாறே உகந்த நெஞ்சைக் கொண்டாடி, 'அவனை இடைவிடாதே யநுபவி' என்கிறார்.

[ஆழியான்] - ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருவாழியைக் கையிலே யுடையவன். [ஆழிஇத்யாதி] - அத்திருவாழியாழ்வானோபாதி, கம்பீரஸ்வபாவரான நித்யஸூரிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாம்படி யிருக்குமவன். [ஊழியான்] - நித்ய

எட்டாம்பாட்டு.—ஆழியான் இத்யாதி. "வாழியென்னெஞ்சே மறவாதுவாழ்கண்டாய்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அவனை இத்யாதி.

" ஆழி " என்று - ஸமுத்ரமாய், அத்தாலே - காம்பீர்யத்தைலக்ஷித்து, கம்பீரஸ்வபாவரானவென்றபடி. அப்பாலான் - அவ்வருகானவன். " அமரர்க்குமப்பாலான் " என்றவநந்தரம், "ஊழியான்" என்றதுக்கு பாவம் - நித்யஸூரிகளும் இத்யாதி. மேலே " படைத்தான் " என்றிருக்

ஸூரிகளும் தானுமாய்ப் பரம்பதத்திலே பேரோலக்கமாக விருக்குமவன். இங்கு உண்டான கார்யவர்க்கமடங்கலும் அழிந்து காலக்ஷேபமான காலத்திலே தான்வந்து தோற்றுமவன். [ஊழிபடைத்தான்] - காலோபலக்ஷிதமான ஸகலபதார்த்தங்களையும் "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிற ஸங்கல்பத்தாலே யுண்டாக்கினவன். [நிரைமேய்த்தான்] - இப்படி ஸகல பதார்த்தங்களையும் தான் படைத்து, "தன்னை வேறே சிலர்படைத்தார்கள்" என்னலாம்படிவந்து அவதரித்து, பசுக்களை ரக்ஷிக்குமவன். ஸ்வரக்ஷணத்தில் அந்வயமின்றிக்கே பண்ணும் ரக்ஷணத்தை விலக்காத பசுக்களை ரக்ஷித்தவன். [பாழியந்தோளால்] - இவன்இப்படி இவற்றை நோக்காநிற்க, இந்த்ரன் பசிக்ராஹத்தாலே இவை நோவுபடும்படியாகக் கல்வர்ஷத்தை வர்ஷிக்க, அத்தை மலையையெடுத்து நோக்குமவன். பாழியென்று — வலியாதல், இடமுடைமையாதல். புறம்பெங்கும் வர்ஷத்திலே நோவுபடாநிற்க, இவன் தோள்நிழலிலே ஒதுங்கினவர்களுக்கு மதிளுக்குள்ளே யிருப்பாரைப் போலே பயங்கெட்டிருக்கலாம்படியான வலியைச் சொல்லுதல்;அன்றிக்கே, பஞ்சலக்ஷம் குடியிலுள்ளாரும் இத்தோள்நிழலிலே ஒதுங்கினாலும் திருவாய்ப்பாடியளவன்றிக்கே இன்னமும் பத்துத்திருவாய்ப்பாடிக்கு இடம்போருமென்னும்படியான ரக்ஷகத்வத்துடிப்புஇருக்கும்படியைச் சொல்லிற்றுதல்; "பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோமஹாத்மந:" (பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோமஹாத்மந:) என்கிறபடியே-ஒதுங்கினவர்கள் சுருங்கி நிழலேவிஞ்சியிருக்குமாய்த்து. [அந்தோள்] - அழகிய தோள். "திண்டோள்மணிவண்ணா உன்சேவடிச்செவ்விதிருக்காப்பு"என்று மங்களாசாஸநம் பண்ணும்படியாய்த்துத் தோளழகிருப்பது; * சுந்தரத்தோளிறே. [பாதங்கள்] - கோவர்த்தந கிரியை யெடுத்துப் பரிஹரித்தவனுடைய திருவடிகளை. [வாழி] - நடுவே மங்களாசாஸநம்பண்ணுகிறார் நெஞ்சை; மேல் சொல்லப் புகுகிற அர்த்தத்தை புத்திபண்ணுகைக்காக. "யாமோஷதிமிவாயுஷ்மந்" (யாமோஷதிமிவாயுஷ்மந்) என்னுமாபோலே, உனக்கு

---

கையாலே, அதுக்குச்சேர 'காலக்ஷேபமானகாலத்திலே' என்கிறார். காலமே க்ஷேபித்த ஸமயத்திலே யென்றபடி. ஊழியான் - ஸம்ஹ்ருதிஸமயத்தி லுளனாயிருக்குமவன் என்று ஸப்தார்த்தம். ஊழி படைத்தான் - காலவர்த்தி பதார்த்தங்களைப் படைத்தானென்றபடி. "ஊழிபடைத்தான்" என்றத் தோடே கூட்டி, 'நிரைமேய்த்தான்' என்றதுக்கு பாவம் - இப்படி இத்யாதி. இத்தால் பாவம் - ஸ்வரக்ஷணத்தில் இத்யாதி. மேலுக்கவதாரிகை - இவனிப்படி இத்யாதி. அர்த்தத்வயத்தையுமடைவே விவரிக்கிறார் - புறம்பெங்கும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம் - பாஹுச்சாயாம் இத்யாதி. "பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோமஹாத்மந: । லக்ஷ்மண: ஸ்ரீமதாம் ஸ்ரேஷ்டோ ...வந:" இதி ஸுந்தரகாண்டே சதுஸ்த்ரிம்ஸே ஸீதாம்ப்ரதிஹநூமாந் (...). "அவஷ்டப்த:" என்கையாலே-ஒதுங்கினவர்கள்சுருங்கி என்றது. அவஷ்டம்பம் - ஏகதேசத்திலே பிடிக்கையென்று கருத்து. அப்படியழகியதோளென்ன - திண்தோள் இத்யாதி. "அழகியதோள்" என்னுமதுக்கு ப்ரமாணம் - சுந்தரத்தோளிறே என்று. நாய்ச்சியார்திருமொழி, "சிந்துரச்செம்பொடி" இத்யாதி. "பாதங்கள் - மறவாது" என்னவமைந்திருக்க, நடுவே "வாழி என்கிறதென்?" என்ன - நடுவே இத்யாதி. இப்படி மங்களாசாஸநம்பண்ணின பேருண்டோவென்ன - யாமோஷதிம் இத்யாதி. ஆரண்யகாண்டே ராமம்ப்ரதி ஜடாயு:- "ஸாஸீதா ...ராவணேநோபஹ்ருதா" இத்யுத்தரார்த்தம். அதாவது - "ஸாஸீதா ...ராவணேநோபஹ்ருதா" என்று - மேலே சொல்லுகிறதை யறிந்துக் கேட்கைக்காக, முதலிலே "யாமோஷதிமிவாயுஷ்மந்" என்று பெரியவுடையார்

இஸ்ஸம்ருத்திமாறுதே சென்றிடுகவென்கிறார். [என்னெஞ்சே] - புறம்பெங்கும் ஆத்மாவுக்கு மோக்ஷமான மநஸ்ஸுத் தான் சுமையெடுத்தாநிற்க, என்வழியிலே போந்து முறையிலே நிற்கிற நெஞ்சே! ஆத்மாவுக்கு கரணகோடியிலே யந்வயித்த நெஞ்சுதானே பந்த ஹேதுவாக நின்றதிறே புறம்புள்ளார்க்கு. இங்ஙனன்றிக்கே, என்வழியேபோந்து எனக்கு மோக்ஷஹேதுவான நெஞ்சே! [மறவாது] - கைபுகுந்ததென்று இதரவிஷயங்களிலே செய்வுற்றைச் செய்யாதேகிடாய். [வாழ்கண்டாய்] - உன்னுடைய வாழ்ச்சிக்கு நான் கால்பிடிக்க வேண்டுகிறதேன்? பால்குடிக்கக் கால்பிடிக்கிறேனிறே. மறவாது வாழ் கண்டா யென்கையாகிலுள்ளது, கீழ்ச்சொன்ன விசேஷணங்களுக்கு ப்ரயோஜநமென்னென்னில்;—புறம்புபோய் மணலைமுக்கவொண்ணாதே! ரக்ஷகனாகவல்லவனைப் பற்ற வேணுமே. ரக்ஷணத்துக்குப் பரிகரமுடையவன் ரக்ஷகனாகவேணும்; நிரபேக்ஷருடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகளுக்கும் நிர்வாஹகனானவன் ரக்ஷகனாகவேணும்; ஒருக்காலுளனாவது இலனாவதாகாநிற்கிறவனுக்கு என்றுமுளனானவன் ரக்ஷகனாகவேணும்; இவையில்லாதவன்று உண்டாக்கினவன் ரக்ஷகனாகவேணும்; உண்டானவன்று ரக்ஷகனாகைக்கு ஸ்வரக்ஷணத்தில் குறையநின்றவற்றையும் நோக்குமவன் ரக்ஷகனாகவேணும்; இருந்தபடியாமாகில் மறந்துகாண்! (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

கண்டேன்கமலமலர்ப்பாதம் காண்டலுமே
விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்
தொண்டேசெய்துஎன்றுந் தொழுதுவழியொழுகப்
பண்டேபரமன்பணித்தபணிவகையே.

ஆ.—(கண்டேன்.)-"என்னை சரணாகதராணருடைய அபேக்ஷிதமெல்லாம் நானேசெய்வேன்" என்று எம்பெருமான் பண்டே யருளிச்செய்தருளினபடியே, அவனுடைய ப்ரஸாதத்தாலே, நிரவதிகபக்திகாரிதமான ஸர்வசேஷவ்ருத்தியையும் ஸர்வ காலமும் பண்ணலாம்படி அவன்திருவடிமலர்களைக் கண்டேன்; கண்டவாறே என்னுடைய ஸமஸ்தது:க்கங்களும் போயினவென்கிறார்.

---

மங்களாசாஸநம் பண்ணினாற்போலே, மேலே "மறவாது" என்றதைக் கேட்கைக்காக வாழியென்கிறாரென்றபடி. "வாழி" என்றதுக்கர்த்தம் - உனக்கு இத்யாதி. "என்" என்ற விசேஷணத்துக்கு பாவம் - புறம்பெங்கும் இத்யாதி. விவரணம் - ஆத்மாவுக்கு இத்யாதி வாக்யத்வயம். மறக்க ப்ரஸக்தியேதென்ன - கைபுகுந்தது இத்யாதி. "வாழ்" என்றதே, 'வாழ்கண்டாய்" என்றதுக்கு பாவம் - உன்னுடைய இத்யாதி. மறவாதுவாழ்கண்டா யென்கையாகிலுள்ளதென்றது - "மறவாது வாழ்கண்டாய்" என்கையே விதேயமாயுள்ளதாகி லென்றபடி. விசேஷங்களாவன - "ஆழியான்" இத்யாதிகள். 'பற்றவேணுமே' அதுக்காகச் சொல்லுகிறதென்றபடி. "ரக்ஷகனாகவல்லவனைப் பற்றவேணுமே" என்றதைக் காட்டுகிறார் - ரக்ஷணத்துக்கு இத்யாதி. இவ்வாக்யந்தொடங்கி மேலடைய, * ஆழியான்தொடங்கி "நிரைமேய்த்தான்" என்னுமளவும் பதங்களைக் கடாக்ஷித்து பாவமாகக் கண்டுகொள்வது. இது - ரக்ஷணோபயோகி குணஜாதமென்றபடி. இருந்தபடியாமாகில் - இருந்தபடியாலே. மறந்துகாண் - மறந்துபார், உன்னாலே மறக்கப்போகாதென்று கருத்து. 'ஆழியான் என்று தொடங்கி, 'பாதங்கள் - மறவாதுவாழ்கண்டாய் - என்னெஞ்சே - வாழி' இத்யந்வயம். (அ)

ஆ. — ஒன்பதாம்பாட்டில், ஜந்மாந்தர ஸஹஸ்ர க்ருத தபோஜ்ஞாநாதிகளால் ஸாத்யமான பக்தியோகத்தாலே லப்யனான எம்பெருமானை, நான் கேவலம் அவன் ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேனென்று, ஸ்வலாபத்தைப் பேசுகிறார்.

[கண்டேன் என்றுதொடங்கி] - எம்பெருமான் திருவடிகளைக் கண்டேன்; கண்டபோதே, என்னுடைய ஸகலது:க்கங்களும் நீங்கிற்றின. [தொண்டேசெய்து என்றுமேலுக்கு] - நித்யகைங்கர்யம் பண்ணும்படியாகப் பண்டே ஸர்வேஶ்வரன் அருளிச்செய்தபடியே அவன்ப்ரஸாதத்தாலே, முதற்பாட்டில், பக்தியோகம் ஸ்வஸாத்யத்தோடே ஸங்கதித்தபடியை ஸாக்ஷாத்கரித்தருளிச்செய்தார்; இப்பாட்டில், தம்முடைய உபாயமான ப்ரபத்தி தனக்குஸாத்யமான திருவடிகளோடே ஸங்கதித்தமையை அநுஸந்தித்தருளிச் செய்கிறார்.

ப. — அநந்தரம், தத்த்வயாதாத்ம்யத்தை யவன் ப்ரகாஶிப்பிக்கக் கண்டு அநுபவிக்கப் பெற்றேனென்கிறார்.

தொண்டேசெய்து - தன்பக்கலிலே நிரதிஶயபக்தியைப் பண்ணி, என்றும் - ஸர்வகாலத்திலும், தொழுது - ஶேஷவ்ருத்தியை யுடையேனாய்க்கொண்டு, வழியொழுக - அந்தவழியாலே சந்தாநவ்ருத்தியாய் நடக்கைக்காக, பண்டே - பூர்வகாலத்திலே, பரமன் - ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன், பணித்த பணிவகையே - அருளிச்செய்த மந்த்ரரஹஸ்யப்ரகாரத்திலே, கமலமலர் - தாமரைப்பூப்போலே நிரதிஶயபோக்யமான, பாதம் - திருவடிகளை, கண்டேன் - ஶேஷத்வாநுரூபமாக அபரோக்ஷித்தேன்; காண்டலுமே - இந்த ஜ்ஞானம் பிறந்தவளவில், வினையாயினவெல்லாம் - அநுபவவிரோதியான அஹங்காரமமகாராதி ஸமஸ்ததுரிதங்களும், விண்டேயொழிந்த - ஸவாஸநமாக விட்டுப்போய்த்தின.

இ. — ஒன்பதாம்பாட்டில், "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" என்கிறபடியே அநேககால ஸாத்யமான பக்தியாலே லபிக்கப்படுமவனை அவன்ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேன் என்கிறார்.

[கண்டேன்] - என்றும் கேட்டே போம்விஷயத்தை ஸாக்ஷாத்கரிக்கப்பெற்றேன். [கமலமலர்ப்பாதம்] - ப்ராப்தியொழியவே ஜ்ஞானலாபமே அமையும்படியான போக்யவிஷயமென்கிறது. [காண்டலும் இத்யாதி] - கண்டபோதே, வினையென்று பேர்பெற்றவையெல்லாம் விட்டுப்போய்த்து. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்னுமவனடியாக வந்ததாகையாலே தட்டில்லையிறே. [தொண்டேசெய்து] - பரபக்த்யாதிகளையுடையனாய். [என்றும்தொழுது வழியொழுக] - நித்யகைங்கர்யத்தைப் பண்ணி அதுவே யாத்ரையாய்ச் செல்லும்படி. [பண்டே இத்யாதி] - நமக்காக இன்றன்றிக்கே ஸர்வாதிகன் ஸர்வஸாதாரணமாக அன்று அருளிச்செய்த பாசுரத்தின்படியே. "மாமேகம் ஶரணம் வ்ரஜ - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றிறே பாசுரம்.

ஈடு. — ஒன்பதாம்பாட்டு. "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) என்கிறபடியே அநேககால ஸாத்யமான பக்தியாலே லபிக்கப்படுமவனை கேவ

---

ஒன்பதாம்பாட்டு. — கண்டேன் இத்யாதி. "பண்டேபரமன்பணித்த பணிவகையே - கண்டேன்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார் - ஜந்மாந்தர இத்யாதி. "ஜந்மாந்தரஸஹ

லம் அவன்ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேனென்கிறார். இப்பாட்டிற்சொல்லுகிற ப்ர பத்தியோடு விகல்பிக்கலாம்படியிருக்கிற ஶக்தியைச் சொல்லிக்கொண்டு போந்தார் கீழ்; அதுக்கும்அடி அவனுகையாலே சொல்லுகிறாராதல்.ஸ்வயம் நிரபேக்ஷமானது தன்னையே சொல்லுகிறாராதல், தாம் பெற்றவழியே சொல்லுகிறாராதல்.

[கண்டேன்] - என்றும் கேட்டேபோகக்கடவ விஷயத்தைக் கண்ணாலே காணப்பெற்றேன். தம்முடைய ப்ரபத்தி ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை - ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றபடியைச் சொல்லுகிறார். இத்தால் - ப்ரத்யக்ஷஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரத்தைச் சொன்னபடியிறே. [கமலமலர்ப்பாதம்] - ப்ராப்தியை யொழியவே ஜ்ஞாநலாபமே யமையும்படியாய்த்து போக்யதையிருக்கும்படி. [காண்டலுமே] - கண்டவளவிலே. [விண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்] - "ஸர்வ பாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்று அவன டியாகவருகிறதிறே. வினையாயினவடங்கலும், "இவர் கேவலரல்லர், அடியுடையராயிருந் தார்" என்று விட்டுப்போய்த்தின. [தொண்டேஇத்யாதி] - அம்ஶ்லோகத்துக்கு இதுவும் கருத்தென்கிறார்இவர். ஔபாதிகமானது போகக்கடவதே; உபாயத்துக்கு ஃபலப்ரதத்வ முண்டே. "இனி ஸ்வரூபம் நிலைநின்றதாயிருக்குமிறே, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியும் நித்யமாயிருக்குமிறே" என்று அங்கு அர்த்தப்ராப்தமானதுதன்னையே இங்கே வாய்விடு

---

ஸேஷ்டதமோஜ்ஞாநஸாயிஸி: ! நராணாம்க்ஷீணபாபாநாம்க்ருஷ்ணேபக்தி:ப்ர ஜாயதே." அதுக்கும் அடியவனுகையாலே என்றது - "மயர்வறமதிநலமருளினன்" என்று அந்த ஸாத்யஶக்திக்கும் அடிஅவனுகையாலே யென்றபடி. சொல்லுகிறாராதல் என்றது-அந்த ஸாத்யஶக் திஹேதுவான ப்ரஸாதத்தைச் சொல்லுகிறாராதலென்றபடி. முந்தினவவதாரிகை-மோக்ஷஹேதுவான தத்ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேனென்று; த்விதீயாவதாரிகை - "மதிநலமருளினன்" என்று ஸாத்யஶக்தி ஹேதுவான தத்ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேனென்று; இவ்வுபயத்தையும் அடைவே விவரிக்கிறார் - ஸ்வயம்நிரபேக்ஷம் இத்யாதிவாக்யத்வயத்தாலே.

"கண்டேன்" என்றதுக்கு பாவம் - என்றும் இத்யாதி. ப்ரவேஶத்திலே "ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறார்" என்றத்தை நிகமிக்கிறார்-தம்முடைய இத்யாதி. கீழுக்கு விவரணம்-ஸாக்ஷாத்கரிக் கப்பெற்றபடியை என்றது. ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை என்றது - ஃபலவ்யாப்தமான படியை. அதாவது-ஸாக்ஷாத்கரிக்கை. ஆனால் கண்டாரோவென்ன - இத்தால் இத்யாதி. "கமலமலர்ப் பாதம்" என்றதுக்கு பாவம் - ப்ராப்தியை இத்யாதி. அதாவது - பரமபதத்திலே போய்க்கண்டால் ரஸிக்கையன்றிக்கே மாநஸஸாக்ஷாத்காரமே பிடித்து ரஸிக்கும்படியாய்த்துத் திருவடிகளில் போக் யதையென்றபடி."கண்டேன்"என்றதினநுவாதம்-"காண்டலுமே" என்றது. வினையெல்லாம் போகக் கூடுமோவென்ன - ஸர்வபாபேப்ய: இத்யாதி. ஶப்தார்த்தம்-வினையாயின இத்யாதி. அடியென்று- சாடு. பாதமும், மூலமும். "கண்டேன் கமலமலர்ப்பாதம், காண்டலுமேவிண்டேயொழிந்த வினை யாயினவெல்லாம்" என்றவிடத்திலே - "பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்சித்யந்தே ஸர்வஸம்ஶயா: க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" என்ற முண்டோபநிஷத்வாக்ய மநு ஸந்தேயம். ஹ்ருதயக்ரந்தி: - ப்ராக்ருதிஸம்பந்தம். ஸம்ஶயா: - அவித்யாதிகள். "பண்டேபரமன் பணித்தபணிவகையே" என்று அவனருளிச்செய்த ஶ்லோகத்தின்படியேயானால், "தொண்டே செய்து" என்ற இஷ்டப்ராப்தி அதிலேசொல்லிற்றோவென்ன - அம்ஶ்லோகத்துக்கு இத்யாதி. அதில் இஷ்டப்ராப்தி சொல்லாமைக்கடியேதென்ன - ஔபாதிகம் இத்யாதி. ஔபாதிக மானது - விரோதியானதென்றபடி. ஹேத்வந்தரம் - உபாயத்துக்கு இத்யாதி. ஔபாதிகமானது போனால் ஸித்திப்பதென்னென்ன - இனி ஸ்வரூபம் இத்யாதி. அதாவது - "பயோதவாநகர

கிறார். [தொண்டேசெய்தென்றும் தொழுதுவழியொழுக] - ஸ்வரூபம் நித்யமானபின்பு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியும் நித்யமாய்ச் செல்லும்படியாக. [பண்டேபரமன்பணித்த பணிவகையே - கண்டேன்கமலமலர்ப்பாதம்] - அவன் "मामेकं शरणं व्रज" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்கிறபடியாலே நான் அவன்திருவடிகளைக் காணப்பெற்றேன்.

## பத்தாம் பாட்டு.

வகையால்மனமொன்றி மாதவனைநாளும்
புகையால்விளக்கால் புதுமலரால்நீரால்
திசைதோறுஅமரர்கள் சென்றிறைஞ்சநின்ற
தகையான்சரணம் தமர்கட்குஓர்பற்றே.

ஆ —(வகையால்.) - பக்தியோகத்தைச் சொல்லவுபக்ரமித்து நிர்ஹேதுகமாக நான் எம்பெருமானுக்கு அடிமைசெய்யப்பெற்றேனென்றுகொண்டு நடுவே தம்முடைய ஸம்ருத்தியைப்பேசி; பின்னையும் அந்த:கரணத்தை நியமித்து, ஏகவிஷயமாக்கி, தத்ஸமாராதநோசிதமான த்ரவ்யவிஶேஷங்களைக்கொண்டு அநந்யார்த்தமாக இந்த்ராதிகள் அவனையாஶ்ரயிக்க, அவர்களுடைய அபேக்ஷிதத்தைச் செய்தருளுகிற அவன்திருவடிகளே ப்ராப்யமென்றிருப்பாருடைய அபேக்ஷிதஞ் செய்தருளுமே, அதிலொரு ஸம்ஶயமில்லையென்றுகொண்டு, அந்த பக்தியோகத்திலே ஸுப்ராபனுமென்னுமிடத்தையே சொல்லி முடிக்கிறார்.

ஓ.—பத்தாம்பாட்டில், ப்ரயோஜநாந்தரபரர்க்குங்கூட ஸமாஶ்ரயணீயனாய் அவர்களுடைய அபிலஷிதப்ரதனான ஸர்வேஶ்வரன் திருவடிகள், அநந்யப்ரயோஜநரான பக்திமான்களுக்கும் ப்ரபந்நர்க்கும் நல்ல அபாஶ்ரயமென்னுமிடம் நிஶ்சிதமென்றுகொண்டு, ப்ரஸ்துதமான பக்தியோகத்தை நிகமிக்கிறார்.

[வகையால் மனமொன்றி] - ஶாஸ்த்ரத்தில் சொல்லுகிற வழியாலேஏகாக்ரசித்தராய். [மாதவனை என்று தொடங்கி] - ஸ்ரீபதியாகையாலே ஸ்வாராதனனை தன்னை புஷ்பாதி ஸமாராதநோபகரணங்களைக் கொண்டு திக்குக்கள்தோறும் வந்து ப்ரயோஜநாந்தரபரரான தேவர்கள் நாள்தோறும் ஸமாஶ்ரயிக்கலாம்படி நின்ற ஸ்வபாவத்தை யுடையவனுடைய திருவடிகள்.

---

ணாஸ" இத்யாதிப்படியே - ப்ரதிபிம்பகம்போனால், "ஸஹஜகைங்கர்யவிதய:" என்று கைங்கர்யம் ஸஹஜமாயிருக்குமென்றபடி. தொண்டேசெய்து - பாஹ்யாதிகளையுடையராய். என்றும் தொழுது - நித்யமாக அஞ்சலியைப் பண்ணி; வழியொழுக - கைங்கர்யமே யாத்ரையாக. என்றும் தொழுது - நித்யமாக கைங்கர்யத்தைப் பண்ணிக்கொண்டு; வழியொழுக-அதுவே யாத்ரையாகவென்றுமாம். "ஸ்வயம் நிரபேக்ஷமானது தன்னையே சொல்லுகிறார்" என்றத்தை இங்கே விசதீகரிக்கிறார் - அவன் இத்யாதி. பணிவகையே - ரஹஸ்ய ப்ரகாரத்தாலே. சரமஶ்லோகத்தின் படியே யென்றபடி. 'தொண்டே செய்தென்றும்' என்றுதொடங்கி, 'கமலமலர்ப்பாதம் கண்டேன்: காண்டலுமே - வினையாயினவெல்லாம் - விண்டேயொழிந்த' இத்யந்வய:. (கூ)

ப.—அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரர்க்கு ஆஶ்ரயணீயனானவன் அநந்யப்ர யோஜநர்க்கு ப்ராப்யபூதனுமென்கிறார்.

வகையால் - ஶாஸ்த்ரோக்த ப்ரகாரங்களாலே, மனம் - நெஞ்சை, ஒன்றி - ஒருங்கப்பிடித்து, மாதவனை - தங்களபிமதஸித்திக்கு உறுப்பாம்படி ஶ்ரிய:பதியான தன்னை, நாளும் - காலந்தோறும், புது - விலக்ஷணமான, புகையால் விளக்கால் மலரால், நீரால் - தூபதீபபுஷ்பஜலங்களாலே, திசைதோறு - நின்றநின்றதிக்குக்கள் தோறும், அமரர்கள் - ப்ரஹ்மாதி தேவர்கள், சென்று-, இறைஞ்ச - ஆஶ்ரயிக்கும்படி, நின்ற -, தகையான் - ஸ்வபாவத்தை யுடையவன், சரணம் - திருவடிகள், தமர்கட்கு- அநந்யப்ரயோஜநரான அஸாதாரண ஜநங்களுக்கு, ஓர் - அத்விதீயப்ராப்யமாய்க் கொண்டு, பற்று - அபாஶ்ரயமாம்.

இ.—பத்தாம்பாட்டில், ப்ரயோஜநாந்தரபரரோடு ஸாதநாந்தர நிஷ்டரோடு ப்ரபந்நரோடு வாசியற அவனே அபாஶ்ரயமென்று உக்தத்தை நிகமிக்கிறார்.

[வகையால் இத்யாதி] - ஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிற வழிதப்பாமே ஏகாக்ர சித்தராய், ஸ்ரீய:பதியாகையாலே ஸ்வாராதனானவனை. இவன் செய்ததுகொண்டு த்ருப் தனும்படி பண்ணுவாருண்டென்னுதல்; இவன் செய்ததுகொண்டு குறை நிரம்பவேண் டும் அபூர்ணனல்லன் என்னுதல். [நாளும்]- ஆஶ்ரயணத்துக்கு காலநியதியில்லை யென் கிறது. ஆராதநோபகரணங்களுக்கும் நியதியில்லை, ஸம்பவித்தபடியே அமையுமென்கை. [திசை இத்யாதி] - ஸர்வலோகங்களிலும் ப்ரஹ்மாதிகள் கிட்டி ஆஶ்ரயிக்கலாம்படி நிற் கிற ஸ்வபாவத்தையுடையவனுடைய திருவடிகள். [தமர்கட்கு ஓர்பற்றே] - அநந்ய ப்ரயோஜநர்க்கு அத்விதீயமான அபாஶ்ரயம். பூக்திமான்களுக்கு ஃபலப்ரதனாய் உபாய மாயிருக்கும்; தன்னையே பற்றினார்க்கு அவ்யவஹிதோபாயமாம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரரோடு ஸாதநாந்தரபரரோடு ப்ர பந்நரோடு வாசியற அவனே உபாய மேன்று உக்தத்தை நிகமிக்கிறார்.

[வகையால் மனமொன்றி] - ஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிற வழியே நெஞ்சு ஒருமைப்பட்டு. [மாதவனை] - விஶ்யதிக்ரமத்துக்கும் அநவபாநத்துக்கும் அஞ்சவேண்

---

பத்தாம்பாட்டு.—வகையால் இத்யாதி. "புகையால் விளக்கால்" என்றுதொடங்கி "தமர்கட்கோர்பற்று" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - ப்ரயோஜநாந்தர இத்யாதி. "அமரர் கள்" என்று - ப்ரயோஜநாந்தரபரரும், "தமர்கள்" என்று - ஸாதநாந்தரநிஷ்டரும், ப்ரபந்ந ரும் சொல்லுகிறது. "நாளும்புகையால்" என்றுதொடங்கி, "தகையானுடைய - மாதவன் - சரணம் - வகையால் மனமொன்றியிருக்கிற - தமர்கட்குஓர்பற்று" என்றந்வயம்.

"வகையால்மனமொன்றி" என்றதுக்கர்த்தம் - ஶாஸ்த்ரங்களில் இத்யாதி. ஶாஸ்த்ரங் கள் என்கிறது - உபாஸநஶாஸ்த்ரங்களும், ப்ரபத்தி ஶாஸ்த்ரங்களும். ஒருமைப்படுகையாவது - ஐகாக்ர்யம். உபாஸகரைச் சொன்னபோது, வகையால் - ஶாஸ்த்ரமார்க்கத்திலே வந்து, மநஸ்ஸை, வேறொரு பாபப்ரவ்ருத்தியிலே போகாதபடி ஸர்வேஶ்வரனிடத்திலே ஒருமைப்படுத்திக்கொண் டிருக்கிற - உபாஸித்துக்கொண்டிருக்கிற, தமர்கட்கென்றபடி. ப்ரபந்நரானபோது, வகையால் - சரமஶ்லோகோக்த ப்ரகாரத்திலே வந்து, மநஸ்ஸை ஸாதநாந்தர விஷயாந்தரங்களிற் போகாதே ஒருமைப்படுத்திக்கொண்டிருக்கிற தமர்கட்கென்றபடி. ப்ரபந்நன் உபாயாந்தரங்களையும் விஷயாந் தரங்களையும் விட்டிருந்தானேயாகிலும், லோகோபவாத பரிஹாரார்த்தமாகப்பண்ணும் கர்மாநுஷ்ட் டாநமும் ப்ராமாதிக்கமாகவரும் விஷயப்ரவண்யாதிகளு முண்டாயிருக்குமேயென்ன; "மாதவன்"

டா; லோகாபவாத பரிஹாரார்த்தமாக இவன்செய்தவை என்னுவது, அதுக்கும் ஃபலம் இவனைவந்து கிட்டாது, "இவன்வழி போராமையும் நெஞ்சு ஒருமைப்படாமையும் இவன்தலையிலே எறட்டுக் கைவிடக்கடவதோ?" என்பாரும் அருகேஉண்டு. இத்தால் - அந்தஶ்லோகத்திலே லக்ஷ்மீஸம்பந்தமும் சொல்லிற்றாய்த்து. ஸ்வரூபாநுபந்தி தர்மங்கள் சொல்லவுமாம், சொல்லாதொழியவுமாமிறே; ஆகையிறே, த்வயத்தாலே பிரிய அநுஸந்திக்கவுமாய் திருமந்த்ரத்தில் ஒன்றாகவநுஸந்திக்கவுமாயிருக்கிறது. "[illegible]"(அந்தர்க்கதகுணமேவதேவதாம்பஜதே)என்று சொல்லாநின்றதிறே; அந்த தேவதாஸ்வரூபந்தன்னிலே அபஹதபாப்மத்வாதி குணங்களையும் சொல்லுகையாலே. [நாளும்இத்யாதி] - காலநியதியின்றிக்கே, ஆராதநோபகரணங்களுக்கும் நியதியின்றிக்கே, தங்களுக்குக் கைவந்த உபகரணங்களைக்கொண்டு, பெரியதிருநாளைக்கு ஸர்வதோதிக்கமாக வந்தேறுமாபோலே ப்ரஹ்மாதிகள் வந்து ஆஶ்ரயிக்கும்படியான ஸ்வபாவத்தை யுடையவனுடைய திருவடிகள்; தன்திருவடிகளைப் பற்றினார்க்கு,

---

என்று பிராட்டி புருஷகாரம் சொல்லுகையாலே அவற்றுக்கு அஞ்சவேண்டாவென்கிறார் - வித்யதிக்ரமத்துக்கும் இத்யாதி. இவரஞ்சாதபடி புருஷீகரிக்கும்படியைக் காட்டுகிறார் - லோகாபவாத இத்யாதி. கீழில் பதத்வயத்தையும் கடாக்ஷித்து, உபாஸகவிஷயத்தில் புருஷீகரிக்கும்படியைக்காட்டுகிறார் - இவன்வழி இத்யாதி. இவன் - உபாஸகன். வழிபோராமை - ஶாஸ்த்ரமார்க்கத்தில் நடவாமை. சரமஶ்லோகார்த்தம் சொல்லுகிறவிடத்திலே "மாதவன்" என்று விசேஷிக்கையாலே - ஶ்ரிய:பதித்வமும் அந்தஶ்லோகத்திலே சொல்லப்படுகிறதென்கிறார் - இத்தால் இத்யாதி. அங்கே "மாம்" என்று - ஸ்வரூபம் மாத்ரமன்றோ சொல்லிற்று, லக்ஷ்மீஸம்பந்தமும் சொல்லிற்றோவென்ன - ஸ்வரூபாநுபந்தி இத்யாதி. அதாவது-ஸ்வரூபத்துக்கு அவிநாபூததர்மங்கள், பிரித்துச்சொன்னாலும் சொல்லாவிட்டாலும் ஸ்வரூபத்தைச் சொன்னபோதே தன்னடையே வருமென்றபடி. இதுக்கு நியாமகம் - ஆகையிறே இத்யாதி. அப்படி ஸ்வரூபத்தைச்சொன்னால் ததநுபந்திதர்மங்கள் சொல்லாவிட்டாலும் தன்னடையேவருமோவென்ன - அந்தர்க்கத இத்யாதி. "[illegible]" என்று சொல்லாநின்றதிறே த்ரமிடபாஷ்யத்தில் என்றபடி. குணவைஶிஷ்ட்யம் ஸத்வித்யையிலே சொல்லாதிருக்க, குணவிஶிஷ்டஸ்வரூபமுபாஸ்யமென்கைக்கடியேதென்ன - அந்த தேவதாஸ்வரூபம் இத்யாதி. அந்த தேவதாஸ்வரூபந்தன்னிலே என்றது - ஸத்வித்யாநிஷ்டனுக்கு உபாஸ்யமான தேவதாஸ்வரூபந்தன்னிலேயென்றபடி. சொல்லுகையாலே என்றது-தஹரவித்யையிலே சொல்லுகையாலேயென்றபடி. "ஓர்பற்று" என்றதுக்கு பாவம் - தன்திருவடிகளை இத்யாதி. "தமர்கள்" என்கிற ஶப்தம் ஸாமாந்யமாகையாலே, உபாஸகரையும் ப்ரபந்நரையும் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, இருவர்க்கும் பற்றும்படியென்னென்ன - அநந்யப்ரயோஜநரான இத்யாதிவாக்யத்வயம். அவ்யவஹிதோபாயம் - ஸாக்ஷாதுபாயம். "[illegible]" இதி த்ரமிடபாஷ்யே "[illegible]" இதி வததோமாயிநோமதந்நிராகரோதி த்ரமிடபாஷ்யகார: (யத்யபிஸச்சித்த:) இத்யாதிநா. ஸச்சித்த:-ஸத்வித்யாநிஷ்ட:. நிர்ப்புக்நதைவதம்-தேவதாஸ்வரூபாபேக்ஷயா நிதராம்பிந்நம் யதாபவதி ததா, குணகணம்மநஸா யத்யபி நாநுதாவேத் - யத்யபிநத்யாயதி; ததாபிகேவலஸ்வரூபோபாஸிநோபி, அந்தர்க்குணம்-ஸ்வரூபாந்தர்ப்பூதகுணம், தேவதாமேவ, பஜதே - த்யாயதி. ஸ்வரூபமாத்ரோபாஸநே குணாநாமுபாஸ்யத்வேநாந்தர்ப்பாவ: கதமித்யத்ராஹ (தத்ராபீதி) தத்ராபி - ஃபலதஶாயாமபி, "[illegible]" இத்யுக்தப்ரகாரேண ஸகுணதேவதைவப்ராப்யதே. அத:, தத்க்ரதுந்யாயேந உபாஸநதஶாயாமபி ஸகுணஸ்யைவோபாஸ்யத்வம் ஸித்த்யதீத்யர்த்த:. ஆக, இத்தால் சொல்லிற்றாய்த்து -

பின்னையும் புறம்புபோய் ஒருபற்றுத் தேடவேண்டாதபடியான பற்று. அநந்யப்ரயோஜநரான ஹக்திமான்களுக்கும், ஹலப்ரஜனாய் உபாயமாயிருக்கும் ; தன்னையே பற்றினார்க்கு அவ்யவஹிதோபாயமாம். (கo)

## பதினோராம் பாட்டு.

பற்றென்றுபற்றிப் பரமபரம்பரனை
மல்திண்தோள்மாலைவழுதிவளநாடன்
சொல்தொடையந்தாதிஓராயிரத்துளிப்பத்தும்
கற்றார்க்குஓர்பற்றாகும் கண்ணன்கழலிணையே

*ஆ.—(பற்றென்று.) - இத்திருவாய்மொழிகற்றார்க்கு எம்பெருமான் திருவடிகள் ஸுலஹமாமென்கிறார்.*

*ஓ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியைக் கற்றார்க்கு க்ருஷ்ணனுடைய திருவடிகள் ஸுலஹமாமென்கிறார்.*

*[பற்றென்று தொடங்கி] - ஸர்வேஶ்வரனாய் பலத்தையுடைத்தாய்த் திண்ணிதான தோள்களையுடையனாய், ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமுக்தனானவனைப் பரமப்ராப்யமென்று பற்றி. [வழுதிவளநாடன் என்று மேலுக்கு] - ஆழ்வாருடைய சொல்லாய் அழகிய தொடையை யுடைத்தாய் அந்தாதியான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி கற்றார்க்கு.*

*ப—அநந்தரம், இத் திருவாய்மொழிக்குப்பலமாக, ஹ்ருவச்சரணாரவிந்தம் ப்ராப்யமென்றருளிச் செய்கிறார்.*

*பரமபரம்பரனை - தனக்குமேலில்லாதபடி ஸர்வஸ்மாத்பரனாய், மல் - மல்லயுத்தத்தில், திண் - திண்ணிதான, தோள் - தோளையுடையனாய், மாலை - ஆஶ்ரித வ்யாமுக்தனானைபாலே ப்ராப்யப்ராபகஹூதனான ஸர்வேஶ்வரனை, பற்றென்று - தமக்கு அபாஶ்ரயமாக அறுதியிட்டு, பற்றி - பற்றின, வழுதிவளநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகரான ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, தொடை - ஶப்தஸந்தர்ப்பரூபமான, அந்தாதி ஓராயிரத்துள், இப்பத்தும் - இப்பத்தையும், கற்றார்க்கு - அப்யஸித்தவர்களுக்கு, கண்ணன் - தாமோதரனான க்ருஷ்ணன், கழல் - திருவடிகள், இணை - இரண்டும், ஓர் - அத்விதீயமான, பற்றாகும் - ப்ராப்யமாம். இது கலிவிருத்தம்.*

*இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்கு க்ருஷ்ணனுடைய திருவடிகள் ஸுலஹமாமென்கிறார்.*

*[பரமபரம்பரனை மல்திண் தோள் மாலை - பற்றென்றுபற்றி] - ஸர்வாதிகனாய், விரோதி போக்குகைக்கு ஈடான தோள்மிடுக்கை யுடையனாய், ஆஶ்ரிதர் பக்கல் வ்யாமுக்தனானவனை, பரமப்ராப்யமென்று பற்றி. [வழுதிவளநாடன் இத்யாதி] - ஆழ்வாருடைய சொல்லாய், அழகிய தொடையையுடைத்தாய், அந்தாதியான ஆயிரந்திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு இப்பத்தைக் கற்றார்க்கு, க்ருஷ்ணனுடைய திருவடிகள் ப்ராப்யமாம். "தாமோதரன் தாள்கள் - சார்வு" என்று ஆழ்வார் அறுதியிட்ட பேற்றைக் கொடுக்கும்.*

---

*ஸத்வித்யையிலே ஸ்வரூபமாத்ரத்தையே உபாஸ்யமாகச்சொல்லிக் குணங்களைச்சொல்லாவிட்டாலும் குணங்கள் ஸ்வரூபத்தை விட்டிராமையாலே ஸ்வரூபத்தைச்சொன்னபோதே ஸ்வரூபாநுபந்திகுணங்கள் தன்னடையே வருமாபோலே, சரமஶ்லோகத்திலும் லக்ஷ்மீஸம்பந்தமும் தன்னடையே வருமென்றபடி.* (கo)

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார்க்கு க்ருஷ்ணனுடைய திருவடிகள் ஸாதநமாமென்கிறார்.

[பற்றென்றுபற்றிப்பரமபரம்பரனை] - ஸர்வேச்வரனை ப்ராப்யப்ராபகமென்று பற்றி. [மல்திண்தோள்மாலை] - இவன் ப்ரபத்திபண்ணி அத்யவஸிக்குமத்தனையே வேண்டுவது; ரக்ஷணத்தில் அவன்பக்கல் ஒருகுறையுமில்லை. இவர்கள் விரோதிகளைப் போக்குகைக்கீடான மிடுக்கையும் வ்யாமோஹத்தையும் உடையவனென்கிறது. [வழுதி இத்யாதி] - "[illegible]" (பாட்டேகேட்டேசமதுரம்ப்ரமாணேஸ்த்ரீபிரந்விதம்) என்கிறபடியே, அழகியசொற்களாலே தொடுக்கப்பட்ட அந்தாதியான ஆயிரத்திலும்வைத்துக்கொண்டு இந்தப்பத்தும் கற்றார்க்கு. [கண்ணன்கழலிணை - ஓர்பற்றாகும்] - "தாமோதரன்தாள்கள் - தவநெறிக்கு - சார்வே" என்றபடியே க்ருஷ்ணன் திருவடிகளே, இனி அவ்வருகுபோய் ஒன்றுதேடிப்பற்றவேண்டாதபடியான பற்றாகும். (கக)

---

*நிகமம் - பற்றென்று இத்யாதி. "கற்றார்க்கோர்பற்றாகும் கண்ணன்கழலிணை" என்ற பதத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.*

*"பரமபரம்பரனை மல்திண்டோள்மாலை - பற்றென்றுபற்றி" என்றந்வயம். "பரமபரம்பரனை" என்று - ப்ராப்யத்வம், "மல்திண்டோள்மாலை" என்று - ப்ராபகத்வம்; இரண்டுமாகப்பற்றியென்றபடி. இதுக்கு ஸாவம் - இவன்ப்ரபத்தி இத்யாதிவாக்யத்வயம். குறையில்லாமை யெப்படியென்ன - இவர்கள் விரோதிகளை இத்யாதி. மல்லயுத்தத்தில் திண்ணிதானதோளையுடைய வ்யாமுக்தனையென்று ஸப்தார்த்தம். வழுதிவளநாடன் - திருவழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகரான ஆழ்வார். பாலகாண்டே சதுர்த்தே. "[illegible] । [illegible]" ப்ரமாணே - த்ருதமத்யவிளம்பிதை. உபக்ரமித்ததை நிகமிக்கிறதென்கிறார் - தாமோதரன் இத்யாதி. "ஓர்பற்று" என்றதுக்குஸாவம் - இனிஅவ்வருகு இத்யாதி.*

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible] ।

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible] ।

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

*சார்வாகவேஅடியில் தானுரைத்தபத்திதான்*
*சீரார்பலத்துடனே சேர்ந்ததனைச் - சோராமல்*
*கண்டுரைத்தமாறன் கழலிணையேநாடோறும்*
*கண்டுகக்கும்என்னுடையகண்.*

*ஆழ்வார் திருவடிகளேசரணம், எம்பெருமானார்திருவடிகளேசரணம், ஜீயர்திருவடிகளேசரணம்.*

# ஐந்தாந் திருவாய்மொழி - கண்ணன்கழலிணை - ப்ரவேசங்கள்.

ஆ.—(கண்ணன்கழலிணை.) - பக்தியோகத்தைச் சொல்லுகிறது.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், பக்தியோகத்தை நியமித்தபின்பு, பக்தியோகப்ரகாரம் எங்ஙனே என்றறியவேணுமென்றிருப்பார் இழக்கவொண்ணாதென்று பார்த்தருளி, அதுக்கு ஆலம்பநமான திருநாமத்தை யுபதேசித்து, "இத்தை அநுஸந்தித்து அதில்சொல்லுகிறபடியே மநோவாக்காயங்களை ஶ்ரிய:பதிபக்கலிலே ப்ரவணமாக்கி ப்ரீதிபூர்வகமாக புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு நிரந்தர ஸமாராதநம் பண்ண அதுக்குஉண்டான விக்நங்களெல்லாம் தானேபோக்கியருளி இவனையிட்டு ஆராதிப்பித்துக்கொள்ளும்" என்று கீழ் பலவிடத்திலும் ப்ரஸ்துதமான பக்தியோக ஸ்வரூபத்தை யருளிச்செய்து, எம்பெருமான் தம்மைத் திருநாட்டுக்குக் கொடுபோக முடுகுகிறமையை அநுஸந்தித்து, "பின்னை அவஸரமில்லை" என்று இத்தோடே பரோபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் ஹோமோபகரணமத்தையான பக்தியினுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதித்து, அதினுடைய ப்ரகார ப்ரதிபாதநார்த்தமாக, பஜநீயனான ஸர்வேஶ்வரனுடைய மந்த்ரலிங்கமான அஸாதாரண நாமத்வத்தையும், நாமார்த்தபூதத்குணநியோகத்தையும், ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருத்வத்தையும், ஆஶ்ரயணார்த்தமான அர்ணவஶாயித்வத்தையும், மோக்ஷப்ரதத்வத்தையும், ரக்ஷணார்த்தஸௌலப்யத்தையும், உபாயோபேயத்வத்தையும், அதிஶயித புருஷார்த்தஸாத்யத்வத்தையும், அநந்யப்ரயோஜந ஸுலபத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷணத்தில் அதிஶயிதமஹத்த்வத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்பூதனான ஸர்வேஶ்வரனை, உக்தார்த்தப்ரதிபாதகமான மந்த்ராநுஸந்தாநபூர்வகமாகப் புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு கரணத்ரயங்களாலும் அநுபவிக்க, ஸமஸ்தவிரோதிகளும் தானேபோம்: நிரதிஶயபுருஷார்த்தமும் கைப்படும்" என்று பலவ்யாப்தமான பக்தியோகப்ரகாரத்தை ஸங்க்ரஹமாம்படி ஸங்க்ரஹேண வுபதேசித்துத் தலைக்கட்டுகிறார்.

இ.—அஞ்சாந் திருவாய்மொழியில், பக்தியானது ஸௌஸாத்யத்தோடே பொருந்தினபடியை அருளிச்செய்தார்- கீழ்; பக்தியோகப்ரகாரம் எங்ஙனேயிருக்கும்படி என்று அறியவேணுமென்றிருப்பார் இழக்கவொண்ணாதே என்று பார்த்தருளி, பக்திக்கு ஆலம்பநமான திருமந்த்ரத்தை உபதேசித்து, இதினுடைய அர்த்தாநுஸந்தாநமே மோக்ஷஹேதுவென்று, "அதடியாக மநோவாக்காயங்களை ப்ரவணமாக்கி புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு ஆராதியுங்கோள்! ஶ்ரிய:பதியாகையாலே ஸ்வாராதன், நீங்கள் இதிலே இழிய விரோதிவர்க்கம் தானேபோம், இப்படி தன்னோடு பரிமாறுவார்க்கு ஸுலபனும், அதில் இழியுமிடத்து அதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, ருசியே அமையும்" என்று உபதேசிக்கையிலே ஒருப்பட்டு, ஈஶ்வரன் தம்மைப் பரமபதத்திலே கொடுபோகையிலே முடுகுகிறபடியாலும் உபதேசிக்கிற இவர்களுக்கு ப்ரதிபத்திவிஷயமாகவும் பாசுரம் சுருக்கக்கொண்டு உபதேசித்து, இத்தோடே பரோபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.

ஈடு.—ஸக்தியானது ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொன்னார்-கீழ்; அத்தனைக்ரமம் பொறுக்கமாட்டாதே ஈஶ்வரன் தம்மைக்கொடுபோகையிலே த்வரிக்கிறபடியைக்கண்டு; அதாகிறது - "மரணமானால்" என்றது அவனுக்கு நெடுநாளாய், அவ்வளவும்பொறுக்கமாட்டாதே அவன்கொடுபோகையிலே த்வரிக்க அத்தையநுஸந்தித்து; "நமக்குப்போக்குத்தவிராதபின்பு இனியிவர்கள் தங்களுக்கு ஸக்திமான்களுடைய பரிமாற்றமிருக்கும்படியும் அறியவேண்டுவதொன்றாகையாலே அத்தையுபதேசிப்போம்" என்றுபார்த்தார். இவர்தாம் எம்பெருமானாரோபாதியும் க்ருபையுடையவர் காணும். "இதுதான் ஒன்று இவர்களுக்குக் குறைகிடந்ததாகிறதென்?" என்று அது இருக்கும்படியை யுபதேசிப்போமென்றுபார்த்துப் பரோபதேஶத்திலே ஒருப்பட்டு, அவன் தம்மைப் பரமபதத்திலே கொடுபோவதாக த்வரிக்கிறபடியாலும் "கேட்கிற இவர்களுக்கு ப்ரதிபத்திக்கு விஷயமாகவேணும்" என்னுமத்தாலும் பாசுரப்பரப்பறும்படி சுருங்கக் கொண்டு; அந்தஸக்திக்கு ஆலம்பநமான திருநாமத்தைச்சொல்லி, இதிலிழிவார்க்கு அநுஸந்திக்கப்படும் மந்த்ரம் இன்னதென்றும்,அதில் அர்த்தாநுஸந்தாநமே மோக்ஷஸாதநமென்றும், அவ்வழியாலே ஸக்தியைப்பண்ணுங்கோளென்றும், கரணத்ரயத்தாலும் அவனை ஆஶ்ரயியுங்கோளென்றும், இப்படி ஆஶ்ரயிப்பார்க்கு அவன்தான் ஸுலபனென்றும், ஸ்ரிய:பதியாகையாலே ஸ்வாராத்யனென்றும், இவனையிடுவித்து ஆஶ்ரயிப்பித்து இதுதன்னையே அவன் திருவுள்ளத்திலேபடுத்திக் குவாலாக்குவாரும் அருகேயுண்டென்றும், 'ஆஶ்ரயிக்குமிடத்தில் அதிகாரிஸம்பத்திவேண்டா, ருசியுடையாரெல்லாரும் இதுக்கதிகாரிகள்'என்றும், புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு ஆஶ்ரயியுங்கோளென்றும், இதிலேயிழிய விரோதிகள் தன்னடையேபோமென்றும், இப்புடைகளிலேசொல்லி, நாம் இன்னமும் சிலநாள்இங்கேயிருக்கிறோமென்றிக்கேபோக்குஅணித்தானபின்புஎல்லாரும்இத்தைக் கொள்ளுங்கோளென்று உபதேஶித்து, அத்தோடே, தொடங்கின பரோபதேஶத்தைத் தலைக்கட்டுகிறார்.

---

*கண்ணன்கழலிணை ப்ரவேஶ, எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேர இத்திருவாய்மொழி ஸக்திமான்கள் பரிமாற்றத்தைச் சொல்லுகிறதென்கிறார் -* **ஸக்தி** *இத்யாதி.* **ஸக்தியானது** *என்றது - ஸாத்யஸக்தியானதென்றபடி. அத்தனைக்ரமம் பொறுக்கமாட்டாமையாவதேதென்ன -* **அதாகிறது** *இத்யாதி.* **ஸக்த்யுபதேஶ**ம்*மாத்ரம் போராதோ, ஸக்திமான்கள் பரிமாற்றமும் உபதேசிக்கவேணுமோவென்ன-***இவர்தாம்** *இத்யாதி."உபதேசிப்போமென்று பார்த்தார்" என்றத்தையும் கூட்டிக்கொண்டருளிச் செய்கிறார் -* **இதுதான்** *இத்யாதி. பரோபதேஶத்திலே ஒருப்பட்டால் சிறப்பாட்டாகவருளிச் செய்வானென்னென்ன -* **அவன் தம்மை** *இத்யாதி. "எண்ணும் திருநாமம்" என்றத்தைப்பற்ற -* **அந்தஸக்திக்கு** *இத்யாதி. "நாரணம்" என்றத்தைப்பற்ற -* **மந்த்ரம்** *என்றது. இரண்டாம்பாட்டையும் மூன்றாம்பாட்டையும் பற்ற -* **அதிலர்த்தாநுஸந்தாநம்** *இத்யாதி.* **அவ்வழியாலே ஸக்தியைப்பண்ணுங்கோள்** *என்றது - அர்த்தாத்ஸித்தமாதல்; "தாள்வாய்மலரிட்டு நாள்வாய்நாடீர்" என்றத்தைப்பற்றவாதல். "நாடீர்நாடோறும்" என்றத்தைப்பற்ற -* **கரணத்ரயத்தாலும்** *இத்யாதி. "மேயான்வேங்கடம்" என்றத்தைப்பற்ற -* **இப்படி** *இத்யாதி. "மாதவன்" என்றத்தைப்பற்ற -* **ஶ்ரிய:பதி** *இத்யாதி. இருகால் "மாதவனென்றென்று" என்றத்தைப்பற்ற -* **இவனை** *இத்யாதி. இவ்வாக்யம் - "ஶ்ரிய:பதியாகையாலே" இத்யாதியின் விவரணம். "பேராரோதுவாரார்" "மனமுடையீர்" என்றத்தைப்பற்ற -* **ஆஶ்ரயிக்குமிடத்தில்** *இத்யாதி. "சுனைநன்மலரிட்டு" என்றத்தைப்பற்ற -* **புஷ்பாத்யுபகரணங்களை** *இத்யாதி. "அமராவினைகள்" "வினைவல்லிருள்" என்றத்தைப்பற்ற -* **இதிலே** *இத்யாதி.*

## முதற் பாட்டு.

கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீர் !
எண்ணுந்திருநாமந் திண்ணநாரணமே.

ஆ —எம்பெருமான் திருவடிகளைப் பெறவேணுமென்றிருப்பார் திருமந்த்ரத்தையே சொல்லுங்கோள்; அவன் திருவடிகளைப்பெறுகை நிஸ்ஸிதமென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், கண்ணன்கழலிணை - க்ருஷ்ணன் திருவடிகளிலே சேருகைக்கு இச்சையுடைய நீங்கள் அநுஸந்திக்கும் திருநாமம் நாரணன் என்னுமிதுவே; இதுநிஸ்ஸிதம். மந்த்ரமென்னாதே, நாமமென்றது - நியமங்கள் வேண்டாவென்னுமிடத்தை ஸூசிக்கிறது. நாரணன் என்கிறபதத்தில் சதுர்த்தியையும் நமஸ்ஸையும்தவிர்ந்து இல்லாத மகாரத்தைக் கூட்டிக்கொள்ளுகையாலே, புறம்பில் மந்த்ரங்களில் தப்பானவை இம்மந்த்ரத்தின் ப்ரஹாவத்தாலே தப்பாகாது என்றுகருத்து.

ப.—முதற்பாட்டில், உபாஸநத்துக்கு ஆலம்பநமான மூலமந்த்ரப்ரதாநமான மந்த்ரத்தை யநுஸந்திக்க, அவன் திருவடிகளை ப்ராபிக்கலாமென்கிறார்.

கண்ணன் - ஸர்வஸுலபனான க்ருஷ்ணனுடைய, கழலிணை - ஆஸ்ரிதார்த்தமன திருவடிகளை, நண்ணும் - ப்ராபிக்கைக்கீடான, மனம் - நெஞ்சை, உடையீர் - உடையநீங்கள், எண்ணும் - அநுஸந்திக்கைக்கு யோக்யமான-, திருநாமம்-, திண்ணம்-நிஸ்ஸிதமாக, நாரணமே - (விஷ்ணுகாயத்ரியிலுபாத்தமான மர்யாதையாலே) மந்த்ர ப்ரதாநஸூத்மான நாராயணஸப்தமே. ப்ரணவநமஸ்ஸுக்களும் சதுர்த்தியும் அபேக்ஷிதமல்ல, திருநாமமான நாராயணஸப்தத்தை எண்ணுங்கோளென்றுமாம்.

இ.—முதற்பாட்டில், ஸக்தியுக்தராய்க்கொண்டு அவனை அநுஸந்திப்பார்க்கு ஆலம்பநமான திருமந்த்ரம் இன்னதென்கிறது.

[கண்ணன் கழலிணை] - விப்ரக்ருஷ்டமான பரமபதத்திலே யிருக்கையன்றியே இங்கேவந்து அவதரித்து, அதிலும் அதிகாரம் ஆராய்கைக்கு வஸிஷ்ட்டாதிகளும் வாசல்காப்பாருமின்றிக்கேயிருக்கிற ஸர்வஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளை. [கழலிணை] - தூதுபோதல் ஸாரத்யம் பண்ணுதல் செய்யும் திருவடிகளை. நண்ணுகை-கிட்டுகை, பிரிந்துபோந்து கிட்டினாரைப்போலே யோக்யவஸ்துவா யிருக்கிறபடி. [நண்ணும் மனமுடையீர்] - "நிதியுடையவர்கள்" என்னுமாபோலே, இச்சைதானே குவாலாயிருக்கிறபடி. இதுக்கு ஓர் அதிகாரம் ஸம்பாதிக்கவேண்டா, இச்சையே வேண்டுவது. விலக்ஷண புருஷார்த்தமாயிருக்க ருசிமாத்ரமே அமையுமாகிறது; இதுக்கு ஸத்ருஸமான அதிகாரம் ஸம்பாதிக்க வொண்ணாமையாலும், ப்ராப்தவிஷயமாகையாலே அதிகாராபேக்ஷையில்லாமையாலும். 'கழலிணை' என்று "தாமோதரன் தாள்கள் - சார்வே" என்றத்தை அநுபாஷிக்கிறார். [எண்ணும் திருநாமம்] - எப்போதும் அநுஸந்திக்கும் திருநாமம். மந்த்ரமென்னாதே, திருநாமமென்கிறது - அதிகாரி நியதியாதல் அங்கநியதியாதல் வேண்டாவென்கைக்காக. மாத்ருநாமம் க்ரஹணத்துக்கு அதிகாரமும் வேண்டாதே ஸரஸமுமாயிருப்பது. அதுதான் ஏதென்னில்?—[நாரணமே] - அவதாரணத்தாலே இவ்வளவே பூர்ணமென்கை. ப்ரணவத்தையும், நமஸ்ஸையும், சதுர்த்

தியையுமொழியப் பூர்ணமென்கை. "அங்மும் தப்பிற்று: ஸ்வரம்தப்பிற்று: நீ ப்ரஹ்ம ராக்ஷஸனாய்ப் பிற" என்னுமதில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று. [திண்ணம்] - பெறுகிற பேற்றின் கனத்துக்குப்போருமோ என்னவேண்டா; நிஸ்சிதம்; "ஸத்யம்ஸத்யம்."

ஈடு.—முதற்பாட்டு. ஹக்தியுக்தராய்க்கொண்டு அவனை யநுஸந்திப்பார்க்கு ஆலம்பநமான திருமந்த்ர மின்னதென்கிறார்.

[கண்ணன்கழலிணை நண்ணும்மனமுடையீர்] - கீழ்ச்சொன்னதுதன்னைத் திரிய ஒருக்கால் அநுஹாஷிக்கிறார், இவர்களுக்குக்கேட்கவேண்டுவதைச் சொல்லுகைக்குஉறுப்பாக. "சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்" என்றாரே: அதுதன்னை யிங்கே 'கண்ணன்கழலிணை' என்கிறார். க்ருஷ்ணன் திருவடிகளைக் கிட்டவேணுமென்றிருப்பீர். [கண்ணன்கழலிணை] - பரமபதத்திலேசென்று காணவேண்டும்படியிருக்கையன்றிக்கே, ஸர்வஸுலஹனானவன் திருவடிகளை. ஆஸ்ரிதர்க்காகத் தூதுபோதல் ஸாரத்யம் பண்ணுதல் செய்யும்திருவடிகள். [நண்ணும்] - பிரிந்துகூடினாரைப் போலே யிருக்கிறதுகாணும்; *"ஆஜகாம"(ஆஜகாம)போலே. [மனமுடையீர்] - "நிதியுடையீர்" என்னுமாபோலே, இதுதன்னையே குவாலாகநினைத்திருக்கிறார். இதுக்குஅதிகாரிஸம்பத்திதேட வேண்டா, ருசியுடையாரேல்லாரும் அதிகாரிகள். ஸ்வர்க்கபலமானதுக்கு அதிகாரிநியதியும் ப்ராயஸ்சித்தமும் வேண்டாநின்றது; அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷத்துக்கு அது வேண்டாதொழிகிறது: ப்ராப்யத்துக்கநுரூபமான அதிகாரம் இவனால் ஸம்பாதிக்கமுடியாமையாலே. [எண்ணும்திருநாமம்] - அநுஸந்திக்கப்படும் திருநாமமென்னுதல், ஹக்திமான்களைச்சொல்லுகையாலே அதுதான் "அது, அது" என்னும்படியாயிருக்கையாலே சொல்லுதல். எண்ணும்திருமந்த்ரமென்னாதே, நாமமென்கிறது - இதுக்குஒரதிகாரிநியதி, அங்கநியதிவேண்டா; ப்ரஜை தாய்பேரைச்சொல்லுமோபாதி யமையுமென்கைக்காக.

---

முதற்பாட்டு.—கண்ணன் இத்யாதி. "எண்ணும்திருநாமம்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - ஹக்தியுக்தராய் இத்யாதி.

"கண்ணன்கழலிணை" என்றது அநுவாதமென்கிறார் - கீழ்ச்சொன்னது இத்யாதி. எதுக்காக அநுஹாஷிக்கிறதென்ன - இவர்களுக்கு இத்யாதி. கீழேஹக்திக்கு ஹலமாகச் சொன்னதுவே பரிமாற்றத்துக்கும் விஷயமென்கிறார் - சார்வே இத்யாதி. "கழலிணை" என்னாதே, "கண்ணன்" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - பரமபதத்திலே இத்யாதி. அதாவது - கண்ணுக்கு விஷயமானவனென்று அர்த்தாந்தரமென்றபடி. "ஸுலபன்" என்றதை ஸ்த்திரீகரிக்கிறார் - ஆஸ்ரிதர்க்காக இத்யாதி. பெறுமென்னாதே, "நண்ணும்" என்றதுக்கு ஹாவம் - பிரிந்து இத்யாதி. ஜமாஉ என்னாதே, "ஆஜகாம" என்றாற்போலே யென்றபடி. அதாவது - ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனைவிட்டுப் பெருமாள்பக்கலிலே போனானென்னவமைந்திருக்க, வந்தானென்கிறதிறே, பிரிந்தவன் வந்து கூடினாற்போலே யிருக்கையாலேயென்றபடி. "உடையீர்" என்கிற மதுப்ஹாமாவிலேயென்கிறார் - நிதி இத்யாதி. அதாவது - ஆஸாலேஸமாத்ரத்தை ஆழ்வார் ஸ்வாஹிப்ராயத்தாலே குவாலாக நினைக்கிறாரென்றபடி. "மனமுடையீர்" என்றதுக்கு ஹாவம் - இதுக்கதிகாரி இத்யாதி. 'வேண்டாதொழிகிறது' "என்" என்று கூட்டுவது. பரிஹாரம் - ப்ராப்யத்துக்கு இத்யாதி. அதிகாரிநியதியாவது - ப்ரஹ்மக்ஷத்ரியாதிகள் வேணுமென்கிற நியதி. எண்ணுகை - அநுஸந்திக்கையும், மநநமும். "எண்ணும்திருநாமம்" என்றதுக்கு முந்தினயோஜனை - ஸௌலப்யத்திலே; இரண்டாம்யோஜனை - ரஸ்யதையிலே. அதுவதுவென்னும்படி யென்றது - "தேனும்பாலும்" இத்யாதிப்படியே ரஸ்யதையாலே வாய்புலற்றும்படி யிருக்கையாலே எப்போதும் அநுஸந்திக்கப்படுமென்றபடி. "தாய்" என்கிறதுக்கு ஸப்தமேதென்ன - அதுதான் இத்

அதுதான்எதுஎன்னில், -[நாரணம்]- இதுதான் ஸ்வாமிவாசகமாயிருக்கையாலே, 'அம்மே!' என்பாரைப்போலே யிருக்கிறதாய்த்து. இதுவும் இன்னமேதுவும் வேணுமேன்றால் [நாரணமே]- இவ்வளவேயமையும். கனத்தபேற்றுக்கு இவ்வளவுபோருமோ? என்னில், - [திண்ணம்] - நிஶ்சிதம் "ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே) என்னுமாபோலே, திண்ணமேன்கிறது. அவதாரணத்தாலே - ப்ரணவத்தையொழியவும் நமஸ்ஸையொழியவும் சதுர்த்தியையொழியவும் இவ்வளவேபூர்ணமேன்கை. நாரணமேன்று - இல்லாதமகாரத்தையும் கூட்டி உள்ளவற்றைக் குறைத்துச்சொல்லுகையாலே, அளத்திற்பட்டதெல்லாம் உப்பாமாபோலே இத்தோடேகூடினதெல்லாம் உத்தேஶ்யமேன்றும், குறைந்தாலும் "அங்கம்தப்பிற்று, ஸ்வரம்தப்பிற்று" என்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸாய்ப் போகவேண்டுமேவற்றிற்காட்டில் இதுக்கு உண்டானவாசி சோல்லுகிறதாய்த்து. (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

நாரணனெம்மான், பாரணங்காளன்
வாரணந்தொலைத்த, காரணன்தானே.

**ஆ.**—(நாரணன்.) - திருமந்த்ரத்திலே ப்ரதிபாத்யனான நாராயணனாகிறான் ஆரென்னில்; ஸர்வேஶ்வரனாய், ஸர்வலோகரக்ஷகனாய், ஸர்வ ஜகத்காரணனாய், வாரணம்தொலைத்தவன்தானே யென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், 'நாரணன் எம்மான்' என்று இப்பாட்டுக்கு, நாராயணனானவன், எனக்கு ஸ்வாமியுமாய், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாயகனுமாய், ஆஶ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனாய், ஸர்வகாரணமான க்ருஷ்ணன். 'எம்மான்' என்கிறது - ஸம்ஸாரவிபூதிக்கு உபலக்ஷணம்; 'பாரணங்காளன்' என்கிறது - நித்யவிபூதிக்கு உபலக்ஷணம்; 'வாரணம் தொலைத்த காரணன்' என்கிறது - திருவவதாரங்களுக்கு உபலக்ஷணம்.

ப —அநந்தரம், திருநாமத்துக்கு அர்த்தபூதமான குணவிபூதியோகத்தை யருளிச்செய்கிறார்.

நாரணன் - "ஏஷநாராயணஃ" என்கிறபடியே நாராயணஶப்தவாச்யன், எம்மான் - என்போல்வார்க்கு நாயகனாகையாலே லீலாவிபூதிக்கு நிர்வாஹகனாய், பாரணங்காளன் - பூமிப்பிராட்டிக்கு வல்லபனாகையாலே நித்யவிபூத்யுபலக்ஷித

---

யாதி. அவதாரணார்த்தம் - இவ்வளவே இத்யாதி. மந்த்ராந்தரங்கள் வேண்டாவென்றபடி. ஸம்வாதம் - ஸத்யம் இத்யாதி. "ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்ய முத்த்ருத்ய புஜமுச்யதே। வேதஶாஸ்த்ராத்பரம் நாஸ்தி நதைவம் கேஶவாத்பரம்" இதி மஹாபாரதே. அவதாரணத்துக்கு ஸாவாந்தரம் - அவதாரணத்தாலே இத்யாதி. ப்ரணவாதியைக்குறைத்து இல்லாத மகாரத்தைக்கூட்டுவானேன்னென்ன - நாரணம்என்று இத்யாதி. அளத்தில் - உப்பளத்தில். 'ராஜமாஹிஷீ' "உதாத்தஃ ஸ்வரதோஷம் வாக்யம் ராவணம்ராவணாநுஜஃ। ராஜமாஹிஷீமஹோத்பாதநயந்த்ராஸ்ஸலக்ஷணஃ" இதி யுத்தகாண்டே. (ஸ௯-க), (க)

னாய், வாரணம்தொலைத்த - (ப்ரதிபந்தக) குவலயாபீடநிராஸகனான, நாரணன்தானே - ஜகத்காரணபூதனாயுள்ள க்ருஷ்ணன்தானே.

இ —இரண்டாம்பாட்டிலும், மூன்றாம்பாட்டிலும் இதினுடைய அர்த்தத்தைச் சொல்லுகிறது. இது ப்ரஸ்துதமான விடங்களில் அர்த்தத்தைச் சொல்லக்கடவதாயிருப்பதொரு நியதியுண்டிறே இவர்க்கு.

[நாரணன்] - ஶப்தோபாதாநம். [எம்மான்] - எனக்கு ஸ்வாமியானவன். [பாரணங்காளன்] - பூமிக்கு அபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாயகனானவன். [வாரணம் இத்யாதி] - ஆஸ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனாய், ஸர்வகாரணமாயிருக்கிறான் க்ருஷ்ணன்தான். 'எம்மான்' என்கிறது - லீலாவிபூதியோகத்துக்கு உபலக்ஷணம்; 'பாரணங்காளன்' என்று - நித்யவிபூதியோகத்துக்கு உபலக்ஷணம்; 'வாரணம் தொலைத்த' என்றவிடம் - அவதாரத்துக்கு உபலக்ஷணம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இரண்டாம்பாட்டிலும் மூன்றாம்பாட்டிலும் இதினுடைய அர்த்தத்தைச் சொல்லுகிறது. ஏதேனுமாகத் திருமந்த்ரம் ப்ரஸ்துதமானவாறே, முன்னே அர்த்தத்தைச் சொல்லிப் பின்பு வாசகஶப்தத்தைச் சொல்லுதல், முன்னே இதுதன்னைச்சொல்லிப் பின்னை அர்த்தத்தைச்சொல்லுதல் செய்யக்கடவதா யிருப்பதொரு நிர்ப்பந்தமுண்டு இவர்க்கு. "எண்பெருக்கந்நலத்தொண்பொருளீறில - வண்புகழ்நாரணன்" என்னுதல், "யாவையும்யாவருந்தானாமமைவுடைநாரணன்" என்னுதல்; "நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன்" என்னுதல், "நாராயணன்நங்கள்பிரானவனே" என்ற "அவனேயகல்ஞாலம் படைத்திடந்தான்" என்னுதல் செய்வர்.

[நாரணன்] - மேல் அர்த்தோபந்யாஸம் பண்ண நினைத்து, ஶப்தோபாதாநம் பண்ணுகிறார். [எம்மான்] - எனக்கு ஸ்வாமியானவன். [பாரணங்காளன்] - பாரணங்குஉண்டு - ஸ்ரீபூமிப்பிராட்டி, அவளுக்குநிர்வாஹகன். பூமிக்கபிமாநிநியிறே. 'பாரணங்காளன்' - என்கையாலே - நித்யவிபூதியோகம் சொல்லுகிறது; 'எம்மான்' என்றது - லீலாவிபூதிக்கு உபலக்ஷணம்: ஆக, உபயவிபூதியுக்தனென்றபடி. குற்றஞ்செய்தது பொறுக்கைக்கோரு விபூதியும், பொறுப்பிக்கைக் கோருவிபூதியுமாய்த்து. "க்ருதாகஸ:" (க்ருதாகஸ:)-குற்றம் தலைநிரம்பிப் புறம்பு புகலில்லாதாரை

---

இரண்டாம்பாட்டு.—நாரணன் இத்யாதி. "ஶப்தம்சொன்னலமையாதோ, அர்த்தம் சொல்லுகிறதென்னென்ன - ஏதேனுமாக இத்யாதி. அப்படி இவரருளிச்செய்ததுண்டோ? முன்னே அர்த்தத்தைச்சொல்லி பின்னை மந்த்ரத்தைச் சொன்னதெங்கேயென்ன - எண்பெருக்கு இத்யாதி வாக்யத்வயம். முன்னே மந்த்ரத்தைச்சொல்லிப் பின்னை யர்த்தத்தைச்சொன்னதெங்கேயென்ன-நாரணன் இத்யாதி வாக்யத்வயம். "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்," "நாராயணபரோஜ்யோதிராத்மா நாராயண: பர:" என்னக் கடவதிறே. அநுவதிக்கிறதுக்குபாவம் - மேலர்த்தோபந்யாஸம் இத்யாதி. பாரணங்கு-பாரானவணங்கு. அணங்கு - தெய்வப்பெண். பார்தானோ இவளென்ன - பூமிக்கு இத்யாதி. "எம்மான் பாரணங்காளன்" என்கிறவிது நாராயணசப்தத்துக்கு அர்த்தமானபடி யெங்ஙனேயென்ன - பாரணங்காளன் இத்யாதி. ஸ்ரீபூமிப்பிராட்டியைச்சொன்னது நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணமாய், நித்யவிபூதியைச் சொல்லுகிறது. "எம்மான் பாரணங்காளன்" என்ற பதச்சேர்த்திக்குபாவம்- குற்றம்செய்தது இத்யாதி. பொறுக்கைக் கோருவிபூதியும் என்றது - பொறுக்கைக்கு விஷயம் ஒருவிபூதியுமென்றபடி. பொறுப்பிக்கைக்கடியான இவள்படியை ஈஶ்வரனிலும் பிராட்டியிலும் அதிகமென்கிறார் - க்ருதாகஸ: இத்யாதி. "'க்ஷாம்யதி' இத்யாதிப்படியே" என்றுகூட்டுவது.

ரக்ஷிக்கும் ஈஶ்வரன் ; குற்றம் நிரம்பி அநுதாபமில்லாதாரைப் பொறுப்பிக்கும் பிராட்டி; ''தலையறுக்கச்சொல்லுகிறதேன்? கொடுக்கச்சொல்லுகிறதேன்? நம்முடைய நிக்ரஹமாகில் அதுக்குமூலம் நிக்ரஹம்மலிக்கும்படிபண்ணிப் பின்பு அநுக்ரஹத்தைப் பண்ணவேணுமோ?'' என்றிருக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டி. [வாரணம்தொலைத்த] - தன்னைப் பெறவேணுமென்றிருப்பாருடைய ஆஶ்ரயணவிரோதிகள், குவலயாபீடம் பட்டது படும். விரோதிநிரஸநம்இதுக்கு உறுப்போவென்னில்,- முதலிலே தொடங்கிஅதில் சொல்லிக்கொண்டு போருகிறது ரக்ஷணமிறே; அதுக்குக் களைபிடுங்கி நோக்கவேணுமே. ''அவரக்ஷணே'' (அவரக்ஷணே) என்னக்கடவதிறே. [காரணன்தானே] - இவற்றினுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாக வுடையனாயிருக்கையும் அதுக்கு அர்த்தமிறே. (௨)

---

## மூன்றாம் பாட்டு.

**தானேயுலகேல்லாந், தானேபடைத்திடந்து**
**தானேயுண்டுமிழ்ந்து, தானேயாள்வானே.**

*ஆ.—(தானே,) - நிவிலஜகந்நியமந ஸ்ருஷ்டி ரக்ஷணாதிகளைப் பண்ணுவானும், அந்தவாரணம் தொலைத்தருளின அவன்தானேயென்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், [தானே உலகெல்லாம்] - எல்லா லோகங்களினுடைய ஸ்ருஷ்ட்யாதிகளும் தானேபண்ணி தானே அவற்றை ஆள்கையாலே அந்த லோகங்களாகிறான் தானே. ஆக, இரண்டாம்பாட்டிலும் மூன்றாம்பாட்டிலும் திருமந்த்ரார்த்தத்தைச் சொல்லிற்று.*

*ப.—அநந்தரம், ஸ்ருஷ்ட்யாதி கர்த்த்ருத்வரூபமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்.*

*தானே - (நாராயணஶப்த வாச்யனான) தானே, உலகெல்லாம் - ''ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்'' என்கிறபடியே ஸமாநாதிகரிக்கலாம்படி ஸர்வலோகத்துக்கும் ஏகப்ரகாரியாய், (ஸாமாநாதிகரண்ய நிவந்தநமான ஸ்ருஷ்ட்யாதிகளில்வந்தால்), தானே - (ஸஹகாரிநிரபேக்ஷமாகத்)தானே, படைத்து - ஸ்ருஷ்டித்து, இடந்து - ப்ரளயத்திலேயிடந்தெடுத்து, (ப்ரளயத்துக்குமுற்கோலி), தானே - அபேக்ஷாநிரபேக்ஷமாக, உண்டு -*

---

*' தலையறுக்கச் சொல்லுகிறதேன்? கொடுக்கச்சொல்லுகிறதேன்' என்றவிது - காகவிஷயத்தில் பிராட்டியருளிச் செய்தத்தைப்பற்ற. "வாரணம்தொலைத்த" என்றதுக்கு ஹாவம் - தன்னைப்பெற வேணும் இத்யாதி. இதுக்கு உறுப்போ என்றது - இந்தத் திருமந்த்ரத்துக்கர்த்தமோவென்றபடி. முதலிலே - * அகாரத்திலே. அதில் - திருமந்த்ரத்தில். அதுக்கு - ரக்ஷணத்துக்கு. ' நோக்கவேணுமே ' ஆகையாலே இதுவும் திருமந்த்ரார்த்தமென்றபடி. ரக்ஷணமானால் விரோதிநிரஸநம் சொல்லவேணுமோவென்ன - அதுக்கு இத்யாதி. அகாரத்தால் ரக்ஷணம் சொல்லும்படியென்னென்ன - அவரக்ஷணே இத்யாதி. வஹ்நிர்வீஹ்யர்த்தமான அந்தர்யாமிதயா ஸ்வரூபஸ்த்தித்யாதி காரணத்வத்தை '' காரணன்தானே '' என்று சொல்லுகிறது. அதுக்கு - அம்மந்த்ரத்துக்கு. இப்பாட்டுக்கும் மேலிற்பாட்டுக்கும், '' நாள்வாய்நாடீர்'' என்று க்ரியை.* (௨)

தன்வயிற்றிலேவைத்துநோக்கி, உமிழ்ந்து-அநந்தரத்திலேஉமிழ்ந்து, (மோக்ஷயந்தர ப்ரஸங்கமில்லாதபடி), தானே - (ஸர்வாயிகனுன) தானே, ஆள்வான் - நிர்வஹிக்கும்.

இ.—மூன்றாம்பாட்டில், ஸ்வாமித்வப்ரயுக்தமான ஸர்வவிதரக்ஷணங்கள் பண்ணும்படி சொல்லுகிறது.

[தானே உலகெல்லாம்] - "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்கிறபடியே நான் என்கிற சொல்லுக்குள்ளே ஸர்வமும். "தஜ்ஜலாநிதி" என்று ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் சொன்னுற்போலே, இங்கு ஸாமாநாதிகரண்யத்துக்கு ஹேதுசொல்லுகிறதுமேல்:— [தானே படைத்து]-"தத்... ஸ்ருஷ்டி" என்கிறபடியே ஸூக்ஷ்மசிதசித்சரீரனுன தானே ஸர்வலோகங்களையும் உண்டாக்கி, அசித்விசேஷிதமான தசையாகையாலே, அபேக்ஷிப்பாருமின்றிக்கேயிருக்க உபமாநமநாவர்ய்த்,தானேயிறே ஸ்ருஷ்டித்தான். [தானே இடந்து] - ப்ரளயங்கொண்டிருக்கையான பூமி. "என்னை உத்தரிப்பிக்கவேணும்" என்னவன்றிறே ரக்ஷோத்தாரணம் பண்ணிற்று. [தானே உண்டு] - ப்ரளயம் வரப்புகாநின்றதுஎன்று அறிவாரில்லையே. [உமிழ்ந்து]-"புறப்படவிடவேணும்" என்று அர்த்தியாதிருக்க, தானே உமிழ்ந்தபடி. ஸர்வப்ரகாரங்களாலும் ரக்ஷிக்கையாலே - தானே உலகெல்லாம்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஸ்வாமித்வ ப்ரயுக்தமான ஸர்வவிதரக்ஷணங்கள் பண்ணும்படி சொல்லுகிறது.

[தானேயுலகெல்லாம்] - "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம) "தத்த்வமஸி" (தத்த்வமஸி) என்னக்கடவதிறே. தானேபடைத்திடந்து தானேயுண்டுமிழ்ந்து தானேயாள்வானுகையாலே, தானேயுலகெல்லாமேன்கிறது;"தஜ்ஜலாந்"(தஜ்ஜலாந்)இதிவத். இங்குச்சோல்லுகிற தாதாத்ம்யம் ஸ்வரூபேண ஐக்யம்சோல்லுகிறதல்ல; சரீராத்மபாவத்தாலே சோல்லுகிறது. காரணத்வம்சோல்லில் விகாராஸ்பதமாமேன்று சங்கித்து,சரீராத்மபாவத்தாலேசோல்லுகிறது.சரீரபூதமானபால்யயௌவநாதிகள்ஆத்மாவுக்

---

மூன்றாம்பாட்டு.—தானே இத்யாதி. "தானேபடைத்திடந்து" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸ்வாமித்வ இத்யாதி. ஸ்வாமித்வம்-உபயவிபூதிநாயகத்வம்.

உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - ஸர்வம்கலு இத்யாதி. ஸர்வம் என்று ஜகத்துக்கும் உபலக்ஷணம். "தானேயுலகெல்லாம்" என்றதுக்கு ஹேதுவைக்காட்டுகிறூர் - தானேபடைத்து இத்யாதி. "தானேபடைத்து" இத்யாதிக்குப்ரமாணம் 'தஜ்ஜலாநிதிவத்' என்று. "அநப்ராணநே" என்று ரக்ஷகத்வம்சொல்லுகிறது. "படைத்து" என்றால்-ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே, தல்லத்வம் ஸித்தம். தஜ்ஜத்வதல்லத்வ ததநத்வங்களாலே "இதம் ஸர்வம் ப்ரஹ்மவ" என்றங்வயம். "தஜ்ஜத்வ தல்லத்வங்களில், தச்சப்தம் - ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மபரம், ததநத்வத்தில், தச்சப்தம் - கேவல ஸ்வரூபமாத்ரபரம்; ஸ்வேநரூபேணவின்று ஸ்த்திதிப்பிக்க வேண்டுகையாலே" என்றிறே ஶ்ருதப்ரகாசிகையிலே யருளிச்செய்தது. "தஜ்ஜத்வதல்லத்வதநத்வ நிதேசாதிதம்ஸர்வம்ப்ரஹ்மவ" என்றாற்போலேயிருக்கிறது இப்பாட்டு. "தானேயுலகெல்லாம்" என்று ஸ்வரூபைக்யம் சொல்லுகிறதோவென்ன - இங்குச்சோல்லுகிற இத்யாதி. சரீராத்மபாவத்தாலே சொல்லுகிறதென்? "படைத்தான்" என்கையாலே - இஸ்ஸாமாநாதிகரண்யம் கார்யகாரணபாவநிபந்தநமானுலோவென்ன - காரணத்வம் இத்யாதி. அதாவது-கார்யகதவிகாராதிதோஷங்கள் காரணபூதனிடத்திலும் ப்ரஸங்கிக்குமென்று சங்கித்தென்றபடி. சரீராத்மபாவேனைக்யம் சொன்னுல் விகாராதிதோஷங்கள் வாராதோவென்ன - சரீரகதமான இத்யாதி.

குத்தட்டாதாப்போலே, இவற்றைப்பற்றிவரும்விகாராதிகள் அவனுக்குவாராதென்றுதோஷா ஸ்பர்ஶம் சொல்லுகைக்காகச் சொல்லுகிறது. [தானேபடைத்து] - "தமஃ....ஏகீபவதி" (தமஃ... ஏகீபவதி) என்கிறபடியே ஸூக்ஷ்ம சிதசிச்சரீரியான தானே ஸகலலோகங்களையு முண்டாக்கி. * அசிதவிசேஷிதமான தஶையாகையாலே, அபேக்ஷிப்பாருமின்றிக்கே தயமாநமநாவாய்த் தானேயிறே ஸ்ருஷ்டித்தான். [தானே - இடந்து] - ப்ரளயங்கதையான பூமி "என்னையெடுக்கவேணும்" என்றுஅபேக்ஷிக்கவன்றிறே நஷ்டோத்தரணம்பண்ணிற்று. [தானேயுண்டு] - ப்ரளயம்வரப்புகாநின்றதென் றறிவாரில்லையே. [உமிழ்ந்து] - உள்ளேகிடந்து நோவுபடமேத்தனையல்லது, "எங்களை வெளிநாடுகாணப்புறப்படவிடவேணும்" என்றறியாதிருக்க, தானேயுமிழ்ந்து. இப்படி ஸர்வவிதரக்ஷணங்களையும் பண்ணுகையாலே [தானேயுலகெல்லாம்] - "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம").

---

## நான்காம் பாட்டு.

---

ஆள்வானாழிநீர்க், கோள்வாயரவணையான்
தாள்வாய்மலரிட்டு, நாள்வாய்நாடீரே.

**ஆ.**—(ஆள்வான்.)-ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற எம்பெருமான் திருவடிமலர்களிலே திருமந்த்ரத்தைக்கொண்டு நாடோறும் மலரிட்டு அவன்திருவடிகளைப் பெறுங்கோளென்கிறார்.

**ஓ.**—நாலாம்பாட்டில், [ஆள்வான் ஆழிநீர்] - "ஆபோ நாராஃ" என்கிற வழியாலே திருமந்த்ரார்த்தத்தை நிர்வசியாநின்றுகொண்டு எம்பெருமான் திருவடிகளிலே இத்திருமந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டு நல்ல செவ்விப்பூவைப் பணிமாறி நாள்தோறும் ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். [கோள்வாய்] - ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவாயிருந்துள்ள வாய்.

**ப.**—அநந்தரம், "ஆபோ நாராஃ" (ஆபோநாராஃ) என்கிற நிர்வசநமர்யாதையாலே அர்ணவஶாயியான நாராயணன் திருவடிகளிலே புஷ்பாதிகளை ஸமர்ப்பித்து நித்யமாக ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

ஆழிநீர் - ஏகார்ணவமான காரணஜலத்திலே, கோள்வாய் - பெருமிடுக்கையும் ஸ்துதிரூபமான ரூபத்தையுமுடையனான, அரவணையான் - திருவரவணையையுடையனுமாய்க்கொண்டு, ஆள்வான் - ஜகந்நிர்வாஹகனான ஶேஷியினுடைய, தாள்வாய் -

---

'விகாராதிகளவனுக்குவாராது' என்றவிடத்திலே, "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதி ஶ்ருதியும், "ஸர்வ பூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் । கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம்" என்கிற ஸ்ம்ருதியும் அநுஸந்தேயம். ஶ்ருதியிலே, "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்றது - ஆத்மநஃ என்றபடி. ஸூக்ஷ்ம சிதசிச்சரீரனாயிருந்தமைக்கு ப்ரமாணம் - தமஃ இத்யாதி. "தானே" என்கிற பதங்களிலவதாரண சதுஷ்டயத்துக்கும் அடைவேயர்த்தம் - அசிதவிசேஷிதமான இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே. (ரு)

திருவடிகளிடத்தே, மலரிட்டு - புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நாள்வாய்நாடீர் - நாள்தோறும் ஸாபேக்ஷராய் ஆஶ்ரயியுங்கோள். 'கோள்வாய்' என்று - "வஜ்ரதம்ஷ்ட்ராநநம்" என்கிறபடியே மிடுக்குக்கிடமான வாய்என்றுமாம்; அன்றியே, 'கோள்' என்கிறது - ஒளியாய், * ஸஹஸ்ரமணிவ்ராதமயூகத்தாலே உஜ்ஜ்வலமுகமென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், "ஆபோநாரா:" என்கிற வழியாலே திருமந்த்ரத்தை நிர்வசித்து திருமந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டு புஷ்பாஞ்ஜலிபண்ணி ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[ஆழிநீர் - ஆள்வான்] - காரணஜலத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க் கண்வளர்ந்தருளி, அத்தசையிலே சேதநஸமஷ்டியை ரக்ஷித்தவன். [கோள்வாய்] - மிடுக்குடைய வாய் என்னுதல்; ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவான வாய் என்னுதல். [அரவணையான் தாள் வாய்] - ஆஶ்ரிதஸௌலப்யனுடைய ஸ்வாராத்யனுடைய திருவடிகளிலே செவ்விப்பூவைப் பணிமாறி நாள்தோறும் ஆஶ்ரயியுங்கோள்; இப்படிசெய்ய, ஸ்வரூபாநுரூபமான பேறு நிஶ்சிதம் என்கிறார்.

ஈடு.—நாலாம்பாட்டு. "ஆபோநாரா இதி ப்ரோக்தா:" (ஆபோநாரா இதிப்ரோக்தா:) என்றும் ஒரு நிர்வசநப்ரகாரமுண்டிறே இதுக்கு; அவ்வழியாலே திருமந்த்ரத்தை நிர்வசித்து திருமந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டு புஷ்பாஞ்ஜலியைப்பண்ணி ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

[ஆள்வான்] - இவற்றையடைய அடிமைகொள்ளுமவன். [ஆழிநீர்ஆள்வான்] - அடிமைகொள்ளும் ப்ரகாரமிருக்கிறபடி. காரணஜலத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க்கண் வளர்ந்தருளி, அத்தசையிலே சேதநஸமஷ்டியை ரக்ஷித்தவன். [கோள்வாய்] - மிடுக்கை யுடையவாயென்னுதல், ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவான வாயென்னுதல். [அரவணையான் தாள்வாய்மலரிட்டு] - ஸ்வாராத்யனென்றதாய்த்து. அநந்தஶாயி திருவடிகளிலே செவ்விப் பூவைப் பணிமாறி. [நாள்வாய் நாடீரே] - நாள்தோறும் ஆஶ்ரயியுங்கோள்; அத்திருவநந்தாழ்வானுடைய பேறு உங்களுக்குப் பெறலாம். (௪)

---

நாலாம்பாட்டு.—ஆள்வான் இத்யாதி. இதுவும் திருமந்த்ரார்த்தமென்றருளிச்செய்யா நின்றுகொண்டு, "தாள்வாய்மலரிட்டு நாள்வாய்நாடீர்" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை - ஆப: இத்யாதி. ப்ரதமமேஶ்லோகார்த்தே, "ஆபோநாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: । அயநம் தஸ்ய தா: பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:" என்கிற நிர்வசநார்த்தம்இப்பாட்டு.

"ஆழியநீரிலே கோள்வாயரவணையானைக்கொண்டு - ஆள்வான்" என்றபடி. அப்ப்ரகாரமேதென்ன - காரணஜலத்திலே இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, "கோள்" என்று-க்ரஸிக்கையாய், 'ம்ருத்யுவான' என்றபடி. "ஆபோநாரா:" என்கிற ப்ரக்ரியையாலே திருமந்த்ரார்த்தம் சொல்லுகிறாராகில், "ஆழிநீர் - ஆள்வான்" என்னவமைந்திருக்க "அரவணையான்" என்றதுக்கு பாவமேதென்ன - ஸ்வாராதன் இத்யாதி. "அரவணையான்" என்றதுக்கு - கீழே "ஸ்வாராதன்" என்றருளிச்செய்து, இங்கே பாவாந்தரம்-அத்திருவநந்தாழ்வானுடைய இத்யாதி.

## ஐந்தாம் பாட்டு.

நாடீர்நாள்தோறும், வாடாமலர்கொண்டு
பாடீர்அவன்நாமம், வீடேபெறலாமே.

ஆ.—(நாடீர்.)-திருமந்த்ரத்தைச்சொல்லி அவன் திருவடிமலர்களிலே வாடாமலர்கொண்டு நாடோறும் பணிமாற, அவன் திருவடிமலர்களைப் பெறலாம்; இது நிஸ்சிதமென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், [நாடீர் நாள்தோறும்] - நாள்தோறும் செவ்விப் பூவைக்கொண்டு அவனை ஆஸ்ரயித்து அவன்திருநாமத்தை ப்ரீதிபூர்வகமாகச் சொல்ல அவன் திருவடிகளைப் பெறுகை நிஸ்சிதம் என்கிறார்.

ப—அநந்தரம், மோக்ஷப்ரதனான நாராயணன் திருநாமங்களைப் பாடுங்கோள், பரமபுருஷார்த்தத்தைப் பெறலாமென்கிறார்.

நாள்தோறும்-, வாடாமலர்கொண்டு - செவ்விப்பூக்களைக்கொண்டு, நாடீர் - (உங்களர்த்தித்வம் தோன்றும்படி) ஆஸ்ரயியுங்கோள்; (அவ்வளவில் பர்யவஸியாதே ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு, அவன்நாமம் - அந்நாராயணனுடைய திருநாமத்தை, பாடீர் - பாடுங்கோள்; (அந்த ஆராதநமும் ஸாமகாநமுமே), வீடே - நிரதிஸயபுருஷார்த்தலக்ஷணமோக்ஷமாக, பெறலாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், இப்படி செவ்விமாறாத புஷ்பத்தைக்கொண்டு அவன் திருநாமத்தை ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகச் சொல்லுங்கோள்; அப்படி செய்யவே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப்பெறலாம் என்கிறார்.

[நாடீரென்று தொடங்கி] - ப்ரீதிபூர்வகமான வ்ருத்திக்குக் காலநியதியில்லை. உங்கள் அபிநிவேஸத்துக்கு அநுரூபமான விலக்ஷண புஷ்பத்தைக்கொண்டு அவன் திருநாமத்தை ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகச் சொல்லுங்கோள். இப்படிசெய்யவே, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப்பெறலாம். அங்கு, சூட்டுநன்மாலைகள் கொண்டு ஆராயிக்கையும், "ஹாவுஹாவுஹாவு" என்று பாட்டுமாயிறேயிருப்பது.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. இப்படி செவ்விமாறாத புஷ்பத்தைக்கொண்டு அவன் திருநாமத்தை ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகச் சோல்லுங்கோள்; அப்படிச்செய்யவே, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பேறலாமேன்கிறார்.

[நாடீர் நாள்தோறும்]-பசித்தபோதேல்லாம் உண்ணுமாபோலே. [வாடாமலர் கோண்டு]-உங்களுடைய அபிநிவேஸாநுரூபமான புஷ்பங்களைக்கோண்டு. [பாடீர்அவன் நாமம்] - "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று முக்தர் ஸாம

அஞ்சாம்பாட்டு.—நாடீர் இத்யாதி· * வாடாமலர்தொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - இப்படி இத்யாதி. 'வ்ருத்தியைப்பெறலாம்' என்கைபாலே - "வீடு" என்றதும் "ஸோஸ்நுதே" என்றதும் வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதம்.

"நாடோறும் - நாடீர்" என்றது - அர்லஜையாலேயன்று; காலநையத்யாஹாவத்தாலேயென்கிறார் - பசித்தபோதேல்லாம் இத்யாதி. காலநியதியில்லையென்கிறவர் "வாடாமலர்" என்பரனென்? என்ன - உங்களுடைய இத்யாதி. சொல்லீரென்னாதே, "பாடீர்" என்றதுக்குபாவம்:

மாநம்பண்ணுமாபோலே, அவனுடைய திருநாமங்களை ப்ரீதிபூர்வகமாகப் பாடுங்கோள். நாடீரென்கையாலே - மாநஸவ்யாபாரத்தைச் சொல்லிற்று; வாடாமலர்கொண்டென்கை யாலே - காயிகத்தைச் சொல்லிற்று. பாடீரென்கையாலே - வாசிகத்தைச்சொல்லிற்று. [வீடேபெறலாமே] - ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப்பண்ணவே, "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணுபிநிஷ்பத்யதே) என்கிறத்தைப் பெறலாம். இனி யத்தைச் செய்யப் பெரியத்தைப் பெறலாம். (௫)

## ஆறும் பாட்டு.

மேயான்வேங்கடம், காயாமலர்வண்ணன்
பேயார் முலையுண்ட, வாயான்மாதவனே.

ஆ.—(மேயான்.) - * அதஸீஸுமநஸமாமலச்ஶவியாய் ஶ்ரியஃபதியாயிருந்த பேயார்முலையுண்ட வாயான். நம்முடைய சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமாயிருக்கி விறே அவன் திருவடிகளில் அடிமைசெய்பலாவதென்னில்; அவனன்றோ ஸகலமநுஜ நயநவிஷயதாங்கதனாய் ஸர்வஸுலபனாய்க்கொண்டு திருமலையிலே புகுந்துநின்றருளு கிறானென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், [மேயான் வேங்கடம்] — ஆஶ்ரயணீயனைச் சொல்லு கிற எம்பெருமானைக் கண்டாலன்றோ ஆஶ்ரயிக்கலாவதென்னில்; ஆஶ்ரிதர்க்காக க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணியருளி ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனும் ஶ்ரமஹர மான திருநிறத்தையுமுடையனான ஶ்ரிய꞉பதியானவன், ஆஶ்ரயிப்பார்க்கு எளிதாகத் திருமலையிலேவந்து நின்றருளினான்: அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாகவும் அநுபவார்த்தமாகவும் திரு மலையிலேவந்து பிராட்டியோடே ஸந்நிஹிதனானனென்கிறார்.

(ஆஶ்ரிதர்க்கநுபவ்யமாய்), காயாமலர் - காயாம்பூப்போலே ஶ்யாமளமான, வண்ணன் - வடிவையுடையனாய், (அநுபவப்ரதிபந்தகமான ப்ராக்ருதியை), பேயார் - பூதனையினுடைய, முலை - (விஷபூர்ணமான) முலையை, உண்ட - பசையறச்சுவைத் தாற்போலே பசைபறக்கும், வாயான் - வாங்மாதுர்யத்தையுடையனானவன், மாதவன்- "ஸாநிவஸதி ஸ்ரீணீதீரேவாபோஸஹஸ்ராக்ஷதே") என்கிறபடியே, * அலர்மேல் மங்கையோடே, வேங்கடம்மேயான் - திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகின்றான்.

இ.—ஆறும்பாட்டில், ஆஶ்ரயணீயனைக்கண்டு ஆஶ்ரயிக்கவேண்டாவோ? என்ன; பிற்பாடரான நமக்காகத் திருமலையிலே நின்றருளினான், அவனை ஆஶ்ரயியுங் கோள் என்கிறார்.

---

ஏதத்ஸாமகாயந் இத்யாதி. ப்ரவேஶத்திலே "கரணத்ரயத்தாலும்ஆஶ்ரயியுங்கோள்" என்றது இப்பாட்டைக் கடாக்ஷித்தென்னுமிடம் தோற்ற அருளிச்செய்கிறார் - நாடீரென்கையாலே இத் யாதி. ஆனால் வீடுபெறுகைக்கு கரணத்ரய ஸமாஶ்ரயணம் ஸாதநமோவென்ன - ஸ்வரூபாநுரூப மான இத்யாதி. கரணத்ரயத்தினுடைய ஸ்வவஶதைகாந்த்யம் - ஶேஷபூதனை இவனுக்கு ஸ்வரூ பாநுரூபமான வ்ருத்தியிறே. கீழ்வாக்யவிவரணம் - இனியத்தை இத்யாதி. பெரியத்தை - பரம புருஷார்த்தமான வீட்டை. (இ)

*[மேயான் இத்யாதி] - உங்களை ஆஸ்ரயிப்பித்துக்கொள்ளுகைக்குத் திருமலையிலே பொருந்திவர்த்திக்கிறவன், ஆஸ்ரயணத்திலே இழிந்தாரைக் கொண்டு முழுகும்வடிவை யுடையவன். விரோதிவர்க்கம் செய்யுமது என்னென்னில்; அது பூதனை பட்டது படுமித்தனை. நம் பூர்வவ்ருத்தம் பாராதே ரக்ஷிக்கைக்கு அருகேயிருப்பாருமுண்டு.*

ஈடு.—ஆறும்பாட்டு. நீர்சொன்னபடியே செய்யலாவது ஆஸ்ரயணீயனைக் கண்டாலன்றோ? கண்டாஸ்ரயிக்க வேண்டாவோவென்ன; பிற்பாடரான நமக்காகத் திருமலையிலே நின்றருளினான், அவனை ஆஸ்ரயியுங்கோளேன்கிறார்.

[மேயான்வேங்கடம்] - (வேங்கடம் - மேயான்) உங்களை யாஸ்ரயிப்பித்துக் கோள்ளுகைக்காகத் திருமலையிலேபோருந்தி வர்த்திக்கிறவன். கண்டவாறே தான் பஜிக்கலாயிருக்குமோவென்னில்?—[காயாமலர்வண்ணன்] - துரும்புமெழுந்தாடி அடிமையிலே மீண்டல்லது நிற்கவோண்ணாதபடியான வடிவுபடைத்தவன். விரோதிவர்க்கம் பின்னைச் செய்வதேன்னேன்னில் [பேயார்முலையுண்டவாயான்] - பூதனை பட்டதுபடுமேத்தனை. [மாதவனே]-நம் பூர்வவ்ருத்தம்பாராதே விஷயீகரிப்பிக்கைக்கு அருகேயிருப்பாருமுண்டு.

---

## ஏழாம் பாட்டு.

---

மாதவனென்றென்று, ஓதவல்லீரேல்
தீதொன்றும்அடையா, ஏதஞ்சாராவே.

*ஆ.—(மாதவன்.)-இந்தஹ்க்தியோழத்தில் அநதிகாரிகள் மாதவனென்னும் திருநாமத்தைச் சொல்லுங்கோள்: சொல்லுமிடத்தில் பரப்ரேரிதராய்ச் சொல்லவமையும்: சொல்ல, ஹ்ருவத்கைங்கர்யவிரோதியாய் ப்ராப்தாப்ராரப்தமான ஸர்வபாபங்களும் நஸிக்குமென்கிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், [மாதவனென்றென்று] - ஹ்க்தியோஹம் பூர்ணமாக அநுஷ்டிக்கவும் இனிமையோடு திருநாமம் சொல்லவும் மாட்டிகோளாகில், பெற்றதே உடலாகக்கொண்டு அநுக்ரஹம்பண்ணும் ஸ்வஹாவையான பெரியபிராட்டியாருக்கு வல்லஹனவனுடைய மாதவனென்னும் திருநாமத்தைப் பரப்ரேரிதராய்க்கொண்டாகிலும் நிரந்தரமாக உச்சரிக்கவல்லிகோளாகில், பண்டுபண்ணின பாபங்கள் நஸிக்கும்; மேல் செய்யும் பாபங்கள் உங்களோடு ஸம்பந்யியாவென்கிறார்.*

---

*ஆறும்பாட்டு.*—மேயான் *இத்யாதி. "மேயான் வேங்கடம்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை* - நீர்சொன்னபடி *இத்யாதி.*

*திருமலையிலே வர்த்திக்கிறதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்* - உங்களை *இத்யாதி. ஆனாலும் அவன் ஸ்வதந்த்ரனன்றோ? பூர்வவ்ருத்தத்தைப்பார்த்து "க்ஷிபாமி" என்றாலோவென்ன-* நம்பூர்வவ்ருத்தம் *இத்யாதி. 'காயாமலர்' என்று தொடங்கி, 'வாயானனமாதவன் - வேங்கடம் - மேயான்' ஆகையாலே, 'நாடீர்' என்று கீழிற்பட்டோடே யந்வயம்.* (௪)

ப.—அநந்தரம், இப்படி ஸர்வப்ரகாரோபாஸ்தி பண்ணமாட்டாதாருண்டாகில், உங்கள் ஸகலக்லேசமும் தீரும்படி உபாயோபேயமான அந்தப்புரத்தில் வார்த்தையைச் சொல்லுங்கோளென்கிறார்.

மாதவன் - (புருஷகாரயோகமென்ன, கைங்கர்யவர்த்தகத்வமென்ன, இரண்டாகாரத்தையுமுடைய லக்ஷ்மீவிசிஷ்டனானவனுடைய) மாதவனென்கிற திருநாமத்தை, என்றென்று - (பூர்வகண்டமர்யாதையாலே உபாயத்வேந ஆச்ரயணீயனென்றும், உத்தரகண்டமர்யாதையாலே உபேயத்வேந புருஷார்த்தனென்றும்) அநுஸந்தித்து, ("ஶரணாகதிஶப்தார்த்தம்") என்கிறபடியே, ஓத - உச்சரிக்கைக்கு, ("நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:") என்கிறபடியே கிடையாதது கிடைத்தது), வல்லீரேல் - வல்லிகோளாகில், தீதொன்றும் - முன்பு ஆர்ஜித்த க்ரூரபாபங்கள், அடையா - ஃபலப்ரதாநோந்முகமாகக்கொண்டுகிட்டாது; "உபாயவிஷயநிஷ்டு" என்கிற மர்யாதையாலே, ஏதம்சாரா - மேலுண்டான பாபப்ரவ்ருத்திகள் கூடாது. "ஸர்வே ஸம்ஸ்ரா - ஸம்ஸ்வாஹா" என்கிறபடியே அநுபவமே யாத்ரையாமென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், ப்ரீதிப்ரேரிதராய் ஆச்ரயிக்கவும் இனிமையோடே திருநாமம் சொல்லவும் மாட்டாதார், அந்தப்புரபரிகரமானார் சொல்லும் வார்த்தையைச் சொல்லவே, பூர்ணோபாஸநத்தில் ஃபலம் ஸித்திக்கும் என்கிறார்.

[மாதவன் இத்யாதி] - "ஸ்ரீவல்லபன்" என்னும் திருநாமத்தை உங்களுக்கு ருசியில்லையேயாகிலும் பரப்ரேரிதராய்க் கொண்டாகிலும் நிரந்தரமாகச் சொல்லவல்லிகோளாகில், பூர்வாகங்கள் நசிக்கும்; உத்தராகங்கள் ச்லேஷியா. முன்புள்ளவற்றை மறக்கும், பின்புள்ளவற்றில் நெஞ்சு செல்லாது. கீழ்ச்சொன்ன திருமந்த்ரமும் இப்பாட்டிற்சொன்ன ஸ்ரீமத்பதமும் தனித்தனியே பேற்றுக்குப் பர்யாப்தமானபின்பு, இரண்டையும் சேர்த்துச் சொன்னவர்களுக்குப் பேற்றுக்குச் சொல்லவேண்டாவிறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. ப்ரீதிப்ரேரிதராய் ஆச்ரயிக்கவும் இனிமையோடே திருநாமம்சொல்லவும் மாட்டாதார், அந்தஃபுரபரிகரமானார்வார்த்தையைச்சொல்லவே, பூர்ணோபாஸநத்தில் ஃபலம் ஸித்திக்குமென்கிறார்.

[மாதவனென்றென்றோதவல்லீரேல்] - நாராயணசப்தத்தோடே இத்தைச் சேர்த்துச் சொல்லப்பாருங்கோள். "நாரணமே" என்றாரே-கீழே. [ஓதவல்லீரேல்] - உங்களுக்கு ருசியில்லையாகிலும் பரப்ரேரிதராய்க்கொண்டு நிரந்தரமாகச் சொல்லவல்லிகோளாகில். [தீதொன்றும்அடையா] - பூர்வாகம் நசிக்கும். [ஏதம்சாராவே]-உத்தராகத்துக்கு

ஏழாம்பாட்டு.—மாதவன் இத்யாதி. "மாதவனென்றென்றோதவல்லீரேல்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - ப்ரீதி இத்யாதி. "எண்ணும்திருநாமம்" என்றத்தைப்பற்ற - ப்ரீதி ப்ரேரிதராய் இத்யாதி. "பாடீரவன்நாமம்" என்றத்தைப்பற்ற - இனிமையோடே இத்யாதி. அந்தஃபுரபரிகரமானார் வார்த்தையாவது - "மாதவன்" என்று சொல்லுகை.

"நாரணமே" என்றுசொல்லிவைத்து, பின்னையுமொன்றை விதிக்கிறாரோவென்ன - நாராயண இத்யாதி. நாராயணசப்தத்தைச் சொன்னாரோவென்ன - நாரணம் இத்யாதி. "என்றென்று" என்கிறத்விருக்தியாலே - ஸ்ரீமச்சப்தத்தை நாராயணசப்தத்தோடே த்விதாகூட்டி த்வயமாக்கி யநுஸந்திக்க வல்லிகோளாகிலென்றபடி. "ஓத" என்கிறதுக்கர்த்தம்அருளிச்செய்யாநின்றுகொண்டு, "என்றென்று" என்கிற வீப்ஸைக்கும் அர்த்தம்அருளிச்செய்கிறார் - உங்களுக்கு இத்யாதி. ஓதுகையாவது - ஒருவன் உச்சரிக்க தத்அநுச்சாரணமாகையாலே - பரப்ரேரிதராய் என்றது. அது நசிக்கும்படியும் இது சாராதபடியும் எப்படியென்ன - பூர்வாகத்தை இத்யாதி.

அவிஶ்லேஷமேயாம். பூர்வாவஸ்த்தை விஸ்மரிக்கும், உத்தராவஸ்த்தில் நெஞ்சுசெல்லாது கீழ்ச் சொன்ன திருமந்த்ரமும் இப்பாட்டிற்சொன்ன ஸ்ரீமத்பதமும் தனித்தனியே பேற்றுக்கு பர்யாப்தமானபின்பு, இரண்டையும் சேர்த்துச்சொன்னவர்களுக்குப் பேறுசொல்லவேண்டாவிறே. (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

சாராஏதங்கள், நீரார்முகில்வண்ணன்
பேரார்ஓதுவார், ஆரார்அமரரே.

ஆ.—(சாரா) - அபக்ருஷ்டரான நாங்கள் அதிகாரிகளோவென்னில்;—யாவர் சிலர் திருநாமஞ்சொல்லவல்லார், அவர்களிறே இத்திருநாமஞ்சொல்ல அதிகாரிகளான உத்க்ருஷ்டராகிறு ரென்கிறுர். இத்திருநாமத்தைச் சொல்லுவார் யாவர் சிலர், அவர்கள் நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகராய் என்றும் அவன் திருவடிகளிலே அடிமை செய்யப் பெறுவர்களென்றுமாம்.

ஒ.—எட்டாம்பாட்டில், [சாரா ஏதங்கள்] - நீராலே பூர்ணமான மேகம் போலேயிருந்த திருநிறத்தையுடைய எம்பெருமானுடைய திருநாமத்தை நிரந்தரமாகச் சொல்லுவார் யாவர் சிலர், அவர்களே தேனும் தண்ணிய ஜந்மவ்ருத்தங்களை யுடையரே யாகிலும் அயர்வறுமமரர்களோடு ஒப்பர்களென்று ஆஶ்ரயிப்பார்க்கு ருச்யுத்பாதநார்த்தமாக அவர்களுடைய ஸ்லாக்யதையை யருளிச்செய்கிறுர்.

ப.—அநந்தரம், உத்கர்ஷாபகர்ஷம் இல்லாதபடி ஸர்வபுருஷ போக்யனான ஒருவன் திருநாமத்தைச் சொல்லுமவர்கள் ஸூரிஸமாநரென்கிறுர்.

ஏதங்கள் - து:கங்கள்தாமே, சாரா-(ஸ்வயமேவ) கிட்டமாட்டாதுகள்; (ஜலஸ்த்தலவிபாகமற உபகரிக்கையாலே ஸர்வஜநபோக்யமாய்) நீர்ஆர்-நீர்நிறைந்த, முகில்வண்ணன் - காளமேகம்போலே யிருக்கிற நிறத்தையுடையவனுடைய, பேர் - திருநாமத்தை, ஆரார் - த்ருப்திபிறவாத வளவாய்க்கொண்டு, (வர்ணாஶ்ரமநியதியின்றியிலே ஶக்திமாத்ராதிகாரத்தை யுடையவராய்க்கொண்டு) ஆர் - யாவர்சிலர், ஓதுவார் - சொல்லுவார், (அவர்கள்), அமரரே - ஸூரிகளிறே. ஆரார் - த்ருப்தராகாரென்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், அதிகாரிநியதியில்லை; ஆரேனுமாகத் திருநாமத்தை நிரந்தரமாகச்சொல்லுவார் நித்யஸூரிகளோடொப்பர் என்கிறுர்.

[சாராஏதங்கள்] - து:கங்கள் நம்மைவந்து கிட்டப்பெறு. [நீரார் முகில் வண்ணன்] - நீராலே பூர்ணமான மேகம்போலேயிருக்கிற நிறத்தையுடையவன். அவ்வடிவைக் காணுந்தனையுமிறே உபதேஶிக்கவேண்டுவது. [பேர்ஆர் ஓதுவார்] - அவன்

---

"ஷொஷொயஷூவி" என்று - பூர்வாவஸ்தவிஸ்மரணமும், "கவிஜ்ஞா தாஷிஷகா நாஶேஷ ஸூகஶெகஷண:" இத்யாதியாலே - உத்தராவஸ்த்தில் நெஞ்சுசெல்லாமையும் உக்தமிறே. "மாதவன்" என்றத்தை நாராயண ஶப்தத்தோடேகூட்டி யநுஸந்தியுங்கோள் என்றத்தால் ஹிதம் - கீழ்ச்சொன்ன இத்யாதி.

(எ)

திருநாமத்தை நிரந்தரமாகச்சொல்லுவார் யாவர்சிலர். [ஆரார் அமரரே] - அவர்கள் ஏதேனும் ஜந்மவ்ருத்தங்களையுடையராகிலும், அவர்களிருந்தபடியே நித்யஸூரிகளோடு ஒப்பர்கள். இத்தால் - ஆச்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக அவர்களேற்றம் அருளிச்செய்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. அதிகாரி நியதியில்லை, ஆரேனுமாகத் திருநாமத்தை நிரந்தரமாகச் சொல்லுவார் நித்யஸூரிகளோடு ஒப்பர்களென்கிறார்.

[சாரா ஏதங்கள்] – ஒரு பொல்லாங்குகளும் வந்துகிட்டாது. [நீரார்முகில்வண்ணன்] - நீராலே பூர்ணமான மேகம்போலேயிருக்கிற நிறத்தையுடையவன். †(அவ்வடிவு காணுந்தனையுமிறே உபதேசிக்கவேண்டுவது) [பேராரோதுவார்] - அவன் திருநாமத்தை நிரந்தரமாகச் சொல்லுவார் யாவர் சிலர், [ஆராரமரரே] - அவர்களேதேனும் ஜந்மவ்ருத்தங்களையுடையரேயாகிலும், அவர்கள் இருந்தபடியே நித்யஸூரிகளோடு ஒப்பர். அவ்வோஜந்மஸ்த்திதிகளிலே நித்யஸூரிகளோடு ஒப்பர்கள். † (ஆச்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக அவர்களேற்றம்அருளிச்செய்கிறார்.) (அ)

## ஒன்பதாம் பாட்டு.

அமரர்க்குஅரியானை, தமர்கட்குஎளியானை
அமரத்தொழுவார்கட்கு அமராவினைகளே.

ஆ —(அமரர்க்கு ) ‡ ஆஸ்ரிதரான தேவாதிகளுக்குங்கூட அரியனாய், ஆச்ரிதர்க்கெளியனாயிருந்தவனை, அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஓர்அஞ்சலிமாத்ரம் பண்ணவுமமையும்; கைங்கர்யவிரோதிகளெல்லாம் போமென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், [அமரர்க்கு அரியானை] - ப்ரயோஜநாந்தரபரர்க்கு துர்லபனாய், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாயிருக்கிறவனை, அநந்யப்ரயோஜநராய்த் தொழ ப்ரயோஜநாந்தர ப்ராவண்யம் தானேபோம் என்கிறார்.

ப.— அநந்தரம், அநந்யப்ரயோஜந ஸுலபனானவனை அநந்யராய்ஆச்ரயிப்பார்க்கு ப்ரதிபந்தகங்கள் கிட்டாதுஎன்கிறார்.

அமரர்க்கு - ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுக்கு, அரியானை - துர்லபனாய், தமர்கட்கு - ஸம்பந்தஜ்ஞாநமுடைய அநந்யப்ரயோஜநர்க்கு, எளியானை - ஸுலபனானவனை, (ப்ரயோஜநங்களைக்கொண் டகலப்போகாதே அநந்யராய்க்கொண்டு), அமர - பொருந்த, தொழுவார்கட்கு - தொழுவார்க்கு, வினைகள்- ப்ராப்திப்ரதிபந்தக பாபங்கள், அமரா - ஸ்பர்சியாதுகள்.

---

எட்டாம்பாட்டு.—சாரா இத்யாதி. "பேராரோதுவாராராமரரே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அதிகாரி இத்யாதி. அதிகாரிநியதியில்லையென்றது- "ஆரார்" என்றத்தைப்பற்ற. "ஓதுவார்" என்றவர்த்தமாநார்த்தம் - 'நிரந்தரமாக' என்று. பேரை ஆரோதுவார்? ஆர்-யாவரென்றபடி. ஆரார் - அவர்களாரேனுமாகிலுமென்றபடி. "இருந்தபடியே" என்றத்தை விவரிக்கிறார் - அவ்வோ இத்யாதி. 'ஏதங்கள் - சாரா, நீரார்முகில்வண்ணன்பேர் - ஓதுவார் ஆர். ஆராரமரரே' இத்யந்வயம். (அ)

---

† குண்டலிதம் இருப்பது நாலாயிரப்படியிலிருந்து ப்ரக்ஷிப்தம்.
‡ ப்ரயோஜநாந்தரபரரான என்று இருப்பின் நலம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஐந்மாதிகள் அப்ரயோஜகமானாலும் அநந்யப்ர யோஜநனுக்கேவேணுமே என்னில்; ஆப்தோபதேஸத்தைப்பற்றி இழியவே ப்ரயோஜ நாந்தர பரதாஹேதுவான பாபங்கள் தானே அகலும் என்கிறார்.

[அமரர்க்கு இத்யாதி] - ப்ரயோஜநாந்தரபரர்க்கு துர்லபனானவனை; "யஜ்ஞாயஜ்ஞம் வாநுப்ரஹ்மாஜாநாதி". அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனானவனை; "ஸௌலப்யம்" "ஸுக்ரீவம் ஸரணம்கத:" "இமௌஸ்ம முநிஸார்தூல கிங்கரௌ": ஜ்ஞாநாதிகரான ப்ரஹ்மாதிகளேயாகிலும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு துர்லபன்; ஒரு வேடுவிச்சியாகவுமாம், ஒருகுரங்காகவுமாம், ருஷியாகவுமாம், அவர்களுக்குக் கையாளாயிருக்கும். [அமரத்தொழுவார்கட்கு] - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஸ்ரயிக்க இழியவே, ப்ரயோஜநாந்தர ப்ராவண்யத்துக்கு அடியான கர்மங்களானவை தானேபோம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஜந்மாதிகள் அப்ரயோஜநமானாலும் ப்ரயோஜநாந்தரபரதாஹேதுவான பாபங்கள் செய்வதென்னென்னில்; ப்ரயோஜநஸூந்யராய்க்கொண்டாஸ்ரயிக்கவே அவைதானே போமென்கிறார்.

[அமரர்க்குஅரியானை] - எத்தனையேனும் அதிஸயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்வயத்நத்தால் ப்ராபிக்கவொண்ணாதவனை; "யஜ்ஞாயஜ்ஞம் வாநுப்ரஹ்மாஜாநாதி." (யந்நாயம்பகவாந்ப்ரஹ்மாஜாநாதி) [தமர்கட்கேளியானை] - அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனானவனை. ஒரு குரங்காகவுமாம், ஒரு வேடுவிச்சியாகவுமாம், ருஷிகளாகவுமாம், அவர்களுக்கேளியனாயிருக்கும்; "ஸுக்ரீவம் ஸரணம்கத:" (ஸுக்ரீவம் ஸரணம்கத:), "ஸௌலப்யகச்சஸம்மஹாதேஜா:" (ஸோப்யகச்சந்மஹாதேஜா:) "இமௌஸ்மமுநிஸார்தூல" (இமௌஸ்மமுநிஸார்த்தூல) என்று சொல்லுகிறபடியே [அமரத்தொழுவார்கட்கு] - ஒருப்ரயோஜநத்தைக் கணிசியாதே அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு தொழுமவர்க்கு. [அமராவினைகளே] - ப்ரயோஜநாந்தரபரதைக்கு அடியான விரோதிகள் வந்துகிட்டா. (௯)

ஒன்பதாம்பாட்டு.—அமரர்க்கு இத்யாதி. "அமரத்தொழுவார்கட்கு அமராவினைகள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஜந்மாதிகள் இத்யாதி.

ப்ரஹ்மாதிகளுக்கும் அறியப்போகாதோவென்ன - யந்நாயம் இத்யாதி. "யஜ்ஞாயஜ்ஞம் வாநுப்ரஹ்மாஜாநாதிஸ்ரீஸோதய:". அதெங்கே கண்டோமென்ன - ஒருகுரங்கு இத்யாதி. உக்தத்ரயங்களுக்கும் அடைவே ப்ரமாணத்ரயங்கள் - ஸுக்ரீவம் இத்யாதி. "பிதா ஸர்வஸ்ய லோகஸ்ய ராகவ: ஸரணம் புரா । தஸ்ய புத்ர: ஸரண்யஸ்ய ஸுக்ரீவம் ஸரணம்கத:" இதி கிஷ்கிந்தாகாண்டே. (௪ - ௨0) "ஸோப்யகச்சந் மஹாதேஜா:" இத்யாதி, ஸங்க்ஷேபே. "இமௌஸ்ம முநிஸார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ । ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை ஸாஸநம் கரவாவகிம்" இதி பாலகாண்டே விஸ்வாமித்ரம் ப்ரதி ராம:. (௩௧ - ௪)

(௯)

## பத்தாம் பாட்டு.

வினைவல்லிருளென்னும், முனைகள்வெருவிப்போம்,
சுனைநன்மலரிட்டு, நினைமின்நெடியானே.

ஆ.—(வினை.) - திருமந்த்ரத்தைச்சொல்லி அழகிய மலர்களைக்கொண்டு அவன்திருவடிகளிலே பரிமாறி அவனை ஸ்நேஹயுக்தமாக நினையுங்கோளென்றுகொண்டு, ப்ரஸ்துதமான உத்யோகத்தைச் சொல்லி முடிக்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், [வினைவல்லிருளென்னும்] - ஊமவத்கைங்கர்ய ப்ரதிபந்தகங்களாய் மிக்கிருந்துள்ள அஜ்ஞாநவாஸநாதிகள் பீதமாய், தானேபோம்; ஆஸ்ரித விஷயத்தில் எல்லா உபகாரங்களையும் பண்ணினாலும் "ஒன்றும் செய்யப்பெற்றிலோம்" என்றிருக்கும் ஸ்வபாவனானவனை அழகிய செவ்விப்பூக்களைத் திருவடிகளிலே பணிமாறி நினையுங்கோள் என்கிறார்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணத்தில் அளவிறந்த பாரிப்பையுடையனானவனை ஆஸ்ரயியுங்கோள்: அவித்யாகர்மாதிஸமஸ்ததோஷங்களும் நிவ்ருத்தமாமென்கிறார்.

வினை - பூர்வாபோத்தராவசிஷ்டரூப கர்மங்களும், (அதுக்கடியான), வல்லிருள் - அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநரூபமான ப்ரபலதமோவிகாரங்களும், என்னும் - என்றென்று பரிகணிக்கப்பட்ட, முனைகள் - விரோதிவர்க்கத்தினுடைய தேஹஸம்பந்தம் ருசிவாஸனைகளாகிற உத்யோகங்கள், வெருவிப்போம் - (தாமே) அஞ்சி விட்டுப்போம்: சுனை - (தன்னிலமான) சுனையிலுண்டான, நன்மலர் - செவ்விப்பூக்களை, இட்டு - ஸமர்ப்பித்து. நெடியான் - ஆஸ்ரிதவிஷயத்தில் அபர்யந்தோபகாரதையை யுடையவனை, நினைமின் - அநுஸந்திக்கப் பாருங்கோள்.

இ.—பத்தாம்பாட்டில், அவ்வளவேயன்றிக்கே கைங்கர்யப்ரதிபந்தகங்களும்போம்; ஆனபின்பு, அவனை ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

[வினைவல்லிருளென்னும் முனைகள்] - வினை - கர்மம், வல்லிருள் - ப்ரபலமான அஜ்ஞாநம்; அதுக்கடியான தேஹஸம்பந்தம், இவற்றைப் பற்றிவரும் ருசிவாஸனைகளாகிற இத்திரள்கள். [வெருவிப்போம்] - "நமக்கு இதுநிலமன்று" என்று பீதமாய்ப்போம். அழகிய செவ்விப்பூவைத் திருவடிகளிலே பணிமாற நினையுங்கோள். [நெடியானே] - எல்லாம் செய்தாலும், "ருணம்ப்ரவ்ருத்தமிவமே" என்றிருக்குமவன். "ஸக்ருத்" என்கிறபடியே இவன் ஒருகால்நினைக்க, "ஸர்வஸ்வம்" என்று என்றுமொக்க நினைக்குமவன்.

ஈடு.—பத்தாம்பாட்டு. †அவ்வளவேயன்றியே, கைங்கர்ய ப்ரதிபந்தகங்களும் போம்; ஆனபின்பு, அவனை யாஸ்ரயியுங்கோ ளென்கிறார்.

---

பத்தாம்பாட்டு.—வினை இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்து கீழிற்பாட்டிற்காட்டில் இப்பாட்டிற் சொன்ன விரோதிநிரஸநத்துக்கு அவாந்தரபேதமருளிச்செய்கிறார் - அவ்வளவே இத்யாதி. அவ்வளவேயன்றியே யென்றது - ப்ரயோஜநாந்தரபரதாஹேதுபாபம் போமளவேயன்றியே யென்றபடி.

---

† அன்றிக்கே என்று பாடாந்தரம்.

[விணேஇத்யாதி] - விணை - கர்மம், வல்லிருள் - ப்ரபலமான அஜ்ஞாநம்; அதுக்கடியான தேஹஸம்பந்தம், இவற்றைப் பற்றிவருகிற ருசிவாஸநைகளாகிற இத்திரள்கள். [முனே]-திரள். [வெருவிப்போம்] - "நமக்கிதுநிலயன்று" என்று பீதமாய்ப்போம். அன்றிக்கே, முனேயென்று - முகமாய், முகங்கெட்டுப்போமென்றுமாம். [சுனேநன்மலரிட்டு] - அப்ராக்ருத த்ரவ்யம் தேடியிடவேணுமென்னவேண்டா. [நினேமின்] - "சிந்திப்பே யமையும்." உங்களுக்குப் பாங்கான ஸமயத்திலே ஒருகால் நினேயுங்கோள்; "ஸ்மர்த்தா" (ஸ்மர்த்தா) என்கிறபடியே. [நெடியானே] - நீங்கள் ஒருகால் நினேத்துவிட்டால், பின்னே அவன்தானே "அஹம்ஸ்மராமி" (அஹம்ஸ்மராமி) என்று உங்களே நினேத்தபடியே யிருக்கும்; ஒருகால் நினேத்து இவனேப்போல் கலங்கவேண்டுவதில்லேயிறே அவனுக்கு. ஸர்வகுண ஸம்பந்நனுமாய் அகர்மவச்யனுமாகையாலே உருவநினேத்தபடியே யிருக்குமிறே அவன். (க௦)

---

## பதிஞேராம் பாட்டு.

நெடியானருள்சூடும், படியான்சடகோபன்
நொடியாயிரத்துஇப்பத்து, அடியார்க்கருள்பேறே.

*ஆ.—(நெடியான்.) - இத்திருவாய்மொழிவல்லார் ஆழ்வாரைப்போலே நெடியானருள் சூடும்படியாவரென்கிருர்.*

*ஒ.—நிகமத்தில், [நெடியானருள் சூடும்.] — ஸர்வேச்வரனுடைய அருளுக்கெல்லாம் பாத்ரபூதராகையே ஸ்வபாவமான ஆழ்வாருடைய உக்தியான ஆயிரந் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியானது, அப்யஸித்தவர்களே பகவத் விஷயீகார பாத்ரமாக்கும் என்கிருர்.*

*ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத்ப்ரஸாதத்தை யருளிச்செய்கிருர்.*

நெடியான் - ஸர்வாதிகனுன ஸர்வேச்வரனுடைய, அருள் - ஸர்வப்ரகாரத் தாலுமுண்டான ப்ரஸாதத்தை (அதிகரித்து), சூடும் - அநுபவிக்கும், படியான் - ஸ்வ

---

அஜ்ஞாநம் - அவித்யை. " என்னும் முனேகள் " என்றதுக்கர்த்தம் - அதுக்கடியான இத்யாதி. என்னும் - என்றுசொல்லப்படுகிற. "என்னும் முனேகள் - என்று சொல்லப்படுகிற முனேகள்" என்கையாலே, அவித்யாகர்மங்களேச் சொன்னது வாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களுக்கும் உபலக்ஷணமென்று கருத்து. " முனேகள் " என்று - முகமானபோது, வெருவிப் போகை - கெட்டுப்போகையாய், முகம்கெட்டுப்போமென்றபடி. இப்போது, விணேவல்லிருளென்னும் - " வல்லிருளென்னும் - விணே " என்று கூட்டிக்கொள்வது. "சுனே" என்றதுக்கு பாவம்- அப்ராக்ருத இத்யாதி. ஆச்ரயணத்திலும் ஆயாஸமில்லே யென்கிருர் - சிந்திப்பேயமையும் என்று. சிந்திக்கிறதின் சரமாவதி - உங்களுக்கு இத்யாதி. ஒருகால் நினேக்கை போருமோ வென்ன - ஸ்மர்த்தா இத்யாதி. "நினேமின்" என்றதுக்கநுகுணமாக "நெடியான்" என்றதுக்கர்த்தம் - நீங்கள் இத்யாதி. "ஸ்மராமி" என்ற வர்த்தமாநார்த்தம் - நினேத்தபடியேயிருக்கும் என்று. அதுக்கடியேதென்ன - ஒருகால் இத்யாதி. கலங்கவேண்டாமைக்கடியேதென்ன - ஸர்வகுண இத்யாதி. "விச்வாதிவைலக்ஷண்ய" என்றத்தைப்பற்ற - ஸர்வகுணஸம்பந்நன் என்றது. 'அஜம்" என்றத்தைப்பற்ற - அகர்மவச்யன் என்கிறது. வாராஹே; "ஸத்திதேமநஸி" இத்யாதி. "நன்மலர்" என்றது - ஆச்ரயிக்கிறவர்கள் ஆதரத்தைப்பற்ற. "நினேமின்' என்றவநந்தரம் "நெடியான்" என்கையாலே, நினேவில் நெடியவனென்று கருத்து. (க௦)

ஹாவத்தையுடையரான, சடகோபன் - ஆழ்வாருடைய, நொடி - சொல்லான, ஆயிரத்து -, இப்பத்து - இப்பத்தானது, அடியார்க்கு - ஹுவச்சேஷஹூதரானார்க்கு, அருள்பேறு - ப்ரஸாதலாஹரூபமாயிருக்கும். நொடி - சொலவு. இது வஞ்சித்துறை.

இ.—நிமமத்தில், இப்பத்தும், அஹ்யஸித்தவர்களை ஆழ்வார் தம்மைப் போலே ஹுவத்விஷயீகார பாத்ரமாக்கும் என்கிறார்.

[நெடியான் இத்யாதி] - ஸர்வேஶ்வரனுடைய ப்ரஸாதங்களுக்கெல்லாம் பாத்ரஹூதரானகையாலே அதுவே ஸ்வஹாவமான ஆழ்வார். "ஆற்றநல்லவகை காட்டும்" என்று ஸாத்மிக்க ஸாத்மிக்க வநுஹவிக்குமளவன்றிக்கே, இப்போது அவன் கொடுத்த அருளெல்லாம்கொண்டு யரிக்துநின்று அநுஹவிக்கவல்லராகை. நொடிதல் - சொல்லுதல், [அடியார்க்கு] - அஹ்யஸிக்கவல்லார்க்கு. [அருள்பேறு] - ப்ரஸாதலாஹம். "நெடியானருள் சூடும்படியான்" என்கிற இவர்பேற்றைப் பண்ணிக்கொடுக்கும்.

ஈடு.—நிமமத்தில், இப்பத்தும், அப்யஸித்தவர்களை ஆழ்வார்தம்மைப்போலே ஹுவத்விஷயீகாரபாத்ர மாக்கு மென்கிறார்.

[நெடியான் இத்யாதி]-ஸர்வேஶ்வரனருளுக்குப் பாத்ரஹூதரானகையே ஸ்வஹாவமான ஆழ்வார். அதாவது - "ஆற்றநல்லவகைகாட்டுமம்மான்" என்று தன்குணசேஷ்டிதங்களை ஸாத்மிக்கஸாத்மிக்க அநுஹவிப்பித்துக்கொண்டு போந்தபடியை யநுஸந்தித்துவிஸ்மிதரானார் - கீழ்; இப்போது, அவன்கொடுத்தகொடுத்த அருளெல்லாம் உண்டறுக்கவல்லரானாராய்த்து. நொடிதல் - சொல்லுதல். [இப்பத்தடியார்க்கருள்பேறே] - இப்பத்துத்தானே, இத்தையப்யஸித்தார்க்கு, "நெடியானருள்சூடும்படியான்" என்றதுவே பேறாக்கும். (அடியார்க்கு - அப்யஸித்தார்க்கு. அருள்பேறு - ப்ரஸாதலாஹம்.)ஈஶ்வரன்கொடுத்த ஸாதர்ம்யம் ஆழ்வார்கொடுக்கமாட்டாமை யில்லையிறே. (கக)

நிமமம்.—நெடியான் இத்யாதி. "அடியார்க்கருள்பேறு" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இப்பத்தும் இத்யாதி.

சூடுகை - யரிக்கையாய், பெறுகையென்றபடி. படி - ஸ்வஹாவம். "ஆற்றநல்ல வகை காட்டும்" என்கிறவர் "அருள்சூடும்படியான்" என்கிறதென்னென்ன - அதாவது இத்யாதி. 'வல்லரானாராய்த்து' ஆகையாலே சொல்லுகிறாரென்றபடி. உண்டறுக்கவல்லர் - ஹுஜித்து ஜரிப்பித்துக்கொள்ளவல்லர். அருள்பேறே - அருளாகிறபேற்றை யுண்டாக்குமேயென்றபடி. "பேறே" என்ற அவதாரணார்த்தம் - ஈஶ்வரன் இத்யாதி. (கக)

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி.— [Grantha text, illegible]

---

த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலீ.— [Grantha text, illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி. }

கண்ணனடியிணையில்காதலுறவார்செயலைத்
திண்ணமுறவேசுருங்கச்செப்பியே—மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கைதலைக்கட்டினன்மாறன்
ஆனபுகழ்சேர்தன்னருள்.

# ஆறாந் திருவாய்மொழி—அருள்பெறுவார் - ப்ரவேசங்கள்.

ஆ—(அருள்பெறுவார்.) -இனித் தன்திறத்தில் எம்பெருமான் செய்தருளுகிறபடியைத் தன் திருவுள்ளத்தோடேகூட அநுபவிக்கிறார்.

ஒ.—ஆறாந்திருவாய்மொழியில், பக்திஸ்வரூபத்தை உபதேசித்தருளி அந்ய பரதைகெட்டுத் தன்னையொழியச் செல்லாததன்மைபரான ஆழ்வாருடைய படியை அநுஸந்தித்து, அவரையொழிய ஒருக்ஷணமாத்ரமும் செல்லாதபடி திருவாட்டாற்றில் எம்பெருமான் தான் இவரோடே ஆத்மாவதியாக நிரந்தரஸம்ச்லேஷம் பண்ணுகைக்கு உறுப்பாகத் திருநாட்டிலே கொடுபோகையிலே பதறிநின்றுவைத்து, "இவர்தாமே சொல்லக் கொடுபோகவேணும்" என்று அதுக்கு அவஸர ப்ரதீக்ஷனாய்த் தன்பக்கல் பரதந்த்ரனாயிருக்கிறவனுடைய நிர்ஹேதுக வ்யாமோஹத்தை அநுஸந்தித்து விஸ்மிதராய், திருவுள்ளத்தைக்குறித்து, "நாம் பெற்றபேறுகண்டாயே!" என்றுசொல்லி மிகவும் ஹ்ருஷ்டராகிறார்.

ப.—ஆறாந்திருவாய்மொழியில், இவ்வாழ்வாருடைய பக்திவைலக்ஷண்யத்தையும் அது தம்மளவில் நில்லாமல் பிறர்க்கும் உபதேசிக்கும் ப்ரீதராம்படியையுங்கண்ட ஈஸ்வரன், "இப்படி ப்ரவணரான இவரை யாவதாத்மபாவியாம்படியமர்ந்த நிலத்திலே கொண்டுபோய் அநுபவிக்கவேணும்" என்று பாரிக்கிற அவனுடைய; உபகாரோத்யோகத்தையும், அஸாதாரண ஸம்பந்தத்தையும், பலப்ரதாநத்வரையையும், ஆஸ்ரித ரக்ஷகத்வத்தையும், அதிசயிதாங்கீகாரத்தையும், ஸ்திராஸக்தியோகத்தையும், ஆஸக்தி ஸூசகலக்ஷணகாரத்வத்தையும், ஸம்ச்லேஷஜநிதஔஜ்ஜ்வல்யத்தையும், அத்யாதர விசிஷ்டத்வத்தையும், அநவதிகோபகாரத்தையும் அநுஸந்தித்து ஏவம்பூதனான ஸர்வேச்வரன் தமக்குப் பரதந்த்ரனாய் நின்றுபண்ணுகிற ஆதராதிசயத்தைத் தம்முடைய திருவுள்ளத்தோடேகூட உசாவி ஹ்ருஷ்டராகிறார்.

இ — ஆறாந்திருவாய்மொழியில், இப்படி பக்திஸ்வரூபத்தை உபதேசித்துக் கையொழிந்தவநந்தரம் அவன்பக்கலிலேயிருக்க விடாய் பெருகிவருகிறபடியைக் கண்டு, இதுக்காகத் திருவாட்டாற்றிலே ஸந்நிஹிதனாய், "நஜீவேயம் க்ஷணமபி" என்கிறபடியே - இவரையொழிய ஒருக்ஷணமாத்ரமும் செல்லாதபடியை யுடையனாய், "இவரோடே ஆத்மாந்தமாக நிரந்தராநுபவம் பண்ணவேணும், அதுசெய்யுமிடத்து விச்சேதசங்கையில்லாதபடி பரமபதத்திலே கொடுபோவோம்" என்று பதறிநிற்கச்செய்தே, "இவர் பரதந்த்ரர், நம்மை நியமிக்கமாட்டார்" என்று அறியாதே "இவர்க்குத்தான் பரதந்த்ரனாய் இவர் நியமிக்கக் கொடுபோகவேணும்" என்று அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறவனுடைய வ்யாமோஹாதிசயத்தைக்கண்டு, "ஸர்வாதிகனானவன் நம்மைக்குறித்துப் பரதந்த்ரனாவதே!" என்று விஸ்மிதராய், இதுக்கு உசாத்துணையாவார் ஆர்? என்று பார்த்தவிடத்தில், ஸம்ஸாரிகள் சப்தாதிவிஷய ப்ரவணராகையாலும், நித்யஸூரிகள் விப்ரக்ருஷ்டராகையாலும், இனித் தமக்கு உடன்கேடான நெஞ்சும் தாமுமானவாறே, அத்தைக்குறித்து, "நாம்பெற்றபேறு கண்டாயே!" என்று மிகவும் ஹ்ருஷ்டராகி

*ருர். இதுக்கு முன்பெல்லாம், இவனுக்கு ஸ்வாதந்த்ர்யமே ஸ்வரூபமென்று போந்தார்; இப்போது, ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே ஸ்வரூபமென்கிறார். இருத்தும் வியந்திற் காட்டில் இதுக்கு ஏற்றமென்? என்னில்;—"அடியார் தம்அடியனேன்" என்று ஹேதுவோடே அநுஷவிக்கிறார்.*

ஈடு.—* பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர, ஈஶ்வரனை ஆழ்வார் பின்தொடர்ந்தபடி சொல்லிற்று; இதுதொடங்கி, ஆழ்வாரை ஸர்வேஶ்வரன் பின்தொடருகிறபடி சொல்லுகிறது.

இப்படி ஹக்தி ஸ்வரூபத்தை யுபதேசித்துக் கையொழிந்தவநந்தரம் தன்பக்கலிலே இவர்க்கு விடாய்பெருகுகிறபடியைக்கண்டு, இவர்க்கு முன்பே விடாய்த்துத் திருவாட்டாற்றிலே தங்குவேட்டையாகவந்து நிற்கிறவனுகையாலே இவரைக் கொண்டு போகையிலே அவனுக்கு த்வரைமிக்கது. இவரளவல்லவிறே அவனுடையவிடாய்; "**நஜீவெயம்க்ஷணமபி**" (நஜீவேயம்க்ஷணமபி) என்னும் ஏற்றமுண்டிறே. "ஆழ்வாரும் நாமுமாய் அநுஹவிக்கவேணும்" என்றுபாரித்து, "அதுசெய்யுமிடத்தில், அவ்வநுஹவத்துக்கு ஒருவிச்சேதம் வாராதபடி ஏகாந்தமாயிருப்பதொரு தேசவிசேஷத்திலே கொடுபோய்வைத்து அநுஹவிக்கவேணும்" என்றுபாரித்து, "அதுசெய்யுமிடத்தில், இவர்க்குப் பரதந்த்ரனுய் இவர் நியமித்தபடி செய்தோமாகவேணும்" என்று இவர் அநுமதியொழியச் செய்யமாட்டானுய் நின்றான்; ஸர்வேஶ்வரனைத் தாம் நியமிக்கமாட்டாரே தம்முடைய பாரதந்த்ர்யத்தாலே; இப்படி தம்பக்கலிலே அஹிநிவேஶாதிஶயத்தைப் பண்ணுகிறவவனுடைய மேன்மையையும், அப்படிப்பட்ட மேன்மையையுடையவன் தம்பக்கல் பரதந்த்ரனுய்த் தாழநிற்கிறபடியையும் அநுஸந்தித்து, இதுதனக்கு உசாத்துணையாக ஸம்ஸாரிகளைப் பார்த்தவிடத்து, அவர்கள் ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணிபோந்திருந்தார்கள்: அவன் தன்னைப்பார்த்தவிடத்தில், அஹிநிவேஶாதிஶயத்

---

*அருள்பெறுவார் ப்ரவேசே; பேடிகாஸங்கதி - பொய்ந்நின்ற இத்யாதி. 'இது தொடங்கி "* முனியேநான்முகனளவும்" என்று கூட்டுவது.*

*கீழில் திருவாய்மொழியோடு இதுக்கு ஸங்கதி - இப்படி ஹக்தி இத்யாதி. "விரைகின்றான்" என்றத்தைப்பற்ற - த்வரைமிக்கது என்றது. தங்குவேட்டை - பரஸ்த்தாநம். த்வரை அதிசயிக்கைக்கு ஹேதுவேதென்ன - இவரளவு இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - நஜீவேயம் இத்யாதி. "**சிரம்ஜீவதி வைதேஹீ யதி மாஸம் தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்**" இதி ஸுந்தரகாண்டே ராமஃ. (கூ௬-டு) "என்னில் முன்னம்பாரித்து" என்னக்கடவதிறே. த்வரைமிக்கால் கொடுபோகவொண்ணுதோ? விளம்பிக்கிறதென்னென்ன - ஆழ்வாரும் இத்யாதி. "நமது இதிவகையே" என்றத்தைப்பற்ற - இவர்க்குப் பரதந்த்ரனுய் என்றது. அவன் அப்படியிருந்தால் இவர் அநுமதிபண்ணவொண்ணுதோவென்ன-ஸர்வேஶ்வரனை இத்யாதி. இப்படி அவன் பரதந்த்ரனுய்த் தாழநிற்கிறபடியைத் தாமேயநுஷவியாதே நெஞ்சுக்குச் சொல்லுவானென்? என்ன - இப்படி தம்பக்கலிலே இத்யாதி. அஹிநிவேஶாதிஶயத்தைப்பண்ணுகிற என்றது - 'குடிகொண்டான் - மெய்நின்று கமழும்" "நிலைபோரான்" இத்யாதியைப்பற்ற. மேன்மையையும் என்றது - "ஆழியான்," "கைநின்றசக்கரத்தன்," "புள்ளூர்தி" இத்யாதியைப்பற்ற. "அது நமது இதிவகையே" என்றத்தைப்பற்ற - பரதந்த்ரனுய்த் தாழநிற்கிறபடியையும் என்றது. பாட்டுக்கள்தோறும் திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறதுக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - இது தனக்கு இத்யாதி. இது தனக்கு-இவ்வநுஸந்தாநந் தனக்கு. "நாட்டாரோடியல்வொழிந்து" என்றத்தைப்பற்ற - ஸம்ஸாரிகளை இத்யாதி. பணிபோந்திருந்தார்கள் - அதுவே யாத்ரையா*

ளையுடையனாய் முன்னடிதோற்றதேயிருக்கிறவனாகையாலே அவன் இதுக்காளாகமாட்டிற்றிலன்; இனி இவ்விஷயீகாரத்துக்கு இலக்கான தாமும் தம்மோடு உடன்கேடான நெஞ்சுமேயாயிருந்தது: அந்நெஞ்சைக்குறித்து, "அவனுடைய மேன்மையிருந்தபடியும், அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் தாழநின்ற நிலையும், நாம் பெற்ற பேற்றின் கனமிருந்தபடியுமெல்லாம் கண்டாயே! நம்கார்யம் விழுந்தபடி கண்டாயே!" என்று, இத்தைத் தம்திருவுள்ளத்தோடேகூட்டி இனியராகிறார். இதுக்கு முன்பெல்லாம், ஸர்வேஶ்வரனாகிறான், ஸர்வநியந்தாவாய் ஸ்வதந்த்ரனாயிருப்பானொருவனென்றிருந்தார்; இப்போது அங்ஙனல்ல; ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபமென்கிறார். முன்பெல்லாம், தம்மாலே பாரதந்த்ர்யத்தை இழந்தார்; இப்போது, அவனாலே பாரதந்த்ர்யத்தை இழக்கிறார். அதுதான்* இருத்தும் வியந்திலே சொல்லிற்றில்லையோ? என்னில்,— அதில் இதுக்கு வாசியுண்டு - "அடியார்தம் அடியனேன்" என்று ஹேதுவோடே அநுஸந்திக்கிறார்.

---

## முதற் பாட்டு.

---

அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்கு ஆழியான்
அருள்தருவானமைகின்றான் அதுநமதுவிதிவகையே
இருள்தருமாஞாலத்துள் இனிப்பிறவியான்வேண்டேன்
மருளொழிநீமடநெஞ்சே! வாட்டாற்றான் அடிவணங்கே.

ஆ—எம்பெருமான் தன்னருள் சூடுமடியாரான அடியார்க்கடியேனாயிருக்குமிதுவே படியாயிருந்த எனக்கு, ஆழியான் நிரவதிக ஸம்ருத்தியைத் தருகையிலே சமைந்திராநின்றான்; அதுவும் நான் சொன்னபடியே செய்தருளக்கடவனாயிராநின்றான்; ஆனபின்பு, இனி இந்த ஸம்ஸாரத்தை நான்வேண்டேன்: நீயும் இந்த ஸம்ஸாரத்தைவிட்டு அவன் நமக்குத் தந்தருளுகிற தன் திருவடிகளாகிற ஸம்ருத்தியைக் கைக்கொண்டு அந்த ஸம்ருத்தியை யநுபவி என்று, தம்முடைய நெஞ்சைக்குறித்தருளிச்செய்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமான் நம்மை விஷயீகரிக்கையிலே ஒருப்படாநின்றுகொண்டு, அதுதானும் நான் விதித்தபடியே செய்வானாயிராநின்றான் என்கிறார்.

---

யிருந்தார்கள். உடன்கேடான-ஸுகதுக்கங்களுக்கு உடன்வந்தியான. "நாராயணனை-நண்ணினம்," "பெறுதபயன்பெறுமாறு," "காட்டித்தன்கனைகழல்கள்" இத்யாதியைப்பற்ற-பேற்றபேற்றின் கனமிருந்தபடியும் என்றது. கீழ்வாக்யவிவரணம்-நம்கார்யம் இத்யாதி. கூட்டி யென்றது-அநுஸந்தித்தென்றபடி. "பொய்ந்நின்றஞானம்" என்கிற பேடிகாஸங்கதிவாக்யவிவரணம் - இதுக்கு முன்பெல்லாம் இத்யாதி. * பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி இத்திருவாய்மொழிக்கு முன்பெல்லாமென்றபடி. ப்ரஸங்காத் ரஸோக்தி - முன்பெல்லாம் இத்யாதி. * மயர்வறமதிநலமருளுகைக்கு முன்பெல்லாமென்றபடி. அதுதான் - அந்தபாரதந்த்ர்யந்தானென்றபடி. வாசியேதென்ன - அடியார் இத்யாதி. ஹாருவதஶேஷத்வமாகிற ஹேதுவோடே யநுஸந்திக்கிறாரென்றபடி. அதாவது-தாம் ததீயபர்யந்தமான ஶேஷத்வத்திலே நிற்கையாலே அவன் பரதந்த்ரனானானென்று அந்த ஹேதுவோடே யநுஸந்திக்கிறாரென்றபடி.

[ஆழியான்] - திருவாழியாழ்வானை விஷயீகரித்தாற்போலே. இனி, [இருள் என்றுதொடங்கி] - அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் பிறக்கையில் நசையற்றேன்; ஸாபலவான நெஞ்சே! நீஉகந்தருளின கோயில்களில் நசையாலே, "ஸம்ஸாரத்தைவிட்டுத் திருநாட்டுக்குப் போவேனல்லேன் நான்" என்றுபண்ணின ச்ரமத்தைத் தவிர்; அவன் தந்தருளுகிறபடியே திருவடிகளை அநுபவி.

ப —முதற்பாட்டில், தன்விஷயத்தில் மோக்ஷத்வகாங்க்ஷையையுடைய நமக்கு நிரவதிகோபகாரத்தைப் பண்ணுவதாக வுத்யோகியாநின்றான்; அதுதானும் நாம் நியமித்தபடியே செய்வானாயிராநின்றானென்று, நெஞ்சைக்குறித்து அருளிச்செய்கிறார்.

அருள் - தன்னுடைய நிரவதிக ப்ரஸாதத்தை, பெறுவார் - பெறுகையை நிரூபகமாகவுடையராய், அடியார்தம் - அதுககடியான மோக்ஷத்வஜ்ஞாநத்தையுடையார்க்கு, அடியனேற்கு-அஸாதாரண மோக்ஷஹேதுவாயிருக்கிற எனக்கு, ஆழியான்- திருவாழியாழ்வானைக் கைவிடாதாப்போலே, அருள் - ஸ்வவிஷயமான பூர்வாநுபவரூப மஹோபகாரத்தை, தருவான் - பண்ணுவானாக, அமைகின்றான் - உத்யுக்தனாயிராநின்றான்; அது, (ஸ்வதந்த்ரனான தான் நினைத்தபடி செய்கையன்றியே),நமது விதிவகையே- (புருஷார்த்தமாகையாலே) நாம் விதித்த ப்ரகாரத்திலே ஆகாநின்றது; (ஆனபின்பு), இருள் தரு - அஜ்ஞாநபாதகமாயிருக்கிற, மா — பெரிய, ஞாலத்துள் - ஜமத்தில், இனி- (அவனுடைய விஷயீகாரம்) பெற்றபின்பு, பிறவி - ("இழிபட்டோடு முடலினிற்பிறந்து தன்சீர் யான்கற்று" என்கிறபடியே ஸமவத்ஸாமவதாநுபவ ப்ரீத்யர்த்தமாகவும் பிறக்கையை), யான் வேண்டேன் - அவன்நினைவறிந்த நான் இச்சிக்கிறிலேன்; மடம் - பற்றிற்று விடமாட்டாத சபலமான, நெஞ்சே - நெஞ்சே! மருள் - ("அவன்நினைவொழிய நாம் நினைத்தபடி அர்ச்சாவதாராத்யநுபவம் பண்ணவேணும்" என்கிற ஸ்வதந்த்ராஸி ஸந்நிரூபமான) அறிவுகேட்டை, நீ ஒழி - நீதவிரப்பார்; (தவிர்ந்தமைதோன்ற), வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே நமக்கு பலப்ரதனாய்க்கொண்டுவந்து நிற்கிறவன், அடி- திருவடிகளை, வணங்கு - உன் ஐகமத்யத்தாலே வணங்கப்பார்!

இ.—முதற்பாட்டில், ஈச்வரன் நம்மை விஷயீகரிக்கையிலே ஒருப்படாநின்றான், அதுதானும் நாம் விதித்தபடியே செய்வானாயிராநின்றான் என்கிறார்.

[அருள்பெறுவார் அடியார்] — ஸர்வேச்வரன் அளவிறந்த ப்ரஸாதத்தைப் பண்ண அதுக்கு விஷயபூதராயிருப்பார் சிலருண்டு; ராஜாக்கள் மஹிஷிகளுக்கு விபூதிகளையும் தங்களையும் அவர்கள் அதீனமாக்கி வைப்பாரைப்போலே ஈச்வரன் தன்னை முற்றூட்டாகக் கொடுத்து அநுபவிக்குமவர்கள். [அடியார்தம் அடியனேற்கு]- "நீக்கமில்லா அடியார்தம் அடியார் அடியாரடியாரெங்கோக்கள்" என்றிறே தம்ஸ்வரூபத்தை நினைத்திருப்பது. [ஆழியான்]-திருவாழியாழ்வானை விஷயீகரித்தாற்போலே விஷயீகரிக்க நினையாநின்றான். விடலில் சக்கரமிறே. ஆச்ரிதரை நிரூபகமாகவுடையவன் என்றுமாம். [அருள்தருவான் அமைகின்றான்] - ஆச்ரிதரெல்லார்பக்கலிலும் பண்ணும் அருளை என்பக்கலிலே பண்ணுமவனாகச் சமைந்துநின்றான். "சுலோகவிலோசந ..." என்னுமவர்களிறே இவர்கள். ஸ்வதந்த்ரனாகில் தருகிறான், இனிக் குறையென்? என்னில்—[அதுநமது விதிவகையே] - அது நாம் சொல்லச்செய்வானாக நினைத்திராநின்றான். "அது நம்முடைய ஸாமர்த்யாதிகுணமிறே" என்றாய்த்து பூர்வர்

கள் நிர்வாஹம்; இது ப்ரகரணத்தோடு சேராது. "நாம் விதித்தபடியே செய்வானாக நினைத்திராநின்றான்" என்று அருளிச்செய்தார் எம்பெருமானார். தன்பக்கல் குறைவற்றிருந்தாலும் இத்தலையில் இச்சை பார்த்திருக்குமிறே; சொல்வகையே என்னாதே விதிவகையே என்றது - தானே தருமது வித்யதிக்ரமமென்றிருக்கையாலே. இதுக்கு நாம் செய்யப்பார்த்ததென்? என்ன, [இருள் தருமாஞாலத்துள்] - நான் அவன்வழியே போகப்பார்த்தேன். இங்கு உகந்தருளின நிலங்களும் ஸாமவத ஸஹவாஸமும் உண்டாயிருக்க அவன்வழியே போகவேண்டுகிறதென்? என்ன; அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரமாகையாலே, ஜ்ஞாநாதிகனான ப்ரஹ்லாதனையும் எதிரிடப்பண்ணிற்றிறே. [இனி] - அவன்கருத்து அறிந்தபின்பு. [பிறவியான் வேண்டேன்] - "வானுயரின்பமெய்திலென் மற்றை நரகமே யெய்திலென்" என்கிற அது நான்வேண்டேன். இனி ஈச்வராபிப்ராயத்தாலேயிருக்கில் இருக்குமித்தனை. [மருளொழி நீ] - நீயும் என்வழியே போரப்பார். "திருவாறன்விளையதனை மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல்" என்று உகந்தருளின நிலங்களில் நசையாலே ஸம்ரமிப்பதொன்றுண்டு; அத்தைத்தவிர்! இங்கே உகந்தருளின இதுக்கு ப்ரயோஜநம் அங்கே கொடுபோகையன்றோ? [மடநெஞ்சே] - ஸாதுநெஞ்சே! ஸவ்யமானநெஞ்சே! மடமை - அறிவின்மை. [வாட்டாற்றான் அடிவணங்கே] - திருவாட்டாற்றிலேவந்து நிற்கிறவன் நினைவிலே போகப்பார். அடிவணங்குகையாவது - ஈராசுதவிருகை; அவன்கருத்திலே போகை.

ஈடு.—முதற்பாட்டு. ஈச்வரன் நம்மை விஷயீகரிக்கையிலே ஒருப்படாநின்றான்; அது தானும் நாம் விதித்தபடி செய்வானாயிராநின்றானென்கிறார்.

[அருள்பெறுவாரடியார்தம் அடியனேற்கு] - ஹேதுதானிருக்கிறபடி. ஸர்வேச்வரன் பண்ணும் ப்ரஸாதாதிசயத்துக்கு விஷயபூதராயிருப்பார் சிலருண்டு; அவர்கள் நமக்கு ஸ்வாமிகள். அவர்கள் பக்கலிலே அவன் பண்ணின அருள் நம்மளவும் வர வெள்ளங்கோத்ததுகாண்என்கிறார். "தாநஹம் த்விஷத:" (தாநஹம்த்விஷத:) என்று ப்ரஜை தீம்பிலே கைவளர்ந்தால் மாற்றைக்கொண்டு "வாய் வாய்" என்பாரைப் போலே, அவன்தான் சீறவேண்டும்படி யிருப்பார் சிலருண்டு; அவர்களைப்போலன்றியே, "ததாமி" (ததாமி) என்று அவனுடைய அருளுக்கு விஷயபூதராயிருப்பார் சிலருண்டு; அவர்கள்பக்கல் பண்ணும்அருளை நம்பக்கலிலே பண்ணினான். ராஜாவுக்குப்

---

முதற்பாட்டு.—அருள்பெறுவார் இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஈச்வரன் இத்யாதி.

ப்ரவேசத்திலே "ஹேதுவோடே" என்றத்தைக்காட்டுகிறார் - ஹேதுதான் இத்யாதி. அதாவது - அடியார்தம்மடியனாகையாலே நமதுவிதிவகையே அருள்தருவானமைகின்றானென்றபடி. பூர்வார்த்தம் - ஸர்வேச்வரன் இத்யாதி. "ஹேதுதானிருக்கிறபடி" என்றத்தால் பலிதம் அவர்கள்பக்கல் இத்யாதி. "அடியார்தம்" என்னாதே "அருள்பெறுவார்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - தாநஹம் இத்யாதி. "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஸுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு," (௧௬-௧௯) "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் । ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே" இதி கீதாஸு.(௧0-௧0) "அருள்பெறுவாரடியார்தம்மடியனேன்" என்றதுக்கு - அவர்கள் பக்கல் அநுக்ரஹம் நம்மளவும் வெள்ளமிட்டதென்னுதல், அவர்களெல்லாரிடத்திலும் பண்ணும் அநுக்ரஹத்தை நம்மிடத்திலே பண்ணினானென்னுதலென்று பாவத்வயம். "அருள்" என்றதுக்கு க்ருபையென்றருளிச்செய்து, கொடை என்றர்த்தாந்தரம் - ராஜாவுக்கு இத்யாதி. "ஆழியான்"

புறம்பு ஒருமுறையிலே செல்லாநின்றாலும், தன்னைஸ்வர்யத்தையுங் கொடுத்துத் தன்உடம்பையுங்கொடுக்குமிறே மஹிஷீவிஷயத்தில்; அப்படியே அவன் தன்னை முற்றூட்டாகக் கொடுத்தநுபவித்துத் தான் பரதந்த்ரனாம்படி யிருப்பார் சிலருண்டு; அவர்கள்பக்கல் பண்ணும் அருளை என்பக்கலிலே பண்ணினான். [அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்கு] - இருவர்க்கும் நிரூபகமிருக்கிறபடி. இவர் அருள்பெறுவாரடியார் தம்மடியார்; அவன் ஆழியான்; இருவர்க்கும் நிரூபகர் ததீயரேகாணும். [அடியனேற்கு] - "விடுமாறென்பதென்" என்றும் "நீக்கமில்லாவடியார் தம்மடியா ரடியாரடியா ரெங்கோக்கள்" என்றும், "தமர்கள்தமர்கள் தமர்களாம் சதிரேவாய்க்க" என்றும் நான்சொன்ன அவ்வார்த்தையையே நினைத்திருந்தான்காண் அவன்; "அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான்" என்கிறபடியே இத்தையேயாய்த்து இவர் தமக்கு ஸ்வரூபமாக நினைத்திருப்பது. [ஆழியானருள்தருவான்அமைகின்றான்] - ஸர்வேஸ்வரன் நம்பக்கலிலே முழுநோக்காக நோக்கி ப்ரஸாதாதிஶயத்தைப் பண்ணுவானாகப் பாரியாநின்றான்; திருவாழியை யொருகண்ணாலே பார்ப்பது, இவரை யொருகண்ணாலே பார்ப்பதாகாநின்றான்; "விடலில் சக்கரத் தண்ணலைமேவல்விடலில்" என்கிறபடியே கையில் திருவாழியை விடிலன்றோ உம்மைவிடுவதென்றுநின்றான். [ஆழியான்] - அவர்களையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படியாய்த்திருப்பது. "அஸ்மாபிஸ்துல்யோபவது" (அஸ்மாபிஸ்துல்யோபவது) என்று அவர்கள் எல்லார்பக்கலிலும் பண்ணும்அருளை என்னொருவன்பக்கலிலும் பண்ணாநின்றான். அவர்கள் அருள்பெறுவாரடியாரான அடியாராய்த்து; இவனும் அருள்தருவானமைகின்றானாய்த்து. [அமைகின்றான்] - பாதிஸம்வாதம் குறையற்றது அருளைக் குறையறத் தருவதாகப் பாரியாநின்றான். அவன் ப்ரஸாதாதிஶயத்தைப் பண்ணுவதாகப்

---

என்றத்தையும் கூட்டி பதச்சேர்த்திக்கு பாவம் - இருவர்க்கும் இத்யாதி. இதுக்கு ஸப்ரகிர்வாஹம் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் - இவர் இத்யாதிவாக்யத்ரயத்தாலே. உம்மை அடியார்தம்மடியராக அவனறிந்தபடி எங்ஙனேயென்ன - விடுமாறு இத்யாதி. இவர்தாம் தம்மை அடியார்தம்மடியனாக நினைத்திருப்பரோவென்ன - அடிகளடியே இத்யாதி. திருக்கடல்மல்லையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியுடைய திருவடிகளையே யநுஸந்திக்கும் ஶேஷபூதர்க்கு ஶேஷபூதரானவர் இத்யர்த்த:. திருமொழி இரண்டாம்பத்து ஆறுந்திருமொழி பத்தாம்பாட்டு, "கடிகமழும்" இத்யாதி. ததீயரையிட்டு நிரூபிக்கும்படியிருக்கும் என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, "அருள்தருவானமைகின்றான்" என்றதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் - ஸர்வேஸ்வரன் இத்யாதி. "ஆழியான்" என்றதுக்கு இரண்டாம் பாவம் - திருவாழியை இத்யாதி. ஏதத்விவரணம் - விடலில் இத்யாதி. இருவர்க்கும் நிரூபகமென்ற முந்தினபாவவிவரணம் - அவர்களையிட்டு இத்யாதி. "அடியார், அடியனேற்கு" என்ற பஹுவசநைகவசநங்களுக்கு பாவம் - அஸ்மாபி: இத்யாதி. அதாவது - எங்களெல்லாரிடத்திலு முண்டான தேவர்க்ருபைக்கு விபீஷணனொருவனுமே விஷயமாகக்கடவனென்று - "அஸ்மாபிஸ்துல்யோபவது" என்றதுக்குக் கருத்து. "த்வத்ஸகாஸ்ஸமஹாஸ்மாபிஸ்துல்யோபவதுநோஸக:। விபீஷணோ மஹாப்ராஜ்ஞ ஸகித்வம்வாப்யுபைதுந:" இதி யுத்தகாண்டே ஸுக்ரீவ:(கக-ரு அ-௭). அடியாருடையவும் அவனுடையவும் அந்யோந்யமானுரூப்யத்தை யருளிச்செய்கிறார் - அவர்கள் இத்யாதி. "அமைகின்றான்" என்றவநந்தரம் "அநுமதிவிதிவகையே" என்றத்தால் பலிதம்-பாதி இத்யாதி. பாதிஸம்வாதம் குறையற்றது என்றது - அவனுடைய பாரிப்புமாத்ரமேயாய் இவருடைய அநுமதியில்லாமை யிருக்கையன்றிக்கே இவரும் ஸம்மதிக்கப் பெற்றதென்றபடி. ஸம்வாதம் - ஸம்மதி. "அமைகின்றான்" என்றதுக்குவாஸநை - அருளை இத்யாதி. கண்ணழி

பாரியாநின்றானாகில் அவன்தான் ஸர்வேஶ்வரனாகில் பின்னைக் கண்ணழிவென்னென்னில். - [அதுநமது விதிவகையே] - அது செய்யுமிடத்தில் நான் சொன்னபடி செய்தானாகவேண்டி யிராநின்றான். [அது நமது விதிவகையே] - "அது நம்முடைய வாக்யாநுகுணமாகவிறே" என்று இதுக்குப்பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி. இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது, நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தானென்கிறார்" என்றருளிச்செய்வர். "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி"(அஹம்ஸர்வம்கரிஷ்யாமி)என்று பாரித்துப்போந்தவர்தாமே "க்ரியதாமிதிமாம்வத"(க்ரியதாமிதிமாம்வத)என்னப் பார்த்திருந்தாற்போலே, இவர் சொன்னபடி செய்வானாயிராநின்றான். "நமது சொல்வகையே" என்னாதே, 'விதிவகையே' என்பானேன்னென்னில்; வித்யதிக்ரமத்தில் ப்ரத்யவாயத்துக்கு அஞ்சுவாரைப்போலே அஞ்சாநின்றான். தான் நினைத்தபடி செய்கைக்குத்தன்பக்கல் குறைவற்றாலும் இத்தலையில் இச்சையொழியக்கொடுபோகானே அவன்; புருஷோத்தமன் அபும்ஸ்த்வம் வரும்படி செய்யானே. [நமது விதிவகையே] - "தயாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:" (ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:): "இது பட்டர்தாமே யருளிச்செய்ய நான் கேட்டேன்" என்றருளிச்செய்தார். சேனை முதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய்வந்து புகுரப்புக்கவாறே, நாய்ச்சிமாருந்தானுமாய் ஸ்வைரமாகவிருக்கிறவதுதவிர்ந்து நாய்ச்சிமாரும் ஸிம்ஹாஸநத்தில் ஒருமூலைகளிலே ஒதுங்கத் தானும் ஸவிநயமாகவிருக்குமாய்த்து, வ்ருத்தஸாமந்தரைக்

---

வேண்னென்னில் என்றது - அவனுக்குக் கண்ணழிவென்னென்னிலென்றபடி. கண்ணழிவு - விளம்பமும், குறையும். "அதுநமது" இத்யாதிக் கர்த்தம் - அதுசெய்யுமிடத்தில் இத்யாதி. நமது விதிவகையே - நம்முடைய நியமநப்ரகாரத்திலேயென்றபடி. முந்தினவர்த்தத்துக்கு, "விதிவகையே" என்ற ஏகாரம் - தேற்றத்திலே; இரண்டாமர்த்தத்துக்கு, ஸ்வரத்திலே. ஸ்வோர்க்தார்த்தத்துக்கு ஸம்வாதம் - அதுநம்முடைய இத்யாதி வாக்யத்வயம். கீழ்வாக்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறார் - அஹம்ஸர்வம் இத்யாதி. "விதி" என்றதுக்கு பாவம் - நமது சொல் இத்யாதி. தான் நினைத்தபடி செய்கைக்கு - தான் ஸ்வதந்த்ரனாய் நினைத்தபடி செய்கைக்கென்றபடி. கீழ் ப்ரணயித்வத்தாலே இவர் நியமித்தபடி செய்வானா யிருந்தானென்றருளிச்செய்து, தத்வஸ்த்திதியிலும் இத்தலையில் இசைவும் வேணுமென்கிறார் - தன்பக்கல் இத்யாதி. புருஷார்த்தமாகைக்காகவென்றபடி. இசைந்தே கொடுபோகவேணுமென்கிற நிர்ப்பந்தமேதென்ன - புருஷோத்தமன் இத்யாதி; யத்வா, இதுவுமொருஹேதுவாதல். அதாவது - அர்த்தியாதே கொடுத்தாலவனவைலக்ஷண்யத்துக்குக் கொத்தையாமென்று கருத்து. அப்படி ஆஶ்ரிதர்க்கு பாதந்த்ரனாயிருக்குமோ? என்ன - தயாநுஜாநந்தம் இத்யாதி. ஸ்தோத்ரே; "ஸ்வீயஸெளதாஜ்ஞஸ்தபோஷணாதிநா ஸ்வயாமிஸ்ருஷ்டாத்தாரணயஷ்யா। விநியோகமாசிநாந்வேஷிததயாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:." இஸ்ஸ்லோகார்த்தத்தை ஆப்தஸம்வாதத்தாலே ஸ்திரப்படுத்துகிறார் - இதுக்கு பட்டர்தாமே இத்யாதி. 'அருளிச்செய்தார்' நஞ்சீயரென்றபடி. ஸர்வேஶ்வரன் தன்னுடைய ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையெல்லாம் இவர்பக்கலிலே வைத்து, தானும் பிராட்டிமாருமாக விருக்கிறவளவிலே இவர் அறிவித்தத்தைத் திருக்கண்களாலே அநுமதிபண்ணுவனென்றிறே இஸ்ஸ்லோகத்துக்குக் கருத்து. இவர் அங்கே போகைக்கு ஹேதுவையும், இவர் அங்குப்போனால் இவரைக்காண்கை யுகப்பாகையாலே லோகவிவர்த்தநமாகாதென்னுமத்தையும், "யஷ்யா" என்று ஏகவசநமாக அருளிச்செய்கைக்கு ஹேதுவையும் அருளிச்செய்கிறார் - சேனைமுதலியார் இத்யாதி. சட்டை - சொக்காய். "வ்ருத்தஸாமந்தர்" என்கிற இது - யோகைக்கு

கண்டராஜாக்களைப்போலே. இவர்தாமும் "இவ்விருப்புக்குத்தண்ணீர்த்துரும்பாகவொண்ணாது" என்று ஜந்நிர்வாஹத்துக்கு வேண்டுமேவற்றைப் பாசுரப்பரப்பற விண்ணப்பஞ்செய்வராய்த்து. பிராட்டிமாரோடிருக்குமதிலும் இனிதாயிருக்குமிறே அவனுக்கு இவர்தம்மைக்காண; "ப்ரியேண" (ப்ரியேண)இறே. "இன்னானைப்ரஹ்மாவாக்கவேணும், இன்னானைமாற்றவேணும்" என்று வேண்டுமேவற்றைச் சுருங்கவிண்ணப்பஞ்செய்வர்; "ஐயர் யாதொன்று சொல்லிற்று அவையெல்லாமப்படியே" என்று கண்களாலே மேலெழுத்திட்டுக்கொடுக்கும் இவ்வார்த்தை யருளிச்செய்தபோது கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு வாசியறக் குமிழிநீருண்டது ; ஆச்சான்தான் பட்டர்க்கு ஸ்நேஹித்திருக்கும்போர. இளையாழ்வான், ஆச்சானை "பட்டர்தம்மை யாஶ்ரயித்தவர்களிற்காட்டிலும் நீர்தாழ அநுவர்த்திப்பானேன்?" என்று கேட்க, "நீ அன்று கண்டிலைகாண், எம்பெருமானார் பட்டர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ஶ்லோகத்தை விண்ணப்பம் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக்கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி, நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள்" என்றருளிச்செய்தார். அருளுகிறான் ஸர்வேஶ்வரனாகில் அதுதான் நாம் விதித்தபடி செய்வானாயிருந்தானாகில் இனிக் கண்ணழிவென்? என்ன - [இருள் இத்யாதி]- இனி, நீயும் இசையுமித்தனையே வேண்டுவது ; இதுவே கண்ணழிவு. நான் அவன்வழியே போவதாகப்பார்த்தேன், நீயும் அவன்வழியே போகப்பாராய்! உமக்குத்தான் அவன்வழி போகவேண்டுகிறதேன்? என்ன ; - இருள் தருமாஞாலமாயிருந்ததே. ஸம்ஸாரமாகிறது, இருக்கவிருக்க அஜ்ஞாநத்தைத் தருவதொன்றாய்த்து ; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையுமிறே எதிரிடப்பண்ணிற்று. [இனி] - "வானுயரின்பமெய்திலென் மற்றைநரகமே யெய்திலென்" என்று நினைத்திருந்ததொரு ப்ரமமுண்டுமுன்பு ; இப்போது அது தவிர்ந்தேன்.

*ஹேது. 'யாநி' என்னாதே, "யத்" என்று ஏகவசநமாகையாலே -* **பாசுரப்பரப்பற** *என்றது. பாசுரப்பரப்பற விண்ணப்பம் செய்கைக்குஹேது -* **இவர்தாமும்** *இத்யாதிவாக்யம். 'வ்ருத்தஸாமந்தரைக்கண்ட ராஜாக்களைப்போலே' என்கிறவிடத்திலே "வாணிளவரசு" "விண்ணாட்டவர்மூதுவர்" என்றத்தை நினைப்பது. இவர் நைச்யத்தாலே தண்ணீர்த்துரும்பாகாமல் பாசுரப்பரப்பறச் சொன்னாலும் அவன் இவனைக்கண்டாவிருக்கும்படி யென்னென்ன -* **பிராட்டிமாரோடு** *இத்யாதி. இதுக்கு நியாமகமேதென்ன -* **ப்ரியேணவிறே** *என்று. "பாசுரப்பரப்பற விண்ணப்பம் செய்வர்" என்றதின் விவரணம் -* **இன்னானை** *இத்யாதி.* ' **உதாரவீக்ஷணை:- தயாநுஜாநந்தி** "

*என்றதுக்கு, "வ்ருத்தஸாமந்தரைக்கண்ட" இத்யாதிக்கநுகுணமாக ஸாவம் -* **ஐயர்** *இத்யாதி.* **கிடாம்பியாச்சானோடு** *- இவர்க்கு உத்தேஶ்யரான கிடாம்பியாச்சானோடென்றபடி.* **அல்லாதாரோடு** *பட்டர் சிஷ்யர்களான அல்லாதாரோடென்றபடி.* **குமிழிநீருண்டது** *- ஆழங்காற்பட்டார்களென்றபடி. ப்ராஸங்கிகம் -* **ஆச்சான்தான்** *இத்யாதி. 'போர - ஸ்நேஹித்திருக்கும்' என்றந்வயிப்பது.* **பட்டர்தம்மை** *- பட்டரை யென்றபடி. 'இளையாழ்வான் - ஆச்சானைக்கேட்க' என்றந்வயிப்பது.* **இளையாழ்வானாகிறவர்** *- ஆச்சானுடைய சிஷ்யர். அதுக்காச்சான்வார்த்தை -* **நீயன்று** *இத்யாதி. 'அருளிச்செய்தார் - எம்பெருமானார்' என்றந்வயிப்பது. "ஆகையாலே ஸ்நேஹித்திருப்பேன்" என்று கூட்டுவது. மேலுக்கெல்லாம் அவதாரிகை -* **அருளுகிறான்** *இத்யாதி. இதுக்கு ஸாவம் -* **இனிநீயும்** *இத்யாதி ; இந்த ஸாவம் "மருளொழிநீ மடநெஞ்சே" என்னுமளவும் கடாக்ஷித்து. விவரணம் -* **நான்அவன்** *இத்யாதி. "பிறவியான்வேண்டேன்" என்னாதே "இருள்தருமாஞாலம்" என்று விசேஷிக்கிறதுக்கு ஸாவம் -* **உமக்குத்தான்** *இத்யாதி. அஜ்ஞர்க்கொழிய ஜ்ஞாநாதிகர்க்கும் இருள்தருமோவென்ன -* **ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையும்** *இத்யாதி. "இனி" என்றதுக்கு*

அது தவிரவேண்டுவானேனென்னெனில் ; - ஸ்ரீவைஷ்ணவ ஸஹவாஸத்துக்கு உடலாயிருக்கையாலும் உகந்தருளின நிலங்களிலுண்டான ஆதராதிசயத்தாலுமாக, "அங்கேயிருக்கிலேன், இங்கேயிருக்கிலேன்" என்று அவனெல்லைக்குள்ளே கிடக்குமத்தனையன்றே வேண்டுவதென்றிருந்தோம்; அதுவேயாகப்பெறுதே, மற்றைப்படிக்கு உடலாயிருந்தது. ப்ரக்ருதிவச்யனுக்கி சப்தாதிவிஷயங்களிலே கொடுபோய் மூட்டும் ஸம்ஸார ஸ்வபாவத்தை யநுஸந்தித்தபின்பு விடுவதாகவே துணிந்தேன். [யான்வேண்டேன்] - என் புத்தியால் விட்டேன்; அவனிருத்தில் செய்யலாவதில்லை. ஆனால் செய்யவேண்டுவதென்னென்ன - [மருளொழிநீ] - உன்னதொருநினைவுண்டு, அத்தைத்தவிரப்பார். "தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்றால் - திருவாறன்விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனை" என்றுவிரோதிகழிந்து போம்வழியெல்லாம்போய், "இது பரமபதத்துக்குப் போம்வழி, அது திருவாறன்விளைக்குப் போம்வழி" என்றால் "ப்ராப்யவஸ்துதான்இங்கே வந்துகிட்டிற்றாகில் இனி இங்கே யடிமைசெய்ய வமையாதோ?" என்று ப்ரமித்திருப்பதொன்றுண்டு, அத்தைத் தவிரப்பார். மருளென்று - அறிவின்மைக்குப்பேர். [மடநெஞ்சே] - "உத்தேச்யவஸ்து ஸந்நிஹிதமாய்த்தது" என்று இத்தையே பார்க்கிறபித்தனைபோக்கி, நம்மையும் பார்க்கவேண்டாவோ? [வாட்டாற்றான்அடிவணங்கே]-நமக்கு ஹிதகாமனாய்வந்திருக்கிறவவன்வழியே போய் அவனை யநுபவிக்கப் பாராய்; உகந்தருளினநிலங்களிலே வந்துநிற்கிறது நம்மை அவ்வருகே கொடுபோகைக்காயிருக்கும், நீயும் அவன்நினைவிலே போகப்பாராய் [அடிவணங்கே] - அடிவணங்குகையாவது - ஈரரசுதவிருகை யிறே. (க)

## இரண்டாம் பாட்டு.

வாட்டாற்றானடிவணங்கிமாஞாலப்பிறப்பறுப்பான்
கேட்டாயேமடநெஞ்சேகேசவனெம்பெருமானை
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து
நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினமே.

ஸாவம்-வானுயர் இத்யாதி வாக்யத்வயம். அதுதவிரவேண்டுவானேனென்னெனில்'என்றது-அப்போதப்படி நினைத்திருந்து இப்போதத்தைத் தவிரவேண்டுவானென்னென்னிலென்றபடி. அதுவே - வைஷ்ணவஸஹவாஸாதியே. மற்றைப்படிக்கு - விஷயப்ராவண்யத்துக்கு. "மற்றைப்படிக்கு" என்றத்தை விவரிக்கிறதாதல், * இனி ஸப்தத்துக்கர்த்தமாதல் - ப்ரக்ருதி இத்யாதி. "யான்" என்றதுக்கு ஸாவம் - என்புத்தியால் இத்யாதி. அதேதென்ன - தீவினை இத்யாதி. மருளொழி - உகந்தருளின நிலங்களில் ப்ராவண்யத்தைவிடு. மடப்பம் பற்றிற்றுவிடாமையாக; ஸாவம் - உத்தேச்யவஸ்து இத்யாதி. நம்மையும் பார்க்கவேண்டாவோ-அஜ்ஞானாவஹமான ஸம்ஸாரத்திலிருக்கிற நம்மையும் பார்க்கவேண்டாவோ வென்றபடி. "மருளொழிநீ" என்றுவைத்து, "வாட்டாற்றானடிவணங்கு" என்றதுக்குக் கருத்தேதென்ன - நமக்கு இத்யாதி. அதாவது - நம்மைக் கொடுபோகவந்தவனைப் பின்செல்லப் பாராயென்றபடி. ஏதத்விவரணம் - உகந்தருளின இத்யாதி. "அடிவணங்கு" என்றால் அவன்நினைவிலே போகையைச் சொல்லுமோவென்ன - அடிவணங்குகை இத்யாதி,

(௬).

ஆ.—(வாட்டாற்றான்.) — வாட்டாற்றானுடைய திருவடிகளை யநுபவித்துக் கொண்டு, ப்ரதிபந்தகத்தைப்போக்குகைக்காக அவனையபேக்ஷித்தும், அபேக்ஷித்த படியே ப்ரதிபந்தகத்தைப்போக்கி, அந்நபாநாதிபாரகராயிருந்த நாட்டாருடைய ப்ரஸ்தாநத்தையொழிந்து ஸமவேதகயாரணராய், அவனை வந்து ப்ராபிக்கப்பெற்றோமே! நெஞ்சே! நமக்குவிளைந்த ஸம்ருத்திகண்டாயே என்கிறார்.

ஓ.—இரண்டாம்பாட்டில், கேட்டாயே மவ்யமானநெஞ்சே! தன்னை அநுபவிக்கைக்கு விரோதியான மாஞாலப்பிறப்பு அறுக்கவேணும் என்று, கேஶிஹந்தாவாய் என்னை அடிமைகொண்ட வாட்டாற்றானை அடிவணங்கி, அவன்ப்ரஸாதத்தாலே திருவாய்மொழி பாடவும்பெற்று, தன்னுடைய ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான அவித்³யாதிகளெல்லாம்போக்கி, இதரவிஷய ப்ரவணராய் நம்மோடு ஒருபற்றின்றிக்கேயிருக்கிற நாட்டாரோட்டைச் சேர்த்தியையும் தவிர்ந்து, நாராயணனை ப்ராபிக்கப்பெற்றோமென்கிறார்.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரோபகாரகனாய் நிருபாதிகபந்துவானவனை நாம்கிட்டப்பெற்றபடிகண்டாயே! என்று பூர்வோபகார பரம்பரையை ஸ்மரிப்பிக்கிறார்;

மாஞாலம் - மஹாப்ருதிவியிலேயுண்டான, பிறப்பு - ஜந்மஸம்பந்தத்தை, அறுப்பான் - அறுக்கைக்காக, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே ஆஶ்ரிதஸுலபனானவனுடைய, அடிவணங்கி - திருவடிகளை ஆஶ்ரயித்து, கேசவன் - மோக்ஷப்ரதிபந்தகமான கேசியைநிரஸித்தவனாய், எம்பெருமானை - அப்படி நம்முடையவிரோதியையும் போக்கி யடிமைகொண்டவனை, பல பாட்டாய - பஹுவிதமான கீதங்களானவற்றை, பாடி - பாடுகையாகிற கைங்கர்யத்தைப்பண்ணி, பழவினைகள் - அநாதிகளான அவித்³யா கர்மாதிகளை, பற்று அறுத்து - ஸவாஸநமாக அறுத்து, நாட்டாரோடு - அஹங்காராதிதூஷிதரான லௌகிகரோடு, இயல்வு - ஸஹவாஸத்தையும், ஒழிந்து - தவிர்ந்து, நாரணனை - (நிருபாதிகபந்துவாய்க்கொண்டு இன்று பலப்ரதானோத்யுக்தனான)நாராயணனை, நண்ணினம் - கிட்டப்பெற்றோம்; மடம் - என்னோடுஉடன்பட்டு ஹவ்யமான, நெஞ்சே! கேட்டாயே - (இவ்வுபகாரபரம்பரைகளிருந்தபடி) கேட்டாயே!

ஈ.—இரண்டாம்பாட்டில், "விஞ்ஞைகையே" என்று நம் இசைவு பார்த்திருக்கிறான் என்கிறதென்? "இந்நின்றநீர்மை இனியாமுறாமை" என்று அடியிலே அபேக்ஷித்திலோமோ? என்ன;—"அபேக்ஷித்தவளவோ நாம் பெற்றது!" என்கிறார்.

[மாஞாலப் பிறப்பறுப்பான் - வாட்டாற்றான் அடிவணங்கி] - "தன்னை அநுபவிக்கைக்கு விரோதியான மஹாப்ருதிவியில் ஜந்மத்தைப் போக்கவேணும்" என்றன்றோ நாம் அர்த்தித்தது. [கேசவன் எம்பெருமானை] - கேசியை நிரஸித்தாற்போலே நம் மோக்ஷவிரோதியைப் போக்கி முறையிலே நிறுத்தினபடியைக் கண்டாயே? அவ்வளவேயோ! [பாட்டாயபலபாடி]-விரோதியைப் போக்கினபடி கிடக்கச் செய்தே, வாசிகமான அடிமையைக்கொண்டபடி கண்டாயே. பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவும்படியன்றோ கவிபாடுவித்துக் கொண்டபடி. ப்ரஶஸ்தகேஶனாயிருக்கிற அழகைக்காட்டித் தோற்பித்துக் கவிபாடுவித்துக்கொண்டான் என்றுமாம். [பாடிப்பழ வினைகள் பற்றறுத்து] - நாம் அடிமைசெய்ய, ப்ராப்தி ப்ரதிபந்தகமாய் அநாதிகாலார்ஜிதமான அவித்³யாதிகளெல்லாம் போகப்பெற்றபடி கண்டாயே. நாம் அநாதிகாலங்கூட ஆர்ஜித்தவற்றை, ஒரு ஸர்வஶக்தி அல்பகாலத்திலே போக்கினபடிகண்டாயே,

[நாட்டாரோடு இயல்வொழிந்து] - அஹங்கார மமகார வஸ்யரோடு தொற்றற்றபடி கண்டாயே. "இவை என்ன உலகியற்கை" "கொடுஉலகங் காட்டேலே" என்னப்பண்ணினபடி கண்டாயே. [நாரணனை நண்ணினமே] - நிருபாயிக ஸர்வரக்ஷகனைக் கிட்டப்பெற்றோம். நிருபாயிக ஸர்வவிஷயபந்துவைக் கிட்டப்பெற்றோம். [கேட்டாயே மடநெஞ்சே] - ஐவ்யமானநெஞ்சே, கேட்டாயே! என்று உபகாரஸ்ம்ருதி தோற்றக் கூறுகொள்ளுகிறார்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "விதிவகையே" என்று - கேவலஹஸவத்க்ருபையாலே வந்ததாகச் சொல்லுகிறதேன் ? அடியிலே "இந்நின்றநீர்மையினியாமுறாமை என்றிலோமோ நாம்?"என்ன,—நாம் அபேக்ஷித்தவளவோ பெற்றது?என்கிறார்.

[மாஞாலப்பிறப்பறுப்பான் - வாட்டாற்றானடிவணங்கி - கேசவனெம்பெருமானைப் பாட்டாயபலபாடிப் பழவினைகள் பற்றறுத்து நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினம் - கேட்டாயேமடநெஞ்சே] - இதெல்லாம் அவனருளாலே வந்ததாயிருந்ததோ ? நாம் இரந்துபெற்றதாயிருந்ததோ ? விரோதிபோகவேணுமென்னும் இவ்வளவன்றோ நாம்அபேக்ஷித்தது ; கெடுவாய், நாம் அபேக்ஷித்தவளவறிதியே. [மாஞாலப் பிறப்பறுப்பான் - வாட்டாற்றானடிவணங்கி]-"ஸம்ஸாரஸம்பந்தத்தை யறுத்துத்தரவேணும்" என்றன்றோ நாம் ஸர்வேஸ்வரன் திருவடிகளையாஸ்ரயித்தது. அதுக்குமேலே அவன் நம்மை அடிமையுங்கொண்டான் கண்டாயே. வாசிகமானவடிமையன்றோ கொண்டது. [கேசவனெம்பெருமானை] — கேசிஹந்தாவான ஸர்வேஸ்வரனை; கேசியைப்போக்கினாற்போலே நம்விரோதியைப்போக்கி நம்முடைய ஸேஷத்வத்தை நிலைநிறுத்தி நமக்கு ஸ்வாமியாயுள்ளவனை ; அன்றிக்கே, ப்ரஸஸ்தகேஸன் தன்னழகைக்காட்டி நம்மையடிமை கொண்டவனென்றுமாம். அவ்வளவேயோ, [பாட்டாயபலபாடி] - * பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவும்படியன்றோ நம்மையிடுவித்துக் கவிபாடுவித்துக்கொண்டபடி. "விரோதியைப்போக்கி யடிமைகொள்ளவேணும்" என்று நாம் அபேக்ஷிக்க, அதுவுங்கிடக்கச் செய்தே, அடிமைகொண்டான் கண்டாயே. [பாடிப்பழவினைகள்பற்றறுத்து] - நாம் அடிமைசெய்ய, ப்ராப்தி ப்ரதிபந்தகமாய் அநாதிகாலார்ஜிதமான அவித்யாதிகளெல்லாம்

---

இரண்டாம்பாட்டு.—வாட்டாற்றன் இத்யாதி. "விதிவகை" என்றதின் பூர்வர்கள் நிர்வாஹத்திலே அவதாரிகை - விதிவகையேயென்று இத்யாதி. விதி - ஹஸவத்க்ருபையையே சொல்லுகிறது. "அனந்தன்மேல்கிடந்த வெம்புண்ணியா" என்று இவர்க்கு ஸாத்யமாவது அவனுகையாலே என்று கருத்து.

"அபேக்ஷித்தவளவோபெற்றது" என்றதுக்கீடாக அந்வயமருளிச்செய்கிறார் - மாஞாலம் இத்யாதி. அந்வயாநுகுணமாக ஸாவம் - இதெல்லாம் இத்யாதி. நாமிருந்ததுதானேதென்ன - விரோதி இத்யாதி வாக்யத்வயம். இவ்வளவேயோ நாமபேக்ஷித்ததென்ன - மாஞாலம் இத்யாதி. இந்தபதத்வயத்துக்கும் அர்த்தம் - ஸம்ஸார இத்யாதி. "பாட்டாயபலபாடி" என்றதுக்கவதாரிகை - அதுக்குமேலே இத்யாதி. கொண்டவடிமைதானேதென்ன - வாசிகமான இத்யாதி. "மாஞாலப் பிறப்பறுப்பான்" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் - கேசியை இத்யாதி. நம்விரோதியை - ஸேஷத்வவிரோதியான ஸ்வாதந்த்ர்யத்தை. இத்தால் ஸலிதம் - தன்னழகை இத்யாதி. அவ்வளவேயோ என்றது - ஸேஷத்வத்தினெல்லையிலே நிறுத்தினவளவேயோவென்றபடி. பலபாட்டானவற்றைப் பாடியென்று ஸப்தார்த்தம். திருவாய்மொழி பாடுவித்தது அதிஸயமோவென்ன - பாலேய்தமிழர் இத்யாதி. "பாட்டாயபலபாடி" என்றவநந்தரம் "பழவினைகள் பற்றறுத்து" என்றதுக்கு ஸாவம் - விரோதியை இத்யாதி. அதுவும் கிடக்கச்செய்தே - விரோதியும் கிடக்கச் செய்தேயென்றபடி. பாடுகை பழவினைகள் பற்றறுக்கைக்கு ஸாதநமோவென்ன - நாமடிமை

போகப்பெற்றபடி கண்டாயே. இவர்வினையறுக்கக் குடித்த வேப்பங்குடிநீர் இதுகாணும். ''கேஶவம் வைத்யம்'' (கேஶவம்வைத்யம்)-இவன் நெடுநாள்கூட ஈட்டின இது ஸர்வ ஶக்திபோக்கப்புக்கால் ஒருகாலே போகலாயிருக்குமிறே. [நாட்டாரோடியல்வொழிந்து]- * உண்டியேயுடையேயுகந்தோடும் இம்மண்டலத்தாரோடு தோற்றறப் பெற்றபடி கண்டாயே. ''யானேயென்தனதே'' என்று அஹங்கார மமகார வஶ்யராயிருக்கிறவர்களோடே ஸம்பந்தமறப்பெற்றேம். ''ஓ ஓ வுலகினதியல்வே'' ''இவையென்ன வுலகியற்கை'' ''கோவேயுலகங்காட்டேலே'' என்னப்பண்ணினபடி கண்டாயே; ''உங்களோடு எங்களிடையில்லை'' என்றுகழிந்தவரிறே. [நாரணனைநண்ணினம்] - ஸோபாதிகஸம்பந்தங்களை விட்டவளவோ? நிருபாதிகஸம்பந்தத்தைப்பற்றவும் பெற்றேம். விட்டவர்கள்தன்னை ஆகாராந்தரத்தாலே பற்றுகிறார்காணும். முக்தனுக்கு ததீயத்வாகாரத்தாலே அநுபாவ்யமாகிறதிறே இதுதான். ஸ்வயம்பாகந்தவிர்ந்து பிதாவோடே யொன்றாக ஜீவிப்பாரைப்போலே காணும். படுக்கைக்கீழே மஹாநிதிகிடக்கப் புறங்கால்வீங்கிச் சாவாரைப்போலேயிறே, நாராயணனாயிருக்கச்செய்தேயும் நண்ணாதிருந்தபடி [கேட்டாயே மடநெஞ்சே] - பெற்ற பேற்றின்கனத்தை யநுஸந்தித்து, வகாதது வகுத்ததென்று திமிர்த்திருக்கிறாயோ? இத்தை அநுபவியாநின்றாயோ; ''ஸௌமித்ரே புங்க்ஷ்வ'' (ஸௌமித்ரேபுங்க்ஷ்வ) ''வைதேஹி ரமஸே கச்சித்'' (வைதேஹிரமஸேகச்சித்)போலே. 'மாஞாலப்பிறப்பறுப்பான்-கேசவ

செய்ய இத்யாதி. வ்யங்க்யோக்தி - இவர்வினை இத்யாதி. வினையைப்போக்குகைக்கு அவன்வைத்யனோவென்ன - கேசவம் இத்யாதி. ''ஶரீரே ஜர்ஜரீபூதே வ்யாதிக்ரஸ்தே கலேவரே। ஔஷதம் ஜாஹ்நவீதோயம் வைத்யோ நாராயணோ ஹரி:'' ''வினைகள்'' என்கிற பஹுவசநத்தைக்கடாக்ஷித்து, வினைகளெல்லாம் ஶங்கையிலே ''கேஶவம் வைத்யம்'' என்கிறதுக்கர்த்தம் - இவன் நெடுநாள் இத்யாதி. ஈட்டின - திரட்டின. ''இயல்வு'' என்றும், தொற்றுஎன்றும் ஸம்பந்தம். 'உண்டியே' இத்யாதிக்கு- அஶநாச்சாதநங்களையே ப்ரயோஜநமாகத்திரியும் இம்மண்டலத்தாரென்று ஶப்தார்த்தம். பெருமாள்திருமொழி. விவரணம் - யானேயென்தனதே இத்யாதி. ஆனால் ஸம்பந்தமறப் பெற்றாரோவென்ன - ஓஓஉலகினது இத்யாதி. ''இதொரு லோகத்தினுடைய ஸ்வபாவமே!'' என்று அவர்கள் இழவு பொறுக்கமாட்டாமை ''ஓ!'' என்று கூப்பிடுகிறாரென்றபடி. திருவாசிரியம். ப்ரமாணாந்தரம் - உங்களோடு இத்யாதி. ஶப்தாந்தரத்தால் சொல்லாதே, ''நாராயணன்'' என்று விசேஷிக்கையாலே - ததீயத்வாகாரேணோத்தேஶ்யரென்று தோற்றுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - விட்டவர்கள் இத்யாதி. அதாவது - ஶரீரஸம்பந்தித்வேந த்யஜித்தவர்களை ததீயத்வேந பற்றுகிறாரென்றபடி. அப்படி ததீயத்வாகாரேணோத்தேஶ்யமாமோவென்ன - முக்தனுக்கு இத்யாதி. * நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்வயம்பாகம் இத்யாதி. அதாவது - க்ருஹக்ஷேத்ராதிகளெல்லாம் தன்னதென்று தனியே போஜித்தவன், பிதாவுக்கு அநுகூலனாய் எல்லாம் அவனதென்றறிந்து அவனோடேகூட போஜிக்குமாபோலே, தன்னதென்றிருக்குமது தவிர்ந்து ததீயத்வேநாநுபவிக்கையென்றபடி. நாராயணஶப்தத்துக்கு - ஸர்வாந்தர்யாமித்வத்தை விவக்ஷித்து, இப்படி ஸுலபனாயிருக்கிறவனைக் கிட்டாதிருக்கிறது இவ்விஷயத்தை யறியாமையாலே என்னுமத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார். படுக்கைக்கீழே இத்யாதி. அருகேயிருக்கிற நெஞ்சை ''கேட்டாயே'' என்பானென்னென்ன - பெற்றபேற்றின் இத்யாதி. வகாதது வகுத்தது என்று-அப்ராப்தமானது ப்ராப்தமாய்த்ததென்று. உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஸௌமித்ரே இத்யாதி. ''ஸௌமித்ரே புங்க்ஷ்வ போகாந் த்வம் ஸ்வேஷ்டாந் ராஜ்யபலாநிவ। ஜீவிதஞ்ச ஹி ராஜ்யஞ்ச த்வதர்த்தமபிகாமயே'' இத்யயோத்யா

னெம்பெருமானை - வாட்டாற்றானடிவணங்கி - பாட்டாயபலபாடிப்பழவினைகள்பற்றறுத்து நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினம் - கேட்டாயே மடநெஞ்சே' என்றந்வயம்.

---

## மூன்றாம் பாட்டு.

---

நண்ணினம்நாராயணனைநாமங்கள்பலசொல்லி
மண்ணுலகில்வளம்மிக்கவாட்டாற்றான்வந்துஇன்று
விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்விதிவகையே
எண்ணினவாறாகா இக்கருமங்கள்என்னெஞ்சே!

ஆ —(நண்ணினம்.) - நாமங்கள் பலசொல்லிக்கொண்டபேக்ஷித்து நாராயணனை ப்ராபிக்கப்பெற்றோம்; அதின்மேலே, அவன்தானேவந்து நிர்ஹேதுகமாக நமக்குத் திருநாட்டைத் தருகையிலே விரையாநின்றான்; நாம் "இத்தைச்செய்" என்று சொல்லுமிதுவே தாழ்வாக விருக்கிறானத்தனை; ஆனபின்பு, இனி „யவனை நண்ணினோமேயல்லோமோ? நெஞ்சே! இங்ஙனேயிருப்பதொரு ஸம்ருத்தி நமக்கு விளையக்கடவதாக ஸ்வப்நத்திலேதான் நினைவுண்டோ? என்கிறார்,

ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமான் நம்மை விஷயீகரிக்கவல்லனே யென்று நாமிருக்க, அவ்வளவன்றிக்கே, அதபஹிநிவிஷ்டனாய் நாம்விதித்தபடி செய்வானாயிராநின்றான். நெஞ்சே! எண்ணினவளவன்றிக்கே கருமங்கள் விழுப்படி என்? என்கிறார்.

[நண்ணினம் என்று தொடங்கி] - பலதிருநாமங்களைச் சொல்லி எம்பெருமானை அநுபவிக்கப்பெற்றோம். வளம் - ஸம்பத்து. [என்நெஞ்சே] - இஸ்ஸம்ருத்தியெல்லாம் உன்னுடைய ஆநுகூல்யத்தாலே வந்ததென்று கருத்து.

ப.—அநந்தரம், நாம் த்வரிக்கவேண்டும் கார்யத்திலே தான் மிகவும் த்வரியாநின்றான்; இது நாம் நினைத்தவளவன்றியே யிராநின்றதீ! என்று ஹ்ருஷ்டராகிறார்.

என் நெஞ்சே - எனக்கு அநுபவோபகரணமான நெஞ்சே! (மென்மைக்கும் நீர்மைக்கும் போக்யதைக்கும் ப்ரகாசகமான), பலநாமங்கள் — பலதிருநாமங்களையும், சொல்லி -, நாராயணனை - (அத்திருநாமங்களுக்கெல்லாம் பிறப்பிடமான) நாராயணனென்கிற நாமத்தையுடைய நிருபாதிகபந்துவை, நண்ணினம் - கிட்டப்பெற்றோம்; மண்ணுலகில் - இவ்வுலோகத்திலே, வளம் - சீலஸௌலப்யாதி குணஸம்பத்தினுடைய, மிக்க - மிகுதியையுடையனாய்க்கொண்டு, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே நிற்கிறவன், வந்து - (நான் சொல்லவேண்டாதபடி தானே உத்யுக்தனாய்க்கொண்டு) வந்து, இன்று -

---

காண்டே ராம:. தஸ்மிந்நேவ, "வைதேஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ। பச்யந்தீ விவிதாந் பாவாந் மநோவாக்காயஸம்யதாந்." "கேசவன்" என்றதுக்கு - ப்ரஸஸ்தகேசனென்ற அர்த்தத்துக்குச்சேர அந்வயங்காட்டி, விரோதிநிரஸநசீலன் என்ற அர்த்தாநுகுணமாக அந்வயம் காட்டுகிறார் - மாஞாலப்பிறப்பறுப்பான் இத்யாதி. ஏகாந்வயமேயாய், "எம்பெருமானை" என்கிற ஐகாரம் அவ்யயமாக்கி அந்வயங்காட்டுகிறதே விசேஷமென்னவுமாம் பிறப்பறுப்பான் - பிறப்பறுக்கைக்காக என்றபடி.

(நம்பக்கல் முன்பொரு ஹேதுவின்றியேயிருக்க) இன்று, விண்ணுலகம் - பரமபதத்தை, விதிவகையே - நம்மநுமதிகொண்டு, தருவான்ஆய் - தருவானாக, விரைகின்றான் - விரையாநின்றான்; இக்கருமங்கள் - இக்கார்யங்கள், எண்ணினவாறு ஆகா - (நாம் அவன் பாடே செல்லவும் நாம்அர்த்திக்கவும் நாம்அதிலே த்வரிக்கவும் அவன் நினைவுபார்க்கவும்) எண்ணியிருந்த ப்ரகாரமன்றியே, தான் வருகையும் அபேக்ஷிக்கையும் த்வரிக்கையும் நினைவுதான் பார்க்கையுமாக ஆய்விட்டன.

இ.—மூன்றாம்பாட்டில், நெஞ்சே, நம்மை விஷயீகரிக்கவல்லனே என்று நாமிருக்க, அவ்வளவன்றிக்கே ஃபலிக்கிறபடியென்? என்கிறார்.

[நாராயணனை நாமங்கள்பலசொல்லி - நண்ணினம்] - கிட்டி அநுபவிக்கப் பெற்றோம். "விண்ணுலகம்" என்கிறபேற்றுக்குச் சொல்லில், மோக்ஷத்தில் விநியோகமான திருமந்த்ரமே அமையும்; "ஸர்வார்த்த ஸாதகஃ" என்கிறபடியே ப்ரயோஜநாந்தரங்களுக்கும் அதுவே அமையும்; ப்ரீதிப்ரேரிக்க அநுபவத்துக்காகச் சொல்லுகையாலே எல்லாத்திருநாமங்களும் வேணும். [மண்ணுலகில் இத்யாதி] - பரமபதத்திற்காட்டில் ஸம்ருத்திமிக்கிருந்துள்ள திருவாட்டாற்றை நிரூபகமாக வுடையவன். [வளம்] - ஸம்பத்து. ரக்ஷ்யம் குறைவற்ற தேசமாகையாலே, ரக்ஷகனுக்கு ஸம்பத்துமிக்கிருக்கும் இங்கு; கைங்கர்யத்துக்கு விச்சேதமில்லாமையாலே சேஷபூதனுக்கு ஸம்பத்து மிக்கிருக்கும் அங்கு. [வந்து] - நாம் செல்லவேண்டும் தேசமடங்கத் தானேவந்து. [இன்று] - நம்பக்கல் இதுக்கு அடியாயிருப்பதொன்று நெஞ்னேற்றில்லை; இன்று இங்ஙனே விடியக்கண்டதித்தனை. [விண்ணுலகம் தருவானாய்] - பரமபதத்திலே செல்லப்பெறுகையன்றிக்கே, "ஆண்மின்கள் வானகம்" என்கிற பொதுவுமன்றிக்கே, த்ரிபாத்விபூதியையும் நமக்கே தருவானாயிராநின்றான். [விரைகின்றான்] - ஸாபேக்ஷரான நாம் ஆறியிருக்க, நிரபேக்ஷனானவன் பதறாநின்றான். முன்பு இவர் விரைந்தபோது ஒருகார்யார்த்தமாக வைத்தானாய், அதுதலைக்கட்டினவாறே, விஸத்ருசமான விபூதி இவர்க்குத்தரமன்று என்று பதறாநின்றான். தொடங்கின அப்போதே தலைக்கட்டவல்ல ஸர்வசக்திக்குப் பதறவேண்டுகிறதென் என்னில்? - [விதிவகையே] - நாம் வியிக்கத்தருவானாக வேண்டியிராநின்றான். [எண்ணினவாறாகா] - நாம் "இவன் விரையவேணும்" என்று எண்ணினோமோ? [இக்கருமங்கள்] - பகவத்விஷயத்தில் ஃபலிக்கும்படி. புறப்பு ஒருவனை ஒன்று அர்த்தித்தால் பேற்றளவும் இவன்தானே அர்த்திக்கவேணும்; இவ்விஷயத்தில், இவன் ஒருகால் அர்த்தித்துவிட்டால் பின்பு தன் பேறாகத்தானே அர்த்தித்துக்கொடுக்கும். [என்நெஞ்சே] - இஸ்ஸம்ருத்தியெல்லாம் நீ என்வழியே போருகையாலேயிறே ஸித்தித்தது.

ஈடு.—மூன்றாம்பாட்டு. நெஞ்சே! நம்மை விஷயீகரிக்கவல்லனே என்று நாமிருக்க, அவ்வளவன்றிக்கே ஃபலிக்கிறபடியென்? என்கிறார்.

[நாராயணனைநாமங்கள்பலசொல்லி - நண்ணினம்] - ப்ராப்தனான ஸ்வாமியைக் கிட்டப்பெற்றோம். [நாமங்கள்பலசொல்லி] - "நமோ நாராயணாயேதி

---

மூன்றாம்பாட்டு.—நண்ணினம் இத்யாதி. "எண்ணினவாறாகா" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - நெஞ்சே இத்யாதி.

தத்புருஷஸமாஸத்தை விவக்ஷித்து, "நாராயணன்" என்றதுக்கர்த்தம் - ப்ராப்தனான் இத்யாதி. ஒன்றமையாதோ, பலவேணுமோவென்ன - நமோநாராயணாய இத்யாதி. "கிம்தத்

ந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதக:'' (நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:) என்று இதுவேயமையுமிறே ஃபலாபிஸந்திபண்ணில். ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி. [மண்ணுலகில் இத்யாதி] - பரமபதத்திற்காட்டில் ஸம்ருத்தி மிக்கிருந்துள்ள திருவாட்டாற்றைத் தனக்கு நிரூபகமாகவுடையவன். [வளம்] - ஸம்பத்து. ரக்ஷ்யவர்க்கம் குறைவற்ற தேசமாகையாலே ரக்ஷகனுக்கு ஸம்பத்து மிக்கிருக்கும் இங்கு; கைங்கர்யத்துக்கு விச்சேதமில்லாமையாலே ஶேஷபூதனுக்கு ஸம்பத்து மிக்கிருக்கும் அங்கு. [வந்து] - நாம்சேல்லவேண்டும் தேசமடங்கத் தானே வந்து. [இன்று] - நம்பக்கல் இதுக்கடியாயிருப்பதோன்று * நேன்னேற்றில்லை; இன்றிங்ஙனே விடியக்கண்டதித்தனை. [விண்ணுலகம் தருவானாய்] - அங்கே ஒருகுடியிருப்பு மாத்ரமே கோடுத்துவிடுவானாயிருக்கிறிலன். ''வானவர்நாடு'' ''ஆண்மின்கள்வானகம்'' என்கிற போதுவையறுத்து நமக்கே தருவானாக த்வரியாநின்றான். ஆவதழிவதாகிற விபூதி இவர்க்குத் தரமன்றென்று காணும் அவன் நினைவு. இவர்க்கே கோடுக்கையாவது - இவர் ப்ரார்த்தித்தபடியே * வழுவிலாவடிமையைக் கோடுக்கையிறே. [விரைகின்றான்] - நம்மைப்போல் ஆறியிருக்கிறிலன். ''சிறப்பில்வீடு - இறப்பிலெய்துக வெய்தற்க'' என்றுஒரு ஆற்றலுண்டிறே நமக்கு. தான் முற்பாடனாய்ச் சரக்குக்கட்டிப் புறப்பட்டு நிற்பது, இவர் தாழ்த்தாரென்று மீளாப் போய்ப்புக்கு ''ஆழ்வீர்! போரீரோபோரீரோ'' என்று பதறாநின்றான். ஒரு கார்யப்பாட்டாலே வைத்தானாய், அக்கார்யம் முடியுமளவானவாறே த்வரியாநின்றான். ஸர்வஶக்தியான தனக்கும் க்ரமப்ராப்தி பற்றாதபடியாய்த்து த்வரையிருக்கிறபடி. ஸங்கல்பித்தகார்யம் செய்யுமளவும் பொறுக்கிறிலனாய்த்து. இப்படி செய்யநினையாநின்றானாகில் நினைக்கிறான்: தான் ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனாகில் பின்னை அங்ஙன் விரையவேண்டுகிறதேன்னேன்னில்,—[விதிவகையே]-நாம்சோல்லப்பரமபதம்தந்தானாகவேணுமென்றிராநின்றான். ''எம்மாவீட்டுத்திறமும்செப்பம்'' என்றாரே, அதுதவிர்ந்து ''உண்டிட்டாயினியுண்டொழியாய்,'' ''திருவாணைநின்னாணை'' என்று தடுத்தும் வளைத்தும் செய்தால் பின்பு

ஸம்ஸாரி ப்ரதேஶா: கிம் தத்ர ஸம்ஸாரிவர்ப்ரதேஶா:। நமோநாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:.'' ''மிக்க'' என்றதுக்கர்த்தம் - பரமபதத்தில் இத்யாதி. மண்ணுலகிலே பரமபதத்திலுங்காட்டில் ஸம்பத்துமிக்கிருந்துள்ள வாட்டாற்றையுடையவனென்று பதார்த்தம். பரமபதத்திற்காட்டில் மண்ணுலகிலே ஸம்பத்து மிகக்கூடுமோவென்ன-ரக்ஷ்யவர்க்கம் இத்யாதி வாக்யத்வயம். ''வந்து'' என்றதுக்கு பாவம்-நாம்சேல்ல. ''இன்று'' என்றதுக்குபாவம்-நம்பக்கல் இத்யாதி. நேன்னேற்று - நேற்றுமுதல்நாள். ''விண்ணுலகம'' என்றதுக்கு பாவம் - அங்கே இத்யாதி. ஃபலிதம் - வானவர் இத்யாதி. இவ்விபூதியையும் கொடாதொழிவானென்னென்ன - ஆவதழிவது இத்யாதி. இவர்க்கே விண்ணுலகம் தருகையாவதேதென்ன - இவர்க்கே இத்யாதி. ''விரைகின்றான்'' என்றதுக்கு பாவம் - நம்மைப்போல் இத்யாதி. இவர்அப்படி யாறியிருந்தாரோ? என்ன - சிறப்பில் இத்யாதி. ஆற்றல் - பொறை. விரைகிறதின் சரமாவதி - தான் முற்பாடனாய் இத்யாதி. இத்தனைநாளுமின்றிக்கே இப்போது த்வரிப்பானென்னென்ன - ஒருகார்ய இத்யாதி. கார்யப்பாட்டாலே - கார்யவஶாத் என்றபடி. கார்யமாவது - திருவாய்மொழி தலைக்கட்டுகை. க்ரமேண வருகிறானென்றிருக்க வொண்ணாதோவென்ன - ஸர்வஶக்தி இத்யாதி. ''விரைகின்றான்'' என்றவர்த்தயானார்த்தம் - ஸங்கல்பித்த இத்யாதி. திருவாய்மொழி பாடுவிக்கவேணுமென்று ஸங்கல்பித்தகார்யமென்றபடி. விரையவேண்டுகிறதேன்என்னில் - செய்கிறதுக்கென்னென்னில்என்றபடி. நான் சொல்லவென்கைக்கு இவர் ''வேண்டா'' என்றாரோவென்ன - எம்மாவீடு இத்யாதி; இது, வேண்டா என்றமாத்ரத்துக்கு ப்ரமாணம். ''விரைகின்றான்'' என்ற ஈடுபாட்

* நென்னெல்என்று பாடாந்தரம்.

கோடுப்பதாக இராநின்றான். [விதிவகையே - விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான்] - இவர்க்கு ருசிபிறப்பதற்கு முன்பு தான் எதிர்சூழல்புக்கு விரைந்துதிரிந்தான்; ருசிபிறந்த பின்பு இவர் விரையத்தொடங்கினார்; அதுகண்டு அவனுக்கு இவரளவல்லாதபடி விரைதல் மிக்கது; அதுகண்டு இவர் விஸ்மயப்படுகிறார். இவனுக்கு ருசிபிறக்குமளவுமிறே அவன் ஆறியிருப்பது? இவனுக்கு அதுண்டானால் பின்னை பேற்றளவுஞ்செல்ல விரைவான் அவனாய்த்து. உடையவனிறே உடைமைக்கு விரைவான்? [எண்ணினவாறாகா] - "இந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்று இவ்வளவன்றோ நாம் எண்ணிற்று? அவனை "விரையவேணும்" என்றெண்ணினோமோ? [இக்கருமங்கள்] - ஸம்பத்விஷயத்தில் தாந்தாம் எண்ணியிருந்தவளவல்லகாண் கார்யம் ஃபலிக்கும்படி. லௌகிகரிலே "சிலரை என்கார்யத்துக்கு நீ கடவை" என்று சொன்னாலும், பின்னையும் பேற்றளவுஞ்செல்லத் தனக்கே ப்ரவர்த்திக்கவேணுமே; அப்படியேயின்னைத்திராதே கொள்ளாய் இவ்விஷயத்திலும். [என்னெஞ்சே] - அவன் முறையிலே விரைய நாம்பெற்றது, நீ முறையிலே நிற்கையன்றோ? பந்தஹேதுவாகை தவிர்ந்து மோக்ஷஹேதுவாகையன்றோ? உன்னாலேவந்த ஸம்ருத்தியன்றோ இதெல்லாம்? (௩)

---

## நான்காம் பாட்டு.

---

என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து
வன்னெஞ்சத்திரணியனைமார்விடந்தவாட்டாற்றான்
மன்னஞ்சப்பாரதத்துப்பாண்டவர்க்காப்படைதொட்டான்
நல்நெஞ்சே! நம்பெருமான்நமக்கருள்தான்செய்வானே.

**ஆ.**—(என்னெஞ்சத்துள்.) - ஸ்வகாதி பரமவ்யோமவாங்மநஸஅபரிச்சேத்யமான திருநாட்டை நம்முடைய சிறுமைபாராதே நமக்குத்தந்தருளுமோவென்னில்;— என்னுடைய நிகர்ஷமும் சிறுமையும்பாராதே என்னெஞ்சுள் புகுந்திருந்து என்னையுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழியைச்சொல்லி ஆஸ்ரிதவிரோதிகளான ஹிரண்யதுர்யோதநாதி நிரஸநத்தையும் எனக்கு போக்யமாகச் செய்தருளின நிரவதிக ஸௌசீல்ய காருண்ய ஔதார்யாதி குணங்களையுடையனாயிருந்தவன், இனித் திருநாட்டை

---

டுக்கு ஸாவம் - இவர்க்குருசி இத்யாதி. அவனறியிருக்க இவரன்றோ த்வரிக்க ப்ராப்தமென்ன - இவனுக்கு இத்யாதி. அதுக்கடியேதென்ன - உடையவன் இத்யாதி. எண்ணினவாறாகா - எண்ணினப்ரகாரமன்றிக்கே யிருந்தன. நாம் எண்ணியிருந்த வளவல்லவென்றபடி. எண்ணுக்கு மேலே ஃபலிக்குமென்றுகருத்து. "எண்ணினவாறாகா" என்றத்தால் ஃபலிதமான ஸார்த்த ஸாவம் - இந்நின்ற இத்யாதி. "கருமங்கள்" என்ற பஹுவசநத்துக்கு ஸாவம் - ஸம்பத்விஷயத்தில் இத்யாதி. இக் கருமங்கள் - இவ்விஷயத்தில் ஃபலிக்கும் கார்யங்களென்றபடி. "இ" என்றதுக்கு ஸாவம் - லௌகிகரிலே இத்யாதி. நெஞ்சென்னாதே "என்னெஞ்சு" என்றதுக்கு ஸாவம் - அவன் முறையிலே இத்யாதி. உக்தார்த்த விவரணம் - பந்தஹேதுவாகை இத்யாதி. இதுக்கு "ம நஏவ ம நுஷ்யாணாம்" என்றதிலே நோக்கு. 'நாராயணனை நாமங்கள் பலசொல்லி - நண்ணினம், மண்ணுலகில்' என்றுதொடங்கி, 'இன்று - விதிவகையே - விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான், என்னெஞ்சே! இக்கருமங்கள் - எண்ணினவாறாகா' இத்யந்வய:. (௩)

நமக்குத் தந்தருளுமென்னுமிடம் சொல்லவேண்டுமோ? என்னைக்கொண்டு திருவாய்மொழியைச் சொல்லுவிக்கையாகிற இந்த ஸம்ருத்திபிற்காட்டிலும் சீரியதோ திருநாடென்கிறார்.

ஓ.—நாலாம்பாட்டில், நம்விஷயத்தில் இத்தனை ஔதார்யகுணம் ஸம்பவிக்குமோ என்னில்; ஆஸ்ரிதவிஷயத்தில் எல்லாம் செய்வானானபின்பு நாம் அபேக்ஷித்ததெல்லாம் செய்யுமென்கிறார்.

[என்னெஞ்சத்து என்றுதொடங்கி] - ஹ்ருதயத்திலேயிருந்து, என்னை உபகரணமாகக்கொண்டு இஸ்ஸம்ஸாரத்தாலே இப்படி விலக்ஷணமான திருவாய்மொழியையருளிச்செய்து, ஆஸ்ரிதனான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்காக வலியநெஞ்சையுடையனான ஹிரண்யனுடைய மார்வைப்பிளந்த திருவாட்டாற்றில் எம்பெருமான். [மன்னஞ்ச என்றுமேலுக்கு] - பீஷ்மாதி ராஜாக்கள் அஞ்சும்படி பாரதஸமரத்திலே ஆயுதம் தொடேன் என்று ப்ரதிஜ்ஞைபண்ணி வைத்து ஆஸ்ரிதரான பாண்டவர்களுக்காக அஸத்யப்ரதிஜ்ஞனாய் ஆயுதத்தை எடுத்தான் எம்பெருமான் என்றால் உகக்கும்நெஞ்சே! நமக்கு நாயனானதான் நம்அபேக்ஷிதங்களெல்லாம் செய்யும்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணத்தில் பக்ஷபாதியானவன் நமக்கு நிரவதிகோபகாரகனாயிராநின்றானென்கிறார்.

நல்நெஞ்சே - பகவத்விஷயமென்றால் ப்ரவணமானநெஞ்சே! வன்னெஞ்சத்து-(ப்ராவண்யமில்லாதவளவன்றியே ப்ரத்வேஷமாவிஷ்டமாம்படி)வலியநெஞ்சையுடைய, இரணியனை - ஹிரண்யனை, (நோய்நின்றவிடம் குட்டமிட்டுப் பரிஹரிப்பாரைப்போலே), மார்விடந்த - அவன் நெஞ்சிருக்கிறமார்பை இடந்து, (ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக), வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே ஸந்நிஹிதனாய், மன் - ராஜாக்களெல்லாரும், அஞ்ச - அஞ்சும்படி, பாரதத்து - பாரதஸமரத்திலே, பாண்டவர்க்கு ஆ - பாண்டவர்களுக்காக,படைதொட்டான்-(ஆயுதமெடேனென்று) ஆயுதமெடுத்தபக்ஷபாதியாய், நம்பெருமான்-(இவ்வபதானங்களாலே) நமக்கு ஸ்வாமியானவன், என்நெஞ்சத்து-(அநந்யபரமான) என் ஹ்ருதயத்தைவஸீகரித்து, உள்ளிருந்து - உள்ளே பொருந்தியிருந்து, இங்கு - இவ்விருப்பிலே, இரும் - (அத்யந்தவிலக்ஷணமாம்படி) பெரிய, தமிழ்-த்ராமிடமயமான, நூல் - ஶாஸ்த்ரரூபமாய், இவை - அபரோக்ஷஸித்தமான வைலக்ஷண்யத்தையுடைத்தான இத்திருவாய்மொழிதன்னை, மொழிந்து - தானே ப்ரவர்த்தகனாயருளிச்செய்து, (அவ்வளவில்நில்லாதே) நமக்கு, அருள் - அதிஶயிதோபகாரங்களை, தான் செய்வானே - பண்ணுவானாகத் தானேபாரியாநின்றான்.

இ.—நாலாம்பாட்டில், ஸர்வேஶ்வரன் தான் நாம் விதித்த இது செய்வதாகச்சொன்ன இது ஸம்பவிக்குமோவென்னில்; அவனுடைய ஆஸ்ரிதவாத்ஸல்யத்தை அநுஸந்தித்தால் கூடாததில்லை என்கிறார்.

[என்னெஞ்சத்து] - ஸம்ஸாரத்திலே விஷயாந்தரப்ரவணமான நெஞ்சென்று இவர் இறாயாநின்றார்; இவர் “என்னது” என்ற இதுவே ஹேதுவாக அவன்மேல்விழாநின்றான். இவர் அயோக்யமென்று அகல, அதுவே ஹேதுவாக அவன்புகுரநில்லாநின்றான். [உள்] - கார்யார்த்தமாக இருக்கையன்றிக்கே தன்வீடாய்த்தோற்ற உள்ளே புகுந்தான். [இருந்து] - புறம்பு ஒருவிபூதியுண்டென்று நினையாதே ஸ்தாவரப்ர

திஷ்ட்டையா யிராநின்றான். [இங்கு] - பரமபதத்தில் பரிமாற்றத்தை ஸம்ஸாரத்திலே உண்டாக்கினான். [இருந்தமிழ்] - விலக்ஷணமான தமிழ். [நூல்] - பின்பு லக்ஷணங் கட்டுவார்க்கும் இதுவே கொண்டு செய்யவேண்டும்படியிருக்கை. இவர் ஆற்றாமையாலே சொன்னஇத்தை அவன் லக்ஷணபேதமாக்கினானாய்த்து. [இவை] - தமக்கும் கொண்டாட வேண்டியிருக்குமிவை. [மொழிந்து] - பாடினானவனாய்த் தாம் கற்றுச் சொன்னாரோபாதியாக நினைத்திருக்கிறார். [வன்னெஞ்சம்] - பகவத்விஷயமென்றால் அஸஹ்யமான நெஞ்சு. [மார்விடந்த] - தூர்மாநங்கிடந்தவிடத்தைக் குட்டமிட்டழிக்கை. முன்பு தமப்பன் பகையாகச் சிறுக்கனுக்குஉதவினவன் நமக்குஉதவானோ என்றுகருத்து. [வாட்டாற்றான்] - பிற்பாடர்க்கு உதவுகைக்காகத் திருவாட்டாற்றிலே வர்த்திக்கிறவன். [மன்னஞ்சஇத்யாதி] - ஸிம்ஹத்தைக்கண்ட நரிபோலே பீஷ்மாதி ராஜலோகங்கள் அஞ்ச, பாரதஸமரத்திலே "க்ருஷ்ணாஸ்ரயா: க்ருஷ்ணபலா:" என்கிறவர்களுக்குக் கைபாளாய். [படைதொட்டான்] - படையெடுத்தான். படைவிட்டானென்னப் பெற்றதில்லை. ஸங்கல்பத்தைக் குலைந்தவித்தனை; கார்யங்கொள்ளப் பெற்றிலன். ஸத்யஸங்கல்பன் என்கிறது ஆஸ்ரிதரை யொழிந்தவிடத்திலேயிறே. விடாவிட்டதென்னென்னில்; அர்ஜுநன்தான் "நீ ஆயுதம்விடில் எனக்கு அவத்யம்" என்கையாலே. [நல்நெஞ்சே] - ஆஸ்ரிதபக்ஷபாதத்தைக் கேட்டால் உகக்கும் நெஞ்சே! [நம்பெருமான்] - நமக்கு ஸ்வாமியானவன். [நமக்கு அருள்தான் செய்வானே] - நமக்கு அவ்வருளைப்பண்ணியேவிடும். "விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான்" என்கிறபேற்றைப் பண்ணியேவிடும்; இது நிஸ்சிதம். இசைவுக்கு நீயுண்டு, இசைவைக்கொண்டு கார்யஞ்செய்கைக்கு அவனோடு ஸம்பந்தமுண்டு; நம்பேற்றுக்குக் குறைவுண்டோ?

ஈடு.—நாலாம்பாட்டு. ஸர்வேஸ்வரன் நாம் விதித்தபடியே செய்வானாகச் சொன்னவிது ஸம்பவிக்குமோவென்னில்; – அவனுடைய ஆஸ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்தால் கூடாததில்லைகாண் என்கிறார்.

[என்னெஞ்சத்து] - அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே தன்னையொழிந்த ஸஜாதி விஷயங்களை யுகந்துபோந்ததென்றாய்த்து இவர் 'என்னெஞ்சு' என்று இறாய்க்கிறது. இதில் குணதோஷங்கள் கிடந்தபடி கிடக்க, இவர் "என்னது" என்றதுவே ஹேதுவாக அவன் மேல்விழாநின்றான். இவர் என்னெஞ்சேன்று புறம்பே கால்வாங்காநின்றார்; அவன் அதுவே ஹேதுவாக உள்ளேபோக அடியிடாநின்றான். [உள்] - விடாயர் மேலில் நீரை நீக்கி உள்ளே ஆழமுழுசிக்கிடக்குமாபோலே, நெஞ்சினுள்ளே புகுந்தான். [இருந்து] - தனக்குஅவ்வருகு ஒருவிபூதியுண்டாகவும், அங்கேபோவானாகவும் நினைத்திருக்கிறிலன். ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக விருந்து. [இங்கு] - அங்கில்லாத ஸம்பத்தையும் இங்கேயுண்

நாலாம்பாட்டு.—என்னெஞ்சத்துள் இத்யாதி. "வன்னெஞ்சத்து" என்று தொடங்கி "படைதொட்டான்" என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வேஸ்வரன் இத்யாதி. ஸர்வேஸ்வரன் என்றது - நிரங்குஸ ஸ்வதந்த்ரனென்றபடி.

"என்" என்றதுக்கு பாவம் - அநாதி இத்யாதி. இப்படிப்பட்ட இதிலே யவனை மேல்விழுகைக்கு ஹேதுவேதென்ன, வ்யாமோஹமென்கிறார் - இதின் குணதோஷங்கள் இத்யாதி. "உள்ளிருந்து" என்றத்தைப்பற்ற - மேல்விழாநின்றான் என்றது. விவரணம் - இவர்என்னெஞ்சேன்று இத்யாதி. நெஞ்சத்தென்னாதே, "உள்" என்றதுக்கு பாவம் - விடாயர் இத்யாதி. "இருந்து" என்றதுக்கு பாவம் - தனக்கு இத்யாதி. "இங்கு" என்று - நித்யவிபூதியை வ்யா

டாக்கினுன். [இருந்தமிழ்] - அவ்விஷமதிக்கும் அடங்காதபடியாய்த்து இவற்றின்நன்மை. "கேட்டாரார்" என்னக்கடவதிறே. [நூல்] - பின்புள்ளார்க்கும் இதுகொண்டு லக்ஷணம் கட்டலாம்படியாய்த்து இவையிருப்பது. இவர் ஆற்றுமையாலே சொல்லச் செய்தேயும், அது ஸர்வலக்ஷணோபேதமாம்படி சொல்லுவித்தானுய்த்து. [இவை] - "இன்னதுசெய் தான்" என்னப்புக்கு நடுவே 'இவை' என்று அநுஸந்திக்கிறாராய்த்து. [மொழிந்து] - ஒரு வன் பாடின கவியைக் கற்றுச் சொன்னவனும், தனக்கு அதிலே துவாலாக அந்வயமுண் டாக அபிமாநித்திருக்கும் ; அதுவும் நினைத்திருக்கிறிலர்காணும் இவர். "என் முன் சொல் லும்" என்றவற்றையும் ஒன்றாக நினைத்திருக்கிறிலர். [வன்னெஞ்சத்து இத்யாதி] - ஸம வத்விஷயமென்றால் அதிர்ந்திருக்கும்படிதிண்ணிதான நெஞ்சையுடைய ஹிரண்யனுடைய முருட்டுநெஞ்சை அநாயாஸேந இடந்த திருவாட்டாற்றான். முன்பு தம்பன் பகையாகச் சிறுக்கனுக்கு உதவினவன், நமக்கு உதவானோ என்று கருத்து. துர்மாநம் கிடந்த விடத்தைக் குட்டமிட்டு இடந்தான் காணும். [வாட்டாற்றான்] - பிற்பாடர்க்கு உதவு கைக்காகத் திருவாட்டாற்றிலே வர்த்திக்கிறவன். அவன்நெஞ்சிற் குறைதீர்த்தாற்போலே நம்நெஞ்சிற் குறை தீர்க்கவந்து நிற்கிறவன். [மன்னஞ்ச] - அதிரதமஹாரதரென்று பேர்பெற் றவர்களடங்கலும், ஸிம்ஹத்தைக்கண்ட நரிபோலே குலையும்படியாக. ராஜலோகமடங் கலும் அஞ்சும்படியாக. [பாண்டவர்க்காய்] - "இன்னார்தூதன்" என்னும்படி அவர்க ளுக்குக் கையாளாய். [படைதொட்டான்] - படையெடுத்தான். படைவிட்டானென் னப் பெற்றதில்லை: ஸங்கல்பத்தைக் குலைத்தானித்தனையே ; கார்யங்கொள்ளப் பெற்ற தில்லை. ஸத்யஸங்கல்பன் என்றது,-ஆஶ்ரிதரை யொழிந்தவிடத்திலிறே ; விடாவிட்டது, அர்ஜுநன் "நீ ஆயுதம்விடுகை எனக்கு அவஶ்யம்" என்கையாலே. ஆகில் தவிரலா

---

வர் . . ற்ார் - அங்கில்லாத இத்யாதி. ஸம்பத்து என்றது - * இருந்தமிழ்நூலை. "..." என்றதுக்கு ஸாவம் - அவ்விஷமதிக்கும் இத்யாதி. இருமை - பெருமை. அதாவது - வைலக்ஷண்யாதிக்யமென்றபடி. அப்படி யிருக்குமோவென்ன - கேட்டாரார் இத்யாதி. "நூல்" என்றதுக்கு ஸாவம் - பின்புள்ளார்க்கும் இத்யாதி. நூல் - ஶாஸ்த்ரம். ஆற்றாமைக்குப் பாசுரமிட் டுச் சொன்னவை, லக்ஷணவத்தாமோவென்ன - இவராற்றமை இத்யாதி. "தமிழ் நூல் மொழிந்து" என்னுதே, நடுவே "இவை" என்றதுக்கு ஸாவம் - இன்னது இத்யாதி. மொழிவித்து என்னுதே "மொழிந்து" என்றதுக்குஸாவம் - ஒருவன் இத்யாதி. துவாலாக - அதிகமாக. கீழே "என்முன்சொல்லும்" என்று ப்ரயோஜநகர்த்தாவாகச் சொலில்லையோவென்ன - என்முன்சொல் லும் இத்யாதி. இதுக்கு ஸார்த்தஸாவம் - முன்பு இத்யாதி. "மார்விடந்த" என்றதுக்கு ஸாவம் - துர்மாநம் இத்யாதி. குட்டமிட்டு - பள்ளமெடுத்து. "மார்விடந்தவாட்டாற்றான்" என்று கூட்டி ஸாவம் - அவன்நெஞ்சில் இத்யாதி. அவன்நெஞ்சிற்குறை - ஹிரண்யன் நெஞ்சில் காலுஷ்ய மென்னுதல், ப்ரஹ்லாதன்நெஞ்சில் குறையென்னுதல். நம்நெஞ்சில்குறை யென்றது - பரம பக்ஷத்திலே நம்மைக் கொடுபோகாமையாலே "எகமெண்ணும்" என்னும் குறையென்றபடி. "மன்" என்று - ஜாதிவாசி. ராஜலோகமடங்கலுமென்றபடி. "மன்னஞ்ச" என்றதுக்கு ஸாவம் - அதிரத இத்யாதி. "ஆய்" என்றதுக்கு ஸாவம் - இன்னார்தூதன் இத்யாதி. திருமொழி இரண்டாம் பத்து இரண்டாந்திருமொழி மூன்றாம்பாட்டு, "முன்னோர்தூது" இத்யாதி. இதுக்குஸாவம் - படைவிட்டான் இத்யாதி. படை - திருவாழி. விவரணம் - ஸங்கல்பத்தை இத்யாதி. ஆனால் ஸத்யஸங்கல்பத்வம் குலையாதோவென்ன - ஸத்யஸங்கல்பன் இத்யாதி. எடுத்தால் விடாதொழிவா னென்னென்ன-விடாவிட்டது இத்யாதி. அப்படி ஆஶ்ரித பாதந்த்ரனோவென்ன -மன்னர்மறுக இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து இரண்டாந்திருமொழி எழாம்பாட்டு. இதுக்கு ஸாவம் - அர்ஜுநன் இத்யாதி. மேலுக்கவதாரிகை - அவனுடைய இத்யாதி. "நன்னெஞ்சே, நம்

இவன் இதிலே பண்ணுகிற ஆதரத்தைக்கண்டு, "இவனுடைய அபிநிவேஶமிருந்தபடியால் இவ்வுடம்போடே நம்மைக்கொடுபோக நினைத்திருக்கிறன்போலேயிருந்தது ; அப்படிச்செய்தபோது இஸ்ஸம்ஸாரம் நமக்கு நித்யமாய்விடும் ; இங்கேயிருந்து இதுக்கொரு முடிவுகண்டதாமத்தை யிழந்தோமாவோமித்தனை; இத்தைக் கழித்துக்கொள்ளவேணும்" என்றுபார்த்தார்; "என்பக்கற்பண்ணின அபிநிவேஶமாகில் இத்தை விரும்புகைக்கு அடி, எனக்கு இது அநபிமதம் ; தேவரும் இதில்பண்ணுகிற விருப்பத்தைத் தவிரவேணும்" என்ன ; "நீர் உம்முடைய உத்தேஶ்யத்தை விடாதவோபாதி நாமும் நம்உத்தேஶ்யத்தை விடுவுதோமோ ?" என்ன ; "இவன் இப்படிவிரும்புகிறது இதினுடைய தோஷதர்ஶநம்பண்ணாமையிறே. இவனை இதில் தோஷதர்ஶநத்தைப் பண்ணுவிப்போம்" என்று பார்த்து, "இதாகிறது உபசயாத்மகமாய் ஹேயமாயிருப்பதொன்று; விரும்பப்படும் ஆத்மாவைப்போலே ஏகரூபமாய் விலக்ஷணமாயிருப்பதொன்றல்ல ; இத்தையுபேக்ஷித்தருளவேணும்" என்றார் ; அதுதானே இவனுக்கு விருப்பத்துக்கு உடலாய்த்து ; அபிமதவிஷயத்திலழுக்கு உகப்பாரைப்போலே "ஸர்வதா இவன் விடமாட்டானுயிருந்தான்; இவன்றன்னைக் காற்கட்டியாகிலும் இக்காற்கட்டை அவிழ்த்துக் கொள்ளுவோம்" என்று பார்த்து, "இதில்பண்ணுகிறவிருப்பத்தை தேவர் தவிரவேணும்" என்று ஶரணம்புக்கார் ; இவர் †சொன்னபடியே செய்யஇழிந்தவனுகையாலே தனக்கு இதிலே மேன்மேல் அபேக்ஷை செல்லச்செய்தேயும் இவர்க்கு இது இப்படி உபேக்ஷா விஷயமான பின்பு நாமும் இனி இத்தை வருந்தி உபேக்ஷிப்போம்" என்று பார்த்தான். இவர்பக்கல் பாரதந்த்ர்யத்தாலே இத்தையொழிய அவன் கொடுபோவானுயிருந்தான். ஆக, இப்படியாலே தொடங்கின பாரதந்த்ர்யத்தை நிகமித்து, "ஸர்வநியந்தாவாய் ஸர்

அதெப்படியென்ன - தந்தாமை இத்யாதி. அபிநிவேஶமிருந்தபடியால் என்றது - "ஒருமாநொடியும் பிரியான்" இத்யாதியைப்பற்ற. பலபாட்டுக்களிலும் இவர் தேஹத்தில் அவன் வ்யாமோஹம் பண்ணும் ப்ரகாரம் சொல்லுகையைப்பற்ற பஹுமுகமான உக்திப்ரத்யுக்திகளை யருளிச்செய்கிறார் - என்பக்கல் இத்யாதி. "திருமாலிருஞ்சோலை - கைவிடேல்" என்றத்தைப்பற்ற - நீர் உம்முடைய உத்தேஶ்யத்தை இத்யாதி. இப்ப்ரவேஶத்திலே மூன்றிடத்திலே ஈஶ்வரன் விரும்புகிறதாகவும் இவர் தவிரச்சொன்னதாகவும் சொல்லுகிறது - பலபாட்டுக்களிலும் இவர் திருமேனியில் ஈஶ்வரனுக்கு உண்டான வ்யாமோஹத்தைச் சொல்லுகையாலே. அங்ஙனமன்றிக்கே, "மங்கவொட்டே" என்றும், பின்னும் "மங்கவொட்டுஉன்மாமாயை" என்றும் சொல்ல, பின்னும் அவன் இதின்தோஷம் அறியமாட்டாமையாலே ஆனைக்குப்பு ஆடுவாரைப்போலேயிருக்க, "பொங்கைம்புலனும்" இத்யாதியாலே தோஷதர்ஶநம் பண்ணுவிக்கையாலே முக்காலருளிச்செய்கிறானென்றால் நல்லது ; இது பாட்டுவ்யாக்யாநங்களிலே ஸ்புடம். 'இதினுடைய தோஷதர்ஶநமென்று தொடங்கி ஹேயமாயிருப்பதொன்றென்னுமளவும் - "பொங்கைம்புலனும்" இத்யாதியைப்பற்ற. உபசயம் என்றது - அபசயத்துக்கும் உபலக்ஷணம். வ்ருத்திக்ஷயங்களை யுடைத்தாயென்றபடி. காற்கட்டை - விரோதியானவுடம்பை. "மங்கவொட்டு" என்றத்தைப்பற்ற - தவிரவேணும் என்றது. "நங்கள் கோனே" என்று ஶேஷித்வத்தை யநுஸந்திக்கையாலும், "மங்கவொட்டு" என்று ப்ரார்த்திக்கையாலும், "ப்ராப்தநாதி:-ஶரணாகதி: - யாதநா-ப்ராப்தி:" என்றிருக்கையாலே சரணம் புக்கார் என்றது. இவர் ப்ரார்த்தித்தால் அத்யபிநிவிஷ்டனானவன் தவிருமோவென்ன - இவர் சொன்னபடியே இத்யாதி. வருந்தி என்றது - "தானுங்காரமாய்ப்புக்கு" என்றதிலே விவக்ஷிதம். "மானங்காரமனங்கெட" இத்யாதியைப்பற்ற - இத்தையொழிய அவன் கொடுபோவானு யிருந்தான் என்றது. தொடங்கின பாரதந்த்ர்யத்தை நிகமித்து - * அருள்பெறுவாரில் தொடங்கின

† சொன்னபடிஎன்று அடையவளைந்தான்பாடம்.

வாதிகளுன ஸர்வேஶ்வரன், தனக்கு இதிலே அபேக்ஷையும் செல்லாநிற்கச்செய்தே, நாம் 'இத்தைத் தவிரவேணும்' என்னத் தவிருவதே! இதொரு ஶீலமிருக்கும்படியே !! இவ்விஷயத்தில் ஒருவரும் இழியாதேகொள்ளுங்கோள் ; இழிந்து நான் பட்டதுவே யமையும்'' என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பிறர்க்குச் சொல்லித் தலைக்கட்டுகிறுர்.

---

## முதற் பாட்டு.

---

செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்தாட்செய்ம்மின்திருமாலிருஞ்சோலை
வஞ்சக்கள்வன்மாமாயன் மாயக்கவியாய்வந்துஎன்
நெஞ்சுமுயிரும்உள்கலந்து நின்றுர்அறியாவண்ணம்என்
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தானே.

ஆ.—எம்பெருமானைக் கவிபாடுகிறவரைக் குறித்து, ''நீங்கள் அவனுக்கு அடிமைசெய்யுமிடத்தில் உங்களுயிரைக் காத்துக்கொண்டு அடிமைசெய்யுங்கோள். அவன் தனக்குஅடிமைசெய்வாரை அஸாத்ம்யமாம்படி அதிமாத்ரஸம்ஶ்லேஷத்தைப் பண்ணிபாதிக்குமே:அவர்களுடையஇச்சாநுகுணமாக அடிமைசெய்வித்துக்கொள்ளும் ஸ்வபாவனல்லனே யென்னில் ;—அவன் பாதிக்கும் ஸ்வபாவனுயிருந்துவைத்தே பாதியாதானைப்போலே யிருக்கும் ஒருமஹாவஞ்சகன் கிடிகோள்; எங்ஙனேயென்னில்;- என்னை உபகரணமாகக்கொண்டு கவிசொல்லுகையென்னும் வ்யாஜத்தினுலே என்னுள்ளேபுகுந்து கலந்து, ''இன்னபடிசெய்தருளினுன்'' என்று * அயர்வறுமமரர்க்கும் அறிய நிலமல்லாததொருபடி என்னெஞ்சையும் உயிரையும் தன்னுள்ளேயடக்கி, தானே யாம்படி மாள ஜீவித்து பரிபூர்ணனுன்''என்கிறுர்.

ஓ.—முதற்பாட்டில், ''திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ள'' என்று ஒரு பேரையிட்டுக்கொடு வந்துபுகுந்து தம்பக்கல் எம்பெருமான் பண்ணின வ்யாமோஹத்தைச்சொல்லி, இவனுக்கு அடிமைசெய்வார் இவன் குணவெள்ளத்திலே அகப்படாதே கொள்ளுங்கோள் என்கிறுர்.

[செஞ்சொற்கவிகாள் உயிர்காத்தாட் செய்ம்மின்] -செவ்விய சொல்லையுடைய கவிகாள்! கவிபாடி அடிமைசெய்யுமிடத்தில், உங்களைப் பரிஹரித்துக்கொண்டு அடிமை செய்யுங்கோள். [திருமாலிருஞ்சோலை வஞ்சக்கள்வன்] - ''என்கண்ணன் கள்வம் எனக்குச் செம்மாய்நிற்கும்'' என்னுமாபோலே மெய்செய்கிறுனென்று தோற்றும்படி தெரியாமே வஞ்சிக்கவல்லனுய், அதுக்கடியான மஹாஶ்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையான். [மாயக்கவியாய் என்றுமேலுக்கு] - ''அத்யாஶ்சர்யாவஹமான திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ள'' என்று ஒருபேரையிட்டுக்கொண்டு இப்பரிமாற்றத்துக்கு நிலவரானுர்க்கும் தெரியாதபடி என்நெஞ்சையும் உயிரையும் உள்ளேபுக்குக் கலந்து அவற்றை ஜீவித்து என்அபிமாநத்தைப்போக்கித் தானே எனக்கு அபிமாநியாய் அத்தாலே பூர்ணனுன்.

---

ஈஶ்வரனுடைய பாரதந்த்ர்யத்தை இத்திருமாய்மொழியிலே நிரூபித்தென்றபடி. '' உயிர்காத்தாட் செய்ம்மின்''என்றத்தைப்பற்ற - ஒருவரும் இழியாதே கொள்ளுங்கோள் என்றது.

ப.—முதற்பாட்டில், "கவிபாடுவித்துக்கொள்ள" என்றொரு வ்யாஜத்தாலே ஈஶ்வரன் தம்பக்கல் பண்ணின அபிநிவேஶத்தைக் கண்ட ஹர்ஷத்தாலே, தந்தாமை வேண்டியிருப்பார் இவ்விஷயத்திலகப்படாமல் ஆத்மாவை நோக்கிக்கொண்டு அடிமைசெய்யுங்கோளென்று, தாம் பட்ட படியை யருளிச்செய்கிறார்.

திருமாலிருஞ்சோலை - (ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகத்) திருமலையிலே ஸந்நிஹிதனாய், (அகப்பட்டாருடைய ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கும்இடத்தில்); வஞ்சக்கள்வன்-அபஹாரகனென்றறியவொண்ணாதபடி வஞ்சித்து அபஹரிப்பானாய், மா மாயன் -(அதுக்கடியாய் எதிர்த்தலையை மதிமயக்கும்) அத்யாஶ்சர்யமான ரூபகுணாதிகளையுடையனானவன், மாயக்கவியாய் - கவிபாடுவித்துக் கொள்ளுகையாகிற க்ருத்ரிம வ்யாபாரத்தாலே யுளனாய், வந்து - (நாமிருந்தவிடத்திலே தான் அபிநிவிஷ்டனாய்) வந்து, (உள்ளுறை காட்டுவாரைப்போலே), என்னெஞ்சுள்ளும் - என்நெஞ்சுக்குள்ளேயும், உயிருள்ளும் - ஆத்மாவுக்குள்ளேயும், கலந்து - ஒருநீராகக்கலந்து, நின்றார் - பரிஸரவர்த்திகளான லக்ஷ்மீப்ரப்ருதிகளும், அறியாவண்ணம் - அறியாதபடி, அவை - அந்த, (என்), நெஞ்சும் - நெஞ்சையும், உயிரும் - உயிரையும், (பிரித்துக்காணவொண்ணாதபடி), உண்டு - க்ரஸித்து, (அசேதநமான நெஞ்சோபாதி சேதநனுடைய போக்த்ருத்வமும் அஸத்ஸமமாம்படி), தானேயாகி - தானே போக்தாவாய்(ப்பெறாப்பேறு பெற்று), நிறைந்தான் - அவாப்த ஸமஸ்தகாமனானான்; செம் - (ப்ரயோஜநமில்லாத) செவ்வையையுடைத்தாய், (ஸ்வயம்ப்ரயோஜநரூபமான), சொல் - சொற்களாலே, கவிகாள் - கவிபாடவல்லவர்களே! உயிர்காத்து - (அவன்கையில் உங்களுடைய) ஆத்மாத்மீயங்கள் அகப்படாதபடி காத்துக்கொண்டு, ஆட்செய்மின் - வாசிகமான அடிமைசெய்யப் பாருங்கோள். அநந்யப்ரயோஜநராய் இழிவார்க்கு ஆத்மாத்மீயங்கள் அவனாலே அபஹ்ருதமாகை அவர்ஜநீய மென்று கருத்து.

இ.—முதற்பாட்டில், "திருவாய்மொழி பாடுவிக்க" என்று ஒரு வ்யாஜத்தாலே புகுந்து தம்பக்கலிலே அவன் பண்ணின வ்யாமோஹத்தைக்கண்டு, இவனுக்கு அடிமைசெய்வார் ஶீலாதி குணங்களிலே அகப்படாதே கொள்ளுங்கோள் என்கிறார்.

[செஞ்சொற் கவிகாள்] — செவ்விய சொல்லையுடைய கவிகாள். கவிக்குச் செவ்வையாகிறது - அநந்யப்ரயோஜநமாயிருக்கை. ப்ரயோஜநத்தைக் கணிசிக்கை கவிக்குக் குடிலமாகையாவது. "இன்கவிபாடும்பரமகவிகள்" என்றும் "செந்தமிழ்பாடுவார்" என்றும் சொல்லுகிற முதலாழ்வார்களையாய்த்து நினைக்கிறது. "பெருந்தமிழனல்லேன்" என்ன, "வாய் அவனையல்லது வாழ்த்தாது" என்கிறவர்களிறே அநந்ய ப்ரயோஜனர். [உயிர் காத்தாட்செய்ம்மின்] - உங்களை நோக்கிக்கொண்டு நின்று கவி பாடப் பாருங்கோள். கவிபாட்டு வாசிகமான அடிமையாகையாலே, 'ஆட்செய்ம்மின்' - என்கிறார். "ஆட்கொள்வானொத்து என்னுயிருண்ட மாயன்" என்கிறபடியே அடிமை கொள்வாரைப்போலே புகுந்து இத்தலையை யழிக்குமவனாய்த்து; பரிஹரித்துக்கொள்ளுங்கோள்; ஆழங்காலிலே இழிந்து அமிழுமவர்கள் அவ்விடத்திலே கொண்டைக்கோல் நாட்டுமாபோலே, "வம்மின்புலவீர்" என்று முதலிலே ருசியில்லாதாரையும் அழைக்கிற இவர் ஶீலாதி குணங்களிலே அழுந்தி, இழிகிறவர்களையும் வேண்டாவென்கிறாரிறே ப்ரீதிப்ரகர்ஷத்தாலே. [திருமாலிருஞ்சோலை] - இவ்விஷயத்திலே தாம்

இழிந்து அகப்பட்டபடியை அருளிச்செய்கிறார் மேல். திருமலையில் நிலையும் ஶீலத்துக்கு உடலிறே. [வஞ்சக்கள்வன்] - களவுகாணநிற்கச் செய்தே மெய்யென்னலாம்படியிருக்கை. "என்கண்ணன்கள்வம் எனக்குச் செம்மாய்நிற்கும்" என்றாரிறே. களவைக் களவுகாணநிற்கும். [மாமாயன்] - இப்படியறிந்து ஒருவர்க்கும் தப்பவொண்ணாதபடியான ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையவன். நீரகப்பட்ட துறையேதென்ன;— [மாயக்கவியாய்] - "ஆஶ்சர்யாவஹமான கவி பாடுவித்துக்கொள்ள" என்று ஒருபேரையிட்டுக்கொண்டாய்த்து வந்து கிட்டிற்று; "தண்ணீர்" என்றொருபேரையிட்டு, அபிமதவிஷயத்தைக் கிட்டுவாரைப்போலே; கவிபாடுவித்துக் கொள்ளுகையென்றொரு வ்யாஜம், கிட்டுகையே ப்ரயோஜனம். தான் இருந்தவிடத்திலே சென்று நாம் இருக்கையன்றியே, நாம் இருந்தவிடத்திலே தான் வந்து கவிபாடுவித்துக் கொள்ளுகையிறே ஶீலமாவது. வந்து செய்ததென்னென்ன, - [என்னெஞ்சும் உயிரும் உள்கலந்து] - நெஞ்சென்று - ஶரீரத்துக்கு உபலக்ஷணம்: உயிர் என்கிறது - ஆத்மாவை; ஶரீரத்தோடு ஆத்மாவோடு வாசியறப்புக்குத் தன்பேறாக அவகாஹியாநின்றான். முறை அத்தலையித்தலையாய் என்னை ஶிரஸா வஹியாநின்றான். [நின்றார் அறியாவண்ணம்] - கலவிக்கு ஓஶிகரான பிராட்டி, திருவனந்தாழ்வான் முதலானார்க்கும் அஜ்ஞமியாம்படியாய்த்து என்னோடு கலந்தது. "ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது" என்றாரிறே. [என்னெஞ்சுமுயிருமவையுண்டு] - தேஹாத்மவிவேகம்பண்ண அறியாதேயாய்த்து புஜித்தது. சேதநனையும் அசித்தோபாதி பரதந்த்ரனாக்கி புஜித்தான்; "உருவமும் ஆருயிரும் உடனேயுண்டான்" என்கிறபடியே. எனக்கென்ன மாட்டாமைக்கு அசித்தோபாதியாய்த்து சேதநனும். [தானேயாகி] - போகத்தில் இழிகிறபோது இருவராயிழிந்து, எதிர்த்தலையைத் தோற்பித்து, போக்தாவும் அபிமானியும் தானேயானான். [நிறைந்தானே] - அவாப்தஸமஸ்த காமன் ஆழ்வாரைப் பெறுவதற்கு முன்பு குறைவாளனாய், இவரைப் பெற்றபின்பு பூர்ணனானான்; "க்ருதக்ருத்யஞ்ச ராகவ:"; இதுவிறேபுரையற்றஶீலமாவது.

ஈடு.—முதற்பாட்டு. "திருவாய்மொழிபாடுவிக்க" என்றுஒருவ்யாஜத்தாலே புகுந்து தம்பக்கல் அவன்பண்ணின வ்யாமோஹத்தைக்கண்டு, அவனுக்கு அடிமைசெய்வார் ஶீலாதிகளிலே அகப்படாதே கோள்ளுங்கோ ளேன்கிறார்.

[சேஞ்சோல் இத்யாதி] - சேவ்விய சோல்லையுடைய கவிகாள்! கவிக்குச்சேவ்வையாவது - அநந்ய ப்ரயோஜநமாயிருக்கை; ப்ரயோஜநத்தைக் கணிசிக்கை கவிக்குக் குடிலமாகையாவது 'இன்கவிபாடும்பரமகவிகள்' என்றும் 'சேந்தமிழ்பாடுவார்' என்றும்சோல்லுகிற

---

முதற்பாட்டு.—சேஞ்சோல் இத்யாதி. "திருமாலிருஞ்சோலை வஞ்சக்கள்வன்" என்று தொடங்கி "தானேயாகிநிறைந்தான் - செஞ்சொற்கவிகாள்உயிர்காத்தாட்செய்ம்மின்" என்றவற்றைக் கடாக்ஷித் தவதாரிகை - திருவாய்மொழி இத்யாதி. "ஆய்" என்றத்தைப்பற்ற - ஒருவ்யாஜத்தாலே என்றது.

செவ்வைக்கேடேதென்ன-ப்ரயோஜநத்தை இத்யாதி. "செஞ்சொற்கவிகள்" என்கிறது ஆரையென்ன - இன்கவி இத்யாதி. அவர்கள் அநந்யப்ரயோஜநரோவென்ன - பெருந்தமிழன் இத்யாதி. பெருந்தமிழன் - பெரியதமிழன்; மஹாகவியென்றபடி. நல்லேன் பெரிது - பெரிது நல்லேன். இங்கேயிருந்து கவிபாடுகையாலே நித்யஸூரிகளிலும் மிகவும் நல்லனாயிருப்பேனென்று பொருள்; இரண்டாந்திருவந்தாதி எழுபத்துநாலாம்பாட்டு, "யானே தவஞ்செய்தேன்" இத்

முதலாழ்வார்களையாய்த்துநினைக்கிறது. "பெருந்தமிழனல்லேன்" என்று "வாயவனையல்லது வாழ்த்தாது" என்கிறவர்களிறே அநந்யப்ரயோஜநர். [உயிர்காத்தாட்செய்ம்மின்]-உங்களை நோக்கிக்கொண்டு நின்று கவிபாடப் பாருங்கோள். நீங்களுண்டாய்க் கவிபாடவேணுமே. இத்தலையுண்டானாலிறே அத்தலைக்கு மங்களாஶாஸநம்பண்ணலாவது. [ஆட்செய்ம்மின்]-என்கிறார், கவிபாடுகை வாசிகமான அடிமையாகையாலே. *ஆட்கொள்வானொத்தென்னுயி ருண்ட மாயனிறே அடிமைகொள்வாரைப்போலே புகுந்து மற்றைப்படியேயாயிருக்கும் பலிப்பது, பரிஹரித்துச்கொள்ளுங்கோள். "ஆழங்காலிலேயிழிந்து† அமிழ்வார் அவ்விடத்தே கொண்டைக்கோல் நாட்டுமாபோலே, கொண்டைக்கோல் நாட்டுகிறார்" என்று சிற்றாள் கொண்டான். உடையவர், "இன்னுருயிரேன்னுமையாலே அவனுயிரைக்காத்தாட்செய் யுங்கோள்" என்றருளிச்செய்வர். அதாவது - அவன் மேல்விழத் தாங்கள் இருய்க்கை யாவது அவனை இழக்கையிறே; ஆனபின்பு அவனுயிரைக் காவுங்கோள். "இவ்விடம் பரப்புத்துறை, இவ்விடம் மடு" என்று நிலவர் எல்லை குறிக்குமாபோலே. "வம்மின்புல வீர்" என்று முதலிலே ருசியில்லாதாரையும் இரந்தழைக்கிற இவர் ஶீலாதிகளிலே இழி கிறவர்களையும் விலக்குகிறாரிறே, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே. "நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும்", "வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்" என்று ஶீலாதி குணங்களிலே புண்பட்டிறே இவரிருப்பது. உங்களை இழக்கக் கார்யம்பாராதே, அவ னுடைய ஐஶ்வர்யத்திலே இழிநது கவிபாடப்பாருங்கோள். ஶீலகுணத்தில் இழியநினை யாதே கொள்ளுங்கோள். [கவிகாள்உயிர்காத்தாட்செய்ம்மின்] - "கவிகாள்" என்றால் "உயிர்காத்துக்கவிபாடுங்கோள்"என்னவிறே யடுப்பது: அங்ஙன் சொல்லாதே 'ஆட்செய்ம் மின்' என்கிறாராய்த்து; "ஆட்செய்கையாவது-கவிபாடுகைஎன்றிருக்கும் * புகழுநல்லொரு

யாதி. முதற்றிருவந்தாதி பதினொராம்பாட்டு, "வாயவனை" இத்யாதி. இத்தால்-"ஜல ஸ்தீ க ட்ரு ந" இத்யாதியாலே எச்சில்வாய் சுத்திபண்ணினவர்களை வ்யாவர்த்திக்கிறது. எங்களை நோக்குகிறதென் னென்ன - நீங்களுண்டாய் இத்யாதி, எம்பெருமானார் நிர்வாஹத்திலே, காத்து - இறாயாதே, ஆட் செய்ம்மின் - மங்களாஶாஸநம் பண்ணுங்கோளென்று விவக்ஷித்து. இறாய்ப்பதேதொவென்ன-இத்தலை யுண்டானால் இத்யாதி. உண்டானாலிறே என்றது - அயோக்யதாநுஸந்தாநத்தாலே யகன்று ஸ்வரூ பம் நசியாதே யுண்டானாலிறேயென்றபடி. அகலில் அவனுளனாகாமையாலே தான்உளனாக வி இல்லையிறே. மேலும் ஶீலகுணபரமன்றிக்கே ஸ்வரூபாநுகுணமாக அருளிச்செய்த வாக்யங்களெல் லாம் எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேரவென்று கண்டுகொள்வது. பாடுமினென்னாதே, "ஆட்செய்ம்மின்" என்கிறதென்னென்ன - ஆட்செய்ம்மினென்கிறார் இத்யாதி. உயிர்காக்கைக்கு ப்ரஸக்தியேதென்ன - ஆட்கொள்வானொத்து இத்யாதி. இதுக்கர்த்தம் - அடிமை இத்யாதி. இத் தால்- ஶீலகுணத்திலே யிழிந்து கவிபாடாதே கொள்ளுங்கோளென்றபடி. 'உயிர்காத்தாட்செய்ம் மின்" என்றீடுபட்டுச் சொன்னதுக்கு ஸம்வாதம் - ஆழங்காலிலே இத்யாதி. கொண்டைக்கோ லாவது-நிலவராயிருப்பார் ஆறுகள் மடுக்களிலே மேடுபள்ளங்களுக்கு அடையாளமாக நடுகிற கோல். "உயிர்காத்தாட்செய்ம்மின்" என றதுக்கர்த்தாந்தரம் - உடையவர் இத்யாதி. அவனுயிரைக் காக்கும் ப்ரகாரத்தை உபபாதிக்கிறார் - அதாவது இத்யாதி. சிற்றாள்கொண்டான் நிர்வாஹவிவரணம் : இவ்விடம் இத்யாதி; இந்த நிர்வாஹமே ப்ரகரணோசிதம். விமுகரையும் அழைக்கிறவர் அபி முகரை விலக்குவானென்னென்ன - வம்மின் இத்யாதி. இவர்தாம்அப்படி ஶீலகுணத்திலே ஈடு பட்டிருப்பரோவென்ன - நினைதோறும் இத்யாதி. ஆனால் செய்வதேதென்ன - உங்களை இத் யாதி. ஐஶ்வர்யம் - நியந்த்ருத்வம். ப்ரதிஷேதபாதாந பூர்வகமாக "ஆட்செய்ம்மினென்கிறார்" இத் யாதி வாக்யத்வயவிவரணம்-கவிகாளென்றால் இத்யாதி. ஶீலகுணத்தைச் சொல்லுகிற ப்ரகரணத்

† 'அமிழ்ந்துவார்' என்றும் பாடம் காண்கிறது.

வனில் தம் வாஸநையாலே. ''இஸ்ஸீலகுணத்திலிழியாதே கொள்ளுங்கோள்'' என்று நிர்ப் பந்திக்கைக்கு ஹேதுவென்னென்னில்,—ஹேது சொல்லுகிறார்மேலெல்லாம். ''தானேயாகி நிறைந்தானே'' என்று தம்மைக்காண்கிறிலர் காணும். [திருமாலிருஞ்சோலை] - திருமலையில் நிலையும் ஸீலத்துக்கு உடலிறே. [வஞ்சக்கள்வன்] - களவுதானும் மெய்யென்னக் களவுகாணுமாய்த்து. ''என்கண்ணன்கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும்'' என்னுமாபோலே - களவுகாணுநிற்கச்செய்தே செவ்விதென்று தோற்றும்படியிருக்கும். களவுதன்னைக் களவுகாணுமாய்த்து. இத்தலையில் ஸேஷத்வத்தை நிலைநிறுத்துவாரைப்போலே புகுந்து, தான் அத்தை எறட்டேக்கொண்டு, ஸேஷித்வத்தை இத்தலையிலேவைத்து ஸிரஸாவஹியாநிற்குமாய்த்து. இப்படி நீர் அவன் களவை அறிந்தீராகில் தப்பாதொழிவானென்னென்னில், - [மா மாயன்] - இப்படி அறியச்செய்தேயும் தப்பவொண்ணாதபடியான ஆஸ்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையவன்; ''மையலேற்றி மயக்க'' இத்யாதி. 'குணசேஷ்டிதங்களாலே உம்மை அவன் அகப்படுத்தின வழிதான் எது?' என்ன, - [மாயக்கவியாய்] - ஆழ்வீர்! உம்மைக்கொண்டு லோகத்தில் நடையாடாதன சிலகவிபாடுவித்துக் கொள்ளப் பாராநின்றோம். ''அப்படிசெய்வோம்'' என்றாய்த்துப் புகுந்தது. கவியென்றுஒரு வ்யபதேசத்தையிட்டுக் கொண்டுவந்தான்; அபிமதவிஷயம் இருந்தவிடத்தே தண்ணீரென்று புகுருமாபோலே. [வந்து] - அபிஸரித்தானும் தானேயாய்த்து. நான் தானிருந்தவிடத்தேசென்று ''என்னையிட்டுச் சிலகவிபாடுவித்துக் கொள்ளவேணும்'' என்றுசொல்லச் செய்கையன்றிக்கே, தானேவந்தான். அபிமந்யுனை தானேயாய்த்து அபிஸரித்தான். இதிறே ஸீலமாவது! வந்தவிடத்தில் அவன் உமக்கு நலிவாகச்செய்ததேதென்னென்னில், - [என்னெஞ்சும்உயிரும்] - நெஞ்சென்று தேஹத்துக்கு உபலக்ஷணம்; உயிரென்று - ஆத்மா. [உள்கலந்து] - ஒருநீராகக்கலந்து: ஸரீரத்தோடு ஆத்மாவோடு வாசியற அவகாஹியாநின்றான். [நின்றாரறியாவண்ணம்] - இப்பரிமாற்றத்துக்கு தேஸிகரானபிராட்டி, திருவனந்தாழ்வான், திருவடி முதலானார்க்கும் அஸாதாரமாம்படியாய்த்து என்னோடேகலந்

---

திலே ''திருமாலிருஞ்சோலை'' என்று திருமலையில் நிலையைச் சொல்லுவானென்னென்ன - திருமலையில் இத்யாதி. களவிலே வஞ்சமேதென்ன - களவுதானும் இத்யாதி. அப்படி அவன் களவு மெய்யாயிருக்குமோவென்ன - என் கண்ணன் இத்யாதி. செம்மாய்நிற்கும் - செவ்வையாயிருக்கும். இதுக்கர்த்தம் - களவுகாணுநிற்க இத்யாதி. இத்தால் ஃபலிதம் - களவுதன்னை இத்யாதி. களவுதன்னைக் களவுகாணும் ப்ரகாரமேதென்ன - இத்தலையில் இத்யாதி. தப்பவொண்ணாத ஆஸ்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையனு யிருக்குமோவென்ன - மையலேற்றி இத்யாதி. நாய்ச்சியார் திருமொழி, ''பெய்யுமாமுகில்'' இத்யாதி. மையலேற்றிமயக்க - பிச்சேற்றி ப்ரமிப்பிக்க. மாயமந்திரம் - அம்மான்பொடி. வஞ்சக்கள்வன் - வஞ்சித்தபஹரிக்குமவன் இதிஸப்தார்த்தஃ. மாமாயன் - அத்யாஸ்சர்ய குணசேஷ்டிதங்களையுடையவன். ''ஆய்'' என்றதுக்கு ஸாவம் - ஆழ்வீர் இத்யாதி. விவரணம் - கவியென்றொரு இத்யாதி. 'ஆழ்வீர்' இத்யாதிவாக்யம் - ''மாயக்கவி'' என்றதுக்கு ஸாவம், ''ஆய்'' என்றதுக்கு ஸாவம் - கவியென்றொரு இத்யாதி என்னவுமாம். இதுக்கு த்ருஷ்டாந்தம் - அபிமத இத்யாதி.மாயக்கவியாய் - க்ருத்ரிமக்கவியாய்இதிஸப்தார்த்தஃ - கவிபாடுவித்துக் கொள்ளுகையாகிற க்ருத்ரிம வ்யாபாரத்தை யுடையனுயென்றபடி. ''வந்து'', என்றதுக்கர்த்தம் - அபிஸரித்தானும் இத்யாதி.உபபாதகம் நான் தான் இத்யாதி. ஏதத்விவரணம் - அபிமந்யுனை இத்யாதி. தேஹத்துக்கு உபலக்ஷணம் என்றது - ப்ரகரணத்துக்குச்சேரப் பதங்களைக்கூட்டி யர்த்தம் - ஸரீரத்தோடு இத்யாதி. தேசிகரான - விஷயஸாதரான. ''நின்றார்''

தது. இப்படிப்பட்ட பரிமாற்றத்தில் நிற்பார்அவர்களிறே ; அவர்களுக்கும் தெரியாதபடி ; " ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது " என்னுமாபோலே. [என்னெஞ்சும் உயிருமவை யுண்டு] - தேஹாத்மவிவேகம் பண்ணமாட்டுகிறிலன் ; "உருவமும் ஆருயிரும் உடனே யுண்டான்" என்னுமாபோலே - தேஹத்தையும் ஆத்மாவையுமொக்க ஸ்வீகரித்தான். [தானேயாகி] - தம்மைக்காண்கிறிலர் காணும். இரண்டுதலையுமாய் ஸ்வீகரிப்பாரைப் போலே புகுந்து போக்தா தானேயானான். "என்னை முற்றப்பருகினான்" என்னுமா போலே, இத்தலை போக்யமாயற்றதாய்த்து. இத்தலை ஒருசேதநவஸ்துவென்று தோற்றாத படியாகவாய்த்துப் பரிமாற்று;பிறர்க்கு உறுப்பாயிருக்குமதொழியத் தனக்கென்ன ப்ராப்தி யில்லாத அசித்வஸ்துவோபாதியாகப் பண்ணினான். "தனக்கேயாக" என்றபடியே கொண்டான். போக்யவஸ்துதன்னிலேயும் ஸ்வரூபபேதங்கள் உண்டாகா நின்றதிறே, அவ்வோபாதியாய்விட்டது சேதந வஸ்துவும். [தானேயாகி] - ஈரரசு தவிர்த்தான். இத் தலையைப் புறகவ்வப்பண்ணித்தானே அபிமாநியாய் நின்றான். [நிறைந்தானே] - அவாப்த ஸமஸ்தகாமனேன்கிற பேரேயாய், இவரைப்பெற்றபின்பாய்த்து பரிபூர்ணனாய்த்து. இங் ஙனேயிருக்கையிறே ஶீலமாவது. அதாவது - பெரியவன் சிறியவனோடேவந்து கலக்கு மிடத்தில் தன்பெருமையும் இவன்சிறுமையும் தோற்றாதபடி புரையறக் கலக்கையிறே ; "க்ருதக்ருத்யஸ்ததாராம:" (க்ருதக்ருத்யஸ்ததாராம:) என்னுமாபோலே. (க)

---

என்றால் - பிராட்டி முதலானாரைக்காட்டிலேமோவென்ன - இப்படிப்பட்ட இத்யாதி. "நிற்பார்" என்றது - ஈச்வரனுடைய வ்யாமோஹவிஷயமாய் நின்றவர்களென்றபடி. "அபிமதியாம்படியாய்" என்றத்தை விவரிக்கிறார் - அவர்களுக்கும் இத்யாதி. அப்படி அவர்களுக்கும் அபிமதியோவென்ன - ஆருயிர் இத்யாதி. "என்னெஞ்சுமுயிருமவையுண்டு" என்றத்தால் ஃபலிதம் - தேஹாத்மவிவேகம் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - உருவமும் இத்யாதி. ஃபலிதார்த்தம் - தேஹத்தையும் இத்யாதி. நெஞ்சு - தேஹம். "தானே" என்கிற அவதாரணார்த்தம் - தம்மை இத்யாதி. விவரணம் - இரண்டுதலையும் இத்யாதி. அவனே போக்தாவானால் நீரோவென்ன - என்னை முற்ற இத்யாதி. "தானே" என்றத்தால் ஃபலிதம் - இத்தலை இத்யாதி. விவரணம் - பிறர்க்கு இத்யாதி. இதுதான் ப்ரணயித்வத்தாலன்றிக்கே இவரர்த்திக்கச் செய்ததுவுமென்கிறார் - தனக்கேயாக இத்யாதி. எத் தனையென்றாலும் சேதநனுக்கு வாசியில்லையோ, அசித்வஸ்துவோபாதி யென்னலாமோ வென்ன- போக்யவஸ்து இத்யாதி. ஸ்வரூபபேதங்கள் என்றது-அிந்ந முந்தய ரஸாதியுக்த சந்தந குஸுமாதி பேதங்களென்றபடி. இத்தால் - சைதந்யாதிகளும், வஸ்துகதமான ரஸாதிகளோபாதியாய், போக் தாவுக்கே யுறுப்பாய்விட்டதென்றபடி. "ஸூக்ஷ்மவொட்டும் நீரிலே கழுவிப் பைந்தொடிமடந்தை யரைக்கொண்டு ஷட்குணரஸாரந்மாக்கி" என்றது அநுஸந்தேயம் இங்கு. கீழே "தம்மைக் காண் கிறிலர்" என்றத்தை விவரிக்கிறார் - ஈரரசு இத்யாதி. விவரணம் - இத்தலையை இத்யாதி. புறகவ் வப் பண்ணுகை-அபிமாநசூந்யனாம்படி பண்ணுகை. அவாப்தஸமஸ்தகாமனை இப்போது "நிறைந் தான்" என்கிறதென்னென்ன - முன்பு இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் - க்ருதக்ருத்ய: இத்யாதி. " அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்யஸ்ததா ராம: விஜ்வர: ப்ரமுமோத ஹ " இதி ஸங்க்ஷேபே. 'திருமாலிருஞ்சோலை' என்று தொடங்கி, 'நிறைந்தான்';ஆகையாலே, 'செஞ்சொற்கவிகாள்!உயிர் காத்தாட்செய்ம்மின்' இத்யந்வய:. (க)

## இரண்டாம் பாட்டு.

---

தானேயாகிநிறைந்துஎல்லாவுலகும்உயிருந்தானேயாய்
தானேயானென்பானாகித் தன்னைத்தானேதுதித்துஎனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்
கோனேயாகிநின்றொழிந்தான்என்னைமுற்றும்உயிருண்டே.

ஆ.—(தானேயாகி) - இப்படி என்னுயிரை முற்றுமுண்டு தானேயாகி பரிபூர்ணனாய், இதினாலே ஸர்வேஶ்வரனுமாய், என்னுயிரை மாளஜீவித்தும் த்ருப்தனாகாதே நான்சொல்லும் சொற்களைக்கொண்டு அநுபவிக்கைக்காக என்னைக்கொண்டு திருவாய்மொழியைச் சொல்லுவித்து, இப்படியேஎன்னோடுள்ள ஸம்ஶ்லேஷம் தனக்கு இனிதானைக்காக எனக்குத்தன்னையே நிரவதிகபோக்யமாக்கியருளினான்; திருமாலிருஞ்சோலைமலை நாயனாய்நின்றநிலை அவனுக்கு ஸபலமாய்த்தென்றுகொண்டு தத்அபிப்ராயத்தாலே சொல்லுகிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தம்மோடு கலந்தபின் எம்பெருமானுக்குப்பிறந்த ஸம்ருத்தியைக்கண்டு இனியராய் அநுபவிக்கிறார்.

[எல்லா என்றுதொடங்கி] - என்னைப் பெறுகையாலே ஸர்வேஶ்வரனாய், என்னை உபகரணமாகக்கொண்டு தன்னைத்தானே ஸ்துதித்து எனக்கு நிரதிஶயபோக்யனாய், என்னைப் பெற்றபின்பு திருமலைக்கு நாயனுமானான். [என்னைமுற்றும் உயிருண்டே] - என்னுயிரை ஒன்றொழியாமே அநுபவித்து.

ப.—அநந்தரம், என்னோடு ஸம்ஶ்லேஷித்த அதிஶயத்தாலே எனக்கு நிரதிஶய போக்யதனாய்க்கொண்டு க்ருதக்ருத்யனாயிராநின்றானென்கிறார்.

என்னை - என்னை, முற்றும் - ஸர்வப்ரகாரத்தாலும், உயிருண்டு - ஆத்மபோகத்தைப்பண்ணி, (அத்தாலே), தானேயாகி - ப்ரயோஜனமாய்க்கொண்டு, நிறைந்து - பரிபூர்ணனாய், எல்லாவுலகும் - ஸமஸ்தலோகங்களும், உயிரும் - தத்கதமானப்ராணிஜாதங்களும், தானேயாய் - தானேயாம்படி (அந்தராத்மதயாநிர்வாஹகனாய், அப்படிபொதுவன்றியே), யானென்பான் - அஹம்புத்தி வ்யவஹாரவிஷயமான நானென்கிற வஸ்துவும், தானேயாகி - தானேயாம்படியாய், (அந்த அப்ருதக்பாவத்தாலே), தன்னை - ஸ்துத்யனான தன்னைப்பற்ற, தானேதுதித்து - ஸ்தோதாவும் தானேயாய்க்கொண்டு ஸ்துதித்து, (அத்தால் தனக்குப்பிறந்தவுகப்பை), எனக்கு - எனக்குப்ரகாசிப்பிக்கையாலே, தேனேபாலேகன்னலேயமுதே - தேனும்பாலும்கன்னலும் அமுதுமாய் அதில் ஸர்வவிதபோக்யமும், திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையிலே எழுந்தருளியிருக்கிற, கோனேயாகி - ஸ்வாமியானதானேயாய், நின்றொழிந்தான் - நின்றுவிட்டான்; போக்தாவும் தானேயாய் போக்யமும் தானேயாயென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், தம்மோடு கலந்தபின்பு அவனுக்கு உண்டான ஸம்ருத்தியைக் கண்டு இனியராகிறார்.

[தானேயாகி நிறைந்து] - இருவர்கூடப் பரிமாறப்புகுந்து, பெற்றான் தானேயாயிராநின்றான். [எல்லாவுலகும் - உயிரும் தானேயாய்] - ஆழ்வாரைப் பெற்றபின்

பாய்த்து ஸர்வலோகங்களுக்கும் அவற்றிலுண்டான மநுஷ்யாதிகளுக்கும் நிர்வாஹகனாய்த்து. ஸாமாநாதிகரண்யத்தால் அபிமாநியும் தானேயென்கை. [தானே யானென்பானாகி] - பொதுவான ரக்ஷகத்வமொழியத் தம்பக்கல் அவன் இருக்கும்படி சொல்லுகிறார்: [யானென்பான் - தானேயாகி] - விஶிஷ்ட வஸ்துவாகையாலே விஶேஷ்ய ப்ராதாந்யத்தைப் பற்றச் சொல்லுகிறதென்னுதல், தன் ஶேஷித்வத்தை எனக்குத் தந்து தான் அப்ரதாநனாய் என்னை ஶிரஸாவஹியாநின்றான் என்னுதல். [தன்னைத் தானே துதித்து] - ஸ்துத்யனுமவோபாதி ஸ்தோதாவும் தானேயாய். [எனக்குத் தேனேபாலே இத்யாதி] - "ஸவப்ரஸ:" என்கிறபடியே எனக்கு நிரதிஶய போக்யனாய். அவனைப் புகழுமிடத்தில் தம்பக்கல் கர்த்ருத்வம் கண்டிலர். போகத்தில் வந்தால் போக்தாவாகத் தம்மைச் சொல்லுகிறாரிறே. தன்னைத்தானே புகழ்ந்து அத்தை என்கவியாக்கிக்கேட்டு அவன்ப்ரீதனாக அவன்ப்ரியத்தைக்கண்டுப்ரியப்படுகிறார். [திருமாலிருஞ்சோலைக்கோனே] -கீழ்ச்சொன்ன ஸத்தோபாதியாய்த்துத் திருமலையில் நிற்கிற நிலையும். உபயவிபூதி யோகத்திற் காட்டிலும் ஓர் ஏற்றமாய்த்துத் திருமலையையுடையன் என்கிற இதுவும். திருமலையிலே வந்து ஆழ்வாரைப் பெற்றபின்பாய்த்து ஶேஷித்வம் பூர்ணமாய்த்து. [நின்றொழிந்தான்] - "க்ருதக்ருத்யஸுகாஸந:" என்கிறபடியே பருபாகற்று நின்றான். [என்னைமுற்றும் உயிருண்டே] - விபுவான தன்னுளும் விளாக்கொலை கொள்ளவொண்ணாதபடியாய்த்து இத்தலையானபடி.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தம்மோடு கலந்தபின்பு அவனுக்குப்பிறந்த ஸம்ருத்தியைக்கண்டு இனியராகிறார்.

[தானேயாகிநிறைந்து] - இருவருங்கூடப்பரிமாறப்புகுந்து தானே பேற்றுனாயிராநின்றான். [எல்லாமித்யாதி] - ஸகலலோகங்களும் அந்தலோகங்களுக்கு உண்டான மநுஷ்யாதிகளும் தானேயாய் நின்றான். ஸர்வேஶ்வரனானானென்றபடி. ஸர்வேஶ்வரனச்சுதும் இப்போதோவென்னில்;—ஓம்; அப்படியே. ரக்ஷகனாய்க்கொண்டேயிறே அவனுக்கு ஸ்வரூபம். ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணியல்லது நியந்தாவாகவொண்ணாதே. இவரைப்பெறுவதற்குமுன்பு தன்னுடைய ஈஶ்வரத்வமடையக் கண்ணழிந்தாரகம்போலேகாணும் கிடந்தது. ஆத்மாதான் நித்யனாயிருக்கச்செய்தே,

---

இரண்டாம்பாட்டு.—தானே இத்யாதி. "என்னை முற்றும்உயிருண்டு - தானேயாகி நிறைந்தெல்லாவுலகும்உயிரும் தானேயாய்" என்றுதொடங்கி "கோனேயாகி நின்றொழிந்தான்" என்றந்வயமுகேநாவதாரிகை - தம்மோடு இத்யாதி.

அவதாரணார்த்தம் - இருவர் இத்யாதி. கீழ்வாக்யத்தால் ஃபலிதம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஆழ்வாரைப்பெற்ற பின்பு ஸர்வேஶ்வரனானானென்றபடி. "எல்லாவுலகும்உயிரும்" என்றதிலே இவரும் அந்தர்பூதரிறே. அந்வயமுகேந ஶங்கையைப் பரிஹரிக்கிறார் - ஓம் அப்படியே, இத்யாதி. "அப்படியே" என்றத்தையுபபாதிக்கிறார் - ரக்ஷகனாய் இத்யாதி. இதுக்கு * அகாரவாச்யத்வத்திலே நோக்கு. வ்யதிரேகமுகேந பரிஹாரம் - ரக்ஷ்யவர்க்க இத்யாதி. ஏதத்விவரணம்- இவரை இத்யாதி என்னுதல், ப்ரணயித்வதைப்பற்ற பரிஹாராந்தரமாதல். கண்ணழிந்தாரகம் போலே என்றது - கண்நொந்தார்க்கு விளக்குஅஸஹ்யமாகையாலே, விளக்கில்லாமல் அந்தகாராவ்ருதமாய் ஒருத்தருக்கும் ஒரு பதார்த்தமும் தெரியாதாப்போலே, ஈஶ்வரத்வமும் அநிதரவேத்யமாய் அஸஹ்யமாயிருக்குமென்றபடி. இவரைப்பெறுவதற்கு முன்பு ஈஶ்வரத்வம்அஸத்கல்பமாய், இவரைப்பெற்றபின்பு ஸர்வேஶ்வரனானானென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார்-ஆத்மா

ஸ்வரூபஜ்ஞாநம் பிறவாதபோது "அஸந்நேவஸபவதி" (அஸந்நேவஸபவதி)என்னலாய், அதுபிறந்தபோது "ஸந்தமேநம்ததோவிது:" (ஸந்தமேநம்ததோவிது:) என்னலாம்படியிருக்கிறாப்போலேகாணும் அவனுமிருப்பது. ப்ரதிஸம்பந்தியை அபேக்ஷித்துக்கொண்டிருக்கை இரண்டு தலைக்கும் ஒக்கும். "நானுன்னையன்றியிலேன் - நீயென்னையன்றியிலை"என்கிறபடியே - இவன்ஶேஷபூதனாய்க்கொண்டுளனாம், அவன்ஶேஷியாய்க்கொண்டுளனாம். [தானேயானென்பானாகி] - யானென்பான் தானேயாகி. ஸர்வவிஷயமாக நிற்தும்நிலையொழிய இந்தவ்யக்திவிசேஷத்தில் நிற்கும்நிலையைச் சொல்லுகிறது. [யானென்பான் - தானேயாகி] - நானென்று நாமமாத்ரமான நான் தான்என்னலாம்படியானேன். தம்மைத்தடவிப்பார்த்தவிடத்தில் காண்கிறிலர், அவன்தலையாலே சுமக்கக்காண்கிறவித்தனை. அவனும் தன்தலையிலே பாரதந்த்ர்யத்தை ஏறட்டுக்கொண்டு இவர்தலையிலே ப்ராதாந்யாஹங்காரத்தை வைக்கையாலே இவரையே காண்கிறவித்தனை.விஶிஷ்டவஸ்துவில் விஶேஷ்ய ப்ராதாந்யத்தாலே விஶேஷணமாத்ரமான தம்மைக் காண்கிறிலராய்த்து.கார்யாவஸ்த்தையோடு காரணாவஸ்த்தையோடுவாசியற வஸ்து விஶிஷ்டமாயிருக்கச்செய்தேயும், ப்ரஹ்மமே உபாதாநமென்னக்கடவோமிறே. தத்கதமான விகாராதிகள் வருமென்று ஶங்கித்து,அவற்றை விஶேஷணம்ஶத்தே ஒதுக்குகிறதும் அவனுக்கு தோஷாஸ்பர்ஶத்துக்காக. ஆனாலும், வஸ்துதான் ஒன்றென்னலாயிருக்கு

---

தான் இத்யாதி. ஆனாலும் "அஸந்நேவ" என்றும் "ஸந்தமேநம்" என்றும் சேதநனைச் சொன்னாற்போலே அவனைச் சொல்லலாமேயென்ன - ப்ரதிஸம்பந்தியை இத்யாதி. ப்ரதிஸம்பந்தி ஸாபேக்ஷத்வத்துக்குப்ரமாணம் - நானுன்னை இத்யாதி. "நன்றாக நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே! நீயென்னையன்றியிலை-" வெறுவியனாய் ப்ரகாரதயா ஶேஷபூதனான நான், பரிபூர்ணனாய் ப்ரகாரியாய் ஶேஷியாயிருக்கிற உன்னையொழிய ஸத்தையுடையேனல்லேன், இப்படியிருக்கிறநீயும், என்னையொழிய ப்ரகாரியாய் ஶேஷியாய் பரிபூர்ணனுமாய்க்கொண்டுளனாமவனல்லையென்று ஶப்தார்த்தம். நாலாந்திருவந்தாதி, "இன்றாகநாளையேயாக" இத்யாதி. இதுக்கர்த்தம் - இவன் ஶேஷபூதனாய் இத்யாதி. வக்ஷ்யமாணார்த்தாநுகுணமாக அந்வயம் - யானென்பான் தானேயாகி என்று. "எல்லாவுலகுமுயிரும் தானேயாய்" என்றதிலே தாமுமந்தர்பூதரன்றோ? "தானேயானென்பானாகி" என்றதுக்குக் கருத்தேதென்ன - ஸர்வவிஷயமாக இத்யாதி. "யானென்பான்தானேயாகி" என்றதுக்கு ஶப்தார்த்தம் - நானென்று இத்யாதி. ஶேஷபூதனென்று நாமமாத்ரமுடையநான் ஶேஷியென்னலாம்படியானேனென்றபடி. பலிதம் - தம்மை இத்யாதி வாக்யத்வயம். காண்கிறிலர் - தம்மை ஶேஷமாகக் காண்கிறிலரென்றபடி- "தம்மை" இத்யாதிவாக்யத்வயவிவரணம் - அவனும் இத்யாதி. இவரையே காண்கிறவித்தனை - இவரை ஶேஷியாகக் காண்கிறவித்தனையென்றபடி. "தானேயானென்பானாகி"என்றதுக்கு - ப்ரணயித்வத்தைப்பற்ற பாவமருளிச்செய்து, வாஸ்தவமான ஶரீரஶரீரிபாவத்தையிட்டு தாத்பர்யாந்தரம்-விசிஷ்ட இத்யாதி. விசிஷ்டவஸ்துவில் விசேஷ்யப்ராதாந்யத்துக்கு நியாமகம் - கார்யாவஸ்த்தையோடு இத்யாதி. விசிஷ்டமாயிருக்கச்செய்தேயும் என்றது - சிதசித்விசிஷ்டமாயிருக்கச்செய்தேயுமென்றபடி. ப்ரஹ்மமே - விஶேஷ்யமான ப்ரஹ்மமேயென்றபடி. விஶேஷ்யப்ராதாந்யத்தாலே ப்ரஹ்மமே உபாதாநமாகில் விசிஷ்டம் காரணமென்றும் விகாராதிகள் விஶேஷணகதங்களென்றும் கொள்ளுகிறதென்னென்ன தத்கதமான இத்யாதி. தத்கதமான - சிதசித்கதமான. 'ஒதுக்குகிறதும்' என்ற சஶப்தம் - "விசிஷ்டம் காரணமென்கிறதுவும்" என்றதுக்த ஸமுச்சயபரம். எல்லாமென்றாலும் சேதநேஶ்வரபேதம் ஸித்தமாயிருக்க,"தானே"என்னலாமோவென்ன- ஆனாலும் இத்யாதி. ஆனாலும்-பேதமுண்டானாலுமென்றபடி."ஸ்வாபாவிக ஸம்பந்தம் கண்ணழி

மிறே; ஸ்வாபாவிக ஸம்பந்தம் கண்ணழிவற்றிருக்கையாலே. வடபடாதிகளைப்போலே ப்ருதக்ஸ்திதி உண்டாயிருக்கிறதன்றே; ப்ரகாரப்ரகாரி பாவத்தாலே சொல்லுகிறதிறே; ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தைப்பற்றிக் கிடக்குமோபாதியாய்த்து. இப்படி வஸ்துவிருக்கையாலே [தன்னைத்தானேதுதித்து] - "வசஸாம் வாச்யமுத்தமம்" (வசஸாம் வாச்யமுத்தமம்) என்கிறபடியே - அஹமர்த்தம்அவனளவும்சென்று காட்டக்கடவதாய், அஹம்ஶப்தமும் அவனளவும்சென்று காட்டக்கடவதாயிறேயிருப்பது. இவர்பக்கலிலே பிறக்கச் செய்தேயும் அவன்செய்தானென்று அவன்தலையிலே ஏறிடலாயிருக்குமிறே. நான் ஸ்துத்யனாகில்கிடீர் ஸ்தோதா நானாவது? [எனக்கு இத்யாதி] - "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:) என்கிற போதுவான நிலையன்றிக்கே எனக்கு நிரதிஶயபோக்யனானவனே! "கோடியேன்பருகின்னமுதே" என்கிறபடியே. "தன்னைத் தானே துதித்து" என்கிற விடத்தில்தம்மைக்கண்டிலர்; இங்குத் தாமுளராகவும்தமக்குஇனிதாகவும் தொடங்கிற்று. தாம் பாடின கவி கேட்டு அவன்இனியனாயிருக்கிறவிருப்பு தமக்குஇனிதாயிருக்கிறபடி. [திருமாலிருஞ்சோலைக்கோனே] - கீழ்ச்சொன்ன ரஸவத்பதார்த்தங்களோபாதியாய்த்துத் திருமலையில்நிற்கிற நிலையும். "திருமாலிருஞ்சோலையங்கட்டியைக் கரும்பீன்ற இன் சாற்றை" என்னக்கடவதிறே. [திருமாலிருஞ்சோலைக்கோனேயாகி] - உபயவிபூதி யோகத்தால் வந்த ஏற்றத்துக்கும் அவ்வருகே ஓரேற்றம்போலே திருமலையையுடையனாகையால்வந்த ஏற்றம். [கோனேயாகி] - இவரைப்பெற்றபின்பாய்த்து ரக்ஷகத்வம் பூர்ணமாய்த்து. இல்லையாகில், ஸ்ரீவைகுண்டத்திலிருப்போடு திருமலையில்நிலையோடு வாசியற்றுப்போமிறே. [நின்றொழிந்தான்] - இங்கே நின்றபின்பாய்த்துப் பரகுபரகற்றது. க்ருதக்

---

வற்றிருக்கையாலே" என்றத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறார் - வடபடாதிகளை இத்யாதி. ப்ருதக்ஸ்தித்யபாவத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஜாதிகுணங்கள் இத்யாதி. மேலுக்கவதாரிகை - இப்படி இத்யாதி. தாம் கவிபாடியிருக்க, "தானே துதித்து" என்பானென்னென்ன - வசஸாம் இத்யாதி. "அஹமர்த்தமவனளவும்காட்டும்" என்றதுக்குப்ரமாணம் - வசஸாம்வாச்யமுத்தமம் என்றது. அஹமர்த்தமவனளவும் சென்றுகாட்டுகையாவது - தத்பாரதந்த்ர்யமாயிருக்கை. "காரணம் காரணானாம் ச வாச்யம் வசஸாம் வாச்யமுத்தமம் । யோமா நாம வரேண்யம் வேதவேத்யம் விஷ்ணு:" இதி ஜிதந்தாயாம். அஹம்ஶப்தமும்அவனளவும்காட்டக்கடவதாயென்றது- அர்த்தாத்வந்தது. இத்தால் பாவம்-இவர்பக்கலிலே இத்யாதி. தானே துதித்தென்னாதே, "தன்னை" என்று விசேஷித்ததுக்கு பாவம் - நான் ஸ்துத்யனாகில் இத்யாதி. இத்தால் - ஸ்துத்யன் தானானவோபாதி ஸ்தோதாவும் தானேயென்று கருத்து. "எனக்கு" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஸர்வரஸ: இத்யாதி. தமக்கு போக்யனாயிருக்குமோவென்ன - கோடியேன் இத்யாதி. "தன்னைத் தானே துதித்து" என்று வைத்து, "எனக்கு" என்று ஸ்வார்த்ததை தோற்றச்சொல்லுகிற தென்னென்ன-தன்னைத்தானே இத்யாதி. அதாவது-ப்ரபந்தகர்த்ருத்வத்தில்தமக்கு அந்வயமில்லை, அந்த ப்ரபந்தம்அத்தலைக்கு போக்யமான துகண்டு தாம்உகக்கிறாரென்றுகருத்து, பலிதம்-தாம்பாடின இத்யாதி. பூர்வபதத்தோடே ஸஹபடித்ததுக்கு பாவம் - கீழ்ச்சொன்ன இத்யாதி. திருமலையில் நிலை போக்யமாயிருக்குமோவென்ன - திருமாலிருஞ்சோலையங்கட்டியை இத்யாதி. "எல்லாவுலகுமுயிரும்தானே" என்றத்தோடேகூட்டி பாவாந்தரம் - உபயவிபூதி இத்யாதி. "கோனேயாகி" என்றத்தை "என்னைமுற்றுமுயிருண்டு" என்றத்தோடே கூட்டி பாவமாதல், அவதாரணார்த்தமாதல் - இவரைப்பெற்ற இத்யாதி. இதுக்கு நியாமகம் - இல்லையாகில் இத்யாதி. "நின்றொழிந்தான்" என்றதுக்கு பாவம் - இங்கேநின்றபின்பு இத்யாதி. 'பரகுபரகு - வ்யாகுலதை. "பரகு

ருத்யனுயிராநின்றான். [என்னை முற்றும்உயிருண்டே]- என்னுயிரைமுற்றுமுண்டே. விபுவானவன் அணுத்ரவ்யத்தை ஸ்ருஜிக்கை தனக்கேற்றமாம்படியாகவாய்த்து இத்தலையானபடி. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

என்னைமுற்றுமுயிருண்டு என்மாயவாக்கையிதனுள்புக்கு
என்னைமுற்றுந்தானேயாய் நின்றமாயவம்மான்சேர்
தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பிச்சேர்ந்தயான்
இன்னும்போவேனேகொலோ? என்கொல் அம்மான்திருவருளே.

ஆ.—(என்னை.) - என்னை ஸ்ருஜித்தருளுகிறான். இந்தஹேயமான ப்ரக்ருதியினுள்ளேபுகுந்து என்னை ஸ்ருஜித்து என்னை முற்றும் தானேயானான். இப்பேறு பெறுகைக்கு ஹேதுவென்னென்னில்; அவன் சேர் தென்னன் திருமாலிருஞ்சோலைத் திசை கைகூப்பப்பெற்றேன்; என்னுடன் இப்படியே கலந்து பரிமாறியும் பின்னையும் கலந்து பரிமாறுதானுப், அடிதொட்டுக்கலந்து பரிமாறுகையிலே பாரித்தருளாநின்றான்; இன்னம் இதுக்குமேலும் ஒருஸம்ஶ்லேஷமுண்டோ? திருவுள்ளம்என்தான்? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமானுக்கு மேன்மேலெனத் தன்பக்கலுண்டான அபிநிவேஶா பர்யவஸாநத்தை அருளிச்செய்கிறார்.

[என்னை என்று தொடங்கி] - என் ஆத்மாவை ஸ்ருஜித்து, அதிக்ஷுத்ரமான என் ஶரீரத்திலே வந்துபுகுந்து, என்னையடைய வ்யாபித்து நிற்கிற ஆஶ்சர்யபூதனான ஸர்வேஶ்வரன் சேர்வதும்செய்து தெற்கேயான திருமலைத்திக்கை பரமப்ராப்யமென்று சேர்ந்த நான். [இன்னம்போவேனே என்றுமேலுக்கு] — இவ்வளவில் பர்யவஸியேன் போலேயிருந்தது, ஸர்வேஶ்வரனுடைய பாரிப்புக்கு அவதி என்னோ?

ப.—அநந்தரம், என்னளவன்றியே என் தேஹத்தையும் ஆதரம்பண்ணி, அத்தாலே ஸந்துஷ்டனாய் ப்ரதிஷ்டிதனாகாநின்றானென்கிறார்.

என்னை - , முற்றும் - ஸர்வப்ரகாரத்தாலும், உயிருண்டு - ஆத்மாநுபவம் பண்ணி, (அவ்வளவில்நில்லாதே), என் - என்னுடைய, மாயம் - அஜ்ஞாநாதிகளுக்கு ஹேதுவாய்க்கொண்டு, ஆக்கையிதனுள் - (ப்ரக்ருதிகார்யமாய் ப்ரத்யக்ஷஸித்ததோஷத்தையுடைத்தான ஹேயகமான) ஶரீரத்துக்குள்ளே, புக்கு - , என்னை — (அபியாதிஜீவனை) என்னையும், முற்றும்-அநுபந்தியான ஶரீராதிஸமஸ்த வஸ்துவையும்பற்ற, தானேயாய் - (அஹந்தாமமதாதிகள் இத்தலையில் நடையாடாதபடி) தானே அபிமாநியாய், நின்ற - (அத்தாலே க்ருதக்ருத்யனாய்)நின்ற, மாயம் - ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய, அம்மான் - நிருபாதிகஸ்வாமியானவன், சேர் - பொருந்திவர்த்திக்கிற தேச

---

பாகற்றது'' என்றதின் விவரணம் - க்ருதக்ருத்ய இத்யாதி. அணுவானவாத்மாவை ''முற்றும்'' என்கிறதென்னென்ன - விபுவான இத்யாதி. இத்தலையானபடி என்றது - அவன் ஸ்வாபிப்ராயத்தாலே மதித்திருந்தபடியென்றபடி. 'என்னைமுற்று முயிருண்டு - தானேயாகிநிறைந்து' என்று தொடங்கி, 'நின்றொழிந்தான்' இத்யந்வய:. (உ)

மாய், தென் - தெற்குத்திக்குக்கு, நன் - ச்லாக்யமாயிருக்கிற, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையாகிற திருமலையிலே நிற்கிற, திசை - திக்கை நோக்கி, கைகூப்பி - சேஷத்வானுரூபவ்ருத்தியைப்பண்ணி, சேர்ந்தயான் - கிட்டின நான், (அவ்வளவன்றியே, அவன் தேசத் தளவன்றியே), இன்னம் - (அத்திக்கையும்) ஆதரிக்கும்படியானவளவு பிறந்தபின்பு, போவேனேகொலோ - ஒருமந்தவ்யபூமி யுண்டாய்ப்போகிறேனோ? அம்மான் - நிருபாதிகசேஷியா யிருக்கிறவனுடைய, திருவருள் - அபிநிவேசங்கள், என்கொல் - என்னாயிருக்கிறது? இதிற்காட்டில் வேறு சில ப்ராப்யங்களுண்டாய் அவற்றை உபகரிக்கப்பாரிப்பாரைப்போலே இராநின்றதென்று கருத்து. 'தென்னன்' என்று - அத்தேசத்தில் ராஜாவைச் சொல்லவுமாம்.

இ.—மூன்றும்பாட்டில், அவனுக்குத் தம்பக்கலுண்டான அபிநிவேசத்தினுடைய எல்லையில்லாமையை அருளிச்செய்கிறார்.

[என்னை முற்றும்உயிருண்டு] - இத்தலையை எங்கும் புக்கு அநுபவித்தானாய் விடுகை அவனுக்கு ஏற்றமாம்படியாயிருக்கிறது; "யஸ்யாஸாஜநகாத்மஜா - ஸுப்ரீதோ யம்ஹிதத்தஜஃ". [என்மாயவாக்கை யிதனுள்புக்கு] - அதிக்ஷுத்ரமான என் சரீரத்திலே புக்குத் தனக்கு உத்தேச்யமான ஆத்மாவளவன்றியே, "அழுக்குடம்பு" என்று தன்னைக் காற்கட்டித் தவிர்ப்பித்துக்கொள்ள வேண்டும்படி த்யாஜ்யமான சரீரத்தையே விரும்பாநின்றான். [இதனுள்புக்கு] - "இது, இது" என்று இவரிருய்க்க, அவன் மேல் விழாநின்றான் என்கை. புகுந்து என்னாதே, 'புக்கு' - என்கிறது அத்தோடு தமக்குத் தொற்றற்றிருக்கிறபடி தோற்றுகைக்காக. "மங்கவொட்டு" என்று அவன் அநுமதி பார்த்திருக்கிறாரிறே. என்றும் அசித்தோடு முகம்பழகினவ ரிருய்க்க, ஹேயப்ரதிபடனானவனிறே மேல்விழாநின்றான். [என்னைமுற்றும் தானேயாய்நின்ற] - ஆத்மாவோடு சரீரத்தோடு வாசியறப் புக்கு வ்யாபித்து, தானே அபிமாநியாய் நின்றான். என்னுடைய அஹங்காரமமகாரங்களுக்கும் விஷயமில்லாதபடி நின்றான். [மாயஅம்மான் இத்யாதி] - ஆச்சர்ய சேஷ்டிதனான ஸர்வேச்வரன் தானே விரும்பிவந்து சேருகிற தேசம். தென்னன்என்று - அத்தேசத்தில் ப்ரயாநனைச் சொல்லுதல், தெற்கில்திக்கிலேயுள்ளதாய் நன்றான திருமலை என்னுதல். [திசை கைகூப்பிச் சேர்ந்த யான்] - அத்திக்கைப் பரமப்ராப்யமென்று சேர்ந்தயான். இவர், அவனளவிலன்றிக்கே அவன் உகந்த தேசத்தோடு சேர்ந்த திக்கை விரும்பாநின்றார்; அவன் இவரளவன்றியே இவருடைய சரீரத்தை விரும்பாநின்றான். இவ்வளவில் பர்யவஸியாதாற்போலே யிருந்தது. [இன்னம் போவேனேகொலோ] - இனி எனக்கு ஒரு மந்தவ்யபூமியுண்டோ? ஸர்வேச்வரனுடைய பாரிப்புக்கு அவதி என்னோ? அவனை விரும்பி, அவன் உகந்த தேசத்தை விரும்பி, அத்தோடு சேர்ந்த திக்கை விரும்பும்படி சேஷத்வத்தின் எல்லையிலே நிறுத்தினவன், எனக்கு ஒன்றுசெய்திலனாய்ப்பரகுபாகென்கிற இதுக்கு அவதி என்னோ? விஷயமின்றியேயிருக்க ச்ரமிக்கவுமாமாகாதே.

ஈடு.—மூன்றும்பாட்டு. அவனுக்குத் தம்பக்கலுண்டான அபிநிவேசத்தினுடைய எல்லையில்லாமையை யருளிச்செய்கிறார்.

---

மூன்றும்பாட்டு.—என்னைமுற்றும் இத்யாதி. "இன்னம்போவேனேகொலோ வென்கொலம்மான் திருவருள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அவனுக்கு இத்யாதி.

[என்னைமுற்றுமுயிருண்டு] - "யஸ்யஸாஜநகாத்மஜா-அப்ரமேயம்ஹி தத்தேஜஃ" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜஃ) என்கிற ஏற்றத்தோபாதியும் போருமாய்த்து, இவருயிரை எங்கும்புக்கு அநுஸவிக்கப்பெறுகையால்வந்த ஏற்றம். [என்மாயவாக்கை] – என்னுடைய ஆத்மவஸ்துவை யநுஸவித்து அவ்வளவிலே தான் தவிருவானு யிருந்தானே? "அழுக்குடம்பு" என்றும் "பொல்லாவாக்கை" என்றும் "புண்ணைமறையவரிந்து" என்றும் சொல்லுகிறபடியே - "இதுஹேயம்" என்று இவர் தாம் அருவருத்துப் புறப்பட்டு நில்லாநின்றார்; இவர் இகழாநிற்கச்செய்தே அவன் இது உத்தேஶ்யமென்று மேல்விழாநின்றான். [உள்புக்கு] - தம்நெஞ்சாலே இத்தை இவர் அருவருத்துப் புறப்பட்டுநின்றார். (புகுந்தென்னுதே 'புக்கு' என்கிறது - அத்தோடு தமக்குத் தோற்றற்றிருக்கிறபடி தோற்றுகைக்காக.) அதாவது - அவன்தலைதுலுக்குப் பெறுமளவும் பார்த்தாய்த்து இவரிருக்கிறது- "மங்கவொட்டு" என்னுமளவும் அவன் இத்தை விடமாட்டாமையாலே உள்ளே புதராநின்றான். [இதனுள் புக்கு] - அநாதிகாலம் அசித்தோடே முகம்பழகிப்போந்தவனிறே யிவன்; சேதநத்வாரா குந்தியடியிட்டுநிற்குமவனிறே யவன்; அவன் மேல்விழாநின்றான். தனக்கு ப்ரகாரமான ஆத்மவஸ்துவுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு தனக்கு ப்ரகாரமாமதிறே இது, "அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய" (அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய) என்னக்கடவதிறே. [என்னை முற்றும் தானேயாய்] - இப்படி ஆத்மவஸ்துவோடு அசித்தோடு வாசியற எங்கும்புக்கு வ்யாபிக்கையாலே 'தானே' என்னத் தட்டில்லையிறே. இவர் 'நான்' என்னுமத்தையும் கொண்டான்; இவர் மமகாரவிஷயத்தையும் கொண்டான். ஈஶ்வரனுக்குங்கூட விளாக்

---

ஆத்மா அணுவாயிருக்க, "முற்றும்" என்றதுக்கு ஸாவம் - யஸ்யஸா இத்யாதி. "என் உயிரை - முற்றும் - உண்டு" என்றந்வயிப்பது. என்னாத்மாவை யாவத்தும்அநுஸவித்தென்றபடி. உண்டு - அநுஸவித்து. எங்கும்புக்கு என்றது - ஸ்வரூபஸ்வஸாவங்களைப்பற்ற. "மாயவாக்கை" என்றதுக்கு ஸாவம் - என்னுடைய இத்யாதி. "இதனுள்" என்றதுக்கு ஸாவம் - அழுக்குடம்பு இத்யாதி. மாயவாக்கை - நஶ்வரமான ஶரீரம். மாயம் - நஶ்வரமான. "உள்புக்கு" என்றதுக்கு ஸாவம்-இவரிகழாநிற்க இத்யாதி. ஆனால்இவர் புறப்பட்டாரோவென்ன-தம்நெஞ்சாலே இத்யாதி. ஜுகுப்ஸையாலல் நெஞ்சாலே புறப்படுகிறதென், தாமே புறப்படுகிறதுக்கென்னென்ன - அதாவது இத்யாதி. அதாவதென்றது-வார்த்தைப்பாடு. ஆனால்இவர்க்குப் பாதந்த்ரனவன்தலைதுலுக்காதிருக்கிறதென்னென்ன - மங்கவொட்டு இத்யாதி. "இதனுள்புக்கு" என்றதிலே வ்யாக்யாதாவின் ஈடுபாடு - அநாதிகாலம் இத்யாதிவாக்யத்ரயம். அப்படி சேதநத்வாரா குந்தி யடியிட்டிருக்குமோவென்ன - தனக்குப்ரகாரமான இத்யாதி. இப்படி சேதநத்வாரா அசித்திலே அநுப்ரவேஶித்திருக்கைக்கு ப்ரமாணம் - அநேந இத்யாதி. 'என்னை முற்றுமுயிருண்டு என் மாயவாக்கையிதனுள்புக்கு" என்று வைத்து, மீளவும் "என்னை முற்றும் தானேயாய்" என்னலாமோவென்ன - இப்படி ஆத்ம இத்யாதி; ஹேதுஹேதுமத்ஸாவமாகையாலே விரோதமில்லையென்றபடி. விவரணம் - இவர்நான் என்னும் இத்யாதி. "உயிருண்டு" என்றத்தைப்பற்ற - இவர்நானென்னுமத்தையும் இத்யாதி. "மாயவாக்கை" என்றத்தைப்பற்ற - இவர் மமகார இத்யாதி. "என்னை முற்றும் தானேயாய் -" என்னைப்பற்றவும் மதநுபந்தியான ஶரீராதி ஸமஸ்தவஸ்துவைப் பற்றவும் தானே யபிமாநியாயென்னுதல்; என்னாத்மா முற்றும் தானேயாயென்னுதலென்று அர்த்தத்வயம். "என்னைமுற்றும்" என்றதுக்கு, "என்னை" என்று - ஆத்மாவாகவும், "முற்றும்" என்று - தேஹமாகவும் அருளிச்செய்து, என்னாத்மாவை முற்றும் என்றுஅர்த்தாந்தரவிவக்ஷயா ஸாவம் - ஈஶ்வரனுக்கும் இத்யாதி; இப்பக்ஷத்தில், இப்பதங்கள் "என்னை முற்றுமுயிருண்டு" என்றதின் அநுஸாஷணமாகக்கடவது. விளாக்குலை கொள்ளுகை - கபளீகரிக்கை. "நின்ற" என்றதுக்கு

குலைகொண்டு அநுபவிக்கவொண்ணாதபடி யானாய்த்து. [நின்ற] - ''அந்தர்ப்பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்ஸ்த்திதஃ'' (அந்தர்ப்பஹிஸ்சதத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்ஸ்த்திதஃ) - என்கிற பொதுவானநிலையன்றிக்கே. [மாயம்இத்யாதி] - ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேஸ்வரனும்கூட ''தண்ணீர், தண்ணீர்'' என்று கிட்டும்படியான தேசமாய்த்து. [தென்னன்திருமாலிருஞ்சோலை] - தென்னனென்று - அங்குத்தைக்கு ப்ரயாநனைச் சொல்லி, அவனதான திருமலையென்னுதல்; அன்றிக்கே, தெற்கில்திக்கிலேயாய் நன்றானவென்னுதல். [திசைகைகூப்பிச் சேர்ந்தயான்] - அவன்விரும்பின திக்கை விரும்பினாராய்த்து இவரும். ஒருதிக்குப் படவிறே இவர் விரும்புவது. அதாவது - அவனையுகந்து, அவ்வழியாலே அவன் விரும்பின தேசத்தையுகந்து, அத்தோடு ஸம்பந்தமுடைய திக்கை யுகந்து, இப்படி அவனோடு ஸம்பந்த ஸம்பந்திகளளவும்வர உகக்கும்படி கைகழியப்போந்த நான். அவன் தான் இவரை யுகந்து இவரோடு ஸம்பந்தமுடையதேஹத்தை விரும்புகிறப்போலேயாய்த்து; ''என்னெண்டானான்'' என்றாரிறே அடியிலே. [இன்னம்போவேனேகொலோ] - எனக்கு இத்திக்குக்குஅவ்வருகு மந்தவ்யபூமியுண்டோ? ஒருதிக்குப்பட்ட நான் இனி அவ்வருகு போவேனோ, இவன் இப்படி கிடந்து படுகைக்கு? இனி யவ்வருகுபோகையாவது - திருமலையில் ஸம்பந்தத்தை யறுத்துக்கொள்ளுகையிறே. [என்கொல் அம்மான் திருவருளே] - ஸர்வேஸ்வரனைபபற்றிவரும்போது நிர்விஷயப்ரமமுண்டாமாகாதே? என் செய்யாதானாய்த்தான் இவன் இங்ஙன்கிடந்து படுகிறது? என்றபடி. இவர்திறத்தில்எல்லாம் செய்தும், ஒன்றுஞ் செய்யாதாரைப்போலே ''எத்தைச் செய்வோம்?'' என்றிராநின்றானாய்த்து. (ரு)

---

பாவம் - அந்தஃ இத்யாதி. அதாவது-''நின்ற'' என்றதால் ஈஸ்வரனுக்கு ஆஸ்ரிதர்பக்கல் விசேஷ பக்ஷபாதம் தோற்றுகிறதென்றபடி. ''மாயவம்மான்'' இத்யாதிக்கர்த்தம் - ஆஸ்சர்யமான இத்யாதி. ''சேர்'' என்றதினர்த்தம் - தண்ணீர்தண்ணீர் இத்யாதி. தண்ணீர்தண்ணீர் என்றது - தாஹித்தவன் ''தண்ணீர், தண்ணீர்'' என்று நீரைத் தேடிக்கொண்டு வருமாபோலே, போக்யதாதிஸயத்தாலே அபிநிவேஸத்தோடே கிடக்கும்படியானவென்றபடி. திக்கை அஞ்சலிபண்ணுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் - அவன்விரும்பின இத்யாதி. ரஸோக்தி - ஒருதிக்குப்பட இத்யாதி. திக்குப்பட - அடைவுபட. திக்குப்பட விரும்புகையாவதுஇன்னதென்கிறார் - அதாவது இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - அவன்தான் இத்யாதி.அவரையும் அவரோடு ஸம்பந்தமுடைய தேசத்தையும் விரும்புமென்றதுக்கு ப்ரமாணம் - என்னெண்டான் இத்யாதி; நான், தன்னையும் தன்னோடு ஸம்பந்தமுடைய தேசத்தையும் விரும்புவேனாகில், அவனும், என்னையும் என்னோடு ஸம்பந்தமுடைய ஊரையும் விரும்பாநின்றானென்றிறே இதுக்குப்பொருள். ''இன்னம்'' என்றதுக்கு பாவம்- எனக்கு இத்யாதி. விவரணம் - ஒருதிக்கு இத்யாதி. போனால்விரோதமேதென்ன- இனியவ்வருகு இத்யாதி. ''இன்னம் போவேனேகொலோ'' இன்னம் விட்டுப்போவேனோ என்று ஸப்தார்த்தம். ''அம்மான் திருவருள் - என்கொல்'' என்றந்வயிப்பது. அம்மான் திருவருள் என்னம்பாயிருந்ததென்று ஸப்தார்த்தம். ''அருள்'' என்று - வ்யாமோஹமாக பாவம் - ஸர்வேஸ்வரனை இத்யாதி. அதாவது - நான் சரமாவதிஸேஷமாகையாலே தன்னை விட ப்ரஸங்கமற்றிருக்க, விடில்செய்வதென்? என்று அதிஸங்கை பண்ணும்படியான வ்யாமோஹமிருந்தபடியென்? என்றபடி. ''அருள்'' என்று - கொடையாக பாவாந்தரம் - என்செய்யாதானாய் இத்யாதி. அதாவது- ஸேஷத்வஸீமாபூமியிலே நிலைநிற்கும்படி யுபகரித்தும் ஒன்றும் செய்யாதவனைப்போலே பரகுபரகென்கிறதுக்கு அவதியென்னோ? என்றபடி. ஏதத்விவரணம் - இவர்திறத்தில் இத்யாதி. நிர்விஷயப்ரமம் - நிராலம்பந ப்ராந்தி. (ரு)

## நான்காம் பாட்டு.

---

என்கோல்அம்மான்திருவருள்கள்?உலகும்உயிருந்தானேயாய்
நன்கேன்னுடலங்கைவிடான் ஞாலத்தூடேநடந்துழக்கித்
தென்கோள்திசைக்குத்திலதமாய்நின்றதிருமாலிருஞ்சோலை
நங்கள்குன்றங்கைவிடான்நண்ணாவசுரர்†நலியவே.

ஆ.—(என்கொலம்மான்.) - என்னுடைய ப்ரக்ருதியிலுள்ளேபுகுந்து இவ்வாத்மாவை ஸ்வீகரித்தருளுகையுமன்றியே ஸர்வஜகதீஸ்வரனாயிருந்தான்; என்னுடைய ப்ராக்ருதிதன்னையுங்கூடத் தனக்கு போக்யமாகக்கொண்டு ஒருக்ஷணமும் கைவிடுகிறிலன்; இப்படி "என்னோடுள்ள ஸம்ஸ்லேஷம் பெறுகைக்கீடானதேசமேதோ?" என்று தேடிக்கொண்டு, திருமலையிலே வந்துபுகுந்து, தான் கருதினபடியே அங்கே ஸம்ஸ்லேஷித்து ப்ரீதனாய், "இந்த ஸம்ருத்தியெல்லாம் விளைவித்தது திருமலையிறே" என்றுகொண்டு, திருமலையையும் என்னுயிரும் உடலும்போலே தனக்கு போக்யமாகக்கொண்டு கைவிடுகிறிலன்; என்னுயிரையும் உடலையும் திருமலையையும் அநுபவித்து ப்ரீதனானான்; ப்ரதிகூலர் இந்தஸம்ருத்தி கண்டு பொறுக்கமாட்டாதே தறைப்படும்படி ப்ரீதனானனென்கிறார்.

ஓ.—நாலாம்பாட்டில், தம்முடைய திருமேனியிலும் தம்மோடே பரிமாறலாம் நிலமென்று திருமலையிலும் எம்பெருமானுக்குஉண்டான வ்யாமோஹத்தை அருளிச்செய்கிறார்.

[உலகும் என்று தொடங்கி] - ஸர்வேஸ்வரனாயிருந்து வைத்து என் ஆத்மாவை விடாத மாத்ரமன்றிக்கே மிகவும் என் உடம்பைவிடுகிறிலன். [ஞாலத்தூடே நடந்து என்று மேலுக்கு] - பூமியெங்கும் உலாவித்திரிந்து என்னை விஷயீகரிக்கைக்கு ஈடான நிலமாகத் திருமலையைப்பார்த்து ப்ரதிகூலர் மண் உண்ணும்படி அதிலே அத்யபிநிவேஸத்தைப் பண்ணி அத்தை ஒருகாலும் கைவிடுகிறிலன்.

ப.—அநந்தரம், என்ஸரீரத்தை விரும்புகைக்கு ஹேதுவாகையாலே திருமலையையும் ஆதரித்து, இரண்டுஸ்தலத்தையும் கைவிடுகிறிலனென்கிறார்.

(ஒருவனைப்பிடிக்கைக்கு ஊரைவளைப்பாரைப்போலே என்னைப் பெறுகைக்காக), உலகும் - ஸர்வலோகங்களும், உயிரும் - ஸர்வப்ராணிகளும், தானேயாய் - தானேயாம்படி (அந்தராத்மாவாய்க்கொண்டு வ்யாப்தனாய்), (அவ்வளவில் நில்லாதே), நண்ணா - (தன்னையாஸ்ரயிக்கையில்) விமுகரான, அசுரர் - அஸுரப்ரக்ருதிகள், நலிய - நசிக்கும்படியாக, (த்ரைவிக்ரமாபதாந முகத்தாலே என்னைலபிக்கைக்கு ஸ்தலம்தேடுவாரோபாதி), ஞாலத்தூடே - பூமிக்குள்ளே, நடந்துழக்கி – நடந்துமிகுத்து, தென் - தெற்கென்கிறபேரை, கொள் - கொண்ட, திசைக்கு - திக்குக்கு, திலதமாய்நின்ற - ஸிரஸாவாஹ்யமாயிருக்கிற, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையென்று பேராயிருக்கிற, நங்கள் - நம்போல்வார்க்கு அநுபாவ்யமான, குன்றம் - திருமலையை, கைவிடான் - (என்னைலபிக்கைக்கு அநுரூபஸ்தலமென்று விரும்பிக்)கைவிடுகிறிலன்:(அதுவழியாக), என்னுடலம் - என்ஸரீரத்தையும், நன்கு - மிகவும், கைவிடான் - கைவிடுகிறிலன்; அம்

---

† 'நலியவே' என்று சிலர்.

மான் - ஸ்வாமியானவனுடைய, திருவருள்கள் - உபகாரங்களான ஸ்ரீலப்ரகாரங்கள், என்கொல் - என்னாயிருக்கிறன ?

இ.—நாலாம்பாட்டில், தம்முடைய திருமேனியிற்காட்டிலும் தம்மோடே பரிமாறலாம் நிலமென்று அவனுக்குத் திருமலையிலுண்டான வ்யாமோஹத்தை அருளிச் செய்கிறார்.

[என்கொல் அம்மான் திருவருள்கள்] - ஸர்வேஶ்வரனுக்கு என் பக்கலுண்டாயிருந்துள்ள ப்ரஸாதாதிஶயத்துக்கு அவதி என்னோ ? [உலகும் உயிரும் இத்யாதி]- ஸகல லோகங்களும் ஸகல ஆத்மாக்களும் தானிட்ட வழக்காயிருக்கிறவன் தனக்கு ஒரு குறையுண்டாய் இப்படி படுகிறானோ ? [நன்குஎன்னுடலம் கைவிடான்] - செருக்கர் நீசஸ்த்ரீகள் காற்கடையிலே துவளுமாபோலே என்னுடம்பை விரும்பி விடுகிறிலன். எனக்கு மமதாவிஷயம் என்னுமதுவே ஹேதுவாக விடுகிறிலன். பூமியெங்கும் உலாவி எல்லார் தலைகளிலும் திருவடிகளைவைத்துத் திருவுலகளந்தருளிற்று, தம்மைப் பெறுகைக்கு க்ருஷிபண்ணி யென்றிருக்கிறார். ஸர்வஸாதாரணன் வ்யாபாரமாகையாலே ஸம்பந்தம் அறிந்தால் எனக்கென்னலாமிறே. இந்த்ரன்ராஜ்யம்பெற்றுனாய்ப்போனான், மஹாபலி கொடுத்தானாய்ப் போனான். இவர் அத்தைத் தமக்கு என்றிருக்கிறார் [தென்கொள் இத்யாதி] - திருவுலகளந்தருளுகை ஒரு வ்யாஜமாய், "ஆழ்வாரை அநுபவிக்கைக்கு ஏகாந்தஸ்தலமேதோ?" என்று ஆராய்ந்து திருமலையிலே நின்றருளினான். ஆரியர்கள் இகழ்ந்த தெற்கில்திக்குக்கு ஓர்ஆபரணம்போலே யிருந்துள்ள திருமலையிலே வந்துநின்றான். [நங்கள் குன்றம்] - ஆஶ்ரிதருடைய ஸங்கேத ஸ்தலம். [நங்கள்குன்றம் கைவிடான் - நன்கு என்னுடலம் கைவிடான்] - திருமலையில்நிலை ஸாதநமாக ஆழ்வார் திருமேனியை ப்ராப்யமாக நினைத்திருக்கிறானாய்த்து. [நண்ணாஅசுரர் நலியவே] - திருமலையில் நிலைபாலே அஸுரவர்க்கம் தானே முடிந்துபோய்த்து. உலகும் உயிரும் தானேயாய் - ஞாலத்தூடே நடந்துழக்கி, தென்கொள் திசைக்குத் திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை - நங்கள்குன்றம் - நண்ணாஅசுரர் நலிய - கைவிடான். நன்கு என்னுடலம் கைவிடான் - என்கொல் அம்மான் திருவருள்கள் ?

ஈடு.—நாலாம்பாட்டு. தம்முடைய திருமேனியிற்காட்டிலும் தம்மோடே பரிமாறலாம் நிலமென்று அவனுக்குத்திருமலையில் உண்டான வ்யாமோஹத்தை யருளிச் செய்கிறார்.

[என்கோல்அம்மான் திருவருள்கள்] - ஸர்வேஶ்வரனுக்கு நிரதிஶயாநப்ரமமுண்டாமாகாதே ! [உலகுஇத்யாதி] - என்னகுறையுண்டாய்த்தான் இப்படி கிடந்து படுகிறான் ? [நன்கென்னுடலம்கைவிடான்] - செருக்கனாயிருக்கும் ராஜபுத்ரன் நீசஸ்த்ரீ காற்கடையிலே துவளுமாபோலே. [நன்கென்னுடலம்] - ஸர்வேஶ்வரன் தன்னைக்

---

நாலாம்பாட்டு.—என்கோல் இத்யாதி. "நன்கென்னுடலம்கைவிடான் - திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம்கைவிடான்" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை - தம்முடைய இத்யாதி. பரிமாறலாம்நிலம் - ஸம்ஶ்லேஷிக்கைக்கு யோக்யமானதேஶம்.

உக்தாநுஷணமென்கிறார் - ஸர்வேஶ்வரனுக்கு இத்யாதி. தம்முடம்பில் அவன் வ்யாமோஹம் சொல்லுகிறவிடத்திலே, ஸர்வேஶ்வரத்வம் சொல்லுகிறதுக்கு பாவம் - என்னகுறை இத்யாதி. இப்படிகிடந்துபடுகிறான் - வ்யாமோஹம்பண்ணுகிறானென்றபடி. "என்னுடலம்" என்றதுக்கு பாவம் - செருக்கன் இத்யாதி. துவளுகை - உலருகை. "நன்கு" என்றதுக்கு பாவம்-

கேட்டார்க்குச் சொல்லுகிற வார்த்தையிருக்கிறபடி. ஆழ்வாரை "நமக்குத்தந்ததிருமேனியன்றே" என்னுநின்றுனுய்த்து. [நன்கு] - நன்றாக. மிகவுமென்றபடி. [என்னுடலம்]- "இவருடைய மமகாரவிஷயமானதன்றே நமக்கு உத்தேஶ்யம்" என்றிராநின்றான். என்னுடைய * அடங்கெழிற்சம்பத்திலேதேனும் பாம்புசேத்ததோ என்னுநின்றான். [ஞாலத்துஇத்யாதி]-எத்தனைகாலமுண்டு அவன் இப்பேறுபெறுகைக்கு உழன்றுதிரிகிறது. ஸர்வஸாதாரணனுன ஸ்வாமியுடைய வ்யாபாரமெல்லாம் எனக்கேனக்கேன்னலாமிறே ஶேஷபூதர்க்கு. இந்த்ரனுக்கு "ராஜ்யம்பெற்றேன்" என்னவுமாய், மஹாபலிக்கு "ஔதார்யம்பெற்றேன்" என்னவுமாய், சிலர்க்கு "போன்பயந்தேன்" என்னவுமாய், அவர்க்கு " எனக்காகச்சேய்தான் " என்னவுமாயிருக்கிறது காணும். [தேன்கோள்இத்யாதி] - தெற்கில்திக்குக்கு ஓர் ஆபரணமான திருமாலிருஞ்சோலை. [நங்கள்குன்றம்] - ஆஶ்ரிதருடைய ஸங்கேத ஸ்தலம். [நங்கள்குன்றம்கைவிடான் - நன்கேன்னுடலம்கைவிடான்]-திருமலையை ப்ராபகமாவும் ஆழ்வார்திருமேனியை ப்ராப்யமாகவும் நினைத்திராநின்றான். ஆழ்வார் திருமேனியாயுத்தேஶ்யம், அதுபெறுகைக்காய்த்துத் திருமலையில் நிலை. [நண்ணுவசுரர் நலியவே] - " நெடும்பகை தற்செய்யத்தானேகெடும் " என்னுமாபோலே, இவன் இவ்விடத்தைவிடாதே வர்த்திக்க ஆஸுரவர்க்கம் முடிந்து போய்த்து. 'உலகுமுயிரும் தானேயாய் - ஞாலத்தூடே நடந்துழக்கி, தென்கோள்திசைக்குத் திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம் - நண்ணுவசுரர்நலிய - கைவிடான் - நன்கேன்னுடலம் கைவிடான் - என்கோலம்மான் திருவருள்கள்.' (ச)

---

ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஈஶ்வராபிப்ராயத்தாலே நன்கென்கிறதென்றபடி. நன்றானவுடலமென்று ஸப்தார்த்தம். வார்த்தைதன்னைக் காட்டுகிறார் - ஆழ்வாரை இத்யாதி. "நன்கு" என்றதுக்கர்த்தாந்தரம் - நன்றாக இத்யாதி. நன்றானவென்றர்த்தமானபோது, * உடலுக்கு விசேஷணம்; மிகுதியானபோது, " கைவிடான் " என்றதுக்கு விசேஷணம். "என்" என்று மமகாராஶ்ரிதமானத்தை "நன்கு" என்னும்படியென்னென்ன - இவருடைய இத்யாதி. பலிதம் - என்னுடைய இத்யாதி. அதாவது - த்யாஜ்யமான லீலாவிபூதி ததீயத்வாகாரத்தாலே இவர்க்கு உத்தேஶ்யமானாற்போலே, த்யாஜ்யமானஇவர் திருமேனியும் இவர் ஸம்பந்தத்தாலே யுத்தேஶ்யமென்றுநின்றானென்றபடி. அடங்கெழில்சம்பத்தில் - கட்டடங்க நன்றான ஸம்பத்தில்; உபயவிபூதியிலுமென்றபடி. பாம்புசேத்ததோ - த்யாஜ்யாம்ஶம்உண்டோவென்றபடி. இப்போது திருவுலகளந்தருளின அபதாநத்தைச் சொல்லுகிறதுக்கு பாவம் - எத்தனைகாலம் இத்யாதி. ஞாலத்தூடே நடந்துழக்குகிறது இவர்க்காகவோவென்ன - ஸர்வஸாதாரணன் இத்யாதி. "எனக்கெனக்கென்னலாம்" என்றத்தைக் காட்டுகிறார் - இந்த்ரனுக்கு இத்யாதி. சிலர்க்கு - திருமங்கையாழ்வார்க்கு. ஸங்கேதஸ்தலம் - அநுபவஸ்தலம். இவரிடத்தில் வ்யாமோஹப்ரகரணத்திலே, "நங்கள் குன்றம் கைவிடான்" என்கிறதென்னென்ன - திருமலையை இத்யாதி. விவரணம் - ஆழ்வார் இத்யாதி. திருமலையில் நிலைஇவர்க்காகவாகில், நண்ணுவசுரர் நலியும்படியென்னென்ன - நெடும்பகை இத்யாதி. நெடும்பகை - போக்கப்போகாத சத்ரு. தற்செய்ய - தான் செய்கிறத்தைச் செய்யவென்றபடி. " திருமலை ப்ராபகமும் ஆழ்வார் திருமேனி ப்ராப்யமும் " என்னுமிடம் தோன்றப் பாட்டுக்கந்வயம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, " என்கொலம்மான்திருவருள்கள் " என்றதுக்கர்த்தாந்தரம் - உலகுமுயிரும் இத்யாதி. " என்கொலம்மான்திருவருள்கள் " என்றது - அநுவாதமென்று முந்தினவர்த்தம்; அநுவாதமானபோது, " நன்கென்னுடலம் கைவிடான் " என்று க்ரியை. இப்பாட்டுக்கு ஶேஷமென்றிரண்டாமர்த்தம்; இப்போது, வ்யாக்யாநத்திற்படியேயந்வயம்; " திருவருள் " என்று க்ரியை.

(ச)

## ஐந்தாம் பாட்டு.

நண்ணாஅசுரர்†நலிவெய்த நல்லஅமரர்பொலிவெய்த
எண்ணாதனகளெண்ணும் நன்முனிவர் இன்பந்தலைசிறப்பப்
பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த்தன்னைத்தான்பாடித்
தென்னாவென்னும்என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே.

ஆ.—(நண்ணா.) - ப்ரதிகூலர் தறைப்படும்படியாகவும் தனக்கு நல்லரான அமரர் ஸம்ருத்தராம்படியாகவும், லீலோபகரணமாயும் போகோபகரணமாயுமிருந்த நிரவதிகஸம்ருத்திகள் எம்பெருமானுக்கு உளவாயிருக்கச்செய்தே, இவையொழியவே அதின்மேலே ஸத்ய ஸங்கல்பனாயிருந்த எம்பெருமான் தன்னாலும் ஸம்பாதிக்கவொண்ணாதே வாங்மநஸாகோசரமான அபர்யந்தஸம்ருத்திகள் எம்பெருமானுக்கு உளவாக வேணுமென்று மநோரதியாநிற்கும் நன்முனிவர், "நம்முடைய மநோரதாநுவர்த்தியான நிரவதிகஸம்ருத்திகள் எம்பெருமானுக்கு விளையப்பெற்றோம்; இனி நமக்கொரு குறையில்லை" என்றுகொண்டு நிரவதிகநிர்வ்ருதியை யுடையராம்படியாகவும், பண்ணார் பாடலான இன்கவிகளை என்னையிட்டுப் பாடுவித்து இக்கவிகளாகிற அம்ருதத்தைப் பருகிக் களித்து, அம்ருதபாநம்பண்ணின வண்டுகள்போலே தென்னாதெனாவென்று திருமலையிலேநின்று பாடியருளாநின்றானென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், எம்பெருமான் தம்மோடேகலந்து தம்வாயாலே திருவாய்மொழி கேட்ட ப்ரீதியுள்ளடங்காமை, தென்னா தென்னாவென்று நித்யமுக்தரைப்போலே பாடாநின்றான் என்கிறார்.

[நண்ணா என்றுதொடங்கி] - உகவாத அஸுரர் இஸ்ஸம்ருத்தி பொறுக்கமாட்டாதே முடியும்படியாகவும், அநுகூலர் இத்தைக்கண்டு ஸம்ருத்தராம்படியாகவும், உபயவிபூதியும் கூடினாலும் எம்பெருமானுக்கு ஸம்பத்துபோராது, இன்னம் மேன்மேல் நன்மைகளை வேணுமென்று எண்ணாநிற்கும் நன்முனிவர், "இதுவே அமையும், மற்றொரு ஸம்பத்துவேண்டா" என்று மிகவும் ஹ்ருஷ்டராம்படியாகவும். [பண்ணார் பாடல் என்றுதொடங்கி] - பண்சேர்ந்திருந்துள்ள பாடலையுடைய இனியகவிகளை என்னைப் பேரையிட்டுக்கொண்டு தான் தன்னைப் பாடி. [என்னம்மான்] - திருமாலிருஞ்சோலையானே] - என் நாயனானவன் திருமாலிருஞ்சோலையான்.

ப.—அநந்தரம், தம்மோடு ஸம்ஶ்லேஷித்து திருவாய்மொழி பாடக்கேட்ட ப்ரீதியாலே ரஸிகனாய் ஆளத்திவையாநின்றானென்கிறார்.

நண்ணா - (பகவத்விஷயத்தைக்) கிட்டக்கடவோமல்லோமென்று ப்ரத்யூஹராயிருக்கும், அசுரர் - ஆஸுரப்ரக்ருதிகள், நலிவெய்த- (இவ்வதிஶயம் பொறுக்கமாட்டாமல்) விநாஶத்தையடையவும், நல்லவமரர் - பக்திபரராய்க்கொண்டு அநுகூலரான தேவவர்க்கம், (மிகவுமுகப்பாலே), பொலிவெய்த - ஸம்ருத்தியை லபிக்கவும், எண்ணாதனகள் - அவாப்தஸமஸ்தகாமனுடைய குணவிபூதிக்குமேலே இதுக்குமுன்பு எண்ணவறியாத அதிஶயங்களை, எண்ணும் - ப்ரேமத்தாலே ஆஶாஸியாநிற்கும், நல் - ஸ்நேஹயுக்தராய், முனிவர் - (அநுபவஶீலரான) முனிவர்கள், (கேட்டநுபவித்து), இன்பம் தலைசிறப்ப - ஆநந்தநிர்ப்பரராகவும், பண் ஆர் - பண்நிறைந்த, பாடல் - இசையை

† 'நவிவெய்த' என்று சிலர் ஓதுவர்.

யுடைய, இன்கவிகள் - இனியகவிகளை, யானாய் - (தனக்கு ப்ரகாரபூதனான) நானாய்க் கொண்டு, தன்னை - (ஸ்தவ்யனாய்ஸ்தவப்ரியனான)தன்னை, தான்பாடி - ஸ்தோதாவாய்க் கொண்டு தானேபாடி, திருமாலிருஞ்சோலையான் - திருமாலிருஞ்சோலையானாய்நிற்கிற, என்னம்மான் - என் ஸ்வாமியானவன், (தன்மேன்மைபாராதே பாட்டில் ரஸாதி சயத்தாலே),தென்னாவென்னும்-தென்னாஎன்று ஆளத்தியையாநிற்கும்.நலிவு- நாசம்.

இ.—அஞ்சாம்பாட்டில், அவன் தம்மோடேகலந்து தம்வாயாலே திருவாய் மொழிகேட்ட ப்ரீதியுள்ளடங்காமை ஆளத்தியையாநின்றான் என்கிறார். "நன்கு என் னுடலம் கைவிடான்" என்கிறவளவன்றியே என் உக்திமாத்ரத்திலே களியாநின்றான் என்றுமாம்.

[நண்ணா இத்யாதி] - "விபரீதஸம்பரா:" என்கிறபடியே - விபரீதரான அஸுரர்கள் இஸ்ஸம்ருத்தி பொறுக்கமாட்டாமையாலே முடியவும், "கிட்டக்கட வோமல்லோம்" என்றிருக்கும் அஸுரவர்கம். "விஷ்ணுபக்திபராதேவா:" என்கிற படியே - அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்கள் இதுவே ஜீவனமாக ஸம்ருத்தமாகவும். "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றாரிறே [எண்ணா தனகளெண்ணும்] - உபயவிபூதியுக்தனுக்கு இன்னம் விபூதி வேணுமென்றும், அஸங்க்யாதகுணகனுக்கு இன்னம் குணம் வேணுமென்றும் மேன்மேலன எண்ணா நிற்குமவர்கள். [நன்முனிவர்] - ஈச்வரன் அடியாகத் தங்கள் ஸம்ருத்தியை எண்ணு மவர்கள் முனிவர்; அத்தலைக்கு ஸம்ருத்தியை எண்ணுமவர்கள் நன்முனிவர். [இன்பம் தலைசிறப்ப] - "திருவாய்மொழியொழிய வேறொரு ஸம்பத்துவேண்டா" என்று மிக வும் ஹ்ருஷ்டராம்படியாகவும். [பண்ணார் பாடல்] — பண்மிக்கிருந்துள்ள பாடல். புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே, திருவாய்மொழி அவதரிக்கிறபோதே பண் மிணுங்கியாய்த்திருப்பது. [இன்கவிகள்] - பண்ணுக்கு ஆச்ரயமான கவிதானே இனிதாயிருக்கை. [யானாய்த்தன்னைத் தான்பாடி] - என்னைப்பேரையிட்டுத் தன்னைத் தான்பாடி; புத்ரனை வார்த்தையைக் கற்பித்து அவன்வாயாலே கேட்டு இனியனாம் பிதாவைப்போலே. [தென்னாவென்னும்] - ப்ரீதிக்குப் போக்குவீடாக ஆளத்தியையா நின்றான். "ஹாவுஹாவுஹாவு" என்று ஸ்வல்லாஸத்திலே ப்ரீதிக்குப் போக்கு விட்டு மோக்ஷபூதன் செல்லக்கடவத்தை, "அஹமந்நாத:" என்கிறதான் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே அந்த பூர்த்திகுலைந்து சொல்லுகிறானிறே. [என்னம்மான்] - ஸுத வசநம் ரஸிக்குமாபோலே, ஸம்பந்தமிறே ரஸிக்கைக்கு அடி. [திருமாலிருஞ்சோலை யானே] - இவரைக் கவிபாடுவித்த தேசம் திருமலையாய்த்து.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. அவன் தம்மோடே கலந்து தம் வாயாலே திருவாய் மொழிகேட்ட ப்ரீதியுள்ளடங்காமல் ஆநந்தித்து ஆளத்தியையா நின்றானென்கிறார். 'நன் கேன்னுடலம் கைவிடான்" என்னுமளவன்றிக்கே என்னுக்திமாத்ரத்திலே களியாநின்றா னென்கிறாரென்றுமாம்.

---

அஞ்சாம்பாட்டு.—நண்ணா இத்யாதி. இவர்திருமேனியை விரும்புகிற ப்ரகாணத்திலே திருவாய்மொழியைக்கேட்டு இனியனாகையைச் சொல்லுகிறதென்னென்ன; த்வேதா அருளிச் செய்கிறார் - அவன்தம்மோடே இத்யாதி வாக்யத்வயத்தாலே; "மாயக்கவியாய்," "தன்னைத் தானே துதித்து" இத்யாதியாலே ப்ரஸ்துதமாகையாலே யருளிச்செய்கிறாரென்றபடி. "நன்கென் னுடலம் கைவிடான்" என்றதைப்பற்ற - தம்மோடேகலந்து என்றது. பரிஹாராந்தரம் - நன்கேன்னுடலம் இத்யாதி. அதாவது - திருமேனியெல்லாம் வேண்டாதே உக்திமாத்ரத்திலே களியாநின்றானென்றபடி. ஆளத்தியாவது- கானத்துக்குப் பூர்வரங்கமான ஆலாபம்.

* நண்ணுவசுரர்நலிவெய்த நல்லவமரர்பொலிவெய்த எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைசிறப்பவாய்த்து திருவாய்மொழிதான் அவதரித்தது. ஸ்துத்யனுடைய அவதாரம்போலேயாய்த்து ஸ்துதியினுடைய அவதாரமும்; "பரித்ராணாய" (பரித்ராணாய), "அகிலஜகத்பத்மபோதாய" (அகிலஜகத்பத்மபோதாய)என்னுமாபோலே. [நண்ணுஇத்யாதி] - ப்ரதிகூலநிரஸநத்துக்கு வேறொரு கருவி யெடுக்கவும்வேண்டாதே, அநுகூலரக்ஷணத்துக்கும் வேறொன்று தேடவும் வேண்டாதே, அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு ஸ்வயம்ப்ரயோஜநமுமாயிருக்குமாய்த்து. [நண்ணுவசுரர்நலிவெய்த] - அவ்யபதேஶ்யனுக்கு அநந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக் கேட்டு "இவன்என்செய்தானானான்" என்றுகர்ஹித்தான் - "ஒரு மதிளை வாங்குங்காட்டில் அத்தர்ஶநம் குலைந்ததோ, திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்றும் வலியன இரண்டு மஹாப்ரபந்தங்களுண்டாயிருக்க" என்றானாய்த்து; இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து. "விபரீதஸ்ததாऽஸுர:" (விபரீதஸ்ததாऽஸுர:) என்னக்கடவதிறே. பொருந்தாமையையுடைய அஸுரவர்க்கமானது மண் ணுண்ணும்படியாக. ஸம்பந்தமில்லையென்னவொண்ணாதே, "பொருந்தோம்" என்கையிறே யுள்ளது. [நல்லவமரர்பொலிவெய்த] - "விஷ்ணுபக்திபரோதேவ:"(விஷ்ணுபக்திபரோதேவ:)என்னக்கடவதிறே. †அநுகூலராயிருக்குமவர்கள் உண்ணாதே தடிக்க. இவர்களுக்கு நன்மையாவது - பகவத்பக்தராயிருக்கை. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்னக்கடவதிறே. [எண்ணுதன இத்

நலிவெய்த - விநாசத்தை யடையும்படியாக. நலிவு - விநாசம். எய்துகை - ப்ராபிக்கை. பொலிவு - வ்ருத்தி. தலைசிறப்ப - மிகவும்அதிசயிக்கும்படியாக. ஃபலிதம் - ஸ்துத்யனுடைய இத்யாதி. ஸ்துத்யனுடைய அவதாரம் அநுகூலரக்ஷண ப்ரதிகூலநிரஸநங்களுக்கு ஹேதுவாயிருக்குமோவென்ன - பரித்ராணாய இத்யாதி. ஸாதுபரித்ராணாதிகளுண்டாகிலிறே ஜகத்பத்மபோதம் வருவதென்னும் கருத்தாலே யருளிச்செய்கிறார்-அகில இத்யாதி. "இன்பம்தலைசிறப்ப" என்னுமளவுக்கு பாவம் - ப்ரதிகூல இத்யாதி. கருவி - ஸாதநம். அதாவது - ஆயுதம். திருவாய்மொழி ப்ரதிகூலநிரஸநத்துக்கு ஹேதுவென்னுமதுக்கு ஸம்வாதம்-அவ்யபதேஶ்யனுக்த இத்யாதி. எப்படி கர்ஹித்தானென்ன - ஒருமதிளை இத்யாதி வாக்யத்வயம். நெஞ்சுளுக்கும்படி - நெஞ்சிடுபடும்படி. அவ்யபதேஶ்யன் - க்ரிமிகண்டன். அநந்தரத்திலவன்- அவன்மகன். அநந்தரத்திலவன் அஸுரனோ? என்ன - விபரீத: இத்யாதி. "த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச। விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ்ததாऽஸுர:." "பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்। தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" இதி கீதாயாம். "ததோऽகிலஜகத்பத்மபோதாயாச்யுதபாநுநா। தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா" இதி பஞ்சமேம்ஶே. ஃபலிதார்த்தம் - பொருந்தாமையை இத்யாதி. "அசுரர்" என்னாதே, "நண்ணுவசுரர்" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - ஸம்பந்தம் இத்யாதி. 'உள்ளது' இழக்கைக்கென்றபடி. "நல்லவமரர்" என்கிறது ஆரையென்ன - விஷ்ணுபக்தி இத்யாதி. ஃபலிதார்த்தம் - அநுகூலராய் இத்யாதி. விவரணம் - இவர்களுக்கு இத்யாதி. அமரர் - அநுபவபரர். "அமரர்" என்றபோதே பகவத்பக்தரென்று ஸித்தமானாலும், நல்லரானகையாலே "அமரர்" என்று ஹேதுகர்ப்பவிஶேஷணமாகையாலே புநருக்திதோஷமில்லை கருத்து. உண்ணாதே தடிக்கைக்கு இது ஸாதகமோவென்ன - தொண்டர்க்கு இத்யாதி. அவையேதென்ன - ஸர்வேஶ்வரன் இத்யாதி. முனிவர் - மநநஶீலர்;

† அநுகூலரானவர்கள் என்று அடையவளைந்தான் பாடம்.

யாதி] - புறம்போருவர் எண்ணுதன சிலவற்றையெண்ணுவார் சிலருண்டாய்த்து. ஸர்வேஶ்வரன் ரக்ஷகன், அவனையொழிந்ததடங்கலும் ரக்ஷ்யம்'' என்றிருக்கையன்றிக்கே, உபயவிபூதியுக்தனுக்கு இன்னம் சிலவிபூதிவேணுமென்றும், ஸர்வகுணஸம்பந்நனுக்கு இன்னம் சிலகுணங்கள் வேணுமென்றும் என்று இப்புடைகளிலே எண்ணுவார் சிலருண்டாய்த்து; அவர்கள் [இன்பம் தலைசிறப்ப] - திருவாய்மொழியவதரித்தபின்பு ''அவனுக்கு குணவிபூதிகள்போராது''என்றிருந்தஇழவுதீர்ந்து, அத்தால்நிரதிஶயாநந்திகளாக. [நன்முனிவர்]-அவனுடைய ஸம்ருத்தியை மநநம்பண்ணும் ஸ்வபாவராயிருக்கை. அன்றிக்கே, ''திருவாய்மொழியை யொழிய வேறொரு ஸம்பத்துவேண்டா'' என்று இதுவே மநநம்பண்ணி ஹ்ருஷ்டராம்படியாகவும். [பண்ணார்பாடல்] - பண்ணோடே சேர்ந்த பாடல். புஷ்பமானது பரிமளத்தோடே அலருமாபோலே, பண்ணும்இசையும் மிகுந்திருக்குமாய்த்து. [இன்கவிகள்] - இசையும்பண்ணுமொழியவே †தோக்குக்கழிந்த சுளைபோலே கவிதானே இனிதாயிருக்குமாய்த்து. [யானாய்த்தன்னைத் தான்பாடி] - பிதாவானவன் புத்ரனுக்குப் பசுவை நீர்வார்த்துக் கொடுத்து அவன்பக்கலிலே தான் மீளநீரேற்றுப் பசுவைப் பெறுமாபோலே;ஸூநுனை வார்த்தையைக் கற்பித்து அவன்சொல்லக்கேட்டு இவன் இனியனுமாபோலே. தான் பாடினுகில் ஸ்ரீகீதையோடொத்துப்போம் நம்பிதிருவழுதி நாடுதாஸர், ''அருள்கொண்டாடும்'' என்கிறபாட்டிலே, ''ஸ்ரீகீதையையப்யஸித்தானொருவன் ஸந்யாஸதஸ்ஸிலேசென்றால்பலருமாக நாழியரிசியைக்கொடுத்துவிஶ்வஸிக்கமாட்டாமையாலே 'புறந்திண்ணையிலேகிட' என்பர்கள்: திருவாய்மொழிகற்றான் ஒருவிண்ணப்பம்செய்வான் சென்றால், ஸர்வேஶ்வரனகப்படப் புறப்பட்டெதிர்கொண்டு அகமொழித்துக்கொடுத்து அமுதுபடியுமெடுத்துவிட்டு ஸத்கரிப்பர்கள்'' என்றாராம். ''பண்டேபரமன்பணித்த'' என்று இவரங்கீகரிக்கையாலே அந்த ஸ்ரீகீதைதானும் வீறுபெற்றதிறே. [தென்னாவென்னும்] - செருக்காலே ''தென்னா, தென்னா'' என்று ஆளத்தியையாநிற்குமாய்த்து; ஸம்ஸாரிசேதநனுக்கு ஹர்ஷவல்லாஹமுண்டானால் ''[illegible]

''[illegible]'' *நன்மைக்கு - *எண்ணுதனகளெண்ணுகையே நன்மையென்றும், திருவாய்மொழி வ்யதிரிக்தஸம்பத்து வேண்டாவென்கை நன்மையாவதென்றும்அர்த்தத்வயம். முந்தின வர்த்தத்தில், இன்பமாவது - ஈஶ்வரனுடைய குணவிபூதி ப்ரதிபாதகமான திருவாய்மொழியுண்டாகையால் வந்த ஆநந்தம்; இரண்டாமர்த்தத்தில், திருவாய்மொழியாகிற நிரதிஶயஸம்பத்தால்வந்த ஆநந்தம். இவர்கள் திருவாய்மொழியாலே நிரதிஶயாநந்திகளாம் ப்ரகாரத்தை விசதமாக அருளிச்செய்கிறார் - திருவாய்மொழி இத்யாதி. மநநஶீலதையிலே நன்மையேதென்ன - அவனுடைய இத்யாதி. ஆர்தல் - சேர்தலும், மிகுதியும். இவ்வர்த்தத்வயத்தையு மடைவே யருளிச்செய்கிறார் - பண்ணோடேசேர்ந்தபாடலென்றும்,புஷ்பமானதுஇத்யாதியாலும் ''பண்ணும்-பாடலும்-ஆர்'' என்றந்வயிப்பது. பண்-ஸ்வரம். இசை-ராகம். ''இன்'' என்றதுக்குபாவம் - இசையும் இத்யாதி. தோக்கு - த்வக்: மேல்தோல்: சக்கையென்றபடி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - பிதாவானவன் இத்யாதி. யானாய்த்தன்னைத்தான்பாடி னுலுகக்கும்படியென்னென்ன - ஸூநுனை இத்யாதி என்னுதல், த்ருஷ்டாந்தாந்தரமாதல். இவ்விடத்திலே,''[illegible]'' என்கிறதநுஸந்தேயம். தான்பாடாதே இவரையிட்டுப்பாடுகிறதென்னென்ன - தான்பாடினுகில் இத்யாதி. ஸ்ரீகீதையைப்பற்ற இது ஶ்லாக்யமென்னுமதுக்குஐதிஹ்யம் - நம்பி இத்யாதி. ஆனாலும் சரமஶ்லோகத்தாலே ஸ்ரீகீதைக்குஅதிசயமில்லையோவென்ன - பண்டே இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸம்ஸாரிசேதநன் இத்யாதி.

† தொக்கு என்றும் பாடங் காண்கிறதென்பர்,

வெஸ" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே)என்று ஸாமகாநம்பண்ணுமாபோலே ; "அவாக்யநா தர:" (அவாக்யநாதர:) என்கிறவன் தைர்யபங்கம்பிறந்து பாடாநிற்குமாய்த்து. [என்னம்மான்] - ஸம்போதவசநம் இனிதாம்போது ப்ராப்தியுண்டாகவேணுமிறே ; அதுக்கு அடியான ப்ராப்தியைச் சொல்லுகிறதாய்த்து. [திருமாலிருஞ்சோலையானே] - இவரைப்பாடுவித்த முக்கோட்டை. "பாட்டினுலுன்னையென்னெஞ்சத்திருந்தமை - காட்டினாய்கண்ணபுரத்துறையம்மானே" என்று அவரைப்பாடுவித்தமுக்கோட்டையிறே அது. தாம்பாடினகவிகளினினிமையை யநுஸந்தித்தார், இவை தாமடியாகப் பிறந்தனவென்று சொல்லலாயிருந்ததில்லை, இதுக்கடியேன் ? என்றுபார்த்தார் ; அவன்தன்னெஞ்சிலே புகுந்திருந்து பாடுவித்தானாயிருந்தது. " கண்ணபுரத்துறையம்மான் " என்று கவிபாடுவித்த முக்கோட்டையைச் சொல்லுகிறார். (ரு)

---

# ஆறும் பாட்டு.

---

திருமாலிருஞ்சோலையானேயாகிச் செழுமூவுலகுந் தன
ஒருமாவயிற்றினுள்ளேவைத்து ஊழியூழிதலையளிக்கும்
திருமால்என்னையாளுமால் சிவனும்பிரமனும்காணாது
அருமாலெய்தியடிபரவ அருளையீந்தஅம்மானே.

ஆ.—(திருமாலிருஞ்சோலையானே) - த்ரைலோக்யமெல்லாம் தன்சிறுவயிற்றிலே வைத்து யுகந்தோறும் ரக்ஷித்தருளும் ஸ்வபாவனாய், ஸ்ரீய:பதியாய், ப்ரஹ்மருத்ராதிகளால் அநவரதாபிஷ்டுத சரணயுகளனாய், தத்ஸமீஹிதபலப்ரதனாய், ஸர்வேஶ்வரனாயிருந்த திருமாலிருஞ்சோலையான், எனக்குப்பித்தனாய்என்னைப்பிரிகிறிலனென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஶ்ரிய:பதியானவன் திருமலையிலே நின்றருளி என்னையாளுகையிலே மிகவும் வ்யாமுக்தனானான் என்கிறார்.

[செழுமூவுலகு என்றுதொடங்கி] - கல்பந்தோறும் அழகிய மூன்றுலோகத்தையும் தன்திருவயிற்றிலே வைத்து உத்க்ருஷ்டமாக ரக்ஷிக்கும ஶ்ரிய:பதி. [சிவனும்பிரமனும் என்றுமேலுக்கு] - சிவனும் பிரமனும் காணாதே நிரதிஶயஐஶ்வர்யுக்தராய்த் தன்திருவடிகளை ஆஶ்ரயிக்க, அவர்களுடைய அபேக்ஷிதங்களைக் கொடுத்த ஸர்வேஶ்வரன்.

ப.—அநந்தரம், ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் உபகாரகனாய் ஶ்ரிய:பதியானவன், திருமலையில்நின்று என்னை யடிமைகொள்ளுகைக்கு வ்யாமுக்தனாயிராநின்றானென்கிறார்.

---

"தென்னா" என்கைக்கடி - "அம்மான்" என்றது. "யானாய்த்தன்னைத்தான்பாடித் திருமாலிருஞ்சோலையான்" என்றதுக்குபாவம் - இவரை இத்யாதி. முக்கோட்டை - மூகாம்பிகை. அது கவித்வாபாதகம். இதுக்கு த்ருஷ்டாந்தம் - பாட்டினுல் இத்யாதி. அவரை - திருமங்கையாழ்வாரை. அது - திருக்கண்ணபுரம். அதுபோலே யிதுவுமென்றபடி. திருமொழி எட்டாம்பத்துபத்தாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "நாட்டினாய்" இத்யாதி. எடுத்தபாசுரத்துக்கர்த்தம் - தாம்பாடின இத்யாதி. 'நலிவெய்தும்படியாகவும், பொலிவெய்தும்படியாகவும், இன்பம் தலைசிறக்கும்படியாகவும், பண்ணார்பாடல்' என்று தொடங்கி, 'தென்னாவென்னும்' இத்யந்வய:. (இ)

சிவனும் - (ஜ்ஞாநாயிகனுன) ருத்ரனும், பிரமனும் - ப்ரஹ்மாவும், காணாது - காணப்பெறுதே, அரு - பெறுதற்கரிதான, மால் - அதிஶயிதஸக்தியை, எய்தி-உடையராய்க்கொண்டு, அடி - திருவடிகளை, பரவ - ஸ்தோத்ரம்பண்ண, அருளீந்த - (தன் நிரவயிக)க்ருபையாலே அபேக்ஷிதப்ரதாநம்பண்ணின, அம்மான் - ஸர்வாதிகனுய், செழு - விலக்ஷணமான, மூவுலகும் - ஜகத்த்ரயத்தையும், தன் - அகடிதகடநாஸமர்த்தனுன தன்னுடைய, ஒரு - அத்விதீயமாய், மா - (அடக்கினவிடந் தெரியாமல் அடக்கவல்ல) ஶக்திமாஹாத்ம்யத்தையுடைய, வயிற்றினுள்ளே - திருவயிற்றினுள்ளே ஒருபுடையிலே, வைத்து - , ஊழியூழி - கல்பந்தோறும், தலை - தலையாக, அளிக்கும் - ரக்ஷிக்குமவனுய், திருமால் - (இந்தஶேஷித்வரக்ஷகத்வங்களுக்கு உபபாதகமான) ஶ்ரியஃபதித்வத்தையுடையவன், திருமாலிருஞ்சோலையானேயாகி - திருமாலிருஞ்சோலையிலே நிலையுடையனுய்க்கொண்டே, என்னை - , ஆளும் - அடிமைகொள்ளுகையிலே, மால் - பெரும் பித்தனு யிராநின்றுன். ஒருமாவென்று - ஏகதேசமான அத்யல்ப ஸங்க்யையைச் சொல்லிற்றுகவுமாம்.

இ.—ஆரும்பாட்டில், ஶ்ரியஃபதியானவன் வந்து திருமலையிலே நின்றருளி என்னையாளுகையிலே வ்யாமுக்யனுனுன் என்கிறார்.

[திருமாலிருஞ் சோலையானேயாகி - என்னையாளும் மால்] - திருமலையைத் தனக்கு வஸ்தவ்யபூமியாகக்கொண்டு என்னை அடிமைகொள்ளுகைக்காக என்பக்கல் வ்யாமோஹம் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிறவன். [செழுமூவுலகும்] - கட்டளைப்பட்ட த்ரைலோக்யத்தையும் அத்விதீயமாய்ச் சிறிதானவயிற்றிலே வைத்து, கல்பந்தோறும் கல்பந்தோறும் தலையாகரக்ஷிக்கும். ப்ரளயாபத்தில் ஜகத்துக்குத் தன்னையொழியச்செல்லாதாப்போலே, என்னையொழியத் தனக்குச் செல்லாதபடியாயிருக்கை. [திருமால்] - ஶ்ரியஃபதி - [என்னையாளும் மால்] - என்பக்கல் பிச்சு ஒருவடிவு கொண்டாற் போலேயிருக்குமவன். ப்ரளயாபத்ஸகனுய் ஶ்ரியஃபதியாயிருக்கிறவன் என்பக்கலிலே ஸாபேக்ஷனுய் நின்றுன். [சிவனும் இத்யாதி] - ப்ரஹ்மருத்ரர்கள் காணப்பெறுமையாலே நிரதிஶயஶக்தியுக்தராய்த் திருவடிகளை அக்ரமமாகப் புகழ, அவர்களுடைய அபேக்ஷிதங்களைக் கொடுத்த ஸர்வேஶ்வரன்.

ஈடு.—ஆரும்பாட்டு. ஸ்ரீயஃபதியானவன் திருமலையிலே நின்றருளி என்னை யாளுகையிலே வ்யாமுக்யனுனுனென்கிறார்.

[திருமாலிருஞ்சோலையானேயாகி - என்னையாளுமால்] - திருமலைதனக்கு வஸ்தவ்ய பூமியாகக்கொண்டு நிற்கிறவன், என்னை யடிமைகொள்ளுகைக்காக என்பக்கல் வ்யாமோஹம் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிறவன். [செழுமூவுலகும்] - கட்டளைப்பட்ட த்ரைலோக்யத்தையும். [ஒரு இத்யாதி] - அத்விதீயமாய்ச் சிறிதான வயிற்றிலே

ஆரும்பாட்டு.—திருமாலிருஞ்சோலை இத்யாதி. "திருமால் - திருமாலிருஞ்சோலையானேயாகி - என்னையாளுமால்" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை-ஶ்ரியஃபதி இத்யாதி.

"செழுமூவுலகும்" என்றுதொடங்கி "திருமால் - சிவனும் பிரமனும் காணாதருமாலெய்தி யடிபரவவருளையீந்தவம்மான் - திருமாலிருஞ்சோலையானேயாகி - என்னையாளும்மால்" என்றந்வயித்தர்த்தம் - திருமலைதனக்கு இத்யாதி. "சோலையானேயாகி" - சோலையையுடையனுய்க்கொண்டு நிற்கிறவென்றபடி. "ஆளும்" என்றது - அமுற்ப்ரத்யயம். ஆளுகைக்காகவென்றபடி. மாலையுடையவனென்னுதே "மால்" என்றதுக்குஹாவம் - வ்யாமோஹம் இத்யாதி. "மா" என்று - விபரீதலக்ஷணையாய், அல்பமானவென்றபடி. தலையாக - ஶ்லாக்யமாக. பதப்ரயோகத்

வைத்து, கல்பந்தோறும் கல்பந்தோறும் தலையாக ரக்ஷிக்கும். ப்ரளயாபத்தில் ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே என்னையொழியத்தனக்குச்செல்லாதானாயிருக்கை. [திருமால்] - ஸ்ரிய:பதி. [என்னையாளுமால்] - என்னையடிமை கொள்ளுகைக்காகப் பிச்சுத்தான் ஒருவடிவு கொண்டாற்போலே யிருக்குமவன். [சிவனும்பிரமனும்இத்யாதி]- ப்ரஹ்மருத்ராதிகள், காணப்பெறுமையாலே நிரதிசயபக்தியுக்தராய்த் திருவடிகளைஅடைவுகெட ஏத்த, அவர்களுக்கு முகந்தோற்றுமே சடக்கநின்று அருளைப் பண்ணிக்கொடுக்கும் ஸர்வேச்வரன், எனக்குக் கண்ணுக்கிலக்காம்படி திருமலையிலே வந்துநின்று என்னையடிமை கொள்ளுகையிலே பெரும் பித்தனானான். (சு)

---

## ஏழாம் பாட்டு.

---

அருளாயீஎன்னம்மானே! என்னும் முக்கணம்மானும்
தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனுந்தேவரும்
இருள்கள்கடியும்முனிவரும் ஏத்துமம்மான்திருமலை
மருள்கள்கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே.

*ஆ.—(அருளாயீ.) - இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருமலையை ஆச்ரயித்திறே வந்ததென்றுகொண்டு, திருமலையை நின்றேத்துகிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், தம்முடைய ஸம்ருத்திக்கு அடியான திருமலையை ஏத்துகிறார். என்பக்கலிலே க்ருபை பண்ணியருளவேணும் என்ஸ்வாமியே என்னும் ருத்ரனும், அவனிற் காட்டில் அறிவுடைய ப்ரஹ்மாவும், இந்த்ரனும், தேவர்களும், ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கக்கடவ ருஷிகளும்.*

*[ஏத்தும் அம்மான் என்று மேலுக்கு] - ஏத்தும்படியையுடைய ஸர்வேச்வரனுடைய திருமலை, ஆத்மாவுக்கு ஹேயத் கைங்கர்ய விரோதிகளான அவித்யாதிகளெல்லாம் போக்கும் நிரதிசய புருஷார்த்தமான மலை - திருமாலிருஞ்சோலையே.*

*ப.—அநந்தரம், தம்மை யங்கீகரிக்கைக்காக அவன் வந்துநின்ற திருமலையினுடைய வைலக்ஷண்யத்தைப் புகழ்ந்தருளுகிறார்.*

*என்னம்மானே - என்னுடைய ஸ்வாமியானவனே! அருளாய் - (உன்னுடைய) க்ருபையைத் தந்தருளவேணும், என்னும் - என்றுகொண்டு, முக்கணம்மானும் - த்ரிணேத்ரனாய்(ஈச்வராபிமாநியான) ருத்ரனும்,தெருள்கொள்-(ஸ்ரஷ்ட்ருத்வாத்யுபயுக்தமான) ஜ்ஞாநாதிகுணத்தையுடைய, பிரமனம்மானும் - ப்ரஹ்மாவாகிற ஸ்ருஜ்யஜகத்பதியும், தேவர்கோனும் - தேவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரனும்,தேவரும் - (த்ரயஸ்த்ரிம்சத்கோடி) தேவர்களும், இருள்கள் - (ஸ்வரூபபுருஷார்த்த விஷயமான ஜ்ஞாநாபாவம், அந்யதாஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம் முதலான) தமஸ்ஸுக்களை, கடியும் - புராணாத்யுபதேசமுவத்தாலே போக்கக்கடவரான,முனிவரும்-பரமருஷிகளும், ஏத்தும்-*

---

*தக்கு ஹாவம் - ப்ரளயாபத்தில் இத்யாதி. இவர்பக்கல் வ்யாமோஹ ப்ரகரணத்துக்குச் சேர - அவர்களுக்கு முகந்தோற்றமே கடக்கநின்று என்கிறார். அடியில் அந்வயித்ததத்தைப் பின்னையும் காட்டுகிறார் - என்க்கு இத்யாதி.* (சு)

ஸ்தோத்ரம்பண்ணும்படியான, அம்மான் - ஸ்வாமியானவனுடைய வாஸஸ்த்தாநமான, திருமலை - திருமலையாய், மருள்கள் - ப்ராப்திப்ரதிபந்தகமான அவித்யாதி ஸகலப்ர மங்களையும், கடியும் — போக்கக்கடவதாய், மணி - நிரதிஶய ஶோபையமாம்படி விலக்ஷண மான, மலை - மலை, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையென்று திருநாமமான, மலையே - திருமலையிறே.

இ—ஏழாம்பாட்டில், தம்முடைய ஸம்ருத்திக்கு அடியான திருமலையை ஏத்துகிறார்.

[அருளாயீ இத்யாதி]-"என்ஸ்வாமீ, என்பக்கலிலே க்ருபை பண்ணியருள வேணும்: உடையவனான நீபொகட்டால் வேறு புகலுண்டோ?" என்னுமாய்த்து. இப்படி சொல்லுகிறவன் ஆர்? என்னில், - லலாடநேத்ரனாய், ஈஶ்வராபிமாநியான ருத்ர னும், அவனுக்கும் ஜ்ஞாநப்ரதனாய் ஜநகனான ப்ரஹ்மாவும். [தேவர்கோனும்] - தேவர்களுக்கு அத்யக்ஷனான இந்த்ரனும், தேவேந்த்ரன் என்று அவனுக்கு ஏற்றமான உத்கர்ஷத்தையுடைய தேவர்களும், அஜ்ஞாநாந்தகாரத்தை வாஸனையோடே போக்கும் ஸ்மர்த்தாக்களும், இவர்களெல்லாரும்கூட ஏத்தும் ஸர்வேஶ்வரனுடைய திருமலை. [மருள்கள் இத்யாதி] - கைங்கர்ய விரோதிகளான அவித்யாதிகளைப் போக்குமது வாய், ஸ்வயம் புருஷார்த்தமான திருமலை. திருமலையையொழியவே ப்ராப்யமுண்டு என் றிருக்கும் நினைவைப் போக்குமிடம் என்றுமாம். அதுதான் ஏதென்ன?—திருமாலிருஞ் சோலை மலையே.

ஈடு.—ஏழாம்பாட்டு. தம்முடைய இஸ்ஸம்ருத்திக்கெல்லாம் அடி திருமலை யானபின்பு, இத்தேசந்தானே நமக்கு ப்ராப்யமென்று திருமலையைக் கொண்டாடுகிறார்.

அருளாயீயென்பர்கள் - ப்ரஸாதத்தைப் பண்ணியருளென்பர்கள். [என்னம் மானே] - நீயருளாதொழிந்தால் புறம்பு எங்களுக்குப் புகலுண்டோ? ப்ராப்தனான நீ யருள வேண்டாவோ வென்பர்கள். இப்படி சொல்லுகிறவர்கள்தான்ஆரென்னில்,- [முக்கண் இத் யாதி] - லலாடநேத்ரனாய் ஈஶ்வராபிமாநியான ருத்ரன், அவனுக்குங்கூட ஜ்ஞாநப்ரத னாய் ஜநகனாகையால் வந்த ஏற்றத்தையுடைய சதுர்முகன், தேவஜாதியை சனியும் புத னும் மெய்க்காட்டுக்கொள்ளுகிற இந்த்ரன், தங்களை யுடையனாகை அவனுக்கேற்றமாம் படி யிருக்கிற தேவர்கள், அஜ்ஞாநாந்தகாரத்தை வாஸனையோடே போக்கியிருக்கும் ஸ்மர்த்தாக்களான ருஷிகள், இவர்களடங்கலும் ஒருமிடறுசெய்து ஏத்தும்படியாக ஸர் வேஶ்வரன் தான்விரும்பிவந்து மேல்விழுந்து படுகாடுகிடக்கும் தேசமாய்த்து. [மருள்கள் கடியும் மணிமலை] - ப்ராப்யவிரோதியானவற்றை அடையப்போக்கும் தேசமாய்த்து. அதாகிறது—திருமலையையொழிந்ததொன்றே ப்ராப்யமென்றுபிறக்கும் புத்தியைத் தவிர்த்

---

ஏழாம்பாட்டு.—அருளாயீ இத்யாதி. "மணிமலை திருமாலிருஞ்சோலை மலையே" என் றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - தம்முடைய இத்யாதி.

"என்னம்மானே - அருளாயீ - என்னும் முக்கணம்மானும்" என்று கூட்டுவது. ஸ்வாமித்வத்தைச்சொல்லி ஸம்போதிக்கிறவர்களுடைய ஹார்த்தபாவம் - நீயருளாதொழிந்தால் இத்யாதிவாக்யத்வயத்தாலே. தெருள்கொள் - தெருளையுடையவென்றபடி. ஸ்மர்த்தாக்களான - ஸ்ம்ருதி கர்த்தாக்களான. படுகாடுகிடக்கும் - வெட்டிவிழுந்த காடுபோலே கிடக்கும். "மருள்கள்" என்று - அவித்யாதிகளாக அருளிச்செய்து, அர்த்தாந்தரம் - அதாகிறது இத்யாதி. அதாகிறதென்

த் தருமாய்த்து.இதெல்லாம் எதுதானென்னில்; மற்றுமுண்டோ? திருமாலிருஞ்சோலைமலையே. (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேஎன்றலையே
திருமால்வைகுந்தமேதண்திருவேங்கடமேயெனதுடலே
அருமாமாயத்தெனதுயிரே மனமேவாக்கேகருமமே
ஒருமாநொடியும்பிரியான்என்னூழிமுதல்வனொருவனே.

*ஆ.—(திருமாலிருஞ்சோலை.)-விளைந்தஸம்ருத்தி தானேதென்னில்; இதென்கிறார். திருமாலிருஞ்சோலை, திருப்பாற்கடல், திருநாடு, திருமலை தொடக்கமாகத் தானெழுந்தருளியிருக்கும் திருநகரிகளெல்லாவற்றிலுமுள்ள ஸம்ஶ்லேஷத்தினால் ப்ரீதனாமாபோலே, என்னுடைய அவயவங்களிலே ஓரோர் அவயவத்தோடுள்ள ஸம்ஶ்லேஷத்தாலே ப்ரீதனாய், என்னை ஒருக்ஷணமும் பிரியில் யுரிக்கமாட்டுகிறிலன்; ஒருவனுடைய அபிநிவேஶமிருக்கும்படியே யிது! என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், திருமலை தொடக்கமான கோயில்களெல்லாவற்றிலும் பண்ணும் அபிநிவேஶத்தைத் தம்முடைய திருவுடம்பிலும் பண்ணாநின்றான் என்று அநுஸந்தித்து, அவனுடைய அபிநிவேஶம் அவ்வளவுமன்றிக்கே யிருக்கையாலே அவை தன்னையே பரிஹரித்து-'இவற்றை ஒருக்ஷணமும் பிரிகிறிலன், என்பக்கலிலே அபிநிவிஷ்டனான ஸர்வேஶ்வரனுடையபடி யிருந்தபடியென்?' என்கிறார். அருமாமாயத்து எனதுயிரே என்றது - "மம மாயா துரத்யயா" என்னும்படியாலே கடக்க அரிதான ப்ரக்ருதியோடே மயங்கின என் ஆத்மா என்றவாறு.*

*ப.—அநந்தரம், 'திருமலைதொடக்கமான திவ்யதேசங்களோடொக்க என்னுடைய ஸர்வாவயவங்களையும் விரும்பி ஒருக்ஷணைகதேசமும் பிரிகிறிலன்: இவனொருவனாயிருக்கிறானே!' என்று விஸ்மிதராகிறார்.*

திருமாலிருஞ்சோலைமலையே - திருமாலிருஞ்சோலைமலையையும், திருப்பாற்கடலே - திருப்பாற்கடலையும், (அவற்றோடொக்க), என்றலையே - என்தலையையும், திருமால் - "ஶ்ரிய:பதி:" என்கிறபடியே ஸ்ரிய:பதியாய்க் கொண்டிருக்கிற, வைகுந்தமே - பரமபதத்தையும், தண் — ஶ்ரமஹரமான, திருவேங்கடமே - பெரிய திருமலையையும், (அப்படியே), எனதுடலே - என்ஶரீரத்தையும், அரு - துஸ்தரமாய், மா - அதிஶயிதையாய், மாயத்து - ஆஶ்சர்யமான ப்ரக்ருதியோடே ஸம்ஸ்ருஷ்டமான, எனதுயிரே - என்னாத்மாவையும், மனமே - மநஸ்ஸையும், வாக்கே - வாக்கையும், கருமமே - க்ரியையும், ஒருமாநொடியும் - ஒருக்ஷணத்தில் ஒருமாப்பொழுதும், பிரியான்-பிரிகிறிலன், என்னூழிமுதல்வன் - என்னைலபிக்கைக்காகக் காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனானவன், ஒருவனே-ஒருவனாயிருக்கிறானே! கீழிலே

---

றது - மருள்கள் கடிகையாவதென்றபடி. மருள் - தெருள். ப்ராப்யாந்தர ஜ்ஞாநம்.மணிமலை - அழகிய மலை. ஸ்வயம்புருஷார்த்தமான மலையென்றபடி. (எ)

காரங்கள் - எண்ணுதல், அவையே அஸாதாரணமாம்படி விரும்பினபடியாதலாயிருக்கிறது. நொடி - க்ஷணம்.

இ.—எட்டாம்பாட்டில், 'திருமலை தொடக்கமான கோயில்கள் எல்லாவற்றிலும் பண்ணும் அபிநிவேசத்தை என் அவயவங்களிலே பண்ணி ஒருக்ஷணமும் பிரிகிறிலன்; இவன்படியிருந்தபடியென் ?' என்கிறார்.

[திருமாலிருஞ்சோலை மலையே] - தெற்கில் திருமலையையும், திருப்பாற்கடலையும், என் உத்தமாங்கத்தையுமொக்க விரும்பாநின்றான்; பரமபதத்தையும், வடக்கில் திருமலையையும், என் சரீரத்தையுமொக்க விரும்பாநின்றான். [திருமால் வைகுந்தம்] - "ஶ்ரியாஸார்த்தம் ஜகத்பதி:" என்கிறபடியே அம்மிதுநத்துக்குத் தகுதியான தேசம். இத்தேசங்களில் பண்ணுகிற விருப்பம் தன்திருமேனியில் பண்ணுகிற விருப்பத்துக்கு சத்ருசமல்லாமையாலே தம்முடைய அவயவங்கள்தோறும் புக்கு அநுபவியாநின்றான். [அருமாமாயத்து எனதுயிரே] - கடக்கவரிதான ப்ரக்ருதியோடே மயங்கி அசித்கல்பமான என் ஆத்மாவிலே. அவதாரணங்களால் - "இதுவேயோ இவன் அபிநிவேசத்திருப்பது" என்று தோற்றும்படியிருக்கை. [ஒருமாநொடியும் பிரியான்] - ஒருக்ஷணத்தில் ஏகதேசமும் பிரிகிறிலன். [என்னூழி முதல்வன் ஒருவனே] - என்பக்கல் அபிநிவிஷ்டனுகைக்காகக் காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனுன அத்விதீயன், ஸம்ஹார காலத்தில் ஸகல சேதநா சேதநங்களுக்கும் தன்னையொழியச் செல்லாதாப் போலேயாய்த்து, இவர் திருமேனியை ஒழியத் தனக்குச் செல்லாதேயிருக்கிறபடி. கார்ய காரணோபயாவஸ்த்த சிதசித்துக்களுடைய ஸத்தை தன்அதீநமாம்படியிருக்கிறவன் தன்னுடைய ஸத்தை என்சரீராதீநமாம்படியிராநின்றான்: இவனும் ஒருவனுயிருக்கிறானே!

ஈடு.—எட்டாம்பாட்டு. 'திருமலைதோடக்கமான கோயில்கள்எல்லாவற்றிலும் பண்ணும் அபிநிவேசத்தை என் அவயவங்களிலேபண்ணி ஒருக்ஷணமும் பிரிகிறிலன்; இவன்படியிருந்தபடியேன் !' என்கிறார்.

[திருமாலிருஞ்சோலைமலை இத்யாதி] - தேற்கில் திருமலையையும், திருப்பாற்கடலையும், இவருடைய உத்தமாங்கத்தையும் ஒக்கவிரும்பினுன்; ஸ்ரீவைகுண்டத்தையும், வடக்கில்திருமலையையும், இவர்திருமேனியையும் ஒக்கவிரும்பாநின்றான். [திருமால்வைகுந்தம்] - "ஶ்ரியாஸார்த்தம் ஜகத்பதி:" (ஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதி:) என்கிறபடியே †(அம்மிதுநத்துக்குத் தகுதியான தேசம்). ஆக இரண்டு திருமலைகளிலும் பரவ்யூஹங்களிலும் பண்ணும்விருப்பத்தையடைய இவர்திருமேனியொன்றிலும் பண்ணாநின்றானென்றபடி. [அரு இத்யாதி] - இவருடைய ஆத்மவஸ்துவிலும் மநோவாக்காயங்களிலும் ஒக்கவிரும்பாநின்றான். அவதாரணத்தால் - அதுதன்னிலும் க்ரமத்தாலன்றிக்கே க்ஷணகாலமும் இடைவிடாதே ஸௌபரியைப் போலே அநேகம் வடிவுகொண்டு நில்லாநின்று

எட்டாம்பாட்டு.—திருமால் இத்யாதி. "அரு மாமாயம்" என்றுதொடங்கி "பிரியானூழி முதல்வனொருவனே!" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - திருமலை இத்யாதி.

பூர்வார்த்தத்துக்குத் திரண்ட பொருள் - ஆக இத்யாதி. "நொடியும்பிரியான்" என்னுமளவுக்கும் பாவம் - இவருடைய இத்யாதி. அவதாரணத்தால் என்றது - "உயிரே, மனமே, வாக்கே, கருமமே" என்றவவதாரணத்தாலென்றபடி. உயிரொன்றுமே, "அருமாமாயத்து" என்று விசேஷித்ததுக்கு

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

ருய்த்து. [அரு இத்யாதி] - ஆத்மவஸ்து என்று ஒருவ்யபதேசமாத்ரமாய், அநாதிகாலம் அசித்திலேகலசி அத்தாலே அசித்ஸமனுயிறேயிருக்கிறது. ‘அரு’ என்கையாலே - “ஜஜ்ராயாதுரத்யயா” (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே ஒருவரால் கடக்கவரிதாயிருந்துள்ள அசித்தோடே கலசிக்கிடக்கிற ஆத்மவஸ்துவிலும். [மனமேவாக்கேகருமமே] - கீழ், இதுதன்னை ஒன்றாக விரும்பினபடி சொன்னார்; இங்குத் தனித்தனியே எல்லாவற்றிலுமொக்க ஏககாலத்திலே விருப்பத்தைப்பண்ணினபடியைச் சொல்லுகிறார். [ஒருமாநொடியும்பிரியான்] — ஒருக்ஷணத்தில் ஏகதேசமும் பிரிகிறிலன். ஒன்றில்நின்றும்ஒன்றில் கால்வாங்கிப்போய் அநுபவிக்கிறிலன். [என்னூழிமுதல்வனொருவனே] - என்னிடத்தில் அபிநிவிஷ்டனுகைக்காக காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனுன அத்விதீயனுனவன். ஸம்ஹாரகாலத்தில் ஸகல சேதநாசேதநங்களுக்கும் தன்னையொழியச் செல்லாதாப்போலேயாய்த்து, இவர்திருமேனியை யொழியத் தனக்குச் செல்லாதே யிருக்கிறபடி.கார்யகாரணேபயாவஸ்த சிதசித்துக்களுடைய ஸத்தை தன் அதீநமாம்படியிருக்கிறவன் தன்னுடையஸத்தை என் சரீராதீநமாம்படி யிராநின்றான். [என்னூழிமுதல்வனொருவனே!] - † (என்பக்கலிலே யபிநிவிஷ்டனுன ஸர்வேச்வரனுடையபடியிருந்தபடி என்!) இச்சபலனையே பெரிய ஈச்வரனேன்கிறது; இவனும் ஒருவனே! என்கிறார். (அ)

---

பாவம்-ஆத்மவஸ்து இத்யாதி. “கருமம்” என்று - காயத்தை லக்ஷிக்கிறது. “மாமாயம்” என்றது - எல்லைகாணவொண்ணுத ப்ரக்ருதியென்றபடி. “அரு” என்றதுக்கர்த்தம் - அருவேன்கையாலே இத்யாதி. கீழே “எனதுடலே” என்றுவைத்து, திரியவும் “கருமம்” என்பானென்? என்ன - கீழ்இதுதன்னை இத்யாதி. அதாவது - கீழே, கரணஸஹிதமான அவயவியைவிரும்பினபடி சொல்லிற்று; இங்கு, கரணங்களையும் அவயவியையும் தனித்தனியே விரும்பினபடி சொல்லுகிறதென்றபடி. ஒன்றாக - ஸமமாக. நொடி - க்ஷணம். மா - அதில்ஏகதேசம். தமிழர், “மாநொடி” என்று - நொடியில்அஷ்டமாம்ஸமென்பர்கள். பலிதம் - ஒன்றில்நின்றும் இத்யாதி. “என்னூழி முதல்வன்” என்றதுக்கர்த்தம் - இச்சபலனையே இத்யாதி. “ஒருவனே!” என்றதுக்கர்த்தம் - இவனும் இத்யாதி. “உயிரே” இத்யாதி சதுஷ்டயத்திலும் “ஒருமாநொடியும்பிரியான்” என்றத்தை யந்வயிப்பது. இரண்டுதிருமலையைச்சொன்னது - உகந்தருளின நிலங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். “திருமாலிருஞ்சோலைமலையே” என்றுதொடங்கி “எனதுடலே, அருமாமாயத்தெனதுயிரே - ஒருமாநொடியும்பிரியான்; மனமே - ஒருமாநொடியும்பிரியான்” என்று, “உயிரே” இத்யாதிசதுஷ்டயத்திலும் “ஒருமாநொடியும்பிரியான்” என்றத்தை யந்வயித்து, “என்னூழி முதல்வனொருவனே” என்று அந்வயமாதல்; அன்றிக்கே, “திருமாலிருஞ்சோலைமலையே’ என்று தொடங்கி “என்தலையே - ஒருமாநொடியும்பிரியான், திருமால் - எனதுடலே - ஒருமாநொடியும் பிரியான்” என்றுதொடங்கி, “ஒருமாநொடியும்பிரியான்” என்றத்தை எல்லாவற்றிலும் அந்வயித்துக்கொண்டு, ‘என்னூழிமுதல்வனொருவனே’ என்றந்வயமாதல். “மலையே, திருப்பாற்கடலே” இத்யாதி ப்ரதம விபக்தியையெல்லாம் த்விதீயையாக்கி, மலையையும் திருப்பாற்கடலையும் என்று இப்படி முடியச்சொல்லிக்கொள்வது. அருமாமாயத்தெனதுயிர் - கடக்கவரிதாய் மஹத்தாய் அபரிச்சிந்நமாய் ஆச்சர்யரூபமான ப்ரக்ருதியோடே ஸம்ஸ்ருஷ்டமான என்னுத்மாவையு மென்றபடி. “ஒரு - நொடி - மாவும்பிரியான்” என்றந்வயிப்பது. ஒருக்ஷணத்தில் ஒருமாப்பொழுதும் பிரிகிறிலன். நொடி - க்ஷணம். (அ

---

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

## ஒன்பதாம் பாட்டு.

ஊழிமுதல்வனொருவனேயென்னும் ஒருவனுலகேல்லாம்
ஊழிதோறுந்தன்னுள்ளேபடைத்துக் காத்துக்கெடுத்துழலும்
ஆழிவண்ணனேன்னம்மான்அந்தண்திருமாலிருஞ்சோலை
வாழிமனமே ! கைவிடேல்உடலுமுயிருமங்கவொட்டே.

ஆ.—(ஊழிமுதல்வன்.) - 'நமக்குஇந்த ஸம்ருத்தியெல்லாம் திருமலையாலே வந்த ஸம்ருத்திகிடாய், நெஞ்சே! இனி, திருமலையைக் கைவிடாதேகிடாய்' என்று நெஞ்சைக்குறித்துச் சொல்லி, "இவ்வாத்மாவினுடைய நிகர்ஷம்பாராதே இத்தோடே கலந்தருளினுயேயாகிலும், என்னுடைய ஹேயமான இந்த ப்ரக்ருதியில் அவிநிவேஶத்தை விட்டருளவேணும்" என்று எம்பெருமானை ப்ரார்த்திக்கிறார்.

ஓ.—ஒன்பதாம்பாட்டில், நமக்கு இந்த ஸம்பத்தெல்லாம் திருமலையாலே வந்தது; ஆனபின்பு திருமலையைக் கைவிடாதே என்று தன்திருவுள்ளத்தைக் குறித்துக் சொல்லி, தம்மை ஸஶரீரமாகத் திருநாட்டிலே கொடுபோகவேணு மென்றிருக்கிற எம் பெருமானுடைய அவிநிவேஶத்தைக் கண்டு, இந்த ஹேயமான ப்ரக்ருதியை நீக்கி என்னைக் கொடுபோகவேணும் என்கிறார்.

[ஊழி என்றுதொடங்கி] - காலோபலக்ஷித ஸகல பதார்த்தத்துக்கும் காரணம் ஒருவனே என்று சொல்லப்படுகிற அத்விதீயனாய், கல்பந்தோறும் தன்னுடைய ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி அதுவே போதுபோக்காவதும் செய்து கடல்போலே கம்பீரஸ்வபாவனான என் ஸ்வாமியுடைய அழகிய ஶ்ரமஹரமான திருமாலிருஞ்சோலையை, மநஸ்ஸே! கைவிடாதே கொள். 'வாழி' என்று - மநஸ்ஸை ஶ்லாகிக்கிறார். [உடலும் உயிரும் மங்கவொட்டே] - ஶரீரப்ராணாதிரூபமான ப்ரக்ருதி ஸம்பந்த விநாஶத்தை ஸம்வதித்தருள வேணும்.

ப.—அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஹேதுபூதனான ஸர்வேஶ்வரன், தம்முடைய ஶரீராதிகளை விரும்பினபடியைக்கண்டு அத்தை விடும்படிக்கீடாக, "அவனெழுந்தருளிநிற்கிற திருமலையை ஆஶ்ரயி: ஒருகாலும் கைவிடாதே கொள்" என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

ஊழி - காலோபலக்ஷித ஸமஸ்தவஸ்துக்களுக்கும், முதல்வனொருவனே - ஒருவனே காரணபூதனாக, என்னும் - "ஏகமேவ" என்று காரணவாக்யங்களிலே சொல்லப்பட்ட, ஒருவன் - அத்விதீயனாய், உலகெல்லாம் - ஸமஸ்தலோகங்களையும், ஊழிதோறும் - ஸ்ருஷ்ட்யாத்யநுகூல காலந்தோறும், தன்னுள்ளே — தன் ஸங்கல்பைகதேசத்துக்குள்ளே, படைத்து - ஸ்ருஷ்டித்து, காத்து - ரக்ஷித்து, கெடுத்து - ஸம்ஹரித்து, உழலும் - இதுதானே யாத்ரையாக நடத்தும், ஆழிவண்ணன் - அபரிச்சிந்ந ஸ்வபாவனாய், என்னம்மான் - இந்த ப்ராப்திமுகத்தாலே எனக்கு ஸ்வாமியானவனுடைய, அம் - தர்ஶநீயமாய், தண் - ஶ்ரமஹரமான, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையை, மனமே - நெஞ்சே! உடலும்உயிரும் - நமக்கு த்யாஜ்யமான தேஹப்ராணாதிகள், மங்க - மங்கும்படியாக, ஒட்டு - செறிந்து ஆஶ்ரயிக்கப்பாராய்; கை

விடேல் - நம்கார்யம்செய்து முடிக்குந்தனையும் கைவிடாதே கொள் ; வாழி - இத்தாலே நீ வாழ்வாயாகவேணும். ஆழிவண்ணனென்று - அபரிச்சிந்நபோக்யமான விக்ரஹத்தையுடையவனென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், 'நமக்கு இந்த ஸம்பத்தெல்லாம் திருமலையாலே வந்ததாய்த்து: திருமலையைக் கைவிடாதே கொள்' என்று திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லி, தம்மை ஸஶரீரமாகப் பரமபதத்திலே கொண்டுபோகவேணுமென்றிருக்கிறவனுடைய அபிநிவேஶத்தைக் கண்டு, இந்த ஹேயமான ப்ரக்ருதியை நீக்கிக் கொண்டு போகவேணுமென்கிறார்.

[ஊழி இத்யாதி] - காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனானவன் ஒருவனே என்று ப்ரமாணங்கள் சொல்லப்படுகிற அத்விதீயன்; "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்". ஸகல லோகங்களையும் கல்பந்தோறும் தன் ஸங்கல்பைகதேஶத்திலே உண்டாக்கி, நாமரூபங்களைக் கொடுத்தபின்பு தன்கார்யம் தானே செய்து கொள்ளலாம் என்று அவ்வளவில்விடாதே அவற்றினுடைய ரக்ஷணத்தைப்பண்ணி, இவை அதிப்ரவ்ருத்தமானவாறே ஸம்ஹரித்து, இதுவே யாத்ரையாயிருக்கிற ஸ்வபாவனானவன் என்ஸ்வாமி. கடல்போலே ஶ்ரமஹரமான வடிவைக்காட்டி என்னை ஸம்ஸாரார்ணவத்தில் நின்றும் எடுத்தவன் என்றுமாம். ஶீர்ஶநீயமாய் ஶ்ரமஹரமான திருமலையை. [வாழி] - நான்சொல்லுகிற கார்யம் உனக்கு நித்யமாய்ச் சென்றிடுக. நமக்குஇஸ்ஸம்பத்துக்கெல்லாம் அடி திருமலையானபின்பு அத்தைக் கைவிடாதேகொள் என்றுதிருவுள்ளத்தைக்குறித்துஅருளிச்செய்ய; அவனும்தன் திருவுள்ளத்தைக்குறித்து "ஆழ்வார் திருமேனியைக் கைவிடாதேகொள்" என்று அருளிச்செய்ய,-'இந்நிர்ப்பந்தத்தைத் தவிர்ந்தருளவேணும்' என்கிறார். [உடலும் உயிரும் மங்கவொட்டே] - ஶரீரப்ராணாதி ரூபமான ப்ரக்ருதி ஸம்பந்த விநாஶத்தை ஸம்பவித்தருளவேணும்; திருமலை போலே உத்தேஶ்யமாயிருப்ப தொன்றன்று, ஹேயமான ஶரீரமும் ப்ராணனும். 'மங்கவொட்டு' என்கையாலே, ஆழ்வார் இங்கே எழுந்தருளியிருந்த இருப்பு ப்ராரப்த கர்மத்தாலன்று, பகவதிச்சையாலே என்கிறது. "நன்கு என்னுடலம் கைவிடான்" என்றாரிறே.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'நமக்கு இந்த ஸம்பத்தெல்லாம் திருமலையாலே வந்ததாய்த்து; திருமலையைக் கைவிடாதே கோள்' என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச் செய்கிறார்.

[ஊழிமுதல்வனொருவனே யென்னுமோருவன்]-காலோபலக்ஷிதஸகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனானவனொருவனுமே என்று "ஸதேவ" (ஸதேவ) இத்யாதி ப்ரமாணங்களாலே சொல்லப்படுகிற ஒருவன். கார்யாகாரமான இதுடைய அழிந்தவன்று இவற்றைத் தன்மேலே ஏறட்டுக்கொண்டு நிற்கிறவன்கிடீர், இப்போது என்னுடம்பிலே வந்து தங்குகிறான். காரணாவஸ்த்தையில் சிதசித்துக்களுடைய ஸத்தை தன்னதீநமாம்

---

ஒன்பதாம்பாட்டு.—ஊழி இத்யாதி. "அந்தண் திருமாலிருஞ்சோலைவாழிமனமே" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை-நமக்கு இத்யாதி. இந்த ஸம்பத்தெல்லாமென்றது-நாம்அவனைப் பெறுகிற அதிஶயமெல்லா மென்றபடி.

"என்னும்" என்றது - ப்ரமாணப்ரஸித்தி. பதப்ரயோகத்துக்கு பாவம் - கார்யாகாரமான் இத்யாதி. இவ்வாக்யத்தால் த்யோதிதம் - காரணாவஸ்த்தையில் இத்யாதி. "தன்னுள்ளே

படியிருக்குமவன் ஸ்வஸத்தை என்னயீநமாம்படி யிராநின்றான். காரணாவஸ்த்தையில் ஸத்தையைநோக்கிவிட்டால் பின்னையோதான்இவை தன்னைத்தான் நோக்கிக்கொள்ளுகிறது. [உலகெல்லாமித்யாதி] - நாமரூபங்களைக் கொடுத்துவிட்டால், பின்னைத்தான் தங்கள் கார்யம் தாங்கள் செய்கிறார்களோ? இத்தால் சொல்லிற்றாய்த்து என்னேனென்னில்;-எல்லா அவஸ்த்தையிலும் இவரையொழியத் தரிப்பாரனாயிருக்கிறிலன். ப்ரளயாத்யாபத்துக்களில் இவற்றுக்குத் தன்னையொழிய ஸ்த்திதியில்லாதாப்போலே, தான் இவரையொழியில் தரிக்க மாட்டாதா யிராநின்றான். [ஆழிவண்ணன்] - ஶம்ஹீரஸ்வஹாவனென்னுதல்; கடல் போலே ஶ்ரமஹரமான வடிவைக்காட்டி என்னை †ஸம்ஸாரப்ரளயத்தில் நின்றும் எடுத்தவனேன்னுதல். [அந்தண் திருமாலிருஞ்சோலை] - அவனுக்குங்கூட ஶ்ர்ஶநீயமாய் ஶ்ரமஹரமான தேசம். [வாழி மனமே கைவிடேல்] - நெஞ்சே! நாம் சொல்லுகிற ஸம்ருத்தி யுனக்கு மாறாதிடுகே. அவன் இப்படி நம்பக்கலிலே மேல்விழுந்து விரும்புகையாகிற ஸம்ருத்திக்கெல்லாம் ஹேது திருமலையாய்த்து; இத்தை ஒருகாலும் கைவிடநினையாதேகிடாயேன்கிறார், தந்திருவுள்ளத்தைப் பார்த்து. அவனும் தன் திருவுள்ளத்தைக் குறித்து "ஆழ்வாரைத்தந்தது அவருடைய திருமேனியாயிருக்கும், நீயும் அத்தை ஒருகாலும்விடாதே கிடாய்" என்றான்; "பிரானே, அங்ஙனேண்ணாது, இத்தைத்தவிரவேணும்" என்று நிர்ப்பந்திக்கிறார். [உடலுமுயிரும் மங்கவொட்டு] - ஶரீரமும் ப்ராணனும் மங்கும்படி இசைய வேணும். இது அத்திருமலைபோலே உபாதேயமாயிருப்பதொன்றன்று, சால ஹேயமாயிருப்பதொன்று; இத்தை மங்க இசையவேணும். 'மங்கவொட்டு' என்கையாலே இதுக்கு முன்புத்தை ஆழ்வாருடைய இருப்பு ப்ராரப்த ஶேஷத்தாலல்ல, ஈஶ்வர ஊஹிப்ராயத்தாலே" என்னுமிடம் தோற்றுகிறது. ஈஶ்வரன்பற்றிவிடேனென் றிருக்கையாலே யிருந்தாரென்கிறது; "உடலம்கைவிடான்" என்றாரிறே. (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

மங்கவொட்டுஉன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய
நங்கள்கோனே!யானேநீயாகிஎன்னையளித்தானே!
பொங்கைம்புலனும்பொறியைந்துங் கருமேந்திரியம்ஐம்பூதம்
இங்குஇவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே.

---

படைத்து" என்றதுக்கர்த்தம் - காரணாவஸ்த்தையில் ஸத்தையை இத்யாதி. "காத்துக்கெடுத்துழலும்" என்றதுக்கர்த்தம் - நாமரூபங்களை இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - ப்ரளயாத்யாபத்துக்களில் இத்யாதி. வண்ணம் - ஸ்வஹாவமும், நிறமும். "என்னம்மான்" என்றதுக்கு ஹாவம் - என்னைஸம்ஸாரத்தில் இத்யாதி. "வாழி" என்றதுக்கர்த்தம் - நெஞ்சே நாம் இத்யாதி. "கைவிடேல்" என்றதுக்கர்த்தம் - அவன்இப்படி இத்யாதி. மேலுக்கவதாரிகை - அவனும் இத்யாதி. பத்தாம்பாட்டில் "நங்கள்கோனே" என்கிற ஸம்போதநத்தை "உடலும்உயிரும்மங்கவொட்டு" என்கிறவிடத்திலும் கூட்டிக்கொள்வது. இத்தால் ஃலிதம் - இதுஅத்திருமலை இத்யாதி. இப்போது "மங்கவொட்டு" என்றதுக்கு ஹாவம் - மங்கவொட்டென்கையாலே இத்யாதி. "ஈஶ்வரஊஹிப்ராயத்தாலே" என்றத்தை விவரிக்கிறார் - ஈஶ்வரன் இத்யாதி. இப்படி யவன்விடானேயென்ன - உடலம் இத்யாதி. என்னம்மானுடைய அந்தண் திருமாலிருஞ்சோலை யென்றபடி. (கூ)

† 'ஸம்ஸாரத்தில் நின்றும்' என்று அரும்பதத்வயத்திலும் பாடமாகக் காண்கிறது.

ஆ.—(மங்கவொட்டு.)-தாம்இப்படி ப்ரார்த்திக்கச்செய்தேயும் தம்முடைய ப்ரக்ருதியிலுள்ள லோகத்திலே எம்பெருமான் தம்முடைய சொல்லை யாதரியா திருக்க; அவனுக்கு இதினுடைய ஹேயதையை ப்ரகாசிப்பித்து, இந்தஹேயமான ப்ரக்ருதியில் அபிநிவேசத்தை அவச்யம் விட்டருளவேணுமென்று பின்னையும் அபேக்ஷிக்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தாம் அர்த்திக்கச் செய்தேயும் தம்முடைய ப்ரக்ருதியிலுண்டானஸங்கத்தாலே எம்பெருமான் தம்வார்த்தையைஆதரியாவிட்டவாறே, சதுர்விம்சதி தத்த்வாத்மிகையான ப்ரக்ருதியினுடைய ஹேயதையை அவனுக்கு உணர்த்தி, இத்தை விரும்பாதே போக்கி யருளவேணும் என்கிறார்.

[மங்கவொட்டு உன்மாமாயை]-ஒருவராலும் தப்பவொண்ணாதபடி நீ வைத்த ப்ரக்ருதியை மங்க இசை. [திருமாலிருஞ்சோலை என்றதொடங்கி] - திருமலையிலே வந்துநின்று எங்களை அடிமைகொண்டு ஒருவன்தனக்குப் பரியுமாபோலே என்திறத்தில் அநுக்ரஹம் பண்ணினவனே! [பொங்கைம்புலன் என்றுமேலுக்கு] - அநுபவித்தவர்கள் தங்களுக்கு உரியரன்றிக்கே விக்ருதராம்படியான ஐந்துவிஷயங்களும், ஆத்மாவுக்கு நாசகமான ஜ்ஞாநேந்த்ரியங்களும், கர்மேந்த்ரியங்களும், ப்ருதிவ்யாதிபூதங்களும், இஸ்ஸம்ஸாரத்திலேயிருக்கிற இவ்வாத்மாவைத் தொற்றியிருக்கிற மூலப்ரக்ருதி, இதினுடைய விகாரமான மஹாந், அஹங்காரம், மநஸ்ஸு, இவையாகிற உன்னுடைய மாமாயையை மங்கவொட்டு என்று அந்வயம்.

ப.—அநந்தரம், இப்படி திருவுள்ளத்தாலே திருமலையை ஆச்ரயித்திருக்கச்செய்தேயும் அவனுடைய அத்யபிநிவேசத்தை நிவர்த்திப்பிக்கைக்காக ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய ஹேயதையைப்பரிஹரித்து, ஏவம்பூதையான உன்னுடைய மாயை நசிக்கும்படி யநுமதிபண்ணி யருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையிலே, மேய - நித்யவாஸம் பண்ணி, நங்கள்கோனே - என்போல்வார்க்கு ஸ்வாமியானவனாய், யானேநீயாகி-நானே எனக்கு பரிஹரித்துக்கொள்ளுமாபோலே வேறுபாடற நீதானேயாய், என்னை -, அளித்தானே - ரக்ஷித்தவனே! பொங்கு - (போக்யதையாலே) கிளர்ந்துபுலப்படுகிற, ஐம்புலனும் - சப்தாதிவிஷயங்களைந்தும், பொறியைந்தும் - (அதிலேயகப்படுத்துகைக்குக் காரணமான) ச்ரோத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், கருமேந்திரியம் - அவ்விஷயங்களில் ப்ரவர்த்திக்கைக்கு ஹேதுவான கர்மேந்த்ரியங்களைந்தும், ஐம்பூதம் - சப்தாத்யாச்ரயமாயும் இந்த்ரியாச்ரய சரீராரம்பகமாயுமுள்ள ப்ருதிவ்யாதிபூதங்களைந்தும், இங்கு- ஸம்ஸாரதசையில், இ உயிரேய் - ஜீவனோடே அத்யந்தஸம்ஸ்ருஷ்டமான, பிரகிருதி- மூலப்ரக்ருதி, மான் - வ்யவஸாயஹேதுவானமஹான், ஆங்காரம்-அபிமாநஹேதுவான அஹங்காரம், மனங்கள் - ஸங்கல்பரூபமான மநஸ்ஸு,(ஆகிற) ,உன் மாமாயை - உன்னுடைய அத்யாச்சர்யமான ப்ரக்ருதிப்ராக்ருதங்களானதுகள்,மங்கவொட்டு-மங்கும்படி இசைந்தருளவேணும்.

இ.—பத்தாம்பாட்டில், இப்படி அர்த்திக்கச் செய்தேயும், தேஹத்தில் ஸங்கத்தாலே தம் வார்த்தையை ஆதரியாவிட்டவாறே, இதினுடைய ஹேயதையை அவனுக்கு உணர்த்தி, இத்தைப் போக்கி யருளவேணும் என்கிறார்.

[உன்மாமாயை மங்கவொட்டு] - ஒருவராலும் தப்பவொண்ணுதபடி நீ வஞ்சித்த ப்ரக்ருதியை மங்க இசை. "த்யாஜ்யம் என்று அறிந்தபின்பு உம்முடைய ஶரீரத்தை நீரே உபேக்ஷிக்குமத்தனையன்றே, நம் இசைவென்?" என்ன, - ஸர்வஶக்தியான நீ பிணைத்தபிணையை அஶக்தனான நான் அவிழ்க்கவோ? "மம மாயா துரத்யயா" என்றிலையோ? [திருமாலிருஞ்சோலை இத்யாதி] - பரமபதம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டுத் திருமலையிலேவந்து முற்பாடனாய் நிற்கிறது நான்சொன்னபடி கார்யம் செய்வதாகவன்றோ? திருமலையிலே வந்துநின்று எனக்கு முறையை உணர்த்தினவன் என்றுமாம். [யானேநீயாகி என்னை யளித்தானே] - என் அஹிஸந்யியை நீயுடையையாய் என்னை ரக்ஷித்தவனே! நான் எனக்குப் பரியுமாபோலே என் திறத்தில் பரிவனாய் ரக்ஷித்தவனே! இப்படி நிர்பந்தித்தவிடத்திலும் அவன் அநாதரித்திருக்க, இது த்யாஜ்யமென்னு மிடத்தை அறிவிக்கிறார். சேதநன் கர்மத்தாலே ப்ரக்ருத்யாத்ம விவேகம் பண்ணமாட்டாதாற்போலே, இவர்பக்கல் வ்யாமோஹம் அவன் ப்ரக்ருத்யாத்ம விவேகம் பண்ணவொட்டுகிறதில்லை. [பொங்கைம்புலனும்] - சேதநனை விக்ருதனாம்படி பண்ணுகிற ஶப்தாதிகள் ஐந்தும். [பொறியைந்தும்] - வறைகாற்றத்தைக் காட்டி அகப்படுத்துமா போலே ஶப்தாதிகளிலே மூட்டுகிற ஶ்ரோத்ராதிகள் ஐந்தும், கர்மேந்த்ரியங்கள் ஐந்தும், ப்ருதிவ்யாதிபூதங்கள் ஐந்தும், இஸ்ஸம்ஸாரத்திலேயிருக்கிற இவ்வாத்மாவைத் தொற்றியிருக்கிற மூலப்ரக்ருதியென்ன, மஹாந் அஹங்கார மநஸ்ஸுக்களென்ன, இவையாகிற உன்னுடைய மஹா மாயையை மங்கவொட்டு என்று அந்வயம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இப்படி இவர் நிர்ப்பந்திக்கச் செய்தேயும் ஆனைக்குப்பு ஆடுவோரைப்போலே கேளாதிருந்தான்; அதுக்கடி - "சாந்துபூசுவார் பரணியையுடைத்தோபூசுவது? இதேன்சொன்னீரானீர்!" என்ன; திரியவும், மங்கவொட்டென்கிறார்.

[உன்மாமாயை - மங்கவொட்டு] – ஒருவராலும் தப்பவொண்ணுதபடி நீ வஞ்சித்த ப்ரக்ருதியை மங்கவிசை. "த்யாஜ்யமென்றறிந்தபின்பு உம்முடைய ஶரீரத்தை நீரே யுபேக்ஷிக்குமத்தனையன்றோ?நாம் இசையவேண்டுகிறதேன்?" என்ன; ஸர்வஶக்தியான நீ பிணைத்தபிணையை அஶக்தனான நான் விடவோ? - "மம மாயா துரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்றிலையோ? [திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே] - பரமபதம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டு நீ, திருமலையிலேவந்து முற்பாடனாய்நிற்கிறது நான்சொன்னபடி கார்யம்செய்வதாகவன்றோ? நீ நினைத்தபடி கார்யஞ்செய்யப்பார்த்தாயாகில் பின்னையவ்விருப்பிலே என்னையழைத்துக்கொள்ளாயோ? திருமலையிலேவந்துநின்று என்னுடைய ஶேஷத்வத்தையும் உன்னுடைய ஶேஷித்வத்தையும் எனக்கறிவித்தவனே! [யானேநீயாகியென்னையளித்தானே] - என் அஹிஸந்யியை நீயுடையையாய் என்காரி

---

பத்தாம்பாட்டு.—மங்கவோட்டு இத்யாதி. திரியவும் "மங்கவொட்டு" என்றதுக்கவதாரிகை-இப்படிஇத்யாதிவாக்யத்ரயம்.ஆனைக்குப்பு-சதுரங்கம். அதுக்கடி-கேளாதிருக்கைக்கடி.

"மா" என்றதுக்கர்த்தம் - ஒருவராலும் இத்யாதி. "உன்" என்றதுக்கு பாவம் - த்யாஜ்யம் என்று இத்யாதி. அப்படிவிடப்போகாதோ வென்ன-மமமாயா இத்யாதி. தேஹநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறவிடத்திலே "திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே" என்றதுக்கு பாவம்-பரமபதம் இத்யாதி வாக்யத்வயம். "திருமாலிருஞ்சோலை" இத்யாதிக்கு அவாந்தரம் - திருமலையிலே இத்யாதி. அதாவது - திருமலையிலேவந்துநின்று உன்ஶேஷித்வத்தை யறிவித்து நீ ப்ராப்தியையும் பண்ணித்தரவேணுமென்றபடி, என்னஹிஸந்யியைநீயுடையையாய் என்றது - நான்

யம் செய்யக்கடவ நீ, இப்போது நான்இரக்கவிருக்கிறதென்? நான் அபேக்ஷியாதிருக்க இதுக்குமுன்பெல்லாம் நீயேயன்றோ என்னுடைய ரக்ஷணங்கள் பண்ணிப்போந்தாய். இப்படி சொல்லச் செய்தேயும், இத்தைத்தவிர்த்துக்கொடுக்க நினையாமையாலே பேசாதிருந்தான்; நான் நிர்ப்பந்திக்கச்செய்தேயும் கேளாதாரைப்போலே பேசாதேயிருக்கிறதென்? என்ன ;—"நான்பேசாதிருக்கிறேனல்லேன்: நீர் ஹேயமென்றுசொல்லுகிற இதுதான் நமக்கு உபாதேயமாயிராநின்றது; ஆகையாலே ஹேயோபாதேயவிபாகம் பண்ணமாட்டுகிறிலோம்; அறிந்த நீர் ஹேயமென்கிறதுதன்னை எனக்கு இன்னதென்றுசொல்லீர் நான் கழித்துத்தர" என்றான்; ஆகில்கேட்கலாகாதோவென்று சொல்லுகிறார்:—[பொங்கைம்புலன் இத்யாதி] - "உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும் பழுதேயா - முணர்வைப்பெறவூர்ந்து" என்று அவன்தான் இவர்பக்கல் செய்தத்தை இப்போது அவனுக்கு இவர்தாம் தெரிவிக்கிறார். ஒருகர்மம்செய்தது செய்யமாட்டாமையில்லையிறே வ்யாமோஹம்; அதுபோலுமன்றிக்கே இதுநிலைநிற்குமதிறே. சேதநரைத் தந்தாமுக்கு உரியரல்லாதபடி விக்ருதராம்படி பண்ணவல்ல ஸப்தாதிகள்ஐந்தும், † வறுநாற்றத்தைக்காட்டிச் சிலபதார்த்தங்களைத் தப்பாதபடி யகப்படுத்துமாபோலே இச்சேதநனை அவ்விஷயங்களிலேகொடுபோய் மூட்டிமுடிக்கவற்றான ஜ்ஞாநேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், ப்ருதிவ்யாதிகள், கார்யாவஸ்த்தமான சித்வஸ்துவைப்பற்றிக்கிடக்கிற ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், மநஸ்ஸூ ஆக இவையாகிற உன்னுடைய மாமாயையை மங்கவொட்டு. காரணாவஸ்த்தமானதுதானே அவஸ்த்தாந்தராபந்நமாகையிறே கார்யமாகையாகிறது. (௧௦)

*எனக்கு நன்மைபார்க்கும் நினைவை நீயுடையையா யென்றபடி. "என்னையளித்தானே" என்றது அக்கர்த்தமாதல், விவரணமாதல்* - நான் அபேக்ஷியாதிருக்க இத்யாதி. *மேலுக்கவதாரிகை* - இப்படி சொல்லச்செய்தேயும் இத்யாதி. இப்படி சொல்லச்செய்தேயும் *என்றது* - "மங்கவொட்டு" *என்றர்த்திக்கச்செய்தேயு மென்றபடி. இவருடைய ஜ்ஞாநவைஶத்யத்திலே ஈடுபடுகிறார்*- உணர்வும் இத்யாதி. *கர்மவஶ்யராகையாலே இவர்க்கு அவன் அறிவிக்கலாம்; ஸர்வஜ்ஞனுக்கு இவர் அறிவிக்கவேண்டுவானென்னென்ன* - ஒருகர்மம் இத்யாதி. *கர்மத்துக்கு மீட்சியுண்டு; வ்யாமோஹத்துக்கு மீட்சியில்லையென்று கர்மத்திற்காட்டில் வ்யாமோஹத்துக்கு ஏற்றம் அருளிச்செய்கிறார்* - அதுபோலும் இத்யாதி. *ஆக, வ்யாமோஹத்தாலே அவன் அறியாதிருக்க இவர் தெரிவிக்க வேண்டிற்று என்றுகருத்து. பொங்குதல் - கிளம்புதலாய், விக்ருதராம்படி பண்ணவல்ல என்றபடி.* வறுநாற்றம் - *வறுத்த த்ரவ்யநாற்றம்.* சில பதார்த்தங்களை - *பெருச்சாளி முதலானவற்றை.* இங்கு - *ஸம்ஸாரத்திலே.* இவ்வுயிர் - *கார்யாவஸ்த்தமான சித்வஸ்து.* ஏய்கை - *பொருந்துகை. "மாமாயை" என்று - மூலப்ரக்ருதியைச் சொல்லுமதொழிய, ஶரீரத்தைச் சொல்லுமோவென்ன* - காரணாவஸ்த்தமானது இத்யாதி; *ஆகையாலே சொல்லலா மென்றபடி.* "இங்கிவ்வுயிரேய் பிரகிருதி" *என்று - மூலப்ரக்ருத்யம்ஶத்தைச் சொல்லுகிறது. "மாமாயை" என்று - ஶரீரத்தைச்சொல்லுகிறது. 'திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே, யானேநீயாகி என்னையளித்தானே, பொங்கைம்புலனும்' என்று தொடங்கி, 'மானாங்கார மனங்களான - உன் மாமாயையை - மங்கவொட்டு' இத்யந்வயः.* (௧௦)

† 'வறைநாற்றத்தை' என்றும் பாடமுண்டு.

## பதினோராம் பாட்டு.

மானாங்காரமனங்கெடஐவர்வன்கையர்மங்கத்
தானாங்காரமாய்ப்புக்குத் தானேதானேயானானைத்
தேனாங்காரப்பொழில்குருகூர்ச் சடகோபன்சொல்லாயிரத்துள்
மானாங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே.

ஆ.—(மானாங்காரம்) - நான்சொன்னபடியே செய்தருளும் ஸ்வபாவனான வாறே, தனக்கத்யந்தம் அபிமதமாயிருந்த இப்ப்ரக்ருதியில் அபிநிவேசத்தை விட்டருளி பெரியசெருக்கோடேகூட என்னுள்ளேபுகுந்து கலந்தருளின எம்பெருமான் என்னோடுகலந்து பரிமாறுகையால் அவனுக்குள்ள கர்வத்தைச்சொல்லுகிறதாய், எம்பெருமானை ப்ரதிபாதித்த ஆயிரம் திருவாய்மொழியிலும், பெரியகிளர்த்தியோடே யெழுந்த இத்திருவாய்மொழி திருமாலிருஞ்சோலையை ப்ரதிபாதிக்கிறதென்கிறார்.

ஓ.—நிகமத்தில், மஹாஹங்கார விஷயமான இத்திருவாய்மொழி திருமலையிலே சொல்லிற்று என்கிறார்.

[மானாங்காரம் என்று தொடங்கி] - மஹாந் அஹங்கார மநஸ்ஸுக்கள் கெடும்படியும், பெருமிடுக்கையுடைய ஐந்திந்த்ரியங்களும் மங்கும்படியாகவும், எனக்குத் தான் அபிமாநியாய்ப்புகுந்து ஆத்மாத்மீயங்களில் எனக்கு உண்டான அபிமாநத்தைத் தவிர்த்தவனை. [தேனாங்காரப்பொழில் என்று மேலுக்கு] - வண்டுகளினுடைய களிப்பையுடைய பொழிலோடு கூடின திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழியிலும், மஹாஹங்காராதி ரூபமான ப்ரக்ருதி நிரஸநார்த்தமாகச் சொன்ன இத்திருவாய்மொழி; மிக்கிருந்துள்ள ஹர்ஷத்திலே பிறந்த இத்திருவாய்மொழி என்றுமாம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக இவரர்த்தித்தபடியே ஈஶ்வரனுடைய விரோதிநிரஸநோத்யோகத்தைச்சொல்லிக்கொண்டு, அதுவே இத்திருவாய்மொழிக்குப் பலமாக அருளிச்செய்கிறார்.

மானாங்கார மனம் - மஹாஹங்கார மநஃப்ரமுகமான ஶரீரஸம்பந்தம், கெட - நசிக்கும்படியாகவும், வன்கையர் - ப்ரபலமான, ஐவர் - இந்த்ரியங்களைந்தும், மங்க - (ஸ்வவிஷயங்களோடே) மங்கிப்போம்படியாகவும், தான் ஆங்காரமாய் - தானே பெரிய அபிமாநத்தையுடையனாய்க்கொண்டு, புக்கு - புகுந்து, தானேதானேயானானை - என்னாத்மாவும் தானேயாய் ஆத்மீயமும் தானேயானவனை, தேன் ஆங்காரம் - வண்டுகளுடைய செருக்கையுடைத்தான, பொழில்-பொழிலையுடைய, குருகூர்ச்சடகோபன் - திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார், சொல்லாயிரத்துள்-அருளிச்செய்த ஆயிரத்துள், திருமாலிருஞ்சோலைமலைக்கே - திருமாலிருஞ்சோலை மலைக்கேயான, இவைபத்தும்-, மானாங்காரத்து - மஹாஹங்காரோபலக்ஷித ஸமஸ்தவிரோதி நிவ்ருத்தியிலே தாத்பர்யம். இப்பத்தும் அப்யஸித்தார்க்கு மஹாஹங்காராதிகள் தானேகழியுமென்று கருத்து. இது, அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிமமத்தில், மஹதஹங்கார விஷயமான இத்திருவாய்மொழி திருமலையிலே சொல்லிற்று என்கிறுர்.

[மாஞுங்கார மனம்கெட] - மஹான், அஹங்காரம், மநஸ்ஸு என்கிற இவை கெடும்படியாக; இது ஶரீரத்துக்கும் உபலக்ஷணம். 'ஐவர்வன்கையர்மங்க' என்கிறது - கர்மேந்த்ரியங்களுக்கும் ஶப்தாதிகளுக்கும் உபலக்ஷணம். [வன்கையர்] - பெருமிடுக்கர். விரோயிபோகைக்கு அவன் செய்ததுஎன்? என்ன,—தன், நிர்பந்தத்தைத் தவிர்ந்தான் என்கை. [தாஞுங்காரமாய்ப் புக்கு] - எனக்கு அபிமாநியாய்ப் புகுந்து என்னுதல், பெரிய செருக்கையுடையனுய்க் கொண்டு புகுந்து என்னுதல். [தானே தானேயானுனை] - ஆத்மாத்மீயங்களில் எனக்கு உண்டான அபிமாநத்தைத் தவிர்த்துத் தானே அபிமாநியானவனை. [தேனுங்காரப்பொழில் இத்யாதி] - வண்டுகளுடைய அபிமாநமேயான பொழிலையுடைய திருநகரியில் ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந் திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு. [மாஞுங்காரத்து இவைபத்தும்] - மஹதஹங்காராதி ரூபமான ப்ரக்ருதி நிரஸநார்த்தமாகச் சொல்லப்பட்ட இத்திருவாய்மொழி என்னுதல், பெரிய செருக்கோடே சொன்ன இப்பத்து என்னுதல். [திருமாலிருஞ்சோலைமலைக்கே] - திருமலையே உத்தேஶ்யமாகச் சொல்லிற்று; அழகரைச் சொன்னவிடம் ஆநுஷங்கிகம்.

ஈடு.—நிமமத்தில், மஹதஹங்கார விஷயமான இத்திருவாய்மொழி திருமலையிலே சொல்லிற்றென்கிறுர்.

[மாஞுங்காரமனங்கெட] - மஹான், அஹங்காரம், மநஸ்ஸு என்று சொல்லுகிற இவை கெடும்படியாக; இவைப்ரக்ருதிக்கும் உபலக்ஷணம். [ஐவர்வன்கையர் மங்க]- †கர்மேந்த்ரியங்களுக்கும் ஶப்தாதிகளுக்கும் உபலக்ஷணம். (வன்கையர் - பெருமிடுக்கர்.) பின்னை அவன் இதுக்குச் சொல்லிற்றென்னென்னில் ; - இதில் பண்ணுகிற நிர்ப்பந்தத்தைத் தவிருகிறேமென்னத் தீருமிறே. அவன் "செய்கிறேம்" என்று தலைதுலுக்கிஞல் பின்னைப் பெற்றதாயிருக்கத் தட்டில்லையே. [தான்இத்யாதி] - தான் எனக்கபிமாநியாய்ப் புக்கேன்னுதல், பெரியசெருக்கோடே புக்கேன்னுதல். [தானேதானேயானுனை] - ஆத்மாத்மீயங்களில் எனக்குண்டான அபிமாநத்தைத்தவிர்த்துத் தானே யபிமாநியானவனை. அன்றிக்கே, இத்தலையில் அர்த்தித்வத்தை யொழியத் தானே யர்த்தியுமாய், இதுக்குஅபிமாநி

நிமமம்.—மானுங்காரம் இத்யாதி. " மாஞுங்காரத்துஇவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - மஹத் இத்யாதி. மஹதஹங்காரவிஷயமான என்றது - மஹதாதிதோஷ ப்ரதிபாதகமான வென்றபடி.

'ஶப்தாதிகளுக்கும்' என்கிறவிடத்தில், ஆதிஶப்தத்தாலே - ததாஶ்ரயங்களான பூதங்களும் தத்க்ராஹகங்களான ஜ்ஞாநேந்த்ரியங்களும் சொல்லப்படுகிறது. 'கர்மேந்த்ரியங்களுக்கும்' என்கிறபாடமுண்டானபோது, "ஐவர்" என்று ஜ்ஞாநேந்த்ரியங்களைச் சொல்லுகிறது. மேலுக்கவதாரிகை - பின்னையவன் இத்யாதி. பின்னையென்றது - இவர் "மங்கவொட்டு" என்று ப்ரார்த்தித்தபின்புஎன்றபடி. இதுக்குச் சொல்லிற்றென்னென்னில் என்றது - "மங்கவொட்டு" என்றர்த்தித்ததுக்கு அவன்சொன்னதென்னென்னில் என்றபடி. இதில் - இந்தத்திருமேனியில். தவிருகிறேமென்ற மாத்ரத்திலே தீருமோவென்ன - அவன் செய்கிறேமென்று இத்யாதி. தானெனக்கபிமாநியாய் - தானென்காயத்துக்கெல்லாம் நிர்வாஹகனுயென்றபடி. "தானே தானே" என்றவீப்ஸைக்கர்த்தம் - ஆத்மாத்மீயங்களில் இத்யாதி. அதாவது - ஆத்மாவுக்கும் ஆத்மீயத்துக்கும் தானேயபிமாநியென்றபடி. இதுக்கு - ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்திக்கு. "தாஞுங்காரமாய்ப்

† கர்மேந்த்ரியங்களுக்கும் என்பது இல்லாமலும்-பாடமுண்டு என்பது அரும்பதத்தாலேற்படுகிறது.

யும் தானேயானவனென்னுதல். [தேனுங்காரமித்யாதி] - வண்டுகளினுடைய அபிமானமேயான பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்திலும், மஹதாதிரூபமான ப்ரக்ருதி நிரஸநார்த்தமாகச்சொன்ன இப்பத்துமென்னுதல்; பெரிய செருக்கோடேசொன்ன இப்பத்துமென்னுதல். [திருமாலிருஞ்சோலைமலைக்கே] - திருமலைவிஷயமாகவாய்த்துச் சொல்லிற்று; அழகரைச்சொன்னவிடமுண்டாகில் அதில் கல்பகதருவைச் சொன்னவோபாதி. திருமலையிலுள்ளதடைய உத்தேஶ்யமாகக் கடவதிறே; "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" என்றும் சொன்னார்களிறே.

---

*புக்கு" என்றதினிரண்டாமர்த்தம் - இவர்விரோதிநிவ்ருத்தியைப் பண்ணுகிறோமென்கிற கர்வத்தோடே புக்கென்றபடி. "புக்கு" என்றது - இசைந்தென்றபடி. "மானாங்காரத்திவைபத்தும்" என்றதினிரண்டாமர்த்தத்தில், மஹத்த்வம் - அஹங்காரவிசேஷணம். செருக்கோடே சொன்ன என்றது - விரோதிநிவ்ருத்திக்காகச் செருக்கோடே சொன்னவென்றபடி. அவதாரணார்த்தம் - திருமலைவிஷயமாக இத்யாதி. "தானேதானேயானானைச்சொன்ன" என்றிருக்க, "திருமலைவிஷயமாக" என்பானென்னென்ன - அழகரை இத்யாதி. இப்படியாகிலும் சொல்லுகிறதென்னென்ன - திருமலையில் இத்யாதி. திருமலையிலுள்ளதெல்லாம் உத்தேஶ்யமோவென்ன - எம்பெருமான் இத்யாதி. பெருமாள்திருமொழி, "உம்பருலகு" இத்யாதி. என்னயனானவனுடைய ஸ்லாக்யமான திருமலைமேலையுள்ளது ஏதேனுமொரு பதார்த்தமாகவும் அமையுமென்றபடி. ஆக, இவர் "மங்கவொட்டு" என்றதுக்கு அவன்செய்ததென்னென்ன; "மானாங்காரமனங்கெட ஐவர் வன்கையர்மங்கும்படியாகத் தானாங்காரமாய்ப் புக்கு" என்கையாலே - ப்ராக்ருதிஸம்பந்த நிவ்ருத்தியைப்பண்ணித் தருகிறோமென்று தலைதுலுக்கினானென்றபடி. "வன்கையரான - ஐவர்" என்றந்வயிப்பது. ப்ரபலரான இந்த்ரியங்கள் ஐந்தையுமென்றபடி. தேன் - வண்டு.* (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.-- [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—(செஞ்சொற்கவிகாள்) — [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

செஞ்சொற்பரன்தனதுசீராருமேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் - விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட
திண்திறல்மாறன்நம்திரு.

*ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.*

# எட்டாந் திருவாய்மொழி—திருமாலிருஞ்சோலை - ப்ரவேஶங்கள்.

ஆ.—(திருமாலிருஞ்சோலை.) - "இப்படி யதிநிவிஷ்டனாய்க்கொண்டு என்னோடுகலந்து பரிமாறுகைக்கு ஹேதுவென்?" என்று எம்பெருமானைக் கேட்டால்; அங்ஙனே அதிநிவிஷ்டனாயிருந்தவனாலும் பரிக்லுப்தமான ஹேதுக்களிலொரு ஹேதுவும் என்பக்கலுண்டாகச் சொல்லவொண்ணாது; இனி என்பக்கலில்லாத ஹேதுவை என்பக்கலிலே அத்யாரோபித்துச்சொல்லப்பார்க்கிலும்.

ஒ.—எட்டாந் திருவாய்மொழியில், "தன்னைப் பெறவேணுமென்னும் இச்சாலேஶமுமின்றிக்கே தன்னைப் பெறுகைக்கு ஈடான உபாயமுமின்றிக்கே அதுக்குமேலே அஸஹ்யாபசாரஸஹஸ்ரனாய் மிகவும் விஷயங்களையே உகந்திருக்கிற எனக்கு, பொய்ந்நின்றஞானம் தொடங்கி இவ்வளவும்வர மஹாஸம்ருத்தியைத்தந்து என்பக்கலிலே மிகவும் வ்யாமோஹத்தைப்பண்ணி இப்போது என்னை விஷயீகரிக்கைக்கும் பண்டு என்னைப்போகடுகைக்கும் காரணமென்?" என்று, தம்மைத் திருநாட்டிலே கொடுபோகையிலேவிரைகிற எம்பெருமானை ஆழ்வார் கேட்க, அவனும் நிருத்தரனாயிருந்தவாறே, "நிர்ஹேதுகமாக விஷயீகரித்தருளினான்" என்று அத்யவஸித்து, அதுக்கடியான நிஸ்ஸீமமான அவனுடைய க்ருபாதிகுணங்களை மிகவும் அநுஸந்தித்து அதிலே ஈடுபட்டு விஸ்மிதராய்க் களிக்கிறார்.

ப.—எட்டாந்திருவாய்மொழியில்,கீழே தாம் அபேக்ஷித்தபடியிலே ஈஶ்வரன் கார்யம்செய்வதாக அறுதியிட்டபடியைக்கண்டு, "இப்படிநம்பக்கல் வ்யாமோஹம்பண்ணுகைக்கும் நாம்அபேக்ஷித்தகாரியம் செய்யும்படி பரதந்த்ரனாகைக்கும் நம்பக்கலொரு ஹேதுவில்லை; நிர்ஹேதுகமாக நம்மைவிஷயீகரித்தருளினானித்தனை" என்று அறுதியிட்டு, அதுக்கடியான அவனுடைய யாத்ருச்சிகாநுகூல்ய நிபந்தநமான பூர்ணாங்கீகாரத்தையும், அங்கீகார ஸ்த்தைர்யத்தையும், ஸௌமத்வாதிஶயத்தையும், புருஷார்த்த ப்ரதத்வத்தையும், ப்ராப்திப்ரதிபந்தக நிவர்த்தகத்வத்தையும், ஸோமரஸப்ரதத்வத்தையும், நித்யாநுபாவ்யத்வத்தையும், நிரவதிகஸர்வப்ரகாரபோக்யத்வத்தையும், நிர்ஹேதுகோபகாரகத்வத்தையும், நித்யகைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன் நிருபாதிகபூர்ணவிஷயீகாரத்தைப் பண்ணி ஸமஸ்தவிரோதியும் நிரஸ்தமாம்படி திருப்பேரிலே ஸந்நிஹிதனாய் நிரதிஶயாஹ்லாதகரமான அநுபவத்தைப்பிறப்பித்தான்: இதொரு ஶீலாதிஶயமே! என்று மிகவும் ஹ்ருஷ்டராகிறார்.

இ.—எட்டாந் திருவாய்மொழியில், தம்மைக்குறித்து ஈஶ்வரனுக்குண்டான பாரதந்த்ர்யத்தைச் சொன்னார், அருள்பெறுவாரடியாரில்; அவன்தானே மேல்விழுந்து தம்முடைய திருமேனியை விரும்பாநிற்க இத்தைத் தவிரவேணுமென்று அர்த்தித்தஇதுக்கு இசைகையாலே அந்தபாரதந்த்ர்யத்தைமுடிய நடத்தினபடியைச் சொன்னார், செஞ்சொற்கவியில்; இதில், அஸஹ்யாபசார ஸஹஸ்ரராயிருக்கிற நம்மை அவற்றைப்பொறுத்து அத்வேஷத்தைப் பிறப்பித்து, அதடியாக விஶேஷகடா

க்ஷத்தை நம்பக்கலிலேபண்ணி, "தன்னைப் பெறவேணும்" என்னும் இச்சையைப் பிறப்பித்து, "தன்னைப்பெறுகைக்கு உபாயமும்தானே" என்னும் வ்யக்தியை நமக்குப் பிறப்பித்து, ஸம்ஸாரிவிஷயங்களில் ப்ரவணராய்த்திரிந்த நம்மை, "பலநீகாட்டிப் படுப்பர்யோ ?" என்னும்படிபண்ணி, பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி இவ்வளவும் உண்டான மஹாஸம்ருத்தியைத்தந்து, இவ்வளவு புகுராநிறுத்தி, தம்பக்கலிலே மிகவும் வ்யாமோஹத்தைப்பண்ணி அவ்வருகும் கொண்டுபோவானாய் த்வரியாநிற்கிறபடியை அநுஸந்தித்து, "இதுக்கடியாயிருப்பதொன்று நம்பக்கலுண்டோ ?" என்று ஆராய்ந்தவிடத்துத் தம்பக்கல் ஒன்றும் கண்டிலர்: தம்பக்கலிலேயுள்ளதொன்றைப் பேற்றுக்கு உறுப்பாக நினைக்குமவரல்லாமையாலே. "இனி இதுக்கடி ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவன் தன்னையே கேட்போம்" என்றுபார்த்து, "இன்று தேவர் இப்படி ஸம்ஸாவஹிக்கைக்கும் அநாதிகாலம் இத்தைவிடுகைக்கும் அடியென்?" என்றுகேட்க, அவனும் நிருத்தரனாய்க் கவிழ்தலையிட்டுக் காலாலே தரையைக்கீறிநிற்க, "நிர்ஹேதுகமாக விஷயீகரித்தருளினான்" என்று அத்யவஸித்து, அவ்விஷயீகாரத்துக்கடியாக, நிஸ்ஸீமமாய் நிஸ்ஸங்க்யமான க்ருபாதி குணங்களை அநுஸந்தித்து, "இதொரு குணவத்தையே!" என்று அதிலே ஈடுபட்டு விஸ்மிதராய்க் களிக்கிறார்.

ஈடு.—தம்மைக்குறித்து ஸர்வேஶ்வரனுக்கு உண்டான பாரதந்த்ர்யத்தைப் பேசினார், * அருள்பெறுவாரடியாரிலே ; அந்தப்பாரதந்த்ர்யந்தன்னை முடியநடத்தினபடியைச்சொன்னார், * செஞ்சொற்கவியில் ; "நீர்சொன்னபடியே செய்யக்கடவோம்" என்று தலைதுலுக்கினானிறே.

இவர்தம்மைத் திருமேனியோடே கொடுபோவதாகத் தேங்கின தேக்கமிறே நடுவுள்ளது; அதொழியக் கொடுபோவதாக அற்றவன்றே பதறத்தொடங்கினான்; "சேழும் பறவைதானேறித்திரிவான்" என்று - திருவடிதிருத்தோளிலே ஏறிவந்திறே இவரைவிஷயீகரித்தது ; அத்திருவடிதிருத்தோளிலேவந்து இவரைக்கொடுபோவதாகப் பார்த்தான். சிலரை ஆதிவாஹிககர்த்தாக்களை வரவிட்டுக்கொடுபோம்; சிலரைப் பெரியதிருவடியை வரக் காட்டிக் கொடுபோம்; திருவடிதிருத்தோளிலேவந்துதானே கொடுபோமவரிறே இவர்; "அஹம்ஸ்மராமி மத்பக்தம் நயாமி" (அஹம்ஸ்மராமிமத்பக்தம்நயாமி) என்கிறபடியே.* கள்வன்கோல்லிற்பிராட்டியை யாளிட்டுக் கொடுபோமன்றிறே இவரையும் ஆளிட்டுக்கொடுபோமது ! [நானிலம் இத்யாதி] - "ஸம்ஸாரமாகிற பாலைநிலத்தைக்கழித்துப்போந்தோம்:

திருமாலிருஞ்சோலை ப்ரவேஶ, வர்த்திஷ்யமாண ஸங்கதிக்காக வ்ருத்தாநுவாதம் - தம்மைக்குறித்து இத்யாதி. திருமேனியோடே யிராநிற்க முடியநடத்தினபடி யென்னென்ன - நீர்சொன்னபடி இத்யாதி.

"மானாங்காரமனங்கெட" என்று சாற்றுப்பாட்டிலேயன்றோ தலைதுலுக்கினது, நடுவொன்பதுபாட்டிலும் செய்ததென்னென்ன - இவர்தம்மை இத்யாதி. நடுவு - ஒன்பதுபாட்டிலும். அதொழிய - திருமேனியொழிய. அற்றவன்றே - அறுதியிட்டவன்றே. பதறுகிற ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - சேழும்பறவை இத்யாதி. ஆதிவாஹிகரை வரவிட்டன்றோ கொடுபோவதென்ன-சிலரை இத்யாதி. ஆதிவாஹிககர்த்தாக்கள் - அதிவஹநகர்மத்துக்குக் கர்த்தாக்களென்றபடி. திருவடி திருத்தோளிலேவந்து தானேகொண்டுபோம் என்னுமதுக்கு ப்ரமாணம் - அஹம் ஸ்மராமி இத்யாதி வாக்யம். "நயாமி" என்றதிலேநோக்கு. இவரையும் ஆளிட்டுக்கொடுபோகவொண்ணாதோவென்ன - கள்வன்கோல் இத்யாதி. அப்படிதானே கூட்டிக்கொண்டுபோனானோவென்ன - நானிலம் இத்யாதி. இதுக்குஶாவம் - ஸம்ஸாரம் இத்யாதி. திருவிருத்தம். இதுக்கு,

‘‘**நசபுநராவர்த்ததே**’’ (நசபுநராவர்த்ததே) என்கிறதேசத்திலே புகுந்தோம்’’**என்று** தானேசொல்லித் தேற்றிக்கொண்டிறே போவது. ஆக, இப்படி தம்மை அவ்வருகேகோடு போகையிலே பதறுகிறபடியை யநுஸந்தித்தார்; ‘‘இவன்இப்படி நம்பக்கல் பதறுகைக் கடியேன்?’’ என்றுபார்த்தார்; தம்பக்கல் ஒன்றும்கண்டிலர். முதலிலே தம்பக்கலிலே அத்வேஷத்தையும் பிறப்பித்து, அதடியாக விசேஷகடாக்ஷத்தைப்பண்ணி, தம்பக்கலிலே இச்சையையும்பிறப்பித்து, ‘‘தானேயுபாயம்’’என்னும் புத்தியைப் பிறப்பித்து, அஸஹ்யாபசாரஸஹராயிருக்கிற தம்முடைய அபசாரங்களை யடையப்பொறுத்து, விஷயங்களிலே ப்ரவணராய்ப்போந்ததம்மை ‘‘பலநீகாட்டிப்படுப்பாயோ’’ என்று தாமே சொல்லும்படிபண்ணி, தன்னாலல்லது செல்லாமையைப்பிறப்பித்து, தானேவந்து அவ்வருகே கோடுபோவானாக த்வரிக்கிறபடியை யநுஸந்தித்து, ‘‘இன்று இப்படி நம்மையாதரிக்கிற இவன் அநாதிகாலம் நம்மைவிட்டு ஆறியிருந்தபடியெங்ஙனே? இன்று இப்படி யாதரிக்கைக்குத் தான் ஹேதுவென்?’’ என்றுபார்த்தார்; தம்பக்கல் ஒருஹேது கண்டிலர். இப்பேறு தாமடியாகவந்ததொன்றல்லாமையாலே தம்பக்கல் ஒருவாசிகண்டிலர்; முன்புத்தையிற் காட்டில் இப்போது தமக்கு ஓர் ஏற்றமுண்டாக நினைத்திருக்குமவரன்றே. முன்பேதொடங்கி நெடுங்காலம் இவரைப்பெறவேணுமென்றிருக்கிறவன் இவர்க்கு இப்போது ஒன்றைச்செய்தானாக நினைத்திரானே. ‘‘இனி ஸர்வஜ்ஞனானவவனாகிலும் இதுக்கொரு போக்குச்சொல்லுமாகில் அவனைக்கேட்போம்’’ என்றுபார்த்து, ‘‘இன்று இப்படி இத்தை ஸ்ரீரஸாவஹிக்கிறதேவர் முன்பு அநாதிகாலம் இத்தைக்கைவிட்டிருப்பானேன்? இப்போதுஇத்தை யாதரிப்பானேன்?’’என்றுகேட்டார்; ‘‘உம்முடைய பக்கல் அத்வேஷமடியாகச்செய்தோம்’’என்னமாட்டானே; தான்அறிய அதுவும் தன்னாலே

---

*புணர்ந்துடன்போக்கென்று துறை. இப்பாட்டில் நாயகன் வைஷ்ணவனேயாகிலும் ஈஸ்வரனுக்கும் உபலக்ஷணம்.* **நானிலம் வாய்க்கொண்டு** - *நாலுவகைப்பட்ட பூமியை வாயிலேவைத்துக்கொண்டு.* **நன்னீறமென்று** - *நிஸ்ஸாரமாம்படியென்று.* **கோதுகொண்ட** - *கோதாக்கின.* **வேனலஞ்செல்வன்** - *உஷ்ணகிரணனான ஆதித்யன்.* **சுவைத்துமிழ்பாலை** - *சுவைத்துமிழ்ந்தபாலைதேசத்தை. கடந்த - ,பொன்னேயென்று - நாயகியை ஸம்போதிக்கிறபடி. ‘கானிலம்தோய்ந்து விண்ணோர் தொழும்கண்ணன் வெஃகாவுது’ என்று - ப்ராப்யதேசத்தைக் காட்டுகிறபடி.* **இதுக்கு** *ஸ்வாபதேசத்திலேஹாவம்* - **ஸம்ஸாரமாகிற** *இத்யாதிவாக்யம்.* **கானிலம்தோய்ந்து** - *பூமியிலே கால்பாவிநின்று.* **உது** - *அதூரவிப்ரக்ருஷ்டம்.* **அம்பூஇத்யாதி** - *அழகியபூவையும் தேனையுமுடைய அழகியசோலையவ்வருகே யிருக்குமது.* **எப்பாலைக்கும் சேமத்ததே** - *எல்லாவவஸ்த்தைக்கும் க்ஷேமமுடைத் தென்றபடி. கீழ்ச்சொன்னபடியை யநுவதிக்கிறார்* - **ஆகஇப்படி** *இத்யாதி. அத்வேஷாதிகள் தம்பக்கலுண்டாயிருக்க ‘‘கண்டிலர்’’ என்பானென்னென்ன* – **முதலிலே** *இத்யாதி. ‘‘என்னைத் தீமனங்கொடுத்தாய்’’ ‘‘அமலங்களாகவிழிக்கும்’’ ‘‘மருவித்தொழும் மனமேதந்தாய்’’ ‘‘நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்’’ ‘‘விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்’’ ‘‘நின்னலாலிலேன்காண்’’ ‘‘விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்’’ என்றவற்றைப்பற்ற* – **அத்வேஷத்தை** *இத்யாதி ஸபதக்ரமமும். ‘‘அறுக்கும்வினையாயின’’ என்றத்தைப்பற்ற* – **அஸஹ்யாபசார** *இத்யாதி என்னுதல். ‘‘இன்றென்னைப்பொருளாக்கி’’ இத்யாதியைப்பற்ற* - **இன்றுஇப்படி** *இத்யாதி. காணுமைக்கடியேதென்ன* - **இப்பேறு** *இத்யாதி. ‘‘வாசிகண்டிலர்’’ என்கிறதென்? ப்ராவண்யமுண்டேயென்ன* - **முன்புத்தை** *இத்யாதி. இவர் நினைவாலில்லாவிட்டாலும் அவன் நினைவாலே ஒரு ஸுக்ருதமில்லையோவென்ன* - **முன்பேதொடங்கி** *இத்யாதி.* **ஒன்றைச்செய்தானாக** *இவர்பண்ணின ஸுக்ருதமடியாக ஒன்றைச்செய்தானாக என்றபடி. ‘‘ஒன்றெனக்கருள்செய்யவுணர்த்தலுற்றேனே’’ என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார்* - **இனி ஸர்வஜ்ஞன் இத்யாதி**

வந்ததாகையாலும், அதுதான் பேற்றுக்கு ஈடான ஸாதநமாகப்போராமையாலும். இனி, ரக்ஷகனானவனுக்கு நெடுநாள் ரக்ஷ்யவர்க்கத்தைவிட்டிருந்த இதுக்குச் சொல்லலாவ தொன்றில்லையே, பிற்பாடனானதுக்கு லஜ்ஜிக்குமதுக்குமேற்பட; ஆகையாலே சொல்லலாவதொரு மறுமாற்றம் காணாமையாலே கவிழ்ந்துநின்று காலாலேதரையைக் † கீறினான். முதலிலே ஜந்மஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணித் தன்பக்கலிலே இச்சையைப் பிறப்பிக்கைக்கு வழியிட்டுவைத்தான்; அவ்வழியாலே இச்சையைப் பிறப்பித்தான்; தன்பக்கலிலே உபாயபாவத்தை ஏறட்டுக்கொண்டு * போய்நின்றஞானந்தொடங்கி இவ்வளவாகத் தன்பக்கலிலே வரநிறுத்தினான்; பரபக்திதொடங்கி பரமபக்திபர்யந்தமான உபாவிசேஷங்களைப் பிறப்பித்தான். "இதுதன்னை முன்பே செய்யாவிட்டதென்?" என்ன; "இதுக்குச்சொல்லலாவ தொன்றில்லாமையாலே நிருத்தரனாய் நிற்கிறானித்தனை" என்றுபார்த்து, இப்படி அவன் தம்பக்கல்பண்ணின விஷயீகாரத்தையும் அதுக்கடியான அவனுடைய க்ருபாதிகுணங்களையும்அநுஸந்தித்து, "இதொரு நிர்ஹேதுகவிஷயீகார மிருக்கும்படியே!" என்று அதிலே ஆழங்காற்பட்டு விஸ்மிதராய் ஹ்ருஷ்டராய்க் களிக்கிறார்.

— —

## முதற் பாட்டு.

திருமாலிருஞ்சோலைமலையென்றேன், என்னத்
திருமால்வந்துஎன்னெஞ்சுநிறையப்புகுந்தான்
குருமாமணியுந்துபுனல்பொன்னித்தென்பால்
திருமால்சென்றுசேர்விடம் தென்திருப்பேரே.

*ஆ.—திருமாலிருஞ்சோலைமலை என்னும் இச்சொல்லைச் சொன்னேனென்னுமிதுக்கு மேற்படச் சொல்லலாவதொரு ஹேது என்பக்கலில்லை; இச்சொல் இத்தனையும் மெய்யே சொன்னேன் ஹேதுவாக, குருமாமணியுந்துபுனல் பொன்னித் தென்பாலான திருப்பேரைத்திருநகரியாக வுடையனாயிருந்த எம்பெருமான் பெரியபிராட்டியாரோடேகூட என்நெஞ்சு நிறையப்புகுந்து இப்படி என்னோடேகலந்து பரிமாறுவதே! ஒருவனுடைய அபிநிவேஶ மிருக்கும்படியே! என்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், யாத்ருச்சிகமாகத் திருமாலிருஞ்சோலைமலை என்றேன்: என்னுங்காட்டில், அத்யந்தநிரபேக்ஷனாயிருக்கிற தான் பிராட்டியோடே கூட வந்து என்னுள்ளே புகுந்தருளினான் என்கிறார்.*

---

இவன் நிருத்தரனானமைக்கு ஹேத்வந்தரம் - இனி ரக்ஷகனானவனுக்கு இத்யாதி. மறுமாற்றம் - ப்ரத்யுத்தரம். கவிழ்ந்துநின்று காலாலே தரையைக்கீறினான் என்றது - "உணர்த்தலுற்றேன்" என்றவநந்தரம், அவன்வார்த்தையின்றிக்கே "உற்றேனுகந்துபணிசெய்து" என்று தாமே ஸமாஹிதராகையாலே ஸித்தம். அவன் நிருத்தரனானபின்பு தாமே ஸமாஹிதரானபடியைக் காட்டுகிறார் - முதலிலே இத்யாதி. "என்னெஞ்சுநிறையப்புகுந்தான்" என்றத்தைப்பற்ற - அவன்தம் பக்கல் இத்யாதி. "காரேழ்" இத்யாதியாலே ரக்ஷணம்சொன்னபோதே க்ருபாதிகுணங்களும் ஸித்தம். "இன்றென்னைப்பொருளாக்கி" என்றத்தைப்பற்ற - நிர்ஹேதுகவிஷயீகாரம் என்றது. "அமுதமுண்டுகளித்தேன்" என்றத்தைப்பற்ற - ஹ்ருஷ்டராய்க்களிக்கிறார் என்றது.

† 'கீறிநின்றான்' என்று சில ப்ரதிகள்,

[குருமாமணி என்றுமேலுக்கு] - பெருவிலைபனாய் அழகியவான ரத்னங்களைக் கொடுவந்து தள்ளாநின்றுள்ள புனலையுடைய பொன்னியினுடைய தென்கரையிலே ஸ்ரீயஃபதியான தான் சென்று சேரும் ஶ்லாக்யமான தேஶம் தென்திருப்பேர்.

ப.—முதற்பாட்டில், யாத்ருச்சிகமாகத் திருமலையைப்போய்க் கிட்டுங்காட்டில் லக்ஷ்மீஸஹாயனைக்கொண்டு என்னெஞ்சிலேவந்து புகுந்தானென்கிறார்.

(நாட்டுவார்த்தை மர்யாதையாலே), திருமாலிருஞ்சோலை மலையென்றேன் என்ன - திருமாலிருஞ்சோலையென்று சொன்னவளவிலே, திருமால் - ஸ்ரீயஃபதியாய் பரிபூர்ணனான தான், வந்து - (ஸாபேக்ஷரைப்போலே) வந்து, என்னெஞ்சம் - (உக்திக்குக் கூட்டுப்படாதேயிருக்கிற) என் நெஞ்சுக்குள்ளே, ("வாக்குக்கு பூர்வபாவியல்லவோ மநஸ்ஸு" என்கிற ஸ்வாபிப்ராயத்தாலே அவளும் தானுமாக) நிறைய-பரிபூர்ணமாக, புகுந்தான்-; திருமால் - (என் நெஞ்சிலே வருகைக்காக) "ஸ்ரீயாஸார்த்தம் ஜகத்பதிঃ" என்றவளோடேஒருதேசவிசேஷத்திலே யிருக்கிறவன், சென்றுசேர்விடம் - சென்று கண்வளர்ந்தருளினவிடம், குருமாமணி - அதிஶ்லாக்யமான மாணிக்கங்களை, உந்து - உந்துகிற, புனல் - புனலையுடைய, பொன்னி - பொன்னியின், தென்பால் - தென்பக்கத்தில், தென் திருப்பேர் - ஶ்லாகநீயமான திருப்பேர்.

இ.—முதற்பாட்டில், யாத்ருச்சிகமாகத் திருமலையைச் சொல்லுங்காட்டில் நிரபேக்ஷனானதான்பிராட்டியோடே கூடவந்து என்னுள்ளேபுகுந்தருளினான்என்கிறார்.

[திருமாலிருஞ் சோலைமலை என்றேன்] - சிலர் ஒருமலையைச் சொல்லுமிடத்தில் ஒருவிஶேஷணத்தையிட்டுச் சொல்லவேணும், அம்மாத்ரம் சொன்னேனத்தனை என்கிறார் இவர்; இவ்விஶேஷணத்தையிட்டுச் சொல்லிற்றுத் தன்பக்கல் ஆதரத்தாலே என்கிறான் அவன். [என்ன] - மநஸ்ஸஹகாரமில்லை, உக்திமாத்ரமே யென்கிறார். ராவணன் தம்பிக்கு மித்ரபாவமே அமையும் என்றிருக்குமவன், இவர்க்கு உக்திக்கு அவ்வருகு ஒன்றுவேணுமென்றிருக்குமோ? "மோக்ஷத்வம் ஸ்வரூபமாகில், உபாயபாவம் நம்தலையிலே கிடந்ததாகில், அத்வேஷமுண்டாகில், நம்பேறாக விஷயீகரிக்கைக்கு உக்திக்கு அவ்வருகுவேண்டா" என்கிறான் அவன். [திருமால்] - அஹ்ருதயமாகச் சொன்னதுதன்னையும் ஸஹ்ருதயமாக்குவாரும் அருகேயுண்டு. [வந்து] - நம்மை அங்கே அழைத்துக்கார்யம் கொள்ளுகையன்றிக்கே நாம் இருந்தவிடத்தே வருவதே! ஸாபேக்ஷன் இருந்தவிடத்திலே பூர்ணன் வருவதே! ஸர்வர்க்கும் அபிகம்யனானவனுக்கு நான் அபிகம்யனாவதே! "மொஹம்யஸ்ய ந ஹா தெஜஸாபரீ". [என்னெஞ்சம்] - உக்திக்கு அஸஹகாரியான என்னெஞ்சம். [நிறையப் புகுந்தான்] - விஷயாந்தரங்களுக்கு அவகாஶமில்லாதபடி பாழ்த்திரப் புகுந்தான். [குருமாமணி இத்யாதி] - பெருவிலையனாய் ஶ்லாகநீயமான ரத்நங்களைக் கொண்டுவந்து தள்ளாநின்றுள்ள புனலையுடைய பொன்னித்தென்கரையிலே ஶ்லாக்யமான தேஶம் என்றபடி. ஶ்ரீயஃபதிசேரும்படி ஶ்லாக்யமான தென்திருப்பேர்; இத்தேசத்தை வாஸஸ்தாநமாகவுடையவன், அஹ்ருதயமான என்உக்திமாத்ரத்தைக்கொண்டு என்னெஞ்சிலே விரும்பிப் புகுந்தான். கீழ் "திருமால்" என்றவிடம் புருஷகாரபாவத்தைச் சொல்லிற்று; மேலில் "திருமால்" என்றவிடம், உத்தாரார்யத்தில் லக்ஷ்மீஸம்பந்தத்தைச் சொல்லுகிறது.

ஈடு:—முதற்பாட்டு. யாத்ருச்சிகமாகத் திருமலையைச் சொல்லுங்காட்டில் நிரபேக்ஷனான தான் பிராட்டியோடே கூடவந்து என்னுள்ளே புகுந்தருளினான் என்கிறார். [திருமாலிருஞ்சோலை இத்யாதி]-முன்பு அநாதிகாலம் ஈஸ்வரனுக்குத்தம்பக்கல் பேரிட்டுக் கொள்ளலாவதின்றிக்கே யிருக்க இப்போது அவனுக்குப் பேரிட்டுக்†கைக் கொள்ளுகைக்கு அடியானது இன்னதென்கிறார். ஓரோதேசங்களில் மலைகளைச் சொல்லாநின்றால் ஓரோ விசேஷணங்களையிட்டுச் சொல்லக்கடவதாயிருக்குமிறே; அப்படியே, திருமாலிருஞ்சோலைமலையென்றேன். [என்ன] - மநஸ்ஸஹகாரமுமில்லைகிடீர், உக்திமாத்ரமே என்பக்கலுள்ளது. "இவன் மோக்ஷஹேதுவாயிருந்தானாகில், உபாயபாவம் நம்பக்கலிலேயா யிருந்ததாகில், இவருடையபேறு நம்பேறாயிருந்ததாகில், சேதநனுடைய வாசிக்கு உக்திமாத்ரமுண்டாய்த்தாகில், இதுக்கவ்வருகு கொண்டு கார்யமென்?" என்றிருக்குமவனிறே. இதுதான் ஒருமலையிறே அவனுக்கு. உக்தியை இல்லையென்னவொண்ணாதே; இதுக்கடி யாராயுமவனல்லனே. ராவணன்தம்பிக்கு மித்ரபாவமே யமையுமென்னுமவன், இதுக்கவ்வருகொன்று வேணுமென்றிரானிறே. மலைகளினுடைய ஸாமாந்யம் கிடக்க, இவ்விசேஷத்தைச் சொல்லிற்று - இதிலுண்டான ஆதராதிசயமன்றே என்றிராநின்றானாய்த்து அவன். ஆக, இவர்க்கு ஒன்றில்லையென்னவுமாய், அவனுக்கு இதொன்றுண்டேன்னவுமாம்படி யிருக்கிறதிறே இதுதானே. [திருமால்] - அஹ்ருதயமாகச் சொன்னதுதன்னை ஸஹ்ருதயமாக்கிக்கொடுப்பாரும் அருகேயுண்டேன்கிறார். [வந்து] - "அவன் வருவதே!" என்று இவர் விஸ்மயப்படாநிற்க, 'பிபாஸைவர்த்தித்தவன் தண்ணீரிருந்தவிடத்தே வருமத்தனையன்றோ?' என்றாய்த்து அவன்வார்த்தை. க்ருபணராயிருப்பார் ஸ்லாக்யரிருந்தவிடத்தே வருமித்தனையன்றோ என்றிராநின்றான். எல்லார்க்கும் அபிகம்யனானவனுக்கு நான் அபிகம்யனானேன்! "ஸௌஹார்த்தஸுலபவான்" (ஸோப்யகச்

முதற்பாட்டு.—திருமாலிருஞ்சோலை இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - யாத்ருச்சிகமாக இத்யாதி. நிரபேக்ஷன் என்றது - "திருமால்" என்றதிலே வித்தம்.

"திருமாலிருஞ்சோலைமலையென்றேன்" என்றதுக்குபாவம் - முன்புஅநாதி இத்யாதி. பேரிட்டுக் கைக்கொள்ளுகைக்கு" என்பானென்? "திருமாலிருஞ்சோலை" என்று விசேஷிக்கையாலே பக்திபூர்வகமாயன்றோ இருக்கிறதென்ன-ஓரோதேசங்களில் இத்யாதி. இத்தால்- வாரியறிந்துசொன்னேனல்லேனென்றபடி. "என்ன" என்றதுக்குபாவம் - மநஸ்ஸஹகாரமும் இத்யாதி. அஹ்ருதயோக்திமாத்ரத்தாலே புகுரக்கூடுமோவென்ன - இவன் மோக்ஷஹேதுவன் இத்யாதி. குணக்ராஹகனுகையாலே இவன்பக்கலுள்ளத்தைப் போரப்பொலியக்கொள்ளுமென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - இதுதான் இத்யாதி. "ஆகையாலே இதுதானொருமலையிறே யவனுக்கு" என்றுகூட்டுவது. அஹ்ருதயமான வுக்தியும் அவனுக்கு பாரமென்று கருத்து. விவரணம்- உக்தியை இத்யாதி. ஆனாலும் அஹ்ருதயம் ஸஹ்ருதயமாக நிரூபித்துக் கொள்ள வேண்டாவோவென்ன - இதுக்கடி இத்யாதி. அடியாவது - மநஸ்ஸஹகாரம். இதுக்கு நியாமகமேதென்ன - ராவணன்தம்பிக்கு இத்யாதி. "இதுதானொருமலையிறே" இத்யாதிவாக்யவிவரணம் - மலைகளினுடைய இத்யாதி. "திருமாலிருஞ்சோலை" என்கிற விசேஷணத்திலே நோக்கு. இவ்வாக்யங்களாற்சொன்ன அர்த்தத்தைத் தொகுத்து அருளிச்செய்கிறார் - ஆக இத்யாதி. "திருமாலிருஞ்சோலைமலையென்றேன்" என்றவநந்தரம் "திருமால்" என்றதுக்குபாவம் - அஹ்ருதயமாக இத்யாதி. "வந்து" என்றதுக்குபாவம் - அவன்வருவதே இத்யாதி. விவரணம் - க்ருபணராய் இத்யாதி. இத்தால்பாவம் - எல்லார்க்கும் இத்யாதி. அப்படி அவன் அபிஸரித்தவிடமுண்டோவென்ன - ஸோப்யகச்சத் இத்யாதி. "ஸௌஹார்த்தஸுலபநஹாமௌகஜாஸ்யவஸீம்ஸ்பூத்ராவாஷ

† 'கொள்ளுகைக்கு' என்று பாடாந்தரம்.

சத் - ஸபரீம்) என்னுமாபோலே. [என்னேஞ்சம்] - அந்தவுக்திஸஹக்ருதமான என் நெஞ்சிலே. [நிறையப்புகுந்தான்] - விஷயாந்தரங்களுக்கு அவகாசமில்லாதபடி புகுந்தான்; அத்ரிஹமவானுஶ்ரமத்திலே, 'நான் ராமன்: இவள் மைதிலி: இவன் லக்ஷ்மணன்' என்று நமஸ்சரித்து நின்றாற்போலே; அக்காட்டில் பாழடையத் தீரும்படி புக்காற்போலே என்னெஞ்சில் பாழ்தீரப் புகுந்தான். [குருவித்யாதி] - தான்விரும்பிச் சென்று சேரும் தேசம் அதுவாயிருக்கக்கிடீர் என்னேஞ்சிலேவந்து புகுந்ததேன்கிறார். எல்லார்க்கும் ப்ராப்யனானவன்கிடீர் என்னை ப்ராப்யனாகக் கோள்ளுகிறான். பெருவிலையனாய் தர்ஶநீயமான ரத்நங்களைக்கோண்டுவந்து தள்ளாநின்றுள்ள புனலையுடைய போன்னித் தேன்கரையிலே. ஶ்லாக்யமான தேசமேன்றபடி. "து:காப்திர்ஜநக:" (துக்தாப்திர்ஜநக:)இத்யாதிவத். [புனல்] - ஶ்ரமஹரமான தேசத்தை யுடையவன்கிடீர் இங்கேவந்து புகுருகிறான். [திருமால்சேன்று சேர்விடம்] - பரமரஸிகனானவன், தானும் பிராட்டியுமாய் விரும்பிச் சென்று சேரும் தேசம்அதுவா யிருக்கச்செய்தே,அதுகிடக்க, திருமாலிருஞ்சோலைமலையேன்றேன்; இந்த அஹ்ருதயமான உக்திமாத்ரத்தைக்கோண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்தான். கீழில் "திருமால்" என்றவிடம், புருஷகாரஸாவத்தைச் சோல்லிற்று; மேலில் "திருமால்" என்றவிடம், உத்தரார்த்தத்தில் லக்ஷ்மீஸம்பந்யத்தைச்சோல்லுகிறது. (க)

---

# இரண்டாம் பாட்டு.

---

பேரேயுறைகின்றபிரான் இன்றுவந்து
பேரேனேன்றுஎன்னேஞ்சுநிறையப்புகுந்தான்
காரேழ்கடலேழ்மலையேழுலகுண்டும்
ஆராவயிற்றுனை அடங்கப்பிடித்தேனே.

---

உ-ந:। ஸர்வாந்ஸ்ரவாந்திஜிதஸஹஸ்ரகை" இத்யாதி. "நிறைய" என்றதுக்குஸாவம் - விஷயாந்தரங்களுக்கு இத்யாதி. "புகுந்தான்" என்றதுக்குஸாவம் - அத்ரிஹமவான் இத்யாதி. ஸவிநயமாகப் புகுந்தானென்றபடி. "விஷயாந்தரங்களுக்கு" இத்யாதிவாக்யவிவரணம் - அக்காட்டில் இத்யாதி. உத்தரார்த்தத்துக்குஸாவம் - தான்விரும்பி இத்யாதி. "திருமால்" என்றதுக்குஸாவம் - எல்லார்க்கும் இத்யாதி. ஸப்தார்த்தம் - பேருவிலையனாய் இத்யாதி. "குருமாமணியுந்துபுனல்" என்றத்தால்ஸலிதம் - ஶ்லாக்யமான இத்யாதி. "உந்துபுனல்" என்றதுக்கு ஸம்வாதம் - துக்தாப்தி: இத்யாதி. "து:காப்திர்ஜநக: ஜநநீ ஜநநீயம் ஶ்ரீரேவஸா ஶ்ரீரங்கேஶ ஸஹவிதஸஹ்யஜிஹஸிம் ஸந்த்யாதி தீவாகஸா। வஹத்யாசேரவகு வஹ நஸ்ஹாலோணிக்ரு க்ஷேத்ராநுகாவெளிஜ ஸர்வகரெவி ஜயதீவேஶத்வலஸதாம்" இதி ஶ்ரீரங்கராஜஸ்தவே, இதில்உத்தரார்த்தம் இங்கு விவக்ஷிதம் - "புனல்பொன்னி" என்று விசேஷித்ததுக்குஸாவம் - ஶ்ரமஹரமான இத்யாதி. அந்வயித்தர்த்தம் - பரமரஸிகனானவன் இத்யாதி. இருகால் "திருமால்" என்றதுக்குஸாவம் - கீழில்திருமால் இத்யாதி. 'திருமால்சென்றுசேர்விடம் - குருமாமணியுந்துபுனல் பொன்னித்தென்பால் - தென்திருப்பேராயிருக்கச்செய்தேயும் - திருமாலிருஞ்சோலைமலையென்றேன்: என்னத் திருமால்வந்து என்னெஞ்சு நிறையப்புகுந்தான்' இத்யந்வய:. (க)

ஆ.—(பேரேயுறைகின்றபிரான்.) - அகாரணமாக இன்றுவந்து இனிப் பேரேனென்று நெஞ்சுநிறையப்புகுந்தான்; இதற்குமுன்பு இப்படி என்னெஞ்சில் புகுந்தருளப்பெறாமையாலே ஸர்வஜ்ஞஸர்வேஶ்வரனாயிருந்து வைத்தும் ஸாபேக்ஷனாயிருந்தவன், இன்று என்னுள்ளே புகுரப்பெற்று நிரபேக்ஷனானானென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், இதுக்குமுன்பு தான் ஸர்வேஶ்வரனாயிருந்து வைத்தே என்னோடே கலக்கப் பெறாமையாலே குறைவாளனாயிருந்தவன் நிர்ஹேதுகமாக என்னுடைய ஹ்ருதயத்திலேவந்து புகுந்து பூர்ணனானான் என்கிறார்.

[பேரே என்றுதொடங்கி] - திருப்பேரைத் தனக்குக் கோயிலாகப்பெற்று அங்கே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஸர்வேஶ்வரன், இனி ஒருநாளும்போகேன் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய ஹ்ருதயம் பூர்ணமாம்படி இன்று வந்து புகுந்தான். [காரேழ்கடலேழ் என்றுதொடங்கி] - புஷ்கலாவர்த்தமேகம் ஏழையும் ஸப்தஸமுத்ரங்களையும் ஸப்தகுல பர்வதங்களையும் திருவயிற்றிலேவைத்து, பின்னையும் குறைவாளனாயிருந்தவனுக்கு இனி ஒன்றும் தேடவேண்டாதபடி பரிபூர்ண பாத்ரமானேன்.

ப.—அநந்தரம், முன்பு குறைவாளரைப்போலே இன்று 'ஒருகாலும்போகே'னென்று என்னெஞ்சிலே பூர்ணனாய்ப்புகுந்தானென்கிறார்.

பேரே - திருப்பேரிலே, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுகிற, பிரான் - ஸர்வேஶ்வரன், இன்றுவந்து - (முன்பு குறைவாளனாயிருந்தாற்போலே) இன்று (நிர்ஹேதுகமாகத்தானே ஸாபேக்ஷனாய்) வந்து, பேரேனென்று - (இனிப்போவென்றால் ஒருகாலும்) போகேனென்று, என்னெஞ்சு - என்னெஞ்சிலே, நிறைய - பரிபூர்ணமாம்படி, புகுந்தான் - ; (ஆகையாலே), காரேழ் - (புஷ்கலாவர்த்தகாதிகளான) மேகங்கள் ஏழையும், கடலேழ் - ஸமுத்ரங்கள்ஏழையும், மலையேழ் - குலபர்வதங்கள் ஏழையுமுடைத்தான, உலகுஉண்டும் - லோகத்தையெல்லாம் அமுதுசெய்தும், (ரக்ஷணத்தில் பாரிப்பாலே), ஆராவயிற்றானை - நிறையாதவயிற்றையுடையானை, அடங்க - என்னுள்ளே புகுந்து ஸர்வப்ரகார பரிபூர்ணனாம்படியாகக்கொண்டு, பிடித்தேன் - அநுபவிக்கப்பெற்றேன்.

இ.—இரண்டாம்பாட்டில், தான் ஸர்வேஶ்வரனாய் வைத்து என்னோடு கலக்கப்பெறாமையாலே குறைவாளனானவன், இன்று நிர்ஹேதுகமாக என் ஹ்ருதயத்திலே புகுந்து பூர்ணனானான் என்கிறார்.

[பேரேயுறைகின்ற பிரான்] - திருப்பேரைத் தனக்குக் கோயிலாகப்பெற்று அங்கே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஸர்வேஶ்வரன். [பேரேனென்று என்னெஞ்சு நிறைய - இன்றுவந்து - புகுந்தான்] - தன்னை ஒருவர் கேட்டாரின்றிக்கே யிருக்கத்தானே "இனி ஒருநாளும் போகேன்" என்றுசொல்லி, பிராட்டி தன் பக்கல் சொல்லுமத்தைத் தான் என்பக்கலிலே சொல்லாநின்றான். [என்னெஞ்சம்] - இவனுடைய அபிநிவேஶத்தைப் பொறுக்கமாட்டாத நெஞ்சானது பூர்ணமாம்படி, முன்பு நினைவின்றியேயிருக்க இன்றுவந்து புகுந்தான். முன்பு நினைவுண்டாவது தன்பக்கல் முதலுண்டாகிலிறே. [காரேழ் இத்யாதி] - புஷ்கலாவர்த்தமேகம் ஏழும், ஸப்தஸமுத்ரங்களும், ஸப்தகுலபர்வதங்களுமான லோகத்தைத் திருவயிற்றிலேவைத்து, பின்னையும் ஒன்றும் செய்யாதானாயிருக்குமவனை. [அடங்கப் பிடித்தேனே] - இப்படி அபிநிவிஷ்டனாயிருக்கிறவனைப்

பூர்ணனுக்கினேன். அதாகிறது - ப்ரளயாபத்தை நோக்கி ரக்ஷித்தாலும், ஸ்ருஷ்டிமுதலாக மோக்ஷபர்யந்தமாக யத்நம் பண்ணவேண்டுகையாலே குறைவாளனாயிருக்கும்; ஒருதேஶ விஶேஷத்திலே கொண்டுபோய்க் கார்யங்கொள்ளலாம்படி யிருக்கையாலே இப்போதிறே குறைவற்றது. இனி அவனுக்கு ஓர் அபேக்ஷையில்லாதபடி பரிபூர்ண பாத்ரமானேன் என்கிறார்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தான் ஸர்வேஶ்வரனாய்வைத்து என்னோடு கலக்கப்பெறாமையாலே குறைவாளனானவன், இன்றுவந்து நிர்ஹேதுகமாக என் ஹ்ருதயத்திலேபுகுந்து பூர்ணனானானென்கிறார்.

[பேரேயுறைகின்றபிரான்] - திருப்பேரிலேவந்து நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேஶ்வரன். [இன்றுவந்து] - இது உண்டாமென்று நென்னேற்றுஅறிவது, தாம் ஒரு ஸாதநாநுஷ்டாநம்பண்ணிவைத்தாராகிலிறே. [பேரேனென்று]- "பேரேன், பேரேன்" என்னாநின்றானாய்த்து, "நீபோவுதியோ, இருப்புதியோ?" என்று கேட்பாருமின்றிக்கேயிருக்கச்செய்தே, இங்குப் பிராட்டி தன்விஷயத்திற் சொல்லும் வார்த்தையைத் தான் என்விஷயத்திலே சொல்லாநின்றான். "நான்போகேன், போகேன்" என்று சூழ்த்துக்கொடாநின்றானாய்த்து, தன்னையதிசங்கைபண்ணுவாருமின்றிக்கேயிருக்க; "த்ரிபிஸ்தைர் ப்ராத்ருபிஸ்ஸஹ" (த்ரிபிஸ்தைர்ப்ராத்ருபிஶ்ஶபே). [என்னெஞ்சு]- "இவன் பேரிலேன், இருக்கிலேன்?" என்றிருக்கிற என்நெஞ்சு. [நிறையப்புகுந்தான்] - பூர்ணமாம்படி புகுந்தான். [கார்இத்யாதி]-புஷ்கலாவர்த்தகாதி மேகங்களேழும், கடலேழும், மலைகளேழுமான ஜகத்தையெல்லாம் திருவயிற்றிலேவைத்து, பின்னையும், தன்னைவிஶ்வஸித்து உடன்கிடந்தவனை மடிதடவினவனைப்போலே "நாமேன்செய்தோமானோம்" என்றிருக்குமவனை, ஸ்ருஷ்டிதொடக்கமாக மோக்ஷபர்யந்தமாக ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ஸர்வவித ரக்ஷணத்தையும்பண்ணி, பின்னையும் "ஒன்றும் செய்யப்பெற்றிலோம்" என்றிருக்குமவனை. [அடங்கப்பிடித்தேனே] - "நாமெல்லாம்செய்தோம்" என்று அவன் தேகுட்டும்படி பண்

---

இரண்டாம்பாட்டு.—பேரேயுறைகின்ற இத்யாதி. "பேரேன்" என்றத்தைப்பற்ற - குறைவாளனானவன் என்றது. "இன்று" என்றத்தைப்பற்ற - நிர்ஹேதுகமாக என்றது. "அடங்கப்பிடித்தேன்" என்றத்தைப்பற்ற - பூர்ணனானான் என்றது.

"இன்று" என்றதுக்கு பாவம் - இதுண்டாமென்று இத்யாதி. நென்னேற்று - முதல்நாள். ஆரைக்குறித்து "பேரேன்" என்கிறானென்ன - நீபோவுதியோ இத்யாதி. இத்தால் பாவம் - இங்குப்பிராட்டி இத்யாதி. இங்கு - இவ்வர்த்தவிஷயமாக. சொல்லும் வார்த்தையை - "அகலகில்லேனிறையும்" என்றுசொல்லும் வார்த்தையையென்றபடி. விவரணம் - நான் போகேன் இத்யாதி. சூழ்த்துக்கொடுக்கை - ஆணையிட்டுக்கொடுக்கை. ஆணையிட்டுக்கொடுத்ததுக்கு ப்ரமாணம் - த்ரிபி: இத்யாதி. இந்தசப்தம் ஸ்ரீவிபீஷணாழ்வானோடே. "ஸஹஸாராவணம்ஸங்க்யே ஸபுத்ரஜநபாந்தவம்। ஸமோயஸ்யாம்யத்யவக்ஷ்யாமித்ரிபிஸ்தைர் ப்ராத்ருபிஸ்ஸஹ" இதி யுத்தகாண்டே ஏகோநவிம்ஶே விபீஷணம்ப்ரதி ராம:. "என்னெஞ்சு" என்றதுக்கு பாவம் - இவன் இத்யாதி. தன்பக்கல் ஆதரமற்றிருக்கிற நெஞ்சென்றபடி. ஆராமையின்பாவம் - பின்னையும் இத்யாதி. மடிதடவுகை - மடியில் தநத்தை அபஹரிக்கை. இத்தால் பலிதம் - ஸ்ருஷ்டிதொடக்கமாக இத்யாதி. அதாவது - "உலகுண்டும்" என்று - மோக்ஷபர்யந்த ரக்ஷணோபலக்ஷணமாய், "ஆராவயிற்றானை" என்று - "உன்னடியார்க்கென்செய்வேனென்றே யிருத்தி" என்கிறபடியே அவன்குணமாய், "அடங்கப்பிடித்தேன்" என்று - அவன்பூர்ணவிஷ

ணிக்கொண்டேன். ப்ரளயத்திலகப்பட்ட ஜகத்தையெடுக்கையாவது - பின்னையும் ஸம்ஸாரத்தைப் பூண்கட்டுகையிறே; பரமபதத்தளவும்செல்ல நடத்தப்பெறுமையாலே குறைபட்டிறேகிடப்பது; அவன்என்னை அவ்வளவும் கொண்டுபோம்படி நான் சமைகையாலே அவனுடைய அபிநிவேசம் தீர்ந்ததாய்த்து. அவனுடைய பரிபூர்ணவிஷயீகாரத்துக்குப் பாத்ரபூதனானே னென்றபடி. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

பிடித்தேன்பிறவிகெடுத்தேன் பிணிசாரேன்
மடித்தேன்மனைவாழ்க்கையுள்நிற்பதோர்மாயையை
கொடிக்கோபுரமாடங்கள்சூழ் திருப்பேரான்
அடிச்சேர்வதுஎனக்குஎளிதாயினவாறே.

ஆ—(பிடித்தேன்.) - எம்பெருமானை இனியொருநாளும் விஸ்லேஷியாதபடி பற்றினேன்; ஸுரநரதிர்யகாதி நாநாவித தேஹப்ரவேச ரூபஜந்மத்தையும் ஜந்மநிபந்தந து:கத்தையும் போக்கினேன்; தத்துக்கஹேதுவாய் அநாதிகாலந்தொடங்கி இன்றளவும் செல்லுகிற இந்தப்ரக்ருதி ஸம்பந்தத்தையும் நிவர்த்திப்பித்தேன். இப்படி திருப்பேரானடி சேர்வது எனக்கெளிதாவதே! என்று களிக்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தம்மோடேவந்து ஸம்ஶ்லேஷித்தபடியை அநுஸந்தித்து, இவன் திருவடிகள் எனக்கு இங்ஙனே எளிதாவதே என்கிறார்.

[பிடித்தேன் என்று தொடங்கி] - எம்பெருமான் திருவடிகளை ஒருநாளும் பிரியாதபடி பற்றினேன்; ஜந்மங்களைப் போக்கினேன்; ஜந்மநிமித்தங்களான து:கங்களைச் சாரேன்; ஸம்ஸாரத்திலே நிற்கைக்கு உறுப்பான ப்ரக்ருதியை நிவர்த்திப்பித்தேன்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதஸுலபனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் கிட்டுகை எனக்கெளிதானபடி, அதடியாக ஸமஸ்ததுரிதமும் நிவ்ருத்தமாம்படியாய்த்து என்கிறார்.

கொடி - கொடிகளையுடைய, கோபுரம் - கோபுரங்களாலும், மாடங்கள் - மாடங்களாலும், சூழ் - சூழப்பட்ட, திருப்பேரான் - திருப்பேரைவாஸஸ்தாநமாகவுடைய ஸுலபனவனுடைய, அடி - திருவடிகளை, சேர்வது - சேருகை, எனக்கெளிதாயினவாறு - எனக்கெளிதானப்ரகாரமிருந்தபடி, பிடித்தேன் - (நிர்ஹேது

---

யீகார பாத்ரபூதனானேனென்றபடி. 'அடங்கப்பிடித்தேனே' என்றவநந்தரம் - அவனுடைய பரிபூர்ண இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். "ஆராவயிற்றானை" என்றதுக்கு - மோக்ஷத்திலே கொடுபோகப்பெறுமையாலே குறைவுபட்டிருக்கிறவனை என்றர்த்தாந்தரம் - ப்ரளயாபத்தில் இத்யாதி. இப்பக்ஷத்தில், "அடங்கப்பிடித்தேன்" என்றதுக்கர்த்தம் - நாமெல்லாம் இத்யாதிவாக்யம், அதாவது - த்ருப்தனும்படி பண்ணிக்கொண்டேனென்றபடி. "அடங்கப்பிடித்தேன்" என்றத்தால் பலிதம் - அவனுடைய இத்யாதி என்னுதல். (உ)

கமாக அவன் திருவடிகளை ப்ரதமத்திலே) பிடிக்கப்பெற்றேன்; (அதடியாக), பிறவி - ஜந்மஸம்பந்தத்தை, கெடுத்தேன் - அறுத்தேன்; பிணி - (அத்தால்வரும்) துக்கங்களை, சாரேன் - சேரேன்; மனைவாழ்க்கையுள் - ஸம்ஸாரத்தில், நிற்பது - நிற்கையாகிற, ஓர்மாயையை - அஜ்ஞாநத்தை, மடித்தேன் - நிவ்ருத்தமாக்கினேன்.

இ.—மூன்றாம்பாட்டில், அவன் தம்மோடே நிர்ஹேதுகமாகவந்து ஸம்ஶ்லேஷித்தபடியை அநுஸந்தித்து, இவன் திருவடிகள் எனக்கு இங்ஙனே எளிதாவதே என்கிறார்.

[பிடித்தேன்] - "தலைமேல தாளிணைகள்" என்கிறபடியே அவன் திருவடிகளைக்கொண்டு வந்து என்தலையிலே வைக்க, அத்தை ஒருநாளும் பிரியாதபடி பற்றினேன்; ஜந்மத்தைப் போக்கினேன். ஜந்மஸம்பந்தத்தால்வந்த து:கங்களை அடையேன்; ஸம்ஸாரத்திலே நிற்கைக்கடியான மூலப்ரக்ருதியை நிவர்த்திப்பித்தேன். [மடித்தேன்] - மடிக்கை - திரியவிடுகை. [கொடிய இத்யாதி] - கொடிகளையுடைத்தான கோபுரங்களாலும் மாடங்களாலும் சூழப்பட்ட திருப்பேரிலே நித்யவாஸம் பண்ணுகிறவனுடைய திருவடிகளைக் கிட்டுகை எனக்கு அநாயாஸமாவதே! ஶாஸ்த்ரங்களில் சொல்லுகிற அருந்தேவைகளெல்லாம் கிடக்க, கிட்டலாவதொரு விரகு பெறுவதே! ஸ்வயம்ப்ரபா பிலத்தில் புக்க முதலிகளைக் கண்ணைச் செம்பளிக்கச் சொல்லி அவள் கரையிலே ஏறவிட்டாற் போலேயும், ஸ்ரீமதுரையிலே உறங்கினவர்கள் ஸ்ரீமத் த்வாரகையிலே விழித்தாற்போலேயும், சிலரை ஆபந்நிவ்ருத்தி பூர்வகமாக ஸுகிகளாக்கும் போது அவர்கள்கண் செம்பளிக்கவேண்டுமோபோலே காணும்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவன் தம்மோடே நிர்ஹேதுகமாகவந்து ஸம்ஶ்லேஷித்தபடியை யநுஸந்தித்து, இவன் திருவடிகள் எனக்கு இங்ஙனே எளிதாவதே என்கிறார்.

[பிடித்தேன்] - "தலைமேலதாளிணைகள்" என்று அவன் திருவடிகளைத் தலைமேலேகொண்டுவந்து வைக்கையாலே அவற்றை யுரக்கப்பிடித்துக்கொண்டேன். [பிறவி கெடுத்தேன்] - ஜந்மத்தை மறுவலிடாதபடி போக்கினேன். [கெடுத்தேன்] - (கானே வோருங்கிற்றுங்கண்டிலம்) எங்கேபோய்த்துக்கண்டிலேன். [பிணிசாரேன்] - ஜந்மம் புக்கவிடத்தே புகக்கடவ பிணியைக்கிட்டேன். [மடித்தேனித்யாதி] - ஸம்ஸாரத்திலே

---

மூன்றாம்பாட்டு—பிடித்தேன் இத்யாதி. "அடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அவன்தம்மோடே இத்யாதி.

நீர் அவன்திருவடிகளைப் பிடிக்கவல்லீரானபடியென்? என்ன - தலைமேல இத்யாதி. உரக்க - த்ருடமாக. மறுவலிடாதபடி போக்கினதுக்கு ப்ரமாணம் - கானே இத்யாதி; ஜந்மம் போனவழியும் காண்கிறிலேனென்று தாத்பர்யம். எடுத்தபாசுரத்துக்கர்த்தம் - எங்கேபோய்த்து இத்யாதி. சாரேன் - கிட்டேன். "பிறவிகெடுத்தேன்" என்றது - ஸ்தூலஶரீர விமோசநமாய், "பிணிசாரேன்" என்று தாத்காலிக புண்யபாபரூபகர்மங்களை. "[illegible]" இத்யாதிப்படியே அநுகூலர்பக்கலிலும் ப்ரதிகூலர் பக்கலிலும் பொகட்டபடியைச்சொல்லி, "மடித்தேன் மனைவாழ்க்கையுள்நிற்பதோர்மாயையை" என்கிறவிது ஸூக்ஷ்மஶரீர விமோசநத்தைச் சொல்லுகிறதென்றபடி. திரியவிடுவித்தேன் என்றது - அவன்தலை துலுக்குகையாலே மடித்தேனென்றபடி. மனைவாழ்க்கையுள் - ஸம்ஸாரத்தில். நிற்பதோர்மாயையை - நிற்கைக்கடியான அசித்தியமான மூலப்ரக்ருதியை. மடித்தேன் - 'திரிய

நிற்கைக்கடியான மாயையுண்டு - மூலப்ரக்ருதி, அத்தைத்திரியவிடுவித்தேன் ; தொடருகிற பாம்பைத் திரியவிடுவிப்பாரைப்போலே. எம்பெருமானர், உலாவியருளுகிறவர் முடியப்போகாதே நடுவேமீண்டருள, எம்பார்கதவையொருச்சரித்து, "திருமாலிருஞ்சோலையாகாதே திருவுள்ளத்திலோடுகிறது" என்ன ; "ஆம், அப்படியே" என்றருளிச்செய்தார். [கோடி இத்யாதி] - சோடிகளையுடைத்தான கோபுரங்களையும்மாடங்களையுமுடைத்தான திருப்பேரிலே நிற்கிறவன்அடி சேருகையாகிறது எனக்கெளிதாயினவாறே! "அறுகம்புல்லையிட்டுக் கண்ணைப்புதைத்துக்கொள், சாணகச்சாற்றைக்குடி, தலையைக்கீழேநடு, காலைமேலேயெடு" என்று அருந்தேவைகளை ஶாஸ்த்ரம்சொல்லாநிற்க, எனக்கு இங்ஙனேயிருப்பதொரு மூலையடிவழி யுண்டாவதே! [எனக்கெளிதாயினவாறே!] - விஷயங்களின் காற்கடையிலே துவண்டுபோந்தவர் அவன்திருவடிகளிலே கிட்டிக்கொடு நிற்கக்கண்டவித்தனை. (௩)

## நான்காம் பாட்டு.

எளிதாயினவாறென்றுஎன்கண்கள்களிப்பக்
களிதாகியசிந்தையனய்க் களிக்கின்றேன்
கிளிதாவியசோலைகள்சூழ் திருப்பேரான்
தெளிதாகிய சேண்விசும்புதருவானே.

*ஈ.—(எளிதாயினவாறு) - திருப்பேர்நகரானைப் பெற்று என்னுடைய ஸர்வகரணங்களோடுங்கூட நான் களிக்கின்றேன்; இப்படி திருப்பேரிலே தான் எழுந்தருளியிருக்கிறவிருப்பை எனக்குக் காட்டித் தந்தருளின இவன் இனித் திருநாட்டையும் தந்தருளு மென்கிறார்.*

*ஒ.—நாலாம் பாட்டில், தமக்குத் திருநாட்டைக் கொடுப்பானயிருக்கிற எம்பெருமானுடையபடியை அநுஸந்தித்து, " இங்ஙனே எளிதாவதே! " என்று என்னுடைய இந்த்ரியங்களோடேகூடக் களித்த மநஸ்ஸையுடையேனய்க் களியாநின்றேன் என்கிறார்.*

*[கிளிதாவியசோலை என்று மேலுக்கு] - செறிந்ததிருச்சோலையையுடைய திருப்பேரான், ரஜஸ்தமஸ்ஸுகளாலுஷ்யமின்றிக்கே சுத்தஸத்த்வமயமாகையாலே தெளிந்திருந்துள்ள ஸ்ரீவைகுண்டத்தைத்தரும்.*

---

விடுவித்தேன்' - நிவ்ருத்தமாக்கினேனென்றபடி. 'தொடருகிறபாம்பை' என்றவிடத்திலே, " அர்ஜுநன் அஶ்வமேதகத்தை யெடுத்துக்கொண்டுபோய்ப் பின்னையும் தொடர்ந்துவருகிற நாகாஸ்த்ரத்தை க்ருஷ்ணன் நியமநத்தாலே திரியவிட்டாற்போலே" என்றதநுஸந்தேயம். ப்ராஸங்கிகம் - எம்பெருமானர் இத்யாதி. "ஸஞ்சாரபூதவாஞ்மயஸ" என்கிறபடியே-அமுதுசெய்தவநந்தரம் நூறடி யுலாவவேண்டுகையாலே, அதுக்கு உறுப்பாக வுலாவியருளுகிறவரென்றபடி. "மடித்தேன்" என்று - நிவ்ருத்தி ப்ரஸக்தமாகையாலே, மீண்டருளினரென்று கருத்து. ஒருச்சரித்து - ஒருபக்கமாகச் சாய்த்து. " எளிதாயினவாறே" என்றதுக்கு பாவம் - அறுகம்புல்லை இத்யாதி. " எனக்கு" என்றதுக்குபாவம் - விஷயங்களின் இத்யாதி. அருந்தேவைகள் - தாறுஷ்ட்டேயங்களான ஸாதநங்கள். மூலையடிவழி- ஒருத்தரும் அறியாத ஸுகரோபாயம். துவண்டு- உலர்ந்து.

ப.—அநந்தரம், எனக்குப் பரமபதத்தைத் தருவானாயிராநின்றான்: அத்தாலே என்கண்ணும் நெஞ்சும் களிக்கும்படி ஆநந்தியாகாநின்றேனென்கிறார்.

(எனக்கு ப்ராப்யலாபமெளிதானபடி, காலாந்தரத்தில் ஒருதேசவிசேஷத்திலே போகாதே இக்காலத்திலே), என்கண்கள் - என்விடாய்த்தகண்களானவை, எளிதாயினவாறென்று - துர்லபமான ப்ராப்யம் ஸுலபமாவதே! என்று, களிப்ப - களிக்கும்படியாக, களிது ஆகிய - ஹர்ஷாவிஷ்டமான, சிந்தையனாய் - நெஞ்சையுடையேனாய்க்கொண்டு, களிக்கின்றேன் - ஆநந்தியாகாநின்றேன்; (அதுக்கடி), கிளி தாவிய - கிளிகள் தாவும்படி செறிந்த, சோலைகள்சூழ் - சோலைகள் சூழ்ந்த, திருப்பேரான் - திருப்பேரிலே ஸுலபனாய்க்கொண்டு ஸந்நிஹிதனானவன், தெளிது ஆகிய - பரமஸத்த்வமய மாகையாலே ப்ரகாஶாத்மகமாய், சேண்விசும்பு-(ப்ரஹ்மபதாதிகளிலும்) அவ்வருகான பரமவ்யோமத்தை, தருவான் - தருவானானன்.

இ.—நாலாம் பாட்டில், பரமபதத்தைத் தருவானாயிருக்கிறவனுடைய நீர்மையை அநுஸந்தித்து, என் கரணங்களும் களிக்க நானும் களியாநின்றேன் என்கிறார்.

[எளிதாயினவாறென்று] - "ஸுதுர்லபமான விஷயம் இங்ஙனே எளிதாவதே!" என்று. [என்கண்கள்களிப்ப] - "காணக்கருதும் என் கண்ணே" என்று விடாய்த்த கண்கள் கண்டுகளிக்கும்படி. [களிதாகிய சிந்தையனாய்] - களித்த மநஸ்ஸையுடையனாய். "நெடியானே என்று கிடக்கும் என்னெஞ்சம்" என்ற நெஞ்சும் களிக்கப்பெற்றது. [களிக்கின்றேன்] - "கூவியும் காணப்பெறேன்" என்ற நான் கண்டு களியாநின்றேன். முடியானேயில், தாமும் தம்முடைய கரணங்களும் விடாய்த்தபடி சொல்லிற்று; இங்கு, தாமும் தம்முடைய கரணங்களும் களித்தபடி சொல்லுகிறது. [கிளிதாவிய இத்யாதி] - செறிந்த சோலையையுடைய திருப்பேரை நிரூபகமாகவுடையவன். அக்காலத்திலேயுண்டாய்ப் பின்பு இல்லையாகக்கூடும், அத்தாலே சொல்லுதல்; பகவத்பரிக்ரஹமான இடத்துக்கு எல்லாநன்மையுமுண்டு என்னுமதினாலே சொல்லுதல். [தெளிதாகிய சேண்விசும்புதருவானே] - ஶுத்தஸத்த்வமயமாகையாலே தெளிந்திருந்துள்ள பரமபதத்தைத் தந்தேவிடும். [சேண்விசும்பு] - ப்ரஹ்மலோகத்துக்கு அவ்வருகே உயர்ந்திருந்துள்ள ஆகாஶம்.

ஈடு.—நாலாம்பாட்டு. தமக்குப் பரமபதத்தைத் தருவானாயிருக்கிறவனுடைய நீர்மையை யநுஸந்தித்து, என்கரணங்களும் களிக்க நானும் களியாநின்றேனென்கிறார்.

[எளிதாயினவாறு]- (அரியதெளிதாகும் இத்யாதி) - அரிதான ஸுலபவல்லாபமுமெளிதாகும். எங்கே கண்டோமென்றால், -[கரியதுஇத்யாதி]- அவன்தானே அரைகுலையத்

---

நாலாம்பாட்டு.—எளிதாயின இத்யாதி. "தெளிதாகிய சேண்விசும்பு தருவான் - என் கண்கள்களிப்பக்களிதாகிய சிந்தையனாய்க் களிக்கின்றேன்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை- தமக்கு இத்யாதி.

"எளிதாயினவாறு" என்று பகவத்விஷயம் எளிதாயிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் - அரியதெளிதாகும் இத்யாதி. இரண்டாந்திருவந்தாதி, இருபத்திரண்டாம்பாட்டு. எடுத்த பாசுரத்துக்கர்த்தம் - அரிதான இத்யாதி. இப்பாட்டில் உத்தரார்த்தத்துக்கவதாரிகை - எங்கே கண்டோமென்றல் என்று. அதுக்கர்த்தம் - அவன்தானே இத்யாதி. அரியதெளிதாகும் - அரிய

தலைகுலைய மடுவின்கரையிலேவந்து விழவன்றே ஆனைபெற்றது. [எளிதாயினவாறென்று இத்யாதி] - ஸுதுர்லபமான விஷயம் இங்ஙனே எளிதாவதே! என்று "காணக் கருது மென்கண்ணே" என்று விடாய்த்த கண் களிக்கும்படி-[களிதாகியசிந்தையனாய்]-களித்த மநஸ்ஸையுடையனாய். * நெடியானேயென்று கிடக்கு மென்னெஞ்சு களிக்கப் பெற்றது. [களிக்கின்றேன்] - "கூவியும்காணப்பெறேன்" என்ற நானும் களியாநின்றேன். கரணங்களும் தாமு மொக்க விடாய்த்தவர், கரணங்களும் தாமு மொக்கக் களிக்கப்பெற்றார். [கிளிதாவிய இத்யாதி] - நித்யவஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருப்பேரான். [தெளிதுஇத்யாதி]-*இருள்தருமாஞாலம் போலன்றிக்கே நாட்செல்ல நாட்செல்லத் தெளிவைப்பண்ணக்கடவதாய், புநராவ்ருத்தியின்றிக்கே யிருக்கிற சேண்விசும்புண்டு - ப்ரஹ்மாதிகள்குடியிருப்புக்கும் அவ்வருகான பரமபதம்: அத்தை எனக்குத் தருகையிலே துணிந்திருந்தான். (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

வானேதருவான்எனக்காஎன்னோடொட்டி
ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்துஇன்று
தானேதடுமாற்றவினைகள் தவிர்த்தான்
தேனேய்பொழில் தென்திருப்பேர்நகரானே.

*ஆ.*—(வானேதருவான்.) - நமக்கு அவன்திருநாட்டைத் தந்தருளுகைக்கு நம்பக்கலிலே ப்ரதிபந்தகங்க ளில்லையோ? என்னில்;—திருப்பேர்நகரான், எனக்கு வானேதருவானாய், நானொட்டேனென்னிலும் என்னைவென்று ப்ரஸஹ்யவாகிலும் புகுரக்கடவனாய் ஒட்டிக்கொண்டு, அத்யந்த ஹேயமான என்னுடைய இந்த ப்ரக்ருதியிலே புகுந்து, தானே அந்த ப்ரதிபந்தகங்களையும் போக்கியருளினா னென்கிறார்.

*ஓ.*—அஞ்சாம்பாட்டில், திருப்பேர்நகரான் எனக்குத் திருநாடுதரக்கடவனாக என்னோடே பூணித்து, தானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான் என்கிறார்.

[ஊனேய்குரம்பையிதனுள் புகுந்து] - மாம்ஸாதிமயமாய் ஹேயமான இச்சரீரத்தினுள்ளே நிர்ஹேதுகமாக வந்து புகுந்து. [தடுமாற்றவினைகள்]-தன்னைப்பிறிந்து தடுமாறப்பண்ணும் புண்யபாபரூபமான கர்மங்களை. தேனென்று - வண்டாகவுமாம்.

---

தான ஸுவல்லாஸமும் எளிதாகாநிற்கும்; ஆற்றலால்-வஸ்துவை வஸ்த்வந்தரமாக்கவல்ல சக்தியோகத்தாலே, மாற்றி - ஸ்வரக்ஷணார்த்தமாக இவன்பண்ணும் ப்ரவ்ருத்திகளையடைய மாற்றி. பெருகமுயல்வாரைப்பெற்றல் - தன்பேறாக இவனுடைய ஸர்வவித ரக்ஷணங்களையும் பண்ணுகையிலே மிகவும் உத்ஸாஹியாகிற்கும் மஹாபுருஷனைப்பெற்றால். கரியதோர் வெண்கோட்டுமால் யானை - கறுத்தநிறத்தையும் வெளுத்த கொம்பையும் பெரியவடிவையுமுடைய அத்விதீயமான ஆனையானது, வென்றுமுடித்தன்றே - விரோதியான முதலையை ஜயித்தழியச்செய்தன்றே, தண்கோட்டுமாமலரால் தாழ்ந்து - குளிர்ந்த பொய்கைக் கரையிலே ச்லாக்யமான புஷ்பங்களைக் கொண்டு அவன்திருவடிகளி லடிமைசெய்யப்பெற்றது. தாழ்ந்ததென்றபடி. கோடு - கரை. தண் - குளிர்த்தி. களிதாகிய - களித்த. விவரணம் - நெடியானே இத்யாதி. வ்யாக்யாதாவினீடு பாடு - கரணங்களும் இத்யாதி. தாவிய - தத்தித்திரிகிற. 'கிளிதாவிய' என்று தொடங்கி, 'விசும்புதருவானாயிருந்தான்': ஆனபின்பு, 'எளிதாயின' என்றுதொடங்கி, 'களிக்கின்றேன்' இத்யந்வயம்.

(ச)

ப.—அநந்தரம், இப்படி புருஷார்த்தத்தைத் தருவானாகக்கோலி ஸமஸ்த விரோதிகளையும் போக்கினானென்கிறார்.

தேனேய் - வண்டுசெறிந்த, பொழில் - பொழிலையுடைத்தாய், தென் - ஊர்ஜீயமான, திருப்பேர்நகரான் - திருப்பேராகிற நகரத்திலேவர்த்திக்கிறவன், எனக்கு - , வானேதருவானாய் - பரமபதத்தையே தருவானாகக்கொண்டு ஸங்கல்பித்து, என்னோடு - என்னோடே, ஒட்டி - ப்ரதிஜ்ஞைபண்ணி, ஊனேய் - மாம்ஸம்செறிந்த, குரம்பையிதனுள் - கூடாயிருக்கிற இச்சரீரத்துக்குள்ளே, (அபேக்ஷாநிரபேக்ஷமாக), இன்று - , தானே - , புகுந்து - வந்துபுகுந்து, தடுமாற்றம் - (தன்னைப்பிரிந்து) தடுமாறுகைக்கடியான, வினைகள் - புண்யபாபங்களை, தவிர்த்தான் - போக்கினான். தேன் - மதுவுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், திருப்பேர்நகரான் பரமபதத்தை எனக்குத் தருவானாக என்னோடே பூணித்து, தானே விரோதிகளைத் தவிர்த்தான் என்கிறார்.

[வானே தருவான் எனக்காய்] - எனக்கு வானே தருவானாய்; ஸம்ஸாரியான எனக்கு நித்யஸூரிகளிருப்பைத் தருவானாக. [என்னோடு ஒட்டி] - என்னோடே பூணித்து. நான் அர்த்தியாதிருக்கச் செய்தேயும் "அராவணமராமம்வா" என்கிற படியே என்னோடே ஸமயத்தைப் பண்ணி, மாம்ஸாதிமயமாய் ஹேயமான இச்சரீரத்தினுள்ளே தானேபுகுந்து; நிர்ஹேதுகமாக வந்து புகுந்து. [இன்று] - நென்னேற்றொரு நினைவில்லை. [தானே இத்யாதி] - புகுந்தபின்புதான் அநுகூலித்தேனே, தன்னைப் பிரிந்து தடுமாறுகைக்கடியான புண்யபாபரூபகர்மங்களைத் தானேதவிர்த்தான். [தேனேய் பொழில்] - மதுமிக்க பொழில். தேனென்று வண்டாகவுமாம். இவனுக்கு என்ன குறையுண்டாய் என்பக்கல் இங்ஙனே படுகிறான்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருப்பேர்நகரான் பரமபதத்தை எனக்குத் தருவானாக என்னோடேபூணித்து, தானே விரோதிகளையும் போக்கினானென்கிறார்.

[வானேதருவானெனக்காய்] - எனக்கு வானேதருவானாய். இங்கேவைத்துக் காரியங்கொள்ளுமத்தையும் தவிர்த்தான்; "ப்ரஹ்மாதிகள்குடியிருப்பு இவர்க்குத்தரமல்ல" என்று அத்தையும்தவிர்த்தான்; ஸம்ஸாரியான எனக்கு நித்யஸூரிகளிருப்பைத் தருவானாக. [என்னோடொட்டி] - என்னோடேபூணித்து. நான் இச்சியாதிருக்க "அராவணமராமம்வா" (அராவணமராமம்வா) என்று என்னோடு ஸமயம்பண்ணி. "எம்மாவீட்டுத்

அஞ்சாம்பாட்டு.—வானே இத்யாதி. "திருப்பேர் நகரான் - வானேதருவானெனக்காய் என்னோடொட்டி - தானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - திருப்பேர்நகரான் இத்யாதி. பூணித்து - ப்ரதிஜ்ஞைபண்ணி.

"வான்" என்றனுக்கர்த்தம் - இங்கேவைத்து இத்யாதி. "வானே" என்றவவதாரணார்த்தம் - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. பதார்த்தம் - ஸம்ஸாரியான இத்யாதி. காரியம்கொள்ளுமத்தையும் - இன்னமொரு ப்ரபந்த மிடுவித்துக் கொள்ளுகையையுமென்றபடி. விவரணம் - நான் இச்சியாதிருக்க இத்யாதி. அப்படி இச்சியாதிருந்தாரோவென்ன - எம்மாவீட்டு இத்யாதி. "தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்" என்னுமளவும் கடாக்ஷித்து "என்னோடொட்டி" என்றத்தால் ஸாவம் - இவ்வுடம்போடே இத்யாதி. "ஸுக்ரீவம் நீலகண்டம் மஹாஸத்வம் ஸர்வேஷாம் பர்வதோபமம்॥ அராவணமராமம்வாஜகத்த்ரக்ஷ்யவாநராः" இதி யுத்தகாண்டே ஏகவிம்ஶதி

திறமும்சேப்பம்'' என்ற என்னோடே உமக்கு எம்மாவீடே தரக்கடவேன் என்றேட்டி. [ஊனேயித்யாதி] - ''இவ்வுடம்போடே உம்மைக்கோடுபோகவேணும்'' என்று விளம்பித்தோமாகில், இத்தையொழியக் கோடுபோகப் பார்த்தபின்பு இனி ஆறியிருப்பனோ? என்னுநின்றான். [ஊனேயித்யாதி] - மாம்ஸப்ரசுரமாய் ஆத்மாவுக்கு ஆயதநமாயிருக்கிற இத்தேஹத்திலே, மேலெழக் கலக்கையன்றிக்கே விடாயர்மடுவினுள்ளேபுகுமாபோலே புகுராநின்றான். * எனதுடலே அருமாமாயத்தேனதுயிரே மனமே வாக்கே கருமமே ஒருமாநொடியும் பிரியாதே. [இன்று] - நேற்றேரு நினைவில்லை. [தானே] - அகர்மவஶ்யனான தானே. இவர் அநாதிகாலம் தேஹத்தை விரும்பி விடமாட்டாதே போந்தார்; இப்போதுஇவர்க்குத் தன்பக்கலிலே ருசிபிறந்தவாறே இத்தோடு தோற்றில்லாத தானே இதிலேவந்து புகுராநின்றான். [இதனுள்புகுந்து] - அவனைப்போலே முன்னடிதோற்று தொழியிலிறே இவர் அதில் தோஷதர்ஶநம்பண்ணுதொழிவது? [தானேயித்யாதி] - புகுருகிறபோது தானேயாய், பின்னைத்தான் நானும் அநுகூலிக்கப்பெற்றதோ? [தடுமாற்றமித்யாதி] - தன்பக்கல்நின்றும் என்னைப்பிரித்துத் தடுமாறும்படி பண்ணவல்ல பாபங்களைப் போக்கினான். அவையாவன - ''பொங்கைம்புலன்'' இத்யாதி. [தேனேயித்யாதி] - மது மிக்கபொழிலையுடைத்தான திருப்பேர்நகரையுடையவன்கிடீர் என்னுடைய ஶரீரத்திலே புகுந்து க்ஷணகாலமும் விடமாட்டாதொழிகிறான்;என்னகுறையுண்டாயிப்படிப்பட்டான்?

---

## ஆறாம் பாட்டு.

---

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலைப்
பொருப்பேயுறைகின்றபிரான் இன்றுவந்து
இருப்பேனென்றுஎன்னெஞ்சுநிறையப்புகுந்தான்
விருப்பேபெற்றுஅமுதமுண்டுகளித்தேனே.

---

தமே; ''அராக்ஷஸம்'' இதி பாடபேதঃ. ஶப்தார்த்தம் - மாம்ஸ இத்யாதி. குரம்பை - தேஹமும், குடிசையும். இவ்வர்த்தத்தை யருளிச்செய்கிறார் - ஆத்மாவுக்காயதநமாயிருக்கிற இத்தேஹத்திலே என்று. இது ''எனதுடலே'' என்கிறபாட்டில் ப்ரமேயத்தை யநுவதிக்கிறதென்கிறார் - எனதுடலே இத்யாதி. ''ஒருமாநொடியும்பிரியாதே இதனுள் புகுந்து நின்றான்'' இதி வாக்யசேஷঃ. ''தானே - ஊனேய்குரம்பையிதனுள் புகுந்து'' என்று கூட்டி பாவம் - இவரநாதிகாலம் இத்யாதி. தோற்று-ஸங்கம். அவன் போக்யமாகக்கொண்டு உள்ளேபுகுர இவர் ''இதனுள்'' என்று தோஷதர்ஶநம்பண்ணுகிறதென்னென்ன - அவனைப்போலே இத்யாதி. ''தானே'' என்றத்தை மேலேகூட்டி அவதாரணத்திலே நோக்காக பாவம் - புகுருகிறபோது இத்யாதி. பின்னைத்தான் என்றது - விரோதிநிவ்ருத்தியிலே தானென்றபடி. ''ஊனேய்குரம்பை'' இத்யாதியாலே * செஞ்சொற்கவியில் ப்ரமேயத்தையும், ''வினைகள்தவிர்த்தான்'' என்று ''மானாங்காரமனங்கெட'' இத்யாதியிலர்த்தத்தையும் அநுவதிக்கிறது. அவையாவன என்றது - வினைகளாவன வென்றபடி. போக்யமான தேசத்தையுடையவன் இத்தேஹத்தை விரும்புகிறான் என்றதுக்கு ஹார்த்தபாவம் - மதுமிக்க இத்யாதி. ''பேரேன்' என்றத்தைப்பற்ற - க்ஷணகாலமும் என்றது. ''தேனேய்பொழில் தென்திருப்பேர்நகரான் - ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து-எனக்கு-வானேதருவானாய் - என்றேடொட்டி, தானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான்'' இத்யந்வயঃ. (ரு)

ஆ.—(திருப்பேர்.) - திருப்பேரையும் திருமாலிருஞ்சோலையையும் தனக்குக்கோயிலாக வுடையவன், தனக்கோர் இருப்பிடமில்லாதாரைப்போலே இன்றுவந்து "இருப்பேன்" என்று என்னை இரந்துகொண்டு என்னெஞ்சுநிறையப் புகுந்தான்; பின்னையும் ஒருநாளைக்கொருநாள் அவனுக்கும் ஸ்ப்ருஹணீயனாய் நானும் அவனுடைய குணங்களாகிற அம்ருதத்தை பூஜித்துக் களிக்கப்பெற்றேனென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், தனக்கு வர்த்தித்தருளலாம் கோயில்கள் அநேகமுண்டாயிருக்க, ஓரிடமில்லாதாரைப்போலே "இருப்பேன்" என்று ப்ரார்த்தித்துக்கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே நிர்ஹேதுகமாகப் புகுந்தான் என்று ப்ரீதராகிறார். [பொருப்பு]-மலை. [பிரான்]-உபகாரகன். [விருப்பேபெற்று அமுதமுண்டுகளித்தேன்] - அவனாலே பஹுமானம்பெற்று அவனுடைய கொண்டாட்டமாகிற அம்ருதபானத்தைப் பண்ணிக்களித்தேன். அவனுடைய குணாம்ருதத்தைப் பானம்பண்ணிக்களித்தேன் என்றுமாம்.

ப.—அநந்தரம், அல்லாத உகந்தருளின தேசங்களிற்காட்டில் என்னெஞ்சிலே யாதரித்துப் புகுந்தநுபவிக்க அநுபவித்து ஆநந்தியானேனென்கிறார்.

(என்னைக்கிட்டுகைக்காக), திருப்பேர்நகரான்-திருப்பேர்நகரிலேயாய், (அநந்தரம், ஆஸந்நமாக), திருமாலிருஞ்சோலைபொருப்பே - திருமாலிருஞ்சோலையென்று திருநாமமான திருமலையிலே, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுகிற, பிரான்—மஹோபகாரகன், இன்று - , (ஒருஹேதுவின்றிக்கேயிருக்க), வந்து - தானேவந்து, இருப்பேனென்று - "இங்கேயிருக்கக்கடவேன்" என்று ஸங்கல்பித்து, என்னெஞ்சு-, நிறைய - பூர்ணமாம்படி, புகுந்தான்-; விருப்பேபெற்று-(அவனுடையநிரதிசய) பஹுமாநத்தை ஒருபடிப்படப் பெற்று, அமுதம்உண்டு - (குணாநுபவரூபமான) அம்ருதபாநத்தைப் பண்ணி, களித்தேன் - ஆநந்தியானேன்.

இ.—ஆறும்பாட்டு, தனக்கு இருப்பிடமான கோயில்கள் அநேகமுண்டாயிருக்க ஓரிடமுமில்லாதாரைப் போலே என்ஹ்ருதயத்திலே நிர்ஹேதுகமாக ப்ரார்த்தித்துக்கொண்டு புகுந்தான் என்று ப்ரீதராகிறார்.

[திருப்பேர் இத்யாதி] - திருவயோத்யையில் வாஸம்போலேயாய்த்துத் திருப்பேரில் இருப்பு; திருச்சித்ரகூடத்திலிருப்புப்போலேயாய்த்துத் திருமலையில் வாஸம். "அயோத்யாவாஸாத்" என்றும் "ஸௌம்ய ஸுகவாஸோ வாஸ:" என்றும் "ஸுகோஹமுஷித:" என்றும் சொல்லக்கடவதிறே. [பொருப்பு] -மலை. [பிரான்] - உபகாரகன். [இன்று வந்து] - பூர்வக்ஷணத்தில் நினைவுமின்றியிலேயிருக்க வந்துகொடு நிற்கக்கண்டதித்தனை. [இருப்பேன் இத்யாதி] - "உஷ்ய ஸௌமித்ரே ஸாயம் ஸந்த்யாமுபாஸிஷ்ய" என்கிறபடியே தன் பேறாகப்ரதிஜ்ஞைபண்ணி, "இருந்திடுவானுக்கு" என்றியாத என்னெஞ்சிலே குறைவறப் புகுந்தான். [விருப்பே பெற்று] - அவன் விருப்பத்தைப் பெற்று; அவனாலே பஹுமானம் பண்ணப்பெற்று. [அமுதமுண்டுகளித்தேனே] - அவனுடையகொண்டாட்டமாகிற அம்ருதபானத்தைப் பண்ணிக்களித்தேன் என்னுதல், அவனுடைய குணாம்ருத பானத்தைப்பண்ணிக்களித்தேன் என்னுதல். "க்ஷிபாமி" என்று அவன் உபேக்ஷைக்கு இலக்காகாதே, அவன் பஹுமானத்துக்கு இலக்கானால் ப்ரீதி யுள்ளடங்காதிறே. நரக

ஹேதுவான விஷயாநுபவத்தால் வந்தகளிப்பளவன்றியே, 𑌭𑌗𑌵𑌦𑌨𑍁𑌭𑌵𑌂பண்ணப் பெற்ற செருக்காலே யுண்டான ப்ரீதியை ஆற்றலாமோ ?

ஈடு.—ஆறும்பாட்டு. தனக்கு இருப்பிடமான கோயில்கள் அநேகமுண்டா யிருக்க ஓரிடமில்லாதாரைப் போலே என் ஹ்ருதயத்திலே நிர்ஹேதுகமாக ப்ரார்த்தித்து வந்து புகுந்தா னென்று ப்ரீதராகிறார்.

[திருப்பேர்நகரான்] - திருவயோத்யையைப்போலேயாய்த்து. [திருமாலிருஞ் சோலைப்பொருப்பேயுறைகின்றபிரான்] '𑌅𑌧𑌿𑌕𑌂 𑌪𑍁𑌰𑌵𑌾𑌸𑌾𑌚𑍍𑌚' (அதிகம்புரவாஸாச்ச) என்னுமாபோலே; ''𑌜𑌹𑍌𑌚 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌪𑍁𑌰𑌵𑌿𑌪𑍍𑌰𑌵𑌾𑌸𑌾𑌤𑍍'' (ஜஹௌசதுஃகம்புரவி ப்ரவாஸாத்). திருச்சித்திரகூடத்திற்போலே யாய்த்து. ''𑌕𑍁𑌬𑍇𑌰 𑌇𑌵 𑌨𑌨𑍍𑌦𑌨𑍇'' (குபேர இவநந்தநே)-குறைவற்றவன் உத்யாநத்திலே வர்த்திக்குமாபோலேயாய்த்து. ஸர்வப்ரகா ரத்தாலும் குறைவற்றவனுக்கிறே லீலாரஸத்தில் அந்வயமுள்ளது. [இன்றுவந்து] - இவ் வரவுக்கு நேற்றொரு நினைவின்றியே யிருக்கவந்துகோடு நிற்கக்கண்டதத்தனை. [இருப்பே னென்று] - ''இருப்பேன், இருப்பேன்'' என்றுநின்றானாய்த்து. †''[illegible]'' (இஹைவஸாரதோநேகாஸ்த்வயாஸார்த்தமநிந் திதே.) ''𑌇𑌹 𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌸𑌾𑌰𑍍𑌧𑌮𑍇𑌤𑍇𑌨 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾'' (இஹவத் ஸ்யாமிஸௌமித்ரேஸார்த்தமேதேநபக்ஷிணா)-''ஐயர் கோற்கீழேவர்த்திக்க வேணுமென்று நினைத்திருந்தோம்; நடுவிலாய்ச்சிக்கு ப்ரியமில்லாமையாலே போந்தோம்; இனிமேலுள்ள நாள் இவர்சிறகின்கீழே வர்த்திக்கப் பாராநின்றோம்'' என்றானிறே. [என்னெஞ்சுநிறை

ஆறும்பாட்டு.—திருப்பேர் இத்யாதி. 'திருப்பேர்நகரான்'' என்று தொடங்கி ''என் னெஞ்சு நிறையப்புகுந்தான்'' என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - தனக்கிருப்பிடமான இத் யாதி. இரண்டு திருப்பதியைச்சொன்னது, கோயில்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ''இன்று'' என்றத்தைப்பற்ற - நிர்ஹேதுகமாக என்றது. ''இருப்பேனென்று'' என்றத்தைப்பற்ற - ப்ரார்த் தித்துவந்து என்றது.

ஊரையும் மலையையும் சொன்னதுக்கு ஸ்வாரஸ்யம் - திருவயோத்யை இத்யாதி. ''பொருப்பேயுறைகின்ற'' என்ற ஏவகாரவர்த்தமாநங்களாலே - திருப்பேர் நகரைப்பற்றத் திரு மலையிலிருப்பு போக்யமாயிருக்குமென்றபடி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - அதிகம் இத்யாதி ப்ரமா ணத்ரயமும். ''[illegible] 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌪𑍁𑌰𑌵𑌾𑌸𑌾𑌚𑍍𑌚 [illegible],'' (ஸர்-கூகூ.) ''[illegible] 𑌜𑌹𑍌𑌚 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌪𑍁𑌰𑌵𑌿𑌪𑍍𑌰𑌵𑌾𑌸𑌾𑌤𑍍'' (ஸர்-கூஎ.) ''[illegible] 𑌕𑍁𑌬𑍇𑌰 𑌇𑌵 𑌨𑌨𑍍𑌦𑌨𑍇'' இத்யயோத்யாகாண்டே (ஸர்-கூகூ). இதுக்கர்த்தம்- குறைவற்றவன் இத்யாதி. ''குறைவற்றவன்'' என்று பதமில்லையேயென்ன - ஸர்வப்ரகாரத்தாலும் இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - இஹைவ இத்யாதி. †''[illegible]'' இத்யயோத்யாகாண்டே. (ஸர்-கூரு.) ''𑌇𑌦𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌮𑍇𑌧𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌬𑌹𑍁𑌮𑍃𑌗𑌦𑍍𑌵𑌿𑌜𑌮𑍍। 𑌇𑌹 𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌸𑌾𑌰𑍍𑌧𑌮𑍇𑌤𑍇𑌨 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾'' இத்யாரண்யகாண்டே (ஸர்-கரு). ''பக்ஷிணா'' என்றதுக்கர்த்தம் - ஐயர் இத்யாதி. கோல் ஆஜ்ஞை. ''[illegible]'' என்றத்தைப்பற்ற - நடுவிலாய்ச்சி என் றது. ப்ரியமில்லாமையாலே என்றது - ''𑌕𑍈𑌕𑍇𑌯𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍'' என்றத்தைப்பற்ற.

† 'யதீஹ' என்றும் பாடம் காண்கிறது.

யப் புகுந்தான்] - "இருந்திடுவோனுக்கு" என்றிராத என்னெஞ்சிலே நிறையப்புகுந்தான். [விருப்பேபெற்று] - ஆஜ்ஞாநுவர்த்தநம்பண்ணுமையா லுண்டான த்வேஷகார்யமாக வன்றிக்கே, "***தாநஹம்த்விஷத:***" (தாநஹம்த்விஷத:) என்றிருப்பதும் ஓரிருப்புண்டிறே; அங்ஙனன்றிக்கே, அவனுடைய விருப்பத்தையுடையேனாய். [அமுதமுண்டு களித்தேனே] - விஷஹோஜநத்தைப்பண்ணி நரகத்துக்குப் போகாநிற்க, நடுவேநின்று களிக்கையன்றிக்கே, அமுதமுண்டு களித்தேனே; (அவனுடைய கொண்டாட்டமாகிற அம்ருதபாநத்தைப் பண்ணிக்களித்தேன் என்னுதல்; அவனுடைய குணாம்ருதபாநத்தைப்பண்ணிக் களித்தேனென்னுதல்.) க்ஷுத்ரவிஷயப்ரவணனாய் நரகத்துக்குக் க்ருஷியைப்பண்ணிவைத்துக் களிக்குமதிறே அது. அதாவது - "அணிமென்குழலாரின்பக்கலவி யமுதுண்டார்" என்றபடி. [களித்தேனே] - "நாவலிட்டுழிதருகின்றோம்" என்று செருக்காலே களிக்கிற களிப்பேயிறே இது. யமாதிகள்தலையிலே அடியிட்டுக் களிக்கப்பெற்றேன். (௬)

---

## ஏழாம் பாட்டு.

---

உண்டுகளித்தேற்கு உம்பர்என்குறை?மேலைத்
தொண்டுஉகளித்து அந்திதொழும்சொல்லுப்பெற்றேன்
வண்டுகளிக்கும்பொழில்சூழ்திருப்பேரான்
கண்டுகளிப்பக் கண்ணுள்நின்றுஅகலானே.

***ஆ.***—(உண்டு.) - *என்னுளடங்காதே பொங்கிப்புறப்படுகிற பரமஹர்ஷவஸாநரூபமாய் இவ்வாத்மாவினுடைய ஸ்வஶேஷத்வ ப்ரதிபாதகமான திருமந்த்ரத்தினால் ப்ரதிபாத்யமாயிருந்த ஸ்வகைங்கர்யைக ரஸிகத்வத்தைப்பெற்ற நான் * கண்களாரளவும்நின்று கண்டுகளிக்கும்படியாகத் திருப்பேரான்என்கண்ணுள் நின்றகலான்;*

---

*"விருப்பே" என்ற அவதாரணார்த்தம் - ஆஜ்ஞாநுவர்த்தநம் இத்யாதி. விவரணம் - தாநஹம் இத்யாதி. "**தாநஹம்த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு**" இதி கீதாயாம்(கசு). 'த்வேஷபரிஹாரமாகவன்றிக்கே' இதிபாடே, த்வேஷ நிர்வர்த்தநார்த்தஞ்ச கிஞ்சநாவஸ்த்தாநமஸ்தி - மத்யமாவஸ்த்திதி:; தாம்விநா. "**தாநஹம்த்விஷத:**" இதி ஏகோநாவஸ்த்தாநஞ்ச கிஞ்சநாஸ்தி; தச்சவிநா தத்யாஜ்ய விஷயோ பூத்வேத்யர்த்த:. "அமுதமுண்டு" என்றதுக்கு வ்யாவர்த்யம் - விஷஹோஜநத்தை இத்யாதி. 'நடுவேநின்று களிக்கையன்றிக்கே ஸ்வவதநுஸவத்தாலே களிக்கப்பெற்றேன்' என்றபடி. ஏதத்விவரணம்-க்ஷுத்ரவிஷய இத்யாதி. நரகத்துக்கு க்ருஷிபண்ணிக்களிக்கையாவதேதென்ன - அதாவது இத்யாதி. "அணிமென்குழலார் இன்பக்கலவியமுது" என்கையாலே-அதுவும் அல்பஸந்தோஷஹேதுவென்று கருத்து. இவ்விஷயாநுபவத்தால்வந்த களிப்பிருக்கும்படி யென்னென்ன - நாவல் இத்யாதி. இதுக்கர்த்தம் - யமாதிகள் இத்யாதி. நாவலிட்டு - அறைகூறி. நாவலென்றும் அறையோவென்றும் - ஜயித்தவன் சொல்லும் வார்த்தை.* (௬)

இப்படி அவனை புஜித்துக் களிக்கப்பெற்ற எனக்கு இனிமேல் அநவாப்தமாய் அவாப்தவ்யமாயிருப்பதொரு ப்ராப்யமுண்டோ? என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், தமக்கு உண்டான கார்த்தார்த்யத்தை அருளிச்செய்கிறார்.

[உண்டு என்று தொடங்கி] - மேலான ஊஸ்யரஸம் பெருகினால் அதின்முடிவிலே ஆற்றாமை சொல்லும் "நம:" என்கிற சொல்லைச் சொல்லப் பெற்றேன்; வண்டு களிக்கிறபொழில் சூழ்ந்த திருப்பேரான், நான் கண்டு க்ருதார்த்தனாம்படி கண்ணுள் நின்று அகலுகிறிலன். இப்படி அவனை புஜித்துக் களிக்கப்பெற்ற எனக்கு இனி குறையுண்டோ?

ப.—அநந்தரம், இங்கு நித்யாநுபவம்பண்ணும்படி ஸந்நிஹிதனானவனையநுபவித்துக் களிக்கிற எனக்கு மேல்என்ன குறையுண்டென்கிறார்.

வண்டுகளிக்கும் - வண்டுகளானவை (மதுபானத்தைப்பண்ணிக்) களிக்கும், பொழில்சூழ் - பொழில்சூழ்ந்த, திருப்பேரான் - திருப்பேர்நகரான், கண்டுகளிப்ப - (தன்னை) ஸாக்ஷாத்காரம்பண்ணிக் களிக்கும்படி, கண்ணுள்நின்று - என்கண்ணுக்குவிஷயமாய்நின்று, அகலான் - போகிறிலன்; உண்டுகளித்தேற்கு-(இப்படி) நித்யாநுபவம்பண்ணிக்களித்த எனக்கு, உம்பர் - மேலொருதேசவிசேஷத்திலேபோய்ப்பண்ணும் அநுபவத்தில், என்குறை - குறைகிடந்ததேது? மேலைத்தொண்டு - அதிகமான ஊஸ்யரஸமானது, உகளித்து-, அந்தி - முடிவிலே, தொழும் - ("நமஇத்யேவவாதிந:" என்கிறபடியே) தொழுகைக்கு வாசகமான, சொல்லு - நமஶ்ஶப்தத்தைச்சொல்ல, பெற்றேன்-, உகளித்தல் - மிகுதல்.

இ.—ஏழாம்பாட்டில், தமக்கு உண்டான கார்த்தார்த்யத்தை அருளிச்செய்கிறார்.

[உண்டுகளித்தேற்கு] - ஜ்ஞாநாநுபவத்தாலே களிக்கப்பெற்ற எனக்கு; "இதுக்குமேல் ஒன்றும் வேண்டா; இதுவே அமையும்" என்னும்படி ஜ்ஞாநாநுபவந்தானே இனிதாயிறே இருப்பது. [உம்பர் என்குறை] - மேல் என்னகுறையுண்டு? உம்பர் - மேல். [மேலைத் தொண்டு உகளித்து] - மேலான ஊஸ்யரஸம் அதிஶயித்து. "பெநபெந யாதாஹுதி" என்கிற ரஸத்தை அநுபவித்து. "ஸேவாஶ்வவ்ருத்தி:" என்கிற இதிறே கீழான ஊஸ்யம். [அந்திதொழும் இத்யாதி] - முடிவிலே தொழும் சொல்லுப்பெற்றேன்; அநுபவப்ரீதி தலைமண்டையிட்டால் அதின்மேலே "நம:" என்று வ்யக்திபூர்வகமாகச் சொல்லுஞ்சொல்லைப் பெற்றேன்; "நமஇத்யேவவாதிந:" இறே. அதாகிறது - ப்ரீதிவழிந்த சொல்லாலே திருவாய்மொழிபாடி அடிமை செய்யப்பெறுகை. [வண்டு இத்யாதி] - வண்டுகள் மதுபானம்பண்ணிக் களிக்கிற பொழில் சூழ்ந்த திருப்பேரில் வர்த்திக்கிறவன். ஜ்ஞாநாதிகரோடு திர்யக்குக்களோடு வாசியறக் களிக்கும் தேஶம். [கண்டு களிப்ப] - "மெய்கொள்ளக்காண விரும்பும் என் கண்கள்" என்று விடாய்த்த கண்கள் கண்டு களிக்கும்படியாக. [கண்ணுள் நின்று அகலானே] - நான் போகச்சொல்லிலும் கண்வட்டத்தில்நின்றும் போகிறிலன்; விஷயப்ரவணரைப் போகச்சொன்னாலும் தூணைக்கட்டிக்கொண்டு போகாதாப்போலே. இப்படி அவனை அநுபவித்துக் களிக்கப்பெற்ற எனக்கு இனிமேல் ஒருகுறையுண்டோ?

ஈடு.—ஏழாம்பாட்டு. அவனுடைய ஆதரத்தாலே தமக்கு உண்டான கார்த்தார்த்யத்தை அருளிச்செய்கிறார்.

[உண்டுகளித்தேற்கு உம்பர் என்குறை] - இப்படியநுபவித்துக் களிக்கப் பெற்ற எனக்குஒருகுறையுண்டோ? அவனுடைய குணங்களையநுபவித்து * மயர்வறமதி நலமருளப்பெற்ற எனக்கு மேல்வேண்டுவது ஒன்றுண்டோவென்றிருக்கிறார். ஜ்ஞாந லாபமுண்டானபின்பு "அவ்வருகில் ப்ராப்திபெற்றிலோம்" என்று வருவதுஒருகுறை யுண்டோ? உம்பரென்றது - மேலென்றபடி. [மேலைத்தொண்டு இத்யாதி] - மேலான தாஸ்யரஸம் அதிசயித்து. "யேநயேநதாதாகச்சதி" (யேநயேநதாதாகச்சதி) என்கிற ரஸத்தை யநுபவித்து. "ஸேவாச்வவ்ருத்திః" (ஸேவாச்வவ்ருத்திః) என்றதுபோலன்றிறே,ஸ்வரூபாநுரூபமானது [தொண்டூகளித்து] - தொண்டாலே உகப்புத் தலைமண்டையிட்டு. அதினுடைய சரமதசையிலே "நமஇத்யேவவாதிநః" (நமஇத்யேவவாதிநః) என்று புத்திபூர்வகமாகச் சொல்லுவதொன்றுண்டு, அப்பாசுரத்தைச் சொல்லப்பெற்றேன். அதாவது - ப்ரீதிவழிந்த சொல்லாலே திருவாய்மொழிபாடி அடிமைசெய்யப்பெறுகை. [வண்டு இத்யாதி] - வண்டுகள் மதுபானம்பண்ணிக் களிக்கிற பொழிலாலே சூழப்பட்ட திருப்பேரிலே வர்த்திக்கிறவன். ஜ்ஞாநாதிகரோடு திர்யக்குக்களோடு வாசியறக் களிக்கும் தேசம். [கண்டுகளிப்ப] - "மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்கள்" என்று

---

*ஏழாம்பாட்டு.—உண்டு இத்யாதி. "விருப்பேபெற்று" என்கிற பதத்திலே சொன்ன அர்த்தத்தை யநுபாஷித்துக்கொண்டு, "உண்டுகளித்தேற்கு" என்று தொடங்கி "அந்திதொழுஞ் சொல்லுப்பெற்றேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை -* **அவனுடைய** *இத்யாதி. "கண்ணுள் நின்றகலான்" என்றத்தைப்பற்ற -* **ஆதரத்தாலே** *என்றது.* **கார்த்தார்த்யத்தை** *- க்ருதார்த்ததையை.*

*கீழ்வாக்ய விவரணம் -* **அவனுடைய** *இத்யாதி. ஹங்க்யந்தரம் -* **அவனுடைய** *இத்யாதி என்னவுமாம்.* **இப்படியநுபவித்து** *என்றது - "கண்ணுள்நின்றகலான்" என்றத்தைப்பற்ற. * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனுடைய குணங்களை யநுபவிக்கப்பெற்ற எனக்கென்று யோஜிப்பது. * மயர்வறமதிநலமருளப்பெற்ற மாத்ரமே போருமோ, ப்ராப்தியும் வேண்டாவோ வென்ன -* **ஜ்ஞாநலாபம்** *இத்யாதி. விவரணம் -* **யேநயேந** *இத்யாதி. "மேலை" என்று விசேஷித்ததுக்கு பாவம் -* **ஸேவா** *இத்யாதி. அதவா, பராநுவர்த்தநம் ஹேயமன்றோவென்ன -* **ஸேவா** *இத்யாதி என்னவுமாம்.* "**ஸத்யாந்ருதாப்யாமபிவா ப்ரமருதேந ந கதாசந । ஸேவா ச்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்**" *இதி மாநவே தர்மசாஸ்த்ரே 4-4-6. "மேலான தாஸ்யரஸம்" இத்யாதியின் விவரணம் -* **தொண்டாலே** *இத்யாதி. தொண்டுக்குஉகளிப்பாவதே தென்ன -* **தொண்டாலே** *இத்யாதி என்னவுமாம்; உகளித்து - அதிசயித்து. ஸ்வபோக்த்ருத்வம் வரப்போகிறதோ என்கிற அதிசங்கையாலே "* **நமஇத்யேவவாதிநః** *" என்பர்களென்றபடி.* "**உபக்ராந்தாம் தர்மம் க்ஷணமபி ந ஹாதுங் க்ஷமதயா ஹ்ருதா ஸேவாவாதிநஸ்து । ப்ரஹ்லாதுகீர்த்யா துஷ்ட்ரைர் நமஇத்யேவவாதிநః**". *மேலைத்தொண்டாவதேதென்ன -* **அதாவது** *இத்யாதி*

*"அந்திதொழும் சொல்லுப்பெற்றேன்" என்றதுக்கு பாவார்த்தம் -* **அதாவது** *இத்யாதி. என்று ஒருருவிலே யருளிச்செய்வர்.* **ஸர்வதநுபவாந்தத்திலேதொழும்** *சொல்லாவது - பக்திபலாத் காரத்தாலே கையும்அஞ்ஜலியுமாய்த் திருவாய்மொழி பாடுகையென்றபடி. "உண்டுகளித்தேற்கு" என்றபதத்தைக்கடாக்ஷித்து "வண்டுகளிக்கும்" என்ற பதப்ரயோகத்துக்குத் தாத்பர்யம் -* **ஜ்ஞாநாதிகரோடு** *இத்யாதி. "கண்டுகளிப்ப" என்றதுக்கு பாவம் -* **மெய்கொள்ள** *இத்யாதி. போகச்*

விடாய்த்த கண்கள் கண்டுகளிக்கும்படியாக. [கண்ணுள்நின்றகலானே]- நான் போகச் சொல்லிலும் கண்வட்டத்தில்நின்றும் அகலுகிறிலன் ; விஷயப்ரவணர் போகச்சொன்னு லும் தூணைக்கட்டிக்கொண்டு போகாதாப்போலே. இப்படி அவனை யநுபவித்துக் களிக் கப்பெற்ற எனக்கு மேலொருகுறை யுண்டோ ? (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

கண்ணுள்நின்றகலான் கருத்தின்கண்பெரியன்
எண்ணில்நுண்பொருள் ஏழிசையின்சுவைதானே
வண்ணநன்மணிமாடங்கள்சூழ் திருப்பேரான்
திண்ணம்என்மனத்துப் புகுந்தான்செறிந்தின்றே.

ஆ.—(கண்ணுள்நின்றகலான்) - வாங்மநஸாகோசர ஸ்வரூபனாய், பரம போக்யபூதனாயிருந்த திருப்பேரான், கண்ணுள்நின்றகலான்: தன்னாலும் விஸ்லே ஷிக்கவொண்ணாததொருபடி என்னெஞ்சிலே புகுந்து செறிந்தான்; இன்னம் இவ்வள வன்று இவனுடைய பாரிப்பு என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், வாங்மநஸங்களுக்கு நிலமன்றிக்கே நிரதிசய போக்யனான திருப்பேர்நகரான் என் கண்ணுக்கு எப்போதும் விஷயமாய் ஒருநாளும் போகாதபடி ஸ்நேஹித்து ஹ்ருதயத்திலே புகுந்தான்; இன்னம் என்னளவன்று என் திறத்தில் செய்தருள நினைத்தது என்கிறார்.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரத்தாலும் நிரதிசய போக்யனாய்க்கொண்டு என்னெஞ்சிலே த்ருடமாகப் புகுந்தா னென்கிறார்.

கண்ணுள்நின்று - பாஹ்யமானகண்ணுக்கு நித்யாநுபவவிஷயமாய், அக லான் - அகலுகிறிலன் ; கருத்தின்கண் - (இவன் நினைவைப் பார்த்தவிடத்தில், இங்கு நின்றும் ஒருதேசவிசேஷத்தேறக் கொடுபோய் அநுபவிக்கைக்கீடான பாரிப்பில்), பெரியன் - பெரியனாயிராநின்றான் ; எண்ணில் - ("தாந்தாமறிய" என்று)எண்ணுமள வில், நுண் பொருள் - அதிஸூக்ஷ்மமான ஸ்வபாவங்களையுடையனாய், தானே - , (அநுபவிக்குமளவில்), ஏழ்இசையின்சுவை-ஸப்தஸ்வரஸாரஸ்யத்தையுடையனாய், வண் ணம் - நாநாவர்ணமாய், நன்மணி - ஸ்லாக்யமான மாணிக்கங்களாலேசமைந்த, மாடங் கள் சூழ் - மாடங்கள் சூழ்ந்த, திருப்பேரான் - திருப்பேரிலே வர்த்திக்கிறவன், என் மனத்து - (தன்னைப்பெறுகைக்கு விடாய்த்த) என்னெஞ்சிலே, திண்ணம் - நிர்ஹேதுக மாக, இன்று - , செறிந்து - த்ருடமாம்படி, புகுந்தான் -.

---

சொன்னாலும் போகாததுக்கு த்ருஷ்டாந்தம் - விஷயப்ரவணர் இத்யாதி. அந்வயமுகேந பாவம் - இப்படியவனை இத்யாதி. 'வண்டுகளிக்கும்' என்றுதொடங்கி, 'கண்ணுள்நின்றகலான் - மேலைத் தொண்டுகளித்து அந்திதொழும் சொல்லுப்பெற்றேன் - உண்டுகளித்தேற்கு உம்பரென்குறை' என்றந்வயம்,

(எ)

இ.—எட்டாம்பாட்டில், நிரதிஶய போக்யனான திருப்பேர்நகரான் என் பக்கலிலே வ்யாமோஹத்தைப் பண்ணி ஒருநாளும் போகாதபடி என்நெஞ்சிலே வந்து புகுந்தா னென்கிறார்.

[கண்ணுள்நின்று அகலான்] - ஸதா தர்ஶநத்துக்கு விஷயமாகாநின்றான். ஸதா தர்ஶநத்துக்கு வேறு தனக்கு ஒருவிஸ்ம்ருதியுண்டு என்றிருக்கிறிலன். [கருத்தின் கண் பெரியன்] - நம் விஷயத்தில் அவன் பாரிக்கிற பாரிப்பு நமக்கு மநோரத விஷய மன்று. நம்மைக் கொண்டுபோகையிலே பாரித்து அர்ச்சிராதிகணங்களை அழைப்பது தான் அவர்களுக்கு முற்பாடனாவதாகாநின்றான். [எண்ணில் நுண்பொருள்] - தாம் தாமே எண்ண நினைப்பார்க்கு துர்க்ரஹமான வஸ்து. [ஏழிசையின் சுவைதானே] - எண்ணுமலிருக்கவொண்ணாத போக்யதையைச் சொல்லுகிறது. ஸப்தஸ்வரங்களின் ப்ரயோகம். [வண்ணம் இத்யாதி]-தேஶத்திலே போக்யதையும் மேன்மையும் இருக்கிறபடி. நாநாவர்ணமாய் மஹார்க்கமான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களாலே சூழப் பட்ட தேஶம். [என் மனத்துப் புகுந்தான்செறிந்து இன்றே]-தன்னை ஆதரித்திருக்கிற என்னுடைய ஹ்ருதயத்திலே, தன் வ்யாமோஹமெல்லாம் தோன்றும்படி வந்துபுகுந் தான். [திண்ணம்] - "ஸர்வேஶ்வரன் ஒருஸம்ஸாரிஹ்ருதயத்திலே இப்படி மேல் விழக்கூடுமோ?" என்று ஶங்கிக்கவேண்டா; இது த்ருஷ்டம்.

ஈடு.— எட்டாம்பாட்டு. நிரதிஶயபோக்யபூதனான திருப்பேர்நகரான் என் பக்கலிலே வ்யாமோஹத்தைப்பண்ணி ஒருநாளும் போகாதபடி என்னெஞ்சிலேவந்து புகுந்தா னென்கிறார்.

[கண்ணுள்நின்றகலான்]-(ஸதாதர்ஶநத்துக்கு விஷயமாகாநின்றான்). ஸதாதர்ஶநத்துக்கு வேறுதனக்கோரு விஸ்ம்ருதியுண்டேன்றிருக்கிறிலன். [கருத்தின்கண்பெரியன்]- உபயவிஸ்ம்ருதியோகத்தால்வரும் அந்யபரதை யடையத் தீர்ந்து, இவரை யவ்வருகே கோண்டுபோகையிலும், ஆதிவாஹிகரை நியமிக்கையிலும்,தான் முற்பாடனாய்க்கோண்டு போகையிலும் பாரியாநின்றான். நங்கார்யத்தில் அவன்த்வரிக்கிறபடி நம்மால் எண்ணி முடியுமளவல்ல; இயத்தாரஹிதன். இதுதான் "யஸ்யாமதம்" (யஸ்யாமதம்) என்கிற போது

---

எட்டாம்பாட்டு.— கண்ணுள்நின்று இத்யாதி. "ஏழிசையின்சுவைதானே - திருப் பேரான் - கண்ணுளாநின்றகலான்; கருத்தின்கண்பெரியன்; என்மனத்து - செறிந்து புகுந்தான்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நிரதிஶயபோக்யபூதனான இத்யாதி.

"கண்ணுள்நின்றகலான்" என்றதுக்கு ஸாரம் - ஸதாதர்ஶநத்துக்கு இத்யாதி. "கருத் தின்கண்பெரியன்" என்றதுக்கு - நினைவில்வந்தால் பெரியனென்று ஶப்தார்த்தம். இத்தால் - பஹுமநோரதங்களைப் பண்ணாநின்றானென்று தாத்பர்யம். இவ்வளவை விவக்ஷித்து இவனுடைய பஹுவான மநோரதமேதென்ன - உபயவிஸ்ம்ருதி இத்யாதி. "கருத்தின்கண்பெரியன்" என்ற துக்கு - என்னுடைய நினைவில் பெரியவனென்றாய், அவன் பாரிக்கிறபாரிப்பு நம்மாலெண்ணி முடிக்கப்போகாதென்றர்த்தாந்தரம் - நங்கார்யத்தில் இத்யாதி. அன்றிக்கே, "கருத்தின்கண்பெரி யன்" நம்விஷயத்தில் கார்யவிசாரத்தாலே பெரியவனென்றபடி. இத்தைக்காட்டுகிறார் - உபய விஸ்ம்ருதி இத்யாதி. இத்தால் ஃபலிதம் - நங்கார்யத்தில் இத்யாதி. என்று இங்ஙனும் சொல்லுவர் கள். எண்ணிமுடிக்கப் போகாதென்றத்தால் ஃபலிதம் - இயத்தாராஹிதன் என்று. முடியுமளவல்ல, இயத்தாரஹிதனென்று ஏகவாக்யம். "கருத்தின்கண்பெரியன்" என்றதுக்கு - மநோரதத்தால் பெரியவனென்று கொள்ளவேணுமோ? ஸ்வரூபாபரிச்சேத்யதையைச் சொல்லவொண்ணாதோ வென்ன - இதுதான் இத்யாதி. இதுதான் - இந்த இயத்தாராஹித்யந்தான். "யஸ்யாமதம்"

வா லல்ல. நங்கார்யத்தில் இங்ஙனேயிருக்கும்; " என்மனத்துப்புகுந்தான்" என்கிறத்தோடு சேரவேணுமிறே, கருத்தின்கண்பெரியன் என்கிறவிதுவும். [எண்ணினுண்பொருள்] - அவன் தானே இப்படி மேல்விழில் விழுமித்தனைபோக்கித் தாந்தாமேயறியப் பார்ப்பார்க்கு அறியப்போகாது. அறியவரியன் என்று கைவாங்கியிருக்கலாம் வஸ்துவன்று. [ஏழிசையின் சுவைதானே] - வருந்தியும் மேல்விழவேண்டும் விஷயமாய்த்து. இது ரஸ்யதையிருந்தபடி. [வண்ணமித்யாதி] - இதுமேன்மையிருந்தபடி. [என்மனத்து-செறிந்து-புகுந்தான்] - "அநந்யாராகவேணாஹம்" (அநந்யாராகவேணுஹம்) என்கிறவிஷயத்திற்போலே பிரிக்கவொண்ணாதபடி புகுந்தான்; "எனதாவியுள்கலந்த" என்னுமாபோலே. "ஸர்வாதிகனவன் இப்படிநம்பக்கல் மேல்விழக்கூடுமோ?" என்று தாமும்அதிசங்கைபண்ணினார்; அதுக்கு வேறுபோக்கடி கண்டிலர். [திண்ணம்] - நிஸ்சிதம், இதில் கண்ணழிவில்லை. ()

---

## ஒன்பதாம் பாட்டு.

---

இன்றென்னைப்பொருளாக்கித் தன்னைஎன்னுள்வைத்தான்
அன்றுஎன்னைப்புறம்போகப் புணர்த்ததுஎன்செய்வான்
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான்
ஒன்றுஎனக்கருள்செய்ய உணர்த்தலுற்றேனே.

---

என்கிற ஶ்ருதிஸித்தமான ஸ்வரூபாபரிச்சேத்யத்வத்தாலன்றென்றபடி. பின்னைபெதிலேயென்ன - நங்கார்யத்தில் இத்யாதி. இதுக்கு நியாமகமேதென்ன - என்மனத்து இத்யாதி என்னுதல்; அன்றிக்கே, "கருத்தின்கண்பெரியன்" என்று - விசாரவிஷயபூதனென்று சொன்னுலோவென்ன - என்மனத்து இத்யாதி என்னுதல். "எண்ணினுண்பொருள்" என்றதுக்கு - எண்ணிக்கையில்வந்தால் ஸூக்ஷ்மமானவஸ்துவென்று ஶப்தார்த்தமாய், ஸ்வயத்நஸாத்யனல்லாமையைச் சொல்லுகிறதென்கிறார்-அவன்தானே இத்யாதி. மேலையும் கூட்டிக்கொண்டு "ஏழிசையின்சுவைதானே" என்றதுக்கவதாரிகை-அறியவரியன் இத்யாதி. ஏழிசையின்சுவைதானே - ஸப்தஸ்வரத்தினுடைய ரஸமானவனென்று ஶப்தார்த்தம். இந்த ஶப்தத்தையுட்கொண்டு இத்தால் ஃபலித்தபாவம் - வருந்தியும் இத்யாதிவாக்யத்வயம். ஊரினுடைய போக்யதையைவர்ணித்து, இப்படிப்பட்ட ஊரையுடையவனென்கையாலே - இதுமேன்மையிருந்தபடி என்கிறார். நாநாவர்ணமாய் ஶ்லாக்யமான மாணிக்கங்களாலேசமைந்த மாடங்கள்சூழ்ந்த திருப்பேரிலே வர்த்திக்கிறவனென்று ஶப்தார்த்தம். செறிந்து - பிரிக்கவொண்ணாதபடி. "செறிந்து" என்றதுக்கு பாவம் - அநந்ய இத்யாதி. "ஶக்யா லோபயிதும் நாஹம் ஐஶ்வர்யேண தநேந வா । அநந்யாராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" இதி ஸுந்தரகாண்டே (உக-கரு). ராவணம்ப்ரதிஸீதா. பிரிக்கவொண்ணாதபடி புகுந்தானென்றதுக்கு ப்ரமாணம் - எனதாவி இத்யாதி. "திண்ணம்" என்று நிஸ்சயிக்கைக்கு ஸம்ஶயமேதென்ன - ஸர்வாதிகன் இத்யாதி. "இன்று" என்கையாலே - நேற்றில்லையென்றபடி. 'எண்ணினுண்பொருள்' என்றுதொடங்கி, 'திருப்பேரான் - கண்ணுள்நின்றகலான்: கருத்தின்கண்பெரியன்; இன்று - என்மனத்து - செறிந்து - புகுந்தான்; திண்ணம்' இத்யந்வயः கருத்தின்கண்பெரியன் - பாரிப்பில் பெரியனாயிருக்குமவன்; எண்ணினுண்பொருள் - தாந்தாமறியவென்றெண்ணுமளவில் அதிஸூக்ஷ்மமான ஸ்வபாவங்களையுடையவன் என்று உரையில் ஶப்தார்த்தம்.

(அ)

ஆ.—(இன்றென்னை.) திருப்பேர்நகரான் இன்றென்னை ஸ்வவிஷய திவ்ய ஜ்ஞாநவானுக்கித் தன்னை என்னுள்ளே வைக்கைக்கு ஹேதுவென்? இதற்குமுன்பு இப்படிச் செய்யாதொழிகைக்கு ஹேதுவென்? என்று அவனை நான் கேட்கிறேன்; இதற்கோர்உத்தரம் வல்லனாகில், சொல்லுவா னென்கிறார். ஒருக்ஷணம்பிரியில் தரிக்க மாட்டாதே மஹோகதாரகனாயிருக்கிற இவன் இதுக்குமுன்பு அநாதிகாலமெல்லாம் என்னை விட்டு எங்ஙனே தரித்திருந்தானென்று கேட்கிறாரென்றுமாம்.

ஓ.—ஒன்பதாம்பாட்டில், இன்று எனக்குத் தன்னை அறிவித்து என்னோடே உருஜ ஸம்ச்லேஷம் பண்ணினவனை, பண்டு என்னை உபேக்ஷிக்கைக்குக் காரணம் என்? என்று கேட்கவேண்டியிருந்தேன் என்கிறார்.

[குன்றென்னத்திகழ்மாடங்கள் என்று மேலுக்கு] - குன்று போலே விளங்கா நின்றுள்ள மாடங்கள்சூழ்ந்த திருப்பேரான் ஒன்று எனக்குச் சொல்லவேணுமென்று உணர்த்தவேண்டியிருந்தேன்.

ப.—அநந்தரம், "இன்று நிர்ஹேதுகமாக உபகரித்தவன் முன்புஉபேக்ஷித்ததுக்கு ஹேதுவென்?" என்று கேட்கவேண்டியிருந்த தென்கிறார்.

இன்று - (ப்ரதமகடாக்ஷம்பண்ணி இதுக்குப்பின்பான) இக்காலம், என்னை - (முன்பு "அஸந்நேவ" என்னும்படிகிடந்த) என்னை, பொருள்ஆக்கி - ("ஸந்தமேநம்" என்னும்படி) வஸ்துவாக்கி, தன்னை - (விலக்ஷணபோக்யபூதனான) தன்னை, என்னுள் - (ஹேயமான) என்னெஞ்சுக்குள்ளே, வைத்தான் - (தானேகொடுவந்து) வைத்தான்; அன்று - (அந்தகடாக்ஷத்துக்கு முன்பான) அன்று, என்னை - (தானிட்டவழக்கமாம்படி பராதீநனான) என்னை, புறம்போக - (தன்பக்கலிலே விமுகனாய்) விஷயாந்தரங்களிலே கைகழிந்துபோம்படி, புணர்த்தது - ஸங்கல்பித்தது, என்செய்வான் - ஏதுசெய்வானாக? குன்றென்ன - குன்றென்று சொல்லலாம்படி, திகழ்-விளங்குகிற, மாடங்கள்சூழ்- மாடங்கள்சூழ்ந்த, திருப்பேரான் -, ஒன்று - (இவையிரண்டிலும்) ஒன்றுக்குஹேதுவை, எனக்குஅருள்செய்ய - எனக்கு அருளிச்செய்கைக்காக, உணர்த்தலுற்றேன் - ("தன்திருவுள்ளத்திலே படும்படியறிவிக்கவேணும்" என்று) உத்யோகித்திருந்தேன். ஒன்று சொல்ல மற்றையது தத்வ்யதிரேகஸித்தமென்று கருத்து. நிர்ஹேதுக விஷயீகாரத்துக்கு ஹேது ப்ரச்நம்பண்ணில் ஸர்வஜ்ஞனுக்கும்உத்தரமில்லையிறே.

இ.—ஒன்பதாம்பாட்டில், "இன்று என்னை விஷயீகரிக்கைக்கும் முன்பு என்னை உபேக்ஷிக்கைக்கும் காரணம்என்?" என்று கேட்கவேண்டியிருந்தேன் என்கிறார். அஸத்கல்பனான என்னை ஒருவஸ்துவாக்கி; "பொருளல்லாத என்னைப் பொருளாக்கி" என்கிறபடியே.

[தன்னை] - ஸத்துக்களுக்கு ஸ்ப்ருஹணீயனான தன்னை. [என்னுள் வைத்தான்] - என்னோடே கூட ஸம்ச்லேஷம் பண்ணினான். "இன்று" என்கிறது-மயர்வற மதிநல மருளப்பெற்றதற்குப்பின்பு உண்டான காலத்தை; "அன்று" என்கிறது - அவ்விசேஷ கடாக்ஷத்துக்குமுன்பு உண்டான அநாதிகாலத்தை. [என்னை இத்யாதி] - பாதந்த்ரனான என்னைப் புறம்போகப் பண்ணிற்று என்செய்கைக்காக? பாஹ்யனாகப் பண்ணுகையாகிறது - உபேக்ஷிக்கை. புறம் போகவிட்டாலும் அவனே என்றிருக்கிறார். ஸ்வஸத்தை பராதீநமாயிருக்க, இவ்வஸ்துவுக்குப் போக்குவரவு ஆவதென்? இரண்டுக்கும் காரணம் சொல்லவேணும். [குன்றென்ன இத்யாதி] - மலைகள்போலே விளங்கா

நின்றுள்ள மாடங்களாலே சூழப்பட்ட திருப்பேரான். [ஒன்று எனக்கருள்செய்ய] - இன்று விஷயீகரிக்கைக்கு ஹேதுசொல்லவேணும்: முன்பு உபேக்ஷித்ததுக்கு ஹேது சொல்லவுமாம். [உணர்த்தலுற்றேன்] - அறிவிக்கவேண்டி யிராநின்றேன். "இதுக்கு ஈஶ்வரன் இவர்க்குச் சொன்ன உத்தரம் ஏது?" என்று சீயர் பட்டரைக்கேட்க, "இவர்தலையிலே ஒருபழி யேறிட்டு நெடுநாள் இழந்த நாம் சொல்லுவது என்? என்று லஜ்ஜாவிஷ்டனாய் நின்றான்" என்று அருளிச்செய்தார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இன்று என்னை விஷயீகரிக்கைக்கும் முன்பு என்னை உபேக்ஷிக்கைக்கும் காரணமென்?"என்று கேட்கவேண்டியிருந்தேனென்கிறார். அஞ்ஞவா, ஸர்வேஶ்வரன் தம்மைப்பரமபதத்திலே கொடுபோவதாக விரைகிறபடியைக்கண்டு "இன்று என்னளவல்லாதபடி த்வரிக்கிறதேவர் இதுக்குமுன்பு நெடுநாள்விட்டு ஆறியிருந்தபடி யெங்ஙனே?" என்று அவன்றன்னைக்கேட்கிறார். இன்றுஇப்படி விரைகிறமை மெய்யாகில் முன்புவிட்டுஆறியிருக்கக்கூடாதேன்கிறார்: "**நத்வாமிஹஸ்தாம்ஜாநீதே**" (நத்வாமிஹஸ்த்தாம்ஜாநீதே) என்று நடுவே சிலர்சொல்லவேண்டும்படியாய்த்து: எழுந்தருளியிருந்தவிடமறியாமையாலே ஆறியிருந்தாரித்தனைபோக்கி, அறிந்தால்ஒருக்ஷணம்ஆறியிருப்பரோ? இதுதான்என்வார்த்தைகொண்டறியவேணுமோ?'**கமலலோசந**' (கமலலோசநே)-உம்முடைய கண்ணழகேயன்றோ இதில் ப்ரமாணம்? "**ராம:**" (ராம:) அவரையறியாதொழிய வேணுமோ? "**நஜீவேயம்க்ஷணமபி விநாதாமஸிதேக்ஷணாம்**" (நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணும்) என்றிறே யவரிருப்பது. "**ராம:கமலலோசந**" (ராம:கமலலோசநே)-அவரை யறியாமையுமில்லை: உம்மை நீர் கண்ணாடிப்புறத்திலும் கண்டறியாமையுமில்லை. "**கமலலோசந**" (கமல

---

ஒன்பதாம்பாட்டு - இன்றென்னை இத்யாதி. "இன்றென்னை" என்றுதொடங்கி, "புணர்த்ததென்செய்வான் - உணர்த்தலுற்றேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - இன்றென்னை இத்யாதி. அவதாரிகாந்தரம் - அஞ்ஞவா இத்யாதி. மூன்றாமவதாரிகை - இன்றிப்படி இத்யாதி.'இன்றென்னை' இத்யாதிமுந்தினவவதாரிகை, ஸ்வஹ்ருதசிந்தாபரம்; அஞ்ஞவா, இத்யாதி த்விதீயாவதாரிகை, ஈஶ்வரனைக்குறித்து ப்ரஶ்நபரம்; இன்றுஇப்படி இத்யாதி மூன்றாம் அவதாரிகை, அதிஶங்காபரம். "'ஆறியிருக்கக்கூடாது' ஆகையால் இதுவும்பொய்யோ" என்றுகருத்து. அன்றிக்கே, அவதாரிகை யிரண்டாய், இத்தால்பலித்த ஶாவம் - இன்றுஇப்படி இத்யாதி என்றுமாம். "'கூடாது' இதுக்கடியென்னென்கிறாரென்றபடி" என்று இப்போது ஶாவம்.

"உணர்த்தலுற்றேன்" என்றுகேட்டதுக்கு பரிஹரிக்கும்படியென்னென்ன - நத்வாம் இத்யாதி. தடஸ்தரேபரிஹரிக்கவேணும், அவனால் பரிஹரிக்கப்போகாதென்றபடி. "**நத்வாமிஹஸ்தாம்ஜாநீதே ராம: கமலலோசந: । தேந த்வாம் நாநயத் க்ஷிப்ரம் ஶசீமிவ புரந்தர:**" இதிஸுந்தரகாண்டே (௩௬-௩௰). ஸீதாம்ப்ரதிஹநூமாந், இஶ்ஶ்லோகத்துக்கு ஶாவம் - எழுந்தருளி இத்யாதி. "**கமலலோசந**" என்றதுக்குவாஸனை - இதுதான் இத்யாதிவாக்யத்வயம். இதுதான் - அறிந்தால் ஒருக்ஷணமாறியிராரென்னும் அதுதானென்றபடி. இதில்ப்ரமாணம் - ஆறியிரான் என்னுமதில் ப்ரமாணமென்றபடி. ப்ரமாணம் - நியாமகமென்றபடி. "ராம:" என்றதுக்கு ஶாவம் - அவரைஇத்யாதி. அவர் எப்படியிருப்பரென்ன - நஜீவேயம் இத்யாதி. "**அஸிதேக்ஷணாம்-விநா**" என்கையாலே - உம்முடைய கமலலோசநங்களை விட்டிருக்கவல்லரோவென்றபடி. பதத்வயத்துக்கும் தந்த்ரேணஶாவம் - அவரை இத்யாதி. "**கமலலோசந**"

லோசநே)-அன்றிக்கே, ஆரேதிராகத்தான் இக்கண்சிவப்பும் சீற்றமுமெல்லாமேன்னுதல். [இன்று என்னைப்பொருளாக்கி] - அஸத்கல்பனான என்னை இன்றுஒரு வஸ்துவாம்படி பண்ணி, " பொருளல்லாதவென்னை " என்றாரிறே. [தன்னை] - ஸத்துக்களுக்கும் ஸ்ப்ருஹணீயனான தன்னை. [என்னுள்வைத்தான்] - தன்னைப்பிறர்க்கு அவகாசமில்லாதபடி முற்றூட்டாக என்னுள்ளே கோடுவேந்துவைத்தான். [அன்று] - அவன் விசேஷ கடாக்ஷம் பெறுவதற்கு முன்புள்ளநாளை யெல்லாவற்றையும் சொல்லுகிறார். இன்றென்கிறது - * மயர்வறமதிநலமருளப்பெற்றவதுக்குப் பின்புண்டான காலத்தை. [என்னைப்புறம்போகப் புணர்த்ததென்செய்வான்] - (பரதந்த்ரனான என்னைப் புறம்போகப்பண்ணிற்று என்செய்கைக்காக? ஸாஹ்யனாகப் பண்ணுகையாகிறது - உபேக்ஷிக்கை.) "இழந்தநாள் இழந்ததும் அவனாலே; பெற்றஇன்று பெற்றதும் அவனாலே" என்றிருக்கிறார். பரதந்த்ரவஸ்து செல்லநிற்கவற்றோ? வரநிற்கவற்றோ? [குன்று இத்யாதி] - இப்படி மதிப்பனானவன், மலைகளைச் சேரவைத்தாற்போலே விளங்காநின்றுள்ள மாடங்கள் சூழ்ந்த திருப்பேரான். [ஒன்றெனக்கருள்செய்ய] - முன்பு கைவிட்டதுக்கு ஹேது சொல்லவுமாம்; இன்று என்னை விஷயீகரித்ததுக்கு ஹேதுசொல்லவுமாம். [உணர்த்தலுற்றேனே] - இதுக்குஒரு மறுமாற்றம் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பஞ் செய்யவேண்டியிராநின்றேன். "இது நாம் சொல்லவேணுமோ? நீரே அறியீரோ?" என்றான்; "*அடியேன் அறியேன்: ஸர்வஜ்ஞரான தேவர் அருளிச்செய்யவேணும்" என்றார். "ஆனால், நாம் உம்முடைய நெஞ்சிலே புக்கிருக்கிறவிடத்தில் ஸம்வதித்திருந்தீர்: அத்தாலேகாணும்" என்றான்; "ஓம், அதுதானுண்டோ? * யானொட்டி என்னுளிருத்துவம்" என்றார்; "அதில்லையாகிலும் புகுந்தபின்பு நம்மையாதரித்தீரே" என்றான்; "'மருவித்தொழும் மனமே தந்தாய்' என்று அதுவும் தேவர்செய்த வித்தனை" என்றார்; "ஓங்காணும்: அதில்லையாகிலும் நம்மோடொக்க விஷயாந்தரங்களையும் விரும்பாதே இருந்தீரே" என்றான்; "'என்னைத் தீமனங்கெடுத்தாய்' என்று அதுவும் தேவரே

---

*என்றதுக்கர்த்தாந்தரம் - அன்றிக்கே ஆரேதிராக இத்யாதி. இந்த த்வதீயார்த்தத்துக்கு, ப்ரணய ரோஷத்தால்வந்த சிவப்பையும் சீற்றத்தையும்சொல்லுகிறது. * கமலபதத்துக்கு - செந்தாமரையர்த்தம்; முந்தினவர்த்தத்துக்கு, "ஸிதவஜ்ஞநிபேக்ஷணாழ்" என்றதுக்குப்போலே "கஉேலெயாவெந" என்றதுக்கும் நெய்தல்போன்ற கருங்கண்ணையுடையவளென்றுபொருள்.*

*'அஸத்கல்பனனவென்னை' என்கிறதுக்கு இங்குபதமேதென்ன-பொருளல்லாத இத்யாதி. "எழிசையின்சுவைதானே" என்றதுக்கநுகுணமாக "தன்னை" என்றதுக்கர்த்தம்-ஸத்துக்களுக்கும் இத்யாதி. முற்றூட்டாக - எல்லாம் ஏகபோகமாக. புறம்போக - விஷயப்ரவணனாய்ப்போக. புணர்த்தது - ப்ரக்ருதியையிட்டு மயக்கினது. கீழுக்கெல்லாம் பாவம் - இழந்தநாள் இத்யாதி. இரண்டும்அவனாலேயென்கிறதென்? என்ன - பாரதந்த்ர இத்யாதி. குன்றென்று சொல்லலாம்படி விளங்குகிற மாடங்கள்சூழ்ந்த திருப்பேரான் இதி பதார்த்தः. "திருப்பேரான்" என்றது - ஸம்போதனை. தாத்பர்யம் - இப்படி இத்யாதி. "ஒன்று" என்றதுக்குபாவம் - முன்புஇத்யாதி. உணர்த்தலுற்றேன் - அறிவிக்கவிசாரியாநின்றேனென்றபடி. "உணர்த்தலுற்றேன்" என்றவநந்தரம் "உற்றேனுகந்துபணிசெய்து" என்று தாமே ஸமாஹிதராகையாலே அவன் நிருத்தரனானது வித்தமாகையாலே, நிருத்தரனானபடியைப் பரக்கஉபபாதிக்கிறார் - இதுநாம்சொல்ல இத்யாதி. 'இதுநாம்சொல்லவேணுமோ' இத்யுத்தரப்ரத்யுத்தரங்கள் - பலிதங்கள். நம்மோடொக்க விஷயாந்தரங்களையும் விரும்பாதேஇருந்தீரே என்றது - நம்பக்கல் ப்ராவண்யம் நடவாநிற்கச்செய்தே விஷயாந்தரங்களில் அபிநிவேசம் கலந்துவாராவில்லையேயென்றபடி. சிலவார்த்தைகளையிவர்க்குச்*

யன்றோ" என்றார்; "இவையொன்றுமில்லையாகிலும் நாம்தந்த * மதிநலத்தை வளர்த்துக் கொடுபோந்தீரே" என்றான்: "'காதல்கடல்புரைய விளைவித்தகாரமர்மேனி' என்று அதுவும் தேவரீரேயன்றோ" என்றார்; இப்படி இவர் முடியத்தொடர்ந்தவாறே பெருங் கடல் மண்டிஞரைப்போலே போக்கற்றான். "இதுக்கு ஈஶ்வரன்சொன்னஉத்தர மேன்?" என்று சீயர் பட்டரைக்கேட்க, "இவர்தலையிலே ஒருபழியை எறட்டு நெடு நாளிழந்த நாம் சொல்லுவதேன்?" என்று லஜ்ஜாவிஷ்டனாய்க் காலாலே தரையைக்கீறி நிற்கு மித்தனைபோக்கி வேறு உத்தரமுண்டோ?" என்றருளிச்செய்தார். அதாவது - "முன்பு ருசியில்லாமையாலே" என்னமாட்டான்: "இப்போது ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகையாலே" என்ன மாட்டான்: ஆனால், பின்னை ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யாதிகள்வருதல் ஸர்வமுக்திப்ரஸங்கம்வருதல் செய்யாதோ வென்னில் ;- அதுசெய்யாது, அடியிலே அத்வேஷமும் இச்சையும் பிறக்கைக்குத்தான் க்ருஷிபண்ணி அது பக்வமாமளவும் பார்த்திருக்கிறவனாகையாலே. அவன்கேட்டதுக்கு ஒரு மறுமாற்றம் சொல்லக்காணாமையாலே "அறிந்தோம்: இதுக்கு ஹேது இங்ஙனேயாகவேணும்" என்று பார்த்தார்: "தன்னுடையஸ்பர்ஶம் ப்ரதிகூலமாகைதவிர்ந்து விலக்காதஸமயம் பார்த்திருந்தானாதல், தன்னையொழிந்தவற்றில் ஸாதநபுத்தி தவிருமளவும் பார்த் திருந்தானாதலாக வடுக்கும்" என்று பார்த்தார். ஆனால், இதுதன்னை அவனுத் தரமாக அருளிச் செய்யாதொழிவானேன்? என்னில்; "சைதந்யப்ரயுக்தமாய் வருகிற அத் வேஷத்தை ஸாதநமென்னமாட்டானே: உபாயபாவம் தன்தலையிலேயாய்த்தே: நெடு நாள் இவர்தலையிலே பழியிட்டிழந்திருந்த நாம் எத்தைச் சொல்லுவது?" என்று பேசாதே யிருந்தான். "ஹ்ரீரேஷாஹிமமாதுலா" (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜித்துநிற்குமவனிறே; இவர்தாம் எடுத்துவைத்து வார்த்தைசொல்லும்படியாய்த்து அவன் நிலை. சைதந்யப்ரயுக்தமான ருசிதான் ஸ்வரூபாதிரேகி யன்றிறே. "உம்

---

சொல்ல, இவர் அதுக்கெல்லாம் அந்யதாஸித்திசொல்ல, நிருத்தரனும் ப்ரகாரத்தைக்கீழே சொல்லி, இங்ஙனன்றிக்கே அநாதிகாலம் இவரைக் கைவிட்டிருந்த குற்றம் தன்மேலேயாய் அவ்வழியாலும் அவன் நிருத்தரனானப்ரகாரத்தை ஆப்தஸம்வாதத்தாலே ஓர்ப்பிப்பிக்கிறார் - இதுக்கு ஈஶ்வரன் இத்யாதி. அதுவென் ? ருச்யாதிகளில்லாமையாலே யென்னவொண்ணாதோவென்ன - அதாவது இத்யாதி. அதாவது - உத்தரமில்லாமையாவதென்றபடி. "'மாட்டான்' ஆகையாலே நிர்ஹேதுகம்" என்றபடி. ஆனால் - நிர்ஹேதுகமானாலென்றபடி. இப்படி இவன்நிருத்தரனானால் இவர் கேட்டஶங்கைக்கு ஸமாதாநம்பண்ணினாரோவென்ன ; தாமே ஸமாதாநம்பண்ணிக்கொண்டு போகிறாரென்கிறார் - அவன்கேட்டதுக்கு இத்யாதி. ஸ்பர்ஶமென்றது - ரக்ஷணமென்றபடி. இதுதன்னை என்றது - அத்வேஷத்தையும் ஸாதநபுத்தி தவிருகையையுமென்றபடி. "இவர்தலையிலே" இத்யாதிவாக்யவிவரணம் - நெடுநாள் இத்யாதி. "ஆகையாலே 'நெடுநாள்'" என்றுகூட்டுவது. "பழியிட்டு இழந்திருந்த நாம்" என்கைக்கு தன்மேலே குறையாக நினைத்திருக்குமோவென்ன - ஹ்ரீ ரேஷாஹி இத்யாதி. "பூஷிதஜ்ஞாநவஞ்ஞாநோ ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யஸ்ய ஸௌராஜ்யம் விநேஷ்ட்ரோ வஞ்சிதோ யோ வஞ்சிதஃ" இத்யாரண்யகாண்டே (௧௦-௧). அவன் லஜ்ஜாவிஷ்டனான ப்ரகாரத்தினெல்லையை யருளிச்செய்கிறார்-இவர்தாம் இத்யாதி. "ஆகையாலே 'இவர்தாமெடுத்துவைத்து'" என்றுகூட்டுவது. எடுத்துவைத்து - லஜ்ஜையினாலே கவிழ்ந்திருந்தவனை யெடுத்துப்பிடித்தென்றபடி. இவர்க்கு அத்வேஷமேயன்றிக்கே ருசியுமுண்டே; அது ஸாதநமாகாதோ ? என்ன - சைதந்ய இத்யாதி. ஸாக்ஷாத்ப்ரஶ்நத்துக்கு உத்தரம் - உம்முடைய

முடையப்ராப்யம் பெற்றீராகில் அதுவேயமையாதோ?'' என்ன, அதுவே யமையுமென்கி ரூர்; தேங்காய்க்கு இளநீர்புக்கவழி ஆராய்ந்தன்றிறே விடாய்த்தவன் இளநீர்குடிப்பது?

## பத்தாம் பாட்டு.

உற்றேன்உகந்துபணிசெய்துஉனபாதம்
பெற்றேன்ஈதே இன்னம்வேண்டுவதெந்தாய்!
கற்றார்மறைவாணர்கள்வாழ்திருப்பேராற்கு
அற்றாரடியார்தமக்கு அல்லல்நில்லாவே.

ஆ.—(உற்றேன்.) - எம்பெருமான், ஓர் உத்தரங்காணாமை ''உம்முடைய திறத்தில் நான் செய்த செயலெல்லாம் நீர் சொன்னபடியே நிர்ஹேதுகமாகவேசெய்தேன்; அது நிற்க:இனி நான் செய்யவேண்டுவதென்?'' என்ன;—

''உன்திருவடிகளைப் பெற்றேன்; பெறுகிறேன்; உகந்து பணிசெய்து கொண்டு உன்திருவடிகளைப்பெற்றேன்; இன்னம் உன் திருவடிகளில் அடிமைசெய்யும் இதுவே எனக்கு வேண்டுவது எந்தாய்!'' என்று ஆழ்வார்சொல்ல, எம்பெருமானும், ''அப்படியேசெய்கிறோம்'' என்றருளிச்செய்ய, ஆழ்வாரும், ''திருப்பேர்நகரான் திரு வடிகளைப்பற்றினார்க்கு ஒரு துக்கவமில்லையாகாதே!'' என்கிறார்.

ஒ.- பத்தாம்பாட்டில், இவர் கேட்ட அதுக்கு ஒரு ஹேது காணாமையாலே நிருத்தரனாய் ''உமக்கு மேல் செய்யவேண்டுவது சொல்லீர்?'' என்று எம்பெருமான் அருளிச்செய்ய; உன்னைக்கிட்டி ப்ரீதிபூர்வகமாக அடிமை செய்துகொண்டு உன்திருவடி களை அநுபவிக்கப்பெற்றேன். இதுவே இன்னம் வேண்டுவது என்று ஆழ்வார் விண் ணப்பஞ்செய்ய; அவனும் ''அப்படியே செய்கிறோம்'' என்ன, ப்ரீதராய், திருப்பேர் நகரான் திருவடிகளை ஆஶ்ரயித்தார்க்கு ஒருதுக்கவம் இல்லையாகாதே என்கிறார். அற்றா ரான அடியார்.

ப.—அநந்தரம், கைங்கர்யப்ரதிஸம்பந்தியான அவன் திருவடிகளை யடிமை செய்துபெற்றேன்; யாவதாத்மபாவி எனக்கு இதுவேயமையு மென்கிறார்.

உற்றேன் - நிர்ஹேதுகமாக உன் திருவடிகளைக் கிட்டினேன்; (அத்தாலே), உகந்து - ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு, பணிசெய்து - வாசிகமானவடிமைசெய்து, உன பாதம்பெற்றேன் - பரமப்ராப்யபூதனான உன் திருவடிகளைப்பெற்றேன்; எந்தாய் - நிருபாதிகபந்துவானவனே! ஈதே - இவ்வடிமையே, (இவ்வாத்மாவுக்கு), இன்னம் - உள்ளதனையும், வேண்டுவது - அபேக்ஷிதம்; (இதுண்டாகவே), கற்றார் - (ஆசார்யமுகத் தாலே ஜ்ஞாதவ்யங்களை) அப்யஸித்தவர்களாய், மறை - ஶ்ருதமான வேதார்த்தங்களை, வாணர்கள் - நிர்வஹிக்க ஸமர்த்தரானவர்கள், வாழ் - அநுபவத்தோடே வாழுகிற, திருப்பேராற்கு - திருப்பேரிலேவர்த்திக்கிற உனக்கு, அற்றார் - அநந்யார்ஹமான,

---

இத்யாதி. ப்ராப்யம்பெற்றால் வந்தவழியாராயவேண்டா என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - தேங் காய்க்கு இத்யாதி. ''குன்றென்னத்திகழ்மாடங்கள் சூழ்திருப்பேரான் - இன்றென்னைப்பொரு ளாக்கி' என்றுதொடங்கி, 'உணர்த்தலுற்றேனே' இத்யந்வயம். (௯)

அடியார்தமக்கு - அடியார்தமக்கு; அல்லல் - அநுபவப்ரதிபந்தக து:க்கங்கள், நில்லாவே - தன்னடையே நில்லாதிறே: அற்றாருக்கடியாரென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், இவர் கேட்ட இதுக்கு ஒரு ஹேது காணாமையாலே நிருத்தரனாய், "உமக்கு மேல் செய்யவேண்டுவது என்?" என்ன; ப்ரீதிபூர்வகமாக அடிமைசெய்யப்பெற்றேன், இதுவே இன்னம் வேண்டுவதென்கிறார்.

'அவன்தானே செய்தான் என்னுமன்று அவனுக்கு வைஷம்யநைர்க்ருண்யமும் ஸர்வ முக்தியும் ப்ரஸங்கியாதோ?' என்னில்;—இத்தலையில் ருசியை அபேக்ஷித்துச் செய்கையாலே அவனுக்கு அவை தட்டாது. அது ஹேதுவென்று ஈஶ்வரனுக்குஉக்தமானாலோ? என்னில்,—அது உபாயமாகமாட்டாது. ஃபலவ்யாப்தமானதிறே உபாயமாவது. இந்த ருசி அதிகாரிஸ்வரூபமாகையாலே தத்விஶேஷணமாமித்தனை. உபாயம் ஸஹகாரி நிரபேக்ஷமாகையாலும் இந்தருசி உபாயமாகமாட்டாது. இது உபாயமல்லாமையாலே இவர்க்கு இல்லை என்னலாம்; ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாக அவனுக்கு உண்டென்னவுமாம். [உற்றேன்] - கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே கிட்டிக்கொடுநின்றேன். ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு திருவாய்மொழிபாடி உன் திருவடிகளை அநுபவிக்கப் பெற்றேன். உகந்து பணிசெய்கை - ஸாயுஜ்யமாய், மேல் ஸாயுஜ்யமாகச் சொல்லுகிறதன்று; இரண்டும் ஏககாலத்திலே யுள்ளதாகையாலே. [ஈதே இன்னம் வேண்டுவது] - இதுதானே மாறிமாறி யாவதாத்மபாவியாய்ச் செல்லுகையிறே. புநராவ்ருத்தியின்றிக்கே யொழிகையாவது - மீளாதொழிகை. விபரீதமாகிற தன்றே. [எந்தாய்] - இவ்வநுபவம் ஸ்வரூபாநுரூபமென்கிறது. இத்தலைக்கு ஶேஷத்வமும் தேவர்க்கு ஶேஷித்வமுமிறே ஸ்வரூபம். இவர் அபேக்ஷித்தபடியே "செய்கிறோம்" என்ன, ப்ரீதராய் அருளிச்செய்கிறார்: [கற்றார்] - ஓர் ஆஸநத்திலிருந்து கேட்கின்றவர்கள். [மறைவாணர்கள்வாழ்] - வ்யாஸபதம் செலுத்தக்ஷமரானவர்கள் அநுபவித்து வர்த்திக்கிற தேஶம். [திருப்பேரார்க்கு] - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முகத்தை மாறி ஸ்வபரதமாகச் சொல்லுகிறார் என்னுதல், திருப்பேரானை உனக்கு என்னுதல். [அற்றாரடியார்] - திருப்பேர் நகரானுக்கு அற்றரான அடியார் என்னுதல், அவனுக்கு அற்றவர்களுக்கு அடியார் என்னுதல். [அல்லல் நில்லாவே] - ஒரு து:க்கமும் நில்லாதென்கிறார்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவர் கேட்ட இதுக்கு ஒருஹேது காணாமையாலே நிருத்தரனாய், "உமக்கு மேல் செய்யவேண்டுவதேன்?" என்ன, "ப்ரீதிபூர்வகமாக அடிமை செய்யப்பெற்றேன்: இதுவே யின்னம்வேண்டுவது" என்கிறார். "அவன்தானே செய்தான்" என்னுமன்று, அவனுக்கு வைஷம்யமும் நைர்க்ருண்யமும் ஸர்வ முக்தியும் ப்ரஸங்கியாதோ வென்னில்; இத்தலையில் ருசியை யபேக்ஷித்துச்செய்கையாலே அவனுக்கு அவை தட்டாது. அதுஹேதுவென்று ஈஶ்வரனுக்குஉக்தமா

பத்தாம்பாட்டு - உற்றேன் இத்யாதி. "உற்றேன்" என்றுதொடங்கி "இன்னம்வேண்டுவது" என்னுமளவும் கடாக்ஷித்து, அதுக்கு அநுகுணமாக ப்ரஶ்நோத்தரமுகத்தாலே ஸங்கதி—இவர்கேட்ட இத்யாதி. கீழிற்பாட்டில் உக்தமான சங்காபரிஹாரங்களை ஸ்த்ரநிஷ்டனுக்கு நிகங்யாயத்தாலே த்ருடீகரித்தருளுகிறார் - அவன்தானே இத்யாதி. அது - அந்தருசி. மாட்டாதபடியெப்படி? என்ன - ஃபல

மானுலோ வென்னில்; அது உபாயமாகமாட்டாது. ஸலவ்யாப்தமானதிறே உபாயமாவது ; இந்தருசி அதிகாரிஸ்வரூப மாகையாலே தத்விஸேஷணமாமித்தனை. உபாயம் ஸஹகாரிநிரபேக்ஷமாகையாலும், இந்தருசி யுபாயமாகமாட்டாது. இது உபாயமாகாமையாலே இவர்க்கில்லை என்னலாம், ஸர்வமுக்திப்ரஸங்கபரிஹாரார்த்தமாக அவனுக்கு உண்டென்னவுமாம்.

[உற்றேன்] - கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே கிட்டிக்கொடு நின்றேன். [உகந்துஇத்யாதி] - ப்ரீதிப்ரேரிதனுய்க்கொண்டு திருவாய்மொழிபாடி உன்திருவடிகளை யநுபவிக்கப்பெற்றேன். உகந்துபணிசெய்கை - ஸாத்யமாய், மேல் ஸாத்யமாகச்சொல்லுகிறதன்று; இரண்டும் ஏககாலத்திலேயுள்ளதாகையாலே. [ஈதேயின்னம் வேண்டுவது] - இதுதானே மாறிமாறி யாவதாத்மபாவியாய்ச் செல்லுகையிறே. புநராவ்ருத்தியின்றிக்கே யொழிகையாவது- மீளாதொழிகை. அப்ராப்தமாயிருக்கிறதோவென்னில், [எந்தாய்] - இவ்வநுபவம் ஸ்வரூபப்ராப்தமென்கிறது. இத்தலைக்கு ஸேஷத்வமும் தேவர்க்குஸேஷித்வமுமிறே ஸ்வரூபம். இவர் அபேக்ஷித்தபோதே அவனும் "செய்கிறோம்" என்ன, ப்ரீதராய் அருளிச்செய்கிறார்: [கற்றார்] - ஓராஸநத்தின்கீழேயிருந்து போக்கினவர்கள். [மறைவாணர்கள்வாழ்] - வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள் அநுபவித்து வர்த்திக்கிற தேஸம். [திருப்பேராற்கு] - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முகத்தைமாறி ஸ்வமதமாகச் சொல்லுகிறேனென்னுதல், திருப்பேரானுன உனக்கென்னுதல். [அற்றாரடியார்] - திருப்பேர்நகரானுக்கு அற்றாரான அடியாரென்னுதல், அவனுக்கு அற்றவர்களுக்கடியாரென்னுதல். [அல்லல்நில்லாவே] - ஒருது:கங்களும் இவர்கள் பக்கல் நில்லாது.
(௧௦)

வ்யாப்தம் இத்யாதி. இந்தருசிக்கு உபாயகோடியந்தர்ப்பாவமில்லையாகில் பின்னை யெதிலே யந்தர்ப்பூதமென்ன - இந்தருசி இத்யாதி. பரிஹாரார்த்தம் - உபாயம் ஸஹகாரி இத்யாதி. "ஆக 'இது உபாயமாகாமையாலே'" என்று கூட்டிக்கொள்வது.

பணிசெய்கையாவது - வாசிகமானவடிமைசெய்கை; அதாவது - திருவாய்மொழி பாடுகை; இத்தையருளிச்செய்கிறார் - ப்ரீதி இத்யாதி. உகந்துபணிசெய்கை பாதம்பெறுகைக்கு ஸாதநமோவென்ன - உகந்து பணிசெய்கை இத்யாதி. இரண்டும் பலமென்றபடி. இரண்டும் ஏககாலத்திலேயுள்ளதாகையாலே என்றது - திருவாய்மொழிபாடுகையும் அவன் திருவடிகளைப் பெறுகையும் ஏககாலத்திலேயுள்ளதாகையாலே யென்றபடி. "நவமாநரூபேக" என்கிற தேஸத்திலே எல்லாரும் போக ஆசைப்படாநிற்க, நீர் "ஈதேயின்னம் வேண்டுவது" என்பானென்? என்ன - இதுதானே இத்யாதி. "செல்லுகையிறே" "வேண்டுவது" என்று கூட்டிக்கொள்வது. இது மாறிமாறிச்செல்லுகை யாவதாத்மபாவியாகக்கூடுமோ, புநராவ்ருத்தியன்றோ வேண்டுவது? என்ன - புநராவ்ருத்தி இத்யாதி. மீளாதொழிகை - அவிச்சேதமாக மாறிமாறிவருகையென்றபடி. மீளாதொழிகையிறே, அத்தை "ஈதேயின்னம் வேண்டுவது" என்கிறதென்றபடி. உபாதகர் - இத்தலைக்கு இத்யாதி. பேறுக்கெல்லாம்அபேக்ஷிக்கை இவர் அபேக்ஷித்த இத்யாதி. போக்கினவர்கள் - அப்யஸித்தவர்கள். ஆசார்யமுகத்தாலே [illegible] அப்யஸித்தவர்களாய், வேதத்துக்கு நிர்வாஹகரானவர்கள் வாழுகிற திருப்பேரென்னு [illegible]. வாணர்கள் - நிர்வாஹகர்கள். "எந்தாய்" என்ற ஸம்போதநத்துக்குச்சேர - உனக்கென்னுதல் என்றது. அற்றாரான அடியாரென்னுதல், அற்றார்க்கடியாரென்னுதல், அல்லல் - து:கம்.
(௧௦)

## பதினோராம் பாட்டு.

நில்லா அல்லல்நீள்வயல்சூழ் திருப்பேர்மேல்
நல்லார்பலர்வாழ் குருகூர்ச்சடகோபன்
சொல்லார்தமிழ்ஆயிரத்துள் இவைபத்தும்
வல்லார்தொண்டராள்வதுசூழ்பொன்விசும்பே.

ஆ.—(நில்லாவல்லல்) - "அவன் திருவடிகளை யாஶ்ரயித்தார்க்கு அல்லல் நில்லாவே: இது நிஶ்சிதம்" என்றுகொண்டு இத்தையே பின்னையும் அநுபாஷித்து, திருப்பேரை ப்ரதிபாதித்த இத்திருவாய்மொழி வல்லார் இட்டவழக்காம் திருநாடு என்கிறார்.

ஒ —நிகமத்தில், இத்திருவாய்மொழி வல்லார் இட்ட வழக்காம், விலக்ஷண தேஜோரூபமான திருநாடு என்கிறார்.

[நீள்வயல் என்று தொடங்கி] - பெருத்த வயல்சூழ்ந்திருந்துள்ள திருப்பேர் மேலே விலக்ஷணர் பலரும் தம்மை அநுபவித்து க்ருதார்த்தரான திருநகரியையுடைய ஆழ்வாருடைய சொல் சேர்ந்த தமிழான ஆயிரம் திருவாய்மொழியிலும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக ஸ்வாராஜ்ய ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

அல்லல் - துக்கத்துக்கு, நில்லா - வாஸஸ்தாநமல்லாத தேஶமாய், நீள் வயல்சூழ் - பெரிய பரப்பையுடைத்தான வயல்களாலேசூழப்பட்ட, திருப்பேர்மேல் - திருப்பேர்விஷயமாக, நல்லார் - விலக்ஷணபுருஷரானார், பலர் - பலரும், வாழ் - திருவாய்மொழிகேட்டுவாழுகிற, குருகூர்ச்சடகோபன் - திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய, சொல்ஆர் - சொல்லாய்ச்சேர்ந்திருக்கிற, தமிழ்-தமிழான, ஆயிரத்துள்-, இவைபத்தும்வல்லார்- இவைபத்தையும் அப்யஸிக்க வல்லரான, தொண்டர் - ஶாமவதரானவர்கள், ஆள்வது - தாங்கள்நிர்வாஹகராய் நடத்துமது,—சூழ் - அபரிச்சின்னமாய்க் கொண்டு வ்யாப்தமாய், பொன் - தேஜோமயமாய், விசும்பு - பரமவ்யோம ஶப்தவாச்யமான பரமபதம். இது கலித்துறை.

இ—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸிக்க வல்லார் இட்டவழக்கு பரமபதம் என்கிறார்.

[நில்லா அல்லல்] - து:கங்களானவை, "இது நமக்கு தேஶமன்று" என்று தானே விட்டுப்போம். பெருத்த வயல் சூழ்ந்திருந்துள்ள திருப்பேர் மேலேயாய்த்துச் சொல்லிற்று. விலக்ஷணர் பலரும் தம்மை அநுபவித்து இனியராயிருக்கும் திருநகரியையுடையராயிருக்கும் ஆழ்வார் அருளிச்செய்தது. "நல்லார் நவில் குருகூர்"- "ஸர்வதோஹிமதஸஹஸ:". [சொல்லார் இத்யாதி] - சொல்சேர்ந்த தமிழான ஆயிரம் என்னுதல்; "வாசோயுக்தியுக்தி" என்கிறபடியே, இனிமைக்குச் சொல்லே அமைந்த தமிழான ஆயிரம் என்னுதல். [வல்லார் தொண்டர்] - இப்பத்தை அப்யஸிக்க வல்லார், "செஞ்சொற்கவிகள்" என்கிறபடியே வாசிகமான அடிமைசெய்யும் வைஷ்ணவர்கள். [ஆள்வது சூழ்பொன் விசும்பே] - நிரதிஶய தேஜோரூபமான பரமபதத்தை யாய்த்து ஆளுவது; இத்திருவாய்மொழி அப்யஸித்தவர்கள் சென்றால் "ஆண்மின்கள் வானகம்" என்றாய்த்து, அங்குள்ளார் சொல்லுவது.

ஈடு. — நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார் இட்டவழக்கு பரமபதமென்கிறார்.

[நில்லாவல்லல்]-துக்கங்களானவை, "இது நமக்குதேசமன்று" என்று தானே விட்டுப்போம். [நீள்வயல் இத்யாதி]-பெருத்தவயல்சூழ்ந்திருந்துள்ள திருப்பேர்மேலேயாய்த் துச் சொல்லிற்று. [நல்லார் இத்யாதி] - விலக்ஷணர்பலரும் தம்மையநுபவித்து இனிய ராயிருக்கும் திருநகரியை யுடையராயிருக்கும் ஆழ்வார் அருளிச்செய்தது. "நல்லார்நவில் குருகூர்"-"[illegible]" (ஸர்வதாபி கதஸ்ஸத்பி:). [சொல்லார் இத்யாதி]-சொல்சேர்ந்த தமிழான ஆயிரமென்னுதல்; "[illegible]" (பாட்யே கேயேசமதுரம்) என்கிறபடியே, இனிமைக்குச் சொல்லேயமைந்த தமிழான ஆயிரமென்னுதல். [இப்பத்தும்வல்லார்தொண்டர்] - இத்தையப்ஸிக்கவல்லார், "செஞ்சொற் கவிகள்" என்கிறபடியே வாசிகமான அடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்கள். [ஆள்வது சூழ்பொன்விசும்பே] - நிரதிசயதேஜோரூபமான பரமபதத்தையாய்த்து ஆளுவது? இத்திருவாய்மொழி யப்யஸித்தவர்கள் சென்றால், "ஆண்மின்கள்வானகம்" என்றாய்த்து, அங்குள்ளார் சொல்லுவது. (கக)

*நிகமம் - நில்லாவல்லல் இத்யாதி. "வல்லார்தொண்டர், ஆள்வதுசூழ்பொன்விசும்பே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி.*

*"நில்லாவல்லல்" என்றது - அநுவாதமாதல்; "இப்பத்தும் வல்லாரான தொண்டர்பக்கல் அல்லல்நில்லாது - ஆள்வதுசூழ்பொன்விசும்பு" என்று இப்பாட்டுக்கு யோஜனையாதல். திருநகரியிலே விலக்ஷணர் பலருண்டென்னுமதுக்கு ப்ரமாணம் - நல்லார் இத்யாதி. நவிலுகை - வர்த்திக்கை யும், சொல்லுகையும். திருவிருத்தம். உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் - ஸர்வதா இத்யாதி. "[illegible]" இத்யாதி. ஸங்க்ஷேபே. "சொல்லார்" என்றதுக்கு - சொல் செறிந்தவென்னுதல்; ஆர்தல் - அமைதலாய், சொல் தானேயமைந்த வென்னுதலென்றாய்த்தத்வ யம். "[illegible]" இதி பாலகாண்டே (ச). "பொன் - சூழ்-விசும்பு" என்றதுவயிப்படி. தேஜஸ்ஸாலே சூழ்ந்த பரமபதமென்றபடி. பொன் - தேஜஸ்ஸு. ஹிதம் - இத்திருவாய்மொழி இத்யாதி. 'நீள்வயல்சூழ்' என்று தொடங்கி, 'இப்பத்தும்வல்லார் தொண்டர்பக்கல் - அல்லல்நில்லா; அவர்களாள்வது - 'பொன் - சூழ் - விசும்பே' இத்யந்வய:. இத்தால் - இப்பத்தை யப்யஸித் தவர்களுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் ஹிதமாகச் சொல்லுகிறதென்றபடி. (கக)*

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—[illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible] ஸ்ரீவத்ஸசிஹ்நமிஸ்ரை: [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

திருமால்தம்பால்விருப்பஞ்செய்கின்றநேர்கண்டு
அருமாயத்தன்றகல்விப்பானென்? - பெருமால்தீ
இன்றென்பாற்செய்வானென்னென்ன இடருற்றுநின்றான்
தன் ஊடுகழ்மாறனைத்தான்சூழ்ந்து.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# ஒன்பதாம் திருவாய்மொழி—சூழ்விசும்பு - ப்ரவேசங்கள்.

ஆ.—(சூழ்விசும்பு.) - இப்படி நிர்ஹேதுகமாக எம்பெருமானோடே ஸம்ச்லிஷ்டரான ஆழ்வார், தாம் திருநாடேற எழுந்தருளும்படியையும், தாம் எழுந்தருளும்போது ஸர்வலோகங்களும் தம்மைக் கொண்டாடும்படியையும் திருவுள்ளத்தாலே ப்ரத்யக்ஷீகரித்து, அந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

ஒ.—ஒன்பதாம் திருவாய்மொழியில், பரமயோகிகளுக்கு ஸம்பவிப்பதான பகவஜ்ஜ்ஞாநவைராக்ய பக்திப்ரகாரங்களை இத்திருவாய்மொழியளவும் அநுபவித்து இனி இங்கிருந்தநுபவிப்பதொன்றுமில்லாமையாலே, 'திருநாடேறப் போகவேணும்'' என்று மநோரதிக்கிற ஆழ்வாரை சடக்கெனக் கொடுபோகவேணுமென்று விரைகிற எம்பெருமான் இவர்க்கு அங்குத்தைக்கீடாம்படி மிகவும் விடாய்பிறக்கைக்காகத் திருநாட்டுக்குப் போகைக்கீடாக வேதாந்தங்களில் ப்ரஸித்தமான அர்ச்சிராதிமார்க்கத்தையும், அங்குள்ளார்பண்ணும் ஸத்காரங்களையும் அவ்வழியேபோய்ப் புகக்கடவ திருநாட்டையும், அங்கே எம்பெருமான் அயர்வறுமமரர்கள் ஸேவிக்கப் பிராட்டியாரோடே வீற்றிருந்தருளும்படியையும் பரமப்ராப்யரான அயர்வறுமமரர்கள்நடுவே தாம் ஆநந்தநிர்ப்பரராய் இருக்கும்படியையும் காட்டியருளக்கண்டு ப்ரீதராய் அத்தை அந்யாபதேசத்தாலே பேசியநுபவிக்கிறார்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிறுதியாக பகவத்விஷயமாகத் தமக்கு அநுபவப்ராவண்யரூபமான பரபக்தி நடந்தபடியையருளிச்செய்து, அநுபவத்தில் அந்விதரான இவர்க்குப் பரிபூர்ணாநுபவத்தில் ப்ராவண்யாதிசயம்பிறக்கைக்கு உறுப்பாக இவரைக்கொண்டுபோய் அநுபவிப்பிப்பதாக நினைத்து, அர்ச்சிராதிமார்க்கம்முதலாக ப்ராப்திபர்யந்தமானப்ரயோஜநாம்சத்தைப் பரஜ்ஞாநவிஷயமாம்படி ப்ரகாசிப்பிக்க நினைத்த ஸர்வேச்வரனுடைய போக்ய குணபூர்த்தியையும், நிருபாதிக சேஷித்வத்தையும், அநந்யார்ஹதாபாதகத்வத்தையும், போக்யத்வபூர்த்தியையும், அதுக்கடியான ச்ரிய:பதித்வத்தையும், சேஷித்வசிஹ்நத்தையும், ஸமுத்ரசாயித்வாதிகளால்வந்த ஸாவயிகத்வத்தையும், ஆச்ரிதஸௌலப்யத்தையும், பரமபதநிலயத்வத்தையும், ஸத்காரத்தையும் அநுபவித்து, ஏவம்பூதனான ஸர்வேச்வரன், முக்தராய்ப்போகிற பாகவதர்க்கு மந்தவ்யமான அர்ச்சிராதிமார்க்கத்தையும், அங்கு உண்டான ஆதிவாஹிக ஸத்காரப்ரகாரங்களையும், தேசவிசேஷப்ராப்தியையும், நித்யஸூரி பரிஷதந்தர்பாவத்தையும் அபரோக்ஷிப்பிக்க, அதிலே அத்யந்தஹ்ருஷ்டராய், தாம் அபரோக்ஷித்த க்ரமத்திலே முக்தராய்ப்போகிற பாகவதருடைய ஸத்கார ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

இ.—ஒன்பதாம் திருவாய்மொழியில், பரமயோகிகளுக்குப் பிறக்கக்கடவதான பரபக்தி இவர்க்குப்பிறந்து தத்ப்ரகாரங்களை இத்திருவாய்மொழியளவும் வர அநுபவித்து இனியிங்கிருந்து அநுபவிப்பதொன்றுமில்லாமையாலே, "பரமபதத்திலே போகவேணும்'' என்று மநோரதிக்கிற இவரைத் தம்மிற்காட்டில் சடக்கெனக் கொடுபோகவேணுமென்று விரைகிற ஈச்வரன், அங்குத்தை அநுபவத்துக்கீடாம்படி

*மிகவும் விடாய்பிறக்கைக்காக, தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைக் கண்ணாலே கண்டாற்போலே விஶதமாக ப்ரகாஶிக்கும்படி பண்ணியருளினான். அதாகிறது-வேதாந்தங்களில் ப்ரஸித்தமான அர்ச்சிராதிமார்க்கத்தையும் ஶரீரவிஶ்லேஷ ஸமயத்தில்வரும் க்லேஶமெல்லாம் ஆறும்படி தான்வந்து முகங்காட்டும்படியையும் மார்க்கஸ்தரான புருஷர்களுடைய ஸத்காரங்களையும் அம்மார்க்கத்தாலே போய்ப் புகக்கடவ பரமபதத்தையும், நித்யஸூரிகள் வந்து ஆதரிக்கும்படியையும், பிராட்டிமாரும் ஸ்ரீவைகுண்டநாயனும் எதிரேவந்து ஆதரிக்கும்படியையும், நித்யஸூரிகள் ஸேவிக்கப் பிராட்டிமாரோடே வீற்றிருந்தருளுகிறபடியையும், பரமப்ராப்யரான நித்யஸூரிகள் நடுவே தாம் ஆநந்தநிர்ப்பரராயிருக்கும்படியையும் காட்டியருளக்கண்டு ப்ரீதராய், அத்தை அந்யாபதேஶத்தாலே பேசி யநுபவிக்கிறார். தமக்குஅவன் பண்ணிக்கொடுத்த பேற்றை வைஷ்ணவர்களெல்லாரும் பெற்றார்களாகப் பேசுகிற இது, அந்யாபதேஶமாவது ; அது தனக்கு ப்ரயோஜநம் -இங்குள்ளார் "நமக்கு ஆழ்வார் பேறு தப்பாது" என்றிருக்கைக்காக.*

ஈடு —பரமயோகிகளுக்குப் பிறக்கக்கடவதான பரபக்தி இவர்க்குப்பிறந்து, தத்ப்ரகாரங்களை இத்திருவாய்மொழியளவும்வர அநுபவித்து, இனி இங்கிருந்தநுபவிக்குமதொன்றில்லாமையாலே "பரமபதத்தேறப் போகவேணும்" என்று மநோரதிக்கிற இவரைத் தம்மிற்காட்டில் சடக்கெனக்கொடுபோகவேணும் என்று விரைகிற ஈஶ்வரன், அங்குத்தை யநுபவத்துக்கீடாம்படி மிகவும் விடாய்பிறக்கைக்காக தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைக் கண்ணாலேகண்டாற்போலே விஶதமாக ப்ரகாசிக்கும்படி பண்ணியருளினான். அதாவது - வேதாந்தங்களில் ப்ரஸித்தமான அர்ச்சிராதிமார்க்கத்தையும், ஶரீரவிஶ்லேஷ ஸமயத்தில்வரும் க்லேஶமெல்லாம் ஆறும்படி தான்வந்து முகங்காட்டும்படியையும், மார்க்கஸ்த்தரான புருஷர்களுடைய ஸத்காரங்களையும், அம்மார்க்கத்தாலேபோய்ப் புகக்கடவ பரமபதத்தையும் நித்யஸூரிகள் வந்து ஆதரிக்குபடியையும், பிராட்டிமாரும் ஸ்ரீவைகுண்டநாயனும் எதிரேவந்து ஆதரிக்கும்படியையும் நித்யஸூரிகள் ஸேவிக்கப் பிராட்டிமாரோடே வீற்றிருந்தருளுகிறபடியையும், பரமப்ராப்

சூழ்விசும்பு ப்ரவேஶம் ; அடியே தொடங்கி இத்திருவாய்மொழியளவும் இவர்க்கு உண்டான ஆகாரங்கள் பரபக்த்யவஸ்த்தையில் விகாரமானவை என்றருளிச்செய்யாநின்று கொண்டு, இத்திருவாய்மொழியில் இவர்க்கு உண்டான ஆகாரம் பரஜ்ஞாநாவஸ்த்தையில் விகாரமென்று அருளிச்செய்கிறார் - பரமயோகிகளுக்கு, இத்யாதி. உக்தத்தை விவரிக்கிறார் - அதாவது இத்யாதி அதாவதென்றது - விஶதமாக ப்ரகாசிக்கும்படி பண்ணியருளினதையாவதென்னபடி. வேதாந்தங்களில் ப்ரஸித்தமான என்றது - "தேऽர்ச்சிஷமபிஸம்பவந்தி" இத்யாதியைப்பற்ற. "தேவயாநம் ஸ ஆஸாத்³ய" [illegible] "ஶாகாஸ்ருஷ்டி" [illegible] இத்யாதிகளும் இங்கே யநுஸந்தேயம். "ஸ்வாத்மா" [illegible]" என்றத்தைப்பற்ற - தான்வந்துமுகங்காட்டும்படியையும் என்றது. "தொழுதனர்உலகர்கள்" என்று தொடங்கி "வாசலில் வானவர் - எமதிடம்புகுதுக" என்றுமான வும் கடாக்ஷித்து-மார்க்கஸ்த்தரான இத்யாதி. "மாதவன் வைகுந்தம்புகவே" என்றத்தைப்பற்ற - அம்மார்க்கத்தாலே இத்யாதி. "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்றத்தைக் கடாக்ஷித்து - நித்யஸூரிகள் இத்யாதி. "வந்தவரெதிர்கொள்ள" என்றத்தைப்பற்ற - பிராட்டிமாரும் இத்யாதி. "மாமணிமண்டபத் தந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றத்தைக்

யரான நித்யஸூரிகள்நடுவே தாம் ஆநந்தநிர்ப்பரராயிருக்கும்படியையும் காட்டியருளக் கண்டு ப்ரீதராய், அத்தை அந்யாபதேஶத்தாலே பேசி யநுபவிக்கிறார். தம்க்கு அவன் பண்ணிக்கொடுத்தபேற்றை வைஷ்ணவர்களெல்லாரும் பெற்றார்களாகப்பேசின இது - அந்யாபதேஶமாவது ; அதுதனக்கு ப்ரயோஜநம் - இங்குள்ளார் "நமக்கும் ஆழ்வார்பேறு தப்பாது" என்றிருக்கைக்காக.

---

## முதற் பாட்டு.

---

சூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின
ஏழ்பொழிலும்வளமேந்தியஎன்னப்பன்
வாழ்புகழ்நாரணன்தமரைக் கண்டுகந்தே.

*ஆ.— திருநாடேறப்போகையிலே ப்ரவ்ருத்தரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டுகந்து, அசேதநமான மேகங்களுங்கூட, இவர்கள் போகக்கடவிய ஆகாசத்தை யெல்லாம் வ்யாப்தித்துக்கொண்டுநின்று தூர்யகோஷத்தைப்பண்ணின; கடல்களாகிறவை திரைகளாகிற கையெடுத்து ஆடின; இப்படி ஸர்வலோகங்களும்மங்களமான செயல்களைச் செய்தன என்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், திருநாட்டுக்குப்போக உபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்ட ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்தாவரஜங்கமங்களுக்குப் பிறந்த விக்ருதியை அருளிச்செய்கிறார்.*

*[சூழ்விசும்பென்று தொடங்கி] - இடமுடைத்தானஆகாஶத்தில் அழகிய மேகங்கள் தூர்யகோஷத்தைப் பண்ணிற்றின; ஆழ்கடல் அலையாநின்றிருந்துள்ள திரையாகிற கையையெடுத்துக்கொண்டு ஆடிற்றின. [ஏழ்பொழிலும் வளமேந்திய]-ஸப்தத்வீபங்களும் புதுக்கணித்தின; உபஹாரங்களை யரித்தாரென்றுமாம். [என்னப்பனென்று மேலுக்கு] – எனக்குப் பரமபந்துவாய் ஆஶ்ரிதரெல்லாம் உஜ்ஜீவிக்கும் புகழையுடைய நாராயணன் தமரைக்கண்டு உகந்து.*

*ப —முதற்பாட்டில், அர்ச்சிராதிமார்க்க ஗மநத்தில் ஒருப்பட்டவர்களாய் போக்யகுணபூர்ணனான ஸர்வேஶ்வரனுடைய ஶேஷபூதரான பாகவதரைக்கண்டு சராசராத்மகமான ஜகத்துக்கு உண்டான ப்ரீதிவிகாரத்தை யருளிச்செய்கிறார்.*

*என்னப்பன்-எனக்கு அஸாதாரணபந்துவாய், வாழ்புகழ்- ஆநந்தாவஹமான குணப்ரதையையுடைய, நாரணன்தமரை - நாராயணனுக்கு அஸாதாரணபந்துக்களான ஶேஷபூதரை, கண்டுஉகந்து-கண்டு ப்ரியப்பட்டு, சூழ்விசும்பு - ஸர்வப்ரதேசத்திலும்சூழ்ந்த ஆகாஶத்திலே, அணிமுகில் - திரண்டுதோன்றினமேகங்களானவை,*

---

*கடாக்ஷித்து - நித்யஸூரிகள் ஸேவிக்க இத்யாதியும், பரமப்ராப்யரான இத்யாதியும். அந்யாபதேஶமாவதேதென்ன - தமக்கு அவன் இத்யாதி. "ஆழியான்தமர்" "மாதவன்தமர்" இத்யாதியாலே - ஸ்ரீ வைஷ்ணவர்களைச் சொல்லுகையாலே, அந்யாபதேஶமென்றபடி. அந்யாபதேஶத்தாலே சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன - அதுதனக்கு இத்யாதி.*

தூரியம் முழக்கின - தூர்யகோஷத்தைப்பண்ணிற்றின; ஆழ்கடல் - அழமான கடல்களானவை, அலை திரை - அலைந்துவருகிற திரையை, கையெடுத்தாடின - கையாகவெடுத்து ஆடிற்றின; ஏழ்பொழிலும் - ஸப்தத்வீபங்களும், வளம் - உபஹாரரூபமான நல்லவஸ்துக்களை, ஏந்திய - ஏந்திற்றின. வளமென்று - புதுக்கணிப்பாகவுமாம்.

இ.—முதற்பாட்டில், பரமபதத்துக்குப் போகஉபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்ட ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்தாவரஜங்கமங்களுக்குண்டான விக்ருதியை அருளிச்செய்கிறார்.

[சூழ்விசும்பு] - பூமியைச் சூழும்படி இடமுடைத்தான ஆகாஶத்திலே. [அணிமுகில்] - ஆபரணமான முகிலென்னுதல், ஆகாஶப்பரப்படங்கலும் அணியப்பட்ட முகில் என்னுதல்; அழகிய முகிலென்னுதல். [தூரியம்முழக்கின] - தூர்யகோஷத்தைப் பண்ணிற்றின. [அணிமுகில் தூரியம் முழக்கின] - ஒப்பித்துநின்று கொட்டுவாரைப் போலே; "மேகதுந்துபிநிர்கோஷ:". இவன் போக்குக்கடியான அவன் வரவிலே பிறந்தவிக்ருதியிறே இது; இவன்தானே போகப்புக்கால் சொல்லவேண்டாவிறே. அவற்றுக்குஅபிமானிகளான இந்த்ர வருண பர்ஜந்யரைச் சொல்லிற்றாகவுமாம். [ஆழ்கடல்]- எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கவற்றான அளவுடைய கடல், ஹர்ஷம் பிறந்து அலையாநின்றிருந்துள்ள திரையாகிற கையையெடுத்துக்கொண்டு கூத்தாடிற்றின. [ஏழ்பொழிலும் வளமேந்திய] - ஸப்தத்வீபங்களும் புதுக்கணித்தன; உபஹாரங்களை யரித்தனவென்றுமாம். இதெல்லாம் ஆரைக் கண்டுஎன்னில், - [என்னப்பன்] - எனக்கு பரமபந்துவானவன். இவர்களோடு நிருபாதிக ஸம்பந்தம்அவனுக்குண்டானால் அவனோடு ஸம்பந்தமுள்ளவை யெல்லாவற்றுக்கும் ஆதரிக்கவேண்டியிருக்குமிறே; ராஜபுத்ரன் போகாநின்றால் ராஜஸம்பந்தமுடையார்க் கெல்லாம் அங்கீகரிக்கவேண்டுமாபோலே. [வாழ்புகழ் நாரணன்] - ஆஶ்ரிதரை வாழும்படி பண்ணவற்றான கல்யாணகுணங்களையுடைய ஸர்வேஶ்வரன். அவன் தன்னைக் கண்டோவென்னில்; - [அவன் தமரைக்கண்டு] - அவன் கேட்குமென்னும் பீதியாலேயோ வென்னில், - [உகந்தே] - ப்ரீதிப்ரேரிதராய்.

ஈடு.—முதற்பாட்டு. பரமபதத்துக்குப்போக உபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்ட ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்த்தாவரஜங்கமங்களுக்கு உண்டான விக்ருதியை யருளிச்செய்கிறார்.

[சூழ்விசும்பு] - பூமியைச்சூழும்படி இடமுடைத்தான ஆகாசத்திலே. [அணிமுகில்] - ஆஹரணமான முகிலென்னுதல், ஆகாசப்பரப்படங்கலும் அணியப்பட்ட முகிலென்னுதல். [தூரியம்முழக்கின] - தூர்யகோஷத்தைப் பண்ணிற்றின. [சூழ்விசும்பு இத்யாதி-] காந்தப்ப ரோப்பித்துநின்று பெரிய மண்டபங்களிலேநின்று கோட்டுமோபோலே

முதற்பாட்டு.—சூழ்விசும்பு இத்யாதி. "வளமேந்திய" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - பரமபதத்துக்கு இத்யாதி. ஸ்த்தாவரம் - கடல். ஜங்கமம் - முகில்.

விசும்பு - விசும்பிலே. ஆஹரணமான - விசும்புக்கு ஆஹரணமானவென்றபடி. அணியப்பட்ட - வ்யாபிக்கப்பட்ட. "அணி" என்று - ஒப்பனையாக மூன்றாமர்த்தம். ஆகாசத்திலே அலங்க்ருதமான மேகங்கள் கர்ஜிக்கிறபோதெப்படி யிருக்கிறதென்ன-காந்தப்பர் இத்யாதி. காந்

காணும், இவையிருக்கிறது; "ஊடிஜயஜ-ஃஜஜ-ஃஞஷுாஃ" (மந்தம்ஜகர்ஜுர்ஜலதாஃ). இவன் போக்குக்கடியான அவன்வரவிலேபிறந்த விக்ருதியிறேயிது; இவன் தான் போகப் புக்கால் சொல்லவேண்டாவிறே. அவற்றுக்கு அபிமாநிகளான இந்த்ரவருணபர்ஜந்யங் களைச் சொல்லிற்றாகவுமாம். [ஆழ்கடல்இத்யாதி]-எல்லாவற்றையும் தன்னுள்ளே யடக்க வற்றான அளவுடையகடல், தைர்யபங்கம்பிறந்து அலையாநின்றுள்ள திரையாகிற கையை யெடுத்துக் கூத்தாடிற்றின. [ஏழ்பொழிலும்வளமேந்திய] - ஸப்தத்வீபங்களும் புதுக் கணித்தன: உபஹாரங்களை யரித்தன வென்றுமாம். இதெல்லாம் ஆரைக்கண்டேன் னில் - [என்னப்பன்] - எனக்குப் பரமஸம்பந்தியானவன். இவர்களோடு நிருபாதிக ஸம்பந்தம் அவனுக்கு உண்டானால், அவனோடேஸம்பந்தமுள்ளவையெல்லாவற்றுக்கும் ஆதரிக்கவேண்டியிருக்குமிறே; ராஜபுத்ரன் போகாநின்றால் ராஜஸம்பந்தமுடையார்க் கெல்லாம் அங்கீகரிக்கவேண்டுமோபோலே. [வாழ் புகழ்நாரணன்] - ஆஶ்ரிதர்வாழும்படி பண்ணவற்றான கல்யாணகுணங்களையுடைய ஸர்வேஶ்வரன். அவன் தன்னைக் கண் டோர்வேன்னில்,— [அவன்தமரைக்கண்டு] - அவன்கேட்டு மென்னும் ஹீதியாலேயோ வென்னில், [உகந்தே] - ப்ரீதிப்ரேரிதராய். (௧)

## இரண்டாம் பாட்டு.

நாரணன்தமரைக்கண்டுகந்து நல்நீர்முகில்
பூரணபொற்குடம் பூரித்ததுஉயர்விண்ணில்
நீரணிகடல்கள்நின்றார்த்தனநெடுவரைத்
தோரணம்நிரைத்துஎங்குந்தொழுதனருலகே

ஆ.—(நாரணன்.) - நாரணன்தமரைக்கண்டு மேகங்கள்உகந்தன; ஆகாஶ சரரான தேவாதிகள் ஆகாஶத்திலே பூர்ணகும்பங்களைப் பூரித்தார்கள்; நீரணிகடல் கள் நின்றார்த்தன; நெடுவரை போலேயிருந்த தோரணம்நிரைத்தெங்கும் தொழுதனர் உலகர்கள் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், மேலுண்டான லோகங்கள் பண்ணின ஸத் காரங்களை அருளிச்செய்கிறார்.

---

தப்பர் - கந்தர்வர்கள். ஒரு சேதநன் போம்போது இதெல்லாம் கூடுமோவென்ன-மந்தம் இத்யாதி. "ஶுராசெதுவிஶாயாஜெஶாயஃஸெஜநாஷ-ஃெ। ஊடிஜயஜ-ஃஜஜ-ஃஞஷுாஃவ-ஷ வு-ஷ்ஃ-வொஜ" இதி பஞ்சமேம்ஸ ஶ்ருதியே. சேதநன்போம்போது இதெல்லாம் கூடு மென்னுமத்தை இசைவிக்கிறார் - இவன்போக்குக்கு இத்யாதி. பாட்டுக்கு அவதாரிகாந்தரம் அவற் றுக்கு இத்யாதி. 'விக்ருதியை யருளிச்செய்கிறார்' என்றவாக்யாநந்தரம், இவ்வாக்யத்தை யநுஸந் திப்பது. அவற்றுக்கு என்றது - கடலுக்கும் முகிலுக்கும்என்றபடி. கடலுக்கபிமாநி - வருணன். "முகில்" என்றதாலே – இந்த்ரபர்ஜந்யர்களைச் சொல்லுகிறது. "வளம்" என்றது - உபஹாரமும் ஸம்பத்தையும் சொல்லும். த்விதீயார்த்தத்துக்கு, தத்ரஸ்த்தரைச் சொல்லுகிறது. இத்தால் ஹவம்- இவர்களோடு இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - ராஜபுத்ரன் இத்யாதி. 'என்னப்பன்' என்று தொடங்கி, 'உகந்து - சூழ்விசும்பணிமுகில்' இத்யாரப்ய, 'வளமேந்திய' இத்யந்வயஃ. (௧)

[நாரணனென்று தொடங்கி] - அழகியநீர்முகில்கள் நாரணன் தமரைக்கண்டு உகந்தன; அவைதானே பூர்ணகும்பங்களாயின. ஆகாசசரரான தேவர்களாலே ஆகாசமெல்லாம் பூர்ணகும்பம் வைக்கப்பட்டதென்றுமாம். [நீரென்று தொடங்கி] - நீராலே அணியப்பட்ட கடல்கள் ஹர்ஷத்தாலே நிரந்தரமாக ஆர்த்தன; லோகங்களிலுள்ளார் எங்கும் நெடுவரைபோலேயிருக்கும் தோரணங்களை நிரைத்துத் தொழுதார்கள்.

ப —அநந்தரம், நிருபாதிகசேஷியான நாராயணனுக்கு சேஷபூதரானவர்களைக் கண்டு லோகத்தார் ஸத்கரித்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

நாரணன்தமரைக்கண்டு – நிருபாதிக சேஷியான நாராயணனுக்கு சேஷபூதரானவர்களைக்கண்டு, உகந்து - உகப்பையுடைத்தாய், நல்நீர்முகில் - சுத்தமான ஜலத்தாலே பூர்ணமான மேகமானது, உயர் - (த்வாரவேதிகைகளிற்போலே) உயர்ந்த, விண்ணில் - ஆகாசத்திலே, பூரணம் - பூர்ணமான, பொற்குடம் - பொற்குடங்களாக, பூரித்தது - நிறைத்தது; நீரணி-நீரை வஹிக்கிற, கடல்கள் - கடல்களானவை, நின்று - (ஒருபடிப்பட்டு) நின்று, ஆர்த்தன - கோஷித்தன; நெடுவரை - நெடுவரைகளாகிற, தோரணம்நிரைத்து - தோரணங்களை நிரைத்து, உலகு - உலகிலுள்ளார், எங்கும் -, தொழுதனர் - ; முகிலென்கிற ஒருமை - ஜாதிபரம். இவ்விரண்டுபாட்டாலும் - அந்தரிக்ஷபர்யந்தமான பூலோகமானது உகந்துஆதரித்தபடியை ப்ரதர்சிப்பித்தாராய்த்து. உலகமென்று - லோகப்ரதாநரை லக்ஷிக்கிறது.

இ.—இரண்டாம்பாட்டில், மேலுண்டான லோகங்கள் பண்ணின ஸத்காரங்களை அருளிச்செய்கிறார்.

[நாரணன் தமர்இத்யாதி] - நிருபாதிக சேஷியானவனுடைய அடியாரைக் கண்டு நல்ல நீரையுடைத்தான மேகங்களானவை உகப்பாலே, உயர்ந்த ஆகாசத்திலே பூர்ண கும்பங்களாகச் சமைக்கப்பட்டன: முற்படக் கண்டுகந்தன; பின்பு அவைதானே பூர்ணகலசங்களாய்த்தின என்கை. "ஒருகால் தூர்யகோஷத்தைப் பண்ணினோம்" என்றிருக்கிறனவில்லை. ஆகாச சரரான தேவர்களாலே ஆகாசமெங்கும் பூர்ணகும்பம் வைக்கப்பட்டதென்றுமாம். [நீரணிகடல் இத்யாதி] - நீராலே அணியப்பட்ட கடல்கள் "ஒருகாலடித்தோம்" என்றிராதே, ஹர்ஷத்தாலே நிரந்தரமாக ஆர்த்தன. [நெடுவரை இத்யாதி] - அவ்வோலோகங்களிலுள்ளார் நெடியவரைபோலேயிருந்துள்ள தோரணங்களைநட்டுத் தாங்களும் தொழுதார்கள். 'உலகென்று' லோகத்திலுள்ளாரைச் சொல்லுகிறது; "ஸஹர்ஷாஃ ப்ரஸஹிஷ்வபுஷ - ஸஹ்ருஷவாநரவாணிஷு" என்கிறபடியே ஹர்ஷத்தாலே எல்லா அடிமைகளும் செய்யாநின்றார்கள்.

ஈடு:—இரண்டாம்பாட்டு. மேலுண்டான லோகங்கள் பண்ணின ஸத்காரங்களை அருளிச்செய்கிறார்.

[நாரணன் இத்யாதி] - நிருபாதிகசேஷியானவனுடையாரைக்கண்டு, நல்ல நீரையுடைத்தான மேகங்களானவை, உகப்பாலே, உயர்ந்த ஆகாசத்திலே பூர்ணகும்

இரண்டாம்பாட்டு.—நாரணன் இத்யாதி. "நெடுவரைத்தோரணம் நிரைத்தெங்கும் தொழுதனருலகே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - மேலுண்டான இத்யாதி.

" நன்னீர்முகில் - உகந்து - உயர்விண்ணில் - பூரணபொற்குடம் பூரித்தது" என்றத்

பங்களாகச் சமைக்கப்பட்டன. முற்படக் கண்டு உகந்தன, பின்பு அவைதானே பூர்ண கும்பங்களாய்த்தின என்கை. ''ஒருகால் தூர்யகோஷம் பண்ணினோமிறே'' என்றிருக்கிறனவில்லை. ஆகாஶசரரான தேவர்களாலே ஆகாசமெல்லாம் பூர்ணகும்பம் வைக்கப்பட்டதென்றுமாம். [நீரித்யாதி] - நீராலே யணியப்பட்ட கடல்கள், '' ஒருகாலாடினோம்'' என்றிராதே, ஹர்ஷத்தாலே நிரந்தரமாக ஆர்த்துக்கொண்டன. [நெடுவரை இத்யாதி] - அவ்வோலோகங்களிலுள்ளார், நெடியவரைபோலேயிருந்துள்ள தோரணங்களை நட்டுத் தாங்களும் தொழுதார்கள். *உலகமென்பது உயர்ந்தோரையிறே. அங்குள்ளாரைச்சொன்னபடி. ''ஸத்ரசாமரபாணிஸ்து'' (சத்ரசாமரபாணிஸ்து) என்கிறபடியே ஹர்ஷத்தாலே எல்லாவடிமைகளும் செய்யாநின்றார்கள். (உ)

---

## மூன்றும் பாட்டு.

---

தொழுதனர்உலகர்கள் தூபநல்மலர்மழை
பொழிவனர் பூமியன்றளந்தவன்தமர்முன்னே
எழுமினென்று இருமருங்கிசைத்தனர்முனிவர்கள்
வழியிதுவைகுந்தற்கென்று வந்தெதிரே.

ஆ.—(தொழுதனர்உலகர்கள்.) - பூமியன்றளந்தவன்தமர்முன்னே தூபநன்மலர்மழைபொழிவனர், ஸ்ரீவைகுண்டத்தேறப் போவார்க்கு வழியிதுவென்று எதிரே வந்து ''இங்ஙனே எழுந்தருளவொண்ணாதோ'' என்று இருமருங்கும் முனிவர்கள் நின்று இசைத்தனரென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஆதிவாஹிக லோகங்களிலுள்ளார் திருநாட்டுக்கு நடக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் எதிரேவந்து புஷ்பவர்ஷாதிகளைப் பண்ணிக்கொண்டாடுகிறபடியை அருளிச்செய்கிறார்.

[பூமியன்றளந்தவன் தமர்] - திருவுலகளந்தருளினவன் குணத்திலேயகப்பட்டு அடிமைபுக்குத் திருநாட்டுக்குப் போகிற ஸ்ரீவைஷ்ணவர்கள். [எழுமினென்று மேலுக்கு] - ஸ்ரீவைகுண்டத்துக்குப் போவார்க்கு வழி இதுவென்று எதிரேவந்து

---

வயித்தர்த்தம் - நல்லநீரை இத்யாதி. சமைக்கப்பட்டன - சமைந்தனவென்றபடி. ''உகந்து'' என்றதுக்கர்த்தாந்தரம் - முற்பட இத்யாதி. முன்பு தூர்யகோஷம்பண்ணின அபோராதோவென்ன - ஒருகால் இத்யாதி. '' பூரணபொற்குடம்பூரித்தது'' என்றதுக்கர்த்தாந்தரம் - ஆகாஶசரரான இத்யாதி. ஆகாஶசாரிகள்உகந்து பூர்ணகும்பங்களாகப் பண்ணினார்களென்றபடி. பூரித்தது-நிறைத்தது. பூரணபொற்குடம் - பூர்ணகும்பங்களாகவென்றபடி. அணியப்பட்ட - செறியப்பட்ட. '' நின்று '' என்றதுக்கர்த்தம் - நிரந்தரமாக என்று. '' தொழுதனர் '' என்றதுக்குச்சேர, உலகர்கள் என்ன வேண்டாவோவென்ன - உலகமென்பது இத்யாதி. உயர்ந்தோரை - உத்க்ருஷ்டரை. உயர்ந்தோரன்றிக்கே தத்ரஸ்தரெல்லாரையும் சொல்லவுமாமென்கிறார் - அங்குள்ளாரைச் சொன்னபடி என்று. இழ்வாக்யவிவரணமாய், ஏகார்த்தமாதல். ''தோரணம் நிரைத்து, தொழுதனர்'' என்ற பதத்வயத்துக்கும் ஸாவம் - ஸத்ர இத்யாதி. ''ஸத்ரசாமரபாணிஸ்து லக்ஷ்மணோ ... ஜாமாதா ... ஸாதரம் ... '' இத்யயோத்யாகாண்டே.(உ)

பகவத்குணாநுபவம்பண்ணி அதிலேவிவசராய் அதுக்கு அவ்வருகு கால்வாங்கமாட்டாதே யிருக்குமவர்களைப்போலே யாவர்கள்.

---

லர் - கொத்துக்கொத்தாகவலருகிற. முனிவர் - மநநசீலரானவர்கள். "சொல்" என்றது - சொன்னவென்றபடி. "அந்தமில் பேரின்பத்து" என்றது - ஆழ்வார்க்குவிசேஷணமாதல், * அடியார்க்கு விசேஷணமாதல். (கக)

---

*த்ரவிடோபநிஷத்ஸங்கதி.*—ஸக்தாநாம்ஸ்வ ஸந்நிவாஸே ரோஷஸம்ஸக்த்ய ஷட்ப்ருத்யாக்ஷம் வாராதௌ ஜகந்நந்தஸ்ஸீஷேயே: । தத்ரஸ்தித்வம் ஸ்வசயீஷுஸமி ப்ரியாணாமோக்ஷஸாதிதாநாம் நிரஸ்ய ஸ்வதேஶோஸ்மி: ॥

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.*—ஸ்வாமித்வாத் ஸ்வஸ்ம நாராயண இதிபரமஸ்வாமிகத்வாதிஷ்டவாநாத், ஶ்ரீகாந்தாஸ்ரக்வகாந்தாஜநியமநாத் ஸ்வாபிமானாவிர்பாவாத் । வைலக்ஷண்யஸ்வாதிஹாவாதிவநிஜஜநாநந்தி பூராக்ருதாவ்ருத்தத்வாத், ஸ்வம் லோகம் ப்ராபயேத் ஸ்வேதி திகயாம் ஶ்ரீஸர்வீபூஷம ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

சூழ்ந்துநின்றமால்விசும்பில்தொல்லைவழிகாட்ட
ஆழ்ந்ததனைமுற்றுமநுபவித்து - வாழ்ந்தங்கு
அடியருடனேயிருந்தவாற்றையுரைசெய்தான்
முடிமகிழ்சேர்ஞானமுனி.

---

## பத்தாந் திருவாய்மொழி—முனியே - ப்ரவேஶங்கள்.

ஆ—(முனியேநான்முகனே.) - இப்படி *அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்த ஆழ்வார், தாம் 'இந்தப்ரக்ருதியிலேயிருந்தஇருப்பைக் காணும்' என்று ஏங்கிக் கூப்பிடுகிறார்.

ஓ.—பத்தாந் திருவாய்மொழியில், திருநாட்டிலேபுக்கு அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்த ஆழ்வார் அவ்விருப்பு ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷ யோக்யமன்றிக்கே ப்ரக்ருதிஸம்பந்தயானமையை அறிந்து, மேருஶிகரத்திலேயிருந்து நிர்ஜ்ஜூவனைப் மிகவும் ஸாவியாநின்றுவைத்துஜ்ஜீவவைஹாளமாய் துஸ்தரமாய் மிகவும் ஓரிடத்திலும் ஸ்ப்ருதியில்லாதபடி பேராழமான கடலின்நடுவே தள்ளுண்டவனைப்போலே அவஸந்நராய், அதுக்குமேலே தமக்கு அவன்பண்டுகைவந்தபடியையும் தன்னைப்பெறுகைக்கு உபாயம் தானே அல்லதின்றிக்கே யிருந்தபடியையும் அவ்வளவன்றிக்கே எல்லார்க்கும் அவனல்லது வேறுரக்ஷகரின்றிக்கே யிருக்கிறஇருப்பையும் அநுஸந்தித்து, இப்படியே யிருக்கிறவனை அக்ஷணத்திலே பெறுமையாலே பசியாலும் தாஹத்தாலும் தளர்ந்து, தாயையும் காணப்பெறாத ஸ்தநந்தயப்ரஜை ஆர்த்தியின் மிகுதியாலே கூப்பிடுமாபோலே நிர்க்ருணராநுடைய ஹ்ருதயங்களுங்கூட இரங்கும்படி வெளிவேழுலகிற்படியையுடைய தாம் தம்முடைய ஆர்த்தியின்மிகுதியாலே தம்

முடைய ஸ்வரூபம் அநுஸந்திக்கவும் க்ஷமரன்றிக்கே கலங்கி அவனுக்கு இட்ட அடி பேரவொண்ணாதபடி பெரியபிராட்டியார் திருவாணையிட்டு, காட்டுத்தீயிலே அகப்பட்டாரைப்போலே போக்கடியற்று மஹாக்லேஶத்தோடே தூதப்ரேஷணத்தால் பிறவாயிவிட்டு நீட்டத் தவிர்ந்து, தம்மை ரக்ஷித்தல்லது எம்பெருமானுக்குத் திருநாட்டிலுங்கூட இருப்பரிதாம்படி பெருமிடறுசெய்து ஆர்த்தத்வநியோடே மிகவும் கூப்பிட்டு தரிக்கமாட்டாமை ஶரணம்புக, பரமதயாளுவான ஸர்வேஶ்வரன் பெரியபிராட்டியாரோடே கூடப் பெரியதிருவடிமேலே இவர் அபேக்ஷித்தாற்போலே தானுமபடியே பரிபூர்ணமாக வந்து தோற்றியருளி இவருடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தையறுத்து இவருடையவிடாயும் தன்னுடையவிடாயும் தீரும்படி ஸம்ஶ்லேஷித்துத் தம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் செய்தருளினான் என்கிறார்.

ப.— பத்தாந்திருவாய்மொழியில், கீழ் அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய் தேஶவிசேஷத்திலேபுக்குத் திருமாமணிமண்டபத்திலே யேறி ஸூரிபரிஷத்திலே அந்தர்ப்பவித்து நிரதிஶயாநந்தயுக்தனாய்க்கொண்டு முக்தனிருக்குமிருப்பை அபேக்ஷிப்பிக்க, பரஜ்ஞாநத்தாலே இது தம்முடையபேறாக ஸாக்ஷாத்கரித்து அநுபவித்தவர், அந்த ஸமாதி குலைந்தவாறே †(முன்பிருந்த ஸம்ஸாரத்தை தர்ஶித்து) "கொடுவுலகங் காட்டேலே" என்று தாம் அஞ்சியிருந்த ஸம்ஸாரத்தை தர்ஶித்து மிகவும் ஆர்த்தராய், அபேக்ஷிதமான இப்பேற்றைப்பெற்றல்லது தரிக்கமாட்டாதபடி பரமபக்திரூபமான நிரவதிகாபிநிவேஶம்பிறந்து இவ்வளவும் நம்மைப்புகுர நிறுத்தினவன் தானே முழுக்க நிர்வஹிப்பானாக ஏறிட்டுக்கொண்டு பெரியதிருவடி திருத்தோளிலே ஸந்நிஹிதனாய்த் தந்தலையிலே திருவடிகளைவைத்து ஃபலப்ரதாநத்திலே அதித்வரிதனாம்படியையநுஸந்தித்து, அவ்வநுஸந்தாநபாவநத்வத்தாலே அபேக்ஷிதனான ஸர்வேஶ்வரனுடைய உபகாரமான போக்யவிக்ரஹத்தையும், லக்ஷ்மீவல்லபத்வத்தையும், ஸர்வகாரணத்வத்தையும், ஸமஸ்தவஸ்து ப்ரகாரபோக்த்ருத்வத்தையும், அதிஶயிதபோக்யத்வத்தையும், அத்யந்தப்ரணயித்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும், ஸர்வாந்தராத்மத்வத்தையும், ஸமஸ்தப்ரயோஜநத்வத்தையும், பரிபூர்ணபோகப்ரதத்வத்தையும் அநுபவித்து, ஏவம்விஶிஷ்டனான ஸர்வேஶ்வரனுடைய ஸந்நிதியிலே தம்முடைய ஆர்த்தியும் அபிநிவேஶாதிஶயமும் தோற்றும்படி அவனுடைய உபகாரகத்வாதிகளைச்சொல்லி மறுக்கவொண்ணாதபடி பிராட்டி திருவாணையிட்டு "ஸர்வப்ரகார ரக்ஷகனான நீ எனக்குப் பூர்ணாநுபவத்தைத் தரவேணும்" என்று மிகவும்கூப்பிட, அவனும் இவருடையவாவுக்கீடாக குணவிக்ரஹவிபூதிபரிபூர்ணனாய்க்கொண்டு பிராட்டியோடுங்கூட ஏகரஸமாம்படி ஸம்ஶ்லேஷித்த ப்ரகாரத்தையநுபவித்து, இனிஇந்தப்பேற்றுக்குத் தட்டில்லையென்று நிஷ்கர்ஷித்து, தாம் அவாப்தஸமஸ்தஃபலரானபடியைப் பேசி முடித்தருளுகிறார்.

இ.—பத்தாந் திருவாய்மொழியில், பரமபதத்திலேபுக்கு "அந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை" என்று நிரதிஶயாநந்தயுக்தராய் அத்திரளிலேயிருந்த இருப்பு ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு யோக்யமன்றிக்கேயிருக்கிறவதுக்குமேலே, "இல்லைகண்டீர் இன்பம்" என்றும், "பிறப்பாம் பொல்லா அருவினைமாயவன் சேற்றள்ளல்பொய்ந்நிலம்" என்றும், தாம் பிறர்க்கு உபதேஶிக்கிற ஸம்ஸாரத்திலே ப்ராக்ருதிவஶராயிருக்கிறபடியைக்கண்டு மேருஶிகரத்திலே நிர்து:க்கனாய் ஸுகோத்தரனாயிருக்கிறான் ஒருவன் து:க்கபஹுளமாய் து:ஸ்தரமாய்ப் போராழமாய் ஓரிடத்

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தமாயிருக்கலாம்.

திலும் ஸ்திதியின்றிக்கேயிருக்கும்படியான பாதாளத்திலே விழுந்துநோவுபடுமாபோலே அவஸந்நராய், அதுக்குமேலே தமக்கு அவன் பண்டு கைவந்தபடியையும் தன்னைப்பெறு கைக்கு உபாயம் தானேயல்லதின்றிக்கே யிருக்கிறபடியையும், தன் தலையிலே ஸாத நத்தை ஏறட்டுக்கொண்டு அநுஷ்டிக்குமவனுக்கும் தன் கைபார்த்திருக்கவேண்டும் படி ஸர்வரக்ஷகனாயிருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து அக்ஷணத்திலே பெறு மையாலே 'அப்படியேயிருக்கிறவன் நம்மை இங்ஙனே நோவுபடவிட்டுவைப்பதே!' என்று மிகவும் அவஸந்நராய், மாதாபிதாக்கள் ஸந்நிதியுண்டாயிருக்கப் பசியாலும் தாஹத்தாலும் நோவுபடுகிற ஸ்தநந்தய ப்ரஜை ஆர்த்தியின்மிகுதியாலே கூப்பிடுமா போலே வளவேழுலகிற்படியையுடைய தாம் தம்ஸ்வரூபத்தை அநுஸந்திக்கவும் க்ஷமரன் றிக்கே ஈஶ்வரன் வாயிலேயிட்டு நீட்டுகையுமன்றிக்கே அவன் தன்னெதிரேநின்று பிராட்டி யானையிடத் தலக்கற்றுச்சொல்லும்படியான ஆற்றாமையோடே நிர்வேதருணருடைய ஹ்ருதயங்களுங்கூட இரங்கும்படியாகவும் அவனுக்குத் தம்மைரக்ஷித்தல்லது பரமபதத் திலுங்கூட இருப்பரிதாம்படியாகவும் காட்டுத்தீயிலே யகப்பட்டாரைப்போலே ஆர்த்த த்வநியோடே பெருமிடறுசெய்து கூப்பிட்டு, "ஶாவோஹமாராவணலாயகாகுத்ஜ ஶரண்யம் ஶரணம் கதா" என்கிறபடியே தரிக்கமாட்டாமையாலே அவன் திருவடிகளிலே ஶரணம்புக; பரமதயாளுவாகையாலே, "இவரை யிப்படி நோவுபடவிட்டு வைத்தோமாகாதே !" என்று இவரிலும்காட்டில் தான் நொந்து பிராட்டியோடேகூடப் பெரியதிருவடிமேலே இவர் அபேக்ஷித்தபடியே பரிபூர்ணமாகவந்து தோன்றியருளி, இவருடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தையுமறுத்து, "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்றுகொலோ ?" என்று இவர் ஆசைப்பட்டபடியே அத்திரளிலே புகப்பெற்று "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்றும் "அவாவற்று வீடுபெற்ற" என்றும், இவர் தம் வாயாலே சொல்லும்படி இவர் விடாயும்தீர்ந்து இவர்க்கும் அவ்வருகான தன்விடாயும் தீரும்படி ஸம்ஶ்லேஷித்தருளினனென்கிறார்.

ஈடு.—பரமபதத்திலேபுக்கு "அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்று நிரதிஶயாநந்தயுக்தராய் அத்திரளிலேயிருந்தவிருப்பு ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு யோக்யமன்றிக்கேயிருக்கிற இதுக்குமேலே, "இல்லைகண்டீ ரின்பம்" என்றும் "பிறப்பாம்போல்லாஅருவினை மாயவன் சேற்றள்ளல் பொய்ந்நிலம்" என்றும் தாம் பிறர்க்கு உபதேசிக்கிற ஸம்ஸாரத்திலே ப்ரக்ருதிவஶராயிருக்கிறபடியைக் கண்டு, மேருசிகரத்திலே நிர்த்துःவனாய் ஸுகோத்தரனாயிருக்கிறானொருவன், ஊர்த்வ வைஹாளமாய் துஸ்தரமாய்ப் பேராழமாய் ஓரிடத்திலும் ஸ்த்திதியின்றிக்கே யிருக்கும்படி யான பாதாளத்திலேவிழுந்து நோவுபடுமாபோலே அவஸந்நராய், அதுக்குமேலே, தமக்கு அவன் பண்டு கைவந்தபடியையும், தன்னைப் பெறுகைக்கு உபாயம் தானேயல்லதின் றிக்கே யிருக்கிறபடியையும், தன் தலையிலே ஒரு ஸாதநத்தை ஏறட்டுக்கொண்டு அநுஷ்ட்

முனியே நான்முகன் ப்ரவேஶம், கீழோடே ஸங்கதி - பரமபதத்திலே இத்யாதி. ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமாய் - அநுஸந்தாநரூப ஜ்ஞாநமாத்ரமாய். பரமபதத்திலே பரமாநந்த யுக்தரானவர் ப்ரக்ருதிவஶராய் நோவுபடுகைக்கு த்ருஷ்டாந்தம் - மேரு இத்யாதி. பேராழம் - அத்யகாதம். "என்னையுயிர்வேறின்றி யொன்றாகவே" இத்யாதியைப்பற்ற - தமக்குஅவன்பண்டு இத்யாதி. "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" என்றத்தைப்பற்ற - தன்னைப் பெறுகைக்கு இத்யாதி. "மேவித்தொழும் பிரமன்சிவன்" இத்யாதியைப்பற்ற - தன்தலையிலே

டிக்குமவனுக்கும் தன் கைபார்த்திருக்க வேண்டும்படி ஸர்வரக்ஷகனுயிருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து, அக்ஷணத்திலே பேறுமையாலே "இப்படியிருக்கிறவன் நம்மை இங்ஙனே நோவுபடவிட்டுவைப்பதே!" என்று மிகவும் அவஸந்நராய், மாதாபிதாக்கள் ஸந்நியியுண்டாயிருக்கப்பசியாலும் தாஹத்தாலும் நோவுபடுகிற ஸ்தநந்யயப்ரஜை ஆர்த்தியின் மிகுதியாலே தாய்பேரைச் சொல்லிக் கூப்பிடுமோபோலே, *வளவேழுலகிற்படியையுடைய தாம், தம் ஸ்வரூபத்தை யநுஸந்திக்க க்ஷமரன்றிக்கே தூதர்வாயிலிட்டு நீட்டுகையுமன்றிக்கே, அவன்தன் எதிரேநின்று பிராட்டியாணையிட்டுத் தலக்கற்றுச் சொல்லும்படியான ஆற்றாமையோடே,நிர்த்துணருடைய ஹ்ருதயங்களுங்கூட இரங்கும்படியாகவும், அவனுக்குத் தம்மை ரக்ஷித்தல்லது பரமபதத்திலும்இருப்பரிதாம்படியாகவும், காட்டுத் தீயிலே யகப்பட்டாரைப்போலே ஆர்த்தத்வநியோடே பெருமிடறுசெய்து கூப்பிட்டு, "ஶாகாம்ருகா ராவணஸாயகார்த்தா ஜக்முஶ் ஶரண்யம் ஶரணம் ஸ்மராமம்" (ஶாகாம்ருகாராவணஸாயகர்த்தா ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்) என்கிறபடியே தரிக்கமாட்டாமையாலே அவன் திருவடிகளிலே ஶரணம்புக; பரமதயாளுவாகையாலே "இவரை யிப்படியே நோவுபடவிட்டுவைத்தோமாகாதே!" என்று இவரிலுங்காட்டில் தான் நொந்து; பிராட்டியோடே கூடப் பெரிய திருவடிமேலே இவர் அபேக்ஷித்தபடியே பூர்ணமாக வந்துதோற்றி, இவருடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தையும் அறுத்து, "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்று இவர் ஆசைப்பட்டபடியே அத்திரளிலே புகப்பெற்று, "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்றும் "அவாவற்றுவீடுபெற்ற" என்றும் இவர் தாமே சொல்லும்படி இவர்விடாயும்தீர்ந்து இவருக்கும் அவ்வருகான தன்விடாயும்தீரும்படி ஸம்ஶ்லேஷித்தருளினனென்கிறார். இப்ப்ரபந்தத்துக்கு ப்ரமேயமானவஸ்து - ஸர்வேஶ்வரன்; இப்ப்ரபந்தம் - * அவாவிலந்தாதி; * மயர்வறமதிநலமருளப்பெற்றவர் - கவிபாடினர். இனி இவருடைய அவதாரந்தான் ஸர்வேஶ்வரனுடைய அவதாரத்தோபாதி ஸாதுக்களுடைய ஸுக்ருதபலம்.

---

இத்யாதி. "என் பொல்லாக்கனிவாய்" இத்யாதிகளாலே அவன்பேரைச்சொல்லிக் கூப்பிடுகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - மாதாபிதாக்கள் இத்யாதி. தூதர்வாயிலிட்டு நீட்டுகை - தூதர்முகேந அறிவிப்பிக்கை. தலக்கற்று - லஜ்ஜையற்று. தலக்கு - லஜ்ஜை. ஆற்றல்மிக்கால் அவனைச் சரணம்புக்காருண்டோவென்ன - ஶாகாம்ருகா: இத்யாதி. யுத்தகாண்டே ஷஷ்டிதமே, "தேவஸ்ரீநா: வசிதாஶ்ச வீரா: நாநந்த்ரீநாலயஸம்ருத்திஜ்ஞா:" இதி பூர்வார்த்தம். "அந்தோ!" என்றதைப்பற்ற - இவரிலுங்காட்டில் தான் நொநது என்றது. "என்னவா" என்கிற இவருடைய அவாத்தான், "கோலத்திருமாமகளோடுன்னைக் கூடாதே" என்றும் "பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து" என்றும் - பிராட்டியோட்டைச் சேர்த்தியிலே யுன்னைக் காணவேணுமென்றும் பெரியதிருவடியை மேற்கொண்டுவந்து தோற்றவேணுமென்று மிருக்குமதுவாகையாலே, அது தீருகைக்காகப் பிராட்டியோடும் பெரியதிருவடியோடும் வந்து தோற்றினனென்கிறார் - பிராட்டியோடு இத்யாதி. "வீடுபெற்ற" என்றத்தைப்பற்ற - ப்ரக்ருதிஸம்பந்தத்தையுமறுத்து என்றது. ப்ரபந்தபரிஸமாப்தியாகையாலே இப்ப்ரபந்தத்திலேஎல்லார்க்கும் ருசிபிறக்கைக்காக ப்ரமேய ப்ரமாண ப்ரமாத்ருவைலக்ஷண்யங்களையும், இவர் அவதாரவைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்கிறார் - இப்ப்ரபந்தத்துக்கு இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.

# முதற் பாட்டு.

முனியே!நான்முகனே!முக்கண்ணப்பா!என்போல்லாக்
கனிவாய்த்தாமரைக்கண்கருமாணிக்கமே!என்கள்வா!
தனியேனாருயிரே!என்தலைமிசையாய்வந்திட்டு
இனிநான்போகலொட்டேன் ஒன்றும்மாயஞ்செய்யேல்என்னையே.

ஆ.—"நிகிலபுவநநிர்மாணத்ராணஸம்ஹாரணாதிலீலனாய், நிரவதிகஸௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமிதோதார குணஸாகரனாயிருந்த உன்னுடைய ஸௌந்தர்யாதிகுணங்களைக் காட்டி என்னைத் தோற்பித்தடிமையாக்கி, எனக்கொருவனுக்கும் உன்னுடைய குணங்களையே தாரகமாக்கி, என்னெஞ்சம் நிறையப் புகுந்திருந்த உன்னை இனிநான் போகலொட்டேன்; இனிப் பண்டுபோலே உன்னுடைய குணசேஷ்டிதாதிகளை என்னெஞ்சிலே காட்டி வஞ்சித்து, என்னையொன்றும் மறப்பிக்க வொண்ணாது; இனி மெய்யேவந்து கலந்தருளவேணும்"என்று கொண்டு, தம்முடைய அபேக்ஷிதம் செய்தல்லது எம்பெருமானுக்குத் திருநாட்டிலுங்கூட இருக்கவொண்ணாததொருபடி பெரிய ஆர்த்தியோடே பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிறார்.

ஓ.—முதற்பாட்டில், நிர்ஹேதுகமாக உன்னுடைய ஸௌந்தர்யாதிகளைக் காட்டி எனக்குத் தன்னையொழியச் செல்லாதபடிபண்ணி என்னை து:ஸ்ஸஹமான ஸம்ஸாரத்திலேவைத்து நீ போய்ப் பண்டுபோலே ஒரு மாநாவிஷ்காரத்தைப் பண்ணி விடவொண்ணாதென்கிறார்.

[முனியே] - "பஹுஸ்யாம்" என்றுதொடங்கி சொல்லப்படுகிற மஹதஹங்காராதி பஞ்சபூதபர்யந்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுவதாயுள்ள திவ்ய ஸங்கல்பத்தையுடையனாய் ஸர்வசப்தவாச்யனாய் பரப்ரஹ்ம பரமாத்ம ஶப்தங்களினாலே வேதாந்தங்களிற் சொல்லப்பட்ட ஸ்வரூபேணாவஸ்திதனாயிருந்துள்ள பரமபுருஷனே! என்றவாறு. [நான்முகனே] - சதுர்முகஸ்வரூபனாய் அவனுக்கு அந்தராத்மாவாய்க்கொண்டு திசைமுகன்கருவுள் வீற்றிருந்து சேதநரான புருஷர்கள் அசேதநமான ஸ்வஶரீரத்தைக் கொண்டு தம் நினைவுக்குத் தக்கபடி கமநாகமநாதி சேஷ்டைகளைப் பண்ணுமாபோலே ஸ்வஶரீரபூதனான சதுர்முகனைக் கொண்டு ஸ்வஸங்கல்பாநுகுணமான தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரரூபமான சதுர்விதபூதஸ்ருஷ்டியையும் பண்ணியருளுதலால் சேதநரானவர்கள் தேவர்களென்றும் மனுஷ்யர் என்றும் ப்ராஹ்மணரென்றும் க்ஷத்ரியரென்றும் ஹோமென்றும் ஸ்வஶரீரங்களைக் காட்டுகிறஶப்தங்களாலே அவற்றில் வேறாயிருந்த தாங்களும் சொல்லப்பட்டாற்போலே ஸ்வஶரீரபூதனான சதுர்முகனைக் காட்டக்கடவ சதுர்முக ஶப்தத்தாலே அவனில் வேறாய் அவனுக்கு அந்தராத்மாவாயிருந்தஎம்பெருமானும் சொல்லப்படுகையாலே'நான்முகனே' என்னும் சொல்லாலே எம்பெருமானை ஸம்போதிக்கிறது. [முக்கண்ணப்பா] - இப்படி ஜகத்ஸம்ஹாரம் பண்ணுகிற எம்பெருமானுக்கு ஶரீரபூதனான த்ரிநேத்ரனுடைய பேரான ஶப்தத்தினாலே அவனுக்குஅந்தராத்மாவான எம்பெருமானை ஸம்போதிக்கிறது. [என்பொல்லாக் கனிவாய்த்தாமரைக்கண் கருமாணிக்கமே] - ஸ்ருஷ்டி

ஸம்ஹார கர்த்தாக்களாய் ஆதிதேவர்களாயுள்ள ப்ரஹ்மருத்ரர்களுக்குநடுவே தான் அடியவர்க்கெளியனுதலால் தான் அவர்களோடொத்த தரத்தனாய், இக்ஷ்வாகு வம்ஶ்யரோடும் யதுவம்ஶ்யரோடுமொத்த தரத்தனாய்க்கொண்டு திருவவதாரம் பண்ணினாற்போலே ஆஶ்ரிதஸுலபத்வார்யமாக ஆதிதேவனாய்விஷ்ணுநாமாவாய் ஸ்வஸ்வரூபத்தினாலே திருவவதாரம் பண்ணினபடியாலே ஸம்போயிக்கிறது. த்ருஷ்டிதோஷ பரிஹார்த்தமாகவாதல் அவனுடைய அழகில் விஜாதீயதையாலேயாதல் 'பொல்லா' என்கிறது. [என்கள்வா] - நான் அறியாமே இவ்வழகைக்காட்டி என்னைவஞ்சித்து என்னை அடிமை கொண்ட பிரானே! [தனியேனாருயிரே] - தன்னைக்காணப்பெறாத வ்யஸநத்தில் ஒரு துணையின்றியேயிருந்த எனக்கு ப்ராணஹேதுவா யிருந்துள்ள ப்ராணனாயுள்ளாயே! [என்தலைமிசையாய் என்றுமேனுக்கு] - இப்படி ஸ்வரூபத்தினாலும் ஸமஸ்த ஜகத்தினுடைய ஸ்ருஷ்ட்யாதி சேஷ்டைகளும் உன்னாலன்றி யொருத்தரும் தம்மால் செயவில்லை; என்பக்கலிலும் ஸ்வீகாரப்ரவ்ருத்தி இவ்வளவும்வர உன்னாலல்லது என்னால்செய்யப்பட்டதொன்றுமில்லை. மேலுமென்னாற் செயலில்லை. இப்படி ஸமஸ்தவ்யாபாரமும் செய்கிற உனக்கு இனிமேல் பரிஹரிக்கை ஒருபாரமன்று; ஆதலால் இப்படி என்தலைமிசையாய் வந்திட்டு. இனிநான் போகலொட்டேன், ஒன்றும் மாயம செய்யேலென்னையே. இப்பாட்டில் பதயோஜனை ஆழ்வான்படி. 'என்தலைமிசையாய் வந்திட்டு' என்கிறது - எனக்குப் பூர்ணமாகவந்து தோற்றி. நிர்ஹேதுகமாகவந்து வைத்து என்றுமாம். [இனிநான்போகலொட்டேன்] - உன்னைக்காட்டின மாத்ரமன்றிக்கே, முக்தப்ராப்ய தேஶத்தையுங் காட்டிலும் இனி விஶ்லேஷிக்கவொட்டேன். [ஒன்றும்மாயம் செய்யேலென்னையே] - பண்டுபோலே குணாவிஷ்காரங்களைப்பண்ணிப் பெற்றேனாகப்பண்ணி என்னை வஞ்சியா தொழியவேணும்.

ப.—முதற்பாட்டில், ஸ்ருஷ்ட்யாதிமுகத்தாலே அடியேபிடித்து உபகாரகனாய்ப்போந்து வடிவழகைக்காட்டி ருசியைப்பிறப்பித்து உன்னையொழியச் செல்லாதபடியாக்கி என்னையநுபவிப்பிப்பதாக த்வரித்துவந்து ஸந்நிஹிதனான நீ இனி குணாவிஷ்காரத்தாலே வஞ்சித்து அகலப்போக இசையேனென்கிறார்.

முனியே - (நாமரூபவிபாகாநர்ஹமாய், சிதசித்விஶிஷ்டமாய்க்கொண்டு ஸம்ஹ்ருதமாய், "ஸதேவ" "ஏகமேவ" என்னும்படி ஏகீபவித்துக்கிடக்கிற உமையிலே, "ஸம்ஸாரபதிவேதிதவ்ய" என்கிறபடியே ஆஶ்ரயணீயமாகக்கொண்டு சேதநர்க்குக் கரணகளேபரங்களைக் கொடுப்பதாக * உபமாநமநாவாய்க்கொண்டு) ஸ்ருஷ்டிப்ரகாரத்தை மநநம்பண்ணுமவனாய், நான்முகனே - (மஹதாதிரூப ஸமஷ்டியை ஸ்வயமேவ ஸ்ருஷ்டித்து அண்டாந்தர்வர்த்தியான வ்யஷ்டி ஸ்ருஷ்டியைப் பண்ணுகைக்காக "ஸ்ருஷ்டிஸ்தத: கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே" என்கிறபடியே) சதுர்முகனை ஶரீரமாகவுடையையாய், முக்கண்ணப்பா - (ஸம்ஹ்ருதிஸமயத்தில் ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய உபஸம்ஹாரார்த்தமாக ஶக்தி ஸூசகமான) த்ரிணேத்ரத்தையுடையனாய் (அதிப்ரவ்ருத்த காரணருடைய உபஸம்ஹாரத்தாலே) உபகாரகனான ருத்ரனை ஶரீரமாகவுடையையாய், (அவர்களிருவர்க்கும் நடுவே ரக்ஷகனான உமையிலே), என் - எனக்கு, கனி - (உன்பக்கலிலே ருசிபிறக்கைக்கடியான) பக்வபலம்போலே போக்யமான, வாய் - அதரத்தையும், தாமரை - தாமரைப்பூப்போலே தர்ஶநீயமான, கண் - கண்ணையுமுடைத்தாயிருப்பதொரு, பொல்லா - துளையாத, கருமாணிக்கமே - கருமாணிக்கம்

போலேயிருக்கிற வடிவையுடையாய், என் - (அநாதியாக ஆத்மாபஹாரம்பண்ணிப் போந்த சோரனை) என்னையும், கள்வா - (அவ்வழகாலே யறியாதபடி) வஞ்சித்து அபஹரித்துக்கொண்டவனே, தனியேன் ஆருயிரே - (அப்ராப்தபலனாகையாலே) தனிமைப்பட்ட எனக்கு (குணாவிஷ்காரத்தைப் பண்ணித் தன்னையொழியச் செல்லாதபடி எனக்குப்) பரிபூர்ண ப்ராணனானவனே! ("செழும்பறவை தானேறித்திரிவான தாளிணை யென்தலைமேலே" என்னும்படி), என் தலை - என்தலைக்கு, மிசை ஆய் - மேலாய்க் கொண்டு, வந்திட்டு - வந்துசமைந்து, இனி - (ஸம்ஸாரதோஷத்தோடே புருஷார்த்தத்தையும் ஆவிஷ்கரித்து ஆர்த்தியையும் அவிச்சேதத்தையும் ஜநிப்பித்த) பின்பு, நான் - (உன்னாலே லப்தஜ்ஞாந ப்ரேமனாய்க்கொண்டு அதித்வரிதனாய் உன்த்வரையையும் அறிந்திருக்கிற) நான், போகவொட்டேன் - முன்புபோலே நீயகன்றுபோக இசையேன்; என்னை-(உன்னைப்பெறுவிடில் முடியும்படியான) என்னை, ஒன்றும் - (ஸம்ஸாரதசையில் விஷயாந்தரங்களைக்காட்டி அகப்படுத்தினவோபாதியாதல், ருசிபிறந்தபின்பு குணாவிஷ்காராதிகளைப்பண்ணி ஆச்வஸிப்பித்தவோபாதியாதல்) சிறிதும், மாயஞ்செய்யேல் - வஞ்சியாதொழியவேணும்.

இ.—முதற்பாட்டில், உன் ஸௌந்தர்யாதிகளைக் காட்டி உன்னையொழியச் செல்லாதபடி பண்ணிவைத்து, என்னை யினி துஸ்ஸஹமான ஸம்ஸாரத்திலேவைக்கும் பெற்றேனாகப் பண்டுபோலே ஒரு குணாவிஷ்காரத்தைப் பண்ணிவிடவொண்ணாதென்கிறார்.

[முனியே] - "பஹுஸ்யாம்" என்று மஹதாதி விசேஷாந்தமான ஜகத் ஸ்ருஷ்டியைப் பண்ணுவதான மாநஸமான ஸங்கல்பத்தை யுடையையாயிருந்துள்ள ஸர்வாதிகனே! காரண களேபர விதுரமாய் அசித்கல்பமாய் போக்யதாபந்நமாய் "ஸதேவ" என்று தன்னைச்சொல்லும் சொல்லாலேசொல்லும்படி ஸூக்ஷ்மாவஸ்தையை பூஜித்துக்கிடக்கிறவன்று - "ஸஸாகாக்ஷநரமேக" என்கிறபடியே இவற்றினுடைய நோவை அநுஸந்தித்திருக்கிற இருப்பைச் சொல்லுகிறதென்றுமாம். எனக்கு ருசியைப் பிறப்பிக்கைக்காக நாமரூபங்களை உன்பேறாகத்தந்து பண்ணின க்ருஷிபலித்து உன்னாலல்லது செல்லாமையை உண்டாக்கிக்கொண்டு நீ கைவிடப்பார்த்தாயோ? என்கை. [நான்முகனே] - அண்டஸ்ருஷ்டியளவும் தானேபண்ணி இவ்வருகுண்டான தேவாதிஸ்ருஷ்டிகளைப் பண்ணுகைக்காக ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்நின்று ஸ்ருஷ்டித்தவனே! 'நான்முகனே' என்கிற இது விசேஷணமான சதுர்முகனளவிலே பர்யவஸிக்கிறதன்று; அவனுக்கு அந்தர்யாமியான அவனளவும் செல்லுகிறது, மனுஷ்ய சப்தம் தச்சரீரியளவும் செல்லுகிறாப்போலே. சேதனன் ஸ்வசரீரத்தைக்கொண்டு தன்நினைவாலே கமநாகமநாதி சேஷ்டிதங்களைப் பண்ணுமாபோலே ஸ்வசரீரபூதனான சதுர்முவனைக் கொண்டு ஸ்வஸங்கல்பத்தாலே தேவாதி சதுர்வித ஸ்ருஷ்டியைப்பண்ணுகிறான் ஸர்வேச்வரனே. "ஸ்ருஷ்டிஞ்சக்ர கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய" "தஸ்யாஹமபி தத்ப்ரஜா:", "திசைமுகன்கருவுள் வீற்றிருந்து". [முக்கண்ணப்பா] - இப்படி ருத்ரசரீரியாய்க்கொண்டு ஜகதுபஸம்ஹாரம் பண்ணுமவனே! அதிப்ரவ்ருத்தனான ப்ரஜையை விலங்கிட்டுவைப்பாரைப்போலே ஸ்ருஷ்டியோபாதி ஸம்ஹாரமும் உபகாரமாகையாலே "அப்பா" என்கிறார். "ஸம்ஸாரஸம்ஹாரகரஸ்ததோஹம்" இத்யாதி, "ஸ்ருஷ்டிஸ்திதி யந்தகரணீம்" இத்யாதி.

[என்பொல்லா இத்யாதி] - இக்ஷ்வாகு வம்ஶ்யரோடும் யதுவம்ஶ்யரோடும் ஸஜாதீயனாய்க்கொண்டு அவதரித்தாற்போலே, ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே விஷ்ணுநாமாவாய் வந்தவதரித்து ரக்ஷணத்தைப் பண்ணுகையாலே ஸம்போதிக்கிறது. அவ்வடிவிலே துவக்குண்டவராகையாலே 'என்' என்கிறார். [பொல்லா] - அழகிதென்னில் நாட்டார் அழகோபாதியாமென்று விஜாதீயமென்று தோற்றுகைக்காகவென்னுதல், த்ருஷ்டிதோஷபராக்ய்ர்த்தமாக என்னுதல். [கனிவாய்த்தாமரைக்கண் கருமாணிக்கமே] - இதுவுமொரு வ்யாவ்ருத்தியிருக்கிறபடி. முறுவலும் கண்ணுமாயிருப்பதொரு மாணிக்க மலைபோலேயாய்த்து வடிவிருப்பது. முறுவலைத் தப்பினாரையும் அகப்படுத்த வற்றான கண். [என்கள்வா] - நான் அறியாமே இவ்வழகைக்காட்டி வஞ்சித்து என்னையடிமை கொண்டவனே! உன்னதான ஆத்மவஸ்துவை அபஹரித்துக் கொண்டிருக்கிற என்னை விஷயீகரிப்பதே! நான் அபஹரிக்கைக்கு அடி - கர்மம்! நீ அபஹரிக்கைக்கு அடி - வடிவழகு. உடையவனுடைமைபெற்றாலும் அபஹாரமென்னும்படியாய்த்து ஸ்வாதந்த்ர்யம் வயிரம்பற்றினபடி. "நிர்ஹேதுகமாக உன்வடிவழகைக் காட்டி என்னை விஷயீகரித்தவனே!" என்று ஆழ்வான்நிர்வாஹம். [தனியேன்] - ஸம்ஸாரிகளோடு பொருந்தாதே உத்தேஶ்யமான திரளில் புகப்பெறாமையாலே 'தனியேன்' என்கிறார். [ஆருயிரே] - எனக்கு குணங்களை ஆவிஷ்கரித்து குணைகஸாரவமேயாத்ரையாம்படிபண்ணி எனக்கு ப்ராணஹேதுவானவனே! [என்தலைமிசையாய் வந்திட்டு] - என்தலையிலே திருவடிகளிருக்கும்படி நீட்டிவைத்து. நிர்ஹேதுகமாக பெரிய திருவடியின் முதுகிலேவந்து என்தலையிலே திருவடிகளைவைத்து. "செழும்பறவைதானேறித் திரிவான தாளிணையென்தலைமேலே" என்றாரிறே. ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகிறவிடத்தில் உனக்கு ஜகத்தால்செய்யப்பட்டதொன்றில்லாதாப்போலே என்னை இவ்வளவு புகுரநிறுத்தின உனக்கு என்னால் செய்யப்பட்டதொன்றில்லை; இனிமேலுள்ளதும் உனக்கே பரமென்கை. [இனி] - ஸம்ஸாரத்தின் தன்மையை அறிந்தவளவன்றிக்கே முக்தப்ராப்யதேஶத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து உன்சுவட்டை அறிவித்தபின்பு. [நான்போகலொட்டேன்] - 'நானேயறிவேன்' என்று கைபறியாலேபறித்த அறிவன்றிக்கே நீயே காட்டக்காணப்பெற்ற நான் விஶ்லேஷிக்கவொட்டேன். இவர்க்குப் போகவொட்டேன் என்று சொல்லலாகிறது - ஸர்வஜ்ஞன் அறியத் தமக்குஉண்டான த்வரையாலேயும், அபேக்ஷித்தவளவிலே கார்யஞ் செய்யப்பெறாத பிற்பாட்டுக்கு "ஹ்ரேஷாஹிஸ்ஸோ தவ" என்று லஜ்ஜிக்குமவனாகையாலுமிறே. [ஒன்றும் மாயஞ்செய்யேல்] - உன்னை அறிவதற்குமுன்பு த்யாஜ்யமான விஷயங்களைக்காட்டி அதுவேயமையுமென்னப் பண்ணினாய்; உன்னையறிந்தபின்பு குணங்களை ஆவிஷ்கரித்து அதுவே அமையுமென்னப் பண்ணினாய். இனி, ஒருகுணாவிஷ்காரத்தாலே பெற்றேனாகப்பண்ணி என்னைவஞ்சியாதே கொள். [என்னையே] - அங்ஙன்செப்பவேண்டுகிறதென்? என்ன,—"ஸஹஹிவஶ்யஶரீராணி" என்கிறபடியே விரஹம்தின்று ஶோஷித்த உடம்பைக் காட்டுகிறார்.

ஈடு.—முதற்பாட்டு. நிர்ஹேதுகமாக உன்னுடைய ஸௌந்தர்யாதிகளைக் காட்டி எனக்கு உன்னையொழியச் செல்லாதபடிபண்ணி என்னை துஸ்ஸஹமான ஸம்

முதற்பாட்டு.—முனியே இத்யாதி. "என்தலைமிசையாய் வந்திட்டு - என்பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கண்கருமாணிக்கமே - தனியேனாருயிரே - ஒன்றும்மாயஞ் செய்யேல்" என்ற வற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - நிர்ஹேதுகமாக இத்யாதி.

ஸாரத்திலேவைத்து, நீ போய்ப் பண்டுபோலே ஒருதுணுவிஷ்காரத்தைப் பண்ணிவிட வோண்ணுதேன்கிருர்.

[முனியே] - "ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி" (ஸர்வம்கல்விதம் ப்ரஹ்மதஜ்ஜலாநிதி) என்றும் "ஸ்ருஷ்டௌ ஸ்ருஜதிசாத்மாநம் விஷ்ணு: பால்யஞ்சபாதிச | உபஸம்ஹ்ரியதேசாந்தே ஸம்ஹர்த்தா ச ஸ்வயம்ப்ரபு:" (ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்விஷ்ணு:பால்யஞ்சபாதிச - உபஸம்ஹ்ரியதேசாந்தேஸம்ஹர்த்தாச ஸ்வயம்ப்ரபு:) என்றும் "ஸஏவ ஸ்ருஜ்யஸ்ஸச ஸர்க்ககர்த்தா ஸஏவ பாத்யத்திச பால்யதேச | ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர் விஷ்ணுர்வரிஷ்டோ வரதோ வரேண்ய:" (ஸஏவ ஸ்ருஜ்யஸ்ஸச ஸர்க்ககர்த்தா ஸஏவபாத்யத்திசபால்யதேச | ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்டோவரதோவரேண்ய:) என்றும் "மமைவாம்ஶோஜீவலோகே" (மமைவாம்ஶோஜீவலோகே) "அம்ஶோநாநா

"முனியே" என்றதுக்கு - "ஸங்கல்ப்ய" என்று நினைக்குமவன் என்றர்த்தம் சொல்லக்கோலி, இப்படி ஸங்கல்பரூப ஸங்கல்ப விஶிஷ்டனைச் சொன்னுல் நிர்விகாரஶ்ருதிவிரோதம் வந்ததேயென்னில், - சிதசித்விஶிஷ்டவேஷேண ஸங்கல்பமாகையாலே விரோதமில்லையென்று விவக்ஷித்து, சிதசித்விஶிஷ்டவேஷேண ஸ்ருஷ்ட்யாதிகளென்னுமதுக்கு பலப்ரமாணங்களையும் காட்டுகிருர் - ஸர்வம் இத்யாதி. "இதம் - ஸர்வம்" என்று - ஸ்தூல சிதசித் விஶிஷ்டப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது, ப்ரஹ்மஶப்தத்தாலே - ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்ட ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது. இதெல்லாமவனுகைக்கு ஹேதுசொல்லுகிறது - "தஜ்ஜலாந்" என்று. அவனிடத்திலே பிறக்கையாலும், அவனிடத்திலே லயிக்கையாலும், அவனுலே ரக்ஷிக்கப்படுகையாலும், இதெல்லாமவனென்கிறதென்றபடி. "ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்" இத்யாதி ஶ்லோகத்வயம், ப்ரதமேம்ஶே த்விதீயே. "ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்" என்றது - ஸூக்ஷ்மசிதசித் விஶிஷ்டனுன தன்னை ஸ்ருஷ்டிகாலத்திலே ஸ்தூல சிதசித்விஶிஷ்டனுக ஸ்ருஷ்டிக்கிருனென்றபடி. "பால்யஞ்சபாதிச" என்று - ரக்ஷிக்கப்படுகிறவஸ்துவும், ரக்ஷிக்கிறவனுமவனென்றபடி. உபஸம்ஹ்ரியதே இதி - ஸம்ஹரிக்கப்படுகிறவனும் ஸம்ஹரிக்கிறவனும் நியந்தாவான தானேயென்றபடி. "ஸஏவ" இத்யாதி - "ஸஏவஸ்ருஜ்யஸ்ஸசஸர்க்ககர்த்தா ஸஏவபாத்யத்திசபால்யதேச|ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்டோவரதோவரேண்ய:". இஶ்ஶ்லோகத்துக்கர்த்தம் - ப்ரஹ்மத்வவிஷ்ணுத்வ ருத்ரத்வாத்யவஸ்த்தைகளாலே ஸ்ரஷ்டாக்களும் ஸ்ருஜ்யரும் ரக்ஷ்யரும் ரக்ஷகரும் ஸம்ஹார்யரும் ஸம்ஹாரகனும் ஸர்வத்தையும் ஶரீரமாகவுடையனுய், ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களையுடையனுன விஷ்ணுவே என்று. "அத்திச" என்ற சஶப்தம் - அநுக்தஸமுச்சயமாய், "அத்தி" என்று - ஸம்ஹ்ரியதேயென்றபடி. "தேஷ்வகபோஷிதவ்வதேஶகவ்வதே" என்கிற ஸூத்ரத்தில், "தேஷ்வக்யோ:" என்கிற விது - த்வித்வைகத்வயோ: என்று பாவப்ரதாநமானுற்போலே, "ப்ரஹ்மாத்யவஸ்தாபி:" என்றதுவும் பாவப்ரதாநமாய், ப்ரஹ்மத்வாத்யவஸ்தாபி: என்கிறது. "அஶேஷமூர்த்தி:" என்றது - ஹேதுகர்ப்ப விசேஷணம். "வரிஷ்ட:, வரத:, வரேண்ய:" என்கிற பதத்ரயங்களாலும் - ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களைச் சொல்லுகிறது. ஆனுல், ப்ரஹ்மமும் இவையும் ஏகமோவென்ன; ப்ரமாணத்வயம் - மமைவாம்ஶ: இத்யாதி. "மமைவாம்ஶோஜீவலோகேஜீவபூதஸ்ஸநாதந: | மந:ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநிகர்ஷதி" இதி ஸ்ரீகீதாயாம் பஞ்சதஶே. ஜீவலோகேவர்த்தமாந: - ஜீவபூத: - மமைவஶரீரபூத இத்யர்த்த:. ஶாரீரக மீமாம்ஸாயாம் த்விதீயாத்யாயே த்ருதீயபாதே, "அம்ஶோநாநாவ்யபதேஶாதந்யதாசாபிதாஶகிதவ

**வ்யபதேசாச்ச** " (அம்சோநாநாவ்யபதேசாத்) என்றும் சொல்லுகிறபடியே - சிதசித் விஶிஷ்டனை தனக்கே ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களாகையாலே, " **ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே, ஆபஸ்தேஜஸி லீயந்தே, தேஜோவாயௌ லீயதே, வாயுராகாஶே லீயதே, ஆகாஶமிந்த்ரியேஷு இந்த்ரியாணி தந்மாத்ரேஷு தந்மாத்ராணி பூதாதௌ லீயந்தே, பூதாதிர்மஹதி லீயதே, மஹாநவ்யக்தே லீயதே, அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தேவ ஏகீபவதி** " (ப்ருதிவ்யப்ஸுப்ரலீயதே, ஆபஸ்தேஜஸிலீயந்தே, தேஜோவாயௌலீயதே, வாயுராகாஶேலீயதே, ஆகாஶமிந்த்ரியேஷு இந்த்ரியாணிதந்மாத்ரேஷு தந்மாத்ராணிபூதாதௌலீயந்தே, பூதாதிர்மஹதிலீயதே, மஹாநவ்யக்தேலீயதே, அவ்யக்தமக்ஷரேலீயதே, அக்ஷரம்தமஸிலீயதே, தம:பரேதேவஏகீபவதி) என்றுகொண்டு – தன்னோடு அவிபக்தமான இத்தை "**பஹுஸ்யாம்**" (பஹுஸ்யாம்) என்று ஸங்கல்பித்து விபக்தமாக்கித் தமஶ்ஶப்தவாச்யமாக்கி, அத்தை அக்ஷரமாக்கி, அக்ஷரத்தில்நின்றும் அவ்யக்தத்தையுண்டாக்கி, அவ்யக்தத்தில் நின்றும் மஹானையுண்டாக்கி, மஹானில் நின்றும் அஹங்காரத்தையுண்டாக்கி, அஹங்காரத்தில்நின்று பூததந்மாத்ரங்களை யுண்டாக்கி, அவற்றை பூதங்களாக முற்றுவித்து, அண்டஸ்ருஷ்டிபர்யந்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுவதாயுள்ள திவ்யஸங்கல்பத்தையுடையனாய், முநிஶப்தவாச்யனாய், பரப்ரஹ்ம பரமாத்மாதிஶப்தங்களினாலே வேதாந்தங்களிற்சொல்லப்பட்ட, ஸ்வரூபேணாவஸ்த்திதனாயிருந்த

---

**வாதிகஶப்தவாச்யனுக்கு**" அஸ்யார்த்த: - ஜீவாத்மா பரமபுருஷாம்ஶ:, குத:, நாநாவ்யபதேஶாத் - ப்ருத்யாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச இத்யாதி நாநாவ்யபதேஶாத். அந்யதாச, "தத்த்வமஸி" இத்யாதிநா ஐக்யோபதேஶாச்ச. " **அபிதாஶகிதவாதிகஶப்தவாச்யனுக்கு**" ப்ரஹ்மதாஶா:, ப்ரஹ்மதாஸா:, ப்ரஹ்மைவேமே கிதவா:" இத்யாதர்வணிகா: ப்ரஹ்மணோ தாஸகிதவாதித்வமப்யாஹுரதே. ததஶ்ச ஸர்வஜீவ வ்யாபித்வேநாபேதோவ்யபதிஶ்யத இத்யர்த்த:. ஏவமுபயவ்யபதேஶ முக்யத்வஸித்தயே ஜீவோயம் ப்ரஹ்மணோம்ஶ: இத்யப்யுபகந்தவ்ய இதி. ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே, முந்துற ஸம்ஹாரக்ரமத்தைச் சொல்லிக்கொண்டு ஸ்ருஷ்டியையருளிச்செய்கிறார் - ப்ருதிவ்யப்ஸு இத்யாதி. ஸுபாலோபநிஷதி. ப்ருதிவியானது ஸ்வகாரணமான ஜலங்களிலே ஸம்ஸ்ருஷ்டையாகாநின்றதென்றபடி. லீயதே என்கிற லயசப்தம் - நாஶபரமன்று. "**லீங் ஶ்லேஷணே**" என்கிற தாதுவிலே ஸம்ஸர்க்கத்தைச் சொல்லுகிறது. மேலில் லயஶப்தங்களுக்கும் இதுவே அர்த்தம். ஆகாஶமிந்த்ரியேஷு என்றது-ஆகாஶத்துக்கு இந்த்ரியங்கள் காரணமல்லாமையாலே ஸ்வாந்தர்க்கதேதரபூத சதுஷ்டயத்தையுமுடைய ஆகாஶம் இந்த்ரியங்களுக்கு ஆப்யாயகமாய்க்கொண்டு அவற்றிலே கூடுமென்றபடி- இந்த்ரியாணிதந்மாத்ரேஷு என்றது - இந்த்ரியங்களுக்குத் தந்மாத்ரைகள் காரணமல்லாமையாலே அவற்றிலே லயம் கூடாமையால், அவ்விந்த்ரியங்கள், தந்மாத்ரைகளிலே ஸம்ஸ்ருஷ்டங்களாகாநின்றன என்றபடி. 'தந்மாத்ராணி பூதாதௌலீயந்தே' என்றது - தந்மாத்ரைகளும் அவற்றோடுகூடின இந்த்ரியங்களும் மஹத்தத்த்வகார்யமான அஹங்காரத்திலே லயியாநின்றன என்றபடி- அதாவது - ஆகாஶம், தந்மாத்ராவஸ்தையையடைந்து, ஸ்வகாரணமான பூதாதியிலே லீநமாம்; இந்த்ரியங்கள், ஸ்வகாரணமான ஸாத்த்விகாஹங்காரத்திலே லீநமாமென்றபடி. இங்கு, பூதாதியென்கிறது - தாமஸாஹங்கார பரமல்ல, அஹங்காரமாத்ர பரம். "நான்முகனை, முக்கண்ணப்பா" என்கிறபதங்களில் - ஸத்வாரகமாகப் பரமபுருஷன் சொல்லப்படுகையாலே, "முனியே" என்கிறபதத்திலே - அத்வாரகமாகப் பரமபுருஷனைச் சொல்லுகிறதென்னுமிடம் தோற்ற - ஸ்வரூபேணாவஸ்த்திதனாயிருந்துள்ள என்கிறார். "முனியே" என்றதுக்கர்த்தாந்தரம் -

ப்ரமபுருஷ னேன்றவாறு. [முனியே] - "ஸௌகாகீ நரமேத" (ஸௌகாகீ நரமேத) என்கிறபடியே - ஸகலபதார்த்தங்களும் தந்தாமுடைய நாமரூபங்களையிழந்து ப்ரஹ்மத்தினுடைய நாமமும் ரூபமுமேயாய் அசித்கல்பமாய்க்கிடந்தாற்போலே, ஸர்வேஶ்வரனை தானும் இவற்றைப்பிரிந்து அசித்கல்பனானபடியைச் சொல்லுகிறது. [முனியே] - "ததோராவணநீதாயாஸ்ஸீதாயாஶ்ஶத்ருகர்ஶந꞉ | இயேஷ பதமந்வேஷ்டும் சாரணாசரிதேபதி" (ததோராவணநீதாயாஸ்ஸீதாயாஶ்ஶத்ருகர்ஶந꞉ - இயேஷ பதமந்வேஷ்டும் சாரணாசரிதேபதி) என்று - கடல் கொண்டவஸ்துவை நாடுகைக்குத் திருவடி இச்சித்தாற்போலேயன்றே, உருமாய்ந்தப்ரஜைகளையுண்டாக்க நீ மநநம்பண்ணிற்று? †("பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்றுமஹதாதி விசேஷாந்தமான ஜகத் ஸ்ருஷ்டியைப்பண்ணுவதான மாநஸமான ஸங்கல்பத்தையுடையையாயிருந்துள்ள ஸர்வாதிகனே!) நான் இல்லாதவன்று நிர்ஹேதுகமாக என்னையுண்டாக்கின நீ, நான் உண்டாய் நோவுபடுகிற இன்று எனக்கு உதவவேண்டாவோ? [முனியே] - "அம்மே!" என்பாரைப் போலே. அதாகிறது - கரணகளேபர வியாரமாய் இவை கிடந்தவன்று உண்டாக்கினாய்; ஆசைப்பட்ட எனக்கு இன்று உதவலாகாதோ? நீ நினைக்குமன்றே உதவலாவது? நான நினைக்குமன்று உதவலாகாதோ? "ஶாகாம்ருகாராவணஸாயகார்த்தாஜக்முஶ்ஶரண்யம் ஶரணம்ஸ்மராமம்" (ஶாகாம்ருகாராவணஸாயகார்த்தாஜக்முஶ்ஶரண்யம் ஶரணம்ஸ்மராமம்) என்றும் "ராக்ஷஸைர்வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ꞉ | ஶரண்யம் ஶரணம்யாதா ராமம் தஶரதாத்மஜம்" (ராக்ஷஸைர்வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ꞉ - ஶரண்யம்ஶரணம்யாதாராமம்தஶரதாத்மஜம்) என்றும் சொல்லுகிறபடியே - உன்னையொழிய ஒருபுகலில்லாதார்க்கு உதவுமவனன்றே என்கிறார். [நான்முகனே] - "யோப்ரஹ்மாணம விததாதிபூர்வம்" (யோப்ரஹ்மாணம விததாதிபூர்வம்) என்று ப்ரஹ்மாவைஸ்ருஷ்டித்து, ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து, சேதநரானபுருஷர்கள் அசேதநமான ஸ்வம்ஸ்வம ஶரீரங்களைக்கொண்டு தந்தாம் நினைவுக்குத்தக்கபடி கமநாகமநாதிசேஷ்டிதங்களைப் பண்ணுமாபோலே, ஸ்வ

ஸௌகாகீ இத்யாதி. அதாவது - வெறுப்புடையவனேயென்னுதல்; துறந்தவனேயென்றாய், ஜகத்தையிழந்து தனியனாய் * தயமாநமநாவென்றிருக்குமவனேயென்னுதல். முனிவு-வெறுப்பும், துறக்கையும். "முனியே" என்றபதப்ரயோகத்துக்கு ஸதருஷ்டாந்தமாக ஶாவம் - ததோராவண இத்யாதி. ஸுந்தரகாண்டே ப்ரதமஶ்லோக꞉. இல்லாதவன்று உண்டாக்குகைக்கு மநநம் பண்ணினத்தைச் சொன்னதுக்கு ஶாவம் - நான் இல்லாத இத்யாதி. ஆகையாலே "நானில்லாதவன்று" என்று கூட்டுவது. "முனியே" என்றஸ்வரத்துக்கு ஶாவம் - அம்மேஎன்பாரைப்போலே என்று, "அம்மேயென்பாரைப்போலே" என்று ஸம்பைந்தும் சொல்லுகிறவருடைய ஹார்த்தஶாவம் - அதாகிறது இத்யாதி. ஏதத்விவரணம் - நீநினைக்குமன்றே இத்யாதி. காரணத்வத்தைச் சொல்லுகிற இப்பதத்திலே அவனுடைய ஶரண்யத்வமும் ஃபலிதமென்று விவக்ஷித்து அதுக்கு ஶாவம். ஶாகாம்ருகா꞉ இத்யாதி, யுத்தகாண்டே ஷஷ்டிதமே, "தேவயஞ்சாநா꞉ பதிதாஶ்சவீரா நாநத்யஞ்சாநா ஹயஶஶ்சவிநா꞉" இதி பூர்வார்த்தம். "முனியே" என்கிற இத்தால ஸம்ஹாராவஸ்த்தை சொல்லிற்றே, இப்பதத்தாலேது சொல்லுகிறதென்ன; வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமாக ஸமஷ்டிபுருஷனான ப்ரஹ்மாவுக்கு அந்தராத்மாவாயிருக்குமிருப்பைச் சொல்லுகிறதென்கிறார் - யோப்ரஹ்மாணம் இத்யாதி. ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து என்றது - ப்ரஹ்மாவாகிற ஜீவத்வாரா ப்ரஹ்மஶரீரத்திலே அநுப்ரவேஶித்தென்றபடி. ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து என்

† குண்டலிதம் இருபத்துநாலாயிரப்படியென்று காண்கிறது.

ஶரீரபூதனான சதுர்முகனுக்கு அந்தர்யாமியாய், அவனைக் கொண்டு மற்றும் ஸங்கல்பாநுகுணமாக தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபமான ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணின படியைச் சொல்லுகிறது. இத்தால் - இவன் நினைத்தவன்று ஏதேனுங்கொண்டு கார்யங் கொள்ளலாமாகாதே என்கை. இருந்து படைக்கும் ஆஸநத்தோபாதி ப்ரஹ்மா ; அசேதநமான மஹதாதிகளைக் கொண்டு ஸ்ருஷ்டித்தத்தோடு சேதநனான ப்ரஹ்மாவைக் கொண்டு ஸ்ருஷ்டித்தத்தோடு வாசியில்லை இவனுக்கு ; சேதநரென்றும் அசேதநங்களென்றும் தன்னில்தான் வாசியுண்டேயாகிலும், அவனைக் குறித்துப் பரதந்த்ரமாமிடத்தில் இரண்டு மொக்கும். தேவதிர்யங்மநுஷ்யரென்றும் ப்ராஹ்மணக்ஷத்ரிய வைஶ்யரென்றும் ஸ்வஶரீரங்களைக்காட்டும் ஶப்தங்களாலே அவற்றில் வேறாயிருந்துள்ள தாங்களும் சொல்லப்பட்டாற்போலே, இங்கும், “யஸ்யாத்மா ஶரீரம் - யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்” (யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம்) என்றும் “ஜகத்ஸர்வம் ஶரீரந்தே” (ஜகத்ஸர்வம்ஶரீரந்தே) “தாநி ஸர்வாணி தத்வபு:” (தாநிஸர்வாணிதத்வபு:) “தத்ஸர்வம் வைஹரேஸ்தநு:” (தத்ஸர்வம்வைஹரேஸ்தநு:) என்றும் சொல்லுகிறபடியே-ஶரீரவாசிஶப்தம் ஶரீரிபர்யந்தம் ஸ்வார்த்தாபிதாநம் பண்ணக்கடவதான ந்யாயத்தாலே, ஸ்வஶரீரபூதனானசதுர்முகனைக் காட்டக்கடவ சதுர்முகஶப்தத்தாலே - அவனில் வேறாய் அவனுக்கு ஆத்மாவாயிருந்த எம்பெருமான் சொல்லப் படுகையாலே, “நான் முகனே” என்னும் சொல்லாலே எம்பெருமானை ஸம்போதிக்கிறது. [முக்கண்ணப்பா] - “யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:” (யஸ்யப்ரஹ்மச க்ஷத்ரஞ்ச உபேபவதஓதநம்) “ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்” (ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்) என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஹார்யங்களோடேகூட ஸம்ஹாரகனையும்ஸம்ஹரிக்கிற ஸர்வேஶ்வரனுக்கு ஶரீரபூதனான த்ரிணேத்ரனுடையபேரான ஶப்தத்தினாலே-அவனில்

---

*றது - வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காக. அந்தர்யாமியாய் என்றது - சதுர்முகவாசி ஶப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி அவனுடைய ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் ஸ்வாதீநமாயிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. பதப்ரயோகத்துக்கு ஸ்வரஸம் - இத்தால்இவன் இத்யாதி. “நான்முகனே” என்றதுக்கு ஃபலிதம் - இருந்துபடைக்கும் இத்யாதி. “ஆஸநத்தோபாதி” என்று ப்ரஹ்மாவை அசித்ப்ராயமாக்கலாமோவென்ன,— ஈஶ்வரனைப் பார்த்தால்அப்படிசொல்லலாமென்கிறார்-அசேதநமான இத்யாதி. எல்லாமென்றாலும் அசேதநத்தைப்பற்றச்சேதநனுக்கு வாசியில்லையோவென்ன - சேதநரென்றும் இத்யாதி. “நான்முகனே” என்கிற ஶப்தத்தாலே ஸர்வேஶ்வரனைச்சொல்லும் வழிஎது? என்ன - தேவதிர்யக் இத்யாதி. தாங்களும் - சேதநரும். அபிதாநம் - ப்ரதிபாதநம். யோப்ரஹ்மாணம் இத்யாதி - ஶ்வேதாஶ்வதரே. யஸ்யாத்மாஶரீரம் இத்யாதி - அந்தர்யாமிப்ராஹ்மணே. “ஜகத்ஸர்வம் ஶரீரந்தே ஸ்தைர்யந்தே வஸுதாதலம் । அக்நி: கோப: ப்ரஸாதஸ்தே ஸோம: ஶ்ரீவத்ஸலக்ஷண” இதி ராவணவதாநந்தரே ராமம்ப்ரதி சதுர்முக:. ‘யத்கிஞ்சித் ஸ்ருஜ்யதே யேந ஸத்வஜாதேந வைத்விஜ । தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய ஸம்பூதௌ தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு: । யாநி கிஞ்சித் ப்ரதந்யந்தி யாநி ஸ்ருஜ்யாநி காநிசித் । ஸத்வஜாதாநி தாநிஸர்வாணி தத்வபு:” இதி ப்ரதமேம்ஶே. த்ரிணேத்ரனை ஸம்ஹாரகாலத்திலே விஶேஷாதிஷ்டாநம் பண்ணிக்கொண்டு அவ்வழியாலே ஈஶ்வரன் ஸம்ஹரிக்கையைப்பற்ற த்ரிணேத்ர ஶப்தத்தாலே அவனைச்சொல்லி ஸம்போதிக்கிறதென்கிறார் - யஸ்ய இத்யாதி. கடவல்ல்யாம். ம்ருத்யு ஶப்தத்தாலே-அக்ந்யந்தக ருத்ராதிகளைச் சொல்லுகிறது. “அப்பா”*

வேருய் அவனுக்கு அந்தராத்மாவான எம்பெருமானை ஸம்போதிக்கிறது. [அப்பா]-உபகாரம்; ஸ்ருஷ்டியிலும் உபகாரமிறே ஸம்ஹாரம். நாலுநாள் கழித்து ஸ்ருஷ்டிக்கிலும் ஸத்தை கிடக்கும். சடக்கென ஸம்ஹரியாவிடில் ஸத்தையிழக்கவேண்டும்படி தீம்பிலேயாய்த்துக் கைவளர்வது. எங்ஙனே? என்னில்,—தந்தாம் கையைக் கொண்டு கண்ணைக் கலக்கிக் கொள்வாரைப் போலே, ஸ்ருஷ்டித்தஸ்ருஷ்டி பேற்றுக்கு உடலன்றியே தீம்புக்கு உடலானவாறே, சிறுப்ரஜைகளைக் கையிலும் காலிலும் விலங்கிட்டு ரக்ஷிக்கும் மாதா பிதாக்களைப்போலே, கரணகளேபரவிதுரமாக்கி ஸம்ஹரித்திட்டுவைக்கையும் உபகாரமாயிருக்கிறபடி: “ [illegible] ” (ததா - ஸம்ஹாரகஃ) என்கிறபடியே. “[illegible] (ஏகோஹவைநாராயண ஆஸீத்-நப்ரஹ்மா - நேஶாநஃ - நேமே த்யாவாப்ருதிவீ - நநக்ஷத்ராணி - நாபோநாக்நிர்நஸோமோநஸூர்யஃ || ஸஏகாகீநரமேத - தஸ்யத்யாநாந்த ஸ்த்தஸ்யைகா கந்யாதஶேந்த்ரியாணி)இத்யாரப்ய ‘[illegible]” (அதபுநரேவ நாராயணஸ் ஸோந்யம் காமம்மநஸாத்யாயீத - தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்யலலாடாத் ஸ்வேதோபதத் - தாஇமாஆபஃ - தத்திரண்மயமண்டமபவத் - தத்ரப்ரஹ்மாசதுர்முகோஜாயத || அதபுநரேவ நாராயணஸ்ஸோந்யம் காமம்மநஸாத்யாயீத - தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்ய லலாடாத் ஸ்வேதோபதத் - ஸ்வேதாத்புத்புதமபவத் - புத்புதாத்த்ர்யக்ஷஶ்ஶூலபாபாணிஃபுருஷோஜாயத) என்று சொல்லுகிற மஹோபநிஷத்வாக்யத்தை ப்ரத்யபிஜ்ஞைபண்ணுவிக்கிறது ‘முனியேநான் முகனே முக்கண்ணப்பா’ என்று. “[illegible]” (ஸ்ருஷ்டிஸ்த்தியந்தகரணீம்) இத்யாதி. [என்போல்லாக்கனிவாய்த்தாமரைக்கண்கரு

என்றதுக்குபாவம் - அப்பா இத்யாதி. ஸ்ருஷ்ட்யாதிகளொழிய ஸம்ஹாரத்திலுபகாரமேதென்ன - ஸ்ருஷ்டியிலும் இத்யாதி. அதெப்படியென்ன - நாலுநாள் இத்யாதி. உக்தார்த்தத்தை ஶங்கா பரிஹாரரூபேண அருளிச்செய்கிறார் - எங்ஙனேயென்னில் இத்யாதி. ஸ்ருஷ்டியோபாதி ஸம்ஹாரமுமுபகாரமென்னுமதுக்கு ப்ரமாணம் - ததா இத்யாதி. “[illegible]” இதி ஜிதந்தாயாம். “முனியே நான்முகனே முக்கண்ணப்பா” என்றத்தை ஶ்ருதியிலும் சொல்லிற்றென்கிறார் - ஏகோஹவை இத்யாதி. மஹோபநிஷதி: இது “முனியே நான்முகனே முக்கண்ணப்பா” என்றமாத்ரத்துக்கு ப்ரமாணம். “[illegible]” என்கிறஶ்ருதி - கல்பபேதவிஷயம்; ஶ்ருத்யந்தரத்திலே ருத்ரனுக்கு ப்ரஹ்மபித்ருகத்வம் சொல்லுகையாலே. த்யாநாந்தஸ்த்தஸ்ய-தான் பண்ணுகிற த்யாநத்துக்குள்ளே யிருக்கிறவனுக்கென்றபடி. “ஏகாகந்யா” என்று மநஸ்ஸைச் சொல்லுகிறது. ஸ்ரஷ்டாவையும் ஸம்ஹர்த்தாவையும் சொன்னவநந்தரம், விஷ்ணுவைப் பிரியச்

மாணிக்கமே]-ஸ்ருஷ்டிக்கும் ஸம்ஹாரத்துக்கும் நடுவு, பருந்துஇருஞ்சிறைப்போலே இருஞ்சிக்கொண்டு போவர்களிறே ரக்ஷகரில்லாவிட்டால்; அதுக்காக, ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்த்தாக்களாய் ஆதிதேவர்களாயுள்ள ப்ரஹ்மருத்ரர்கள்நடுவே தான் இக்ஷ்வாகுவம்ஶ்யரோடும் யதுவம்ஶ்யரோடும் ஒத்ததரத்தனாய்க்கொண்டு திருவவதாரம் பண்ணினாற்போலே, ஆதிதேவனாய் விஷ்ணுநாமாவாய் ஸ்வஸ்வரூபத்தினாலே திருவவதாரம்பண்ணி ரக்ஷிக்கும்படியைச் சொல்லி ஸம்போதிக்கிறது. கண்ணற்றுச் செய்யவேண்டுவதொன்றாகை யாலே ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களுக்காளிடும், ரக்ஷணமாகிறது தானே தண்ணளிபண்ணிச் செய்யவேண்டுவதொன்றாகையாலே வேறாளிடவொண்ணாது: ஆளிட்டாலும் வேறு சிலரால் ரக்ஷிக்கவொண்ணாது; "𑌨 𑌹𑌿 𑌪𑌾𑌲𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍃𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌹𑌰𑌿𑌂" (நஹிபாலநஸாமர்த்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்) என்றும் "𑌨 𑌸𑌮𑍍𑌪𑌦𑌾𑌂 𑌸𑌮𑌾𑌹𑌾𑌰𑍇 𑌵𑌿𑌪𑌦𑌾𑌂 𑌵𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍇 । 𑌸𑌮𑌰𑍍𑌥𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌂" (நஸம்பதாம்ஸமாஹாரேவிபதாம்விநிவர்த்தநே - ஸமர்த்தோத்ருஶ்யதே கஶ்சித்தம்விநாபுருஷோத்தமம்) என்றும் சொல்லுகிறபடியே. [என் போல்லா இத்யாதி] - "நான்முகனே, முக்கண்ணப்பா" என்கிற விடத்தில் கண்ணைச் செம்பளித்துக் கொண்டுபோய்விசேஷ்யத்திலே இளைப்பாறினார்; இங்கு, விஶேஷணமே உத்தேஶ்யமான படியைச் சொல்லுகிறது, 'என்போல்லாக் கனிவாய்த்தாமரைக்கண் கருமாணிக்கமே' என்று. ஆழ்வார்கள் தாங்கள் திருமேனிக்கப்பால் போகவறியார்களிறே; இத்தை ஶுபாஶ்ரயமாகச் சொல்லாநிற்கச் செய்தே, இத்தைவிட்டு திவ்யாத்மஸ்வரூபத்தளவும் போவேன்கிறது - இத்தை விடச்சொல்லுகிறதன்று, திவ்யாத்மஸ்வரூபத்தளவும் போவானென்கையிலே தாத்பர்யம்; 'போல்லா' - என்கிற இத்தை 'கருமாணிக்கம்' என்றத் தோடே சேர்ப்பது. "போல்லா - கருமாணிக்கம்" என்று கண்ணைச்சில் வாராமைக்குக் கரிபூசுகிறாராதல்: அழகில் விஸஜாதீய்தையாலேயாதல் 'போல்லா' என்கிறது. [கனி

---

சொன்னதுக்கு ஸாவம் - ஸ்ருஷ்டிக்கும் இத்யாதி. இறஞ்சினாற்போலே - அடித்தாற்போலே. விஷ்ணுநாமாவாய் என்றவிடத்திலே, "[illegible] । 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾𑌮𑌾 𑌸 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌚 𑌗𑍀𑌯𑌤𑍇" என்றது அநுஸந்தேயம். "என் பொல்லா" என்று தொடங்கி "கருமாணிக்கமே" என்னுமளவும் - ரக்ஷணோபயோக்யாகாரங்களைச் சொல்லுகிறது. ப்ரஹ்மருத்ராந்தர்யாமியாய் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணினாற்போலே ரக்ஷணத்துக்கும் ஆளிடவொண்ணாதோவென்ன:—த்வேதாபரிஹரிக்கிறார் - கண்ணற்று இத்யாதி. கண்ணற்று - நிர்த்தயமாக. ஸ்ருஷ்டியில் கண்ணறுகையாவது - தத்தத்கர்மாநுகுணமாக தாரதம்யமுண்டாம்படி ஸ்ருஷ்டிக்கை. அப்படியொண்ணாதோவென்ன-நஹி இத்யாதி. "𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌹𑌾𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞 𑌨 𑌭𑌵𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍" இத்யுத்தரார்த்தம் (வி-பு-க-உஉ). 'நஸம்பதாம்' இத்யாதி ஸ்ரீவிஷ்ணுபுராணே.ஷ்டி"பொல்லாக்கனிவாய்" இத்யாதிவிஶேஷணங்களுக்குஸாவம் நான்முகனே இத்யாதிவாக்யத்வயமும். ஸ்வரூபகுணங்களிருக்க, திருமேனியைச் சொல்லுகிறதென்னென்ன- ஆழ்வார்கள் இத்யாதி. இவ்விடத்தில், "யயோபாஸநம் ஃபலமாகையாலே ப்ராயாங்யேந திவ்யமங்களவிக்ரஹத்தை விரும்பியிருப்பர்களாழ்வார்கள்" என்று ஸம்ப்ரதாயமாக அருளிச்செய்வர். ஆனால், ஶுபாஶ்ரயான திவ்யமங்களவிக்ரஹத்தைவிட்டு திவ்யாத்மஸ்வரூபத்தை த்யாநம்பண்ணச் சொல்லுகிற வேதாந்தாதி ஶாஸ்த்ரத்தில், "விக்ரஹமில்லை" என்று தோற்றாநின்றதேயென்ன- இத்தை இத்யாதி. பொல்லல்- தொளைத்தலாய், தொளையாத மாணிக்கம். அநுபஹதமான ரத்நம் போலேயிருக்கிற வடிவு.சிவப்புத்தோற்றுவது ஸ்மிதத்தாலேயாகையாலே யருளிச்செய்கிறார் -

வாய்] - [illegible] (அவாக்யநாதர:) என்கிற தத்த்வம், அநுகூலரைக்கண்டு தைர்யபங்கம் பிறந்து ஸ்மிதம்பண்ணிநிற்கும்படியைச் சொல்லுகிறது; "[illegible]" (ஸ்வகர்மாநலதப்தாநாம்த்யாயிநாம்கேதஸாந்தயே) என்னும்படியே. [தாமரைக்கண்] - வினவப்புக்குவிக்கித்தமோறினால், குறையும் தலைக்கட்டும் கண்ணைச் சொல்லுகிறது; "[illegible]" (அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய) என்னும்படியே. [கருமாணிக்கமே]-ஸம்ஸாரத்தில்விடாய்தீர அணைக்கும் உடம்பைச் சொல்லுகிறது; "[illegible]" (ஏஷஸர்வஸ்வபூதஸ்து) என்னும்படியே. தாமரை பூத்ததொரு மாணிக்கம் ஸ்மிதம்பண்ணினாற்போலேயாய்த்து வடிவுஇருப்பது. [என்கள்வா] - என்னிசைவின்றிக்கே என்னை யபஹரித்தவனே! கர்மத்தினாலே, ஈஶ்வரனுடையதான ஆத்மாவை முன்தோற்றாதே நின்று அபஹரிக்கும் இவன்; வடிவைக்காட்டி இவனையபஹரிக்கும் அவன். ஸர்வேஶ்வரனுக்கும் தன்வஸ்துவைக் கள்வுகண்டுகொள்ள வேண்டும்படிக் கீடாயிறே இவனுடைய என்னினுரமிருப்பது. ஸ்ரீஜநகராஜன்பெண்பிள்ளையை நீர் வார்ப்பித்துத் தனக்காக்கினாற் போலேயிறே ஆத்மாவைத் தனக்காக்கிக்கொள்ளுகை யாவது. [தனியேனாருயிரே] - என்னிசைவின்றிக்கே என்னைவிஷயீகரித்தவளவோ, உன்சுவட்டையறிவித்துப் பிரிந்தாலும் முடியாதபடி தந்னுவிஷ்காரத்தாலே [illegible]ரிப்பித்தவனே! [தனியேன்] - ஸம்ஸாரிகளோடுபோருந்தாமையும், ப்ராப்யதேசத்தில் புகப்பெறாமையும். பிராட்டி அஶோகவநிகையில் ராக்ஷஸிகள் நடுவே யிருந்தாற்போலே

---

அவாக்யநாதர: இத்யாதி. அவாகீ - உக்திரஹிதஃ. ஸ்மிதம் சொல்லுகிறதுக்கு ப்ரமாணகதநமுகேந ஹாவம்-ஸ்வகர்ம இத்யாதி. "[illegible] । [illegible]" இதி ஸ்ரீ பௌஷ்கரே. ஶோமணேந - கிரணஸமூஹேநேத்யர்த்த:. இங்கே, உத்தரார்த்தத்திலே நோக்கு. "பூர்வகர்மாநலார்த்தாநாம்" என்றும் பாடமிருக்கையாலே, "ஸ்வகர்மாநலதப்தாநாம்" என்கிறவிது பாடஹேது மென்று கண்டுகொள்வது. "கனிவாய்" என்றத்தோடேகூட்டி "தாமரைக்கண்" என்றதுக்கு ஹாவம்-வினவ இத்யாதி. "தாமரைக்கண்" என்கிறவர்க்கு ஹாவம் - திருக்கண்களாலே குளிர நோக்கி என்னார்த்தியைத் தீர்க்கவேணுமென்று விவக்ஷித்து. அதுக்குப்ரமாணம் - அவலோகந இத்யாதி. "[illegible] । [illegible]" இதி ப்ரதமேம்ஶே, ப்ரஹ்லாதஃ(க-உ௦-கச). கருமையாலே குளிர்த்தியைவிவக்ஷித்து, அதுக்கு ஹாவம்-ஸம்ஸாரத்தில். இத்யாதி. அணைக்கிறதுக்கு ப்ரமாணம் - ஏஷஃஇத்யாதி. "[illegible] । [illegible]" இதி யுத்தகாண்டே (க-கச)."கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே" என்றத்தை ரூபகமாக அருளிச்செய்கிறார் - தாமரை இத்யாதி. "கள்வா" என்றதுக்கு ஹாவம் - என்னிசைவு இத்யாதி. ஆத்மாபஹாரம்பண்ணுவான் இவனாயிருக்க, அவனை "கள்வா" என்கிறதென்? என்ன - கர்மத்தினாலே இத்யாதி வாக்யத்வயம். முன்தோற்றாதேநின்று என்றது - ஈஶ்வரனுடையதென்றறியாதேயென்றபடி. ஶேஷி ஶேஷவஸ்துவை ஸ்வீகரிக்கை களவோ? "கள்வா" என்கிறதென்னென்ன-ஸர்வேஶ்வரனுக்கும் இத்யாதி. என்னினுரம் - மமதாபலம். த்ருஷ்டாந்தமுகேந விவரணம் - ஸ்ரீ ஜநகராஜன் இத்யாதி. "என்கள்வா" என்றது - உபகாரமானாற்போலே, "ஆருயிர்" என்றதும் உபகாரமென்னுமத்தை யருளிச்செய்கிறார் - என்னிசைவு இத்யாதி. இவர்க்குத் தனிமையேதென்ன - ஸம்ஸாரிகளோடு இத்யாதி. உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - பிராட்டி இத்யாதி. ஶப்தார்த்தம் - உன்னை இத்யாதி. தனிமைப்பட்டிருக்கிற எனக்குப் பரிபூர்ண

காணும் இவர்க்கு ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற இருப்பு. [ஆருயிரே] - உன்னைப்பிரிந்து பொருந்தாதஸம்ஸாரத்திலே யிருந்த எனக்கு ப்ராணஹேதுவாயுள்ளவனே! [என்தலை மிசையாய்வந்திட்டு] - "சேழும்பறவைதானேறித்திரிவானதாளிணை யென்தலை மேலே" "தலைமேலதாளிணைகள்" என்று சொல்லுகிறபடியே-பூர்ணமாக வந்துதோற்றி. நிர்ஹேதுக மாக வந்தேன்றும். † (ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகிறவிடத்தில் உனக்கு ஜகத் தால் செய்யப்பட்டதொன்றில்லாதாப் போலே, என்னை யிவ்வளவாகப் புகுரநிறுத்தின உனக்கு என்னால் செய்யப்பட்டதொன்றில்லை. இனிமேலுள்ளதும் உனக்கே ஹா மென்கை.) [இனி] - உன்னைக்காட்டினமாத்ரமன்றியே, பரமபதத்தில் சுவட்டையும் அறிவித்த பின்பு. [நான்] - வழிச்சுவடறிந்த நான். [போகலொட்டேன்] - தம்மு டைய செல்லாமையாலும் ப்ராப்தியாலும் தடுக்கவும் வளைக்கவும் உரியரானபடி; "சேஷ்யே புரஸ்தாச்சாலாயா யாவந்மேநப்ரஸீததி" (சேஷ்யேபுரஸ்தாச்சா லாயா யாவந்மேநப்ரஸீததி) என்னும்படி. [போகலொட்டேன்] - வரும்போது உன்ஸ்வா தந்த்ர்யத்தாலே வரலாமத்தனையல்லது. போம்போது உன்காரியம்உன்னதோ? இவர்க்கு இப்படி சொல்லலாகிறது - ஸர்வஜ்ஞன் அறியத் தமக்குஉண்டான த்வரையாலேயும், அபேக்ஷித்தவளவிலே இவர்காரியம் செய்யப்பெறாத பிற்பாட்டுக்கு "ஹ்ரீரேஷாஹி மமாதுலா" (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்று லஜ்ஜிக்குமனவனுகையாலு மிறே. [ஒன் றும்மாயஞ்செய்யேல்] - உன்னையறிவதுக்கு முன்பு, த்யாஜ்யமான விஷயங்களைக்காட்டி அதுவேயமையும் என்னப்பண்ணினாய்; உன்னை யறிந்தபின்பு, குணங்களையாவிஷ்கரித்து, "உம்பரேன்குறை" என்னவும் "ஈதேயின்னம்வேண்டுவதெந்தாய்" என்னவும் பண்ணி னாய்; அப்படியே, இனி ஒரு குணவிஷ்காரத்தைப்பண்ணி‡ (அவ்வழியாலே) - நான்பெற் றேனாகப்பண்ணி என்னை வஞ்சியாதே கொள். அங்ஙன்வேண்டுவானேன்? என்ன - [என்னையே] - "ஏஹிபஶ்யஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) என்கிறபடியே -

ப்ராணனானவனே என்று ஸப்தார்த்தம். முந்தினவர்த்தத்துக்கு, "தலைமிசை" என்று - தலைக்கு மேலே என்றாய், பூர்ணமாகவந்தென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, "தலைமிசையாய்-" இத்தலை, மிசையாய் - மிசையாம்படி, வந்து - நிர்ஹேதுகமாகவந்தென்றபடி. * சூழ்விசும்பணிமுகில் ப்ரமே யத்தை உபஜீவித்துக்கொண்டு, "இனி" என்றதுக்கர்த்தம் - உன்னை இத்யாதி. "நான்" என்ற துக்கும் கீழ்ச்சொன்னத்தை யுபஜீவித்துக் கொண்டர்த்தம் - வழிச்சுவடு இத்யாதி. சுவடு - ரஸம். ஶேஷியானவனைப் "போகலொட்டேன்" என்று நிர்ப்பந்திக்கலாமோவென்ன - தம்முடைய இத் யாதி. ஆர்த்தியாலும் அநந்யகதித்வத்தாலுமென்றபடி. இப்படி வளைத்தபெருண்டோவென்ன - சேஷ்யே இத்யாதி. "ஸ நாஹம் ராமம் ராஜாநம் ஞாதாநஸீதநாயத: ஶேஷ்யே புரஸ்தாச்சாலாயா யாவந்மேநப்ரஸீததி" இத்யயோத்யாகாண்டே சித்ரகூடேபாத: (கககக). ஶேஷியானவனை "போகலொட்டேன்" என்று வளைக்கிறதுக்கு மூன்றாம்ஹேது - வரும்போது இத்யாதி. ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தாலும் அவனை வளைக்கிறாரென்றபடி. ஆர்த்தியையும் பாரதந்த்ர்யத் தையும் விவரிக்கிறார் - இவர்க்கு இப்படி இத்யாதி. "ப்ரதீக்ஷமாணோ ஹ்ரீரேஷா ஹி மமாதுலா । யந்நிக்ருஹ்ணாமி விப்ராணாமேவ ஸேவாமவஸ்திதஹ" இத்யா ரண்யகாண்டே ராம: (க௦-கூ). "ஒன்றும்" என்றதுக்கு ஹாவம்-உன்னை இத்யாதி. "ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் । ஹதாநாம் ராக்ஷஸைர்கோரைர்பஹூநாம் பஹுதா வநே" இத்யாரண்யகாண்டே. அவர்களைப்பற்ற ஏற்றமுண்டென்கிறார் - அங்கு

† குண்டலிதம் இருபத்துநாலாயிரம்.
‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்று முன்கோசங்களில் காண்கிறது.

விரஹம்தின்று மோக்ஷித்தஉடம்பைக்காட்டுகிறார்; அங்கு ஶரீரமாத்ரம் அவர்களுக்கு; இவர்க்கு ஸ்வரூபநாசமிறே (க)

---

# இரண்டாம் பாட்டு.

---

**மாயஞ்செய்யேல் என்னைஉன்திருமார்வத்துமாலைநங்கை**
**வாசஞ்செய்பூங்குழலாள்திருவாணை நின்னாணைகண்டாய்**
**நேசஞ்செய்துஉன்னோடென்னை உயிர்வேறின்றிஒன்றாகவே**
**கூசஞ்செய்யாதுகொண்டாய் என்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ.**

**ஆ.**—(மாயஞ்செய்யேல்.) - பண்டுஉன்னைக்காணவேணும் என்றாசைப்பட்டுக் காணப்பெறாமையாலே நான் வ்யஸநப்படுமளவில், கண்ணாரக்கண்டாற்போலே விசதமாம்படி என்னெஞ்சிலே யுன்னைக்காட்டி, காணவேணுமென்னும் அபேக்ஷையைப் பிறப்பித்து, என்னுடைய வ்யஸநத்தை ஸமாப்ராரம்பண்ணினாற்போலே செய்தருளவொண்ணாது ; இனியுன்னைக்காட்டாதே வஞ்சித்தொளிக்கில், உனக்கு நிரவதிகஸம்பத்தாய் நிரவதிகபோக்யபூதையாய் உன்னாலும் ஸஹாமந்தவ்யையாய் உன்திருமேனிக்கு வாசஞ்செய்யாநின்ற அழகிய திருக்குழல்களை யுடையளாயிருந்த பெரியபிராட்டி திருவாணை, நின் திருவாணை கண்டாய் ; ஸமஸ்தஹேயாஸ்பதமாயிருந்த என்னை யருவராதே என்பக்கலிலே யதிஸ்நேஹத்தைப்பண்ணி உன்னோடொன்றென்று சொல்லலாம்படி என்னோடே கலந்தருளினாய் ; ஆதலால், அதுபெறுவாணையன்று: இனிச்செய்கிறோம் என்னப்பற்றாது: சண்டென வந்தென்னைக் கூவிக்கொள்ளாய் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதத்தைச் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி எம்பெருமானுக்குப் பெரியபிராட்டியார் திருவாணையிடுகிறார்.

[உன் திருவென்று தொடங்கி] - "விஷ்ணோஃஶ்ரீஃ" என்னும்படியே உனக்கு ஸம்பத்தாய் உன் திருமார்வுக்கு அலங்காரமான மாலையாய் உன்னாலும் ஶ்லாகிக்கப்படுவாளாய் உன்திருமேனிக்குப் பரிமளத்தைப் பண்ணாநின்றுள்ள அழகிய திருக்குழலையுடைய பெரியபிராட்டியாருடைய ஆணைகிடாய். உனக்கு இட்டவடி பேராதே என் அபேக்ஷிதம்செய்து முடிக்கவேண்டும்படியிட்ட ஆணை. போகவல்லையாகில் போய்க்காணென்று கருத்து. "யோஸ்ய ஸீதயா ஸஹ ஸம்வாஸமிச்சதி" என்னும்படியாலே பெரியபிராட்டியாராணை உன்னாணைகிடாய் என்றுமாம். [நேசஞ்செய்து உன்னோடு என்னை என்றுமேனுக்கு] - இனி இத் திருவாய்மொழி குறையும், நீர் 'பெறுவாணையிட்டீர்' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, அல்லாமையேத்துகிறார். பெரியபிராட்டியார் பக்கலிலும்பண்ணாத ஸ்நேஹத்தை என்பக்கலிலேபண்ணி என்பக்கலுள்ள அயோக்யதை பாராதே உன்னோடு ஆத்மபேதமில்லாதபடி என்னைப்பரிக்ரஹித்தாய் ; ஆனபின்பு, ஐயோ ! என்னை சண்டெனவந்து விஷயீகரியாய் !

---

இத்யாதி. ஆக, "முனியே" என்று - ஸமஷ்டிஸ்ருஷ்டியையும், "நான்முகனே" என்று - வ்யஷ்டிஸ்ருஷ்டியையும், "முக்கண்ணப்பா" என்று - ஸ்ருஷ்டிஸம்ஹாரத்தையும், "கருமாணிக்கமே" என்னுமளவும் - பாலநத்தையும் சொல்லுகிறது. (க)

ப.—அநந்தரம், தம்முடைய கார்யஞ்செய்கைக்காக மறுக்கவொண்ணாதபடி வல்லபையான பிராட்டியுடைய திருவாணையிடுகிறார்.

(முன்பு ஆர்த்தனாய்க்கூப்பிட்ட தசைகள்தோறும் குணாவிஷ்காரமாத்ரத்தாலே ஆஶ்வஸிப்பித்து அகலநின்றாற்போலே), என்னை - (க்ஷணகாலமும் உன்னைப்பிரியில் முடியுந்தசையான) என்னை, மாயஞ்செய்யேல் - இனி வஞ்சியாதொழியவேணும்; ("நாம் நினைத்தபடி செய்கிறோம்" என்று ஸ்வாதந்த்ர்யம் கொண்டாடப்பார்த்தாயாகில்), உன் - உனக்கு, திரு - நிருபாதிகஸம்பத்தாகையாலே ஸர்வாதிகமான ஸ்வரூபத்துக்கு நிரூபகபூதையாய், மார்வத்து - (தானும் "அகலகில்லேன்" என்று விரும்பும்படியான) திருமார்புக்குப் பரபாகமாம்படியாய், மாலை-ஹிரண்மயமான மாலைபோலே, (விக்ரஹத்துக்கு நிருபாதிகபூஷணையாய்), நங்கை - (உன்னோபாதி ஸமஸ்தகல்யாணகுணபூர்ணையாகையாலே "தவாநுரூபரூபகுணவயோவ்ருத்தஶீலா" என்கிறபடியே கண்ணாடியிலே நிழலெழுமாபோலே இக்)குணங்களும் நிறம்பெறும்படி பண்ணுமவளாய், வாசம் செய்— ("ஸுரபிகந்தாம்" என்கிற உனக்கும்) அதிவாஸகரமாய், பூ - விலக்ஷணமான, குழலாள் - திருக்குழலையுடையளாய்க்கொண்டு, திரு- (போக்யபூதையாகையாலே விபூத்யபிமாநிநியான) லக்ஷ்மியினுடைய, ஆணை - (கௌரவ்யமான) ஆணையானது, நின் - (ஸமஸ்தஜகத்தையும் உன் ஆணையாலே நிர்வஹிக்கிற) உனக்கு, ஆணை - ஆணையாக, கண்டாய்;-(இப்படி யாணையிட்டு நிர்ப்பந்திக்கிறது த்வரையாலேயென்றுநினைத்து), நேசம் செய்து - (நிர்ஹேதுகமாக) ஸ்நேஹித்து, உன்னோடு - (தேஹப்ரத்யநீகனான) உன்னோடே, என்னை - (தேஹஸம்ஸ்ருஷ்டனான) என்னை, உயிர் வேறு இன்றி - ("உன்னது என்னதாவியும் என்னது உன்னதாவியும்" என்னும்படி) ஆத்மபேதம்பிறவாதபடியாக, ஒன்று ஆகவே - (அப்ருதக்ஸித்தியாலே) ஏகப்ரதிபத்திபிறக்கும்படிக்கீடாக, கூசம்செய்யாது - (என்நிகர்ஷத்தைப்பார்த்துக்) கூசாதே, கொண்டாய் - (அடியேபிடித்து) அங்கீகரித்தருளினாய்; என்னை - (இப்படி உன்ப்ரவ்ருத்தியறிந்திருக்கிற) என்னை, வந்து - (என்முன்னே) வந்து, கூவிக்கொள்ளாய்- ("ஆழ்வீர், போதீரோ" என்று திருமிடற்றோசையைக்காட்டி) அழைத்துக்கொண்டருளவேணும். அந்தோ! - ஐயோ! நீதானே த்வரிக்கிற கார்யத்துக்கு நான் ஆணையிடவேண்டியிருப்பதே.

ஈ —இரண்டாம்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதத்தைச் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி அவனுக்குப் பிராட்டி ஆணையிடுகிறார்.

[மாயம் செய்யேலென்னை]-'ஸம்ஸாரதோஷங்களைப் போதுபோக்காம்படி பண்ணின வித்தை க்ருத்ரிமமென்று நெஞ்சோடு சொல்லக்கூடுமோ?' என்ன, - அங்ஙனல்ல; ஶபதபூர்வகமாகச் சொல்லுகிறேன்; க்ஷணகாலமும் தன்னாலல்லது செல்லாமையை விளைவிக்கைக்காகவாய்த்து தோஷாநுபவத்தோடே ஸம்ஸாரத்திலே இவரைவைத்தது. அச்செல்லாமையுண்டானால்இது அநுவர்த்திக்குமிறே. இப்படியிவர் நிர்பந்தித்தவிடத்திலும் உம்மை மாயஞ்செய்கிறிலோம் என்று "ஶபதம்" என்னாமையாலே நங்காரியம் செய்யப்பார்த்திலனாகாதே! என்று பார்த்து, செய்தல்லது நிற்கவொண்ணாதபடி பிராட்டியாணையிடுகிறார். [உன்திரு] - "விஷ்ணோ: ஶ்ரீ:" என்கிறபடியே உனக்கு ஸம்பத்தாயுள்ளவள். எனக்கு நீ ஸம்பத்தாயிருக்கிறாப்போலேயன்றோ, உனக்குஅவள் ஸம்பத்தாயிருக்கிறபடி. ரத்நத்துக்கு ஒளி ஶேஷமாயிருக்கச்செய்தே அத்தாலேயிறே பெருவிலையாகிறது; இவளாலே அவனுக்குப் பெருமை சொல்லாநிற்கச்செய்தேயும் ஶேஷித்வம்

குறையாதேயிறேயிருப்பது. [மார்வத்துமாலை] - தான்விரும்புகிற மார்வுக்கு மாலையானவள். உன் திருமார்வுக்கு அலங்காரமானவள் என்கை. [நங்கை] - அவாப்தஸமஸ்தகாமனை நீ குறைவாளரைப்போலே ஶ்லாகிக்கப்படுமவள்; ரூபகுணத்தாலும் ஶீலாதிகளாலும் பூர்ணையாயிருக்குமவள். [வாசம்செய் பூங்குழலாள்] - "ஸுமந:" என்கிற விஷயத்தையும் பரிமளிதமாக்காநின்றுள்ள குழலையுடையவள். [பூங்குழல்] - பூவையுடைத்தான குழல்: அழகிய குழலென்றுமாம். [திருவாணை நின்னாணை] - திருவினுடைய ஆணை கிடாய். என் கார்யம்செய்தல்லது இட்டவடி பேரவிட வொண்ணாதபடி யிட்ட ஆணை. போகவல்லையாகில் போய்க்காணென்று கருத்து. புறம்புள்ளார்க்கெல்லாம் இடுமாணை உன்னுடைய ஆணை. உனக்கிடுமாணை அவளாணை. அங்ஙனன்றியே, [நின்னாணை - திருவாணை] - என்று இருவரையும் ஒக்கச்சொல்லவுமாம். "யோऽஸௌ தவ ஸ்வாமித்வம் ஸ்வாமிநீ ச தவ" என்கிறபடியே. [நேசம்செய்து இத்யாதி] - "நீர்பெறுவாணையிட்டீர்" என்று அவன் அருளிச்செய்ய, அல்லாமை ஏத்துகிறார், மேல் இத்திருவாய்மொழிகுறையும். ஆற்றாமையின்மிகுதியைச் சொல்லிப் பரிஹரிக்கிறார். [நேசஞ்செய்து] - பிராட்டிபக்கல் பண்ணுதஸ்நேஹத்தை என்பக்கலிலேபண்ணி. "அகலகில்லேனிறையும்" என்று அவள் செல்லாமைகண்டிறே அவள்பக்கல் ப்ரேமத்தைப்பண்ணிற்று; உன்செல்லாமையன்றோ என்பக்கல் ப்ரேமம்பண்ணிற்று. [உன்னோடுஎன்னை] - என்னை நித்யஸம்ஸாரி என்றுதல், உன்னை நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்றுதல் பார்த்தோ மேல்விழுந்தது? "இவன் அணுபரிமாணன், நியாமயன்; நாம் விபு, நியாமகன்" என்றுபார்த்தாயோ? [உயிர்வேறின்றி ஒன்றாகவே] - ஆத்மபேதமில்லாதபடியன்றோ என்னைப் பரிக்ரஹித்தது? "உன்னதுஎன்னதாவியும் என்னதுஉன்னதாவியும்" என்னும்படி என்னைப் பிரித்துக் காணவொண்ணாதபடியன்றோ நீ தலையாலே சுமந்தது. [கூசம்செய்யாது கொண்டாய்] - என்பக்கலுள்ள அயோக்யதையைப்பாராதே பரிக்ரஹித்தாய். முதலிலே என்பூர்வவ்ருத்தம் பாராதே மயர்வறமதிநலமருளினாய். பின்பு வளவேழுலகிலே "நான் அயோக்யன்" என்று அகலப்புக, என்வழியேவிடாதே உன்செல்லாமையைக் காட்டிச் சேர்த்துக்கொண்டாய். இப்படி செய்திலையாகில் நான் இன்று க்லேஶப்படாதே போகலாய்த்தே. [என்னைக்கூவிக் கொள்ளாய்வந்து] - ஆனபின்பு என்னைசண்டேனவந்து அணுகப்பாராய். ஶாஸ்த்ரங்களால் அறிவிக்குமளவுபோராது. ஆவிஷ்காரமாத்ரம் போராது. உன்னை நான் கிட்டி அநுபவிக்கும்படி பண்ணவேணும். [அந்தோ] - தன்னையொழியச் செல்லாமையைத் தானே விளைத்து நான்கூப்பிடவந்து முகங்காட்டாதொழிவதே!

ஈடு.—இரண்டாம்பாட்டு. தம்முடைய அபேக்ஷிதம் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி அவனுக்குத் திருவாணையிடுகிறார்.

[மாயஞ்செய்யேல்] - கீழ் "மாயஞ்செய்யேல்" என்னச் செய்தே திரியவும் சொல்லுகிறது என்னவாற்றாமைதான்! இப்படி இவர்நிர்ப்பந்தித்தவிடத்திலும், "உம்மை

---

இரண்டாம்பாட்டு.—மாயம்செய்யேல் இத்யாதி. "திருவாணை நின்னாணைகண்டாய்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - தம்முடைய இத்யாதி.

அநுவாதத்துக்கு ஹேது - கீழ் இத்யாதி. ஶாவாந்தரமாதல், விவரணமாதல் - இப்படி இத்யாதி. "என்னை" என்றது - என்னையொருவனையுமென்னுதல், ஶரணம்புகுந்தவென்னை

மாயஞ்செய்யோம்: "மாஶுச:" (மாஶுச:) என்னுமையாலே மாயஞ்செய்யேல் என்று அநுவர்த்திக்கிறது. [என்னை] - இத்தால் உன்னுடைய லீலாவிபூதி முடியாது கிடாய். [மாயம்செய்யேல் என்னை] - "மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே" (மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே) என்கிற உன் வார்த்தையை விஶ்வஸித்து, "அலர்மேல்மங்கையுறைமார்பா - உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்று ஶரணம்புக்க என்னை வஞ்சியாதேகோள்! இப்படி நிர்ப்பந்திக்கச் செய்தேயும் 'மாஶுச:' (மாஶுச:) என்னுமையாலே அவனுக்கும் மறுக்க வொண்ணாதபடி பெரியபிராட்டியார் திருவாணையிடுகிறார்:—[உன்திரு] - "விஷ்ணோஶ்ஶ்ரீ:" (விஷ்ணோஶ்ஶ்ரீ:) என்கிறபடியேநாட்டுக்கெல்லாம் ஸம்பத்து அவன்: அவன்தனக்கும் ஸம்பத்து இவள். அன்றிக்கே, 'விஷ்ணோ:' என்னவுமாம். 'திருவுக்குந் திருவாகிய' "ஶ்ரியஶ்ஶ்ரியம்" (ஶ்ரிய:ஶ்ஶ்ரியம்) "த்வாம் ஹி ஶ்ரியஶ்ஶ்ரியமுதாஹருதாரவாச:" (த்வாம்ஹிஶ்ரியஶ்ஶ்ரியமுதாஹருதாரவாச:) என்னும்படியே. மற்றைப்பக்ஷத்தில், "ஶ்ரத்தயா தேவ:" (ஶ்ரத்தயாதேவ:) "யஸ்ய ஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம் ஹி தத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹி தத்தேஜ:) என்னும்படியே ஆதாரப்ரதாநமாயிருத்தல், ஆதேயப்ரதாநமாயிருத்தல்; ஆதே

---

யென்னுதல்; இவ்விரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - இத்தால் இத்யாதிவாக்யத்வயத்தாலே. இத்தால் என்றது, என்னையங்கீகரித்தத்தாலென்றபடி. "சரணம்புகுந்தவென்னை" என்ற இரண்டாமர்த்தம் அருளிச்செய்கிறார் - மாமேவ இத்யாதி. "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா। மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே" இதி ஸ்ரீகீதாஸு. (எ-கச) "உன் திரு" என்றதுக்கு - உனக்குத் திருவென்னுதல்; சேஷஷஷ்டியாய், உன்னுடைய திருவென்னுதல் என்று அர்த்தத்வயம். முந்தினவர்த்தம் - விஷ்ணோஶ்ஶ்ரீ: இத்யாதி. இரண்டாமர்த்தம் - விஷ்ணோ:என்னவுமாம் என்று. அதாவது விஷ்ணுவுக்கு ஶேஷபூதையென்னவுமாமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணத்ரயம் - திருவுக்கும் இத்யாதி. திருமொழி எழாம்பத்து எழாந்திருமொழி முதற்பாட்டு. "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ। யதா ஸர்வகதோ விஷ்ணுஸ்ததைவேயம் த்விஜோத்தம" இதி ப்ரதமேம்ஶே அஷ்டமே. "அசிந்த்யதிவ்யாத்புதநித்யயௌவநஸ்வபாவலாவண்யமயாம்ருதோததிம்। ஶ்ரிய: ஶ்ரியம் பக்தஜநைகஜீவிதம் ஸமர்த்தமாபத்ஸகமர்த்திகல்பகம்" இதி ஸ்தோத்ரரத்நே (சசு). "யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீஶ்வராணாமைஶ்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத்। தாம் ஶ்ரீரிதி த்வதுபஸம்ஶ்ரயணாத்ப்ரஹுஸ்த்வாம் ஹி ஶ்ரிய: ஶ்ரியமுதாஹருதாரவாச:" இதி ஸ்ரீவைகுண்டஸ்தவே (ருo). "யஸ்யா: கடாக்ஷவீக்ஷாக்ஷணலக்ஷம் லக்ஷிதா மஹேஶா: ஸ்யு:। ஶ்ரீரங்கராஜமஹிஷீ ஸா மாமபி வீக்ஷதாம் லக்ஷ்மீ:" இதி ஸ்ரீஸ்தவே (கக). முந்தினவர்த்தத்துக்கு ப்ரமாணம் - ஶ்ரத்தயா இத்யாதி. ஶ்ரத்தயா - லக்ஷ்ம்யா. தேவ: - த்யோதமாநஸ் ஸர்வேஶ்வர: - தேவத்வம் - ததாவிதமீஶ்வரத்வம். அஶ்நுதே - ப்ராப்நோதீத்யர்த்த:, "அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா। ந த்வம் ஸமர்த்தஸ்தாம் ஹர்த்தும் ராமசாபாஶ்ரயாம் வநே" இத்யாரண்யகாண்டே ராவணம்ப்ரதி மாரீச: (ருஎ - சஅ). அர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமேண விவரிக்கிறார் - ஆதார இத்யாதி. ஆதாரப்ராதாந்யம் - ஸர்வாதார ஸர்வேஶ்வரனிடத்திலும், ஆதேயப்ராதாந்யம் - புஷ்பபரிமளத்திலும் கண்டுகொள்வது. "ஸ்த்ரீவத்ஸ்வப்ரஸூநாநாமஹம் ப்ரஸூநா ஹரி:ஸ்ம்ருத: । ஸஹாயம் விநா

யத்துக்கு ஆயாரத்தையொழியஸத்தையுமில்லை; நிரூப்யத்துக்கு நிரூபகத்தையொழியஸ்வரூப ஸ்திதியில்லை; ஒன்றையொன்றொழியில் ஸ்வரூபஸித்தியில்லை, "தன்னாகத்திருமங்கைதங்கியசீர்மார்வன்," "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி). [மார்வத்துமாலை]- கேவலம் ஸம்பத்தியாயிருக்கையன்றிக்கே திருமார்வுக்கு அலங்காரமுமாயிருக்கை. மார்வுக்கலங்காரம் அவள், அவளுக்கலங்காரம் மார்வு; "ஹத்தாநாம்" (ஹத்தாநாம்) [நங்கை] - வடிவொழிய அல்லாத ஸ்வரூபகுணவிபூத்யாதிகளும் அவளாலே என்கை. ஜ்ஞாநைகாகாரதயாஸாம்யம். †(ஐஶ்வர்யாதிகுணங்களால் ஈஶ்வரனிலுமதிகையென்கை.) [நங்கை] - "பதிம்விஶ்வஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய) என்கிறவனுக்கும் இவள் பூர்த்தியாலே பொரிபுறந்தடவவேண்டும்படி யிருக்கை. அல்லாதாரிற்காட்டில்வ்யாவ்ருத்தி யித்தனையுமிறே: ஸ்ரீமானுக்கு நிஶ்ஸ்ரீகர் ஸத்ருஶரல்லவிறே. [வாசஞ்செய்பூங்குழலாள்] - நாற்றத்துக்கும் நாற்றம் கொடுக்கும் குழல். "ஸர்வகந்தஃ" (ஸர்வகந்தஃ) என்

ஹைஸாநிராயாராநவிஷ்யதி । அஹைதயாவிநாஸம்ஹிநிராபாவவேத்யாநவிஷ்யதி" என்கிற வசநத்தையுட்கொண்டு, உக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிறார் - ஆதேயத்துக்கு இத்யாதி வாக்யத்ரயத்தாலே. "அஹமேவம்விநாஹைா" இத்யாதி ஶ்லோகத்துக்கர்த்தம் - நிரூபிகையான அஹந்தையையொழிந்தபோது, நிரூப்யமான அஹமர்த்தமானது, உபாக்யாரூபமான நிரூபகதர்மமில்லாமையாலே நிரூப்யஸித்தியுண்டாகாது. ஆஶ்ரயமான அஹமர்த்தமில்லாதபோது, ஆஶ்ரயமான தர்மியையொழிய தர்மத்துக்கு ஸ்த்திதியில்லாமையாலே, அஹந்தைக்கு ஸ்வரூபஸித்தியில்லை; ஆகையாலே, தர்மத்தையொழிந்தபோது தர்மியை ப்ரதிபத்தி பண்ணவொண்ணாது; தர்மியையொழிந்தபோது தர்மத்துக்கு ஸ்வரூபமே பிடித்தில்லையென்றபடி. நிருபாக்யஃ - நிரூபகதர்மரஹிதஃ. "ஒன்றையொழிய வொன்றுக்கு ஸ்வரூபஸித்தியில்லை" என்னுமதுக்கு ப்ரமாணங்கள் - **தன்னாக இத்யாதி.** நாய்ச்சியார்திருமொழி, "மின்னாகத்தெழுகின்ற" இத்யாதி. **தன்னாக** - தானுளளாகைக்காக, தன்ஸத்தைபெறுகைக்காக; நித்யயுவதியான பெரியபிராட்டியார் "இறையும் - அகலகில்லேன்" என்று நித்யவாஸம்பண்ணும் வீறுடைய திருமார்வுபடைத்தவர்க்கென்றபடி. "சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸம்தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்" இதி யுத்தகாண்டே. "உன்திரு" என்றவநந்தரம், "மார்வத்துமாலை" என்றதுக்கு பாவம்-**கேவலம் இத்யாதி.** இவளை "மாலை" என்கையாலே மார்வுக்கு மாலையையொழிய ஶோபையில்லாமையாலும், மாலைக்கும் மார்விலிருந்தாலொழிய ஶோபையில்லாமையாலும் தகநுகுணமாக பாவம்-**மார்வுக்கலங்காரம் இத்யாதி.** மார்வு பிராட்டிக்கலங்காரமாகைக்கு அவளதீநமாயிருக்குமோவென்ன-**ஹத்தாநாம் இத்யாதி.** ஜிதந்தாயாம், "நதேரூபம்" இத்யாதி. "பரிஜநபரிபர்ஹாபூஷணாந்யாயுதாநிப்ரவரகுணகணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாதயஶ்ச । பரமபதமதோண்டாந்யாத்மதேஹஸ்ததாத்வாமபிஸகலமவேக்ஷ்யாஸ்வாம்ஸ்ரீதாயதுந்ஜ்ஜகதேஹ" என்கிற வரதராஜஸ்தவஶ்லோகமும் அநுஸந்தித்துக்கொள்வது. இவளுடைய பூர்த்தியின் எல்லை அவனுடைய ஸ்வரூபாதிகளுக்கும் பூர்த்தியுண்டாம்படி யிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - **வடிவொழிய இத்யாதி. வடிவொழிய** - அவன் வடிவுக்கலங்கார மன்றிக்கேயென்றபடி. **நங்கை** - ஸ்வரூபகுண விபூதிகளால் பூர்ணையென்றபடி. உன்னுடைய திருவென்று-அவனுக்கு ஶேஷபூதையென்னலாமோ? "நரநாரீமயோஹரிஃ" என்று ஈஶ்வரனோடைக்யம் சொல்லாநிற்கஎன்ன - **ஜ்ஞாநைகாகாரதயா இத்யாதி.** இவ்வாக்யத்துக்கு 'ஆதாரப்ரதாநமாயிருத்தல்' என்கிறவாக்யத்தோடே ஸங்கதி. "வடிவொழிய" இத்யாதி வாக்யவிவரணம் - **பதிம்விஶ்வஸ்ய இத்யாதி.** கீழ்வாக்யத்தால் ஃபலிதம் - **அல்லாதாரில் இத்யாதி.** அதாவது - ப்ரஹ்மாதிகளிற்காட்டில் ஈஶ்வரனுக்கு உண்டான லக்ஷ்மீபதித்வாதிரூப வ்யாவ்ருத்தி தோற்றுகிறதென்றபடி. இத்தை உபபாதிக்கிறார்-**ஸ்ரீமானுக்கு இத்யாதி.** "வாசம்செய்" என்றதுக்கு பாவம் - **நாற்றத்துக்கு இத்யாதி.** விவரணம் - **ஸர்வகந்தஃ**

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்று மூன்கோசங்களில் காண்கிறது.

னும் வஸ்துவுக்கும் பரிமளம்கொடுக்கும் குழல். "ஸமவநூஸ:" என்கிற ஏற்றம் இத்தலையாலே காணும் அவனுக்குவந்தது. *('பூங்குழல்' பூவையுடைத்தான குழலென்னுதல், அழகிய குழலென்னுதல். [திருவாணை நின்னாணைகண்டாய்] - † (திருவினுடைய வாணைகிடாய், என்கார்யம் செய்தல்லது இட்ட அடி பேரவிட வொண்ணாதபடி உனக்கிட்ட ஆணை. போகவல்லையாகில் போய்க்காண் என்று கருத்து.) ஸர்வாபிகனுகையாலே அல்லாதார்க்கெல்லாம் உன்னுடைய ஆணை; உனக்கு நீயுகந்தார் ஆணையிடுமித்தனையிறே. "மயாசஸீதயாசைவசப்தோஸிரகுநந்தந" (மயாசஸீதயாசைவசப்தோஸிரகுநந்தந) என்னும்படியாலே - பெரிய பிராட்டியார்ஆணை உன்னாணைகிடாய் என்றுமாம். "நீரிட்டவாணை உம்முடையஸ்வரூபத்தோடு விருத்தங்காணும். ‡ சேஷபூதரானால் நாம் செய்தபடி கண்டிருக்கவேணுங்காணும்" என்ன; அவிருத்தமென்கிறார் மேல் இத்திருவாய்மொழிகுறையும். அதாவது - ஆற்றாமையின் மிகுதியை யச்சொல்லிப் பரிஹரிக்கிறார். "உமக்குப் பாரதந்த்ர்யம் ஸ்வரூபமானால் சேஷிசெய்தபடிகண்டிருக்குமத்தனைகாணும்" என்ன,— "சேஷபூதனுளனாய்க்கண்டிருக்கவேணுமே!" என்று தம்முடையஇல்லாமையை உபபாதிக்கிறது மேல் இத்திருவாய்மொழியடைய. பாரதந்த்ர்யம் ஸ்வரூபமானால் ப்ருதக்ஸ்த்திதியும் ப்ருதக்ப்ரபத்தியு முண்டோவென்கிறார்: - [நேசஞ்செய்து] - பெரியபிராட்டியார்பக்கலிலும் பண்ணாத ஸ்நேஹத்தை என்பக்கலிலேபண்ணி. நான் ஸ்நேஹிக்கவிருந்தாயோ, என் விடாய்க்கடி உன்விடாயன்றோ? "அகலகில்லேனிறையும்" என்று அவள்சொல்லாமை கண்டிறே அவள்பக்கல் ப்ரேமத்தைப்பண்ணிற்று. [உன்னோடென்னை] - உன்னை யறிந்தாயோ, என்னையறிந்தாயோ? * விழுமியவமரர் முனிவர்விழுங்கும் கன்னற்கனி நீ, அதுக்கு எதிர்த்தலை அடியேன்; "இவன் அணுபரிமாணன், நியாம்யன்; நாம் விபு,

---

*இத்யாதி. சாடு - ஸர்வகந்த: என்கிற இத்யாதி. இத்தலையாலேயென்றது - இந்தத் தலையில் மயிராலேயென்று ஸ்வஹாவார்த்தம். உனக்கிடும் ஆணை திருவாணைகண்டாய் என்று முந்தினவர்த்தம்; உனக்குத்திருவாணையு முன்னாணையும் என்றிரண்டாமர்த்தம். முந்தினவர்த்தத்துக்கு, "நின்னாணை - திருவாணை" என்றந்வயம்; இரண்டாமர்த்தத்துக்கு, இருந்தபடியேயந்வயம். "வளைத்து வைத்தேன் இனிப்போகலொட்டேன் உன்தன் இந்திரஞாலங்களா லொளித்திடில் நின் திருவாணைகண்டாய்" என்று ஸ்ரீ விஷ்ணுசித்தரைப்போலே "திருவாணை" என்றால் போராதோ, "நின்னாணை" என்று விசேஷிக்கிறதென்னென்ன - ஸர்வாபிக இத்யாதி. இரண்டாமர்த்தம் - மயாச இத்யாதி. "[Sanskrit quotation] । மயாசஸீதயாசைவசப்தோஸிரகுநந்தந" இதி சித்ரகூடே பரதம்ப்ரதி ராம:. மேலுக்கவதாரிகை - நீரிட்ட இத்யாதி. தம்முடையஇல்லாமையை - ஸத்தையில்லாமையையென்றபடி. விஶ்லேஷமாத்ரத்திலே ஸத்தாஹாநியாமோவென்ன; "உயிர்வேறின்றி" இத்யாதியைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - பாரதந்த்ர்யம் இத்யாதி. இவ்வாக்யம், 'நீரிட்டவாணை' இத்யாதி ஶங்கைக்குப் பரிஹாராந்தரமாதல். "நேசம்செய்து" என்றதுக்கர்த்தம் - பெரியபிராட்டியார் இத்யாதி. ஃபலிதம் - நான்ஸ்நேஹிக்க இத்யாதி. பிராட்டிபக்கலிலும் பண்ணாத ஸ்நேஹத்தைப் பண்ணினனென்கைக்கு அவன்பக்கல் ஸ்நேஹம்பண்ணும் ப்ரகாரந்தானேதென்ன - அகலகில்லேன் இத்யாதி. "அவள் செல்லாமைகண்டு அவள்பக்கலிலே ஸ்நேஹத்தைப் பண்ணினானென்னுமதுக்கு நியாமகம் - '[Sanskrit quotation]' என்று அவள் வார்த்தையைத் திருவடி சொல்லக் கேட்டு '[Sanskrit quotation]' என்று பெருமாள் அருளிச்செய்த இது" என்றருளிச்செய்வர். விவரணம் - விழுமிய இத்யாதி. இத்தால் ஃபலிதம் - இவன்அணு இத்யாதி என்னுதல்; அன்*

† குண்டலிதம் கவாசித்தமென்கிறார்கள்.

‡ குண்டலிதம் இருபத்துநாலாயிரமென்று முன்கோஶங்களில் காண்கிறது.

நியாமகன்'' என்றுபார்த்தாயோ? [உயிர்வேறின்றியொன்றாகவே] - ஆத்மபேதமில்லாத படியன்றே என்னைப்பரிக்ரஹித்தது. "உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்'' என்னும்படி என்னைப்பிரித்துக் காணவொண்ணாதபடியன்றே நீ தலையாலேசுமந்தது. "ஸாக்ஷஸ்ரேணஸ்ஹாயயா'' (பாஸ்கரேணப்ரபாயதா) என்கிறவிதுவும் அவிசதமாகப் பண்ணினான். [கூசஞ்செய்யாது கொண்டாய்] - ஸர்வஜ்ஞனைநீயும் வாசிவைத்துக் கலக்கவறிந்திலை. என்பக்கல் அயோக்யதைபாராதே பரிக்ரஹித்தாய். முதலிலே என் பூர்வவ்ருத்தம்பாராதே மயர்வறமதிநலமருளினாய்; பின்பு, * வளவேழுலகிலே "நான் அயோக்யன்'' என்றகல, என்னைஎன்வழியிலேவிடாதே, உன்செல்லாமையைக்காட்டிச் சேர்த்துக்கொண்டாய். இப்படி அன்று செய்திலையாகில் இன்று க்லேசப்படாதொழியலாய்த்தே. [என்னைக்கூவிக்கொள்ளாய்வந்து] - ஆனபின்பு, என்னை ஈண்டென வந்தணுகப்பாராய். ஶாஸ்த்ரங்களால் அறிவிக்குமளவுபோராது; குணாவிஷ்காரமாத்ரத்தாலே போராது; ஸாக்ஷாத்கரிக்குமளவு போராது; உன்னைக்கிட்டி யநுபவிக்கும்படி பண்ண வேணும். [அந்தோ] - தன்னையொழியச் செல்லாமையைத் தானே விளைத்து கூப்பிட வந்துமுகங் காட்டாதொழிவதே ! (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

**கூவிக்கொள்ளாய்வந்தந்தோ!என்பொல்லாக்கருமாணிக்கமே!**
**ஆவிக்கோர்பற்றுக்கொம்புநின்னலால் அறிகின்றிலேன்நான்**
**மேவித்தொழும்பிரமன்சிவன் இந்திரனாதிக்கெல்லாம்**
**நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பர்†அந்ததுவே.**

*றிக்கே, கீழே "ஹேய்யனானவுன்னோடே ஹேயனான என்னை'' என்றருளிச்செய்து "விபுவாய் நியாமகனானவுன்னோடே அணுவாய் நியாம்யனானவென்னை'' என்றர்த்தாந்தரம் - இவன் அணு இத்யாதி என்னுதல். அதுக்கேதிர்த்தலையடியேன் என்றது-"நீசனேன்நிறைவொன்றுமிலேன்'' என்றிருக்கிறேன் நானென்றபடி. விவரணம் - உன்னது இத்யாதி. ஸம்ஶ்லேஷ ஸமயத்தில் என் ஸ்வரூபம் நீயிட்ட வழக்காகவும் உன்ஸ்வரூபம் நானிட்டவழக்காகவும் தலைதடுமாறாகவன்றே நீ பரிமாறிற்றென்றபடி. தலையாலேசுமந்தது - தலைதடுமாறாகப் பரிமாறிற்றென்றபடி. இத்தால் பெரியபிராட்டியாரில் வ்யாவ்ருத்தி தோற்றியிருக்கிறதென்கிறார் - பாஸ்கரேண இத்யாதி. "அநந்யாராகவேணாஹம்ஸாக்ஷஸ்ரேணஸ்ஹாயயா'' இதி ராவணம்ப்ரதி ஸீதா. அவிஶதமாகப்பண்ணினாய் என்றது - ப்ரஜையென்றும் ப்ரஹாவானென்றும் பேதமுண்டு அங்கு; அப்படியன்றிக்கே, ஏகவஸ்துவென்னலாம்படி பண்ணினாயென்றபடி. "கூசம்செய்யாதுகொண்டாய்'' என்றதுக்கர்த்தம் - ஸர்வஜ்ஞனை இத்யாதிவாக்யத்வயமும். அப்படி பரிக்ரஹித்தானோவென்ன; த்வேதா அருளிச்செய்கிறார் - முதலிலே இத்யாதிவாக்யத்வயத்தாலே. ஹார்த்தபாவம் - இப்படியன்று இத்யாதி. உயிர்வேறின்றி - ஆத்மபேதமில்லாதபடி. ஒன்றாகவே - ஏகப்ரதிபத்திபிறக்கும் படிக்கீடாக. கூசம்செய்யாது - என்அயோக்யதையைப்பார்த்துக் கூசாதே, கொண்டாய் - அங்கீகரித்தருளினாயென்று ஶப்தார்த்தம். "வந்து - கூவிக்கொள்ளாய்'' என்றதுக்குபாவம் - ஶாஸ்த்ரங்களால் இத்யாதி வாக்யசதுஷ்டயமும். ஸாக்ஷாத்கரிக்குமளவு போராது என்றது - மாநஸ ஸாக்ஷாத்காரம்போராதென்றபடி. "அந்தோ!'' என்றதுக்குபாவம் - தன்னை இத்யாதி.* (உ)

---

† அந்தது - அந்த அது என்பதன் விகாரம்,

ஆ.—(கூவிக்கொள்ளாய்) - ப்ரஹ்மேசாதிகளுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்யைச்வர்யாதிகளும் த்வத்ப்ரஸாதாயத்தமாதலால், என்னுடைய உஜ்ஜீவநத்துக்கு உபாயமும் நீயல்லது மற்றொன்றும் காண்கிறிலேன்; நீயே உன்திருவடிகளிலே என்னை வாங்கியருளி, பிரானே! உன்திருவழகைக்காட்டியருளாய் என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், பெருமிடுக்கரான ப்ரஹ்மேசாதிகளுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகளுக்கெல்லாம் நிர்வாஹகனான நீ, உன்னாலல்லது உஜ்ஜீவிக்க விரகின்றிக்கேயிருக்கிற என்னை, ஐயோ! விஷயீகரித்தருளாய் என்கிறார்.

[என் என்றுதொடங்கி] - அதிலோகமான அழகைக்காட்டி என்னை மிகவும் ஈடுபடுத்தினவனே! என்னாத்மாவுக்கு உஜ்ஜீவநஹேதுவா யிருப்பதொன்று உன்னையொழிய வேறு நான் அறிகிறிலேன். [மேவி என்று தொடங்கி] - அபிமாநராஹித்தராய்க் கொண்டு தொழும் ப்ரஹ்மாதிகளுக்கெல்லாம் காரணமான திருநாபீகமலத்துக்குக் கிழங்கானவனே! [உம்பரந்ததுவே]-அயர்வறுமமரர்களுக்குப் பரமப்ராப்யமானவனே!

ப.—அநந்தரம், ப்ரஹ்மாதி ஸகலசேதநர்க்கும் உத்பாதகமான திருநாபீ கமலத்துக்கு மூலகந்தமான நீ வந்து விஷயீகரித்தருளவேணு மென்கிறார்.

என் - எனக்கு நிரதிசயபோக்யமாய், பொல்லா - துளையாத, கருமாணிக்கமே - மாணிக்கம்போலே விலக்ஷணமான வடிவையுடையையாய், மேவித்தொழும் - (தந்தாமுடைய பதவீத்த்பர்த்தமாகக்) கிட்டி ஆச்ரயிக்கக்கடவரான, பிரமன் சிவன் இந்திரன் - ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள், ஆதிக்கு எல்லாம் - முதலானார்க்கும், முதல் - முதலான, நாவிக்கமலம் - திருநாபிகமலத்துக்கு, கிழங்கே - கந்தபூதனாய், (இப்படி (ஸ்ருஜ்யரன்றியே), உம்பர் - (மேலாய் அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான) நித்யஸூரிகளுக்கும், அந்தஅதுவே - அப்படியே ஸத்தாஸ்த்தித்யாதிகளுக்கு நிர்வாஹகனானவனே! ஆவிக்கு - என்னாத்மாவுக்கு, ஓர் - அபாச்ரயமாயிருப்பதொரு, பற்றுக்கொம்பு - உபக்நம், நின் அலால் - உன்னையொழிய, நான் அறிகின்றிலேன் - ; (ஆனபின்பு), வந்து - (நீதானே) வந்து, கூவி - அழைத்து, கொள்ளாய் - கொண்டருளவேணும், அந்தோ! - ஐயோ! உன்காரியம் நான் சொல்லவேண்டுவதே!

இ.—மூன்றாம்பாட்டில், ஸ்வதந்த்ரரான ப்ரஹ்மாதிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகளையும் நிர்வஹிக்கிற நீ, உன்னாலல்லது செல்லாதஎன்னை விஷயீகரியாய் என்கிறார்.

[கூவிக்கொள்ளாய்]-கீழே, 'கூவிக்கொள்ளாய்' என்றவர், இங்கே 'வந்து கூவிக்கொள்ளாய்' என்கிறார்; தாஹித்தவன் - 'தண்ணீர், தண்ணீர்' என்னுமாபோலே; ஆற்றாமை மிக்குச் செல்லாநின்றாலும் பாசுரமிதுவல்லதின்றிக்கே யிருக்கிறபடி. கூவிக்கொள்ளுமளவுபோராது, வந்துகூவிக் கொள்ளவேணும். ஆற்றாமை மிக்காலும் நான் வந்து கிட்டுகை முறையன்று, உனக்கு அவத்யமுங்காணென்கிறார். "ஸஹோஸுஹ ஸஜ்ஜாக்ருதா". [அந்தோ] - உனக்கு நிறமன்றென்று நான் சொல்லவேண்டுவதே! [என் பொல்லாக்கருமாணிக்கமே] - அதிலோகமான வடிவழகைக்காட்டி என்னை ஈடுபடுத்தினவனே! துளையாதமாணிக்கம். அநுபபுக்தமான மாணிக்கமென்னுதல்; நாட்டொப்பான வழகன்றியே விஸஜாதீயமாயிருக்கையாலே 'பொல்லா' என்கிறதென்னுதல்; த்ருஷ்டி தோஷபரிஹாரமாக என்னுதல். விலக்ஷண விஷயமானாலும் ஸ்வரூபத்தைப் பார்த்து

ஆறியிருக்கவேண்டாவோ என்ன?-அது செய்யுமிடத்தில் நானுன்னையொழிய உளனாக வேணுமே. என்னாத்மாவுக்கு உஜ்ஜீவநஹேது வாயிருப்பதொன்று உன்னையொழிய வேறு நான் அறிகிறிலேன். [மேவித்தொழும் பிரமன் இத்யாதி] - "ஸ்ரஷ்டாரம் ஸர்வலோகாநாம்" என்றிருப்பார்க்கும் நிர்வாஹகனானவனல்லையோ என்கிறார். ஆபத்து வந்தவாறே நிர்ப்பிமாநிகளாய்க்கொண்டு தொழும் ப்ரஹ்மாதிகளுக்கெல்லாம் காரணமான திருநாபிகமலத்துக்குக் கிழங்கானவனே! முதலான நாபிக்கமலக்கிழங்கே! [உம்பரந்ததுவே] - அவர்களுக்கு மேலான நித்யஸூரிகளுக்கும் அப்படிப்பட்ட ப்ராப்யவஸ்துவானவனே! 'அது' என்று ப்ரமாண ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. மேலான மஹர்ஷிகளுக்கும் காரணபூதனென்று சொல்லிற்றாகவுமாம். நித்யஸூரிகளோடு, ப்ரஹ்மாதிகளோடுவாசியற ஸர்வ நிர்வாஹகனாயிருக்கிற நீ என்னைவந்து கூவிக்கொள்ளாய். இப்பாட்டால் - கீழும் மேலும் சொல்லுகிற ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் கார்ய காரணபாவமென்னுமத்தை அருளிச் செய்தாராய்த்து. "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம".

ஈடு.—மூன்றாம்பாட்டு. பெருமிடுக்கரான ப்ரஹ்மாதிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகளுக்குமெல்லாம் நிர்வாஹகனான நீ, உன்னாலல்லது ஜீவிக்கவிரகின்றியே யிருக்கிற என்னை, ஐயோ! வந்து விஷயீகரித்தருளாயென்கிறார்.

[கூவிக்கொள்ளாய்] - கீழே "கூவிக்கொள்ளாய்" என்றவர், இங்கேயும் 'கூவிக்கொள்ளாய்' என்கிறார்காணும்; தாஹித்தவன் "தண்ணீர், தண்ணீர்" என்னுமாபோலே. ஆற்றாமைமிக்குச் செல்லாநின்றாலும் பாசுரம் இதுவல்லதின்றிக்கே யிருக்கிறபடி. கூவிக்கொள்ளுமளவும் போராது, வந்துகூவிக்கொள்ளவேணும். ஆற்றாமைமிக்காலும் நான் வந்து கிட்டுகை முறைமையன்று; உனக்கு அவத்யமுங்காணென்கிறார்; "ஸைரைஸ்துஸங்குலாம் க்ருத்வா" (ஸைரைஸ்துஸங்குலாம்க்ருத்வா) * எழுதுமென்னுமிதுமிகையானவனுக்கு வருகை அஸஹ்யமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. வருகை அவனுக்கே வ்யவஸ்த்திதமாயிருக்கிறபடி. [அந்தோ!] - உனக்கு நிறமன்றென்று நான் சொல்லவேண்டுவதே! [என்போல்லாக்கருமாணிக்கமே] - †(அதிலோகமான வடிவழகைக்காட்டி என்னை ஈடுபடுத்தினவனே!) நீயழைத்தபோது கண்டிருக்கலாய்த்திறே, நீ நீயன்றிக்கேயிருந்தாயாகில். க்ரமத்திலேயழைக்க நினைத்தாயாகில், அழ

மூன்றாம்பாட்டு.—கூவிக்கொள்ளாய் இத்யாதி. "என்பொல்லாக் கருமாணிக்கமே - மேவித்தொழும்" என்றுதொடங்கி, "உம்பரந்ததுவே, நான் - ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்; அந்தோ - வந்து - கூவிக்கொள்ளாய்" என்று அந்வயவிவக்ஷயா அவதாரிகை-பெருமிடுக்கரான இத்யாதி.

"கூவிக்கொள்ளாய்வந்தந்தோ" என்று மீளவும் அநுவதித்ததுக்கு பாவம் - கீழே இத்யாதி. விவரணம் - ஆற்றாமை இத்யாதி. "வந்து" என்று விசேஷித்ததுக்கு பாவம் - கூவிக்கொள்ளுமளவும் இத்யாதி. ஆற்றாமையுண்டானால் நீரேவந்து கிட்டவொண்ணாதோ? என்ன - ஆற்றாமைமிக்காலும் இத்யாதி. அப்படி தானேகிட்டுகை முறையன்றோ? என்ன; அன்றென்கிறதுக்கு ப்ரமாணம் - ஸைரைஸ்து இத்யாதி, "ஸைரைஸ்துஸங்குலாம் க்ருத்வா லங்காம் ச பரபலார்த்தந: । மாம் நயேத்யதி காகுத்ஸ்தஸ்தத்தஸ்ய ஸத்ருசம் பவேத்" இதி ஸுந்தரகாண்டே மாருதிம்ப்ரதி ஸீதா (௩௯-௩௦). இவர்சென்று கிட்டுகை இவர்ஸ்வரூபத்துக்கு விருத்தமான மாத்ரமேயன்று; அவனுக்கும் அஸஹ்யமென்கிறார் - எழுதுமென்னும் இத்யாதி. இத்தால்பலிதம் - வருகை இத்யாதி. "அந்தோ!" என்று விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவம்-உனக்கு இத்யாதி. "பொல்லாக் கருமாணிக்கம்" என்றதுக்கு பாவம்-நீயழைத்தபோது இத்யாதி. நீநீயன்றிக்கேயிருந்தாயாகில்

† குண்டலிதம் இருபத்துநாலாயிரமென்று மூன்கோசங்களில் காண்கிறது.

கைக்காட்டி அநந்யார்ஹமாக்கிற்றேன்? [என்போல்லாக்கருமாணிக்கம்] - துளையாத மாணிக்கம். அநுபஸக்தமான ரத்நமென்னுதல்; நாட்டேறப்பான அழகன்றிக்கே விஸஜாதீயமாயிருக்கையாலே போல்லாதென்கிற தென்னுதல்; த்ருஷ்டிதோஷபரிஹார மென்னுதல். விலக்ஷணவிஷயமானாலும் ஸ்வரூபத்தைப்பார்த்து ஆறியிருக்க வேண்டாவோவென்னில்,-அதுசெய்யுமிடத்தில் நான் உன்னையொழியவுள்ளுகவேணுமே? [ஆவிக்கோர்பற்றுக்கோம்பு நின்னலாலறிகின்றிலேன் நான்] - உபக்நம் நியதமாயிருக்கிறபடி. கோடி, கொள்கோம்பையொழிய நிற்கவற்றே! வேரையறுத்துப்படரேன்றால் படருமோ? என்னுத்மாவுக்கு உஜ்ஜீவநஹேதுவாயிருப்பதொன்று உன்னையொழிய வேறு காண்கிறிலேன்; **"நசஸீதாத்வயாஹீநா"** (நசஸீதாத்வயாஹீநா) என்கிறபடியே. ஆனால் பேற்றுக்கு உடலாக நீரும் சிலசெய்தாலோவென்ன,- [மேவி இத்யாதி] - அல்லாதப்ரஹ்மாதிகளோ தங்கள்கார்யம் தாங்கள் செய்து கொள்ளுகிறார்கள்! "ஆவிக்கோர்பற்றுக்கோம்பு" என்று சொல்லாதவர்களுக்கும் உதவுமவனே! ப்ரஹ்மாதிகள், "ஆவிக்கோர்பற்றுக்கோம்பு" என்று சொல்லவறியாமையாலே சொல்லார்கள்; நித்யஸூரிகள், அபிமாநம் புகுந்துபோகாமையாலும் இன்று சொல்லவேண்டாமையாலும் சொல்லார்கள். [மேவித்தொழும்] - அல்லாதபோது அந்யோந்யம் விருத்தராயிருப்பர்கள்; தங்களுக்கொரு கார்யம் வந்தவாறே எல்லாரும் கூடித்தொழுவர்கள். அபிமாநரஹிதராய்த்தொழும் ப்ரஹ்மாதிகளுக்கெல்லாம் காரணமான திருநாபீகமலத்துக்குக் கிழங்கானவனே! †(முதலானநாபிக்கமலக்கிழங்கே.) [உம்பரந்தத்துவே] - அவர்களுக்குமேலான நித்யஸூரிகளுக்கும் அப்படிப்பட்ட ப்ராப்யவஸ்துவானவனே! 'அது' என்று - ப்ரமாணப்ரஸித்தியைச்

என்றது-நீ அஹோராத்ரயனுயிருந்தாயாகிலென்றபடி. "என்" என்றதுக்கு ஹாவம்-க்ரமத்திலே இத்யாதி. ஸப்தார்த்தகத்தார்த்தமாக ப்ரதீகோபாதாநம் - என்போல்லா இத்யாதி. விவரணம் - அநுபஸக்தமான இத்யாதி. அநுபஸக்தையும், வைஜாத்யமும், த்ருஷ்டிதோஷபரிஹாரத்யர்த்தமாரோபிதமான பொல்லாங்கும், ஆக மூன்றர்த்தம். "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு" இத்யாதிக்கவதாரிகை - விலக்ஷண இத்யாதி. "உன்னையொழிய ஆவிக்கோர்பற்றுக்கொம்பறிகின்றிலேன்" என்றதுக்கு ஹாவம் - உபக்நம் இத்யாதி. உபக்நம் நியதமாயிருக்கிறபடி என்றது-"நின்னலாலறிகின்றிலேன்" என்கையாலே. பற்றுக்கோம்பு - உபக்நம் - அந்திகாஸ்ரயம். கொள்கொம்பு - சுள்ளிக்காலென்றபடி. ஹலிதம் - கோடி இத்யாதி. விவரணம் - வேரை இத்யாதி. வேரையறுத்து - ஆதாரத்தை வாங்கியென்றபடி. ஸப்தார்த்தம் - என்னுத்மாவுக்கு இத்யாதி. அவனையொழிய தரிக்கமாட்டாததென்னுமதுக்கு ப்ரமாணம் - நசஸீதா இத்யாதி. "நசஸீதாத்வயாஹீநா நசாஹமபிராகவ। முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணஃ (நு-ஙக). "மேவித்தொழும்" இத்யாதிக்குஹாவம்-அல்லாத இத்யாதி. "பிரமன்சிவன்" இத்யாதிக்கும் "உம்பரந்ததுவே" என்றதுக்கும் ஹாவம்-ஆவிக்கோர் இத்யாதி. சொல்லாதபடியெப்படியென்ன ப்ரஹ்மாதிகள் இத்யாதி. அபிமாநம்-ஸ்வாதந்த்ரியம். எப்போதும் அவனேயென்றிருக்கையாலே இன்று சொல்லவேண்டாமையாலு மென்றபடி. "மேவி" என்றதுக்கு ஹாவம் - அல்லாதபோது இத்யாதி. அல்லாதபோது - கார்யமில்லாதபோது. "மேவி" என்றதுக்கு - அந்யோந்யம்கூடி என்றர்த்தம் அருளிச்செய்து, அபிமாநரஹிதராயென்று அர்த்தாந்தரம் - அபிமாநரஹித இத்யாதி. "பிரமன் சிவனிந்திரனுதிக்கெல்லாம் முதலான நாவிக்கமல கிழங்கே" என்றந்வயிப்பது. இந்திரனுதிக்கெல்லாம் - இந்திரன்முதலானுரெல்லார்க்கும், முதல் - காரணபூதமான, நாவிக்கமலக்கிழங்கே- திருநாபீகமலத்துக்குக் கந்தபூதனானவனே. உம்பர் - ப்ரஹ்மாதிகளுக்கும் மேலான அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கும், அந்ததுவே - 'அப்படிப்பட்ட ப்ராப்யவஸ்துவானவனே' என்றபடி. அப்படிப்பட்ட - உபயலிங்கவிஶிஷ்டமாய்

† குண்டலிதம் இருபத்துநாலாயிரமென்கிறார்கள்,

சொல்லுகிறது. நித்யஸூரிகளோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியற நிர்வாஹகனாயிருக்கிற நீ என்னை வந்து கூவிக்கொள்ளாய். இப்பாட்டால் - கீழும்மேலும் சொல்லுகிற ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம், கார்யகாரணபாவமென்னுமத்தை அருளிச்செய்தாராய்த்து; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம). (௩)

---

## நான்காம் பாட்டு.

---

உம்பரந்தண்பாழேயோ! அதனுள்மிசைநீயேயோ!
அம்பரநற்சோதி! அதனுள்பிரமன்அரன்நீ
உம்பரும்யாதவரும்படைத்தமுனிவன்அவன்நீ
எம்பரஞ்சாதிக்கலுற்றுஎன்னைப்போரவிட்டிட்டாயே.

**ஆ.**—(உம்பரந்தண்.) - ப்ரக்ருதி புருஷ மஹதஹங்கார ப்ருதிவ்யாதிபூத சதுர்முக ருத்ரதேவாதி ஸ்தாவராந்த சேதநாசேதநாத்மக ஸமஸ்தவஸ்துக்களினுடைய ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்த்யாதிகளுக்கும் நீயே நிர்வாஹகனாயிருந்துவைத்து, என்னுடைய ஸமத்தனையும நானே நிர்வஹிக்கக்கடவேனாகப் பார்த்தருளினையாகில் என்னைக் கைவிட்டாயென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஸகல நிர்வாஹகனான நீ, என்னுடைய நிர்வாஹம் நானே பண்ணிக்கொள்வேனாகப் பார்த்தருளினையாகில், என்னைக்கைவிட்டாயேயல்லையோ? என்கிறார்.

[உம்பரந்தண்பாழேயோ] - மஹதாதி விகாரங்களுக்கும் காரணமாகையாலே ஸ்வகார்யங்களுக்கெல்லாம் மேலாய் ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கைக்கீடான சக்தியோகத்தையுமுடைத்தாய் சேதநர்க்கு தர்மமோக்ஷாதி புருஷார்த்தங்களை விளைத்துக்கொள்ளலாம் நிலமான மூலப்ரக்ருதிக்கு நிர்வாஹகனானவனே! [அதனுள் என்று தொடங்கி] - அதிலே ஸக்தமாய் நிற்கிற விலக்ஷணமான ஆத்மதத்தவத்துக்கு நிர்வாஹகனாய் ஆகாசாதிபூத பஞ்சகத்துக்கும் பாஞ்சபௌதிகமான அண்டத்துக்குள்ளே வர்த்தமானரான ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் நிர்வாஹகனானவன நீ. [உம்பரும்என்று மேலுக்கு] - தேவர்களையும மற்றுளளாரையும் படைத்த முனியாக ப்ரஸித்தனானவன நீ என்னையொருவனையும் நானே என்காரியம் செய்வேனாகப்பார்த்து உன்பக்கல் நின்றும் போரவிட்டு உபேக்ஷித்தாயே.

**ப.**—அநந்தரம், ஸர்வப்ரகார விசிஷ்டனான நீ, ப்ரகாரபூதனான என்னுடைய கார்யம நிர்வஹிப்பதாக ஏறிட்டுக் கொண்டுவைத்து, என்னை இந்த ஸம்ஸ்ருதியிலே போரவிட்டாயித்தனையன் றோவென்று ஆர்த்தராய்க் கூப்பிடுகிறார்.

உம்பர் - (பூதமான மஹதாதிகளுக்கெல்லாம் பரம்பராகாரணமாகையாலே) மேலாய், அம்-உனக்கு லீலோபகரணமாகையாலே விலக்ஷணமாய், தண் - (குணத்ரய

---

ஸாம்யரூபமான ப்ரமாணப்ரஸித்தியையென்று- 'ஸதாவ ஸோம்ய' இத்யாதி ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. அந்வயமுவேநஹாவம் - நித்யஸூரிகளோடு இத்யாதி. 'மேவிததொழும்' என்று தொடங்கி, 'அந்தமிலே - எனபொல்லாக்கருமாணிக்கமே, ஆவிக்கோர்பற்றுக்கொம்பு - நான் - நின்னலாலறிகின்றிலேன் - வந்து - கூவிக்கொள்ளாய் - அந்தோ!' இத்யந்வயம். (௩)

ஸாம்யாவஸ்த்தமாகையாலே) குளிர்ந்திருப்பதாய், பாழேயோ - ஸோமமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கு † அதனுள் மிசை நீயேயோ (இப்படி ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனாய்க்கொண்டு), அம்பரம்-(அண்டகாரணமான) ஆகாசம், நல் - விலக்ஷணமான, சோதி - தேஜஸ்ஸு முதலான பூதங்களை ஸ்ருஷ்டித்து தத்ப்ரகாரியாய், அதனுள் - பூதாரப்தமான அண்டத்துக்குள்ளே, பிரமன் அரன்-ப்ரஹ்மருத்ராதிகளை உத்பாதித்து தத்தத்ப்ரகாரவிசிஷ்டனானவன், நீ - நீ; உம்பரும் - (ப்ராணிஜாதங்களுக்குமேலான) தேவர்களையும், யாதவரும் - மநுஷ்யாதி ஸகலசேதநரையும், படைத்த முனிவனவன் - தத்தத்கர்ம விஶேஷமநநம்பண்ணி ஸ்ருஷ்டித்தவன், நீ - ; (இப்படியாயிருக்க), எம் பரம் - (ப்ரகாரபூதனான) என்னுடைய தேஹத்தை, சாதிக்கல்உற்று - நிர்வஹிப்பதாக ஏறிட்டுக்கொண்டு, (ப்ராப்திபர்யந்தமாக அபரோக்ஷிப்பித்து), என்னை - (உன்னை யொழியச்சொல்லாத) என்னை, (பின்னையும்), போரவிட்டிட்டாய் - இங்கேபோரவிட்டிட்டுவைத்தாய். 'ஓ' என்கிற அசை - "நீ" என்னுமிடந்தோறும்கூட்டி, ஒன்றோ ரக்ஷிக்க ஹேதுபோந்திருக்க அநாதரித்தாயென்று கூப்பிடுகிற ஆர்த்தியை ஸூசிப்பிக்கிறது.

இ.—நாலாம்பாட்டில், ஸர்வநிர்வாஹகனான நீ, என்னுடைய நிர்வாஹம் நான் பண்ணிக்கொள்ளப் பார்த்தாயாகில், என்னைக் கைவிட்டாயல்லையோ ? என்கிறார்.

[உம்பரந்தண்பாழேயோ] - மஹதாதி கார்யங்களுக்கெல்லாம் காரணமாகையாலே மேலாய்த் தன்னுடைய ஏகதேஶத்தாலே கார்யவர்க்கத்தைப் பிறப்பிக்கவற்றான ஶக்தியையுடைத்தாய் விசித்ர பரிணாமினியாய் சேதநர்க்கு போகமோக்ஷத்தை இசைத்துக்கொள்ளலாம் நிலமாயிருந்துள்ள மூலப்ரக்ருதிக்குநிர்வாஹகனாயிருந்துள்ளவனே! [உம்பர்]-மேல். [அந்தண்]-அழகியதுமாய் அநுகூலமுமாயிருக்கை. [பாழ்]-க்ருஷிக்குயோக்யமாயிருக்கை. [அதனுள்மிசை நீயேயோ] - அதிலேவ்யாப்தமாயிருக்கிற விலக்ஷணமான ஆத்மதத்த்வத்துக்கு நிர்வாஹகனானவனே! "ஜ்ஞாநஸ்வரூபம் அத்யந்தநிர்மலம் பரமார்த்தத: தமேவார்த்தஸ்வரூபேண ப்ராந்திதர்ஶநத: ஸ்திதம்", ஸூக்ஷ்மசிதசித் வஸ்து ஶரீரிகாரணமாகையாலே காரணாவஸ்த்தையைச்சொல்லிற்று. இத்தால்விஶேஷண ப்ராயாந்யம் சொல்லும் ந்யாயவைஶேஷிகபக்ஷமும், விஶேஷணத்துக்கு அபாரமார்த்த்யம் சொல்லும் மாயாவாதிபக்ஷமும் ஆழ்வார்க்குபபக்ஷமல்ல என்றதாய்த்து. [அம்பரம்]-ஆகாஶம். [நற்சோதி] - தேஜ: பதார்த்தம். இவையிரண்டும் பஞ்சபூதங்களுக்கும் உபலக்ஷணம். [அதனுள்பிரமனரன்நீ]-அந்த பஞ்சபூதங்களாலே ஸ்ருஷ்டமான அண்டத்துக்குள்ளே வர்த்தமானரான ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நிர்வாஹகனானவன் நீ. [உம்பரும் யாதவரும்இத்யாதி] - மேலான தேவர்களையும மநுஷ்யாதி ஸ்த்தாவராந்தமான ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்த முனியாக ப்ரஸித்தனானவன் நீ. ஸகலபதார்த்தங்களையும் கர்மாநுகூலமாக ஸ்ருஷ்டிக்கைக்காக பூர்வகர்மங்களை அநுஸந்திக்குமவனிறே - முனியாகிறான். "ததஸ தேவஸ்ருஷ்டோ நாகாமாகதஸ்ய ப்ரஜாதி". இத்தால் ஸ்தூலசிதசித் வஸ்துஶரீரத்வத்தாலே கார்யஞ் சொல்லிற்றாய்த்து. கஶ்யபப்ரஜாபதியைச் சொல்லிற்றாகவுமாம். [எம்பரஞ்சாதிக்கலுற்றென்னைப் போரவிட்டிட்டாயே] - என் கார்யம் நீயேசெய்யக்கடவதாக ஏறிட்டுக்கொண்டு அத்தையுபேக்ஷித்தது, அசேதநத்தைப் போகடுமாபோலே போகட்டாயென்னுதல்; ஸகலத்தையும் நிர்வஹிக்கிறநீ, என்னை ஒருவனையும் நானே என்கார்யம்

† இங்கு மூன்று புஸ்தகங்களிலும் க்ரந்தபாதமாயே காண்கிறதென்கிறார்கள்.

*செய்வேணுகப்பார்த்து உன்பக்கலினின்றும் போரவிட்டு உபேக்ஷித்தாயென்னுதல். [என்னை] - உன்னை யொழியச்செல்லாத என்னை.*

ஈடு.—நாலாம்பாட்டு. ஸர்வநிர்வாஹகனுன நீ, என்கார்யம் நானே பண்ணிக்கோள்வேணுகப் பார்த்தருளினுயாகில், என்னைக் கைவிட்டாயல்லையோ? என்கிறுர்.

[உம்பரந்தண்பாழேயோ] - மஹதாதிகார்யங்களுக்கெல்லாம் காரணமாகையாலே மேலாய், தன்னுடைய ஏகதேசத்தாலே கார்யவர்க்கத்தைப் பிறப்பிக்கவற்றான ஶக்தியையுடைத்தாய், விசித்ரபரிணுமிநியாய், சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கோள்ளலாம் நிலமாயிருந்துள்ள மூலப்ரக்ருதிக்கு நிர்வாஹகனுனவனே! [உம்பர்] - மேல். [அந்தண்] - அழகிதுமாய்க் குளிர்ந்திருக்கை. (ஸ்ருஷ்டிஶக்தியாகிறவழகும் விசித்ர பரிணுமித்வமாகிற நன்மையுமுடைத்தா யிருக்கை.) [பாழ்] - க்ருஷிக்குயோக்யமாயிருக்கை. காரணவஸ்த்தமாய்நின்று ஸ்வகார்யத்தாலே சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைக்கவற்றென்னுமிடத்தைச் சோல்லுகிறது. [உம்பரந்தண்பாழேயோ] - ஸௌஶீல்யமென்று கொண்டு நிஷ்கர்ஷகஶப்தத்தாலே தர்மத்தைப் பிரியச் சொல்லுமாபோலே பிரியச் சொல்லப் போகாது, ஸர்வனுக்கு ப்ரகாரமானவற்றை யென்கிறது. 'உம்பரந்தண்பாழேயோ' என்கிற வித்தால் - சேதநர்க்கு ப்ரகாரமாய் அவ்வழியாலே ஈஶ்வரனுக்கு ப்ரகாரமாகையன்றிக்கே, "யஸ்யாத்மா ஶரீரம் - யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்" (யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம்) என்கிறபடியே சேதந வ்யதிரிக்தமான அசித்துக்கும் அவனையோழிய நிர்வாஹகரில்லையேன்கை. "பாழேயோ" - என்கிறவித்

---

*நாலாம்பாட்டு.—உம்பர் இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வநிர்வாஹகனுன இத்யாதி.*

*ப்ரக்ருதி மேலாயிருக்கும் ப்ரகாரத்தையும், இதுக்கு அழகும் குளிர்த்தியுமின்னதென்னுமத்தையும், "பாழே" என்றதுக்கர்த்தத்தையும் அருளிச்செய்கிறுர் - மஹதாதி இத்யாதி. ப்ரக்ருதி, போகமோக்ஷங்களை விளைக்கும்படியென்னென்ன - காரணவஸ்த்தமாய் இத்யாதி. காரணவஸ்த்தமாய் நின்று-கார்யோந்முகமாய் நின்றென்றபடி. "படஸ்ய ஶௌக்ல்யம்" என்னுமாபோலே பிரித்துச் சொல்லாதே, "பாழேயோ" என்று ஸமாநாதிகரிக்கிறதெதுக்கென்ன - ஸௌஶீல்யமென்று இத்யாதி. இத்தால்பலிதம் - உம்பரந்தண் இத்யாதி. இத்தால் ஸர்வத் வ்யதிரிக்த விஷயங்களில் நிஷ்கர்ஷகஶப்தம் தர்மிபோதகமாகமாட்டாது, ஸர்வத்விஷயத்தில் நிஷ்கர்ஷகஶப்தமும் ஸர்வத்பர்யந்தமா யிருக்குமென்று கருத்து. ஶப்தம், நிஷ்கர்ஷகமென்றும் அநிஷ்கர்ஷகமென்றும் த்விவிதம். நிஷ்கர்ஷகமாவது - "படஸ்ய ஶௌக்ல்யம்" என்னுமது; அநிஷ்கர்ஷகமாவது - "ஶுக்ல: பட:" என்னுமது. நிஷ்கர்ஷகஶப்தமும், வைவக்ஷிகநிஷ்கர்ஷகமென்றும், நியதநிஷ்கர்ஷகமென்றும் த்விவிதம். வைவக்ஷிக நிஷ்கர்ஷகமாவது - "ஶுக்ல: பட:" என்று அநிஷ்கர்ஷகமாகச் சொல்லாமல் அத்தை "படஸ்ய ஶுக்ல:" என்று நிஷ்கர்ஷகமாகச் சொல்லுகை; நியத நிஷ்கர்ஷகமாவது - "கந்த: ப்ருதிவீ" என்று அநிஷ்கர்ஷகமாகச் சொல்லப்போகாதே "ப்ருதிவ்யா கந்த:" என்று நிஷ்கர்ஷகமாகச் சொல்லலாம்படியிருக்கை. ஆக, த்விவிதநிஷ்கர்ஷகஶப்தங்களும் லோகத்தில் தர்மமாத்ரபோதகமொழிய தர்மிபோதகமாகமாட்டாது. ஈஶ்வரனிடத்தில் வந்தால் "புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச - ரஸோஹமப்ஸு கௌந்தேய" என்று ப்ருதிவியினுடைய புண்யகந்தமும் ஜலத்தில்ரஸமும் நானேயென்றிருக்கையாலே, உபயவிதநிஷ்கர்ஷகஶப்தங்களும் ஸர்வத்பர்யந்தமாயிருக்கு மென்றபடி. இஸ்ஸாமாநாதிகரண்யத்தால் பலித்த அம்ஶத்தை யருளிச்செய்கிறுர் - பாழேயோஎன்கிற இத்யாதி. "பாழேயோ" என்று ஶரீரஶரீரி*

தால் - ஶப்தஹேதம் கொள்ளுகிற மீமாம்ஸகரையும், ஸ்வரூபேண தாதாத்ம்யம் கொள்ளுகிற மாயாவாதிகளையும் அழிக்கிறது. [அதனுள்மிசைநீயேயோ]-அதிலே பஜமாய் நிற்கிற விலக்ஷணமான ஆத்மதத்த்வத்துக்கு நிர்வாஹகனானவனே! ஸூக்ஷ்மசிதசித் வஸ்துஶரீரி காரணமாகையாலே காரணவஸ்த்தை சொல்லிற்று. இத்தால் - விஶேஷண ப்ராயாந்யம்சொல்லும் ந்யாய வைஶேஷிகபக்ஷமும்,விஶேஷணத்துக்கு அபாரமார்த்யஞ் சொல்லும் மாயாவாதிபக்ஷமும் ஆழ்வார்க்குப் பக்ஷமல்லவென்றதாய்த்து. "நீயேயோ" என்கிறவித்தால் - சேதநனை யொழிய அசேதநத்துக்கு ஸ்த்திதியில்லாதாப்போலே, ஈஶ்வரனையொழிய ஆத்மாவுக்கு ஸ்திதியில்லையென்கிறது. [அம்பரநற்சோதி]-அம்பரம் - ஆகாஶம். நற்சோதி - விலக்ஷணதேஜஸ்ஸு. அல்லாதபூதங்களுக்கு உபலக்ஷணமிரண்டும்; "யதம்பு வைஷ்ணவ꞉ காய꞉" (யதம்புவைஷ்ணவ꞉காய꞉) என்று ஜலத்தைச் சொல்ல, அல்லாதபூதங்களுக்கும் உபலக்ஷணமானாற்போலே.[அதனுள் பிரமன்அரன் நீ] - பஞ்சீக்ருதபூதங்களாலே ஸ்ருஷ்டமான அண்டாந்தர்வர்த்திகளான ப்ரஹ்மருத்ராதிகளும் நீயிட்டவழக்கென்கிறது. [உம்பருமியாதவரும் படைத்தமுனிவனவன்நீ] - தேவர்களையும் மற்றுள்ளாரையும் படைத்த முனியாக ப்ரஸித்தனானவன் நீ. "பிரமனரன்நீ" என்ற ஸாமாநாதிகரண்யம் கார்யகாரணபாவஸம்பந்தம்; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்மதஜ்ஜலாநிதி) என்னுமாபோலே. ஸகலபதார்த்தங்களையும் கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டிக்கைக்காக பூர்வகர்மங்களை யநுஸந்திக்குமவனிறே முனியாகிறான்; "ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி" (ததஸதேவ ஸங்மனோ

---

பாவ ஸம்பந்தம் சொல்லுகிற இத்தாலென்றபடி. ஸ்வரூபேண தாதாத்ம்யம்கொள்ளுகிற மாயாவாதி,ஜீவனோடே ப்ரஹ்மத்துக்குஐக்யம்சொல்லுகையொழிய ப்ராக்ருதியோடே ஐக்யம்கொள்ளான், அதனுள்-ப்ராக்ருதியிலே, அதிலே வர்த்திக்கிற என்றபடி. "மிசை" என்று - விலக்ஷணமான ஆத்மாவைச் சொல்லுகிறது. "உம்பரும்" இத்யாதிபதத்வயத்துக்கும் பாவம்-ஸூக்ஷ்மசிதசித் இத்யாதி. "அதனுள்மிசைநீயே" என்றதால் பலிதத்தை யருளிச்செய்கிறார் - இத்தால்இத்யாதியாலே. இத்தால் என்றது-"அதனுள்மிசைநீயேயோ" என்கிறவித்தாலென்றபடி. விசேஷணப்ராயாந்யம் சொல்லும் என்றது-விசேஷணபூத ஜீவனுக்குஸ்வாதந்த்ர்யம் சொல்லுமென்றபடி. விசேஷணத்துக்குஅபாரமார்த்யம் சொல்லும் என்றது-விசேஷணபூதஜீவனோடே ப்ரஹ்மத்துக்கு உண்டான பேதாபாரமார்த்யம் சொல்லுமென்றபடி. "நீயேயோ" என்று - ஆத்மாவை ஈஶ்வரனோடு ஸமாநாதிகரிக்கிறதுக்கு பாவம் - நீயேயோ இத்யாதி. அம்பரநற்சோதி - ஆகாஶமும் விலக்ஷணமானதேஜஸ்ஸும் நீயென்றபடி. ஒன்றிரண்டைச் சொன்னது மற்றவற்றுக்கும் உபலக்ஷணமாமோ வென்ன, த்ருஷ்டாந்தம் - யதம்பு இத்யாதி. "யதம்பு வைஷ்ணவ꞉ காய꞉ ததோ விப்ர வஸுந்தரா । பத்மாகாரா ஸமுத்பூதா பர்வதாப்த்யாதிஸம்யுதா" இதித்விதீயாம்ஶே த்வாதஶே. அதனுள் பிரமனரன்நீ - ஆகாஶம் தேஜஸ்ஸுமுதலான பஞ்சபூதாரப்த அண்டாந்தர்வர்த்திகளான ப்ரஹ்மருத்ராதிகளும் நயிட்டவழக்கென்றபடி. "படைத்த" என்கையாலே பலிதமானதோர் அர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் - பிரமனரன்நீ இத்யாதி. கார்யகாரணபாவ நிபந்தனமென்னுமதுக்கு ப்ரமாணம் - ஸர்வம் இத்யாதி. ஶாந்தோக்யே. "முனி" என்றதுக்கர்த்தம் - ஸகல இத்யாதி. "முனி" என்றதுக்கு ப்ரமாணம் - ததஸத் இத்யாதி. இதுக்கர்த்தம் - "ஸதேவ ஸோம்ய" - நாமரூபவிபாகாநர்ஹ ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டதயா அஸச்சப்தவாச்யமான அந்தப்ரஹ்மமே, "ஸத்-ஸ்யாமிதி"-நாமரூபவிபாகார்ஹ ஸ்த்தூலசிதசித்விசிஷ்டதயா ஸச்சப்தவாச்யமாகக்கடவனென்று, "ஸோகாமயத" - மநஸ்ஸைப்பண்ணிற்று;ஸங்கல்பித்ததென்றபடி. இயம் ஶ்ருதி:யஜுஷி. "அம்பரநற்சோதி" என்றுதொடங்கி "முனிவனவன்நீ" என்னுமளவுக்கும்

குருதஸ்யாமிதி). இத்தால் - ஸ்த்தூலசிதசித்வஸ்து ஶரீரத்வத்தாலே கார்யத்வம் சொல்லிற்றாய்த்து. [எம்பரம்சாதிக்கலுற்றேன்னைப்போரவிட்டிட்டாயே] - என்கார்யம் நீயே செய்வதாக ஏறிட்டுக்கொண்டு, அத்தையுபேக்ஷித்து, அசேதநத்தைப்போகடுமாபோலே போகட்டாயென்னுதல்; ஸகலத்தையும் நிர்வஹிக்கிறநீ, என்னையொருவனையும் நான்என்கார்யம் செய்வேனாகப்பார்த்து, உன்பக்கலினின்றும் போரவிட்டு உபேக்ஷித்தா யென்னுதல். [என்னை] - உன்னாலல்லது செல்லாதஎன்னை [போரவிட்டிட்டாயே] - அவன் பக்கலினின்றும் பிறிகதிர்ப்பட்டுப் போந்தாராயிருக்கிறபடி. குணமுண்டையாடாத தேஶத்திலே தள்ளினாயென்கிறார். ஜ்ஞாநவைஶத்யத்தைப்பண்ணி ப்ராப்தியளவும் ப்ரவர்த்தியாதிருக்கிறவிது, நளன் தமயந்திக்கு வழிகாட்டிவிட்டாற்போலேயிருக்கிறதுகாணும்! (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

போரவிட்டிட்டென்னை நீபுறம்போக்கலுற்றால் பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோ எனதென்பதென்?யானென்பதென்?
தீரஇரும்புண்டநீரதுபோல என்னாருயிரை
ஆரப்பருகஎனக்குஆராவமுதானாயே.

*ஆ.—(போரவிட்டிட்டு) - உம்முடையபரத்தை நான் நிர்வஹிக்கத்தவிர்ந்தால் அந்தபரத்தை நீரே நிர்வஹித்துக்கொள்ளலாகாதோ வென்னில்; - நீ என்னைக் கைவிட்டு உபேக்ஷித்தால் பின்னை யாரைக்கொண்டு எத்தைச் செய்வது? நானென்று ஒன்றுண்டோ, என்னுடையதென்று ஒன்றுண்டோ, அடைய முடிந்ததிறே; ஆன பின்பு, அக்நிஸம்தப்தமான இரும்பு தாபம்தீரும்படி நீரைப்பருகினாற்போலே, உன்னைப்பிரிந்த என்னுடைய ஸந்தாபமெல்லாம் தீரும்படி யுன்னைப்பருக எனக்குஆராவமுதானாய்; இனிக்குறையும் நீயே செய்தருளாய் என்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், நான் என்னுடைய யத்நத்தாலே உன்னைப் பெறுகிறேனாக நீ என்னைக்கைவிட்டிருக்கில், நானென்றும் என்னதென்றும் சிலவுளவோ? முடிந்தேனத்தனையிறே என்கிறார்.*

*[போரவிட்டிட்டென்னை நீ புறம்போக்கலுற்றால்] - ரக்ஷகனான நீ அநந்யகதியான என்னை உன்பக்கலினின்றும்போர நோக்கிப்போகட்டால் பின்னை நான் ஆரைக்*

---

ஸாவம் - இத்தால், ஸ்த்தூல இத்யாதி. முனிவனவன்நீ - ஸ்ருஷ்டிக்கு உறுப்பாகப்பூர்வகர்மவிஸாமங்களை மநநம்பண்ணுமவன் நீ என்று ஸப்தார்த்தம். எம்பரம் - என்கார்யம். "சாதிக்கலுற்று" என்றது - நீ சாதிக்கலுற்றேனென்னுதல், நான் சாதிக்கலுற்றேனென்னுதல். நீ செய்வதாக ஏறிட்டுக்கொண்டென்றும்ந்தினவர்த்தம்; நான் செய்வேனாகப்பார்த்தென்றுஇரண்டாமர்த்தம். "போரவிட்டிட்டாயே" - உன்பக்கல் நின்றும் அகன்றுபோம்படி உபேக்ஷித்துப் போகட்டுவிட்டாயென்று ஶப்தார்த்தம். அவனுக்கு ஶரீரபூதராய் அவனோடே கூடியிருக்கச்செய்தே, "போரவிட்டிட்டாய்" என்கிறதென்னென்ன - குணம் இத்யாதி. அவன்போரவிட்டானோவென்ன, அருளிச்செய்கிறார் - ஜ்ஞாநவைஶத்யத்தை இத்யாதி. "வஸஷ்வநாவிஷஸ்ரணாஶேஷபாதஞ்வ கொஸலாநு" என்றத்தைப்பற்ற - நளன் இத்யாதி. (௪)

கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப்பது? என்ன ஸாதநத்திலே என்றதே ஆரைக்கொண்டு என்கிறதென்னென்னில்-என்றும் புருஷார்த்தம் பெறுவது பரமசேதநனாயிருப்பானொருவனாலே என்றிருக்கையால். [தீரவிரும்புண்ட நீரென்றுமேனுக்கு] - அக்நிஸந்தப்தமான இரும்பு நீரை நிஶ்ஶேஷமாக ஶோஷிக்குமாபோலே. [என்னுருயிரை] - சமையஶோஷிக்கைக்காக எனக்கு உன்னுடைய நிரதிஶயபோக்யதையைக் காட்டி என்னை அகப்படுத்தினாய். காய்ந்த இரும்பு அக்காய்ச்சல்தீர நீரைப் பருகுமா போலே என்னுடைய ஸந்தாபமெல்லாம் தீரும்படி எனக்குப் பண்டுநிரதிஶய போக்யமானவனே! என்றுமாம்.

ப.—அநந்தரம், எனக்கு நிரவதிகஸௌஹார்த்தனாய்வைத்து நீ என்னை உபேக்ஷிக்கப்பார்த்தால் எனக்கு ஒரு உஜ்ஜீவநமுண்டோ? என்கிறார்.

தீர - (தன்காய்ச்சல்)தீரும்படி, இரும்பு - இரும்பானது, உண்ட -, நீரது போல - நீர்போலே, என்னுருயிரை - என்னாத்மாவின், ஆர - (விடாயெல்லாம்தீரப்) பரிபூர்ணமாக, பருக - பருகுகைக்கு, எனக்கு -, ஆரா - த்ருஷ்ணைதொடாத, அமுதானாயே - அம்ருதமானாயே; (இப்படியிருக்க), நீ - (உன்வாசியறிந்து ஶோஷிக்கும்படி பண்ணி ப்ராப்திபர்யந்தமாக ப்ரகாசிப்பித்த) நீ, போரவிட்டு - (அத்தைக்குலைத்துப்) போரவிட்டு, இட்டு-(அசேதநவத்) அநாதரித்து, என்னை-(அநந்யகதியான)என்னை, புறம்-(உனக்குப்)புறம்பான விஷயாந்தரத்திலே, போக்கல்உற்றால்-போக்கநினைத்தால், பின்னை-(ஸர்வஶக்தியான நீ அநாதரித்த) பின்பு, யான் - (அஶக்தனான) நான், ஆரைக்கொண்டு-(புருஷார்த்தஸாதகராயிருப்பார்) மற்றாரைக்கொண்டு, எத்தை-எந்தப்புருஷார்த்தத்தை, அந்தோ - ஐயோ! (சாதிப்பேன்—); எனதுஎன்பதுஎன் - என்னதென்கைக்கொரு கரணாதிகளில்லை; யான்என்பதுஎன் - நானென்கைக்குஒரு ஸ்வதந்த்ரனானகர்த்தாவில்லை. இனிவேறுண்டோவென்று கருத்து. 'ஆரைக்கொண்டெத்தை' என்கிற விருத்தோக்தியிலே விஷண்ணராகிறார். "இரும்புண்டநீர்போல் என்னாத்மாவை முற்றப்பருகினான்" என்கிறபடியே நீ பூர்ணமாகப் பானம்பண்ணுகைக்கு உறுப்பாக உன்ஸௌஹார்த்தத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தாயென்னவுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஸர்வரக்ஷகனான நீ உபேக்ஷித்தால் என்கார்யம் நான் செய்யவோ? பிறர்செய்யவோ? முடிந்ததன்றோ என்கிறார்.

[போரவிட்டிட்டு] - உன்பக்கலினின்றும் அகற்றி உபேக்ஷித்து. [என்னை] - அநந்யகதியான என்னை. [நீ] - ஸ்ருஷ்டிதொடங்கி இவ்வளவும்வர என்னைப் புகுர நிறுத்தின நீயென்னுதல்; ஸர்வரக்ஷகனான நீயென்னுதல். [புறம்போக்கலுற்றால்] - புறம் போக்குகையிலே அத்யவஸித்தால்; என்கார்யம் நான் செய்வேனாகப்பார்த்து என்னை யுபேக்ஷித்தால். [பின்னை யானாரைக்கொண்டெத்தை] - ஸர்வஶக்தியானநீ அநாதரித்தபின்பு அஶக்தனான நான் எந்த உபாயத்தைக்கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப்பது? ஆரைக்கொண்டென்கிறது - புருஷார்த்தம்பெறுவது ஒரு பரமசேதநனாலே, அசேதந க்ரியாகலாபாதிகளால் அன்றென்னுமிடம் தோற்றுகைக்காக. "க்ருஷ்ண[illegible]நாத ஹி". [அந்தோ] - "மாமேகம் சரணம் வ்ரஜ" என்றஉனக்கு நான் உபதேசிக்க வேண்டுவதே! [எனதுஎன்பதென் யான்என்பதென்] - பேறு உம்மதானால் ஸாதநம் உம்முடைய தலையிலே ஆகவேண்டாவோ என்ன;—எனக்குப் பரிகரமாயிருப்பதொன்று

*உண்டென்பதோர் அர்த்தமுண்டோ? ப்ருஶுக்ஸ்த்திதி யோக்யமாயிருப்பதோர் அர்த்த முண்டோ? ஶரீரரக்ஷணம் ஶரீரியையொழியச் செய்வாருண்டோ? [தீரவிரும்பு இத்யாதி] - அக்நிஸந்தப்தமான இரும்புண்ட நீரானது காற்றவொண்ணாதாப்போலே என் ஆத்மாவைச் சமையபோஜிக்கைக்காக எனக்கு உன்னுடைய நிருபம போக்யதையைக் காட்டி என்னை அகப்படுத்தினாய். முன்பு நீஉன்போக்யதையைக் காட்டிற்றும் உன்னை நான் பெறுகைக்கன்றி என்னை அகப்படுத்தி உன்கார்யம் செய்தாயாய்த்தத்தனை யிறேயென்னுதல்; காய்ந்த இரும்பு அக்காய்ச்சல் தீரும்படி நீரைப்பருகுமாபோலே என்னுடைய விடாய்தீரும்படி உன்னை போஜிக்க எனக்குப்புண்டு நிரதிஶய போக்யனானவனே! என்னுதல்.*

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஸர்வரக்ஷகனான நீ உபேக்ஷித்தால், என்கார்யம் நான்செய்யவோ, பிறர்செய்யவோ? முடிந்தேனிறே என்கிறார்.

[போரவிட்டிட்டு] - உன்பக்கலினின்றும் பிறித்து உபேக்ஷித்து. [என்னை] - அநந்யகதியான என்னை. [நீ] - ஸ்ருஷ்டிபேதொடங்கி இவ்வளவும்வரப் புகுரநிறுத்தின நீயேன்னுதல்; ஸர்வரக்ஷகனான நீ என்னுதல். [என்னை] - அஜ்ஞாநஅஶக்திகளுக்கெல்லையான என்னை. [நீ] - ஜ்ஞாநஶக்திகளால் பரிபூர்ணனான நீ. அக்கரையேறமாட்டாதானொருவனை யமுக்கினாற்போலேயிருக்கிறது காணும். [என்னை நீ] - கண்ணும்காலுமின்றிக்கேயிருப்ப தோருத்தன், கண்ணும் காலுமுடையனாயிருப்பதோருத்தன்: ஆருக்குஆர் வழிகாட்டுவோரேன்கிறது ; "**நைவகிஞ்சித்பரோக்ஷந்தே ப்ரத்யக்ஷாஸிநகஸ்யசித்**" (நைவகிஞ்சித்பரோக்ஷந்தேப்ரத்யக்ஷோஸிநகஸ்யசித்) என்னும்படியே. [நீ]- * ஆள்பார்த்துழிதரும் நீ. * எதிர்சூழல்புக்குத்திரியும் நீ. [புறம்போக்கலுற்றால்] - புறம்பே போக்குகையிலே அத்யவஸித்தால். என்கார்யம் நான் செய்வேனாகப்பார்த்து என்னை உபேக்ஷித்தால். [பின்னையான்ஆரைக்கொண்டேத்தை]-ஸர்வஶக்தியான நீ அநாதரித்த பின்பு, அஶக்தனான நான் எந்தவுபாயத்தைக்கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப்

*அஞ்சாம்பாட்டு.—போரவிட்டிட்டு இத்யாதி. "போரவிட்டிட்டு என்னைநீ" என்று தொடங்கி "யானெனன்பதென்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - **ஸர்வரக்ஷக இத்யாதி.***

*"போரவிட்டிட்டு" என்ற-முழுச்சொல்லு ; 'உன்பக்கலினின்றும் பிரித்து உபேக்ஷித்து. "என்னை" என்றதுக்கர்த்தாந்தரமாதல், அநந்யகதியான என்னை என்றத்தால் பலிதமாதல் - **அஜ்ஞாந இத்யாதி.** "ஸ்ருஷ்டியேதொடங்கி" என்றவாக்யவிவரணம் - **ஜ்ஞாநஶக்திகளால் இத்யாதி.** "புறம்போக்கலுற்றால்" என்றத்தைக் கடாக்ஷித்துக் கீழுக்கெல்லாம் ஹாவம் - **அக்கரையேற இத்யாதி.** ஜ்ஞாநஶக்திகளுண்டானால் உமக்குச்செய்யவேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன - **கண்ணும்காலும் இத்யாதி.** அவன் அப்படி ஜ்ஞாநாதிபூர்ணனாயிருக்குமோவென்ன-**நைவகிஞ்சித் இத்யாதி.** ஜிதந்தாயாம், "**நைவகிஞ்சித்பரோக்ஷம் தே ப்ரத்யக்ஷோஸி நகஸ்யசித் । நைவ கிஞ்சிதஸித்தம் தே நசஸித்தோஸி கஸ்யசித்**"-"தே - கிஞ்சித்பரோக்ஷம் - ந" உனக்குச் சற்றும் மறைந்திருப்பதில்லை ; எல்லாவற்றையும் ஒருகாலே அபரோக்ஷிக்கவல்ல வடிவையுடையவனென்கை ; "**கஸ்யசித் - ப்ரத்யக்ஷோ நாஸி**" - நீயொருவர்க்கும் ஸாக்ஷாத்கரிக்க நிற்கிறாயல்லை; உபயத்தாலும் பலித்தது, நீயறியாததொன்றுமில்லை; நான் அறிவதொன்றுமில்லையென்றபடி. "ஸர்வரக்ஷகனான நீ" என்றதின் விவரணம் - **ஆள்பார்த்து இத்யாதி** வாக்யத்வயம். விவரணம் - **என்கார்யம் இத்யாதி.** எத்தைக்கொண்டென்றதே, "ஆரைக்கொண்டு"*

பது? ஆரைக்கோண்டேன்கிறது - புருஷார்த்தம் பெறுவதுஒருசேதநனாலே, அசேதநக்ரியா கலாபாதிகளாலன்றேன்னுமிடம் தோற்றுகைக்காக. [அந்தோ!] — "மாமேகம்ஶரணம் வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்றவுனக்கு நான் உபதேசிக்கவேண்டுவதே! [எனது என்பதேன் யான்என்பதேன்] - முடிந்தேனிறே என்கிறார். †(நானேமுடிந்தேன், இனிக் கரணங்களும்போய்த்திறேயென்கிறார்). [தீர இத்யாதி] - அக்நிஸந்தப்தமான இரும்பு காய்ச்சல் தீர நீரை நிஶ்ஶேஷமாக ஸ்வீகரித்துமாபோலே, என்னாத்மவஸ்துவைச் சமைய ஸ்வீகரிக்கைக்காக, எனக்கு உன்னுடைய நிரதிஶயபோக்யதையைக்காட்டி என்னையகப் படுத்தினாய். [என்னாருயிரையாரப்பருக] - என்விடாய்தீரக் கலந்தாய் என்றிருந்தேன்; உன்விடாய்தீரவாயிருந்ததிறே. உனக்காகவாகாதே யுன்னைக்காட்டிற்று. அன்றிக்கே, விபக்தி வ்யத்யயம்; என்னாருயிரானது உன்னையாரப்பருகவென்னவுமாம்; அப்போது, காய்ந்தவிரும்பு அக்காய்ச்சல்தீரும்படி நீரைப்பருகுமாபோலே, என்னாருயிரானது என் ஸந்தாபமெல்லாம் தீரும்படி யுன்னை ஸ்வீகரிக்க எனக்குப்பண்டு நிரதிஶயபோக்யனான வனே யென்றுமாம். வ்யாக்யாநாந்தரம்:—[எனதென்பதென்யானென்பதேன்]-பேறுஉம் மதானால்ஸாதநமும்உம்முடையதலையிலே யாகவேண்டாவோவென்ன,—எனக்குப்பரிகர மாயிருப்பதோன்றுண்டு என்பதோர் அர்த்தமுண்டோ? ப்ருதக்ஸ்த்திதியோக்யமாயிருப்ப தொரு நானுண்டோ? ஶரீரரக்ஷணம் ஶரீரியை யொழியச் செய்வாருண்டோ? (ரு)

## ஆறும் பாட்டு.

எனக்குஆராவமுதாய் எனதாவியை இன்னுயிரை
மனக்காராமைமன்னிஉண்டிட்டாய் இனியுண்டொழியாய்
புனக்காயாநிறத்தபுண்டரீகக்கண்செங்கனிவாய்
உனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பா! என்அன்பேயோ.

என்கிறதென்? என்ன - ஆரைக்கோண்டேன்கிறது இத்யாதி. "அந்தோ!" என்றதுக்கு பாவம்- மாமேகம் இத்யாதி. "பேறுஉம்மதானால் ஸாதநமும் உம்முடைய தலையிலேயாக வேண்டாவோ? என்ன - 'எனதென்பதென் - யானென்பதென்' - எனக்குப்பரிகரமாயிருப்பதொன்று உன் டென்பதோரர்த்தமுண்டோ? ப்ருதக்ஸ்திதியோக்யனா யிருப்பானொருநானுண்டோ? ஶரீரரக்ஷணம் ஶரீரியை யொழியச்செய்வாருண்டோ?" என்று இவ்வளவும்-"எனதென்பதென் யானென்ப தென்" என்றதுக்கர்த்தமாக விவக்ஷித்து, அத்தால் பலிதம்-முடிந்தேனிறே என்று. "என்னதென் கிறதெது, நானென்கிறதெது, என்னதென்கைக்கொரு பரிகாமில்லை, யானென்கைக்கொரு ஸ்வதந்த்ரனான கர்த்தா இல்லை என்று உரையில் ஶப்தார்த்தம். "இரும்பு - தீர - நீர் - உண்டதுபோல" என்றந்வயிப்பது. தீர - காய்ச்சல்தீர. "எனக்காராவமுதானாய்" என்னுமளவுக்கும் பாவம் - என்விடாய் இத்யாதி. இத்தால் பலிதம் - உனக்காக இத்யாதி. விபக்திவ்யத்யய மென்றது - "ஆருயிரை" என்றத்விதீயையை "ஆருயிர்" என்று ப்ரதமையாக்கியென்றபடி. அப் போது என்றது - இந்தபக்ஷத்தில் ஶப்தநிர்வாஹமென்றபடி. முந்தினபக்ஷத்தில், இரும்பு எம்பெருமானுக்கு த்ருஷ்டாந்தம்; இரண்டாம்பக்ஷத்தில், ஆழ்வார்க்கு த்ருஷ்டாந்தம். 'தீர இரும்புண்ட' என்று தொடங்கி, 'எனக்காராவமுதானவனே - போரவிட்டிட்டு' என்று தொடங்கி, 'எனதென்பதென் யானென்பதென் - அந்தோ' இத்யந்வய:. "எத்தை" என்றவநந்தரம், "சாதிப் பது" என்றத்யாஹார்யம். (ரு)

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்கிறார்கள்.

ஆ.— (எனக்காராவமுதாய்,) - ஸௌந்தர்யாதி ஸர்வகுணங்களினாலும் உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு போக்யமானாற்போலே எனக்கு போக்யமாயிருந்துவைத்த, அத்தனையன்றியே என்னுடைய ப்ரக்ருதியையும் என்னுடைய ஆத்மாவையும் நிரவயிகமான அபிநிவேஶத்தோடே புஜித்தருளினநீ, பிரானே! என்னைப் போகடாதே கொள்ளாயென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், பெரியபிராட்டியார் பக்கல்போலே என்பக்கல் அத்யபிநிவிஷ்டனாய் என்ப்ராக்ருதியிலுங்கூட அத்யாதரத்தைப்பண்ணி என்னை புஜித்தநீ, என்னை உபேக்ஷியாதே சண்டென விஷயீகரித்தருளாய் என்கிறார்.

[எனக்கென்று தொடங்கி] - நிரதிஶயபோக்யனாய் ஹேயமான என்னுடைய ப்ரக்ருதியையும் விலக்ஷணமான ஆத்மாவையும்ஒக்க ஹ்ருதயத்துக்கு அமையாமை நிரந்தரமாக புஜித்தாய். இனி இத்தைவிடாதே விஷயீகரியாய். எம்பெருமான் கருத்தாலே 'இன்னுயிர்' என்றதாகவுமாம். [புனக்காயா நிறத்தவென்று மேலுக்கு] - தன்னிலத்திலேநின்ற காயாம்பூப்போலேயிருக்கிற திருநிறத்தை யுடையையாய்ப் புண்டரீகம்போலேயிருக்கிற திருக்கண்களையும் சிவந்த திருப்பவளத்தையுமுடையையான உனக்கு ஸத்ருஶமான அழகையுடைய பெரியபிராட்டியாருக்கு ஸ்நேஹியாய்வைத்து என்பக்கலிலே அபிநிவிஷ்டனானவனே!

ப.—அநந்தரம், பிராட்டிபக்கல் ப்ரணயியானாற்போலே என்பக்கலிலும் நிரதிஶய ப்ரணயத்தையுடைய நீ, உன்போக்யதையை ப்ரகாசிப்பித்து † புஜிப்பித்தாய்: இனி முழுக்க நிர்வஹித்துவிடவேணு மென்கிறார்.

புனக்காயா - தன்னிலத்திலலர்ந்த காயாம்பூப்போன்ற, நிறத்த - நிறத்தை யுடையையாய், புண்டரீகம் - புண்டரீகம் போலேயிருக்கிற, கண் - திருக்கண்ணையும், செங்கனிவாய் - சிவந்ததிருப்பவளத்தையுமுடைய, உனக்குஏற்கும் — உனக்கு அநுரூபமான, கோலம் - வடிவையுடையளாய், மலர் - பூவிற்பிறப்பாலே நிரதிஶயபோக்யதையாய், பாவைக்கு - ஸ்த்ரீத்வாநுரூபமான ஆத்மகுணத்தையுடைய லக்ஷ்மிக்கு, அன்பா - அன்பையுடையையாய், என்னன்பேயோ - என்னன்புதானொருவடியாயிருக்கிறவனே! எனக்கு-, ஆராவமுதாய்-நிரதிஶயபோக்யனாய், எனது ஆவியை-(ஹேயமான) என்னுடைய ப்ராக்ருதியையும், இன்னுயிரை - விலக்ஷணமான ஆத்மாவையும், மனக்கு- ஹ்ருதயத்துக்கு, ஆராமை - த்ருப்திபிறவாதபடிவிரும்பி, மன்னி - நிரந்தரமாக, உண்டிட்டாய் - புஜித்தாய்; இனி - இனிதொடங்கி, உண்டொழியாய் - நீகுறையும் †புஜிப்பித்தே விடவேணும் ஈஶ்வரனுக்கு நிருபாதிகபோக்த்ருத்வமும் சேதநனுக்கு போக்யத்வமுமிறே ஸ்வாபாவிகம்; அதினுடைய அநுஷ்வஜநித ப்ரீதியாலே வருகிற பர்யவஸாநமிறே சேதநபோக்த்ருத்வமும், ஈஶ்வரபோக்யத்வமும். ஆகையிறே, "அஹமந்நம்" என்று - ஸ்வரூபத்தை நிர்த்தேசித்து, "அஹமந்நாதः" என்று-இவனுடைய போக்யத்வத்தையும் ஈஶ்வரனுடைய போக்த்ருத்வத்தையும்சொல்லி, "அஹம்" என்று - சைதந்ய ப்ரயுக்தமான பர்யவஸாநத்தாலே சேதநபோக்த்ருத்வத்தையும் சொல்லி முடித்தது.

இ.—ஆறாம்பாட்டில், பிராட்டிபக்கல் பண்ணும் அபிநிவேஶத்தை என் பக்கலிலே பண்ணி என்னை புஜித்த நீ, என்னை உபேக்ஷியாதே சடக்கென விஷயீகரித்தருளாய் என்கிறார்.

---

† புஜித்தாய், புஜித்தே என்றிருக்கலாமோ என்று தோன்றுகிறது.

[எனக்காராவமுதாய்] - தேவஜாதியினுடைய உப்புச்சாறன்றிக்கே ஸதா ஸேவ்யமுமாய் நித்யஸூரிகளெல்லாரும் கூட அநுபவிக்கும் உன்னை, ஸம்ஸாரியான எனக்குத்தந்தாய். [எனதாவியை] - என்னதென்னுமதுவே ஹேதுவாக, காமுகர் அபிமத விஷயத்தில் அழுக்கைவிரும்புமாபோலே என்னுடம்பை விரும்பினாய். [இன்னுயிரை] - அதுதன்னை நன்றென்று விரும்புகையாலே, அதிலும் தண்ணிதான ஆத்மாவைவிரும்பினாய். 'இன்னுயிர்' என்று - செவ்வாய்க்கிழமையை மங்களவாரம் என்னுமாபோலே யென்னுதல்; அவன்தலைபாலே சுமக்கிறபடியாலே சொல்லுதல். [மனக்காராமை] - மனஸ்ஸுக்குஆராமை. மனக்கு-மனஸ்ஸுக்கு. [மன்னிஉண்டிட்டாய்] - விரும்பி நிரந்தரமாக பூஜித்தாய். [இனியுண்டொழியாய்] - நீ தொடங்கின கார்யத்தை நடுவே குறை கிடக்கவிடாதே விஷயீகரித்தேவிடாய். நீ ஆரம்பித்தகார்யத்திலே குறைகிடப்பதுண்டோ? நீ இவ்வளவு புகுர நிறுத்துகைக்கு நான் ஸஹகரித்ததுண்டோ மேல் நானொன்று செய்கைக்கு? [புனக்காயா இத்யாதி] - முன்பு நீமேல்விழுந்தது உனக்கு ஒருகுறை யுண்டாயோ? ஸ்ரீயானவள் தான் மேல்விழும் வடிவையுடையையாய்வைத்தன்றோ என்பக்கலிலே அபிநிவேசித்தது. தன்னிலத்தில் காயாம்போலேயாய்த்து வடிவிருப்பது. வாத்ஸல்யாம்ருதவர்ஷியாய்த்து கண்களிருப்பது. [செங்கனிவாய்] - சிவந்து கனிந்ததாய்த்து முறுவலிருப்பது. பிராட்டி விரும்பும் துறைகளிறேயிவை. இப்படிப்பட்ட உனக்கு ஸத்ருசமான அழகை உடையவளாய்ப் புஷ்பத்தில் பரிமளத்தை வகுத்தாற் போலேயிருக்கிற ஸௌகுமார்யத்தை யுடையவளாயிருக்கிற பிராட்டிக்கு ஸ்நிக்த்யனவனே! பிராட்டியழகு நாவால் துகைக்கவொண்ணாமையாலே 'உனக்கேற்குங்கோலம்' என்கிறார். [என் அன்பேயோ] - அவளுக்கு அன்பையுடையவன் என்கிறார். இங்கு இரண்டாகப் பிரிக்கவொண்ணாதபடி இருந்தானென்கிறார். [உண்டிட்டாயினியுண்டொழியாய்] - முன்பு இப்படி தலையாலேசுமந்துவைத்து உபேக்ஷித்தால் பொறுக்கப்போமோ!

ஈடு.—ஆறும்பாட்டு. பெரியபிராட்டியார்பக்கல்போலே என்பக்கல் அத்யந்தாபிநிவிஷ்டனாய், என்ப்ரக்ருதியிலும் ஆத்மாவிலும் அத்யாதரத்தைப் பண்ணி பூஜித்த நீ, என்னை உபேக்ஷியாதே ஈண்டென விஷயீகரித்தருளாயென்கிறார்.

[எனக்காராவமுதாய்] - தேவஜாதியினுடைய உப்புச்சாறுபோலன்றியே, †(ஸதாஸேவ்யமாய்) நித்யஸூரிகளெல்லாருங்கூட அநுபவிக்கும் உன்னை ஸம்ஸாரியான எனக்குத்தந்தாய். [எனதாவியை] — என்னதென்னுமதுவே ஹேதுவாக, அபிமதவிஷயத்தில் அழுக்குகக்கும் காமுகனைப்போலே என்னுடம்பை விரும்பினாய். [இன்னுயிரை] - ஸமவஸபிப்ராயத்தாலே தவதவநாறுகிறபடி. அன்றிக்கே, செவ்வாய்க்கிழமையை மங்களவாரமென்னுமாபோலே, ப்ரக்ருதியோடே ஸம்பந்திக்கையாலே தண்ணிதென்று சொல்லு

ஆறும்பாட்டு.—எனக்காராவமுதுஇத்யாதி. 'கோலமலர்ப்பாவைக்கு அன்பா என்னன்பே - எனதாவியையின்னுயிரை மனக்காராமைமன்னி யுண்டிட்டாயினியுண்டொழியாய்', என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - பெரியபிராட்டியார் இத்யாதி.

"எனக்கு" என்றதுக்கு பாவம் - தேவஜாதி - இத்யாதி. "ஆவியை" என்னாதே "எனது" என்றதுக்கு பாவம் - என்னதென்னும் இத்யாதி. "இன்னுயிர்" என்று தம்மை ஶ்லாகிக்கலாமோ? என்ன, த்வேதாபாவம் - ஸமவஸபிப்ராயத்தாலே இத்யாதிவாக்யத்வயமும். தவதவநாறுகையாவது - மிகவும் தபோஶூந்யியாயிருக்கை. அதாவது - பாரதந்த்ர்யஶூந்யியாய் ஶ்லாக்யமா

† குண்டலிதம் இருபத்துநாலாயிரமென்கிறார்கள்.

கிறூராகவுமாம். [மனக்காராமைஇத்யாதி] - (மனக்கு) மநஸ்ஸுக்கு. [ஆராமை] - அமையாமை. [மன்னியுண்டிட்டாய்] - நிரந்தரமாக ஸேவித்தாய் - [இனியுண்டொழியாய்]-நீ தொடங்கினகார்யத்தையும், நடுவேகுறைகிடக்கவிடாதே, விஷயீகரித்து விடாய். †(நீ ஆரம்பித்தகார்யத்தில் குறைகிடப்பதுண்டோ ?) நீ இவ்வளவுபுகுரநிறுத்துகைக்கு நான் ஸஹகரித்ததுண்டோ? உன்காரியத்துக்கு உன்னை வேண்டிக்கொள்ளவேணுமோ? இவருடைய அம்ருதத்துக்கு ஹோக்த்ருத்வம் உண்டு காணும்!. [புனக்காயாஇத்யாதி] - இவ்வாத்மாவையும் இதினுடைய ஶரீரத்தையும் விரும்புகை உனக்குச் சேருமோ? நீயுகந்தார்க்குச்சேருமோ? [புனக்காயாநிறத்த] - தன்னிலத்தில் அலர்ந்த காயாப்போலேயாய்த்து வடிவிருப்பது. [புண்டரீகக்கண்] - வாத்ஸல்யாம்ருதவர்ஷியாயாய்த்துக் கண்களிருப்பது. [செங்கனிவாய்] - சிவந்து கனிந்தாய்த்து முறுவலிருப்பது. பிராட்டிவிரும்பும் துறைகளிறே இவை. [புனக்காயாவித்யாதி] - அக்காயா தாமரை பூத்துக் கனியப்பழுத்தாற்போலேயாய்த்து, திருமேனியும் திருக்கண்ணும் திருப்பவளமுமிருப்பது. [உனக்கேற்கும்]- இவனோபாதி வாசா விமர்த்திக்கைக்கும் பொறாத ஸௌகுமார்யத்தையுடையவள். இப்படிப்பட்ட உனக்கு ஸத்ருஶமான அழகையுடையளாய், புஷ்பத்தில் பரிமளத்தைவடித்து வகுத்தாற்போலேயிருக்கிற பிராட்டிக்கு ஸ்நிக்தனானவனே! உனக்கேற்கும் கோலமென்று - அவ்வழகையிங்கே யதிதேசிக்கிறார். ந்யாயாதிதேசம் பண்ணுகிறார். [கோலமலர்ப்பாவைக்கு அன்பா! என்னன்பேயோ!] - அவள்பக்க லன்பனென்று தோற்றியிராநின்றது; தம்முடைய பக்கல் அன்பென்றும் அதுஉடையனென்றும், தெரிக்கப் போகிறதில்லை;

---

யிருக்கை. "ஈஶஸ்ய ஸாஸ்த்ரோபஸேவ்ய க்வஸம்ஸாந வாயுநாச" என்றவிடத்திலே பாரதந்த்ர்யமிறே தபஸ்ஸென்றது. அமையாமை - த்ருப்திபிறவாமல். உண்டிட்டாய் - உண்டாய். இனி உண்டொழியாய் - இனி விஷயீகரித்துவிடாய். இத்தால் பாவம் - நீயிவ்வளவு இத்யாதி. "உண்டிட்டாய்" என்றத்தைப்பற்ற - உன்காரியத்துக்கு இத்யாதி. ஆராவமுதானவனை - "உண்டிட்டாய்" என்கையாலே பாவம் - இவருடைய இத்யாதி. கீழையும் கூட்டிக்கொண்டு "கோலமலர்ப்பாவைக்கன்பா" என்னுமளவுக்கும் பாவம் - இவ்வாத்மாவையும் இத்யாதி. நீயுகந்தார்க்குச் சேருமோ-ஹேயனான என்னை விரும்புகை நீயுகந்தவிஷயமான பிராட்டிக்குச் சேருமோவென்றபடி. "புனக்காயா" இத்யாதியை "உனக்கேற்கும்" இத்யாதியோடேகூட்டி பாவம் - பிராட்டி விரும்பும் இத்யாதி. உத்ப்ரேக்ஷிக்கிறார்-புனக்காயா இத்யாதி. அவனவயவங்களைப்போலே இவளுடைய விக்ரஹாதிகளை வர்ணியாமல், "உனக்கேற்கும்" என்றத்தால் பலித்தபாவம்-இவனோபாதி இத்யாதி. வாசாவிமர்த்திக்கைக்கும் பொறாதவென்றது - "வாசாமகோசரா" இத்யாதியைப்பற்ற. ஸப்தார்த்தம் - இப்படிப்பட்ட இத்யாதி. வடித்து - வடிக்கட்டி. வகுத்தாற்போலே - ஆக்ருதியாக்கினாற்போலே. 'இவனோபாதி' இத்யாதிவாக்யத்தோடே உனக்கேற்கும் இத்யாதிவாக்யத்துக்குச் சேர்த்தி. அவ்வழகு என்றது - "புனக்காயா" இத்யாதியைக்கடாக்ஷித்து. அதிதேசிக்கிறார் - ஏறிடுகிறார். அதிதேசிப்பது ஸர்வதா ஸாம்யமுண்டானவிடத்திலேயன்றோ, காளமேகநிஶ்யாமமான நிறம் முதலானவற்றை * ஹிரண்யவர்ணையான இவளிடத்திலே யதிதேசிக்கக் கூடுமோவென்ன - ந்யாயாதிதேசம் இத்யாதி. அதாவது - ஸ்வரூபாதிதேசம் பண்ணுகிறதன்று. அவனைப்போலே இவளும் அழகுடையவளென்கிறதென்றபடி. ஸ்வரூபாதிதேசமென்றும், ந்யாயாதிதேசமென்றும் இரண்டு. ஸ்வரூபாதிதேசமாவது - ஸர்வதாஸாம்யம் கொள்ளுகை; ந்யாயாதிதேசமாவது - அதுபோலே இதுவும் ஶ்லாக்யமாயிருக்குமென்கை. "அன்பா" என்னாதே "என்னன்பே" என்றதுக்கு பாவம் - அவள்பக்கல் இத்யாதி. அன்பனென்று - அன்பையுடையவனென்று. அன்புதானாகச்சொல்லுவானென்னென்ன-ஜ்ஞாதாவை இத்யாதி. இதுக்குப்ரமாணம் -

---

† குண்டலிதம் இருபத்துநாலாயிர மென்கிறார்கள்.

ஜ்ஞாதாவை ஜ்ஞாநமென்னுமாபோலே. "தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ:" (தத்குணஸாரத்வாத்துதத்வ்யபதேஶ:). (ரு)

## ஏழாம் பாட்டு.

கோலமலர்ப்பாவைக்குஅன்பாகிய என்அன்பேயோ
நீலவரைஇரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப
கோலவராகமொன்றாய் நிலம்கோட்டிடைக்கொண்டஎந்தாய்!
நீலக்கடல்கடைந்தாய்! உன்னைப்பெற்று இனிப்போக்குவனோ.

ஆ.—(கோலமலர்ப்பாவைக்கு.) - பெரியபிராட்டி பக்கலிலும் ஸ்ரீபூமிப்பிராட்டிபக்கலிலும் பண்ணும் வ்யாமோஹத்தை என்பக்கலிலே பண்ணிக்கொண்டு என்னை ஸ்வீகரித்தருளின உன்னைப் பெற்று இனிவிடுவேனோ? என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், நான் பெரியபிராட்டியார்பரிக்ரஹமாகையாலே ப்ரளயார்ணவமக்நையான ஸ்ரீபூமிப்பிராட்டியை யெடுத்து அவளோடே ஸம்ஶ்லேஷித்தருளினாற்போலேயும், கடலைக்கடைந்து பெரியபிராட்டியாரோடே ஸம்ஶ்லேஷித்தருளினாற்போலேயும் ஸம்ஸாரார்ணவமக்நனான என்னையெடுத்து என்னோடே ஸம்ஶ்லேஷித்தருளினாய்; என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணின உன்னைப்பெற்றுவைத்து இனித்தப்பவிடுவேனோ? என்கிறார்.

[கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என்னன்பேயோ] - பெரிய பிராட்டியாருக்கு ஸ்நேஹியாகையாலே அவள் பரிக்ரஹமான என்பக்கலிலே ஸ்நேஹத்தைப்பண்ணினவனே! [நீலவரை யிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப] - ஓர் அஞ்சனகிரி இரண்டு பிறையைக் கவ்விக்கொண்டு நிமிர்ந்தாற்போலே. நீலக்கடலென்று - கடைந்தருளுகிற எம்பெருமானுடைய திருநிறம் நிழலிட்டபடியைச் சொல்லுகிறது.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதாகூஷகனாக உன்னைப் பெற்றுவைத்து, இனி விடுவேனோ என்கிறார்.

கோலம்-வடிவழகையும், மலர் - போக்யதையையுமுடையளான, பாவைக்கு-பிராட்டிக்கு, அன்பாகிய - உகப்பானவத்தாலே, என் - என்பக்கலிலும், அன்பேயோ- அதிப்ராவண்யத்தையுடையையாய், ("ஸர்வத்ர ஸாபராதேஷு அபி அஸ்மாஸு தயாவதீ" என்கிற படியே), நீலவரை - நீலரத்நகிரியானது, இரண்டுபிறை - இரண்டுபிறையை, கவ்வி - நிமிர்ந்ததுஒப்ப - எழுந்திருந்தாற்போலே, கோலம் - விலக்ஷணமான வடிவழகையுடைத்தாய், ஒன்று - அத்விதீயமாயிருப்பதொரு, வராகமாய் - மஹாவராஹமாய், நிலம் - பூமியை, (ப்ரளயத்திலேபுக்கு முழுகியெடுத்து), கோட்டிடைக்கொண்ட - திருவெயிற்

தத்குண இதி. "தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத்" இதிஶாரீரகமீமாம்ஸாயாம். அஸத்ஸந்தேஹம் வ்யாவர்த்தயதி. தத்குணஸாரத்வாத் - விஜ்ஞாநகுணஸாரத்வாத், ஆத்மநஸ்தத்வ்யபதேஶ:, † விஜ்ஞாநமிதிவ்யபதேஶ:' ப்ராஜ்ஞவத்-யதா "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" இதி விபஶ்சித: ப்ராஜ்ஞஸ்ய ஜ்ஞாநஶப்தேந வ்யபதேஶ:, தத்வதித்யர்த்த:. உத்தரார்த்தத்தை யநுஸந்தித்துப் பூர்வார்த்தத்தை யநுஸந்திப்பது அந்வயம். 'இனி யுண்டொழியாய்' என்று க்ரியை. (ரு)

† ஶாரீரக மீமாம்ஸாயாம் - (உ - ௩ - உo).

றிலேவைத்த அபதாநத்தாலே, எந்தாய் - (என்னை, ஸம்ஸாரத்தில்நின்றும் எடுக்குமாகாரத்தை ப்ரகாசிப்பிக்கும்) ஸ்வாமியாய், நீலம் - (உன்வடிவின் நிழலீட்டாலே) நீலமான, கடல் - கடலை, கடைந்தாய் - கடைந்து அருந்தொழில்செய்து ஆஶ்ரிதரை ரக்ஷித்தவனே! உன்னை - (இப்படி புருஷகாரபூர்வகமாக எனக்குநல்லையாய் என்னை ரக்ஷிக்குமவனை) உன்னை, பெற்று - லபித்துவைத்து, இனி - கைபுகுந்தபின்பு, போக்குவனோ - நழுவவிடுவேனோ? நீலக்கடலென்று - நீலரத்நத்தையுடைய கடலென்றுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், ப்ரளயார்ணவமக்நையான ஸ்ரீபூமிப்பிராட்டியையெடுத்து அவளோடே கலந்தாற்போலேயும் கடலைக்கடைந்து பிராட்டியோடே ஸம்ஶ்லேஷித்தாற்போலேயும் பிராட்டி பரிக்ரஹமான என்னை ஸம்ஸாரார்ணவத்தினின்றுமெடுத்து என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணின உன்னைப் பெற்றுவைத்து, இனித்தப்பவிடுவேனோ என்கிறார்.

[கோலமலர் இத்யாதி] - பிராட்டிபக்கல் ஸ்நேஹாதிஶயத்தாலே அந்தஸ்நேஹமே ஹேதுவாக அவள்பரிக்ரஹமான என்பக்கலிலே அதிப்ரவணனானவனே! ‘‘சரமஶ்லோகையிலே இவர் அருளிச்செய்த வார்த்தை ரஹஸ்யத்தின்படியாயிருந்தபடி கண்டீரே!’’ என்று சீயரைக்குறித்து பட்டர் அருளிச்செய்தார். ப்ராதிகூல்யத்தைக் கனக்கப்பண்ணினார்பக்கலிலும் நாலடிவரநின்றதுவே ஹேதுவாக ரக்ஷகனும் ஈஶ்வரனென்னுமிடம், காகவிபீஷணாதிகள்பக்கலிலே கண்டதிறே; ‘‘க்ருபயா பர்யபாலயத்’’ என்றும், ‘‘ந த்யஜேயம்’’ என்றும் அவ்வளவன்றிக்கே தனியிருப்பிலே தர்ஜநபர்த்ஸநாதிகளாலே நலிந்த ராக்ஷஸிகள்பக்கலிலே திருவடிஎதிர்க்க, ‘‘[illegible]’’ ‘‘கார்யம் கருணமார்யேண நகஶ்சிந்நாபராத்யதி’’ என்றும் நீர்மையிறே பிராட்டி நீர்மை. [நீலவரையித்யாதி] - ‘‘[illegible]’’: ஓர்அஞ்ஜநகிரி இரண்டு பிறையைக்கவ்விக்கொண்டு நிமிர்ந்தாற்போலே. பிறையில் மறுவோபாதியாய்த்துத் திருவெயிற்றிற்கிடந்த பூமி. [கோலவராகம்] - *மாசுடம்பில் நீர்வாராநின்ற நிலையிறே இவர்க்குஆலத்திவழிக்க விஷயமாய்த்து: ‘‘பாசிதூர்த்துக்கிடந்தபார்மகட்கு’’ என்கிறபடியே ப்ரணயினி அழுக்கோடேயிருக்கத் தாமானபடியே வருவாராகில் ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமாமித்தனையிறே. அவன் அழிவுக்கிட்ட வடிவைப்பற்றியிறே இவர் ஆலத்திவழிக்கிறது. [ஒன்றாய்] - வராஹஸஜாதீய மாத்ரமென்னுதல், த்ரைலோக்யத்தையும் கண்செறியிட்டாற்போலே விம்மவளர்ந்தபடியாலே அத்விதீயமென்னுதல். [நிலந்தோட்டிடைக் கொண்டஎந்தாய்] - ப்ரளயங்கொண்ட பூமியை அண்டபித்தியிலேபுக்குத் திருவெயிற்றிலே கொண்டு உத்தரித்தாற்போலே, ஸம்ஸாரார்ணவங்கொண்ட என்னை எடுத்தவனே! [நீலக்கடல் கடைந்தாய்] - பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக்கடைந்தவனே! [நீலக்கடல்] - கடைகிறவனுடைய நிழலீட்டாலேயாதல்; ஸகலௌஷதிகளையும் பொகடுகையால்வந்த நிறவேறுபாடாதல்: நிறத்தாலே - நீலரத்நத்தைச்சொல்லிற்றாய் தத்ப்ரசுரமான ரத்நாகரமென்னுதல். உன்னைப்பெற்று இனிப்போக்குவனோ? ஸ்ரீபூமிப்பிராட்டியை லபிக்கைக்குப்பண்ணின வ்யாபாரத்தையும் பிராட்டியை லபிக்கைக்குப்பண்ணின வ்யாபாரத்தையும் என்னைப் பெறுகைக்காகப் பண்ணி என்னைக் கிட்டினபின்பு உன்னைப்போகவிடுவேனோ? நீ க்ருஷிபண்ண, பலத்திலே அந்வயித்த நான் கைப்பட்ட ஸம்பத்தை விடக்ஷமனோ?

ஈடு.—ஏழாம்பாட்டு. நான் பெரியபிராட்டியார் பரிக்ரஹமாகையாலே ப்ரளயார்ணவமக்நையான ஸ்ரீபூமிப்பிராட்டியையெடுத்து அவளோடே ஸம்ஶ்லேஷித்தருளினாற்போலவும், கடலைக்கடைந்து பெரிய பிராட்டியாரோடே ஸம்ஶ்லேஷித்தருளினாற்போலவும், ஸம்ஸாரார்ணவமக்நனான என்னை யெடுத்து என்னோடே ஸம்ஶ்லேஷித்தருளி என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணின உன்னைப் பெற்றுவைத்து இனித் தப்பவிடுவேனோ? என்கிறார்.

[சோலமலர்ப்பாவைக்கன்பாகிய என் அன்பேயோ] - † (பிராட்டிபக்கல் ஸ்நேஹாதிஶயத்தாலே அந்த ஸ்நேஹமே ஹேதுவாக அவள் பரிக்ரஹமான என்பக்கலிலே அதிப்ரவணனானவனே!) பட்டர் சரமதஶையிலே யருளிச்செய்தவார்த்தை - † "(ரஹஸ்யத்தின்படியாயிருந்தபடி கண்டதே.) இப்பாட்டை நம்முடையார் த்வயத்தோடே யநுஸந்திப்பது - பெரியபிராட்டியார்க்குஸ்நேஹி யாகையாலே அவள் பரிக்ரஹமான நமக்கு அன்பனும் என்று அநுஸந்திப்பது"என்று‡(சீயரைக்குறித்தருளிச் செய்தார்) "திருமாலென்னையாளுமால்" என்னும்படியே தம்முடையஅன்புக்கடி சொல்லுகிறார். அந்தஃபுர பரிகரமன்றோ, என்னன்புக்கு அடியில்லையோ? [நீலவரையித்யாதி] - ஓர் அஞ்சநகிரி இரண்டுபிறையைக் கவ்வி நிமிர்ந்தாற்போலே. பிறையில் மறுவோபாதியாய்த்து திருவெயிற்றிற்கிடந்த பூமி. [கோலவராகம்] - * மாசுடம்பில் நீர்வாராநின்றநிலையிறே இவர்க்கு ஆலத்திவழிக்க விஷயமாய்த்து; "பாசிதூர்த்துக்கிடந்தபார்மகள்" என்கிறபடியே ப்ரணயிநி அழுக்கோடேயிருக்கத் தாமானபடியே வருவராகில் ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமாமித்தனையிறே. அவனழிவுக்கிட்ட வடிவுக்கிறே இவர் ஆலத்திவழிக்கிறது. [ஒன்

ஏழாம்பாட்டு.—கோலமலர் இத்யாதி. பூம்யுத்தரணத்தையும் ஸமுத்ரமதநத்தையும் அருளிச்செய்கிறவருடைய ஹாவத்தை விசதீகரியாநின்றுகொண்டு, "உன்னைப்பெற்றினிப் போக்குவனோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நான் பெரியபிராட்டியார் இத்யாதி.

வடிவழகையும் போக்யதையையுமுடையளான பிராட்டிக்கு அன்பனானவத்தாலே என்பக்கலிலும் அதிப்ராவண்யத்தை யுடையவனேயென்று ஸப்தார்த்தம். பிராட்டிபக்கல் ஸ்நேஹாதிஶயத்தாலே அவள் பரிக்ரஹமான என்பக்கலிலே அதிப்ரவணனாயிருக்குமென்னுமதுக்கு ஸம்வாதம் - பட்டர் இத்யாதி. த்வயத்தோடே என்றது - த்வயார்த்தத்தோடேயென்றபடி. அநுஸந்திக்கும் ப்ரகாரமேதென்ன-பெரியபிராட்டியார்க்கு இத்யாதி. பெரியபிராட்டியார்க்கு ஸ்நேஹியானது தம்முடைய அன்புக்கடியோ? என்ன - திருமால் என்னை இத்யாதி. என்னையடிமை கொள்ளுகையிலே வ்யாமோஹத்தையுடையவனென்று வ்யாமோஹத்துக்கு அவள் பரிக்ரஹத்தை அடியாகச் சொன்னாற்போலே, இங்கும் அன்புக்கடியாக அத்தையே சொல்லுகிறாரென்றபடி. விவரணம் - அந்தஃபுர இத்யாதி. "மால்" என்று - வ்யாமோஹம். தார்ஷ்டாந்திகத்தில் சொன்ன பூமிக்கு உபமாநமாம் த்ருஷ்டாந்தத்தில் ஸப்தமேதென்ன - பிறையில் இத்யாதி. ஈஶ்வரன் பரிக்ரஹித்ததாகையாலே வந்தகோலமென்னுதல், ப்ரணயித்வகுணத்தால்வந்த கோலமென்னுதல்; மூக்தினத்தை யருளிச்செய்கிறார் - மாசுடம்பில் இத்யாதி. இரண்டாவது - பாசிதூர்த்து இத்யாதி. நாய்ச்சியார் திருமொழி. மாசுடம்பில் - அழுக்குடம்பில். பாசிதூர்த்து - பாசியடைத்து. மூந்தின அர்த்தவிவரணம் - அவனழிவுக்கு இத்யாதி. அழிவுக்கிட்டவடிவுக்கு - தன்மேன்மையை விட்டு நீர்மையைக்கொள்ளுகைக்காகக்கொண்ட வராஹவேஷத்துக்கென்றபடி. ஆலத்திவழிக்கை-ஆலத்தியெடுக்கை: த்ருஷ்டிதோஷபரிஹாரம் பண்ணுகையென்றபடி. "ஒன்றாய்" என்றதுக்கு,

† குண்டலிதமிரண்டும் இருபத்துநாலாயிரமென்கிறார்கள்.
‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்கிறார்கள்.

ருய்] - வராஹஸஜாதீயமாத்ர மென்னுதல்; த்ரைலோக்யத்தையும் கண்செறியிட்டாற் போலே விம்மவளர்ந்தபடியாலே அத்விதீயமென்னுதல் [நிலங்கோட்டிடைக்கொண்ட வெந்தாய்] - ப்ரளயங்கொண்டபூமியை அண்டபித்தியிலேபுக்குத் திருவெயிற்றிலே கொண்டு உத்தரித்தாற்போலே, ஸம்ஸாரார்ணவங்கொண்ட என்னை யெடுத்தவனே! [நீலக்கடல்கடைந்தாய்]-பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக்கடைந்தவனே! [நீலக் கடல்] - கடைகிறவனுடைய நிழலீட்டாலேயாதல்; ஸகலௌஷதிகளையும் போகடுகை யால் வந்த நிறவேறுபாடாதல்; நிறத்தாலே - நீலரத்நத்தைச்சொல்லிற்றாய், தத்ப்ரசுரமான ரத்நாகரமென்னுதல். [உன்னைப்பெற்று இனிப்போக்குவனோ] - ஸ்ரீபூமிப்பிராட்டியை லபிக்கைக்குப் பண்ணினவ்யாபாரத்தையும், பிராட்டியை லபிக்கைக்குப்பண்ணின வ்யாபாரத்தையும், என்னைப்பெறுகைக்காகப்பண்ணி, என்னைக் கிட்டப்பெற்றபின்பு உன்னைப்போகவிடுவேனோ? நீ க்ருஷிபண்ணின பலத்திலே யநுபவித்த நான் கைப்பட்ட ஸம்பத்தை விட க்ஷமனோ? (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

பெற்று இனிப்போக்குவனோ? உன்னை என் தனிப்பேருயிரை
உற்ற இருவினையாய் உயிராய்ப்பயனாயவையாய்
முற்ற இம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றில்புக்கு
முற்றக்கரந்தொளித்தாய் என் முதல்தனிவித்தேயோ!

**ஆ.**—(பெற்றுஇனி.) - புண்யபாபரூபகர்ம தத்பலபோக்த்ருசேதந கர்ம பலபோகோபகரண ப்ரக்ருதி ஸர்வஜகதந்தராத்மபூதனாய், ஸர்வஜகத்காரணமாய், ஸர்வைச்வர்யனாயிருக்கிற இருப்பையுங்கூட எனக்குக்காட்டித் தந்தருளி, எனக்கு தாரகனாயிருந்த உன்னைப் பெற்று இனிவிடுவேனோ? என்கிறார்.

**ஓ.**—எட்டாம்பாட்டில், அத்யந்த துர்ஜ்ஞேயனான உன்னைப் பெற்றுவைத்து இனித்தப்பவிட உபாயமில்லை என்கிறார்.

[பெற்று இனி என்று தொடங்கி] — அத்யந்தவிஸஜாதீயனாயிருந்து எனக்கு மிகவும் ஸத்தாதாரகனான உன்னைப் பெற்றுவைத்து இனித் தப்பவிடுவேனோ? [உற்ற என்று தொடங்கி] - ஆத்மாவைப்பற்றி விடாதேயிருக்கிற புண்யபாபரூப கர்மங்களை யும் ஆத்மாத் தன்னையும் கர்மபலமானவற்றையும் இவையெல்லாமாகிற துர்ஜ்ஞேய

---

முந்தினது - அல்பத்திலே; இரண்டாவது - மஹத்த்வத்திலே. கண்செறியிட்டாற்போலே - மறைத்தாற்போலே. விம்மவளர்ந்த - அதிகமாக வளர்ந்த. 'ப்ரளயார்ணவமக்நையான' - இத்யாத் யவதாரிகாவாக்யத்திற் சொன்ன பாவத்தை இங்கே விசதீகரிக்கிறார் - ப்ரளயங்கொண்ட இத் யாதி. 'திருப்பாற்கடலையன்றோ கடைந்தது? "நீலக்கடல்" என்கிறதென்?' என்ன,—த்ரேதா பரி ஹரிக்கிறார் - கடைகிறவனுடைய இத்யாதி. "எந்தாய்" என்றத்தை - "நீலக்கடல்கடைந்த - எந் தாய்" என்று மேலிற்பதத்திலும் கூட்டி பாவம் - ஸ்ரீபூமி இத்யாதி. "பெற்றினிப்போக்குவனோ" என்றதுக்கு பாவம் - நீ க்ருஷி இத்யாதி. (எ)

ஸ்வபாவமான த்ரைலோக்யமாகிற தூற்றையுண்டாக்கி அந்த துர்ஜ்ஞேய ஸ்வபாவமான ஜகத்திலுள்ளேபுக்கு எங்கும் வ்யாபித்துத் தெரியாதபடி நின்றாய். [என்முதல் தனிவித்தேயோ] - எனக்கு முதலிலே இச்சையுமின்றிக்கேயிருக்க உன்பக்கலிலே ஔந்முக்யத்தைப் பிறப்பித்தவனே!

ப —அநந்தரம், ஶரீரவஶமனும்படி ஸர்வாந்தராத்மாவாய் எனக்கு தாரகனான உன்னைப் பெற்றுவைத்துக் கைவிடுவேனோவென்கிறார்.

உற்ற, † இருவினை ஆய் - இரண்டுவகைப்பட்ட புண்யபாபரூபகர்மங்களுக்கு நிர்வாஹகனாய், உயிர் ஆய் - (கர்மவஶ்யனான ஆத்மாவுக்கு) நியந்தாவாய், அவையாய்ப் பயன் ஆயவை ஆ - அந்தக் கர்மங்களாலுண்டான ஸுகது:க்கங்களுக்கு ப்ரதாதாவாய்க் கொண்டு, இம்மூவுலகும்-இந்தஜகத்த்ரயம், முற்ற-எல்லாமாகிற, பெருந்தூறு ஆய்-பெரிய தூற்றை ப்ரகாரமாகவுடையையாய், தூற்றிற்புக்கு - (கர்மநிபந்தநமாக ப்ரவேஶித்தார்க்கு புறப்படவழியில்லாத)பெருந்தூற்றிலே (ஸ்வஸங்கல்பத்தாலே ஸ்வதந்த்ரனாய்)ப்ரவேசித்து, முற்றக்கரந்து-ஒருப்ரகாரத்தாலும் அறியவொண்ணாதபடி, ஒளித்தாய்-(ஸூக்ஷ்மரூபனாய்க்கொண்டு)மறைந்து நிற்குமவனாய், என்-எனக்கு(உன்னைக்கிட்டுகைக்கு) முதல் தனிவித்தேயோ-ப்ரதமஸுக்ருதமான அத்விதீயகாரணமானவனே! உன்னை -(எனக்குநிருபமாய் அபரிச்சிந்நமான ப்ராணநாதனாயிருக்கிற) உன்னை, பெற்று - கைபுகரப்பெற்று வைத்து, இனி - உன்னைவிடில் முடியும்படியான அவஸ்தை பிறந்தபின்பு, போக்குவனோ - விடவிரகுண்டோ? ‘ஓ’ என்கிற அசை - ‘விடில்செய்வதென்?’ என்கிற விஷாதத்தைக் காட்டுகிறது.

இ.—எட்டாம்பாட்டில், மிகவும் துர்ஜ்ஞேயனான உன்னைப் பெற்றுவைத்து இனிவிட உபாயமில்லை என்கிறார்.

[பெற்றுஇனிப் போக்குவனோ இத்யாதி] - ஓர்அச்சில்லாக்காசாய்ப் போய்த்தாகில் போகிறதென்றிருக்கிறேனோ? ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் எனக்கு ஸத்தாஹேதுவான உன்னைப் பெற்றுவைத்து நான் விடுவேனோ? ஸர்வஜ்ஞனாய் ஸ்வதந்த்ரனாயிருக்கிறவனை விடுவேனோ என்கிறதுக்கு ஹேது—தன்னையொழிய ஜீவிக்கமாட்டாமை தோற்றவிருந்தால் அவன் கால்வாங்கமாட்டானென்னுமத்தாலே. இத்தலையில் *நத்யஜேயமிருக்கிறபடி. [என்தனிப்பேருயிரை] - “உன்னை” என்றதின் வ்யாக்யாநம்: உபமானரஹிதனாய், விபுவாய், எனக்கு தாரகனாயிருக்கிறவனை. சேதநனிற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. [உற்றவிருவினையாய்] - இவ்வாத்மாவோடு பிரிக்கவொண்ணாதபடி கலந்து, இருவகைப்பட்ட புண்யபாபங்களுக்கு நியாமகனாய். [உயிராய்] - அவற்றிலே சிறைப்பட்டுக்கிடக்கிற ஆத்மாவுக்கு நியாமகனாய். [பயனாயவையாய்] - அந்தப் புண்யபாபங்களுடைய ஃபலங்களுக்கு நிர்வாஹகனாய். [முற்ற இம்மூவுலகும் இத்யாதி] - இவையெல்லாமாகிற த்ரைலோக்யமென்கிற தூற்றை உண்டாக்கி. பெருந்தூறென்கிறது - துர்ஜ்ஞேய ஸ்வபாவமுண்டாகையாலே, இந்தலோகத்தினுள்ளேபுக்கு எங்கும் வ்யாபித்து துர்ஜ்ஞேய ஸ்வபாவனாயிருந்தாய்! [என்முதல் தனி வித்தேயோ] - இப்படியிருந்துவைத்து உன்னை எனக்குப் பெறுகைக்கடியான அத்விதீயமான மூலஸுக்ருதத்துக்கு உத்பாதகனாய் உன்பக்கலிலே ஔந்முக்யத்தைப் பிறப்பித்தவனே! இப்படிப்பட்டிருக்கிற உன்னை ப்ரதமஸுக்ருதத்துக்கும் உத்பாதகனாய்க்கொண்டு வந்து தரப்பெற்ற நான் உன்னைப் போக்குவனோ?

†. இங்கு க்ரந்தபாதமேற் பட்டிருக்கின்றது.

௮.—எட்டாம்பாட்டு. அத்யந்த துர்ஜ்ஞேயனான உன்னைப் பெற்றுவைத்து இனிவிட உபாயமில்லையென்கிறார்.

[பெற்றினிப்போக்குவனோவுன்னை] - ஓர் அச்சில்லாக்காசாய்ப் போய்த்தாகில் போகிறதென்றிருக்கிறேனோ? அத்யந்தவிஸஜாதீயனாயிருந்த எனக்கு மிகவும் யாரகனான உன்னைப்பெற்றுவைத்து இனிவிடுவேனோ? [உன்னை] - உன்னை நீயறியாயோ? [என் தனிப்பேருயிரை] - † (உபமாநரஹிதனாய், விபுவாய், எனக்குயாரகனாயிருக்கிறவனை)- "வரில்போகடேன், கெடில்தேடேன்" என்றிருக்கிற ஆத்மாவினளவோ? "உன்னை" என்கிறத்தை உபபாதிக்கிறது மேல். 'உலகங்கட்கெல்லாமோருயிரேயோ" என்கிற படியே - ஸர்வாத்மாவானஉன்னை. "பெற்றினிப்போக்குவனோ" என்கிறது - இதர லாஹங்களில் வ்யாவ்ருத்தி; "என்தனிப்பேருயிரை" என்கிறது-தம்மில் வ்யாவ்ருத்தி. [உற்ற இருவினையாய்] - உன்னை யொழிய வேறுசில கர்மங்களை ஸ்வதந்த்ரமாக நினைத்திருந்தேனாகிலன்றோ உன்னைவிடலாவது? ஆத்மாவைப்பற்றிவிடாதே கிடக்கிற புண்யபாபரூபகர்மங்களுக்கு நிர்வாஹகனாய். [உயிராய்] - அநுஷ்டாதாதான் உன்னையீநமன்றாகிலன்றோ உன்னைவிடலாவது? அநுஷ்டாதாவான ஆத்மாவுக்கு நிர்வாஹகனாய். [பயனாயவையாய்] - கர்மபலம் உன்னையொழிய ஸித்திக்குமென்றிருந்தேனாகிலன்றோ விடலாவது? அக்கர்மபலத்துக்கு நிர்வாஹகனாய். [முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்] - †(இவையெல்லாமாகிற த்ரைலோக்யமாகிற தூற்றையுண்டாக்கி) த்யாஜ்யமான ஸம்ஸாரந்தான் உன்னை யொழிய வேறென்று நினைத்திருந்தேனாகிலன்றோ விடலாவது? பெருந்தூறென்கிறது - ஸம்ஸாரம் புக்கவிடமும் போந்தவிடமும் தெரியப்போகாதேயிருக்குமென்று. ‡ (அதாவது - துர்ஜ்ஞேயஸ்வபாவமாயிருக்கை.) [தூறாய்]—ஸம்ஸாரத்தை உண்டாக்கி. [தூற்றில்புக்கு] - இதினுள்ளே புக்கு. [முற்றக்கரந்து] - நீ வ்யாபியாததோரிடம் உண்டாகிலன்றோ விட-

எட்டாம்பாட்டு.—பெற்றினி இத்யாதி. "முற்றக்கரந்தொளித்தாய் - பெற்றினிப் போக்குவனோ" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - அத்யந்த இத்யாதி.

"உன்னை" என்று - விலக்ஷணனான வுன்னையென்னுதல், துர்ஜ்ஞேயனானவுன்னையென்னுதல்; முந்தினத்தைக் காட்டுகிறார் - ஓர்அச்சில்லா இத்யாதி. இரண்டாவது - மேலே 'உன்னைநீயறியாயோ' என்றதிலே கண்டுகொள்வது. அச்சில்லாக்காசு - முத்ரையில்லாதகாசு. "உற்றவிருவினையாய்" என்றுதொடங்கி "முதற்றனிவித்தேயோ - என்தனிப்பேருயிரை - உன்னைப் பெற்றுவைத்து, இனிப்போக்குவனோ" என்று அந்வயமுகேநபாவம் - அத்யந்தவிஸஜாதீயனாய் இத்யாதி. "பேருயிர்" என்றதுக்கு பாவம் - வரில்போகடேன் இத்யாதி. ஆத்மாவுக்கும் ஆத்மாவென்றபடி. உபபாதிக்கிறது மேல் என்றது - "என்தனிப்பேருயிரை" என்றுதொடங்கி மேலென்றபடி. "தனி" என்றதுக்கு பாவம் - உலகங்கட்கெல்லாம் இத்யாதி. இதரலாபங்களில் என்றது - த்விவிதமான ஐஸ்வர்ய லாபத்தை. தம்மில் என்றது - கைவல்யத்திலென்றபடி. "உற்றவிருவினையாய்" என்றதுக்கு பாவம் - உன்னையொழிய இத்யாதி. உற்ற - உற்றிருக்கிற. "உயிராய்" என்றதுக்கு பாவம் - அநுஷ்டாதா இத்யாதி. இதுக்கு பாவம் - கர்மபலம் இத்யாதி. பயனாயவையாய் - அந்தப்பயனாயென்றபடி. பயன் - பலம். அக்கர்மபலத்துக்கு - புண்யபாபரூபகர்மத்தினுடைய அந்த பலத்துக்கென்றபடி. முற்றவுமான இம்மூவுலகுமென்கிற பெருந் தூற்றையுண்டாக்கி என்று பாவார்த்தம். தூறாய் - தூற்றையுண்டாக்கி. "ஆய்" என்றது - ஆக்கியென்றபடி. தாத்பர்யம் - த்யாஜ்யமான இத்யாதி. ஸம்ஸாரமென்னாதே, "பெருந்தூறு" என்கிறதென்? என்ன - பெருந்தூறென்கிறது இத்யாதி. தூற்றில்புக்கு - ஸம்ஸாரத்திலேபுக்கு. முற்றக்கரந்து - எங்கும் வ்யாபித்து. ஒளித்தாய் - துர்ஜ்ஞேய ஸ்வபாவனாயிருந்தாயென்று பாவார்த்தம்.

† குண்டலிதம் இருபத்துநாலாரயிமென்கிறார்கள். ‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்கிறார்கள்.

லாவது? [ஒளித்தாய்] - ''யமாத்மா ந வேத'' (யமாத்மாநவேத) என்கிறபடியே வ்யாப்யங்களறியாதபடி நின்றாய். கண்ணுக்குவிஷயமானாயாகில் பிழையேனோ? [என்முதல் தனிவித்தேயோ] - அல்லாதார்க்கு வெளியிடாதேயிருந்து எனக்கு வெளியிட்டவனே! [முதல் தனிவித்தேயோ] - நான் ஓரடிவரநின்றேனாகில் ஆறியிருக்கலாய்த்திறே. எனக்கு ப்ரதம ஸுக்ருதமானவனே! (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

முதல்தனிவித்தேயோ! முழுமூவுலகாதிக்கெல்லாம்
முதல்தனிஉன்னையுன்னை எனைநாள்வந்துகூடுவன்†நான்
முதல்தனி அங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவிலீயோ!

ஆ.—(முதல்தனி.) - நான் ஜம்ஸாரானாயிருக்கிற இருப்பைக் கண்டீராகில் இனி மற்றபேக்ஷிதமென்னென்னில்;—எனக்கு அதுவேவபமையாது; நீ ஜமஹாகாரனாயிருக்கிறவிருப்பன்றியே, இவற்றோடு ஒருகலப்பின்றியே திருநாட்டிலே நீயாயிருக்குமிருப்பைக் காணவேணு மென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், நான் ஜமச்சரீரனாயிருக்கிறஇருப்பை உமக்குக் காட்டக்கண்டீராகில் வேறு அபேக்ஷிதமென்னென்னில்,—எனக்கு அத்தால் போராது; திருநாட்டிலே வ்யாவ்ருத்தமாகப் பரிபூர்ணனாயிருக்கிற இருப்பையும் காணவேணு மென்கிறார்.

[முதல்தனியென்று தொடங்கி] - மூவுலகு தொடக்கமானவற்றுக்கு ஒன்றொழியாமே எல்லாவற்றுக்கும் காரணமானவனே! ப்ரதானனாய் ஒப்பின்றிக்கே ஸஹகாரி நிமித்தாதிகளால் பரிபூர்ணனான உன்னை, நான் என்று வந்துகூடுவேன்? [முதல் தனியென்று தொடங்கி]-மஹதாதி விகாரங்களுக்கு ஒப்பில்லாத காரணமாய்க் கார்யங்களெங்கும்முற்றும்வ்யாபித்துச்சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கிடான நிலமாயுள்ள ப்ரக்ருதிதத்த்வத்துக்கு ஆத்மாவாய், தனக்கொப்பின்றிக்கே நியாமகமாய், ப்ரக்ருதி ப்ராக்ருதங்களையுடைய பத்துதிக்கும் வ்யாபித்து அபரிச்சேத்யமாயுள்ள ஆத்மதத்த்வத்துக்கு நிர்வாஹகனானவனே!

ப.—அநந்தரம்; காரணகார்யோபயாவஸ்த்தமான ஸகல சேதநாசேதநங்களுக்கும் ப்ரகாரித்வாதிகளாலே ப்ரதானனாய், தத்வ்யாவ்ருத்தமான விலக்ஷணஸ்வரூப குணாதிகளையுடைய உன்னை என்றுவந்து கிட்டக்கடவேனென்கிறார்.

---

இத்தால் பாவம் - கண்ணுக்கு இத்யாதி. ''என்'' என்றதுக்குபாவம் - அல்லாதார்க்கு இத்யாதி. தனி - அத்விதீயமான, முதல்வித்துண்டு - ப்ரதமஸுக்ருதம், அதிக்குக்காரணமானவனே என்று பதார்த்தம். 'உற்றவிருவினையாய்' என்று தொடங்கி, 'முதல்தனிவித்தேயோ - என்தனிப்பேருயிரான - உன்னை - பெற்று இனிப்போக்குவனோ' இத்யந்வயம். (அ)

---

† 'யான்' என்றும் பாடம்,

முழுவுலகு ஆதிக்குஎல்லாம் - அவிகல்பூர்ணமான ஜகத்த்ரயம் முதலான ஸமஸ்தவஸ்துக்களுக்கும், முதல் - ப்ரதாநமான நிமித்தகாரணமாய், தனிவித்தே யோ-(ஸஹகாரிநிரபேக்ஷமாய்) அத்விதீயகாரணமான உபாதாநமாய், அங்கும்இங்கும்-(கார்யபூதமான ஜகத்தில்) அண்டாத்பஹிர்பூதமாயும் அந்தர்க்கதமாயுமிருக்கிற, முழுமுற்றுறு - பூர்ணமான ஸமஸ்தபதார்த்தங்களையும் வ்யாபித்து, முதல்தனி-அத்விதீய காரணமாய், வாழ் - (போகமோக்ஷங்களாகிற) வாழ்ச்சிக்குவிளைநிலமான, பாழ்ஆய் - மூலப்ரக்ருதிக்கு நியாமகனாய், முதல்-(ப்ரக்ருதிப்ராக்ருத நியந்த்ருத்வத்தாலே) ப்ரதாநமாய், தனி - (அசித்ஸ்வபாவ வ்யாவ்ருத்தியாலே) நிருபமமாய், சூழ்ந்து அகன்று- (தர்மபூதஜ்ஞாநமுகத்தாலே)வ்யாப்தமாய்க்கொண்டு, ஆழ்ந்து உயர்ந்த—பத்துத்திக்கிலுமுண்டாய், முடிவிலீயோ - (நித்யமான ஆத்மவர்க்கத்துக்கு) நியந்தாவானவனே! முதல் - இப்படி ஸர்வப்ரதாநனாகக்கொண்டு, தனி - நிருபமமான, உன்னை -, உன்னை - (அந்த ஜகதாகாரத்திலன்றியே அத்யந்தவ்யாவ்ருத்தமான விலக்ஷணஸ்வரூபகுண விசிஷ்டனாய்க்கொண்டிருக்கிற) உன்னை, நான் - (ப்ராபித்தநுபவிக்கப்பெறாமையாலே பெருவிடாய்ப்பட்டிருக்கிற) நான், எனைநாள் - எந்நாள், வந்துகூடுவன் - வந்துகூடக்கடவேன்?

இ.—ஒன்பதாம்பாட்டில், ஜகத்துக்கெல்லாம் சரீரியாயிருக்கிறஇருப்பைக் காட்டியருளக் கண்டேன்; அத்தால்போராது; பரமபதத்திலே வ்யாவ்ருத்தமாக, பூர்ணனாயிருக்கிறஇருப்பைக் காணவேணுமென்கிறார்.

[முதல்தனி இத்யாதி] - ஒன்றொழியாதபடி த்ரைலோக்யம் தொடக்கமானவற்றுக்கெல்லாம் த்ரிவிதகாரணமுமானவனே! [முதல்] - நிமித்தகாரணம். [தனி] - ஸஹகாரிகாரணம். [வித்து] - உபாதாந காரணம். [முதல் தனியுன்னை] - இதுக்கெல்லாம் ப்ரதாநனாய் உபமானரஹிதனாயிருந்துள்ள உன்னை. [உன்னை] - ஜகத்காரணமாய் ப்ரதாநனாய் உபமானரஹிதனாயிருக்குமளவன்றியே, நித்யவிபூதியிலே அஸாதாரணவிக்ரஹயுக்தனாய் ஸமஸ்த கல்யாணகுணயுக்தனாய் நித்யஸூரிகள் அநுபவிக்கவிருக்கிற உன்னை. [எனைநாள் வந்துகூடுவன்] - என்றுவந்து கூடக்கடவேன்? அத்திரளில்நின்றும் பிறிகதிர்ப்பட்டுப் போந்தாரைப்போலேயிருக்கிறதாய்த்து இவர்க்கு யோக்யதையாலே. [முதல் தனியங்குமிங்கும் இத்யாதி] - ப்ரதாநமாய் உபமாநரஹிதமாய் அங்கும்இங்குமான மஹாபூதங்கள் முழுதிலும். [முற்று] - எங்கும். [உறு] - உற்று. விகாரங்களுக்கெல்லாம் அத்விதீயமான காரணமாய் அவைதன்னை எங்கும் வ்யாபித்து. [வாழ்பாழாய்] - சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கீடான நிலமாயுள்ள ப்ரக்ருதி தத்த்வத்துக்கு ஆத்மாவாய். [முதல்தனி சூழ்ந்து இத்யாதி] - ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்கு நியாமகமாய் ப்ரதாநமாய் ஒப்பின்றிக்கே இவற்றையடையப் பத்துத்திக்கும் ஜ்ஞாநத்தாலே வ்யாபித்து நித்யமாயிருந்துள்ள ஆத்மவஸ்துவுக்கு நிர்வாஹகனானவனே! [முதல் தனியங்குமிங்கும் முழுமுற்றுறு வாழ்பாழாய்] - முழுவுலகாதிக்கெல்லாம் முதல்தனிவித்தாய் - முதல்தனி சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலியாயிருக்கிற. [முதல்தனி உன்னை யுன்னையெனைநாள்வந்து கூடுவன்நான்] - கார்யகாரணோபயாவஸ்தமான சிதசித்துக்களுக்கு நிர்வாஹகனாயிருக்கிற இருப்பைக்காட்டி அநுபவிப்பித்த இவ்வளவு போராது. அஸாதாரண விக்ரஹயுக்தனாய் ஒருதேசவிசேஷத்திலேயிருக்கும் இருப்பை அநுபவிக்கவேணுமென்றதாய்த்து.

ஈடு.— ஒன்பதாம்பாட்டு. "''தாநிஸவ-ூாணிதஜூவ-ூ:''(தாநிஸர்வாணி தத்வபுः) "யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம்" (யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம்) "தத்ஸர்வம்வைஹரேஸ்தநு:"(தத்ஸர்வம்வைஹரேஸ்தநுः) என்னும்படியே – எங்கும்வந்து முகங்காட்டலாம்படி ஐஶ்வர்யஸரீரனாயிருக்கிற இருப்பைக் காட்டித்தந்தோமிறே''. என்ன,—அது உகந்தார்க்கும் உகவாதார்க்கும் பொதுவாயிருந்தது; ஆகாராந்தர மில்லையாகி லன்றோ "அதுவேயமையும்''என்று ஆறியிருக்கலாவது? திருநாட்டிலே வ்யாவ்ருத்தமாகப் பரிபூர்ணமாயிருக்கிற இருப்பைக் காணவேணு மென்கிறார்.

[முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம்] - ரக்ஷிக்கவேன்றுபுக்கால் ரக்ஷ்யவர்க்கம் ஸஹகரிக்கவேண்டாதவனே ! மூவுலகு தொடக்கமான ஒன்றொழியாமல் எல்லாவற்றுக்கும் த்ரிவிதகாரணமுமானவனே. [முதல்]-நிமித்த காரணம். [தனி]-ஸஹகாரிகாரணம். [வித்து]-உபாதாநகாரணம். [முதல்தனிஇத்யாதி] - ப்ரதாநனாய்,ஒப்பின்றிக்கே - குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணனாயிருந்த நீயான வுன்னை,என்று வந்து கூடுவன்? [எனைநாள்வந்துகூடுவேன்]-அவன்கொடுத்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபத்தையுணர்ந்தார்க்கு, தன்னைப் பிராட்டிமாரோபாதியாகப் பேசலாயிருக்கிறபடி. [நான்] - பரமபதத்தில் சுவடறிந்தநான்: அஸாதாரணவிக்ரஹமாசைப்பட்ட நான். [முதல் தனியங்கும்மிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்] - ப்ரதாநமாய், உபமாநரஹிதமாய், அங்குமிங்குமான மஹதாதிகள் முழுதிலும். [முற்று] - எங்கும். [உறு] - உற்று; எங்குமொக்க வ்யாபித்து. [வாழ்பாழாய்] - சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைக்குமதாகை.

† (ஒன்பதாம்பாட்டு) - இன்னம், "''தாநிஸவ-ூாணிதஜூவ-ூ:'' (தாநிஸர்வாணிதத்வபுः) 'யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம்' (யஸ்யாத்மாஶரீரம்-யஸ்யப்ருதிவீஶரீரம்) 'தத்ஸர்வம்வைஹரேஸ்தநு:'(தத்ஸர்வம்வைஹரேஸ்தநுः) என்னும்படியே - எங்கும்வந்துமுகங்காட்டலாம்படி ஐஶ்வர்யஸரீரனாயிருக்கிறவிருப்பைக் காட்டித்தந்தோமிறே'' என்ன; அது உகந்தார்க்கும் உகவாதார்க்கும் பொதுவாயிருந்தது: ஆகாராந்தரமில்லையாகிலன்றோ "அதுவேயமையும்'' என்றாறியிருக்கலாவது? திருநாட்டிலே வ்யாவ்ருத்தமாகப்பரிபூர்ணமாகஇருக்கிற விருப்பையும் காணவேணுமென்கிறார்.

ஒன்பதாம்பாட்டு.—முதல்தனி இத்யாதி. "முதல்தனியங்குமிங்கும்'' என்று தொடங்கி, "முதல்தனியுன்னைக்கண்டேன், உன்னை எனைநாள்வந்து கூடுவன்நான்'' என்றவற்றைக் கடாக்ஷித்து, உத்தர ப்ரத்யுத்தர ரூபேணவதாரிகை - தாநிஸர்வாணி இத்யாதி. இப்ப்ரமாணங்களெல்லாம முதற்பாட்டிலே விகிதங்கள். காட்டித்தந்தோமிறேயென்னவென்றது-இப்பாட்டுத் தன்னைப் பற்ற. ஆகாராந்தரம் - அஸாதாரணவிக்ரஹம்.

ஸலிதம் - ரக்ஷிக்கவேன்று இத்யாதி. "மூவுலகாதி - முழுதுக்கு - எல்லாம்'' என்றந்வயிப்பது. "த்ரிவிதகாரணமுமானவனே'' என்றதின விவரணம் - முதல் - நிமித்தகாரணம் இத்யாதி. "ஒப்பின்றிக்கே'' என்றத்தை விவரிக்கிறார் - குணவிபூத்யாதிகளால் இத்யாதி. "உன்னையுன்னை'' என்கிறவீப்ஸைக்கர்த்தம் - நீயானவுன்னையென்று. சேருவன் என்னாதே, "கூடுவன்'' என்றதுக்கு பாவம் - அவன்கொடுத்த இத்யாதி. கூடுகை - ஸம்ஶ்லேஷிக்கை. விவரணம் - அஸாதாரண இத்யாதி. அர்த்தாந்தரமாதல். அங்குமிங்குமான - கார்யகாரணாவஸ்த்தமான. 'மஹதாதிகள்' என்றவிடத்தில், ஆதிஶப்தத்தாலே - அஹங்காராதி கார்யங்களைச்சொல்லுகிறது. "முற்று, உறு'' என்ற பதத்வயத்தையும்கூட்டி அர்த்தம் - எங்குமொக்க வ்யாபித்துஎன்று. வாழ்பாழாய் - போகமோக்ஷங்களாகிற வாழ்ச்சிக்கு விளைநிலமான மூலப்ரக்ருதிக்கு ஆத்மாவானவனேயென்று ஶப்தார்த்தம்.

† சீயாரும் பதத்திற்கு இந்தக்குண்டலிதம் பாடம்இல்லை யென்றுதோன்றுகின்றது: அடையவளைந்தானரும்பதத்துக்குப்பாடம் உண்டு.

[முதல்தனிவித்தேயோ] - முதல் - நிமித்தகாரணம் - தனி - ஸஹகாரி காரணம். வித்து - உபாதாநகாரணம். [முழுமூவுலகாதிக்கெல்லாம்] - மூவுலகென் கையாலே - * "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்" என்று மூன்று வகைப் பட்ட அண்டத்தைச் சொல்லுகிறது; முழுவென்கையாலே - "அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச | ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடிகோடிஶதாநிச" (அண்டாநாந்துஸஹஸ்ராணும் ஸஹஸ்ராண்யயுதாநிச - ஈத்ருஶாநாந்ததாதத்ரகோடிகோடிஶதாநிச) என்றுசொல்லப்பட்ட அஸங்க்யாதமான அண்டங்களைச்சொல்லுகிறது; * ஆதிசப்தத்தாலே - இவ்வண்டங்களுக்குக் காரணமான ஆவரணங்களைச் சொல்லிற்று. ஆக, மூவுலகுதொடக்கமான ஒன்றொழியாம லெல்லாவற்றுக்கும் த்ரிவிதகாரணமுமானவனே! என்றது. [முதல் இத்யாதி] - ப்ரதாநனாய், ஒப்பின்றிக்கே - குணவிக்ரஹாத்யாதிகளால் பரிபூர்ணனாய், ஜகச்சரீரியாயிருக்கிற உன்னை ஆக, இவ்வளவும் - லீலாவிபூதிவிஶிஷ்டனாயிருக்கிற விருப்பைச் சொலிற்று; மேல் - நித்யவிபூதியிலே ஸுஶிலோக்யமாயிருக்கும் வடிவழகைக் கண்டநுபவிக்கவேணு மென்கிறார். [உன்னை] - நித்யவிபூதியோகத்தைச் சொல்லுகிறது. "உன்னை" என்ன, நித்யவிபூதியோகத்தைக்காட்டுமோவென்னில்,—காட்டும்; "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக் - கண்டசதிர்" என்கிறபடியே - அவனையும் அவளையும் சொல்லவே த்ரிபாத்விபூதியுமடங்கிற்றிறே. [உன்னை] - "முடிச்சோதியா யுனதுமுகச்சோதி மலர்ந்ததுவோ" என்று விகல்பிக்கலாம்படியிருக்கிற திருவபிஷேகமும், "மாயன்குழல்" என்னும்படியான திருக்குழலும், "கோளிமைத்தாமரையும் கொடியும் பவளமும்வில்லும் - கோளிழைத்தண்முத்தமும் தளிரும் குளிர்வான்பிறையும் - கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல்" என்னும்படியான அழகியதிருமுகமும், நாய்ச்சிமாருடைய

---

மத்யே ஒரு ஸ்ரீவைஷ்ணவரெழுந்தருள, புகஸ்சவருளிச்செய்கிறார் - இன்னம் இத்யாதி. 'மூவுலகுதொடக்கமான வொன்றொழியாமலெல்லாவற்றிற்கும்' என்று ஸாமாந்யேந சொன்னத்தை இங்கே நன்றாக விவரிக்கிறார் - மூவுலகென்கையாலே இத்யாதி. "ஏதத்க்ருதகமேதேத்ருபவாஸிலோகே | ஜநஸ்தபஸ்ஸத்யமிதி த்ரிகமக்ருதகம் ஸ்ம்ருதம் | க்ருதகாக்ருதயோர்மத்யே மஹர்லோக இதிஸ்ம்ருதஃ | ஶூந்யோ பவதி கல்பாந்தே யோ(அ)த்யந்தம் ந விநஶ்யதி". தத்ரைவ, "அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச | ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடிகோடிஶதாநிச" இதி த்விதீயேம்ஶே (எ-உ-எ) 'ஹேதவோ ஹேத்ராண்டு' என்றிருக்கையாலே - 'இவ்வண்டங்களுக்குக்காரணமான' என்கிறார். ஆவரணங்களாவன- "வாரிவஹ்ந்யநிலாகாஶைஸ்ததோ பூதாதிநா பஹிஃ | வ்ருதம் தஶகுணைரண்டம் பூதாதிர்மஹதா ததா | மஹாந்தஞ்ச ஸமேதந்து ப்ரதாநம் ஸமவஸ்திதம்" என்றவை. முந்தினயோஜனையில், "உன்னையுன்னை" என்றது - 'நீயான வுன்னை' என்றபடி; இரண்டாம்யோஜனையில், "உன்னை -" ஜகச்சரீரியானவுன்னை. கண்டேனென்று - அத்யாஹார்யம். உன்னை - அஸாதாரண திவ்யவிக்ரஹவிசிஷ்டனான வுன்னை, எனை நாள்வந்து கூடுவனென்றபடி. காட்டுகைக்குஹேது - நித்யவிபூதியெல்லாம் இருவருடையவும் அபிமாநாந்தர்ப்பூதமாகையென்கிறார் - ஒண்டொடியாள் இத்யாதி. ஆக, "உன்னை" என்று - ஸாதாரணவிக்ரஹவிசிஷ்டதையையும், இரண்டாம் "உன்னை" என்றது - அஸாதாரண விக்ரஹ விசிஷ்டதையையும் சொல்லுகிறது. நிரூபகமாகையாலே "உன்னை" என்கிறபதத்தில் விவக்ஷிதமான விக்ரஹவைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் - முடிச்சோதி இத்யாதி. 'குழலும்' என்றவிடத்திலே - "அநந்தஸ்நிக்தஶிரநிதிதம்" இத்யாதியும், 'நாய்ச்சிமாருடைய' இத்யாதிவாக்யத்

ஹஸ்தாஹரணங்களாலே முத்ரிதமாய் * க்ரமுகதருணக்ரீவா கம்பு ப்ரதிமமான திருக்கழுத்தும், * கற்பகக்காவனநற்பலதோள்களும், பெரியபிராட்டியார்க்குக் கோயிற்கட்டணமாய் நித்யாநுபவம்பண்ணச்செய்தேயும் ''அகலகில்லேன்'' என்னும்படி அவளேப்பிச்சேற்றும்படி * குருமாமணிப்பூண்குலாவித்திகழும்திருமார்வும், ''உள்ளத்துணின்றுலாகின்றதே'' என்கிறபடியே-நித்யமுக்தர் ஹ்ருதயங்களிலே அழகுசெண்டேறுகிற * திருவுதரபந்தமும், ஸௌந்தர்யஸாகரமிட்டளப்பட்டுச்சுழித்தாற்போலேயிருக்கிற திருவுந்தியும், ஒருவிசேஷணமிடவொண்ணுதே ''அல்குலும்'' என்னும்படியிருக்கிற அல்குலும், சிற்றிடையும், ஸந்த்யாராகரஞ்சிதமான ஆகாசம்போலே யிருக்கத் திருவரைபூத்தாற்போலேயிருக்கிற * அந்திபோல்நிறத்தாடையும், * ரம்பாஸ்தம்பாதிசம்ஹீரமான திருத்துடைகளும், தாமரைநாளம்போலே கண்டகிதங்களான திருக்கணைக்கால்களும், * சங்கரயுதாங்ககல்பகயுக் வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சநமாய் காய்ச்சினபறவைக் கூசித்தொடவேண்டும்படி மெல்லடியாய் ''தேனேமலரும்'' என்கிறபடியே நிரதிசயபோக்யங்களான திருவடிகளையும் உடையையாய். * ஏழுலகும்தனிக்கோல்செல்லவீற்றிருந்தருளுகிற உன்னை. [எனைநாள்வந்து கூடுவேன்] - என்று வந்துகிட்டக்கடவேன்? * மயர்வறமதிநலமருளப்பெற்றவராகையாலே பிராட்டிமாரோபாதியாகப் பேசலாயிருக்கிறபடி. [நான்] - அவ்வடிவைக்காண ஆசைப்பட்ட நான். [முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்] - ப்ரதாநமாய், உபமாநரஹிதமாய், அங்குமிங்குமான மஹதாதிகள் முழுதிலும், [முற்று] - முற்றும். எங்குமென்றபடி. [உறு] - உற்று; வ்யாபித்து. [வாழ்பாழாய்] - சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக் கீடாகக் கருநிலமாயுள்ள ப்ரக்ருதிதத்த்வத்துக்கு ஆத்மாவாய். [முதல் இத்யாதி] - ப்ரக்ருதியைப்பற்றத் தான் ப்ரதாநமாய் நியாமகமாய். [தனி] - உபமாநரஹிதமாய். [சூழ்ந்து] - ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுடைய வ்யாபித்து. வ்யாபிக்குமிடத்தில், [அகன்றாழ்ந்துயர்ந்த] - ஜ்ஞாநத்தாலே பத்துத்திக்கும் வ்யாபித்த. [முடிவிலீயோ] - அபரிச்சேத்யமான ஆத்மதத்த்வத்துக்கு நிர்வாஹகனானவனே! [முடிவிலீ] - முடிவென்று - நாசமாய், ப்ரக்ருதிபோலே நச்வரமன்றிக்கே நித்யமான ஆத்மதத்த்வமென்றுமாம். முதல்தனி அங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் - முழுமுவுலகாதிக்கெல்லாம் - முதல்தனிவித்தாய் - முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவி

---

திலே - ''ரஜதாசலாபம்'' இத்யாதியும், 'கோயிற்கட்டணம்' என்றவிடத்திலே - ''ஐயஜ ஸஸிந்து ஸமுத்திதா த்வம்'' இத்யாதியும், 'ஸௌந்தர்யஸாகரம்' இத்யாதிவாக்யத்திலே - ''லாவண்யாம்ருதஸிந்தோ'' இத்யாதியும், 'ஸந்த்யாராகரஞ்சிதமான' இத்யாதிவாக்யத்திலே - ''ஸந்த்யாம்பரஸவர்ண வஸ்த்ர வேஷ'' இத்யாதியும், 'ரம்பாஸ்தம்ப' இத்யாதி வாக்யத்திலே- ''ரம்பாஸ்தம்ப ஸஹ்ருதயவாக்யா:'' இத்யாதியும், 'தாமரைநாளம்போலே' இத்யாதிவாக்யத்திலே - ''ஸ்ரீரங்கேசயஜங்கே த்வே த்ருஷ்ட்வா'' இத்யாதியும் அநுஸந்தேயம். க்ரமுகதருணக்ரீவா கம்புப்ரதிமமான என்றது - கமுகினுடைய இளங்கழுத்துக்கும் சங்கத்துக்குமொத்த திருக்கழுத்தென்றபடி. கோயிற்கட்டணம் - அந்தப்புரம். குருமாமணிப்பூண் - ச்லாக்யமாய்ப் பெருவிலையனுயிருக்கிற ஸ்ரீகௌஸ்துபமும் பதக்கமும். குலாவிக்கொண்டு விளங்காநின்றுள்ள அழகிய திருமார்வும் என்றபடி. அழகுசெண்டேறுகிற - வையாளிவிடுகிற. இட்டளப்பட்டு - ஸங்குசிதஸ்தலத்திலே தேங்கி. அல்குல் - நிதம்பம். ஹர்மஸ்த்தலம் - ஸ்வர்ணபூமி; ''மாஹேந்த்ரம் ஸம்பூர்ணவைஜயந்தம்'' இத்யமர:. ஆஶ்லேஷத்தாலே - ஆனைத்துதிக்கைமுதலானவற்றைச் சொல்லுகிறது. ஸ்ரீபூமிகளு

லியாயிருக்கிற - முதல்தனியுன்னைக்கண்டேன்; தேசவிசேஷத்திலே ஸந்நிஹிதனாயிருக்கிறவுன்னை எனைநாள்வந்து கூடுவன் நான்? காரணகார்யோபயாவஸ்த்தமான சிதசித்துக்களுக்கு நிர்வாஹகனாயிருக்கிற இருப்பைக்காட்டி யநுபவிப்பித்த இவ்வளவு போராது; அஸாதாரணவிக்ரஹயுக்தனாய் ஒருதேசவிசேஷத்திலிருக்குமிருப்பைக் கண்டு அநுபவிக்கவேணுமென்றதாய்த்து. (௯)

## பத்தாம் பாட்டு.

சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவில்பெரும்பாழேயோ
சூழ்ந்ததனிற்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ
சூழ்ந்ததனிற்பெரியசுடர்ஞானவின்பமேயோ
சூழ்ந்ததனிற்பெரியஎன்னவாவறச்சூழ்ந்தாயே.

ஆ.—(சூழ்ந்தகன்று.) - இப்படி எம்பெருமானுக்கும் மறுத்தருளவொண்ணாததொருபடி பிராட்டிதிருவாணையையும் தன்திருவாணையையுமிட்டு நிர்ப்பந்தித்துக்கொண்டு ஆர்த்தஸ்வரத்தாலே கூப்பிடுமளவில், தாம் மநோரதித்தபடியே எம்பெருமானும் எழுந்தருள, அவனைக்கண்டு,—மஹதஹங்காராதிகளெல்லாவற்றையும் வ்யாபித்து அவற்றிற்காட்டிலும் பெரிதான மூலப்ராக்ருதிக்கும், அத்தையும் வ்யாபித்து அதிலும் பெரிதான முக்தாத்மாவுக்கும், அதிலும்பெரிதான உன்னுடைய ஸங்கல்பஜ்ஞாநத்துக்கும் ஆத்மாவாயிருந்த நீ, அந்த ஸங்கல்பஜ்ஞாநத்திற்காட்டிலும் பெரிதாயிருந்த என்னுடைய விடாயெல்லாந்தீரும்படி, அந்தஜமதாகாரனானபடியன்றியே நீயானபடியே வந்துசூழ்ந்தாய்: என்னுடையமநோரதமும் ஒருபடியே முடிந்ததுஎன்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், எம்பெருமானுக்கு இவர் அபேக்ஷிதம் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி பெரியபிராட்டியார் ஆணையிட்டுத்தடுத்துப் பெரிய ஆர்த்தியோடே கூப்பிட்ட இவர் ப்ரார்த்தித்தபடியே பரிபூர்ணனாய்க்கொண்டு வந்து ஸம்ஸ்லேஷித்தருளக்கண்டு அபரிச்சேத்யமான ப்ராக்ருததத்வத்திலும் ஆத்மதத்வத்திலும் உன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞாநத்திலும் பெரிதான என்னுடைய விடாயெல்லாம்தீர வந்து என்னோடேகலந்தாய்:என்னுடைய மநோரதமும் ஒருபடிமுடியப்பெற்றேன் என்கிறார்.

[சூழ்ந்தென்று தொடங்கி] - பத்துத்திக்குக்களிலும் வ்யாப்தமாய் அபரிச்சேத்யமாயிருக்கிற ப்ராக்ருததத்வத்துக்கு ஆத்மாவாய் நிற்கிறவனே! [சூழ்ந்தென்று தொடங்கி] - அத்தையுங்கூட வ்யாபித்து அதுக்கு நியாமகனான ஆத்மதத்வத்துக்கு ஆத்மாவானவனே! [சூழ்ந்தென்று தொடங்கி] - ப்ரக்ருதி புருஷதத்வங்களில் இரண்

டைய ஸ்பர்சத்தாலே கணைக்கால்கள் மயிர்க்கூச்செறிந்திருக்கையாலே 'தாமரைநாளம்போலே கண்டகிதங்களான' என்கிறார். சேருவன் என்னாதே "கூடுவன்" என்றதுக்குபாவம் - மயர்வற இத்யாதி. அகன்று - எட்டுத்திக்கிலும் வ்யாபித்து. ஆழ்ந்துயர்ந்த - கீழும்மேலும் வ்யாபித்த. அபரிச்சேத்யமான என்றது – அஸங்க்யாதமானவென்றபடி. அந்வயங்காட்டுகிறார் - முதல்தனியுங்கும் இத்யாதி. அந்வயத்தால்பலித்தபாவம் - காரணகார்ய இத்யாதி. 'நீயானவுன்னை' என்றபக்ஷத்திலே, 'முடிவிலீயோ - உன்னை யுன்னை யெனைநாள்வந்துகூடுவன்' என்றந்வயம், (௯)

டையும் வ்யாபித்து அவற்றுக்கும் நிர்வாஹகமாய் ஸங்கல்பரூபமாய் ஸ்வரூபமான ஜ்ஞாநத்தை யுடையவனே! சுடர்ஞானவின்பமென்று - எம்பெருமானைச் சொல்லிற்றாகவுமாம். [சூழ்ந்தென்று தொடங்கி] - அதிலும்பெரிதான என்னுடைய விடாய்கெடும்படி வந்து ஸம்ச்லேஷித்தாயே.

௯—அநந்தரம், தத்த்வத்ரயத்துக்கும் அவ்வருகாம்படியான என் அபிநிவேசமானது கெடும்படியாக ஸர்வப்ரகார பரிபூர்ணனைக்கொண்டு ஸம்ச்லேஷித்தாய் என்று, தமக்கு ஸாயுஜ்யஸித்தமான பரிபூர்ணபோகப்ரஹர்ஷ ப்ரகாசம்பண்ணினபடியை யருளிச் செய்கிறார்.

சூழ்ந்து - (கார்யவர்க்கத்தை யடங்கச்) சூழ்ந்து, அகன்று - வ்யாபித்து விஸ்தீர்ணமாய், ஆழ்ந்துயர்ந்த - கீழும்மேலுமுண்டானபடியாலே பத்துத்திக்கிலும் ஸந்நிஹிதமாய், முடிவில் - (உத்பத்திவிநாசரஹிதமாகையாலே) நித்யமாய், பெரும் - (ஸமஸ்த கார்யங்களுக்கும் அவ்வருகாகையாலே) அபரிச்சிந்நமாய், பாழே - போகமோக்ஷங்களை விளைக்க நல்தறையான ப்ரக்ருதியை ப்ரகாரமாகவுடையையாய், (அந்தப்ராக்ருதிதத்த்வத்தை), சூழ்ந்து - ஸ்வஜ்ஞாநத்தாலே வ்யாபித்துக்கொண்டு, அதனில் - அதிற்காட்டில், பெரிய - பெருத்து, பரம் - (ஏகரூபத்வாதிகளாலே)மேலாய்,நல் - ஸ்வயம்ப்ரகாசத்வாதி வைலக்ஷண்யத்தையுடைத்தாய், மலர் - விகாஸஸ்வபாவமான, சோதீ - ஜ்ஞாநப்ரபையையுடைய ஆத்மாவை ப்ரகாரமாகவுடையையாய், சூழ்ந்து - இந்தப்ரக்ருதிபுருஷர்களிருவரையும் வ்யாபித்து, அதனில்பெரிய - அதுக்கவ்வருகாய், சுடர் - கல்யாணகுணங்களால் உஜ்ஜ்வலமான, ஞானவின்பமே - ஜ்ஞாநாநந்தலக்ஷணஸ்வரூபத்தையுடைய நியந்தாவானவனே! சூழ்ந்து - (அந்ததத்த்வத்ரயத்தையும்) வளைத்துக்கொண்டு, அதனிற்பெரிய - அதுக்கவ்வருகாம்படியாயிருக்கிற, என் அவா - என் அபிநிவேசமானது,அற-சமிக்கும்படியாக, சூழ்ந்தாயே-ஸ்வரூபகுணவிக்ரஹவிபூதி ஸ்ரீபூமிநீளாமஹிஷீ பரிஜநஸ்தாநவிசிஷ்டனைக்கொண்டு பரிபூர்ணனை உனக்குள்ளேயாம்படி ஸாயுஜ்யபோகத்தைத் தந்தாயிறே; ஓ!-ஓ! ஆதிசயமே! என்று அடிதோறும் ஹ்ருஷ்டராகிறார்.

௰.—பத்தாம்பாட்டில், இவர் இப்படி தம்மபேக்ஷிதம் செய்தலல்லது நிற்கவொண்ணாதபடி பிராட்டியாணையிட்டுப்பெரியவார்த்தியோடே கூப்பிட்டு இவர்ப்ரார்த்தித்தபடியே பரிபூர்ணனைக் கொண்டுவந்து ஸம்ச்லேஷிக்கக்கண்டு, அபரிச்சேத்யமான என்னுடைய விடாய்தீரவந்து கலந்தாய்; என்னுடைய மநோரதமும் ஒருபடிமுடியப் பெற்றேனென்கிறார்.

[சூழ்ந்தகன்று இத்யாதி] - இப்போது ப்ரக்ருதிபுருஷாதிகளைச் சொல்லுகிறது,தம்முடைய அபிநிவேசம் பெரியவற்றிற்பெரியதென்று சொல்லுகைக்காக. அவற்றுக்கு ஈச்வரனையொழிய ப்ருதக்ஸ்திதியில்லாமையாலே அவ்வளவும் சொல்லுகிறது. [சூழ்ந்துஇத்யாதி] - ஸ்வகார்யமான மஹதாதிகளைப் பத்துத்திக்கிலும்புக்கு எங்கும் வ்யாபிக்க, நித்யமாய், அபரிச்சேத்யமாய், சேதநர்க்குப் புருஷார்த்தத்தை விளைத்துக் கொள்ளலாம் நிலமான ப்ரக்ருதிதத்த்வத்துக்கு ஆத்மாவானவனே! [சூழ்ந்துஇத்யாதி]- அத்தையும் வ்யாபித்து அதிற்காட்டிற் பெரிதாய்,அதுக்கு நியந்தாவாகையாலே மேலாய், விகாராதிகளில்லாமையாலே விலக்ஷணமாய், விகஸ்வர தேஜோரூபமான ஆத்மவஸ்துவுக்கும் ஆத்மாவானவனே! [சூழ்ந்து இத்யாதி] - அவையிரண்டையும் வ்யாபித்து

*அவற்றுக்கு நிர்வாஹகமாய் ஸங்கல்பரூபமான ஜ்ஞாநத்தையுடையவனேயென்று ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தைச் சொல்லுதல், 'சுடர்ஞானவின்பம்' என்று - ஹ்ருதவத்ஸ்வரூபத்தைச்சொல்லுதல். [சூழ்ந்து இத்யாதி] - தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டு அது குளப்படியாம்படி பெரிதான என்னுடைய அபிநிவேசத்தை, அதிலும் பெரிய உன்னுடைய அபிநிவேசத்தைக்காட்டி வந்துஸம்ஶ்லேஷித்தாயே. என்னுடைய கூப்பீடும்ஒருபடியோவும்படி பண்ணுவதே! "அங்கே பரதமாரோப்ய முதித꞉ பரிஷஸ்வஜே" என்று மீண்டுபுகுந்து ஸ்ரீபரதாழ்வானை மடியிலேவைத்து உச்சிமோந்து உகந்தாற்போலேயாய்த்து இவருடைய விடாயும்கெடும்படி வந்து கலந்தது.*

௧௦.—பத்தாம்பாட்டு. எம்பெருமானுக்கு இவர் அபேக்ஷிதம் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி பெரியபிராட்டியாராணையிட்டுத்தடுத்துப் பெரிய ஆர்த்தியோடே கூப்பிட்டு இவர்ப்ரார்த்தித்தபடியே பரிபூர்ணனாய்க்கொண்டுவந்து ஸம்ஶ்லேஷித்தருளக் கண்டு, அபரிச்சேத்யமான ப்ரக்ருதிதத்த்வத்திலும் ஆத்மதத்த்வத்திலும் உன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞாநத்திலும்பெரிதான என்னுடையவிடாயெல்லாந்தீரவந்து என்னோடே கலந்தாய்; என்னுடைய மநோரதமும் ஒருபடி முடியப்பெற்றேனென்கிறார். இனி, இல்லையென்னும்படி என்னைவிடாய்ப்பித்து அதுக்கு அவ்வருகானவிடாயை யுடையையாய்க்கொண்டு என்னோடேகலந்த உன்னுடைய விடாயும் ஒருபடிகெட்டதே என்கிறாராகவுமாம்; "அங்கே பரதமாரோப்ய முதித꞉ பரிஷஸ்வஜே" (அங்கேபரதமாரோப்ய முதித꞉பரிஷஸ்வஜே) என்னும்படியே.

[சூழ்ந்துஇத்யாதி] - இப்போதுப்ரக்ருதிபுருஷர்களைச்சொல்லுகிறது, தம்முடையஅபிநிவேசம்பெரிய வற்றிலும்பெரியதுஎன்கைக்காக. அவற்றுக்கும் ஈஶ்வரனையொழியப்ருதக்ஸ்திதியில்லாமையாலே அவ்வளவும் சொல்லுகிறது. ஸ்வகார்யமான மஹதாதிகளைப்பத்துத்திக்கிலும் புக்குளங்குமோக்கவ்யாபித்து, நித்யமாய் அபரிச்சேத்யமாய்ச் சேதநர்க்குப்புருஷார்த்தத்தைவிளைத்துக்கொள்ளலாம்நிலமான ப்ரக்ருதிதத்த்வத்துக்குஆத்மாவானவனே! [சூழ்ந்து இத்யாதி] - அத்தையும் வ்யாபித்து, அதிற்காட்டிற் பெரிதாய், அதுக்கு நியந்தாவாகையாலே

---

*பத்தாம்பாட்டு.—சூழ்ந்து இத்யாதி. "அவாவற" என்றது - தம்முடைய அவா, அறப்போம்படி யென்னுதல்; தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டிருக்கிற தம்முடைய அவா, அற - அல்பமாம்படி; அதாவது - தம்முடைய அபிநிவேசம் குளப்படி யென்னும்படி கடல்போன்ற ஆதாரத்தோடே வந்துகலந்தாயென்னுதல். இந்த அர்த்தத்வயத்தையும் விவக்ஷித்து அடைவே அவதாரிகாத்வயம் - எம்பெருமானுக்கு இத்யாதி. இந்த இரண்டுயோஜநையும், "அயர்வறுசுடரடி" என்று உபக்ரமத்திலே அருளிச்செய்தத்தை உபஸம்ஹரிக்கிறாரென்னுமிடம் தோன்றுகிறது. அவதாரிகாத்வயத்துக்கும் த்ருஷ்டாந்தமாதல், த்விதீயாவதாரிகைக்கு த்ருஷ்டாந்தமாதல் - அங்கே இத்யாதி. "முதித꞉" என்றபதம், த்விதீயாவதாரிகைக்குச் சேரும். "முதித꞉" என்கையாலே - "[illegible]" என்ற பெருமாள் விடாய்தீர்ந்தமை தோற்றுகிறது. "தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த꞉ சிரஸ்யாக்ஷிபதம் கதம் । அங்கே பரதமாரோப்ய முதித꞉ பரிஷஸ்வஜே" இதி யுத்தகாண்டே சரமே. ப்ராப்திதசையிலே ப்ரக்ருதிபுருஷர்களைச்சொல்லுவானென்னென்ன - இப்போது இத்யாதி. இப்போது - ப்ராப்திதசையிலே. ஆனால், "பாழேயோ, சோதியோ" என்று ஸமாநாதிகரண்யமாகச் சொல்லுவானென்னென்ன - அவற்றுக்கும் இத்யாதி. "அகன்றாழ்ந்துயர்ந்து சூழ்ந்த" என்று அந்வயிப்பது. ஸப்தார்த்தம் - ஸ்வகார்யமான இத்யாதி. "பாம்" என்றதுக்கர்த்தம் - அதுக்கு நியந்தா இத்யாதி. "சுடர்" என்கிறவிதுக்கு - 'ஸங்கல்பரூபமாய்' என்று அர்த்தம்சொன்*

மேலாய், விகாராதிகளில்லாமையாலே விலக்ஷணமாய், விகஸ்வர தேஜோரூபமான ஆத்மவஸ்துவுக்கும் ஆத்மாவானவனே! [சூழ்ந்து இத்யாதி] - அவையிரண்டையும் வ்யாபித்து, அவற்றுக்கு நிர்வாஹகமாய் ஸங்கல்பரூபமாய் ஸ்வரூபமான ஜ்ஞாநத்தையுடையவனே! என்று ஸங்கல்பரூபஜ்ஞாநத்தைச் சொல்லுதல்; "சுடர்ஞானவின்பமே" என்று - ப்ரகாசரூபனுமாய் ஸ்வரூபனுமானவனே என்று எம்பெருமானைச்சொல்லுதல். [சூழ்ந்து இத்யாதி] - தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டு அவை குளப்படியாம்படி பெரிதான என்னுடைய அபிநிவேசத்தை, அதிலும்பெரிய உன் அபிநிவேசத்தைக்காட்டி வந்து ஸம்ச்லேஷித்தாயே! என்னுடைய கூப்பீடும் ஒருபடியோவும்படிபண்ணிற்றே! "அங்கே பரதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே" (அங்கேபரதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே)என்று மீண்டுபுகுந்து ஸ்ரீபரதாழ்வானை மடியிலே வைத்து உச்சியைமோந்து உகந்தணைத்தாற்போலேயாய்த்து, இவருடைய விடாய்கெடும்படி கலந்தது. (கo)

---

## பதினோராம் பாட்டு.

---

அவாவறச்சூழ்அரியையயனையரனையலற்றி
அவாவற்றுவீடுபெற்றகுருகூர்ச்சடகோபன்சொன்ன
அவாவிலந்தாதிகளால்இவையாயிரமும்முடிந்த
அவாவிலந்தாதிஇப்பத்தறிந்தார்பிறந்தாருயர்ந்தே.

ஆ.—(அவாவறச்சூழ்.) - ப்ரஹ்மருத்ராதி ஸர்வாத்மாக்களுக்கும் அந்தராத்மபூதனாய், ஸமஸ்தஹேய ப்ரத்யநீகனாய், அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணநிதியாய், அப்ராக்ருத ஸ்வஅஸாதாரண திவ்யரூப பூஷணாயுதமஹிஷீபரிஜந ஸ்தாந விசிஷ்டனாயிருந்த எம்பெருமானை யலற்றி அவாவற்று நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராய், அவனைப்பெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் அவற்றிலே தம்முடைய அபேக்ஷிதம்பெற்று விடாய்தீர்ந்தபத்து,இவற்றையறிந்தார், பிறந்துவைத்தே * அயர்வறுமமரர்களுக்கும் மேற்பட்டாரென்கிறார்.

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஓ—நிகமத்தில், அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதான ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய் உயர்வறவுயர்நலமுடையனாய் அபரிமித திவ்யபூஷண பூஷிதனாய்

---

னது, அப்ரதிஹதத்வரூபெளஜ்ஜ்வல்யத்தை ஸங்கல்பமுடைத்தாகையாலே. "சுடர் - இன்ப - ஞானமேயோ" என்றபடி. முந்தினவர்த்தத்துக்கு, "ஞானமேயோ" என்றது - ஜ்ஞாநத்துக்கு ஆஸ்ரயமானவனே என்றபடி; இரண்டாமர்த்தத்தில், "சுடர்ஞானவின்பமேயோ" என்று - ப்ரகாசரூபஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஸ்வரூபனுமானவனே என்றபடி. "சுடர்ஞானம்" என்று - ப்ரகாசரூபஸ்வரூபஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. த்விதீயாவதாரிகைக்குச்சேரவர்த்தம் - தத்த்வத்ரயத்தையும் இத்யாதி. தத்த்வத்ரயத்தையும் என்றது-"சுடர்ஞானவின்பம்" என்றதினிரண்டாமர்த்தத்தைப்பற்ற, முந்தினவவதாரிகைக்குச்சேரவர்த்தம் - என்னுடையகூப்பீடும் இத்யாதி. இதுக்கு உதாஹரணம் - அங்கே இத்யாதி. "அற" என்றால் - அல்பத்வவாசகமாமோவென்னில்; மேருவிவாஸ்யஞனவன் சீருள்ள ஸர்வபாதிகளையில்லையென்றால் அபாவவாசகமன்றிக்கே அல்பத்வவாசகம்மாமாபோலே, வாசகமாமென்றபடி.

(கo)

ஸர்வாயுதோபேதனும் லக்ஷ்மீபூமிநீளாநாயகனும் அஸங்க்யேயஸங்க்யரான அநந்த வைநதேயாதிகளாலே அநவரத பரிசர்யமாண சரணநளினனும் ஸ்ரீவைகுண்ட நிலயனுன ஸர்வேஶ்வரனும் ஸ்வவிபூதிபூதரான ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தராத்மாவாய்த் தன்னைக் காணவேணுமென்று விடாய்த்து ஆஶ்ரயிக்குமவர்களுடைய விடாய் தீர ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனுன எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிட்டு, அவனைப்பெற்று நிர்து:கராய் நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகரான ஆழ்வாருடைய பக்தி பலாத்காரபூர்வகமாகப்பிறந்த ஆயிரந் திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு கீழ்ச்சொன்னவைபோலன்றிக்கே பெற்றல்லது தரிக்கமுடியாதபடியான பரமபக்தியாலே பிறந்த அந்தாதியான இத்திருவாய்மொழி வல்லார் ஸம்ஸாரத்திலே பிறந்து வைத்தே அயர்வறுமமரர்களோடொப்பர் என்கிருர். 'அயனை அரனை அவாவறச் சூழரியை' என்றுமாம்.

முதலிலே, "மயர்வற மதிநல மருளினன்" என்றுர்; நடுவு பலவிடங்களிலும், அவனே அபாஶ்ரயமென்றுர்; முடிவிலும், "இன்று என்னைப்பொருளாக்கி" என்றும் "என் தலைமிசையாய் வந்திட்டு" என்றும் - எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தையே தமக்கு உபாயமாகப்பேசித் தலைக்கட்டினுர்; இங்ஙனேயிருக்கிற நிர்ஹேதுக விஷயீகாரத்துக்கு அடியான ஸ்ரிய:பதித்வத்தை "மலர்மகள் விரும்பு நமரும் பெறலடிகள்" என்று முதலிலே தொடங்கி நடுவு பலவிடங்களிலும் ப்ரஸ்தாவித்துக் கொடுபோந்து, முடிவிலே "திருவாணை நின்னாணை" என்றும் "கோல மலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ" என்றும் தலைக்கட்டினுர்; ததீயருடைய ப்ராப்யதையையும் முதலிலே "அயர்வறுமமரர்கள்" என்று தொடங்கி, நடுவு பலவிடங்களிலும் "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்று கொலோ" என்றும், பயிலுஞ் சுடரொளி நெடுமாற்கடிமையகப்படப் பரக்கப்பேசிக்கொடுபோந்து, முடிவிலும் "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும் தலைக்கட்டினுர்; எம்பெருமானுக்கு† ஸௌஶீல்யமென்றுகொண்டு, "உரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவு- எத்திறம்' என்று தொடங்கிப் பலவிடங்களிலும் பேசினுர்; இவனுக்கு அஸாதாரணமான திருநாமம் நாராயணனென்னுமிடம், "வண்புகழ் நாரணன்" என்று தொடங்கிப் பலவிடங்களிலும் பேசிக்கொடுபோந்து, "வாழ்புகழ் நாரணன்" என்று தலைக்கட்டினுர்; ஆழ்வார் இப்படி‡ ஆறி.........யால் இவ்வைந்து அர்த்தமுமே இப் ப்ரபந்தத்துக்கு ப்ரதாநார்த்தங்கள் என்று கருத்து.

நஞ்சீயர் திருவடிகளே ஶரணம்.

ப.—அநந்தரம், பலாவாப்திப்ரகாரத்தை ப்ரதிபாதித்துக்கொண்டு, இத் திருவாய்மொழிக்குப்பலமாக, இதில் ஜ்ஞாநமுடையவர்களுடைய ஜந்மோத்கர்ஷத்தை யருளிச்செய்கிருர்.

அவா - (ஆஶ்ரிதருடைய) அபிநிவேஶம், அற - தீரும்படி, சூழ் - நிரவதிக ஸம்ஶ்லேஷம்பண்ணுகையாலே, அரியை - (விஶ்லேஷது:கநிர்ஹரண) ஸ்வபாவனும், அயனை - ("காரணந்து த்யேய:" என்கிறமர்யாதையாலே முக்தப்ராப்யதயா பூர்வபக்ஷதயாஶங்கிதனுன ஹிரண்யகர்ப்பனுக்கும்) அந்தராத்மாவாய், அரனை - அப்படி பசுபதிமதப்ராப்யனுன ருத்ரனுக்கும் அந்தராத்மாவான பரமப்ராப்யபூதனை, அலற்றி- (ப்ராபிக்கையிலுண்டான த்வரையாலே) கூப்பிட்டு, (ப்ராப்திபலஸித்தியாலே), அவாவற்றுவீடு

† ப்ரதாநகுணம் என்றாற்போல ஏதேனுமிருப்பின் ஸ்வரஸம். ‡ இங்கு க்ரந்த பாதம்,

பெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன அவாவில் அந்தாதிகளால் இவையாயிரமும் -, முடிந்த - (அதிப்ராஸக்திரூபமாக) முடிந்த, அவாவில் - அவாவிலே, அந்தாதி - அந்தாதிகளான, இப்பத்து - இப்பத்தையும், அறிந்தார் - † அநுஸந்தித்து, பிறந்தாருயர்ந்தே - † வஸ்டபாத்திபண்ணும்படியான அவா அறும்படியாகத் தன்குணாதிகளாலே சூழ்ந்து ஹரித்துக்கொள்ளுமவனென்றுமாம். இது கலிவிருத்தம்.

இப்படிப்ரபந்தத்திலே ஸ்ரீய:பதியான நாராயணனுக்குப்ராகாரபூதனான சேதநனுக்கு உபாயத்வேந ப்ரவ்ருத்தனாய்க்கொண்டு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுமென்கிற மஹாவாக்யார்த்தத்தினுடைய அவாந்தரார்த்தரூபமான ப்ராப்ய ப்ராப்த்ருஸ்வரூபாதிகளாயுள்ள அர்த்தபஞ்சகத்தையும் தத்ப்ரகாரவிஶிஷ்டனும்படி ஸமர்மமாக அருளிச்செய்து தலைக்கட்டினாராய்த்து. இதில், முதற்பத்திலும் இரண்டாம்பத்திலும் - ரக்ஷகத்வ ஸௌமயத்வ விஶிஷ்டமான ஶேஷித்வ ஸ்வரூபஞ்சொல்லுகையாலும், மூன்றாம்பத்திலும் நாலாம்பத்திலும் - ததேகாநுபவத்வ ததேகப்ரியத்வரூபமான ஶேஷத்வ ஸ்வரூபஞ்சொல்லுகையாலும், இந்நாலும் அநுவ்ருத்தமாக இந்தஶேஷித்வ ஶேஷத்வங்களினுடைய அஸாதாரண்யத்தைச்சொல்லுகையாலும், ப்ரதமாக்ஷரத்திலே ஶேஷித்வத்தைச்சொல்லி, த்ருதீயாக்ஷரத்திலே ஶேஷத்வாஶ்ரயத்தைச்சொல்லி, அவதாரணார்த்தமான உகாரத்திலே உபயோஸ்ஸம்பந்த தாஸ்யத்தைச்சொல்லுகிற ப்ரணவார்த்தத்தை ப்ரதிபாதித்ததாய்; அநந்தரம், அஞ்சாம்பத்திலே உபாயஸ்வரூபத்தையும், ஆறாம்பத்திலே — உபாய வரணத்தையும், ஏழாம்பத்திலே - விரோதிஸ்வரூபத்தையும், எட்டாம்பத்திலே தந்நிவ்ருத்திப்ரகாரத்தையும் சொல்லுகையாலே - ஶாப்தமாகவும் ஆர்த்தமாகவும் ஸித்தமான நமநநாமநவானான ஈஶ்வரனுடைய உபாயபாவத்தையும், நமரூபமான ஶரணாகதிஸ்வரூபத்தையும், ஆத்மாத்மீயஸித்தமான அஹங்காரமமகாரரூபவிரோதிஸ்வரூபத்தையும், தந்நிஷேதத்தையுஞ்சொல்லுகிற நமஶ்ஶப்தார்த்தத்தைப்ரதிபாதித்ததாய்; ஒன்பதாம்பத்திலும் பத்தாம்பத்திலும் ஸர்வவிதபந்தத்வ கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வாதிவிஶிஷ்டமான ஃபலாவாப்தியைச் சொல்லுகிற சரமபதார்த்தத்தை ப்ரதிபாதித்ததாய்; ப்ரபந்தஸங்க்ரஹமான முதற்பாட்டில் அருளிச்செய்த க்ரமத்திலே ஸர்வஶாஸ்த்ர ஸங்க்ரஹமான மூலமந்த்ரார்த்தத்தை இப்ப்ரபந்தத்திலே விஸ்தரேண ப்ரதிபாதித்தாராய்த்து. இன்னமும், ப்ரதமத்திலே - ஸ்ரீய:பதித்வ நாராயணத்வங்களை ப்ரதிபாதித்து, நாராயணனுடைய ஶீலஸௌலப்யாதிகளாயும் ஜ்ஞாநாதிகளாயுமுள்ள குணங்களை பஹுஶ: ப்ரதிபாதித்து, உத்தமமான க்ரியாபதத்தாலே†பமாகப் பண்ணுகையாலும், விரோதிபூதரஹிதமான புருஷார்த்தரூப ஶுபவத்கைங்கர்யாவாப்தியை ப்ரதிபாதிக்கையாலும், வாக்யத்வயாத்மகமான ஶரணாகதிஸ்வரூபத்தையும் விஶதீகரித்தருளினாராய்த்து. இவ்வுபாயவரணம் ததிதர ஸகலநிவ்ருத்தியுக்தமாயிருக்குமென்றும், உபாயபூதகுணவிஶிஷ்டனாய் அத்விதீயனாயிருக்குமென்றும் ப்ரதிபாதித்து, உபாயகார்யமான ஸமஸ்தவிரோதிநிவ்ருத்தியையும், ஃபலஸித்திநிபந்தந தாதார்த்யத்தையும் ப்ரதிபாதிக்கையாலே - சரமஶ்லோகார்த்தத்தையும் விஶதீகரித்தருளினாராய்த்து. ஆக, ஸர்வப்ரகார பூதஶேஷபூதனாய், அநந்யப்ரயோஜநனாய், அநந்யஸாதநனான இவ்வதிகாரிக்கு ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யத்ரயத்தையும் ஸப்ரகாரமாக ப்ரகாஶிப்பிக்கை

† இங்கு க்ரந்த பாதம்.

யாலே, இப்ப்ரபந்தமானது விலக்ஷணரான ஸாத்விகாக்ரேஸரர்க்கு நித்யாநுஸந்தேயமாகக்கடவது.

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே ஶரணம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார் ஆழ்வாருடைய க்லேஶமின்றியே ஃபலத்திலே அந்வயிப்பரென்கிறார்.

[அவாவறச் சூழரியை] - நித்யமான ஸ்வரூபத்தையும் ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்களையும் ஸௌந்தர்யாதி விஶிஷ்டமான நித்யமங்கள விக்ரஹத்தையும் அபரிமித திவ்யபூஷணங்களையும் ஶங்கசக்ராதி திவ்யாயுதங்களையும் லக்ஷ்மீ ப்ரப்ருதிதிவ்யமஹிஷீ வர்கத்தையும் உடையனாய் அஸங்க்யேயஶங்கிகளான நித்யஸூரிகளாலே பரிசர்யமாணமான திருவடித்தாமரைகளை யுடையனாயிருந்துள்ளவனை. [அயனை அரனை] - ஸ்வவிபூதிபூதரான ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தராத்மாவானவனை. அவாவறச் சூழ்கையாவது - தன்னைக் காணவேணுமென்று விடாய்த்த ஆழ்வாருடைய விடாய்தீர ஸம்ஶ்லேஷிக்கை. இஸ்ஸாமாநாதிகரண்யத்தாலே - ப்ரஹ்மருத்ரர்கள்பக்கல் ஈஶ்வரத்வஶங்கை அறுக்கிறார்: அவர்களுடைய ஸத்தாஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஈஶ்வராதீநமாகையாலே அவர்களுக்குப் பாரதந்த்ர்யமே ஸ்வரூபம். நிர்வாஹகத்வம் கர்மத்தாலே வந்தது. இஸ்ஸாமாநாதிகரண்யத்தில் ஜ்ஞாநமின்றியே எளியராயிருப்பார்க்கு நிர்வஹிப்பதும் சிலபுடைகளுண்டு. 'அயனை அரனை அவாவற்று அரியை அலற்றி வீடுபெற்ற' - என்னுதல்; 'அயனையரனை - அவாவறச்சூழரியை அலற்றி அவாஅற்று வீடுபெற்ற' என்னுதல். 'அலற்றி அவாவற்றுவீடுபெற்ற' - கூப்பிட்டு அவனைப்பெற்று நிரஸ்தஸம்ஸ்த ப்ரதிபந்தகராகையாலே நிர்து:கரான ஆழ்வார் அருளிச்செய்த. [அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும்] - பக்திபலாத்காரத்தாலே பிறந்த ஆயிரந்திருவாய்மொழியிலும். இவரைச் சொல்லுவித்த அபிநிவேஶம் - ப்ரோக்தனான மைத்ரேயனுடைய ஸ்தாநத்திலே நிற்கிறதாய்த்து. [முடிந்தவவாவிலந்தாதி யிப்பத்து] - பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடியான பரமபக்தியாலே பிறந்ததாய்த்து இத்திருவாய்மொழி. கீழுடைய - பரபக்திபிறந்து சொல்லிற்று. பரமபக்திபிறந்து சொல்லிற்றாய்த்து இத்திருவாய்மொழி. [அறிந்தார் பிறந்தார் உயர்ந்தே] - இவற்றை அறிந்தவர்கள் ஸம்ஸாரத்திலே பிறந்துவைத்து நித்யஸூரிகளோடொப்பர்கள். முதல் திருவாய்மொழியில், நாராயண ஶப்தார்த்தத்தை அநுஸந்தித்துப் பிறர்க்கு உபதேஶிக்கிறவிடத்திலே "வண்புகழ் நாரணன்" என்று ப்ரயோகித்து, "அமைவுடைநாரணன்" என்றும் "செல்வநாரணன்" என்றும் "நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும் "திருநாரணன்" என்றும் "நாராயணன் நங்கள் பிரான்" என்றும் சொல்லிக்கொடுபோந்து, "திண்ணம் நாரணமே" என்றும் "வாழ்புகழ் நாரணன்" என்றும் தலைக்கட்டுகையாலே, அவனுக்கு அஸாதாரணமான திருநாமம் இதுவே என்னுமிடம் தோற்றுகிறது. முதலிலே "மலர்மகள் விரும்பும்" என்றும் "திருவுடையடிகள்" என்றும் "கமலமலர்மேற்செய்யாள்" என்றும் "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பன்" என்றும் சொல்லிக்கொடுபோந்து, "திருவாணைநின்னாணை கண்டாய்" என்றும் "கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ" என்றும் தலைக்கட்டுகையாலே - ஸ்ரீமானான நாராயணனே ப்ராப்யமும் ப்ராபகமும் என்று இவர்க்குப் பக்ஷமென்னுமிடம் தோற்றிற்று. இவ்வர்த்தம் உபநிஷத்ப்ரஸித்தமும்; அநந்யபரமான நாராயணாநுவாகத்திலே, நாராயணஶப்தத்தாலே ஸர்வாதிகனைச் சொல்லி, "ஹ்ரீஶ்சதே

லக்ஷீமூவதநுளா" என்று உத்தாநாராயணத்தை சொல்லிற்று. முதலிலே, "மயர்வற மதிநல மருளினன்" என்றும் "எனதாவிதந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" என்றும் சொல்லி, நாலுப்ராயோரு மடுத்து ஶரணம் புக்கு, தேவிமாராவாரிலே "தாள்களை எனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த" என்றும் சொல்லிக்கொடுபோந்து, "இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் அன்று என்னைப் புறம் போகப் புணர்த்ததென்செய்வான்" என்றும் தலைக்கட்டுகையாலே - அம்மியூநத்தைப் பெறுகைக்கு ஸாதநமும் அவனுடைய நிர்ஹேதுக க்ருபையென்னுமிடம் தோற்றிற்று; முதலிலே "அயர்வறுமமர்களதிபதி" என்று தொடங்கி "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்று ப்ரார்த்தித்து, பயிலுஞ்சுடரொளி நெடுமாற்கடிமையிலே ததீயஶேஷத்வத்தைப் பாக்கச்சொல்லி, "அடியமோடிருந்தமை" என்று தலைக்கட்டுகையாலே - ஹயவச்சேஷத்வத்தினுடைய எல்லையாகிறது - ததீயஶேஷத்வமென்னுமிடம் தோற்றிற்று. இவ்வர்த்தங்கள் இப் ப்ரவந்தத்துக்கு ப்ரயாநார்த்தமென்று கருத்து. ஹயவந்யஸ்தஹாராயிநக்கும் அதிகாரிகளுக்குப் போதுபோக்கு - இப் ப்ரவந்யம்; "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றும் "கேட்டாரார் வானவர்கள்" என்றும் தாமே அருளிச்செய்தாரிறே.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஈடு.—நிமமத்தில், * அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய், * உயர்வறவுயர்நலமுடையனாய், ஸௌந்தர்யாதிவிஶிஷ்டமான நித்யமங்கள விக்ரஹயுக்தனாய், அபரிமிததிவ்யபூஷணபூஷிதனாய், ஸர்வாயுதோபேதனாய், லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், அஸ்த்யாநேஹயஶங்கிகளான அநந்தவைநதேயாதிகளாலே அநவரதபரிசர்யமாண சரணநளிநனாய், ஸ்ரீவைகுண்டநிலயனாய், ஸர்வேஶ்வரனாய், ஸ்வவிபூதிபூதரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் அந்தராத்மாவாய், தன்னைக்காண வேணுமென்றுவிடாய்த்து ஆஶ்ரயிக்குமவர்களுடைய விடாய்தீர ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனை எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிட்டு அவனைப் பெற்று நிர்துஃகரராய், நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகரான ஆழ்வாருடைய பக்திபலாத்கார பூர்வகமாகப்பிறந்தது ஆயிரந்திருவாய்மொழியும்; அவற்றில் வைத்துக்கொண்டு, கீழ்ச் சொன்னவைபோலன்றிக்கே பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடியான பரமபக்தியாலே பிறந்த அந்தாதியான இத்திருவாய்மொழிவல்லார், ஸம்ஸாரத்திலே பிறந்து வைத்தே அயர்வறுமமரர்களோடொப்பர் என்கிறார்:

நிமமம் - அவாவற இத்யாதி. ப்ரவந்தபரிஸமாப்தியாகையாலே இப்ப்ரவந்த ப்ரதிபாத்ய தாத்பர்யத்தை ஸங்க்ரஹித்துக்கொண்டு, "அவாவறச்சூழரியை" என்று தொடங்கி "இப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே" என்னுமளவுமுண்டான அர்த்தங்களையும் சேரப்பிடித்தருளிச்செய்து, இதுகற்றார்க்குப்பலஞ்சொல்லுகிறதென்று இப்பாட்டுக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் - அகில இத்யாதி. "மனனகமலமற" என்கிறபாட்டைக்கடாக்ஷித்து-அகிலஹேய இத்யாதி. "சுடரடி" என்றத்தைக்கடாக்ஷித்து - ஸௌந்தர்யாதி இத்யாதி. "பலபலவேயாபரணம்" இத்யாதியைப்பற்ற - அபரிமித இத்யாதி. "ஒண்சங்கதைவாளாழியான்" இத்யாதியைப்பற்ற - ஸர்வாயுத இத்யாதி. "தேவிமார்" இத்யாதியைப்பற்ற - லக்ஷ்மீபூமி இத்யாதி. "அயர்வறுமமரர்கள்" இத்யாதியைப்பற்ற - அஸ்த்யாநே இத்யாதி, 'ஸர்வேஶ்வரனாய்' என்னுமளவும். "அயனை யரனை" என்றத்தைப்பற்ற - ஸ்வவிபூதி இத்யாதி. இவ்விடத்திலே, "ப்ரஹ்மாதிஷு ப்ரலீநேஷு நஷ்டே லோகே சராசரே । ஆபூதஸம்ப்லவே ப்ராப்தே ப்ரலீநே ப்ரக்ருதௌ மஹாந் ।" என்றது ஸங்க்ஷேயம். "அவாவறச்சூழரியை" என்றத்தைப்பற்ற - தன்னைக்காணவேணுமென்று இத்யாதி. அலற்றி - கூப்பிட்டு. அவாவற்று - நிர்துஃகராய். வீடுபெற்ற- நிரஸ்தஸமஸ்தப்ரதிபந்தகரான. "அவாவிலந்தாதிகளால்இவையாயிரமும்" என்றத்தைப்பற்ற - பக்திபலாத்கார இத்யாதி

[அவாவறச்சூழரியை]-ஸர்வாபேக்ஷிதப்ரதனான ஸர்வேச்வரனைத்தம்முடைய அபிநிவேசம்கெட வந்து கலந்தபடியாலே வேறொரு விசேஷணமிடாதே அதுதன்னையே சொல்லுகிறார். [அயனையரனை] - ஸ்வவிஹிதிஹேதரான ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தராத்மாவானவனை. அவாவறச்சூழ்கையாவது - தன்னைக் காணவேணுமென்று விடாய்த்த ஆச்ரிதருடைய விடாய்தீரஸம்ச்லேஷிக்கை. 'அயனை, அரனை'. என்கிற இஸ்ஸாமாநாதிகரண்யத்தால் - ப்ரஹ்மருத்ரர்கள்பக்கல் ஈச்வரத்வசங்கையை யறுக்கிறார். அவர்களுடைய ஸத்தாஸ்திதி ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் ஈச்வராதீநமாகையாலே அவர்களுக்குப் பாரதந்த்ர்யமே ஸ்வரூபம்; நிர்வாஹகத்வம் கர்மாதீநமாய் வந்தவித்தனை. இஸ்ஸாமாநாதிகரண்யத்தில் ஜ்ஞாநமின்றியே எளியராயிருப்பார்க்கு நிர்வஹிப்பதும் சில புடைகளுண்டு. 'அயனை யரனை - அவாவற்று - அரியை - அலற்றி - வீடுபெற்ற' என்னுதல், அயனையரனை - அவாவறச்சூழரியை அலற்றி, அவாவற்று வீடுபெற்ற என்னுதல். [அலற்றி அவாவற்று வீடுபெற்ற] - கூப்பிட்டு அவனைப்பெற்று நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராகையாலே நிர்த்துக்கரான ஆழ்வார் அருளிச்செய்த.[அவாவிலந்

---

"அவா" என்ற - ஸாமாந்யமாகையாலே, இச்சப்தம் "தாவதா க்ருத:" இத்யாதிப்படியே தத்ததுபகாராநுகுணமாக ஸகலாபேக்ஷிதங்களையும் சொல்லவற்றாகையாலே - ஸர்வாபேக்ஷிதப்ரதனான என்கிறார். அவாவறச்சூழ் - ஸர்வாபேக்ஷிதப்ரதனான, அரியை - ஸர்வேச்வரனை. "அவாவற - ஆச்ரிதருடைய அபிநிவேசம் தீரும்படி. சூழ் - ஸம்ச்லேஷியாநிற்கிற. அரியை - விச்லேஷது:க்க நிர்ஹரண ஸ்வபாவனானவனை" என்று உரையில் சப்தார்த்தம். நாராயணாதிசப்தங்களிருக்க, அவற்றைவிட்டு, "அவாவறச்சூழ்" என்று இத்தையே நிரூபகமாகச் சொல்லுவானென்? என்ன - தம்முடையஅபிநிவேசம் இத்யாதி. கீழே சதுர்விதாதிகாரிகளுடைய அவாவறச்சூழ் என்றருளிச்செய்து, இங்கே கேவல முமுக்ஷுக்களுடைய அவாவறச்சூழென்றர்த்தாந்தரம் - அவாவறச்சூழ்கையாவது இத்யாதி. இது அவதாரிகையிற்சொன்ன அர்த்தத்தை விவரித்தபடி. "அயனையரனை" என்கிற ஸாமாநாதிகரண்யம் சரீராத்மபாவ நிபந்தநமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - ஸ்வவிஹிதிஹேதரான இத்யாதி. இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் - அயனையரனையென்கிற இத்யாதி. அவர்களை, ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களுக்கு நிர்வாஹகராய் ஈச்வரத்வேந சாஸ்த்ரங்கள்சொல்லாநிற்க, சரீரசரீரிபாவேந அவர்களுக்குப் பாரதந்த்ர்யம் சொல்லுக்கூடுமோவென்ன - அவர்களுடைய இத்யாதி. புடைகள்- ப்ரகாரங்கள். அவைகளெவையென்ன - அயனை இத்யாதி. கீழ்வாக்யத்வயவிவரணம் - அயன்விஷயத்திலும் இத்யாதிவாக்யத்வயம். "அயனை யரனை - அவாவற்று - அவாவறச்சூழரியை - அலற்றி- வீடுபெற்ற" என்றுஇரண்டாம்யோஜனை. இதுக்கர்த்தம் - அயன்விஷயத்திலும் அரன்விஷயத்திலும் தாம் ஸ்நேஹமற்று தம்முடைய விடாய்தீர ஸம்ச்லேஷிக்கும் ஸர்வேச்வரனை யலற்றிவீடுபெற்றவென்று. "அயனையரனை - அவாவறச்சூழரியை - அவாவற்றுவீடுபெற்ற" என்ற யோஜனைக்கர்த்தம் - அயனுடையவும் அரனுடையவும் அபிநிவேசம் அறும்படி அவர்களோடே ஸம்ச்லேஷிக்கும் ஸர்வேச்வரனையலற்றி யென்னுதல்; சேதநர்க்குண்டான அவாவானது அறும்படி சேதநரோடே ஸம்ச்லேஷித்த ஸர்வேச்வரனையலற்றி யென்னுதல். இந்தயோஜநாத்வயத்திலும் "அயனையரனை" என்கிற ஐகாரம்-அவ்யயம். அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும்-அவாவாலே உண்டான அந்தாதிகளான இவையாயிரத்திலு மென்றபடி. அவாவில் - அவாவாலேயென்றபடி.

தாதிகளால் இவையாயிரமும்] - பக்திபலாத்காரத்தாலேபிறந்த ஆயிரந்திருவாய்மொழியிலும். இவருடைய ஸ்ரீமைத்ரேயபகவான் அவா. அவா உபாத்யாயராக நடத்த நடந்த ஆயிரம். ஆழ்வார்க்குப்பின்பு நூறாயிரம் கவிகள்போரு முண்டாய்த்து; அவர்கள் கவிகளோடேகூடலோசையோடு வாசியற்று அவற்றைவிட்டு இவற்றைப்பற்றித்துவளுகைக்கு அடி இவருடைய பக்த்யதிசயம்வழிந்து புறப்பட்டசொல்லாகையிறே. [முடிந்த அவாவிலந்தாதி இப்பத்து] - தரிக்கவொண்ணாதபடியான பரமபக்தியாலே பிறந்ததாய்த்து இத்திருவாய்மொழி. இவ்வவாவுக்கு உதவிற்றிலனாகில் ஈஶ்வரனுக்கும் சைதந்யமின்றிக்கேயொழியும். * சூழ்விசும்பணிமுகிலுக்குக் கீழ், பரபக்தியாலேசென்றது; * சூழ்விசும்பணிமுகில், பரஜ்ஞாநத்தாலே; இத்திருவாய்மொழி, பரமபக்தியாலே பகவத்ப்ரஸாதம் பாதியும் தாங்கள் பாதியுமாகச் சொல்லுமவர்களுக்கு, ஶரீராவஸாநத்திலே இப்பரபக்த்யாதிக ளுண்டாம்; இவர் அடியிலே * மயர்வறமதிநலமருளப்பெறுகையாலே எழுந்தருளியிருக்கச்செய்தே யுண்டாய்த்தின. கர்மஜ்ஞாநாநுக்ருஹீதையான பக்தியினுடைய ஸ்தாநத்திலே ஸர்வேஶ்வரனுடைய அருள்நின்று,அது அடியாகப்பிறந்த பரபக்த்யாதிகளிறே இவரது. [அறிந்தார் பிறந்தா ருயர்ந்தே] - இத்தையறிந்தவர்கள், ஸம்ஸாரத்திலே பிறந்துவைத்தே நித்யஸூரிகளோடொப்பர். [பிறந்தேயுயர்ந்தார்] - ஸர்வேஶ்வரனுடைய அவதாரத்தோபாதி இவர்களுடைய பிறப்பும்.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளேஶரணம்.

---

ஆல்-அசை.தத்த்வார்த்தங்களையெல்லாம்ஸ்ரீபராஶரபகவான் மேன்மேலும்உபபாதித்தது-ஸ்ரீமைத்ரேயபகவான் ப்ரஶ்நம்பண்ணினபின்பாகையாலே, அந்த மைத்ரேயபகவான் ஸ்தாநத்திலே பக்தியென்கிறார்- இவருடைய இத்யாதி. அதாவது-"[illegible]" என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்துக்கு ஸ்ரீமைத்ரேயபகவான் மூலமானாற்போலே, இப்ப்ரபந்தத்துக்கும் இவருடைய அவா மூலமென்றபடி. ரீத்யந்தரேண பாவம் - அவாவுபாத்யாயராக இத்யாதி. அவா - பக்தி. பக்திபூர்வகமாகப்பிறந்ததாகையாலே இப்ப்ரபந்தங்களுக்கு லோகபரிக்ரஹமுண்டாய்த்தென்கிறார்- ஆழ்வார்க்குப்பின்பு இத்யாதி. முடிந்தவவா - சரமமான அவா; பரமபக்தியென்றபடி. "முடிந்தவவா" என்றதுக்குபாவம் - இவ்வவாவுக்கு இத்யாதி. இதுமாத்ரமோ பரமபக்தியாலே பிறந்ததென்ன, அருளிச்செய்கிறார் - சூழ்விசும்பு இத்யாதி. ஶரீராவஸாநத்திலேயன்றோ பரமபக்தியுண்டாவது? இதுக்குமுன்னே யுண்டாகக்கூடுமோவென்ன-பகவத்ப்ரஸாதம் இத்யாதி. ஆனால், கர்மஜ்ஞாநங்களாலேயன்றோ பக்தியுண்டாவதென்ன - கர்மஜ்ஞாந இத்யாதி. பிறந்திருக்கச்செய்தே உத்கர்ஷமுண்டாகக்கூடுமோவென்ன - ஸர்வேஶ்வரனுடைய இத்யாதி. அதாவது - ஸர்வேஶ்வரனுடைய அவதாரம் அநுக்ரஹநிபந்தநமாகையாலே உத்கர்ஷஹேதுவானாற்போலே, இவருடையபிறப்பும் உத்கர்ஷஹேதுவென்றபடி. 'ஆழ்வார்க்குப்பின்பு' இத்யாதி வாக்யத்திலே, "[illegible]" என்ற பெரியசீயர் திவ்யஸூக்திரநுஸந்தேயா.

(கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.--(முனியே) [illegible]

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே ஶரணம்.

---

† [illegible]

[illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— (முனியேநான்முகனே.) [illegible]

---

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

---

† இது, இப்ரபந்தவிஷயமாக இந்தப்பிரபந்தகர்த்தாவினுடைய திருவடிகளில் ஆஶ்ரயித்த பெரியாரொருவர் அருளிச்செய்த ஶ்லோகம்.

‡ நயமென்று பாடமாகவுஶிதமென்று முன் கோஶங்களில் குறிப்பு.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

வேதாந்ததேசிகர் திருவடிகளே ஶரணம்.

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

முனிமாறன் முன்புரைசெய்முற்றின்பநீங்கித்
தனியாகிநின்றுதளர்ந்து - நனியாம்
பரமபத்தியால்நைந்துபங்கயத்தாள்கோனை
யொருமையுற்றுச்சேர்ந்தா னுயர்ந்து.

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.



Noble Press, Triplicane, Madras.

# ௧௦ - ஆம் பத்து பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 31 | [illegible] | [illegible] |
| ... | 32 | [illegible] | [illegible] |
| 11 | 4 | கதியடையோமல்லோம் | கதியுடையோமல்லோம் |
| 53 | 34 | தேஷமே | தோஷமே |
| 58 | 22 | ஆத்மயாநம் | ஆத்மஜ்ஞாநம் |
| 62 | 35 | [illegible] | [illegible] |
| 68 | 25 | அநாஊகாலம் | அநாதிகாலம் |
| 78 | 24 | வசநமாத்ரீம் | வசநமாத்ரீம் |
| 80 | 34 | [illegible] | [illegible] |
| 125 | 11 | பசுகேய்க்க | பசுமேய்க்க |
| 126 | (·7·9·) | ஸ்வாஸாய யத்தோடே | ஸ்வஸாய யத்தோடே |
| 127 | 4 | தாமொதான் | தாமோதரன் |
| 128 | 4 | ஐவ்யஞனவவனுடைய | ஐவ்யஞனவனுடைய |
| ... | 11 | [illegible] | [illegible] |
| 135 | 9 | கலாஙங்களை | கலாபங்களை |
| 152 | 39 | ப்ராமாதிக்கமாக | ப்ராமாதிகமாக |
| 158 | 14 | மன | மான |
| ... | ... | ப்ரபிக்கை | ப்ராபிக்கை |
| 161 | (-9·10-) | யோத்துக்கு | யோகத்துக்கு |
| 190 | 24 | [illegible] | [illegible] |
| 192 | 10 | மன்னஞ்சு | மன்னஞ்ச |
| 199 | 5 | நிலேபெறுன் | நிலேபோன் |
| 219 | 39 | ஜய்ஶ்வர்யம் | ஐஶ்வர்யம் |
| 235 | 38 | தாஷமில்லை கருத்து | தோஷமில்லை என்று கருத்து |
| 254 | 3 | ப்ரவணராய்த்திர்ந்த | ப்ரவணராய்த்தீர்ந்த |
| 261 | 14 | நின்ஞய்த்து | நின்றுஞய்த்து |
| ... | 15 | செய்வேனென்றே | செய்வனென்றே |
| 287 | 22 | ஆதரிக்குபடியை | ஆதரிக்கும்படியை |
| 296 | 29 | தேவர்ளென்றே | தேவர்களென்றே |
| 299 | 31 | யாழபலத்தை | யாழமலத்தை |
| 324 | 17 | எப்பெருமானை | எம்பெருமானை |
| ... | 23 | தன்னளலிலே | தன்னளவிலே |
| 325 | 13 | ஸத்த | ஸ்த்த |
| ... | 23 | ஶூலபாபாணி: | ஶூலபாணி: |
| 326 | 36 | ஸமாஶ்ரயாந | ஸமாஶ்ரயமாந |
| 328 | 16 | லஜ்ஜிக்குமனவனை | லஜ்ஜிக்குமவனை |
| 331 | 18 | நியாமயன் | நியாம்யன் |
| 337 | 11 | ஸாமநாயீ | ஸாமாநாயீ |
| 338 | 13 | சொல்லவறியாமையாயாலே | சொல்லவறியாமையாலே |
| 340 | 11 | சொல்வாதே | செல்லாதே |
| 346 | 24 | உன்டென் | உண்டென் |
| 360 | 14 | மநிலம் | மதிகலம் |